எடுத்துக்காட்டுப்பாடல்எண் 645. உரையில்

'மாத்திரை முதலா' (தொ. பொ. 416) என்ற நோக்குப் பற்றிய நூற்பாவை வரைந்து பேராசிரியர் காட்டிய வழியில் விளக்கம் வரைந்துள்ளார்.

இனி, இவ்வுரையாசிரியர் திருக்கோவையாரிலும் அதற்குப் பேராசிரியர் என்பார் வரைந்த உரையிலும் பெரிதும் ஈடுபாடுடையவர். தமிழ்ப்பற்றினால் இவர் வைணவசமயநூல்களிலே அன்றிச் சைவசமயநூல்களிலும் சமணசமய-நூல்களாகிய சிலப்பதிகாரம், சிந்தாமணி என்பனவற்றிலும், பழந்தமிழ்நூல்-களாகிய கலித்தொகை, திருக்குறள் முதலியவற்றிலும் பெரிதும் ஈடுபாடு உடையவர் ஆதலின் அவற்றின் அடிகளையும் தொடர்களையும் பல இடங்களில் மேற்கோளாகக் குறிப்பிட்டுள்ள திறத்தை நோக்குவோம்.

## திருக்கோவையார்

ஆரூஉப்பொருள்தன்மை அணிக்கு எடுத்துக்காட்டாக அமைந்த 119-ஆம் பாடலுள்,

வான்தோய் கதிரினில் திகிரியை வலன்ஏந்தியும்
மீன்தோய் மதியினில் வரிவளை இடன்ஏந்தியும்

என்ற அடிகளுக்குச் சூரியனைப் போல, சந்திரனைப் போல என உவம-வாய்பாட்டால் உரைகூறின் உவமையணிக்கு எடுத்துக்காட்டாகிவிடும் என்ற கருத்தோடு, 'சூரியனால் கொண்ட சக்கரத்தை வலத்தே தரித்தும், மதியால் கொண்ட வலம்புரியை இடத்தே பொறுத்தும்' என்று உரை கூறி, 'இமையாத முக்கண் மூவரில் பெற்றவன்' (கோவை. 14) என்பது போலக் கொள்க என்றார். இமையாத மூன்றுகண்களையும் சந்திரன் ஆதித்தன் செந்தீக்கடவுள் என்ற மூவரால் பெற்றவன் என்ற பேராசிரியருரையை உட்கொண்டு சொற்றது இது.

எடுத்துக்காட்டுப்பாடல் 176-இன் உரையில், "இவை உவமஉருபு இறுதியில் தொக்கன. 'குவவின கொங்கை குரும்பை; குழல் கொன்றை' (கோவை. 108) என்பதும் இது" என்றார். குவிந்த கொங்கைகள் குரும்பையை ஒக்கும்; குழல் கொன்றைப்பழத்தை ஒக்கும் என்பது பேராசிரியர்உரை.

எடுத்துக்காட்டுப்பாடல் 179-இன் உரையில், "குறிவழிச்சென்ற பாங்கன் தலைவி தனமும் காண்பனோ எனின், காண்பது உண்டு என்பதற்குச் செய்யுள், 'அரன்அம்பலத்தின், இயலுளவே இணைச்செப்பு வெற்பா நினது ஈர்ங்-கொடிமேல்' (கோவை. 35) என்றதனால் அறிக" என்றார்.

வந்த என்ற சொல் உவமஉருபாக வந்ததற்கு எடுத்துக்காட்டாக 113-ஆம் நூற்பாஉரையுள் 'கயல் வந்த கண்ணியர்' (கோவை. 381) என்ற தொடரைக் குறிப்பிட்டுள்ளார்.

115-ஆம் நூற்பாஉரையுள், "வாய்ப்பவளம், குழற்கொன்றை, கொங்கைக்-குரும்பை என்ற இவை உருவகம்; வாய்பவளம், குழல்கொன்றை, கொங்கை-குரும்பை இவை உவமை.

'வாய்பவளம் துடிக்கின்றவா' (கோவை. 32)

'குவவின கொங்கை குரும்பை குழல்கொன்றை' (கோவை. 103)

எனவும் கண்டுகொள்க" என்றார்.

"வாய் பவளம் துடித்தாற்போலத் துடிக்கின்றது என்? குவிந்த கொங்கைகள் குரும்பையை ஒக்கும்; குழல் கொன்றைப்பழத்தை ஒக்கும்" என்பது பேரா-சிரியர்உரை.

எடுத்துக்காட்டுப்பாடல் 259-இன் உரையில், 'மைஏர் குவளைக்கண் வண்டினம் வாழும்' (கோவை. 66) என்பது உவமை உருவகம் என்றார். மைஅழகையுடைய குவளை போலும் கண்ணாகிய வண்டினம் தான் வாழ்தற்குத் தகும் என்பது பேராசிரியர்உரை.

எடுத்துக்காட்டுப்பாடல் 261-இன் உரையில்,

'காமரதத் தோகை களிவண்டினம் உலவும்
தாமரைசார் ஆம்பல் தனிநறவுண்டு - ஏமுறுபேர்(இன்பம்)'

மருட்கை என்னும் மெய்ப்பாட்டு வயத்தனாகிப் புணர்ச்சியை மகிழ்ந்து பேதத்தை அபேதமாக்கி விதந்து உரைத்தான் ஆதலின், தொகைஉருவகமாகக் கோடலேயாம். காட்சிக்குத் 'திருவளர் தாமரை' (கோவை. 1) என்னும் முதல்-பாட்டு மருட்கைவயத்தனாகிக் கூறிய இவ்வாய்பாடு என்று உணர்க என்றார். இச்செய்தி இம்முதற்பாடலுக்குப் பேராசிரியர் விரிவாக உரைத்த உரையில் காட்டப்பட்டுள்ள செய்தியேயாம்.

எடுத்துக்காட்டுப்பாடல் 265-இன் உரையில், "'குருகாபுரி அனையாள்' என்பது குருகாபுரி செயற்கையானன்றி இயற்கையானும் முதலே அழகு உடையது போன்று, இவளும் இயற்கையான் அழகுடையள் என்பது தோன்ற நின்றமையால், இதுவும் உவமையுள் ஒருபேதம். 'பாயும் விடையரன் தில்லையன்னாள்' (கோவை. 3) என்பதும் இது" என்றார். தாவும் காளையை வாகனமாக உடைய சிவபெருமானுடைய தில்லையம்பதியை ஒத்த இயற்கை-யழகு உடையவள் என்பது இத்தொடரின் பொருள்.

எடுத்துக்காட்டுப்பாடல் 742-இன் உரையில், "இப்பாடல் விதலையாப்புப்-பொருள்கோள். 'அணியும் அமிழ்தும்' (கோவை. 5) என்னும் பாட்டில்,

'மின்னும் பணியும் புரைமருங்குல் பெருந்தோளி படைக்கண்கள்
பிணியும் அதற்கு மருந்தும் பிறழப்பிறழ'

என்பதனால் அறிக" என்றார். "மின்னையும் பாம்பையும் ஒக்கும் இடை-யினையும் பெரிய தோளினையும் உடையாளது படைபோலும் கண்கள், பிறழுந்தோறும் பிறழுந்தோறும் பொதுநோக்கத்தால் பிணியும், உள்ளக்கருத்து வெளிப்படுக்கும் நாணோடு கூடிய நோக்கத்தால் அதற்கு மருந்தும் ஆகா-நின்றன" என்பது பேராசிரியர்உரை.

**இளம்பூரணர்**

'ஆயிரம் முகத்தான் அகன்ற தாயினும்
பாயிரம் இல்லது பனுவல் அன்றே' (சிறப்புப்பாயிர உரை)

'அன்னம் கிளியே நன்னிறம் நெய்யரி
யானை ஆனேறு என்றிவை போலக்
கூறிக் கொள்ப குணனுடையோரே' (51-ஆம் நூற்பா உரை)

'ஆசான் உரைத்தது அமைவரக் கொளினும்
காற்கூறு அல்லது பற்றலன் ஆகும்'

'அவ்வினை யாளரொடு பயில்வகை ஒருகால்
செவ்விதின் உரைப்ப அவ்விரு காலும்
மையறு புலமை மாண்புநனி உடைத்தே' (55-ஆம் நூற்பா உரை)

என்று இளம்பூரணர் சிறப்புப்பாயிரம் பொதுப்பாயிரம் பற்றிக் குறிப்பிட்ட நூற்பாக்களை இவர் எடுத்துமொழிந்துள்ளார்.

23-ஆம் நூற்பா உரையுள், 'எதிர்மறுத்து உணரின்அத் திறத்தவும் அவையே' (தொ. பொ. 655. இ.) என்ற நூற்பாவிற்கு இளம்பூரணர் உரைத்த உரையையே இவரும் எடுத்துக்கூறியுள்ளார்.

26-ஆம் நூற்பா உரையில், 'பண்ணத்தி என்பது பாவினம். பண்ணைத் தோற்றுவிக்கையால் பண்ணத்தி என்று பெயர்ஆயிற்று. இவை இளம்பூரணர் முதலாயினார் ஒருசார்ஆசிரியர் நோக்கம்' என்று குறிப்பிட்டுள்ளார்.

25-ஆம் நூற்பாஉரையுள், 'மாட்டுறுப் பினவாய் மனங்கொளக் கூறல்' என்ற 29-ஆம் உத்தியை விளக்கியவிடத்து, "'வடவேங்கடம் தென்குமரி ... படிமை-யோனே' என்பதற்கு இளம்பூரணர்உரையன்றி நச்சினார்க்கினியர் எழுதிய உரையைக் கண்டுகொள்க" என்றார். இவையன்றி நச்சினார்க்கினியர் எழுத்-ததிகாரத்து எழுதிய உரையுள் இளம்பூரணருக்கும் உடன்பாடாகும் பகுதி-களையும் கொள்ளலாம். குற்றியலுகரம் புள்ளியீறுபோல உயிர் ஏற இடங்-கொடுக்கும், உட்பெறு புள்ளி உருவா கும்மே என்பன இளம்பூரணருக்கும் உடன்பாடான செய்திகளாம்.

இனி, கலித்தொகைப் பாடலடிகள் மேற்கோளாகக் காட்டப்படுவனவற்றை நோக்குவோம்.

**கலித்தொகை**

எடுத்துக்காட்டுப்பாடல்எண் 1-இல் "உயவல் - உசாவல். 'யான்ஒன்று உயவுகோ ஐய சிறிது' (கலி. 7) என்பதனால் அறிக" என்றார்.

191-ஆம் பாடல் உரையில், "இது கற்பினுள் இல்வாழ்க்கை என்னும் பகுதிக்கண் பிரிந்து சேய்நாட் சென்று வந்து கூடிய தலைமகன் அவள்-உறுப்புக்களை வேட்கைமிகுதியால் புதுவது புதுவதாகப் பாராட்டத் தலைமகள் இஃது ஒன்று உடைத்து என அஞ்சியவழிப் புணர்ச்சி அந்தியத்தும் துயிலாததை, துயின்று துயில்ஒழிந்தோன் தன்கண் பிரிதல்குறிப்பு உளதாகக் குறித்த வேறுபாடெனக் குறிப்பான் அறிந்த தலைமகன், முன்னிலைப் புறமொழியாகத் தன்நெஞ்சிற்கு அவள்குறிப்பு அறிவுறுத்துவான் போல 'இனி நின்னிற் பிரியேன்' எனப் பிரியாத தன் குறிப்பினைத் தலைமகட்கு அறிவுறுத்துதல். கலியுள்ளும்,

மாசில்வண் சேக்கை மணந்த புணர்ச்சியுள்
பாயல்கொண்டு என்தோள் கனவுவார் ஆய்கோல்
தொடிநிரை முன்கையாள் கையாறு கொள்ளாள்
கடிமனை காத்தோம்ப வல்லுநள் கொல்லோ (கலி. 24)

எனத் தலைமகன் புணர்ச்சியந்தியத்துக் கனவின் அரற்றியதனைத் தலைவி துயில் ஒழிந்திருந்து அவன்குறிப்பு உணர்ந்தனள் என்பதும் உணர்க" என்றார்.

248-ஆம் பாடல் உரையில், "பகுதி - பொருட்பிரிதல். துறை - கருத்து அறிந்து அழுத கண்ணீர் துடைத்தல். என்னை? பொருள்வயின் பிரிந்த

தலைவன் உள்ளக்குறிப்பினைக் கரந்து பன்னாளும் புதுவதுவாக உறுப்பினைப் பாராட்டியதால், 'இஃது ஒன்று உடைத்து' என அவன்பிரிவை உட்கொண்டு அழுத கண்ணீராகலின்'' என 24-ஆம் கலிப்பா அடிகளின் கருத்தை உட்கொண்டு விளக்கியுள்ளார்.

113-ஆம் நூற்பா உரையுள், அணி என்பது உவமஉருபு என்பதனைக் காட்டக் கலித்தொகையின் கடவுள்வாழ்த்துப் பாடலடியாகிய 'முலை அணிந்த முறுவலாள்' என்பதனை எடுத்துக்காட்டியுள்ளார். 722-ஆம் பாடல் உரையில், முல்லை என்பது இடைக்குறையாக முலை என்று வரும் என்பதற்கு எடுத்துக்காட்டாக 'முலைஅணிந்த முறுவலாள்' (முல்லைமொட்டுப் போன்ற பற்களை உடையவள்) என்ற தொடரையே காட்டியுள்ளார்.

281-ஆம் பாடல் உரையில், ஏனைஉவமம் உள்ளுறைஉவமத்துக்குச் சிறப்புக் கொடுத்துத் திணையுணர்தலைத் தள்ளாது நிற்கும் என்று கூறிச் சிறப்பு என்ற உள்ளுறைக்கு 'விரிகதிர் மண்டிலம்' (கலி. 71) என்ற பாடலை மேற்கோளாகத் தந்துள்ளார்.

282-ஆம் பாடல் உரையில், செவிலி தலைவியை 'என்னால் பெறப்பட்டாள்' 'என்மகள்' என்பன அன்பினது அதிகத்தாலும், நற்றாய் என்றும் தான் என்றும் வேறு அல்லவாம் ஐக்கியத்தாலும் கூறினாள். பாலைக்கலியுள்ளும் 'என்மகள் ஒருத்தியும்' (கலி. 9) எனக் கூறியவாற்றானும் உணர்க என்றார்.

404-ஆம் பாடல் உரையில், இறைச்சியில் பிறக்கும் பொருளுக்கு எடுத்துக்காட்டுப்பாடல்களில் ஒன்றாக 'வேங்கை தொலைத்த' (கலி. 43) என்ற குறிஞ்சிக்கலியும் அது என்று குறிப்பிட்டுள்ளார்.

708-ஆம் பாடல் உரையில், 'பானல் உளர்பொற்சுரும்பே! வளர்பைச் சடம்பே! நீர் கேளும்' என்ற பன்மைச்சொல்லுக்கு மாறாகக் 'கேள்' என்ற ஒருமைச்சொல் புணர்த்தமைக்கு,

'என்நீர் அறியாதீர் போல இவைகூறல்
நின்நீர அல்ல நெடுந்தகாய்' (கலி. 6)

என்பது போல ஒருவரைக் கூறும் உபசாரப்பன்மைப்பாலோடு ஒருமைப்பால் மயங்கிற்று என்ற மேற்கோளைத் தெரிவித்துள்ளார்.

### திருக்குறள்

பொருள்விளக்கத்துக்குக் கலியே அன்றித் திருக்குறளும் பெருவரவினதாக எடுத்தாளப்பட்டுள்ளது.

சூ. 25. உத்திஎண் 9. ''மொழிந்த பொருளோடு ஒன்றவைத்தல் என்பது, சூத்திரத்துப் பொருள் பலபடத் தோன்றுமாயினும் முற்பட்ட சூத்திரயாப்பிற்கு ஏற்பப் பொருள்உரைத்தல். அஃதாவது, 'இலன்என்னும் எவ்வம் உரையாமை' (குறள். 223) என்னும் குறளுக்கு முன்னர்உத்திக்கு ஏற்பக் கூறிய பொருளன்றி, 'நல்லாறு எனினும் கொளல்தீது மேலுலகம், இல்லெனினும் ஈதலே நன்று' (குறள். 222) என்னும் மேலின்குறளின் பொருள்கட்கு ஒன்ற, உம்மையை விரித்து, இலன் என்னும் எவ்வம் உரையாமையும் ஈகையும் குலனுடையான்கண்ணே உள என உரைத்தல் கொள்க'' என்கிறார்.

சூ. 63. சிறப்புப்பாயிர உரையில், "அலகில்சோதி என எண்ணை உணர்த்தும் பெயரொடும் புணர்ந்து ஆகிய என்னும் பண்புத்தொகை வாய்பாட்டான் வினைஎதிர்மறுத்த பெயரெச்சவினைக்குறிப்பு, தன் எச்சமாகிய சோதி என்னும் பெயரொடு முடிந்தது. 'கோளில் பொறியில்' (குறள். 9) என்பதும் இது" என்கிறார்.

191-ஆம் பாடல் உரையில், "கற்பினுள், 'குறிப்பு அறிவுறுத்தல்' என்னும் அதிகாரத்தின்கண் வள்ளுவரும், 'கரப்பினும் கைஇகந்து ஒல்லாநின் உண்கண், உரைக்கல் உறுவதொன்று உண்டு' (குறள். 1271) என்னும் குறட்பாவினுள் தலைவன் தன் பிரியாமைக்குறிப்பினைத் தலைவிக்கு அறிவுறுத்தவாறும் காண்க" என்கிறார்.

109-ஆம் நூற்பா உரையுள், "எதிர்மறைகளை உவமமும் பொருளும் ஆக்கியது இரண்டானும் பெறுதற்கு இலக்கியம், 'இழிவறிந்து உண்பான்கண் இன்பம்போல் நிற்கும், கழிபேர் இரையான்கண் நோய்' (குறள். 946) என்பதனால் அறிக" என்கிறார்.

113-ஆம் நூற்பா உரையுள், துலை என்பது உவமஉருபு ஆதற்குத் 'தோல்வி துலையல்லார் கண்ணும் கொளல்' (குறள். 986) என்பது மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளது.

236-ஆம் பாடல் உரையில், மாட்டேறு இலாது வந்த உருவகத்திற்கு,

'அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது' (குறள். 8)

'சினம்என்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனம்என்னும்
ஏமப் புணையைச் சுடும்' (குறள். 306)

என்பன மேற்கோள் ஆகின்றன.

265-ஆம் பாடல் உரையில்,

'வில்லேர் உழவர் பகைகொளினும் கொள்ளற்க
சொல்லேர் உழவர் பகை' (குறள். 872)

'நல்லார்கண் பட்ட வறுமையின் இன்னாதே
கல்லார்கண் பட்ட திரு' (குறள். 408)

என இவை போல்வன பிறவும் உவமையின் பேதங்களாகக் குறிக்கப்பட்டுள்ளன.

173-ஆம் நூற்பா உரையில், இடையிணை நிரல்நிறைப் பாடலுக்கு மேற்கோளாக,

'நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்நீர பேதையார் நட்பு' (குறள். 782)

என்ற குறள் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளது.

177-ஆம் நூற்பாவில், "பொருள் என்பது மெய்.

'பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரும்
மருளானாம் மாணாப் பிறப்பு' (குறள். 351)

என்பதனால் அறிக" என்று விளக்கப்பட்டுள்ளது.

513-ஆம் பாடல் உரையில், 'வெண்பொற்குடங்களான்' என்னும் ஆன் உருபு குடங்கள்தோறும் என்றாயிற்று; என்னை?

'தகுதிஎன ஒன்று நன்றே பகுதியான்
பாற்பட்டு ஒழுகப் பெறின்' (குறள். 111)

என்னும் குறட்பாவான் அறிக - என்று விளக்கப்பட்டுள்ளது.

353-ஆம் பாடல் உரையில், 'எதிர்கொண்ட சுரரிடத்து' என்ற தொடரில், எதிர்கொண்ட அசுரரிடத்து என்று பொருள்செய்யும்வழி, செய்த என்னும் பெயரெச்சத்து ஈற்றின் அகரம் செய்யுள்விகாரத்தால் தொக்கதற்கும், 738-ஆம் பாடல் உரையில், அஞ்சவித்த உயர்வான் என்ற தொடர் அஞ்சவித்துயர்வான் எனச் செய்த என்னும் பெயரெச்சவாய்பாட்டு ஈற்றின் அகரம் செய்யுள்-விகாரத்தால் தொக்கதற்கும் 'புகழ்புரிந்த இல்லிலோர்க்கு' என்பது 'புகழ்புரிந் தில்லிலோர்க்கு' (குறள். 59) என்றமைந்த குறட்பகுதி மேற்கோளாகச் சுட்டப்-பட்டுள்ளது.

717-ஆம் பாடல் உரையில், ஆதும் என்பது 'மேல் ஆகக் கடவோம்' என்னும் உளப்பாட்டுத்தன்மையின் வந்த எதிர்காலவினைமுற்றுச்சொல்; என்னை?

'ஓஒதல் வேண்டும் ஒளிமாழ்கும் செய்வினை
ஆஅதும் என்னு மவர்' (குறள். 653)

என்பதனால் அறிக என்று விளக்கப்பட்டுள்ளது.

726-ஆம் பாடல் உரையில், 'தாக்கு அரந்தை உற' எனப் பொருதார் எய்தும் துன்பம் போரின்மேல் ஏற்றப்பட்டது. என்னை? 'வேண்டும் பனுவல் துணிவு' (குறள். 21) என்பது போலக் கருத்தாமயக்கம் என்று குறிப்பிடப்-பட்டுள்ளது.

751-ஆம் பாடல் உரையில், 'ஐயிரண்டு நாக் கம்' என ஒற்று மிக-வேண்டுவது, 'ஆ பயன்' (குறள். 560) என்பதுபோல ஒற்றுத் தோன்றும் சந்தி ஒற்றின்றி இயல்புசந்தியாய் நின்றது என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

795-ஆம் பாடல் உரையில், இதனுள் போந்த செய்யுள்,

'கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிரும் தொழும்' (குறள். 260)

என்பது. இதனைப் பழம்பாட்டு எனவே, மேலன நவமாம் என்று உணர்க என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

இனி, எடுத்துக்காட்டுப்பாடல்களாகக் குறிப்பிடப்பட்ட திருக்குறள்பாக்கள் பலவற்றையும் ஆட்டாண்டுக் காண்க.

இனி, சிலப்பதிகாரம் மேற்கோளாகக் கொள்ளப்பட்டிருக்கும் இடங்களை நோக்குவோம்.

**சிலப்பதிகாரம்**

27-ஆம் நூற்பா உரையில், "பலவியல்களுள்ளும் ஓரியலை முதலே வெண்பாவில் கூறி அதன் பின்னர் வரும் ஏனையியல்களை அகவலாலும் அழகிதாய்த் தமிதமி கூறுவது மரபாம் என்றவாறு. இலக்கணமும் என்ற உம்மை எச்சவும்மையாதலால் கதை தொடர்ந்த இலக்கியங்களுள்ளும் வேறுவேறு பாவாகத் தமிதமி கூறலும் மரபு என்றவாறு. அவை சிலப்பதிகாரத்துள் மங்கல-வாழ்த்துக்காதை மயங்கிசைக்கொச்சகக்கலியிலும், அந்திமாலைச்சிறப்புச்செய்-காதை, இந்திரவிழவூரெடுத்தகாதை, கடலாடுகாதை இவை நிலைமண்டில-

ஆசிரியப்பாவிலும், கனாத்திறம் உரைத்தகாதை கலிவெண்பாவிலும் வந்தவாறு காண்க'' என்கிறார்.

63-ஆம் நூற்பாவோடு இணைந்த சிறப்புப்பாயிரவுரையுள், உறுபயன் என்பது உரிச்சொல்அடையோடும் கூடிய பண்புப்பெயர் எனினும் ஆம். 'நள்இருள் கிடந்தேன்' (சிலப். பதிகம்-அடி 41) என்பது போலும் - என்கிறார்.

'அலகில் சோதி' என்ற தொடர் 'கோட்டமில் கட்டுரை' (சிலப். பதிகம்-அடி 54) என்பது போல்வது - என்கிறார்.

104-ஆம் நூற்பா உரையுள், 'அம்பனைய வேற்கண்' என்ற தொடர்விளக்கத்துக்கு மேற்கோளாக, 'ஆம்பல் நாறும் தேம்பொதி நறுவிரைத் தாமரைச் செவ்வாய்' (சிலப். 4: 73-74) என்புழித் 'தேம்பொதி நறுவிரை ஆம்பல் நாறும் தாமரைச் செவ்வாய்' என இளங்கோவடிகள் அந்திமாலைச்சிறப்புச்செய்காதையுள் கண்டது - என்று குறிப்பிட்டுள்ளார்.

263-ஆம் பாடல் உரையில், சம்பந்தம்உடையதனைச் சம்பந்தம் இல்லையாக்கி வந்த உருவகத்தை விளக்குமிடத்து,

'மலையிடைப் பிறவா மணியே என்கோ
அலையிடைப் பிறவா அமுதே என்கோ
யாழிடைப் பிறவா இசையே என்கோ' (சிலப். 2 - 77-79)

என்பனவற்றையும் விரோதவலங்காரம் ஆக்குமாறு போல என்று அறிக - என்கிறார்.

பரியாயவலங்காரம் பற்றிய 199-ஆம் நூற்பா உரையுள், ''அன்றியும், இளங்கோவடிகள் மனையறம்படுத்தகாதையுள்

'தயங்கிணர்க் கோதை தன்னொடு தருக்கி
வயங்கிணர்த் தாரோன் மகிழ்ந்து செல்வுழி' (சிலப். 2 - 82-83)

என்றவற்றுள், தயங்கல் வயங்கல் இரண்டும் விளக்கம் ஆதலின் அதற்கு விரித்துரை எழுதிய அடியார்க்குநல்லாராகிய ஆசிரியர் அதனையும் பரியாயம் என்னும் அலங்காரமாகக் குறித்தார். அஃது இப்பொருளணியுள் முந்துறக் கூறிய பொருட்பின்வருநிலையுள் அடங்கும் என்று அறிக'' - என்கிறார்.

### சிந்தாமணி

இனி, சிந்தாமணி மேற்கோள்கள் பலவாக உள்ளன. அவற்றையும் நோக்குவோம்.

25-ஆம் நூற்பா உரையுள், 26-ஆம் உத்தியாகிய இரட்டுறமொழிதல் என்பதனை விளக்கி அதற்கு எடுத்துக்காட்டாக,

'வந்தவர வென்னையென வாட்கண் மடவாய்கேள்
சிந்தை நலிகின்ற திருநீர்க்குமரி யாட
அந்திலத னாயபயன் என்னை மொழிகென்றாள்
முந்தி நலிகின்ற முதுமூப்பொழியும் என்றான்' (சிந். 2020)

என்ற பாடலைத் தந்து விளக்கியுள்ளார்.

143-ஆம் பாடல் உரையை அடுத்து முந்துநூற்புலவரால் கூறப்பட்டுத் தொன்றுதொட்டு வரும் உவமைகளைக் கூறுமிடத்து,

'சேலனைய சில்லரிய கடைசிவந்து கருமணிஅம்
பாலகத்துப் பதித்தன்ன படியவாய் முனிவரையும்

மாலுறுப்ப மகிழ்செய்வ மாண்பில்நஞ்சு அமிர்தமுமே
போல்குணத்த பொருகயற்கண் செவியுறப்போந்து அகன்றனவே'
(சிந். 167)

என்ற பாடலில் உள்ள - 'நஞ்சும் அமிர்தமுமே போல் குணத்த' 'கருமணிஅம் பாலகத்துப் பதித்தன்ன' 'பொருகயற்கண்' என்பனவற்றையும்,

'பிறையது வளரத் தானும் வளர்ந்துடன் பெருகிப் பின்னாள்
குறைபடு மதியம் தேயக் குறுமுயல் தேய்வதே போல்
இறைவனாத் தன்னை ஆக்கி அவன்வழி ஒழுகின் என்றும்
நிறைமதி இருளைப் போழும் நெடும்புகழ் விளைக்கும் என்றான்'
(சிந். 254)

என்ற பாடலில் உள்ள - 'குறைபடு மதியம் தேயக் குறுமுயல் தேய்வதேபோல்' என்ற தொடரையும் எடுத்துக்காட்டியுள்ளார்.

165-ஆம் பாடல் உரையில், 'ஒருபிடி புரை மருங்குல்' என்ற தொடரில் உள்ள ஒருபிடி என்ற தொடருக்கு ஒருகையை விரல்மடக்கின அளவாம் என்று உரை கூறி, 'ஒருபிடி நுசுப்பினாளை' (சிந். 613) எனச் சிந்தாமணியிலும் கூறியமை காண்க - என்று குறிப்பிடுகிறார்.

172-ஆம் பாடல் உரையில், "துணைமேரு என்றதனால் வடமேரு ஒன்று அல்லது இல்லையாதலால் இல்பொருள்உவமையாயிற்று. இவ்வணம் சிந்தா-மணியிலும், 'கோள்மின்னு மின்சூழ் குளிர்மாமதித் தோற்றம் ஒத்தே' (882) என வந்தமையால், இதனது வேறுபாடும் காண்க" என்கிறார்.

200-ஆம் பாடல் உரையில், "'அம்புஅனைய வேற்கண்' என்றவழி உவமப்பொருளினது உருபின் பின்னர் வேற்கண் என வந்தவாறு காண்க. இதற்கு முன்னோர் கூறிய இலக்கியமாக, 'துப்புஉறழ் தொண்டைச் செவ்வாய்' (107) எனத் திருத்தக்கமாமுனிகள் கூறிய சிந்தாமணியைக் கொள்க" என்கிறார்.

212-ஆம் பாடலில், 'மட்டு இக்கு அமைந்துளவாய்' என்ற தொடரில், மட்டு - பூவின் தேன்; இக்கு - வைத்த தேன் என்று உரை கூறி, 'தேன்துளியோடு மதுத்துளி' (64) என்றார் சிந்தாமணியுள்ளும் என்று குறிப்பிடுகிறார்.

236-ஆம் பாடலில், உவமமும் உருவகஉருபும் மாட்டேறில்லாது வந்த உருவகத்துக்கு முந்துநூலின் மேற்கோளாக,

'பவளவாய்ச் செறுவுதன்னுள் நித்திலம் பயில வித்திக்
குழவிநாறு எழுந்து காளைக் கொழுங்கதிர் ஈன்று' (379)

என்ற சிந்தாமணிஅடிகளைக் குறிப்பிடுகிறார்.

எடுத்துக்காட்டுப்பாடல் 269 ஆக,

'தருமன் தண்ணளியால் தனது ஈகையால்
வருணன் கூற்று உயிர்மாற்றலின் வாமனே
அருமையால் அழகில் கணைஐந்துடைத்
திருமகன் திருமாநில மன்னனே' (160)

என்ற சிந்தாமணிப்பாடலை அமைத்து, "தண்ணளியால் மன்னனாகிய தருமன், தனது ஈகையால் மன்னனாகிய வருணன், உயிர்மாற்றலால் மன்னனாகிய கூற்று, அருமையால் மன்னனாகிய வாமன், அழகால் மன்னனாகிய காமன் என உருவகம்செய்து உணர்க" என்ற கூறுகிறார்.

எடுத்துக்காட்டுப்பாடல் 271 ஆக,

'வருந்தி ஈன்றாள் மறந்து ஒழிந்தாள், வளர்த்தாள் சொல்கேட்டு இல்கடிந்தாள்
முருந்தின்நாறும் கூழையை, முனிவார் நின்னை என்முனிவார்
பொருந்திற்று அன்றால் இதுஎன்னாய் பொன்றும் அளித்து இவ்வுயிர் என்னாய்
திருந்து சோலைக் கருங்குயிலே சிலம்ப இருந்து கூவுதியால்' (1661)

என்ற பாடலை அமைத்து, "இத்தொடக்கத்தன உருவகஇலக்கணம் விளங்க நின்றிலவேனும் அதனிடத்து மயக்கிநின்றன கொள்க. என்னை கொள்ளு-மாறெனின், ஈன்ற குயிலாகிய பெண் மறந்து ஒழிந்தது, வளர்த்த காக்கையாகிய பெண் இல்கடிந்தது, பெண்குயிலாகிய பெண்ணே எனக் கொள்வதை மயக்கி நின்றமை காண்க" என்று விளக்குகிறார்.

424-ஆம் பாடலில், "பேரண்டம் - அளவிறந்த அண்டம்; 'பெரிய யோனிகள் பிழைத்து இவண் மானிடம் பெறலே' (2749) என்பதனால் அறிக" எனச் சிந்தாமணி அடியை விளக்கத்திற்கு மேற்கோள் காட்டுகிறார்.

722-ஆம் பாடலில், "அத்தம் என்பது பொன்மலை. 'அத்தம் அனைய களிற்று அந்நகர்' (18) என்றார் முனிவரும்" என்று குறிப்பிடுகிறார்.

765-ஆம் பாடல் உரையில், "நெஞ்சே என்பது தோன்றா எழுவாய். இது தன் உணர்வைப் பிறிதுஒன்றாக்கிக் கூறாதவற்றைக் கூறு என அகத்தில் கூறுவன போலக் கூறும் மயக்கம். என்னை?

'ஆம்புடை தெரிந்து வேந்தற்கு அறிவுஎனும் அமைச்சன் சொன்னான்' (சிந். 232)

'ஓதிய பொறிஅற்றாய் ஓர் அரும்பொறி புனைவி என்றான்' (சிந். 223)

என்பவற்றால் அறிக" என்று குறிப்பிடுகின்றார்.

767-ஆம் பாடல் உரையில், "அச்சமுறுத்தாது என்பது அச்சுறுத்தாது எனத் தொகுக்கும்வழித் தொகுத்தல் என்னும் விகாரத்தான் நின்றது. 'குணமாலையை அச்சுறுத்த' (சிந். 14) என்பது போலக் கொள்க" என்கிறார்.

இவற்றால் கருத்துவிளக்கத்துக்குச் சிந்தாமணி இவரால் பெரிதும் எடுத்-தாளப்பெறுதல் புலப்படுகிறது.

தொல்காப்பியச் செய்யுளியல் 149-ஆம் நூற்பா உரையுள் நச்சினார்க்கினியர் "பதிகப்பாட்டிற்கு ஈண்டுக் கூறிய வேறுபாடுகள் திருவாய்மொழி, திருப்பாட்டு, திருவாசகம் என்கின்ற கொச்சகஒருபோகுகளில் காண்க. அவை உலகவழக்கு அன்மையின் காட்டாமாயினாம்" என்று கூறிய செய்திகள் யாவும் இந்நூலா-சிரியருக்கும் உரையாசிரியருக்கும் உடன்பாடாதலின், பொதுவான அணிகள் பற்றிய எடுத்துக்காட்டுக்களுக்கு நம்மாழ்வார் அருளிய பாசுரங்களை எடுத்துக்-காட்டாகத் தருதல் இவர்களுக்கு உடன்பாடன்றாகவே, திருவாய்மொழிப்-பாசுரங்கள் அருகியே மேற்கோளுக்காகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. அவற்றை நோக்குவோம்.

70-ஆம் நூற்பா உரையுள்,

'பரிவதில் ஈசனைப் பாடி
விரிவதின் மேவல் உறுவீர்
பிரிவகை யின்றிநன் னீர்தூஉய்ப்
புரிவது வும்புகை பூவே' (திருவாய். 56. திவ். பிர. 2730)

'மதுவார் தண்ணந் துழாயான்
முதுவே தமுதல் வனுக்கு
எதுஏது என்பணி என்னாது
அதுவே ஆட்செய்யும் ஈடே' (திருவாய். 57. திவ். பிர. 2731)

இவை முதற்பத்தின் ஆறாம் திருவாய்மொழியின் முதற்பாட்டும் இரண்டாம்பாட்டும். "இவற்றுள், பூ என்ற சொல்லின் பொருள்நோக்கத்தால் சினையைக் கூற முதலை அறிவிக்கும் ஆகுபெயரால் அந்தாதித்தவாறு உணர்க. இவை நாலுவேதத்தையும் ஓதாது உணர்ந்த ஞானபூரண ஞானமுத்திரைக் கராம்புயன் திருவாக்கு" என்கிறார்.

333-ஆம் பாடலில், "ஓரடி முதற்கண் என்பது திருவாய்மொழி முதற்பத்தின் முதற்பாட்டின் 'உயர்வற உயர்நலம் உடையவன் எவன்அவன்' (திவ். பிர. 2675) என்னும் முதற்பதம்" என்று குறிப்பிடுகிறார்.

466-ஆம் பாடலில், "ஞானமின்மையே வறுமை என்பது, 'அறிவினால் குறைவில்லா அகல்ஞாலத் தவர்அறிய' (திவ். பிர. 3089) எனப் புவிப்பாவலர்தம்பிரான் நாவீறுடைய பிரான் தெய்வப்பாடலான் உணர்க" என்கிறார்.

543-ஆம் பாடலில், "தெய்வமெனப் பேருலகம் கண்டதெல்லாம் தானாகிநின்ற தனிப்பிரமம் என்பது,

'அவரவர் தமதமது அறிவுஅறி வகைவகை
அவரவர் இறையவர் எனஅடி அடைவர்கள்
அவரவர் இறையவர் குறைவிலர் இறையவர்
அவரவர் விதிவழி அடைய நின்றனரே' (திவ். பிர. 2679)

என்பதனால் அறிக" என்கிறார்.

738-ஆம் பாடலில், "உயர்வு - வருத்தம்; 'உயர்வு அற உயர்நலம்' (திவ். பிர. 2675) என்பதனால் அறிக" என்கிறார்.

### தண்டியலங்காரம்

89-ஆம் பாடல் உரையில், 'செறிவுஎனப் படுவது நெகிழிசை யின்மை' என்று தண்டியாசிரியர் கூறிய செய்தியின் பொருத்தமின்மையை விளக்குகிறார், இவ்வுரையாசிரியர்.

100-ஆம் பாடல் உரையில், இவ்வாசிரியர் கூறும் இன்னிசை தண்டியாசிரியரால் ஒழுகிசை என்று கூறப்பட்ட செய்தியைச் சுட்டுகிறார்.

87-ஆம் நூற்பா உரையுள், தண்டியாசிரியர் கூறிய அணிகளுள் சிலவற்றைக் குறைத்தும் புதியனவாகச் சிலவற்றைக் கூட்டியும் ஆசிரியர் பொருளணிகளை 64 ஆக விரித்த திறத்தை விளக்குகிறார்.

137-ஆம் பாடல் உரையின்கீழ், உவமையணிக்குக் காரணம் பண்பு முதலாகிய மூன்றும் என்று தண்டியாசிரியர் கூறியதை விடுத்து, இந்நூலுடையார் உறுப்பினைக் கூட்டிக் காரணம் நான்கு எனவும் உவமநிலைக்களன்கள் ஐந்து எனவும் கூறியதன் காரணங்களை விளக்குகிறார்.

155-ஆம் பாடல் உரையில், தண்டியாசிரியர் வினை பயன் முதலிய ஏதுக்கள் தொகுவதே தொகை எனக் கூறவும், இந்நூலாசிரியர் உவமஉருபு தொகுவதும் தொகை என்று கூறியதன் காரணத்தை விளக்குகிறார்.

207-ஆம் பாடல் உரையில், தண்டியாசிரியர் உவமைஉருவகம் என்று குறிப்பிட்டது உருவகஉவமை என்றே குறிப்பிடப்படவேண்டும் என்பதை விளக்குகிறார்.

222-ஆம் பாடல் உரையில், விலக்குவமையுள் சிலேடை விரவிவரினும், நோக்கம் விலக்குஉவமைக்கண்ணதே என்பதை விளக்கித் தண்டியாசிரியர் குறிப்பிடும் பாடலிலும் விலக்குவமையில் சிலேடை விரவிவந்துள்ள செய்தியைச் சுட்டுகிறார்.

291-ஆம் பாடல் உரையை அடுத்து, தண்டியாசிரியர் ஒட்டு என்னும் அலங்காரத்துள் உள்ளுறைஉவமத்தையும் குறிப்பிட்ட செய்தியை விளக்குகிறார்.

193-ஆம் நூற்பா உரையுள், "தண்டியாசிரியர் 'கருதியது கிளவாது அப்பொருள் தோன்றப் பிறிதொன்று கிளப்பது பரியாயம்மே' என்றார். அவ்வாறு புணர்ப்பதும் பரியாயமாம்எனக் கொள்க" என்கிறார்.

204-ஆம் நூற்பா உரையில், "தண்டியாசிரியர் ஏதுவுள் தூரகாரியம் என விரித்ததும் இது. இவர் அதனைப் 'பிறர் உடம்பட்டது தான் உடன்படுதல்' என்னும் உத்தியால் தனியே ஓரலங்காரம் ஆக்கினார்" என்று குறிப்பிட்டுள்ளார்.

178-ஆம் பாடல் உரையில், தடுமாறுவமையைத் தண்டியாசிரியர் இதரவிதரம் என்று குறிப்பிட்டுள்ளதைச் சுட்டியுள்ளார்.

175-ஆம் பாடல் உரையில் மருட்கைஉவமையைத் தண்டியாசிரியர் கூடாஉவமை என்று குறிப்பிடுவதனைச் சுட்டியுள்ளார்.

சிறப்புப்பாயிரத்தில் இந்நூலின் முதனூல்களுள் தண்டியலங்காரமும் ஒன்று என்பதைக் குறிப்பிடும் இவ்வுரையாசிரியர், தம் உரையில் தேவைப்பட்ட இடங்களிலெல்லாம் தண்டியாசிரியரைச் சுட்டி அவர்கருத்தைக் குறிப்பிடுதலையும் விளக்குதலையும் அதன்கண் உள்ள பொருந்தாமையைச் சுட்டுதலையும் காண்கிறோம்.

இந்நூலின் பொருளணிகள் அறுபத்துநான்கனுள், ஒருசில, ஒன்றுபோல மற்றொன்றும் காணப்படுமாறு அமைதலின், அவற்றிடையே உள்ள வேறுபாடுகளைத் தேவைப்படும் இடங்களிலெல்லாம் உரையாசிரியர் குறித்துச் செல்கிறார்.

114-ஆம் நூற்பா உரையில், "உருவகத்துள் 'உவமையும் பொருளும்' என இதன் முதல்நூல்உடையார் கூறவும், இந்நூலுடையார் முக்கியப்பொருளை முதல்வைத்தது யாதோ எனின், உவமைபோலாது முக்கியப்பொருளை முதல்வைத்து ஒப்புமைப்பொருளை அதன் பின்னர்வைத்து ஒற்றுமை கொளுத்துவதே உருவகத்திற்கு மிக்கதோர் அறிகுறி என்பது தோன்ற வைத்தார்" என்கிறார்.

115-ஆம் நூற்பா உரையில், "வதனசந்திரன் கரகமலம் கரபுண்டரிகம் எனவும் நிலைமொழி உவமேய உயிரீற்றின் முன்னர் உவமமாகிய வருமொழி முதல் வல்லெழுத்து முன்னர் ஒற்று மிகாது உருவகமாம் இடமும் உள. இஃது உவமவிரியினுள் தலைதடுமாற்ற உவமையின்கண் பொருள் முதலே வந்து உவமையாயினவாறு கண்டுகொள்க" என்கிறார்.

291-ஆம் பாடல் உரையை அடுத்து, உள்ளுறைஉவமத்திற்கும் ஒட்டிற்கும் இடையே உள்ள வேற்றுமையை விரிவாக விளக்கிக் கூறுகிறார்.

315-ஆம் பாடல் உரையில், "குணஅதிசயத்திற்கும் தற்குணத்திற்கும் வேற்றுமை யாதோ எனின், அதிசயம் சிறுமையை மிகுத்துக் கூறும்; தற்குணம் மிகுந்ததை மிகுந்ததாய்க் கூறும்" என விளக்குகிறார்.

139-ஆம் நூற்பா உரையில், "திட்டாந்தத்தோடு நிதரிசனத்திற்கு வேறுபாடு யாதோ எனின், திட்டாந்தம் புலவன் தன்னால் குறிக்கப்பட்ட ஒரு பொருட்கூறு-பாட்டிற்குப் பிறிதொரு பொருளின் கூறுபாட்டை அதற்கு உவமை குறிக்-கொளும்படிக்கு, உவமைவாய்பாடு தோன்றாது தொகத் தன்வினையாகக் கூறுதல். நிதரிசனம் அன்னதன்று; ஒருபொருளின் பண்பு தொழில் பயன் முதலிய கூறுபாட்டைப் பிறிதொருபொருள் காட்டுவதாகப் படுத்திப் பிற-வினையாற் கூறுதல். இவை தம்முள் வேற்றுமையாம் என்று உணர்க" என்கிறார்.

233-ஆம் நூற்பா உரையுள், "காவியலிங்கத்தோடு பரிகரத்திடை வேற்றுமை யாதோ எனின், காரணகாரியம் இரண்டும் எச்சமாய் அவற்றாலாய பொருள்கள் அவற்றினை அறிவிக்கும் குறியை உடையது காவியலிங்கம். அவை இரண்டும் வெளிப்படையாயும் அவற்றால் ஆய தொழில்கள் பிறவற்றை அறிவிப்பன பரிகரமாம். இவை தம்முள் வேற்றுமைஎன்று அறிக" என்கிறார்.

238-ஆம் நூற்பா உரையுள், "உயர்ந்ததை வியந்து உரைப்பதே உதாத்தம்; உயராததை வியந்து உரைப்பது அதிசயம்" என்கிறார்.

813-ஆம் பாடல் உரையில், "மொழிந்தது மொழிதல் என்பது வழு. அஃதேல் சொற்பின்வருநிலையும் பொருட்பின்வருநிலையும் சொற்பொருட்-பின்வருநிலையும் அவ்வாறு அல்லவோ எனின், அற்றன்று; அவற்றிற்குப் பொருள் வேறு என்க. என்னையெனின், சொல்பின்வருநிலை என்பது மொழிந்த சொல்லே வரினும், பொருள் வேறுபடும். பொருட்பின்வருநிலை என்பது மொழிந்த பொருளே மொழியினும், சொல் வேறுபடப் பொருள் ஒன்றாவதோர் அலங்காரம். சொற்பொருட்பின்வருநிலை என்பது சொல்லும் பொருளும் பெயர்த்து வேறுவேறாகிச் சொல் ஒன்றாய் வருவது" என விளக்கம் தருகிறார்.

நூலாசிரியர் நூற்பாக்களையும் பாடல்களையும் மாட்டுறுப்பு அமையப் பாடுதற்கண் விருப்பமுடையவர். நூலாசிரியரிடம் பயின்ற மாணாக்கராகிய இவ்வுரையாசிரியர், ஆசிரியருடைய உள்ளப்பாங்கிற்கு ஏற்ப 39-ஆம் நூற்பாஅடிகளை மாட்டு என்னும் பொருள்கோள் இலக்கணம் அமையச் சொற்களை மாற்றிச் சேர்த்துப் பொருள்செய்து, "இச்சூத்திரத்திற்கு இங்ஙனம் மாட்டுறுப்பாகப் புணர்த்தல் இந்நூலாசிரியர் கருத்துஎன்று உணர்க" என்று கூறுகிறார். இந்நூலாசிரியரும் 32 உத்திகளைக் கூறுமிடத்து, 'மாட்டுறுப் பினவா மனங்கொளக் கூறல்' என்பதனை 29-ஆம் உத்தியாகக் கொண்டிருத்தலும் குறித்து உணரத்தக்கது.

ஆசிரியரின் உள்ளக்கிடக்கையைத் தெள்ளிதின் உணர்ந்து இவ்வுரையா-சிரியரும் 673, 743, 745, 750 ஆகிய பாடல்களுக்கு மாட்டுறுப்பு அமைய உரைவிளக்கம் தந்துள்ள செய்தியாவும் குறித்து உணரத்தக்கன.

இவ்வுரையாசிரியருடைய புலமைத்திறம் சொல்லணி பற்றிய பாடல்-களுக்கும் சிறப்புப்பாயிரத்துக்கும் இவர் வரைந்துள்ள உரையிலிருந்து புலப்-

படும். இவர் நுட்பமாக உரை வரையும் நயத்தை 1, 103, 104, 272-282, 283-291, 311, 378, 402-404, 553, 560 முதலிய பாடல் உரைகளில் காணலாம்.

இவர் நல்லாசிரியருக்கு உவமங்களாகக் கூறிய கற்பக மணமலி பொற்பூ, கொற்றவன் நிதியறை, அமுதம், சேடன் என்பனவற்றையும், நல்லாசிரியர் அல்லாதாருக்கு உவமங்களாகக் கூறிய நாறா மலர், பாம்பின்வாய் மணி, பொதுமகள் நலன், பேதை கைப்பொருள் என்பனவற்றையும் குறிப்புவமை-களாக நூற்பாக்களில் கூறப்பட்ட செய்தியை ஆசிரியர்களோடு பொருத்தி உரைக்கும் விளக்கம் இனிது.

முதல்நூல் பற்றிய 8-ஆம் நூற்பா 'முதல்வனிற் சிறந்தது முதல்நூ லாகும்' என்பது. இதன் உரை பின்வருமாறு:

"முதல்வனான் மொழியப்பட்டதாய், அழிவிலாதே சிறப்புஎய்தியது முதல்-நூலாம் என்றவாறு. அன்றியும், முதல்வன் தன்இல்லாளுக்கு உரைத்ததாய்ச் சிறப்புஎய்தி வருவது எனினுமாம். அதற்கு அரி அயன் அரன் எனுமிவர் பூமிதேவி காயத்திரி உமாதேவி என்பவர்க்கு உரைத்ததாய் எனக் கூறுக. இன்னும் அவ்விலேசால், இல் என்பதனை உவமஉருபாக்கி, முதல்வனைப் போலப் பழமைத்தாய் அழிவில்லாதே சிறப்பெய்தி வருவது எனினுமாம். அது சுருதியேயாம்."

இதனால் இவர் சமயப்பொறை உடைய வைதிகமரபினர் என்பது பெறப்படுகிறது.

சிறப்புப்பாயிர உறுப்புக்கள் பதினொன்றே 60-ஆம் நூற்பாவில் கூறப்-பெறவும், இவர், "நூல்செய்தோன் வழிபடு தெய்வத்தினையும், தெய்வம் என்பதும் ஒன்று உளது என்று உண்மை உணர்த்திய அவனுடைய ஞானாசாரியனையும், அவன் தாதையையும், குலத்தினையும், பதியினையும், அப்பாயிரத்துள் கூறுவதும் வரலாற்றுமுறைமையான் மரபுஎனக் கொள்க. எனவே, பதினாறு என்பது உட்கோள்" என்ற செய்தியைப் புதுமையாகக் கூறியுள்ளார்.

சிறப்புப்பாயிரத்துள்,

'தனாது நுண்ணுணர்வால் தருபல அணியையும்
மனாதுறத் தொகுத்தும் வகுத்தும் விரித்தும்'

என்ற அடிகளிலுள்ள தனாது, மனாது என்பன 'ஆறன் ஒருமைக்கு அதுவும் ஆதுவும்' (நன். சூ. 300) என்பதனால் அது என்னும் ஆறன்உருபு ஒருமை-யிடத்து ஆது ஆயிற்று என்றார். ஆது என்பது ஆறன்உருபு ஆகுமா என்பது ஆராயத்தக்கது.

சிறப்புப்பாயிரத்துள், 'அலகில் சோதி அணிகிளர் திருஉரு' என்ற தொடரை எடுத்துக்கூறி, "அவ்வோரளவடிக்கண்ணே அறுவகைத் தொகையும் ஒருங்கு தொக்கன. என்னை? அலகிலவாகிய சோதிகளின் ஒளியைப் போலும் ஒளியை உடைய அணியையும் தழையாநின்ற திருவோடும் கூடிய திருமேனியையும் உடையான் எனத் தொகை தொடர்ந்து நிகழ்ந்தமையான் எனக் கொள்க" என்ற உரை நுட்பமானது.

பொதுவியல் முதல்சூத்திரமாகிய தொடர்எண் 65-க்கு உரிய சூத்திர-உரையில், இறையனார்அகப்பொருள் உரையிற் கூறிய கருத்துரைத்தல், கண்-ணழித்தல், பொழிப்புத்திரட்டல், அகலம்கூறல் என்ற நால்வகை உரைகளையும்

விளக்கித் தாமும் அச்சூத்திரத்துக்கு அம்முறை பற்றி விரிவாக உரை வரைந்துள்ளார்.

ஆகுபெயரந்தாதியை விளக்கி, அதற்குத் திருவாய்மொழியிலிருந்து எடுத்துக்காட்டுத் தந்துள்ளார். பொருளின்பமாவது, 'மலரின் மதுக் காரணமாக மதுகரங்களுக்கு வரும் இன்பம் போலக் கவிப்பொருள் உட்கொண்டோர்க்கு வரும் இன்பமாம்' என்று இவர் கூறிய இச்செய்தி, இலக்கணவிளக்க அணியியல் உரை, தண்டியலங்கார உரை இவற்றில் இடம்பெற்றுள்ளது.

செறிவு என்ற பொதுவணிக்கும் ஓரினப்பாட்டு என்ற சித்திரகவிக்கும் இடையே உள்ள வேறுபாட்டை நுட்பமாக விளக்கியுள்ளார்.

உரையாசிரியர், நூலாசிரியரான தம் போதகாசிரியருக்குப் புகழ்சேர்க்கும் வகையில் புலத்துறை முற்றி இம்மாறனலங்காரஉரையை நலத்தக நாட்டியுள்ளார் எனலாம்.

இவ்வுரையில், மேற்கோள்களாகவும், எடுத்துக்காட்டுக்களாகவும் காணப்படும் நூல்கள் பின்வருமாறு:

அகநானூறு, கலித்தொகை, கிளவிமணிமாலை, குருகாமான்மியம், குறுந்தொகை, சிந்தாமணி, சிலப்பதிகாரம், சிறுபாணாற்றுப்படை, சூடாமணிநிகண்டு, தண்டியலங்காரம், திருக்குறள், திருக்கோவையார், திருப்பதிக்கலம்பகம், திருவாய்மொழி, தொல்காப்பியம், நம்பெருமாள் மும்மணிக்கோவை, நன்னூல், நாலடியார், நேமிநாதம், பட்டினப்பாலை, பரிபாடல், புறநானூறு, புறப்பொருள்வெண்பாமாலை, பெரும்பாணாற்றுப்படை, பொருநராற்றுப்படை, முருகாற்றுப்படை, மூதுரை, யாப்பருங்கலக்காரிகை முதலியன.

ஸ்ரீகுடந்தையாண்டவன் அருளாட்சிக்காலத்தில் சில அரிய வடமொழிச் சாத்திர நூல்களும், பழய உரைகளைப்பின்பற்றித் திருவிருத்தத்திற்குத் தெளிவாகத் தமிழில் வி.புதூர் வேங்கடசாமிரெட்டியாரால் வரையப்பட்ட புதுஉரை முதலியனவும் வெளியிடப்பெற்றன.

நம் ஸ்ரீமுஷ்ணம் ஆண்டவன் அருளாட்சிக்காலத்தில் வழக்குஇறந்து கொண்டிருக்கும் வைணவ சரித்திர நூல்கள் சிலவும் தமிழில் தொல்காப்பியத்தை அடுத்து ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்னர் ஐந்திலக்கண நூலாக யாக்கப்பட்ட வீரசோழியம் பழய உரையொடும் விளக்கங்களொடும் அண்மையில் ஆண்டவன் ஆசிரமம் வெளியீடாக வெளியிடப்பெற்றது.

இப்பொழுது ஸ்ரீமுஷ்ணம் ஆண்டவனுடைய 70ஆவது ஜயந்தி மகோற்சவத்தை முன்னிட்டு வழக்கு இழந்து கொண்டிருக்கும், அணி நூல்களுள் தலைசிறந்த மாறன் அலங்காரமும் பழய உரையும் விளக்கங்களொடு வெளியிடப்பெறகிறது. திருக்கோயில்களின் திருப்பணிகள் போலப் பழய நூல்களை அச்சில் கொணரும் திருப்பணியில் ஸ்ரீமத் ஆண்டவன் திருவுள்ளம் பற்றியிருப்பது தமிழின் நற்பேறாகும்.

# மாறனலங்காரம்

## தற்சிறப்புப்பாயிரம்

(தெய்வவணக்கமும் புலவன் இயற்றும் நூல்பற்றிய செய்தியும் உரைக்கும் பாடல்)

1. **தேன்அறா மகிழ்த்தொடையலும் மௌலியும் திருக்கிளர் குழைக்-காதும்**
   **கான்அறா மலர்த்திருமுகச் சோதியும் கயிரவத் துவர்வாயும்**
   **மோனம் ஆகிய வடிவமும் மார்பமும் முத்திரைத் திருக்கையும்**
   **ஞானதேசிகன் சரணதாமரையும் என்நயனம் விட்டு அகலாவே. [1]**

[(இதன் பொருள்) ஞானத்தலைவனாகிய சடகோபனுடைய வண்டு நீங்காத மகிழம்பூமாலையும், கிரீடமும், அழகினை மிகுக்கும் குண்டலங்களை அணிந்த காதுகளும், நறுமணம் நீங்காத தாமரைமலர்போன்ற அழகிய முகத்தின் ஒளியும், ஆம்பற்பூப்போன்ற சிவந்த வாயும், யாரிடமும் உரையாடாது இருக்கும் வடிவமும், மார்பமும் ஞானமுத்திரையைக் குறித்துக்காட்டும் திருக்கையும் திருவடித்தாமரைகளும் என்கண்களை விடுத்து ஒருபோதும் நீங்கமாட்டா என்ற இப்பாடல் தற்சிறப்புப்பாயிரத்தின் முதற்கூறாகிய தெய்வவணக்கத்தை அறிவிக்கிறது. எனவே, இவ்வாசிரியருக்கு நம்மாழ்வாராகிய சடகோபரே வழிபடுதெய்வமாக உள்ளார் என்பது.]

2. **பூமாது மன்னும் புகழ்க்குருகூர் வாழ்புலவர்-**
   **கோமான் இயற்பெயரால் கூறும் அணிப் - பாமாலைக்கு**
   **ஆரணனாம் செஞ்சொல் அலங்காரன் சோலைமலைக்**
   **காரணனாம் நாரணனே காப்பு. [2]**

[(இ-ள்) திருமகள் நிலைபெற்றிருக்கிற புகழைஉடைய திருக்குருகூர் என்ற திருத்தலத்திலே வீற்றிருக்கும் புலவர்தலைவனாகிய சடகோபனுடைய இயற்பெயராகிய மாறன் என்ற பெயரை இட்டுக் கூறப்படும் அணிஇலக்கணநூலுக்கு, வேதங்களால் பரம்பொருள் என்று கூறப்படுபவனாய், ஆழ்வார்களுடைய செவ்விய பாடல்களைத் தனக்கு அணியாகக் கொள்பவனாய், எல்லாப்பொருள்களின் தோற்றம் இருக்கை அழிவு இவற்றிற்குக் காரணனாயும் உள்ள திருமாலிருஞ்சோலையில் எழுந்தருளியிருக்கும் திருமாலே காப்பவனாவான்.]

3. **ஆக்கம்உறக் காக்க; புகழ் மாறன்அலங்காரத்தைப்**
   **பூக்கமலத்தாள் மெய் புளகம்எழ - நோக்கும்**
   **குழகன் எழில் சோலைமலைக் கொற்றவனாம் சங்கத்து**
   **அழகன்அருள் மால் அலங்காரன். [3]**

[(இ-ள்) சான்றோர் புகழும் மாறன் பெயரால் இயற்றப்பெறும் இவ்வணி நூலினைத் தாமரையில் வாழும் திருமகளுடைய உடம்பில் மயிர் மகிழ்ச்சியால் சிலிர்க்குமாறு அவளைத் திருக்கண்களால் நோக்குகின்ற இளையனாய் அழகிய சோலைமலைத் தலைவனாய்த் தமிழ்ச்சங்கத்தில் வீற்றிருக்கும் அழகனாய் எல்லோருக்கும் அருள்செய்யும் மேம்பட்டவனாய் அலங்காரன் என்ற பெயருடைய எம்பெருமான் சிறப்புறுமாறு பாதுகாப்பானாக.]

4. அழுக்காறு இலராய் அழுக்குஅறுக்கும் கல்வி
ஒழுக்கார் உலகத்து உளரால்; - இழுக்கிலா
முற்பனுவல் கண்டுஉரைத்தேன்; மொய்இழாய்! புன்மொழியும்
நற்பனுவல் ஆம்எனவே நான். [4]

[(இ-ள்) நெருங்கிய அணிகளை அணிந்திருக்கும் பெண்ணே! பொறாமை இல்லாதவராய் மாசினைப் போக்கும் கல்வியைக் கற்று அக்கல்விநூல்களில் கூறிய ஒழுக்கத்தோடு வாழ்பவர் உலகத்தில் பலர் உளராக, குற்றமற்ற அச்சான்றோர்கள் வரைந்த இலக்கியஇலக்கணங்களை ஆய்ந்து, என் அற்பமான சொற்களும் நல்ல நூலினை ஆக்க உதவும் என்ற கருத்தால் யான் இந்நூலினை இயற்றியுள்ளேன்.]

5. வாய்ந்த திருப்பதி நூற்றுஎட்டினையும் வாழ்த்தியே
ஆய்ந்த தமிழ் மாறன்அணிஎனப் பேர் - தோய்ந்துளதால்;
காண்தகுசீர் மற்றுஓர் அணியும் கவின்புணர்க்க
வேண்டுமே, ஈங்குஇதற்கு மேல்? [5]

[(இ-ள்) எம்பெருமான் உகந்தருளியிருக்கும் நூற்றெட்டுத் திருத்தலங்களையும் வாழ்த்தித் தமிழை ஆராய்ந்து உரைத்த மாறன்பெயரால் 'மாறன்அலங்காரம்' என்று இந்நூல் பெயரிடப்பட்டுள்ளது. யான் இதற்குமேல் காண்பதற்கு ஏற்ற சிறப்பினைஉடைய மற்றோர் அழகினையும் இந்நூலுக்கு அழகு செய்ய இணைக்கவேண்டுமோ?]

[2, 3, 4, 5-ஆம் பாடல்கள் தெய்வவணக்கம், நூல் என்ற இரண்டனையும் சுட்டும் தற்சிறப்புப் பாயிரப்பாடல்களாக அமைந்துள்ளன.

பொற்புஉற விழுமிய பொருள்பல புணர்க்கினும்
தற்சிறப்பு உளதே தந்திரம் என்ப.

(இ-ள்) அழகாக மேம்பட்ட பலசெய்திகளைக் கூறுவதாக இருப்பினும், இலக்கணநூல் தற்சிறப்புப்பாயிரம் உடையதாய் இருத்தல் வேண்டும்.

இந்நூற்பா இவ்வாசிரியர் யாத்தது என்பர் காரிரத்தினக் கவிராயர்.]

சிறப்புப்பாயிரம்

உலகம் யாவையும் உறுபயன் விளைப்பான்
அலகுஇல் சோதி அணிகிளர் திருஉரு
உணர்வுஉயிர்எனக் கலந்து உத்தமர் நித்தர்
கணம் அகலாத பொன் கவின்பதிநின்றும்
உரவுநீர் வளைத்த ஒன்பானுள் தென்புலப்
பரதகண்டத்துள் பழம்பதிஎனப் புகும்
விண்தொட நிவந்த பொழில் வடவேங்கடம்
தெண்திரை கறங்கு தென்குமரிஎன்று ஆயிடை
அமிழ்தினும் வான்சுவைத்து ஆகிய மும்மைத்
தமிழ்தெரி புலமைச் சான்றோர் மதிக்கும்
முதுமொழித் தெண்டி முதல்நூல் அணியொடும்
புதுமொழிப் புலவர் புணர்த்திய அணியையும்
தனாது நுண்உணர்வால் தரு பல அணியையும்
மனாதுஉறத் தொகுத்தும் வகுத்தும் விரித்தும்
பொதுவியல் பொருள்சொல்லணி எச்சவியல்எனச்

சதுர்பெற இரண்டுஇடம் தழீஇய சார்பு எனலாய்க்
காரிதந்தருள் கலைக்கடல் இயற்பெயர்புனைந்து
ஆரியர் துவன்ற அவைக்களத்து உரைத்தனன்;
சிற்குணச் சீநிவாதனின் அருளால்
நற்பொருள் மூன்றையும் நலன்உற உணர்வோன்
பெருநிலம் புகழ் திருக்குருகைப் பெருமாள்
அருள் குருகூர்வரும் அனகன் செழுந்தேன்
மருக்கமழ் சீரகத்தார் வணிகன் புகழ்த்
திருக்குருகைப்பெருமாள் கவிராயன்
அருள்குணத்துடன் வளர் சடையன்
பொருள்தொடர் நவம்புணர் புலமையோனே.

என்பது பாயிரம். எந்நூல் உரைப்பினும் அந்நூற்குப் பாயிரம் உரைத்தே நூல் உரைக்கவேண்டும் என்பது மரபு. என்னை?

'ஆயிர முகத்தான் அகன்றது ஆயினும்
பாயிரம் இல்லது பனுவல் அன்றே'

என்று முன்னோர் கூறிய முறையான் உணர்க.

[பாயிரம், பொதுப்பாயிரம் எனவும் சிறப்புப்பாயிரம் எனவும் இருவகைப்படும். அவற்றுள், சிறப்புப்பாயிரம்தானும் நூலாசிரியன் தானே வரையும் தற்சிறப்புப்பாயிரம் எனவும், பிறன் நூலாசிரியனைப்பற்றி வரையும் சிறப்புப்பாயிரம் எனவும் இருவகைப்படும். இச்சிறப்புப்பாயிரம் இந்நூலாசிரியன் மாணாக்கனாய் இந்நூற்கு உரைவரைந்துள்ள திருமேனி இரத்தினக்கவிராயனால் செய்யப்பட்டதாம்.]

(இ-ள்) அலங்காரத்தினது பெருந்தன்மையும் இந்நூற்குச் சிறப்புப்பாயிரமும் உணர்த்துதல் நுதலிற்று.

உலகம் யாவையும் உறுபயன் விளைப்பான்
அலகுஇல் சோதி அணிகிளர் திருஉரு
உணர்வுஉயிர்எனக் கலந்து உத்தமர் நித்தர்
கணம் அகலாத பொன் கவின்பதிநின்றும்
உரவுநீர் வளைத்த ஒன்பானுள் தென்புலப்
பரதகண்டத்துப் பழம்பதிஎனப் புகும்
விண்தொட நிவந்த பொழில் வடவேங்கடம்

என்னும் அத்துணையும் ஒருதொடர். இதனுள் உலகம் என்பது,

'மூன்று தலையிட்ட முப்பதிற்று எழுத்தின்
இரண்டு தலையிட்ட முதலாகு இருபஃது
அறுநான்கு ஈற்றொடு நெறிநின்று இயலும்
எல்லா மொழிக்கும் இறுதியும் முதலும்
மெய்யே உயிர்என்று ஆயீர் இயல' (தொ. எ. 103)

என்பதனால் உயிர்முதல் மெய்யீற்றுமொழி ஆயிற்று.

[கள்ளி என்றாற்போன்ற உயிர்மெய்முதல் உயிர்மெய்ஈற்றுச் சொற்களை மெய்முதல், உயிர்ஈற்றுச்சொற்கள் என்றே உயிர்மெய்யை உயிரும்மெய்யுமாகப் பிரித்துப் பெயரிடுமாறு உணரப்படும். இடையில் வரும் உயிர்மெய்யை உயிராகவே கொள்வது மரபு. வரகு என்பதனை உயிர்த்தொடர்க்குற்றுகர ஈற்றுச் சொல் என்றே குறிப்பிடுகிறோம்.]

உலகம் யாவையும்

[இத்தொடருள், உலகம் என்பது நிறுத்த சொல்; யாவையும் என்பது குறித்துவருகிளவி. இவற்றைப் பின்னோர் நிலைமொழி வருமொழி என்ப. நிலைமொழியும் வருமொழியும் புணரும் என்று கூறினும் நிலைமொழி ஈற்றெழுத்தொடு வருமொழி முதலெழுத்து இணைவதே புணர்ச்சி எனப்படும்]

'உயிர்இறு சொல்முன் உயிர்வரு வழியும்
உயிர்இறு சொல்முன் மெய்வரு வழியும்
மெய்இறு சொல்முன் உயிர்வரு வழியும்
மெய்இறு சொல்முன் மெய்வரு வழியும் என்று
இவ்என அறியக் கிளக்குங் காலை
நிறுத்த சொல்லே குறித்துவரு கிளவிஎன்று
ஆயீர் இயல புணர்நிலைச் சுட்டே' (தொ. எ. 107)

என்பதனாலும்,

'அவற்றுள்
நிறுத்த சொல்லின் ஈறுஆகு எழுத்தொடு
குறித்துவரு கிளவி முதல்எழுத்து இயைய,
பெயரொடு பெயரைப் புணர்க்குங் காலும்
பெயரொடு தொழிலைப் புணர்க்குங் காலும்
தொழிலொடு பெயரைப் புணர்க்குங் காலும்
தொழிலொடு தொழிலைப் புணர்க்குங் காலும்
மூன்றே திரிபுஇடன், ஒன்றே இயல்புஎன
ஆங்கு அந்நான்கே மொழி புணர்இயல்பே' (தொ. எ. 108)

என்பதனாலும் இவை (உலகம், யாவையும்) உயிர்முதல் மெய்யீற்று மொழி நிற்ப, மெய்ம்முதல் மெய்யீற்றுமொழி வருமொழியாய்ப் பெயரொடு பெயரைப் புணர்ப்பதாய்,

'வேற்றுமை மப்போய் வலிமெலி உறழ்வும்
அல்வழி உயிர்இடை வரின் இயல்பும் உள' (நன். 220)

என்பதனால், அல்வழிக்கண் உலகம் என்ற நிலைமொழி ஈற்று மகரம் யாவையும் என்ற வருமொழிமுதல் யகரத்தோடு புணர்ந்து இயல்பாயது.

'யாவையும் உறு' என்பது,

'புள்ளி இல்லா எல்லா மெய்யும்
உருஉரு ஆகி அகரமோடு உயிர்த்தலும்
ஏனை உயிரோடு உருவுதிரிந்து உயிர்த்தலும்
ஆயீர் இயல உயிர்த்தல் ஆறே' (தொ. எ. 17)

என்பதனால், அல்வழிக்கண் யாவையும் என்பதன் ஈற்று மகரம் அகரமல்லாத ஏனை உயிராகிய உறு என்பதன் முதலெழுத்தாகிய உகரத்தோடு உருவுதிரிந்து 'யாவையுமுறு' என ஆயிற்று. இஃது எட்டு இறந்த பலவகையுள் கூட்டம்.

உறுபயன் என்பது,

'மூன்று ஆறுஉருபு எண் வினைத்தொகை சுட்டுஈறு
ஆகும் உகரம் முன்னர் இயல்பாம்' (நன். 179)

என்பதனால், வினைத்தொகை வாய்பாட்டு முற்றுகரமாகிய உறு என்பதன் மேல்வந்த பயன் என்பதன் பகரம் இயல்பாகப் புணர்ந்தது.

பயன்விளை என்பது,

'ணன வல்லினம் வரட் டறவும், பிறவரின்
இயல்பும் ஆகும் வேற்றுமைக்கு'... (நன். 209)

என்பதனால், வேற்றுமைப்புணர்ச்சிக்கண் பயன் என்பதன் ஈற்று னகரம் விளை என்பதன் இடையின வகரம் வர இயல்பாகப் புணர்ந்தது.

விளைப்பான் என்பது,

'பெயரெச்ச வினையெச்ச வாய்பாடுகளும் பொருள்முடியுமாறு அறிந்து பகுதிவிகுதியாக்கி இடைநிலையும் வேண்டுழித் தந்து முடிக்க' என்பதனால், விளைக்கவேண்டி என்னும் பொருண்மை தோன்ற, விளை என்னும் பகுதியை முதல்வைத்து அதன்மேல், 'என்பவும் பிறவும் வினையின் விகுதி' (நன். 140) என்பவற்றான் பான் என்னும் விகுதியை நிறுவி,

'ப-வ-மூவிடத்து ஐம்பால் எதிர்பொழுது
இசைவினை இடைநிலை' (நன். 144)

என்பதனால் விளை பான் என்பனவற்றின் இடையே பகரஇடைநிலையை மிகுத்து விளைப்பான் என்ற சொல்லை முடிக்க.

விளைப்பான் அலகு என்பது,

'புள்ளி ஈற்றுமுன் உயிர்தனித்து இயலாது
மெய்யொடும் சிவணும் அவ்வியல் கெடுத்தே' (தொ. எ. 138)

என்பதனால் விளைப்பான் என்பதன் னகரஒற்று இயல்பாய் நிற்க, அதன்மேல் அலகு என்ற வருமொழியின் முதலாகிய அகரம் ஏறி முடிந்தது. இதுவும் கூட்டம்.

[தொல்காப்பியனார் எழுத்திலக்கணத்தை எட்டுவகையானும் எட்டு இறந்த பலவகை-யானும் உணர்த்தினார் என்று கூறி விளக்குவர், உரையாசிரியரும் நச்சினார்க்கினியரும். எட்டு இறந்த பலவகையுள் ஒன்று நிலைமொழி ஈற்றெழுத்தொடு வருமொழி முத-லெழுத்து இணைகின்ற கூட்டம் என்பது.]

அலகு இல் என்பது,

'குற்றிய லுகரமும் அற்றுஎன மொழிப' (தொ. எ. 105)

என்பதனால் நிலைமொழிஈற்றுக் குற்றியலுகரம் புள்ளியீறு போல வரு-மொழிமுதல் இகரஉயிர் ஏற இடம்கொடுத்து அலகில் எனப்புணர்ந்தது. இம்-மாட்டேறு ஒருபுடைச்சேறல் என்று உணர்க. அன்றிக் குற்றியலுகரம் அழிந்தது எனின் பொருள்வேறுபடும். அஃது உரை அன்று என்க. இது குறைவும் கூட்டமும் உடன் ஒன்றியது. கருவி - அகக்கருவி. என்னை? நிலைமொழிஈற்று உகரம் வருமொழிமுதல் இகரம் ஏற இடம் கொடுத்தலான் என்று உணர்க.

[நச்சினார்க்கினியர் குற்றியலுகரம் புள்ளி பெறாது; ஆனால் மெய்ஈறு போல வருமொழி முதலாகிய உயிர் ஏற இடங்கொடுக்கும் என்னும் கருத்தினர். மெய்யீறு போல உயிர் ஏற இடங்கொடுத்தல் என்பது அன்றி மெய்யீறு போலக் குற்றியலுகரம் புள்ளிபெறாது என்ற அவர்கருத்தை உட்கொண்டு இம்மாட்டேறு ஒருபுடைச்சேறல் என்று குறிப்பிடப்-பட்டுள்ளது. ஒருபுடைச்சேறலாவது செய்திகள் இரண்டனுள் ஒன்றனையே ஏற்றுக்-கொள்ளுதலாகும். குற்றியலுகரம் அழிந்தது என்ற கூறினால் அதற்கும் முற்றிய-லுகரத்துக்கும் வேறுபாடு இன்றாய் முடியும். அலகு என்ற சொல்லில் ஈற்றயல் உயிர்-மெய்யின் தொடர்பால் குகரம் குறுகிக் குற்றியலுகரமாயினமை குறைவு. அது வருமொழி உயிர் ஏற இடம் கொடுத்தமை கூட்டம். ஆகவே, 'அலகில்' என்பதன்கண் குறைவும் கூட்டமும் இணைந்து வந்துள்ளன. நிலைமொழி ஈற்றின் செய்கை மாத்திரம் கூறுதல் அகக்கருவியாம்.]

அலகில் சோதி என்பது,

'அல்வழி எல்லாம் உறழ்என மொழிப' (தொ. எ. 368)

என்றாராகலின் அலகில் என்பதன் லகரம், அல்வழிக்கண் சோதி என்ற வருமொழியின் முதலெழுத்தாக வல்லினம் வர, இயல்பாயது.

சோதி அணி என்பது,

'இ ஈ ஐ வழி யவ்வும் ... உடம்படுமெய் என்றாகும்' (நன். 162)

என்பதனால் யகர உடம்படுமெய் பெற்றுச் சோதியணி என்றாயிற்று. இது புறப்புறச்செய்கை.

[நிலைமொழி ஈற்று உயிருக்கு ஏற்ப வருமொழி முதல் உயிரோடு உடம்படுமெய் புணரும் என, நிலைமொழி வருமொழி என்ற இரண்டையும் நோக்கிய புணர்ச்சியாதலின் புறப்புறச்செய்கை எனப்பட்டது.]

அணிகிளர் என்பது,

'அல்வழி இஐ முன்ன ராயின்
இயல்பும் மிகலும் விகற்பமும் ஆகும்' (நன். 176)

என்பதனால் நிலைமொழி இகரஈற்றதாக வருமொழி முதற்கண் வந்த வல்லினம் அல்வழிக்கண் இயல்பாகப் புணர்ந்தது.

கிளர்திரு என்பது,

'ஆவி யரழ இறுதி முன்னிலைவினை
ஏவல்முன் வல்லினம் இயல்பு' (நன். 161)

என்பதனால் வினைத்தொகை வாய்பாடும் ஏவல் போறலின் அல்வழிக்கண் கிளர் என்ற ரகரஈற்றின்முன் திரு என்ற வல்லினம் இயல்பாயது.

[ஏவல்வினைக்கு என்றே சொல்லிய விதியை வினைத்தொகைக்குக் கோடல் பொருந்தாது. 'ரகார இறுதி யகார இயற்றே' 'அல்வழி எல்லாம் இயல்புஎன மொழிப' (தொ. எ. 361, 362) என்ற விதிகளைக் கொள்ளலாம்.]

திருஉரு என்பது,

'இஈஐவழி யவ்வும் ஏனை
உயிர்வழி வவ்வும் ... உடம்படுமெய் என்றாகும்' (நன். 162)

என்பதனால் வகரஉடம்படுமெய் பெற்றுத் திருவுரு என்றாயிற்று. இதுவும் புறப்புறச் செய்கை.

இனி, உலகம் என்பது பலபொருள் குறித்த ஒருசொல்லாயினும் ஈண்டுச் சிறப்புடை உயிர்கள்மேல் நின்றது.

[உலகம் என்பது மக்கள்தொகுதியை உணர்த்தியவழி உயர்திணையாயும், இடத்தை உணர்த்தியவழி அஃறிணையாயும் வருதலின் ஒருசொல் இருபொருட்கண்ணும் சென்றது எனப்படாது, இருசொல் எனவேபடும். எழுத்து ஒப்புமை பற்றியே ஒருசொல் எனப்படும் என்பது சேனாவரையர், நச்சினார்க்கினியர் ஆகியோர் கொள்கையாகும். (தொ. சொ. 58 நச்)]

உலகம் யாவையும் என்பது,

'பெயரின் ஆகிய தொகையுமார் உளவே' (தொ. சொ. 68)

என்பதனாலும்,

'காலம் உலகம் உயிரே உடம்பே...
பால்பிரிந்து இசையா உயர்திணை மேன' (தொ. சொ. 58)

என்பதனாலும், 'ஆ பல' என்பது போலப் பிறிதுஒரு முடிக்குஞ் சொல்லை நோக்காது உலகம் என்பது ஆகிய என்னும் பண்புத்தொகை வாய்பாட்டோடும் யாவையும் என்னும் அஃறிணைப் பன்மைப்பெயர்ப்பயனிலை கொண்டது. யாவையும் என்னும் முடிக்குஞ்சொல் தானே எழுவாயாய் விளைப்பான் என்ற வினையெச்சவாய்பாட்டினைத் தனக்கு முடிக்கும் சொல்லாகக் கொண்டது. உறு என்னும் வினைத்தொகை முதனிலை தன் எஞ்சிய பகுதியாகிய பயன் என்னும்

பெயரோடு இணைந்து உறுபயன் என்றாகி விளைப்பான் என்ற வினையெச்சம் கொண்டு முடிந்தது.

அலகு இல் சோதி அலகு என்ற எண்ணை உணர்த்தும் பெயரோடு புணர்ந்து ஆகிய என்னும் பண்புத்தொகை வாய்பாட்டான் இலது ஆகிய என்ற பொருள்படும் இல் என்ற வினை எதிர்மறுத்த பெயரெச்சக்குறிப்புவினை தன் எச்சமாகிய சோதி என்னும் பெயரோடு முடிந்தது. 'கோள்இல் பொறி' (குறள். 9) 'கோட்டம்இல் கட்டுரை' (சிலப். பதிகம் - அடி 54) என்பனவும் 'அலகுஇல் சோதி' என்பது போலப் புணர்ந்தனவே.

சோதி அணிகிளர் திருஉரு என்பது உவமைத்தொகை, உம்மைத்தொகை, வினைத்தொகை ஒற்றுமைநயம் பெற்று, மூன்றாவதன் தொகைப் புறத்து உம்மைத்-தொகையும் உற்று, அன்மொழித்தொகைப் பெயர்ப்பயனிலை கொண்டது.

[சோதிகளின் ஒளியைப் போலும் ஒளியை உடைய அணியையும், தழையா நின்ற திருவோடும் கூடிய திருமேனியையும் உடையான் - என்று ... 'சோதி அணிகிளர் திருஉரு' என்ற தொடர் பொருள் செய்யப்படுகிறது.
சோதி அணி - சோதிகளின் ஒளியைப்போலும் ஒளியை உடைய அணி - உவமைத்தொகை. கிளர்திரு - தழையாநின்ற திரு - வினைத்தொகை. அணிதிரு - அணியும் திருவும் - உம்மைத்தொகை. திருமேனி - திருவோடும் கூடிய மேனியை உடையான் - மூன்றாம் வேற்றுமைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. அணி திரு என்பன உரு என்ற பெயர்ப்பயனிலையைக் கொண்டு முடிந்தன. 'எல்லாத்தொகையும் ஒருசொல் நடைய' (தொ. சொ. 420), என்பதனால் பல தொகைகளைக் கொண்ட 'சோதி அணிகிளர் திருவுரு' என்ற தொடர் ஒருசொல்-நீர்மைத்து.]

உறுபயன் என்பது வினைத்தொகையாதலே யன்றி, உறு என்ற உரிச்சொல் அடையோடும் கூடிய பண்புப்பெயர் எனினும் ஆம், 'நள்இருள் கிடந்தேன்' (சிலப். பதிகம் - அடி 41) என்பது போலும்.

உறுபயன் - முத்தி. அணி - கௌத்துவமணி. இவை ஆகுபெயர்; என்னை? 'அவைதாம், தத்தம் பொருள்வயின் தம்மொடு சிவணலும்' (தொ. சொ. 116) என்பதனால், தற்கிழமைப் பொருளவாய்க் காரியங்களால் காரணங்களை உணர்த்தின.

இனி, 'எல்லாத்தொகையும் ஒருசொல் நடைய' (தொ. சொ. 420) என்பதனால், இம்முதல் ஈரடிகளாகிய,

உலகம் யாவையும் உறுபயன் விளைப்பான்
அலகில் சோதி அணிகிளர் திருவுரு

என்பனவற்றுள், 'உலகம் யாவையும்' என்பது இருமொழித்தொடர்த் தொகைச்-சொல். 'உலகம் யாவையும்' என்பது முதல் 'திருஉரு' என்பது ஈறாயின பன்மொழித்தொடர்த் தொகைச்சொல். அவற்றுள்ளும் 'அலகில் சோதி அணிகிளர் திருவுரு' என்பன அறுவகைத்தொகையும் ஓர் அளவடிக்கண்ணே ஒருங்கு தொக்கன. என்னை? அலகு இலவாகிய சோதிகளின் ஒளியைப்போலும் ஒளியை உடைய அணியையும் தழையாநின்ற திருவோடும் கூடிய திரு-மேனியையும் உடையான் எனத் தொகை தொடர்ந்து நிகழ்ந்தமையான் எனக் கொள்க.

[அலகு இல் சோதி - பண்புத்தொகை; சோதிஅணி - உவமைத்தொகை; கிளர்திரு - வினைத்தொகை; அணிதிரு - உம்மைத்தொகை; திருஉரு - முதலில் வேற்றுமைத்-தொகை; அடுத்து அன்மொழித்தொகை]

அன்றியும் விளைப்பான் என்பதனை எடுத்தல்ஓசையால் வினைப்பெய-ராக்கி இருபெயரொட்டுப்பண்புத்தொகை வாய்பாட்டான் உறுபயன் விளைப்-பான் ஆகிய திருஉரு எனினும் ஆம்; வினைமுற்றுப்பெயர் பெயர்ப்பெயரே போல உருபு ஏற்றலின் எனக் கொள்க. 'விளைப்பான்' என்பதனை வினைமுற்றுப் பெயராகக் கொள்ளின் விளைப்பானாகிய திருவுருக் குடிபுகும் வடவேங்கடம் எனவும் முறையே தொடர்ப்படுத்து முடிக்க. இச்செய்யுளுக்குப் 'புலவீர்காள்' என்ற தோன்றா எழுவாயை முதலிலேயே விரித்து உரை-எழுதும்போது ஒட்டுக.

விளைப்பான் என்பதனை வினையெச்சமாகவும், வினைமுற்றுப் பெயராக-வும் கொள்ளாது, படுத்தல்ஓசையால் வினைமுற்றாக்கி உயிர்களெல்லாம் முத்தியை விளைக்கப்படுவான் என்றவன் அலகில்சோதி அணிகிளர் திருவுரு எனத் தன் எச்சமான பெயர்கொண்டே முற்று ஆக்குதல் இச்சிறப்புப்பாயிரம் செய்தார் கருத்து.

அலகில் சோதி அணிகிளர் திருவுரு ... உறுபயன் விளைப்பான் என விளைப்பான் என்பதனை வினைமுற்றாக்கிப் பொருள்செய்து, அதன்பின்னர் அவன் என்னும் சுட்டுப்பெயர் எஞ்சியதாக விரித்து மேல்வரும் உணர்வுஉயிர் என்பவற்றோடும் புணர்த்து, 'அவன் குடிபுகும் வடவேங்கடம்' என முடிக்க.

[வினைமுற்றில் பகுதியில் பொருள் சிறந்து நிற்கும். வினைமுற்றுப் பெயர்களில் விகுதியில் பொருள் சிறந்து நிற்கும். பொருள் சிறந்து நிற்கும் இடத்தை எடுத்தல்-ஓசையால் கூறவேண்டும் என்பது இலக்கணநூலார் கொள்கை. நட, வா முதலிய முதல்நிலைத் தனிவினைகளை முற்றாக்க வேண்டில் எடுத்துச்சொல்லுக. கட்டு என்ப-தனை முற்றுகர முற்றாக்க வேண்டில் எடுக்க; குற்றுகரத் தொழிற்பெயராக்க வேண்டில் படுக்க. 'நெறிநின்றார் நீடுவாழ்வார்' (குறள் 6) என்பதனை முறையே பெயராக்க வேண்டில் எடுக்க; முற்றாக்க வேண்டில் படுக்க. செய்யும் என்பதனை எச்சமாக்க வேண்டில் எடுக்க; முற்றாக்க வேண்டில் படுக்க. அம்பலத்தாடி என்பதனைப் பெயராக்க வேண்டில் எடுக்க; எச்சமாக்க வேண்டின் படுக்க. இவைபோல்வன எல்லாம் பலபொருட்கு ஒருவடிவாகிய தமிழ்மொழி. இலக்கணக்கொத்து சூ. 126 உரை.]

இம்முதல் ஈரடிக்கும் இத்துணையும் எழுத்துச்சந்திமுடிவும் சொல்முடிவும் விரித்தனம். இங்ஙனம் வகுத்தவற்றுள், இம்முற்றிற்குப் பொருள்கோள் - ஆற்றுநீர்; பொருள் - புறப்புறம்; திணை - வாகை; துறை - அருளொடு நீங்கல்; என்னை? 'ஒலிகடல் வையகத்து, நலிவுகண்டு நயப்பு அவிந்தன்று' என்னும் வெண்பாமாலையுள் வாகைத்திணையுள் இறுதிச்சூத்திரத்தான் உணர்க. யாப்பு - குறள்வெண்செந்துறை; அலங்காரம் - ஒருபொருட்கு ஒன்று பல குழீஇய பலபொருள் உவமை; மெய்ப்பாடு - கல்விபற்றிய பெருமிதம். பயன் - ஆதலால் முத்தி வேண்டுகில், இக்காயம் இருக்கப்பெற்றபொழுதே, இந்திரியங்களை அடக்கி, மண் பொன் பெண் என்னும் பற்றினைவிட்டு, மனோவாக்குக்-காயங்களால் அவனைச் சிந்தித்தும் வாழ்த்தியும் வணங்குமின்; பேரின்பம் பெறலாம் என்பதாம்.

[ஆற்றுநீர் - அடிகளிலுள்ள சொற்களை மாற்றிப் பொருள்கொள்ள வேண்டிய தேவை இன்றி, சொற்கள் உள்ள முறைப்படியே பொருள்செய்வது. வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை என்ற ஏழும் புறம்; வாகை, பாடாண், பொதுவியல் என்ற மூன்றும் புறப்புறம் என்பது பின்னுள்ளோர் புறப்பொருள்பற்றிக் கொண்ட கோட்பாடாகும்.

விழுமிய பொருளும் ஒழுகிய ஓசையும் கொண்டு நாற்சீரடி இரண்டானாகிய பாடல் குறள்வெண்செந்துறை எனப்படும். அணி எனப்படும் கவுத்துவமணிக்கு, உலகிலுள்ள

ஒளிப்பொருள் பலவற்றையும் உவமையாகக் கூறுதலின் - ஒருபொருட்கு ஒன்று பல குழீஇய பொருள் உவமை. கல்வி - தவம் முதலாகிய விச்சை.]

இப்பாயிரச்செய்யுள் முதல்ஈரடியையும் இங்ஙனம் பிரித்துச் சொல்லணிக்-கண் காட்டிய பிறிதுபடுபாட்டு ஆக்கியது, பஞ்சாதிகார இலக்கணநடை தழீஇய ஒருவகை விரித்துரை காட்டுதற்கு எனக் கொள்க. இனி, ஏனை அடிகட்கு எல்லாம் இவ்வாறு விரித்து உரைப்பின் உரை பெருகும் ஆதலான் அவற்றிற்கு இவற்றில் சுருங்கக் கூறுவதையும் ஏற்ற பெற்றி நற்குணமுடையோர் தெற்றென முற்ற உய்த்துணர்க.

[பிறிதுபடுபாட்டு - ஒருசெய்யுள் தொடையும் அடியும் வேறுபட உரைத்தாலும் சொல்லும் பொருளும் வேறுபடாமல் பிறிதொரு செய்யுளாய் முடிவதாகும். சிறப்புப்-பாயிரமாகிய அவ்வாசிரியப்பாவின் முதல்ஈரடிகளைத் தொடையும் அடியும் சொல்லும் பொருளும் வேறுபடாமல் தனியே முடித்துக் குறள்வெண்செந்துறையாய்க் கோடல் பிறிதுபடுபாட்டாம். எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்பன தமிழ்-இலக்கணத்தின் ஐம்பெரும்பிரிவுகள். முதல்ஈரடிகளுக்கு உரையாளர் கூறிய விரி-வுரையுள் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்ற ஐம்பிரிவுகள் பற்றிய செய்திகள் பலவும் விளக்கப்பட்டுள்ளன.]

'உணர்வுஉயிர்எனக் கலந்து உத்தமர் நித்தர்
கணம் அகலாத பொன் கவின்பதிநின்றும்'

என்பது அவன் ஆயுவும் ஞானமும் போலத் தன்னுடன் அளவளாய் உத்தம-ராகிய நித்தர்கூட்டம் விட்டுநீங்காத அழகிய சுவணமயமாம் அந்தாமத்தின்-கண்ணும் அவ்வுரு நிலைபெற்றிருப்பதோடும் என்றவாறு. உணர்வுஉயிர் - உம்மைத்தொகை. கணம் அகலாத என்பதற்குக் கணப்பொழுதும் விட்டுநீங்காத எனினும் ஆம்; என்னை? 'ஒருபொருள் இருசொல் பிரிவில வரையார்' (தொ. சொ. 460) என்றாராகலின். நித்தர் - அநந்த கெருடசேனாபதி முதலியோர். அகலாத பொற்கவின்பதி என்பது.

'உருபும் வினையும் எதிர்மறுத்து உரைப்பினும்
திரியா தத்தம் ஈற்றுஉருபின் என்ப' (நன். 354)

என்பதனால் எச்சப்பெயர் திரிபின்றி முடிந்தது.

[உயிர் - ஆயு; அஃதாவது ஆன்மா. ஆன்மாவும் ஞானமும் பிரிவின்றிக் கலந்து இருப்பதுபோல இறைவன் நித்தர் கூட்டத்தைப் பிரிவின்றிக் கலந்து நிற்கும் இடம் பொன்மயமான வைகுந்தமாகும். உணர்வும் உயிரும் என விரியும். நித்தர் - இவ்வுலகில் பிறந்து பின் முத்தியடையும் முமுக்ஷுக்கள் போலல்லாமல் என்றும் எம்பெரு-மானுடைய திருத்தொண்டிலேயே ஈடுபட்டிருக்கும் ஆதிசேடன், கருடன், சேனை முதலியார் போல்பவர்.

'ஒருபொருள் இருசொல் பிரிவில வரையார்' (தொ. சொ. 460) என்பதனை நச்சினார்க்கினியர் 'ஒருசொல் இருபொருள் பிரிவில வரையார்' என மாறிக்கூட்டி ஒரேசொல் ஒருகால் கூறுதற்கண்ணே இரண்டு பொருளைப் புலப்படுத்தி இரண்டற்கும் பிரிவிலவாய் நிற்றலைச் சிறப்புடைய என்று கொள்வர் ஆசிரியர் என்று பொருள்-செய்துள்ளதனை உட்கொண்டு இவ்வுரையாளர் 'கணம்' என்ற சொற்குக் கூட்டம் எனவும், கணநேரம் எனவும் இருவகையாகப் பொருள்செய்துள்ளார்.

அகலாத ... பதி - எதிர்மறைப் பெயரெச்சங்களும் உடன்பாட்டுப் பெயரெச்சம் போலத் தாம் கொண்டுமுடியும் பெயரைத் திரிபின்றிக் கொண்டுமுடியும் என்ற செய்திக்கு நன்னூல்விதி கூறப்பட்டுள்ளது.

'பெயரெஞ்சு கிளவியும் வினையெஞ்சு கிளவியும்
எதிர்மறுத்து மொழியினும் பொருள்நிலை திரியா'

என்பது தொல்காப்பிய விதி. (தொ. சொ. 238 நச்.)]

'உரவுநீர் வளைத்த ஒன்பானுள் தென்புலப்
பரதகண்டத்துள் பழம்பதிஎனப் புகும்
விண்தொட நிவந்த பொழில் வடவேங்கடம்'

என்பது கடல் சூழ்ந்த பூமியினிடத்துக் கண்டம் ஒன்பதினுள்ளும் தென்திசைக்கண் பரதகண்டத்துள் அந்தாமம் ஆகிய அப்பழம்பதி பூலோக வைகுந்தமானது என்று உயர்ந்தோர் கூறும்படிக்குக் குடிகொண்டருளும், விசும்பைத் தொட உயர்ந்த சோலைகளைஉடைய வடக்கின்கண் வேங்கடமும் என்றவாறு. 'உரவுநீர் வளைத்த ஒன்பான்' என்பது அடிப்பட்ட பெயர் எஞ்சாது முதல்நின்று தொடர்ந்த பெயரெச்சவாய்பாடு தன் எச்சமான பெயர்கொண்டு முற்றியது. அடிப்பட்ட பெயர் எஞ்சியதாவது: உண்ட சாத்தன் என்பதற்கு அமுது உண்ட சாத்தன் என்றும், உண்ட அமுது என்பதற்குச் சாத்தன் உண்ட அமுது என்றும் முதலே நின்ற பெயராகிய அமுதும் சாத்தனும் எஞ்சி நின்றன. அஃது ஈண்டு யாண்டு விரிந்தது எனின்? உரவுநீர் - அடிப்பட்ட பெயர்; வளைத்த என்பது பெயரெச்ச வாய்பாடு; ஒன்பான் என்பது தன் எச்சமாகிய பெயர்; ஆதலால் உரவுநீர் வளைத்த என முதலே எஞ்சாது விரிந்தமை காண்க. இவை வினையெச்சத்திற்கும் உள. அவையும் இம்முறையே காண்க. உரவுநீர் - போக்குவரவு நீர்.

[பூமியின் ஒன்பது கண்டங்கள் - கீழ்பால் விதேகம், மேல்பால் விதேகம், வடபால் விதேகம், தென்பால் விதேகம், வடபால் இரேபதம், தென்பால் இரேபதம், வடபால் பரதம், தென்பால் பரதம், மத்திமகண்டம் என்பன. 'வளைத்த ஒன்பான்' என வாளா நோக்கின் யார் அல்லது எது வளைத்த என்ற வினா எழும். அவ்வினாவுக்கு வாய்ப்பு அளிக்காது வளைத்தல் தொழிலைச் செய்யும் 'உரவு நீர்' என்பது, அப்பெயரெச்சத்தை முன் நின்று தொடர்ந்தால் 'உரவுநீர் வளைத்த ஒன்பான்' என்ற தொடர்ப்பொருள் தெளிவாகப் புலப்படும். ஆதலின் பெயரெச்சப்பொருள் தெளிவுக்கு இன்றியமையாத காரணமாக இருக்கும் உரவுநீர் என்ற தொடர் அடிப்பட்ட பெயர் எனப்பட்டது. இங்ஙனமே அமுது உண்ட சாத்தன் என்ற தொடரில் அமுது என்பதும், சாத்தன் உண்ட அமுது என்ற தொடரில் சாத்தன் என்பதும் அடிப்பட்ட பெயர்களாம். உரவுநீர் என்ற அடிப்பட்ட பெயரோடு இணைந்த வளைத்த என்ற பெயரெச்சம் ஒன்பான் என்ற பெயரைக்கொண்டு முடிந்தது.]

ஒன்பானுள் - என்பது,

'ஒன்று முதலாகப் பத்து ஊர்ந்து வரூஉம்
எல்லா எண்ணும் சொல்லுங்காலை
ஆன் இடைவரினும் மானம் இல்லை
அஃதுஎன் கிளவி ஆவயின் கெடுமே
உய்தல் வேண்டும் பஃகான் மெய்யே' (தொ. எ. 199)

என்றாராகலின், அஃது என்னும் சொல் கெட்டுப் பகரமெய் நிற்ப, உருபுபுணர்ச்சிக்கண் இடை ஆன் சாரியை பெற்றது. 'ஒன்பானுட் டென்புலம்' என்பது எட்டு இறந்த பலவகையுள் திரிந்ததன்திரிபு.

கண்டத்துள் என்பது,

'மஃகான் புள்ளிமுன் அத்தே சாரியை' (தொ. எ. 185)

என்பதனால் அத்துச் சாரியை பெற்று,

'அத்தே வற்றே ஆயிரு மொழிமேல்
ஒற்றுமெய் கெடுதல் தெற்றென்றற்றே' (தொ. எ. 133)

என்பதனால் மகரம் கெட்டு,

'அத்தின் அகரம் அகரமுனை இல்லை' (தொ. எ. 125)
என்பதனால் அத்துச்சாரியை அகரம் கெட்டது.

அப்பழம்பதி என்பது.

'வினையெஞ்சு கிளவியும் உவமக் கிளவியும்
எனஎன் எச்சமும் சுட்டின் இறுதியும்
ஆங்க என்னும் உரையசைக் கிளவியும்
ஞாங்கர்க் கிளந்த வல்லெழுத்து மிகுமே' (தொ. எ. 204)

என்பதனால் பகரம் மிக்கது.

வடவேங்கடம் வேற்றுமைத்தொகை.

[ஒன்பஃது - இது பஃது என்ற எண்ணுப்பெயர் போல இறுதி அமைந்திருத்தலின் பஃது என்ற எண்ணுப்பெயர் உருபு ஏற்கும்போது ஏற்படும் திரிபுகள் இதற்கும் கொள்ளப்படுகின்றன. ஒன்று+பஃது+ஐ > ஒரு+பஃது+ஐ > ஒரு+ப்+ஆன்+ஐ = ஒருபானை எனவரும். இவ்வாறே ஒன்பஃது+ஐ > ஒன்ப்+ஆன்+ஐ > ஒன்பானை எனவரும். உள் என்ற உருபு ஏற்குங்கால் ஒன்பானுள் எனவரும். எழுத்திலக்கணத்தை எட்டுவகையானும் எட்டு இறந்த பலவகையானும் தொல்காப்பியனார் உணர்த்தினார் என்று இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் கூறுப. அவற்றுள், எட்டு இறந்த பலவகையுள் 'திரிந்ததன் திரிபு அது' என்பதும் ஒன்று. ஒன்பஃது என்பது ஒன்பான் எனத் திரிந்தது. அவ்வாறு உருவம் திரிந்தாலும் ஒன்பான் என்று கூறினும் ஒன்பஃது எனவே கொள்ளப்படும் என்பது.

கண்டம் என்பது மகரஈற்றுச் சொல் ஆதலின் உருபு ஏற்கும்போது இடையே அத்துச்சாரியை பெற்று, கண்டம்+அத்து+உள் என்பன புணரும்போது அத்துச் சாரியைமுன் உள்ள மகரம் கெட, கண்ட+அத்து+உள் என்று ஆக, நிலைமொழி அகரஈற்றின் முன் அத்துச்சாரியையின் அகரம் கெட, கண்ட+த்து+உள் என்றாக, நிலைமொழிஈற்றுக்குற்றியலுகரம் வருமொழி உயிர் தன்மீது ஏற இடம் கொடுத்தலின் கண்டத்துள் என்றாயினமை விளக்கப்பட்டுள்ளது.

அ+பழம்பதி = அப்பழம்பதி. நிலைமொழி சுட்டுஇடைச்சொல்லாக வருமொழிமுதற்கண் வல்லினம் வரின் அவ்வல்லினஒற்று இடையே மிகுந்தமைக்கு விதி கூறப்பட்டுள்ளது.

வடவேங்கடம் - வடக்கின்கண் உள்ள வேங்கடம் என ஏழாம்வேற்றுமை உருபும் பொருளும் உடன்தொக்க தொகை]

'உலகம் யாவையும் உறுபயன் விளைப்பான்
அலகுஇல் சோதி அணிகிளர் திருஉரு
உணர்வுஉயிர்எனக் கலந்து உத்தமர் நித்தர்
கணம் அகலாத பொன் கவின்பதிநின்றும்
உரவுநீர் வளைத்த ஒன்பானுள் தென்புலப்
பரதகண்டத்துள் பழம்பதிஎனப் புகும்
விண்தொட நிவந்த பொழில் வடவேங்கடம்'

இதன் பொழிப்புரை: புலவீர்காள்! உயிர்கள் முழுதும் பெறுதற்கு அரிய முத்தியை விளைக்கப்படுவான், எண்இறந்த பலகோடியவாம் இளஞாயிறு போன்ற ஒளியைஉடைய கௌத்துவமணியையும், தழையாநின்ற திருவோடும் கூடிய திருமேனியையும் உடையான். அவன் ஆயுவும் ஞானமும் போலத் தன்னொடும் அளவளாவிய உத்தமராகிய நித்தர்கூட்டம் தனது காந்தியையும் கருணையையும் கண்டும், கருத்துள் கொண்டும், விட்டுநீங்காத அழகிய சுவர்ணமயமாகிய அந்தாமத்தின்கண்ணும் அகிலபூரணனாகி நிலைபெற்றிருப்பதோடும், கடல் சூழ்ந்த பூமியின்கண்ணவாம் கண்டம்ஒன்பது என்றவற்றுள்ளும் பரதனால் பெயர்பெற்ற கண்டத்தினுள் பழம்பதி பூலோகவைகுந்தமானது

என உயர்ந்தோர் கூறும்படிக்குக் குடிகொண்டு உறையும் வடக்கின்கண் வேங்கடமும் என்பதாம்.

அவன் குடிகொண்டு உறையும் வடக்கின்கண் வேங்கடமும் எனக் கூட்டுக.

அற்றேல், 'விளைப்பான் அலகுஇல் சோதி அணிகிளர் திருஉரு' என்பது முதலாயவற்றின் இடையிடையே பிற பலசொல் தொடர்ந்தவாறு என்னை எனின், நன்று சொன்னாய்!

'தத்தம் எச்சமொடு சிவணும் குறிப்பின்
எச்சொல் ஆயினும் இடைநிலை வரையார்' (தொ. சொ. 239)

என்பதனால் இடையிடையே ஏற்பன அடைச்சொல்லாய் வந்தன.

அஃதாக, இங்ஙனம் தொடர்ந்த அவற்றின் இடையிடை 'பெறுதற்கு அரிய' என்பது முதலாய சொற்கள் கூட்டி உரைத்த உரைநடை யாதோ எனின்,

'சொல்லொடும் குறிப்பொடும் முடிவுகொள் இயற்கை
புல்லிய கிளவி எச்சம் ஆகும்' (தொ. செய். 206)

என்றாராகலின் கூட்டி உரைக்கப்பட்டது. ஆனால் சொல்லெச்சங்களேயன்றிக் குறிப்பெச்சமும் இதனுள்ளும் உளவோ எனின், உள. அஃது யாண்டுக் குறித்தது எனின், பரமவைகுந்தத்து இருப்பவன்அவன் அனைத்துஉலகத்து உயிர்கள்-தோறும் அந்தர்யாமியாய் இருப்பதோடும், கைம்மாறு இன்றியும் இவ்வுலகத்து உயிர்கள் பெறுதற்கரிய முத்தியை எளிதின் விளைப்பவனாகிப் பரதகண்டத்துள் பழம்பதியெனக் குடிபுகுந்து உறையும் வடவேங்கடம் எனவே, அவன் பரம-கிருபை இருந்தபடியோ எனவும், பரமவைகுந்தத்தினும் திருமாமணி மண்டபத்-தினும் நித்தர்முத்தரொடும் கூடிய திருவோலக்கத்தில் குறைவின்றி இருப்ப-தோடும், வடவேங்கடத்தினும், தெய்வத்திருமேனியோடும் தொண்டக்குழாங்-கள் கைதொழக் குடிபுகுந்து நின்றது என்ன அகடிதகெடிதசாமர்த்திய குணமோ எனவும் ஈரிடத்தும் குறிப்பெச்சம் நின்றதுஎனக் கொள்க.

மெய்ப்பாடு - மருட்கையைச் சார்ந்த பெருமிதம். இவ்வுரைநடையுள், பொழிப்புரை தலைதடுமாறியும், பொழிப்பு அகல நுட்ப எச்சம் என்னும் நால்வகை உரைநடையும் நிகழ்ந்தமையும் காண்க.

[நாபிமன்னன் பெயரனும் இடபமன்னன் மகனுமான பரதன் ஆண்ட நிலப்பகுதி பரதகண்டம் (பாகவதம் 1142) ஆம்.

முடிக்கும் சொல்லுக்கும் முடிக்கப்படும் சொற்கும் இடையே பல சொற்களையும் சொற்றொடர்களையும் பொருள்மயக்கம் நிகழாதவாறு இணைத்து உரைநடைஅமைத்தல் இடைப்பிறவரலாகும் என்பது விளக்கப்பட்டது. செய்யுளில் ஒருசொல் வருவித்துக் கொள்ளப்படும் சொல்லெச்சமும், தொடராகப் பலசொற்கள் வருவித்துக்கொள்ளப்படும் குறிப்பெச்சமும் விளக்கப்பட்டுள்ளன. பெருமிதம் எம்பெருமானுடைய பெருமையைக் கூறுமிடத்தும், மருட்கை அவன்செயல்களைக் குறிப்பிடும்இடத்தும் அமைந்துள்ளமை-யால் மெய்ப்பாடு மருட்கையைச் சார்ந்த பெருமிதம் ஆயிற்று. பொழிப்பு - செய்யுள் அடிகளுக்கு உரைநடையில் பொருள் கூறுதல். அகலம் - சில செய்திகளுக்கு விளக்க-வுரை தருதல். நுட்பம் - செய்யுளில் அமைந்துள்ள நுட்பமான கருத்துக்களை விளக்-குதல். எச்சம் செய்யுளுள் சொல்லப்படாமல் மறைந்திருக்கும் செய்திகளாய், செய்யுளைக் கசடற விளங்கிக்கொள்வதற்குத் தேவையானவற்றை வெளிப்படையாக எடுத்து இயம்புதல்.

'விண்தொட நிவந்த பொழில்' என்ற தொடருக்கு உரை இல்லை.]

தெண்திரை கறங்கு தென்குமரிஎன்று ஆயிடை என்பது, தெளிந்த திரை ஆரவாரிக்கும் தெற்கின்கண் குமரியும் எல்லையாக உடையது என்று

கூறப்படுவனவாம் அவற்றின் நடு இருந்து என்றவாறு. ஆயிடை என்பது 'நீடவருதல் செய்யுளுள் உரித்தே' (தொ. எ. 208) என்பதனாலும், 'சுட்டு நீளின் யகரமும் தோன்றுதல் நெறியே' (நன். 163) என்பதனாலும் யகரஉடம்படுமெய் தோன்றியது.

[அ+இடை - அகரம் ஆகாரமாக நீள, இடையே யகரஉடம்படுமெய் வர ஆ+இடை = ஆயிடை என்றாயிற்று என்பது உரையாளர் கருத்து. அவ்+இடை = ஆயிடை ஆயிற்று என்பது நச்சினார்க்கினியர் கருத்து. சுட்டு நீண்டு வகர ஒற்று வேறுபட முடிந்தது என்பார் அவர். (தொ. எ. 483)]

'அமிழ்தினும் வான்சுவைத்து ஆகிய மும்மைத்
தமிழ்தெரி புலமைச் சான்றோர் மதிக்கும்'

தேவர்பானமாகிய அமிர்தினும் பெருத்த சுவைஉடைத்தாம் எழுத்துச் சொல் பொருள் என மூன்றுதன்மைத்தாகிய தமிழை ஆராயாநிற்கும் அறிவின் தன்மையை உடைய பெரியார் நன்கு மதிக்கும் எ-று.

'முதுமொழித் தெண்டி முதல்நூல் அணியொடும்
புதுமொழிப் புலவர் புணர்த்திய அணியையும்'

என்பது முந்துநூல்களை ஆராயும் தெண்டியாசிரியரால் கூறப்பட்ட முதல்நூல் அணிகளோடும் தினமும் நவமான பாடலே பாடும் புலவரால் கூறப்பட்டனவாய் உலகின்கண்ணே வழங்குவனவாம் அணிகள் பலவற்றையும் எ-று.

'தனாது நுண்உணர்வால் தரு பல அணியையும்
மனாதுஉறத் தொகுத்தும் வகுத்தும் விரித்தும்'

என்பது, தனது நுண்ணிய அறிவுகாரணமாகக் கண்டு அளித்த பல அணிகளையும் கற்றோர்கள் மனத்துக்கொள்ளத் தொகுத்தும், தொகுத்ததனை வகுத்தும், வகுத்தவற்றை விரித்தும் என்பதாம்.

தனாது, மனாது என்பன 'ஆறன் ஒருமைக்கு அதுவும் ஆதுவும்' (நன். 300) என்பதனால் அது என்னும் ஆறன்உருபு ஒருமையிடத்து 'ஆது' ஆயிற்று.

[வேற்றுமைஉருபாவது எல்லாப் பெயரோடும் இணைந்து தன் வேற்றுமைப் பொருளைத் தருவதாகும். ஆது என்பது என, நின, தன என்பனவற்றோடு தான் இணைந்து எனாது, நினாது, தனாது என வருவது. ஏனைய பெயர்களோடு இணையாத அதனை ஆறன்உருபு என்று கூறுவதனைவிட அது என்ற உருபின் நீட்டம் என்று கூறுவதே ஏற்புடையது. மர+அடி = மரவடி என்று புணர்வதனோடு மராடி எனவும் புணர்வது போல்வது, தன+அது = தனாது எனப் புணர்வது. மனம் என்ற மகர ஈற்றுப்-பெயர் அத்துச் சாரியை பெற்று மனத்து என்றே வரும். அதனை 'மனாது' என்று குறிப்-பிட்டது, எதுகைநோக்கி அமைந்த செய்யுள்விகாரமாகக் கொண்டு வழுவமைதியாகக் கருதுவதே ஏற்புடையதாகத் தோன்றுகிறது.]

'பொதுவியல் பொருள்சொல்லணி எச்சவியல்என' என்பது, பொதுவியல், பொருளணியியல், சொல்லணியியல், எச்சவியல் என்பது என்று கூறும்படிக்கு எ-று.

இவற்றுள், இயல் என்பதனைப் பொது, பொருள், சொல், எச்சம் என்ற நான்கினும் கூட்டி, அணி என்பதனைப் பொருள் சொல் என்ற இரண்டினும் கூட்டி உரைக்க.

'சதுர்பெற இரண்டுஇடம் தழீஇய சார்பு எனலாய்' என்பது, நால்வகை பெற்றுச் செய்யுளிடம் வழக்கிடம் என்னும் ஈரிடம் தழுவின சார்புநூல் என்பதாக எ-று.

[நால்வகை - பொது, பொருள், சொல், எச்சம் என்பன]

'காரி தந்தருள் கலைக்கடல் இயற்பெயர் புனைந்து
ஆரியர் துவன்ற அவைக்களத்து உரைத்தனன்'

என்பது. அந்நூற்குக் காரியார் உலகின் மன்னுயிர்கள் ஈடேறப் பெற்று அருள்-செய்த நூற்கடலின் இயற்பெயரால் மாறன்அலங்காரம் என அத்திருநாமத்-தினை அவ்வணிக்கு அணியாகவே அலங்கரித்து ஞானாசாரியார் குழீஇயதாம் அவையின்கண் அரங்கேற்றினன் எ-று.

'சிற்குண சீநிவாதனின் அருளால்
நற்பொருள் மூன்றையும் நலன்உற உணர்வோன்'

என்பது. அவன் யாவன் என்னின், சாத்துவிககுணத்தை உடைய ஸ்ரீநிவாத-னென்னும் ஞானாசாரியன் இனிய கருணையால் நன்பொருளாகிய சித்து அசித்து ஈச்சுரம் என்னும் மூன்றினையும் உணர்த்தும் ஞானநூல்களை நாடோறும் பேரானந்தம் மிகும்படி ஆராய்வோன் எ-று.

'வேண்டிய கல்வி யாண்டு மூன்று இறவாது' (தொ. பொ. 188) என்பதனால், 'உணர்வோன்' என நிகழ்வும் எதிர்வும் பெறக் கூறினார் என்று அறிக.

[வேண்டிய கல்வி என்பது நிகழ்காலத்திற்கும் எதிர்காலத்திற்கும் வேண்டிய கல்வி என்று பொருள்படுதலின், உணர்வோன் என எதிர்காலத்தால் கூறப்பட்டது. அது நிகழ்விற்கும் ஒக்கும்.]

'பெருநிலம் புகழ் திருக்குருகைப் பெருமாள்
அருள் குருகூர்வரும் அனகன்'

என்பது, பெரிய உலகினிடத்து உயர்ந்தோர் கீர்த்திக்கும் திருக்குருகைப்-பெருமாள் பெற்றருளும் அழுக்கு அற்றவன்; புண்ணியன் எ-று.

'செழுந்தேன், மருக்கமழ் சீரகத்தார் வணிகன்' என்பது வளமையைஉடைய தேனினது பரிமளம் பரிமளிக்கும் சீரகமாலை புனைந்துள்ள வணிகர்குலத்து உள்ளான் எ-று.

'புகழ்த் திருக்குருகைப்பெருமாள் கவிராயன்' என்பது, கீர்த்தியைஉடைய திருக்குருகைப்பெருமாள் கவிராயன் என்னும் சிறப்புப்பெயரை உடையோன் எ-று.

'அருள் குணத்துடன் வளர் சடையன்' என்பது, கருணைக்குணத்துடன் வளராநின்ற சடையன் என்னும் இயற்பெயருடையோன் என்பதாம்.

'பொருள்தொடர் நவம்புணர் புலமையோனே' என்பது, பெருங்காப்பியம் புதிதாகப் பாடல்சான்ற அருளின் தன்மையை உடையோன் எ-று. ஏகாரம் ஈற்றசை.

வடக்கின்கண் வேங்கடமும் தெற்கின்கண் குமரியும் என்னக் கூறப்படு-வனவாம் அவற்றின் நடுஇருந்து தமிழை ஆராயும் உணர்வுஉடையோர் நன்கு மதிக்கும் தெண்டி முதல்நூல் அணியொடும் புலவர் புணர்த்து வழங்கும் அணியையும் தனது நுண்ணுணர்வால் கண்டு அளித்த பலஅணியையும் கற்றோர் மனத்துட்கொளத் தொகுத்தும் வகுத்தும் விரித்தும் நால்வகை இயலான் ஈரிடம் பொருந்தின சார்புநூல் என்பதாகவும், அந்நூற்குக் காரியார் பெற்றருள் கலைக்கடல் இயற்பெயரை அணியாகப் புனைந்து, ஆரியர் குழீஇய அவையின்கண் அரங்கேற்றினன்; அவன் யாவன் எனின், சிற்குணச் சீநிவா-தனின் அருளால் நற்பொருள் மூன்றையும் ஆராய்வோன் திருக்குருகைப் பெருமாள் கவிராயன் சடையன் பொருள்தொடர் நவம்புணர் புலமையோன் என்க.

அஃதாக முன்னர்ச் சிறப்புப்பாயிரம் பதினொரு வகைப்படும்எனக் கூறிய அப்பதினொன்றும் இப்பாயிரத்துள் பெற்றவாறு எங்ஙனேயோ என்னின், 'வடவேங்கடம் தென்குமரி' எனவே எல்லையும், 'முதல்நூல் அணியொடு' எனவே வழியும் நுதலியபொருளும், 'தனாது நுண்உணர்வால் தருபல அணியும்' எனவே காரணமும் பயனும், 'பொதுவியல் பொருள் சொல்லணி எச்சவியல்' எனவே யாப்பும், 'காரி பெற்றருள் கலைக்கடல் இயற்பெயர் புனைந்து' எனவே நூற்பெயரும், 'ஆரியர் துவன்ற அவைக்களத்து உரைத்தனன்' எனவே, கேட்போரும், களனும், 'திருக்குருகைப்பெருமாள் கவிராயன் சடையன்' எனவே, நூல்செய்தோன் பெயரும், காலமும், ஆகப் பதினொன்றும் இப்பாயிரத்துள்ளே பெற்றவாறு காண்க.

அன்றியும், நூல்செய்தோன் வழிபடுதெய்வமும், தெய்வத்துள் இதுவே பரதத்துவம் என்ன அறிவித்த ஞானாசிரியனும், நூல்செய்தோன் பிதாவும், குலனும், பதியும் கூட்டிப் பதினாறு என்னும் அவையும் இப்பாயிரத்துள் பெற்றவாறு காண்க.

இஃது இருபத்தாறு அடியான் வந்த நேரிசையாசிரியப்பா. என்னை?

'ஈற்றயல் அடியே ஆசிரிய மருங்கின்
தோற்றம் முச்சீர்த்து ஆகும் என்ப' (தொ. செ. 68)

என்றார் ஆகலின்.

இவ்வாசிரியப்பா முதல் ஈரடியையும் குறள்வெண்செந்துறை ஆக்குதலால், சொல்லணியுள் சித்திரப்பாவினுள் பிறிதுபடுபாட்டு ஆயது.

# பாயிரவியல்

பாயிரத்தின் பிறபெயர்கள்

**1. புறவுரை முகவுரை புனைந்துரை தந்துரை**
**பதிகம் நூல்முகம் அணிந்துரை பாயிரம். [1]**

(இதன்பொருள்) - இவை ஏழும் பாயிரத்துக்குக் காரணப்பெயராம் என்றவாறு.

[நூற்குப் புறமாக இருந்து நூற்செய்தியை உரைப்பது, நூலை அறிமுகப்படுத்தும் செய்தியாக அமைவது, நூலைச் சிறப்பித்துக் கூறுவது, நூல்செய்தியைத் தொடக்கத்தில் எடுத்துக் கூறுவது, நூற்செய்திகள் பலவற்றையும் தொகுத்துக் கூறுவது, நூலுக்கு முகம்போல அமைவது, நூலுக்கு அணியாக அமைவது, மற்றவரை அழைத்து நூல்பற்றிய பொதுச்செய்திகளைக் கூறுவது எனப் பாயிரம் உள்ளிட்ட எட்டுப்பெயர்களின் பொருள்களும் அமைந்தவாறு. பாயிரம் என்பது பயிர் என்ற உரிச்சொல்லடியாகப் பிறந்த பெயர். பயிர்தல் - அழைத்தல்.] [1]

பாயிரத்தின் இன்றியமையாமை

**2. புறவுரையேஅது கேட்டு என்னை பயன்எனின்**
**மாயிரு ஞாலத்தவர் மதித்து அமைத்த**
**பாயிரம் இல்லாப் பனுவல் கேட்கின்**
**காணாக் கடலிடைக் கலைஞர் இல் கலத்தரின்**
**மாணாக்கன் தன் மதிபெரிது இடர்ப்படும். [2]**

என் நுதலிற்றோ எனின், பாயிரம் இல்லாப் பனுவல் கேட்போன் மதி இடர்ப்படுதலுக்கு உவமை உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) முந்துநூல் செய்தற்கு ஆசிரியர் மனத்தினால் உட்கொண்டு விதித்ததாகும் பாயிரம் இல்லாத நூல் கேட்பானாகில், கேட்ட மாணாக்கன் மதி, முன்பு கண்டறியாத கடலிடத்து மீகான் இல்லா வங்கத்தில் செல்பவர் மதிபோல மிகவும் மயக்கம் எய்தும் எ-று.
என்பதனால், பாயிரம்கேட்டல் பயன்உடைத்து ஆயிற்று. [2]

பாயிரத்தின் வகைகள்

**3. பொதுச்சிறப்பு எனஅது புகல்இரு வகைத்தே. [3]**

(எ-ன்) பாயிரத்தினது கூறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) பாயிரம் என்ன ஒன்றாய் நின்ற அது பொதுவும் சிறப்பும் என முந்துநூல் கூறியதாம் இரண்டுகூறுபாடு உடைத்து எ-று. [3]

பொதுப்பாயிரத்து இயல்பு

**4. அவற்றுள்,**
**போக்குஅறு பனுவலுள் புகல்பொருள் அல்லாது**
**ஆக்கம்உற்று அனைத்தினும் அமைவது பொதுவே. [4]**

(எ-ன்) முறையானே பொதுப்பாயிரத்து இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) அவ்விரண்டனுள் புலவரால் கூறப்பட்ட குற்றமற்ற நூல்களுள் கூறப்படும் பொருள் அல்லாத புறப்பொருளாய், எல்லா நூல்முகத்தும் இன்றியமையாது ஆக்கம்பெற்று அமைவது பொதுப்பாயிரமாம் என்றவாறு.
அமைதல் - வெளிப்படாது மறைந்துமறைந்து நடத்தல். எல்லாநூல்முகத்தும் பொதுவாக மறைந்து நடத்தலின் பொது எனக் காரணப்பெயராயிற்று. [4]

பொதுப்பாயிரத்தின் கூறுபாடுகள்

5. அதுவே,

**நுண்ணூல் நுவல்வோன் நுவல்வதன் இயற்கை**
**கொள்வோன் குறிப்பின் கொள்கடன்தன்னொடும்**
**தெள்ளிதின் ஐந்துஎனச் செப்பினர் புலவர். [5]**

(எ-ன்) பொதுப்பாயிரத்தின் கூறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) அப்பொதுப்பாயிரம்தான் நுண்ணிய நூலின் மரபும், நுவல்வோன் மரபும், நூல்நுவல்வதன் மரபும், கொள்வோன் மரபும், அம்மாணாக்கன் உள்ளக்குறிப்பினால் கொள்வதன் மரபுதன்னொடும் ஐந்து என்று தெள்ளியதாய்க் கூறினர் முந்துநூல் ஆசிரியர் எ-று. ஏகாரம் ஈற்றசை.
'தெள்ளிதின் ஐந்துஎனச் செப்பினர்' என்று சிறப்பித்த அதனால், 'ஈரிரண்டு என்ப பொதுவின் தொகையே' என்போர் சுருங்கக் கூறிய நோக்கமே நீக்கி, ஐந்து என்போர் நோக்கமே உட்கொண்டார் என்பதாயிற்று.

['ஈவோன் தன்மை ஈதல் இயற்கை
கொள்வோன் தன்மை கோடல் மரபுஎன
ஈரிரண்டு என்ப பொதுவின் தொகையே'

என்பது முந்துநூலோர் கருத்து. இதனையே உரையாசிரியரும் நச்சினார்க்கினியரும் குறிப்பிட்டனர். நன்னூலார்,

'நூலே நுவல்வோன் நுவலும் திறனே
கொள்வோன் கோடற் கூற்றாம் ஐந்தும்
எல்லா நூற்கும் இவைபொதுப் பாயிரம்' (நன். 3)

என்றார். இவ்வாசிரியர் நன்னூலார் கருத்தைப் பின்பற்றியவராவார்.] [5]

நூலின் மரபு

6. அவற்றுள்,

**உத்தம நூல்மரபு உணர்த்துங்காலை**
**முத்திறத்து ஒன்றாய்ப் பாயிரம் முதலுபு**
**நாற்பொருள் நலனுற நவில்வது வாகிச்**
**சூத்திரம் ஒத்துப் படலம்என்று உரைபெறும்**
**உறுப்புஉடைப் பிண்டத்தொடும் அமைந்து அஃகாக்**
**காண்டிகை விருத்தியில் காட்சிதந்து ஈரைங்**
**குற்றம்ஒன்று இன்றிக் குழகொடும் எண்ணான்கு**
**உத்தியின் சிறந்ததுஎன்று உரைத்தனர் புலவர். [6]**

(எ-ன்) வைத்த முறையானே நூல்மரபு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) அங்ஙனம் கூறப்பட்ட ஐந்தனுள்ளும் உத்தம நூலினது இலக்கணத்தை அறிவிக்கும்இடத்து, முத்திறத்து ஒன்று என்பது முதலாக எண்ணான்கு உத்தி

ஈறாகப் பன்னிரண்டு கூற்றதாய்ச் சிறந்தது என்று மேனாள் கற்றுவல்லோர் உரைத்தனர் என்றவாறு.

எனவே, இந்நூல்உடையார்க்கும் அங்ஙனம் உரைப்பதே கருத்து என்பதாயிற்று. பிண்டத்தொடும் அமைந்து எனவே, மகாபிண்டமும் ஒன்று உளதாகப் பதின்-மூன்று உண்டு என உணர்க. இவை பதின்மூன்றும் மேற்காட்டும் வகைச்-சூத்திரங்களால் உணர்க.

['எண்ணின் இறுதி அன்னொடு சிவணும்' (தொ. எ. 198) என்பதனால், ஐந்தினுள்ளும் என்னாது 'ஐந்தனுள்ளும்' என அன் சாரியை புணர்த்துக் குறிப்பிடப்பட்டுள்ளது.] [6]

முக்கூற்றுநூல்

**7. முத்திறத்துஒன்று என்பன முதல்வழி சார்பே. [7]**

(எ-ன்) தொகைச்சூத்திரத்தினுள் (சூ. 6) முதலே நூல்கள் மூன்றுகூற்றினுள் ஒன்றாம் என்றார், அவை இவை என்று அவற்றின் பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) நூல்கள் மூன்று கூற்றினுள் ஒன்று என்பன முதல்நூல் வழிநூல் சார்புநூல் என முக்கூற்றனவாம் எ-று.

நூல் என்பதனை அதிகாரமுறைமையான் மூன்றினும் விரித்து உரைக்க.

[அதிகாரமுறையாவது ஓரிடத்து நின்ற சொல் பலவிடத்தும் இணைத்து உரைக்கப்படு-வதாம். 6-ஆம் சூத்திரத்தில் உள்ள 'நூல்' என்ற சொல் இச்சூத்திரத்திலுள்ள முதல் வழி சார்பு என்ற மூன்றனோடும் தனித்தனியே இணைந்து முதல்நூல், வழிநூல், சார்புநூல் எனப் பொருள்தந்தவாறு.] [7]

முதல்நூல்

**8. முதல்வனின் சிறந்தது முதல்நூல் ஆகும். [8]**

(எ-ன்) முறையானே முதல்நூல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) முதல்வனான் மொழியப்படுவதாய் அழிவுஇலாதே சிறப்பு எய்தியது முந்துநூலாம் எ-று.

அன்றியும் முதல்வன் தன் இல்லாளுக்கு உரைத்ததாய்ச் சிறப்பு எய்திவருவது எனினும் ஆம். அதற்கு அரி அயன் அரன் என்னுமிவர் பூமிதேவி, காயத்திரி, உமாதேவி என்பவர்க்கு உரைத்ததாய் எனக் கூறுக. இன்னும் அவ்விலேசானே, இன் என்பதனை உவமஉருபு ஆக்கி முதல்வனைப்போலப் பழமைத்தாய் அழிவு இல்லாதே சிறப்புஎய்தி வருவது எனினும் ஆம். அது சுருதியேயாம்.

['முதலாவார் மூவரே; அம்மூவருள்ளும் முதலாவான் முந்நீர் வண்ணன்' (நாலா. 2096) என்பதனை உட்கொண்டு உரையாளர் மும்மூர்த்திகளையும் அவர்களுடைய தேவி-மார்களையும் குறிப்பிட்டுள்ளார் எனினும், ஆசிரியருக்குத் திருமாலே முதல்வன் என்ற உறுதியான கருத்து இருப்பதனால், 'முதல்வன்' என ஒருமையால் குறிப்பிட்டுள்ளார். வேதம் யாராலும் ஆக்கப்பட்டதன்று; அநாதி என்ற கருத்துடையவர் இவர்.] [8]

வழிநூல் மரபு

**9. விழுமிய முதல்நூல் விதித்தவற்றினொடும்**
**பழுதுஅறச் சான்றோர் படைத்தவும் தழீஇ**
**வழுஇன்றாய் வரல் வழிநூல் ஆகும். [9]**

(எ-ன்) வழிநூல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) முக்கியமான முதல்நூல் கூறிய இலக்கணங்களோடும் குற்றமறக் கற்று-வல்லோரால் விதிக்கப்பட்டு வழங்கிவரும் இலக்கணங்களோடும் பொருந்தி முறை வழுவுதலின்றிப் புலவரால் அமைக்கப்பட்டு வருவது வழிநூலாம் எ-று.
வழி - பின். [9]

சார்புநூல் மரபு

**10. இவ்வகைப் பனுவலோடு ஒத்துஇழுக்கு இன்றாய்ச்**
**செவ்விதின் சிறிது திரிவது சார்பே. [10]**

(எ-ன்) சார்புநூல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) இங்ஙனம் இரண்டு திறத்தனவாகப் பகுத்துக் கூறப்பட்ட நூல்கள் இரண்டோடும் ஒருதன்மைத்தாக ஒத்து, அவற்றோடு மூன்றாமவனான புலவன் ஒருவன் இலக்கணம் இழுக்காது அழகிதாகச் சிறிதுவேறுபட விரிப்பது சார்புநூலாம் எ-று. இம்மூன்றனுள் ஒன்றாய் வருவது நூல் என்று அறிக. [10]

வழிநூல்வகை

**11. அதன்வழி நடைபெறுமது நால்வகைத்தே. [11]**

(எ-ன்) வழிநூல் இனைத்து என உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) இறந்தது போற்றல் என்னும் உத்தியான், முதல்வனின் சிறந்த முதல்-நூலின்வழி ஒழுகலாறுஉடைய வழிநூலானது நால்வகைப்படும் எ-று.
அதை முன்னர்க் காட்டுதும்.
[இறந்தது போற்றல் எனினும் இறந்தது காத்தல் எனினும் ஒக்கும். அஃதாவது மேல்-கூறப்பட்ட சூத்திரத்தால் கூறப்படாத பொருளைப் பின்வரும் சூத்திரத்தால் அமைத்தலாம்.] [11]

வழிநூல்வகை விளக்கம்

**12. தொகுத்தலும் விரித்தலும் தொகைவகை விரியின்**
**பகுத்தலும் மொழிபெயர்த்தலும் எனும் பான்மைய. [12]**

(எ-ன்) மேல்காட்டப்படும் என்னும் நால்வகை யாப்பிற்கும் பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) முதல்நூல் ஆசிரியன் விரித்துச் செய்ததனைத் தொகுத்துச் செய்தலும், தொகுத்துச் செய்ததனை விரித்துச் செய்தலும், இருவகையையும் தொகை-வகைவிரியாகப் பகுத்துச் செய்தலும், வடமொழியைத் தமிழ்மொழியாகப் பெயர்த்துச் செய்தலும் எனப் பெரியோரால் கூறப்படும் பான்மையை உடைய அந்நால்வகையும் எ-று.
[வடநூற் செய்திகளைத் தமிழில் மொழிபெயர்க்குங்கால் வடமொழிச் சொற்களைத் தமிழில் பயன்படுத்த வேண்டிவரின் தமிழ்மொழி மெய்ம்மயக்க இலக்கணத்திற்கு ஏற்பப் பொதுஎழுத்தாகத் திரித்தே பயன்படுத்த வேண்டும் என்பது.] [12]

பாயிரவகை

**13. பாயிரம் முன்பின் பகர்நெறியினில் உறும். [13]**

(எ-ன்) தொகைச் சூத்திரத்துள் (6) 'பாயிரம் முதலுபு' என்றார்; அவை இரண்டும் உணருமாறு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) பொதுவும் சிறப்பும்எனக் கூறிய பாயிரங்களின் இலக்கணங்கள் இந்நூல் முகத்து முன்னரும் (சூ. 4) பின்னரும் (சூ. 61) கூறும் இருவகைச் சூத்திரங்களான் அறியப்பெறும் எ-று.
எனவே வேறு எடுத்துக் கூறப்படுவதில்லை என்பதாம். [13]

நாற்பொருள்

**14. அறம்பொருள்இன்பம்வீடுஅவை பகர் நாற்பொருள். [14]**

(எ-ன்) 'நாற்பொருள் நலனுற நவில்வது வாகி' (6) என்றார். அவை இவை என்பது உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) அந்நூல்கள் பகரும் நாற்பொருள் அறனும் பொருளும் இன்பமும் வீடு-பேறுமாம் எ-று.
[தொல்காப்பியனார் காலத்தில் அறம்முதலாகிய மும்முதற்பொருள்களே நூல்களால் நுவலப்படும் எனப்பட்டது. அவருக்குப் பிற்பட்ட காலத்திலேயே நாற்பொருள் என வீடுபேறும் இணைத்துக்கொள்ளப்பட்டது.] [14]

சூத்திரத்து இலக்கணம்

**15. நூலின் ஒருபொருள் நுதலியது ஒன்றாய்ச்**
**சில்வகை எழுத்தின் செறிந்திடும் யாப்பாய்ப்**
**பல்திறம் பயன்தெரிவு உடையதோர் பண்பாய்ப்**
**படிமக் கலத்துள் படுநிழல் பொருவ**
**ஒண்மையும் நுண்மையும் உறுவது சூத்திரம். [15]**

(எ-ன்) நூல்களுக்கு அங்கமாகிய சூத்திரத்து இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) மேல் தொகுத்தல் முதலாய நால்வகை யாப்பிற்றாம் நூலினுள், ஒரு பொருளைக் குறித்தது ஒன்றாகிச் சில்வகை எழுத்தினால் அகல்வுஇன்றி அடங்கிய யாப்பாய், உரைக்குங்கால் பலவகைத்தாய பொருள்கள்எல்லாம் தன்-னகத்து அடக்கி ஆராயப்படுவதொரு பண்புடைத்தாகி, ஆடி சிறிது ஆயினும் அகன்ற பொருள்களின் வடிவை அகத்தடக்கி அறிவித்தாற்போல நுண்ணிய பொருண்மையோடு விளக்கமுடைத்தாய் மிகுவது சூத்திரமாம் எ-று. [15]

சூத்திரநிலை

**16. அதுவே,**
**மாட்டுறுப்பு அரிமாநோக்கம் தவளைப்-**
**பாய்த்து ஆற்றொழுக்குப் பருந்தின்வீழ்வொடு**
**நிரல்நிறை விளக்குஎனும் பொருள்கோள் நிலைத்தே. [16]**

(எ-ன்) சூத்திரங்களின் பொருள்கோள்நிலை உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) அச்சூத்திரம் மாட்டுறுப்பு முதலாகத் தீபகம் ஈறாகக் கூறப்பட்ட ஏழு பொருள்கோள்நிலைமை உடைத்து எ-று.

'நிலைமை உடைத்து' என்றதனால் ஒழிந்த பொருள்கோளான் வருவனவும் கொள்க.

[மாட்டுஉறுப்பு - பொருட்சிறப்பிற்கு ஏற்பச் சேய்மையில் உள்ள சொற்களையும் அண்மையில் உள்ள சொற்களையும் இணைத்துப் பொருள்செய்வது.
அரிமா நோக்கம் - ஒரு சூத்திரத்தில் கூறப்பட்ட செய்தி அதற்கு முன்உள்ள சூந்திரங்களுக்கும் பின்வரும் சூத்திரங்களுக்கும் பொருத்தமாக இணைந்து பொருள்-செய்ய உதவுவது.
தவளைப்பாய்த்து - ஒரு சூத்திரச்செய்தி அதன் அடுத்த சூத்திரத்தோடு இணைதலை விடுத்துப் பின்வரும் சூத்திரப்பொருளுக்கு உதவுவது.
ஆற்றுஒழுக்கு - சூத்திரங்கள் வரிசையாக முறையாகப் பொருள்பொருந்தி வருவது.
பருந்தின் வீழ்வு - ஒரு சூத்திரச்செய்தி இடையே பல சூத்திரங்களை விடுத்துப் பின்-உள்ளதொரு சூத்திரத்தோடு இயைவது.
நிரல்நிறை - ஒரேசூத்திரத்தில் செய்திகள் வரிசையாக அமைக்கப்பெறுவது.
விளக்கு - ஒருசூத்திரத்தில் உள்ள ஒரு சொல்லோ ஒரு சொற்றொடரோ பின்உள்ள சூத்திரத்திற்கும் வருவிக்கப்பட்டுப் பொருள்தருவது.
இவற்றை இலக்கணநூல்களில் பொருத்திக் காண்க.] [16]

ஓத்தின் இலக்கணம்

**17. ஓத்து எனப்படுவது ஓர்இனப் பொருளைக்**
**கோத்து ஒருநெறிபடக் கூறுவது ஆகும். [17]**

(எ-ன்) இஃது ஓத்துஇலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) மேல் (6) ஓத்துஎனக் கூறப்பட்டது ஓரினமாகிய பொருள்களை இதற்கு இஃது இயைபுடைத்து என்ன நேரினமணிகளை வடத்தில் கோத்தாற்போல அடைவிலே சேர்த்து ஓர்இயலாகிய நடை பெறக் கூறுவதாம் எ-று.
அது வேற்றுமைஓத்து, வேற்றுமைமயங்கியல், விளிமரபு என முறையே வேற்றுமையாயினும் வேறுவேறு இயலாக்கி ஓரோர் இனமாக உரைத்தவாற்றான் உணர்க.

[ஓத்து, இயல் என்பன ஒரு பொருளன. கோத்து என்ற வினைக்கு ஏற்ப நேரின-மணிகளை வடத்தில் கோத்தாற்போல என்ற விளக்கம் தரப்பட்டது. தொல்காப்பியத்தில் வேற்றுமைபற்றிய செய்தி மூன்றுஇயல்களாகப் பகுத்துக் கூறப்பட்ட செய்தி சுட்டப்-பட்டுள்ளது.] [17]

படலத்தின் இலக்கணம்

**18. படலம் என்பது பன்னெறிப் பொருளால்**
**புடைபட விரவிய பொதுமொழித் தொடர்பே. [18]**

(எ-ன்) படலம் என்பதன் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) படலம் என்று கூறப்படுவது பலவேறு நடைபெற்று வருபொருளால் இடம்பெற்று விரவிய பொதுமொழித்தாய் வரும் தொடர்புடைத்தாம் எ-று.

[ஒரு பொதுத்தலைப்புப் பற்றிய பலவேறு உட்பகுதிகளையும் உள்ளடக்கியதாம். எழுத்து, சொல், பொருள் என்பனபோல.] [18]

பிண்டத்தின் இலக்கணம்

**19. அவைஒருமூன்றும் அடக்குதல் பிண்டம். [19]**

(எ-ன்) பிண்டம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) மேற்கூறிய சூத்திரம் ஒத்து படலம் என்னும் மூன்றுஉறுப்பையும் அகத்து அடக்குவது பிண்டமாம் எ-று.

அம்மூன்றனையும் உறுப்பு எனவே, பிண்டம் என்பது உறுப்புடைய அவயவி என்பது பெற்றாம்.

அவையாவன: தொல்காப்பியம் என்பது பிண்டம். அதனுள் எழுத்ததிகாரம் சொல்லதிகாரம் பொருளதிகாரம் என்பன படலம். ஒழிந்த இரண்டும் ஒத்தும் சூத்திரமுமாம்.

[தொல்காப்பியத்தில் உள்ள மூன்று படலங்களில் ஒவ்வொரு படலத்தும் ஒன்பது ஒன்பது ஒத்துக்கள் உள்ளன. மூன்று படலத்தும் முறையே 483, 463, 666 சூத்திரங்கள் உள்ளன.] [19]

மகாபிண்டத்தின் இலக்கணம்

**20. மிகத் தெளிவுஉடைய அகத்தியம்அதுபோல்**
**முத்தமிழ் உட்கொளும் மூன்றுபிண்டமும் உறுப்பு**
**ஒத்து ஒருங்கு உட்கொளல்உறின் மகாபிண்டம். [20]**

(எ-ன்) மகாபிண்டமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) மிகவும் முந்துநூல்களை ஆராய்ந்து தெளிந்த கேள்வியைஉடைய அகத்தியனால் கூறப்பட்ட அகத்தியம் என்னும் நூல்போல, இயற்றமிழ் இசைத்தமிழ் நாடகத்தமிழ் என்னும் மூன்றுபிண்டத்தினையும் தனக்கு உறுப்பாகப் பொருந்தும்படி முழுதும் உட்கொண்டு ஒருநூலாக நிற்றல் பொருந்தின் மகாபிண்டமாம் எ-று.

[அகத்தியர் முந்துநூல்களை ஆராய்ந்தார் என்று கூறலின், அவர் இயற்றிய அகத்தியத்துக்கு முன்னரே தமிழில் இலக்கணநூல்கள் இருந்தன என்பது இவருக்குக் கருத்தாகும். அகத்தியம் இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழ் இலக்கணமும் கூறும் பெருநூல் என்பது தொன்றுதொட்டுக் கூறப்பட்டுவரும் செய்தியாகும்.

பிண்டத்தினையும் அடக்கி நிற்பது வேறு பிண்டி எனப்படும். அது முதல்நூலாகிய அகத்தியம். என்னை? இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ் என மூன்று பிண்டத்தினையும் அடக்கிநிற்றலின் (தொ. செ. 172 நச்.) என்பதனையும் நோக்குக. எனவே, பிண்டி என்பதனை இவ்வாசிரியர் 'மகாபிண்டம்' என்றார்.] [20]

காண்டிகையுரை இலக்கணம்

**21. உற்றது பதப்பொருள் உதாரணம் மூன்றுடன்**
**கற்றவர் வினாவிடை காட்டுதல் காண்டிகை. [21]**

(எ-ன்) வைத்தமுறையானே (6) காண்டிகை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) நூல்களைக் கற்றுணர்ந்த ஆசிரியர் சூத்திரத்துள் கூறக் கருதியது உணர்த்தலும், சூத்திரத்துள் சொல்தொறும் பொருள்உணர்த்தலும், அதற்கு உதாரணம் உணர்த்தலும் என்னும் இம்மூன்றுடன், கடாவும் கடாயதற்கு எதிர்மொழியும் காட்டுதல் காண்டிகையாம் எ-று. வினாவல் - கடாவல். விடை - அதற்கு எதிர்மொழி.

[காண்டிகையுரையின் இலக்கணம், 'கருத்துப் பதப்பொருள் காட்டு மூன்றினும், அவற்றொடு வினாவிடை ஆக்கலானும், சூத்திரத்து உட்பொருள் தோற்றுவ காண்டிகை' (நன். 22) என்ற நன்னூல்சூத்திரத்தை அடியொற்றிக் கூறப்பட்டுள்ளது.] [21]

விருத்தியுரை இலக்கணம்

**22. ஒன்றிய சூத்திரத்து உட்பொருள் அன்றியும்**
**இன்றியமையாதன புணர்த்து இசைத்த ஐந்து**
**உறுப்புடன் இருதிறத்து உரைஇடனாக மெய்ந்**
**நிறுத்தியது ஒன்றுஎன நிகழ்த்துதல் விருத்தி. [22]**

(எ-ன்) முறையானே (6) விருத்தியுரை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) புலவன் கூறக்கருதிய பொருளினைக் கூறுதற்குப் பொருந்திய சூத்திரத்துள் சொல் ஓடும் பொருள்அன்றி, எஞ்சிநின்றவற்றையும் இவ்விடத்துக்கு இஃது இன்றியமையாதது என்பனவற்றையும் அவ்விடத்தில் கொணர்ந்து பொருத்தி, சொல்லப்பட்ட காண்டிகைஉறுப்பு ஆகிய ஐந்தோடும் கூட்டி, அதற்குத் தன்நூல் இடனாகவும், பிறநூல் இடனாகவும் உண்மை நிலைநிறுத்தப்படுவது ஒன்றாய் நடத்துதல் விருத்தியாம் எ-று.

உறுப்பு ஐந்தாவன - கருத்து, பதப்பொருள், காட்டு, வினா, விடை என முற்கூறிய ஐந்தாம். இருதிறத்து உரையிடனாக என்றது, தன்நூல் பிறநூல் என்னும் இரண்டுஇடனாக என்று அறிக.

[விருத்தியுரைஇலக்கணம் தொல்காப்பியமரபியல் 103, 104-ஆம் சூத்திரங்களை உட்கொண்டு அமைத்த நன்னூல் 23-ஆம் சூத்திரத்தை அடிஒற்றி வரையப்பட்டதாம்.] [22]

பத்துவகைக் குற்றங்கள்

**23. பொருளில கூறல் மருள்நிலைத்து ஆதல்**
**இன்னாச் சொற்பெறல் வெளிறுபட்டு அழிதல்**
**மொழிந்ததை மொழிதல் முரண்கொள மொழிதல்**
**குறைபடக் கூறல் மிகைபட விளம்பல்**
**சந்த இன்பம் தழுவுதல் இன்மை**
**எதிர்மறுத்து உணர்த்தல் என்றுஇவை உளப்படக்**
**கூறினர், ஈரைங் குற்றம் நூற்கே. [23]**

(எ-ன்) மேல்அதிகாரப்பட்ட முறையே (6) ஈரைங்குற்றம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) பொருளில கூறல் என்பது முன்னும் பின்னும் வருகின்ற பொருண்மைக்கு ஒப்புஇன்றிப் பயன்இல்லாதன கூறல். மருள்நிலைத்தாதல் என்பது கேட்போர்க்குப் பொருள்விளங்காமல் மருளுதற்கு இடனாதல். இன்னாச்சொற்பெறல் என்பது கேட்போர்க்கு இன்னா யாப்பிற்றாய் இருத்தல். வெளிறுபட்டு அழிதல் என்பது குறிப்புமொழி சிறிதுமின்றி வெளிப்படக் கூறல். மொழிந்ததை மொழிதல் என்பது ஒருகால் கூறியதனைப் பின்னும் கூறல். முரண்கொள மொழிதல் என்பது முதலே கூறிய பொருளொடு மாறுகொள்ளுமாறு பின்னர்க் கூறுதல். குறைபடக் கூறல் என்பது முதலே அதிகரித்த பொருள்களுள் சிலவற்றைக் கூறாதுஒழிதல். மிகைபட விளம்பல் என்பது அதிகரித்த பொருளன்றிப் பிறபொருளும் கூறல். சந்தஇன்பம் தழுவுதல்இன்மை என்பது

எடுத்த யாப்பிற்கு இணங்கும் ஓசையின்றிக் கூறுதல். எதிர்மறுத்து உணர்த்தல் என்பது எதிர்மறுத்து உணர்த்தலும் குற்றமாம் எ-று.

அஃதாவது பாவம் செய்தான் நிரயம்புகும்எனக் கருதிக் கூறுவான் தவம்-செய்தான் சுவர்க்கம் புகும் என்றல். இவ்வாறு கூறின் சுவர்க்கம் புகும் என்னும் பொருள்தோன்றி, நிரயம்புகும் என்னும் பொருள்தோன்றாமையின் குற்ற-மாயிற்று. என்னை?

'எதிர்மறுத்து உணரின்அத் திறத்தவும் அவையே' (தொ. பொ. 664 பேரா.) என்னும் மரபியல் சூத்திரத்தான் உணர்க.

[மருள்நிலைத்தாதல் - மயங்கக் கூறல் எனவும், இன்னாச்சொற்பெறல் - பழித்த மொழியான் இழுக்கம் கூறல் எனவும், வெளிறுபட்டு அழிதல் - என்ன வகையிலும் மனம்கோள்இன்மை எனவும், மொழிந்ததை மொழிதல் - கூறியது கூறல் எனவும், முரண்கொள மொழிதல் - மாறுகொளக் கூறல் எனவும், குறைபடக் கூறல் - குன்றக்கூறல் எனவும், மிகைபட விளம்பல் - மிகைபடக் கூறல் எனவும், சந்தஇன்பம் தழுவுதல்இன்மை - கேட்போர்க்கு இன்னா யாப்பிற்றாதல் எனவும், எதிர்மறுத்து உணர்த்தல் - தன்னான் ஒருபொருள் கருதிக்கூறல் எனவும் தொல்காப்பியமரபியலில் பிறவாய்பாடுகளான் விளக்கப்பட்டுள்ளன. (பொ. 663) 'எதிர்மறுத்து உணரின் அத்-திறத்தவும் அவையே' (தொ. பொ. 655) உரையாசிரியர் கூறிய உரையை உட்கொண்டு எதிர்மறுத்து உணர்த்தல் விளக்கப்பட்டுள்ளது.

இப்பத்துக் குற்றங்களுள் கூறியது கூறல், மாறுகொளக் கூறல், மிகைபடக் கூறல், பொருளில மொழிதல், மயங்கக் கூறல் என்பன மற்றொருபொருள் கொள்ளின் வசை அற்றனவாக வழுவமைதியாகக் கொள்ளப்படும் என்பது பேராசிரியர் கருத்து. (தொ. பொ. 663 பேரா.)] [23]

பத்துவகை அழகுகள்

**24. அழகுஎனத் தகுவது அரில்தப நாடின்**
**அகலா நடைத்தாய், ஆழமது உடைத்தாய்,**
**பொருள் புலப்பாட்டின், பொருள்நலன், சொல்நலன்,**
**ஓசை இனிமையோடு, ஊதியம் பயத்தல்,**
**உலகம் மலையாமை, உதாரணம் புணர்த்தல்,**
**நவில்தொறும் புதுவதுவாய் நயன் அளிப்பதின்**
**ஈரைந்தாம்என இயம்பினர் புலவர். [24]**

(எ-ன்) ஈரைந்து அழகும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) நூலுக்கு அழகு எனும்படிக்குத் தகுவது குற்றமற ஆராயின், சூத்திரம் சில்வகை எழுத்தால் செறிந்து இறப்ப அகலாத நடைத்தாய், ஆழ்ந்த பொருள் உடைத்தாய், இலக்கணவான்களுக்குப் பொருள் புலப்படுவதாய், பொருள்-நலனும், சொல்நலனும், ஓசைஇனிமையும் உடைத்தாய், கற்றோருக்குப் பயன்-தருவதாய், உலகத்தோடு மாறுபடுதலின்றி, உதாரணம் புணர்ப்பதாய், கற்குந்-தொறும் புதுவதாய் இன்பம் அளிப்பதோடும் ஈரைந்து என்று கூறினர் எ-று.

[பத்துவகை அழகுகள் தொல்காப்பியத்தில் குறிப்பிடப்படவில்லை. நன்னூலிலேயே அவை 13-ஆம் நூற்பாவில் குறிப்பிடப்பட்டுள்ளன. இச்சூத்திரத்திலுள்ள அகலா நடைத்து என்பது சுருங்கச்சொல்லல் எனவும், ஆழமது உடைத்தாய் என்பது ஆழ-முடைத்தாதல் எனவும், பொருள் புலப்பாடு என்பது விளங்கவைத்தல் எனவும், பொருள்நலன் என்பது விழுமியது பயத்தல் எனவும், சொல்நலன் என்பது நன்-மொழிபுணர்த்தல் எனவும், ஓசைஇனிமை என்பது ஓசைஉடைமை எனவும், ஊதியம்-

பயத்தல் என்பது நவின்றோர்க்கு இனிமை எனவும், உலகம் மலையாமை அதே தொடரானும், உதாரணம்புணர்த்தல் விளங்கு உதாரணத்தது ஆகுதல் எனவும் நவில்-தோறும் புதுவதுவாய் நயன்அளிப்பது முறையின்வைப்பு எனவும் நன்னூலுள் கூறப்-பட்டுள்ளன.] [24]

### தந்திரஉத்தி வகைகள்

25. **உள்ளுறுத்து அமைத்த உத்திவகை உணர்த்தின்**
**உள்ளியது உணர்த்தல் உரைமுறை வைப்பே**
**தொகைபெற நாட்டல் வகைபெறக் காட்டல்**
**விரிந்தவை இவைஎன விழுமிதின் கூட்டல்**
**தொகுத்த மொழியின் வகுத்தன கோடல்**
**முந்து மொழிந்ததன் தலைதடுமாற்றே**
**பலபொருட்கு ஏற்பின் நல்லவை கோடல்**
**மொழிந்த பொருளோடு ஒன்ற வைத்தல்**
**மொழிந்தனம் என்றல் மொழிவாம் என்றல்**
**இறந்தது காத்தல் எதிரது போற்றல்**
**மொழியாததனை முட்டின்றி முடித்தல்**
**வந்ததுகொண்டு வாராதது முடித்தல்**
**வாராததுகொண்டு வந்தது முடித்தல்**
**பிறன்கோள் கூறல் தன்கோள் கூறல்**
**பிறன் உடம்பட்டது தான் உடம்படுதல்**
**அறியாது உடன்படல் ஆணை கூறல்**
**தன் குறியிடுதல் தந்துகொணர்ந்து உரைத்தல்**
**மறுதலை சிதைத்துத் தன்துணிவு உரைத்தல்**
**மாட்டுஎறிந்துஒழிதல் இரட்டுற மொழிதல்**
**ஒன்றினம் முடித்தல் தன்இனம் முடித்தல்**
**மாட்டுஉறுப்பினவா மனக்கொளக் கூறல்**
**உய்த்துக்கொண்டு உணர்தலின் உரன் உடையனவாய்த்**
**தீபக வகையால் சிறப்புறக் கூறல்**
**சொல்லின் எச்சம் சொல்லியாங்கு உணர்த்தல் என்று**
**அமைத்ததின் அகப்பட அமையாதனவும்**
**சுருங்கக் கூறிய தொடர்பினை நாடி**
**ஒருங்குஅமைத்து உணர்த்துதல் உரவோர் கடனே. [25]**

(எ-ன்) மேல் அதிகாரம் பாரித்த (6) பன்னிரண்டினுள் இறுதி நின்ற தந்திரவுத்தி ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) உள்ளியது உணர்த்தல் முதலாகச் சொல்லின்எச்சம் சொல்லியாங்கு உணர்த்தல் ஈறாகச் சொல்லப்பட்ட முப்பத்திரண்டும் அத்தன்மைய பிறவும் தந்திரஉத்திகளாம். அவற்றையும் இவற்றுள் கூறப்பட்டனவாகப் பிறருக்கு உணர்த்துதல் அறிவுடையோர்க்கு முறைமையாம் எ-று.

தந்திரம் எனினும் நூல் எனினும் ஒக்கும். உத்தி என்பது யுக்தி என்ற வடமொழிச்சிதைவு. அஃதாவது சூத்திரத்தின்பால் கிடப்பதொரு பொருள் வேறுபாடு காட்டுவது.

'உள்ளுறுத்து அமைத்த உத்திவகை உணர்த்தின்' என்பது முந்துநூல் செய்த ஆசிரியர் (தொல்காப்பியனார்) நூற்கு இன்றியமையாச் சிறப்பு என்பதாகக் கருதி அமைத்த தந்திரஉத்தியினது கூறுபாடு உணர்த்தின் எ-று.

**1. உள்ளியது உணர்த்தல் என்பது**

சூத்திரத்தில் சொற்ற சொற்குக் கூறிய அடைவே பொருள் உணர்த்துவதன்றி இதன்கருத்து இஃது என உணர்த்தல். அஃதாவது,
'எழுத்து எனப்படுப ... மூன்றலங் கடையே' (தொ. எ. 1) என்னும் சூத்திரத்தினுள், எழுத்து இனைத்து என்று அறிவித்தலை நுதலிற்று என்றல்.

**2. உரைமுறைவைப்பு என்பது**

நூலுள் முன்னம் பலபொருளை அதிகரித்தவழிப் பின்னும் அவற்றை அம்முறையே விரித்தல். அஃதாவது உயர்திணை அஃறிணை என அதிகரித்து (தொ. சொ. 1) ஆடூஉ அறிசொல் மகடூஉ அறிசொல் (தொ. சொ. 1) என்னும் சூத்திரத்தான் நிறுத்தமுறை பிறழாது உயர்திணையை முற்கூறல்.
இன்னும் இதனானே, ஒருசூத்திரத்திலே கருதின பொருளை வைத்து, வருகின்ற சூத்திரத்துள் ஓதாது, அதன் காரியம் ஆயினவழி அதனைச் சூத்திரம்தோறும் கொணர்ந்து உரைத்தலுமாம். அஃதாவது தொல்காப்பிய எழுத்ததிகாரத்து ஏழாவது இயலாகிய உயிர்மயங்கியலில்,

'அகர இறுதிப் பெயர்நிலை முன்னர்
வேற்றுமை அல்வழிக் கசதபத் தோன்றின்
தத்தம் ஒத்த ஒற்றுஇடை மிகுமே' (தொ. எ. 203)

எனக்கூறி,

'வினைஎஞ்சு கிளவியும் உவமக் கிளவியும்
...
ஞாங்கர்க் கிளந்த வல்லெழுத்து மிகுமே' (தொ. எ. 204)

என்னும் சூத்திரத்தில் கசதப முதல்மொழி வருமொழியாக வருதல் கூறிற்றிலரேனும், அதிகாரமுறைமையினால் வல்லெழுத்து வரும்வழி என உரைத்தல்.
[அதிகரித்தல் - முறையாக நிறுத்துதல். அதிகாரம் - ஒரு சூத்திரத்தினுடைய சொல்லும் சொற்றொடரும் அடுத்த பல சூத்திரங்களிலும் சென்று இயைதல்.]

**3. தொகைபெற நாட்டல் என்பது,**

வகைபெறக் கூறல் வேண்டுமாயினும் அதனைத் தொகுத்துக் கூறுதல்.
அஃதாவது,

'அகரமுதல் னகர இறுவாய்
முப்பஃது என்ப' (தொ. எ. 1)

என்றாற்போல்வன. இன்னும் பலசூத்திரங்களால் கூறப்பட்ட பொருளை, இத்துணையும் கூறப்பட்டது இஃது எனக் கூறலும் ஆம். அஃதாவது, 'தூக்கியல் வகையே ஆங்குஎன மொழிப' (தொ. செ. 27) என்பதனால் கொள்க.
[தொல்காப்பியனார் செய்யுளியலில் 81-ஆம் சூத்திரம் முதல் 86-ஆம் சூத்திரம் முடியத் தூக்கு என்னும் செய்யுள்உறுப்பினை விளக்கி 87-ஆம் சூத்திரத்தில் தொகைபெற நாட்டியுள்ளார் என்பது.]

**4. வகைபெறக் காட்டல் என்பது,**

தொகைபெறக் கூறியவற்றை வகைபெறக் கூறல். அஃதாவது,

'அகரமுதல் னகரஇறுவாய்' (தொ. எ. 1) எனத் தொகுத்தவற்றை 'அ இ உ எ ஒ' (எ. 3) என்றும், 'ஆ ஈ ஓ ஏ ஐ ஓ ஔ' (எ. 4) என்றும் வகுத்தல்.

அன்றியும், 'ஔகார இறுவாய்ப் பன்னீரெழுத்தும் உயிரென மொழிப' (தொ. எ. 8) 'னகார இறுவாய்ப் பதினெண் எழுத்தும் மெய்யென மொழிப' (தொ. எ. 9) என்பனவும் ஆம்.

[முப்பது என்று பொதுவாக வரையறுத்த எழுத்துக்களைக் குறில் 5, நெடில் 7, உயிர் 12, மெய் 18 எனப் பகுத்து விளக்கிக் கூறல்.]

**5. விரிந்தவை இவைஎன விழுமிதின் கூட்டல் என்பது**

தொகுத்தும் வகுத்தும் காட்டியவற்றை இறப்ப விரியாமல் விழுமியவாக விரித்து முடித்தல். அஃதாவது

'உயிர்மெய் ஆய்தம் உயிரளபு ஒற்றளபு
அஃகிய இஉ ஐஔ மஃகான்
தனிநிலை பத்தும் சார்பெழுத்து ஆகும்' (நன். 60)

என்னுமதனுள் சார்பெழுத்து எனத் தொகையால் ஒன்றும் வகையால் பத்தும் ஆகியவற்றை

'உயிர்மெய் இரட்டுநூற்று எட்டு உயர்ஆய்தம்
எட்டு உயிர்அளபு எழுமூன்று ஒற்றளபெடை
ஆறேழ் அஃகும் இ முப்பானேழ்
உகரம் ஆறாறு ஐகான் மூன்றே
ஔகான் ஒன்றே மஃகான் மூன்றே
ஆய்தம் இரண்டொடு சார்பெழுத்து உறுவிரி
ஒன்றுஒழி முந்நூற்று எழுபான் என்ப'(நன். 61)

என விரித்து, அதன்மேலும் உயிர்மெய்க்குறில், உயிர்மெய்நெடில், உயிர்மெய்-அகரம் எனவும், வல்லினம், மெல்லினம், இடையினம் எனவும் இறப்ப-விரியாமல் விழுமிதாய்க் கூட்டல்.

[இறப்ப - மிகவும்; விழுமிதாய் - சிறப்பான முறையில். உயிர்மெய்க்குறில் 90, உயிர்மெய் நெடில் 126, உயிர்மெய் அகரம் 18, உயிர்மெய் வல்லினம் 72, உயிர்மெய் மெல்லினம் 72, உயிர்மெய் இடையினம் 72 என்றாற்போல மிகுதியாக விரித்துரைக்காது விடுத்தல்.]

**6. தொகுத்த மொழியின் வகுத்தன கோடல் என்பது**

'நெட்டெழுத்து இம்பரும் தொடர்மொழி ஈற்றும்
குற்றியலுகரம் வல்லாறு ஊர்ந்தே'(தொ. எ. 36)

என்னும் சூத்திரத்தால் பிறிதும் ஒருபொருள் வகுத்துக் காட்டல். அஃதாவது,

'குற்றியலுகரம் முறைப்பெயர் மருங்கின்
ஒற்றிய நகரம்மிசை நகரமொடு முதலும்' (தொ. எ. 67)

என்னும் சூத்திரத்தான் சுட்டப்படும் மொழிமுதல் குற்றுகரமும் கோடல்.
சொல்லின் முடிவின் அப்பொருள் முடித்தல் என்பதும் அது.

**7. முந்துமொழிந்ததன் தலைதடுமாற்று என்பது,**

முற்பட அதிகரித்த (முறையாக நிறுத்திய) பொருளை அம்முறையில் கூறாது முறைபிறழக் கூறுதல். அதனை அங்ஙனம் கூறுங்கால் ஒருபயன் நோக்கிக் கூறல் வேண்டும். அது புள்ளிமயங்கியலில் 'ஞகாரை ஒற்றிய' (தொ. எ. 296) முதலிய சூத்திரத்தினுள் ஞகாரஈறு கூறி அதன்பின்னர் ணகாரஈறு கூறாமல்,

அடுத்த சூத்திரத்தினுள் 'நகர இறுதியும் அதனோ ரற்றே' (தொ. எ. 298) என முடிவுஒப்புமை நோக்கிக் கூறியதால் கண்டுகொள்க.

8. **பலபொருட்கு ஏற்பின் நல்லவை கோடல் என்பது,**

ஒருவகைப் பொருள் பலபொருட்கு ஏற்குமாயினும் அவற்றுள் நல்லதனைக் கோடல். அஃதாவது மெய்ப்பாட்டியலுள் அகத்திற்கு உரியவாகப் புகுமுகம் புரிதல் முதலாகக் கையறவு உரைத்தல் ஈறாகக் கூறிய அறுநான்கு மெய்ப்பாடும் அகத்தினுள் இருவகைக் கைகோளினுள்ளும் களவினுள் முறையே வந்து கற்பினுள் அம்முறையே வரப்பெறாமையின் அவை களவிற்கே உரிய என விதந்துகூறலான் அறிக. அன்றியும் ஒருசூத்திரம் பலபொருட்கு ஏற்குமாயினும் அவற்றுள் நல்லதனைப் பொருளாகக் கோடலும் ஆம். அஃதாவது 'வேண்டிய கல்வி யாண்டுமூன்று இறவாது' (தொ. பொ. 188) என்பதற்குக் 'கல்வி வேண்டிய ஆண்டு இறவாது; அக்கல்விஎல்லாம் மூன்று பதத்தைக் கடவாது' என்றதனால் அறிக. அன்றி ஓதற்பிரிதற்கு ஆண்டுமூன்று என்பது பொருந்தாது. அன்றியும்,

'இலன்என்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலன்உடையான்கண்ணே உள' (குறள் - 223)

என்பதனுள் பலபொருள் தோன்றியவிடத்து முதலே கண்ட இரண்டு கிரிகையும் அன்றி இரப்போன் இன்னும் ஒருவர்பால் 'யான் ஒன்றும்இலன்' என்னும் மான-பங்கம் கூறாமல் இரக்கப்படுவோன் ஈகை எனப் பொருள்கோடலும் ஆம்.

[புகுமுகம் புரிதல் முதல் கையற வுரைத்தல் ஈறாகிய 24 மெய்ப்பாடுகளும் தொல்-காப்பியப் பொருட்படலத்து 261 முதல் 266 ஈறாகிய சூத்திரங்களுள் சுட்டப்படுகின்றன. இவை அகத்திணைக்குப் பொதுவான மெய்ப்பாடுகள் ஆயினும் களவு என்னும் கைகோளின்கண்ணேயே முறையாக வருதலின் களவுக்கால மெய்ப்பாடுகள் எனப்-பட்டன.

துறவறத்தினைக் கூறும் வேதாந்தம் முதலிய கல்வி வேண்டிய யாண்டைக் கடவாது; அக்கல்வி எல்லாம் மூன்றுபதத்தைக் கடவாது - என்பது நச்சினார்க்கினியர் உரை. (தொ. பொ. 188)

முதலே கண்ட இரண்டு கிரிகை - பரிமேலழகர் உரையில் முதற்கண் கூறப்பட்ட இரண்டு உரைகள். அவையாவன - 'யான் வறியன்' என்று இரப்பான் சொல்லும் இளிவரவைத் தான் பிறன்கண் சொல்லாமையும், அதனைத் தன்கண் சொன்னாற்கு மாற்றாது ஈதலும் என்பது ஒருபொருள். இலன் என்னும் இளிவரவை ஒருவன் தனக்குச் சொல்வதன்முன்னே அவன் குறிப்பறிந்து கொடுத்தல் என்பது இரண்டாவது பொருள். இவ்விரண்டனையும் விட, இரப்போன் இன்னும் ஒருவர்பால் 'யான்ஒன்றும் இலன்' என்னும் மானபங்கம் கூறாமல் இரக்கப்படுவோன் ஈகை எனப் பொருள்கோடல் சிறந்தது என்பதாம்.]

9. **மொழிந்த பொருளோடு ஒன்றவைத்தல் என்பது,**

சூத்திரத்துப்பொருள் பலவிடத்தே தோன்றுமாயினும் முற்பட்ட சூத்திரயாப்பிற்கு ஏற்பப் பொருள்உரைத்தல். அஃதாவது,

'இலன் என்னும் எவ்வம் உரையாமை' (குறள். 223) என்ற குறளுக்குப் 'பல-பொருட்கு ஏற்பின் நல்லவை கோடல்' என்ற உத்திக்கு ஏற்பக் கூறிய பொருள் அன்றி,

'நல்லாறு எனினும் கொளல்தீது, மேல்உலகம்
இல்எனினும் ஈதலே நன்று' (குறள். 222)

என்னும் மேலின் குறளின் பொருள்களுக்கு ஒன்ற உம்மையை விரித்து, 'இலன் என்னும் எவ்வம் உரையாமையும் ஈகையும் குலன்உடையான்கண்ணே உள' என உரைத்துக்கொள்க.

[இவ்வுரை முதல்குறளின் பொருளுக்கும் பொருந்தப் பரிமேலழகர் முதற்கண் உரைத்த உரையாகும்.]

**10. மொழிந்தனம் என்றல் என்பது,**

பலபொருள்களையும் அதிகரித்து அவற்றுள் சிலபொருளை மேல்கூறப்பட்டன என்றல். அஃதாவது

'மாத்திரை வகையும் எழுத்தியல் வகையும்
மேற்கிளந் தன்ன என்மனார் புலவர்' (தொ. பொ. 314)

என்பதனால் கொள்க.

[313-ஆம் சூத்திரத்தில் 'மாத்திரை எழுத்தியல் அசைவகை எனாஅ, யாத்த சீரே அடி-யாப்பு எனாஅ' என்றாற்போல முறையாக நிறுத்தியவற்றுள் மாத்திரையும் எழுத்தியல்-வகையும் எழுத்ததிகாரத்துள் கூறப்பட்டன என்று கூறி ஈண்டும் விளக்காது விடுத்தல்.]

**11. மொழிவாம் என்றல் என்பது,**

சிலபொருளைக் கூறி, அவற்றுள் ஒன்றனை இன்ன இடத்துக் கூறுவாம் என்றல். அஃதாவது,

'குற்றியல் இகரம் நிற்றல் வேண்டும்' (தொ. எ. 31) என்னும் சூத்திரத்தில் ஒருமொழிக்குற்றியலிகரம் கூறி அதன்பின்னர் இருமொழிக்கண்ணும் குற்றிய-லிகரம் வரும் என்பதற்கு,

'புணரியல் நிலையிடைக் குறுகலும் உரித்தே
உணரக் கூறின் முன்னர்த் தோன்றும்' (தொ. எ. 34)

என்னும் சூத்திரத்தில் குற்றியலுகரப்புணரியலுள்ளே கூறப்படும் என்பதனால் உணர்க.

['முன்னர்த் தோன்றும்' என்றது, 'யகரம் வரும்வழி இகரம் குறுகும்; உகரக்கிளவி துவரத் தோன்றாது' (தொ. எ. 410) என்ற சூத்திரத்தைக் கருதியது ஆகும்.]

**12. இறந்தது காத்தல் என்பது,**

மேல்கூறப்பட்ட சூத்திரத்தால் கூறப்படாத பொருளைப் பின்வரும் சூத்திரத்-தான் அமைத்தலாம். அஃதாவது முதல்நூலுக்குச் சூத்திரம் கூறிய பின்னர் (649) 'வழிஎனப்படுவது அதன்வழித்து ஆகும்' (தொ. பொ. 650) என வழிநூற்குக் கூறிய சூத்திரத்தில் (651) வழிநூலான் ஆய பயன் கூறாது, மேல்வரும் சூத்திரங்-களாய அவற்றின்கண் 'வழியின் நெறியே நால்வகைத்து ஆகும்' (தொ. பொ. 651) என்ற பின்னர், அதனால் ஆய பயன் அதனில் கூறாது,

'தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்த்து
அதர்ப்பட யாத்தலொடு அனை மரபினவே' (தொ. பொ. 652)

என்னும் சூத்திரத்தால் அதனாலாய பயன்கூறல் இறந்தது காத்தல் ஆயிற்று.

['வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதல்நூல் ஆகும்' (தொ. பொ. 649)

என்பது முதல்நூற்குச் சூத்திரம். 'வழி எனப்படுவது அதன் வழித்தாகும்' (650) என்பது வழிநூற்குச் சூத்திரம்; 'வழியின் நெறியே நால்வகைத்து ஆகும்' (651) என்பது வழி-நூலின் வகைகள் இவ்வளவின என்று கூறுவதாகும்; 'தொகுத்தல் விரித்தல்' (652) என்பது வழிநூல் இயற்றப்படுவதன் பயனைக் குறிப்பிடுவதாகும். இதன்கண் மேல் இரண்டுசூத்திரங்களான் கூறப்படாத பொருள் கூறப்பட்டவாறு.]

**13. எதிரது போற்றல் என்பது,**

முன்பு கூறிய சூத்திரத்தானே மேல்வரும் சூத்திரப்பொருளையும் பாதுகாத்து அமைத்தல். அஃதாவது நூல்மரபினுள் 'உட்பெறு புள்ளி உருவாகும்மே' (தொ.

எ. 14) எனப் பகரத்தோடு மகரத்திடை வரிவடிவிற்கு (வேற்றுமை) இலக்கணம் கூறப்புகுந்து மேல்வரும் சூத்திரத்தில் 'மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்' (தொ. எ. 15) என்றதனால், மெய்களிற் கூடிப் புறத்தில் பெறும் புள்ளியோடு உள்ளால் பெறும் புள்ளியும் மகரத்திற்கு வரிவடிவாம் எனக் கோடல் எதிரது போற்றல் ஆயவாறு காண்க.

'அற்புதம் சிலேடை' (தண்டி-அலங்காரம் சூ. 33) என்னும் பொருளணியியல் சூத்திரமும் இது.

[இந்நூற்பாக்களுக்கு நச்சினார்க்கினியர் கூறிய உரையே கொள்ளப்பட்டுள்ளது. 15-ஆம் சூத்திரச்செய்தியை முதலிற்கொண்டு 14-ஆம் சூத்திரச்செய்தியைப் பின்னர்க்கொண்டு உரைசெய்வது எதிரதுபோற்றி உரைசெய்வதாகும். பின்னர்க் கூறப்படும் அற்புதம், சிலேடை, அதிசயம், விரோதம், ஒப்புமைக்கூட்டம், தற்குறிப்புஏற்றம், விலக்கு, ஏது என்ற அணிகளை உவமையோடு புணர்த்து 33-ஆம் சூத்திரத்துக் கூறி அவற்றின் பொதுஇலக்கணத்தைப் பின்னர்க் கூறப்படும் அவற்றின் இலக்கணம் பற்றிய நூற்பாக்களில் அறியுமாறு அமைத்ததும் எதிரது போற்றலாம்.]

**14. மொழியாததனை முட்டின்றி முடித்தல் என்பது,**

சூத்திரத்தின்கண்ணே எடுத்துஓதாத பொருளை முட்டுப்படாமல் உரையினால் முடித்தல். அஃதாவது

'அரைஅளபு குறுகல் மகரம் உடைத்தே
இசைஇடன் அருகும், தெரியுங்காலை' (தொ. எ. 13)

என்பதனால் கொள்க. என்னை? அரைஅளவாகிய எல்லையின் குறுகி, கால் மாத்திரையது ஆதலை மகரமெய் உடைத்து; அஃது யாண்டோ எனின், வேறோர் எழுத்தினது ஓசையின்கண்; அதுதான் சிறுபான்மையதாகி வரும், ஆராயுங்காலத்து என்பதனால் ஆயிற்று. என்னை? கால்மாத்திரை என்பது சூத்திரத்தின்கண்ணதாய்ச் சொல்லிமுடியாததனை உரையினான் முட்டின்றி முடித்தலான் எனக் கொள்க. இக்கருத்தினானே,

'சூத்திரத்து உட்பொருள் அன்றியும் யாப்புற
இன்றியமையாது இயைபவை எல்லாம்
ஒன்ற உரைப்பது உரை எனப்படுமே' (தொ. பொ. 649)

என்று தொல்காப்பியனார் ஓதுவார் ஆயினார்.

[மகரம் தன் மாத்திரையின் குறுகும் என்றே சூத்திரத்தில் கூறப்பட்டிருக்க, அது கால்மாத்திரை அளவிற்றாகக் குறுகும் என்பதனை உரையில் விளக்கிக் கூறுவதே மொழியாததனை முட்டின்றி முடித்தலாம்.]

**15. வந்ததுகொண்டு வாராதது முடித்தல் என்பது,**

பின்னர்க் கூறிய சூத்திரத்தினுள் வந்ததனைக் கொண்டு முன்னர்க் கூறிய சூத்திரத்துள் வரும் இலக்கணத்திற்கு வாராததனைக் கூட்டி முடித்தலாம். அஃதாவது,

'கூறிய உறுப்பின்சில குறைந்து இயலினும்
வேறுபாடு இன்றுஎன விளம்பினர் புலவர்' (தண்டி. சூ. 9)

எனவும்,

'அறம்முதல் நான்கினும் குறைபாடு உடையது
காப்பியம் என்று கருதப்படுமே' (தண்டி. சூ. 10)

எனவும் கூறிய சூத்திரங்களான் உணரப்படும். என்னை? பின்னர்க் கூறிய சூத்திரத்தில் வந்ததனைக்கொண்டு அறம் முதல் நான்கும் ஒழித்து அல்லாத உறுப்பில் குறைவதே பெருங்காப்பியம் என்பது.

[அறம்முதல் நான்கும் ஒழித்து அல்லாத உறுப்பில் சில குறைவதே பெருங்காப்பியம் என்று கொள்ளப்படும். இது வந்ததுகொண்டு வாராதது முடித்தல் என்பது தண்டி. 10 பழைய உரை.]

**16. வாராததுகொண்டு வந்தது முடித்தல் என்பது,**

முன்னர்க் கூறிய சூத்திரத்தினுள் வாராததனைக்கொண்டு பின்னர்க் கூறிய சூத்திரத்துள் வரும் இலக்கணத்திற்கு வந்ததனைக் கூட்டி முடித்தலாம். அஃதாவது, 'கூறிய ... புலவர்' எனவும், 'அறம்முதல் ... கருதப்படுமே' எனவும் (தண்டி. 9, 10) கூறிய சூத்திரங்களான் உணர்க. என்னை? கூறிய உறுப்பில் சில குறைந்து இயலினும் எனவே, முன்னர்க் கூறிய சூத்திரத்தினுள் வாராத அறம் முதல் நான்கின் ஒன்றும் பலவும் குறைபாடு உடையதும் உறுப்பில் சில குறைதலும் காப்பியம் என்று வாராததனைக் கொண்டு வந்ததனோடு முடித்தலான் என்க.

[கூறிய உறுப்புக்களாவன - 'பெருங்காப்பிய நிலை பேசுங்காலை' (தண்டி. 8) என்ற சூத்திரத்தில் கூறப்பட்ட உறுப்புக்கள். அவை உடையன காப்பியம் - அறம்முதல் நான்கின் குறைபாடு உடையது சிறுகாப்பியம் - என்ற வெளிப்படையான செய்தியோடு, சிறுகாப்பியத்துக்கு என்று வெளிப்படையாகக் கூறப்படாத 'கூறிய உறுப்பின் சில குறைந்து இயலு'தலை இணைத்துக் கூறுவது வாராததுகொண்டு வந்தது முடித்தலாம்.]

**17. பிறன்கோள் கூறல் என்பது,**

பிறநூலாசிரியன் கொண்ட கோட்பாட்டைக் கூறுதல். அஃதாவது, 'வேற்றுமை-தாமே ஏழ்என மொழிப' (தொ. சொ. 63) என்றல். எனவே தன் கோட்பாடு அன்று என்பதாயிற்று.

[ஏழ்என்று மொழிதல் பிரகற்பதிமதம்; எட்டு என்றல் இந்திரன்மதம்.]

**18. தன்கோள் கூறல் என்பது,**

பிற நூலாசிரியன் கூறியவாறு கூறாது தன் கோட்பாட்டால் கூறுவது. அஃதாவது, 'விளிகொள்வதன்கண் விளியோடு எட்டே' (தொ. சொ. 64) என்றல்.

**19. பிறன் உடம்பட்டது தான் உடம்படுதல் என்பது,**

பிறநூலாசிரியன் உடம்பட்டதற்குத் தானும் உடம்படல். அஃதாவது இரண்டாவது வேற்றுமை செயப்படுபொருட்கண் வரும் என்றார் பாணினியார். அது தொல்காப்பியனாராகிய இவருக்கும் உடம்பாடு என்றல். அஃது இயற்றப்படுவதும், வேறுபடுக்கப்படுவதும், எய்தப்படுவதுமாம். அவற்றிற்கு உதாரணம் எயிலை இழைத்தான், மரத்தைக் குறைத்தான், நூலைக் கற்கும் என அடைவே காண்க.

[இயற்றுதல் - முன் இல்லதனை உண்டாக்குதல். வேறுபடுத்தல் - முன் உள்ளதனை வேறுபாடுஉறச் செய்தல்; எய்துதல் - செயப்படுபொருள் எழுவாயது தொழிலின் பயனைத் தான் உறுவதாகச் செய்தல். இவை வடமொழியுள் முறையே நிர்வர்த்தியம், விகாரியம், பிராப்பியம் எனக் கூறப்படும். இவை வாக்கியதீபத்துள்ளும் கையடத்துள்ளும் காணப்படுவன. இவற்றைத் தமிழில் சேனாவரையர் முதலாயினாரும் கொண்டனர். (பி. வி. 12 உரை)]

**20. அறியாது உடம்படல் என்பது,**

தான் அறியாதவற்றைப் பிறபெரியோர் கூறியவாற்றான் உடம்படல். அஃதாவது ஏழாம் நரகம் இத்தன்மைத்து எனச் சான்றோர் கூறியவழித் தனக்கு அது புலப்படாதாயினும் தான் அதற்கு உடம்படல். இது வழிநூலாசிரியருக்கு உரித்து.

[நரகம் ஏழ்வகைப்படும் எனவும், அவை தமப்பிரபை, தமதமப்பிரபை, பங்கப்பிரபை, தூமப்பிரபை, வாலுகப்பிரபை, சர்ச்சராப்பிரபை, இரத்தினப்பிரபை எனப்படும் எனவும் சமணசமயம் கூறும். (சிந்தா. 2817 உரை)]

**21. ஆணை கூறல் என்பது,**

ஒருபொருளைக் கூறும்வழி ஏதுவினால் கூறலின்றித் தன் ஆணையால் கூறல். அது வேற்றுமை ஏழ் எனப் பாணினியார் கூறியவழி, அவர் விளியை முதல் வேற்றுமையில் அடக்கினார். அதற்குத் திரிபு கூறாமல் அதனை எட்டாம் வேற்றுமை என்றலும் ஆண்டுக் கடாவப்படாமை.

[வேற்றுமை ஏழ் என்று கூறிய கருத்தையும் விளியை முதல்வேற்றுமையுள் அடக்கிய பொருத்தத்தையும் மறுக்காமல், தாம் விளிவேற்றுமையை எட்டாம் வேற்றுமை என்று கொண்ட கருத்தை மாத்திரம் வெளியிட்டமை. தொல்காப்பியனார் பாணினியாருக்குப் பிற்பட்டவர் என்பது இவர் கருத்து.]

**22. தன்குறியிடுதல் என்பது,**

உலகின்கண் வழக்கின்றி ஆசிரியன் தன் குறியிடல். அஃதாவது, உயர்திணை அஃறிணை என்பன.

[தொல்காப்பியர் இதனைத் தான் குறியிடுதல் என்பர். உயர்திணை அஃறிணை எனவும், கைக்கிளை பெருந்திணை எனவும் சொல்லிற்கும் பொருளிற்கும் வழக்கியலான்அன்றி ஆசிரியன் தானே குறியிடுதல் என்பர் பேராசிரியர். (தொ. பொ. 665) உயர்திணை அஃறிணை போல்வன முதனூலாசிரியர் இட்ட குறி என்பர் நச்சினார்க்கினியர். (தொ. சொ. 1 உரை.)]

**23. தந்து கொணர்ந்து உரைத்தல் என்பது**

முன்னராயினும் பின்னராயினும் நின்ற சூத்திரச்சொல்லை இடைநின்ற சூத்திரத்தில் கொணர்ந்து புணர்த்து உரைத்தல். அஃதாவது,

'குற்றிய லிகரம் நிற்றல் வேண்டும்
யாஎன் சினைமிசை உரையசைக் கிளவிக்கு
ஆவயின் வரூஉம் மகரம் ஊர்ந்தே' (தொ. எ. 34)

என்ற சூத்திரத்திலுள்ள 'நிற்றல் வேண்டும்' என்னும் தொடரை,

'நெட்டெழுத்து இம்பரும் தொடர்மொழி ஈற்றும்
குற்றியல் உகரம் வல்லாறு ஊர்ந்தே' (தொ. எ. 36)

என்பதனில் இணைத்துப் பொருள்கொள்ளுதலாம்.

[வல்லாறு ஊர்ந்தே நிற்றல் வேண்டும் என இணைத்துப் பொருள் செய்தல் வேண்டும். 'தொடர்மொழி' என்பது மூன்று முதலிய எழுத்துக்களான் ஆகிய சொல்.]

**24. மறுதலை சிதைத்துத் தன்துணிபு உரைத்தல் என்பது,**

நெட்டெழுத்து ஏழ் அளபெடை என்பன குற்றெழுத்தின் விகாரம் என்பாரை மறுத்தது. அது நெட்டெழுத்து அஅ எனவும், அளபெடை அஅஅ எனவும் நின்றன அல்ல என அவர்மறுதலையைச் சிதைத்து வேறோர் எழுத்து என்று கோடல்.

[வடநூலார் அ என்னும் ஒரெழுத்தே ஒருமாத்திரையாய் உச்சரிக்குங்கால் குற்றெழுத்து என்றும், இரண்டுமாத்திரையாய்க் கூட்டி உச்சரிக்குங்கால் நெட்டெழுத்து என்றும், மூன்றுமாத்திரையாய் உச்சரிக்குங்கால் அளபெடை எழுத்து என்றும் மூவகைப்படும் என்ப. (சூ. வி. ப. 24)

அங்ஙனம் கோடல் இவருக்கு உடன்பாடன்றுபோலும். குறில் நெடில் அளபெடை என்பன தனித்தனி எழுத்துக்களே என்பது இவர்கருத்தாகும். அளபெடை என்பது

நெடிலும் அதன் இனக்குறிலும் சேர்ந்து ஒன்றாகக் கணக்கிடப்பட்டு மூன்றுமாத்திரை அளவு ஒலிக்கும் 'நெடில் குறில் இணைந்த எழுத்து' என்று கோடல் தமிழ்மரபு அன்று. 'மூவளபு இசைத்தல் ஓரெழுத்தின்றே' என்பதே தமிழ்மரபு.]

25. மாட்டெறிந்து ஒழிதல் என்பது

முன் ஒருபொருட்கு இலக்கணம் கூறிப் பின் வருவது அதுபோலும் என்றல். அஃதாவது ஏழாவது உயிர்மயங்கியலில் 'உகர இறுதி அகர இயற்றே' (தொ. எ. 254) என்றல்.

[ஒருபொருளுக்குக் கூறிய இலக்கணமே மற்றொரு பொருளுக்கும் கூறவேண்டிய தேவை ஏற்படும்போது அவ்விலக்கணத்தையே மீண்டும் ஒருமுறை கூறாமல் முன்னர்க் கூறப்பட்ட இடத்தைச் சுட்டி அது போல்வதே இதுவும் என்று கூறுதல்.

'அகர இறுதிப் பெயர்நிலை முன்னர்
வேற்றுமை அல்வழிக் கசதபத் தோன்றின்
தத்தம் ஒத்த ஒற்றுஇடை மிகுமே' (தொ. எ. 203)

என அகராற்றிற்குக் கூறிய அதேவிதி உகராற்றிற்கும் ஒத்தவழி, அச்செய்தியை மீண்டும்

'உகர இறுதிப் பெயர்நிலை முன்னர்
வேற்றுமை அல்வழிக் கசதபத் தோன்றின்
தத்தம் ஒத்த ஒற்றுஇடை மிகுமே'

என்று கூறாமல, 'உகர இறுதி அகர இயற்றே' (254) என்று கூறி விடுத்தலாம்.]

26. இரட்டுறமொழிதல் என்பது,

ஒருவகையான் நின்ற தொடர்ச்சொல்லாதல் ஒருசொல்லாதல் ஒரு செய்யு-ளகத்துப் பலபொருளையும் மொழிவதாம் எ-று. அஃதாவது,

'வந்தவாறு என்னைஎன வாட்கண் மடவாய்கேள்
சிந்தை நலிகின்ற திருநீர்க் குமரிஆட
அந்தில் அதன் ஆயபயன் என்னை மொழிக என்றாள்
முந்தி நலிகின்ற முதுமூப்பு ஒழியும் என்றான்' (சிந்தா. 2020)

என்பதனால் அறிக. என்னை? 'திருநீர்க்குமரியாட' எனவே, 'அழகிய நீர்மையை உடைய கன்னியாகிய நின்னை (சுரமஞ்சரியை)ப் புணர வந்தேன்' என்பதனை மறைபொருளாகவும், 'தீர்த்தநீராகிய குமரியாற்றை ஆடவந்தேன்' என்பதனை வெளிப்படைப்பொருளாகவும் செம்மொழியாக இரட்டுற மொழித-லானும், 'அதனால் ஆய பயன் யாது' என, 'அக்காலத்து இம்மூப்பு நீங்கும்' என அத்தச் சிலேடையாகவும் கொள்ளக் கிடந்தமையானும் உணர்க.

[அத்தச் சிலேடை - சொல்லுவான் குறிப்பினால் ஒரேபொருள் இருவகையான கருத்துக்களை வழங்குவதாகும்.]

27. ஒன்றினம் முடித்தல் என்பது,

ஒன்றற்கு இலக்கணம் கூறியஇடத்துக் கூறாது தொக்குநின்ற ஒழிபிற்கும் அதுதானே விதியாக முடித்தல். அஃதாவது,

'புள்ளி யீற்றுமுன் உயிர்தனித்து இயலாது
மெய்யொடும் சிவணும் அவ்வியல் கெடுத்தே' (தொ. எ. 138)

என்னும் சூத்திரத்தான் உணர்க. என்னை? இயல்பு அல்லாத புள்ளிமுன் அவ்வுயிர் வந்தாலும் அவ்விதி கொள்க என முடித்தல். உதாரணம் ஆலடை ஆலாடை என இயல்புமெய்யீறும், அதனை எனவும் நாடுரி எனவும்

விதிமெய்யீறும் வருமொழி முதலில் வரும் உயிர் தம்மீது ஏற இடம்கொடுத்தவாறு.

[ஆல்+அடை = ஆலடை; ஆல்+ஆடை = ஆலாடை. இவை இயல்பு மெய்யீறு.

அது+அன்+ஐ > அத்+அன்+ஐ = அதனை - அத் என்பது விதிமெய்யீறு.

நாழி+உரி > நாட்+உரி = நாடுரி - நாட் என்பது விதிமெய்யீறு. இவ்விதிமெய்யீறும் வருமொழிமுதல் உயிர் தம்மீது ஏறி முடிய இடம் தந்தவாறு.]

**28. தன்னினம் முடித்தல் என்பது,**

ஒருவகையுள் சிலவற்றிற்கு இலக்கணம் கூறியஇடத்துச் சொல்லாது ஒழிந்தனவாய்த் தொக்கனவற்றிற்கும் ஆட்சியும் காரணமும்பற்றி அச்சூத்திரத்தினிடத்து அவற்றிற்கும் வேறோர் இலக்கணம் கூறி முடித்தல். அஃதாவது, 'அஇஉ அம்மூன்றும் சுட்டு' (தொ. எ. 31) என்னும் சூத்திரத்தான் உணர்க. என்னை? குற்றெழுத்து என்றவற்றுள் மூன்றனைச் 'சுட்டு' என்றும் 'குறிய' என்று கூறியஇடத்து, எகரமும் வினாப்பொருள் உணர்த்தும் என முடித்தல்.

[தொ. எ. 31-ஆம் நூற்பா உரையுள் தன்னினம் முடித்தல் என்பதனால் எகரம் வினாப்பொருள் உணர்த்துதலும் கொள்க என்றார் நச்சினார்க்கினியர்.]

**29. மாட்டு உறுப்பினவா மனங்கொளக் கூறல் என்பது,**

ஒரு சூத்திரத்துப் பொருள்கொள்ளுங்கால் அகன்று பொருள் கிடப்பனவும் அணுகிக் கிடப்பனவுமான இருவகையையும் பொருள் முடியுமாற்றால் கொணர்ந்து உரைப்பச் செய்தல். என்னை?

'அகன்று பொருள் கிடப்பினும் அணுகிய நிலையினும்
இயன்று பொருள்முடியத் தந்தனர் உணர்த்தல்
மாட்டுஎன மொழிப பாட்டியல் வழக்கின்' (தொ. செ. 210 நச்.)

என்றாராகலின். 'மனங்கொள' என்பது கேட்டோர் மனத்துள்கொள - என்பதாம். இதற்குச் சூத்திரம் 'வடவேங்கடம் தென்குமரி ... படிமையோனே' தொ. சி. பாயிரம் என்பது எனக் கொள்க. அதற்கு இளம்பூரணர் உரை அன்றி நச்சினார்க்கினியர் எழுதிய உரையைக் கண்டுகொள்க. அதனை ஈண்டு உரைப்பின் பெருகும்.

[வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறும் நல்லுலகத்து வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின் செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணி எழுத்தும் சொல்லும் பொருளும் நாடிப் போக்கறுபனுவல் மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டிப் புலம் தொகுத்தோன் என்று நச்சினார்க்கினியர் மாட்டுறுப்பாகப் பொருள் செய்துள்ளார்.]

**30. உய்த்துக்கொண்டுணர்தல் என்பது,**

ஒருசூத்திரத்தான் ஒன்றற்கு இலக்கணம் கூறியவழி அதற்குப் பொருந்தாமை உளதாகத் தோன்றின் அதனையும் அதற்குப் பொருந்திய வழியாகக் கூட்டுதல். அஃதாவது ஏழாவது உயிர்மயங்கியலில்

'பனிஎன வரூஉம் கால வேற்றுமைக்கு
அத்தும் இன்னும் சாரியை ஆகும்' (தொ. எ. 241)

என்பதன்கண் உணர்க. என்னை? பனியத்துக் கொண்டான், பனியின்கட் சென்றான், பனியின் சென்றான் எனவரும். அவற்றுள் இன் பெற்றுழி முன்னர்க்கூறிய நாழிக்காயம் உரிக்காயம் என்பனபோல வல்லெழுத்து மிகாது, வீழ்க்க என்பதற்குப் பொருந்த உய்த்துணர்தல்.

[சாரியைப்பேறு வல்லெழுத்துப்பேற்றை விலக்காது என்பதனைத் தொல்காப்பிய எழுத்ததிகாரம், 263, 294 முதலிய சூத்திரங்களில் காண்க. 241-ஆம் சூத்திரத்தில் 'வேற்றுமை' என்றதனால் இன்பெற்றுழி இயைபு வல்லெழுத்து வீழ்க்க என்றார் நச்சினார்க்கினியர். அவர் ஒரேதொடர் இருபொருள் தருதலை 'உய்த்துக்கொண்டுணர்தல்' என்றார். சொல் 11, 460-ஆம் சூத்திர நச்சினார்க்கினியர்உரையை நோக்குக.]

**31. தீபகவகையால் சிறப்புக் கூறல் என்பது,**

குணம் தொழில் சாதி பொருள் என்னும் நான்கனுள் ஒன்றைக் குறித்த ஒருசொல் செய்யுளிடத்து முதல் இடை கடை என்னும் மூன்று இடத்தினுள் ஓரிடத்ததாகி, ஆதியில் நின்றது அந்தத்து அளவும் ஓடவும், இடைநின்றது முன்னும் பின்னும் ஓடவும், இறுதிநின்றது இடையும் முதலும் ஓடவும் கவின்பெறக் கூறுதல். என்னை?

குணம்தொழில் சாதி பொருள்குறித்து ஒருசொல்
ஒருவயின் நின்றும் பலவயின் பொருள்தரின்
தீபகம் செய்யுள் மூவிடத்து இயலும் (தண்டி. 40)

என்பது அணியியலாகலின் உணர்க. அவற்றிற்கெல்லாம் உதாரணம் ஈண்டு உரைப்பின் பெருகும்.

[இவ்வாறு சூத்திரங்கள் அமைந்துள்ளவாகக் காணமுடியவில்லை. தீபக அணிவகையின் உதாரணங்களிலேயே இவ்விலக்கணங்களைக் காணலாம்.]

**32. சொல்லின் எச்சம் சொல்லியாங்கு உணர்த்தல் என்பது,**

பெயர்வினை உம்மைசொல் பிரிப்புஎன ஒழியிசை
எதிர்மறை இசைஎனும் சொல்ஒழிபு ஒன்பதும்
குறிப்பும் தத்தம் எச்சம் கொள்ளும் (நன். 360)

என்னும் சொல்லெச்சங்களை ஆங்காங்குச் சொல்லியவாற்றால் பொருள்கோடலாம். அன்றியும் தொல்காப்பியர்நோக்கம் பற்றிப் பிரிநிலை முதலாகச் சொல்லப்பட்ட எனினும் ஆம். அவற்றிற்கு எல்லாம் உதாரணம் ஈண்டு உரைப்பின் பெருகும். அவையும் வந்துழிக் கண்டுகொள்க.

[தொல்காப்பியச் சொல்லதிகாரத்து 430-ஆம் சூத்திரத்தில் பத்துவகை எச்சங்களும் கூறப்பட்டுள்ளன. இவைபற்றிய விளக்கம் கூறுவதில் உரையாசிரியர்களிடையே கருத்துவேற்றுமை உண்டு.

'எஞ்சிய எல்லாம் எஞ்சுதல் இலவே' (தொ. எ. 77) உரையில் நச்சினார்க்கினியர் 'எல்லாம்' என்பது சொல்லின் எச்சம் சொல்லியாங்கு உணர்த்தல் என்பர். சொல்லின் ஆற்றலால் பெறப்படும் பொருளையும் எடுத்தோதியாங்குக் கொள்ளவைத்தல். அஃது 'எஞ்சிய எல்லாம் எஞ்சுதல் இலவே' என்புழி எல்லாம் என்பதனை எச்சப்படுத்து ஈறாகாதன இருபத்தாறு கொண்டவழியும் அவையும் தம்பெயர் கூறும்வழி ஈறாம் என்று கொள்ளவைத்தல் என்ற கருத்தில் பேராசிரியர் பொருட்படல 665-ஆம் சூத்திர-உரையில் கூறியதனையும் நோக்குக.]

என்று, அமைத்ததின் அகப்பட அமையாதனவும்
சுருங்கக் கூறிய தொடர்பினை நாடி
ஒருங்குஅமைத்து உதவுதல் உரவோர் கடனே

என்பது. (என்றுஎன்பது எண்இடைச்சொல்) ஆதலால் அங்ஙனம் கூறிய முப்பத்திரண்டாக அமைத்ததின் அமையாதனவாமவற்றையும் சுருங்கக் கூறல் என்னும் அழகு நோக்கியும் முன்னோர் தந்திரவுத்தி முப்பத்திரண்டு எனக் கொண்ட வரையறை இகவாமை கூறியதாக நோக்கியும், இதனகத்து அமைந்தனவாக உணர்த்துதல் அறிவுடையோர்க்கு முறைமை எ-று.

அமையாதனவாவன பல உள. அவற்றுள்ளும் சில வருமாறு: வேண்டா கூறி வேண்டியது முடித்தல், எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல், பொருள் இடையிடுதல் என்பன. அவையாவன,

'ஏனை உயிரே உயர்திணை மருங்கின்
தாம் விளிகொள்ளா என்மனார் புலவர்' (தொ. சொ. 126)

என்னும் சூத்திரத்தானும்,

'அளபெடை மிகூஉம் இகர இறுபெயர்
இயற்கைய ஆகும் செயற்கைய என்ப' (தொ. சொ. 127)

என்னும் சூத்திரத்தானும்

'ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி
பன்மைக்கு ஆகும் இடனுமார் உண்டே' (தொ. சொ. 461)

என்னும் சூத்திரத்தானும் உணர்க.

[இவ்வுத்திகள் இச்சூத்திரங்களின் உரையில் நச்சினார்க்கினியர் குறிப்பிட்டனவாம்.]

அவற்றொடும் 'ஆற்றொழுக்கு அரிமாநோக்கம் தவளைப்பாய்த்துப் பருந்தின்வீழ்ச்சி நிரல்நிறை' என்பனவும் ஒருசார்ஆசிரியர் உத்தியுள் அமைத்தார் எனக் குறித்தனவாம். அன்றியும், ஒன்றற்கு இலக்கணம் கூறும்வழி ஒருசூத்திரத்துள் பலஉத்தி வருவனவும் உள என்னும் நோக்கத்தால் கூறியதூஉம் ஆம். அதற்கு உதாரணம்,

'எல்லா மொழிக்கும் உயிர்வரு வழியே
உடம்படுமெய்யின் உருவுகொளல் வரையார்' (தொ. எ. 140)

என்பதனால் உணர்க. என்னை? மூவகைப்பட்ட மொழிக்கும் உயிர் முதல்மொழி வருமிடத்து இடை உடம்படுமெய்யாகிய வடிவுகோடல் நீக்கார் என்புழி, உடம்படுமெய் என்றார்அல்லது அவை இவை எனக் கூறார், அவற்றை உரையிற்கோடல் என்றும், அவை யகரமும் வகரமும் என்றும், அவற்றுள் இஈஐவழி யவ்வும், அல்லன வருவழி வகரமும் வரும் எனக் கோடலானும், ஒன்றினம் முடித்தல் என்னும் உத்தியால் விகாரப்பட்ட மொழிக்கண்ணும் உடம்படுமெய் கொள்ளப்படும் என்றுகூறி அதற்கு உதாரணம் மரவடி, ஆயிருதிணை எனவும் இரண்டுஉத்தி வந்தவாற்றான் அறிக.

தந்திரவுத்தி முற்றும்.

[மூவகைப்பட்ட மொழி - ஓரெழுத்துமொழி, ஈரெழுத்துமொழி, தொடர்மொழி என்பன. மரம்+அடி, அவ்+இருதிணை; மர+அடி - மரவடி: விதி உயிர்ஈறு; ஆ+இருதிணை - ஆ விதி உயிர்ஈறு.

தொல்காப்பியம், நன்னூல் என்ற இருநூல்களிலும் இந்நூலுக்கு முன் உத்திவகை முப்பத்திரண்டு கூறப்பட்டுள்ளன. இந்நூலாசிரியர் பெரும்பாலும் தொல்காப்பியம் கூறுவனவற்றையே கொண்டுள்ளார். தொல்காப்பியம் கூறும் உத்திவகைகளுள் ஒப்பக்கூறல், ஒருதலைமொழிதல், முறைபிறழாமை, ஒருதலையன்மை, முடிந்தது காட்டல், பொருள் இடையிடுதல், எதிர்பொருள் உணர்த்தல், ஞாபகம் கூறல் என்ற ஏழும் கொள்ளப்படவில்லை. மொழிந்த பொருளோடு ஒன்ற அவ்வயின் மொழியாததனை முட்டின்று முடித்தல் என்ற பேராசிரியரின் பாடத்தைக் கொள்ளாமல் மொழிந்த பொருளோடு ஒன்றவைத்தல், மொழியாததனை முட்டின்றி முடித்தல் என்ற பாடமே கொண்டுள்ளார். ஒருதலையன்மை, முடிந்தது காட்டல் என்று கொண்டதே இவருக்கும் உடன்பாடாகும். உரையாசிரியர் கருத்தே பல உத்திவிளக்கங்களுக்கும் கொள்ளப்பட்டுள்ளது. நன்னூல் கூறும் முப்பத்திரண்டு உத்திகளில் முடித்துக் காட்டல், முடிவிடம் கூறல், தான் எடுத்து மொழிதல், சொற்பொருள் விரித்தல், தொடர்ச்சொற்புணர்த்தல், ஏதுவின் முடித்தல், ஒப்பின் முடித்தல், இறந்தது விலக்கல், எதிரதுபோற்றல்,

விகற்பத்தின் முடித்தல், முடிந்தது முடித்தல், ஒருதலை துணிதல், எடுத்துக்காட்டல், எடுத்தமொழியின் எய்தவைத்தல் என்ற பதினான்கையும் இவர் எடுத்துக்கொள்ள-வில்லை; சொல்லின் முடிவின் அப்பொருள் முடித்தலைத் தொல்காப்பியத்தைப் பின்பற்றித் தொகுத்தமொழியான் வகுத்தனர் கோடல் என்று குறிப்பிட்டுள்ளார்; அவ்விரு நூல்களிலும் கூறப்படாத விரிந்தவை இவை என விழுமிதின் கூட்டல், மாட்டுறுப்பு, தீவகவகை என்ற மூன்றனையும் இவர் உத்தியுள் சேர்த்துள்ளார்; உத்திவகை முப்பத்திரண்டு என்ற வரையறையை மாற்றாமல் தம்நூலுள் மேற்-கொண்டுள்ளார்.] [25]

எழுநிலத்து எழுந்த செய்யுளும் நூலும்

**26. எழுநிலத்து எழுந்த செய்யுளும் நூலும்**
**அடிவரை உளவாய், அடிவரை இலவாம்**
**பாட்டினும், பாஇன்று எழு கிளவியினும்,**
**காட்டிய எழு நிலத்தனவாய்க் கழறிய**
**பொருளொடு கலந்து புரைதீர் ஒலிசெறிந்து**
**எண்ணத் தகைசால் ஈராறு அடிநிமிர்**
**பண்ணத்தியினும் பயில்வன ஆகும். [26]**

(எ-ன்) இதுவும் அந்நூலிற்கு ஓர்ஒழிபு கூறுதல் நுதலிற்று.

(இ-ள்) குறளடி முதலாய ஐவகை அடியானும், வரையறை உளவாம் பாட்டினாலும், அடிவரையறை இலவாம் பாட்டினாலும், பாஇன்றி ஒழுக-லாறுடைய பல சொற்றொடராலும், கற்றோரால் காட்டப்பட்ட எழுநிலத்து எழுந்த செய்யுள்நடைத்தாயும், அவற்றுள் பாட்டிற்குக் கூறிய பொருளோடும் கூடிக் குற்றமற்ற ஓசை செறியப்பெற்றுப் புலவரான் எண்ணும்படிக்குத் தலைமைசான்ற பன்னிரண்டு எனலாய நாற்சீரடியின் மிகுந்தும் குறைந்தும் வரும் பாவினத்தோடும் பயில்வனவாம் நூல்கள் என்றவாறு.

எழுநிலமாவன - பாட்டும் நூலும் உரையும் பிசியும் முதுமொழியும் மந்திரமும் குறிப்புமொழியும்.

அவற்றுள் அடிவரையுள பாட்டாவன - வெண்பா, ஆசிரியம், கலி, வஞ்சி, மருட்பா, பரிபாடல் என்பன.

அடிவரையறை இல ஆவன - நூல், உரை, பிசி, முதுமொழி, மந்திரம், குறிப்புமொழி எனக் கொள்க. என்னை?

'எழுநிலத்து எழுந்த செய்யுள் தெரியின்
அடிவரை இல்லன ஆறுஎன மொழிப' (செய். 157)

எனவும்,

'அவைதாம்,
நூலி னான உரையி னான
நொடியொடு புணர்ந்த பிசியி னான
ஏது நுதலிய முதுமொழி யான
மறைமொழி கிளந்த மந்திரத் தான
கூற்றிடை வைத்த குறிப்பி னான' (செய். 158)

எனக் கூறியவாற்றான் உணர்க. அன்றியும், இவற்றிற்கு முன்னர் 'பாட்டுரை நூலே' (செய். 75) என்னும் சூத்திரத்தானும் உணர்க. எழுநிலத்து எழுந்த என்பது, வரையறைப் பண்புப்பெயர். பண்ணத்தி என்பது பாஇனம். பண்ணைத்

தோற்றுவிக்கையால் பண்ணத்தி என்று பெயராயிற்று. இவை இளம்பூரணர் முதலாயினார் ஒருசார்ஆசிரியர் நோக்கம். நச்சினார்க்கினியர் நோக்கமும் உணர்ந்துகொள்க.

[நூல்கள் பாவினத்தோடும் பயில்வனவாம் என்பது நூலின் எடுத்துக்காட்டுப்பாடல்கள் பாஇனங்களால் அமையலாம் என்ற கருத்துப் பற்றியாகும். பாவினம் பன்னிரண்டாவன: வெண்பா, ஆசிரியம், கலி, வஞ்சி என்ற நான்குபாவிற்கும் ஒவ்வொன்றிற்கும் உரிய தாழிசை துறை விருத்தங்கள் என்பன.

'பாட்டுஉரை நூலே வாய்மொழி பிசியே
அங்கதம் முதுசொல் அவ்ஏழ் நிலத்தும்
வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின
நாற்பெயர் எல்லை அகத்தவர் வழங்கும்
யாப்பின் வழியது என்மனார் புலவர்' (தொ. செய். 75)

பண்ணத்தி என்பது பாஇனங்களைக் குறிக்கும் என்பது இளம்பூரணர் கருத்து. 'இளம்பூரணர் முதலாயினார்' என்ற தொடரில் முதலாயினார் என்ற சொல்லால் குறிக்கப்படுபவர் யாவர் என்பது புலப்படவில்லை. இக்காலத்துத் தொல்காப்பியச் செய்யுளியலுக்கு இளம்பூரணர், பேராசிரியர், நச்சினார்க்கினியர் என்ற மூவர் வரைந்த உரைகளே கிட்டுகின்றன. அவருள் இளம்பூரணரே பண்ணத்தி என்பதற்குப் பாஇனம் என்று பொருள்கூறுகிறார். 'மெய்வழக்கல்லாத புறவழக்கினைப் பண்ணத்தி என்ப. அவையாவன நாடகச் செய்யுளாகிய பாட்டுமடையும் வஞ்சிப்பாட்டும் மோதிரப்பாட்டும் கடகண்டும் முதலாயின. அவற்றைப் பாட்டு என்னாராயினார், நோக்கு முதலாயின உறுப்பின்மையின் என்பது' (தொ. பொ. 492 பேரா. உரை). இந்நூற்பாவிற்கு நச்சினார்க்கினியர் வரைந்த உரை கிட்டிற்றிலது.] [26]

நூலுக்கு வெண்பா அகவல் யாப்பு

**27. விதியாச் செய்யுளின் மிகுத்த இலக்கணமும்**
**மதியால் உரைத்ததும் வழங்கல் ஞாபகமா**
**விரிந்த நூல்களுள் வேறுவேறு இனமாய்த்**
**தெரிந்த இயல்களைச் செம்மையில் தமிதமி**
**வெள்ளையின் அகவலின் விளம்பலும் மரபே [27]**

(எ-ன்) இதுவும் அந்நூற்குக் கூறிக் கூறாத ஒழிபு எதிரது போற்றல் என்னும் உத்தியால் கூறுதல் நுதலிற்று.

(இ-ள்) இங்ஙனம் கூறப்பட்ட இலக்கணநூல்களை 'அகவலின் வெள்ளையின் அறைக' என்று முந்துநூல் விதித்தமை உளவாகவும், விதியாது நீக்கிய கட்டளைக்கலித்துறை, ஆசிரியவிருத்தம் என்னும் பாஇனத்தால் பின்பு இலக்கணநூல் செய்தோர் இலக்கணங்களைக் கூறியதும், கற்றோரால் எடுக்கப்பட்டு உலகின்கண்ணே வழங்குதல் ஞாபகமாக விரிந்த நூல்களுள்ளும், பலவேறு இனமாக ஆராய்ந்து பிரிக்கப்படும் பலஇயல்களுள்ளும், ஓரியலை முதலே வெண்பாவில் கூறி, அதன்பின்னர் வரும் ஏனை இயல்களை அகவலானும் அழகிதாய்த் தமிதமி கூறுவதும் மரபாம் எ-று. அவை யாப்பருங்கலக்காரிகை, கயாதர நிகண்டு, சூடாமணி நிகண்டு என்க. 'இலக்கணமும்' என்ற உம்மை எச்சவும்மை ஆதலால் கதை தொடர்ந்த இலக்கியங்களுள்ளும் வேறுவேறு பரவலாகத் தமிதமி கூறலும் மரபு எ-று. அவை சிலப்பதிகாரத்துள் மங்கலவாழ்த்துக்காதை மயங்கிசைக் கொச்சகக்கலியினும், அந்திமாலைச்சிறப்புச்செய் காதை, இந்திரவிழவூர் எடுத்த காதை,

கடலாடுகாதை இவை நிலைமண்டில ஆசிரியத்தும், கனாத்திறம்உரைத்த காதை கலிவெண்பாவிலும் வந்தவாறு காண்க. ஒழிந்தனவும் இவ்வாறு வந்தமை ஆங்காங்குக் காண்க.

['அகவலின் வெள்ளையின் அறைக' என்றது,

'பாயிரத்து இலக்கணம் பகருங்காலை
நூல்நுதல் பொருளைத் தன்அகத்து அடக்கி
ஆசிரியமானும் வெண்பாவானும்
மருவிய வகையான் நுவறல் வேண்டும்'

முதலிய பழம்பாடல்களை உட்கொண்டு சொற்றதாம். யாப்பருங்கலக் காரிகை, கயாதர நிகண்டு - கட்டளைக்கலித்துறை யாப்பு. சிதம்பரப் பாட்டியல், சூடாமணி நிகண்டு - ஆசிரியவிருத்த யாப்பு. ஓரியலை மாத்திரம் வெண்பாயாப்பிற்றாயும் ஏனைய இயல்களை ஆசிரிய யாப்பினவாகவும் பாடுதல் இந்நூலிலேயே புதுமையாகக் காணப்பெறுகிறது.] [27]

நூல்மரபின் ஒழிபு

**28. இருவகை நூல்மரபு இவைஎன மொழிப. [28]**

(எ-ன்) இதுவும் அந்நூலினைத் தொகைவகைவிரிப்படுத்தி ஒழிபு கூறுதல் நுதலிற்று.

(இ-ள்) நூல்எனத் தொகையான் ஒன்றாய் நின்ற அஃது இலக்கண இலக்கியம் என வகையான் இரண்டாம். நூலினது விரியின் மரபு இவை எனக் கூறுவர். அகத்தியன் முதலிய தொல்லாசிரியர் என்றவாறு.

நூல்மரபு முற்றும்.

[நூல் என்ற சொல் இறையனார்அகப்பொருள்உரை தோன்றிய காலம் வரையில் இலக்கணத்தையே குறித்து வந்தது. நூல் என்பது இலக்கணத்தோடு இலக்கியத்தையும் குறிக்கத் தொடங்கிய நிலை பிற்காலத்தில் ஏற்பட்டது. இவ்வாசிரியர்காலத்தும் அது வழக்கில் இருந்தமையால் இச்சூத்திரம் வரையப்பட்டு உரையும் அதற்கு ஏற்ப எழுதப்பட்டது. பண்டு 'புலம்' என்பது இலக்கணத்தையும் 'நிலம்' என்பது இலக்கியத்தையும் குறிக்க வழங்கப்பட்டன.] [28]

ஆசிரியன் இயல்பு

**29. புரப்போன் மரபினைப் புகலுங்காலைக்**
**குலனும் குணனும் குரவரைப் பேணும்**
**நலனும் கடவுளை நயத்தலும் கருணையும்**
**புலன்அவித்து ஒழுகலும் பொறையும் தோற்றமும்**
**உலகியல் அறிந்து உயிர்க்கு உறுதி கோடலும்**
**கற்றவர் காமுற வாழ்தலும் காந்தியும்**
**மதிநிகர் கல்வியும் கதிர் நிகர்வனவாம்**
**வாய்மையும் தூய்மையும் வழுவுதல் இலனாய்,**
**வாடாக் கற்பக மணம்மலி பொற்பூ**
**கோடாச் செங்கோல் கொற்றவன் நிதியறை**
**வான்சுவை மருந்து ஆயிரவாய்ச் சேடனின்**
**கற்றன யாவும் கழகத்து உதவும்**

**பெற்றியன், மறந்தும் பிறன்பழி கூறான்,**
**சதிர்உடையேன்எனத் தற்புகழ்ந்து அறியான்,**
**முதுமொழி இலக்கண இலக்கியம் முறையே**
**புதுமொழி புணர்க்கும் புலமையோனே. [29]**

(எ-ன்) வைத்தமுறையானே (5) நுவல்வோன் தன்மை உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) நுவல்வோன் - நூல் நுவல்வோன்; எனவே ஆசிரியனாம். நூல்நுவல்வோன் இலக்கணத்தைக் கூறுமிடத்துக் குலம் முதல் தூய்மை ஈறாக எண்ணப்பட்ட பதினாலினுள்ளும் ஒன்றும் வழுவுதல் இலனுமாகி, கற்பகமணம் மலி பொற்பூ முதலிய மூன்றனையும் சேடனையும் ஒப்பவனுமாகிக் கற்றன கழகத்து உதவும் பெற்றி, பிறன்பழி கூறாமை, தற்புகழாமை மூன்றும் உடையனுமாகி, முந்துநூல் கூறியபடியே இலக்கணம் இலக்கியம் இரண்டும் புதுமொழியாகப் புணர்க்கும் புலமைஉடையோனாம் என்றவாறு. முதுமொழி - முந்துநூல். கற்பகமணமலி பொற்பூ முதலிய மூன்றும் ஆயிரவாய்ச்சேடனும் உவமையாதற்கு ஏது முறையே மேற்காட்டுதும். இது பொழிப்புரை. ஒழிந்த அகலம் உரையில் கொள்க.

[சூத்திரத்தில் ‘புரப்போன்’ என்ற சொல்லே உளது. அது மாணாக்கனுக்குக் கல்வி புகட்டி அவனைக் காப்பவன் என்ற பொருளில் ஆசிரியனைக் குறிக்க வழங்கப்பட்ட சொல்லாகும். ஆசிரியன், நல்ல குடும்பத்தில் பிறத்தல், அதற்கு ஏற்ற நற்குணம், சான்றோரை விரும்பி வழிபடும் சிறப்பு, தெய்வவழிபாடு, எல்லா உயிரிடத்தும் இரக்கம், புலன்நுகர்ச்சியை நன்னெறிக்கண் பொறிகள் நுகருமாறு அவற்றை அடக்கி ஆளுதல், பகைவரையும் மன்னிக்கும் பொறுமை, காண்டற்கு இனிய வடிவம், உலகியலை அறிந்து அதற்கு ஏற்பச் செயற்படல், கற்றவர் போற்றுமாறு வாழ்தல், கல்விஅறிவு-ஒழுக்கங்களானாகிய ஒளியுடைமை, பதினாறு கலைகள் நிறைந்த சந்திரனைப் போலக் கல்வியால் நிறைதல், சூரியனை ஒத்த நேரம் தவறாமையும், களங்கமின்மையும் ஆகிய பதினான்கு செய்திகளில் ஒன்றும் வழுவுதல் இலனாய், கற்பக மணம்மலி பொற்பூ, அரசன் நிதியறை, தேவர் அமுதம் என்பனவற்றையும் ஆதிசேடனையும் ஒத்த இயல்பினனாய், தான் கற்றனவற்றை நல்லவையில் எடுத்துரைக்கும் சொல்லாற்றல் மிக்கவனாய், மறந்தும் பிறரைப் பற்றிக் குறைகூறாதவனாய், தன் ஆற்றலை நினைத்துத் தற்புகழ்ச்சி செய்துகொள்ளாதவனாய், பழைய இலக்கணஇலக்கியங்களைப் பாடம்சொல்வதனோடு தானே புதியனவாகப் புணர்க்கும் புலமை உடையோனுமாவான் எ-று.] [29]

மணம் மலி பொற்பூ உவமையாகுமாறு

**30. ஆய்ந்து அமைவுடைய கல்வியும் கவியும்**
**வாய்ந்ததற்கு உவமை மணம்மலி பொற்பூ. [30]**

(எ-ன்) முறையே மேற்காட்டுதும் (29) என்ற நான்கனுள் மணம்மலி பொற்பூவை ஒத்ததற்கு ஏது உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) வாடாத பொற்பூ முந்துநூல்களை ஆராய்ந்து அமைவுடைய கல்வியும் கவியும் எய்தியதற்கு உவமையாம் எ-று. ‘வாடாக் கற்பகம்’ என்பது சென்ற சூத்திரத்திலிருந்து இங்குத் தந்து கொணர்ந்து உரைத்தல் என்னும் உத்தியால் கூறப்பட்டது.

அமைவு - நிறைவு; பொற்பூ - கல்வி; மணம் - கவிஎனக் கொள்க.

[கல்விமாத்திரம் உடைமை பொற்பூவை நிகர்க்கும். கல்வியோடு கவிபாடும் ஆற்றலும் உடைமைக்கு மணம் மலி பொற்பூ உவமை.] [30]

கொற்றவன் நிதியறை உவமையாமாறு

**31. அறன்தரு பலபொருள் ஆன்றுஅமைவு உடைமையும்**
**பிறர் நிதியறையின் பெருகிய செல்வமும்**
**அளப்பருந் தன்மையும் அவரவர்தாம் தினம்**
**கொளக் குறைவுஇல்லதும் கொற்றவன் நிதியறை. [31]**

(எ-ன்) கொற்றவன் நிதியறை ஒத்தற்கு ஏது உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) அறத்தினால் உண்டாக்கப்பட்ட பலபொருள்களும் நிறைவு எய்துதலும், பிறர் நிதியறையினும் பெருகிய செல்வவளனும், ஒருவரால் அளத்தற்கு அரிய பெற்றியும், வறியோர் தாமே தினமும் வேண்டுவன தினமும் கொள்ளாநிற்கக் குறைவுஇல்லாமையும், செங்கோல்கொற்றவன் நிதியறைக்கு உண்டாய குறி (இயல்பு) என்றவாறு.
எனவே, இவன்உளத்து அறம் முதலிய நாற்பொருளாங் கல்வி நிறைவுடைமை, பிறர்ஆராய்வின் மேம்பட்ட கல்வி நிறைவுடைமை எனவும், இவன் கல்வி நிறைவுடைமை அளத்தற்கு அரியது என்பதூஉம், பிறர் இவனிடத்து வித்தையைக் கொள்ளக்கொள்ளக் குறையாது என்பதூஉம் உய்த்து உவமை கொள்ள நின்றமை உணர்க. இவை குறிப்புவமை.
[உபமானத்தை மாத்திரம் விளக்கி உபமேயத்தைப் பொருத்தி விளங்கிக்கொள்ளுமாறு வைப்பது குறிப்புவமையாகும்.] [31]

மருந்து உவமையாமாறு

**32. உண்ணத் தெவிட்டா உரிசையும் அஃகா**
**வண்மையும் தண்மையும் பயப்பது மருந்தே. [32]**

(எ-ன்) வான்சுவைமருந்து ஒத்தற்கு ஏது உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) அமிர்தமானது தன்னை உண்பவர் உண்ணஉண்ணத் தெவிட்டா இனிமையும் வற்றா வளமையும், குளிர்ச்சியும் பயப்பதாம் என்றவாறு. எனவே, அவன்கல்வியும் கவியும் கேட்போர் செவியால் உட்கொள்ள உவட்டா என்பதும், அக்கல்வி கவிகொள்வார் கொள்ளுந்தோறும் குறைவின்றி நிறைவு எய்தும் தன்மையாய் இருக்கும் என்பதும் உவமையால் உய்த்து உணர்ந்து கொள்ள நின்றவாறு உணர்க. அலங்காரம் இதுவும் அது. (குறிப்புவமை) [32]

ஆதிசேடன் உவமையாமாறு

**33. பாயிரம் தோய்ந்து பருப்பொருள் இன்றி**
**நுண்பொருள் பயக்கும் நூல்பல ஆங்காங்கு**
**உலப்புஇல் மாணாக்கர்க்கு ஓர்பகல் மயர்வுஅறச்**
**செலச்சொலற்கு உவமை ஆயிரவாய்ச் சேடன். [33]**

(எ-ன்) ஆயிரவாய்ச் சேடன் உவமை என்பதற்கு ஏது உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) சிறப்புப்பாயிரத்தோடும் கூடிப் பருப்பொருளின்றி நுண்ணிய பொருள்களைக் கூறுவனவாம் பலநூற் பொருள்களைக் குறைவில்லாத மாணாக்கர் பலர்க்கும் ஒருகாலத்து ஒருங்கு இருள்தீரச் செலச் சொல்லுதற்கு ஆயிரவாய்ச் சேடன் உவமையாம் எ-று. இவர் கற்கப்படுவோர்.
[கற்கப்படுவோர் - நல்லாசிரியர்.] [33]

ஆசிரியர் ஆகத் தகாதார்

**34. மடி அழுக்காறு வஞ்சகம் வெகுளி**
**உணராததை உணர்ந்ததின் மேற்கோடல்,**
**தம்மைப் புகழ்வதின் தாம்பிறர் இகழ்தல்,**
**கற்றவர் புனைந்த கவியினுள் சார்ந்த**
**குற்றம்ஒன்று உளதேல் குணன்அமைத்து அறியான்,**
**செவ்வியின் மலர்ந்த நாறாச் செம்மலர்,**
**வெவ்விடஅரவுதன் வாய்க்கொள் விழுமணி,**
**பொதுமகள்பாற்கொளப் பொருந்திய போகம்,**
**சிறியவன்தன்பால் செறிதரு பொருள்எனும்**
**கல்வியன் ஆரியனாம் கடன்இலனே. [34]**

(எ-ன்) கற்கப்படாதோர் குணம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) மடி அழுக்காறு வஞ்சகம் வெகுளி என்ற நான்கும், கல்லாமை மேற்கொண்டு ஒழுகலும், தம்மைப் புகழ்வதோடும் பிறர் குற்றமற்ற கல்வியையும் கவியையும் இகழ்தலும், கற்றோரால் புணர்க்கப்பட்ட செய்யுட்-கண்ணும் சார்ந்த குற்றம் சிறிது உளதாம் எனின் அதனைக் குணனாக அமையாததும் உடையனாகி, அவற்றொடு நாறாச் செம்மலர் முதலிய நான்கும் போலும் கல்வியை உடையவன் ஆரியனாம் கடன்இலன் எ-று. கடன் - முறை. நாறாச்செம்மலர் முதலிய நான்கும் ஒப்பு என்பதற்கு ஏது மேற்காட்டுதும். ‘தம்மை’ என்னும் பன்மை இழிபின்கண் மயங்கிற்று.

[கல்லாமை மேற்கொண்டு ஒழுகலாவது கல்லாதனவற்றைத் தான் கற்றனவாக வெளியே கூறிக்கொண்டு செயற்படுதல். சான்றோர்பாடல்களில் வரும் சிதைவுகளை வழு-வமைதியாகக் கோடல்வேண்டும் என்பது.] [34]

நாறாச் செம்மலர் ஒப்பாமாறு

**35. பல்கால் சொல்லியும் தெற்றெனப் பயன்கொள**
**நல்கா வாக்குஅது நாறா மலரே. [35]**

(எ-ன்) நாறாச் செம்மலர் ஒப்பு என்பதற்கு ஏது உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) ஒரு செய்யுளுக்குப் பொருள் பலகால் கூறியும் கேட்போர் உள்ளத்துத் துணிவுறச் செலச்சொல்லா வாக்கிற்குப் பருவத்து மலர்ந்தும் பரிமளம் எய்தாத மலர் உவமையாம் எ-று.
பருவத்தின் மலர்ந்து பரிமளம் எய்தாதமலர் - முருக்கமலர். [35]

பாம்பின் வாய்மணி ஒப்பாமாறு

**36. உகும்எனின் கோடல் அல்லது வந்துகொள்**
**பகுதி இன்றாகும் பாம்பின்வாய் மணியே [36]**

(எ-ன்) பாம்பின் வாய் மணி ஒப்பு என்பதற்கு ஏது உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) பாம்பின் வாய் மணி பாம்பு தானே உகுக்குமெனின் கொள்வதல்லது இப்பொழுது வேண்டும் என விரும்பினோர் விரும்பினபடியே அக்காலத்தில் கொள்ளும் பகுதி இல்லையாம் என்றவாறு. எனவே, அதுபோல் அவ்வா-

சிரியரிடத்தில் கல்வியும் அவர்தாமே தரின் கொள்வதல்லது கற்க விரும்பும் மாணாக்கர்க்கு விரும்பிய காலத்து விரும்பினபடியே கொள்ளும் பகுதி இன்று என்பது உய்த்துஉணர நின்றவாறு காண்க. [36]

பொதுமகள்நலன் ஒப்பாமாறு

**37. பொருள்அளவையில் வரும் பொதுமகள் நலனே. [37]**

(எ-ன்) பொதுமகளிடத்து நலம் ஒப்பு என்பதற்கு ஏது உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) பொருட்பரத்தையரிடத்து உண்டான நலன் புமான்கள் கொடுத்த பொருளின் அளவு எவ்வளவு, அவ்வளவைக்கு ஒப்ப எய்தும் எ-று. எனவே, அவ்வின்பம்போல அவ்வாசிரியனிடத்து உண்டான கல்வியும் மாணாக்கர் கொடுத்த பொருள்அளவைக்கு ஒப்பக் கொள்ளப்படும் என உய்த்துஉணர நின்றவாறு காண்க. [37]

பேதை கைப்பொருள் ஒப்பாமாறு

**38. அறத்தமர் பசித்துஉழந்து அலமர உலகில்**
**பிறர்க்கு உணவு எதிர்செலும் பேதைகைப் பொருளே. [38]**

(எ-ன்) சிறியவன்பால் செறிதரு பொருள் ஒப்பு என்பதற்கு ஏது உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) பேதையரிடத்து உண்டான பெரும்பொருள், இன்பத்துன்பத்துக்கு உரியராய் உதவும் தமராயுள்ளார் மிகவும் பசித்துத் துன்பமுற்று மறுக்கம் எய்தவும், அவர்க்கு உதவாது, துன்பமுறுங்காலத்துச் சிறிதும் உதவுதல் இல்லாத ஏதிலார் உண்ணும்படிக்கு அவர்பசிக்கு அவர் கேட்கும்முன் எதிர்கொள்ளும் எ-று. எனவே, அப்பொருள்போல் அவ்வாசிரியரிடத்துக் கல்வியும், தம்மை வழிபடு மாணாக்கருக்கு எய்தாது வழிபடா மாணாக்கர்க்கு எய்துவது ஒன்றாம் என உய்த்துஉணர நின்றவாறு காண்க.
இவை மூன்றுசூத்திரமும் குறிப்புஉவமை. இவர் கற்கப்படாதோர். [38]

நூல் நுவல்வதன் இயல்பு

**39. புரத்தலின் இயல்பே புகலுங்காலை**
**அதற்குஅமை ஆண்டின் மாணாக்கனை எதிருபு**
**கடவுளை வாழ்த்திக் காலமும் இல்னும்**
**திடனுறக் குறித்து மங்கலத்திசை நோக்கி**
**இருந்து உனக்கு இவைஇயல்பு என்ன உள்ளுறுத்தித்**
**திருந்திய சிந்தையின் செம்முகம் மலர்ந்து**
**நுவலத்தகு நூல் நுதலிய திறத்தினைத்**
**தவலருஞ் சிறப்பின் தான்முதல் கொளுத்திப்**
**பொழிப்பு ஆதியவாய்ப் புகன்ற வாய்மையின்**
**விடத்தகு வெகுளியின் விரைவு இலனாகி**
**நாளும் நாளும் நவில்தொறும் நவில்தொறும்**
**அஞ்சிறைப் பறவையின் அணைந்துஉறத் தழுவியும்**

**வெஞ்சிறைப்படு புனல் மீன்போல் நோக்கியும்**
**அகன்றனன்ஆம் எனின் ஆமைபோன்று உன்னியும்**
**புனிற்றாஎன அவன் புலம்தனில் முன்னியும்**
**கொளத்தகும் உணர்வின் குறி அறிந்தனனாத்**
**தான்எனல் ஆக்கிய தன்மைகண்டு உலகம்**
**வேட்டை வாளியின் விழுமியன்என மனக்**
**கோட்டம்ஒன்று இன்றிக் கொடுக்குமது என்ப. [39]**

(எ-ன்) நூல்நுவல்வதன் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) நூல்நுவல்வதன் இலக்கணத்தைக் கூறுமிடத்து, கல்வி தொடங்க நூல் அமைத்த ஐயாண்டு ஏழாண்டு என்னும் பருவத்தின் நற்காலத்தோடு பொருந்திய மாணாக்கனை ஏற்றுக்கொண்டு மதி திதி முதலிய நாற்காலமும் கழகமும் திடனாகக் குறித்து, குணதிசை வடதிசை என்னும் மங்கலத்திசைகளை நோக்கி இருந்து, வழிபடுகடவுளை வாழ்த்தி, 'வித்தை கொள்ளுமிடத்து இயல்பு நினக்கு இவை' என அவன் கருத்துறப்படுத்தி, தன்னோடு ஒன்றிய சிந்தையொடு முகம்மலர்ந்து, முதலே கூறத்தகும், நூல்கருதிய கூறுபாட்டைக் கெடுதல் இல்லாத சிறப்புவிதியால் கருத்துறப்படுத்தி, விடத்தகும் வெகுளி போல விரைவும் இலனாகிக் கொள்ளத்தகும் உணர்வின் குறியை அறிந்து, பொழிப்பு அகலம் நுட்பம் எச்சம் என்னும் உரைநடையான் நாளும் நாளும் நவிலுந்தோறும், பறவைபோல் அணைத்துத் தழுவியும், மீன்போல் நோக்கியும், விட்டு நீங்கிய காலத்து ஆமைபோன்று உளத்தான் நினைந்தும், ஈன்றணிமைப் போதினில் ஆபோல் அவன் இருக்கும் புலத்துச் சென்றும், தான் என்றும் சொல்லப்படுவதாகிய பெற்றிமையைக் கண்டு பெரியோர் 'வேட்டைவாளியின் விழுமியன்' என்று கூறும்படிக்கு அழுக்காறுஇன்றிக் கொடுப்பதாம் எ-று.

இச்சூத்திரத்திற்கு இங்ஙனம் மாட்டுறுப்பாகப் புணர்த்தல் இந்நூலாசிரியர் கருத்து என்று உணர்க.

[மாணாக்கனைத் தான் அன்போடு அருகிருத்திப் பாடம் சொல்லுதற்கு 'அஞ்சிறைப் பறவையின் அணைந்து உறத்தழுவியும்' என்றார். தன் கண்ணால் கருணை தோன்ற மாணாக்கனை நோக்கி ஆசீர்வதிப்பதற்கு 'மீன்போல் நோக்கியும்' என்றார். மாணாக்கன் ஆசிரியனை விடுத்துத் தன் ஊருக்குச் சென்று மீண்டுவரக் காலம் தாழ்த்தவழி அவன்நலம் குறித்து ஆசிரியன் தன் மனத்து நினைக்கவேண்டும் என்பதனை 'ஆமை போன்று உன்னியும்' என்றார். மாணாக்கன் தன் ஊரிலிருந்து குறித்த காலத்து வாராவிடின் அவனிடம் உள்ள பாசத்தால் அவனை நேரில் காண ஆசிரியன் செல்லவேண்டும் என்பதனைப் 'புனிற்றாஎன அவன்புலம்தனில் முன்னியும்' என்றார்.

மீனின் பார்வையாலும் ஆமையின் நினைப்பாலும் குஞ்சுக்கும் பார்ப்புக்கும் வயிறு நிரம்பும் என்ப. பதினான்காம் நூற்றாண்டில் வாழ்ந்த ஆசிரியர் நச்சினார்க்கினியர், பத்துப்பாட்டிற்கும் சீவகசிந்தாமணிக்கும் 'மாட்டு' என்னும் செய்யுள்உறுப்புத் தோன்ற உரைவரைந்த சிறப்பில் ஈடுபட்ட பிற்காலச்சான்றோரும் மாட்டுறுப்பு அமையச் செய்யுள் இயற்றுவதிலும், செய்யுளுக்கு உரைசெய்வதிலும் ஈடுபடலாயினர். அதனால் இந்நூற்பா மாட்டுறுப்பு அமைய இயற்றப்படவே, நூலாசிரியரின் மாணாக்கரான உரையாசிரியர் மாட்டுறுப்புத் தோன்ற உரைவரைந்துள்ளார்.

புரத்தலின் இயல்பே புகலுங்காலை, அதற்கு அமை ஆண்டின் மாணாக்கனை எதிருபு, காலமும் இடனும் திடனுறக் குறித்து, மங்கலத்திசைநோக்கி இருந்து கடவுளை வாழ்த்தி, உனக்கு இவை இயல்பு என்ன உள்ளுறுத்தி, திருந்திய சிந்தையின் செம்முகம் மலர்ந்து, நுவலத்தகுநூல் நுதலிய திறத்தினைத் தவலருஞ்சிறப்பின் தான் முதல் கொளுத்தி,

விடத்தகு வெகுளியின் விரைவு இலனாகி, கொளத்தகும் உணர்வின் குறி அறிந்தனனா, பொழிப்பு ஆதியவாய்ப் புகன்ற வாய்மையின் நாளும் நாளும் நவில்தொறும் நவில்தொறும் அஞ்சிறைப் புள்ளின் ... முன்னியும் தான் எனலாக்கிய தன்மை ... கொடுக்குமது என்ப என மாட்டுறுப்பான் இணைத்துப் பொருள் கூறப்பட்டுள்ளது. தான் எனல் ஆக்கிய தன்மை - ஆசிரியன் தான் கற்றவை முழுமையும் மாணாக்கனுக்குக் கற்பித்து அவனைத் தனக்கு நிகராக ஆக்கிய செயல். வேட்டைவாளி - குளவி. குளவி புழுவைத் தன்போல ஆக்குதல் ஆசிரியன் மாணாக்கனைத் தனக்கு நிகராக ஆக்குதற்கு உவமை.] [39]

கற்பிக்கப்படுவோர் இவர் என்பது

**40. ஆரியன் திருமகன், ஐயுறல் கடிந்த**
**கூரிய முதன்மை மாணாக்கன், குலமகன்,**
**தன்மகன், மன்மகன், மந்திரத் தலைவன்**
**நன்மகன், இருநிதி நனிதமி புரப்போன்,**
**அருத்தியின் வழிபடுபவன், உரை நுழைந்துகொள்**
**கருத்தினன், இவர்கள் கற்பிக்கப்படுவோர்.** [40]

(எ-ன்) இனிக் கொள்வோர் கற்பிக்கப்படுவோரும் கற்பிக்கப்படாதோரும் என இருவகையர். அவருள்ளும் கற்பிக்கப்படுவோர் எண்மர். அவர் இவர் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

எண்மருள், கூரிய முதன்மை மாணாக்கனாவான், தன்னொடும் ஒருங்கு கற்ற ஒருபுடை மாணாக்கருள் சேட்டன். இருநிதி நனிதமி புரப்போன் - பிற மாணாக்கர்க்குப் பங்கு என்னாது தனியே கொடுப்போன்.

[ஆசிரியனுடையமகன், தன்னொடு பயின்ற மூத்த ஒருசாலை மாணாக்கனுடைய மகன், தன்மகன், அரசனுடைய மகன், அமைச்சனுடைய மகன், தானே நிறையப் பொருள் கொடுப்பவன், விருப்பத்தோடு வழிபட்டுவருபவன், கூர்த்தமதியுடையவன் ஆகிய எண்மரும் மாணாக்கராதற்கு ஏற்றவர்.] [40]

நன்மாணாக்கர்க்கு உவமைகள்

**41. பளிங்குடன் ஓதிமம் பரவை கொண்மூஎனத்**
**தெளிந்த நுண்ணுணர்வு உறும் தெள்ளியோரே. [41]**

(எ-ன்) அவர்தன்மை உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) இதற்கு உரை வேண்டுவதில்லை. இவை நாலும் அவர்க்கு உவமையாதற்கு ஏது மேற்காட்டுதும்.

[தெளிந்த அறிவுடையோரிடம் அவருடைய தெளிந்த நுண்ணுணர்விற்குப் பளிங்கு, ஓதிமம், பரவை, கொண்மூ என்ற நான்கும் உவமையாகப் பொருந்தும்.] [41]

பளிங்கு ஒப்பாமாறு

**42. அழுக்கு இன்றாதல் அடுத்தவை தனதாக்**
**கோடல்என்று இரண்டும் பளிங்கின் குணமே. [42]**

(எ-ன்) பளிங்கு நன்மாணாக்கர் குணத்திற்கு உவமையாதற்கு ஏது உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) நிர்மலமாய் விளங்குதலுடன் அடுத்த பொருள்களின் குணங்களைத் தனது குணமாகக் கொண்டிருத்தல் என்னும் இரண்டும் பளிங்கின் குணமாம் எ-று. எனவே, பளிங்குபோலக் களங்கமற்று விளங்கிய நுண்ணுணர்வால் ஆசிரியன் கொடுத்த பலவேறுவகைப்பட்ட கல்விகளைஎல்லாம் உணர்வில் ஊட்டிக் கற்ற கல்வியைப் புறத்தே தோற்றுவிப்பன் என்று உவமை உய்த்துணர நின்றவாறு காண்க. [42]

ஓதிமம் ஒப்பாமாறு

**43. நீர்தெரித்து அமிர்துஉணும் நீர்மையின் ஓதிமம்**
**ஓர்இருபான்மைக்கு உவமையது ஆகும். [43]**

(எ-ன்) அன்னம் அவர் அறிவிற்கு உவமையாதற்கு ஏது உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) பாலையும் புனலையும் கலந்துவைத்தால் புனலை நீக்கிப் பாலைப் பருகும் தன்மை இரண்டினால் ஓதிமம் அவரிடத்து உண்டான ஓர்இரண்டு பகுதிக்கு உவமையாம் எ-று. எனவே, அதுபோல அவரும் பலவேறு வகைப்-பட்ட கல்வியுள் அசாரத்தை நீக்கிச் சாரமான கல்வியை உட்கொள்வர் என்று உவமை உய்த்துணர நின்றவாறு காண்க. [43]

பரவை ஒப்பாமாறு

**44. பகிரதி முதலிய பன்னதி உட்புக**
**உகுதல் இன்றாய்த் தன்னுட்கொளும் உவாவே. [44]**

(எ-ன்) பரவை உவமை என்பதற்கு ஏது உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) கடல், கங்கை முதலிய பலநதிகளும் தன்னுள் புகாநிற்பவும் அவற்றைப் புறத்தே கக்குதல்இன்றித் தன்னகத்து அடக்கிக்கொள்ளும் என்றவாறு.
எனவே, அக்கடல்போல அவர்உணர்வும் ஆசிரியன் அறிவிக்க உட்கொண்ட எல்லாக்கல்வியையும் புறத்தே தப்பவிடாது உட்கொள்ளும் என்று உவமை உய்த்துணர நின்றவாறு காண்க. [44]

முகில் ஒப்பாமாறு

**45. படிந்து உவர்அறுத்து உணப்படுபுனல் யாண்டும்**
**படர்ந்து பஃறுளியில் பயன்தரும் முகிலே. [45]**

(எ-ன்) கொண்மூ உவமை என்பதற்கு ஏது உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) மேகம் சமுத்திரத்தில் படிந்து உவர்அறுத்து உண்டு விளைவு எய்திய புனலை உலகம்எங்கும் ஆங்காங்குச் சென்று பலதுளியாகப் பெய்து உலகத்-திற்குப் பயனாகும் எ-று. உலகம் - சொல்லெச்சம். எனவே, அதுபோல அவர் தம்ஆசிரியனிடத்து அதிகரிக்கப்பட்ட (முறையாகக் கற்றுக்கொள்ளப்பட்ட) அவற்றுள் அசாரம் நீக்கிச் சாரம் உட்கொண்டு பரிபாலிக்கப்பட்ட தம்மிடத்துக் கல்வியையும் உலகின்கண் வரைதலின்றி யாவர்மாட்டும் கொடுப்பர் என உவமை உய்த்துணர நின்றவாறு காண்க. இவை நான்கற்கும் குறிப்புஉவமை முன்போலக் கொள்க.
[சொல்லெச்சம் என்பது ஒரேஒருசொல் எஞ்சி நிற்பது. இது சேனாவரையர் கருத்து. தொ. சொ. 441] [45]

கற்பிக்கத்தகாதோர் இவர் என்பது

**46. காமுகன், களியன், கடுஞ்சொலன், சினத்தன்,**
**மடியன், தடுமாறு உளத்தன், மறவியன்,**
**துயில்வோன், பிணக்கன், சோரன், பொய்யன்,**
**மானவன், பிணியின் மரீஇயவன், இவர்க்கு நல்**
**தானமது ஆயினும் சாற்றார் நூலே. [46]**

(எ-ன்) கற்பிக்கப்படாதோர்க்கு வரையறைகூறுதல் நுதலிற்று.

(இ-ள்) காமுகன் முதலாகப் பிணியின் மரீஇயவன் ஈறாகப் பதின்மூன்று பெயர்க்கும், கல்வி ஈதல் நற்றானம் என்று நூல்கள் கூறினஆயினும் சான்றோர் பெருநூல் உணர்த்தார் எ-று.

பெருநூல் என்பது ஆட்சி பற்றிய சொல்லெச்சம்.

[கண்ட பெண்களை விரும்புபவன், கள்உண்டு மயங்கியவன், கடிய சொற்களையே பேசுபவன், எல்லோரிடத்தும் வெகுள்பவன், சோம்பேறி, மனத்தில் எதனைப்பற்றியும் உறுதியான முடிவு இல்லாதவன், கற்றதை விரைவில் மறப்பவன், கற்கும் நேரத்தில் உறக்கம் கொள்பவன், வீண்வாக்குவாதம் செய்பவன், திருடன், பொய்யே பேசுபவன், போலி மரியாதையை எதிர்பார்ப்பவன், தீராநோயாளி, இவர்களுக்கு அடிப்படைக்-கல்வியைக் கற்பிப்பாரேயன்றிப் பெருநூல்களைக் கற்பியார் எ-று.
நூல் என்றாலே பெரிய இலக்கணஇலக்கியங்களையே பொதுவாகக் குறிக்கும் என்பது இவர் கருத்து.] [46]

கற்பிக்கப்படாதோர்க்கு உவமைகள்

**47. ஆடு, பந்து உறுசுவர், அளந்து அறிமுகவை,**
**கோடுஇன்றாம் குளம் எனும் குறியோரே. [47]**

(எ-ன்) கற்பிக்கப்படாதோர்க்கு உவமை உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஆடும், பந்து உறுசுவரும், ஒரு பதார்த்தத்தை அளந்து அறி முகவையும் கரைஇல்லாத ஏரியும் உவமையாக இலக்கணத்தைக் கற்பிக்கப்படாதோர் உடையராம் எ-று.

இவை நான்கும் உவமையாதற்கு ஏது மேல் காட்டுதும். [47]

ஆடு ஒப்பாதல்

**48. ஓர்இடத்து உறுகுளகு அமைத்து அற உண்ணாது**
**அவண்அவண் நிறைவுஅற்று அலமரும் ஆடே. [48]**

(எ-ன்) ஆடு உவமையாதற்கு ஏது உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஆடு நுகரிடத்து மிகுதியாக உண்டான குழையை நிறைய உண்ணாது சிறிது அருந்தியதனால் பசி அடங்காது ஆங்காங்குத் தெருமந்து திரியும் எ-று.

எனவே, அதுபோல அவரும் ஒருசார்ஆசாரியனிடத்துக் கற்கத் தொடங்கிய முக்கியமான ஒருநூலையாயினும் அவனிடத்துத் தெற்றென முற்றக்கல்லாது பலநூல்களையும் பலரிடத்தும் கற்கத் தொடங்கிச் சிறிதுசிறிது கற்றுக் கல்வி முற்றாது உழல்வர் என்று உவமை உய்த்துணர நின்றவாறு காண்க. [48]

பந்து உறுசுவர் ஒப்பாதல்

**49. எற்றிய பந்தினை எதிர்செல விடுத்துஒரு**
**பற்றுஅற நிற்பது சுவரின் பண்பே. [49]**

(எ-ன்) பந்து உறுசுவர் ஒப்பு என்பதற்கு ஏது உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஒருவர் கையால் எற்றிய பந்தினைத் தன்மெய்யில் பரிசித்ததனை எற்றி அவர் எதிர்செல விடுத்துத் தான் அப்பந்தோடு பரிசித்திருக்கும் பற்று இன்றி நிற்பது சுவரின் குணமாம் எ-று.

எனவே, அதுபோல அவரும் ஆசிரியனால் தமது மனத்திலே பற்ற உரைக்கப்பட்ட கல்வியையும் மனத்தில் பற்றிக்கொள்ளாமல் வறிய மனத்தராய் இருப்பர் என்று உவமை உய்த்துணர நின்றவாறு காண்க. [49]

முகவை ஒப்பாதல்

**50. அளந்து அகத்துஅடக்கிய பொருள்களை ஆங்குஅவண்**
**முற்றப் புறத்துஉகல் முகவையின் குணமே. [50]**

(எ-ன்) முகவை ஒப்பு என்பதற்கு ஏது உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அளந்து அறிவனவாகிய பதார்த்தங்களை ஒருவர் பெய்யத் தன்னகத்து அடங்கிய பொருள்களை முழுதும் புறத்தே உகுவது முகவையின் குணமாம் எ-று.

முகவை நாழிமுதலியனவாம். முற்றவும், உகலும் என்பனவாய்த் தொக்க உம்மை எச்சஉம்மையாதலால், சில பொருள்களாய் அகத்து அடக்கப்பட்டவற்றுள் உகுங்கால் சிறிது உள்ளே பற்றுவனவும் உள என்பதாயிற்று. அவை எள், பயறு, உழுந்து, நெல், அரிசி முதலியன அன்றிப் பால் தயிர் நெய் முதலியனவாம். எனவே அவரிடத்தும் சிறிது ஆசிரியன் உரைத்தவற்றுள் பற்றுவது உளது என்று உவமை உய்த்துணர நின்றவாறு காண்க.

['முற்றும்மை ஒரோவழி எச்சமும் ஆகும்' என்பதனை உட்கொண்டு 'முற்றவும் புறத்து உகலும்' என்பன எச்சவும்மை என்றார். 'புறத்து உகலும்' என்ற உம்மை எதிர்மறைஉம்மை. உகலும் என்ற உம்மை உகாமையையும் உணர்த்தும். உகலும் என்ற எதிர்மறைஉம்மையின் ஆற்றலால் முற்ற உகலும் உரித்து, முற்ற உகாமையும் உரித்து என்ற செய்தி போதருதலின், 'முற்றவும்' என்ற உம்மை தேவையின்று. 'முற்றப் புறத்துகலும் முகவையின் குணமே' என்றே சூத்திரஅடி அமைந்திருக்கலாம்.] [50]

கோடுஇன்றாம் குளன் ஒப்பாதல்

**51. பயம்சிறிது அடக்கலின் பயன்நிரம் பாதாம்**
**கொழும்புனல் புகுந்த கோடுஇன்றாம் குளனே. [51]**

(எ-ன்) கோடுஇன்றாம் குளன் உவமையாதற்கு ஏது உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) கோடுஇன்றாம் குளன் மாரியால் பெய்யப்பட்டுப் புகுந்த புனலைப் புறம்போக விட்டுச் சிறிது புனல் அடக்குவதால் உண்பார்க்கும், போகம் கொள்வார்க்கும் பயன்நிரம்பாதாம் எ-று. எனவே, அதுபோல் அவரும் தம்மிடத்து ஆசாரியனால் அளிக்கப்பட்ட கல்வியை முற்றப் பற்றாது உணர்வு சிறிது ஆகலின், புறம்போகவிட்டுக் கல்வியில் சிறியர் எனப்பட்டவராய்த் தமக்கும் பிறர்க்கும் இனிமைப்பயன் நிரம்பாத புன்புலவராவர் என்று உவமை உய்த்-

துணர நின்றவாறு காண்க. இவை நான்கு சூத்திரத்தாலும் முன்பு போலக் குறிப்புஉவமை கொள்க. கற்பிக்கப்படுவோர், கற்பிக்கப்படாதோர் என்ற இவ்-விருவர்க்கும்,

'அன்னம் கிளியே நன்னிறம் நெய்யரி
யானை ஆன்ஏறு என்றஇவை போலக்
கூறிக் கொள்ப குணம்உடையோரே'

எனவும்,

'அன்னம் ஆவே மண்ணொடு கிளியே
இல்லிக்குடம் ஆடு எருமை நெய்யரி
அன்னர் தலை இடை கடை மாணாக்கர்'

எனவும், முன்னோர் கூறிய சூத்திரங்களானும் உவமை உய்த்துணர்ந்து கொள்க.

['குரங்குஎறி விளங்காய் எருமை ஆடே
தோணி என்றாங்கு இவைஎன மொழிப'

என்ற சூத்திரம், 'அன்னம் கிளியே' என்ற சூத்திரத்தை அடுத்துக் கூறப்பட்டுப் பின் விடுபட்டதுபோலும்.] [51]

கற்பிக்கப்படாதோருள் எஞ்சியோர்

52. **குரங்குஎறி விளங்காய் கொள்பவர் போல்வார்,**
**பழம்பகை மறைத்துப் பணிபவர் ஆகி**
**கூடா ஒழுக்கில் கொள்பவர், கல்விச்**
**சால்பிலர் ஆகித் தலைமைவந்து அடுத்தோர்,**
**கரந்துஅங்கு ஒருவரைக் கற்கவிட்டு உணர்வான்**
**வருபவர், தமக்கும் வழங்கார் நூலே. [52]**

(எ-ன்) இதுவும் கற்கப்படாதோருள் கூறாது ஒழிந்தோரை உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) கொள்வதற்கு அரிய விளங்கனியை உண்ண விரும்பி, அவ்விளவில் இருக்கும் குரங்கைக் கல்கொண்டு எறிந்து அக்குரங்கு எறியும் விளங்கனியைக் கொள்பவரைப் போல உபாயத்தால் கல்விகோடற்கு வருவார்க்கும், பழம்-பகையைத் தோன்றாது மறைத்தற்குக் கூடாஒழுக்கத்தினோடும் புறத்துற்ற நட்பினராகியும், நிலத்தில் வீழ்ந்து பணிதல் முதலியன செய்தும் உபாயமாகக் கல்விகோடற்கு வருவார்க்கும், கல்வியால் பூரணம்இலராயும் அறிவிலாதாரால் சிறப்புஎய்தினோர், பிற சான்றோருழை 'உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும்' வெளிப்பட வந்து நின்று கல்லாது 'மாண்பு இறந்த மானத்தால்' பிறரை அவரிடத்துக் கரந்து விட்டு அவர் ஏவலான் வருவார்க்கும் சான்றோர் நூற்பொருள் வழங்கார் எ-று.

வழங்குதல் - வித்தை கொடுத்தல். நூல் - ஆகுபெயர்; அவை இலக்கண-இலக்கியம்.

இனிக் களம் கடியப்படுவார் பலர்.

[உடையார்முன் இல்லார்போல் ஏக்கறுதல் - செல்வர்முன் நல்கூர்ந்தார் நிற்குமாறு போல ஆசிரியர்முன் ஆசையால் தாழ்ந்து நிற்றல். (குறள். 395)

மாண்பு இறந்த மானம் - அந்தணர் சான்றோர் அருந்தவத்தோர் தந்தை தாய் என்ற இவரை வணங்காமையும், முடிக்கப்படாதாயினும் கருதியது முடித்தே விடுதலும் முதலாயின. (குறள். 432) அவர் ஏவலான் வருவார் - ஆசிரியரிடத்துத் தாம் செலுத்திய

மற்றவர் ஐயந்திரிபு அற உணர்ந்தவற்றைத் தமக்குக் கூற அவர்வாயிலாக ஐயம்திரிபு-களை அகற்றிக்கொள்பவர்.] [52]

களம் கடியப்படுவார்

53. ஆசாரம் இல்லார், அழுக்காறு உள்ளார், நகுவார்,
கூசாது மற்றொன்று கூறுவார் - தேசிகன்சொல்
கற்றுஒன்ற உறாதார், கழகத்துறில் இருந்தார்
எற்றுஎன்று உரையாது இரார். [53]

என்பதனான் உணர்க. எற்று என்பது கையால் புடைத்தலும், காலால் உதைத்தலுமாம்.

[கழகம் - சான்றோர் அவை. வள்ளுவர் காலத்தில் கழகம்என்ற சொல் சூதாடும் இடத்தைக் குறித்தது (குறள் 935, 937). இவ்வாசிரியருக்குச் சற்று முற்பட்ட காலந்-தொட்டுக் கழகம் என்பது கற்றோர்அவையைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்ட சொல்லாகும்.

சபைக்கு வேண்டிய நெறிமுறைகளைப் பின்பற்றாதவர்கள், பொறாமை உடையவர்கள், எப்பொழுதும் சிரித்துக்கொண்டே இருப்பவர்கள், விடாது மற்றொரு செய்தியையே பக்கலில் உள்ளவரிடம் பேசிக்கொண்டிருப்பவர்கள், ஆசிரியன் ஆகிய தலைவன் கூறுவனவற்றை மனம்கொண்டு செயலில் கொண்டுவாராதவர்கள் ஆகியோர் நல்லவையை அடைந்தால் அங்கிருப்பவர்கள் அவர்களைக் கையால் புடைத்தோ காலால் எற்றியோ அப்புறப்படுத்துமாறு கட்டளையிடாமல் இருக்கமாட்டார்கள். எனவே, மேற்கூறியவர்கள் நல்லவையுள் இருக்கைபெற்று அவையோர் கூறு-வனவற்றை மனங்கொள்ளும் வாய்ப்பினை வழங்கப்பெறமாட்டார்கள். எற்று - கையால் புடை, காலால் உதை என்னும் பொருளதாம்.] [53]

கோடல்மரபு

54. கொள்வோன் கொள்கடன் கூறுங்காலைக்
கடையாமத்திடை எழுந்து உள கடன்கழித்து,
ஆரியன்மாளிகை வாயில் சென்று எய்திக்
காலமும் இடனும் கருதுபு நின்றுஆங்கு,
எவண்எவண் நோக்கினன் அவண்உள னாகி
வணக்கமும் ஒடுக்கமும் வாய்ந்து அயல்நிற்ப,
வருகஎன்று அழைத்தலும் அருகுசென்று இறைஞ்சலும்,
அருத்தியின் இருத்திஎன்று அறைதலும் இருந்துஆங்கு,
உரைஎன உரைத்துஉரைத்து, உரனுறத் தோய்தரப்
பொழிப்பே அகலம் நுட்பம் எச்சமெனப்
பழிப்புஇன்றாம் உரை பகர்தலும் தெற்றென
உணர்ந்தபின்பு, ஒழிகஎன ஒழிதலும், அவன்திறத்து
ஓவாது உதவுவது ஒல்லும் வகையான்
ஏவாது இயற்றிய இன்பம் எய்தியபின்,
பகலினும் இரவினும் பயின்று பின் முன்னர்
அகலான் ஆகிய அன்பினன் ஆதலும்,
துயில்வுழித் தைவரும் துணைத்தாளினைத் துறந்து
ஒல்லையில் துயின்றுஎழுந்து ஒழுகுதல் அன்றே. [54]

இவற்றான் உணர்க. இதற்கு உரை வேண்டுவதில்லை.

'எத்திறத்து ஆசான் உவக்கும் அத்திறம்
அறத்தில் திரியாப் படர்ச்சி வழிபாடே'

என்பதும் கூட்டியுணர்க.

[மாணாக்கன் கல்வி கற்றற்குரிய முறைமையைக் கூறுமிடத்து, வைகறைப்பொழுதில் எழுந்து காலைக்கடன்களை முடித்து ஆசிரியனுடைய வீட்டுவாயிலை அடைந்து ஆசிரியனைத் தரிசித்தற்குரிய நேரத்தையும் வாய்ப்பையும் எதிர்நோக்கி நிற்பவனாகி, ஆசிரியன் எங்கெங்கெல்லாம் நோக்குவானோ அங்கங்குஎல்லாம் தான் இருப்பவனாகத் தன்னை ஆக்கிக்கொண்டு, வணக்கமும் உள்ளஒடுக்கமும் பொருந்தியவனாய், ஆசிரியனுக்குச் சற்றுச் சேய்மையில் நிற்ப, ஆசிரியன் 'வருக' என்று அழைத்தஅளவிலே அவன் அருகுசென்று வணங்கி, அவன் விருப்பத்தோடு 'அமர்க' என்று கூறியபின் அமர்ந்து, 'வாசி' என்று சொல்லியபின் ஏட்டினை வாசிக்கத்தொடங்கி, மாணாக்கன்அறிவில் நன்கு பதியுமாறு ஆசிரியன் பாடல்களுக்குப் பொழிப்புரை அகலவுரை நுட்பவுரை எச்சவுரை எனக் குறைபாடுஇலாத பல உரைகளையும் கூற அவற்றைத் தெளிவாக மனத்துக்கொண்டு, ஆசிரியன் 'செல்வாயாக' என்று கூறியபின்னரே தன்இல்லம் திரும்புதலும், ஆசிரியன் திறத்துத் தான் நீங்காது செய்யவேண்டிய பணிவிடைகளைஎல்லாம் அவன் கட்டளையிடும் முன்பே செய்து அதனால் மகிழ்வுகொண்டு, பகலில் ஆசிரியன் வெளியே செல்லும்போது பின்னரும் இரவில் முன்னரும் அன்போடு அவனை அகலாது தொடர்ந்து செல்லுதலும், ஆசிரியன் உறங்கப் புகும்முன் அவன் திருவடிகளைப் பிடித்துத் தடவுபவனாகி அவன் உறங்கியபின் திருவடிகளைப் பிடித்தலை விடுத்துத் தான் சென்று உறங்கி வைகறைப்பொழுதில் உறக்கத்திலிருந்து எழுதல் மாணாக்கன் கடன் என்று கூறுவர். அறத்தில் பிறழாத வகையில் ஆசிரியன் உவக்கும் கைத்தொண்டுகளைச் செய்க என்பது. 'எத்திறத்து' என்ற நூற்பா தொல்காப்பியச் சிறப்புப்பாயிரஉரையில் இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும் குறிப்பிட்டுள்ளதாகும்.] [54]

கற்ற கல்வி இழவாததற்கு உபாயம்

**55. கேட்டவை கேட்டவை நிரந்தரம் பாடம்
போற்றலின் ஏட்டில் தானே பொறித்தலும்,
உரைநுழைந்து உணர்ந்த ஒண்பொருளை உள்ளுறுத்தலும்,
மயல்அற்று ஒருபுடை பயில் மாணாக்கரின்
ஐயம் எய்தியது ஐயம் அகற்றலும்,
மெய்உணர்வினில் உறப் பிறர்க்கு அவை விளம்பலும்,
எய்தியது இழவாததற்கு இலக்கணமே. [55]**

(எ-ன்) கற்ற கல்வி இழவாததற்கு உபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

இதன்பொருள் வெளிப்படை. இதனுள் உரை நுழைதல் என்பது உரைமுகத்து நுண்ணிதாய் ஆசிரியன் காட்டக்கண்ட அரும்பதங்களை மனத்தான் மறவாது தரித்தல். இவ்வாறு கோடலால் மாணாக்கன் முற்ற உணர்ந்தானாமாறு.

'ஆசான் உரைத்தது அமைவரக் கொளினும்
காற்கூறு அல்லது பற்றலன் ஆகும்.'

'அவ்வினையாளரொடு பயில்வகை ஒருகால்,
செவ்விதின் உரைப்ப அவ்விரு காலும்
மையறு புலமை மாண்புநனி உடைத்தே.'

என்னும் சூத்திரங்களானும் உணர்க.

[ஆசிரியனிடத்துப் பாடம் கேட்பவற்றை மனத்தில் பதித்து ஏட்டிலும் பொறித்து-வைத்தலும், நுண்பொருள்களை மறவாது மனம்கோடலும், ஒருபுடை மாணாக்கரை வினாவித் தன்ஐயங்களை அகற்றிக்கோடலும், தான் அறிந்தவற்றை அறியும் அவா-வுடைய பிறர்க்கு உணர்த்தலும், கற்றகல்வியை இழவாததற்கு உரிய வழிகளாம். உரை மேற்கோள் பாடல்கள் இளம்பூரணர், நச்சினார்க்கினியர் இருவரும் தொல்காப்பியச் சிறப்புப்பாயிரஉரையில் கூறியனவே.] [55]

மாணாக்கன் கல்வியும் கவியும் உடையனாதற்கு உபாயம்

**56. தோய்ந்தவை அன்றியும் தோயாதவற்றை**
**ஆய்ந்துஎழு காலத்து அதன்பயன் எனலாய்**
**விழுமிய திறத்தினுள் விழுமியது ஒன்றாம்**
**சொல்லொடு சொல்லினைத் தொடுத்தலும், தொலையாக்**
**கல்வியில் பயிறலும், கடன் ஆகும்மே. [56]**

(எ-ன்) நூல்நுவல்வோனாகிய ஆசிரியன் வாடாக் கற்பக மணமலி பொற்பூப் போல ஆய்ந்து அமைவுடைய கல்வியும் கவியும் உடையனாதல் வேண்டும் என்றார்; அவ்வாசிரியன் போல மாணாக்கனும் கல்வியும் கவியும் உடைய-னாதற்கு உபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) கற்ற நூல் அன்றிக் கல்லாதவற்றையும் ஆராயுங்காலத்துக் கல்வியாலாய விழுமிய கூறுபாட்டைஉடைய கலைபலவற்றுள்ளும் விழுமிய பயன் என்று உலகம் கூறப்படுவதாம் சத்தங்களை (சொற்களை)த் தொகுத்துச் சாதிப்பதூஉம் தொலையாக் கல்வியுடன் சாதித்து வருவதூஉம் முறையாம் எ-று.

[மாணாக்கன் பாக்கள் புனைவதிலும் பலநூல்களைப் பயில்வதிலும் பொழுதினைச் செலவிடல் வேண்டும் என்பது.] [56]

பாடல் இயற்ற முதல்காரணம்

**57. பாவினை ஒலிபெறப் படனம் செய்திடும்**
**நாவினன் ஆகி, நாற்கவிப் புலவோர்**
**புதுமொழி புணர்ப்புழிப் பொறிப்பவன் ஆகியும்,**
**மனப்படும் ஒருபொருள் மதித்தவர் ஒருமொழி**
**எடுத்ததற்கு இயைபுற எதிர்எதிர் பன்மொழி**
**தொடுப்பதும், பெயர்வினை கோப்புஉணப் பிறிதுஅடி**
**தொடுப்பதும் தொடைபல தொடர்ந்து ஒருபாவாய்**
**முடிப்பதும், குறிக்கொளல் முதற்காரணமே. [57]**

(எ-ன்) சத்தம் சாதித்தற்கு முதற்காரணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) புலவர்பலரும் பாடிய பாப்பாவினங்களை அவ்வவ பாவிற்கு அமைந்த ஒலிமுறையே படனம் செய்திடும் வாக்கினனாகியும், அந்நாற்கவிப்புலவர் புதுமொழி புணர்ப்புழி அவர்க்குப் பட்டோலை பொறிப்பவனாகியும், ஒரு பொருளைக் குறித்து அவர் முதலே ஒருசொல்லை எடுத்தலும் அதன்மேற் பன்மொழி அவ்வடிக்குப் பொருந்தக் கொளுவுதலும், அதன்மேல் பல அடியையும் தொடுத்தலும், அடி தொடர்ந்தால் ஒருதொடையினாதல் பல தொடையினாதல் ஒருபா ஆக்கிப் பெயராதல் வினையாதல் கோப்புண முற்ற

முடிப்பது முதலாயினவற்றை மனத்துள் குறிக்கொளலும், சத்தம் தொடுத்தற்கு முதற்காரணமாம் எ-று. ஒழிந்த அகலம் உரையிற்கொள்க.

[சத்தம் சாதித்தல் - சொற்களை இணைத்துப் பாவும் பாவினமும் இயற்றல். ஒருதொடை - எதுகை, மோனை, இயைபு, முரண், அளபெடை, அந்தாதி, இரட்டை முதலியன. பெயராதல் வினையாதல் கோப்புஉண முற்ற முடித்தலாவது, அந்தப்பாடலில் பெயர்ச்-சொல்லோ வினைச்சொல்லோ முடிக்கும் சொல்லாக வந்து அப்பாடலில் கூறப்பட்ட கருத்தினை நிரப்ப உதவுவதாம்.] [57]

செய்யுள் இயற்றலின் முதல்நிலை

**58. சொல்பொருள் அணிநலன் தோயாது ஆயினும்,**
**மடியாது எடுத்தஅடி மடக்குதல் இன்றாய்**
**யாப்பினது உறுப்பு இழுக்காது இறுதியில் வினை**
**கோப்புண முடித்தல் அதன் முதற்குறியே. [58]**

(எ-ன்) இதுவும் அச்சத்தம் சாதித்தற்கு முதற்குறி உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) குறி - இலக்கணம். உறுப்பு - எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை என்னும் ஆறுஉறுப்பும். நலன் என்பது கேட்டோர்க்கு இன்பம் கொடுத்தல். தோயாதது - கூடாதது. ஒழிந்த அகலம் உரையிற் கொள்க.

[சொல் அழகு, பொருட்செறிவு, அணிநலன் இவற்றை உடைய பாடல்களைத் தொடக்-கத்திலேயே இயற்றுதல் என்பது இயலாத செயல். எனினும் அங்ஙனம் பாடலுக்குக் கூறப்பட்ட யாப்பிலக்கணத்தை வழுவாமல், இறுதியில் வினைச்சொல்லைக் கொண்டு-முடியும் வாக்கியநிலை தவறாமல், தொடக்கத்தில் செய்யுளியற்றப் பழகுதல் வேண்டும். அப்பாடலில் யாப்பிலக்கணவழுவோ சொல்முடிவு வழுவோ இருத்தல் கூடாது. இதுவே, செய்யுள்இயற்றுதலின் முதற்படி என்பது.] [58]

நற்கவி இயற்றுதற்கு உபாயம்

**59. அருமணி நிரல்வைத்தன்ன சொல்நலன்,**
**ஒளி அதனுள் சிறந்தன்ன பொருள்நலன்,**
**அழகு அதற்குஆங்கு அமைந்தன்ன அணிநலன்,**
**உரனுடைப் பழம்பாட்டு உணர்வுழி, உணர்ந்தோர்**
**வரனுடைப் பாட்டு உணர்வாய்மையின் வருமே. [59]**

(எ-ன்) அங்ஙனம் முன்னர்க் கூறிய முதற்குறியும் குறிக்கொள்பவன் கூறும் சத்தங்களினிடத்துச் சொல்நலனும் பொருள்நலனும் அவ்விரண்டினானுமான அணிநலனும் எய்துதற்கு உபாயம் உணர்த்துதல் நுதலிற்று.

உரனுடைப் பழம்பாட்டு என்பன சங்கச்செய்யுள். ஒழிந்த அகலம் உரையிற்-கொள்க.

[சிறந்த இரத்தினங்களை வரிசையாக வைத்தாற்போன்ற சொல்லழகும், அந்த இரத்-தினங்களில் ஒளிசிறந்து புலப்படுவது போன்ற பொருள்அழகும், அவற்றைத் தொடுத்-தற்கண் அழகு வெளிப்படுவது போன்ற அணியழகும், உடைய சங்கச் செய்யுள்களைப் பலகாலும் ஆழ்ந்து வாசித்து உணர்வதனால் சொற்பொருள் அணிநலன்கள் சான்ற புதிய பாடல்களைப் பாடும் ஆற்றல் ஏற்படும் எ-று.] [59]

பொதுப்பாயிரம் முற்றும்.

சிறப்புப்பாயிரம்

இனி, சிறப்புப்பாயிரமாவது பதினொருவகைத்தாம். அவை வருமாறு.

சிறப்புப்பாயிரக் கூறுபாடுகள்

60. **எல்லை வழி நுதலியபொருள் யாப்பே**
**நூற்பெயர் நுவல்வோன்பெயர் காரணம் பயன்**
**காலம் கேட்போர் களனெனப் பதினொரு**
**பால்புணர்த்து உரைப்பது சிறப்புப் பாயிரம். [60]**

(எ-ன்) சிறப்புப்பாயிரத்தினது கூறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) எல்லையும், வழியும், நுதலிய பொருளும், யாப்பும், நூற்பெயரும், நூல்நுவல்வோன் பெயரும், காரணமும், பயனும், காலமும், கேட்போரும், களனும் என்னும் பதினொரு பகுதியாகச் சேர்த்துக் கூறுவது சிறப்புப்பாயிரமாம் எ-று.
'புணர்த்து உணர்த்துவது' என்ற விதப்பினால், நூல்செய்வோன் வழிபடுதெய்வத்தினையும், 'தெய்வம் என்பதும் ஒன்று உளது' என்று உண்மை உணர்த்திய அவனுடைய ஞானாசிரியனையும், அவன்தாதையையும், குலத்தினையும், பதியினையும் அப்பாயிரத்துள் கூறுவதும் வரலாற்றுமுறைமையினான் மரபுஎனக் கொள்க. எனவே, பதினாறு என்பது உட்கோள்.
[சிறப்புப்பாயிரம் பதினொரு செய்திகளை உணர்த்துதலேயன்றிப் பதினாறு செய்திகளை உணர்த்துதலும் ஏற்புடைத்து என்பது கருத்து.] [60]

சிறப்புப்பாயிரத்து இலக்கணம்

61. **சிறப்பினது இயல்பே தெரியின் நூல் நுதலிய**
**திறப்படு பொருளைத் தன்னகத்து அடக்கி**
**அகவலின் வெள்ளையின் அறைவதுஒன்று ஆகும். [61]**

(எ-ன்) சிறப்புப்பாயிரத்தின் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) சிறப்புப்பாயிரத்தினது இலக்கணத்தை ஆராயுமிடத்துப் புலவனால் உரைக்கப்படும் நூல் நுதலிய பொருளைஎல்லாம் குறிப்புரையான்அன்றி வெளிப்படையாக அடக்குவதாய்ச் செய்து ஆசிரியத்தானாதல் வெண்பாவானாதல் கூறத்தகுவது ஒன்றாம் எ-று.
சிறப்பு என்பது ஈண்டு ஒன்றற்கு உரியது என்பதாம். [61]

நூல்செய்தான் பாயிரம் செய்யாமை

62. **கலைகள் யாவையும் கற்றுஉரை தெளிந்து**
**துலைநாச் சமனில் துணிநிலை புரியும்**
**வாய்மையும் பிறர்க்குஅவை மயர்வுஅற அளிக்கும்**
**தூய்மையும் சான்ற துணையிலன் எனினும்,**
**ஒல்காப் பதினெண் உறுப்புடை நாற்பொருள்**
**பல்காப்பியம் பழிப்புஅற நலம் புணர்க்கவும்**
**முத்தமிழ்க் கல்வியும் உத்தம வாக்கின்**

**வித்தகக் கவிதையும் வேண்டினன் ஆகிலும்,**
**தற்புகழ்தலும் பிறன் தன்னை இகழ்தலும்**
**பொற்புஅல ஆகும் புலன்உடையோற்கே. [62]**

(எ-ன்) நூல்செய்தான் பாயிரம் செய்வானல்லன் என்பது உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) இலக்கணஇலக்கியங்களை முற்றப் பாடம்போற்றி (மனப்பாடம் செய்து) உரையைச் சந்தயம் (ஐயம்) அறத் தெளிந்து, துலைநாப் போன்றும் துலாக்கோல்-சமன் போன்றும் ஐயமுற்ற பொருளை ஐயமறக் கேட்போர்க்கு உணர்த்தும் ஒப்பிலாதான் எனினும், எழுத்து ஆதிய ஐந்துஇலக்கணங்களையும் பதினெட்டு உறுப்போடு நாற்பொருள் பயப்பனவாய பெருங்காப்பியங்களையும் குற்றமறப் புதியனவாய்ப் பாடல் சான்றவனாம் எனினும், தன்னைப் புகழ்தலும் பிறன்-ஒருவனை இகழ்தலும் உணர்வுஉடையோனுக்கு அழகல்ல எ-று. இன்னும்,

'தோன்றா தோற்றித் துறைபல முடிப்பினும்
தான் தற்புகழ்தல் தகுதி அன்றே.'

என்பதனாலும் கொள்க.

[எழுத்து ஆகிய ஐந்து - எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்பன. பதினெட்டு உறுப்பு - மலை, கடல், நாடு, நகர், பருவம், சூரியன் தோற்றம் சந்திரன் தோற்றம், மணம்புணர்தல், முடிசூடல், பொழில்நுகர்தல், புனல்விளையாடல், சிறுவரைப் பெறுதல், புலவியின் புலத்தல், கலவியின் களித்தல், மந்திரம், தூது, செலவு, இகல், வென்றி என்பன (தண்டி. சூ. 8). பாடல் சான்றவன் - இயற்றும் ஆற்றல் உடையவன். பாடம் போற்றுதல் - மனப்பாடம் செய்தல். சந்தயம் - ஐயம். 'தோன்றா தோற்றி' - இளம்-பூரணர், நச்சினார்க்கினியர் பாயிர உரைமேற்கோள்.] [62]

பாயிரம் செய்தற்கு உரியோர்

**63. பன்னருஞ் சிறப்புப் பாயிரம் பகர்வோர்**
**தன்உயிர் பேணும் சதிர் ஆசிரியன்**
**ஒருபுடை கற்ற உயர் மாணாக்கன்**
**தன்னொடு கற்ற தலைமாணாக்கன்**
**உரைகாரணன் எனும் உரனுடையோரே. [63]**

(எ-ன்) பாயிரம் செய்தற்கு உரியோரை உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) கூறுதற்கரிய சிறப்புப்பாயிரம் கூறுதற்கு உரியோர் தன் ஆசிரியன், தன்னொடு கற்றோன், தன் மாணாக்கன், தக்க உரைகாரன் என்ற இந்நால்வருள் ஒருவராவர் என்பது.
அந்நால்வருள்ளும் இந்நூற்குச் சிறப்புப்பாயிரம் செய்தான், இந்நூற்கு உரை செய்த திருமேனி இரத்தினகவிராயன் என்று உணர்க. நூலாசிரியர்க்கு மாணாக்கன் என்பதனானுமாம்.

[சதிர் - மேம்பாடு. உயிர் - ஈண்டு அறிவு. தன்னொடு கற்ற - தன்னிடம் பயின்ற. உரைகாரணன் - உரைகாரன்.] [63]

சிறப்புப்பாயிரத்துக்கு உவமைகள்

**64. பாவிற்கு அணிபோல், பனுவல் தெளிவுஉணர்ந்தோர்**
**நாவிற்கு வாய்மைபோல், நாரணனாம் - தேவிற்கு**

**வாய்த்த அருள்போல, வாய்ந்ததே, நூல்அகத்தாய்**
**ஏய்ந்த பொருட்பாயிரம். [64]**

(எ-ன்) சிறப்புப்பாயிரத்தினது சிறப்பிற்கு உவமை உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) இதனுள் வாய்மை - சத்தியவசனம்; கற்ற கல்வியைப் பிறருக்குச் செலச் சொல்லுதலுமாம். நூலகத்தாய் ஏய்ந்த பொருட்பாயிரம் என்பதனால் சிறப்புப்பாயிரம். நூலகத்தாய் ஏய்ந்த பொருள் புலவன் கூறிய அவ்வவ நூலுக்குச் சிறந்த பொருள்களாம் என்று உணர்க.

[பாடலுக்கு அலங்காரம் போலவும், தெளிந்த புலவருக்குத் தாம் கற்ற கல்வியைப் பிறர் உள்ளங்கொள்ளுமாறு தெளிவாகப் பாடம் சொல்லும் ஆற்றல் போலவும், திருமாலுக்குக் காரணம்பற்றாக் கருணை போலவும், நூலுக்குப் பாயிரம் இன்றியமையாதது.] [64]

பாயிரஉரை முற்றும்.

**தருகாள மேகம் கவிராய ராயன் சடையன் அன்பால்**
**குருகாபுரேசர் புனை அலங்காரம் குவலயத்தே**
**கருகாத செஞ்சொல் உரைவிரித்தான் கற்பகாடவிபோல்**
**வரு காரிரத்னகவிராயன் பேரை வரோதயனே.**

(இ-ள்) பாடம் சொல்லுதலில் கற்பகத்தருப் போன்றும், பாடல்கள் இயற்றிப் பொழிவதில் காளமேகம் போன்றும் விளங்கிய கவிச்சக்கரவர்த்தியான சடையன் என்பான் அன்பினால் குருகைநகர் அதிபனான மாறன் பெயரை வைத்து இயற்றிய மாறனலங்காரத்துக்கு, இவ்வுலகில் அதனைக் கற்போர்அறிவு வருந்தாதவகையில் இனிய சொற்களாலே உரையைத் தென்திருப்பேரை என்னும் திருத்தலத்தில் பெற்றோர்தவத்தால் பிறந்த கற்பகமரச்சோலை போன்ற காரி ரத்தின கவிராயன் விரித்துக் கூறினான் என்ற கருத்துப்பட அன்பர் ஒருவர் பாடிய பாடல் இது.

# முதலாவது
# பொதுவியல்

**65. திருப்பாவை என்னத் திருந்துஇயல் பாத்தந்த**
**திருப்பாவை வில்லிபுத்தூர்ச் செல்வி - அருள்பார்வை**
**வாய்ந்ததனால் செய்யுள் வழக்குஎன்று இரண்டுஇடத்தால்**
**ஆய்ந்துஉரைப்பல் செய்யுள் அணி.** [1]

என்பது சூத்திரம். இவ்வதிகாரம் என் நுதலிய எடுத்துக்கொள்ளப்பட்டதோ எனின், அதிகாரம் நுதலியதூஉம் முன்னர்க் கூறிப்போந்த சிறப்புப்பாயிரத்-தானே உணரப்படும். என்னை? ‘தனாது நுண்உணர்வால் தருபல அணியை-யும்’ என்பதனால் உணர்க. ஆயின், இவ் அணிஅதிகாரத்துள் அணிஇலக்-கணம் எனைவகை ஒத்தினான் உணர்த்தினாரோ எனின், இனைவகை ஒத்தினான் உணர்த்தினார் என்பதூஉம் அச்சிறப்புப்பாயிரத்தானே விளங்கும். என்னை?

‘பொதுவியல் பொருள்சொல்லணி எச்சவியல்என’ எனக் கூறியதனால் உணர்க. அஃதாக, இவ்வதிகாரத்தின் முதற்கண் ஒத்தினைப் பொதுவியல் என்றது என்னையெனின், அணிபெறும் செய்யுள்கட்கும், பொதுவான ஒருசார் அணிக்கும் பொதுஇலக்கணம் உணர்த்தினமையால் பொதுவியல் என்னும் பெயர்த்துஆயிற்று. இவ்வோத்தினுள் இச்சூத்திரம் என் நுதலிற்றோஎனின், ஒருசார்ஆசிரியர் வேண்டும் சிறப்புப்பாயிரம் உணர்த்துதல் நுதலிற்று. என்னை?

‘தெய்வ வணக்கமும் செயப்படு பொருளும்
எய்த உரைப்பது தற்சிறப்பு ஆகும்’

என முன்னையோர் கூறிய முறையானும்,

‘கடவுள் வணக்கமும் கருதிய பொருளும்
திடனுறப் புகல்வதும் சிறப்புஎன்று ஆகும்’

என இந்நூலுடையாரும் கூறிய முறையானும் உணர்க. உம்மை இறந்தது தழீஇயிற்று. அன்னவாறு ஆதல் இச்சூத்திரத்துக்குப் பொருள் உரைப்பவே விளங்கும். ஆனால் இச்சூத்திரச் சொற்பொருள் யாதோ எனின், அப்பொரு-ளுரை நான்குவகைப்படும்; கருத்து உரைத்தலும், கண்அழித்து உரைத்தலும், பொழிப்புத் திரட்டலும், அகலம் கூறலும் என. என்னை?

‘உட்கோள் கண்அழிப்புடன் பொழிப்பு அகலம்
சுட்டிக் கூறல் சூத்திரச் சொற்குரை’

என வரும். அவற்றுள்ளும் கருத்து உரைத்தலாவது சூத்திரத்தின் உட்கோள் உரைத்தல். என்னை? ‘கருத்துரை சூத்திரத்து உட்கோள் கழறல்’ எனவும், கண்அழித்து உரைத்தலாவது சூத்திரத்தில் சொல்தொறும் சொற்பொருள் உரைத்தல்; என்னை?

‘தொகுத்த சொல்தொறும் சொற்பொருள் உணர்த்தல்
அடுத்த கண்அழிப்பு என்பர் கற்றவரே’ எனவும்,

பொழிப்புத் திரட்டலாவது சூத்திரத்தின் பொருளைஎல்லாம் தொகுத்து உரைத்தல்; என்னை?

'ஒலிகெழு சொற்பொருள்களைத் தொகுத்து ஒருங்கே
பொலிவுபெறத் திரட்டி உரைப்பது பொழிப்பே' எனவும்,

அகலமாவது சூத்திரப்பொருளைச் செம்மைசெய்தற்குக் கடாவும் விடையும் உள்ளுறுத்தி விரித்தல்; என்னை?

'மனாதுஉறும் யாப்பின் மரீஇய சொற்பொருளை
வினாவினும் விடையினும் விழுப்பொருள் ஆக்கி
அகற்றுபு விரித்து உரைப்பதுவே அகலம்'

எனவும் இந்நூல்உடையார் கூறிய சூத்திரங்களாலும் உணர்க.

[இக்கருத்து இறையனார்களவியல் உரையுள் உள்ளது. இந்நூலுடையார் இச்சூத்திரங்களைத் தாம் இயற்றிய எந்நூலில் கூறியுள்ளார் என்பது புலப்படவில்லை.]

இவ்வகைஎல்லாம் இச்சூத்திரத்தினுள் பெறுமுறை எங்ஙனேயோ எனின், 'திருப்பாவை என்னத் திருந்து இயற்பாத் தந்த திருப்பாவை வில்லிபுத்தூர்ச் செல்வி அருட்பார்வை வாய்ந்ததனால்' எனவே கடவுள்வணக்கம் சொன்னவாறு.
'செய்யுள்அணி' எனவே அதிகாரத்துள் கருதியது சொன்னவாறு. அதிகாரம் - முறைமை. இதனால் கருத்துரை முற்கூறப்பட்டது.

[அதிகாரம் - முறைமை. தொ. எ. 1. ந. அதிகாரம் - முறைமை, இடம், கிழமை. தொ. பொ. 665. பே.]

**இனிக் கண்அழித்து உரைக்குமாறு:**

திருப்பாவை என்ன - அழகைஉடைய நோன்பு என்று சொல்லுவதாக,
திருந்து இயற்பாத் தந்த - நிரம்பிய இலக்கணத்தை உடைய பாட்டை உலகம் ஈடேறப் பாடித்தந்த
திருப்பாவை வில்லிபுத்தூர்ச் செல்வி - திருப்பாவை என்னும் திருநாமத்தை உடைய ஸ்ரீவில்லிபுத்தூர்த் திருவுடையாள்,
அருட்பார்வை வாய்ந்ததனால் - அவளது கருணையோடும் கூடிய திருநோக்கம் எனக்கே பலித்ததனால்,
செய்யுள்வழக்கு என்று இரண்டு இடத்தால் - செய்யுள் என்றும் வழக்கு என்றும் சொல்லப்பட்ட இரண்டு இடங்களாலும்
செய்யுள்அணி ஆய்ந்து உரைப்பல் - முன்னோர் கூறிய செய்யுள் இடனாகத் தோன்றும் அணிஇலக்கணங்களை ஆராய்ந்து கூறுவல் எ-று.
அணி என்பது ஈண்டு அணிஇலக்கணங்களை. செய்யுட்கு அணிகொடுத்தலின் அணி என்றாயிற்று.

**இனிப் பொழிப்புத் திரட்டுமாறு:**

அழகைஉடைய நோன்பு என்று சொல்லுவதாக நிரம்பிய இலக்கணத்தை உடைய பாட்டை உலகம் ஈடேறப் பாடித் தந்த திருப்பாவை என்னும் திருநாமத்தைஉடைய ஸ்ரீவில்லிபுத்தூர்த் திருவுடையாளது பரமகருணையோடும் கூடிய திருக்கண்நோக்கம் சிறிதும் அறிவிலனாம் எனக்கே பலித்ததனால் செய்யுள் என்றும் வழக்கு என்றும் கூறிய இரண்டு இடங்களாலும் முன்னோர் கூறிய செய்யுள் இடனாகத் தோன்றும் அணிஇலக்கணங்களை ஆராய்ந்து கூறுவல் எ-று.

இனி, அகலமாவது விரித்துரையாதலால் இதற்கும் விரித்துரை ஈண்டுக் கூறின் உரை பெருகுமாதலால் அதனை உள்ளுறுத்து உய்த்து உணர்ந்துகொள்க. அஃதாக, முன்னோர் கூறிய இலக்கணநூல்கள் எனைவகை ஓத்தினால்

உணர்த்தினார் எனினும் முற்றும் ஒருபாவினால் கூறவும் இந்நூலுடையார் பொதுவியல் ஒன்றையும் வெண்பாவால் கூறி ஏனை இயல்கள் மூன்றினையும் ஆசிரியத்தால் கூறியது என்னையோஎனின், நன்று சொன்னாய்! இக்கடாவிற்கு எதிரதுபோற்றல் என்னும் உத்தியால் பாயிரத்துள்

'விதியாச் செய்யுளின் மிகுத்த இலக்கணமும்
மதியால் உரைத்ததும் வழங்கல் ஞாபகமா' (27)

எனக் கூறிய சூத்திரத்தான் உணர்க.

[பாயிரஇயலும் இவ்வாசிரியரே பாடினார் எனினும் நூலுக்குப் புறம்பாக உள்ள அவ்வியலை இந்நூலின் இயலாகக் கூறாமல் நூலுக்குப் புறம்பாக உள்ளதாகவே ஆசிரியர் கருதுதலின் உரையாசிரியரும் இந்நூல் பொது, பொருள், சொல், எச்சவியல் என்ற நான்கு இயல்களான் அமைந்ததாகவே குறிப்பிடுகின்றார். உள்ளுறுத்தல் - உள்ளத்தில் கொள்ளுதல். உய்த்து உணர்தல் - ஆராய்ந்து அறிதல்.] [1]

பாவும் பாஇனமும்

**66. வெண்பா அகவல் விரிகலிப்பா வஞ்சிப்பா**
**பண்புஆர் மருட்பா பரிபாடல் - ஒண்பா**
**இனம்என்று ஒலித்துஇரண்டுஆ றுஈராற வாய்ச்சென்-**
**றனமுந்து நூல்கற் றது. [2]**

(எ-ன்) முன்னர்ச் செய்யுள்இடனாகத் தோன்றும் அணியிலக்கணம் உரைப்பல் என்றார்; செய்யுள் உணர்ந்தே அணி உணரப்படும் ஆகலான், அணிபெறும் செய்யுளின் பெயரும், முறையும், தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

செய்யுள் எனத் தொகையான் ஒன்றாய்நின்ற அது வெண்பா அகவல் என வகைவரையறை இரண்டாய், அவற்றின் மரபு மிக்க கலி, வஞ்சி, மருட்பா, பரிபாடல் என்ற நான்கினோடும் விரிவரையறை ஆறாய், செப்பல், அகவல், துள்ளல், தூங்கல் என்ற ஓசைஉடைத்தாய், விரியொடு நின்ற ஆறனுள் வெண்பா முதலாய நான்கு என்னும் ஒள்ளிய பாஇனம் எனப் பன்னிரண்டாய் முந்துநூற்கண் கூறப்பட்டு நிகழ்ந்தன எ-று.

என்று என்பது எண்இடைச்சொல். அதனைப் பாஇனம் என்னும் எல்லா-வற்றினொடும் பிரித்து ஏற்றுக. என்னை?

'என்றும் எனவும் ஒடுவும் ஒரோவழி
நின்றும் பிரிந்து எண்பொருள்தொறும் நேரும்' (நன். 429)

என்பவாகலின். அது, 'வினைபகை என்றிரண்டின் எச்சம்' (குறள். 674) என்பதுபோலக் கொள்க. இரண்டு ஆறு ஈராறு என்பன நிரல்நிறை. ஆய் என்பது இறுதி விளக்காய் ஈண்டு ஆக்கத்தினைக் காட்டியது. ஒலித்தாய் என்பது உடைமை வினைக்குறிப்பு.

'மருட்பா ஏனை இருசார் அல்லது
தான்இது என்னும் தனிநிலை இன்றே' (தொ. பொ. 397)

என்பதனால் அதற்குச் செப்பலும் அகவலும் கொள்க.

'பரிபாடல்லே தொகைநிலை விரியின்
இதுபா என்னும் இயல்நெறி இன்றிப்
பொதுவாய் நிற்றற்கும் உரித்துஎன மொழிப' (தொ. பொ. 432)

என்பதனால் அதற்கு முழுதும் இசையாய்க் கொள்க. இப்பெயர் பெயர்; இம்முறை முறை; இத்தொகை தொகை எனக் கொள்க. இவற்றுள் வெண்பா முதல்வைத்தது தலைதடுமாற்றம் எனினும் ஆம்.

ஆயின், முதலே அணியிலக்கணம் கூறுவல்எனப் புகுந்து ஈண்டுச் செய்யுள் இலக்கணம் கூறிய முறையான் மற்றொன்று விரித்தல் என்னும் குற்றமாம் எனின், ஆகாது; என்னை? எழுத்து அசை சீர் தளை அடி தொடை என்னும் ஆறுஉறுப்பினது இலக்கணங்களைக் கூறி அவற்றானாய பாவினைத் தளை-யானும் அடியானும் தொடையானும் ஓசையானும் பொருளானும் வேறு-பட்டமை கூறி இனங்களையும் அவ்வகையே கூறாது, இவர் ஈண்டைக்கே வேண்டும் செய்யுள்களது தொகைவகை மாத்திரமே கூறினமையான் எனக்-கொள்க.

['பாவிரி மருங்கினைப் பண்புறத் தொகுப்பின்
ஆசிரியப்பா வெண்பா என்றாங்கு
ஆயிரு பாவினுள் அடங்கும் என்ப' (தொ. பொ. 419)
'ஆசிரிய நடைத்தே வஞ்சி; ஏனை
வெண்பா நடைத்தே கலிஎன மொழிப' (தொ. பொ. 420)
'மருட்பா ... இன்றே'(தொ. பொ. 397)
'பரிபாடல்லே ... மொழிப' (தொ. பொ. 432)

என்ற தொல்காப்பிய நூற்பாக்களை ஒட்டிப் பாவின்வகை இரண்டு எனவும் விரி ஆறு எனவும் கூறப்பட்டன. நான்குபாவிற்கும் தாழிசை துறை விருத்தம் என்ற இனங்களைத் தனித்தனியே கொண்டு பாவினம் பன்னிரண்டு எனப்பட்டது. குறட்பாவின் இனமான குறட்டாழிசையும், வெண்செந்துறையும் விரிவுஅஞ்சி விடுக்கப்பட்டன. ஆசிரியம், வெண்பா என்ற பண்டை மரபினைப் பற்றி வெண்பா, ஆசிரியம் என்று கூறியது தலைதடுமாற்றம் என்ற உத்திவகையாம்.

வெண்பா அகவல் என்று, விரி கலிப்பா வஞ்சிப்பா பண்பார் மருட்பா பரிபாடல் என்று, ஒண்பாவினம் என்று - என மூன்று இடத்தும் என்று என்பதனைப் பிரித்துக் கூட்டுக. வகை இரண்டு. விரி ஆறு. பாவினம் பன்னிரண்டு என்பது நிரல்நிறை. ஆய் என்பதனை அகவலாய், பரிபாடலாய், பாஇனம் என்றாய் என மூன்றிடத்தும் கூட்டுக. 'அதுச்சொல் வேற்றுமை உடைமையானும்' (தொ.சொ. 215) வினைக்குறிப்பு வரும் என்பதனை உட்கொண்டு ஒலித்து என்பது உடைமை வினைக்குறிப்பு எனப்பட்டது. ஒலியினை உடையது என்பது பொருள். இப்பெயர் பெயர்; இம்முறை முறை; இத்தொகை தொகை என்ற தொடர் நச்சினார்க்கினியர் உரையைப் பின்பற்றிய தொடர். (தொ. எ. 1. ந.)] [2]

பாக்களின் நால்வகைப் பகுப்பு

**67. ஆற்றல் அணிக்கண் அவை முத்தகம் குளகம்**
**தோற்றும் தொகையே தொடர்நிலைஎன்று - ஏற்புடைய;**
**என்றும் அவற்றுள் எழுவாய் தனிநின்று**
**சென்று பொருள்முற்றும் திடன். [3]**

(எ-ன்) இதுவும் அங்ஙனம் விரிந்த பாக்கள் அணி பெறுதற்பொருட்டுச் சிறப்பிலக்கணத்தால் அவற்றிற்கு மீட்டும் ஒருவகைப் பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) வகையினும் விரியினும் கூடி இரண்டு, ஆறு, ஈராறு என்னும் செய்யுட்-களாகிய அவை பெருமையுடைய அணிஇலக்கணங்களிடத்து முத்தகம், குளகம், தொகைநிலை, தொடர்நிலை எனச் செய்யுள் நான்காகப் பொருள்-நோக்கத்தால் தொகைபெற்று எக்காலத்திற்கும் பொருந்துதல் உடையவாம்; அந்நான்கனுள் ஆதியாகிய முத்தகச்செய்யுள் ஒன்றாக நின்று திடனாகச் சென்று புலவனால் குறிக்கப்பட்ட பொருளைப் பயந்து முற்றுப்பெறும் எ-று.

இவற்றுள் முத்தகம், குளகம் என்பன வடமொழிப்பெயர். ஏனைய இரண்டும் தமிழ்ப்பெயர். அவை அங்ஙனம் ஆமாறு மேல் அறியப்படும். நிலை என்பதனை இரண்டிடத்தும் கூட்டி உரைக்க. ஆற்றல் - பெருமை. தோற்றுதல் - உண்டாதல். 'சென்று' என்பதனால் செய்யுளின்கண் நிகழ்ந்த சொற்பொருளொடு முற்றாது எஞ்சிநின்ற சொல்லேயாயினும் பொருளேயாயினும் கொணர்ந்து முற்றுவிக்க முற்றும் என்பதூஉம் கொள்க. எழுவாய் என்பது ஈண்டு இடத்தானாகிய ஆகுபெயர். இச்சூத்திரப்பொருள்கோள் மொழிமாற்று எனக்கொள்க.

[தொகைநிலை, தொடர்நிலை என நிலை என்பது ஈரிடத்தும் கூட்டப்பட்டது. சூத்திரத்தில் முதலில் எடுத்துக்கூறப்பட்டது என்ற பொருட்கண் எழுவாய் என்ற சொல் வந்துள்ளது. முத்தகம் - மற்றவற்றிலிருந்து விடுபட்டது என்ற பொருளுடைய வடசொல். குளகம் - கூட்டமாக அமைந்தது என்ற பொருளுடைய வடசொல். திடன் சென்று பொருள்முற்றும் என்று மொழிமாற்றிப் பொருள் கொள்ளப்பட்டது.]

இனி, முத்தகச்செய்யுட்கு உதாரணம் வருமாறு:

**பொன்நகர் புகுந்த யாணர்ப் புத்தமிர்தம்**
**பின் ஒருநிலத்துப் பிறிதுஒரு படிவத்து**
**ஒருபகல் உறைவதுஅன்றுஎன உலகு உரைசெய**
**அருள்புரி கடவுள் ஆணையின் வேட்டம்உற்று**
**இகல்புரி விலங்கின் இனம்தொலைத் ததன்பின்**
**அகநகர் புரப்பேன், அயர்வு உயிர்த்தற்குப்**
**பொலந்தகட்டு உருளிப் புரவி ஊர்தியின்**
**வலம்பயில் பாகன் வரவுஉறீஇப் புறநகர்த்**
**தண்நிழல் நாடினன் சார்வுழி, மனனே!**
**பெண்இயல் பெருக்கி அப்பேரமிர்து எதிர்தலும்**
**யாவது இவ்உருஎன இடைவிடாது உயவலும்**
**காஅகத்து இஃது ஒரு கவின் நிலைக்களன்என்று**
**உள்நிகழ் உழுவல்அன்பு உடன்நின்று ஊட்டக்**
**கண்நயந்தனவாய்க் காமுறக் காண்தொறும்**
**புகுமுகம் புரிதலின் புணர்ச்சி மேற்கொளத்**
**தொகு பதினொன்றும் தொடர்பில் தோற்றி**
**ஒளியும் ஊறும் உரிசையும் வாசமும்**
**களியதாய் மிழற்று ஓசையும் ஐம்பொறி**
**ஏககாலத்தில் இலவுஇதழ் ஒன்றின்உண்-**
**டாக யாவரும் அணுகாது அமைநலன்**
**வண்துழாய் நெகிழ்ந்து மணம் மலி செவ்வித்**
**தண்துழாய் அரங்கன் தடந்துறைப் பொன்னித்**
**திரை வரன்றுஎறி நித்திலத்திரள் நிலவுஎழும்**
**விரைமலர் பரப்பி மெல்அணை விரி புன்னையின்**
**ஏந்துஎழில் சினைகவி எழினியுள்**
**வாய்ந்த அருள்மறை யார் மனக்கொள்பவரே? (1)**

என்பது, இயற்கைப்புணர்ச்சி புணர்ந்தவழித் தலைமகள், இவன் எக்குலத்தான்கொல்? எவ்விடத்தான்கொல்? இன்னும் இப்புணர்ச்சி கூடும்கொல்? இவன் என்னிடத்து அன்புஉடையான்கொல்? எனக் கூற்றால் ஐயுற்றுஉரையாள்

ஆயினும் குறிப்பால் ஐயம் நிகழும், அவற்றைத் தலைமகன் உளத்தான் உட்கொண்டு நால்வகை ஐயமும் தீரக் கூறியது.

மனனே - என் மனமே!

(இ-ள்) பொன்நகர் புகுந்த யாணர்ப் புத்தமிர்தம், பின் ஒருநிலத்துப் பிறிது ஒரு படிவத்து ஒருபகல் உறைவது அன்றுஎன உலகு உரைசெய - சுவர்க்கத்துள் குடிபுகுந்த அழகிய புதிய அமிர்தம் குடிபுகுந்தபின்னர்ப் பொன்மயமல்லாத மற்றொரு நிலத்தின்கண் சலமயம் அல்லாத மற்றொரு வடிவுஎடுத்து ஒருகணப்-பொழுதும் தங்குவது அன்று என்று உயர்ந்தோர் கூறா நிற்பவும்; அப்பேரமிர்து - அப்பெருமையை உடைய அமிர்தம்; அகநகர் புரப்பேன் - அகநகரில் இருந்து உலகினைப் புரக்கும் அரசஉரிமை உடையேன்; அருள்புரி கடவுள் ஆணையின் வேட்டமுற்று இகல்புரி விலங்கின் இனம் தொலைத்ததற்பின் - என்னிடத்து இனிய கருணையைச் செய்யும் பால்வரைதெய்வத்தின் ஏவலால், வேட்டை-மேல் மனம்வைத்து உலகத்து உயிர்களுக்கு மாறுபாடு இழைக்கும் ஆளி முதலிய விலங்கின் கூட்டத்தைக் குறைத்தபின்னர்; அயர்வு உயிர்த்தற்குப் பொலந்தகட்டு உருளிப் புரவி ஊர்தியின் வலம்பயில் பாகன் வரவுஉறீஇப் புறநகர்த் தண்நிழல் நாடினன் சார்வுழி - அவற்றைத் தொடர்ந்து ஓடி ஆடின வருத்தம் போக்குதற்குப் பொற்றகடு பொதிந்த நேமியைஉடைய குதிரை பூண்ட தேரோடும் வென்றி விட்டு நீங்காத பாகன் சுவடு பார்த்து வருவன் என உட்கொண்டு புறநகர்ப் பொதும்பர்க் குளிர்ந்த நிழலை நோக்கி அணுகின காலத்து; பெண்இயல் பெருக்கி எதிர்தலும் - (அவ்வமிர்தம்) பெண்ணினது இலக்கணத்தைத் தனதாகப் பெருப்பித்து எனதுஎதிர் நிற்ப; யாவது இவ்வுரு என இடைவிடாது உயவலும் காஅகத்து இஃது ஒரு கவின் நிலைக்களன் என்று உள்நிகழ் உழுவல் அன்புஉடன் நின்று ஊட்டக் கண்நயந்தனவாய்க் காமுறக் காண்தொறும் - மலர்மகள் முதலாயினோர் உருவினுள் யாதுதான் இவ்வுருவம் என மனமாகிய நின்னொடும் கூடி நீக்கமின்றி உசாவாநிற்ப, உள்ளே நிகழும் எழுமையும் தொடர்ந்த அன்பு பால்வரை கடவுளின் அன்புடன் கூடி இக்காவகத்து இவ்வுருவம் மலர்மகள் முதலானோர் காந்திகள்எல்லாம் திரண்டு ஏகமாகக் குடியிருப்பதோர் இடவகைதான் என்று உணர்வினுள் ஒன்றுவிப்ப, அந்நிலையே கண்கள் இவ்வுருவினை விருப்புற்று உட்கொண்ட விருப்ப-மிகையானே நோக்குந்தோறும்; புரிமுகம்புரிதலின் புணர்ச்சி மேற்கொளத் தொகுபதினொன்றும் தொடர்பில் தோற்றி ஒளியும் ஊறும் உரிசையும் வாசமும் களியதாய் மிழற்று ஓசையும் ஐம்பொறி ஏககாலத்து இலவுஇதழ் ஒன்றின் உண்டாக யாவரும் அணுகாது அமைநலன் - எனது நோக்கு இடமாகப் புகுந்து தன்கண் விரும்பி நோக்குதலால் யான் புணர்ச்சியின்மேல் மனம் வைப்பப் புகுமுகம் புரிந்தபின், பொருள்இலக்கணம் திரட்டி உரைத்த பொறிநுதல் வியர்த்தல் முதல் இருகையும் எடுத்தல் ஈறாய்ப் பதினொரு மெய்ப்பாடும் ஒன்றன்பின் ஒன்று தொடர்புஉடைத்தாகத் தோற்றிக் கண்டு உற்று உண்டு உயிர்த்தலாகிய நான்கோடும் என்மேல் வைத்த கருணை உடைத்தாய் மிழற்று ஓசையும் எனக் கேட்பதுமாக ஐம்புலன்களையும் என் ஐம்பொறிகளும் ஒருகாலத்து இலவமலர் போன்ற அதரம்ஒன்றின்கண் நுகர்ந்து ஆக்கம் எய்த இருதலையினும் வழிபடும் யாவரும் அணுகாதபடிக்கு ஏகாந்தமாக முழுத்த இன்பத்தை; வண்துழாய் நெகிழ்ந்து மணம்மலி செவ்வித் தண்துழாய் அரங்கன் தடந்துறைப் பொன்னி - சுரும்புகள் ஆறுதாளினாலும் துவைப்ப முகை விண்டு பரிமளத்தை மிகுப்பதாம் குளிர்ந்த துளபமாலிகையை உடைய அரங்கேசனது

தடந்துறை வாய்ந்த திருக்காவிரியினிடத்து; திரைவரன்று எறி நித்திலத்திரள் நிலவு எழும் விரைமலர் பரப்பி மெல்அணை விரி புன்னையின் ஏந்துஎழில் சினை கவி எழினியுள் வாய்ந்த அருள்மறை - பெரிய திருமுகத்துறைத்திரைகள் கொழித்து எறியும் தரளத்திரள்நிலவு இருளைத் துரந்து நிமிராநிற்பப் பரிமளப்பூ ஆகிய மெல்லிய அணையை விரிக்கும் புன்னையின்கீழ் உயர்ந்த அழகொடும் தாழ்ந்த சினைகளாகிய திரையினுள் தோன்றி அளித்த இராசியத்தை; யார் மனக்-கொள்பவரே - யாமே அறிவதல்லது உலகத்துள் யாவர் அறிவர்? எ-று.
இதனுள் 'நாடினன்' என்பது 'வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய' (தொ. சொ. 457) என்பதனால் வினையெச்சத் தனித்தன்மைத் தெரிநிலைமுற்று. சார்வுழி என்பது கொள்வுழி, செல்வுழி என்பன போல ஒற்றுஈற்று வகர உடம்படுமெய் வந்தது.
உயவல் - உசாவல். 'யான் ஒன்று உயவுகோ ஐய சிறிது' கலி 7-3,4 என்பதனால் அறிக. யாவர் மனக்கொள்பவர் என்பது யார் என வகரம் கெட்டது. யாது இவ்வுரு என்பது யாவது இவ்வுரு என வகரம் மிகுந்தது. என்னை?

பலர்அறி சொல்முன் யாவர் என்னும்
பெயரிடை வகரம் கெடுதலும் ஏனை
ஒன்றுஅறி சொல்முன் யாதுஎன் வினாவிடை
ஒன்றிய வகரம் வருதலும் இரண்டும்
மருவின் பாத்தியில் திரியும்மன் பயின்றே (தொ. எ. 172)

என்றார் ஆகலின். அப்பேரமிர்து என்பது 'சுட்டின் இறுதியும்...ஞாங்கர்க் கிளந்த வல்லெழுத்து மிகுமே' தொல். எழு. 204 என்பதனால் வல்லெழுத்து மிகுந்தது.
இச்செய்யுளின்கண் 'அகநகர் புரப்பேன்' எனவே, யான் அரசன் என்னும் குலனும், 'புறநகர் சார்வுழி' எனவே, 'ஒன்றே வேறே என்றிரு பால்வயின்' (தொ. பொ. 93) என்பதனால் ஒருநகருள் அகநகரும் புறநகரும் என்னும் இடமும், 'உள்நிகழ் உழுவல்அன்பு உடன்நின்று ஊட்ட' எனவே, உழுவல் அன்பால் பண்டும் பயின்று வருகின்ற நட்பு இப்பிறப்பினும் கூடிற்று; இதுபோல் இன்னும் இடையிடையே கூட்டமும் நிகழும் என்பதூஉம், 'அப்பேரமிர்து பெண்ணியல் பெருக்கி' எனவே நலம்பாராட்டலால் அவன் தன்மேல் அன்புடையான் என்பதூஉம் தலைமகள் உட்கொண்டு உணரும் என்பதாம்.
இதனுள் 'பொன்மயமல்லாத' 'சலமயம் அல்லாத' என்பன முதலாய, 'யாமே அறிவது அல்லது' என்பது ஈறாய சொல்லெச்சங்களும், 'தலைவி உள்ளக்-குறிப்பைக் குறித்தான்' என்னும் குறிப்பு எச்சமும் எஞ்சிநின்று விரிந்து முடிந்தவாறும் கண்டுகொள்க.
இச்செய்யுள்,

'அகன்றுபொருள் கிடப்பினும் அணுகிய நிலையினும்
இயன்றுபொருள் முடியத் தந்தனர் உணர்த்தல்
மாட்டுஎன மொழிப பாட்டியல் வழக்கின்' (தொல். பொ. 522)

என்பதனால் மாட்டு என்னும் உறுப்பால் பொருள்கோள் நிகழ்ந்தவாறும் காண்க.
இது மருதநிலத்தலைவன் பாலது ஆணையால் ஆயத்தை நீங்கிய மருதநிலப் புறநகர்த்தலைவியை எதிர்ப்பட்டுக் கூடிய களவொழுக்கக் கந்தருவம். என்னை?

'முதலொடும் புணர்ந்த யாழோர் மேன
தவலருஞ் சிறப்பின் ஐந்நிலம் பெறுமே' (தொ. பொ. 106)

என்றாராகலின். இனி வரும் செய்யுட்கும் இவ்வாறு விரித்துரை எழுதாததற்கும் சொற்றொறும் உய்த்துணர்ந்து கொள்க.
பகுதி - இயற்கை; துறை - புணர்ச்சி மகிழ்தல்.

[பொறிநுதல் வியர்த்தல் முதலாயின - பொறிநுதல் வியர்த்தல், நகுநயம் மறைத்தல், சிதைவு பிறர்க்கு இன்மை, கூழைவிரித்தல், காதொன்று களைதல், ஊழ்அணிதைவரல், உடைபெயர்த்து உடுத்தல், அல்குல் தைவரல், அணிந்தவை திருத்தல், இல்வலியுறுத்தல், இருகையும் எடுத்தல் என்பன. தொ. பொ. 261, 62, 63, 64. பால்வரை தெய்வம் - இன்பதுன்பங்களுக்குக் காரணமாகிய இருவினையும் வகுக்கும் தெய்வம் - தொ. சொ. 58. இராசியம் - இரகசியம். ஏகாந்தம் - தனிமை. இருதலையினும் வழிபடுவோர் - தலைவியோடு பொழில்நுகர வந்தவரும், தலைவனோடு வேட்டை விருப்பால் வந்தவருமாவர். புகுமுகம்புரிதல் - தலைமகன் நோக்கிய நோக்கெதிர் தலைவி தான் சென்று புகுதலை விரும்புதல்.
வினைமுற்றே வினையெச்சமாகும். அப்பொழுது அது முற்றெச்சம் என்ற பெயர்பெறும் என்பது சேனாவரையர், நன்னூலார் முதலானோர் கருத்து. வினையெச்சமே வினைமுற்று வாய்பாட்டானும் வரும் என்பது நச்சினார்க்கினியர் கருத்து. இவ்வுரையாசிரியரும் அக்கருத்தினரே. தொ. சொ. 457 - நச்சினார்க்கினியர் உரையைக் காண்க.
தொல்காப்பியனார் உடம்படுமெய் நூற்பாவில் நிலைமொழியை உயிரீறு என்று வரையறுத்துக் கூறாமையால் (தொ. எ. 140) ஒற்றீற்று முன்னும் உடம்படுமெய் வரும் என்ற கருத்தில் சார்வுழி என்பதன்கண் உடம்படுமெய் வந்தது என்றார். யாவர் என்பது யார் என்று ஆதலும் யாது என்பது யாவது என்றாதலும் மரூஉ முடிபு என்பதற்குத் தொல்காப்பிய எழுத்ததிகார 172-ஆம் நூற்பா எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.
'ஒன்றே வேறே என்றிரு பால்வயின்' என்ற தொடருக்கு நச்சினார்க்கினியர் உரைத்த உரையே கொள்ளப்பட்டுள்ளது. இப்பாடலில் சொல்லெச்சமாகப் பல சொற்கள் உரையில் வருவித்து உரைக்கப்பட்டுள்ளன.
மனனே! ... உலகு உரைசெய அப்பேரமிர்து அகநகர்புரப்பேன் இனம் தொலைத்ததன் பின் அயர்வு உயிர்த்தற்கு ... சார்வுழிப் பெயர் இயல் பெருக்கி எதிர்தலும் - என மாட்டுறுப்பாய்ப் பொருள்கோள் நிகழ்ந்துள்ளது.]

**முயற்சிஒன்று இன்றாய் நெருநல் முழுநலன்**
**இயற்றிய தெய்வதம் இறவாது இருப்பதுஒன்று**
**என்று உணர்ந்து உழப்புறின் இன்றும் ஆங்கு எதிர்தல்**
**மன்ற என்று உறுதலின், மடந்தையர்குழாம் ஒரீஇ**
**மடம்தப மாணிழை வணர்இணர் ஐம்பால்**
**இடந்தலைப்பாட்டின் எய்து இன்பம், நன்பனுவலைத்**
**தேர்இன்பத்தையும் சிறிதும் நில்லாதே**
**பேரின்பமதாய்ப் பெருகவும், மன்னோ**
**சிற்றின்பம்எனத் தீர்ந்தன ராகிச்**
**சொற்றமிழ் மாறனைத் துதிக்கும் மெய்த்தொண்டர்**
**பற்றுஅறுத்து உணர்த்திய பாசுரம்,**
**உற்றிடில் ஆசங்கையதாம் ஒன்றே! (2)**

என்பது இடந்தலைப்பாட்டின் கூட்டத்து இறுதிக்கண் தலைமகன் சொல்லியது. (இ-ள்) மனனே - இது தோன்றா எழுவாய்.

நம்மிடத்து முயற்சி சிறிதும் இல்லையாகவும் நெருநற்று நமக்குப் பெருத்த இன்பத்தை உண்டாக்கித் தந்த தெய்வமானது என்றும் இறவாதிருப்பது ஒன்றாம் என்று அறிந்து இனிநாம் சிறிது முயற்சியுறின் இன்றும் அத்திருவுரு முதல்நாள் கண்டஇடத்து எதிர்தல் சந்தயமில்லை என்று யாம் உறுதலோடும், இகுளையர்குழாத்தை விட்டுநீங்கி நம்மிடத்து வைத்த வேட்கையால் தன்னிடத்து ஒன்றிய மடமையும் தன்னைவிட்டு நீங்க, மாட்சிமைப்பட்ட அணிகளோடும் கடைகுழன்று பூங்கொத்துச் செருகிய குழலினையுடையாள் நம்வரவு பார்த்து நின்ற

இடத்துத் தலைப்படுதலால் எய்திய இன்பமானது. நன்பனுவல்களை ஆராய்ந்து நமது உள்நின்ற இன்பத்தைச் சிறிதும் நிலைபெறாதே பெயர்ப்பதாய், அவ்வின்பம் நின்ற இடத்தைத் தான்கொண்டு ஆரா இன்பமாகப் பெருகாநிற்ப, இதனைச் சிறிதாகிய இன்பம்என விட்டு நீங்கினராகிச் செஞ்சொல் தமிழாகிய திருவாய்மொழி பாடிய காரிமாறப்பிரானை வாழ்த்தும் உண்மைத்தொண்டர், இவ்வுலகத்து மகளிர்இடத்து எய்தும் இன்பத்தின்மேல் வைத்த ஆசையைவிட்டுப் பரமபதத்து இன்பமே தெவிட்டாத இன்பம் என முன்னம் உணர்த்திய முதுமொழி இப்பொழுது விசாரிக்கின் சந்தயமாவது ஒன்று எ-று.

நின்ற என்பது முதலாய சொல்லெச்சங்களையும் ஆங்காங்கு வருவித்துக்கொள்க. மன் - ஆக்கம் என்ற பொருளில் வந்தது. ஓ - அசை.

பகுதி - இடந்தலை. துறை - இதுவும் புணர்ச்சியின் மகிழ்தல்.

[சந்தயம் - ஐயம். இகுளையர் - தோழியர். பனுவல் - நூல்கள்.

அகப்பொருளின் பெருந்தலைப்புக்களைக் கிளவி எனவும் பகுதி எனவும் கூறும் முறைபற்றி இப்பாடல்களில் பெருந்தலைப்புக்கள் இவ்வுரையாசிரியரால் பகுதி என்று கூறப்படுகின்றன. புறப்பொருளில் பெருந்தலைப்பு திணை எனவே கூறப்படும். உள்தலைப்பினை அகம் புறம் இரண்டினும் இவ்வுரையாசிரியர் துறை என்றே குறிப்பிடுவர்.]

**முதல்வனின் பெறுநூல் முதல்தாய் எனலாய்ப்**
**புதல்வனின் பிறந்த வழிநூல் பொழிப்புரை**
**செலச்சொலும் குரவனின் தெளிந்தோர்தமக்கு அவ்**
**இலக்கண இலக்கியம் ஈந்த இன்பத்தினும்,**
**நயப்பட விரித்துரை நடை தாம் தமது**
**முயற்சியின் உணர்வுழி முன்னும் இன்பத்தினும்,**
**உணரா நுட்பமும் எச்சமும் ஒருபுடைப்**
**புணர் மாணாக்கரின் புலப்படும் அவர்பால்**
**எய்திய தெவிட்டா இன்பம்ஒன்று எனலாம்;**
**பொய்கையில் கராமொடு பொருது நைந்து அழைத்த**
**கடமலைக்கு உதவிய கண்ணன்**
**வடமலை மடவரல் வாய்ந்துஅருள் நலனே. (3)**

என்பது பாங்கற்கூட்டத்து இறுதிக்கண் தலைமகன் புணர்ச்சி மகிழ்தல்.

(இ-ள்) மனனே! முதல்வனால் அழைத்தருளப்பட்ட முந்துநூல் நற்றாயாக, அதற்கு ஒருபுதல்வனைப் போலப் புலவரால் அமைக்கப்பட்டு உண்டான வழிநூலின் பொழிப்புரை முதலே கேட்போர்உணர்வு உட்கொள்ளப் புகலும் குரவனால் தெளியப்பட்டோர்க்கு அவ்விலக்கணஇலக்கியங்கள் புரந்த இன்பத்தினும், நன்கு மதிப்பதாக அந்நூல்கட்கு ஆசிரியர் விரித்து உரைப்பதாய உரையினது ஒழுக்கத்தை அவ்வுரைகோளாளர் தமது அறிவுடன் முயற்சியால் உணர்ந்தஇடத்து உண்டான இன்பத்தினும், நூல்களிடத்து உணரப்படாத அரும்பத நுட்பமும் எச்சமும் தம்மொடு கற்ற ஒருபுடைமாணாக்கரால் ஆராய்ந்து அறிவில் புலப்பட்ட அவர்பால் எய்திய தெவிட்டா இன்பம்போலும் ஒன்று எனலாம், பொற்றாமரை ஓடையினிடத்துக் கராமொடு பொருது நொந்து அழைத்த கடாத்தொடு கூடிய மலைபோன்ற யானைக்கு அதன்உயிர் பிழைப்பான் சென்று உதவிய கண்ணனது வடக்கின்கண் வேங்கடவெற்பினிடத்து மடவரல் தோன்றிநின்று அருளிய பேரின்பம் எ-று.

மனனே என்பது தோன்றா எழுவாய். இதனுள், பொழிப்புரை குரவனின் தெளிந்தோர்க்கு அந்நூல்கள் ஈந்த இன்பத்தினும் என்பது முயற்சியின்றி இயற்கைப்புணர்ச்சியில் தெய்வத்தால் கூடிய இன்பத்தை உபமேயமாகக் குறிப்பால் உணர்த்துவது.

விரித்துரை தாம் தம் முயற்சியால் உணர்வுழி முன்னும் இன்பத்தினும் என்பது சிறிதுமுயற்சியான் இடந்தலைப்பாட்டின் எய்திய இன்பத்தை உபமேயமாகக் குறிப்பால் உணர்த்துவது. நுட்பமும் எச்சமும் ஒருபுடைமாணாக்கரின் உணர்ந்த-விடத்து எய்திய தெவிட்டா இன்பம் என்பது பாங்கனால் கூடிய கூட்டத்து இன்பத்தை உவமேயமாகக் குறிப்பால் உணர்த்துவது. இவை குறிப்புவமை.

[குறிப்புவமை என்பது உபமானம் வெளிப்படையாக இருக்க அதன்ஆற்றலால் உபமேயம் மறைந்திருப்பது உணரப்படுவதாகும்.]

**குலனும் தொன்மையும் குணனும் திருவும்**
**நலனும் பருவமும் உருவமும் நயந்தோர்**
**அறம்புரி கொள்கையோடு அளவளாய் வாழ்நாள்**
**திறம்பாக் கற்புடைச் சேயிழை வயிற்றில்**
**கருப்பம் வந்து அடியிடக் கண்ட கண்மலரால்**
**விருப்பமுற்ற அதனினும், மேம்படு நிலத்துஉறப்**
**பிறந்த நன்புதல்வர் பீடுஉடை முகமலர்**
**சிறந்தவர் காண்தொறும் செறிபேருவகை**
**ஆங்கு அவற்றினும், மிகும் அரும்பு மென்மழலை**
**ஓங்கிய செவிப்புலத்து உறவரும் உவகை,**
**உவகையின் கழிந்த பேருவகையது ஆகும்.**
**அவமதிப்பு இன்றி ஏழாண்டு அமைவு எய்தலும்**
**பொற்புடைக் குரவர்தம் பொன்அடி வணங்குபு**
**கற்பன யாவையும் கசடுஅறக் கற்றபின்**
**கல்வியும் கவியும் கவின்பெறச் செலச்சொலும்**
**எல்லையில் தாதை இன்புறலும், பொருவரும்**
**பூதலம் புகழப் பொலிந்துநின்று அருளிய**
**சீதரன் குருகாபுரேசன் சிலம்பின்**
**மதுமலர்ச் சோலையுள் மடவரல்**
**புதுவது புதுவதாய்ப் புரிந்தருள் நலனே. (4)**

என்பது பாங்கியிற் கூட்டத்து இறுதிக்கண் தலைமகன் கூறியது.

இதனுள் கருப்பம் வந்து அடியிடக் கண்ட கண்மலரால் விருப்பமுற்றது என்பது இயற்கைப்புணர்ச்சியில் கூடிய இன்பவிருப்பத்தைக் குறிப்பது. அதனினும் மேம்படும் புதல்வர் பீடுடை முகமலர் சிறந்தவர் காண்தொறும் செறி பேருவகை என்பது இடந்தலைப்பாட்டில் கூடிய இன்பமகிழ்ச்சியைக் குறிப்பது. ஆங்கு அவற்றினும் மிகுமழலை ஓங்கிய செவிப்புலத்து உறவரும் உவகை என்பது பாங்கற்கூட்டத்து இறுதிக்கண் கூடிய இன்பமகிழ்ச்சியைக் குறிக்கிறது. உவகை-யின் கழிந்த பேருவகையதாகும் கல்வியும் கவியும் கவின்பெறச் செலச்சொலும் எல்லையில் தாதை இன்புறலும் பொருவரும் என்பது பாங்கியிற் கூட்டத்துக் கூடிய புணர்ச்சியைக் குறிக்கிறது. பொருவரும் என்பதனை நான்கினும் கூட்டுக. குணம் - ஆடவர்க்குரிய அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி என்பனவும்

மகளிர்க்குரிய நாணப்படல், அச்சம், பயிர்ப்பு என்பனவும் ஆம். திரு - செல்வம். அளவளாய் - கலந்து. திறம்பா - அழியா. அவமதிப்பு - கற்கப்படு நூல்களைக் கற்க நினையாமல் இகழ்தல். இன்றி - இல்லாமை. செலச்சொலல் - கூறும் பொருள்கள் அறிதற்குஅரிய ஆயினும் கேட்போர்க்கு எளியவாய் மனத்துள்-கொளக் கூறல். கவின்பெற - அழகுபெற. ஒழிந்த அகலம் உரையிற் கொள்க. இது மாட்டுறுப்பும் எச்சமும் இன்றி வந்த முத்தகச் செய்யுள். என்னை?

'மாட்டும் எச்சமும் நாட்டல் இன்றி
உடன்நிலை மொழியினும் தொடர்நிலை பெறுமே' (தொ. பொ. 523)

என்றாராகலின்.

பகுதி - பகற்குறி. துறை - இதுவும் புணர்ச்சியின் மகிழ்தல்.

[கருப்பம் உற்றது பொருவரும், அதனினும், செறிபேருவகை பொருவரும், ஆங்கு அவற்றினும் மழலை செவிப்புலத்து உறவரும் உவகை பொருவரும், தாதை இன்புறலும் பொருவரும் எனப் பொருவரும் என்பது நான்கு இடத்தும் கூட்டிப் பொருள்செய்யப்-படும். பொருவரும் - ஒக்கும்.

அறிவு - எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு - குறள் 255

என்றாராகலின், எப்பொருளாயினும் அப்பொருட்கண்நின்று அம்மெய்ம்மையை அறிவது.

நிறை - காப்பன காத்துக் கடிவன கடிந்து ஒழுகும் ஒழுக்கம்.

ஓர்ப்பு - ஒரு பொருளை ஆராய்ந்து உணர்தல்.

கடைப்பிடி - கொண்ட பொருள் மறவாமை.

நாண் - பெண்டிர்க்கு இயல்பாகவே உள்ளதொரு தன்மை.

மடம் - கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை.

அச்சம் - பெண்மையில் தான் காணப்படாததொரு பொருள் கண்டஇடத்து அஞ்சுவது.

பயிர்ப்பு - பயிலாத பொருட்கண் அருவருத்து நிற்கும் நிலைமை - (இறை. கள. சூ. 2 உரை)

மனனே! குலன், பழமை, குணம், திரு, அழகு, பருவம், வடிவம் இவற்றால் ஒருவரை ஒருவர் விரும்பி மணந்த தலைவனும் தலைவியும் இல்லறத்தை விரும்பிய கோட்பாட்-டோடு கலந்து வாழ்ந்த காலத்தில் தவறாத கற்புடைய தலைவியின் வயிற்றில் கருப்பம் ஏற்பட அதனைக் கண்களால் கண்டு இன்புற்ற இன்பத்தையும், மேம்பட்ட நாளில் பிறந்த நல்ல புதல்வனுடைய முகத்தாமரையை அவனுடைய தந்தை காணும்தோறும் அவனுக்கு ஏற்படும் மகிழ்ச்சியாகிய இன்பத்தையும், மகனுடைய மெல்லிய மழலைச்-சொற்களைச் செவிமடுக்குந்தோறும் வரும் இன்பத்தையும், பெற்றோருக்கு மேம்பட்ட மகிழ்வு ஏற்படப் பிறர்குறை கூறாதவகையில் மகன் ஏழாண்டுகள் நிரம்பிய அளவில் மேம்பட்ட ஆசிரியனை வணங்கிக் கற்பனவற்றைக் கசடறக் கற்றுக் கல்வியறிவு நிரம்பிக் கவிபாடும் ஆற்றலும், பிறர் உணருமாறு அரிய செய்திகளை உணர்த்தும் சொல்லாற்றலும் பெற்றுள்ளமை கண்டு தந்தை பெறும் மகிழ்வையும், உலகம் புகழப் பொலிந்து திருத்தலங்களில் உகந்தருளியிருக்கும் திருமகள் கேள்வனாம் குருகாபுரி எம்பெருமான் மலையிலே மதுமலர்ச்சோலையில் இத்தலைவி புதிதுபுதிதாக இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம், தோழியிற்கூட்டத்தைச் சார்ந்த பகற்குறி என்ற நிலைகளில் தலைவனாகிய எனக்கு வழங்கும் இன்பம் நிகர்க்கும் எ-று.]

**தண்தளவும் கொன்றையும் பைந்தார் தழைப்ப ஆய்மயிலின்**
**கண்தழைப்ப வண்டு களிதழைப்ப - நுண்துளிசோர்**
**கார்வரவு இது என்று அயரேல்; கண்ணன் குறுங்குடியார்**
**தேர்வரவு இதுஎன்று அணங்கே! தேர். (5)**

இதுவும் மாட்டுஉறுப்பும் எச்சமும் இன்றி வந்து தனிநின்று முடிந்த முத்தகச்செய்யுள். தார் - பூ. ஆய்மயில் - ஆடாநின்ற மயில். வரவு என்பது தொழிற்பெயர் போல நின்று நிகழ்காலம் காட்டுவதொரு வாய்பாடு - வாராநின்றது என்ற பொருள்தரும். நுண்துளி - அசும்பு. கார் - மழை. அயரேல் - வருந்துவது ஒழி என்றவாறு.

பகுதி - வரைபொருட்பிரிதல். துறை - பருவம் காட்டி வற்புறுத்தல்.

["குளிர்ந்த முல்லையும் கொன்றையும் புதிய பூக்களை மிகுதியாக மலரவும், ஆடுகின்ற மயிலின் பீலிக்கண்கள் விரியவும், வண்டுகள் தேனுண்ட களிப்பினால் சிறக்கவும், நுண்ணிய மழைத்துளிகளைப் பெய்யும் கார்காலத்தின் தோற்றம் இது என்று வருந்தாதே. எம்பெருமானுடைய திருக்குறுங்குடியை ஆளும் நம்தலைவருடைய தேர் வருகின்றது என்பது இதனால் பெறப்படுகிறது என்று தெய்வப்பெண் போன்ற நீ தெளிவாயாக" என்று, தலைவன் கார்காலத்தில் மீள்வதாகக் கூறி வரைபொருட்குப் பிரிந்த பிறகு, தோழி தலைவியைப் பருவம் காட்டி அவன்வருகை அணித்து என்று வற்புறுத்தினாள்.]

**நிறைஅழி காமக்கடலை நீந்திச் சலாபத்**
**துறைமுக முத்தம் கொளவே சூழ்வார்க்கு - இறைவளையாய்!**
**ஆய்ந்த புணை என்ப, அருள்மாறன் வண்குருகூர்**
**வாய்ந்த பனைமா மடல். (6)**

(இ-ள்) அருள்மாறன் வண்குருகூர் இறைவளையாய்! ஆடவர் நிறையாகிய கரையை அழிக்கும் காமமாகிய புணரியைக் கடந்து மகளிரிடத்து இன்பத் துறையைத் தரும் முகத்தில் அதரபானத்தை உட்கொள வழி ஏது என்று விசாரிப்பவர்க்கு, வாய்ந்த பனைமாமடலே ஆராய்ந்தறிந்த புணை என்று கூறுவர் பெரியோர் எ-று.

இதுவும் ஆடவர்கள் என்னும் பெயர்ச்சொல்லும் எனக்கும் அதுவே குறிப்பு என்னும் குறிப்பும் எஞ்சிநின்று முற்றியதால், இருவகை எச்சமும் மாட்டுஉறுப்பும் கூடித் தனித்துநின்று முற்றின முத்தகம். சலாபத்துறைமுக முத்தம்கொள் என்பது சிலேடை இது பாங்கியிற் கூட்டத்துச் சேட்படுக்கப்பட்டானான தலைமகன் நாண்துறந்து உரைத்தல்.

பகுதி - மடல். துறை - உலகின்மேல் வைத்து உரைத்தல்.

முத்தகம் என்பது காரணப்பெயர்.

முத்தகம் முற்றும்.

[ஆடவர்கள் என்பது சொல்லெச்சம். எனக்கும் அதுவே குறிப்பு என்பது குறிப்பு எச்சம். சலாபத்துறைமுக முத்தம் கொள - முத்துச்சிப்பிகளை எடுக்கும் துறைமுகத்திலிருந்து முத்துக்களைக் குளித்து எடுக்க எனவும், இன்பத்துறையை அளிக்கும் முகத்தில் முத்தமிடுதலின் பயனான அதரபானத்தைக் கொள எனவும் இருபொருள்படும். தலைமகளுடைய அருமையைத் தலைமகன் அறியவேண்டும் என்ற எண்ணத்தால் தோழி தலைவன் தலைவியைக் கூடுதற்கு விரைவில் உடன்படாளாகத் தலைவன் நாண்துறந்து உலகத்தார் செய்யும் மடலேறுதலைத் தானும் மேற்கொள்ள முடிவுசெய்ததாகக் கூறியது. முத்தகம் - முக்தகம் - விடுபட்டது, எனவே தனியே எழுவாய் பயனிலை முதலியன கொண்டு பிற செய்யுள்களின் தொடர்பு இன்றிப் பொருள் முற்றி நிற்பது என்னும் பொருளுடையது. விடுபடுதல் என்ற காரணம் பற்றிய பெயர் இது.] [3]

குளகச் செய்யுளின் கூறுபாடு

68. குளகம் பலபாட்டு ஒருவினை பேர்கொண்டு
வளர்முலையாய்! மூன்றுஇடத்தும் மன்னும் - அளவை
உகளகம் சந்தானிகம் காலாபத்தோடு ஐந்தின்
மிகல்வகைத்தாம் நூல் சொல் விதி. [4]

(எ-ன்) முறையே குளகச் செய்யுளின் கூறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) வளராநின்ற முலையினை உடையாய்! குளகச்செய்யுள் என்பன பலபாட்டு ஒருவினையேயாதல் ஒருபெயரேயாதல் கொண்டு, எண்ணினது அளவு உகளகம், சந்தானிகம், கலாபம் என்னும் மூன்று திறத்தினோடும் ஐந்தாயும் அவ்வைந்தினும் மிகும் கூறுபாடு உடைத்தாயும், செய்யுளிடத்து முதல் இடை கடை என்னும் மூன்றுஇடத்தும் நூல் சொன்ன விதியாக நிலைபெறும். எ-று.

வினை என்ற விதப்பால் வினையின் வேறல்லவாம் வினைக்குறிப்பும், பெயர் என்ற விதப்பால் பெயர்ப்பெயரே அன்றி வினைப்பெயரும் கொள்ளும் என உணர்க.

வினை முதலிய நான்கோடும் தானம் மூன்றோடும் உற்ற உதாரணம் ஈண்டு உரைப்பின் பெருகும். அவற்றுள் சில உதாரணங்கள் காட்டுதும்.

[இருபாட்டு ஒரேமுடிக்குஞ்சொல் கொள்வதனை உகளகம் எனவும், மூன்று பாட்டு ஒரே முடிக்குஞ்சொல் கொள்வதனைச் சந்தானிகம் எனவும், நான்கு பாட்டு ஒரே முடிக்கும்சொல் கொள்வதனைக் கலாபம் எனவும் 5 முதல் 15 பாடல் வரை ஒரே முடிக்குஞ்சொல் கொள்வதனைக் குளகம் என்றும் வடநூலார் கூறுப. கலாபம் செய்யுள்நோக்கிக் காலாபம் என நீண்டது. வினை, வினைக்குறிப்பு, பெயர்ப்பெயர், வினைப்பெயர் என்ற நான்கனையும் முடிக்கும் சொற்களாகக் கொண்டு முதல், இடை, கடை என்று மூன்று இடங்களைச் சுட்டி, உகளகம், சந்தானிகம், கலாபம் என்பன வருதற்கு 36 எடுத்துக்காட்டுக்கள் வழங்கப்படல் வேண்டும். ஒருசில எடுத்துக்காட்டுக்களே தரப்பட்டுள்ளன.]

நினை மறுஒன்று இல்லா ஞானாதிகனைப்
புனைவகுளத் தாமப் புயனை - வினையினையே
வென்றானைக் காரி தரும் வித்தகனைப் பாவலன்பின்
சென்றானே நாதன்எனத் தேர்ந்து. (7)

வேதம்அதனை விளங்கு தமிழ்ப்பாப் படுத்திப்
போதம் தழைந்து புகழ் புண்ணியனை - நாதமுனி
போற்றும் புனிதனை அந்தாமம்புக மனனே!
தேற்றம் பயின்றே தினம். (8)

இவை இரண்டும் வினைகொண்டு முற்றிய உகளகாதி குளகம். உகளககுளகம் என்பது இரண்டுபாட்டு வினை முதலியவற்றுள் ஒன்றுகொண்டு முற்றுவது.

[மனமே! களங்கமற்ற ஞானமிக்கவனாய், மகிழம்பூமாலையனாய், வினைகளை வென்றவனாய், காரியார்மகனாய், திருமழிசைப்பிரான் பின்னே சென்ற திருமாலே பரம்பொருள் என்று தெளிந்து வேதத்தைத் தமிழில் பாடலாகத் தந்து பேரறிவு மிக்கு எம்பெருமானைப் புகழும் புண்ணியனாய், நாதமுனியால் போற்றப்படும் தூயவனை, வைகுந்தத்தை அடைய உறுதியாக நாடோறும் நினைவாயாக. இவ்விருபாடல்களும் முதற்பாடலின் முதற்சீரில் உள்ள நினை என்ற தெரிநிலைஏவல்வினையைக் கொண்டு முடிந்தவாறு.]

**குன்றம்அதனைக் குடைகொண்ட நீலமணிக்**
**குன்றம் அதனைக் குணக்கடலைக் - குன்றம்அதே**
**மத்தாகக் கொண்டு அமிர்தம் வானோர்க்கு அளித்த தரு-**
**மத்தானைத் தேவாய் மதித்து** (9)

**வாழ்த்து; பரசமய வாதியர்தம் வாய்மதத்தைச்**
**சாய்த்த தமிழ்மறைப்பாத் தந்தானை, - சீர்த்திபுனை**
**பாவேசர் போற்றும் பராங்குசனை, முத்திபெற**
**நாவே மனத்தால் நயந்து.** (10)

இவைஇரண்டும் வினைகொண்டு முற்றிய உகளகமத்திய குளகம். வாழ்த்து என்பது ஏவல்வினை.

இவை நான்கும் திணை - பாடாண். துறை - ஓம்படை.

[கோவர்த்தனமலையைக் குடையாகக் கொண்ட நீலமணிக்குன்றம் போல்பவனாய், குணக்கடலாய், மந்தரமலையை மத்தாக நாட்டித் தேவர்க்கு அமுதம் ஈந்த அறச்-செயலைஉடைய எம்பெருமானைப் பரம்பொருளாகப் பெருமையாகக் கருதி, வேற்றுச்-சமயம்பற்றி வாதிடுவோருடைய வாய்ச்செருக்கை அடக்கும் தமிழ்மறையாகிய திருவாய்மொழியைத் தந்தவனாய், புகழ்மிக்க பாடல் பாடுதலில் வல்ல புலவர்கள் போற்றும் பராங்குசனாகிய மாறனை, முத்தி பெறுவதற்காக நாவினால் போற்றியும் மனத்தால் விரும்பியும் வாழ்த்துவாயாக. இரண்டாம் பாட்டின் தொடக்கத்தில் உள்ள வாழ்த்து என்ற சொல் ஒன்றாக இணைந்த இருபாடல்களின் நடுவில் இருப்பதனால், முடிக்கும் சொல்லாகிய அத்தெரிநிலைஏவல்வினையை உட்கொண்டு இவைஇரண்டும் வினைகொண்டு முற்றின உகளகமத்திய குளகம் எனப்பட்டன.]

**கால்இருக்கக் கைஇருக்கக் கண்இருக்கச் சென்னிஅதன்**
**மேல்இருக்க நாநடுவே வீற்றிருக்க - நால்இருக்கும்**
**பொய்யாது இருக்கப் புகழ்மாறனை வலம்செய்து**
**உய்யாதும் அஞ்சலியாதும்** (11)

**பூவில் சிறந்தஅவன் பொன்னடியைக் கண்டு**
**தூவி வணங்கித் துதியாத - பாவிகளோடு**
**ஒன்றாகிய உளமே! போனவை போட்டு ஊதியமாம்**
**இன்றாகிலும் உற்று இறைஞ்சு.** (12)

[கால்கள், கைகள், கண்கள், தலை இவைகள் இருக்கவும், முகத்தில் நடுவே நா சிறப்பாக இருக்கவும், நான்குவேதங்களும் கெடாமல் நிலைபெற்றிருக்கவும், புகழுக்கு இருப்-பிடமான மாறனை வலம்வந்து கடைத்தேறாமலும், வழிபடாமலும், பூவைவிட மேம்-பட்ட அம்மாறனுடைய பொலிவுடைய திருவடிகளைக் கண்டு பூக்களை இட்டு அவனை வணங்கித் துதிக்காத பாவிகளின் இனத்தில் சேர்ந்துள்ள மனமே! சென்றவை போக, இன்று முதலாவது நமக்குப் பேறு தருவது இது என்று அவற்றைப் பொருந்தி வழிபடுவாயாக. இறைஞ்சு என்ற இறுதிச்சொல்லே இவ்விருபாடல்களுக்கும் முடிக்-குஞ்சொல் ஆகும்.]

இவைஇரண்டும் வினைகொண்டு முற்றிய உகளகஅந்திய குளகம். இதனுள் மாறனை என்பது நம்மாழ்வாரைக் குறிப்பதனோடு மால்தனை என்று பிரித்தால் திருமாலையும் குறிக்கும். இவை ஆறிற்கும் ஒழிந்த அகலம் உரையிற்கொள்க. திணையும் துறையும் இதுவும் அது.

[பாடாண் - பாடப்பட்ட ஆண்மகனுடைய ஒழுகலாற்றைக் கூறும் புறப்பொருட்பகுதி.
ஓம்படை - இன்னது செய்தல் இயல்புஎன இறைவன்
முன்நின்று அறிவன் மொழிதொடர்ந்தன்று. (பு. வெ. மா. 27)]

**அடித்த கைத்தலம் பிடித்து வன்கனகன் ஆருயிரைக்**
**குடித்த கோளரி ஆய கொற்றவனும், மாண்குறளாய்**
**நடித்து மூஉலகு அன்று அளந்தவனும், மைந்நாகம்**
**துடித்து மூலம் என்று அழைத்ததற்கு உதவிய சுகத்தோன் (13)**

**அம்பிகாபதி இரப்பு ஒழித்தவனும், ஆதரவால்**
**உம்பர் ஆர்அமுது அருந்த வைத்தவனும், உம்பருளார்**
**தம்பமாம் தசரதன் திருமகன் எனத் தழைத்தே**
**கம்ப வாரிதி அடைத்தருள் அயோத்தி காவலனும் (14)**

இவைஇரண்டும் வினைக்குறிப்புக்கொண்டு முற்றிய உகளகமத்திய குளகம்.
திணை - பாடாண். துறை - கடவுள்வாழ்த்து.

[தூணைத் தட்டிய கைகளைப் பிடித்து வலிய இரணியனுடைய அரிய உயிரைக் குடித்த நரசிம்மமாய வெற்றியனும், குட்டையான பிரமசாரியாய் நடித்து மூன்றுஉலகங்களையும் முன்னொருகாலத்து அளந்தவனும், பார்வதியின் தலைவனான சிவபெருமானுடைய பிச்சைஎடுக்கும் தொழிலை நீக்கியவனும், விருப்பத்தோடு தேவர்களை அமுதம்-உண்ணுமாறு செய்தவனும், தேவர்களுக்குப் பற்றுக்கோடாய்ச் சம்பராசுரனை அழித்து அவர்களைக் காத்த தசரதன் திருமகனாக வளர்ந்து நீர் அலைந்துகொண்டே இருக்கும் கடலை அடைத்தருளிய அயோத்திமன்னனும் கரிய யானை முதலையால் வருந்தி மூலமே என்று கூப்பிட்டதற்கு உதவிய இன்பம் தருபவனாவான்.
சுகத்தோன் என்ற வினைக்குறிப்புமுற்றுச்சொல்லாகிய முடிக்குஞ்சொல் முதற்பாடல் இறுதிச்சீராய், இவ்விருபாடல்களுக்கும் இடையே வந்தமை காண்க.]

**அரியும் அயனும் அரனும்என மூன்றாய்த்**
**தெரியுமவருள் தெளிதற்கு - உரிய பொருள்**
**அந்தாமத்தான் என்று உணர்த்தி அடியவர்தம்**
**சிந்தாகுலம் தவிர்த்த தே, (15)**

**முந்த மதுரகவிக்கு அளித்த மூதுரைசால்**
**அந்த மலர்அடியை ஆதிரைநாள் - வந்த**
**மறையவர்கோன் சென்னியினும் வைத்து எமை ஆள்செந்தேன்**
**நிறைவகுளப் பூங்கண்ணியன். (16)**

இவைஇரண்டும் வினைக்குறிப்புக்கொண்டு முற்றிய உகளாந்திய குளகம்; கண்ணியைப் புனைந்தவன் என்னும் வினையைக் குறிப்பினால் கொள்ளக் கிடந்தமையான் என்று உணர்க. என்னை?

'காலம் தாமே மூன்றுஎன மொழிப' (தொ. சொ. 201)

'இறப்பும் நிகழ்வும் எதிர்வும் என்றா
அம்முக் காலமும் குறிப்பொடும் கொள்ளும்
மெய்ந்நிலை உடைய தோன்றலாறே' (தொ. சொ. 202)

என்றாராகலின், வினைக்குறிப்பிற்கும் காலம் உண்டு எனக்கொள்க.
திணை - இதுவுமது. துறை - பழிச்சினர்ப் பரவல்.

[அரி அயன் அரன் என்ற மும்மூர்த்திகளுள் பரம்பொருளாகத் தெளிதற்குரியவன் வைகுந்தத்து இருக்கும் திருமாலே என்று உணர்த்தி, அடியார்களுடைய மனக்கலக்-கத்தைப் போக்கிய தெய்வமாய், முற்பட மதுரகவியாழ்வாருக்கு அருள்செய்த புகழமைந்த அப்பெருமான் திருவடிகளைத் திருவாதிரை நாளில் அவதரித்த அந்தணர் தலைவனாம் இராமானுசனுடைய தலையிலும் வைத்துக் கீழான எம்மையும் ஆட்-கொள்ளும் தேன்நிறைந்த மகிழம்பூமாலையைப் புனைந்தவனாவான். கண்ணியன் -

முடிமாலையை உடையவன் என்ற குறிப்புவினைமுற்று இரண்டாம்பாடல் இறுதியில் முடிக்கும்சொல்லாக வந்தவாறு.
பழிச்சினர்ப் பணிதல் - வயங்கியபுகழ் வானவனைப்
பயன்கருதிப் பழிச்சினர் பணிந்தன்று. (பு. வெ. மா. பா. 44)]

**முழுக்கலை அற்று அரைக்கலையும் இழந்தாய், தோகை**
**முருந்து உறுபீலியின் முழுதும் முன்றில் சீக்கும்**
**ஒழுக்குற நின்றனை, உடையும் அஃதேயானால்**
**உன்விரதம் எது? பெயர்ஏது? உரைத்தி என்னா,**
**வழுக்கறவே இயங்கு உயிர் கொல்லாமை, ஆசீ-**
**வகனாக, இறைவன் யார்? அருகன், இல்யாது?**
**இழுக்கு இயல்பு இன்றாம் தனி ஊர்யாது? செம்பொன்**
**எயில்என, அவ்வெயில் எவண்? என்று இசைத்து, மீட்டும் (17)**

**எப்படிவம் தோன்றியது அப்படிவத்துஎல்லாம்**
**இன்உயிர் உண்மையை உணராய், இயங்கற்பால**
**அப்படிவத்து உயிர்உளதாய் உணர்ந்தாய், ஈசற்கு**
**அருத்து முறையினில் அருத்தி அறத்திற்கு ஏற்ற**
**துப்புரவு உண்பது கடன்என்று உள்ளாய், ஆகத்**
**தொழில் இகழ்ந்தாய், சுடர்சொருபாம் வேதமார்க்கம்**
**தப்பினை, எம்மறைகொடு சாதிப்பது என்றே**
**சமண்மதத்தைப் பழித்தனராய் அழித்துச் சாய்த்தார். (18)**

இவைஇரண்டும் வினைப்பெயர்கொண்டு முற்றிய உகளகஅந்திய குளகம். திணை - பாடாண். துறை - 'அமரர்கண் முடியும் அறுவகையானும்' (தொ. பொ. 81.) என்பதனால் முனிவர்வாழ்த்து. பார்ப்பனவாழ்த்துமாம். (குருகாமான்மியம்)

[அமரர்கண் முடியும் அறுவகையாவன - முனிவரும் பார்ப்பாரும் ஆன்நிரையும் மழையும் முடியுடைவேந்தனும் உலகுமாம். இப்பாடல்கள் முனிவர்களையும் அந்-தணரையும் பற்றியவை.
"உண்மையான கலைஞானம் பெறாமல், இடுப்பில் ஆடையையும் அணியாமல் மயில்பீலியால் தான் நடக்கும் இடங்களைப் பெருக்கி உயிரினங்கள் தன் கால்-அடிகளின்கீழ் அகப்பட்டுத் துன்புறாதபடி செய்யும் செயலை உடையையாய், மயில்பீலியையே அற்றம் மறைக்கக்கொண்டு உலவும் உன் விரதம் எது? உன் பெயர் என்ன? என்பனவற்றை உரைப்பாயாக" என்ன, "உயிர்களுக்கு ஊறு செய்யாமை எங்கள் விரதம்; ஆசீவகன் என்பது எம்பெயர்" என்ன, "உங்கள் இறைவன் யாவன்" என்ன, "அருகன்" என்று கூற, "அவனுடைய இருப்பிடமும் அவ்விருப்பிடம் உள்ள இடத்தின் பெயரும் யாவை?" என்னச் "செம்பொன்மதில் எம்பெருமானுடைய இருப்பிடம்" என்று விடைகூற, "அந்தச் செம்பொன்மதில் எங்கு உள்ளது? தோன்றிய பொருள்களில்எல்லாம் ஆன்மா இருப்பதனை உணராமல் நடமாடுகின்ற பொருள்-களிலேயே உயிர் உளது என்று உணர்கிறாயே. இறைவனுக்கு நிவேதிக்கும் முறைப்படி நிவேதித்து அறநெறிக்குப் புறம்பு அல்லாத நுகர்பொருள்களை நுகரலாம் என்று கருதாமல், செயற்படுவதனை விடுத்துச் சோம்பேறியாய் இருப்பதனோடு, அறிவு-மயமான வேதநெறியைப் பிறழ்ந்து வாழும் நீ எந்த வேதத்தைக் கொண்டு உன்தத்துவங்களை நிறுவுதல் கூடும்?" என்று சமணமதத்தைக் குறைகூறி அதனை நீக்கிக் குலைத்தவர்கள் எ-று.
சாய்த்தார் என்னும் வினைப்பெயர் இவ்விருபாடல்களுக்கும் முடிக்கும் சொல்லாய் இரண்டாம் பாடலின் முடிவில் அமைந்துள்ளதால் இது வினைப்பெயர்கொண்டு முடிந்த உகளகஅந்திய குளகம் ஆயிற்று.]

முன்பு உலகம்ஏழினையும் தாயதுவும், மூதுஉணர்வார்
இன்புறக் கங்காநதியை ஈன்றதுவும், - நன்பரதன்
கண்டிருப்ப வைகியதும், கான்போயதும், அமிர்தம்
உண்டிருப்பார் உட்கொண்டதும், (19)

வெந்த கரியதனை மீட்டு மகவுஆக்கியதும்,
அந்தச் சிலையினைப் பெண்ஆக்கியதும், - செந்தமிழ்தேர்
நாவலன்பின் போந்ததுவும், நன்னீர்த் திருவரங்கங்
காவலன் மாவலவன் கால். (20)

இவைஇரண்டும் பெயர்ப்பெயர்கொண்டு முற்றிய உகளகஅந்திய குளகம். என்னை?

'பெயர்நிலைக் கிளவி காலம் தோன்றா
தொழில்நிலை ஒட்டும் ஒன்றலங் கடையே' (தொ. சொ. 71. ந.)

என்றாராகலின், இடுகுறியாய்க் 'கால்' எனக் காலமும் தொழிலும் தோன்றாது நின்றவாறு காண்க.

திணை - பாடாண். துறை - கடவுள்வணக்கம். ஒழிந்த ஆதியினும் இடையினும் உகளககுளகம் வந்தவழிக் கண்டுகொள்க.

உகளககுளகம் முற்றும்.

[ஒரு காலத்தில் ஏழுலகையும் அளந்ததுவும், சான்றோர் இன்புறக் கங்கை நதியை அளித்ததுவும், சிறந்த பரதன் கண்டு மகிழ அமைந்ததும், காட்டிற்குச் சென்றதும், அமுதம் உண்டதேவர்களால் உள்ளத்துக் கொள்ளப்பட்டதும், வெந்த கரி போன்று இருந்த பரீட்சித்தின் உடலை மீண்டும் உயிருடைய குழந்தையாகச் செய்ததும், கல்லைப் பெண்ணாக்கியதும், தமிழ் நாவலவனான திருமழிசைப்பிரான் பின்னர்ப் போயினதும் நல்ல நீர்வளம் உடைய திருவரங்கத் தலைவனாகிய திருமகள்கேள்வனுடைய திருவடியாம். கால் - பன்மை சுட்டிய சினைநிலைக்கிளவி.

தாயனவும், ஈன்றனவும், வைகியவும், உட்கொண்டவும், ஆக்கியவும், போந்தனவும் - எனப் பன்மைவாய்பாட்டால் அமைத்திருப்பின் சிறக்கும். இப்பாடலில் கால் என்ற பெயர்ப்பெயர் முடிக்கும்சொல்லாய் இறுதியில் வந்தவாறு.]

தொடுத்து; முத்தலைச்சூல வன்படையினைத் துண்டம்
படுத்து, வெஞ்சினத் தாடகைதன் உயிர் நமன்பகுவாய்
மடுத்து, வேள்விகாத்து, எதிர்ந்தபோர் நிருதர்க்கு மரணம்
கொடுத்து, அடுந்தொழில் கரன்முதலவர்க்கும் விண்கொடுத்தே, (21)

கிளைத்து நாகவன்பிடர்மிசை, கிளர் மராமரம்ஏழ்
துளைத்து, வாலிமார்பமும் துளைத்து, அடற்கு அருஞ்சுடுதீ
விளைத்து வேலையுள், உருகெழு கோதண்டம் மேனாள்
வளைத்து, வாய்மை ஓர்வடிவெடுத் தனையது ஓர்வாளி (22)

கும்பனைப் பொருநிகும்பனைக் கும்பகன்னனை நீடு
அம்புராசியில் குரைத்து எழு பலப்படையதனைச்
செம்பொன் ஆலயம் விருப்புறத் தெசக்கிரீவனைக் கொன்று,
எம்பிரான் சனகியை மணந்து ஆடல் எய்தியதும் (23)

இவை மூன்றும் வினைகொண்டு முற்றிய சந்தானிகஆதி குளகம்.
திணை - வாகை. துறை - வில்வென்றி.

[தாடகை விடுத்த முத்தலைச் சூலத்தைத் துண்டமாக்கியும், தாடகைஉயிரை எமன் வாயில் சேர்த்தும், வேள்வியைக் காத்து எதிர்த்துப் போரிட்ட அரக்கர்க்கு இறப்பு அளித்தும், போரிட்ட கரன் முதலியவருக்குத் தேவருலகை அளித்தும், மலையில் வளர்ந்த ஏழ்மராமரங்களைத் துளைத்தும், வாலி மார்பையும் துளைத்தும், அஞ்சத்தக்க கோதண்டம் என்ற வில்லினை வளைத்துக் கடலுள் தீவிளைத்தும், வாய்மையே வடிவெடுத்தாற்போன்ற அம்பினால் கும்பன், நிகும்பன், கும்பகருணன், பேரொலி செய்த மூலபலப்படையினர், தன் பொன்மயமான அரண்மனையை விரும்பிய அவ்விராவணன் இவர்களைக் கொன்று எம்பெருமான் பிராட்டியை மீட்டு வெற்றிகொண்டதும் அம்பு தொடுத்ததனால் ஆம்.
இதனுள் தொடுத்து(ஆம்) என்ற முதற்சொல் மூன்றுபாடல்களுக்கும் முடிக்குஞ்-சொல்லாய் அமைந்தமை காண்க.]

**அருமறையாய் நள்இருளில் கொடுபோகி வசுதேவர் ஆயர்பாடித்**
**திருநகரத்திடைக் கரப்ப வளர்ந்தவனும், வெண்ணெயினைத் திருடி மேனாள்**
**பொருவரு கைத்தாமரையால் செங்கனிவாய் வைத்தவனும், போதன்ஏறன்**
**இருவரும் காண்பதற்கு அரிதாம் அந்தாமம் ததிபாண்டற்கு எளிதின்அன்பால்**
**(24)**

**கொடுத்தவனும், ஆநிரை காத்தருள்காலைக் கல்மாரி குடைகுன்றாகத்**
**தடுத்தவனும், நான்முகத்தோன் கொடுபோய பல்லுருவின் தன்மைஆகம்**
**எடுத்தவனும், தேவகி ஈன்றருள் புதல்வன்; துரோவதியாம் இன்பக்கொம்பு அன்று**
**உடுத்த துகில் இருஞ்சபையுள் தொலையாமை அளித்தவனும், உண்மை கூறின் (25)**

**காண்தகு பொன்முடிஉதைத்துக் கஞ்சனைக் கொன்று உறவோர்முன் கடுஞ்-**
**சொல்கூறப்**
**பூண்டதொழில் சிசுபாலன் பொன்முடி சக்கரத்து அறுத்துப் புவனம் போற்றப்**
**பாண்டவர்க்குத் தூதாகி நூற்றுவர்முன் உருள்பெருந்தேர்ப் பாகனாகி**
**ஆண்தகைமைத் தருமன் முதலவர்க்கு அவனிஅனைத்தும் அளித்தவனும்,**
**மன்னோ. (26)**

இவை மூன்றும் பெயர்ப்பெயர் கொண்டு முற்றின சந்தானிகமத்திய குளகம். துறை - கடவுள்வாழ்த்து.

[இரகசியமாய் நடுஇரவில் வசுதேவர் எடுத்துச்சென்று திருவாய்ப்பாடியிலே மறைத்து-வைக்க வளர்ந்தவனும், வெண்ணெயைக் கைகளால் திருடி உண்டவனும், பிரமனும் உருத்திரனும் காணமுடியாத வீடுபேற்றைத் தயிர்ப்பானை வைத்திருந்த ததிபாண்-டனுக்கு முயற்சியின்றி அன்பால் வழங்கியவனும், பசுக்கூட்டங்களை மேய்த்துக்-கொண்டிருந்த பிள்ளைப் பிராயத்தில் கோவர்த்தனமலையைக் குடையாகக் கவித்துக் கல்மழையைத் தடுத்தவனும், பிரமன் கவர்ந்து சென்ற ஆனிரைகள் ஆய்ச்சிறுவர்கள் வடிவம் அத்தனையும் தானே எடுத்துக்கொண்டு செயற்பட்டவனும், திரௌபதியாகிய இனியவள் உடுத்த துகில் அரசர்கள் கூடிய சபையிலே எவ்வளவு களைந்தாலும் நீங்காதபடி வளருமாறு அவளுக்கு அருள்செய்தவனும், கம்சனுடைய கிரீடத்தை உதைத்துத்தள்ளி அவனைக் கொன்றவனும், சான்றோர்முன் கொடிய சொற்களைக் கூறிய சிசுபாலனுடைய முடிசூடிய தலையைத் தன்சக்கரத்தால் அறுத்து, உலகம் புகழப் பாண்டவருக்குத் தூதனாகித் துரியோதனாதியர்முன் தேர்ப்பாகனாகி, ஆண்களுக்குரிய பண்புகள் நிறைந்த தருமன் முதலியவர்களுக்கு அருள்செய்து உலகம் முழுதையும் ஆளுமாறு வழங்கியவனும், உண்மையாகக் கூறின், தேவகி பெற்றருளிய புதல்வனாம்

கண்ணனாவான் எ-று. இரண்டாம்பாடலில் உள்ள 'தேவகி ஈன்றருள் புதல்வன்' என்ற பெயர் இம்மூன்றுபாடல்களுக்கும் முடிக்குஞ்சொல் ஆகியவாறு காண்க.]

**தெள்ளு நான்மறைப் பனுவலும் அயனை ஆதியரும்**
**வெள்ளி வெண்மதிக் கடவுளும் கதிரும் மீன்கணமும்**
**தள்ளரும் பொறை மன்உயிர்க்கணங்களும் தழங்கு**
**கொள்ளை வெண்திரைப் புணரி மொண்டுஎழ நிலைகுலையா (27)**

**வாக்கும் பாதமும் பாணியும் கரணமும் மற்று**
**நீக்கம்உற்ற மன்உயிர்கள்தாம் மாயையுள் நெடுங்கல்**
**தாக்கும் ஆடகத்துகள் மெழுகு அடைந்தபோல் தயங்கக்**
**காக்கும் வாய்மை ஈங்குஎனத் திருவருள் கலந்தே (28)**

**காலம் யாவையும் கழிந்தபின் கழிந்த பேருருவின்**
**ஞாலம் முற்ற உண்டு, உறுபுனல் நடுவண் நயந்துஓர்**
**ஆல நுண்தளிர் எனும் அனந்தனில் உலகுஅனைத்தும்**
**பாலனாகி உள்அடக்குபு துயின்றனன் பரிப்பான். (29)**

இவை மூன்றும் வினைப்பெயர்கொண்டு முற்றின சந்தானிகஅந்திய குளகம். திணை - பாடாண். துறை - கண்படைநிலை. (குருகாமான்மியம்)

[கண்படைநிலை - உறங்குதல்.

நெடுந்தேர்த்தானை நீறுபட நடக்கும்
கடுந்தேர் மன்னன் கண்படை மலிந்தன்று. (பு. வெ. மா. பா. 8)

எல்லாவற்றையும் தாங்கிக்கொண்டிருப்பவன் என்று பொருள்தரும் 'பரிப்பான்' என்ற சொல் மூன்றாம் பாடலின் இறுதிச்சீராக உள்ளது. இதுவே இம்மூன்று பாடற்செய்திகளுக்கும் முடிக்கும்சொல்லாக அமைதலின் இம்மூன்று பாடல்களும் சந்தானிக-அந்திய குளகமாயின.

ஊழிஇறுதியில் கடல் பொங்கவே வேதபுருடனும் பிரமன் முதலியவர்களும் சந்திரனும் சூரியனும் விண்மீன்களும் உலகுக்குப் பாரமான உயிர்த்தொகுதிகளும் ஆகியவையும் வாக்கு பாதங்கள் கைகள் எருவாய் கருவாய் என்ற செயற்பொறிகள் நிலைகுலைந்ததனால் நீக்கமுற்ற நிலைபெற்ற உயிர்களும் மாயையிலே மெழுகில் ஒட்டிய பொன்துகள்போல விளங்க, அவற்றைக் காக்கும் பொறுப்பு என்னுடையது என்று திருவுளத்துக்கொண்டு, தங்களுக்கு என்று வரையறுக்கப்பட்ட காலம் முடிந்தஅளவில் அழிந்துபட்ட பெரிய வடிவத்தை உடைய உலகங்கள் முழுவதையும் தான் உண்டு மிக்க கடலின் நடுவிலே விரும்பி ஓர்ஆலந்தளிராக உருவெடுத்த திருஅனந்தாழ்வான் மீது, உலகங்களை எல்லாம் தன்னுள் அடக்கிய இளங்குழந்தையாய் உறங்கினவன் இவ்வுலகங்களை எல்லாம் தாங்கும் திருமாலாவான்.]

**பரத்துவம் முதலாப் பஞ்ச உற்பனனாம் பரமன் எம்இறைவனாம் எனல்போல்**
**வரத்தொடும் புகழும் பஞ்சமாத் தொழிலும் வழங்கலும் இவன்திறத்து எனல்-போல்**
**திரத்தவாம் பஞ்சபூதமும் செனித்த செய்கையும் இவன்திறத்து எனல்போல்**
**கரத்தினில் பஞ்சாயுதங்களே தரித்த கருணையங் கடவுளாம் எனல்போல், (30)**

**ஞானமும் அழகும் வீரமும் திருவும் நவையில் ஆனந்தமும் எமவே**
**ஆன, ஏனையவாம் உலகம் என்பவற்றிற்கு அவை அமைதியஅல எனல்போல்,**
**வான்உற நிவந்த எழுநிலத்து அமைந்த மாடசூளிகையின் யாப்புறுத்துஐம்**
**பால்நிறம் தழீஇய துகிற்கொடி நுடங்கி பாங்கரின் வயங்கும் எம்மறுகும் (31)**

**செம்மையின் யாணர்த் திவ்விய மணியால் செழும்பொனால் திசைதிசை எறிக்கும்**
**பொம்மலும் நிவப்பும் வியலும் நீளிடையும் பொருந்தலின் ஒருமறுகிடைப் புக்கு**
**இம்மறுகு எவன்? இங்கு இவற்றுள் இம்மாடம் எம்மணிமாடம்? என்றுயாரும்**
**தம்வயின் செறிந்தோர் இமைப்பறா நாட்டமும் தாங்கியும் அறிவருந்தகைய. (32)**

இவை மூன்றும் பண்பு இடனாகத் தோன்றின உடைமை வினைக்குறிப்புக் கொண்டு முற்றின சந்தானிகஅந்திய குளகம். சந்தானிககுளகம் என்பது மூன்று-பாட்டு வினை முதலியவற்றுள் ஒன்றுகொண்டு முற்றுவது.
திணை - பாடாண்; துறை - பரமபத வருணனை. (இவையும் குருகாமான்மியம்.)
ஒழிந்தனவும் வந்தவழிக் கண்டுகொள்க.

சந்தானிககுளகம் முற்றும்.

[எம்பெருமான் பரம்; வியூகம்; விபவம்; அந்தர்யாமி; அர்ச்சை என்ற ஐந்து நிலையினன் என்று கூறுவது போலவும், பெருமையாகப் புகழப்படுகின்ற படைத்தல்; காத்தல்; அழித்தல்; மறைத்தல்; அருளல் என்ற ஐம்பெருந்தொழிலும் இவனால் நிகழ்த்தப்படுகின்றன என்பது போலவும், கூறுபாடுடைய நிலம் நீர் தீ காற்று ஆகாயம் என்ற ஐம்பூதங்களும் இவன்ஆணைக்கு உட்பட்டவை என்று கூறுவது போலவும், தன்கைகளில் சங்கு; சக்கரம்; கதை; வில்; வாள் என்ற ஐந்து படைக்கலன்களையும் ஏந்திய கருணைக்கடவுள் திருமாலே என்று கூறுவது போலவும்,
மாசற்ற ஞானம்; அழகு; வீரம்; செல்வம்; ஆனந்தம் என்ற ஐந்தும் மற்ற உலகில் உள்ள ஆன்மாக்களுக்கு இல்லாதவகையில் எம் உடைமையாகவே உள்ளன என்று கூறுவது போலவும், வானளாவிய எழுநிலைமாடங்களின் உச்சியில் கட்டப்பட்ட ஐந்து-நிறங்களைஉடைய துணிக்கொடிகள் அசைந்து ஒளிவீசும் பக்கங்களை உடைய எல்லாத்தெருக்களும்,
புதுமைப்பொலிவுடைய சிவந்த தெய்வத்தன்மைஉடைய மணிகளாலும், சிவந்த பொன்னாலும் எல்லாத்திசைகளிலும் ஒளிவீசும் பொலிவையும், உயர்வு, அகலம், நீளம் என்பனவற்றையும் கொண்டிருத்தலின் ஒருதெருவினுள் நுழைந்தால் இத்தெரு யாது? இங்குள்ள மணிமாடங்களுள் இந்த மணிகள் இழைத்த மாடம் எந்த மணிகளால் இயற்றப்பட்ட மாடம் என்று அத்தெருவில் நுழைந்தவர்கள் இமையாத பார்வையைக் கொண்டிருந்தாலும் அறியமுடியாத பெருமையை உடையனவாம்.
இம்மூன்று பாடல்களும் 'தகைய' என்ற குறிப்புவினைமுற்றைக்கொண்டு பொருள்-முடிந்தனவாம். தகைய என்னும் சொல் மூன்றாம் பாடலின் இறுதிச் சீராக உள்ளது.]

**ஆதிப் பரப்பிரமம் நாராயணன் என்றும்,**
**சோதிச் சுடர்மயமாம் தோற்றம்சால் - நீதிச்**
**சொரூபமுடன் உருவம் தோய்ந்துளன்காண் என்றும்,**
**ஒருபரந்தாமத்தான் என்றும், (33)**

**பாங்குடைய மன்உயிர் ஒன்றல்ல பல என்றும்,**
**ஆங்கவற்றுள் நீங்காதவன் என்றும், - ஓங்குஅவற்றை**
**நித்தியமாம் என்றும், உடல்நித்தியம் அன்று என்றும், அதை**
**உய்த்தது பூதாதியது என்றும், (34)**

**முத்திக்கு அவனே முதற்காரணன் என்றும்,**
**பத்தி விடாதே பயில்என்றும், - சத்தியமாய்ச்**
**செல்வத் திருப்பதிவாழ் சீநிவாதன் புகர்ந்த**
**சொல்வித்தகமே துணிந்து, (35)**

**நாம் மானிடப்பிறவி நன்றுஎன்றும் தேர்ந்தனமால்**
**காமாதிகளாம் களைகளைந்து - பாமாலை**
**சாத்தியே நெஞ்சே! தரும் எமக்கு முத்தியென**
**ஏத்தியே இன்புற்று இரு.** (36)

இவை நான்கும் வினைகொண்டு முற்றின. கலாபஅந்திய குளகம்.
திணை - பாடாண். துறை - குரவனை வாழ்த்தல்.
[நெஞ்சே! 'ஆதிப்பரம்பொருள் திருமாலே; அவனுக்கு நேர்மையான தனித்தன்மையும் வடிவும் இருப்பிடமான வைகுந்தமும் உள; சீவான்மாக்கள் ஒன்றல்ல, எண்ணிறந்தன. அவற்றுள் பரமான்மா அந்தர்யாமியாக உடல்மிசை உயிர் எனக் கரந்து பரந்துள்ளான். ஆன்மாக்கள் அழிவற்றவை. உடல் பஞ்சபூதங்களின் சேர்க்கையால் ஆனதால் அது நிலையற்றது. முத்தி பெறுவதற்குத் திருமாலே முதற்காரணன். என்றும் அவனிடத்தில் நீங்காமல் பக்தி செய்யவேண்டும் என்பனவே உண்மையாக அறியவேண்டும் பொருள்கள்' என்று செல்வம் மிக்க திருப்பதியில் வாழ்ந்த சீநிவாச ஜீயர் அருளிச்-செய்த மேம்பட்ட சொற்களிலே முழுநம்பிக்கைகொண்டு, நாம் மானிடப்பிறவி மேம்பட்டது என்று துணிந்தமையால், காமம் வெகுளி கடும்பற்றுள்ளம் மானம் உவகை மதம் என்ற அறுவகை உட்பகைகளாகிய குற்றங்களையும் நீக்கி, எம்பெருமானைப் பாமாலை சார்த்தி அவன் நமக்கும் முத்திநிலை வழங்குவான் என்று அவனைப் போற்றி இன்புற்று இருப்பாயாக.
நான்காம் பாடல் இறுதிச்சீராகிய இரு என்ற ஒருமைஏவல்வினைமுற்று இந்நான்கு பாடல்களுக்கும் முடிக்கும் சொல்லாய் அமைந்துள்ளது.]

**இச்சிப்போன் இட்ட இணையடிப்போது அன்று ஒருவன்**
**உச்சிப்போது ஆனது உலகு அறிந்த - நிச்சயமே;**
**ஆய்ந்தால் ஒருவன் சிரத்துஅணிந்தது, அன்று ஒருவன்**
**பூந்தாள் கழுவும் புனல் (37)**

**இளிவந்தது செய்து இரந்தான் ஒருவன்;**
**வெளிவந்து ஒருவன் அதைமீட்டான்; - களிவந்த**
**சித்தமுறத் தன்பெயரே கேளாச் செவியனுக்கும்**
**முத்தி அளித்தான், ஓர்முதல் (38)**

**சேதிப்பதாம் ஒருவன் செய்தொழிலும்; ஏனையவற்கு**
**ஆதிப்புவனம் அவை காவல்; - கோதுஅற்ற**
**நற்குணத்து எம்பூமகள்கோன் நாரணன், அந்தாமத்தான்,**
**முற்குணத்தானே, எம்முதல் (39)**

**என்றுஆய்ந்து உணர்ந்து உணர்த்தி இங்குஎமை ஈடேற்றினான்;**
**பொன்றாத செஞ்சொல் புலவீர்காள்! - ஒன்றாய**
**தே இன்புறத் தமிழ்செய் தென்குருகூரன், மனம்போல்**
**வாவும் சிறை ஓதிமன்.** (40)

இவை நான்கும் வினைக்குறிப்புக் கொண்டு முற்றின கலாபஅந்திய குளகம்.
திணை - பாடாண். துறை - பழிச்சினர்ப் பணிதல்.
[அழியாத செஞ்சொற்களில் வல்ல புலவர்களே! சிவபெருமானை வணங்கிப் பூவிட-வேண்டும் என்று விரும்பிய அருச்சுனன் பாரதயுத்த நாள்களின்போது கண்ணன் திருவடிகளில் இட்டபூ கயிலைமலையிலுள்ள சிவபெருமான்தலையில் போய்ச்சேர்ந்த செயல் நன்மக்களால் உறுதியாக அறியப்பட்டுள்ளது. ஆராய்ந்து பார்த்தால், திருமா-லுடைய திருவடிகளைப் பிரமன் கழுவிய நீர் கங்கையாக அது சிவபெருமானால் தன்தலையில் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

தன்தந்தையாகிய பிரமனையே தலையைக் கொய்யும் கீழ்த்தரமான செயலைச் செய்து அம்மண்டைஓட்டினில் பிச்சைஎடுத்தான் உருத்திரன். திருமால் அந்நிலையைப் பார்த்து அத்துயரத்திலிருந்து அவனை மீட்டான். மயக்கங்கொண்ட மனத்தால் தன்பெயரையே கேட்கக்கூடாது என்று காதுகளில் மணியோசையே கேட்கவேண்டும் என மணிகளைக் கட்டிக்கொண்ட கண்டாகருணனுக்கும் பரம்பொருள் முத்திநிலையை வழங்கினான்.
உருத்திரனுடைய தொழில் உலகை அழிப்பதாகும். தொடக்கத்திலிருந்து உலகைப் பாதுகாத்தல் திருமாலுடைய தொழிலாகும். திருமால் குற்றமற்ற நற்குணத்தன், திருமகள் கேள்வன், உயிருடைய பொருள் உயிரற்ற பொருள் என்ற எல்லாப்பொருள்களுக்கும் ஆதாரமாக இருப்பவன், வைகுந்தத்தை உடையவன், சத்துவம் இராசதம் தாமதம் என்ற முக்குணங்களில் சுத்தசத்துவ குணமே உடையவன் என்று ஆராய்ந்து மனம்கொண்டு மற்றவர்களுக்கும் தெரிவித்து எங்களைக் கரையேற வைத்தவன் பரம்பொருளாகிய திருமால் மகிழுமாறு தமிழ்ப்பிரபந்தங்களை அருளிச்செய்தவனாய்த் தன்மனம்போலக் குறித்த இடம் நோக்கிப் பறக்கும் சிறகுகளைஉடைய அன்னவாகனமுடையோன் ஆவான்.
ஓதிமன் என்று நான்காம் பாடல் இறுதியில் வந்த வினைக்குறிப்புமுற்று இந்நான்கு பாடல்களுக்கும் முடிக்குஞ்சொல் ஆயிற்று.]

**மீனமதாய், ஆமையாய், வெள்ளை வராகமதாய்,**
**தானவனைக் கொன்று மறைதந்தானும், - வானவர்க்காய்**
**வாங்குதிரை கடைநாள் மந்தரம் மேற்கொண்டானும்,**
**ஓங்கு அகிலம் கொணர்ந்தானும், (41)**

**ஆளரியாய் ஆடகனைச் செற்றானும், வாமனமாய்த்**
**தாளிணையான் மூஉலகு தாயானும், - கோளரிபோல்**
**மாறுதிரள் காவலரை மாய்த்த மழுவாளியாய்**
**ஊறு உதிரத்தே குளித்தானும், (42)**

**அன்று தனுராமன் ஆகி இருபதுகைக்**
**குன்றின் உயிரைக் குடித்தானும், - வென்றியுடன்**
**பார்திருத்து நாஞ்சில்படையானும், பாண்டவர்க்குஅவ்**
**ஊர்திருத்த முற்று அளித்தானும், (43)**

**புண்டரிகத்தானைப் புரந்தானும், மைந்நீல**
**கண்டன் இறப்பு ஒழியக் கண்டானும், - அண்டம்இனி**
**மேல்இல்லை இங்குஎன்ன விழுங்கிய ஏகோதகத்து ஓர்**
**ஆலிலையின் மீது துயின்றான். (44)**

இவை நான்கும் வினைப்பெயர்கொண்டு முற்றின கலாபஅந்திய குளகம்.
திணை - பாடாண். துறை - கடவுள்வாழ்த்து.

[மீனாக அவதரித்து அயக்கிரீவன் என்ற அசுரனைக்கொன்று அவன் உறங்கிக்-கொண்டிருந்த பிரமனிடமிருந்து கைப்பற்றிய வேதங்களை மீட்டுத் தந்தவனும், தேவர்களுக்காகப் பாற்கடலைக் கடைந்தகாலை மந்தரமலை அழுந்தாதபடி ஆமை-யாய் அவதரித்து அம்மலையைத் தாங்கிக்கொண்டிருந்தவனும், வெள்ளைப்பன்றியாய் அவதரித்து ஊழிவெள்ளத்தில் முழுகிய மேம்பட்ட உலகை மேற்கொணர்ந்தவனும்,
நரசிம்மமாகி இரணியகசிபுவை அழித்தவனும், வாமனாவதாரம் எடுத்துத் திரிவிக்கிர-மனாக வளர்ந்து தன் திருவடிகளால் மூவுலகையும் ஈரடியாக அளந்தவனும், பகைவரை அழிக்கும் சிங்கம்போன்ற பரசுராமாவதாரம் எடுத்துத் தனக்கு மாறுபட்ட அரசர்-கூட்டத்தை அழித்து அவர்கள் குருதியிலே குளித்தவனும்,
ஒருகாலத்தில் வில்லை ஏந்திய இராமனாக அவதரித்து இருபது கைகளைஉடைய மலையைப் போன்ற இராவணனது உயிரைக் குடித்தவனும், வெற்றியோடு உலகைச்

செப்பம்செய்யும் கலப்பைப்படையுடைய பலராமனாக அவதரித்தவனும், பாண்டவர்களுக்காக அத்தினாபுரத்தைப் பகைவர்களாகிய துரியோதனாதியரை அழித்துத் திருந்திய நிலையில் வழங்கியவனும்,
பிரமனுக்கு அன்னமாய் அருமறைகள் உபதேசித்து அவனைக் காத்தவனும், கருநீலகண்டனாகிய உருத்திரனுடைய பிச்சையெடுத்தலைப் போக்கியவனும், உலகங்களைஎல்லாம் மூழ்கடித்த ஊழிவெள்ளத்தில் ஓர்ஆலிலைமீது துயின்றவனே.
துயின்றான் என்ற வினையாலணையும்பெயர் நான்காம்பாடலின் இறுதியில் அமைந்து நான்குபாடற்பொருளுக்கும் முடிக்குஞ்சொல் ஆயவாறு.]

**மாயோன், நெடியோன், மதுசூதனன், புவனம்**
**தாயோன், முகுந்தன், சராசரங்கள் - ஆயோன்,**
**நராரி, அரி, அச்சுதன், நாகணையான்,**
**முராரி அழியா முதல்,** (45)

**மாதவன், கேசவன், வாமனன், கோவிந்தன்,**
**சீதரன், பூமகள்கோன், தேவேசன், - பூதலத்தை**
**உண்டோன், விரிசிறைப்புள் ஊர்ந்தோன், பகிர்அண்டம்**
**கண்டோன் நிருதாந்தகன்,** (46)

**மந்தாகினி பிறந்த வார்கழலோன், நேமியோன்,**
**தந்தாவளம் உரைத்த சால்பினோன், - எந்தை,**
**திருமால், வரன்உந்தி பூத்தோன் அமரர்**
**பெருமான், பிரமன்பிதா** (47)

**கண்ணன், கருணாகரன், அமலன், காயாம்பூ**
**வண்ணன், கடல்வண்ணன், மைவண்ணன், - விண்ணவர்கோன்**
**தம்பிரான், நாரணன், அந்தாமத்தான், வேதாந்தன்,**
**எம்பிரான், முத்தன், இறை.** (48)

[வியத்தகு பண்புசெயல்களை உடையவன், புகழால் உயர்ந்தவன், மது என்ற அசுரனை அழித்தவன், உலகங்களை அளந்தவன், வீடுபேற்றை வழங்குபவன், இயங்கியற்பொருள் நிலையியற்பொருள் ஆகிய அனைத்தையும் தனக்கு உடலாகக் கொண்டவன், மானுடமடங்கலாய் அவதரித்தவன், தீயவரை அழிப்பவன், தன்னை அண்டினவர்களை நழுவவிடாதவன், திருஅனந்தாழ்வானைப் படுக்கையாக உடையவன், முரன் என்ற அசுரனை அழித்தவன், என்றும் அழியாத முதற்பொருளாய் இருப்பவன்,
மாதவன், கேசவன், வாமனன், கோவிந்தன், சீதரன் என்ற பிரசித்தமான பெயர்களை உடையவன், திருமகள்தலைவன், தேவர்களை நிர்வகிக்கிறவன், உலகங்களை உண்டு வயிற்றில் வைத்துக் காப்பவன், விரிந்த சிறகுகளை உடைய கருடனை வாகனமாகக் கொண்டவன், பலஉலகங்களையும் படைத்தவன், அசுரர்களுக்கு யமன் போன்றவன்,
கங்கை உற்பத்தியான நேரிய திருவடிகளை உடையவன், சக்கராயுதத்தை உடையவன், யானையால் ஆதிமூலமே என்று அழைக்கப்பட்ட பெருமையை உடையவன், எங்களுக்குத் தந்தையானவன், திருமால் என்ற பெயரைஉடையவன், மேம்பட்டவன், கொப்பூழில் தாமரைப்பூவைப் படைத்துக் கொண்டவன், தேவர்கள் தலைவன், படைப்புக்கடவுளாகிய பிரமனுக்குத் தந்தை,
எல்லோருக்கும் பற்றுக்கோடானவன், கருணைக்கு இருப்பிடமானவன், களங்கம் அற்றவன், காயாம்பூ கடல் கார்மேகம் போன்ற கருநிறத்தை உடையவன், வைகுந்தத்தில் இருக்கும் அயர்வறும் அமரர்க்குத் தலைவன், தேவர்மன்னனான தேவேந்திரனுக்குத் தலைவன், அறிவுடைய பொருள் அறிவற்ற பொருள் என்ற எல்லாப்பொருள்களையும் தாங்குபவன், வைகுந்தத்தை இருப்பிடமாகக் கொண்டவன், வேதத்தின்முடிவாகிய

உபநிடதத்தில் குறிக்கப்படும் பரம்பொருள், எங்கள் தலைவன், எல்லாவிதப் பற்றுக்களிலிருந்தும் விடுபட்டவன் ஆகியவனே முழுமுதற்கடவுளாகிய இறை.
இந்நான்குபாடல்களுக்கும் நான்காம்பாடலின் இறுதிச்சீராக அமைந்திருக்கும் இறை என்ற பெயரே முடிக்குஞ்சொல்லாக அமைந்துள்ளது.]

இவை நான்கும் பெயர்ப்பெயர் கொண்டு முற்றின கலாபஅந்திய குளகம்.

திணை - பாடாண். துறை - கடவுள்வாழ்த்து. ஒழிந்தவும் வந்தவழிக் கண்டுகொள்க.

கலாபகுளகம் முற்றும்.

**செம்பினை உருக்கி வாக்கித் திண்ணிதின் அகழி தூர்த்திட்டு**
**உம்பரின் முதலே வெண்பொன் உவானம்அது அமைத்தபின்றைப்**
**பைம்பொன்ஆர் செகதி கண்டம் பட்டிகை வகுத்திட்டு ஓர்சார்**
**இம்பர் நின்று ஏற யாளிச்சுருள்படி இயற்றி மன்னோ, (49)**

**பாங்கர் வேதிகைக்குத் தானம் பகுத்து அரங்கினுக்கு நாப்பண்**
**ஓங்கு பொற்சுவர் நிறீஇ வித்துருமச்சாளரம் செய்து ஓவா**
**வீங்குஇருள் துணிக்கும் செய்ய விழுமணிஅதனால் மேல்வாய்த்**
**தாங்கும் உத்தரம் வைத்து வச்சிரத்துலாம் தகவின் வைத்தே (50)**

**பச்சைநன்மணியை ஈர்ந்த பலகை மேல்பரப்பி நீலத்து**
**அச்சுறு கொடுங்கை மூட்டி அதன்புழை அகத்தவாக**
**வச்சிர வளைகள் ஓடி மணிசெய் வேதிகை மாண்தூணத்து**
**உச்சிமேல் பலகை சிற்றுத்தரத்தினோடு ஒன்றச் சேர்த்தே, (51)**

**வெள்ளிவெண்பலகை நான்குவிரல் வியன் நீப்பின்றாக**
**வள்ளூற நிறைத்து வண்பொன் ஆணிகள் அழுத்திக் கையால்**
**அள்ளுபு திரளும் ஒண்பொன் அரதனம் ஞாங்கர் மேய்ந்து**
**தெள்ளிதின் ஏழதுஆகத் திகழ்நிலம் புணர்த்து மாதோ, (52)**

**வாரி நீள்நிலையும் மேல்கீழ் மரீஇய நோன்படியும் தாளும்**
**கூர் கபாடமும் ஒன்றாகக் கொளீய மாண் மணிகள்தம்பால்**
**சீர்கெழு தசும்பு சூட்டும் சிமயமோடு உயர்ந்து வானு**
**ளார்தமக்கு அமைந்த தச்சர்க்கு அணங்கு செய்வன பொன்மாடம். (53)**

இவை ஐந்தும் பெயர்கொண்டு முற்றின அந்தியகுளகம். மேல் ஐந்து முதலிய எவற்றிற்கும் குளகம் என்பது பொதுப்பெயர்.

திணை - பாடாண். துறை - நகர்வாழ்த்து. (குருகாமான்மியம்)

[அடிப்படை அமைக்கப் பள்ளம் பறித்து அப்பள்ளத்தில் செம்பு என்ற உலோகத்தை உருக்கி ஊற்றித் தரையைத் திண்மையுடையதாக்கிப் பள்ளத்தை நிரப்பி, அதன்மேல் வெள்ளியால் அடித்தளம் உயரமாக அமைத்து, அதன்கண் பொன்னால் ஆகிய சகதி கண்டம் பட்டிகை முதலிய சிற்பவேலைப்பாடுகளை அடித்தள முகப்பில் அமைத்து, தரையிலிருந்து அடித்தளத்துக்கு ஏற யாளி வடிவில் முகப்புச்சுவர் அமைக்கப்பட்ட வளைந்த படிகளை அமைத்து,
அடித்தளத்தில் திண்ணைக்கு உரிய பகுதியை அமைத்து, அதனை அடுத்துப் பொன்னால் சுவர் அமைத்துப் பவளத்தால் சன்னல்களை அமைத்து, இருட்டைப் போக்கும் இரத்தினங்கள் இழைக்கப்பட்ட, மேற்பகுதிகளைத் தாங்கும் உத்தரங்களை

அமைத்து, அவைகள் இணையுமிடத்தில் வைரத் துலாங்களைப் பொருத்தி, (வாழைப்பூ வடிவினவை)

மரகதமணிப்பலகைகளை மேலே பரப்பி, நீலமணிகளால் செதுக்குங்காலத்தில் விரிசல் ஏற்படாது அமைய வேண்டுமே என்ற அச்சந்தரும் மென்மையான கொடுங்கைகளைப் பொருத்தி அவற்றின் துவாரங்கள் வழியே வயிரத்தால் குழாய்கள் அமைத்து, மணிகளால் கீழே மேடை அமைத்து, அவற்றின்மேல் தூண்களையும் அவற்றை உத்தரத்தோடு பொருத்தும் பலகைகளையும் பொருத்தி,
மேல்தளத்தில் வெள்ளியால் நான்குவிரல் கனமுடைய பலகைகளைப் பொருத்தி, அவை நகராதபடி பொன்னாலான ஆணிகளை இட்டு, அப்பலகைகளின்மேல் மாற்றுயர்ந்த தங்கத்தைத் தேய்த்து அதில் இரத்தினங்களை அழுத்தி ஏழுநிலை-மாடங்களை அமைத்து,
பெரிய நீண்ட வாயில்நிலைகளில் மேலும் கீழும் நிலைப்படிகளை அமைத்து வாயிற்-படியோடு இணைந்து இயங்கும் கதவுகளைப் பொருத்தி மேல்தளத்தில் உச்சியில் மணிகள் இழைத்த இடங்களை அழகுக்காக அமைத்து மிக உயரமான கட்டடங்கள் அமைக்கப்பட, அப்பொன்மயமான மாடவீடுகள் தேவருலகத் தச்சர்களையும் இவ்வாறு அமைத்தல் நமக்கு இயலாதது ஒன்று அன்றோ என்று வருத்துமாறு அமைந்துள்ளன.

வடமொழியில் ஒரேமுடிக்கும்சொல் கொண்ட இருபாடல்கள் உகளம் எனவும், மூன்று-பாடல்கள் சந்தானிகம் எனவும் நான்குபாடல்கள் கலாபம் எனவும் 5 முதல் 15 பாடல்கள் குளகம் என்றும் வழங்கப்படும் என்ற செய்தி முன்னரே கூறப்பட்டது. அக்கருத்தை உட்கொண்டே ஐந்து முதலிய எவற்றிற்கும் குளகம் என்பது பொதுப்பெயர் என்று கூறப்பட்டுள்ளது.]

**அற்புதமாம் மன்உயிரே பிரமம் என்றும் அலகில அன்று ஒன்று எனவும் அலகுஇல் யாக்கை**
**நிற்பன யாது எனில் புனல்பெய் கடங்கள்தோறும் நிழல்கதிர் தோன்றிய நெறித்தாம் என்றும் அங்ஙன்**
**பொற்பன ஒன்று இறத்தலும் ஏனையவும் பொன்றாப் பொலிவு எவன் என்றால் அவைபோல் எனவும் மாறிக்**
**கற்பனை செய்பவன்தனை நான் பிரமம் என்றே கழறும் இரண்டு எவன்எனவே கழறி, மீட்டும் (54)**

**நான்பிரமம் என்றனை, நீ பிரமம் ஆகில் நான்முகனை உந்தியில் பெற்றிடுதி, பொன்றா**
**வான் பிரமம் அமைத்த பகிர்அண்டம் எல்லாம் வயிற்றிடை வைத்திடுதி, சதுமுகத்தால் வையம்**
**தான்புரந்து அவ்வுலகினை மூஅடியில் தாய தனுவினன் ஓர் அணுமயமாம் தனுவும் கோடி**
**ஊன்பயின்ற குரம்பையை நீத்து உலகமெல்லாம் ஒருங்கு எறிக்கும் சுடர்மயமாம் உருவும் கோடி, (55)**

**ஆயிரவாய்ப் பல்தலைப் பாம்புஅணைமேல் காவல் அறிதுயிலும் கொண்-டிடுதி, அனந்தன் ஆகி**
**மாயிரு ஞாலங்கள் ஒருபத்து நாலு மணிமுடிமேல் தரித்திடுதி, வழிந்து நாளும்**
**தாயதிரைப் பாற்கடலைத் தயிரேயாக்கிச் சந்திரனை மந்தரம்மேல் தறியது ஆக்கித்**
**தூயசுவைத் தெள்ளமிர்தம் நரர்க்கும் விண்மேல் சுரர்க்கு அளித்ததுஎன அளிக்கும் தொழிலும் கோடி, (56)**

எண்இறந்த நால்வகைத் தோற்றத்துள் ஆய எழுவகைத்துஆம் செனனமும்நீ இசைந்து பின்னர்
எண்இறந்த இடங்கள்தொறும் நிற்பதோடு இயங்குதிஈங்கு, இவைஅன்றி ஏககாலத்து
எண்இறந்த தொழில் புரிதி, அண்டர் அண்டத்து இவ்வுலகில் பாதளத்து இன்ப துன்பம்
எண்இறந்த இவர்க்கு இவற்றிற்கு இசைந்தது என்றுஎன்று இசைந்ததிறம் வாய்மையதாய் இசைப்பதோடும், (57)

இவ்வுடலத்து இறத்தி, இறந்திடு காயத்தை ஈமத்துஅங்கு இடும்பொழுதில் எரிந்திடாதே
அவ்வுடலத்துடன் எழுந்து வருதி, காயத்து அருவருப்பு ஆக்கிய மலமூத்திரங்கள் எய்தாச்
செவ்வியின்வாழ்ந்திடுதி, நரைதிரைமூப்பு இல்லாச் சிறப்பினொடும் வளிமுதலாச் செறிந்த மூன்றும்
வவ்வுதல்அற்று ஈறுஇல் சுகானந்தம் மேய வச்சிரகாயம் புணர்ந்த வாழ்வி-னோடும் (58)

மின்உயிர்க்கும் கனகன் வினவின பொன்தூணம் வெடிப்ப உதித்து அடித்தகரம் பிடித்தபோல
உன்உயிர்கொண்டு எனதுகரம் பிடித்த தூணத்து உறுதிஇவை முதல உனக்கு உறுவது இன்றால்;
மன்உயிர்தாம் அலகுஇலவாம் வகையும் ஈசன் வாழ்வகையும் உணர்ந்திலை, உன்மத்தன் ஆனாய்;
இன்உயிர்வேறு, இன்உயிர்கட்கு உயிராய் நின்ற இறைவனும் வேறு எனத் தெளிவித்து இதம்செய்வாரே. (59)

இவைஆறும் வினைப்பெயர்கொண்டு முற்றின அந்தியகுளகம்.
திணை - பாடாண்; துறை - முனிவர் வாழ்த்து. (குருகாமான்மியம்)
குருகாமான்மியம் பரமபதவருணனைச் சருக்கத்து, 105-ஆம் செய்யுளாகிய 'ஆங்கதன்' என்பது முதல் 113-ஆம் செய்யுளாகிய 'கொண்டமால் வரை' என்ற செய்யுள் ஈறாக ஒன்பது பாடல்களும் பரன் இருப்பான் என்ற வினைமுற்றுக்கொண்டு முற்றின அந்தியகுளகம். இவற்றின் மிக்கு வருவனவும் உள. அவையும் பெருங்காப்பியங்களிடத்துக் கண்டுகொள்க.

குளகம் முற்றும்.

[இதம்செய்வாரே என்ற ஆறாம் பாடலின் இறுதிச்சீர்கள் வினையாலணையும் பெயராய் இவ்வாறு பாடல்களுக்கும் முடிக்குஞ்சொல்லாய் அமைந்தமையால் இவை அந்திய-குளகம் ஆயின.
மேம்பட்ட நிலைபெற்ற உயிரே பிரமம்; ஆன்மா பல அல்ல ஒன்றே; பல உடம்புகள்தோறும் பலஉயிர்கள் உள்ளனவே எனின், அவை ஒரே சூரியனுடைய நிழல் தண்ணீரை உடைய குடங்கள்தோறும் தன்நிழல்கள் பலவற்றைத் தோற்றுவிப்பது போலும் என்பாரை நோக்கி, உயிர் ஒன்றே என்றால் ஒருகுடத்தில் சூரியன்நிழல் இல்லாதபடி அக்குடநீரைக் கொட்டிவிட்டால் ஏனைய குடங்களில் அந்நிழல் இல்லாது போகவேண்டுமே? ஏன் அவ்வாறு ஆகவில்லை? எனவே ஆன்மா ஒன்றே என்ற கூற்றுப் பொருந்தாது என்று விளக்கி, நானே பிரமம் என்று கற்பனை செய்து-

கொண்டிருப்பவனை நான் என்றும், பிரமம் என்றும் இரண்டு பொருள்களாக எவ்வாறு கூறமுடியும் என்று இடித்துக்கூறி, அதற்குமேலாக,
சீவான்மாவாகிய நீயும் பரமான்மாவாகிய இறைவனும் ஒன்றே என்கின்றாயே. நீயும் பரமான்மாவும் ஒன்றே என்றால், நீ பரமான்மாவைப் போலப் பிரமனை உன் உந்தியிலிருந்து படைத்துக் காட்டு. பரமான்மா தான் அமைத்த பல அண்டங்களையும் ஊழிஇறுதியில் தன் வயிற்றிடைவைத்துப் பாதுகாப்பது போல, நீயும் பல அண்டங்களையும் உன் வயிற்றிடைவைத்துக் காட்டு. நான்முகம்கொண்டு உலகத்தைப் படைத்துக் காத்து அவ்வுலகினை மூவடியால் அளந்த வடிவினையும் அணுமயமான சிறிய வடிவினையும் எடுத்துக்காட்டு. புலால்மயமான இவ்வுடலை விடுத்து உலகமெல்லாம் ஒளிவீசும் சோதிவடிவான உருவத்தை எடுத்துக்கொள்.
ஆயிரம்வாய்களையும் பலதலைகளையும்உடைய பாம்புப்படுக்கையில் உலகக்காவல்நிமித்தமாக அறிதுயிலும் கொள்ளுதி. ஆதிசேடனாகிப் பதினான்கு உலகங்களையும் உன்தலைகளால் தாங்குதி. அலைவீசும் பாற்கடலை மந்தரமலையை மத்தாகவும் சந்திரனை அம்மத்தினைத் தாங்கும் தம்பமாகவும் கொண்டு தயிரைக் கலக்குவதுபோலக் கலக்கிப் பரமான்மா தேவர்களுக்கு அமுதத்தைக் கடைந்தெடுத்து வழங்கியமை போல, மனிதர்களுக்கும் அமுதத்தை அளிக்கும் தொழிலையும் கொள்ளுதி.

தேவகதி - மக்கள்கதி - நரகர்கதி - விலங்குகதி என்ற நால்வகைப்பட்ட மக்கள் தேவர் நரகர் ஊர்வன பறப்பன நீர்வாழ்வன தாவரம் என்ற எழுவகைப் பிறப்புடைய உயிர்கள்தோறும் உடல்மிசை உயிரெனக் கரந்து எங்கும் பரவிப் பல இடங்களிலும் இயங்குதி. இவையேஅன்றி ஒரேகாலத்தில் பலவகைத் தொழில்களையும் செய்தி. அவரவர் செய்த நல்வினை தீவினைகளுக்கு ஏற்பத் தேவருலகம் நிலஉலகம் பாதாளஉலகம் என்ற பலஉலகங்களிலும் இயங்கும் உயிர்ப்பொருள்களுக்கு அவரவர் பண்டு செய்த நல்வினைத் தீவினைப்பயன்களைத் தவறாது அளித்து அவரவர் அவரவர் தத்தம் வினைப்பயன்களை அனுபவிக்கச் செய்தி.
இந்தப் புலால்மயமான உடலோடே நீ இறக்கிறாய். இறந்துபோன உடலைச் சுடுகாட்டில் இட்டு எரித்திடும்போது நீ எரிந்துபோகாமல் அவ்வுடம்புடனே எழுந்து வருதி. இவ்வுடம்பை அருவருக்கத்தக்கதாக்கும் மலமூத்திரங்களின் தொடர்பு இல்லாமல் செம்மையாக வாழ்தி. நரை தோலின்சுருக்கம் மூப்பு இவை இல்லாத சிறப்புக்களோடும், வாதம் பித்தம் கோழை என்ற மூன்றாலும் வருத்தப்படாது என்றும் அழிவில்லாத இன்பமயமான அழிவற்ற உடம்பினைப் பெற்று வாழ்தி.
இரணியன் தட்டிய பொற்றூண் வெடிப்பவே, பரமான்மா உடனே அத்தூணிலிருந்து வெளிப்பட்டுத் தூணைத் தட்டிய கைகளைப் பிடித்துக்கொண்டாற்போல, உன்ஆன்மா நான் ஒருதூணைத் தட்டினால் அத்தூணிலிருந்து புறப்பட்டு என்கைகளைப் பிடித்துக்கொள்ளும் ஆற்றல் உடையதன்று என்பதனை உணர். இவற்றால் சீவான்மாக்கள் பலவாகும் என்பதனையும், பரமான்மா அந்தச் சீவான்மாக்கள்தோறும் உடல்மிசை உயிர்என எங்கும் இருப்பதனையும் நீ உணராது மயக்கம் கொண்டுள்ளாய் - என்று இவ்வாறு சீவான்மா வேறு, சீவான்மாக்களுள் அந்தரான்மாவாய் இருக்கும் பரமான்மாவும் வேறு என்பதனை ஏகான்மவாதிக்கு உள்ளம் தெளியுமாறு எடுத்து இயம்பி அவனுக்கு நன்மை செய்பவர் அங்கு வாழ் முனிவர்கள்.] [4]

தொகைநிலைச்செய்யுள்

**69. உலவாத கேள்வி ஒருவர் பலரால்**
**பலவாய்ப் பகர்பா இனமாய் - இலகுபொருள்**
**எண்பாட்டு அளவு தொழில்இடம் காலம்சினையின்**
**பண்புஆம் தொகைநிலைச்சொற் பா. [5]**

(எ-ன்) வைத்தமுறையானே (67) தொகைநிலைச்செய்யுள் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) தொகைநிலைச் செய்யுள் என்பன - குறையாத கேள்வியினை உடைய ஒருவரான்ஆதல் பலரான்ஆதல் உரைக்கப்பட்டுப் பலபாட்டாய் வருவனவாய், அவை பொருளானும், எண்ணானும், பாட்டானும், அளவானும், தொழிலானும், இடத்தானும், காலத்தானும், சினையானும், தொகுத்த பெயர்பெற்ற பண்பினை உடையவாம் என்றவாறு.

இன் - உருபுமயக்கம். உம்மை செய்யுள்விகாரத்தால் தொக்கது. உலவாத கேள்வி என்பதனை இருவரிடத்தும் கூட்டுக. கேள்வி - கல்வி.

ஒருவரால் உரைக்கப்பட்டன - திருவள்ளுவப்பயன்

பலரால் உரைக்கப்பட்டன - நெடுந்தொகை

இஃது எல்லாத்தொகைக்கும் பொது.

பொருளால் தொகுத்த பெயர்பெற்றது - புறநானூறு.

எண்ணால் தொகுத்த பெயர்பெற்றது - பதிற்றுப்பத்து.

பாட்டால் தொகுத்த பெயர்பெற்றது - கலித்தொகை.

அளவால் தொகுத்த பெயர்பெற்றது - குறுந்தொகை.

தொழிலால் தொகுத்த பெயர்பெற்றது - ஐந்திணை.

இடத்தால் தொகுத்த பெயர்பெற்றது - களவழி நாற்பது.

காலத்தால் தொகுத்த பெயர்பெற்றது - கார் நாற்பது.

சினையால் தொகுத்த பெயர்பெற்றன நயனப்பத்து, பயோதரப்பத்து.

உம்மை எச்சஉம்மையாகலான் இவ்வெட்டு வகையானுமன்றிப் பிறவகையானும் பெயர்பெற்றன உளவேனும் அவையும் அறிந்துகொள்க.

தொகைநிலைச்செய்யுள் முற்றும்.

[இன் - சினையின் என்பதன்கண் உள்ள இன்; இது சினையானும் என்று மூன்றன்-உருபாக விரிக்கப்பட்டுள்ளது. உம்மையைப் பொருளும் எண்ணும் பாட்டும் அளவும் தொழிலும் இடமும் காலமும் சினையும் என விரித்துப் பொருள்கொள்க. இடையே ஆனுருபு விரிந்து பொருளானும் எண்ணானும் முதலாக வருமாறு காண்க. உலவாத கேள்வி ஒருவரால், உலவாத கேள்விப் பலரால் என உலவாத கேள்வி ஈரிடத்தும் கூட்டப்பட்டது.] [5]

தொடர்நிலைச்செய்யுளின் கூறுபாடு

**70. சொல்லால் பொருளால் தொடரும் தொடர்நிலைகள்**
**எல்லாம்; அவற்றுள் எழுத்து அசைசீர் - மல்கும்**
**அடிசொல் தொடர்நிலைகள் அந்தம் முதலாம்-**
**படி வைத்தனர் முன் பகுத்து. [6]**

(எ-ன்) தொடர்நிலைச்செய்யுளினது கூறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) தொடர்நிலைச்செய்யுள் என்று கூறப்படுவனஎல்லாம் சொல்லானும் பொருளானும் தொடரப்படுவனவாம்; அவ்விரண்டனுள் சொல்தொடர்நிலையைப் பகுத்துக் கூறுமிடத்து நின்ற செய்யுளின் ஈற்றெழுத்தாதல், அசையாதல், சீராதல், அடியாதல் வரும் செய்யுளுக்கு முதலாகத் தொடுக்கும்படி என உட்கொண்-டனர், முற்காலத்துப் புலவர் என்றவாறு.

வைத்தனர் - உட்கொண்டனர். இச்சூத்திரப்பொருள்கோள் மாட்டுறுப்பு. எல்லாம் என்றதனால், மூன்றாவது சொல்லினாலும், பொருளினாலும் தொடர்வதும் உளதுஎனக் கொள்க. 'மல்கும்' என்று சிறப்பித்த அதனால் நான்கும், பலஅடியான் வரும் ஒரு செய்யுளகத்தும் வருவது உளது எனக்கொள்க.

[தொடர்நிலைகள்எல்லாம் சொல்லால் பொருளால் தொடரும்: அவற்றுள் சொல்தொடர்நிலைகள் அந்தம் எழுத்து அசை சீர் மல்கும் அடி முதலாம்படி முன்பகுத்து வைத்தனர் என, மாட்டுறுப்பான் அமைந்த பாடலின் சொற்களைப் பிரித்து இணைத்துப் பொருள்செய்க.]

இவற்றிற்கு எல்லாம் செய்யுள் வருமாறு:

**நாவலன்பின் போந்த நறுநீர்த் திருவரங்கம்**
**காவலன் பொன்தாள்ஆம் கமலத்தே - பாவலர் தம்**
**பாமாலை சூட்டாது அப்பாமாலையை எவனோ**
**தாம் மானிடர்க்கு அளிக்கும் சால்பு? (60)**

**புரந்தரன் ஆதியர்ஆய புத்தேளிர் பொன்போதுகள் தூஉய்**
**நிரந்தரம் ஏத்தும்படியே துயின்றது, நெஞ்சத்து அன்பு**
**சுரந்து அரன்சாபம் துடைத்தோன் இருந்தது, தொண்டர்க்கு எல்லாம்**
**வரம்தர நின்றது, அரங்கம், நன்காஞ்சி, வடமலையே. (61)**

**மலைமுழை வைகலும் வைகினர் ஆகியும்**
**கனிகிழங்கு அடகு கண்டன மாந்தியும்**
**மூவர் ஆயும் முதல்கடவுள்**
**காவல! நீயே காத்தல் வேண்டுவலே. (62)**

**வேண்டுவது இங்கு இன்று எமக்கு மெய்க்காவிரிஅரங்கத்து**
**ஆண்தகைதன் வெற்பில் அணங்குஅன்னார் - காண்தருசீர்ப்**
**பொன்றா மலர்முகமும் பூண்முலையும் கண்டனம் யாம்**
**என்றால், இனி இதன்மேல் யாது? (63)**

**என்றால் இனி இதன்மேல் யாது வேண்டும்? எனக்கு வெள்ளிக்**
**குன்றானதன் பிடர்மீதே மரகதக்குன்று எனவே**
**அன்று ஆடு அரவில் துயில் அரங்கேசன் அருள்புரிந்து**
**பொன்றாத செல்வத் திருமாதுடன் உட்புகுந்தனனே. (64)**

(எ-ன்) இவ்வைந்து பாட்டினும் எழுத்து அசை சீர் அடி என்னும் நால் அந்தாதியும் அடைவே வந்தவாறு கண்டுகொள்க. இவற்றுள் 'வேண்டுவது இங்கு' என்ற வெண்பா ஒன்றும் கிளவிவேட்டல். ஒழிந்த நான்கும் கடவுள்வாழ்த்து. இவை நம்பெருமாள் மும்மணிக்கோவை.

[திருமழிசைப்பிரான் பின்னே அவர் விரும்பியவாறு புறப்பட்டுப்போன எம்பெருமானாகிய அரங்கநாதனுடைய திருவடித்தாமரைகளிலே கவிஞர்கள் தாம் இயற்றிய பாமாலைகளைச் சூட்டாது அவற்றை மனிதர்களுக்கு வழங்கும் பெருந்தன்மைதான் என்னே!

இந்திரன் முதலாயவரான தேவர்கள் அழகிய பூக்களைத் தூவி எப்பொழுதும் புகழும்படியாக எம்பெருமான் கிடந்த திருக்கோலத்திருக்கும் திருத்தலமும், உள்ளத்தில் அன்பு ஊற்றெடுத்துப் பெருக அரன் பெற்ற சாபத்தைப் போக்கி இருந்த திருத்தலமும், அடியவர்களுக்கெல்லாம் வரம் அருள நின்ற திருத்தலமும், முறையே திருவரங்கம், காஞ்சிபுரம், திருமலை என்பனவாம்.

நாடோறும் மலைக்குகைகளில் தங்கியும், பழம் கிழங்கு இலை என்பனவற்றுள் கிட்டினவற்றை உண்டும் பிரமன் உருத்திரன் இந்திரன் என்ற மூவரும் ஆராய்ந்து கண்ட பரம்பொருளாகிய காத்தற்கடவுளே! நீயே என்னைக் காத்தல் வேண்டும் என்று வேண்டுகின்றேன்.

"என்றும் நீர்வரத்துப் பொய்க்காத காவிரியின் இருபிரிவுகளின் இடைப்பட்ட திருவரங்கத்திலுள்ள எம்பெருமானுடைய மலையிலே தெய்வப்பெண் போன்ற தலைவியின் விரும்பத்தக்க சிறப்புடைய அழகு குன்றாத தாமரைமலர் போன்ற முகத்தையும் அணிகளணிந்த மார்பகங்களையும் கண்ட நான் இதன்மேல் நுகர விரும்புவது யாதாக இருக்கும்?" என்று தலைவியின் குரல்இனிமையை நுகர விரும்பிய தலைவன் கூறியவாறு.

வெள்ளிமலையின் பின்கழுத்துப்புறத்தில் அமைந்த பச்சைக்கல்மலைபோலக் கருடாழ்வார்மீது இவர்ந்து வந்து திருஅனந்தாழ்வான்மீது அறிதுயில் அமர்ந்த அரங்கப்பிரான் அடியேனுக்கு அருள்புரிந்து குறைவற்ற செல்வத்தெய்வமாகிய திருமகளோடு அடியேன்உள்ளத்தில் புகுந்து தங்கிவிட்டான் என்றால், இதற்குமேல் அடியேன் வேண்டத்தக்க பேறு யாது உளது?]

இனிப் பலஅடியான் வரும் ஒரு செய்யுளகத்து நால்அந்தாதியும் வருமாறு:

**நாவே உரனுறும், நலம்மிகு முதற்பொருள்**
**பொருளுரை; ஆய்தரின் புகலும் மற்றுஉளதே?**
**உளதே, வண்டு இமிர் உறுமலர் ஓடை;**
**ஓடை மால்வரை மூலம்என்று உரைசெய**
**ஓடை மால்வரை மூலம்என்று உரைசெய,**
**உரைவிசைத்து அடங்கா ஒல்லையின் குறுகுபு,**
**புனிற்றாஎன அருள்புரிந்து இடர் செகுத்த**
**அறைபுனல் அரங்கத்து அமுதினை அன்றியும்,**
**மதித்து ஒருமுதலையே மகிழ்ந்து**
**துதிப்பதும் உளதோ, சுரர் பெருநாவே? (65)**

இந்நேரிசை ஆசிரியப்பாவினுள் நாலந்தாதியும் வந்தவாறு காண்க.
இப்பாடலுள்

குறுகுபு, புனிற்றா - எழுத்துஅந்தாதி
முதற்பொருள், பொருள்உரை - அசையந்தாதி
உளதே உளதே, ஓடை ஓடை - சீர்அந்தாதி
ஓடைமால்வரை மூலம் என்று உரைசெய - அடிஅந்தாதி

[நலன்கள் மிகுந்த பரம்பொருளைப் பற்றிப் பேசுதலால் நா ஆற்றல் பெறும். ஆராய்ந்து நோக்குமிடத்து, அப்பரம்பொருளாக வேறொரு தெய்வத்தைக் கூறமுடியுமா? வண்டுகள் ஒலிக்கும் பெரிய பூக்களைஉடைய நீரோடை ஒன்று இருந்தது. அவ்வோடையில் பெரிய மலை போன்ற ஆண்யானை 'மூலமே!' என்று அழைக்க அச்சொல்லின் ஒலி குறைவதன்முன் விரைவில் ஓடையை அடைந்து, ஈன்றணிமையுடைய பசு தன்கன்றினைக் காப்பதுபோல அருள்செய்து, யானையின் துயரைப் போக்கிய ஒலிக்கும் நீரைஉடைய திருஅரங்கத்தில் உள்ள அமுதம் போன்ற எம்பிரானை அன்றி, வேறொரு தெய்வத்தைப் பரம்பொருள் என்று கருதித் தேவர்களுடைய பெருமைஉடைய நா புகழ்ந்து பேசுவதும் உண்டோ?]

இன்னும் அவ்விலேசானே இறுதிநின்ற சொற்பொருள் நோக்கத்தான் ஆகுபெயரால் சொற்றொடர் வருவனவும் உள. அதற்குச் செய்யுள்:

**பரிவதுஇல் ஈசனைப் பாடி**
**விரிவதின் மேவல் உறுவீர்!**
**பிரிவகை இன்றிநன் னீர்தூஉய்ப்**
**புரிவது வும்புகை பூவே (66)**

**மதுவார் தண்ணந் துழாயான்**
**முதுவேத முதல்வ னுக்கு**
**எது ஏது என்பணி என்னாது**
**அதுவே ஆட்செயும் ஈடே. (67)**

இவை திருவாய்மொழியின் முதற்பத்தில் ஆறாம் திருவாய்மொழியின் முதற்பாட்டும் இரண்டாம்பாட்டும். இவற்றுள், பூ என்ற சொல்லின் பொருள்நோக்கத்தான் சினையைக் கூற முதலை அறிவிக்கும் ஆகுபெயரால் அந்தாதித்தவாறு உணர்க. இவை நாலுவேதத்தையும் ஓதாது உணர்ந்த ஞானபூரண ஞானமுத்திரைக் கராம்புயன் திருவாக்கு.

சொல்தொடர்நிலைச்செய்யுள் முற்றும்.

[பூ என்பதன் சினை அதன்கண்ணதாகிய மது. மதுவைக் கூற, அது பூவை அறிவிக்கும் என்பது. கராம்புயன் - கைகளாகிய தாமரைகளை உடைய சடகோபன்.] [6]

பொருள்தொடர்நிலைச்செய்யுள் வகை

**71. பெருங்காப்பியம் காப்பியம்எனும் பெற்றித்தால்,**
**சுருங்காப் பொருள்தொடரும் சொல்லின்; - பொருந்துஅவற்றுள்**
**ஒன்றும் பலவும் பொருளில் குறைவுறுமேல்**
**என்றும் அது காப்பியம். [7]**

(எ-ன்) பொருள்தொடர்நிலைச்செய்யுளின் கூறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) பொருள்தொடர்நிலைச்செய்யுளின் கூறுபாடு சொல்லுமிடத்துப் பெருங்காப்பியம் என்றும், காப்பியம் என்றும் கூறும் இரண்டு இயல்பினை உடைத்தாம். அங்ஙனம் பொருந்தியவற்றுள் அறம் முதலிய பொருள்கள் நான்கினுள் ஒன்றாயினும் இரண்டாயினும் குறைவு எய்தவரும் எனின், அதனை எக்காலத்தினும் காப்பியம் என்பதேயாம் என்றவாறு.

எனவே, நாற்பொருளும் குறைவின்றி வருவதே பெருங்காப்பியம் என்பதாம். சுருங்காப் பொருள்தொடர் எனவே, பொருள்தொடர் மிகவும் விரிவுடையது என்பதூஉம் ஆயிற்று. [7]

பெருங்காப்பியத்தின் மரபு

**72. வைத்த பெருங்காப்பியநிலையும் வாழ்த்தியல், பார்**
**மெய்த்த அவையடக்கம், வீறுசால் - முத்திதரும்**
**தெய்வ வணக்கமுடன், செய்பொருளும் முன்வர ஆங்கு**
**எய்த உரைப்பதுதான் ஏய்ந்து. [8]**

**73. தப்பிலா நாற்பொருளும் சாற்றுவதாய், தாரணிமேல்**
**ஒப்பிலாதான் சரிதை உட்கொண்ட - செப்பம்உற,**

**நன்மணம், இல்வாழ்க்கை, நலம், புதல்வர்ப்பேறு, பசும்-**
**பொன்மகுடம்வைத்து இன்புஉறல். [9]**

74. **அலைஆழி மேன்மை, அருட்புயலின் செய்கை,**
**மலைஆறு நாடுஊரின் வண்மை, - தொலையா**
**இருசுடரின் தோற்றம், இருதுவளம், பானம்,**
**பொருபுனல்புக்கு ஆடல், பொழில். [10]**

75. **மந்திரம், தூது, ஒற்றுஆடல், வாய்ந்த நிரைகோடல்,**
**புந்தியுறச் சேறல், புறத்துஇறுத்தல், - வெந்திறல்கூர்**
**மிக்கஇகல், வென்றி, நிலையாமையை மிகுத்தல்,**
**கைக்கிளைகள் கூறும் கடன், [11]**

76. **படலம் இலம்பகம் பரிச்சேதம் காண்டம்**
**தொடர்தொடர்பின், பாடைஉரை தோய்ந்தும், திடமுறச்சொல்**
**மூன்றுஉட் கொளலாம் முறையில், சுவைவிறல் கூர்ந்து,**
**ஆன்றவர் மெய்ப்பால்புகல் வதாம். [12]**

இவ்வைந்துபாட்டும் என் நுதலிற்றோ எனின், மேல் சொன்ன பொருள்-தொடர்நிலை இரண்டனுள்ளும் காப்பியத்தின் மரபு உணர்த்திப் பெருங்-காப்பியத்தின் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) சொல்லுவான் உட்கொண்ட பெருங்காப்பியத்தின் இலக்கணம் - உலக-ரால் மதிக்கப்பட்ட வாழ்த்தியலும் அவையடக்கியலும் தெய்வவணக்கமும் செயப்படுபொருளும் என்னும் நான்கும் பாயிரத்தினுள் அவ்வவ்விலக்கணம் உரைத்தபடியே பொருந்துவனவாய், வழுவுதல் இல்லாத நான்குபொருளும் குறைவறக் கூறப்பெற்று, உலகத்து ஒத்தாரும் மிக்காரும் இல்லாத தலைவன் சரிதை உட்கொண்ட உண்மையுற்று, நன்மணம், இல்வாழ்க்கை, கலவி, புதல்வர்ப்பேறு, பொன்முடி பொறுத்து இன்பமுறுதல், கடலை-மேகத்தை-மலையை-யாற்றை-நாட்டை-நகரத்தை-ஆதித்தஉதயத்தை-சந்திரஉதயத்தை-சிறுபொழுதை-பெரும்பொழுதை வருணனைபுரிதல், வீரபானம், காமபானம், புனல்புக்குஆடல், மந்திரம் பகர்தல், தூதுவிடுதல், ஒற்றாடல், நிரைகோடல், மேற்சேறல், எயில்புறத்து இறுத்தல், செருச்செய்கை, வென்றி எய்தல், வென்ற வேந்தன் நிலைபெற்றிருப்ப, இறந்த வேந்தன்நிலையாமை எடுத்துரைத்தல், ஆண்பாற்கூற்றுக்கைக்கிளை, பெண்பாற்கூற்றுக்கைக்கிளை என்னும் இவற்-றினையும் பாடாண்பகுதி என்பதனோடும் கூறும் முறைமையுடன், படலம் என்றாதல் இலம்பகம் என்றாதல் பரிச்சேதம் என்றாதல் பகுதிப்படுமவற்றை உட்கொண்ட காண்டங்களோடும் பொருள்தொடர்பு உடைத்தாம் ஒருதிறப்-பாட்டும் இருதிறப்பாட்டுமாகிய பாப் பாஇனத்தோடும் பாடை விராயும் உரை-விராயும் மேல்சொன்ன உண்மையை உடைய முத்தகம் முதலிய மூன்றும் உட்கொள்வனவாம் முறைமையுடன் எட்டுமெய்ப்பாடும் மெய்ப்பாட்டுக் குறிப்பும் மிகுந்து கல்விகவியான் மிக்கோர் மதிக்கும்படி உரைப்பதாம் என்றவாறு.

இதனுள் வைத்த என்பது உட்கொண்ட என்றவாறு. நிலை - இலக்கணம். இயலும் அது. பார் - உயர்ந்தோர். இடைநிலைத் தீவகம். முன்வரவு - பாயிரம். என்னை? நூற்கு முன்னே வருதலான் முன்வரவு என்றாயிற்று.

செய்பொருளும் என்னும் உம்மையான் தழுவப்படும் எஞ்சுபொருட்கிளவி. பிற்படக்கிளத்தலாய் நின்று, உம்மை இல் செஞ்சொல்லாய் முற்படக்கிளந்த வாழ்த்தியல் முதலாய மூன்றினும் கூட்டி விரித்துரைக்கப்பட்டது. என்னை?

'எஞ்சுபொருட் கிளவி செஞ்சொல் ஆயின்
பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல்' (தொ. பொ. 286 ந.)

என்றாராகலின். நலம் - புணர்ச்சி. இருதுவும் பானமும் சாதி ஏகவசனம்; புக்கு ஆடல் என்பதனைப் புனல் பொழில் இரண்டினும் கூட்டுக.
செப்பம் உற - உண்மையுற; என்பது செய்து என்பது செயஎன, ஒரு வினையெச்சம் மற்றொரு வினையெச்சமாய் நின்றது.
'வாய்ந்த நிரைகோடல்' என்பது முதலாக் 'கைக்கிளைகள் கூறும் கடன்' என்பதனால், வெட்சி முதல் பாடாண்திணை ஈறாகப் புறம் புறப்புறம் அகப்புறம் என்னும் மூன்றுகூறாகிய எழுதிணையும் முறையே கூறியவாறும் காண்க. இவ்வாறன்றி இவற்றினிடை கரந்தை நொச்சி என்பவற்றையும் கூட்டிப் பன்னிருபடலமாக்கி அவற்றிற்கு 20, 14, 21, 22, 9, 29, 24, 33, 48, 37,19, 36 எனத் திணையும் துறையுமாக விரித்து வெண்பாமாலையாகிய வழிநூலுள் ஐயனாரிதனார் கூறியதூஉம் இவ்வெழுதிணையுள் அடங்கும்எனக் கொள்க.
'தப்பிலா நாற்பொருளும் சாற்றுவதாய்' என்பதனால் கூறிய உறுப்புக்கள் சிலபல குறையினும் நாற்பொருளும் குறையாதனஎல்லாம் பெருங்காப்பியம் எனக்கொள்க. பாடை - திசைச்சொல். 'சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்' (தொ. சொ. 402) என்பதனால் பாஷை பாடையாயிற்று. உரை - செய்யுளின்றி உரைநடையான் வருவது. அஃது இளங்கோவடிகள் கூறிய சிலப்பதிகாரத்தில் கண்டுகொள்க. உம்மையால் உரை இடைவிரவாது வருதலே சிறப்பு எனக்கொள்க.
[பார் மெய்த்த வாழ்த்தியல், பார் மெய்த்த தெய்வவணக்கம் எனப் 'பார்மெய்த்த' என்பதனை முன்னும் பின்னும் கூட்டுக.
வாழ்த்தியல், அவையடக்கம், தெய்வவணக்கம் என்பன உம்மை பெறாத செஞ்சொற்களாம். ஆதலின் உம்மைபெற்று வரும் செய்பொருளும் என்பதன் முன்னர்க் கூறப்பட்டன.
இருது - ஒருமைப்பெயராய் இளவேனில், முதுவேனில், கார், கூதிர், முன்பனி, பின்பனி என்ற ஆறனையும் குறிப்பதால் சாதி ஒருமைப்பெயர். பானம் என்பதும் காமபானம், வீரபானம் முதலிய பலவற்றையும் குறிக்கும் சாதி ஒருமைச்சொல்.
'செப்பம்உற' என்ற செயவென் வாய்பாட்டு வினையெச்சம் 'செப்பம் உற்று' எனச் செய்து என் வாய்பாட்டு வினையெச்சமாகப் பொருள்தந்தது.
வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை என்பன புறம்; வாகை, காஞ்சி, பாடாண் - புறப்புறம். கைக்கிளை, பெருந்திணை - அகப்புறம்.

'வெட்சி முதலாகத் தும்பை ஈறாகப்
புக்கு அமர்செய்வது புறத்திணை யாகும்.'
'வாகை பாடாண் பொதுவியல் திணையெனப்
போகிய மூன்றும் புறப்புறப் பொருளே.'
'கைக்கிளை ஏனைப் பெருந்திணை என்றிவை
அக்கரம் அறிவோர் அகப்புறம் என்ப.'

என்ற நூற்பாக்கள் புறப்பொருள்வெண்பாமாலையின் திணைகளைப் புறம், புறப்புறம், அகப்புறம் என்ற பாகுபாட்டில் அடக்கும்.
தொல்காப்பியம் கூறும் வெட்சியில் கரந்தையும் உழிஞையில் நொச்சியும் அடங்க, பொதுவியலானது காஞ்சி வாகை இவற்றுள் அடங்க, கைக்கிளையும் பெருந்திணையும் பாடாணுள் அடங்கப் புறப்பொருள்வெண்பாமாலை கூறும் பன்னிருதிணையும் தொல்காப்பியம் கூறும் ஏழுதிணையுள் அடங்கியவாறு.

நாற்பொருள்களையும் குறைவின்றிக் கூறி ஏனைய உறுப்புக்களுள் சில குறையினும் பெருங்காப்பியம் என்றவாறு. ஆரியச்சொற்களைத் தமிழ்ஒலிக்கு ஏற்பச் சிதைத்துத் தமிழ்செய்யுட்கண் பயன்படுத்துக என்பதற்கு விதி 'சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்' (தொ. சொ. 402) என்பது.] [8-12]

செய்யுள் கூறுபடும் பாகம்

**77. மன்னிய பேர்யாப்பிற்கு வைதருப்பம் வான்கவுடம்**
**பன்னிய பாஞ்சாலம்எனப் பகுத்து - மின்இடையாய்!**
**நன்னூல்முழுது உணர்ந்தோர் நாட்டகத்து நாட்டல்உறீஇ**
**முன்னூலுள் கண்ட நெறி மூன்று. [13]**

(எ-ன்) இதுவும் மேற்சொன்ன செய்யுள் கூறுபடும் பாகம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) இங்ஙனம் நால்வகைத்தாக (67) நிலைபெற்ற பெயரைஉடைய செய்யுள் அனைத்திற்கும் வைதருப்பம், கௌடம், பாஞ்சாலம் என்னும் மூன்று நாட்டின்அகத்து உள்ளாரால் வழங்கும் பாகத்தான் மூன்றாகப் பகுத்து அவ்வவ நாட்டினது பெயரால் நல்ல நூல்களை முற்ற உணர்ந்தோர் தங்களால் செய்யப்படும் முந்துநூலகத்து நாட்டுதலைஉற்றுக் கண்ட மார்க்கம் மூன்றுஉளவாம் எ-று. உறீஇ - உற்று; வைதருப்பம் - விதர்ப்பநாட்டது. மின்இடையாய் என்பது மகடூஉ முன்னிலை. [13]

வைதருப்ப பாகமும் கௌட பாகமும்

**78. இழும்என் மொழியும் இனிய பொருளும்**
**தழுவுமது வைதருப்பம் - விழுமியவாம்**
**சொல்கடினத்தோடும் பொருட்கடினம் தோய்ந்து அரிதாய்க்**
**கற்பன சாரும் கவுடம் காண். [14]**

(எ-ன்) வைத்தமுறையானே வைதருப்ப பாகமும் கவுடபாகமும் பாகுபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) மெல்லென்ற விழுமிய இனிய மொழியும், மெல்லென்ற விழுமிய இனிய அறம் முதலிய நாற்பொருளும் பொருந்துவன வைதருப்ப பாகமாம் என்றும், விழுமிய சொற்கடினமும் பொருட்கடினமும் தோய்ந்து அரிய நடைஉடைத்தாய்ப் புலவனால் கூறப்படுவது கவுடபாகமாம் என்றும் மனத்தால் கண்டுகொள்க என்றவாறு.

விழுமியது - முக்கியம். இதனுள் விழுமியவாம் என்பதனை இடைநிலைத் தீவகம் ஆக்கியும், காண் என்பதனை இரண்டற்கும் இறுதிவிளக்கு ஆக்கியும், மனத்தால் என்பதனை எச்சமாக விரித்தும், மென்மை இனிமை என்பனவற்றை முன்னதற்கு முதனிலைத் தீவகமாக்கியும் கொள்க. சொற்கடினம் - வல்லினம் வல்லொற்று அடுத்து மிகுதல். பொருட்கடினம் - பயங்கரமாகிய பொருள் பயத்தல்.

[விழுமியவாம் சொற்கடினம், விழுமியவாம் பொருட்கடினம் என 'விழுமியவாம்' என்பதனை ஈரிடத்தும் பிரித்துக் கூட்டுக. வைதருப்பம் காண், கவுடம் காண் எனக் 'காண்' என்பதனை ஈரிடத்தும் கூட்டுக. காண்டல் என்பது நோக்க நோக்கத்தையும்,

நோக்குஅல் நோக்கத்தையும் குறிக்கும் ஆதலின் ஈண்டுக் காண்டல் நோக்கு அல் நோக்கம் என்பதனை விளக்குதற்கு மனத்தால் என்ற சொல் வருவிக்கப்பட்டது. இழும் என் இனிய மொழியும், இழும் என் இனிய பொருளும் எனக்கூட்டி உரைசெய்க. பயங்கரம் - உயர்வுநவிற்சி.] [14]

பாஞ்சாலபாகம்

**79. இடையிட்டன ஆகும் இன்சொல் பொருளான்**
**தடையற்று ஒழுகுவ பாஞ்சாலம் - அடைவுஅடைவே**
**அக்கவிகள் பாடுமவர்க்கு அங்கு அவைபெயராய்**
**மிக்கு உலகம் கூறும் விதித்து.** [15]

(எ-ன்) ஒழிந்த பாஞ்சாலத்தின் பாகுபாடும் அக்கவிகள் பாடுவோர்க்கு எய்தும் காரணப்பெயரும் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) மென்மையும் கடினமுமாகிய வைதருப்பகௌடங்களோடு கூடாதே இடைநிலைப்பட்டவாம், இனிய சொல்லானும் பொருளானும் தடையின்றி நடைபெற்று ஒழுகுமது பாஞ்சாலபாகமாம். முறைமுறையே அக்குணக்கவிகள் பாடுவோர்க்கும் அங்கங்கு அதுவே பெயராக விதித்து மிக்க பெரியோரால் கூறப்படும் என்றவாறு. அவை வைதருப்பகவி கௌடகவி பாஞ்சாலகவி என்பனவாம்.

[தண்டியலங்காரம் முதலியன வைதருப்பம் கௌடம் என்ற இரண்டு நெறிகளையே கூறியிருப்பவும், இந்நூல்ஒன்றே அவ்விருநெறிகளுக்கும் இடைப்பட்ட பாஞ்சாலநெறி என்ற மூன்றாம் நெறியையும் கொண்டுள்ளது.]

இவற்றிற்கு எல்லாம் செய்யுள் வருமாறு:

**பதியும் மாமுகில் கரிப்படாமுமாய், புனல்**
**நதியுமாய், படுகதிர் நான்ற வேணியாய்,**
**மதிய மாமுளை மதிமதியமாய், தமிழ்ப்**
**பொதியமானது சிவன்போலு மானதே.** (68)

[சிவபெருமான் யானைத்தோலைப் போர்த்திக் கங்கையைத் தாங்கிச் செஞ்சடை-யனாய்ப் பிறைமதி சூடி நிற்கிறான். அவன்போலப் பொதியமானது தன்னிடத்துப் படிந்த கார்மேகமாகிய கரிஉரி போர்த்துத் தன்னிடத்துக் கங்கை போன்ற ஆறுகளை உண்டாக்கி, தன்பால் காணப்படும் மாலைநேரக் கதிரவனுடைய செவ்வொளியைச் செஞ்சடைபோலக் கொண்டு, தன்பால் உதித்துக் காணப்படும் பிறைமதியைச் சூடிச் சிவபெருமான் போலக் காட்சி வழங்குகிறது.]

**உந்திஅம்கமலமேல் உதிப்பதால், உரம்**
**சிந்து தெள்அருவி வெண்ணூலின் செம்மைத்தாய்,**
**பந்திசேர் திசைமுகம் பயிலும் பான்மையால்**
**சந்தமால்வரை மறைத்தலைவன் ஒத்ததே.** (69)

[மறைத்தலைவன் என்று சொல்லப்படும் ஆதிஅந்தணனாகிய பிரமன் திருமாலுடைய கொப்பூழில் தோன்றும் தாமரையில் தோன்றியவன்; மார்பிலே வெண்புரிநூலைச் செம்மையாக அணிபவன்; நாற்றிசையும் நான்முகத்தானும் நோக்குபவன்.
சந்தனம் பொருந்திய பொதியமலையில் உந்திமேல் (ஆற்றின் நடுவில் உள்ள திட்டு) தாமரை தோன்றுகிறது. அதன் வெள்ளிய அருவி பூணூல்போல் சிறப்பாகக் காணப்-படுகிறது. நாற்புறமும் நோக்கப்படும் தன்மைத்தாய் மலை உள்ளது. ஆதலின் பொதிய-மலை பிரமனை ஒத்துக் காணப்படுகிறது.
உரம் - மார்பு, செழிப்பைத் தரும் பொருள்கள்.]

**விண்டு என்று உரைப்பதால், விண்ணின் ஓங்கியே**
**பண்டு உலகுஅளந்த மெய்ப்படிவம் கூர்ந்து, அடிக்**
**கொண்ட நீர் பகீரதிக் கோதை ஒத்தலால்,**
**வண்துழாய் மலைந்த செம்மலையும் ஒத்ததே. (70)**

[திருத்துழாயை அணிந்த திருமால், விண்டு என்று ஆரியமொழிச்சிதைவாகிய வடசொல்லால் தமிழில் வழங்கப்படுகிறான்; வானுற ஓங்கி உலகை அளந்த வடிவம் கொண்டவன்; தன்திருவடியைக் கழுவிய நீரால் கங்கையைத் தோற்றுவித்தவன். மலையானது விண்டு என்ற பெயரானும் கூறப்படுகிறது. அது வானுற ஓங்கி உலகப்பரப்பை அடைத்துக்கொண்ட வடிவம் உடையது. அதன் அடிவாரத்தில் இறங்கி ஓடும் அருவிநீர் திருமாலுடைய திருவடியின்கீழ்க் கங்கை தோன்றி ஓடிய செயலை ஒத்திருக்கிறது. எனவே பொதியமலை திருமாலையும் நிகர்க்கிறது.]

இவை மூன்றும் வைதருப்ப பாகம்.

திணை - பாடாண்; துறை - மலை வருணனை.

**முப்புரத்தினைச் செகுத்த முக்கண் நக்கனில் சிரித்து முத்தலைக் கணிச்சி உக்கதால்**
**தப்பறப் பொருப்பினைக் குலுக்கி இடக்கையைச் செருத்தலத்து உறப்புடைத்து உருத்து எழா**
**நெய்ப்புறத்தினில் குளித்த வச்சிரத்தினைப் பிடித்து, நெட்டுயிர்ப்பு உயிர்த்து இயக்கவே**
**குப்புறப் புழைக்கை வெற்பின் மத்தகத்தினைத் துளைத்த கொப்பளித்த பச்சிரத்தமே. (71)**

திணை - தும்பை. துறை - ஏமஎருமை.

[ஏமஎருமையாவது வீரன் ஒருவன் தன் கையிலிருந்த வேற்படையைத் தன்னை எதிர்க்க வந்த களிற்றின்மேல் செலுத்தி மீண்டும் எதிர்த்துவந்த வீரரைத் தன் உடல்வலிகொண்டே தாக்கிய திறத்தைக் குறிப்பிடுவது.

> 'குடைமயங்கிய வாளமருள்
> படைமயங்கப் பாழிகொண்டன்று'
> 'கைக்கொண்ட எஃகம் கடுங்களிற்றின் மேல்போக்கி
> மெய்க்கொண்டான் பின்னரும் மீட்டு' (பு. வெ. மா. து. 14)

திரிபுரத்தை அழித்த முக்கண்ணினனும் திகம்பரனும் ஆகிய உருத்திரனைப் போலச் சிரித்து, தான் வைத்திருந்த மூன்றுமுனைகளை உடைய மழுவாயுதம் பழுதுபட்டதால், தன் மலைபோன்ற தோள்களைக் குலுக்கிக்கொண்டு இடக்கையைப் போர்க்களத்தில் தரையில் அறைந்தவாறே வெகுண்டு எழுந்து, நெய் பூசப்பட்ட வச்சிராயுதத்தை ஏந்தி யானைமீது செலுத்தவே, அது பெருமூச்சுவிட்டுத் தலைகவிழுமாறு அதன்தலையைப் பிளக்கவே, சூடு மாறாத இரத்தம் அதன் தலையிலிருந்து கொப்புளித்து வெளிப்பட்டது.]

**மத்தகத்து அழுத்து வச்சிரத்தினைப் பறித்து உயர்த்தி மத்தவெற்பு உடற்றி நிற்பதால்**
**நத்து அகத்து அடக்கும் மைக்கடல் கடைக்கனல் சினத்தின் நச்சு உளத்தின் உற்று எதிர்ப்பவே**
**பித்து அகத்து அழைத்து, அடல்பொறிப் புலிப்புலத்தின் உற்ற பெற்றம் ஒப்ப, வட்கி யுட்கு நீடு**
**உத்தமச் சுவர்க்க முற்ற கொற்றவற்கு இமைப்படுத்த ஒத்த, பத்துடைச் சதக்கணே. (72)**

திணை - தும்பை. துறை - யானைமறம்.

[தன்தலையிலே அழுத்தமாகப் பாய்ச்சப்பட்ட வச்சிராயுதத்தைப் பிடுங்கி அதனைக் கைக்கொண்டு உயர்த்தி மதமலையான யானை அந்த ஆயுதத்தை அதனை எறிந்தவனான தன்மீது செலுத்த நின்ற நிலை கண்டு, சங்குகள் தங்கும் கரிய கடலிலிருந்து ஊழிஇறுதியில் புறப்படும் பெண்குதிரை முகத்தீயைப் போலப் போரை விரும்பிய உள்ளத்தில் சினம் மூண்டவனாய், அந்த யானையை அவ்வீரன் எதிர்க்கவே, போரிடும் வெறியை உள்ளத்துக்கொண்டு கொடிய கோடுகளை உடைய புலியிருக்கும் இடத்து அகப்பட்ட காளையைப் போல, அவ்வீரன் ஒளி குறைந்து அஞ்சிய அச்சத்தைக் கண்டு, யானையின் பேராற்றலைக் காணக் கண் கூசியதால், மேம்பட்ட தேவருலகத் தலைவனான இந்திரனுக்கு ஆயிரம்கண்களும் இமைப்பன போல மூடித்திறந்தன.

திணை - தும்பை; துறை - யானைமறம் என்பதற்கேற்பக் களம் வகுத்துப் போரிட்ட போரிலே யானை தான் தலையில் புண்பட்டும் தன் வீரத்தைப் புலப்படுத்திய செய்தி கூறுவது இப்பாடல்.]

**புற்புதக் கடக்கவுள் பொருப்பு வச்சிரத்தினைப் புழைக்கையில் புடைத்து இயக்கவே**
**உற்றது உக்கிரச்சமர்க்கு உடக்கு மிக்கு, உரத்து உரத்து உடைத்ததைப் பறித்து உருத்திடா**
**அற்புதத்து எதிர்த்து இயக்க, நெட்டடிக்குள் உற்றது ஒற்றை அக்களிற்றை விட்டு, முட்டவே**
**தெற்கு வெற்பினைத் துளைத்தது, அப்புறப் புறக்கொடைத் திசைக்களிற்றினைத் துளைத்ததே. (73)**

இவை மூன்றும் கௌடபாகம். திணை - தும்பை; துறை - ஏமஎருமை.

[குமிழி கொப்பளிக்கும் மதமொழுகும் கன்னத்தை உடைய மலைபோன்ற யானை வச்சிராயுதத்தைத் தன் துதிக்கையால் அடித்து வீரன்மீது செலுத்தவே, கடுமையான அப்போரிலே யானைமீது படைக்கலனைச் செலுத்தும் எண்ணம் மிக்குப் பேரொலி எழுப்பித் தன்மீது தைத்திருந்த வச்சிரத்தைப் பறித்து வெகுண்டு, பிறர் வியக்கும் வகையில் அதனைச் செலுத்த, வச்சிரத்தால் தாக்கப்பட்ட யானை அவனுடைய நீண்ட காலடியில் வீழ, அதனைத் துளைத்துச் சென்ற வச்சிரம், தெற்குமலையினைத் துளைத்து, அதனோடும் அமையாமல் வெளிப்பட்டுத் தென்திசை எல்லையிலிருந்த திசையானையின் உடலையும் துளைத்தது.]

**விரைக்கமலம் முறுக்குஉடைந்த தகட்டுஅகட்டின் நடுப்பொகுட்டு வெண்தோட்டு உம்பர்**
**நிரைக்கமலத்து இனிது இருந்து சூட்டுஎகினம் பார்ப்புஅருத்த நினைந்து நீர்வாய்**
**இரைக்கு எழவே, செங்கால் வெள்உகிர் உறும்முன் இதழ்உரிந்து இழிந்த தீந்தேன்**
**நரைக்குடுமி மறைக்கிழவன் நெருப்பிடை நெய் உகுப்பனபோல் நான்ற மாதோ. (74)**

திணை - பாடாண்; துறை - நாடுவாழ்த்து.

[நறுமணமுடைய இதழ் நிறைந்த தாமரையின் நடுப்பகுதியான பொகுட்டின்மீது இருந்தவாறே உச்சிக்கொண்டையை உடைய அன்னம் தன்குஞ்சுகளுக்கு உணவு கொணர்ந்து ஊட்டக் கருதி அங்கிருந்து புறப்பட, அதன் செங்கால்களின் வெள்ளிய நகங்கள் பட்ட அளவில் இதழ்கள் கழல, தாமரையிலிருந்து ஒழுகும் தேன், அருகிலுள்ள செந்தாமரைமலர்மீது நரைத்த தலையை உடைய அந்தணன் நெருப்பில் நெய்யை ஊற்றுவது போலச் சொட்டுச்சொட்டாக விழத் தொடங்கியது.

வெள்ளை அன்னத்தை நரைத்த வேதியனாகவும் பக்கலில் உள்ள செந்தாமரையை நெருப்பாகவும் தேனை ஆகுதி நெய்யாகவும் உவமை கூறியவாறு.]

**மாது அண்டர் புகழ்ந்திட வாழ்ந்தருள் வாமபாகத்து மழைதோய் வெள்ளி**
**வேதண்டம்மிசைப் பவளவேதண்டம், பகிர்அண்டம் விழைவு கூர்வான்,**
**மூதண்டமுகடு தொடு மும்மதிளின் முரண்முருக்க முன்கைக் கொண்ட**
**கோதண்ட வடவரைபோல், பணைத்த கெந்தமாதனமாம் குன்று ஒன்று**
**உண்டே.** (75)

திணை - பாடாண்; துறை - மலைவாழ்த்து.

[விருப்பமுடைய தேவர்கள் புகழ்ந்திட நிலைபெற்றுப் பயன்அளிப்பதாய் இடப்பக்கத்ததாய மேகம் படியும் வெள்ளிமலைக்கு மேலே உள்ள பவளமலை போன்ற சிவபெருமான், பலஉலகமும் மகிழுமாறு, அண்டத்து உச்சிவரை செல்லும் மும்மதில்களின் ஆற்றலை ஒடுக்கத் தன்கையில் ஒருகாலத்தில் வில்லாக ஏந்திய மேருமலைபோலப் பருத்த கந்தமாதன மலை உள்ளது.]

**நெய்த்து இருண்டு சுருண்டு கடைகுழன்று அறலின் கெழுதகைத்தாய்**
**நெறித்து நீண்டு**
**மொய்த்திருக்கும் குழற்காட்டின் முகை அவிழ் பூந்துணர் விரையும் முற்றா**
**முன்னர்**
**எய்த்துஇருக்கும் இடைக்கு, இடர்மேல் இடர்இழைக்கும் தமர்போலும்,**
**இறுமாந்து ஒண்பூண்**
**வைத்திருக்கும் முலைமுகட்டில் பொதிகளபத்து ஒளிவிரையும் வளைந்த**
**மன்னோ.** (76)

திணை - பாடாண். துறை - குழல்வருணனை.

[பளபளப்பு உடையதாய்க் கறுத்துச் சுருண்டு இறுதியிலும் வளைந்து கருமணல்போல் படிப்படியாக அமைந்து நடுவிடமும் சுருண்டு நீண்டு செறிந்திருக்கும் கூந்தலாகிய காட்டில் மொட்டுக்களாக இருந்து மலர்ந்திருக்கும் பூங்கொத்துக்கள் நறுமணம் மிகுதியும் வீசுவதன் முன்னர், முன்னமேயே இளைத்திருக்கும் இடைக்குத் துன்பத்தின்மேல் துன்பத்தை உண்டாக்கும் உறவினர் போலத் தருக்குற்றுச் சிறந்த அணிகலன்களை அணிந்திருக்கும் முலைகளின் நுனிகளில் பூசிய கலவைச்சந்தனத்தின் மறைந்திருக்கும் நறுமணமும் எங்கும் கமழ்ந்து அவ்விடப்பரப்பை வளைக்கும்.]

இவை மூன்றும் பாஞ்சாலமாகும். இவை ஒன்பதும் (68-76) குருகாமான்மியம். இவை மூன்றுபாகமும் பல அடியான் வரும் ஒருசெய்யுளின்கண்ணே பலஅடிதோறும் விரவியும் பேதித்தும் வருவனவும் உள. அவையும் மேற்காட்டுதும். [15]

### வைதருப்ப குணஅணிகள்

**80. இன்பம் தெளிவு செறிவுசமன் இன்னிசையே**
**நன்சொல் உதாரம் நவின்றவலி - மன்காந்தம்**
**தையல்! உய்த்தலில் பொருண்மை சாற்றும் சமாதியுடன்**
**ஐஇரண்டும் வைதருப்பம் ஆம். [16]**

(எ-ன்) எடுத்தமுறையானே(77) வைதருப்பத்திற்கு எய்துவனவாம் குணஅலங்காரங்கட்குப் பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) இன்பமும் தெளிவும் செறிவும் சமனிலையும் இன்னிசையும் உதாரமும் வலியும் காந்தமும் உய்த்தலில் பொருண்மையும் சமாதி என்பதனோடு பத்தும் வைதருப்ப குணஅலங்காரமாம் என்றவாறு. [16]

கவுடமும் பாஞ்சாலமும்

**81. ஏனைக் கவுடம்இவை ஈரைந் தொடும்கூடா**
**மானைப் பழித்த மதர்விழியாய் - நூல்நயந்துஇங்கு**
**எண்ணிய பாஞ்சாலம் இவைகட்கு இடைப்பட்டு**
**நண்ணியதுஓர் சால்புஉடைத்தாம் நன்கு.** [17]

(எ-ன்) ஒழிந்தனவாம் கவுட பாஞ்சாலங்களும் அக்குண அலங்காரம் ஏற்கும் கூறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) ஒழிந்த கவுடமும் இங்ஙனம் எண்ணப்பட்ட பத்தினோடும் கூடாது நடக்கும் இலக்கணத்ததாம் என்றவாறு. ‘பத்தினோடும் கூடாது’ எனவே, உம்மை எச்சமாதலால் சிலவற்றோடும் கூடியும் வரும் என்பதாம். பாஞ்சாலமும் அப்பத்தினோடும் வைதருப்பகவுடங்களோடும் கூடாது இடைப்பட்டு நடத்தலைப் பொருந்தும் ஒழுக்கத்தினை உடைத்து என்றவாறு. இவைகட்கும் என்னும் உம்மை இறந்ததுதழீஇய எச்சஉம்மையாம்.

['முற்றிய உம்மை தொகைச்சொல் மருங்கின்
எச்சக்கிளவி உரித்தும் ஆகும்' (தொ. சொ. 287 ந.)

என்பதனால் பத்தொடும் என்ற முற்றும்மை எச்சஉம்மையாய்ப் பொருள் தந்தது.] [17]

குணஅணிகள்

**82. சொல்லால் பொருளால் சுவையுறல் இன்பம்; தெளிவு**
**ஒல்காப் பொருள்புலப்பாடு; ஒண்செறிவு - நல்லாய்!**
**எழுத்து ஓர்இனம் செறிதல்; எல்லாஎழுத்தும்**
**வழுத்தீர்ந்து உறல் சமனும் ஆம்.** [18]

**83. இன்னிசையது இன்னிசையாம்; ஏய்ந்த உதாரம் குறிக்கொள்**
**சொல்நடையால் வேறுபொருள் தோன்றலாம்; - நன்னுதாஅல்!**
**வாய்ந்த தொகை மிக்குவருதல் வலி; காந்தம்**
**ஆய்ந்து ஒன்றனை உயர்த்தலாம்.** [19]

**84. செய்யுட்பொருளைத் தெளிய விரித்தற்கு உரிச்சொல்**
**எய்து நடைத்து உய்த்தலில்பொருண்மை; - தையலாய்!**
**ஓங்கும் சமாதி உபமேயத்தின் வினையை**
**ஆங்குஉவமைக்கு ஏற்றுவது ஒன்றாம்.** [20]

[இவை மூன்றுசூத்திரமும் உடன் எழுதப்பட்டன.]
(எ-ன்) இவை இன்பம் முதல் சமாதி ஈறாய பத்தும் ஆமாறு உணர்த்துதல் நுதலின.
(இ-ள்) சொல்லினானும் பொருளினானும் இனிமைஉற வருதல் இன்பமாம். தெளிவு என்பது கவியால் கருதப்படும் பொருள் கேட்போர்க்குக் குறிப்புமொழி இன்றி வெளிப்படைமொழியாகத் தோன்றுவதாம். ஒள்ளிய செறிவும் மூ-

வினமாகிய எழுத்துள் ஓரினம் மிகுந்து செறியப் பாடுவதாம். 'ஒள்ளிய செறிவு' என்றதனால் எழுத்தானாய சொல்லானாய பொருள் செறிதலும் கொள்க. சமனிலை மூவினமும் விரவப் பாடுவதாம். இரட்டை துணிவு.

[அஃதாவது வல்லினம் மெல்லினம் இடையினம் என்ற முத்திறமெய்களில் இரு-வகையேனும் தவறாது பாடலில் இடம்பெறல் வேண்டும் என்பது]

உதாரம் செய்யுள் சொல்நடையால் வரும் பொருளன்றி அதன் குறிப்பினால் வேறுபொருள் தோன்றுவதாம். வலி தொகைச்சொல் மிக்கு வருவதாம். காந்தம் ஒன்றனை உயர்த்திப் புகழுங்கால் உலகநடை இறவாமை ஆராய்ந்து உயர்த்-துவதாம். உய்த்தலில் பொருண்மை கவி தன்னால் கருதிய செய்யுட்பொருளை விளங்க விரித்துக் கூறுவதற்குப் பிறிதுமொழி பெய்து கூட்டாது அதற்குரிய சொற்கள் செய்யுளகத்து உளவாம்படி பாடுவதாம். சமாதி உவமேயத்தின் வினையை உவமைக்கு ஏற்றுவதோர் இலக்கணத்ததாம் என்றவாறு. இதனைச் 'சாற்றும் சமாதி' என்றதனால் குணஅலங்காரங்கள் பத்தினுள்ளும் இதுவே சிறந்த குணஅலங்காரம் என்பதூஉம் இஃது மூன்று நெறியாருக்கும் ஒக்கும் என்பதூஉம் ஆயிற்று.

இவற்றிற்கு எல்லாம் எண்ணும்மை இடையிட்டு வந்தன. ஆம் என்பதனைச் சூத்திரம்தோறும் இறுதிவிளக்காகக் கூட்டுக. நல்லாய், நன்னுதாஅல், தையலாய் என்பன மகடூஉ முன்னிலை.

[மூன்று சூத்திரங்களால் கூறப்படும் இப்பத்துக் குணஅணிகளையும் எண்ணும்மையால் இணைத்தல் வேண்டா. ஆம் என்பது இம்மூன்று சூத்திரத்தும் இறுதியில் உள்ள சொல். அதனை இன்பமாம், பொருள் புலப்பாடாம், செறிதலாம், வலியாம், உய்த்தலில் பொருண்மையாம் - என ஆம் என்ற சொற்களைக் கொள்ளாத ஐந்து குணஅணிகளின் பெயர்களுக்கும் முடிக்குஞ்சொல்லாகக் கொள்ளவேண்டும் என்பது இவ்வுரையாளர் கருத்து.]

அவற்றுள் சொல்லின்பமாவது, 'அடைசினை முதல்' என முறை மூன்றும் மயங்காமை வரும் வண்ணச்சினைச்சொற்களும், முதலொடு குணம் இரண்டு அடுக்கிவரும் அடைசொற்களும், சினையொடு குணம் இரண்டு அடுக்கிவரும் அடைசொற்களும், வழக்கிடமும் செய்யுளிடமுமாக இரண்டு இறந்தனவாய் அடைபல வேண்டினவழியே புணர்ந்த சொற்களுடன் வழிமோனை முதலியன வரத்தொடுப்பனவாம். அவற்றால் கேட்டோர் பெறும் இன்பம் சொல்லின்பம். பொருளாவன அறம் பொருள் இன்பம் வீடு என்பன. அப்பொருளால் வரும் இன்பமாவது மலரின் மதுக்காரணமாக மதுகரங்களுக்கு வரும் இன்பம் போலக் கவிப்பொருள் உட்கொண்டோர்க்கு வரும் இன்பமாம். எனவே, அவ்விரண்-டினுள், பொருளணியுள்ளும் முக்கியமான பொருளணி உடைத்தாய்ப் பாடுவதே பொருளின்பமாம். இனிச் செய்யுள் வருமாறு:

1. இன்பம்

**வெண்திரைப் புனல்அறா வியல்அயல் வயல்விரி**
**வண்டுஇமிர் பாசடைக் குவளைமென் பனிமலர்,**
**புறக்கொடை மதிதரப் பொதிஅவிழ்ந்ததுபோய்ச்**
**சிறக்கணித்தனவாம் சேயிதழ்க் குமுதம்,**
**முள்தாள் தாமரை முறுக்குஉடை நாள்மலர்,**
**கள்காமரு கடைவாய் வழிந்து இழிதர**

**மேய்தரு கயவாய் மேதி கன்றுஉள்ளுபு**
**பணைமுலை சுரந்து பனித்த பால்தடினி,**
**நெடுவெண் திங்கள் நிறைமறுத் துடைத்துஒளிர்**
**செந்தளிர்ப் பூஞ்சினைத் தேமாத்து உகுகனி,**
**முடப் பரியரைப் பலா முட்புறக் குடக்கனி,**
**புறக்காழ் மரகதப் பூக மிடற்றின்**
**நிறக்காழ் திரண்டு நீண்டுஉதிர் பழுக்காய்,**
**நெட்டிலை அரம்பையின் நீடுபொற் கூன்கனி,**
**புதைஇருள் துரீஇக் கதிர் பொழி நவமணிக்குவை,**
**சுழித்துஎடுத்து இரைத்தவாய்த் தூமலர் பலகொடு,**
**பாற்கடல் பொன்னியுள் படி திருஉருவம்**
**காண்பதின் முன்னிய காட்சிஒன்று எனலாய்,**
**துறைதொறும் துறைதொறும் துழனியின் வளைக்கும்**
**திருஅரங்கேசனைத் திருமறு மார்பனை**
**மனத்துற நினைந்தும் வாழ்த்தியும் வணங்குநர்**
**எக்குலத்து எவரே யாயினும்**
**அக்குணத்தவர்க்கு அடியேன் அடியேனே.** (77)

இந்நேரிசைஆசிரியப்பாவினுள், நால்வகை அடைசொற்களும் வந்தவாம். சொல்லின்பத்தோடு பொருளின்பமும் வந்தமையால் இது சொற்பொருள் இன்பம். இதனுள் ஈரடை முதலொடும் சினையொடும் புணர்ந்தன வைதருப்பம். இரண்டு இறந்தன மூவடை புணர்ந்தன பாஞ்சாலம். இரண்டும் மூன்றும் இறந்த பலஅடை புணர்ந்தன கௌடச்சொல்லின்பம். ஆதலால் சொல்லின்பம் மூன்று-பாகமும், அவற்றோடு மூன்று நெறியார்க்கும் ஒருதன்மைத்தாம் பொருளின்-பமும், பலஅடியான் வரும் ஒரு செய்யுளகத்துக் காட்டியவாறு கண்டு கொள்க.
இதனுள் பொருளணியாவது தற்குறிப்பேற்றஉவமை.
திணை - பாடாண். துறை - நாடுவாழ்த்து.

[ஈரடை முதலொடு செறிந்தனவும் சினையொடு செறிந்தனவும்

வெண்திரைப்புனல்
வியல்அயல்வயல்
சேயிதழ்க்குமுதம் - சினை
முள்தாள்தாமரை - சினை
கயவாய்மேதி
நெடுவெண்திங்கள்
நெட்டிலை அரம்பை
நினைத்தும் வாழ்த்தியும் வணங்குநர்

மூவடை செறிந்தன

தாமரை முறுக்குஉடை நாள்மலர்
கள்காமரு கடைவாய்
மேய்தரு கயவாய்மேதி
செந்தளிர்ப் பூஞ்சுனை
முடப்பரியரைப்பலா
புறக்காழ் மரகதப் பூகமிடறு

மூன்றற்கு மேற்பட்ட அடைசெறிந்தன

வண்டுஇமிர் பாசடைக்குவளை மென்பனிமலர்
பணைமுலை சுரந்து பனித்த பால் தடினி
செந்தளிர்ப் பூஞ்சினைத் தேமாத்து உகுகனி
முடப்பரியரைப் பலா முட்புறக்குடக்கனி
பூகமிடற்றின் நிறக்காழ் திரண்டு நீண்டுஉதிர் பழுக்காய்
நெட்டிலை அரம்பையின் நீடுபொற் கூன்கனி
புதைஇருள் துரீஇக் கதிர்பொழி நவமணிக்குவை

எருமையின் பால்வெள்ளம் திருவரங்கத்தை நோக்கிப் பெருக்கெடுத்து மகிழ்வுடன் வருதல், பாற்கடல் திருஅரங்கேசனை இருகூறாகப் பிரிந்து வளைத்துக்கொண்டு நுகர்வதற்காகவே வருவதுபோலும் என்பது தற்குறிப்பேற்ற உவமை.

பொழிப்புரை:

வெள்ளிய அலைகளை உடைய நீர்ப்பெருக்கு நீங்காத வயலை அடுத்த பரந்த பரப்பில் மலர்ந்த, வண்டுகள் ஒலிக்கும் பசிய இலைகளை உடைய குவளையின் குளிர்ந்த மெல்லிய மலர்களையும், சந்திரன் மறைந்ததால் மலர்ச்சி நீங்கி ஒருபுறமாகத் தலையைச் சாய்த்துக்கொண்ட செவ்விய இதழ்களை உடைய குமுதமலர்களையும், முள்ளை உடைய தண்டுகளை உடைய தாமரையின் இதழ் விரிந்து மலர்ந்த புதிய மலர்களையும், விரும்பத்தக்க தேன் வாயின் இறுதிவழியே வழிந்து ஒழுக மேய்ந்த பெரிய வாயினை உடைய எருமை, தன் கன்றினை நினைந்ததால் பருத்த மடிக்காம்பு பெருக்கத் தானே பிறர் கறவாமல் பெருக்கெடுத்து ஓடிய பாலாறு, சந்திரனுடைய களங்கத்தைத் தான் தீண்டி நீக்கி ஒளிவீசச் செய்யும் வானளாவிய, செந்தளிர்களையும் பூக்கள் நிரம்பிய கிளைகளையும் பண்டு உடையதாயிருந்த ஒட்டுமாமரத்திலிருந்து உதிர்ந்து விழுந்த கனிகள், வெளியே வயிரம் உடைய பாக்குமரத்தின் மரகதம் போன்ற பசுமையான கழுத்துப்பகுதியில் செந்நிறத்தனவாய் முற்றி உதிர்ந்த பழுத்த பாக்குக்கள், நீண்ட இலைகளை உடைய வாழையின் நீண்ட மஞ்சள் நிறமான வளைந்த கனிகள், செறிந்த இருளை விரட்டி ஒளிவீசும் பலவகை மணிகள் இவற்றைச் சுழிகளிடையே அடித்துக்கொண்டு ஒலிசெய்து பல தூயமலர்களையும் கொண்டு, பாற்கடலானது காவிரிக்கரையில் கிடந்த திருக்கோலத்தில் இருக்கும் எம்பெருமானுடைய அழகிய வடிவினைத் தரிசிப்பதன்கண் ஈடுபட்டு வரும் காட்சி இது என்று கருதும்படியாக, பல நீர்த்துறைதோறும் ஒலித்துக்கொண்டு திருஅரங்கத்தைச் சுற்றி ஓடுதற்குக் காரணமான திருமகள்கேள்வனாம் திருஅரங்கேசனை மனத்தால் நினைத்தும், வாயால் வாழ்த்தியும், உடலால் பணிந்தும் வழிபடுபவர் எக்குலத்தில் பிறந்த யாவராய் இருந்தாலும், அந்த உயரிய பண்பினை உடைய அவருக்கு அடியேன் என்றும் அடிமையாகவே இருப்பேன் என்று எம்பிரான் அடியவராம் சான்றோர்கள் வாழ்வதால், வளம் மிக்க நாட்டினைக் குறிப்பால் வாழ்த்தியவாறு.]

**பொன்அசலம் திரண்டு இரண்டாம் பொருஅமர்தோள் கமலக்கண் பொலிந்து நின்றார்**
**அன்னவயல் குருகூரர் அணிவரைவாழ் மதர்நெடுங்கண் அணியிழாய்! கேள்.**
**மின்இடையார் புறந்தருநாண் மிகுகாமக்கடல் ஆழ்ந்த மிக்கோர்தங்கள்**
**மன்உயிரைத் தரும் புணைதான் மலிதிரைநீர்க் கடல்இடத்தார் மடல் என்பாரே.**
(78)

இது வைதருப்பச் சொல்லின்பம்.
பகுதி - மடல். துறை - உலகின்மேல் வைத்து உரைத்தல்.
இவ்வாறு பொழிப்புமோனையாய் வருதல் இன்னாது என வேண்டுவர் கௌடர்.

[இருமேருமலை போன்ற ஒப்பற்ற தோள்களையும் செந்தாமரைக் கண்களையும் உடைய பொலிந்து நின்ற பிரானுக்குரிய அன்னம் பயிலும் வயல்களை உடைய குருகூர் மலையில் வாழும் செழித்த நீண்ட கண்களை உடைய தோழியே! கேட்பாயாக. நாணமுடைய பெண்கள் காரணமாக மிக்க காமக்கடலில் ஆழ்ந்த ஆடவருடைய உயிரைக் காக்கும் தெப்பம் மடல்ஏறுதலே என்று உலகவர் கூறுவர் என்று மடலே வழி என்று முடிவுசெய்த தலைவன் தோழியிடம் கூறியவாறு.]

**குயில்ஆலும் குளிர்பொழில்தென் குருகேசன் குழகன்உயர் குன்றில் குன்றாக்**
**கயிலாயன் களத்துஅணிந்த கடுவிடமும் கரத்துஉழையும் கரந்த கண்ணாய்!**
**மயில்ஆலும் மழைதவழ்நும் மணிவரைக்குஎம் மணிவரைநின் மணிப்பூண் மன்னும்**
**பயிலாரப் பணைமுலைக்குஓர் பணைமுலைஎப் படிஎனும்அப் படியாம் பண்பே.** (79)

(எ-ன்) இது கௌடச் சொல்லின்பம்.
பகுதி - வன்புறை; துறை - இடம் அணித்துக் கூறி வற்புறுத்தல்.

[(இ-ள்) குயில்கள் கூவும் குளிர்ந்த சோலைகளை உடைய அழகிய குருகைநகர் எம்பிரானுக்குரிய மலையிலே, சிவபெருமானுடைய கழுத்துவிடத்தின் நிறத்தையும் கையிலுள்ள மானின் பார்வையை ஒத்த மருட்சியையும் உடைய கண்களைஉடைய தலைவியே! மயில்கள் ஆடுவதும் மேகம் தவழ்வதுமான உங்கள் அழகிய மலையும் எங்கள் மலையும் இரண்டு தனங்களைப்போல நெருங்கி இணைந்துள்ளன எனத் தலைவன் தலைவிக்குத் தன்இடத்து அணிமை கூறி அவளைப் பிரியாமையை வற்புறுத்தி உரைத்தவாறு.
இப்பாடற்கண் சீர்மோனை அடிதோறும் முற்றுமாக வந்தவாறு.]

**கடுவே கயல்எனக் கரந்துஅடும் கண்இணை**
**காமனும் காமுறும் காட்சிய காண்முகம்**
**கிள்ளையின் கிளையும் கிளைத்தகைக் கிளைஉடைக்**
**கீரமும் கீர்த்தி கீரமும் கீரே**
**குவடுஉடைக் குளிர்பொன் குன்றே குவிமுலை**
**கூர்புதன் கூன்சிலை கூற்றுயிர் கூட்டுணும்**
**கெடல்அருங் கெழுதகை கெழுமுபு கெழீஇய**
**கேகயம் கேளொடும் கேடுறும் கேழியல்**
**கைபுனை கைக்குஇசை கைக்குஇணை கைத்துணை**
**கொண்டல்உட் கொண்டன்ன கொண்டையும் கொடியிடை**
**கோடாக் கோவலர் கோற்றொடி கோமான்**
**கௌரவ கௌசிகன் கௌசிகம் கௌத்துவம்**
**மணிஎனக் கொண்டு மனவீடு அளித்தோன்**
**கண்ணன் குறுங்குடிக் கனவரை**
**மண்ணகத்து உறையுளாய்! வளர்நில மகட்கே.** (80)

இது ககர வருக்க முற்றுமோனை. இதுவும் கவுடச்சொல்லின்பம்.
பகுதி - பாங்கற்கூட்டம். துறை - இயல்புஇடம் கூறல்.

[நெறி பிறழாத இடையர்குலமகளாகிய நப்பின்னையின் தலைவனாய்த் துரியோதனாதியருக்குக் கௌசிகமுனிவன் போலத் தீங்கு தருபவனாய்ப் பட்டாடையை உடுத்துக் கௌத்துவமணியை அணியாகப் பூண்டு அடியார்கள் நிலைபெற்றிருக்குமாறு வீடுபேற்றை நல்கும் கண்ணபிரானுக்கு உரிய திருக்குறுங்குடியை அடுத்த பெரிய மலையில்

இல்லத்தைக் கொண்டு வாழும் இந்நிலவுலகப் பெண்ணாகிய தலைவிக்குக் கயல்போன்ற கண்ணிணைகள் மறைந்து உயிர் பறிக்கும் விடம் ஆகும். அழகிய முகம் மன்மதனாலும் காமுறத்தக்கது. கிளிக்கூட்டங்கள் போலத் தோழியர்குழாம் உள்ளது. அவள் பால்போன்ற மறுவற்ற குடிப்பெருமை உடையாள்; பால்போன்ற இனிய சொல்லாள்; குன்றுகளை ஒத்த முலையாள்; காலனையும் கொல்லவல்ல புருவத்தாள்; விடாது கூட்டமாக வாழும் மயில்கூட்டத்தையும் தன் கட்புலனாகும் மென்மையால் வென்ற மென்மையாள், கைக்குப் பொருத்தமாக இருகைகளிலும் வளையல்கள் புனைந்துள்ளாள்; மேகம் போன்ற கூந்தலைக் கொண்டையாக அணிந்துள்ளாள்; கொடிஇடையாள் - என்று தலைவன் தன் பாங்கனிடம் தலைவியின் வடிவத்தை வியந்து கூறியவாறு.]

**கயல்எனவே மதர்த்துஅமர்ந்த கருநெடுங்கண் இவள்தனக்குஇக் கன்னி மன்னோ**
**அயல்எனவே அமர்துணைஅன்று; அளவளாய் அமர்துணை;என்று அறிந்தது, அன்பால்**
**மயல்அறவே இயல்தமிழ்செய் மகிழ்மாறன் துடரியின்கண் மணந்த காதல்,**
**புயல்எனவே புரைநறுமென் புரிகுழற்குப் புகல்வல்,இனிப் புகலு மாறே. (81)**

இது பாஞ்சாலச் சொல்லின்பம்.
பகுதி - மதியுடம்படுதல். துறை - குறையுறத் துணிதல்.
'குயில் ஆலும்' (79) என்பதனையும் பாஞ்சாலச்சொல்லின்பம் எனினும் ஆம்.

[(இ-ள்) "'கயற்கண்ணளாகிய தலைவிக்கு இந்நங்கை அயன்மை உடையவள் அல்லள்; உயிர்த்தோழியே' என்பதனை அறிந்து, மயக்கமற அர்த்தபஞ்சகத்தைத் தமிழால் செய்தருளிய மாறனுடைய துடரிமலையில் யானும் தலைவியும் சேர்ந்த சேர்க்கையை அச்சுரிகுழல் நங்கைக்குப் புலப்படுத்துவதோராற்றான் புலப்படுப்பேன்" என்று தலைவன் தோழியிடம் உரையாடி அவள்உள்ளம் தன்கூட்டத்துக்கு உதவுமாறு செய்தற்கண் ஈடுபட்டவாறு.]

**வண்ணமுலைப் பொற்றாமரைமுகுளம் வீறுஅழிந்து**
**கண்நெகிழா வண்ணம் கருதியோ, - தண்மதியை**
**மால்வைத்த மாநிதி வண்கோளூரில் வாள்நுதால்!**
**மேல்வைத்தான் மேனாள் விதி? (82)**

இது பொருளின்பம். இதனுள் முலையாகிய பொற்றாமரைமுகை அவிழாதிருப்ப அதன்மேலாகப் பிரமன் மேனாள் முகம் என்று பெயரை உடைய மதியை வைத்தான் என்னும் பொருளின்பம் வந்தவாறு காண்க.
பகுதி - இடந்தலை. துறை - மருங்கு அணைதல்.

**மேலைமலைக் கதிர் மறையக் குவிமரையுள் தேன்நசையான் மீளா வைகிச்**
**சோலையில் வண்டினம் திறப்ப வயல் கழுநீர்இடம் தோய்ந்த சுரும்பு, மாதோ**
**மாலையில் தன்மனைபுகுதும் மணமகனை விறலியொடு மதங்கன் பாடிக்**
**காலையினில் துயில்எழுப்ப, கடைதிறந்து பரத்தைஇல் போகிய காட்சித்தே. (83)**

இதுவும் பொருளின்பம். திணை - பாடாண். துறை - நாடுவாழ்த்து.

[(இ-ள்) மாலையிலே சூரியன் மறையவும் தேனிடத்துள்ள விருப்பத்தால் மூடிக்கொண்ட தாமரையை விடுக்காமல் இரவில் அதன்கண்ணேயே தங்கிக் காலையில் தாமரை மலர்ந்ததும் புறப்பட்டுச் சோலைகளிலுள்ள வண்டுகள் மலர்த்திய கழுநீர்ப் பூக்களில் தோய்ந்த வண்டு, மாலையிலே தன் வீட்டில் நுழைந்து தங்கிய தலைவனைக் காலையில்

பாடினியும் பாணனும் துயிலெழுப்ப அவன் பரத்தைஇல்லம் நோக்கிச் சென்ற காட்சி போல்வது.]

**திரகாயத்து இரிகருணைக்கு இலக்கு ஆகும் உணர்வுஉடையோர், சித்திகாட்டப்**
**பரகாயத்திடைப் புகுந்து மறித்து ஒருகாயம்புகும் அப்பான்மை ஏய்ப்ப,**
**உரகாயத்து உரிவை உரீஇ, ஒருபாந்தள் ஒருபாந்தள் உரிபுக்கு ஊர்ந்து**
**வரகாயத்து அகடுஉரிஞ்சும் பல்தலைய மலைமுழைபோய் வைகும் மாதோ.**
**(84)**

இதுவும் பொருளின்பம்.
துறை - மலைவருணனை. இவை இரண்டும் குருகாமான்மியம்.

இன்பம் முற்றும்.

[தமக்கு என உறுதியான உடல் இருப்பதனால் அதனால் ஏனைய இறந்துபட்ட உடல்களுக்குள்ளும் சென்று புகும் கருணைஉள்ளம் படைத்த சான்றோர், தமக்குப் பரகாயப்பிரவேசம் சித்தித்திருப்பதனைப் புலப்படுத்த வேற்றுஉடலில் புகுந்து மற்றோ-ருடலில் செயற்படுவது போல, பாம்பு தன்தோலை உரித்துவிட்டு வேறொரு பாம்பு உரித்த தோலுக்குள் புகுந்து வானளாவிய பலசிகரங்களை உடைய மலைக்குகைக்குள் போய்த் தங்கியிருக்கும்.]

2. தெளிவு

**ஏஒன்று உடக்கி இருபதுகைக் கார்வயிரத்**
**தூஒன்று உடலம் துளைபடுத்த - காஒன்று**
**அரங்கத்தான் அல்லாது அனைத்துஉயிரும் காத்தற்கு**
**இரங்கத்தான் வல்லார் எவர்? (85)**

இது வைதருப்பத் தெளிவு. துறை - கடவுள்வாழ்த்து.

[ஓரம்பைச் செலுத்தி இருபது கைகளை உடைய வலிய புலால் நிரம்பிய இராவணன் உடலைத் துளைப்படுத்தி அழித்த, சோலைகள் பொருந்திய அரங்கத்துஅம்மானைத் தவிர எல்லாஉயிர்களையும் காப்பாற்றுவதற்குரிய கருணைஉடைய தேவர் வேறு யாவர் உளர்?]

**தேனே! முளைமதியம் செந்தழல் பாரிப்ப இருந்-**
**தேனே, அயலார் சிரிப்பவே; - தேன் ஏய்**
**இறை வகுளத்தாமர் ஐயோ எய்தார்; வேள்எய்து**
**குறைவ குளத் தாமரையோ? கூறு. (86)**

(எ-ன்) இது சொல்லால் கவிஅருமையும் நோக்குடைப் பொருள்கோளும் தோன்றத் தொடுத்தமையால் கௌடத்தெளிவு.

(இ-ள்) தேன் போலும் இனிய மொழியினை உடையாய்! இளம்பிறையானது தழலை விரிப்பவும் அயலார் சிரிப்பவும் இத்துணைப் போதும் உயிரைத் தாங்கி இருந்தேனே! இங்ஙனம் இருந்த எனது துன்பமிகுதியும் நாண்துறந்ததும் கண்டு தேனை ஒழுக்காநின்ற வகுளத்தாமத்தை உடையோர் அந்தோ! மேவுகிலர். இனிக்காமன் எய்து குறைந்து போவன குளத்தின்கண் தாமரை ஒன்றேயோ? ஓடையில் காவியும் என் ஆவியும் அல்லவோ? கூறுவாயாக என்றவாறு.

ஏகாரம் மூன்றினுள் முன்னது விளி. இரண்டாவது இரக்கத்தின்கண் குறிப்பு. பின்னையது ஈற்றசை. தாமரையோ என்னும் ஓகாரம் ஒழியிசை.

திணை - பெண்பால்கூற்றுப் பெருந்திணை. துறை - துன்பமிகுதி தோழிக்கு உரைத்தல்.

[தேனே - ஏகாரம் விளி. இருந்தேனே - இரக்கம். சிரிப்பவே - ஈற்றசை.]

**உள்ளத்து உணர்வுஎனும்கண் உட்கொண்டு காண்பதற்குக்**
**கள்ளக் கருங்கண் கலுழ்வனகண்டு - எள்ளிப்**
**பிரியாரையும் திருமால் பேர்நகரார் தூற்றத்**
**தரியாது, என் உள்ளம் தளர்ந்து. (87)**

(இ-ள்) எனது அகத்தே அறிவு என்னும் கண்ணானது நம் காதலருடன் என்னையும் உட்கொண்டு காணாநிற்பதற்குப் புறத்தே தாமும் காணாத விருப்பத்தால் என்னை வஞ்சித்த கள்ளத்தை உடைய இக்கண்கள் அழுவதனைக் கண்டு, எம்மை இகழ்ந்து பிரியாதவரையும் திருமால் திருப்பேர்நகரின்கண் உள்ளார் பிரிந்தார் என்று தூற்றுமதனைக் கேட்டுத் தளர்ந்த என்உள்ளம் ஒருவழிப்பட்டு நில்லாது என்றவாறு.

இது பாஞ்சாலத் தெளிவு. என்னை? வைதருப்பத் தெளிவு போல வெளிப்படையுமன்றிக் கௌடத் தெளிவு போல நுண்ணிதாய்க் குறிப்பினால் கொள்வதுமன்றி இடைப்பட்ட நீர்மைத்தாய் வந்தமையான்எனக் கொள்க.

பகுதி - பொருள்வயின் பிரிதல். துறை - தலைவி தலைவனை இயற்பட மொழிதல்.

தெளிவு முற்றும்.

### 3. செறிவு

**வண்ண மைந்நிற வண்ணன், விண்ணினும் மண்ணினும் உறைவார்**
**கண்ணன், விண்ணகர் மஞ்ஞை விம்மிய கண்அகல்வரை ஓர்**
**அண்ணல் இம்மலர் கொண்மின் என்னவும், அன்னை! அங்ஙனம்யான்**
**எண்ண, ஒண்ணுதல் முன்னில் முன் அருள்கென்ன முன்னினளே. (88)**

என்பது, அன்னாய்! அழகிய மேகம் போன்ற திருமேனியை உடையான், சுவர்க்கத்தினும் பூமியினும் உறைவார் கண்ணினுள்ளான், அவனது திருவிண்ணகரத்து மயில்கள் அகவும் இடம்அகன்ற மலைப்பக்கத்து, ஒருபெரியோன் யாங்கள் விளையாடும் வண்டல் மாளிகை முன்றிற்கண் வந்து, நுமது வண்டலம்பாவைக்கு அணிய இம்மாலையை வாங்கிக் கொண்மின் என்று கூற, அங்ஙனம் வந்து கூறியதற்குச் செய்ய வேண்டுவது என் என்று யான் எண்ணாநிற்ப, நம் ஒளிபொருந்திய நுதலினைஉடையாள் முன்னாள் அதனை அருள்க என அவன்முன்னே சென்று அதனை வாங்கினள். இஃது யான் அறிந்தபடி என்றவாறு.

முன்னில் - இல்முன். அஃது முன்றில் என இலக்கணப்போலியாயும் வரும். 'முன்னில்' எனவே வண்டல்மாளிகையும் வண்டலம்பாவையும் கூட்டி உரைக்கப்பட்டன. இது வைதருப்பச் செறிவு. என்னை? மெல்லினமாகிய எழுத்துச் செறிய மெல்லினவண்ணம் உற்று அவ்வெழுத்தானாகிய சொற்கள் செறியச் செறித்தமையின்எனக்கொள்க.

பகுதி - உடன்போக்கு (அறத்தொடு நிலை); துறை - பூத்தரு புணர்ச்சிக்கு அறத்தொடு நிற்றல்.

[முன்றில் என்பது தொல்காப்பியத்தில் இலக்கணத்தொடு பொருந்திய மருவாகக் குறிக்கப்பட, நன்னூலில் சொற்கள் பின்முன்னாகத் தொக்க இலக்கணப்போலி என்று பெயரிடப்பட்டுள்ளது. பூத்தருபுணர்ச்சியால் அறத்தொடு நிற்றல் மாறன் அகப்பொருளில்

'அறத்தொடுநிலை' என்ற உடன்போக்குக்கு முற்பட்ட பகுதியிலேயே உள்ளது. (சூ. 73. பாடல்எண் 360)
திருக்கோவையாரிலே பூத்தருபுணர்ச்சியால் அறத்தொடுநிற்றல் 'உடன்போக்கு' என்ற பகுதியில் உள்ளது. (பாடல்எண் - 225) ஆதலின் இந்நூலாசிரியர் கருத்துக்கு ஏற்ப இத்துறையின் பகுதி 'அறத்தொடுநிலை' என்று குறிப்பதே பொருத்தமாகத் தோன்றுகிறது.]

இவ்வாறு மெல்லினவண்ணத்தான் மெல்லெழுத்துச் செறிந்து வருதல் விரும்பாது வல்லின வண்ணத்தான் வல்லெழுத்துச் செறிந்த சொல்லோடும் வற்கெனத் தொடுப்பதே வேண்டுவர் கௌடர்.

**புட்குழி உத்தமர் புட்கொடி அத்தர் பொருப்பின் மடக்குயிலே!**
**கட்டழல்கக்கு குழிச்சிறுகண் கரடத்ரி கடத்து ஒருமா,**
**விட்புலம் உற்ற விருப்பம் மிகுத்தது ஓர்வெற்றியனைக் குறுகா,**
**உட்குற எற்றினன்; அற்ற, துதிக்கையொடு உற்ற மருப்பிணையே.** (89)

என்பது. புட்குழி என்னும் திருப்பதியின்கண் உத்தமர், கருடக்கொடி உயர்த்த சுவாமியின் பொருப்பிடத்து மடப்பத்தை உடைய குயிலே! மிக்க அழலைக் கக்கும் குழிந்த சிறுகண்களையும் உள்ளத் தறுகண்மையையும் கவுளின்கண் மதத்தினையும் உடையதோர் யானை, விண்ணோர் அனைவரும் விருப்பத்தை மிகுப்பதொரு வெற்றியைஉடையான் ஒருவனைப் பாயும்படிக்குக் குறுகின காலத்து, அதன்உள்ளம் உட்க அவன் அதனை வாளான் எறிதலும், அதன் துதிக்கையும் துதிக்கை பற்றிய இருகோடும் உடனே அற்ற என்றவாறு.
பகுதி - நடுங்க நாடல். துறையும் அது.

இங்ஙனம் வல்லிசைவண்ணத்தால் வந்தவாறு கண்டுகொள்க. அஃதேல் இதன் முதல்நூல் செய்த தெண்டியாசிரியர் 'செறிவு எனப்படுவது நெகிழிசை இன்மை' (தண்டி. 16) என வைதருப்பச் செறிவிற்குக் கூறியதனை விரும்பாது ஒரு திறத்து எழுத்தானே நெகிழத் தொடுப்பதே கௌடச் செறிவு என வேண்டியது இந்நூலுடையார் உட்கொண்டு இங்ஙனம் வற்கெனத் தொடுத்தல், முதனூலோடு வழிநூல் மாறுகொளக்கூறல் என்னும் குற்றமாலோ எனின், நன்று சொன்னாய்! அவர்தாமே 'விரவத்தொடுப்பது சமநிலையாகும்' (தண்டி. 16) என்பதற்குச் 'சோகம் எவன்கொல் இதழி பொன்தூக்கின' (தண்டி. 16) என்பதனுள் மூவினமும் விரவத் தொடுத்ததனை வைதருப்பச் சமனிலை எனவும் விரவுதலுள்ளும் வல்லெழுத்துச் செறிய,

'இடர்த்திறத்தைத் துற பொற்றொடிநீ இடித்துத் தடித்துச்
சுடர்க்கொடித் திக்கனைத்திற் றடுமாறத் துளிக்கு மைக்கார்' (தண்டி. 18)

என வற்கெனத் தொடுப்பதே கௌடச்சமனிலை எனவும் காட்டினமையானும், இவ்வண்ணம் கூறாக்கால் வைதருப்பச் செறிவிற்கும் வைதருப்பச் சமனிலைக்கும் வேற்றுமைஇன்மையானும், இச்செறிவிற்கும் ஓசையே நோக்கம் என்பதனானும், பாஞ்சாலத்தோடு பாகம் மூன்றுஎனக் கோடலானும், வைதருப்பம் முதலிய மூன்றற்கும் மூன்றுவண்ணமும் சித்திரகவியில் சாராது செறித்தார்; அன்றியும் பாயிரத்துள்ளும் 'இரண்டு இடத்தால் செய்தார்' என்பதனால், உலகவழக்கிலும் அருமையோடும் வற்கெனத் தொடுப்பானைக் கௌடகவி என்பது உட்கொண்டமையானும், தன்கோட்கூறல் என்னும் உத்தியானும் இவர்க்கு எழுத்துச்செறிவும் ஓசையும் அவ்வவ பாகத்தின்படியே செறித்தல் நோக்கமாதலானும், இவ்வண்ணம் கூறுதல் மாறுகொளக் கூறல் என்னும் குற்றம் ஆகாது என்று உணர்க.

[ஒரே மெய்யினம் வரப்பாடுவது ஓரினப்பாட்டு என்னும் சித்திரகவியாம். ஆகவே மெல்லினம், வல்லினம், இடையினம் மிகுதியாகச் செறிதல் முறையே மூன்று நெறியாளர்களின் செறிவு என இவ்வாசிரியர் கொண்டார்.
இம்மூன்றும் சற்றுக் குறைவாகச் செறிதல் சமனிலை என்ற கருத்தினர் இவர். இச்செய்தியே ஈண்டு விளக்கப்பட்டுள்ளது.]

**முல்லைமுகை வெல்லும் நகை நொய்யநடை ஐயஇடை மொய்அளக நவ்விவிழியாய்**
**ஒல்லைநடை உள்ளது; இனிவெள்ளிடையது இல்லைஎன உள்ளபொழில் செய்யின் அயல்சூழ்**
**மல்லைநகர் எல்லைஇவண் அல்லிமலர் வல்லிபுணர் வள்ளல்உறை எல்லை- அவணே**
**தொல்லைமறை உள்ளபடி தெள்ளிஉணர் ஐயர்உறை துய்யபதி சொல்லில் உவணே. (90)**

என்பது, முல்லைஅரும்பை வெல்லும் நகையையும், மெல்லிய நடையையும், உளது இலது என்று ஐயமுறும் இடையையும், நெருங்கின குழலையும் உடைய மான்போல் நோக்கத்தாய்! உனக்கு இனி ஒருகணப்பொழுதே நடைஉளது. அஃது யாது என்னின், இவண் வெளிஎன்பது சிறிதும் இல்லைஎன உண்டாய சோலைகள் செய்யினது பக்கம்எல்லாம் சூழப்பட்ட திருக்கடல்மல்லையாம். அவண் தாமரையாளைத் தழுவும் திருமாலாகிய வள்ளல் உறை தானம், உவண் கூறுகிற பழைய மறையில் உள்ள நுட்பமெல்லாம் அவைசொன்னபடியே தெள்ளிதாய் உணரும் மறையோர் உறையும் பதி ஆகலான் என்றவாறு.
இது பாஞ்சாலச் செறிவு. என்னை? இடையினமாகிய எழுத்து மிகவும் செறிய, இயைபுவண்ணமுற்று அவ்வெழுத்தானாய சொல் செறிய வந்தமையான் எனக்- கொள்க. இங்ஙனம் மூன்று வண்ணமும் உற ஆங்காங்கு அவ்வவ்இனம் மிகப் பாடுவதன்றி வேற்றினம் சிறிதும் விரவாது தொடுப்பின், மூவினப்பாட்டானும் விரவாது பாடும் சித்திரகவியில் சாரும் ஆதலால், பிற இனமும் சிறிது விரவுவதே முறைஎன்று உணர்க.
இது, பகுதி - உடன்போக்கு. துறை - பதி பரிசு உரைத்தல்.
இவை மூன்றும் எழுத்துச்செறிவு.

### பொருட்செறிவு - சொற்செறிவு

பொருட்செறிவும் சொற்செறிவும் மூன்று நெறியார்க்கும் ஒக்கும்.
இவற்றிற்குச் செய்யுள்:

**மறை முரசம், தாமம் மகிழ், வழுதிநாடர்**
**துறைபொருநை, வெற்பு ஊர், துடரி - உறைகுருகை;**
**அஞ்சம் பராங்குசம் வெள்ளானை, கொடி ஆணை மா;**
**பஞ்சகலி யாணன் பரி. (91)**

என்பது வழுதிவளநாடர், முரசம் மறை, தாமம் - மகிழ், துறை - பொருநை, வெற்பு - துடரி, ஊர் - உறையுளாம் குருகை, கொடி - அஞ்சம், ஆணை - சீபராங்குசம், மா - வெள்ளானை, பரி - பஞ்சகலியாணன் என்றவாறு.
இதனுள், 'வழுதி நாடர்' என்பது மத்திமதீபம். அதுவே நாடும், திருநாமமுமாம். வெற்பு ஊர் - நிரல்நிறை. பரி மா ஆணை கொடி விதலையாப்பும், தாமம் மகிழ், முரசு மறை என மொழிமாற்றுமாகத் தசாங்கம் என்னும் சின்னங்களாகிய

பல்பொருட்செறிவோடும் பலபொருள்கோளும் செறிதலான் இது பொருட்செறிவு.
துறை - தசாங்க வாழ்த்து.

[விதலையாப்பாவது செய்யுளின் முதலிலும் இடையிலும் கடையிலும் உள்ள சொற்கள் இணைந்து பொருள்செய்யும் முறை. வழுதிநாடர் பரி பஞ்சகலியாணன், மா வெள்ளானை, ஆணை பராங்குசம், கொடி அன்னம் - என்பது விதலையாப்பு.]

**மறம்தாங்கித் தெவ்அடு வைந்நுதி தாங்கி இருட்பிழம்பு மடியச் செந்தீ**
**நிறம்தாங்கி இடங்கரின் வெண்நிணம் தாங்கி அனைத்துஉலகும் நியதி காக்கும்**
**திறம்தாங்கி ஒளிர்திகிரிப்படை தாங்கித் திருவடி பொற்சென்னி தாங்கி**
**அறம்தாங்கி வளம்புகழ்வார் அறந்தாங்கியவர் எனும் இவ்அங்கண் ஞாலம்.**
**(92)**

திணை - பாடாண். துறை - செந்துறைப் பாடாண்பாட்டு.

[வீரம், பகைவரை அழிக்கும் கூரிய நுனி, இருள் செகுக்கும் நிறம், முதலையின் கொழுப்பு, எவ்வுலகையும் முறையாகப் பாதுகாக்கும் முறை என்ற இவற்றைக் கொண்டு விளங்கும் சக்கரப்படையைத் தரித்துத் தன்திருவடிகள் அழகான அடியார்தலைகளைத் தாங்குதலால் அறத்தைப் பேணிய எம்பெருமானுடைய சிறப்பைப் புகழ்கின்றவர்களே அறத்தைப் பாதுகாப்பவர் ஆவர் என்று இவ்விடமகன்ற உலகம் புகழும்.
செந்துறைப் பாடாண்பாட்டு - பாடப்பட்ட ஆண்மகனுடைய ஒளியும் ஆற்றலும், ஓம்பா ஈகையும் அளியும் என்ற இவற்றை ஆய்ந்து உரைத்தலாம்.]

**தழற்பாணி, கறை கெழு வச்சிரபாணி, மிளிர்படிகத்தாமம் வேய்ந்த**
**நிழற்பாணி விழைந்த கமண்டலபாணி, முதல்எவர்க்கும் நிபனேயாய், வேய்ங்**
**குழற்பாணிகொடு தொறுவின்குழு அழைத்த மழைமுகில், பார்குளிர்ப்பான் ஈன்ற**
**கழற்பாணிதனைப் புகழ்சக்கரபாணி, அனைத்து உயிர்க்கும் களைகண் ஆவான். (93)**

[(இ-ள்) கையில் அனல் ஏந்திய உருத்திரன், குருதிக்கறை படிந்த வச்சிரம் ஏந்திய இந்திரன், ஒளிவீசும் படிகமாலை அணிந்தவனாய் ஒளியுடைய கையில் கமண்டலம் ஏந்திய பிரமன் முதலிய எல்லோருக்கும் உபமானப்பொருளாம் உயர்ந்தவனாய், கையில் வேய்ங்குழலைக்கொண்டு பசுக்கூட்டங்களை அழைத்துத் தொகுத்த, காளமேக நிறத்தினனாய், உலகைக் குளிர்விப்பதற்குத் திருவடியில் கங்கையை உண்டாக்கிய-வனாய்ப் புகழப்படும் திகிரியைக் கையில் ஏந்திய எம்பெருமானே எல்லாஉயிர்-களுக்கும் பற்றுக்கோடாவான்.]

திணை - பாடாண். துறை - செந்துறைப் பாடாண்பாட்டு.

இவ்விருபாடல்களிலும் தாங்கி, பாணி என்ற சொற்களே மீண்டும் மீண்டும் வந்தமையின் இவை இரண்டும் ஒருவகைச் சொற்செறிவு. இங்ஙனம் வந்த சொற்செறிவும் பொருட்செறிவும் மூன்றுநெறியார்க்கும் ஒக்கும்.

செறிவு முற்றும்.

['வல்லிசை வண்ணம் வல்லெழுத்து மிகுமே' (தொ. செய். 208)
'மெல்லிசை வண்ணம் மெல்லெழுத்து மிகுமே' (தொ. செய். 209)
'இயைபு வண்ணம் இடையெழுத்து மிகுமே' (தொ. செய். 210)
எழுத்துச்செறிவினை முந்நெறியாருக்கும் வெவ்வேறாகக்கொண்டு பொருட்செறிவை-யும் சொற்செறிவையும் முந்நெறியாருக்கும் பொதுவாகக் கொண்டுள்ளார் இவ்வா-சிரியர்.]

4. சமநிலை

**விழியும் களபமுலையும் புன்மூரலும் வேயும் உந்திச்-**
**சுழியும் உரோமஒழுங்கும் கண்டேம்; வண்டு சூழ்ந்து செந்தேன்**
**வழியும் திருமகிழ்மாலைப் பிரான் வெற்பில் வல்லி செவ்வாய்**
**மொழியும் துணைநெஞ்சமே! செவிக்கே என்று மூழ்குவதே. (94)**

இது வைதருப்பச் சமனிலை. பகுதி - இயற்கை, துறை - கிளவிவேட்டல்.

[எனக்குத் துணையாக அமைந்த என் நெஞ்சே! வண்டுகள் சூழச் சிறந்த தேன்வழியும் அழகிய மகிழம்பூமாலையை அணிந்த மாறனுடைய மலையிலே, கொடிபோன்ற இத்தலைவியின் விழிகளையும் கலவைச்சந்தனம் பூசிய தனங்களையும், புன்முறுவல் செய்த பற்களையும், மூங்கில் போன்ற தோள்களையும், கொப்பூழ்ச்சுழியையும் அதன்கண்நின்றும் புறப்பட்ட மயிர்ஒழுங்கினையும் கண்கள் மகிழக்கண்டோம். அவளுடைய செவ்வாயிலிருந்து புறப்படும் மொழிஇனிமை நம் செவிப்பட்டு மகிழ்விப்பது எப்பொழுதோ? என்று தலைவன் தலைவியின் குரலைக் கேட்க விரும்பித் தன் நெஞ்சிடம் கூறியவாறு.]

**பனிப்பிறைப் பல்துளைக் கட்செவித் துத்திப் பணாடவிமேல்**
**குனித்த பொன்சிற்றடிச் சித்திரக்கார் குருகேசன் வெற்பில்,**
**துனித்து அழற்கண் களிற்றைக் கொடுஞ்சீயம் துரத்து இருள்வாய்த்**
**தனித்துஉறற்கு உய்த்து உணர்த்தும், கதிர்வேலவன்; தாழ்குழலே! (95)**

இது கௌடச் சமனிலை. சூத்திரத்துள் (82) நிலை என்பது செய்யுள்விகாரத்தால் தொக்கதனை விரித்து உரைக்க.

தனித்து உறற்கு - கங்குலின்கண் தனித்துக் குறிவழி வருதற்கு. உய்த்து உணர்த்தும் - என்உள்ளம் கொள்ளச் செலச்சொல்லி உணர்த்தாநிற்கும். தாழ்குழலே - தாழ்ந்த குழலினை உடையாய்! 'யான் இதற்குச் செய்ய வேண்டுவது என்?' என்பது கூற்றெச்சம். பணாடவி - ஆகுபெயர்.

பகுதி - இரவுக்குறி. துறை - இரவு வரவு உணர்த்தல்.

[தலைவியே! குளிர்ந்த பிறைபோன்ற பற்களின்கண் துளையை உடையதாய்க் கண்களையே காதுகளாக உடையதாய்ப் படப்புள்ளிகளை உடைய படங்களாகிய காடுகளை உடைய காளியன் என்ற பாம்பின் தலைமேல் கூத்தாடிய அழகிய சிறிய அடிகளைஉடைய வடிவழகிய கார்மேகம் போன்ற எம்பெருமானாகிய குருகைநாதன் மலையிலே, வெகுண்டு தீப்போலும் கண்களை உடைய ஆண்யானையைக் கொடிய சிங்கம் துரத்தும் இரவுஇருளில், தனியனாக நம்குறியை நோக்கிவர, நம் ஒளிவீசும் வேலினை உடைய தலைவன் என்உள்ளம் கொள்ளத் தெரிவிக்கிறான் - என்று தலைவன் இரவுக்குறிக்கண் தலைவியை அடைய விரும்பியவாற்றைத் தோழி தலைவிக்குத் தெரிவித்தவாறு.]

பணாடவி - ஆகுபெயராய்ப் பாம்பின் தலையை உணர்த்திற்று.

**இடிக்கும் கடகளிற்றான் சடகோபன் இயல்இசையாய்**
**வடிக்கும் தமிழ்மறை பாடிய மாறன் மணிவரைமேல்**
**நடிக்கும் களிமயிலே! வருந்தேல்; நுமர் நல்வரைப்பூங்**
**கொடிக்கும் கொழுகொம்பராம் எமர்மாடக் கொடிக்கழையே. (96)**

(எ-ன்) இது பாஞ்சாலச் சமனிலை. பகுதி - இயற்கை. துறை - இடம் அணித்துக் கூறி வற்புறுத்தல். இவற்றுள் மூவினமும் விரவி வந்தவாறு காண்க.

மூன்றனுள் முதற்பாட்டும் மூன்றாம் பாட்டும் கிளவிமணிமாலை.

சமனிலை முற்றும்.

[(இ-ள்) பிளிறும் மதமுடைய ஆண்யானையை உடைமையாகக் கொண்ட சடகோபன் என்ற பெயரை உடையவனாய், இயற்றமிழில் இசையோடு தமிழ்மறையைப் பாடிய மாறனுடைய அழகிய மலையிலே, ஆடும் மகிழ்ச்சியுற்ற மயில் போன்ற கட்கினிய மென்மையை உடைய தலைவியே! உங்களுடைய சிறந்த மலையிலே வளரும் பூங்கொடிகளுக்கு எங்கள் பேரில்லங்களில் கொடிகள் கட்டப்பட்ட மூங்கில்கள் கொழுகொம்பாகப் பயன்படும் வகையில் எம்ஊரும் நும்ஊரும் அடுத்தடுத்து அருகிலேயே உள்ளன.]

[செறிவுக்கும் சமனிலைக்கும் குறிப்பிடத்தக்க வேறுபாடு இருப்பதாக அறியக் கூடவில்லை.]

5. இன்னிசை (ஒழுகிசை)

**எழு காதலினால் இருகாவியுள் நீர்**
**ஒழுகா மதியால் உலைவாய் - மெழுகாய்**
**உருகாது அணையார், உயிர்காவலர் பேர்**
**அருளாளரும்ஆம் அவர்.** (97)

இதனுள், இருகாவியுள் நீர் - இரண்டு கண்ணுள் நீர்; ஒழுகா - ஒழுக என்பதன் எதிர்மறை; உருகாது அணையார் என்பது வினைஎதிர் மறுத்த வினைஎச்சம் அணையார் என்னும் வினைகொண்டது. பேரருளாளருமாம் என்னும் உம்மை-யால், உயிர்காவலரும் ஆம் என்னும் உம்மை விரிக்க. உயிர்காவலருமாய்ப் பேரருளாளருமாக, உருகும் என் காதல் கண்டும் உருகி அணைகின்றிலர் ஆதலின் இஃது என் வினையன்றோ என்றவாறு.

திணை - பெண்பாற்கூற்றுக் கைக்கிளை; துறை - நிலவு கண்டு அழுங்கல்.

இது தூங்கிசைச் செப்பலோசைத்தாய் வந்தமையால் வைதருப்ப இன்னிசை. என்னை?

'இயற்சீர் வெண்டளையான் வரும் யாப்பைத்
தூங்கிசைச் செப்பல் என்மனார் புலவர்'

என்பதனால் அறிக. இவ்வாறு விரும்பாது ஏந்திசைச்செப்பல் ஓசைத்தாய்த் தொடுப்பதே வேண்டுவர் கௌடர்.

[மிக்குத் தோன்றும் காதலாலே இருகண்களிலிருந்தும் நீர் ஒழுகாது, சந்திர தரிசனத்தால் உள்ளம் ஊது உலையகத்து மெழுகாய் உருகாது, அரிய உயிரைக் காப்பவரும் எல்லா உயிர்கள்மாட்டும் பேரருள் உடையவருமாகிய என்தலைவர் அணைகின்றிலர் எனப் பிரிவின்கண் நிலவுகண்டு வருந்திய தலைவி கூறியவாறு. பிரிந்த நிலையில் நிலவுகண்டு யான் வருந்தவும், அவர் வருந்தாதது என் தீவினையே என்பதாம்.]

**குஞ்சரம்ஆம், எய்தது; வன் கோதண்டம் கூடாமல்**
**வெஞ்சரம் பாய்வித்தனரால்; வேட்டைதான் - வஞ்சகமே-**
**யாம்; கடவார் பூம்புனம்; ஈங்கு ஆர் இவர்என்றே அறியேம்;**
**வேங்கடவாணன் சிலம்பின்மேல்.** (98)

என்பது, வேங்கடவாணன் வரையிடத்து இவர் எய்ததும் குஞ்சரமாம்; வில்லும் இன்றியே (தழையே வில்லாக) வெம்மையைச் செய்யும் வாளியைப் பாய்வித்-தனர். ஆகையால் இவர் வேட்டைமேலீட்டு வந்ததுதான் வஞ்சகமேயாம்; அதுவுமன்றி நமது பொலிவை உடைய புனத்தைவிட்டு நீங்குகின்றிலரால்; இவர் யாவர் என்றும் வந்த காரணம் யாது என்றும் தெளிகிலம் என்றவாறு.

பகுதி - இருவரும் உள்வழி அவன் வர உணர்தல்; துறை - ஐயுறுதல்.

இஃது ஏந்திசைச்செப்பல்ஓசைத்தாய் வந்தமையால் கௌட இன்னிசை. என்னை?

'வெண்சீர் வெண்டளையான் வரும் யாப்பை
ஏந்திசைச் செப்பல் என்மனார் புலவர்'

என்பதனால் அறிக.

**மானபரன் ஈந்த மணிஆழி கைக்கொடுத்துச்**
**சானகிதன் ஆவி தளிர்ப்பித்தான், - மீன**
**நெளிதரங்க வேலை நெறிகடந்து தேவர்**
**களிபுரந்த சேய், எமது கண். (99)**

(இ-ள்) பெருமையுடைய பரனாகிய இரகுநாதன் கொடுத்த மாணிக்கத்திரு-ஆழியைக் கொடுத்துச் சனகராசன்புதல்வி திவ்யான்மாவைத் தழைப்பித்தான்; அவன் யார் எனின், மீன்களை உடைத்தாய் நெளிக்கப்பட்ட திரையை உடைய சமுத்திரத்தின் எல்லையைக் கடந்து தேவர்க்கெல்லாம் களிப்பைக் கொடுத்த அஞ்சனை பெற்ற புதல்வன், எனக்கு என் உறுப்பில் சிறந்த கண் என்றவாறு.

இஃது ஒழுகிசைச் செப்பல் ஓசைத்தாய் வந்தமையால் பாஞ்சால இன்னிசை.

'வெண்சீர் ஒன்றலும் இயற்சீர் விகற்பமும்
ஒன்றிய யாப்பே ஒழுகிசைச் செப்பல்'

என்பதனால் அறிக. இம்மூன்று விகற்பமும் மூன்றுநெறியாருக்கும் ஒக்கும் என்பாருமுளர். திணை - பொதுவியல்; துறை - தூதுவென்றி.

**நாட்டம் களிபற்ற நாவு நசைபற்ற**
**ஏட்டில் பலர்கைஇணை பற்றத் - தோட்டிலஞ்சிக்கு**
**அன்புற்ற முத்தர்பெருமான் அடிபரவி**
**இன்புற்றவர்க்கு அடிமை யாம். (100)**

இவ்வாறு வரும் பொய்நிலப்பட்ட இன்னா இசை மூன்றுநெறியாரும் வேண்டார் எனக்கொள்க.

திணை - பாடாண்; துறை - பழிச்சினர்ப் பரவல்.

தண்டியார் ஒழுகிசை என்பதும் இவ்வின்னிசையே.

இன்னிசை முற்றும்.

[தாமரைக்குளத்திடத்துக் கசேந்திரனிடத்து அன்புற்று அணைந்த நித்தியசூரிகள்-தலைவனாகிய எம்பெருமான் திருவடிகளைக் கண்கள் மகிழ, நாவு அவன்புகழ் பாடும் விருப்பமுற, கைகள் மலர்களை அவன்பாதங்களில் தூவுதற்குப் பற்ற, எம்பெரு-மானைப் போற்றி மனம்மொழிமெய்களால் இன்புற்ற அடியவர்களுக்கு என்உள்ளம் அடிமையாகும்.

வெண்பாவிற்கு உரிய செப்பலோசை அல்லாத இன்னாத ஓசை இப்பாடலில் வல்-லெழுத்துக்களால் ஏற்பட்டுள்ளதாக உரையாசிரியர் கருதுகிறார்.]

## 6. உதாரம்

**மண்ணோர் தொழும் சேறை மாயோன் மணிமார்பின்**
**பெண் ஓர் மனுகுலமாம் பெற்றியாய்! - விண்ணோர்**
**மருந்து தலைப்பெய்துஇருப்ப, மம்மர்கூர் நஞ்சம்**
**அருந்துதலைச் செய்பவர் இங்கு ஆர்? (101)**

என்பது, உலகின்கண் உள்ளார் வணங்கும் திருச்சேறையின்கண் மாதவன் திரு-மார்பில் இருக்கும் திருமகள் மனுகுலத்தில் தோன்றியது ஒன்றாம் இயல்பினை உடையாய்! விண்ணில் தேவர்பானமாகிய அமிர்தமானது தம்மிடத்தே தமதாக இருப்ப அதனையும் அருந்தி, மருந்துபிறிது இல்லாப் பெரும்பிணியைத் தரும் நஞ்சையும் உண்ணாநிற்பவர் இவ்வுலகின்கண் யாவர்தாம்? என்றவாறு.
பகுதி - பரத்தையர் பிரிவு; துறை - நினைவுஅறிகண்புதை.
இது வைதருப்ப உதாரம். என்னை? தம்மிடத்திலே பெறுதற்கரிய அமிர்தம் எளிதாய் எய்தியிருப்ப அதனை உண்ணாநின்றவர், அயலே இருக்கும் நஞ்-சினையும் சென்றுண்ண விரும்புவார் உலகின்கண் இல்லையால்; அதுபோல, நின்னிடத்து உவட்டா இன்பம் துய்க்கின்ற யான் பிறரிடத்து உவர்ப்புடைத்தாம் இன்பம் துய்யேன் என்பது குறிப்பினால் கொள்ளக்கிடந்தமையினான் எனக் கொள்க.

**நாதன் மகிழ்மாறன் நன்பனுவல் கற்றுணர்ந்து**
**போதம் தழைந்த புனிதர்தாம் - வேதம்**
**விதித்த ஒருமூன்றின் மெய்ம்மை உணர்வான்**
**மதித்து ஒருநூல் ஓதார் மறித்து.** (102)

இதுவும் வைதருப்ப உதாரம். என்னை? மகிழ்மாறன் பனுவல் கற்றுணர்ந்தார் தத்துவங்கள்மூன்றின் உண்மை உணரவேண்டி மறித்து ஒருநூல் ஓதார் எனவே, அத்தத்துவங்கள்மூன்றினையும் அதுதானே மயக்கமறக்கூறும் என்பது குறிப்-பினால் கொள்ளக் கிடந்தமையான் எனக்கொள்க.
வேதம் விதித்த ஒருமூன்றாவன - சித்து, அசித்து, ஈச்சுரம். மெய்ம்மை - உண்மை. உணர்வான் - உணரவேண்டி. மதித்து - உட்கொண்டு. மறித்து - மீட்டும்.
திணை - பாடாண்; துறை - பனுவல்வாழ்த்து.

**காழ் இல் கனிஉண் கடுவன் களங்கனியை**
**ஊழில் பருகி உருகு திரு - மூழிக்**
**களத்து ஆதியை மதங்கா காமக்குழவி**
**வளத்தாரிடம் தேடுவாய்.** (103)

என்பது, காலைமங்கலம் பாடவந்த யாழ்ப்பாணனே! பரல் இல்லாதே முழுதும் மென்மையும் இனிமையுமுடைய அரம்பைக்கனியை அச்சமின்றி உண்ணா-நின்ற கடுவன், அகத்து முழுதும் பரலாய்ச் சிறிது புறமென்மையும் அற்பச்-சுவையும் உடைய களங்கனியையும் முறையே போலப் பருகி அதன் சுவைக்கும் உள்ளம் உருகும் திருமூழிக்களத்து முதல்வனைக் காமம் என்னும் குழவிச்செல்வத்தை உடைய பரத்தையர்இடத்தே தேடிக் காண்பாயாக; அஃதன்றி எம்மிடத்துக் காண்டல் அரிது என்றவாறு.
காழ் - கொட்டை; ஊழில் - ஊழ்வினையாலே எனினுமாம். இது கௌடஉதாரம். என்னை? ‘காழ்இல் கனிஉண் கடுவன் களங்கனியை ஊழில் பருகி உருகு திருமூழிக்களம்’ எனவே, அக்கடுவன் போல, உத்தமமாகிய இவளோடும் உள்ளும் புறம்பும் ஒருநீர்மைத்தாம் மென்மையோடும் உவர்ப்பு இல்லாத பேரின்பத்தைத் துய்த்த தலைவன், இழிந்த இயற்கையை உடையராய்ப் புறம்பு பொருள்நசைக்காய்ச் சிறிது நெகிழ்ந்து உள்நெகிழ்ச்சியற்ற பரத்தையரிடத்தே உவர்த்த சிற்றின்பத்தைத் துய்த்து அவ்வின்பம் மீட்டும் துய்ப்பான் அவர்-சேரிவிட்டு நீங்கானாயினான் என உள்ளுறைஉவமம் குறிப்பின்கொள்ளக் கிடந்தமையானும், ‘காமக்குழவி வளத்தார் இடம்’ எனவே இஃது எமது காதற்-

புதல்வன் என்னும் செல்வத்தைஉடைய மனை என்பதூஉம், யாம் புதல்வற்பயந்த மூப்புடையேம் என்பதூஉம், இன்னும் அவ்விலேசானே, எம்மிடத்து அவர் பெறும் இன்பம் எமக்கு அவர் கொளுத்தக் கொண்டு யாம் கொடுக்கும் இயற்கைஇன்பமே அல்லாது, பலரையும் தோய்ந்து அவரவர் கொளுத்தக் கொண்ட பலவிகற்பமாகிய செயற்கைஇன்பம் எம்மிடத்து இல்லையே என்னும் கூற்றுமாகக் குறிப்பும் கூற்றும் குறிப்பினால் கொள்ளக்கிடந்தமையானே இவ்வாறு வேண்டுவர் கௌடர் எனக் கொள்க.
பகுதி – பரத்தையின் பிரிதல். துறை – பாணனொடு கூறல். கூற்று – தோழி கூற்று.

**நாம்பிரமம் என்றே நவில்வாரும் மன்உயிர்கள்**
**தாம்பிரமத்து ஒன்றும்எனும் சார்பாரும் – ஆம்பிரமம்**
**நாரணனோ என்பாரும் நாவீறுஉடைய பிரான்**
**ஆரணப்பாக் கற்று உணராதார். (104)**

என்பது, பேரானந்தச் சிற்குணாதிகச் சுடர்ச்சொரூபரூபப் பரத்துவமென்னும் பரமபத நாதன், அநிருத்தனாகி உந்தியந்தாமரைப்பொகுட்டில் பலகோடி அண்டங்களைப் படைத்து, பலகோடி அண்டந்தோறும் பலகோடி பிரமாதிகளைப் படைத்து, அழிவிலதாய் அலகிறந்த அணுக்கள்தோறும் திவ்வியாத்மசொரூப வியத்தியுடன் சருவபூத பூரண காரணனாகி, மீனவதாரம் முதலாய அவதாரங்களாலும், அம்சாவதாரங்களாலும் காவல்பூண்டு, வாழ்நாளுள் தன்னால் லீலைக்காக அமைத்த அவைஅனைத்தும் அழிந்தும் தான் அழியாது ஏகோதகத்தின்மேல் ஓர்ஆல்இளந்தளிருள் அடங்கும் பச்சைக்குழவியாகியும், பல்லாயிரங்கோடி அண்டமாகியவற்றை அகத்திட்டு மறித்தும், புறத்திட்டுக் காவல் பூண்டு, விளையாடும் அகடிதகடநாசாமர்த்திய குணங்களுள் ஒரு குணமும் இன்றி, இருவினைத்தலைப்பட்டு மலமூத்திராதிகளாகிய பாண்டத்தோடும் இறந்தும் பிறந்தும் உழலும் முத்தி அறியா மூடராகி, நாம் பிரமம் என்றே நாக்குத் தடுமாறாது நவிலும் ஒருசார்பாரும், கற்றறி நூல்பல கற்றனராகித் தத்துவம் உணர்ந்தும் பற்றறச் சாலோகம் முதலிய மூன்றும் எய்தி இருவராய் இருந்து ஈறில் பேரின்பம் ஒருவராமெனத் துய்க்கும் சுகானந்தத்தைக் கெடுத்துக் கூடாததனைக் கூடுவதாக்கிச் சூனியப்படுத்தி மன்னுயிர் பிரமத்தோடும் ஒன்றாம் என்று நாயன்அடிமைத்திறம் நழுவிய மூடராம் ஒருசார்பாரும், ஆதியும் அந்தமும் அருமறை அரியென ஓதிய பொருள் உரைக்கு உடையதை அறிந்தும் அகிலாண்டகோடி பிரமாண்ட நாயகன் என முத்தி தருவதாம் பிரமம் சீமந் நாராயணனோ என்று ஐயுறும் முழுமூடரும், ஒருநான்மறைத்துணிவு ஓதாது உணர்ந்த நாவீறு உடைய பிரான் கூறிய திருவாய்மொழியைக் கற்று உண்மைப்பொருள் உணரா மூவகை மூடர் என்றவாறு.
ஆரணத்தின் வழிவந்த நூலாதலின் திருவாய்மொழிக்கு ஆரணப்பா என்பது ஆகுபெயர். அல்லதூஉம், தமிழ்வேதம் என்றும் அதற்குப் பெயர். ஆரணப்பாக் கற்று உணராதார் எனவே, அவை கற்றுணர்ந்தார் அவை கூறார் என்னும் கூற்றும் எஞ்சிநின்றதூஉம் காண்க. இங்ஙனம் கூறிய மூன்றும் வேதத்தின் வழிவந்த திருவாய்மொழியாகிய பனுவல்துணிவு அல்ல என்பதூஉம், அதனைக் குரவரால் உணர்ந்தோர் மதமும் அம்மூன்றினையும் தள்ளின மதமே என்னுமவையும் குறிப்பெச்சம். இக்கூற்றும் குறிப்பும் புலவனால் அறியலாம்.

இங்ஙனமாகிய சொல்நடை கொண்டு வேறுபொருள் தோன்றலால் இதுவும் கௌடஉதாரம்.

திணை - வாகை; துறை - சால்புமுல்லை.

[சிற்குணம் - அறிவாகிய பண்பு. சொரூபம் - தனித்தன்மை. ரூபம் - வடிவம். அநிருத்தன் - படைப்புத்தலைவன். வியத்தி - வெளிப்பாடு. ஏகோதகம் - ஊழிப்பெரு-வெள்ளம். அகத்திட்டு - வயிற்றுள்வைத்து. அகடிதகெடிதசாமர்த்தியம் - சேராத-வற்றைச் சேர்த்துவைக்கும் ஆற்றல். பாண்டம் - உடல். சூனியப்படுத்தி - உலகிலுள்ள பொருள்யாவும் பொய்த்தோற்றம் என்று கொண்டு. நாயன் - தலைவன்.
வைதருப்ப உதாரம் கௌடஉதாரம் இரண்டற்கும் அகப்பொருளுக்கு ஒன்றும் புறப்-பொருளுக்கு ஒன்றுமாக இவ்விரண்டு எடுத்துக்காட்டுப்பாடல்கள் தரப்பட்டுள்ளன.]

**சினம் என்பதை அறியாதவர் தினமும் புகழ்மாறன் செஞ்சொல்தமிழ்மறை**
**பாடிய செல்வன் குருகையுளார்**
**முனம்அன்பினது அளவுஒன்றிய முறையான் மலர்அணைமேல் முடுகும்-**
**பரிசமொடு இங்கிதமொழி என்பது பெறவே**
**தனம்இல் எனின் உலகத்து எவர் தனிஇன்பமது உறுவார் தாம்என்றபின்**
**அளகத்துஉறு தனிவண்டொடு நின்பால்**
**மனம்ஒன்றிய பெடையே வலிஉளது என்றனர் அன்றே! மறைஎன்று அதை**
**உணராத என்மனமே கொடியதுவே.** (105)

என்பது, தோழீஇ! வெகுளி என்பதை மனத்தினானும் குறித்து அறியாத சுத்தசாத்துவிக குணனுடையோர் வாழ்த்தும் காரிமாறப்பிரான், செஞ்சொல் ஆகிய தமிழ்மறையைப் பாடிய செல்வத்தை உடையோன், குருகை-மாநகரிடத்து நம் இறைவர் பொருள்மேல் பிரியும் முன்னர், இருவர்க்கும் புணர்ச்சிமேல் சென்ற உள்ளத்து அன்பினது அளவும் யாக்கையின் களிப்பும் ஏகாந்தமும் இடையாமமும் ஒன்றாகப் பொருந்திய இயல்பான், மலரால் அலங்கரிக்கப்பட்ட அமளியிடத்து முடுகிய பரிசத்தோடு நலம்பாராட்டல் என்னும் உரைபோல் பிரிதல் நிமித்தம் என்பதாக, என்னோடும் திருவே! மகளிரிடத்துத் தனம் என்பன இல்லையாகில், உலகத்திலுள்ள ஆடவருள் யாவர்தாம் ஒப்பற்ற இன்பத்தை எய்துபவர்கள்? என்றனர். அதன்பின்னர், அளகத்து அரும்பு அவிழ்ந்தகாலைத் தேன் உண்ணவந்து அதனிடத்து உறைவதாம் தனிச்சுரும்போடும், 'நினதிடத்து ஒருமனப்பட்ட பெடையே மனவலி உடையது' என்றனர் அன்றே! அவை இரண்டையும் மிக்க தொனி என்று உட்கொளாத எனது மனமே கொடியது என்றவாறு.

இது பாஞ்சால உதாரம். என்னை? தனம் என்பது இரட்டுற மொழிதலாய் 'நடுவணை எய்தாதவர்க்கு இருதலையும் எய்தா; பொருள்வயின் போகவேண்டும்' என்பதனை உணர்த்தியதாகவும், 'நின்பால் மனம் ஒன்றிய பெடையே வலிஉளது' என்றதனால் 'நீ வைத்து நீங்கிய பெடை நின்னைஇன்றி ஆற்றாமையால் தான் இறக்கின் நீயும் இறப்பை என்று நினது உயிரைப் போற்றித் தனது உயிரைப் பிடித்திருந்த மனவலி உடைத்து' என்பதாய், அதுபோலத் தாம் பிரிந்தகாலத்து யானும் ஆற்றாமையால் இறவாது தம்-உயிரையும் போற்றி இல்லறம் காத்திருக்கவேண்டும் என்பதூஉம் உணர்த்-தியதாகக் குறிப்பினால் பிறபொருள்கொள்ளக் கிடந்தமையான் என்று அறிக.

இதனுள் அளவும் என்னும் உம்மை விகாரத்தால் தொக்கதனை விரித்து உரைக்க. தோழி என்ற முன்னிலைப்பெயரும் எஞ்சி நின்றது காண்க.

பகுதி - பொருள்வயின் பிரிதல். துறை - தலைவி தலைவனை இயற்பட மொழிதல்.
இவற்றை மூன்று நெறியார்க்கும் ஒக்கும் என்பாரும் உளர். அவை பொருந்தா என உணர்க.

உதாரம் முற்றும்.

7. வலி

**மன்இலங்கை மூதூர் வழியோ திறந்தது? ஒன்னார்**
**பொன்நகர்செல் வாயில் புதவுஅன்றோ - தென்அரங்கன்**
**மைந்நீர செம்பவள வால்வளைய வண்தரள**
**முந்நீர் அணைகட்டு முன்.** (106)

என்பது. அழகிய திருவரங்கத்தை உடைய மாயோன் கடலைக் கரைகட்டின முற்காலத்து. இராவணனாகிய நிருதர்கோனது இலங்கையாகிய பழையநகர்க்குச் செல்லும் வழியோ திறந்தது? தென்அரங்கேசனது பாணத்தால் இறந்த சத்துருக்-களாகிய அரக்கர் செல்லும் வீரசுவர்க்க வாயிலின்கண் கதவு அன்றோ திறந்தது? என்றவாறு.
எனவே, வழியும் கதவும் திறந்த என்பதாம். 'மைந்நீர செம்பவள வால்வளைய வண்தரள முந்நீர்' என்பது வைதருப்பவலி. என்னை? இருளின் நீர்மையை உடைத்தாய், சிவந்த பவளத்தைப் பெற்ற, வெளுத்த வளையைப் பெற்ற, அதனிடமாக வளவிய தரளத்தைப் பெற்ற முந்நீரை ஊடறுத்துக் கடலை அணைகட்டின முற்காலத்து எனவே, வேற்றுமைத்தொகை, இருபெயரொட்டுப்-பண்புத்தொகை, வினைத்தொகைகளை முன்னிட்டுப் பெயர் உடைமைப்-பொருளாய் நின்று, கருகும் நீர்மையை உடைய நீரை எனப் பெயர்மேல் ஏறிய இடத்தும். இப்பொருளை உடையதாய் இருந்தது இப்பொருள் என்னுமிடத்து இடைநின்ற உடைமை வினைக்குறிப்பும் காலம் பெற்ற வினைக்குறிப்புமாகிய சொற்கள் இடையிடைப் பல இடத்தும் தொக்கதோடும் பிறசொற்களும் தொகை மிக்கு விரிதலானும் எனக்கொள்க.
திணை - உழிஞை. துறை - புறத்துழிஞை.
[நீர் என்ற பெயர் அடியாகத் தோன்றிய நீர என்னும் ஆறாம்வேற்றுமை உடைமைப்-பொருட்கண் வந்த குறிப்புவினைமுற்று வினையாலணையும் பெயராய்க் கடலுக்கு அடையாயிற்று.
செம்பவளம், வால்வளை, வண்தரளம் - பண்புத்தொகை
மன்இலங்கை, மூதூர்வழி, வாயில்புதவு - வேற்றுமைத்தொகை.
இலங்கை மூதூர் - இருபெயரொட்டுப்பண்புத்தொகை.
செல்வாயில் - வினைத்தொகை.
உழிஞை - பகைவர் மதிலை முற்றுதல்.
புறத்திறை - 'மறத்துறை மலிந்து மண்டி மாற்றார்
விறல்கொடி மதிலின் புறத்து இறுத்தன்று' (பு. வெ. மா. உழிஞை)]

**வன்கேழல் பன்றியாய், வான்பிறைக்கோட்டு, ஆழ்புனல்சூழ்**
**கொன்கேழ் கிளர் தாழ்குழல் களிப்ப - முன்கொணர்ந்த**
**எம்பிரான், சங்குஆழி ஏந்தினான், எவ்வுளார்**
**தம்பிரான் தானே சரண்.** (107)

என்பது, வலிய கேழலாகிய பன்றியாய், வானின்கண் பிறைபோன்ற கோட்டாலே, ஆழ்ந்த புனலின்கண் தாழ்ந்த, நிறம் கிளரும் தாழ்ந்த குழலினை உடைய பூமிதேவியானவள் உள்ளம் களிப்ப, முன்னாள் புறத்தே கொண்டுவந்த எம்முடைய பிரான் சங்கையும் ஆழியையும் கைகளில் ஏந்தினான், எவ்வுளார்க்கும் தம்பிரான். அவன்திருவடிகளே சரணாம் என்றவாறு.

கொன் - பயன் இல் சொல். இது கௌடவலி. என்னை? இதனுள் இருதிறப் பண்புத்தொகை முதலாகத் தொகைஆறும் உடைமை வினைக்குறிப்பும் பிற சொல் தொகைகளும் மிக வருதலான் எனக் கொள்க.

திணை - பாடாண். துறை - கடவுள்வணக்கம்.

[ஆழி ஏந்தினான் - வேற்றுமைத்தொகை; ஆழ்புனல் - வினைத்தொகை; வன்கேழல் - பண்புத்தொகை. கேழல்பன்றி - இருபெயரொட்டுப்பண்புத்தொகை. பிறைக்கோடு - உவமைத்தொகை. சங்குஆழி - உம்மைத்தொகை; தாழ்குழல் - வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. சரண் - சரணாகும் என்று பொருள்படும் குறிப்பு வினைமுற்று. கொன் என்ற இடைச்சொல் பொருளின்றி இங்கு அசையாய் வந்தமையால், பயன்இல்சொல் என்றார்.]

**பொற்றொடி வேற்கண்கள் புடைசிறந்தாட்கு எஞ்ஞான்றும்**
**உற்ற உடல் உயிர் ஈங்கு ஒன்றுஎன்றே - சொற்றனவால்;**
**தோடுஅலர்தார் மாறன் துடரியில் நெஞ்சே! இவளைக்**
**கூடல் எளிதெனவே குறி.** (108)

என்பது பாஞ்சாலவலி. என்னை? பொற்றொடி எனவே வேற்றுமைத்தொகைப்புறத்து வந்த அன்மொழித்தொகையும், வேற்கண் எனவே உவமைத்தொகையும், புடைசிறந்தாட்கு எனவே வேற்றுமைத்தொகையும் வந்து பண்புத்தொகை ஒன்றுமே வாராது பெயர்வினைச்சொற்களும் உளவாய், முன்னவை போலச் சுருங்காதும் மிகாதும் இடைநிலைப்பட்டமையான் என்று உணர்க.

பகுதி - பாங்கியிற்கூட்டம்; துறை - பாங்கியை அறிதல்.

வலி முற்றும்.

[நெஞ்சே! இதழ்விரிந்து மலரும் பூமாலையை அணிந்த சடகோபனுடைய துடரிமலைப்பகுதியில், இத்தலைவியின் வேல் போன்ற கண்கள் தன் பக்கலில் நின்ற தனக்குச் சிறந்த உயிர்த்தோழியோடு உடலும் உயிரும் ஒன்றாகப் பழகினாள் என்பதனைக் கூறுகின்றன. ஆதலால் தோழியின் உதவியைக்கொண்டு இவளைத் தொடர்ந்து கூடுதல் எளிய செயல் என்றே கருதுவாயாக என்றவாறு.]

8. காந்தம்

**ஆவிக்கு உறுதுணைப்பெண் ஆரமுதைப் போல் உரைத்த**
**நாவிற்கு இனிமை நயப்பதோ, - மூஉலகும்**
**தாய்க்கொண்ட தாள்அரங்கர் தண்ணளிசார் விண்ணவர்தாம்**
**வாய்க்கொண்டு உயிர்வாழ் மருந்து?** (109)

என்பது, எனது ஆவி வாழ்வதற்கு மிக்க நற்றுணையாகிய இப்பெண்ணாகிய அமிர்தினைப்போல் தன்பெயரினைச் சொன்னால் சொன்ன நாவிற்கு இனிமையை அளிப்பது ஒன்று ஆமோ, பூமி முதலாய மூன்று உலகங்களையும் தாண்டி அளந்துகொண்ட தாளினை உடைய திருஅரங்கேசர் கருணையைப்

பொருந்தின வானின்உள்ளார் வாயால் உண்டு இனிமையைக் கொண்டு உயிர் வாழாநின்ற அமிர்தம்? என்றவாறு.
ஓகாரம் ஒழியிசை. இதனுள் பெண்ணாகிய அமிர்தின் உயர்த்தியை உலக-ஒழுக்கு இறவாமை உயர்த்தியமையால் இது வைதருப்பகாந்தம்.
பகுதி - இடந்தலை. துறை - நலம்புனைந்து உரைத்தல்.

**திங்கள் வெண்கதிரும் பானுவின் கதிரும் சிறிதும் வைகல் நுழைந்தறியாப்**
**பொங்கர் மல்கிய பூஞ்சோலை நள்ளிடையில், புதைஇருள் இரிதர மடவார்**
**எங்கும் ஏந்திய செஞ்சுடர்களால், உரகன் ஏந்து எழில் மவுலிஆயிரத்துத்**
**தங்கு பன்மணிகள் பரப்பிவைத்து ஒளிர் பாதாலம் ஈதெனப் பொலிதருமால்.**
(110)

இதுவும் வைதருப்ப காந்தம் (குருகாமான்மியம்)
திணை - பாடாண். துறை - விளக்குநிலை.

[சந்திரன்கிரணங்களும் சூரியன்கிரணங்களும் ஒருநாளும் சிறிதும் நுழையமுடியாதபடி கிளைகள் செறிந்த பூஞ்சோலையின் நடுவில், செறிந்த இருள்நீங்க இளைய மகளிர் ஏந்திய விளக்குக்களால், ஆதிசேடனுடைய அழகுமிக்க முடிகள் ஆயிரத்தும் தங்கிய பலமணிகளையும் பரப்பி வைத்து விளங்குகின்ற பாதலஉலகம் போல, அச்சோலை விளக்கம் பெறும்.
முன்னது அகப்பொருள் பற்றிய வருணனை. பின்னது புறப்பொருள் பற்றிய வருணனை.]

**தென்அனந்தை மால்வரைமேல் சேயிழை வன்கண் கூற்றம்**
**முன்னில் உயிர்உண்ணும்என முன்னுற்றோ, - மன்உயிர்உண்**
**கூற்றுஉருவம் மக்கள்உருக் கொண்டோர் விழிக்குஎதிரே**
**தோற்றுஉருவம் கொள்ளாத் துணிவு?** (111)

இது கௌடகாந்தம். பகுதி - இயற்கை. துறை - தகைஅணங்குறுத்தல்.

[அழகிய திருஅனந்தபுரத்திலுள்ள பெரிய மலைமேல் காணப்படுகின்ற இத்தலைவி நினைத்தால் தன் வலியகண்களால் தறுகண்மையை உடைய இயமனுடைய உயிரையும் உண்டுவிடுவாள் என்று கருதியோ, உயிர்களுடைய உயிர்உண்ணும் கூற்றம் மக்கள்-உருவம் கொண்டவர்களுடைய கண்களுக்கு எதிரே உருவத்தோடு வாராதிருக்கிறது? இஃது அளவுகடந்த கற்பனையாதலின் கௌடகாந்தமாயிற்று.]

**பூட்டி உழும் கருமேதி அரிதாளில் கருங்குவளைப் போதுமேயத்**
**தீட்டிய நாவினைக் குறுக்கிச் சிறைவண்டின் பண்அமுதைச் செவியால் உண்டு**
**மோட்டு முதுமுலைக்கண் மடைதிறந்து ஒழுகும் பால்அமுதம் முழங்கி ஆம்பல்**
**காட்டுவரம்பு உடைப்ப அயல்கழனி அடைத்து உழவர் உழும் காட்சித்து**
**ஒன்றே.** (112)

இது பாஞ்சாலகாந்தம். துறை - நாடுவாழ்த்து. (குருகாமான்மியம்)

காந்தம் முற்றும்.

[ஏரினைப் பூட்டி உழுதற்குரிய கதிர்அரிந்த தாள்களில் பூத்திருக்கும் குவளைப்பூக்களை மேய்வதற்குப் பெண்எருமை, தான் நீட்டிய நாவினை மீண்டும் உள்இழுத்துக்கொண்டு, அப்பூக்களில் வண்டுகள் ஒலிக்கும் இசையமுதைச் செவியால் உண்டு மனம்நெகிழவே, அதன் பருத்தமடியின் முலைக்காம்புகள் மடைதிறந்தாற்போலப் பிலிற்றும் பால்அமுத-வெள்ளம் முழக்கமிட்டு ஆம்பல்கள் பூத்துள்ள வரப்புக்களை உடைப்ப, அவ்வெள்-ளத்தை உட்புகவிட்டு அவற்றை அடைத்து உழவர்கள் வயல்களை உழும்காட்சி அங்குக் காணப்படும் காட்சிகளுள் ஒன்றாகும்.]

9. உய்த்தலில் பொருண்மை

**ஆழிப் படைக்கை அருளாளன், மிக்கதிரு**
**மூழிக்களத்து உறையும் மூவர்கோன், - ஊழிதொறும்**
**வித்தகனே, காரிதரும் மெய்ஞ்ஞான முத்திரைக்கை**
**உத்தமனே, காக்க உனை! (113)**

திணை - பாடாண். துறை - புறநிலைவாழ்த்து.

[சக்கரப்படை ஏந்திய அருளாளனாய் மேம்பட்ட திருமூழிக்களத்து உகந்தருளியிருக்கும் பிரமன் உருத்திரன் இந்திரன் இவர்கள் தலைவனாய், ஊழிதோறும் வியத்தகுசெயல்கள் செய்பவனாய்க் காரியார்மகனாகிய மாறனால் தன் முத்திரைக்கையால் காட்டப்படும் உத்தமனே உன்னைக் காப்பானாக!]

**இறையே திருமால், வீடுஎன்பதும் அந்தாமம்,**
**மறையே பனுவல்என வைக்கும்; - நிறைகூர்**
**கரையற்ற போதக்கடல் மாறன் உண்மை**
**உரைகற்று உயர்ந்தார் உளம். (114)**

[என்றும் நிறைந்த கரையில்லாத ஞானக்கடலாகிய மாறனுடைய உண்மையை உரைக்கும் நூலாகிய திருவாய்மொழியை முறையாகக் கற்று உயர்ந்துள்ளவரின் உள்ளமானது, இறைவன் திருமாலே, வீடு என்பது வைகுந்தமே, நூல் என்பது வேதமே என்று துணிந்து நிற்கும்.]

திணை - பொதுவியல்; துறை - பனுவல்வாழ்த்து.
இவை இரண்டும் உய்த்தலில்பொருண்மை. இவை மூன்றுநெறியாருக்கும் ஒக்கும்.

உய்த்தலில்பொருண்மை முற்றும்.

[கருதிய பொருளைத் தெரிவுற விரித்தற்கு, உரிய சொல் உடையது உய்த்தலில்பொருண்மை என்பதனை உட்கொண்டு பொருள்தெளிவாக விளங்கச் சொற்கள் குறைவற உள்ளது வைதருப்பநெறி எனவும், அங்ஙனம் சொற்கள் குறைவற இல்லாதது கௌடநெறி எனவும், இலக்கணவிளக்கம் கூறும்.]

10. சமாதி

**கூண்டு குமுதமலர் சிரிக்கக் கோகனகம்**
**ஈண்டுஇதழ்ச்செங்கை குவிக்கும் எல்லிதான் - நீண்டுஉகமாம்**
**என்றால், இறைஅரங்கத்து ஏந்தல்! பொருட்கு ஏகல்**
**ஒன்றாலும் ஆகாது உனக்கு. (115)**

[கூம்பி இருந்த குமுதமலர்கள் மலரவே, தாமரை தம் இதழ்களாகிய செங்கைகளைக் குவிக்கும் இராப்பொழுது, நீ பிரிந்தகாலை நீண்டு ஊழிக்காலம் போலத் தலைவியைத் துன்புறுத்தும் என்பதனைக் கருதும்போது, எம்பெருமான் திருவரங்கத்திலுள்ள தலைவனே! பொருள்வயின் பிரிதல் உனக்கு ஒருகாரணத்தாலும் நிகழப்போவது அன்று.]

சிரித்தல் - மலர்தல். ஏந்தல் - அண்மைவிளி. இதனுள், சிரிக்க எனவும் கைகுவிக்க எனவும் முக்கியபொருளாகிய வாயினது கிரியையும் கைகளின் கிரியையும் ஒப்புடைப்பொருளாகிய குமுதத்தினும் கமலத்தினும் புணர்த்து உரைத்தமையால் சமாதி எனக்கொள்க. (முக்கியப்பொருள் உபமேயம்).
பகுதி - பொருள்வயின் பிரிதல். துறை - செலவு அழுங்குவித்தல்.

**ஆரப்பொழில் கோங்குஅரும்பு தினமாக**
**வாரைப் பொருது எழுந்த; வண்மைசேர் - பேரைக்**
**குழைக்காதர் என்று ஒருகால் கூறாதோ, வென்றிக்**
**கழைக்கார்முகன் காகளம்? (116)**

இது சிலேடை வாய்பாட்டான் வந்த சமாதி.

(இ-ள்) சந்தனப்பொழில் ஆகத்து நின்ற கோங்குஅரும்பு வைகலும் மேகத்-தினிடத்து உண்டாகிய தண்ணீரைத் துழாய் எழும் எனவும், ஆகத்தினிடத்துக் கட்டின கச்சினைப் பொருது எழும் எனவும், முலையினது கிரியையைக் கோங்குஅரும்பினிடத்தும் புணர்த்தவாறு காண்க. மாகம், ஆகம் எனப் பிரிமொழிச்சிலேடையும் வாரை எனச் செம்மொழிச் சிலேடையும் கொள்க. இவை மூன்று நெறியாருக்கும் ஒக்கும்.

திணை - பெண்பாற்கூற்றுக் கைக்கிளை; துறை - குயிலொடு வெறுத்துக்கூறல்.

சமாதி முற்றும்.

ஆக இன்பம் முதல் சமாதி ஈறாகக் குணஅலங்காரம் பத்தும் அடைவே வந்தவாறு காண்க.

[(இ-ள்) சந்தனப்பொழிலகத்து நின்ற கோங்கரும்புகள், வைகலும் மேகத்தினிடத்து உண்டாகிய தண்ணீரைத் துழாவி எழுகின்றன. சந்தனச்சோலையில் எழுந்த கோங்கரும்பு போலச் சந்தனக்குழம்பில் தோய்ந்த முலைகள், நாளும் தம்மைப் பிணித்துக் கட்டின கச்சினோடு போரிட்டுத் தம் பெருப்பினால் அவற்றைக் கடந்து வெளிப்படும். இந்நிலையில் வண்மைப்பண்பு நிறைந்துள்ளவரான திருப்பேரைப்-பகுதியில் உகந்தருளியிருக்கும் என் தலைவரான மகர நெடுங்குழைக்காதருடைய திருநாமத்தை வெற்றியைத் தரும் கருப்புவில் ஏந்திய மன்மதனுடைய ஊதுகொம்பு ஆகிய குயில் ஒருமுறை கூவக் கூடாதா? என்று தலைவி குயிலொடு வெறுத்துக் கூறுகிறாள்.

ஆகம் - மார்பு. மாகம் - வானம். வார் - நீர், கச்சு.] [20]

பொதுவியல் புறனடை

**85. செய்யுள் குணங்கள் ஒழிவறவே செப்புவதும்**
**பொய் இல் புலமை உறாப் புன்கவியேற்கு - எய்துமதோ?**
**சொற்றவற்றான் சொல்லாதவற்றினையும் சொல்லியவா**
**முற்றுவித்தல் கற்றோர் முறை. [21]**

(எ-ன்) சொல்லிய குணஅலங்காரங்கட்கு ஒழிபு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) செய்யுளின்கண் குணஅலங்காரங்களை ஒழிவற முற்ற உணர்த்துவதும் பொய் என்பது இல்லாத அறிவின்தன்மை பொருந்தாத புன்கவியேற்கு எளிதாய் எய்தப்பெறும் தன்மைத்து ஒன்றோ? ஆகையால், இங்ஙனம் சொல்லப்படும் குணங்களோடும் சொல்லாது ஒழிந்த அக்குணங்களையும் சொல்லியனவாக முற்றுவித்தல் கற்றுணர்ந்த சான்றோர் கடன் என்றவாறு.

இங்ஙனம் கூறவேண்டும் நோக்கம் யாதோ எனின், செறிவு என்று சொல்லப்-படுவதும் எழுத்துச்செறிவும் சொற்செறிவும் பொருட்செறிவும் செறிந்து வேறுவேறு ஒலித்து நடக்கும் என்று கூறியவற்றுள், எழுத்துச்செறிவும் வண்ணமும் மூன்றுநெறியார்க்கும் வெவ்வேறாக்கி, ஒருவகைச் சொற்செறிவும், அவை அல்லாத பொருட்செறிவும் மூன்றுநெறியார்க்கும் பொதுவாகக் கூறினார்

எனினும், மெய்களுள் உடனிலைமயக்கம் இன்றி ஏனை மயக்கமாக வண்ணமும் பொதுவாவனவும் உள. அவை வருமாறு:

**மயர்வற மதிநலன் அருளிய நறைகமழ் மலர்மகள் புணர்பவன்மேல்**
**உயர்வற உயர்நலன் எனமுதிர் தமிழ்மறை உரைமகிழ் முனிவரைவாழ்**
**புயல்புரை குழல்மதி புரைநுதல் வடவரை புரைபுணர் இளமுலைசேர்**
**கயல்புரை விழி! எனதுயிர் எவண்? நினதுயிர் கவல்வகை எவன்?**
**மயிலே! (117)**

இஃது அராகம் தொடுத்த அடியோடும் பிறிது அடியும்படத் தொடர்ந்து ஓடினமையின் முடுகுவண்ணம்; 'முடுகுவண்ணம், அடிஇறந்து ஓடிய அதனோ-ரற்றே' (தொ. பொ. 545) என்றாராகலின். இவ்வண்ணமும் மூன்றுநெறியார்க்கும் ஒக்கும். ஒழிந்தனவற்றுள்ளும் இவ்வண்ணம் பாகுபடும் என்னும் நோக்கத்தால் கூறப்பட்டது. அவைஎல்லாம் ஈண்டு உரைப்பின் பெருகும்.
பகுதி - உடன்போக்கு. துறை - செவிலி தேடல்.

[பகுதி - கற்பொடு புணர்ந்த கவ்வை; துறை - செவிலி பாங்கியொடு உசாவல் என்பதே மாறன்அகப்பொருளுக்கு ஏற்றது. 'உடன்போக்கு - செவிலிதேடல்' என்பது திருக்-கோவையாரைப் பின்பற்றியது. (பாடல் 224)

தமக்கு உலகமயக்கம் தீரப் பேரறிவு நல்கிய திருமகள்கொழுநன்மேல் 'உயர்வற உயர்நலன்' என்று தொடங்கித் திருவாய்மொழியைப் பாடிய மகிழம்பூமாலையை அணிந்த மாறனுடைய மலையிலே வாழ்பவளாய், மேகம்போன்ற கூந்தலையும், பிறைபோன்ற நுதலையும், மேருமலைபோன்ற இணைநகில்களையும், கயல்போன்ற விழிகளையும் உடைய தோழியே! என்உயிர் போன்ற தலைவி எங்கு உள்ளாள்? நின்உயிர் கவலையால் வாடுவது ஏன்? என்று, தலைவி உடன்போக்கில் பிரிந்தவழிப் பின்விளைவுகள் கருதிக் கவலையுற்றிருந்த பாங்கியைச் செவிலி வினவியவாறு.] [21]

பொதுவியல் உரை முற்றும்.

**தருகாளமேகம் கவிராய ராயன் சடையன் அன்பால்**
**குருகாபுரேசர் புனைஅலங்காரம் குவலயத்தே**
**கருகாத செஞ்சொல் உரைவிரித்தான், கற்பகாடவி போல்**
**வருகாரி ரத்ன கவிராயன் பேரை வரோதயனே.**

## இரண்டாவது
## பொருளணியியல்

86. பொருளினும் சொல்லினும் புனையுறு செய்யுட்கு
அணிபெறப் புணர்த்தலின் அணிஎனும் பெயர்த்தே. [1]

என்பது சூத்திரம். இவ்வோத்து என் நுதலிற்றோ எனின், ஓத்து நுதலியதூஉம் ஓத்தினது பெயர் உரைப்பவே விளங்கும். ஆயின் இவ்வோத்து என்ன பெயர்த்தோ எனின், பொருள்அணிஇயல் என்னும் பெயர்த்து, பொருளான் ஆம் அணிகள் உணர்த்தினமையின். ஆயின் இதன் தலைச்சூத்திரம் என் நுதலிற்றோ எனின், சொல்லுவான்தொடங்கிய அணி என்பவற்றிற்குக் காரணம் இவை என்பதூஉம், அவை செய்யுட்கு இன்ன சிறப்பு உடைத்தாகப் புணர்த்தலின் இப்பெயர்த்து ஆயிற்று என்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) புலவரான் தொடுக்கப்பட்ட கவிகட்குப் பொருளானும் சொல்லானும் அழகு எய்தப் புணர்ப்பதால் அணி என்னும் பெயரை உடைத்தாயிற்று இவ்வலங்காரம் என்றவாறு.

புலவரான் என்பதூஉம் அலங்காரம் என்பதூஉம் சொல்லெச்சம். அணி இரண்டனுள் முன்னையது அழகாம்; பின்னையது பூணாம். ஆகவே பொருளானும் சொல்லானும் அணி இரண்டு என்பதாயிற்று. [1]

### பொருளணியின் வகைகள்

87. அவற்றுள்,
புவனம் போற்றிய பொருள்அணி புகலின்,
தவலரும் பான்மைத் தன்மை, உவமை,
உருவகம், உள்ளுறை, ஒட்டு, உல்லேகம்,
ஒப்புமைக்கூட்டம், வேற்றுமை, திட்டாந்தம்,
தற்குணம், பிரத்தியநீகம், சந்தயம்,
அற்புதம், நிதர்சனம், தற்குறிப்பு, அதிசயம்,
சிலேடை, பின்வருநிலை, தீபகம், நிரல்நிறை,
பூட்டுவில், இறைச்சிப் பொருள்கோள், பொருள்மொழி,
அதிகம், வகைமுதல் அடுக்கு, இணைஎதுகை,
விரோதம், உபாயம், விசேடம், சமாயிதம்,
ஏது, சுவை, பரியாயம், இலேசம்,
தற்பவம், அசங்கதி, தடுமாறுத்தி,
புணர்நிலை, வேற்றுப்பொருள்வைப்பு, விபாவனை,
ஆர்வமொழி, நெடுமொழி, பரிவருத்தனை
காரணமாலை, காரியமாலை,
ஏகாவளி, பிரதீபம், பிறவணி,
முன்னவிலக்கல், அபநுதி, நிந்தாத்துதி,

**புகழ்வதின் இகழ்தல், மாறுபடுபுகழ்நிலை,**
**பரிசங்கை, காவியலிங்கம், பரிகரம்,**
**உறுசுவை, விநோத்தி, சமுச்சயம், உதாத்தம்,**
**ஆசி, சங்கரம், சங்கீரணமே**
**பாவிகம் என அறுபான்நான்கு ஆகும். [2]**

(எ-ன்) வைத்தமுறையானே பொருளான்ஆம் அணிகளது பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அங்ஙனம் இரண்டு கூற்ற ஆகிய அணிகளுள் (86) உயர்ந்தோர் முதல் எனப் போற்றப்பட்ட பொருளணி ஒன்றனையும் கூறுமிடத்துத் தன்மை முதலாகப் பாவிகம் ஈறாக அறுபத்துநான்காம் என்றவாறு.

இவற்றிற்கு எல்லாம் எண்ணும்மை தொக்குநின்றன. என என்பது எண்இடைச்-சொல். என்னை?

'என்றும் எனவும் ஒடுவும் ஒரோவழி
நின்றும் பிரிந்துஎண் பொருள்தொறும் நேரும்' (நன். 429)

என்பதனால். என என்பதனைத் தன்மை முதலாக எண்ணிய எங்கும் ஒட்டுக. அஃதாக, இச்சூத்திரத்துள் சிலேடை, பின்வருநிலை, தீபகம், நிரல்நிறை முதலிய சொல்லான்ஆம் அணிகளும் கூறாநிற்பப் பொருளணிஇயல் என்பது என்னை எனின், மிகுதி பொருள்மேலதாதலின் மிக்கவற்றால் பெயர் கொடுத்தார்; அஃது யாவது போல எனின், அங்கராகமாகிய சந்தனத்துடன் குங்குமம் கற்பூரம் கத்தூரி கூடினும் பூசியது சந்தனம் என்பது போலக் கொள்க.

அற்றேல், இது முறை ஆயினவாறு என்னையோ எனின், இயல்பு விகாரம் என இரண்டாகிய அவற்றுள் தன்மை இயல்பு ஆகலான் முற்பட்ட முறைமைத்தாக வைக்கப்பட்டது. உவமையை மூன்றுஉறுப்பு அடக்கிய பிண்டமாகும் தொல்-காப்பியத்துள் இறுதி நின்ற பொருளகத்து அகப்பட்டதாக அலங்காரத்தினையும் கூறிய ஒல்காப் புலமைத் தொல்காப்பியனாரும் உவமை என்பது ஒன்றாகத் தொகை பெற்று வினை முதலிய நான்காய் வகுத்துப் பலவேறு விரிவாய் நின்று விகாரமாயதன்றிப் பல அலங்காரங்கட்கும் உபகாரம் உடைத்து ஆகலானும், அஃது ஒன்றினையுமே முக்கியமாக்கி அதனுடன் உருவகமும் உள்ளுறை-உவமமும் வகுத்துக் கூறிய முதன்மையானும், இதற்குத் தனியே முதல்நூல் செய்த தெண்டிஆசிரியரும் அவர்நோக்கமே தாமும் உடன்பட்டாராகத் தன்மையின் பின் உவமையை வைத்தார் ஆகலானும், இருவர் நோக்கமும் உட்கொண்டு இந்நூலுடையார் அவை இரண்டிற்கும் இந்நூல் வழிநூல் ஆத-லானும் தன்மையை முதல்வைத்து அதன்பின் உவமையையும் முதல்வைத்தது முறைஎனக் கொள்க. உருவகமும், உவமையும் பொருளும் வேறுபட்டு நில்லாது ஒன்று என்னும் பான்மைத்து ஆய மாட்டேற்றும் உவமை ஆதலானும், உள்ளுறைஉவமமும் இசை திரிந்து இசைக்கப்படுவதால் உவமையோடு உவமிக்கப்படும் பொருள் பிறிது ஓர்ஆறு தாராது அவ்வந்நிலங்களில் பிறந்த கருப்பொருளோடும் சார்த்தி உள்ளுறுத்திக் கொள்ளும் உவமையாதலானும் அவை முறையே வைக்கப்பட்டன. ஒழிந்த ஒட்டு, உல்லேகம் முதலியனவும் உவமையைப் பின்சென்று இருத்தலான் அவை வைத்த முறையும் உய்த்து உணர்ந்து கொள்க. அவையெல்லாம் ஈண்டு உரைப்பின் பெருகும்.

அஃதாக, ஆனால் இந்நூலுடையார் முதல்நூல்களில் கூறியபடியே வழிநூலில் சிறிது புடைநூல் இலக்கணம் தவறாது கூறப்புகுந்து, மிகவும் இதன்

முதல்நூலாகிய தண்டி கூறிய அணிகளுள் நுட்பம் என்னும் அலங்காரத்தைக் குறைத்துப் பிற முதல்நூல் அணிகள் கூறிய அணிகளையும் திரட்டிக்கூறி, முந்துநூல்களுள் கூறாத பூட்டுவில், இறைச்சிப்பொருள்கோள், பொருள்மொழி என்னும் மூன்றினோடும் வகைமுதல் அடுக்கு, இணைஎதுகை, உபாயம், உறுசுவை, புகழ்வதின் இகழ்தல் என்னும் அலங்காரங்களையும் கூட்டி அறுபத்துநாலாக மிகுத்ததூஉம் ஒருவழிக் குன்றக்கூறல், மிகைபடக்கூறல் என்னும் குற்றமாம் பிறஎனின், ஆகாது; என்னை? நுட்பம் என்பது பரிகரத்துள் அடங்கும்எனக் குறைத்து, செய்யுட்கு அணிபெறப் புணர்ப்பதெல்லாம் அணி எனப்படுதலான், முன்னைய மூன்றும் சொல்லிலக்கணத்தினும், பொருளியலினும் புறத்திணையியலினும் கூறியபடியே செய்யுட்கு அழகாதலின் அணியில் கூட்டி மிகுத்தார்; ஏனைய ஐந்தும் அழகு எய்துவனவாய் இலக்கியம் கண்டு அதற்கு இலக்கணம் இயம்பியவாக்கி மிகுத்தார் ஆகலான் என்று உணர்க. அன்றியும் வழிநூலும் புடைநூலும் செய்தற்கு ஏது, தொகுத்தல் முதலிய நான்கினுள்ளும் முதலன இரண்டும் மிகவும் ஏது ஆகலானும் கூறப்பட்டன.

அற்றேல், ஐயமும் தெரிதருதேற்றமும் பொதுநீங்கு உவமையும் தெண்டி ஆசிரியர் உவமவிரியுள் புணர்க்க, அவற்றை ஏனை ஆசிரியர் வெவ்வேறு அணியாகப் புணர்க்க, இந்நூலுடையார் முதல் இரண்டும் பிறர் நோக்கத்தோடும் கூட்டிப் பிறிதோர் அணியாக்கி, பின்னையது தெண்டி நோக்கத்தோடும் கூட்டிப் புணர்த்ததூஉம் குற்றமாம் எனின், குற்றமன்று; இருவர்க்கும் முதலான தொல்காப்பியனார், 'தடுமாறு உவமம் கடிவரை இன்றே' (தொ. பொ. 213) என வழுஅமைதி வாய்பாட்டால் கூறினமையானும், அவற்றுள் உவமஉருபு புணராமையானும் உவமையைப் பின்சென்ற பிறிது ஓர் அணியாகப் 'பிறர் உடம்பட்டது தான் உடம்படுதல்' (தொ. பொ. 665 பே.) என்னும் உத்தியான் உடம்பட்டும், ஏனையது, 'தானே தனக்கு உவமைதான்' என உவமவாசகம் புணர்ந்தமையானும், 'ஒரீஇக் கூறலும் மரீஇய பண்பே' (தொ. பொ. 311) என்றார் ஆதலானும், பிறர் மதங்களைதல் என்னும் உத்தியானும் கூறப்பட்டது.

இங்ஙனம் பெயரும் முறையும் தொகையுமாகிய அணிகளை முதல்நூல் ஆசிரியர் வகைப்படுத்தியும், விரித்தும் கூறிய நோக்கத்தோடும் சிலவற்றை இந்நூலுடையார் தன்கோட்கூறல் என்னும் உத்தியானும் தான் குறியிடுதல் என்னும் உத்தியானும் வகுத்ததன்மேல் விரித்து வகுத்தும், விரித்ததன்மேல் விரித்ததையும் அவ்வணிகட்கு உணர்த்தும் பீடிகை முதலாய உரைநடை நோக்கங்களான் ஆங்காங்குக் கண்டுகொள்க. அவை எல்லாம் ஈண்டு உரைப்பின் பெருகும்.

[ஒன்று, தன்மையும் உவமையும் உருவகமும் உள்ளுறையும் என்றாற்போலத் தொக்குநின்ற எண்ணும்மைகளை விரித்து எண்ணுதல் வேண்டும்; அல்லால் 'பாவிகம் என' என்ற இடத்து வந்துள்ள என என்னும் எண்இடைச்சொல்லைத் தன்மையென, உவமைஎன, உருவகம்என உள்ளுறைஎன என்றாற்போல 64 அணிப்பெயர்களோடும் கூட்டி எண்ணவேண்டும்.

வடமொழியில் கர்பூரம் என்ற சொல்லே உள்ள காரணத்தால் அது தமிழில் வரும்போது கருப்பூரம் என்ற வடசொல்லாகத் திரித்துக் கொள்ளப்படுவதே ஏற்புடையது. கர்ப்பூரம், கற்பூரம் என்ற எழுத்தமைப்பும் நெடுநாள்களாக வழக்கத்தில் வந்துவிட்டபடியால் அவை வழுவமைதியாக ஏற்றுக்கொள்ளப்படலாம். இவ்வியலில் மிகுதியும் பொருளணிகளே கூறப்படுதலின் பொருளணியியல் என்பது மிகுதிபற்றி வழங்கப்பட்ட பெயர்.

மூன்று உறுப்பு - சூத்திரம், ஒத்து, படலம் என்பன. அகப்பட்டது - அடங்கியது. வினை முதலிய நான்கு - வினை, பயன், மெய், உரு என்பன.
அவை இரண்டு - தொல்காப்பிய உவமவியல், தண்டியலங்காரம் என்பன.
முதன்மையானும் - காரணத்தானும். இசை திரிந்து இசைக்கப்படுதல் - சொற்கள் தம் இயல்பான பொருளை விடுத்து இயைபுடைய பிறிதொருபொருளைக் குறிப்பிடுமாறு அமைக்கப்படுதல். தொல்காப்பியத்தில் உவமம் என்பது உபமானத்தையும், உவமை என்பது பொதுத்தன்மையையும் குறிப்பிட வழங்கப்பட்டுள்ள செய்தி உளங்கொளத் தக்கது. முதல்நூலணிகள் - அணி இலக்கணம் பற்றிய பிற முதல்நூல்கள். பூட்டுவில் என்பது நன்னூல் சொல்லதிகாரத்துப் பொதுவியலில் பொருள்கோள் வகைகளுள் ஒன்றாகக் குறிக்கப்பட்டிருக்கிறது (சூ. 415). இறைச்சி தொல்காப்பியப் பொருட்படலப் பொருளியலிலும் (சூ. 33-35), பொருள்மொழி புறத்திணையியல் வாகையின் வகை பற்றிய 17-ஆம் நூற்பாவில் 'பொருளொடு புணர்ந்த பக்கத்தானும்' என்னும் அடியிலும் முறையே கூறப்பட்டுள்ளன.
ஏனை ஆசிரியர் என்று உரையாசிரியர் யாரைக் குறிப்பிடுகிறார் என்பது புலப்படவில்லை. மாறன்அலங்காரத்துக்கு முற்பட்ட அலங்காரநூல் தண்டியொன்றே. வீரசோழியமும் வடமொழித் தண்டியலங்காரத்தின் மொழிபெயர்ப்பே.
வழிநூல் செய்தற்குரிய ஏது நான்காவன - தொகுத்தல், விரித்தல், தொகைவிரி, மொழிபெயர்த்து அதர்ப்பட யாத்தல் என்பன.
ஐயவுவமை, தெரிதருதேற்ற உவமை இரண்டனையும் சந்தயஅலங்காரத்துள் சுத்தசந்தயம் எனவும் நிச்சயாந்தம் எனவும் இவ்வாசிரியர் குறிப்பிட்டுள்ளார்; பொதுநீங்கு உவமையை உவமை அணியின் 25-ஆவது பிரிவாகக் குறிப்பிட்டுள்ளார்.] [2]

### தன்மைஅணி

**88. வழுவா மரபின் எப்பொருளையும் விகாரம்**
**தழுவா நடைபெறப் புணர்ப்பது தன்மை. [3]**

(எ-ன்) மேல் நிறுத்தமுறையானே(87) தன்மை என்னும் அலங்காரத்தினது பொதுஇலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) இருதிணையுள் குற்றமில்லாத இலக்கணத்தைஉடைய எவ்வகைப்பட்ட பொருள்களையும் உவமை முதலிய விகாரஅணிகள் கூடாதே சுபாவநடை பெறப் புலவன் பாடுவது தன்மை என்னும் அலங்காரமாம் என்றவாறு.
நடை - ஒழுக்கம். குற்றமில்லாத எவ்வகைப்பட்ட பொருளையும் எனவே, குற்றமுடையவற்றின் சுபாவத்தைப் பாடுவதும் தன்மையாம் எனினும் அலங்காரத்தின்பாற் கூடாது என்பதாம். வழுவாத மரபு என்னும் வினை எதிர்மறுத்த பெயரெச்ச வாய்பாடு செய்யுள்விகாரத்தால் கெட்டு ஈற்றுயிர்மெய் கோவா முத்தம் என்பது போலக் குறைந்து நின்றது. தழுவா என்பதும் அது. விகாரம் ஆகுபெயர்.
[செய்த என்ற பெயரெச்சத்தின் மறை செய்யா என்பதே. இதுவே தொல்காப்பியம், சங்கஇலக்கியம் இவற்றுள் காணப்படுவது. திருக்குறளில் 'உளவரை தூக்காத ஒப்புர வாண்மை' (குறள். 480) என்றாற்போலச் செய்யா என்ற வாய்பாடு செய்யுள்அமைப்பிற்காகச் செய்யாத என அகர ஈற்று எதிர்மறைப்பெயரெச்சமாக விரிந்து நாளடைவில் அதுவே உண்மைவடிவம் போல் ஆகிவிட்டமையால், பிற்கால இலக்கணஉரையாசிரியர் பலரும் செய்யாத என்பதே இயல்பான எதிர்மறைப்பெயரெச்சம் எனவும், செய்யா என்பது ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம் எனவும் கொள்வாராயினர். இவ்வுரையாசிரியரும் அவ்வியல்பினரே. எனவே, செய்யா என்பதே எதிர்மறைப் பெயரெச்சத்தின் பண்டைய உண்மைவடிவம் என்பதனையும், செய்யாத என்பது செய்யா என்பதன் திரிந்த வடிவமே என்பதனையும் உணரல் வேண்டும்.

விகாரம் - விகாரஅணிகளைக் குறித்தலின் ஆகுபெயர். விகாரம் - இயற்கைக்கு மாறுபட்டது. தன்மையணியைத் தவிர ஏனைய அணிகள் யாவும் விகாரஅணிகளே.] [3]

தன்மையணியின் சிறப்பிலக்கணப் பாகுபாடு

**89. அதுவே,**
**ஒண்பொருள், மக்கள், உயிர்உள அஃறிணை,**
**சினை, வினை, பண்பு, இடம் எனவும் சிவணும்.** [4]

(எ-ன்) தன்மையின் சிறப்புஇலக்கணப் பாகுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அத் தன்மை என்னும் அணி உயர்திணையிடத்துப் பொருள்தன்மையும், மக்கள்தன்மையும், அஃறிணையிடத்து உயிருள்ள அஃறிணைத்தன்மையும், உயிரில்லாத அஃறிணைத்தன்மையும், அப்பொருளின் சினைத்தன்மையும், வினைத்தன்மையும், பண்புத்தன்மையும், இடத்தன்மையும் எனத் தனித்தனி புலப்படப் பொருந்தும் என்றவாறு.

'அதுவே' என்பது 'சீர்கூன் ஆதல் நேரடிக்கு உரித்தே' (தொ. செய். 47) என்பதனால் சீர் கூன் ஆயிற்று. இவற்றிற்கு எல்லாம் எண்ணும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கு விரிந்தன. உயிரில் அஃறிணை என்பதும், உயர்திணை என்பதும் எச்சமாகி விரிந்தன. இன்னும் அவ்விலேசானே, உயிருள அஃ றிணையுள் இயங்குதிணையும், உயிர்இல்லவற்றுள் கருத்துப்பொருளும் கொள்க.

[உயிர்இல் அஃறிணை என்பதும் உயர்திணை என்பதும் உம்மையால் பெறப்பட்டன. அஃறிணை எனப் பொதுப்பட ஓதாது உயிர்இல் அஃறிணை என அடைபுணர்த்ததனை மிகைச்சொல்லாகக் கொண்டு அம்மிகைச்சொல் கொண்டு பல செய்திகளையும் அடக்கிக்கொள்ளும் இலக்கண உரையாசிரியர்கள் மரபு பற்றி, 'இன்னும் அவ்விலே-சானே ... கொள்க' என்றார்.] [4]

பொருட்டன்மையின் வகை

**90. அவற்றுள்,**
**பொருள்இயல்பு ஆண்பெண்என இரு புலப்படும்.** [5]

(எ-ன்) இது பொருள்தன்மைக்கு ஒருபகுதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அச்சொல்லப்பட்ட உயர்திணை அஃறிணையுள் பொருள்தன்மை ஆடூஉப்பொருள்தன்மை, மகடூஉப்பொருள்தன்மை என இருவகைத்தாய்த் தோற்றும் என்றவாறு. [5]

மக்கட்டன்மையின் வகை

**91. அரும்பெறல் மக்கட் டன்மையும் அற்றே.** [6]

(எ-ன்) இஃது உயர்திணைக்கண் மக்கள்தன்மைக்கு ஒரு கூறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) பெறுதற்கு அரிய மக்கள்தன்மையும் பொருள்தன்மை போல இரு-வகைப்படும் என்றவாறு.

அற்று - உவமஉருபு. அஃறிணைக்கு ஒருமைபன்மை என்பதல்லது ஆண்-பெண் என்பது சிறப்பின்மையால் கூறார் ஆயினார். என்னை?

'ஆண்பெண் பலர்என முப்பாற்று உயர்திணை' (நன். 262)

'ஒன்றே பலஎன்று இருபாற்று அஃறிணை' (நன். 267)
என்பதனால் அறிக.

இவற்றிற்கு எல்லாம் செய்யுள் வருமாறு:

**செம்பொன் ஆடை செறிதிரு மருங்கினன்,**
**அம்புயத் தனிமலர் அலர்ந்த உந்தியன்,**
**கவுத்துவக் கடவுள் கவின்நிழல் முழுமணி**
**பவித்திரத் திருமகள் பதிந்த மார்பினன்,**
**வலம்பயில் முப்புரி நூலொடும் வாடாது**
**இலங்கிய வனமாலிகை புனை இணைப்புயன்,**
**இகல்புரி திகிரி சங்கு ஏந்திய கரத்தினன்,**
**கதிர்மணி மௌலி கவித்த சேகரன்**
**மதிதவழ் சோலை மலைஅலங்காரன்**
**பூதலம் தாய பொன்அடி**
**காதலித்தவர் வல்வினை கடந்தவரே.** (118)

இஃது ஆடூஉப் பொருள்தன்மை. திணை - பாடாண். துறை - கடவுள்வாழ்த்து. பா - நேரிசைஆசிரியப்பா.

[பொன்னிற ஆடை பொருந்திய இடையை உடையவன், தாமரைமலர் தோன்றிய கொப்பூழை உடையவன், அழகிய ஒளிவீசுகின்ற தெய்வத்தன்மை பொருந்திய கவுத்துவமாகிய பெருமணியோடு தூய திருமகள் நீங்காது தங்கிய மார்பினை உடையவன், வலப்புறத்துத் தொங்கும் பூணூலுடன், வாடாது விளங்கும் திருத்துழாய்மாலை அணிந்த இருபுயத்தினன், அடியவர்களின் பகைவரோடு பகைத்துச் செயற்படும் சக்கரத்தையும் சங்கினையும் ஏந்திய கையினன், ஒளிவீசும் இரத்தினங்கள் பதிக்கப்பட்ட முடி சூடிய தலையினன், சந்திரன் தவழும் சோலைகளைஉடைய திருமாலிருஞ்சோலைமலையிலுள்ள அலங்காரன் என்ற எம்பெருமானுடைய உலகத்தை அளந்த திருவடிகளை விரும்பியவர்கள் பேராற்றலுடைய நல்வினை தீவினைகள் நீங்கப்பெற்றவர் ஆவர். இது முழுதும் எம்பெருமான் வருணனை ஆதலின், ஆடூஉப்பொருள்தன்மையணி உடையது எனப்படுகிறது.]

**கனைஇருள்கடி வயிரப்பரல் செறிதமனியப்**
**புனைகழலொடு வனைபரிபுரப் பூந்தாளினன்**
**குறங்குஇணையொடு மருங்கினைவளை பொலந்துகிலினன்**
**அறம்தழைதரு அயன்தனைஅருள் அலர்உந்தியன்**
**கவுத்துவமணி வனமாலிகை கலந்துஒளிர்திருப்**
**பவித்திரமுடன் மலர்மாமகள் பயில்மார்பினன்**
**வான்தோய்கதி ரினில்திகிரியை வலன்ஏந்தியும்**
**மீன்தோய்மதி யினில்வரிவளை இடன்ஏந்தியும்**
**மகரக்குழை தழைகாதினன் மணிமௌலியன்**
**சிகரப்பல தலைசேர்திரு மலைமேல்உறை**
**செல்வனை,**
**மனம்மொழி மெய்களின் வழிபடுபவராய்ப்**
**புனம்நறுமலர் பொழிபவர்பால்**
**கனவிலும் உறான் கொடுங்கணிச்சியோனே.** (119)

கனைஇருள் - செறிந்த இருள். வயிரப்பரல் - வயிரமணி; உள்ளீடாயது அரி. தமனியப்புனைகழல் - பொன்னால் புனையப்படும் வீரக்கழல். பூந்தாள் -

பொலிவினை உடைய சீபாதம். வான்தோய் கதிரினில் திகிரியை வலன் ஏந்தியும் மீன்தோய் மதியினில் வரிவளை இடன் ஏந்தியும் - வானிடத்து அலமரல் பொருந்திய கதிரால் கொண்ட சக்கரத்தை வலத்தே தரித்தும், நாள்மீனோடு பொருந்திய மதியால் கொண்ட வலம்புரியை இடத்தே பொறுத்தும் என்க. என்னை? வான்தோய்கதிர் போன்ற திகிரியை, மீன்தோய்மதி போன்ற வலம்புரியை என உவமைத்தொகைத் தொடர்மொழி அன்றோ எனின், அன்று; இமையாத முக்கண் மூவரில் பெற்றவன் (திருக்கோவை - 14) என்பது போலக் கொள்க. ஈரிடத்தும் இன் சாரியை. ஆல் என்னும் உருபு இல் என மூன்றாவது ஐந்தன் உருபாய் மயங்கிற்று. கொண்ட என்னும் வினையும் தொக்கது. செல்வனை என்பது தனிச்சொல். சீபாதம் முதலியவற்றை உடையனாகித் திருமலைமேல் நிலைபெற்ற திருவுடையானைத் திரிவிதகரணங்களாலும் அருச்சனை செய்பவராய்க் கைகளால் நறுமலர் தூயவரிடத்துக் காலன் நனவிலும் கனவிலும் அணுகான் என்றவாறு. இது பத்தடியாய்ச் செல்வனை என்னும் தனிச்சொல் பெற்று மூன்றடி நேரிசை ஆசிரியச் சுரிதகத்தான் இற்ற சிந்தடி வஞ்சிப்பா. அலங்காரமும் திணையும் துறையும் இதுவும் அது.

[செறிந்த இருளைப் போக்கும் வயிரமணிகள் உள்ளிடு அரியாகப் பொருந்திய பொன்னாலாகிய வீரக்கழலொடு அணிந்த சிலம்பினை உடைய பொலிவுடைய திருவடிகளை உடையவன், தொடைகளையும் இடுப்பையும் சுற்றி வளைத்த பொன்மயமான ஆடையை உடையவன், தருமம் தழைக்கின்ற பிரமனைப் படைத்தருளும் கொப்பூழினை உடையவன், கவுத்துவமணியும் திருத்துழாய்மாலையும் கலந்து ஒளிவீசும் தூய்மையுடன் திருமகள் தங்கும் மார்பினை உடையவன், வானிடத்து உலவும் சூரியனால் அமைந்த சக்கரத்தை வலக்கையிலும், நாள்மீன்களோடு பொருந்திய சந்திரனால் ஆகிய சங்கினை இடக்கரத்திலும் ஏந்தி, மகரக்குழை ஒளிவீசும் காதினனாய், மணிகள் பதித்த முடி சூடியவனாய், சிகரங்களாகிய பலதலைகளையும் உடைய திருமலைமேல் உகந்தருளியிருக்கும் செல்வனாகிய எம்பெருமானை மனம்மொழிமெய்களால் வழிபடுபவர்களாய், புனத்தில் பூத்த நறிய பூக்களை அவன்மீது தூவுபவரிடத்துக் கனவிலும் கொடிய கணிச்சிப்படையை உடைய காலன் அணுகமாட்டான்.

'இமையாத முக்கண் மூவரில் பெற்றவன்' என்பது சூரியன் சந்திரன் அக்கினி என்பவரால் முக்கண்களைப் பெற்றவன் என்று பொருள்படுவதால் சிவபெருமானுக்குச் சந்திரன், சூரியன், அக்கினி என்பவர் மூன்று கண்களாக உள்ளனர் என்பது பெறப்படும். அதுபோலச் சூரியனையே சக்கரமாகவும் சந்திரனையே சங்காகவும் உடையவன் என்பது பொருள்.

சூரியனைப் போன்ற சக்கரம், சந்திரனைப் போன்ற சங்கு என்று பொருள்செயின் இப்பாடலில் உவமையணி வந்துள்ளதாகக் கூறவேண்டும். இப்பாடலில் உள்ள அணி தன்மையணியே என்பதற்கு ஏற்ப இவ்வாறு உரைசெய்யப்பட்டது.

சீபாதம் - திருவடி. கதிரினில், மதியினில் - இன் சாரியை. இல் என்ற ஐந்தன் உருபு ஆல் என்ற மூன்றன் உருபின் பொருளில் வந்தது.]

**பூங்கமலக் கோயிலாள், புத்தமிர்தினுள் பிறந்தாள்,**
**வீங்கு துணைமுலையாள், வெண்நகையாள், - ஓங்குபுனல்**
**பொன்னி நடுவுள் பொருள்மார்பு அகத்தாள், என்**
**சென்னி பிரியாத் திரு.** (120)

இது மகடூஉப் பொருள்தன்மை. இதனுள் 'பொன்னி நடுவுள் பொருள்' என்பது இரண்டு ஆற்றிடைக்கண் வளர்ந்த நம்பெருமாள்.

திணை - பாடாண். துறை - பெண்பாற்கடவுள் வாழ்த்து.

[அடியேனுடைய தலையின் வழிபாட்டை விடுத்து நீங்காத திருமகள் செந்தாமரைப்பூவினை இருப்பிடமாகக் கொண்டவள்; அமுதத்தில் தோன்றியவள்; பருத்த இணையான தனங்களை உடையவள்; வெள்ளிய பற்களை உடையவள்; மிக்க நீரினைஉடைய காவிரியின் இருகூறுகளின் நடுவிலிருக்கும் எம்பெருமானுடைய மார்பை இருப்பிடமாக உடையவள் என்றவாறு. இது திருமகள் வருணனை ஆதலின் மகடூஉப் பொருள்தன்மை.]

**முப்புரிநூல் மார்பினான், முக்கோல்கைக் கொண்டுள்ளான்,**
**பொய்ப்புலனை வென்ற பொறைஉடையான், - மெய்ப்பொருளைச்**
**சேவிக்கும் நுண்உணர்வான், சீநிவாதன் தமியேன்**
**ஆவிக்கு அருள்புரிந்து ஆள்வான். (121)**

இஃது ஆடூஉ மக்கள்தன்மை. ஆவியை என்பது ஆவிக்கு என இரண்டாவது நாலாவது ஆயிற்று. திணை - வாகை. துறை - தாபதவாகை. என்னை?

'பொறிஉணர்வு எல்லாம் புலத்தின் வழாமல்
ஒருவழிப் படுப்பது தொகைநிலைப் புறனே' (தொ. பொ. 75. நச்..)
'மனத்தினை ஒருவழி நிறுப்பது பொறையே' (தொ. பொ. 75. நச்.)
'நிறுத்திய மனத்தினை நிலையில் திரியாமல்
குறித்த பொருளொடு நிறுத்துதல் நினைவே' (தொ. பொ. 75. நச்.)

என்ற முறையே தொகைநிலை, பொறைநிலை, நினைதல் என்னும் மூன்றும் இப்பாட்டினுள்ளே கூறினமையான்,

'அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கம்' (தொ. பொ. 75)

என்னும் சூத்திரத்துள்

'நாலிரு வழக்கின் தாபத பக்கமும்'

என்னும் எட்டனுள் தவம்செய்து யோகம் பயில்வார்க்கு உரிய இம்மூன்றும் வந்தமையால் எனக்கொள்க.

[ஆவியை ஆள்வான் என்பது ஆவிக்கு ஆள்வான் என உருபுமயக்கமாக வந்தது. நாலிருவழக்கின் தாபதபக்கமும் - அவ்வறிவர் கூறிய ஆகமத்தின் வழிநின்று வீடுபெற முயல்வார்க்கு உரியவாகிய எண்வகைமார்க்கத்துத் தவம்புரியும் கூறும்.

'வழக்கு' என்றதனால், அந்நாலிரண்டும் தவம்புரிவார்க்கு உரியனவும், தவம்செய்து யோகம் செய்வார்க்கு உரியனவும் என இருவகைய என்று கொள்க.

இனி, யோகம் செய்வார்க்கு உரியன - இயமம், நியமம், ஆசனம், வளிநிலை, தொகைநிலை, பொறைநிலை, நினைதல், சமாதி என எட்டும்.

ஐம்பொறிகளின் உணர்வுகளையும் ஐம்புலத்தின் வசப்பட்டுக் கெடாதபடி உள்ளம் குறிப்பிடும் ஒரேவழியில் செலுத்துதல் தொகைநிலை எனப்படும்.

மனத்தை அலையவிடாமல் ஒரேஇடத்தில் உறுதியாக நிற்கச்செய்தல் பொறைநிலை எனப்படும். அவ்வாறு ஒரேஇடத்தில் நிலைநிறுத்தப்பட்ட மனம் என்றும் மாறாததால் தான் குறித்த பொருளிலேயே நிலைபெற்றிருத்தல் நினைவு எனப்படும். இவை வடமொழியில் பிரத்யாகாரம், தாரணை, தியானம் எனப்படும். (தொ. பொ. 75. நச்.)

பொய்ப்புலனை வென்றமை - தொகைநிலையாகிய பிரத்யாகாரம்; பொறைஉடைமை - பொறைநிலை என்னும் தாரணை; மெய்ப்பொருளைச் சேவிக்கும் நுண்உணர்வு - நினைவு என்னும் தியானம்.]

**கூர்எயிற்றார் உண்கண்ணார் கொம்மை இளமுலையார்**
**வார்புருவத்தார் திலக வாள்நுதலார் - காரகத்துஎம்**
**மால்வரையார் எண்இறந்த மாதருள், நின்னால் குறித்த**
**கோல்வளையார் ஆர்இறைவ! கூறு. (122)**

இது மகடூஉ மக்கள்தன்மை. கூர்எயிறு - கூரிய பல். உண்கண் - மைஉண்கண். கொம்மை - திரட்சி. இளமை - மேனிவனப்பு. வார்புருவம் - நீண்ட புருவம். கோல்வளை - திரண்ட வளை. வாணுதல் - ஒளி பொருந்திய நுதல்.

பகுதி - சேட்படை. துறை - அறியாள் போன்று நினைவு கேட்டல்.

["தலைவனே! காரகம் என்ற திருத்தலத்திலுள்ள எம்பெருமானுடைய பெரிய மலையில் உள்ளவராகிய கூரிய பற்களையும், மைஉண்ட கண்களையும், திரண்ட மேனிவனப்புடைய முலைகளையும், நீண்ட புருவங்களையும், பொட்டிட்ட ஒளி பொருந்திய நெற்றியினையும் உடைய எண்ணிறந்த மகளிருள் உன்னால் குறிக்கப்பட்ட திரண்ட வளையல்களை அணிந்த மகள் யாவள் என்பதனை வெளிப்படையாகத் தெரிவிப்பாயாக" எனத் தலைவியைத் தோழியின் துணைக்கொண்டு தொடர்ந்து களவுநிலையில் கூடி மகிழக் கருதிய தலைவனைத் தலைவியின் அருமை அறியுமாறு தோழி நீக்கி நிறுத்துதல் என்ற பகுதியில், தோழி தலைவன் குறிப்பிடும் தலைவி யாவள் என்பதனை அறியாதவளைப் போலத் தலைவனை வினவிய கருத்தாக அமைந்த பாடல் இது.]

**வள்உகிரும் தோலடியும் செவ்வாயும் வார்சிறைகூர்**
**புள்ளியும் மென்சூட்டும் உறுபொற்பினதாம், - ஒள்ளியரை**
**மாறிவரு வாதியரை வென்ற மகிழ்மாறனார்**
**ஏறிவரு வெள்ஓதிமம். (123)**

இஃது உயிர் உளதாய் இயங்கும் அஃறிணைத்தன்மை. வள் - கூர்மை. தோல்அடி - என்பு இல்லாத அடி. புள்ளி - பொறி. திணை - பாடாண் பொதுவியல். துறை - அன்னவாழ்த்து. என்னை? 'பாலறி மரபின் பொருநர் கண்ணும்' (தொ. பொ. 75) என வாகைத்திணையுள் கூறிய சூத்திரம்போல வென்றி கூறாது, அன்னத்தினது தன்மை கூறியதனானும் வாழ்த்து எல்லாம் பாடாண் ஆதலானும் உணர்க.

[வாழ்த்து எல்லாம் பாடாண் ஆதலின் பாடாண்திணை. அன்னத்தைப் பொதுவாக வருணிப்பதனால் பொதுவியலாகிய ஒழிபு. எனவே திணை - பாடாண் பொதுவியல் எனப்பட்டது.

களங்கமற்ற அறிவுடையவர்களைத் தம்கொள்கைகளால் பகைத்து வாதம்செய்ய வருபவர்களை வென்ற, மகிழம்பூமாலையை அணிந்த சடகோபனுடைய வாகனமாகிய அன்னம், கூரிய நகங்களும், எலும்பின்றித் தோல்உருவான அடியும், சிவந்த வாயும், புள்ளிகள் பொருந்திய நீண்ட சிறகுகளும், மென்மையான உச்சிக்கொண்டையும் பொருந்திய அழகை உடையதாகும் என அன்னத்தின் வருணனை அமைந்தவாறு.]

**பரிஅரைத்தாய்த் திணிவயிரம் பயின்று நிலம் கிளைமுதற்றாய்**
**விரிசினைத்தாய்ப் பசுந்தழைத்தாய் விரைமலர்த்தாய் விழைகனித்தாய்ப்**
**பெரிய கதிரவன் மறைந்த பிழம்புஇருட்கும் உறங்காது-**
**வரிவளைஊர் புனல்குருகூர் மகிழ்மாறர் திருப்புளியே. (124)**

இஃது உயிருடையதாகி இயங்கா அஃறிணைத் தன்மை. மாறன் வாகனமாகிய அன்னமும் இருப்பிடமாகிய திருப்புளியும் கடவுள்தன்மை உடைய ஆயினும், உலகின்கண் தோன்றும் வடிவம் அஃறிணைத் தன்மைய ஆதலின் இங்ஙனம் கூறப்பட்டன.

திணை - பாடாண். துறை - தாவர வாழ்த்து. பா - தரவுகொச்சகக் கலிப்பா. இருள் - ஆகுபெயர்.

[கோடுகளை உடைய சங்குகள் உலவுகின்ற நீர்வளமுடைய திருக்குருகூரில், மகிழம்பூமாலையை அணிந்து மாறன் உகந்திருக்கும் திருப்புளியமரம் பருத்த அடிமரத்தை உடையதாய் அழுத்தமான காழ்ப்பினை உடல்முழுதும் கொண்டு அடிப்புறத்திலிருந்தே கிளைத்து விரிந்த கிளைகளையும் பசிய தழைகளையும் நறுமணம் கமழும் மலர்களையும் யாவரும் விரும்பும் கனிகளையும் உடையதாய்ச் சூரியன் மறைந்த செறிந்த

இருளை உடைய இராக்காலத்தும் தன் தழைகளைத் தொங்கவிட்டுக்கொண்டு உறங்காத தனிச்சிறப்பினை உடையது என்றவாறு.]

**ஆதார பீடத்து அமர்ந்துஉயர்ந்த பாதசெடி**
**மீதாய் அழுந்த மிதித்துநிமிர் தாள்துணைத்தாய்த்**
**தாழ்ந்த துதிக்கையினைத் தாவி இருகைபற்ற**
**ஆழ்ந்த பகுவாய் அகத்துஓங்கு நாவின்**
**வளைஎயிற்றுக் கூர்ங்கோட்டு வான்சுடர் வீழ்கற்றை**
**உளைவனப்பின் பாங்கர் உயர்செவித்தாய் ஒண்கருக்கின்**
**ஊழ்ஒன்றிய சீர்த்தொடு ஊற்றமுறும் ஆளியின்மேல்**
**ஆழ்அங்கு உடைத்தாய் அதன்மேற்கொள் ஆளியதாய்**
**நான்றதலைப் போதிகைத்தாம் நாவீறர் வன்புளிக்கீழ்த்**
**தோன்று திருக்காவணக் கல்தூண்.** (125)

இஃது உயிர்இல் அஃறிணைத்தன்மை. இது பத்தடியான் வந்த பஃறொடை-வெண்பா. திணை - பாடாண். துறை - மதலைவாழ்த்து.

[நாவீறர் என்று போற்றப்படும் நம்மாழ்வார் வீற்றிருக்கும் வலிய புளிய மரத்தின் கீழ்ப்புறத்தில் காட்சி வழங்கும் முன்மண்டபத்தின் கற்றூண், தனக்கு அடிப்படையாக அமைந்த தூண்மேடைமீது தங்கி, உயரமான அடிப்பக்கத்தில் செடிகளின் புடைப்புச் சிற்பத்தினை உடையதாய், அச்செடிகளை அழுந்த மிதித்த இருதாள்களையும் உயர்த்திய இருதாள்களையும் உடையதாய்த் தொங்கும் துதிக்கையினை ஒருவன் தாவி இருகையாலும் பற்றுவது போன்ற அமைப்பினையும், வளைந்த பற்கள், கூரிய கொம்புகள், பெரிய பிடரியில் தொங்கும் பிடரிமயிர்த்தொகுதி, அடுத்து உயர்த்திய காதுகள், கோபத்தால் முறையே பொருந்திய சிறப்பொடு ஆற்றலையும் உடைய யாளியின்மேல் ஆழமாகத் தன் கால்களைப் பதித்து அதனை மேற்கொண்டு செலுத்தும் யாளி போன்ற வீரனது வடிவத்தினையும், தொங்குகின்ற வாழைப்பூப் போன்ற உறுப்பினையும் உடையதாம். மதலைவாழ்த்து - தூணை வாழ்த்தியது.]

**நீண்டு செவிஉற வில்நீள் புருவத்து இம்பர்ஒளி**
**கூண்டு உபயநோக்கமும் கைக்கொண்டதாம், - பாண்டவர்தம்**
**தேர்ப்பாகனான சிறுபுலியூரான் உலகம்**
**காப்பான்தன் மால்வரையாள் கண்.** (126)

இது சினைத்தன்மை. உபயநோக்கம் அருள்நோக்கமும் மருள்நோக்கமும்.
பகுதி - சேட்படை. துறை - கண்நயப்பு உரைத்தல்.

[தலைவன் தலைவியை அடையத் தோழியின் உதவியை நாடியவழித் தோழி தலைவியின் அருமையை அறிந்து விரைவில் தலைவன் களவொழுக்கத்தைத் தவிர்ந்து அவளை மணக்கவேண்டும் என்னும் கருத்தால், பலவகையாகப் பேசி அவன் கருத்துக்கு உடன்படாமல் காலம் தாழ்த்தும் பகுதி சேட்படை என்பது. தலைவன், தான் குறிப்பிடும் தலைவியைத் தோழி இன்னாள் என்று உணரவில்லை போலும் என்று, தலைவியின் உறுப்புக்களை வருணித்துத் தன்னால் விரும்பப்பட்ட தலைவி இத்தன்மையாள் என்று கூறியவழியும், மனநிறைவு பெறாது, தனக்குத் தலைவியின் கண்கள் அன்று தோழியைக் காட்டினமை நினைத்துத் தலைவியின் கண்களைத் தலைவன் தோழியின் முன் புகழ்தல் கண்நயப்பு உரைத்தல் என்னும் துறையாம். திருக்கோவையாரிலுள்ள சேட்படை என்னும் பகுதியிலேயே கண்நயப்பு உரைத்தல் என்னும் பிரிவு உள்ளது. இத்துறை மாறன்அகப்பொருளில் இல்லை.

பாண்டவர்களுடைய தேர்ப்பாகனான, சிறுபுலியூரில் உகந்தருளியிருப்பவனாய் உலகைக் காக்கும் எம்பிரானுடைய பெரிய மலையிலிருக்கும் இத்தலைவியின் கண்கள், வில் போன்ற நீண்ட புருவங்களின் கீழ்க் காதுகளளவும் நீண்டு மிக்க பிரகாசம்

உடையனவாகிப் பொதுவாக நோக்கும் மருண்ட பார்வையும், சிறப்பாகத் தலைவனைக் கூர்ந்து நோக்கும் அருட்பார்வையும் உடையன.]

**கைச்சிரத்தானும் துதிப்பக் கன்றினர் ஆகம்திறந்து**
**பச்சிரத்தம் உண்டுஉயிர்உண் பான்மைத்தே, - வச்சிரத்தால்**
**குன்றுஎறிந்தானும் பரவும் கோயிலான் பாரதப்போர்க்கு**
**அன்று எறிந்தவன் சக்கரம்.** (127)

இது வினைத்தன்மை. ஆகம் - மார்பு. திறத்தல் - பிளத்தல். பச்சிரத்தம் - குளிர்ந்த இரத்தம். அன்று - முற்காலத்து. கு: உருபுமயக்கம்.
திணை - வாகை. துறை - திகிரிவென்றி.

[கையில் பிரமன்தலையை ஓடாக ஏந்திய உருத்திரனும் வழிபடும்படி அடியார்களுக்குப் பகைவராயினார் மார்பினைப் பிளந்து அவர்களுடைய குளிர்ந்த குருதியை உண்ணும் இயல்பினது, வச்சிராயுதத்தால் மலைகளின் சிறகுகளை வெட்டிய இந்திரனும் போற்றிப் புகழும் திருவரங்கப் பெருங்கோயிலை உகந்தருளியிருக்கின்றவனும், துவாபரயுகத்திலே பாரதப்போரில் பகைவர்களை அழித்தவனுமாகிய எம்பெருமான் ஏந்திய சக்கரப்படை.
இப்பாடல் சக்கரப்படையின் செயல்களை உணர்த்தியமையால் வினைத்தன்மை.]

**பூரித்து உடலம் புளகித்திடப் புலமை**
**சீரித்து உயிர்தளிர்ப்பச் சேர்ந்துஉருகும், - பாரித்த**
**முத்தமிழ் மாறன் ஞானமுத்திரைக்கை கண்டுதொழும்**
**உத்தமராய் வாழ்வார் உளம்.** (128)

இது பண்புத்தன்மை. பூரித்தல் - தடித்தல். புளகித்தல் - உரோமம் சிலிர்த்தல். புலமை - அறிவின்தன்மை. சீரித்தல் - இடைவிடாமல் பழகுதல். தளிர்த்தல் - தழைத்தல். சேர்ந்து உருகுதல் - பரத்துவ சொரூபத்தை யோகித்துக் குழைதல். பாரித்தல் - விரித்து உரைத்தல். முத்தமிழ் - சித்து அசித்து ஈச்சுரம் மூன்றும் கூறும் தமிழ்; அது திருவாய்மொழி. உளம் - ஆன்மஞானம்.
முத்தமிழ் மாறன் ஞானமுத்திரைத் திருக்கையைக் கண்ணினால் கண்டும் கையினால் தொழுதும் உத்தமராய் வாழ்வாரது ஆன்மஞானமானது, உடலம் மகிழ்ச்சியால் பெருத்து உரோமம் சிலிர்த்திடத் தத்துவஞானத்தோடும் இடைவிடாது பழகியதனால், ஆன்மாவானது தழைப்ப, பரத்துவ சொரூபத்தை யோகத்தால் அனுபவித்து உருகும் என்றவாறு.
இது யோகிகளின் பண்பு பற்றிக் கூறுகின்றமையின் பண்புத்தன்மை.
திணை - பாடாண்; துறை - பழிச்சினர்ப் பணிதல்.

**உற்ற பரமேட்டிமுதல் ஓங்கிய ஐம்பூதநிலை**
**பெற்றுளதாய்ச் சோதிப் பிழம்பதாம், - பற்றிலர்பேர்**
**ஆனந்தம் எய்துவதாம்; ஆதிஇடை என்பவுடன்**
**தான்அந்தம் இல்லான் தலம்.** (129)

இஃது இடத்தன்மை; பரமேட்டி முதலாய ஐம்பூதமாவன - பரமேட்டி, புமான், விச்சுவம், நிவிர்த்தி, சருவன். இது பரமபதமாகிய இடத்தன்மை.
திணை - பாடாண் பொதுவியல். துறை - புலவர் ஏத்தும் புத்தேள் நாடு வாழ்த்து. புலவர் - நித்தியசூரியர்.

[ஆதி, இடை, இறுதி என்ற காலஎல்லைக்கு உட்பட்ட நிலைகள் இல்லாத எம்பெருமான் வீற்றிருக்கும் வைகுந்தமானது ஞானஒளிமயமான பரமேட்டி, புமான், விச்சுவம், நிவிர்த்தி, சருவன் என்ற பெயருடைய, நிலவுலக ஆகாயம், காற்று, தீ, நீர், நிலம் என்ற

ஐம்பூதங்களை ஒத்த ஐம்பூதங்கள் நிலைபெற்றுள்ளதாய், ஒளிமயமானதாய், உலகப்பற்றற்று இறைப்பற்றே உடைய ஆன்மாக்கள் பேரானந்தம் எய்தும் இயல்பினதாம்.]

**ஏழ்ஆவரணம் இசைந்து ஈர்ந்தண்புனல் பொன்னி**
**சூழா மணிமாடம் சூழ்ந்துளதாம், - வாழ்மறையோர்**
**வேத ஒலியும் விழாஒலியும் கூர்தகைத்தாம்**
**நாதன் அரங்க நகர். (130)**

இதுவும் இடத்தன்மை. திணை - பாடாண் பொதுவியல். துறை - நகர்வாழ்த்து.

[அங்கு வாழும் வேதியருடைய வேதஒலியும், திருவிழாக்கள் நிகழ்வதனால் ஏற்படும் ஒலியும் மிகுந்திருக்கும் இயல்பினதாகிய எம்பெருமான் உகந்தருளியிருக்கும் திருவரங்கப் பெருங்கோயில், ஏழுமதில்களைப் பெற்றுக் குளிர்ந்த நீரைஉடைய காவிரி இரண்டாகப் பிரிந்து சூழ்தலைஉடையதாக, அழகிய மாடங்களாலே சுற்றிலும் இருக்கப்பட்ட தன்மையை உடையதாம்.

இது கோயிலின் தன்மையைக் கூறுவது. நகர் - கோயில்.]

**தேவும் புவனமும் திரண்ட மன்உயிர்**
**யாவும் யாவரும்இறந்து ஒடுங்கிய ஞான்று**
**ஒருபெருந் திருமால் உந்தியம் கமலத்து**
**அருள்பகிர் அண்ட கோடிகள் எனுமவற்றுள்**
**ஒன்று அயன்உலகு ஆதியாய ஈரேழின்**
**நயன்நிலை மேரு நடுக்கொள் பூலோக**
**நவகண்டமதாம் நாவலந் தீவொடும்**
**உவர்ஒன்றிய நீருடைக் கருங்கடலொடும்**
**ஏழ்பெருந் தீவும் ஏழ்பெருங் கடலும்**
**வாழ்வு உடைத்தாகியும் வானவர் வைகும்**
**ஏம பூதலம் இடைஇடு திகிரிக்**
**காமர் மால்வரை கடந்தநல் இருளாய்**
**அண்டபித்தியின் அகத்து அண்ட கோளகைக்கீழ்**
**மண்டும் ஆழ்புனற்குமேல் வடக்கொடு குணக்குஎதிர்**
**ஐம்பதுகோடி யோசனைத்துஎன அளவை**
**உம்பரோடு இம்பரும் உணர்வுஉற உணர்வான்**
**தீதுஅறு பான்மையில் தெருட்டும்,**
**போதம்உற்று ஓங்கிய புராண சித்தமதே. (131)**

இதுவும் இடத்தன்மை. திணை - பாடாண் பொதுவியல். துறை - பேரண்டவாழ்த்து.

இதனுள் தே என்றது அந்நிய தெய்வங்கள். புவனம் - 214 புவனம். யாவும் யாரும் - அஃறிணைகளும் உயர்திணைகளும். மேரு நடுக்கொள் பூலோகம் - மேருவைத் தனது மத்திமத்தே தாங்கிக்கொண்ட பூலோகம். வானவர் வைகும் ஏமபூதலம் இடைஇடு திகிரிக் காமர் மால்வரை - கடவுளர் அரமகளிரோடு இன்பம் எய்தி வைகும் ஏமபூதலத்தை நல்ல தண்ணீர்க் கடற்கும் தனக்கும் நடுவாக வைத்த சக்கரவாளகிரி என்னும் அழகிய பெரிய மலை. மண்டும் ஆழ்புனல் - கெர்ப்போதகம். வடக்கொடு குணக்கு எதிர் என்றது வடதிசைக்கும் கீழ்த்திசைக்கும் அவற்றிற்கு எதிரான தென்திசைக்கும் மேல்திசைக்கும் என்பதாம். புராணசித்தம் - ஆகுபெயர். ஒழிந்த அகலம் உரையிற் கொள்க.

பா - நேரிசை ஆசிரியம். எனவும் (சூ. 89) என்ற உம்மை எச்சஉம்மை ஆதலான் காலத்தன்மையும் உள.

[ஏனைய தெய்வங்களும் உலகமும் அவற்றில் கூடிய நிலைபெற்ற உயிர்களும் அஃறிணை உயர்திணைப் பொருள்களும் உயிர்நீத்து இறைவன் திருவயிற்றில் ஒடுங்கிய பேரூழிக்காலத்தில், ஒப்பற்ற திருமகள்கேள்வனுடைய கொப்பூழில் தோன்றிய தாமரையிலிருந்து படைக்கப்பட்ட பலவாகிய அண்டக்கூட்டங்களில் ஓரண்டமாகிய சத்தியலோகத்தை முதலாவதாகக் கொண்ட பதினான்கு உலகங்களிலும் கலந்த உறவு நிலைபெற்றிருக்கும் மேருமலையின் நடுவில் அமைந்த நாவலந்-தீவோடும், உவர்நீரைப் பொருந்திய கரிய கடலோடும், எழுதீவும் எழுகடலும் வாழ்வினை உடையதாகியும், கடவுளர் அரமகளிரோடு இன்பம் எய்தி வைகும் பொன்னுலகை நல்ல தண்ணீர்க்கடற்கும் தனக்கும் நடுவாக வைத்த சக்கரவாளகிரி என்னும் அழகிய மலையைக் கடந்து அப்பாற்பட்ட செறிந்த இருளைஉடைய அண்டச்சுவரின் அகத்தே, அண்ட உருண்டைக்குக் கீழே கெர்ப்போதகத்தின் மேலே நாற்றிசையும் அடங்கிய பரப்பு ஐம்பதுகோடியோசனை அளவிற்று என்று அண்டத்தின் பரப்பளவை அறிவுமயமான புராணச்செய்தி தேவரும் மக்களும் தம் அறிவான் உணருமாறு குற்றமற்ற வகையின் தெரியக் கூறும்.

இது பேரண்டத்தின் பரப்பு, இருப்பிடம் முதலியவற்றைக் கூறுதலின் பேரண்ட-வாழ்த்தாகும். புராணசித்தம் - புராணத்தின் உள்ளம். அஃது ஆகுபெயராய் உள்ளத்தால் உணர்ந்து கூறப்படும் செய்தியை நுவல்கிறது.]

**நித்தமாய் மூன்று நெறித்தாய் இலவம்முதல்**
**வைத்த பான்மைக்கு உரித்தாம் மாண்பிற்றே, - அத்திகிரிச்**
**செங்கண்மால் உந்தியின்மேல் செங்கமலத்தோன் முதலாம்**
**அங்கண்ஞாலம் புகழ் காலம்.** (132)

இது காலத்தன்மை. இதனுள் மூன்றுநெறி என்றது இறப்பு, எதிர்வு, நிகழ்வு. இலவம் முதலியனவும் முறையே பிரமகற்பம் ஈறாக உணர்ந்துகொள்க.

திணை - பொதுவியல். துறை - பருவ வாழ்த்து.

[அத்திகிரியில் எழுந்தருளியிருக்கும் செந்தாமரைக்கண்ணனாகிய எம்பெருமானுடைய கொப்பூழில் தோன்றிய பிரமன் முதலாக அழகிய இடமகன்ற உலகத்தார் புகழும் காலமானது என்றும் உள்ளதாய், இறப்பு எதிர்வு நிகழ்வு என்னும் முப்பகுப்பினதாய், இலவம் என்ற சிறிய காலப்பகுதி முதலாகப் பிரமகற்பம் எனப்படும் மிகப்பெரிய காலப்பகுதி ஈறாகக் கணக்கிடப்படும் செயலுக்கு உரிமையுடைய சிறப்பினதாம்.] [6]

தன்மை அலங்காரம் முற்றும்.

## 2-ஆவது உவமைஅலங்காரம்

**92. உவமையின் வகையே உணருங் காலை**
**வினைபயன் உறுப்புஉரு என்ற நான்கினும்**
**தமிதமி நிகழ்ந்தும் தம்மின் விரவியும்**
**காதல் சிறப்பே நலன்வலி யுடன்இழிபு**
**ஓதிய ஐந்தும் உறு நிலைக்களனாய்**
**இருதிணை ஐம்பால் இவற்றொடு மயங்கியும்**
**முதலொடு சினைகளின் முறைமையில் பிறழ்ந்தும்**
**முதல்சினை வினைகுணம் இன்றியும் உயர்ந்தும்**

**பெருமையும் சிறுமையும் பெற்றியில் சிறந்தும்**
**எண் மெய்ப்பாட்டின் எழில்பெற மரீஇ**
**அகத்தினும் புறத்தினும் அமர்தரு நெறித்தாய்**
**உரன்உடை உரவோர் உளங்கொள முதல்நூல்**
**வரன்முறை புணர்க்கும் மாண்பிற்று ஆகும். [7]**

(எ-ன்) வைத்தமுறையானே (87) உவமை என்னும் அலங்காரத்தினது பொது-இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) உவமை என்னும் அலங்காரத்தினது கூறுபாட்டை ஆராயுமிடத்து, வினையும் பயனும் உறுப்பும் உருவும் என்னும் நான்கும் காரணமாகத் தோன்றுவன ஆகியும், அங்ஙனம் தோன்றுவன ஒருபொருளோடு ஒருபொருள் உவமம் செய்யும்வழி ஒன்றே அன்றி இரண்டும் மூன்றும் விரவுவன ஆகியும், காதலும் சிறப்பும் நலனும் வலியும் அவற்றோடு கிழக்கிடுபொருளுமாகிய ஐந்தும் தமக்கு நிலைக்களனாகியும், உயர்திணைக்கு உயர்திணையும் உயர்-திணைக்கு அஃறிணையும், அஃறிணைக்கு அஃறிணையும் அஃறிணைக்கு உயர்திணையும், ஆண்பாற்கு ஆண்பாலும் ஆண்பாற்குப் பெண்பாலும், பெண்பாற்குப் பெண்பாலும் பெண்பாற்கு ஆண்பாலும், ஒருமைப்பாற்கு ஒருமைப்பாலும் ஒருமைப்பாற்குப் பன்மைப்பாலும், பன்மைப்பாற்குப் பன்மைப்பாலும் பன்மைப்பாற்கு ஒருமைப்பாலும் மயங்காதும் மயங்கியும், முதற்கு முதலும் முதற்குச் சினையும், சினைக்குச் சினையும் சினைக்கு முதலுமாகப் பிறழாதும் பிறழ்ந்தும், முதலும் சினையும் வினையும் குணமும் இன்றியும் உவமம் கூறுவனவாகியும், பொருளினும் உவமம் உயர்ந்து இறப்ப உயர்வும் இறப்ப இழிவும் உவமிக்குங்கால் இன்னாவாகச் செய்யாது கேட்போர் மனம்கொள்ளும்படி சிறப்பில் தீராவாகிச் சேர்தல் இயல்பு சிறந்தும், எட்டு மெய்ப்பாட்டினொடும் கூடி அழகுபெறு நிலைமைத்தாகி, அகப்பொருளினும் புறப்பொருளினும் சென்று பொருந்தும் நெறியை உடைத்தாய்க் கற்றுவல்ல அறிவுடையோர் அறிவிற்குப் பொருந்த முதல்நூல் வரலாற்று முறைமையில் திரியாது சேர்க்கப்பெறும் பெருமையை உடைத்து என்றவாறு.

இதனுள், 'நான்கினும்' என்ற உம்மை எச்சஉம்மையாகலான் அவை நான்குமே காரணமாகியவற்றோடும் சொற்பொருள்காரணமாகவும் உவமை பிறக்கும் என்றவாறு. அவை மேற்கூறப்படும் (சூ. 111). 'மயங்கியும் பிறழ்ந்தும்' என்பது எதிரதுபோற்றும் தந்திரவுத்தி. இவற்றிற்கு எல்லாம் உதாரணம் உரைநடை-யானும் செய்யுள் நடையானும் வருமாறு:

புலி அன்ன மறவன் என்பது வினைஉவமம்.
மாரி அன்ன வண்மை என்பது பயன்உவமம்.
துடி அன்ன இடை என்பது உறுப்புஉவமம்.
செவ்வான் அன்ன மேனி என்பது உருஉவமம்.

செவ்வான் அன்ன மேனி என்பது வண்ணம் ஒன்றுமே பற்றி உவமம் சென்றது.

'செவ்வான் அன்ன மேனி, அவ்வான்
இலங்குபிறை அன்ன விலங்குவால் வைஎயிற்று' (அகநா. க, வா.)

என்பது வண்ணத்தோடு வடிவும்பற்றி உவமம் சென்றது.

[புலிபாயுமாறு போலப் பாய்பவன் என்ற கருத்துடைமையின் வினைஉவமம். மாரியின் பயனும் வண்மையின் பயனும் ஒத்தமையின் பயன்உவமம். அல்குலும் ஆகமும் அகன்று காட்ட அஃகித் தோன்றும் மருங்கிற்கு இடை சிறுத்த துடி வடிவுஉவமம்.

செவ்வான் சிவபெருமானுடைய செம்மேனிநிறத்துக்கு உவமம். பிறைபோன்ற பற்கள் என்பது வெண்மைநிறம், வளைந்த வடிவு என்ற இரண்டற்கும் உவமம்.]

**வள்ளைக்கொடிமிசை பாய் மைக்கயல்போல் வார்குழையின்**
**உள்புக்கு உலாவரும் மைஉண்கண்ணாய்! - புள்ஆர்**
**வகுளாம்புயன் வரைமேல் வான்பிறைக்கு உன்செங்கை**
**முகுளாதது என்னோ? மொழி.** (133)

இதனுள் வினையும் உறுப்பும் உருவும் ஆகிய மூன்று உவமையும் ஒருபொருட்கண்ணே பிறிதொருபொருளும் கூடி வந்தவாறு காண்க. இவை விரவு உவமை.

பகுதி - நாணநாடல். துறை - பிறைதொழுக என்றல்.

["வள்ளைக்கொடிமீது பாயும் கரிய கயல்மீன் போல நீண்ட காதணிக்குள் நுழைந்து உலாவி வருகின்ற மையுண்ட கண்களைஉடைய தலைவியே! வண்டுகள் பொருந்திய அழகிய மகிழம்பூமாலையைப் புயங்களில் அணிந்த மாறனுடைய துடரிமலைமீது காணப்படும் உயரிய பிறையைக் கண்டு உன் சிவந்த கைகள் வணங்குதற்குக் குவியாத காரணம்தான் யாது?" என்று தலைவியோடு தலைவன் கொண்டுள்ள தொடர்புபற்றி ஆராய முற்பட்ட தோழி, தலைவியைப் பிறையைத் தொழுமாறு கூறி அவள் நிலையை ஆராய்ந்தவாறு.

இப்பாடலுள், வள்ளைக்கொடி காதுக்கு மெய்உவமம். மைக்கயல் - கண்களுக்கு வடிவும் நிறமும் பற்றிய உவமம். கொடிமிசைக் கயல்பாய்தல் காதளவும் கண் நீண்டிருக்கும் செயலுக்கு உவமம். எனவே வள்ளை ... கண்ணாய் - என்ற தொடரில் வினைஉவமம், மெய்உவமம், நிறஉவமம் என்ற மூன்று உவமையும் கலந்து வந்துள்ளமையான் இத்தொடர் விரவுஉவமை.]

'பாவை அன்ன பலர்ஆய் மாண்கவின்' (அகநா. 98) என்றது மகள்கண் சென்ற காதல் உவமைக்கு நிலைக்களன் ஆயிற்று.

'என் ஆனை' (திவ். 2985) என்பதும் காதல் நிலைக்களனான உவமை.

'முரசுமுழங்கு தானை மூவரும் கூடி
அரசவை இருந்த தோற்றம் போலப்
பாடல் பற்றிய பயனுடை எழாஅல்
கோடியர் தலைவ! கொண்டது அறிந' (பொருந. 54-57)

என்றது, சிறப்பினால் பெற்ற உவமம் ஆதலின் சிறப்பு நிலைக்களன் ஆயிற்று. சிறப்பாவது உலகத்துள் இயல்புவகையான் அன்றி விகாரவகையால் பெறும் சிறப்பு ஆகும்.

'ஓவத்து அன்ன இடன்உடை வரைப்பின்' (புறநா. 251) என்புழி, அந்நகரின் செயற்கைநலன் தோன்றக் கூறினமையான் நலன் நிலைக்களன் ஆயிற்று. நலன் என்பது அழகு.

'அரிமா அன்ன அணங்குஉடைத் துப்பின்
திருமா வளவன்' (பட்டினப். 298-99)

என ஒருவன்வலி நிலைக்களன் ஆயிற்று.

'அரவுநுங்கு மதியின் நுதல்ஒளி கரப்ப' (அகநா. 313) என்றது ஒன்றன் இழிபு தோன்ற உவமித்தலின் இழிபு நிலைக்களன் ஆயிற்று.

[காதலாவது - சிறப்பும் நலனும் இல்வழியும் ஏற்றி அன்பினால் உரைப்பது. மகளைப் பாவை என்பதும், எம்பெருமானை யானை என்பதும் அன்புநிலைக்களனாகக் கூறும் உவமமாம்.

முடிமன்னர் மூவர் கூடியது போலக் கொட்டு ஆட்டு பாடல் மூன்றும் சிறப்பாகப் பொருந்தியிருந்தன என்று கூறலின் சிறப்பு நிலைக்களனாக உவமம் வந்தது.
ஓவியம் போன்ற அழகினை உடைய இல்லின்கண் - என இல்லத்துக்கு ஓவியத்தை நலன் நிலைக்களனாக உவமம் புணர்த்தவாறு.
திருமாவளவன் வலிமைக்குச் சிங்கத்தின் வலிமையை உவமமாகக் கூறியது வலி நிலைக்களனாகக் கூறிய உவமமாம்.
பாம்பினால் விழுங்கப்பட்ட மதியத்தை ஒளி குறைந்த நெற்றிக்கு உவமம் கூறுதல் கீழ்ப்படுக்கப்பட்ட பொருண்மை நிலைக்களனாக உவமம் புணர்த்தவாறு.]

**குமரன் அனையானும் குறமகள் அன்னாளும்,**
**அமரர்குழாம் என்னக் கூண்டுஅன்பர் - தமர்அணங்கே!**
**நின்றுஇறைஞ்சும் மாயோனை நின்றவூர்அங்கு இதன்முன்**
**சென்று இறைஞ்சுவார் நீ திரும்பு. (134)**

இதனுள் உயர்திணைக்கு உயர்திணையும் ஒருமைப்பாற்கு ஒருமைப்பாலும் பன்மைப்பாற்குப் பன்மைப்பாலும் ஆண்பாலுக்கு ஆண்பாலும் பெண்பாற்குப் பெண்பாலும் வந்து திணையும் பாலும் மயங்காது உவமையாயிற்று.
பகுதி - உடன்போக்கு. துறை - இயைபு எடுத்து உரைத்தல்; நகர் அடைந்தமை கூறலும் ஆம்.

["உடன்போனவர்திறத்து வினவிநிற்கும் தாயே! முருகனை ஒத்த தலைவனும் வள்ளியை ஒத்த தலைவியும் தேவர்கூட்டத்தைப் போன்ற ஒன்று சேர்ந்த அறவர்கள் குழுமி நின்று எம்பெருமானை வழிபடுகின்ற திருநின்றவூரை இந்நேரம் சென்றடைந்து எம்பெருமானை வழிபட்டுக் கொண்டிருப்பார்கள். ஆதலின் நீ அவர்களைத் தேடித் தொடர்ந்து செல்வதனை விடுத்து உன்னூருக்குத் திருப்பிச் செல்" என்று, செவிலி வழியிடை வினவிய எதிர்வருவோர் அவளிடம் தலைவன் தலைவி என்ற இருவருடைய உள்ள ஒற்றுமையையும் எடுத்துக்கூறி, அவளை ஊருக்கு மீளுமாறு கூறும் இயைபு எடுத்து உரைத்தல், மீள உரைத்தல் என்ற துறைகள் திருக்கோவையாரிலேயே உடன்போக்கு என்ற பகுதிக்கண் 246, 247-ஆம் பாடல்களாக அமைந்துள்ளன. மாறன் அகப்பொருளில் 'செவிலி பின்தேடிச் சென்று மீடல்' என்ற பகுதியில் 'கலந்துடன் வருவோர் கருத்துறத் தெளித்தல்' (பாடல் 435) என்ற துறையாக இச்செய்தி அமைந்துள்ளது. இப்பாடலில், தலைவனுக்கு முருகனும், தலைவிக்கு வள்ளியும், அடியார்களுக்குத் தேவரும் உவமங்களாய், ஆண்பாலுக்கு ஆண்பாலும் பெண்பாலுக்குப் பெண்பாலும் பலர்பாலுக்குப் பலர்பாலும் உயர்திணைக்கு உயர்திணையுமாய்த் திணை பால் எண் மயங்காது புணர்க்கப்பட்டமை காண்க.]

'மகிழ்வார்க்கும் அல்லார்க்கும்
தாயாகித் தலையளிக்கும் தண்துறை ஊரன்நீ' (யா. வி. மேற்.)

'கலம்கவிழ்ந்த நாய்கன்போல் களைதுணை பிறிதுஇன்றிப்
புலம்பும் என்நிலைகண்டும் போகலனே என்றியால்' (யா. கா. மேற்.)

என்பன இவை ஆண்பாற்குப் பெண்பாலும் பெண்பாற்கு ஆண்பாலும் மயங்கி வந்த உவமம் ஆயின.

[எல்லோருக்கும் கருணை செய்யும் தலைவனுக்குத் தாயை உவமம் கூறியமையும் கணவனைப் பிரிந்து தனிமையில் வருந்தும் தலைவிக்கு மரக்கலம் கவிழ வருந்தும் வணிகனை உவமம் கூறியமையும் ஆண்பாற்குப் பெண்பாலும் பெண்பாற்கு ஆண்பாலும் பால்மாறாக உவமம் கூறப்பட்டவாறு.]

**அரிக்குழாம் அன்ன அடல்அரக்கர் வாவும்**
**பரிக்குழாம் தேர்க்குழாம் பாயும் - கரிக்குழாம்**

**ஓர்வாளி பட்டுஉருள்வான் ஓங்குசிலைக் கால்வளைகைக்**
**கார்வான மால் இமையோர் கண்** (135)

எனவும்,

**பிறைபுரை வெண்கோட்டுப் பிணர்த்தடக்கை வேழத்து**
**இறைபுரந்த பொன்நகருக்கு இப்பார் - உறைதருவான்**
**பூண்அவா அற்றென மால் பொன்புருடையாட்கு இரங்கும்**
**வேணவா நெஞ்சே! விடு** (136)

எனவும் வரும் இவற்றுள் உயர்திணை ஆண்பால்பன்மைக்கு அஃறிணை ஆண்பால்பன்மையும், அஃறிணைப்பன்மைச்சினைக்கு உயர்திணை ஒருமை முதலும் மயங்கிவந்து உவமம் ஆயின. வேழத்தைஉடைய இறை - ஈண்டு இந்திரன். அற்றென - அதுபோலும் என. பூண்அவா - மனத்துப் பூண்ட ஆசை. வேணவா - வேட்கைப்பெருக்கம்.

இப்பாடல் இரண்டனுள் முன்னது திணை - வாகைப் பொதுவியல்; துறை - வில்வென்றி; அல்லது திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்துமாம்; பின்னது பகுதி - இரவுக்குறி; துறை - அருமைகேட்டு அறிதல்.

[சிங்கக்கூட்டத்தைப் போன்ற வலிய அரக்கர்குழாம், குதிக்கும் குதிரைக்கூட்டம், தேர்க்கூட்டம், பகைவர்மேல் பாயும் யானைக்கூட்டம் ஆகியவை தன் ஒப்பற்ற அம்புகள் பட்டு அழியுமாறு உயர்ந்த வில்லின் இருநுனிகளையும் வளைத்த கையைஉடைய, திருக்கார்வானம் என்ற திருத்தலத்திலுள்ள திருமால் தேவர்களுக்குக் கண் போன்று இன்றியமையாதவராவார்.

சிங்கக்கூட்டம் என்ற அஃறிணைப்பன்மை அரக்கர்கூட்டம் என்ற உயர்திணைப்-பன்மைக்கு உவமமாயிற்று.

"நெஞ்சே! பிறைச்சந்திரனை ஒத்த வெள்ளிய தந்தங்களையும் சுரசுரப்பான துதிக்-கையையும் உடைய ஐராவதத்தின் தலைவனான இந்திரன் பாதுகாக்கும் தேவருலகிற்கு இந்நிலவுலகம் மழையைக் கொடுப்பதற்கு மனத்துள் பூண்ட ஆசையை ஒத்து எம்பெருமானுடைய அழகிய திருவண்புருடோத்தமம் என்ற திருத்தலத்திலுள்ள தலைவியைப் பெற ஆசைப்படும் வேட்கைப்பெருக்கம் நிறைவேறாது ஆதலின் அதனை விட்டுவிடு" என்று இரவுக்குறி வேண்டிவந்த தலைவன் இரவுக்குறிக்கண் தலைவியைக் காண்டல் என்பது அருமை என்ற செய்தியைத் தோழிவாயிலாகக் கேட்டு வருந்தியவாறு.

ஐராவதத்தின் தந்தங்களாகிய அஃறிணைப் பன்மைச்சினைக்கு, பிறையாகிய உயர்-திணை ஒருமைமுதல் உவமமாயிற்று. பிறை - திங்களாகிய தெய்வம் ஆதலின் உயர்-திணைப்பொருள். (தொ. சொ. 58 ந.)]

**முத்தநகை, வெம்முலைபோல்மலை, கொடியே**
**எய்த்தஇடை, நுதலுக்கு ஏந்திழாய்! - ஒத்ததுதான்**
**ஏற்றுஉருவம் கொண்டநிலா, தளிரே கூற்றுஉருவம்**
**வேற்றுஉருவம் கொண்டனையாள் மெய்.** (137)

இதனுள் பன்மைச்சினைக்குப் பன்மைச்சினையும், பன்மைச்சினைக்கு ஒருமை முதலும், ஒருமைச்சினைக்கு ஒருமைமுதலும் ஒருமைச்சினைக்கு ஒருமைச்-சினையும் பெண்பாற்கு ஆண்பாலும் மயங்காதும் மயங்கியும் வந்து உவமம் ஆயின. இதனுள் முத்தமும் நகையும் முலையும் சாதிஏகவசனம்.

பகுதி - சேட்படை. துறை - தலைவன் பாங்கிக்கு அவயவம் கூறல்.

["தோழியே! முத்துப் போன்றன பல், மலை போன்றன முலை, கொடி போன்றது இளைத்த இடை, நெற்றிக்கு ஒப்பானது காளையின்கொம்பு போன்ற உருவமுடைய

பிறை, கூற்றுப் பெண்பாலுருவம் கொண்டதனை ஒத்த இத்தலைவியின் மெய் தளிரை ஒத்தது" என்று தலைவன் தோழியிடம் தான் விரும்பிய தலைவியின் உறுப்புக்களின் அழகினை எடுத்துக் கூறியவாறு.

முத்துப் போன்ற பற்கள் - பன்மைச்சினைக்குப் பன்மைச்சினை உவமம். மலை போன்ற முலைகள் - பன்மைச்சினைக்கு ஒருமைமுதல் உவமம். கொடி போன்ற இடை - ஒருமைச்சினைக்கு ஒருமைமுதல் உவமம். பிறை போன்ற நுதல் - ஒருமைச்சினைக்கு ஒருமைச்சினை உவமம். தளிர் போன்ற மெய் - முதலுக்குச் சினை உவமம். கூற்றுப் போன்ற தலைவி - பெண்பாலுக்கு ஆண்பால் உவமம்.]

கருஞாயிறு அன்னான் - (பா. 171)
விசும்புதோல் உரிப்பன போல - (அகம். 24-7)
மலை நடந்தனைய
அமிர்து புளித்தாங்கு

இவை முதலும் சினையும் வினையும் குணமும் இல்லாதன உவமையாயின.

[ஞாயிறு, விசும்பு, மலை, அமிர்து என்பனவற்றில் ஞாயிறு, விசும்பு என்பன முதல்-சினைப்பாகுபாடு இல்லன. மலை வினை இல்லாதது. அமிர்து உயிர்இல்லாத அஃறிணையாதலின் தனக்கெனப் பண்பு இல்லாதது என்று உரையாசிரியர் கருதுகிறார்.]

'கடல்கண்டன்ன கண்ணகன் பரப்பின்' (அகநா. 176)
'மாரி அன்ன வண்மைத்
தேர்வேள் ஆயைக் காணிய சென்மே' (புறநா. 133)
'தெள்அமிர்து என்னத் திருந்திய தேமொழி'
'ஏறுபோல் பீடு நடை' (குறள். 59)

என்பன உவமையின் உயர்ச்சியால் பொருட்கு உயர்ச்சியாயின.

[கடல், மாரி, அமிர்து, ஏறு என்பன உவமங்கள்.]

அவாப்போல் அகன்றதன் அல்குல்மேல் சான்றோர்
உசாப்போல உண்டே நுசுப்பு

என்பன கழிய பெரியவாயினும் கழிய சிறியவாயினும் சிறப்பில் தீரா உவமம் ஆயின. சிறப்பில் தீர்வன உவம ஒழிபில் (சூ. 112) கூறுப. எண்மெய்ப்பாட்டிலும் அகத்தினும் புறத்தினும் வருவன முந்து நூல்களுள் கண்டுகொள்க.

[அவா - கழிய பெரிய உவமம். சான்றோர் ஆய்வுரை - கழிய சிறிய உவமம். எண்மெய்ப்பாடு - நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என்பன. உசா - நுண்ணுணர்வின் ஆராய்ச்சி.]

அஃதாக; இதன் முதல்நூல் செய்த தெண்டியாசிரியர் பண்பு முதலாகக் காரணம் மூன்று என்பது உணர்ந்தும் இந்நூலுடையார் அவற்றோடு உறுப்பினைக் கூட்டிக் காரணம் நால் என்பதூஉம் நிலைக்களன் ஐந்து என்பதூஉம் மிகைபடக் கூறல் என்னும் குற்றமாலோ எனின், ஆகாது; என்னை? தெண்டியாசிரியர் 'வண்ணத்தின் வடிவின் அளவின் சுவையின் என்று' (தொ. சொ. 416) என்னும் சூத்திரம் நோக்கி வடிவும் பண்பினுள் அடங்கும் என உட்கொண்டாரேனும், இந்நூலுடையார் உற்றுணரும் பண்பும் கட்புலனாம் பண்பும் எனப் பண்பினை வேறுபடக் கொண்டார்; அங்ஙனம் கோடல் வடிவு பற்றிய பண்பு இருளின்-கண்ணும் உற்று உணரப்படும்; வண்ணமாகிய கட்புலனாம் பண்பு அவ்வாறு உணரப்படாது ஆதலால் வடிவினைக் கூட்டி நால் என்றார். அன்றியும்,

'வினைபயன் மெய்உரு என்ற நான்கே
வகைபெற வந்த உவமத் தோற்றம்' (தொ. பொ. 276)

எனவும் இக்கருத்தேபற்றி முதல்நூல் செய்த ஒல்காப் பெருமைத் தொல்காப்பியரும் கூறினார். இதற்கு அதுவும் முந்துநூலாதலின், அவர் கருத்தே இந்நூலுடையாரும் உட்கொண்டார் என உணர்க. அன்றியும்,

'விரவியும் வரூஉம் மரபின என்ப' (தொ. பொ. 277)
'உயர்ந்ததன் மேற்றே உள்ளுங் காலை' (தொ. பொ. 278)
'சிறப்பே நலனே காதல் வலியோடு
அந்நாற் பண்பும் நிலைக்களன் என்ப' (தொ. பொ. 279)
'கிழக்கிடு பொருளோடு ஐந்தும் ஆகும்' (தொ. பொ. 280)
'முதலும் சினையும்என்று ஆயிரு பொருட்கும்
நுதலிய மரபின் உரியவை உரிய' (தொ. பொ. 281)
'பெருமையும் சிறுமையும் சிறப்பின் தீராக்
குறிப்பின் வரூஉம் நெறிப்பாடு உடைய' (தொ. பொ. 285)
'பெருமையும் சிறுமையும் மெய்ப்பாடு எட்டன்
வழிமருங்கு அறியத் தோன்றும் என்ப' (தொ. பொ. 294)

எனவும் கூறிய சூத்திரங்களானும் ஏனையவும் உணர்க.

[உவமத்தால் பொருள் தோன்றும் தோற்றம், தொழிலும் பயனும் வடிவும் வண்ணமும் என்னும் நான்கு கூறுபட வரும் (276). அந்நான்கும் ஒரு பொருளோடு மற்றொரு பொருளை உவமம் செய்யும்வழி ஒன்றே அன்றி இரண்டும் மூன்றும் கலந்தும் வரும் (277). உவமம் எனப்படுவது உபமேயத்தைவிட உயர்ந்த பொருளாதல் வேண்டும் (278). வினை பயன் மெய் உரு என்பனபற்றி உவமம் கொள்ளுங்கால் சிறப்பு, நலன், காதல், வலி என்ற நான்கும் இடனாக உவமம் பிறக்கும் (279). அந்நிலைக்களம் நான்கே அன்றிக் கீழ்ப்படுக்கப்படும் பொருளோடு ஐந்து எனவும்படும் (280). முதலொடு முதலும் முதலொடு சினையும், சினையொடு சினையும் சினையொடு முதலும் வேண்டியவாற்றான் உவமம் செய்தற்கு உரிய எனவும் அங்ஙனம் செய்யுங்கால் மரபு பிறழாமை செய்யப்படும் எனவும் கொள்க (281). இறப்ப உயர்வும் இறப்ப இழிவும் உவமிக்குங்கால் இன்னாவாகச் செய்யாது சிறப்பு உடைமையில் தீராவாகிக் கேட்டார் மனங்கொள்ளுமாற்றான் வருதலை வழக்கை அடிப்படையாகக் கொண்டு அமைத்தல் வேண்டும் (285). பெருமைபற்றியும் சிறுமைபற்றியும் ஒப்புமை கொள்ளப்படும் உவமை, நகை முதலிய மெய்ப்பாடு எட்டன்வழித் தோன்றும் என்ப புலவர் (294). வடிவினைத் தொட்டு உணரலாம்; நிறத்தைக் கண்ணால் பார்ப்பதே இயலும். இது பேராசிரியர் தந்த விளக்கம் (தொ. பொ. 276)] [7]

உவமைக்கு உரிய பொதுஇலக்கணம்

**93. அதுவே,**
**நிறைவினும் குறைவினும் நிகழ்த்துதல் நெறித்தாய்த்**
**துறைதொறும் பழமையும் புதுமையும் தோய்ந்து**
**விரியினும் தொகையினும் விழுமிதின் நடைபெறும். [8]**

(எ-ன்) இதுவும் அவ்வுவமைக்கு ஆவதொரு பொதுஇலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அதுவே - அவ்வகைப்பட்ட உவமை என்னுமது, நிறைவினும் குறைவினும் நிகழ்த்துதல் நெறித்தாய் - நிறைவுஉவமை குறைவுஉவமை எனப் புலவரால் கூறப்படுதலைத் தனக்கு இலக்கணநெறியாக உடைத்தாய், துறைதொறும் பழமையும் புதுமையும் தோய்ந்து - வினை முதலாய் நால்வகைப்பட்ட இடந்தொறும் முந்துநூல் புலவரான் கூறப்பட்ட தொன்மையவாகியும்,

அதன்பின்னர் அவ்வவகாலத்துப் புலவரான் புதுவதுபுதுவதாகக் கூறப்பட்டு வருவனவுமாகப் பொருத்தமுற்று, விரியினும் தொகையினும் விழுமிதின் நடைபெறும் - விரியுவமை, தொகையுவமை என இருதிறத்திலும் விழுமிதாக நடைபெறும் என்றவாறு.
'விழுமிதின்' என்று சிறப்பித்த அதனால் இவை நான்கும் இனி மேல்வரும் விரியுவமை அனைத்திற்கும் பொதுவாம் எனவும், இன்னும் அவ்விலேசானே விரியுவமையும் தொகைஉவமையும் வினை முதலிய நான்கினோடும் எட்டாம் எனவும் கொள்க. என்னை? 'நாலிரண்டு ஆகும் பாலுமா ருண்டே' (தொ. பொ. 293) என்றார் ஆகலின்.
[வினை முதலாய நான்கு - வினை, பயன், வடிவம், நிறம் என்பன.] [8]

நிறைவுஉவமை

**94. அவற்றுள்,**
**முக்கியப் பொருள்திறம் முற்றுதல் நிறைவே. [9]**

(இ-ள்) உவமேயத்தின் நான்கு கூறுபாடும் உவமையினும் முற்றக் காண்பன நிறைவுஉவமையாம் என்றவாறு.

**ஆரா அமுதம் அளித்த திருப்பாற்கடலுள்**
**நாராயணன் நாகணைமீது - நேரிழாய்!**
**எப்படியே கண்வளராநின்றான் எனும் அரங்கத்து**
**அப்படியே கண்வளர்வான் ஆம். (138)**

இது நிறைவுஉவமை. இதனுள் திருப்பாற்கடல்நாதன் உவமம். ஆசிரியர் இதனைப் பூரணஉவமை என்ப. அங்ஙனம் ஆதல், அவன் கண்வளரா-நின்றதுபோல இவனும் கண்வளராநின்றான் என வினைஉவமையும், அவன் திருமேனி எப்படியே இருக்கும் அப்படியே இவன் திருமேனியும் இருக்கும் எனவே வடிவினோடு காந்தி ஆகிய பண்பும், அவனைச் சேவிப்பார்க்கு அச்சேவை காரணமாக முத்தியாகிய காரியம் பயக்குமது போல இவனைச் சேவிப்பார்க்கு முத்தியாகிய காரியம் பயக்கும் எனப் பயஉவமையும், உவமையாகிய திருப்பாற்கடலிடத்தும் வினை முதலிய நான்கும் பூரணமாகி உவமை உயர்ந்தபடியும் காண்க. எப்படியே கண்வளராநின்றான் எனும் என்பது பிரமன் முதலாயினார் புராணங்கள் எப்படியே கூறும் என்பதாம். பயஉவமை என்பது ஒன்றன்தொழில் ஏதுவாகப் பிறக்கும் காரியம். அஃது எச்சமாயிற்று. நேரிழாய் என்பது மகடூஉ முன்னிலை. இரண்டு ஆற்றிடை அரங்கத்துத் திருமதிட்குப் பாற்கடல் நள்ளிடை ஆவரணம் உவமை.
திணை - பாடாண். துறை - கண்படைவாழ்த்து.
[உவமானத்தின்கண் காணப்படும் வினை பயன் மெய் உரு என்ற நால்வகை உவமையும் உபமேயத்தின்கண்ணும் பொருந்துமாறு அடைதல் பூரணஉவமையாம். ஆவரணம் - சுற்றுமதில். கண்படை வாழ்த்து - உறங்கிக்கொண்டிருக்கும் நிலையைக் கண்டு அதனை வாழ்த்துதல்.]

**பனிமதிக் கிரணம் வியன்கள நடுவண் பரந்து உடல்கதுவு போர்ப்பாய்மா**
**முனியுறப் பொழியும் இருள்மதம் முடுக்க முரண்இழந்து இரியல்போம் வேடர்**
**குனிதிரைத் திருப்பாற்கடலினைக் கடைநாள் கொதித்துஎழும் கடுவிடம் தொடரத்**
**தனிதனி உலக்கற்று அறிவுஇழந்து இரிந்த தலைமை வானவரை ஒத்தனரே.(139)**

இதுவும் அது. இதனுள், திருப்பாற்கடல் ஈன்ற கடுவிடம் தொடர்ந்தது. வெண்ணிலவு வியன்கள நடுவண் பரந்து உடல்கதுவிய போர்ப்பாய்மா பொழியும் இருள்மதம் முடுக்கினதற்கு உவமை. முரண் இழந்து இரியல் போம் வேடர் என்பது தனித்தனி ஒருவர்க்கு ஒருவர் உதவாது ஓடின தலைமை வானவரை ஒத்தனர் என்றவாறு.

இருள்மதம் முடுக்க எனவே பண்பும் வடிவும் வினைஉவமையும், அறிவு-இழந்து எனவே அதனாலாய காரியம் ஆதலால் பயன்உவமையுமாகிப் பூரணஉவமை ஆயவாறு காண்க.

[சந்திரனுடைய கிரணங்கள் பரந்தாற்போன்ற வெள்ளொளி வீசும் பரந்த நிலப்பரப்பின் நடுவிலே எங்கும் உலாவிச்சென்று உடல்களை அழிக்கும் போரிடத்துப் பாய்கின்ற யானை கோபத்தால் பொழிந்த இருண்ட மதம் துன்புறுத்தியதால் மாறுபட்டுப் போரிடுதலை விடுத்து உயிர்தப்பி ஓடும் வேடர்கள், வளைந்த அலைகளை உடைய திருப்பாற்கடலைக் கடைந்த காலத்தில் வெகுண்டு வெளிப்பட்ட கொடிய விடம் துன்புறுத்தத் தொடங்கியதால், தனித்தனி அழிந்து அறிவினை இழந்து ஓடிய பெரும்பதவிகளைஉடைய தேவர்களை ஒத்தனர் - என்ற கருத்தமைந்த இப்பாடலில், ஆலகாலவிடத்தின் பண்பும் வடிவும் யானையின் மதத்தினை ஒத்தவாறும், விடத்தின் வினையும், வினையின் பயனும் மதத்தின் செயலையும் அச்செயலின் பயனையும் ஒத்தவாறும் காண்க. இவ்வுவமையில் வினை முதலிய நான்கும் அமைந்தவாறு.] [9]

குறைவுஉவமை

**95. ஒன்று ஆதியசில ஒப்பது குறைவே. [10]**

(எ-ன்) குறைவு உவமை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) உவமேயத்தின் வினை முதலிய கூறுபாடு நான்கும் ஒவ்வாது அவற்றுள் ஒன்று முதல் மூன்று ஒப்பது குறைவுஉவமையாம் என்றவாறு.

இஃது 'ஒரீஇக் கூறலும் மரீஇய பண்பே' (தொ. பொ. 308) என்பதன் பாற்படும்.

**வாவித் திருக்குருகூர் மாறா! நின் வண்தமிழ்என்**
**நாவிற்கு இனிமை நயப்பதால் - தேவர்**
**மருந்துநிகர் என்றே மதித்துஉரைப்பேன், முற்றப்**
**பொருந்துவமற்று இன்மையின் இப்போது.** (140)

இஃது ஒன்று ஒத்த குறைவுஉவமை.

["குளங்களை உடைய திருக்குருகூரில் எழுந்தருளியிருக்கும் மாறனே! உன் வளமான தமிழ் என் நாவிற்கு இனிமை நல்குவதனால், வேறு உவமை எதுவும் முழுதும் பொருந்துவதாகத் தோன்றாமையால், அதனைத் தேவாமிர்தத்தை ஒப்பது என்றே இப்பொழுது குறிப்பிட விரும்புகிறேன்" என்ற கருத்தமைந்த இப்பாடலில், அமுதத்தின் பயனாகிய இனிமையைத் திருவாய்மொழியின் பயனாகிய இனிமைக்கு ஒப்பிடுவதால் பயன்பற்றிய உவமை வந்துள்ளது.]

**வெள்ளைப் பிறைக்கோட்டு வெங்கரியை வென்றவிறல்**
**பிள்ளைப்பெருமாள் தென்பேரைவாழ் - வள்ளைக்**
**குழையாரைத் தோய்ந்துஅகன்ற கொற்றவனைக் காய்ந்த**
**பிழையார் பொறுப்பார் பிறர்?** (141)

இஃது இரண்டு ஒத்த உவமை.

["வெண்பிறை போன்ற கொம்புகளை உடைய குவலயாபீடத்தை வென்ற கண்ணபிரான் அர்ச்சாமூர்த்தியாக எழுந்தருளியிருக்கும் தென்திருப்பேரையில் வாழும் வள்ளைக்கொடி போன்ற காதுகளைஉடைய பரத்தையரைத் தோய்ந்து பின் அவரை

விடுத்து வந்த தலைவனைக் கோபித்தற்குக் காரணமான பிழையை என்னையன்றி வேறு யாவர் பொறுத்துக்கொள்ள வல்லவர்?" என்று தலைவி பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனுக்கு வாயில் நேர்ந்தவாறு. பிறை கொம்புகளுக்கு வண்ணமும் வடிவும் பற்றிய உவமம்.]

**பாயும் கருங்கயல்போல் பாங்கி இவள்என்று மருங்கு**
**ஏயும்படி தாவின, இயற்பாத் - தோயும்**
**புவிநாவலர் புகழ்மால் புட்குழியாள் செவ்விக்**
**கவின்ஆனனத்து உலவு உண்கண்.** (142)

இது தொழில், பண்பு, வடிவு மூன்றும் பெற்று ஒன்று குறைந்த உவமை.

["ஆழ்வார்கள் அருளிச்செய்த பாடல்களிலே ஈடுபட்ட கல்வி வல்லோர் புகழும் திருமாலுடைய திருப்புட்குழி என்ற திருத்தலத்திலிருக்கும் இத்தலைவியினுடைய புத்தழகுடைய முகத்தில் உலவும் மையுண்ட கண்கள், நீரில் பாயும் கருங்கயல்மீன்கள் போல 'இவளே என் உயிர்த்தோழி' என்று இருபக்கமும் பிறழ்ந்து நோக்கி எனக்குத் தெரிவித்தன" என்று தலைவன் தலைவியின் பார்வையால் அவள் உயிர்த்தோழி இன்னாள் என்பதனை அறிந்து மகிழ்ந்து கூறியவாறு. இப்பாடலில் கண்களின் வடிவிற்கும் நிறத்திற்கும் பிறழ்ச்சியாகிய வினைக்கும் கயல் உவமம் ஆயினவாறு.]

அகர முதல எழுத்தெல்லாம்; ஆதி
பகவன் முதற்றே உலகு (குறள். 1)

என்பது எடுத்துக்காட்டு உவமை.

[ஒப்பான இருசெய்திகளை ஒருபாடலில் தனித்தனியே கூறி அவற்றை இணைக்கும் அதுபோல என்ற உவமச்சொல் இடையே புணர்க்காமல் ஒவ்வொன்றற்கும் மற்றது எடுத்துக்காட்டாக அமையுமாறு கூறுவது எடுத்துக்காட்டுவமை.]

மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேல்
காதலை வாழி மதி (குறள். 1118)

என்பது ஒன்று ஒத்த குறைஉவமை.

["என் தலைவியின் முகம்போல நீ ஒளிவீச வல்லையாயின், மதியமே! நீ என்னால் விரும்பப்படுவாய். அங்ஙனம் ஒளிவீச இயலாமையின் நீ என்னால் விரும்பப்படுவாய் அல்லை". மதி ஒளிபற்றி முகத்திற்கு உவமமாகக் கூறப்பட்டது.]

**செய்ய கமலமுகம், செங்கனிவாய், முத்தநகை,**
**வெய்ய களபமுலை, மின்மருங்குல், - மொய்இழாய்!**
**பைஅரவப் பாயலான் பாடகத்தான் மால்வரைவாழ்**
**தையல் அடிமாந் தளிர்.** (143)

இதுவும் அது. பகுதி - சேட்படை. துறை - தலைவன் பாங்கிக்குத் தலைவியின் அவயவம் கூறல்.

["செறிந்த அணிகலன்களை அணிந்த தோழியே! பாம்புப்படுக்கையை உடைய பாடகத்து எம்பெருமானுடைய பெரிய மலையிலே உள்ள என் தலைவி செந்தாமரை போன்று ஒளியும் வடிவும் உடைய முகத்தாள், கொவ்வைக்கனி போன்ற செவ்வாயாள், முத்துப் போன்ற வெண்ணிறப் பற்களை உடையாள், விரும்பத்தக்க யானைத்தந்தம் போன்ற மேல்நோக்கி உயர்ந்த முலைகளை உடையாள், மின்னலைப் போன்று அசையும் இடையினை உடையாள், தளிர் போன்ற நிறமும் மென்மையும் உடைய பாதங்களை உடையாள்" என்று தலைவியின் தோழியிடம் தலைவியின் உறுப்புக்களை வருணித்தவாறு. இப்பாடலில் செங்கனி, முத்தம், அடி என்பன வண்ணம்பற்றியும், களபம் வடிவு பற்றியும், மின்னல்தொழில் பற்றியும், தாமரை வண்ணமும் வடிவும்

பற்றியும் தலைவியின் உறுப்புக்களுக்கு உவமம் ஆயினமையின் இப்பாடலும் குறைவு-உவமைக்கு எடுத்துக்காட்டாகும்.]
வடநூலார் உலுத்தஉவமை என்பதும் இது.
முந்துநூல் புலவரால் கூறப்பட்டுத் தொன்றுதொட்டு வரும் உவமையாவன:

புலிபோல் பாயும் மறவன்
மாரி அன்ன வண்மை (புறநா. 133)
துடிபோல் சுருங்கும் மருங்குல்
பவளம் போன்ற செவ்வாய்
குறைபடு மதியம் தேயக் குறுமுயல் தேய்வதேபோல் (சிந்தா. 254)
நஞ்சும் அமிர்தமுமே போல்குணத்த பொருகயற்கண் (சிந்தா. 167)
'கருமணி அம், பாலகத்துப் பதித்தன்ன படியவாய் முனிவரையும்
மால்உறுப்ப மகிழ்செய்வ; ... பொருகயற்கண்' (சிந்தா. 167)

என்பன முதலியன.
[திருமால் பாற்கடலில் பொருந்தியமை போன்ற பொருகயற்கண்.]

அதன் பின்னர் ஆகும் காலங்கள்தோறும் புலவரால் புதுவது புதுவதாகப் புணர்த்தவற்றுள் சில வருமாறு:

**கோழ்அரைய காஞ்சிரைதாம் பழுத்து அருகே நிற்பவற்றில் குறுகாது ஆங்குக்**
**காழ்இல ஆம் கொழுங்கதலிக்கனிகளைச் சேண்சென்று அருந்தும் கவிகள் மார்க்கம்,**
**ஊழ்இலவாய்ப் படைத்த பொருள் பிறர்க்கு உதவா உலுத்தரை நீத்து உசிதமான**
**வாழ்வுஉடையோர் பொன்மனைச்சென்று அமிர்து அருந்திப் பசிதணிவார் மார்க்கம் மானும். (144)**

[குரங்குகள் நன்கு பழுத்த காஞ்சிரம்பழங்களை அணுகாது வெகுதூரம் சென்றும் பரல் அற்ற வாழைப்பழங்களை உண்ணும் செயல், பலதுறையினும் பெரும்பொருள் ஈட்டிப் பிறருக்குச் சற்றும் உதவாமல் இருக்கும் உலோபிகளை விடுத்து இரவலர், ஈத்துவக்கும் இயல்புஉடைய சான்றோர் மனைச்சென்று உணவுஅருந்திப் பசிதணிந்து செல்லும் செயலை ஒக்கும்.]
[இது செயலும் பயனும் உவமை.]

**வாசம் ஒருசிறிது இன்றாய் இணர்ஊழ்த்த செம்மலர் தம்மருங்காய் நிற்பப்**
**பூசல் வரி வண்டினங்கள் நீள்இடைப்போய் வாலிதாம் பூந்தேன் மாந்தல்,**
**ஆசுஅறக் கற்று உணர்ந்தறியார் அவைக்களம்நீத்தே செலச்சொல்பவராய், நுண்ணூல்**
**காசுஅறக் கற்றவர்கழகத்து அடைந்து நலன் உணர்பவர்தம் காட்சி மானும் (145)**

[வாசனையற்ற பலாசப்பூ தம்பக்கல் இருக்கவும், வண்டினங்கள் அவற்றில் மொய்க்காது வெகுதூரம் பறந்து சென்று அங்குள்ள பூக்களில் தூய தேனை உண்ணும் செயல், அறிவற்றவர்அவையை விடுத்து அறிவுடையார்அவையை அணுகி அவர்பால் பல செய்திகளையும் அறியும் சான்றோர் செயலை ஒத்திருக்கும்.]
[இதுவும் செயலும் பயனும் உவமை.]

**உற்றவயக் களிற்றினொடும் பிடியினை ஆங்கு ஒருபாந்தள் ஒருவாய்க்-கொள்ளக்**
**கற்றது கண்டு இருதலைப்புள் அவற்று இருகை கவர்ந்துஎடுப்பக் கௌவுகாலைப்**

**பற்குலம் உக்கு இடர்உழத்தல், தீவினை வந்து அடியிடும்நாள் பசையதாகப்
பெற்ற பொருளினைப் பேணி முதலும் இழந்து இடர்உறுவோர் பெற்றி
மானும். (146)**

[மலைப்பாம்பு ஒன்று ஆண்யானையோடு பெண்யானையைத் தன் வாயால் கௌவிக் கொள்ள, அதனைக் கண்டு இருதலையை உடைய ஆற்றல் மிக்க பறவை யானையிரண்டன் இருதுதிக்கைகளையும் தன் அலகினால் கௌவி யானைகளைப் பாம்பின் வாயினின்றும் வெளியே இழுத்த அளவிலே, பாம்பு தன் பற்களை இழந்து வருந்திய செயல், தீவினை வந்த அளவிலே மக்கள் தாம் புதியனவாகத் தேடிய பொருள்களோடு முன்னரே பெற்றிருந்த செல்வத்தையும் இழந்து வருந்தும் செயலை நிகர்க்கிறது.]
[இதுவும் செயலும் பயனும் உவமை.]

**உச்சவான் மலைச்சிகரத்து உறுகொடிகள் படர்பாங்கர் உடையவாகும்
பச்சைவேய்ங்கழைத் தலையில் சுழல்வனவாய்த் தோகை நடம்பயிலும்
நீர்மை,
மொய்ச்சுலாம் குழல் கழைக்காரிகை பாசம்பூண்ட கழைமுடிமேல் நின்றே
விச்சை மேதகப் பவுரி காட்டுவதாம் எனக்கவினும் விளம்பின் மன்னோ.
(147)**

[மலைச்சிகரத்தில் கொடிகள் சூழ்ந்த மூங்கில் உச்சியில் அமர்ந்து ஆண்மயில் ஆடும் காட்சி, கழைக்கூத்தாடிப்பெண் நாற்புறமும் கயிறுகள் கட்டப்பட்ட மூங்கில் உச்சியில் நின்று நடனம் செய்யும் காட்சியை நிகர்க்கும்.]
[இது வினையும் வடிவும் உவமை.]

**காவின்மேல் படுபலவின்கனி கடுவன்கொடு சினைதாழ் காமர் வல்லி
மாவின்மேல் படர்ந்ததன்மேல் மந்திகள்தாம் வயிற்றிடையே மகவைத்
தாங்கித்
தாவினால் தவறுடைத்தாம் என வருவதொடு போகும்தன்மை, கூத்தர்
ஓவில்வான் கழைக்கயிற்றின் முழவுதழீஇ எதிர்நடப்பது ஒப்பது ஆமே.
(148)**

[சோலையிலுள்ள பலவின்கனியைப் பறித்துக் கைகளில் கொண்டு, கொடிகள் படர்ந்த மாங்கிளைகளில் குட்டியைச் சுமக்கும் மந்திகள் இருப்பதனால் அக்கிளைகளை நோக்கித் தான் தாவினால் மந்திகளுக்குத் துன்பம் ஏற்படும் என்ற எண்ணத்தொடு யாது செய்யலாம் என்று, ஆண்குரங்கு பலாப்பழத்தோடு ஒருகிளையில் வருவதும் போவது-மாக இருக்கும் செயல், கழைக்கூத்தாடி கயிற்றின்மேல் முழவினைச் சுமந்துகொண்டு நடப்பதும் எதிராகத் திரும்பி நடப்பதும் ஆகிய செயலை நிகர்க்கும்.]
[இதுவும் வினையும் வடிவும் உவமை.]

**வெதிர்எதிர் சென்றேபொர விண்டு உகுதழல் அவ்வெதிரினையும் வெண்ணீறு
ஆக்கி
எதிர்பொருதல் திறன்அறியாச் சந்தனத்தேம் பொதும்பரையும் எரித்த
மார்க்கம்,
பிதிர்என வாழ்ந்திடு சிறியார் விளைத்த சினம் அவர்திருவின் பெற்றி தேய்த்துச்
சதிருடன் வாழ்ந்திடு தலைமைத் தமர்திருவும் தொலைத்திடும் அத்தன்மை மானும்.
(149)**

[மூங்கில்கள் ஒன்றோடொன்று எதிராக இருந்து உராய்வதனால் ஏற்பட்ட நெருப்பு ஒன்றோடொன்று மோதாமல் தனித்தனியாக இருக்கும் சந்தனமரக்கூட்டங்களையும் எரித்த செயல், சண்டையிட்டு வாழும் கீழ்மக்கள் விளைத்த கோபம் அவர்கள்

செல்வத்தை அழிப்பதனோடு, கௌரவமாக வாழும் மேம்பட்ட அவர்கள் உறவினர்களுடைய செல்வங்களையும் அழிப்பதனை ஒத்துள்ளது.]
[இது பயன்உவமை.]

**வீங்கு பராரைக் கழைகண் முளிந்தனவாய் உயிர்த்த தழல் மிறைசெய் காலை**
**ஓங்கு பசுங்கழைக் குலங்கள் மழைக்குலம் கீண்டு உகுபுனலால் ஒழித்த பான்மை,**
**தீங்கு விளைத்திடும் முதுவர் உறும்இடரை அக்குலத்துள் சிறுவர் மன்னர்**
**பாங்கு படைத்துள கருணை முகத்தவரால் தணித்தருள் அப்பான்மை மானும்.**
**(150)**

[காய்ந்த மூங்கில்கள் உராய்ந்து உண்டாக்கிய நெருப்பினை, பச்சை மூங்கில்கள் வான்அளாவி மேகத்தைக் கிழித்து வெளிப்படுத்தும் மழைநீரால் அவித்த செயல், தங்களுக்குள் தீங்கு தேடிக்கொள்ளும் ஆண்டில் மூத்தவர்கள் படும் துயரை அக்குடியில் தோன்றிய இளைஞர் அரசனுடைய உதவியைப் பெற்ற கருணை உள்ளத்தவரால் நீக்கும் செயலை ஒத்துள்ளது.]
[இதுவும் பயன்உவமை.]

**கருநிறப் பரூஉக்காழ்க் களங்கனி வகுளக் காமர்தீங் கனிகள் மாங்கனிகள்**
**பெருமிதப் பலவின்கனி சுவைத்ததன்பின் பீடுஉலாம் காழ்இலாக் கனியை**
**ஒருமுகப்பட உண்சுகமுறு சுகம், ஆங்கு உபயநூல்களை முறை முறையே**
**குருமுகத்து உணர்ந்தபின்னர் நான்மறை தேர் குறிப்பினர் சுகம் பொரு-**
**வருமே. (151)**

இவை எட்டும் குருகாமான்மியத்தில் கந்தமாதனச் சருக்கத்திற் பாட்டு. இவற்றுள் நால்வகைக்கும் புதுவதாம் உவமை புணர்த்தவாறு காண்க.

[களங்கனி, மகிழங்கனி, மா, பலா என்ற கனிகளை உண்டபின் பரல் இல்லாத வாழைக்கனியை மனம் ஒன்றிச் சுவைப்பதனால் கிளிக்கு ஏற்படும் இன்பம், இலக்கண இலக்கிய நூல்களை ஆசிரியர் வாயிலாகக் கற்ற பின்னர் வேதத்தின் விழுப்பொருளை ஆராயும் சான்றோர் எய்தும் இன்பத்தை நிகர்க்கும்.]
[இதுவும் பயன்உவமை.] [10]

### விரிஉவமை இலக்கணம்

**96. உவமையும் உருபும் ஏதுவும் பொருளும்**
**தவலருஞ் சிறப்பின் தாம் விரிவன விரி. [11]**

(எ-ன்) வைத்த முறையானே (93) விரிஉவமைக்கு இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று. உவமமும் உவமஉருபும் வினை பயன் உறுப்பு உரு என்னும் நான்கினுள் ஒன்றும் உவமேயமும் என்னும் நான்கும் ஒன்றற்கு உவமை கூறுமிடத்துத் தொகாது விரிவன விரிஉவமையாம் என்றவாறு.

'தவலருஞ் சிறப்பின் தாம் விரிவன' என்றதனால் பெயரும் முறையும் தொகையும் சிதையாமல் வருதல் சிறந்தது என்று உணர்க. அவையாவன பவளம் போலச் செவ்வாய் என்புழிப் பவளம் உவமம் எனவும் உவமானம் எனவும்படும்; போல என்பது உவமஉருபு; செம்மை என்பது குணமாகிய ஏது; வாய் என்பது பொருள் எனவும் உவமேயம் எனவும் படும். இப்பெயர் பெயர், இம்முறை முறை, இத்தொகை தொகை எனக்கொள்க.

**கருங்குவளை போல்கருங்கண், கன்னல்போல் இன்சொல்**
**சுருங்கு துடிபோல் சுருங்கும் - மருங்குல்,**
**பிடிபோல் இயங்குநடை, பெய்வளையைக் கண்டால்**
**குடிபோம், குடிபோம் குணம். (152)**

இதனுள் உவமம் முதலிய நான்கும் வந்தவாறு காண்க. அன்றியும், வினை பயன் உறுப்பு உரு என்ற நான்கு உவமையும் வந்தவாறும் கண்டுகொள்க. அடுக்குத் துணிவின் மேற்று. குணம் - அறிவு. குடிபோம் என்றல் - தன்நிலையில் நீங்கும் என்றல்.
பகுதி - பாங்கற்கூட்டம்; துறை - தலைவனை வியத்தல்.
[இவ்வளையலணிந்த தலைவியின் வனப்பினைக் கண்டால் அறிவு தன்நிலையின் நீங்கும் என்று துணிவாகக் கூறலாம். அவ்வாறிருந்தும் தன் அறிவுநிலை கெடாமல் என்னிடம் வந்து இத்தலைவியின் இயலும் இருப்பிடமும் பற்றிக் கூறிய தலைவன் மிக மேம்பட்டவனே என்று பாங்கன் தலைவனை வியந்தவாறு.

கருங்குவளை போல் கருங்கண் - நிறம்
கன்னல்போல் இன்சொல் - பயன்
சுருங்குதுடி போல் சுருங்கும் மருங்குல் - மெய்
பிடிபோல் இயங்கு நடை - வினை

என வினை பயன் மெய் உரு என்ற நான்கும் பற்றி உவமை வந்தவாறு.]

**இலவுஇதழ்போல் செவ்வாய், இயற்றமிழ்போல் இன்சொல்,**
**கலகநமன் போல அடும்கண்கள், - திலகப்**
**பிறைபோல் வளைநுதல், இப்பெண்அமிர்தைக் கண்டால்**
**அறைபோம் அறைபோம் அறிவு.** (153)

இதுவும் அது. இதனுள்ளும் நான்கு உவமையும் வந்தவாறு காண்க. துறை - இதுவும் அது. இதன்கண் அடுக்கும் துணிவின் மேற்று. அறைபோதல் - கீழ்அறுத்தல்.
[இலவு இதழ்போல் செவ்வாய் - உரு (நிறம்). இயற்றமிழ் போல் இன்சொல் - பயன். கலகநமன் போல அடும்கண்கள் - வினை. பிறைபோல் வளைநுதல் - உருவம். பெண்அமிர்து - உருவகம். நமன் - காலன். இதுவும் தலைவிவனப்புக் கண்டு அவளைக் கண்டும் அறிவு கலங்காத தலைவன் திறத்தைப் பாங்கன் வியந்தவாறு.] [11]

தொகைஉவமை இலக்கணம்

**97. உரைத்த நான்கினுள் ஒன்று இரண்டு இடையன**
**யாப்பினுள் இடைப்பட்டு எஞ்சலும் தொகையே. [12]**

(எ-ன்) ஏனைத் தொகைஉவமை (93) இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) விரிஉவமைக்கு உவமம் முதலாகச் சொல்லப்பட்ட நான்கனுள் இடைப்பட்ட இரண்டனுள் ஒன்றேயாயினும் இரண்டேயாயினும் தன்னிடத்து இடைப்பட்டுத் தொகுவது தொகைஉவமையாம் என்றவாறு.
இதனுள் தொகை என்றதல்லது உவமை என்பது பெற்றது யாதோ எனின், விரிஉவமைக்கு முதலே உரைத்த சூத்திரத்தால் (96) பெற்றது எனக்கொள்க.

**அம்பவளச் செவ்வாயும் ஆரநிரை வெண்நகையும்**
**பைம்பொன் அசலப் பணைமுலையின் - விம்பமுடன்**
**கண்டு களித்தேம்; திருமால் காட்கரையார் கன்னல்இன்சொல்**
**உண்டு களிப்புற்றிலம் மன்னோ.** (154)

இஃது உவமஉருபு ஒன்றும் இடையில் தொக்க தொகைஉவமை; இதனுள், அம்பவளச் செவ்வாய் முதலியவற்றிடையில் போல என்ற உவமஉருபு தொக்கதனால் அறிக. நெஞ்சமே என்னும் முன்னிலையும் எழுவாயும் எச்சம். மன்னும் ஓவும் அசை.
பகுதி - இயற்கை; துறை - கிளவிவேட்டல்.

[“மனமே! செவ்வாய், பற்கள், முலைகள் இவற்றைக் கண்டு களித்த நாம் தலைவியின் இனிய குரல்ஒலியை நுகரவில்லையே” என்று இயற்கைப்புணர்ச்சியில் தலைவன் கூறியவாறு. அம்பவளம் போன்ற செவ்வாய், ஆரநிரை போன்ற வெண்நகை, மேருமலை போன்ற முலை, கன்னல் போன்ற இன்சொல் என்பனவற்றில் போன்ற என்ற உவமஉருபு மறைந்திருப்பதால் இது தொகைஉவமை. ஆரம் - முத்து. நகை - பற்கள். அகலம் - மலை. விம்பம் - வடிவு. கன்னல் - கரும்பு. மன்னோ - மன்னும் ஓவும் அசை. எழுவாய் ‘யாம்’ என்பது. ]

**நீலம்போல் கண்ணும், நிறைமதியம் போல்முகமும்,**
**வாலமதி போல்நுதலும், வண்டுஇமிர்பூங் - கோலத்**
**தொடைத்துளப மாலைத் தொழுமாறன் வெற்பில்**
**படைத்துளதேல் மன்உயிர் நண்பா! (155)**

இஃது உவமஏது என்பது ஒன்று இடையில் தொக்க தொகைஉவமை.
(இ-ள்) நண்பா! கருங்குவளை போலக் கரிய கண்களையும் எல்லாக் கலைகளும் நிரம்பிய மதி போன்ற செம்முகத்தினையும், பிறை போல வளைந்த நுதலினையும், வண்டுகள் ஆரவாரிக்கும் அழகிய தொடையாகிய துளபமாலிகையை உடைய மாயோனைத் தொழும் மாறன் துடரிவெற்பில் தனக்கு உறுப்பாகப் பெற்று நிற்ப நீ கண்டது உளதேல் அஃது என் நிலைபெற்ற உயிராம் என்றவாறு.
இதனுள் நிற்ப, நீ கண்டது, அஃது என்னும் சொற்களை எச்சமாக நின்றனவாக்கி விரித்து உரைக்க.
பகுதி - பாங்கற்கூட்டம். துறை - அவ்விடத்து ஏகல்.
அஃதாக, இதன் முதல்நூல் செய்த தெண்டியாசிரியர் வினை, பயன் முதலிய ஏதுக்கள் தொகுவதே தொகைஉவமை என நோக்கவும், இந்நூல்உடையார் உவம உருபு தொகுவதும் தொகைஉவமை என்றது என்னையோ எனின், அஃதே, நன்று சொன்னாய்! இவை இரண்டிற்கும் முதல்நூலாகிய தொல்காப்பியத்துள், ‘உவமத் தொகையே உவம இயல’ (தொ. சொ. 414. ந.) என்பதனாலும், அதன்பின்னர் பவணந்தி, நேமிநாதர் முதலியோரும்,

‘உவம உருபு இலது உவமத் தொகையே’ (நன். 366)
‘உருபு உவமை உம்மை விரியின் அடைவே
உருபு உவமை உம்மைத் தொகையாம்’ (நேமி. சொ. 62)

என்பதனாலும் கூறப்பட்டது.
[நேமிநாதர் - சின்னூல் இயற்றிய குணவீரபண்டிதர். பவணந்தி - நன்னூலை இயற்றியவர். சின்னூலுக்கு நேமிநாதம் என்பது ஆசிரியர் இட்ட பெயர். நூலின் பெயரால் ஆசிரியரை நேமிநாதர் என்று இவ்வுரையாசிரியர் குறிப்பிடுகிறார்.]

**பவளவாய் முத்தநகைப் பைந்தொடியீர்! ஊழி**
**அவளவாய்க் கங்குல் நெடிது ஆமோ? - துவள்அருவிச்**
**சோலைமலையார் துணைத்தோளின் பைந்துளவ**
**மாலை மலையா மயிற்கு (156)**

என்பது இரண்டு இடையில் தொக்க தொகைஉவமை. என்னை? பவளம் போலச் சிவந்த வாயினையும் முத்துப் போல வெளுத்த நகையினையும் என்று உவமஉருபும் பண்பும் இடையில் தொக்கதால் என்று உணர்க.
திணை - பெருந்திணை. துறை - கண்டு கைசோர்தல்.
[“பவளம் போன்ற சிவந்த வாயினையும் முத்துப் போன்ற வெள்ளிய பற்களையும் உடைய பசிய பொன்னாலாகிய தொடியினை உடைய மகளிரே! அசையும் அருவியை உடைய சோலைமலையை உகந்தருளியிருக்கும் எம்பெருமானுடைய தோள்களில்

அணிந்திருக்கும் பசிய திருத்துழாய்மாலையைப் பெற்றுத் தான் அதனை அணியாத ஆண்மயில் போன்ற சாயலை உடைய இத்தலைவிக்கு இரவுக்காலம் ஊழிக்காலம் போல நெடியதாகுமோ?" என்று பெண்பாற்பெருந்திணைத் தலைவிநிலையை அவள்-தோழியர் தம்முள் உசாவியவாறு. 'அவ்வளவு' என்பது விகாரமாயிற்று.]

**கறைவேல்விழி இலவுஇதழ்இதழ்**
**நறைநாள்மலர் அஃதுஆனனம்**
**புருவம்சிலை உருவம்புயல்**
**உருவம்புரி குழல்எனுமது**
**பொன்அம்கிரி கொங்கைத்துணை**
**மின்என்றுஉரை இடைகண்டிலன்**
**எனஆங்குக்**
**கற்றறிவு உடையஎன் நிறையினைக் கலந்துஉள்**
**நல்திரு உறைவிடம் நண்பா!**
**சொல் தமிழ்மாறன் துடரி வண்பொழிலே.**

இதுவும் இரண்டு தொக்க தொகைஉவமை. இஃது ஆறு அடித்தாய், ஒன்றியும் ஒன்றாதும் வரும் வஞ்சித்தளையான், 'எனவாங்கு' என்னும் தனிச்சொல் பெற்று, மூன்றடி நேரிசைஆசிரியச் சுரிதகத்தால் இற்ற குறளடி வஞ்சிப்பா.
பகுதி - பாங்கற்கூட்டம்; துறை - இயல்பு இடம் கூறல்.
["நண்பா! வேல் விழி, இலவிதழ் உதடு, மலர் ஆனனம், சிலை புருவம், புயல் குழல், கிரி கொங்கை, மின் இடை இவற்றால் என் அடக்கப்பண்போடு கலந்து என் உள்ளத்தில் தங்கியிருக்கும் திருமகள் மாறனுடைய துடரிமலைப்பொழிலில் உறைகிறாள்" என்று தலைவன் பாங்கனிடம் தலைவியின் இயலும் இருப்பிடமும் கூறியவாறு. வேல்விழி முதலியவற்றுள் உவமஉருபும் பொதுத்தன்மையாகிய ஏதுவும் மறைந்துள்ளமையின் இவை இரண்டுதொக்க தொகைஉவமையாம். இவற்றுள் இரண்டாம்அடி ஐந்தாம்அடி இவற்றின் நடுவில் ஒன்றாதவஞ்சித்தளை வந்தவாறு. ஐந்தாம் ஆறாம் அடித்தொடக்-கத்தும் ஒன்றாத வஞ்சித்தளை வந்தவாறு. ஏனைய அடிகளில் ஒன்றியவஞ்சித்தளை வந்தவாறு.]
'இடைப்பட்டு எஞ்சலும்' என்ற உம்மையான், இடைப்பட்டுத் தொகாது, முதலானும், முதலைக்கூறச் சினைஅறிகிளவியாகிய ஆகுபெயரானும் உவமமும் உவமஉருபும் விரிந்து ஈற்றில் இரண்டு தொகுவனவும் உள என்பதூஉம் தோன்றி நின்றது.

**கொடிபோல், வடவரைபோல், கொவ்வைபோல், காமர்**
**பிடிபோல், இளமான் பிணைபோல் - வடிவு அமைந்தது**
**என் ஆருயிர் அமரர்க்கு இன்அமிர்து அன்று ஈந்தபிரான்**
**தன்நாகை அன்னாள் தனக்கு.** (158)

(இ-ள்) கொடி போல் நுடங்குகின்ற இடையினையும், வடமலை போலப் பெருத்த முலையினையும், கொவ்வைக்கனி போலச் சிவந்த வாயினையும், அழகிய பிடி போன்ற மென்னடையினையும், இளைய மான்பிணை போல வெருண்ட நோக்கினையும் உடைத்தாகிய வடிவால் அழகு அமைந்து இருப்ப-தொன்று; தோழி! எனக்கு உயிர் போலச் சிறந்தவனாகி, அமரர்க்கு முன்னைநாள் அமிர்தம் ஈந்த பிரான் திருநாகை அனையாட்கு என்றவாறு.
இதனுள் ஈற்றில் விரித்த இரண்டும் (ஏதுவும் உவமேயமும்) செய்யுட்கண் தொக்கவாறு காண்க. தோழி என்னும் முன்னிலை (விளித்துக் கூறும் சொல்) எச்சமாயிற்று.

பகுதி - சேட்படை; துறை - தோழிக்கு அவயவம் கூறல்.

[கொவ்வை கொவ்வைக்கனியையும், பிடி பிடியின் நடையினையும், மான்பிணை மான்பிணையின் கண்களையும் ஆகுபெயரால் உணர்த்தியவாறு.]

இரண்டும் என்ற உம்மை எச்சம் ஆதலால் ஈற்றின் மூன்று தொகுவனவும் உள.

**அன்னநடை மான்நோக்கு அணியிழாய்! வார்சுமந்த**
**பொன்அசலம் தன்னைப் பொறுப்பதாய் - முன்உதித்த**
**வெய்ய நடுஅறக் கொன்றிட்டதை வைத்து என்னோ, செங்**
**கையான் மறைத்தமை உண்கண்?** (159)

என்பது, அன்னநடை போன்ற மென்நடையினையும், மான்நோக்குப் போன்ற வெருண்ட நோக்கினையும், அழகிய பூணினையும் உடையாய்! வாரைச் சுமந்தவாய்ப் பொன்மலை போலப் பணைத்த முலையானவை தம்மைச் சுமப்பதுமாய்த் தாம் பிறந்து பணைப்பதற்கு முன்னே பிறந்த உடன்பிறப்பு-மாகிய தேயா நடுவினை முற்றக் கொன்றவற்றைக் கொல்க என வெளியில் வைத்து யான் உய்யும்படிக்கு உனது உயிர் போன்ற தோழியைக் காட்டித் தந்த மையுண் கண்களைக் கைகளால் மறைத்தமை என்ன பேதைமையோ என்றவாறு.

உண்கண்களை என்று ஒருசொல் இறுதி இரண்டாவது தொக்கு விரிந்தது. ஒழிந்த சொல்லெச்சங்களும் குறிப்பினால் விரித்து உரைத்தவாறும் காண்க.

பகுதி - இடந்தலை; துறை - நாணிக் கண்புதைக்க வருந்தல்.

[இடந்தலைப்பாட்டில் தலைவன் தலைவியைப் புகழ அவள் நாணித் தன்கைகளால் கண்களை மூடிக்கொள்ள விலகிய கைகளின் இடைவெளியில் அவள் தனங்களின் அழகு கண்ட தலைவன் கூறியவாறு. இப்பாடலுள் உவமானங்களேவர, உவம உருபு, பொதுத்தன்மை, உவமேயம் என்ற மூன்றும் மறைந்துள்ளமை மூன்றுதொக்க தொகை-உவமையாம்.] [12]

தொகைவிரி உவமைகள்

**98. இருமையும் ஒருதொடர்பினுள் உறல் இயல்பே. [13]**

(எ-ன்) இன்னும் அத்தொகைவிரி உவமைகட்கு ஆவதொரு விதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அத்தொகைஉவமையும் விரிஉவமையும் ஆகிய இரண்டு தன்மையும் ஒரு செய்யுளகத்து வருதலும் ஆம் என்றவாறு. 'உறலும் ஆம்' என்ற உம்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது.

**மொழிஅமுதம், முற்றா முலைமுகுளம், வைவேல்**
**விழி, மகிழ்மாறன் துடரிவெற்பில் - எழில்மயிற்கு**
**நன்போது அவிழ்குழல்கார், நண்பனே! செம்மேனி**
**பொன்போன்ம், பல்வெண்முத்தம் போன்ம்.** (160)

என்பது, "நண்பனே! மகிழ்மாறன் துடரி வெற்பில் அழகிய மயில்போலும் சாயல் உடையாட்கு மொழி அமுதம் போலும்; இளமுலை தாமரைமுகுளம் போலும்; விழி கூரிய வேல் போலும்; செருகிய முல்லையரும்பு அவிழாநின்ற குழல் கார்போலும்; சிவந்த மேனி பொன்போலும்; பல் வெண்முத்தநிரை-போலும்" என்றவாறு.

இதனுள் முன்னைய நான்கும் உவமஉருபும் ஏதுவும் உவமேயத்தை முன்னிட்டுத் தொக்கன. எழில்மயில் முற்றுவமை. பின்னைய இரண்டும் விரிஉவமை. போலும் என்னும் உவமஉருபு ஈற்றின் உகரம்

'செய்யும்என் எச்சஈற்று உயிர்மெய் சேறலும்
செய்யுளுள் உம் உந்து ஆகலும், முற்றேல்
உயிரும் உயிர்மெய்யும் ஏகலும் உளவே' (நன். 341)

என்பதனால், முற்று ஆதலின் உயிர் கெட்டது.

'மெல்லெழுத்து இயையின் னகார மாகும்' (தொ. எ. 367-68)

என்பதனால் லகாரம் னகாரமாய்த் திரிந்தும்,

'னகாரை முன்னர் மகாரம் குறுகும்' (தொ. எ. 51)

என்பதனால் ஈற்று மகாரம் குறுகியும்,

'செய்யுள் இறுதிப் போலி மொழிவயின்
னகாரம் மகாரம் ஈரொற்று ஆகும்' (தொ. எ. 51)

என்பதனால் ஈரொற்று உடனிலையாயும், மேலே பகரஒற்று வருதலின் செய்யுள் இடைப்பட்டும் வந்த முற்று 'போன்ம்' என்பதாயிற்று.

'ஐவிரை மாண்பகழி
அரந்தின்வாய் போன்ம்போன்ம் போன்ம்
பின்னும் மலர்க்கண் புனல்' (பரிபாடல் 97-99)

என்னும் பரிபாடலாகிய சங்கச்செய்யுளகத்தும் பகரம் மேலே வருதலால் செய்யுள் இடைப்பட்டும் வந்தவாறு காண்க. இது தொகைவிரிஉவமை. இன்னும் வேறுபட வருவன எல்லாம் தொகைவிரி உவமையுள் அமைக்க.

[முன்னைய நான்கு - மொழிஅமுதம், முலைமுகுளம், வேல்விழி, குழல்கார் என்பனவற்றில் உவமஉருபும் ஏதுவும் இடையே தொக்கன. செம்மேனி பொன்போலும், பல் வெண்முத்துப் போலும் என்பன விரிஉவமை.

எழில்மயில் என்பது முற்றுவமை என்பதன் கருத்து மயிலின் அழகு போன்ற அழகுடைய தலைவி என வினை பயன் மெய் உரு என்ற நால்வகை உவமையும் பொருந்துவதாம் என்பது.

தொல்காப்பியம் தனிமொழியின் உட்புணர்ச்சிக்கு விதி கூறவில்லை ஆதலின் போல்+ம் = போன்ம் என்பதற்கு 'மெல்லெழுத்து இயையின் னகாரமாகும்' (தொ. எ. 368) என்ற விதி கூறியது பொருத்தமாக இல்லை. லகரத்துக்கு மகரம் நட்பெழுத்தன்று ஆதலின் மகரத்துக்கு நட்பெழுத்தானதாய்த் தான் திரிதற்கு ஏற்றதான னகரமாக லகரம் திரிந்தது என்று கூறுதலே பொருந்துவதாகும்.] [13]

வெளிப்படை உவமை, குறிப்பு உவமை

**99. அவைதாம்,**
**வெளிப்படை குறிப்பினும் விழுமிதின் நடைபெறும். [14]**

(எ-ன்) இதுவும் அவ்விருவகை உவமையின் கூறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அங்ஙனம் கூறப்பட்ட விரிஉவமையும் தொகைஉவமையும் என்னும் இரண்டும் வெளிப்படை உவமம், குறிப்பு உவமம் என்னும் இரண்டாய் விழுமிதாக நடைபெறும்.

பவளச்செவ்வாய் என்புழி உவமானம் உவமேயம் என்ற இரண்டற்கும் பொதுவாய செம்மைக் குணத்தை வெளிப்படையாகக் கூறினமையான், குறிப்பின்றி உவமை கொள்ளப்படுதலானும், பவளவாய் என நின்றவழிப்

பவளத்தினையும் வாயினையும் கூட்டிச் செம்மைக்குணம்பற்றி உவமை செய்ததுஎனக் குறித்துக் கொள்ளப்படுவதல்லது வல்லென்ற பவளத்திற்கும் மெல்லென்ற இதழுக்கும் உள்ள ஒப்புமைக்குணங்கள் பிற ஆண்டு இல்லை என்பதூஉம், பானல் போல் கருங்கண் என்புழியும் இரண்டற்கும் பொதுவாகிய கருமைக்குணத்தை வெளிப்படையாகக் கூறினமையால் குறிப்பின்றி உவமை கொள்ளப்படுதலானும், பானல்உண்கண் என நின்றவழிப் பானலையும் கண்ணினையும் கூட்டிக் கருமைக்குணம்பற்றி உவமை செய்தது எனக் குறித்துக் கொள்ளப்படுவதல்லது பல இதழினோடும் பல அல்லியும் தாதுவும் கூடிய பரிமளப்போதிற்கும் நீண்டு பிறழ்ந்துஉலாய்க் குழைமேல்தாய கண்ணிற்கும் உள்ள பிற ஒப்புமைகள் ஆண்டு இல்லை என்பதூஉம் உணர்க. பிறவும் அன்ன; என்னை?

'சுட்டிக் கூறா உவம மாயின்
பொருள்எதிர் புணர்த்துப் புணர்ந்தன கொளலே' (தொ. பொ. 282)

என்றாராகலிற் கொள்க.

'விழுமிதின் நடைபெறும்' என்றதனால் விழுமியவாகிய குறிப்பு உவமையும் உள; அவையும் மேற்காட்டுதும்.

**பாற்கடல் வெய்யோனில் ஒளிபாரித்த சோதி, வட**
**நூற்கடலைத் தென்னுரை நன்னூற்கடலாய் - மாற்குஅடிமை**
**வாய்ந்தார் ஈடேற வகுத்து அளித்தான், தண்அளிதாம்**
**தாம்தாம் எனும் வகுளத்தான். (161)**

இது விழுமிதாய குறிப்பு உவமை.

(இ-ள்) உலகின்கண்ணே இருந்து நோக்குவார்க்குத் திருப்பாற்கடலின்கண் தோன்றும் உதயதிவாகரனைப் போல ஒளியைப் பாத்தின சோதிச் சொரூபத்தை உடையான் அவன் யார் எனின், வடமொழியாகிய சுருதிக்கடலைத் தென்னுரை நூற்கடலாக்கித் திருமாலுக்கு அடிமையாகத் தோன்றினார் பேரின்பம் எய்தப் பாடித் தந்தான், குளிர்ந்த வண்டுகள் தாம்தாம் எனப்பாடித் தேனை உண்ணும் வகுளமாலிகையை உடையான்; அவன் பரமகருணை இருந்தபடியோ! என்றவாறு.

இது விழுமிதாய குறிப்பு உவமையாயது. இதனுள், திருப்பாற்கடலில் தோன்றும் உதயதிவாகரன் தனது செய்ய மேனியில் ஆயிரம் கிரணங்களைப் பரப்பி உலகத்து இருளைத் துரத்தி உலகில் உள்ளார்க்குக் கடபடாதிகளைக் காட்டி இன்பத்தைப் புரந்தாற்போல, இவனும் வெண்திரைப் பொருநைத்துறை மாடத் திருக்குருகூரினிடத்துச் சிவந்த மேனியோடும் தோன்றித் திருவாய்மொழி ஆகிய ஆயிரம் பாடல்களையும் விரித்ததனோடும் அன்னவாகனத்தினும் தோன்றித் தன்னை மனோவாக்குக்காயங்களால் தியானித்தும் வாழ்த்தியும் வணங்குவார் மனத்துள் அறியாமையாகிய அந்தகாரத்தை நீக்கிப் பரப்பிரமத்தைக் காட்டித் தருவன் என, வினை பயன் வடிவு வண்ணம் என்னும் நான்கு உவமையும் குறிப்பினால் கொள்ளக் கிடந்தமையான் எனக் கண்டுகொள்க.

[வெண்திரைப் பொருநைத்துறை மாடத் திருக்குருகூருக்கும் அன்னவாகனத்திற்கும் பாற்கடல் - நிறஉவமை
செம்மேனி மாறனுக்கு இளஞாயிறு - வண்ணம் வடிவு உவமை
ஆயிரம்பாடல் விரித்தமைக்குச் சூரியன் ஆயிரம் கிரணம் பரப்பியமை - வினைஉவமை

சடகோபன் அறியாமையாகிய அகஇருளைப் போக்குதற்குச் சூரியன் புறஇருளைப் போக்கி ஒளிதருதல் பயஉவமை
எனவே வினை, பயன், மெய், உரு என்ற நால்வகை உவமையும் குறிப்பினால் கொள்ளப்பட்டன.]

தண்ணளிதாம் தாம்தாம் எனும் வகுளத்தான் என்பதற்குக் குளிர்மையுடன் கூடியதாய் வண்டுகள் பாடித் தேனை உண்ணும் வகுளமாலிகையை உடையான் எனினும் ஆம். வெண்திரைப்பொருநை மாடத் திருக்குருகூரொடும் அன்னவாகனமும் திருப்பாற்கடற்கு உவமை.

இக்குறிப்புஉவமை இந்நூலுடையார் யாங்குப் பெற்றார் எனின், நலமிகுபுலமை நக்கீரர்,

'உலகம் உவப்ப வலன்ஏர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு
ஓஅற இமைக்கும் சேண்விளங்கு அவிரொளி' (முருகு. 1-3)

எனக் கூறிய முருகாற்றுப்படுத்ததுள் பெற்றாராம்.

[சீவான்மாக்கள் மகிழுமாறு எழுந்து மகாமேருவை வலமாகத் திரிதலைச் செய்யும் எல்லாச் சமயத்தாரும் புகழும் ஞாயிற்றைக் கடலிடத்தே கண்டாற்போல, இருவகை இந்திரியங்களும் தாம் செல்லுதற்குரிய பொருள்கள்மேல் சென்று தங்குதல் இல்லையாக, இமைத்துப் பார்த்தற்குக் காரணமாகும், கட்புலனால் நோக்குவார் கண்இடங்கள் எல்லாவற்றினும் சென்று விளங்குகின்ற ஒளி - என்று பொருள்படும் இத்தொடருள், ஞாயிறு இருளைக் கெடுக்குமாறு போல முருகப்பெருமான் தன்னை மனத்தால் நோக்குவார்க்கு மாயையைக் கெடுத்தலின் தொழில்உவமமும், தன்னைக் கட்புலனால் நோக்குவார்க்குக் கடலின் பசுமையும் ஞாயிற்றின் செம்மையும் போல முருகப்பெருமானின் மயிலின் பசுமையும் திருமேனிச் செம்மையும் தோன்றலின் வண்ணஉவமமும் கொள்ளக் கிடந்தன.]

வாழ்த்து எல்லாம் பாடாண் ஆதலின் திணை - பாடாண் சார்ந்த பொதுவியல். துறை - பனுவல் வாழ்த்து. அன்றியும், வாகையைச் சார்ந்த பொதுவியலில் கூறிய பாடல் வென்றியுமாம்.

**மின்பதிந்த கார்மேனி விண்ணகர்மாலை, புலவன்**
**பின்பதிந்து சென்ற பெருமானை, - முன்பதிந்து**
**சேவித்தார் ஆளும் திருநாடு தேவர்எனப்**
**பாவித்தார்க்கு எட்டாப் பதம். (162)**

இதுவும் அது; என்னை? மின் குடிகொண்ட கார்போலும் திருமகள் குடிகொண்ட மார்பினோடும் கூடிய கரிய திருமேனியை உடையான் எனக் குறிப்புவமை கொள்ளக் கிடந்தமையான் என்று கொள்க. தேவர் எனப் பாவித்தார்க்கு எட்டாப்பதம் என்பது கண்டாகன்னனால் அறிக.

திணை - பாடாண். துறை - பழிச்சினர்ப் பணிதல்.

[தேவர் என்று பெருமிதம் கொள்பவர்களாலும் எட்டமுடியாத நிலை பரமபதம். குபேரனுடைய ஏவலர்களுள் ஒருவனாய்ப் பசாசஉருக் கொண்டவனாய்த் தன்னிடமிருந்த சூலத்தால் மனிதரை வதைத்து வதைக்கப்பட்ட உடலைச் சிவபெருமானுக்கு நிவேதனம் செய்தபின்பே தான் புசிக்கும் விரதமுடைய அவன், சிவபெருமானிடத்துப் பெரும்பக்தி பூண்டவனாய் அப்பெருமானிடம் தனக்கு வீடுபேறு வழங்குமாறு வேண்ட, அப்பெருமான் வாயிலாக வீடுபேறு அருளவல்லவன் திருமாலே என்பதை உணர்ந்து திருமாலை வழிபட்டு வீடுபேறடைந்தான் என்பது. எனவே வீடுபேறு என்பது திருமாலைத் தவிர ஏனைய பெருந்தேவர்களாலும் வழங்கப்பட முடியாத நிலை என்ற செய்தி கண்டாகர்ணன் வரலாற்றின் வாயிலாக உணரப்படும் என்கிறார்.] [14]

உவமத்திற்குச் சிறப்புவிதி

**100. உவமேயத்து இயல் உயர்த்திய பின்னர்**
**உவமப்பொருள் இயல் உயர்த்தி முடித்தலும்**
**கவின்அப் பொருட்குஉறின் கடிநிலை இலவே. [15]**

(எ-ன்) இஃது அவ்வுவமத்திற்கு எய்தாதது எய்துவித்தது.
(இ-ள்) முதலே உவமேயத்தினது பட்டாங்கை உயர்த்திக் கூறி, அதன் பின்னர் உவமப்பொருளின் பட்டாங்கை உயர்த்தி முடித்தலும், அவ்வுவமேயத்திற்கு உயர்ச்சி குறிப்பினால் உண்டாம்படி பயனிலை தோன்றுமெனின் நீக்கப்படாது என்றவாறு.
கவின் - ஆகுபெயர்.
[கவின் - கவினைத் தருதற்குக் காரணமாகிய உயர்ச்சி.]

**முத்திரைக்கை மாறன் மொழிந்த திருவாய்மொழியே**
**சத்தியநூல் என்பர் தகைசான்ற - மெய்த்தமிழோர்,**
**மேதினிமேல் ஆரணப்பா மெய்த்திருமாலே பரன்என்று**
**ஓதியதூஉம் ஆதியினில் உண்டு.** (163)

(இ-ள்) திருஞானமுத்திரைக்கையினை உடைய காரிமாறப்பிரான் 'சீமந் நாராயணனே பரதத்துவம்' என்று அவனுடைய சொரூபரூபகுணவிபூதி-களைக் கூறிய திருவாய்மொழியே உண்மைநூல் என்று பெருமை பூர்த்தியான வாய்மைத் தமிழ்ப்புலவோர் கூறுவர். அத்திருவாய்மொழியே அன்றி, உண்மைப் பொருளான திருமாலே பரத்துவம் என்று ஆதிகாலத்துப் பூலோகத்துக்கு மேலாய சத்தியலோகத்தினுமிருந்து வடமொழியாகிய சுருதி கூறியதூஉம் உண்டு என்றவாறு.
எனவே, ஆதியாய்ச் சத்தியலோகம் தொடங்கிப் பரந்த வடமொழியாய் உணர்த்திற்று என்று சுருதியாகிய நூலை மிகச் சிறப்பித்துக் கூறுவாராகித் திருவாய்மொழி ஆகிய நூலை உயர்த்திக் கூறாதது போல இயல்பினாலாகிய உவமம் கூறினாராயினும், மண்ணின் குடத்தோடு பொன்னின் குடத்துக்கு உண்டாய வேற்றுமைபோல, அந்தணரும் ஏனை மூவகைக் குலத்தோரும் ஓதுவதாகவும் பரந்து போகாதே தமிழ்மொழியால் எவ்வுலகத்தாரும் பரத்து-வத்தை உணரும்படிக்கு மறைவின்றி இருட்டு அற வேதசாரத்தை எடுத்துக் கூறித் தெருட்டிற்று எனத் திருவாய்மொழிக்கு ஏற்றமானதொரு பயனிலை குறிப்பினால் தோன்றியவாறு காண்க. என்னை?

'உவமத் தன்மையும் உரித்தென மொழிப
பயனிலை புரிந்த வழக்கத் தான' (தொ. பொ. 309)

என ஒல்காப் பெருமைத் தொல்காப்பியனார் கூறிய இலக்கணத்தானும்,

'பாரி பாரி என்றுபல ஏத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி ஒருவனும் அல்லன்
மாரியும் உண்டுஈண்டு உலகுபுரப் பதுவே' (புறநா. 107)

என்று சங்கச்செய்யுளாகிய இலக்கியத்தானும் உணர்க.
திணை - பாடாண். துறை - பனுவல் வாழ்த்து அல்லது வாகையைச் சார்ந்த இயல்வென்றியும் ஆம். இதுவும் குறிப்புஉவமைப் பாற்படும்.

[மட்குடம் தீட்டுப்பட்டு விட்டால் மீண்டும் பயன்படுத்த உதவாது. ஆகவே, தூய்மை-யோடுதான் மட்குடத்தைப் பயன்படுத்தவேண்டும். அதுபோல, வேதம் ஒலிநெறி குறையாமல் அந்தணருள்ளிட்ட மூன்று வருணத்தார்களே ஓத இயலும். பொற்குடத்-துக்கு யார் எந்நிலையில் பயன்படுத்தினாலும் தூய்மைக்குறை ஏற்படாது. அதுபோலத் திருவாய்மொழி ஆர்வமுடையார் யாவராயிருப்பினும் அவர் ஓத அமையும் என்றவாறு. பரந்துபட்ட வேதசாரத்தைத் தமிழால் உணர்த்தி உலகை உய்வித்தது என்று திருவாய்-மொழிக்கு ஏற்றம் குறிப்பினால் பெறப்பட்டவாறு.

விகாரவகையால் பெருமையும் சிறுமையும் ஒருபொருட்குக் கூறாது பட்டாங்கு உவமம் கூறுதலும் உரித்து என்று சொல்லுவர் ஆசிரியர், அதனானும் ஒருபயன் தோன்றச் சொல்லுதல் நெறிப்பாட்டின்கண் என்றவாறு (தொ. பொ. 309).

'பாரி பாரி' (புறம் 109) என்னும் பாட்டினுள், உலகு அளித்தற்கு மாரியும் உண்டு என உவமித்துச் சிறப்பித்துக் கூறுதலான், மாரியைச் சிறப்பித்துப் பாட்டுடைத் தலைவனாகிய பாரியை உயர்த்துக் கூறாதான்போல இயல்பினான் உவமை கூறினானாம்; இது மாரிக்கும் பாரிக்கும் ஓர் உயர்வு இழிவு இல்லை என்னும் தன்மைப்படக் கூறவே, பாரியை மாரிக்கு ஒப்பாகக் கூறுதலின், அதன்கண் உள்ள சிறப்புக்கள் யாவும் பாரிமாட்டும் உள்ளன என்ற கருத்தைக் குறிப்பால் பெறப்படவைத்தலின் 'பயனிலை புரிந்த வழக்கு' எனப்படும் என்றவாறு.] [15]

உவமையின் விரி

**101. பலபொருள், ஒருபொருள், ஒருவயின், பலவயின்**
**போலி, இல்பொருள், மறுபொருள், விபரீதம்,**
**மருட்கை, தலைதடுமாற்றம், விகாரம்,**
**தடுமாறுதலே, சமுச்சயம், இன்சொல்,**
**நியமம், அநியமம், புகழ், நிந்தைஉவமம்,**
**மோகம், அவயவம், அவயவி, முற்றே,**
**ஏகம், மாலை, அந்தாதி, பொதுநீங்கல் என்று**
**ஆவகை ஐயைந்தாம் அதன் விரியே. [16]**

(எ-ன்) இதன்முன்னர் உவமை எனத் தொகையான் ஒன்றாய் நின்றது, வினை பயம் உறுப்பு உரு என்ற நான்கினோடும் கூடி, ஏது ஐந்தாம் என்னுமவை முதலிய வகையின் பாகுபாடுகள் எல்லாம் உணர்த்தி, அவற்றினின்றும் விரிந்த உவமையினது பெயர்வேறுபாடும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அங்ஙனம் கூறுபடுத்தின உவமையின் விரி பலபொருள்உவமை முதலாகப் பொதுநீங்குஉவமை ஈறாக இருபத்தைந்தாம் எ-று.

இவற்றிற்கு எல்லாம் எண்ணும்மை தொக்கன. போலி என்பதனை இறுதிவிளக்-காக்கி இருவயினும் கூட்டி, உவமம் என்பதனை மத்திமதீபமாக்கி முன்னும் பின்னும் எல்லாவற்றோடும் கூட்டி உரைக்க. என்று என்பது எண்இடைச்சொல்.

'என்றும் எனவும் ஒடுவும் ஒரோவழி
நின்றும் பிரிந்துஎண் பொருள்தொறும் நேரும்' (நன். 429)

என்பதனால் அறிக. இவை எல்லாம் சொல்லின் முடியும் இலக்கணத்தன ஆதலான் பெரும்பான்மையும் தம்பெயருள்ளே இலக்கணமும் புலப்படும். அல்லதூஉம் உரையிலும் கொள்க.

[ஏது ஐந்து - சிறப்பு, நலன், காதல், வலி, கிழக்கிடுபொருள் என்பன. எண்ணும்மை பெறின் பலபொருள் உவமையும், ஒருபொருள் உவமையும் ... பொதுநீங்கு உவமையும் என்று இருபத்தைந்தாக விரியும் என்று அமையும். ஒருவ்யின் போலி உவமை,

பலவயின் போலி உவமை எனப் போலி என்பதனை ஈரிடத்தும் கூட்டி, உவமை என்பதனை விரி இருபத்தைந்தோடும் கூட்டிக் கொள்ள வேண்டும். என்று என்ற எண்ணுப்பொருளில் வரும் இடைச்சொல் 'பொதுநீங்கல் என்று' என்று ஓரிடத்தில் இருந்தே உவமைவிரி இருபத்தைந்தனோடும் இயைந்து எண்ணுப்பொருள் தரும். உவமைவிரி இருபத்தைந்தனுள் பெரும்பான்மைய அவற்றின் பெயரைக் குறிப்பிட்ட அளவிலேயே பொருள்புலப்படக் கூடியன. சற்றுப் பொருள்விளக்கம் இல்லாதன உரையாசிரியரால் ஆங்காங்கு விளக்கப்பட்டன.]

1. அவற்றுள் பலபொருள்உவமை என்பது ஒருபொருளுக்குப் பலபொருள்களை உவமமாகக் காட்டுவது. அஃது ஒன்றுபல குழீஇய பலபொருள் உவமை எனவும், வேறுபல குழீஇய பலபொருள் உவமை எனவும் இருகூற்றதாம். அவற்றுள் ஒன்றுபல குழீஇய பலபொருள்உவமை வருமாறு:

**எண்ணிற்கு அடங்கா இளஞாயிறு ஒன்றியபோல்**
**கண்ணிற்கு அடங்காக் கதிர்விரிக்கும், - விண்ணின்**
**பரந்தாம மாதவன் பொற்பாதம் நினைந்துஏத்தும்**
**வரம்தாம் படைத்தார் வசம். (164)**

இஃது ஒன்றுபல குழீஇய பல பொருள் உவமை. இதனுள் பரந்தாமம் என்றது பரமபதம். 'வரம்தாம் படைத்தார் வசம்' என்பது மாதவன் திருவடிகளை இப்பிறப்பில் சிந்திக்கவும் வாழ்த்தவும் முற்பிறப்பில் வரம் படைத்தவர்தாம் எவர், அவர் கைப்படும் பொருளாம் என்றவாறு.

["பரமபதத்திலுள்ள எம்பெருமானுடைய, பல இளஞ்சூரியர்கள் ஒன்று சேர்ந்தமை போலக் கண்களுக்குத் தாங்கமுடியாத ஒளி வீசும் பொலிவுடைய திருவடிகள், அவற்றை நினைந்து போற்றும் நல்வினையுடையவர்கள் கைவசம் கிட்டும்" என்ற கருத்தமைந்த இப்பாடலில், திருவடிகளுக்குப் பல இளஞ்சூரியர்களை உவமம் கூறியது ஒன்றுபல குழீஇய உவமையாம்.]

வேறுபல குழீஇய பலபொருள் உவமை வருமாறு:

**கொடியும் ஒருபிடியும் கோள்அரவும் மின்னும்**
**துடியும் புரை மருங்குல் தோகை, - வடிநெடுங்கண்**
**என்னுயிர்க்குத் தம்பமதாய் இந்தளூர் மால்வரைத் தன்**
**மன்னுயிரைக் காட்டும், மதித்து. (165)**

இது வேறுபல குழீஇய பலபொருள் உவமை. ஒருபிடி - ஒருகையை விரல்மடக்கின அளவாம். 'ஒருபிடி நுசுப்பினாளை' எனச் சிந்தாமணி (613) யினும் கூறியமை காண்க.

பகுதி - இயற்கைப்புணர்ச்சி, துறை - பாங்கியை அறிதல்.

[கொடியையும் ஒரு கைவிரல்களை மடக்கின அளவையும், உயிரை வருத்தும் பாம்பையும், மின்னலையும், துடியின் நடுப்பகுதியையும் ஒத்த இடையை உடைய ஆண்மயில் போன்ற சாயலைஉடைய தலைவியின் மாவடுவகிர் போன்ற நீண்ட கண்கள், என் உயிருக்குப் பற்றுக்கோடாய் எம்பெருமானுடைய திருஇந்தளூரை அடுத்த பெரிய மலைப்பகுதியிலே தனக்கு உயிர்த்தோழியாவாளை யான் அறியச் செய்யவேண்டும் என்று கருதி எனக்குக் காட்டுகின்றன - என்ற கருத்தமைந்த இப்பாடற்பகுதியுள், இடைஒன்றற்குக் கொடி, ஒருபிடி, அரவு, மின், துடி என்ற பல வேறுபட்ட பொருள்களும் ஒருங்கு உவமமாய் வந்துள்ளமையின் இது வேறுபல குழீஇய பலபொருள் உவமையாம். 'ஒருபிடி நுசுப்பினாளை உள்ளுபு வந்துவிட்டான்' (சிந். 613)]

**ஆலம்போல், செவ்வேள் அயில்போல், அடுங்காலன்**
**சூலம்போல், காமன் தொடுத்துஇயக்கும் - நீலம்போல்,**
**கொல்வான் பிறழ்கண் கொடிக்குஇடம் மாமூலம்எனச்**
**செல்வான் கடிகைச் சிலம்பு. (166)**

இதுவும் அது. பகுதி - பாங்கற்கூட்டம். துறை - இயல்புஇடம் கூறல்.
[தலைவன் தன் பாங்கனிடம் தான் சந்தித்த தலைவியின் இயல்பினையும் அவளைச் சந்தித்த இடத்தினையும் குறிப்பிடும் துறையில் அமைந்த இப்-பாடலில், "ஆலகால விடம், முருகனுடைய வேல், எமனுடைய சூலம், மன்மதன் விடுக்கும் உயிரைப் போக்கும் அம்பாகிய கருங்குவளைமலர் என்பனவற்றைப் போல, என்னைக் கொல்லுமாறு நாற்புறமும் அசையும் கண்களை உடைய கொடிபோன்ற தலைவி கடிகை என்ற திருத்தல மலையில் உள்ளாள்" என்று அமைந்த கருத்தில் தலைவி கண்களுக்கு விடம், வேல், சூலம், நீலமலர் என்ற பல உவமங்கள் கூறியிருத்தல் வேறு பலசூழ்இய பலபொருள் உவமையாம்.]

2. ஒருபொருள் உவமை - பல உவமேயங்களுக்கு ஒருபொருளையே உவமமாகக் காட்டுவது.

**இமிழ்திரைநீர் ஞாலத்து இருள்இரிய வான்தோய்ந்து**
**உமிழ்கதிர் வெண்திங்களுடனே எஞ்ஞான்றும்**
**வலம்செய் சுவண வடவரைபோல் மாடம்**
**பொலம்செய் மதில் கோபுரம் சிகரபந்தி**
**இலங்கு மதிளரங்கத்து எம்பிரான் பல்புகழைப்**
**பாடினார் பாதம் தமைப்பாடிச் சென்னியின்மேல்**
**சூடினார்க்கு உண்டோ, துயர்? (167)**

என்பது பலபொருட்கு ஒருபொருள் உவமை. பலபொருள் - செம்பொன்மாடம், மதிள், கோபுரம், சிகரவரிசை என்பன. உவமம் வடமேரு என்னும் ஒன்று. பா ஏழடியான் வந்த பலவிகற்பப்பஃறொடை வெண்பா.
திணை - பாடாண். துறை - பழிச்சினர்ப் பணிதல்.
[கடல்சூழ்ந்த உலகில் இருள் நீங்க வானத்திலிருந்து ஒளியைப் பரப்பும் வெங்கதிர், தண்மதியம் என்னும் இவை எப்பொழுதும் சுற்றி வருகின்ற பொன்மயமாக வடக்கிலிருக்கும் மேருமலையைப் போன்ற மாடங்கள், மதில்கள், கோபுரங்கள், சிகரவரிசைகள் இவற்றை உடைய மதில்களால் சூழப்பட்ட திருஅரங்கத்து எம்பெரு-மானுடைய பலபுகழ்களையும் பாடின அடியார்களுடைய திருவடிகளைப் புகழ்ந்து அவற்றைத் தம் முடிமீது சூடிக்கொண்டவர்களுக்கு வாழ்க்கையில் துன்பம் தரும் நிகழ்ச்சிகள் தோன்றா - என்ற கருத்தமைந்த இப்பாடலில், மேருமலை ஒன்றே உவமம்; மாடம், மதில், கோபுரம், சிகரவரிசை - உவமேயங்கள். ஒருபொருளையே பல உவமேயங்களுக்கும் உவமமாகக் கூறுதலின் இப்பாடலில் ஒருபொருள் உவமை வந்துள்ளது.]

**வண்ண வனசமலர்போல் திருமுகமும்**
**கண்ணும் மலர்அடியும் கைக்கொண்ட - பெண்அரசைச்**
**செந்தமிழ் மாறன்சிலம்பில் சேர்ந்துஅகன்று என்பால் உரைக்க**
**வந்தவனே திண்ணியன் ஆவான். (168)**

இதுவும் ஒருபொருள் உவமை. பகுதி - பாங்கற்கூட்டம். துறை - தலைவனை வியத்தல்.

["செந்நிறத் தாமரைமலரை வென்ற முகமும் கண்களும் அழகிய அடிகளும் உடைய பெண்ணரசியை மாறனுடைய மலையில் கூடி அவளை விடுத்து என்னிடம் அவள்திறம் பற்றிப் பேசவந்த தலைவனே மிக்க மனஉறுதி உடையவன்" என்று, தலைவியைக் கண்ட பாங்கன் கருத்தாக அமைந்த இப்பாடலில், தாமரை என்ற ஓர் உவமமே தலைவியினுடைய முகம், கண்கள், பாதங்கள் இவற்றிற்கு ஒப்பாகக் கூறப்பட்டமையின், இப்பாடலில் ஒருபொருள் உவமை வந்துள்ளது.]

3. ஒருவயின் போலி என்பது ஒருதொடர்மொழிக்கண் பல உவமங்கள் வந்தாலும், உவமம்தோறும் உவமச்சொல் புணர்க்காது இறுதியில் ஓர் உவமச்சொல் புணர்ப்பது.

**வாவித் திரைஎறிந்த நித்திலத்தின் மள்ளர்எறி**
**காவித் திறன்சேர் கமலமலர் - பாவைமார்**
**வெண்ணகை உண்கண் ஆனனம்போன்ம் எனத் தோன்றும்**
**கண்ணபுரத்தான் இமையோர் கண். (169)**

இஃது ஒருவயின்போலி. திணை - பாடாண். துறை - கடவுள்வாழ்த்து. நாடுவாழ்த்துமாம்.

திரைஎறிந்த நித்திலத்தினோடு மள்ளர் களைகட்டு எறிந்த காவிகளும் சேர் கமலமென்க. போன்மெனத் தோன்று மென்பது போலத் தோன்றும் என்றவாறு. ஒழிந்த அகலம் உரையிற் கொள்க.

[ஓடைகளின் அலைகள் வீசிய முத்துக்களும் உழவர்கள் களைகள் எனப் பறித்து எறிந்த குவளைமலர்களும் தாமரைமலரைச் சேர்ந்து, பெண்களுடைய வெள்ளிய பற்களையும், மைஉண்ட கண்களையும், அவை சேர்ந்த முகத்தையும் ஒத்துக் காணப்படும் இயற்கைஅழகைஉடைய திருக்கண்ணபுரம் என்ற திருத்தலத்து எம்-பெருமான் தேவர்களுக்குக் கண்கள் போன்றவன் - என்ற கருத்தமைந்த இப்பாடலில், நித்திலம் வெண்ணகை போலும், காவி உண்கண் போலும், கமலமலர் முகம் போலும் என உவமம்தோறும் போலும் என்ற உவமஉருபைப் புணர்க்காது, ஆனனம் போலும் என ஒரேஇடத்தில் உவமச்சொல்லைப் புணர்த்தது ஒருவயின்போலி உவமையாம்.]

4. பலவயின்போலி - என்பது ஒருதொடர்மொழிக்கண் பல உவமம் வந்தால் உவமந்தோறும் உவமச்சொல் புணர்ப்பது.

**பொன்மலைபோலும் திருமால் புட்குழியாள் பூண்முலை, நீர்**
**மன்அருவி போலும் மணிவடங்கள், - சொன்னதன்மேல்**
**செக்கர்வான் போலும் எழில் செம்படாமும் புனைந்தார்;**
**எய்க்கும்நூல் என்னாம் இனி. (170)**

இது பலவயின்போலி. எய்க்கும் நூல் - எய்யாநிற்கும் நூல். பொன்மலை-போன்ற முலையின்மேல் பொற்பூணையும் பூட்டி முத்துவடத்தையும் பூட்டிச் செம்படாத்தையும் உத்தரிகமாகப் போட்டமையான் இனி இடை இறும் என்றவாறு. 'என்னாம்' என்பது குறிப்புமொழி.

எனவே, இடையைத் தாங்கி, வடம் முதலியவற்றைத் தாங்கிப் புடைபெயர்த்துத் தனத்தைப் பரிசித்து மருங்கு அணைந்தானாம்.

பகுதி - இடந்தலைப்பாடு; துறை - மருங்கு அணைதல்.

[இப்பாடலில் பொன்மலை போலும், அருவி போலும், வான் போலும் என உவமம் தோறும் போலும் என்ற உவமஉருபு புணர்த்தமையின் இது பலவயின்போலி உவமை எனப்படும். எய்க்கும் - தளர்கின்ற. நூல் - ஆகுபெயரால் இடை.]

5. இல்பொருள்உவமை என்பது முன்பு இல்லாதது ஒன்றை ஒன்றற்கு உவமை-யாக்கி உரைப்பது.

**உதிக்கும் கருஞாயிறு என்றே உவமை**
**மதிக்கும் வடமலை மாயோனைத் - துதிக்கும்**
**திருநாஉடைய பிரான் செந்தமிழை ஓதி**
**இரு நாவே! வாராது இடர். (171)**

என்பது இல்பொருள் உவமை. என்னை? கருஞாயிறு இல்லாத பொருள் ஆதலால், அதனைக் காளமேகம் போன்ற திருமேனிக்கு உவமை கூறினமையான் என்று உணர்க.

திணை - பாடாண். துறை - ஓம்படை.

[அறிவோர், வேந்தனுக்கு 'ஆய்ந்து இவை செய்க' என உறுதி கூறுவது ஓம்படையாகும். "உதிக்கும் கரிய சூரியனை உவமம் கூறுமாறு நிறத்தைஉடைய திருவேங்கடத்தெம்பெருமானைத் துதிக்கும் நாவினைஉடைய சடகோபனுடைய செந்தமிழ்ப்பனுவல் ஆகிய திருவிருத்தம், திருஆசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி என்ற நான்கனையும் ஓதியவாறு இரு. நாவே! நமக்கு இடர் ஏதும் வாராது" என்றபடி.

கருஞாயிறு உலகில் இல்லாத பொருள் ஆதலின் அதனை உவமம் கூறுதல் இல்பொருள்உவமையாம்.]

**சொன்னவாறு ஒன்றுஉரைக்கக் காணேன்; துணைமேரு**
**என்னவாழ் வுற்ற இணைமுலையாள் - மன்னவா!**
**பந்துகழங்கு அம்மனை கைப்பற்றுகஎன்று இன்றுஎனையும்**
**வந்துதழீஇக் கொண்டாள் மகிழ்ந்து. (172)**

இதுவும் அது. இதனுள் துணைமேரு என்றதனால் வடமேரு ஒன்று அல்லது இல்லை ஆதலால் இல்பொருள் உவமையாயிற்று. இங்ஙனம் சிந்தாமணியிலும்,

'கோள்மின்னு மீன்சூழ் குளிர்மாமதித் தோற்றம் ஒத்தே' (சிந். 882)

என வந்தமையால், இதனது வேறுபாடும் காண்க.

பகுதி - உடன்போக்கு. துறை - குறிப்பு உணர்தல்.

["தலைவனே! இணையான இருமேருமலை போன்ற மேம்பட்ட இருதனங்களை உடைய தலைவி, உன்னோடு உடன்போதற்கு ஒருப்பட்டு இன்று என்னைத் தழுவிக்கொண்டு, தான் விளையாடிக்கொண்டிருந்த பந்து கழங்கு அம்மனை என்பனவற்றை என்கையில் கொடுத்தாளே ஒழிய, வாய்திறந்து ஒன்றும் சொல்லவில்லை" என்று தலைவி உடன்போக்கிற்கு ஒருப்பட்ட செய்தியைத் தோழி உணர்ந்து தலைவனுக்குக் குறிப்பிட்டதாக அமைந்த இப்பாடலில், உலகில் மேருமலை ஒன்றே இருக்கவும், தலைவி தனங்களுக்கு இரண்டு மேருமலைகளை உவமம் கூறியமை இல்பொருள்உவமையாம்.

இராகு கேதுக்களை ஒழிந்த ஏழுகோள்களும் விண்மீன்களும் சூழப்பட்டதொரு மதி இல்பொருள் உவமை. சிறப்பான தோழர்களாகிய புத்திசேனன், பதுமுகன், சீதத்தன், தேவதத்தன் என்ற நால்வரும், தம்பியர்களாகிய நந்தட்டனும் நபுலவிபுலரும் கோள்மீன்கள் போலவும், ஏனைய தோழர்கள் விண்மீன்கள் போலவும் சந்திரனைப் போல இருந்த சீவகனைச் சூழ்ந்திருந்தனர் என்பது கருத்து. (சிந். 382 நச். உரை)]

6. மறுபொருள்உவமை என்பது முன்னர் வைத்த பொருளுக்கு நிகராவதொரு பிறிது பொருளைப் பின்னரும் அதன்கண் வைப்பது.

**மாண்குலாம் மாறா! நின் வண்தமிழ்போல் மற்றொருநூல்**
**காண்கலேன்; ஆங்கதுபோல் காண்கலேன், - மீண்டும்**
**புதல்வற்கு அருள்புரிந்து பொற்றூணில் தோன்றும்**
**முதல்வற்கு இணையாம் முதல். (173)**

இது மறுபொருள்உவமை. திணை - பாடாண். துறை - பனுவல்வாழ்த்தொடு கடவுள்வாழ்த்துமாம்.

[மறுபொருள்உவமை - எடுத்துக்காட்டுவமை. தனித்தனிக் கூறப்பட்ட இரண்டு ஒப்பான செய்திகள் இடையே உவமஉருபு அமையாமல் ஒவ்வொன்றும் மற்றதற்கு உவமமாம்படி அமைத்தல்.

வண்தமிழ்நூல் போல் மற்றொருநூல் காண்கலேன், ஆங்கதுபோல் முதல்வற்கு இணையாம் முதல் காண்கலேன் என்றும், முதல்வற்கு இணையாம் முதல் காண்கலேன் ஆங்கதுபோல் மாறன் வண்தமிழ்போல் மற்றொருநூல் காண்கலேன் என்றும் பொருள்தந்து, வண்தமிழ்நூல், முதல் என்ற இரண்டும் உவமமாகவும் உவமேயமாகவும் வருதற்குரிய வாய்ப்பு அமைந்துள்ளது.

மாண்புமிக்க மாறனே! உன் வளமான திருவாய்மொழியைப் போலப் பிறிதொரு நூலினைக் காண இயலாதேன். அதுபோலவே, தூணில் தோன்றிப் பிரகலாதனுக்கு அருள்செய்த நரசிம்மமூர்த்தியைப் போன்ற பரம்பொருள் வேறொன்றனையும் காண இயலாதேன் என்றவாறு.

'ஓதிய பொருள்தனக்கு ஒப்பதொரு பொருள்பின், நீதியின் நிறீஇயது மறுபொருளுவமை'. மறுபொருள்உவமைக்கு உவமச்சொல் எதுவும் இடையில் வாராமல், தனித்தனியே ஒன்றற்கு ஒன்று ஒப்பான இருசெய்திகளைப் புணர்ப்பதே சிறந்த எடுத்துக்காட்டாகும்.

அகர முதல எழுத்தெல்லாம்; ஆதி
பகவன் முதற்றே உலகு. (குறள். 1)
தொட்டனைத்து ஊறும் மணற்கேணி; மாந்தர்க்குக்
கற்றனைத்து ஊறும் அறிவு. (குறள். 396)

முதலிய எடுத்துக்காட்டுக்களை நோக்குக. தண்டியலங்கார மறுபொருள்உவமை எடுத்துக்காட்டுப்பாடலை,

அன்னைபோல் எவ்வுயிரும் தாங்கும் அநபாயா!
நின்னை யார் ஒப்பார் நிலவேந்தர்
வாரி புடைசூழ்ந்த வையகத்துக்கு இல்லையால்
சூரியனே போலும் சுடர். (தண்டி. 32)

எனச் சவலைவெண்பாவாகக் கொள்க.]

7. விபரீதஉவமை என்பது முன்பின் உவமையாக வந்ததனைப் பொருளாக்கிப் பொருளை உவமையாக்குதல்.

**மென்தோள் எனத்திரண்ட வேய்இனங்கள்; வெம்முலைகள்**
**அன்றோ எனக்கோங்கு அரும்புஉறா - நின்றனவால்;**
**வண்தமிழ் மாறன்துடரி வண்பொழிலும் இன்றுஎனக்குஅவ்**
**ஒண்தொடியாய்த் தோற்றம் உறும். (174)***

இது விபரீதஉவமை. என்னை?

'பொருளே உவமம் செய்தனர் மொழியினும்
மருள்அறு சிறப்பின்அஃது உவமம் ஆகும்.' (தொ. பொ. 284)

என்றாராகலின். அன்றோ என்பது அல்லவோ என எதிர்மறையாகி ஆம் என்றாயிற்று.

பகுதி - பாங்கற்கூட்டம். துறை - பொழில் கண்டு மகிழ்தல்.

['ஊறில் உவமேயம் உவமையாய் உலகியல் வேறுபடமாட்டியது விபரீதஉவமை'. வெம்முலைகள் அன்றோ - பன்மை ஒருமை மயக்கம். அம்மயக்கம்தீர அன்றோ என்ற ஒருமைக்கு அல்லவோ என்று பொருள்செய்யப்பட்டது. உவமேயத்தை உவமானமாகக் கூறினாலும் அதுவும் உவமமே என்பது தொல்காப்பியனார் கருத்து. (தொ. பொ. 204).

''வளவிய தமிழில் அருளிச்செயல்களை இயற்றிய மாறனுடைய துடரிமலையில் உள்ள சோலையில் என் தலைவியின் தோள்களைப் போன்ற மூங்கில்களும், அவள்-

தனங்களைப் போன்ற கோங்கரும்புகளும் காணப்படுவதால், நான் தலைவியைச் சந்திக்கும் சோலையும் எனக்கு அத்தலைவியாகவே காட்சி அளிக்கிறது'' என்று தலைவன் தலைவியைச் சந்திப்பதற்குரிய பொழிலைக் கண்டு அதனை அவளாகவே கருதி மகிழ்கிறான்.]

8. மருட்கைஉவமை என்பது உவமை கூறுவான் மருட்கை வயத்தனாகி ஒரு பொருட்குக் கூடாத பண்பினைக் கூடுவதாகக் கொண்டு அதனை ஒன்றிற்கு உவமையாக்கி உரைப்பது.

**தாகம் பெற நுகர் தீந்தண்மருந்து கைத்துஅழலின்**
**வேகம் பயின்ற விதிபோலும், - மோகம்**
**படையாத மாறன் பனிவரைமேல் என்நோய்**
**துடையாது நீஉரைக்கும் சொல். (175)**

இது மருட்கைஉவமை. தெண்டியாசிரியர் கூடாஉவமை என்பதும் இது.

தீந்தண்மருந்து - இனிய குளிர்ந்த அமுது. கைத்து அழலின் வேகம் பயிலுதல் - கசந்து தழல்போலச் சுடும் கோபம் இடைவிடாமை.

பகுதி - பாங்கற்கூட்டம்; துறை - பாங்கனை நொந்து கூறல்.

[மருட்கைஉவமையாவது 'கூடாததனைக் கூடுவதாக்கிக் கோடாது உவமைசெய் கூடா உவமையாம்'. "தாகம் நீங்குவதற்காகப் பருகப்படும் இனிய குளிர்ந்த அமிழ்தம், கசந்து தழல்போல வெப்பமுறுத்தும் செயலை, மயர்வற மதிநலம் பெற்ற மாறனுடைய குளிர்ந்த துடரிமலையில் என் உள்ளநோயை உணராமல் என் உயிர்த்தோழனாகிய நீ இவ்வாறு கூறுவது, ஒத்திருக்கிறது'' என்று தலைவன் பாங்கனை நொந்து உரைக்கும் இப்பாடலில், அமுதத்துக்கு இல்லாத கசப்பையும் வெப்பத்தையும் அதன்மீது ஏற்றி அதனை உவமமாகக் கூறுவது மருட்கைஉவமை என்னும் கூடாஉவமையாம்.]

9. தலைதடுமாற்றஉவமை என்பது மேல்தொட்டு முதலே வந்த உவமப்பொருள் இடையினும், ஈற்றில் வந்த உவமேயப்பொருள் முதலிலும், இடையில் நின்ற உவமஉருபு இறுதியில் தொக்கதும் விரிந்ததுமாகப் புணர்ப்பது.

**மைஅமர்உண்கண் காவி, வாய்பவளம், தோள்இணைவேய்**
**ஐயஇடை நுண்ணூல், அகல்அல்குல் - பைஅரவம்,**
**கஞ்சத் திருமாது காதலிக்கும் மார்பகத்தான்**
**தஞ்சைத் திருமான்தனக்கு. (176)**

இது தலைதடுமாற்றஉவமை. இவை உவமஉருபு இறுதியில் தொக்கவாறு.

'குவவின கொங்கை குரும்பை, குழல் கொன்றை' (கோவை 108) என்பதும் இது.

மைஅமர்உண்கண் - கருமை பொருந்திய மையுண்ட கண். ஐயஇடை நுண்ணூல் - உண்டு இல்லை என்ற சந்தேகம் உற்ற இடை நுண்ணிய நூல் போலும் என்றவாறு. ஐய என்பதற்கு ஐயனே என அண்மைவிளியாய், உவப்பின்கண்ணே தான் மயங்கியதாக நண்பனை விளித்துக் கூறினான் எனினும் ஆம்.

பகுதி - பாங்கற்கூட்டம். துறை - இயல்பு இடம் கூறல்.

[ஐயனே! தாமரைவாழ் திருமகள் விரும்பும் மார்பினனாகிய எம்பெருமான் உகந்தருளியிருக்கும் தஞ்சைத் திருத்தலத்திலுள்ள அழகிய மான்போன்ற தலைவிக்குக் காவிபோலும் கண், பவளம்போலும் வாய், வேய்போலும் தோளிணை, நூல்போலும் இடை, பைஅரவம் போலும் அல்குல் உள என்று கூறவேண்டியவை, உவமேயமாகிய கண், வாய், தோள், இடை, அல்குல் என்பன முன்னரும் உவமானமாகிய காவி, பவளம், வேய், நூல், அரவம் என்பன பின்னரும் அமைக்கப்பட உவமஉருபாகிய போலும் என்பது மறைந்து நிற்க இப்பாடலில் புணர்த்தமை தலைதடுமாற்ற உவமையாம்.

திருக்கோவையார் 108-ஆம் பாடலில், 'குரும்பை போலும் குவவின கொங்கை, கொன்றை போலும் குழல்' என்பன, உவமேயம் முன்னரும் உவமம் பின்னருமாக உவமஉருபு தொக, 'குவவின கொங்கை குரும்பை, குழல் கொன்றை' என வந்திருப்பதும் தலைதடுமாற்ற உவமையாம்.
ஐயனே என்று தலைவன் பாங்கனை அழைத்து அவனிடம் தலைவியின் இருப்பிடத்தையும் அவள்இயலையும் பற்றிக் கூறினான் என்றவாறு.]

10. விகாரஉவமை என்பது உவமையாகிய தன்மைப்பொருள்களை விகாரம் பண்ணியனவாக உரைப்பது.

**தெள்அமிர்தத்து உள்ளாய தீஞ்சுவையை மெய்வேதத்து**
**உள்ள உணர்வை உணர்வினால் - அள்ளி**
**எடுத்துஇசைத்தது ஒன்றுஎனலாம், இன்பொருளான் மாறன்**
**தொடுத்துஇசைத்த உத்தமப்பாச் சொல்.** (177)

இது விகாரஉவமை. 'உணர்வை உணர்வினால் அள்ளி' என்பது உபநிடதச் சொல்லுள் இருந்த ஞானத்தைத் தனது உண்மைஞானத்தால் சொல்லை நீக்கித் திரட்டிஎடுத்து என்றவாறு.
'இரும்பை இரும்பினால் அறுத்து' என்பது போலக் கொள்க. 'சொல்' எனவே, சொல்லும் அதன் உட்பொருளும் ஆயிற்று. சொல்லும் அதன் உட்பொருளும் அமிர்தினுள்ள சுவையையும் உபநிடதச்சொல்லிலுள்ள உணர்வையும் தனது பரமஞானத்தால் அள்ளிஎடுத்துச் சொல்லும் பொருளுமாகத் தொடுத்து இசைத்தது ஒன்று எனலாம் என்க.
திணை - பாடாண். துறை - பனுவல் வாழ்த்து.
['கூறுபடும் உவமையின் கொள்கை பிறிதாக, வேறுபடுத்து இசைப்பது விகார உவமையாம்.' மாறன் தொகுத்துப் பாடிய திருவாய்மொழியின் சொல்லும் அதன் உட்பொருளும் அமிர்தில் உள்ள சுவையையும் உபநிடதச்சொல்லில் உள்ள உணர்வையும் தமிழ்ச்சொல்லும் பரமஞானப் பொருளுமாகத் தொடுத்து அமைத்தமை ஒக்கும் - என்ற கருத்தமைந்த இப்பாடலில், அமிர்திலுள்ள சுவை, உபநிடதத்து உணர்வு என்ற இரண்டனையும் தனித்தனியே பிரித்து எடுத்துக் கலந்த கலவையை உவமமாகக் கூறுதல், உவமப்பொருள்களை அப்படியே கொள்ளாமல் அவற்றின் உட்கூறுகளைப் பிரித்து வேறுபடுத்தி அவற்றை உவமமாகக் கோடலின், விகாரஉவமையாகும்.]

11. தடுமாறுஉவமை என்பது ஒருபொருள் ஒருகால் உவமமுமாய் ஒருகால் பொருளுமாகி ஒரு தொடர்ச்சிக்கண்ணே தடுமாறி வருவது.

**மெய்வேதம் போன்றது நின் மெய்த்தமிழ்; நின் மெய்த்தமிழ்போல்**
**மெய்வேதமும் காட்சி மேயதால் - வையகம்எண்**
**நாவலவர் காரிதரு நாவீறா! நின்நிகராம்**
**பாவலர்இங்கு ஆரோ? பகர்.** (178)

இது தடுமாறுஉவமை. என்னை?

'தடுமாறு உவமம் கடிவரை இன்றே' (தொ. பொ. 310)

என்றார் ஆகலின். தெண்டியாசிரியர் இதரவிதரம் என்பதும் இது.
திணை - பாடாண். துறை - பனுவல் வாழ்த்து.
['பொருள் உவமம் ஆகியும் உவமம் பொருள் ஆகியும், ஒரு தொடரிடை வரும் இதரவிதரம்' என்னும் தடுமாறுவமை. இப்பாடலில், திருவாய்மொழி வேதம் போன்றது எனவும் வேதம் திருவாய்மொழி போன்றது எனவும் திருவாய்மொழியும் வேதமும் ஒருகால் உவமானமாகவும், ஒருகால் உவமேயமாகவும் ஒருபாடலிலேயே வந்துள்ளமை தடுமாறுஉவமையாகும்.]

12. சமுச்சய உவமை என்பது இதனானே அன்றி இதனை ஒப்பது அதனானும் என்பது.

**வண்ணத்தால் அன்றி வடிவால் அளவினால்**
**எண்ணில் கமலமுகை ஏய்க்குமே, - கண்ணன்**
**வழியார் துணைமாறன் மால்வரையாய்! கன்னல்**
**மொழியார் துணைமா முலை. (179)**

இது சமுச்சய உவமை. கண்ணன் வழியார் - கண்ணனே பரதத்துவம் என நிற்கும் மார்க்கத்தினை உடையார். துணை என்றது அவர்கள் ஆன்மாவிற்கு உறுதித்துணை என்றவாறு.

"மாறன் மால்வரையில் உள்ள தலைவனே! கன்னலினது பாகுபோலும் மொழியை உடையார் என்று உன்னால் சொல்லப்பட்டவர் உபயமுலை செம்மை நிறத்தால் ஒப்பன அன்றி வடிவினாலும் அளவினாலும் உள்ளத்தால் உவமை குறிக்கின்ற செந்தாமரைமுகையை நீ சொன்னபடியே ஒக்கும்" என்றவாறு.

குறிவழிச் சென்ற பாங்கன் தலைவிதனமும் காண்பனோ எனின், காண்பது உண்டு என்பதற்குச் செய்யுள் 'அரன் அம்பலத்தின், இயலுளவே இணைச்-செப்பு, வெற்பா! நினது ஈர்ங்கொடிமேல்' (கோவையார் 35) என்றதனால் அறிக.

'மால்வரையாய்' என்றதனால், நிலம் ஒன்று என்பதாயிற்று.

பகுதி - பாங்கற்கூட்டம். துறை - செவ்விசெப்பல்.

['இதனான் அன்றி இதனை இஃது ஒப்பது, அதனானும்' என்று கூறுவது சமுச்சய உவமை. சமுச்சயம் - எச்சஉம்மை. தலைவியின் முலைகள் நிறத்தால் மட்டும் அல்லாமல் வடிவினாலும் அளவினாலும் தாமரைமுகையை ஒக்கும் என்று கூறுவது சமுச்சய உவமை.

"தலைவனே! உன்னுடைய குளிர்ந்த கொடிபோல்வாளாகிய தலைவியினிடத்து இணையாகிய சிமிழ்போன்ற தனங்கள் சிவபிரானுடைய பொன்னம்பலத்தை ஒப்ப ஒளிவிடுவன" (திருக்கோவை. 35) எனப் பாங்கன் தலைவியின் நகில்களைப் பற்றித் தலைவனிடம் கூறுவதற்கு மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளது.]

13. இன்சொல்உவமை என்பது பொருளினும் உவமைக்கு ஓர்மிகுதி தோன்றக் கூறி உவமேயத்தினும் மிகுதியுளவேனும் அஃது ஒப்பதன்றிச் சிறந்தது அன்று என்பது.

**ஒன்றாய நின்முகத்தது ஒண்தமிழ்வேதம்; குரவன்**
**நன்றுஆயும் நான்முகத்தது அவ்வேதம் - என்றாலும்**
**வண்தமிழ் மாறா! வண்தமிழ்மறைக்கு ஒப்புஅன்றி மறைக்கு**
**உண்டுஎனலாமோ, வேறு உயர்வு? (180)**

இஃது இன்சொல்உவமை. இதனுள் 'ஒப்பதுஅன்றி' என்பது 'ஒப்புஅன்றி' எனச் செய்யுள் விகாரத்தால் தொக்கது.

திணை - பாடாண்; துறை - பனுவல்வாழ்த்து.

['ஆற்ற உவமை ஆற்றினும் பொருளின், ஏற்றம் இன்று என்பது இன்சொல் உவமை'. வேதம் பிரமனுடைய நான்குமுகத்தானும் ஓதப்படுகிறது என்று உவமமாகிய வேதத்-திற்குச் சிறப்புக்கூறி, அதனைச் சடகோபனுடைய ஒரேமுகத்திலிருந்து வெளிப்பட்ட திருவாய்மொழியோடு ஒப்பிட்டு, நான்குமுகத்தால் ஓதப்படினும் வேதம் திருவாய்-மொழிக்கு ஒப்பாகுமேயன்றி அதனைச் சிறப்பால் விஞ்சுவது அன்று என்று கூறுவது இன்சொல்உவமை.]

14. நியமஉவமை என்பது இன்னதற்கு இன்னதே உவமை என்று தேற்றேகாரம் பெறத் துணிந்து சொல்வது.

**வாய்மைமறையே நினது வாய்ந்த தமிழ்மறையின்**
**வாய்மைதனக்கு இணையாம், வாழ்த்துங்கால்; - தாய்முலைப்பால்**
**உண்ணாத மெய்ஞ்ஞானம் ஓங்கிய மாறா! கமலக்**
**கண்ணானே நின்இணையாம் காண்.** (181)

இது நியமஉவமை. வாய்மைமறை - மெய்வேதம்.
திணை - வாகை. துறை - தாபத வாகை.

["தாய்ப்பாலைக்கூட உண்ணாத மாறனே! உனக்குச் செந்தாமரைக் கண்ணனாகிய எம்பெருமானே ஒப்பாவான்; வடமொழி வேதமே உன் தமிழ்மறைக்கு ஒப்பாகும்" என்ற கருத்து அமைந்த இப்பாடலில், 'அறிவுறின் அதனுக்கு இதுவே ஒப்புஎன, நெறியுறப் புணர்க்கும் நியமஉவமை' வந்தவாறு.]

**பைம்பொன்குன்றே பணைஇளவனமுலை**
**அம்புத்துணையே அரிமதர்உண்கண்**
**குனிசிலைஇரண்டே கோடுநன்புருவம்**
**பனிமாமதியே பழிதீர்நன்முகம்**
**கொடியேதண்இடை கொண்மூவேகுழல்**
**ஆடுஅரவின்படம் ஆமேகடிதடம்**
**காந்தளின்துணைமலர்க் கவினேகையும்**
**பூந்தளிரன்றே புடைபெயர்மெல்லடி**
**மாதே,**
**படர்புகழ் மாறன் பராங்குசன்**
**துடரிமால் வரைவளர் தோகைய தியலே.** (182)

இதுவும் அது. பா - பொதுச்சீர் பதினாறும் வந்து நேரிசைஆசிரியச்சுரிதகத்தால் இற்ற குறளடி வஞ்சிப்பா. பணைஇளவனமுலை - பெருத்த இளைய அழகிய முலை. அரிமதர் உண்கண் - செவ்வரிபரந்து கண்டாருக்கு விருப்பத்தைக் கொடுக்கும் மையுண்டகண்.
பகுதி - சேட்படை. துறை - அவயவம் கூறல்.

[நாலசைச்சீர்கள் பதினாறு:
நேர்நேர்நேர்நேர் - தேமாந்தண்பூ - பைம் பொன் குன் றே
நிரைநேர்நேர்நேர் - புளிமாந்தண்பூ - கவி னே கை யும்
நிரைநிரைநேர்நேர் - கருவிளந்தண்பூ - அரி மத ருண் கண்
நேர்நிரைநேர்நேர் - கூவிளந்தண்பூ - பூந் தளி ரன் றே
நேர்நேர்நேர்நிரை - தேமாந்தண்ணிழல் - கொண் மூ வே குழல்
நிரைநேர்நேர்நிரை - புளிமாந்தண்ணிழல் - பழி தீர் நன் முகம்
நிரைநிரைநேர்நிரை - கருவிளந்தண்ணிழல் - புடை பெயர் மெல் லடி
நேர்நிரைநேர்நிரை - கூவிளந்தண்ணிழல் - ஆ டர வின் படம்
நேர்நேர்நிரைநேர் - தேமாநறும்பூ - அம் புத் துணை யே
நிரைநேர்நிரைநேர் - புளிமாநறும்பூ - பனி மா மதி யே
நிரைநிரைநிரைநேர் - கருவிளநறும்பூ - குனி சிலை இரண் டே
நேர்நிரைநிரைநேர் - கூவிளநறும்பூ - கோ டுநன் புரு வம்
நேர்நேர்நிரைநிரை - தேமாநறுநிழல் - ஆ மே கடி தடம்
நிரைநேர்நிரைநிரை - புளிமாநறுநிழல் - கொடி யே தள ரிடை
நிரைநிரைநிரைநிரை - கருவிளநறுநிழல் - பணை இள வன முலை
நேர்நிரைநிரைநிரை - கூவிளநறுநிழல் - காந் தளின் துணை மலர்
இப்பாடலில் நாலசைச்சீர்கள் பதினாறும் உள்ளன.

"மாதே! மேருவைப் போன்ற முலைகள், அம்புகள் போன்ற கண்கள், வளைந்த வில் போன்ற புருவங்கள், மதி போன்ற முகம், கொடி போன்ற இடை, மேகம் போன்ற குழல், பாம்பின் படம் போன்ற கடிதடம், காந்தள்மலர் போன்ற கைகள், பூந்தளிர் போன்ற மெல்லடிகள் இவற்றை உடையவள் ஒருத்தி மாறனுடைய துடரிமலையிலே என்தலைவியைத் தவிர வேறு எவரும் இல்லை" என்று தலைவன் தோழியிடம் தலைவியின் அவயவங்களை வருணித்துக் கூறியவாறு.]

15. அநியமஉவமை என்பது நியமித்த உவமையை விலக்கிப் பிறிதும் ஓர் உவமை புணர்ப்பது.

**தேன்சுவைக்கொண்டு ஓங்குமகிழ்ச் செல்வா! நின் செந்தமிழின்**
**வான்சுவைக்கு வான்சுவைகொள் வான்கனியே - நான்பகர்தற்கு**
**ஒப்பாகக் கண்டது; மற்று உள்ளின் சுவைதெவிட்டாது**
**அப்பான்மைத்தானதும் ஒப்பாம்.** (183)

(இ-ள்) வண்டுகள் தேனை உண்ணும் பரிமள வகுளமாலிகையை உடைய செல்வனே! நினது திருவாய்மொழியில் உண்டான சொல்லும் பொருளும் கேட்ட செவிக்கும் ஓதின நாவிற்கும் உற்ற உணர்விற்கும் இனிமைதரும் பெரிய இனிமைக்குப் பரமபதத்துள்ளார் மனோவாக்குக்காயங்களால் இனிமை கொள்ளும் பரமபதநாதனாகிய அக்காரக்கனியே நான் சொல்லுதற்கு ஒப்பாகக் கண்டது; அஃதன்றி வேறு உவமை குறிப்பேனாகின், முப்பொறிகளும் சுவைதெவிட்டாத திருவாய்மொழியே போலப் பண்ணும் பாடலுமாய் நடைபெறும் சுருதியும் அதற்கு ஒப்பாம் என்றவாறு.

அப்பான்மைத்தானதும் என்றது சுருதியை. துறை - பனுவல் வாழ்த்து.

['இதுவே அன்றி இதனுக்கு இதுபோன்று, அதுவும் உவமமாம் என்பது அநியம-உவமை'. திருவாய்மொழிக்குப் பரமபதநாதனே ஒப்பாவான்; அவனேயன்றி வேதமும் திருவாய்மொழிக்கு ஒப்பாகும் என, உறுதியாக ஒன்றனையே உவமானமாகக் கொள்ளாமல் பிறிது ஒன்றனையும் உவமானமாகக் கூறியது அநியமஉவமையாம்.]

16. புகழ்உவமை என்பது உவமையைப் புகழ்ந்து உவமிப்பது.

**விண்ணோர் உயிர்தளிர்ப்பான் வேலைவாய் அன்றுஉதித்த**
**தண்ஆர் அமிர்தம்தனை நிகர்க்கும், - பண்ணால்**
**திருந்து மறையைத் தமிழ்செய் தேவேசன் வெற்பின்**
**முருந்து நகையார் மொழி.** (184)

இது புகழ்உவமை. பண்ணால் திருந்து மறை - கீத நடைத்தாய்க் குற்றமற்ற மறை. அது சாமவேதம். மறையைத் தமிழ்செய் தேவேசன் எனவே, வேதம் தமிழ்செய்த பெருமான் என்னும் நாவீறு உடைய பிரான் என்பதாயிற்று. பகுதி - இயற்கைப்புணர்ச்சி. துறை - புணர்ச்சி இறுதிக்கண் தலைமகன் காதல் சிறப்பு உரைத்தல்.

['நினைந்து உவமிக்கும் நிலையில் மற்றுஅதனைப் புனைந்து உவமித்தல் புகழ்-உவமையாகும்.' சாமவேதத்தைத் திருவாய்மொழியாக அருளிச்செய்த மாறனுடைய துடரிமலையில், மயில்இறகின் அடி போன்ற வெள்ளியபற்களை உடைய தலைவியின் மொழிகள் வாளா அமுதினை ஒக்கும் என்று கூறாது, உவமமாகிய அமுதினைத் தேவர்களுடைய உயிர்கள் செழிக்குமாறு பாற்கடலில் ஒருகாலத்தில் தோன்றின அமுதம் என்று புகழ்ந்து கூறியதால், இது புகழுவமையாம்.]

17. நிந்தைஉவமை என்பது உவமையை இகழ்ந்து உவமிப்பது.

**உறைகழித்துக் கைமிசைக்கொண்டு ஒண்மறவர் ஓச்சின்**
**மிறைபுரிவேல் ஒப்புஎனினும் மேலாம், - நறையூர்வாழ்**

**தேந்துளப மால்வரைமேல் தானே தெறும்செயலால்**
**ஏந்துஇழையாள் வன்கண்இணை.** (185)

இது நிந்தைஉவமை. ஒண்மறவர் - கொலைமேல் கொண்டு ஒழுகும் ஒள்ளிமை-உடைய மறவர். ஓச்சில் - செலவிடுக்கில். மிறைபுரிவேல் - கொலையை விரும்பும் வேல். எடுத்து எறிதலை விரும்புவார் தொழிலை வேலின்மேல் ஏற்றியது. காரணகாரிய மயக்கம். மறவர் ஓச்சுகில் கொல்வது அல்லது. வேல் தலைவியின் கொடிய கண்களைப் போல் தானே தெறும் செயல் இன்று என்பதனால் நிந்தைஉவமையாயிற்று.

பகுதி - பாங்கற்கூட்டம். துறை - உற்றது உரைத்தல்.

['சிந்தித்து ஒருவன் சேர்ப்பது ஓர்உவமையை நிந்தித்து உரைப்பது நிந்தை உவமையாகும்.' உறையிலிருந்து நீக்கப்பட்டு வீரர்களால் கைகளில் கொள்ளப்பட்டுச் செலுத்தப்பட்டால்தான் கொலைத்தொழிலைச் செய்யும் வேல், நறையூர் எம்பெரு-மானுடைய மலையில் பிறர்உதவியின்றித் தாமே கொலைசெய்யும் ஆற்றலைஉடைய தலைவியின் கண்களுக்கு ஒப்பாகும் எனினும், கண்கள் வேல்களை விட மேம்-பட்டன - என்று தலைவன் தலைவியால் தனக்கு உற்ற துயரைப் பாங்கனுக்கு உரைத்ததாக அமைந்த இப்பாடலில், உவமானத்தின் செயலைக் குறைத்துக் கூறியமை நிந்தைஉவமையாகும். உவமேயமாகிய கண்கள் தாமே கொலையைச் செய்யவும் உவமானமாகிய வேல்கள் மறவருடைய முயற்சியின்றித் தாமே கொலைசெய்யும் ஆற்றலில என்று இகழ்ந்து கூறுவது நிந்தைஉவமையாகும்.]

18. மோகஉவமை என்பது ஒரு பொருளின்மேல் எழுந்த வேட்கையால் அதற்கு உவமையாகக் குறிக்கப்பட்ட அதன்மேலும் வேட்கை நிகழ்ந்ததாகக் கூறுதல்.

**அம்பவளம் ஒன்றுஇருப்ப, அன்புறும், ஆதொண்டைஎனச்**
**செம்பதுமத் தேனே! நின் செவ்வாயை, - விம்பமும்நேர்**
**ஆதற்கு அதைவிரும்பும் ஆழியான் கோழியூர்க்**
**காதல் சிறப்புடையேன் கண்.** (186)

இது மோகஉவமை.

(இ-ள்) ஆழியான் கோழியூர்ச் செம்பதுமத்தினிடத்து விளைந்த தேன்போலும் மொழியை உடையாய்! நினது சிவந்த வாயை அதற்கு ஒத்த அழகிய பவளம் உளதாய் இருப்பவும், ஆதொண்டையை ஒப்பு என நோக்கி அன்புறாநிற்கும் அஃதன்றி, அவ்வாதொண்டை செய்ய வாயின் நிறத்தோடும் வடிவிற்கும் ஒப்பதால், அவ்வாயினைக் காதலிக்கும் சிறப்புடையேனோடும் கூடிய கண்கள் அவ்வாதொண்டையையும் விரும்பாநின்ற என்றவாறு.

ஆதற்கு என்பது மூன்றாவது நான்காவதாயிற்று. அதையும் என்னும் உம்மை விகாரத்தால் தொக்கது. விம்பம் - வடிவம்.

பகுதி - இடந்தலை. துறை - காதல்சிறப்பு உரைத்தல்.

['அரும்பொருள் அதனை அதுபோலும் என்ன, விரும்பும் என்உள்ளம் எனும் வேட்கைஉவமையே' மோகஉவமை எனப்படும். தலைவியின் செவ்வாய் இதழை நிறத்தாலும் வடிவத்தாலும் ஒத்திருக்கும் ஆதொண்டைக்கனியையும் தன் உள்ளம் விரும்புவதாகத் தலைவன் கூறுவது மோகஉவமையாகும்.

விம்பமும் நேர் ஆதற்கு - வடிவமும் ஒப்பாக இருப்பதால் என நான்காம்-வேற்றுமையை மூன்றாம் வேற்றுமையாகப் பொருள்கொள்ளவேண்டும்.

தலைவனுக்குத் தலைவியின் உறுப்புக்களிடத்து உள்ள வேட்கை அவ்வுறுப்புக்களுக்கு ஒப்பான பொருள்கள்மேலும் செல்லுவதாகக் கூறுவது வேட்கைஉவமை எனப்படும் மோகஉவமையாகும்.]

19. அவயவஉவமை என்பது அவயவத்தை உவமித்து அவயவியை வாளாதே கூறுவது.

**மாதர் இலவுஇதழ்போல் மாண்பிற்று மாதவனால்**
**வானோர் அருந்தும் மருந்து.** (187)

இதனுள் மாதர் என்பது அவயவி. இலவுஇதழ் என்பது அவயவம்.
பகுதி - இடந்தலைப்பாடு. துறை - நலம்புனைந்து உரைத்தல். புணர்ச்சி மகிழ்தலுமாம்.
[எம்பெருமான் அருளினாலே தேவர்கள் உண்ட அமுதம் தலைவியின் இலவம்பூப்போன்ற இதழ் தரும் அமுதம் போன்ற மாண்பினை உடையது என்று தலைவன் தலைவியின் அதரபானத்தைக் கற்பனை நயத்தோடு உரைத்தவாறு. இலவம்பூப்போன்ற இதழ் என்பது அவயவஉவமை.]

**வல்லிக் கொடிமருங்குல்; மாதினுக்கு மேருமுலை;**
**அல்லிக் கமலம் அனையஅடி; - கல்அதர்தீ;**
**சொல்லும்பொழுது அரங்கர் தொன்னகர் சேய்த்து; ஆயிழாய்!**
**செல்லும்படிக்கு எளிதோ? செப்பு.** (188)

இதுவும் அவயவஉவமை.
(இ-ள்) வல்லிக்கொடி போலும் மருங்குல்; வடமேருவைப் போலும் முலை; அல்லியோடும் (அகஇதழ்) கூடிய தாமரைபோலும் தாள்கள்; பரலோடும் கூடிய அதரும் அழல்போலச் சுடும். சொல்லுங்காலத்தில் அரங்கர்நகரம் என்றால் நெடுந்தூரம் ஆகையால், ஆராய்ந்து அணிந்த பூணினை உடையாய்! நின்மாதினுக்கு என்னோடும் வரும்படி எளியது ஒன்றன்று என்றவாறு.
பகுதி - உடன்போக்கு. துறை - தலைவன் பாலைநிலத்தில் தலைவி நடத்தல் அருமையைத் தோழியிடம் உரைத்தல்.
[மாது - அவயவி. மருங்குல், முலை, அடி என்பன அவயவம். இப்பாடலில் முறையே வல்லிக்கொடி போலும் மருங்குல், மேருவைப் போலும் முலை, அகஇதழ்களை உடைய தாமரைப்பூக்களைப் போலும் அடிகள் என அவயவங்களுக்கு மாத்திரம் உவமை கூறப்பட்டமையால் அவயவஉவமையாம்.]
20. அவயவி உவமை என்பது அவயவியை உவமித்து அவயவத்தை வாளாதே கூறுவது.

**பொன்அம் கொடிஅனைய பொற்றொடிதன் தாள்சுவடும்**
**என்அன்புறத் தோன்றும் இங்குஇவைகள்; - அன்னம்**
**கடிக்கமலம் சேர்அரங்கர் கால்நிகராம் காளை**
**அடிச்சுவடும் ஆங்குஅவையே ஆம்.** (189)

இஃது அவயவி உவமை. அரங்கர் கால்நிகராம் காளை - அரங்கர் புதல்வனாம் காமன் போல்வானாம் காளை என்பதாம்.
பகுதி - உடன்போக்கு. துறை - சுவடுகண்டு அறிதல்.
["பொற்கொடி போன்ற என் அன்புக்குரிய மகளுடைய அடிச்சுவடுகள் இவை. அன்னம் தாமரையில் தங்கும் அரங்கத்து எம்பெருமானுடைய மகனாகிய மன்மதனை நிகர்க்கும் தலைவனுடைய அடிச்சுவடுகள் அவை" என்று, செவிலி உடன்போன தலைவன்தலைவியரை நாடிச் சென்றஇடத்து அவர்களுடைய அடிச்சுவடுகளைக் கண்டு அவர்கள் அவ்வழியே போன செய்தியை உறுதிசெய்துகொண்டதாகக் குறிப்பிடும் இப்பாடலில், அவயவிகளாகிய தலைவிக்குப் பொற்கொடியும், தலைவனுக்குக் காமனும் உவமங்களாகக் கூறப்படுதலின் இஃது அவயவி உவமையாம்.]

21. முற்றுஉவமை என்பது அவயவ அவயவிகளை ஒரு செய்யுளகத்து ஒக்க உவமிப்பது.

**பொன்நெடுங்குன்று எனச்செறிந்து புடைபரந்த புளகமுலை**
**மின்எனலாம் நுணுகுஇடைய வேய்புரையும் தடமென்தோள்**
**குளிர்மதிபோல் மிளிர்வதனக் கோமளப்பூங் கொம்புஅன்னாள்**
**தளிர்புரைமெல் அடிச்சுவடும் தளர்ந்தன; வெய்யோன் மன்னோ**
**குடதிசைவான் கதிர்சுருக்கிக் கொடித்தேரினொடு மறைந்தான்;**
**அடல்புனை வேடுவர்குறுகி அற்றம்பார்த்து ஆறுஅலைப்பார்;**
**பொன்புனைபூண் மணிமார்பின் புரவல! இன்று இருவீரும்**
**நன்குலத்துஎம் இல்வைகி நறுந்தேன் செந்தினைஅருந்தி,**
**மரைஅதளில் துயில்வைகி, வைகறைவாய்த் துயில்எழுந்து,**
**விரைகமழ்தார் மகிழ்மாறன் மெய்த்தமிழ்ச்சொல் குருகூரின்**
**முதிர்திரைப்பா லாழியின்வான் முகடுஉரிஞ்சும் உதயகிரி**
**கதிர்வரும்முன் சேர்தல் கடன்.** (190)

இது முற்றுவமை.
மன்னும் ஓவும் அசை. (வெய்யோன் மன்னோ)
பகுதி - உடன்போக்கு. துறை - நெறிவிலக்கல்.
பா - வெண்கலிப்பா. (வெண்டளையும் கலித்தளையும் தட்ட நாற்சீரடிகளான் இயன்று வெண்பாவைப் போல முச்சீரான் இறுவது.)
(இ-ள்) பொன்மேரு ஆகிய மலைகள் என்னும்படி சிக்கென்று மருங்கு அகன்ற புளகமுலையினையும், மின்எனத் தகுவதாம் நுண்ணிய இடையினையும், மூங்கில் போலும் பெரிய மெல்லிய தோளினையும், மதிபோல விளங்கும் முகத்தினையும் உடைத்தாய பூங்கொம்பு அன்னாள் தளிர் போன்ற மெல்லிய அடிஇரண்டும் தளர்ந்தன. ஆதித்தனும் குடதிசைவாய் வானில் கிரணங்களை ஒடுக்கிக் கொடியை உடைய தேரினோடு மறைந்தான். வெற்றியை உடைய வேடுவர்கள் அற்றம் பார்த்து வழி பறிப்பர். இனிப் பொன்னினால் செய்த பூணினை அணியும் மார்பினை உடைய மன்னவனே! இற்றைப் போது நீங்கள் இருவீரும் உத்தமகுலமாகிய எங்கள் இல்லின்கண் வதிந்து, நல்ல தேனினோடும் கூடிய தினைமாவினையும் துய்த்து, மான்தோலில் துயிலமர்ந்து, வைகறையில் துயில்எழுந்து, மணம் கமழாநின்ற வகுளமார்பன் மெய்த்தமிழால் பாராட்டப்-பட்ட சீர்த்தியை உடைய குருகாபுரிமாடத்து, பெருத்த திரையை உடைய திருப்பாற்கடலின்கண் வானினது உயர்ச்சியைத் தைவரும் கொடுமுடியை உடைய உதயகிரியில் கதிரோன் உதிக்கும் முன்னம் எய்துவதே முறைமை என்றவாறு. (இவ்வாறு கூறி, தலைவியுடன் உடன்போக்குச் சென்ற தலைவனை மாலைநேரத்தில் ஊரவர் நெறி விலக்கியவாறு.)
22. ஏகஉவமை என்பது உவமமும் உவமேயமும் திணை பால் முதல் சினை பெயர் வினை என்பன மயங்காது ஒன்றாயிருக்கை.

**முற்ற உணர்த்தும் முதுகாப்பியம் புணர்ப்பான்**
**உற்றவர்தம் கண்போன்று உறங்காவாம், - இல்பிரிந்தால்**
**நல்லியலார் வந்தனைசெய் நாவீறன் மால்வரைமேல்**
**மெல்லியலார் இன்ப விழி.** (191)

என்பது ஏகஉவமம். இதுவும் பூரணஉவமைப்பாற்படும்.

(இ-ள்) நெஞ்சமே! நன்புலவர் அஞ்சலி செய்யும் நாவீறு உடைய பிரான் வண்குருகூரினிடத்து மெல்லிய சாயலைஉடையார் இன்பவிழிகளானவை, இனி நாம் இவரை இல்லின்கண் வைத்துப் பிரிவோமாகில், அறம் முதலிய நாற்பொருளும், மலை கடல் நாடு முதலிய 18 வருணனையும் ஒழிந்தனவும் குறைவின்றி உணர்த்தப்படுவனவாகும் பெருங்காப்பியம் பாடுதற்கு உட்கொண்ட புலவர் கண்களைப் போலத் துயில் ஒழிந்ததோடும் துன்பவிழியாம் என்றவாறு.

இது கற்பினுள் இல்வாழ்க்கை என்னும் பகுதிக்கண் பிரிந்து சேய்நாள் சென்று வந்து கூடிய தலைமகன், அவள்உறுப்புக்களை வேட்கை மிகுதியால் புதுவது புதுவதாகப் பாராட்டத் தலைமகள் 'இஃது ஒன்று உடைத்து' என அஞ்சியவழிப் புணர்ச்சி அந்தியத்தும் துயிலாததைத் துயின்று துயில் ஒழிந்தோன் தன்கண் பிரிதற்குறிப்பு உளதாகக் குறித்த வேறுபாடெனக் குறிப்பின் அறிந்து முன்னிலைப் புறமொழியாகத் தன்நெஞ்சிற்கு அவள் குறிப்பு அறிவுறுத்துவான் போல 'இனி நின்னிற் பிரியேன்' எனப் பிரியாத தன் குறிப்பினைத் தலைமகட்கு அறிவுறுத்தல்.

கலியுள்ளும்,

'மாசுஇல் வண்சேக்கை மணந்த புணர்ச்சியுள்
பாயல்கொண்டு என்தோள் கனவுவார் ஆய்கோல்
தொடிநிரை முன்கையாள் கையாறு கொள்ளாள்
கடிமனை காத்துஓம்ப வல்லுநள் கொல்லோ' (கலி. 24: 6-9)

எனத் தலைமகன் புணர்ச்சிஅந்தியத்துக் கனவின் அரற்றியதனைத் தலைவி துயில் ஒழிந்து இருந்து அவன்குறிப்பு உணர்ந்தனள் என்பதும் உணர்க. அன்றியும் கற்பினுள், குறிப்புஅறிவுறுத்தல் என்னும் அதிகாரத்தின்கண் வள்ளுவரும்,

'கரப்பினும் கைஇகந்து ஒல்லாநின் உண்கண்
உரைக்கல் உறுவதுஒன்று உண்டு' (குறள். 1271)

என்னும் குறட்பாவினுள் தலைவன் தன்பிரியாமைக் குறிப்பினைத் தலைவிக்கு அறிவுறுத்தவாறும் காண்க. இதனுள் தலைவி இஃது ஒன்று உடைத்து என நாடின் மடன் அழிந்ததன்றோ எனின், தலைவன்கண் தலைவி விரும்புதலால் அதுவும் கடன் ஆயிற்று. என்னை?

'தன்வயின் கரத்தலும் அவன்வயின் வேட்டலும்
அன்ன இடங்கள் அல்வழி எல்லா
மடனொடுநிற்றல் கடன்என மொழிப.' (தொ. பொ. 205)

என்னும் பொருளியல் சூத்திரத்தான் உணர்க.

'முதுகாப்பியம் புணர்ப்பான் உற்றவர்தம்கண் போன்று உறங்காவாம்' என்றதனால் இது தோழிகூற்று அன்று; தலைவன்கூற்று என உணர்க. என்னை?

'இவ்விடத்து இம்மொழி இவர்இவர்க்கு உரியஎன்று
அவ்விடத்து அவரவர்க்கு உரைப்பதை முன்னம்' (தொ. பொ. 519)

என்னும் செய்யுளியல் சூத்திரத்தான், பெருங்காப்பிய ஒழுக்கம் அறிவது பெண்தன்மைக்கு உரிமைஅன்மையின் உணர்க. இங்ஙனம் கூறிய இலக்கணங்கள் இறந்தவற்றிற்கும், இனிமேல் வருவனவற்றிற்கும் இலக்கணம் என உணர்க.

[ஐந்துவகையாகக் கூட்டின மாசில்லாத வண்மையை உடைய படுக்கையில் புணர்ந்த புணர்ச்சியிடத்து, என்தோளிலே துயில் கொண்டு கனாக்காண்கின்றவர், 'ஆராய்ந்த கோற்றொழிலை உடைய செறிந்த தொடி அணிந்த முன்கையினை உடையாள் கையாறு

கொள்ளாளாய், தனக்கு வரைவினை உடைய இல்லறத்தையும் காத்துச் செந்தீயையும் பாதுகாக்க வல்லவளோ?' என்று கூறினார். (கலி. 24; 6-8)
பிரிந்து கூடிய தலைமகன் வேட்கை மிகவினால் புதுவது பன்னாளும் பாராட்டத் தலைமகள், 'இஃது ஒன்று உடைத்து' என அஞ்சியவழி, அதனை அவன் குறிப்பான் அறிந்து, 'நீ சொல்லாது மறைத்தாயாயினும், அதற்கு உடன்படாதே நின்னைக் கைகடந்து நின் உண்கண்களே எமக்குச் சொல்லல்உறுவதொரு காரியம் உண்டாய் இராநின்றது; இனி அதனை நீயே சொல்வாயாக' என்று தலைமகன் தலைவியிடம் கூறியது. தலைவன் தன்கண் பிரிதல் குறிப்பு உளதாகக் கருதி வேறுபட்ட தலைமகளது வேறுபாடு குறிப்பான் அறிந்து அவட்குத் தன்பிரியாமைக் குறிப்பு அறிவுறுத்தவாறு. (குறள். 1271)
தலைவன் தலைவியிடத்தே தனக்குப் புறத்தொழுக்கம் இன்று என்று பொய்கூறலும், அங்ஙனம் கரந்து கூறிய தலைவன்கண் தலைவி விரும்புதலும் ஆகிய அவைபோலும் இடங்கள் அல்லாத இடத்தெல்லாம் தலைவி மடமையுளளாகி நிற்றல் கடப்பாடு என்று கூறுவர் புலவர் என்றவாறு. (தொ. பொ. 205)
யாதோர் இடத்தானும் யாதானும் ஒருமொழி தோன்றியக்கால் இம்மொழி சொல்லுதற்கு உரியாரும் கேட்டற்கு உரியாரும் இன்னார் என்று அறியுமாற்றான் அங்ஙனம் அறிதற்கு ஓரிடம் நாட்டி அவ்விடத்துக் கூறுவார்க்கும் கேட்பார்க்கும் ஏற்ற உரை செய்யுட்குப் பொருத்தமாகச் சொல்லுவது முன்னம் என்றவாறு. (தொ. பொ. 519)
இறந்தவற்றிற்கும் - முன்னர்க் கூறப்பட்ட எடுத்துக்காட்டுப் பாடல்களுக்கும் என்றவாறு.]

23. மாலைஉவமை என்பது ஒருபொருட்குப் பல உவமங்கள் வந்தால் அவை ஒன்றோடொன்று இடைவிடாது தொடர்ச்சி உடையனவாகப் புணர்த்துக் கடைக்கண் பொருளை வெளிப்படையாகக் கூறி முடிப்பது.

**பாற்கடலுள் மால்போல், அவன்மார்பின் பைந்தொடிபோல்,**
**கோற்றொடி உட்கொண்ட குணமேபோல், - நூற்கடல்ஆய்ந்து**
**ஆமாறு உணர்ந்தார் அறம்பயின்ற நாஅகலா,**
**பாமாறன் சொன்னதமிழ்ப் பா. (192)**

இது மாலைஉவமை. அறம் - வேதம். உட்கொண்ட குணம் - கருணை.
திணை - பாடாண்; துறை - பனுவல்வாழ்த்து.

[கடல்போன்ற பரந்துபட்ட நூல்களை ஆராய்ந்து அவற்றின் இயல்பினை உணர்ந்த சான்றோர்களுடைய வேதத்தில் பயின்ற, கருணையை மேற்கொண்ட நாவினை, மாறன் அருளிய திருவாய்மொழிப்பாடல்கள், திருப்பாற்கடலில் உள்ள திருமால் போலவும், திருமாலுடைய மார்பினை விடுத்து நீங்காத திருமகள் போலவும், அப்பெருமாட்டியை விடுத்து நீங்காத இரக்கக்குணத்தைப் போலவும் விடுத்து நீங்காவாம். இப்பாடலில், திருமால், திருமகள், திருமகளுடைய இரக்கம் என ஒன்றோடு ஒன்று தொடர்புடையன தொடர்ந்து உவமங்களாக வருதல் மாலைஉவமையாம்.]

**தென்அரங்கன் உந்திச் செழுமலர்போல், அம்மலருள்**
**மன்னும் அயன்போல், அயன்மனத்துள் - நன்மறைபோல்**
**நீங்காது ஒருபொழிற்கண் ஓவியம்போல் நின்றதுஒன்று**
**பாங்காகக் கண்டனன் வெற்பா! (193)**

(இ-ள்) இதுவும் அது. வெற்பனே! திருஅரங்கேசன் உந்தித்தாமரை போலவும், அத்தாமரையுள் வைகும் பிரமனைப் போலவும், பிரமன் மனத்துள் குடிகொண்ட நல்ல சுருதி போலவும், ஒருபொழுதும் நீக்கமின்றி நீ கூறிய பொழிற்கண் ஓவியம் போல நின்றதொரு பெண்உருவத்தைக் காவினது ஒருபக்கமாகக் கண்டனன் என்றவாறு.

ஓவியம் போல் நின்றது என்றான், உயிர் நின்னிடத்தும் உடல் அங்குமாக நின்றது என்பது தோன்ற. 'ஒருபக்கத்தே நின்றது' என்றான், ஆயத்தை நீங்கி நிற்பது தோன்ற.

பகுதி - பாங்கற்கூட்டம். துறை - பாங்கன் கண்டமை கூறல்.

[அரங்கன் கொப்பூழ்த் தாமரைபோல், அத்தாமரையிலுள்ள அயன்போல், அயன் நாவினை நீங்காத வேதம்போல் எனத் தொடர்புடைய உவமங்கள் வந்தமை மாலைஉவமையாகும்.]

அந்தாதிஉவமை என்பது ஒரு செய்யுளகத்துப் பலபொருட்குப் பல உவமம் வந்தால், முதலே உவமம் செய்த உவமேயப் பொருட்பெயரினை ஆகு-பெயராதல் அன்மொழித்தொகைப்புறத்து வந்த பெயராதல் ஆக்கித் துணித்து நிறீஇ, அவ்வுவமேயப் பெயரினை அந்தாதித்து உவமானப் பெயராக்கி உவமஉருபு கொடுத்துப் பின்னர் அதன்மேல் வரும் உவமேயப்பொருளோடு புணர்த்து நிகழ்த்துவது.

**குருமணி குயின்றபொற் குடம்எனத் தகைசால்**
**பருமணி வடம்தோய்ந்து எழுதரு பணைமுலை!**
**முலைஎனப் பொடித்த தாமரைமுகை, முகைநெகிழ்பு**
**ஒழுகுதண் நறவுஎன உறுநர்நன் மார்பத்து**
**இழுகு மான்மதம்அளாய் எழுபுனல் சங்கணித்**
**துறைவளம் கெழீஇய தொன்மைசால் மரபின்**
**ஈங்குஇது; புவனம் யாவையும் தழைத்தற்கு**
**ஓங்கிய இராமாநுசமுனி இருக்கை**
**ஆங்குஅது; தருமம்ஓர் படிவம் உற்றனைய**
**பாங்குஉறு சக்கர பாணிபேர் புனைபதி**
**மழைகிழித்து எழுந்தபொன் மாளிகைச் சூளிகைத்**
**தழைதுகில் கொடித்திரள் தாம வெண்மதிஅகட்டு**
**உறுமறுத் துடைத்துவான் ஒரீஇநுடங்கு ஊங்குஉது**
**முருகுஆர் மொய்மகிழ் மாறன்**
**குருகாபுரி எனக் கூறும்நன் னகரே.** (194)

இஃது அந்தாதி உவமை. இதனுள் பணைமுலை என்பது பணைத்த முலையை உடையாய் என, வினைத்தொகைப்புறத்து வந்த அன்மொழித்தொகைப்-பெயராய் அண்மைவிளி ஏற்றுத் துணித்து நிறீஇயவாறும், முலை என வரு-பெயரினை உவமானப்பெயராக்கி உவமஉருபு கொடுத்துப் பின்னர் அதன்மேல் வரும் தாமரைமுகை என்னும் உவமேயப்பொருளோடும் புணர்த்தலும் காண்க. முகைநெகிழ்பு - முகை நெகிழ்ந்து. ஒழுகு தண்நறவு என - ஒழுகு தண்நறவு போல. உறுநர் - தன்னிடத்திலே பரிசிப்பார். இழுகு மான்மதம் - பூசும் கத்தூரி. அளாய் எழுபுனல் சங்கு அணித்துறை - கலந்து ஓடும் புனலைஉடைய திருச்சங்கணித்துறை. ஈங்குஇது என்றது தமக்கு முன்னான இடத்தை. ஆங்கு-அது என்றது தமக்குச் சேய்த்தான இடத்தை. ஊங்குஉது என்றது இரண்டிற்கும் நடுவான இடத்தை. தாமவெண்மதி - ஒளியை உடைய மதி. ஒழிந்த அகலம் உரையிற்கொள்க.

அஃதேல், 'அடுக்கிய தோற்றம் விடுத்தல் பண்பே' (தொ. பொ. 311) எனத் தொல்காப்பியனாரும் இதனைக் கூறி மறுக்கவும், இங்ஙனம் கூறுமது மாறு-கொளக்கூறல் என்னும் குற்றமாம்பிறஎனின், ஆகாது; என்னை? அஃது

ஒருபொருளோடு ஒருபொருளை உவமித்து அதற்கு உவமஉருபு கொடுத்துப் பிறிது ஒருபொருளை உவமித்தல். அதற்குச் செய்யுள்,

'மதியத்து அன்ன வாள்முகம் போலும்
பொதிஅவிழ் தாமரைப் புதுப்பூம் பொய்கை' என்பது.

மதியத்து அன்ன வாள்முகத்தை ஒக்கும் தாமரை என்றமையின் அவை ஒன்றினோடு ஒன்று பொருந்தா என்பது கருதி மறுத்தார். இஃது அன்னதன்று. என்னை? பருமணிவடம் தோய்ந்து எழுதரு பணைமுலையினை உடையாய் எனத் துணித்துக் கூறினமையான் என்று உணர்க.

'ஈர்ந்து நிலம்தோயும் இரும்பிடித் தடக்கையின்
சேர்ந்து உடன்செறிந்த குறங்கின், குறங்கென
மால்வரை ஒழுகிய வாழை; வாழைப்
பூஎனப் பொலிந்த ஓதி' (சிறுபாண். 19-22)

என்பது போலக் கூறினார் என்க.

பகுதி - உடன்போக்கு; துறை - பதிபரிசு உரைத்தல்.

பா - நேரிசைஆசிரியப்பா.

[இப்பாடலின் முதல் நான்கு அடிகளிலேயே அந்தாதி உவமை வந்துள்ளது. பணைமுலை - முலையென, தாமரைமுகை - முகைநெகிழ்பு என்பனவே அந்தாதித்-தொடை.

''மணிகள் இழைக்கப்பட்ட பொற்குடம்போலப் பருத்த, மணிமாலை அணிந்திருக்கும் மேல்நோக்கி எழுகின்ற பருத்த முலையாய்! முலையைப் போன்ற தாமரைமுகை முகைக்க, அம்முகை மலர்ந்து ஒழுகும் தேன்போலப் பொருநைநதியில் குளிக்கும் மக்கள் மார்பில் பூசப்பட்ட கத்தூரி ஆற்றுநீரோடு கலந்து பாயும் நீரோட்டத்தை உடைய வளஞ்சான்ற பழைய மரபினைஉடைய சங்கணித்துறை இது. உலகம் தழைக்க அவதரித்த இராமாநுசமுனியின் இருப்பிடம் அது. தருமமே ஒரு வடிவு எடுத்தாற்-போலச் சக்கரபாணியின் பெயரைஉடைய பதியாய், வானளாவிய மாளிகையின் உச்சியில் மாலையணியப்பட்ட துணிக்கொடிகள் வெண்மதியின் நடுவிடத்திலிருக்கும் களங்கத்தைத் துடைத்துப் பறக்கும் மாறனுடைய குருகாபுரி என்னும் திருத்தலம் இரண்டின் நடுவான இடமாகும்'' என்று உடன்போக்கில் தலைவன் தலைவியைத் தன்னூருக்கு அழைத்துச்சென்றபோது கூறிய செய்தி இது.

முதலில் உபமேயமாக இருப்பதனை மீண்டும் உவமானமாக அமைத்துக் கூறுதல் கூடாது. (தொ. பொ. 311)

'இழுக்கப்பட்டு நிலத்தே செறியும் கரிய பிடியினது பெருமையுடைய கைபோலத் தாமும் அடியோடே தொடர்புபட்டு ஒரு தொடையுடனே ஒரு தொடை செறிந்திருக்கும் தொடையினை உடையாள். தொடையைப் போல, பெருமையுடைய மலையிலே ஒழுங்குபட வளர்ந்தன வாழைகள். வாழையின் பூ என அழகு பெற்ற பனிச்சை என்ற மயிர்முடி.' (சிறுபாண் 19-22)

'மதியத்தன்ன வாள்முகம் போலும் பொதியவிழ் தாமரை' சந்திரனைப் போன்ற முகம் என முகம் உவமேயம்; முகம் போலும் தாமரை. முகம் - உவமானம். ஒரே பெருந்தொடரில் முகத்தை ஒருகால் உவமேயமாகவும் அடுத்து உவமானமாகவும் அடுக்கிக் கூறுதல் கூடாது என்பது விதி.]

25. பொதுநீங்கு உவமை என்பது உவமையைக் குறிப்பினானாதல் வெளிப்-படையானாதல் கூறி மறுத்துப் பொருள்தன்னையே பொருட்கு உவமையாக்கி உரைப்பது.

**முற்குணத்தான் மாதர் முலைப்பால் அருந்தாத**
**நற்குணத்தால் வேதம் ஒருநான்கினையும் - சிற்குணத்தால**

**ஓதாது உணர்ந்து உணர்த்தும் உத்தமமாறற்கு இணைபார்**
**மீதுஆர் மனனே! விளம்பு. (195)**

இது குறிப்பால் வந்த பொதுநீங்கு உவமை. இதனுள் மனனே! விளம்பு என்பது வழுவமைதி; என்னை? நா ஆகிய பொறியினது கிரியையை அந்தக்கரணத்தின் மேலேற்றி அதனைக் கூறுக என்றதனால். நாவாகிய பொறிக்குச் சொல்கிளத்தலும் சுவைஅறிதலுமாகிய இருதிறத்தனவாம் அவை இரண்டும் அந்தக்கரணங்கள் கூடாதே அதற்கும் கூடா ஆதலால், அதனை அங்ஙனம் கூறப்பட்டது.
திணை - பாடாண். துறை - 'அமரர்கண் முடியும் அறுவகையானும்' என்பதனான் முனிவர்வாழ்த்து.
[பொறிஉணர்வு மனஉணர்வு சேர்ந்த பிறகே செயற்படுமாதலின், பொறியாகிய நாவின் செயலாகிய விளம்புதலை அந்தக்கரணமாகிய மனத்தின் செயலாகக் குறிப்பிட்டார்.
ஒருதலையாக உவமையை மறுத்துப் பொருளையே உவமைசெய்தல் பொதுநீங்கு உவமையாம். "மனமே! முற்பட்ட தூய பண்பினால் தாய்ப்பால் கூட உண்ணாத நற்பண்போடு, வேதம் நான்கினையும் மயர்வு அற்ற மதிநலத்தால் ஓதாமல் உணர்ந்து, உலகத்தாருக்கு உணர்த்திய மாறனுக்கு இணை வேறு யார் உளர் என்று சொல்" என்ற கருத்தமைந்த இப்பாடலில், 'மாறற்கு இணை மாறனே' என மாறற்கு உவமையின்மை கூறுதலான் இது பொதுநீங்கு உவமை ஆயிற்று. மாறனுக்கு மாறனே நிகர் என்று வெளிப்படையாகக் கூறாமையால், இது குறிப்பால் வந்த பொதுநீங்கு உவமை.]

**வாரியை மொண்டுஉண்டோன் வசிட்டன் முதலாய**
**சீரியரின் ஞானம் செறிந்ததால் - காரிதரும்**
**சேயே! உடையநங்கை முலைப்பால் உண்ணாதாய்!**
**நீயே நினக்கு நிகர். (196)**

[காரிமாறனுக்கும் உடையநங்கைக்கும் மகனாய்த் தோன்றி ஞானத்தால் அகத்தியன் வசிட்டன் முதலிய முனிவரினும் மேம்பட்டதால் நினக்கு நிகர் நீயே என வெளிப்படையாக உவமேயத்துக்கு ஏற்ற உவமானமில்லை என்று கூறுவது வெளிப்படையாய் வந்த பொதுநீங்கு உவமையாம்.]
இது வெளிப்படையாய் வந்த பொதுநீங்கு உவமை. திணை - பாடாண். துறை - முனிவர்வாழ்த்து.
ஆகப் பலபொருள்உவமை முதல் பொதுநீங்குஉவமை ஈறாக உவமவிரி இருபத்தைந்தும் அடைவே காண்க. [16]

உவமையின் ஒழிபுகள்

**102. சிறப்பினும் வரூஉம் திறமும்ஒன்று உளதே. [17]**

(எ-ன்) இஃது உவமவிரியுள் ஓதாததாக ஒழிந்ததொன்று உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) ஒருபொருளைப் பிறிதொருபொருளாகச் சிறப்பித்துச் சொல்லுமிடத்து உளதாய் வரூஉம் கூறுபாடும் ஒன்று உளது என்றவாறு.
சிறப்பு என்பது ஒருபொருளை எடுத்து அதற்குச் சிறந்த பலஅடைகளையும் உவமித்து அவற்றானே உவமையாக்கி உரைப்பது.

**நுண்துகிற் கொடிகள் நுடங்குபு வளம்கெழு**
**வெண்பொன் மாளிகைசுலாம் வீதிதெண் திரைஎழும்**
**பாற்கடல் பரப்பதாய் வரிபல பயில்மதிள்**
**மேற்பட நிவந்து விளங்கு கோபுரம்**
**மைவாய்ச் சேடன் மண்டலித்தனன் ஆகிப்**

**பைவாய்த் தலைநிமிர் பான்மைய வாகக்**
**கருங்கடல் மொண்டுஎழும் கருவிக் கார்மழை**
**ஒருங்குஅதன் நனந்தலை உறப் படிந்தொடும்**
**ஓங்குபொன் கம்பத்து உச்சிமே லதன்ஒளி**
**பாங்குற உச்சியில் பதிதரு பானு**
**யோக நித்திரைகொளும் உரவோன் உந்தியின்**
**ஏகதாள் தாமரைப் பொகுட்டு இறைவனை நிகர்**
**சினகரக் குருகாபுரியினுள் செவ்வியின்**
**அனவரதமும் சராசரங்கள் ஆக**
**உதிக்கும் மன்னுயிர்களை உவந்தே**
**துதிப்பர் நித்தியர்எனத் துறவுஉளோரே.** (197)

இது சிறப்புஉவமை. திணை - பாடாண். துறை - சினகரவாழ்த்து.

[மெல்லிய துணிகளாலாகிய கொடிகள் காற்றில் அசையும் வளம்மிக்க வெள்ளி போன்ற நிறத்தைஉடைய பெரிய வீடுகள் நிறைந்த தெரு அலைகள் மோதும் பாற்கடலை ஒத்த பரப்பு உடையன. பலவேலைப்பாடுகள் அமைந்த மதிலின் மேற்புறம் உயர்ந்து விளங்கும் கோபுரம் ஆதிசேடன் உடம்பைச் சுற்றாக வளைத்துக்கொண்டு தலையைத் தூக்கிக் கொண்டிருப்பதுபோலக் காட்சி வழங்குகிறது. கடல்நீரை மொண்டுஎழும் மின்னல் இடி முதலிய தொகுதிகளை உடைய கார்மேகம் கோபுரத்தின்மீது படிந்து காணப்பட, அதன் உச்சியில் நாட்டப்பட்ட பொற்கம்பத்தின் உச்சியில் தன் ஒளியோடு படிந்திருக்கும் சூரியன், யோகத்துயில் புரியும் கார்மேகவண்ணனின் உந்தியிலிருந்து தோன்றிய ஒரேதண்டினை உடைய தாமரையில் தோன்றிய பிரமனை நிகர்க்கிறான். அத்தகைய கோயிலாக அமைந்த குருகூரில் தோன்றியுள்ள உயிர்களை நித்தியர்களும் முமுக்ஷுக்களும் துதிப்பர் என்ற கருத்தமைந்த இப்பாடலில், திருக்குருகூருக்குக் கொடிகள் அசையும் வெண்மாட அகல்வீதி, மதில், கோபுரம், உச்சித்தம்பம், சூரியன் என்ற பல அடைகளைக் கூறி அவற்றிற்குப் பாற்கடல், ஆதிசேடன், அவன் படம், தாமரைநாளம், பிரமன் என்ற உவமங்களைக் கூறி வருணித்தமை சிறப்பு உவமையாகும்.] [17]

இதுவுமது

## 103. அடையொடு பொருட்கு அடை புணர்க்குமஃது இரட்டை. [18]

(எ-ன்) இதுவும் விரியுள் ஓதாத ஒழிபு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அடை அடுத்த முக்கியப்பொருட்கு ஒப்புமை கூறும் ஒப்புமைப்பொருளிடத்து முக்கியப்பொருளின் அடை புலப்படப் புணர்ப்பதும் இரட்டை உவமையாம் என்றவாறு.

புணர்ப்பதும் என்னும் உம்மையால் ஒற்றைக்கிளவியும் இரட்டைக்கிளவி வழித்தாகி வருவனவும் கொள்க. என்னை?

'இரட்டைக் கிளவி இரட்டை வழித்தே' (தொ. பொ. 297)

என்றாராகலின். உவமை என்பது அதிகாரத்தால் பெற்றது.

**நறைமல்கிய கொழுங்காவியைப் போல் நள்ளிரவினும் நீடு**
**உறைமல்கிய கண்துயிலாமை அன்பர்க்கு உரைக்கில; நான்**
**மறைமல்கிய செந்தமிழ்மாறன் வண்குருகூர்ப் பொருநைத்**
**துறைமல்கு சேவல்சிறை இறைநீங்கின் துயர்அன்னமே.** (198)

இஃது இரட்டை உவமை. நறை மல்கிய காவிபோல் உறை மல்கிய கண் என்பதால் அறிக. மல்குதல் - பெருகுதல். உறை - துளி. இறைநீங்கில் - சிறிது

நீங்கில். துயர் அன்னம் - துன்புறும் அன்னம். பகுதி - ஒருவழித்தணத்தல். துறை - ஓதிமப்பெடையொடு ஊடி உரைத்தல்.

[தலைவன் தலைவியைப் பிரிந்து களவுக்காலத்தில் ஓரிரு நாள்கள் தன்தொழில் காரணமாக வெளியிடத்துத் தங்கவேண்டிய தேவை ஏற்பட்டஇடத்துத் தலைவி அச்சிறுபிரிவினையும் ஆற்ற இயலாதாளாய், "நான்குவேதப் பொருளையும் செந்தமிழில் அருளிய மாறனுடைய வளமான குருகூரின் தாமிரபரணித்துறையில் அன்பு மிக்க சேவல் தன்னைத் தழுவிய சிறகுகள் சிறிது நெகிழின் வருந்தும் அன்னம், தேன் நிரம்பிய செழித்த கருங்குவளைமலர் போல, நடுஇரவிலும் கண்ணீர் மல்கிய என்கண்கள் உறங்காதிருத்தலை நம்தலைவருக்குத் தெரிவிக்கவில்லை. தெரிவித்திருந்தால் தவறாது என்னைக் காண வருவார்" என்ற, அன்னப்பெடையிடம் கோபங்கொண்டு பேசும் கருத்தமைந்த இப்பாடலில், கண்ணீர் மல்கிய கண்கள் என்ற அடையடுத்த உபமேயத்திற்குத் தேன் நிரம்பிய கருங்குவளைப்பூக்கள் என்ற அடையடுத்த உவமானம் புணர்க்கப்பட்டவாறு.]

**ஊன்ஊறிய இருகோட்டு ஒருமாவை உறுபுனல்வன்**
**மீன்ஊறு செய்வதைத் தீர்த்த பிரான் வடவேங்கடத்தில்**
**தேன்ஊறு இலவுஇதழைக் கண்டபோழ்தில் என் சிந்தைஉம்பர்**
**வான்ஊர்மதி முகத்தாள் இதழாக மதித்திடுமே. (199)**

இஃது ஒற்றைக்கிளவி இரட்டைவழித்தாய் வந்த உவமை; இதனுள் தேன் ஊறு இலவுஇதழைக் கண்டபோழ்து எனக் கூறியவழிப் பானம் ஊறும் இதழ் என்னாதே, இதழ் என ஒற்றைக்கிளவியாய்க் கூறினமையான் என்று உணர்க. பின்னர் வந்த இதழ் - அதரம். உம்பர் வான் ஊர் மதிமுகத்தாள் என்பதன்கண்ணும் இவ்வுவமை வந்தவாறு காண்க. அது,

'கருங்கால் வேங்கை வீயுகு துறுகல்
இரும்புலிக் குருளையின் தோன்றும் காட்டிடை' (குறுந். 47)

என்னும் குறுந்தொகைப் பாட்டினும் காண்க.

முன்னர் வந்ததற்கும்,

'பொன்காண் கட்டளை கடுப்பக் கண்பின்
புன்காய்ச் சுண்ணம் புடைத்த மார்பின்' (பெரும்பாண். 220-221)

என்பதனுள் காண்க.

பகுதி - இடந்தலை. துறை - புனம் கண்டு மகிழ்தல்.

["உடலில் புலால் மிகுந்த, இருதந்தங்களை உடைய ஒப்பற்ற கசேந்திரனை நீர் மிக்க பொய்கையிலே வலிய முதலை துன்புறுத்தியதனைப் போக்கிய எம்பெருமானுடைய வடவேங்கடமலையில், தேன் ஊறிய இலவம்பூவின் இதழைக் கண்டபோது என்உள்ளம் வானத்தில் உலவும் சந்திரன் போன்ற முகத்தைஉடைய தலைவியின் உதடுகளாகப் பெரிதும் கருதுகின்றது" என்ற இப்பாடலில், தலைவியின் முகமும் உதடுகளும் உவமேயங்கள். இவற்றிற்கு உவமானங்கள் முறையே வான்ஊர் மதி, தேன் ஊறிய இலவுஇதழ் என்று அடையடுத்து வந்தவாறு காணப்படும். இங்ஙனம் கூறுவதற்கு ஏற்பவே,

இரும்புலிக் குருளை - உவமேயம்;
கருங்கால் வேங்கை வீ யுகு துறுகல் - அடையடுத்த உவமானம்

என்று குறுந்தொகைப்பாடலுள்ளும் கோடலே ஏற்றது. தலைவன் இரவுக்குறிக்கு வருமிடத்தில் பெரிய புலிக்குட்டி, கரிய அடிமரத்தைஉடைய வேங்கைப்பூக்கள் பரவிக்கிடக்கும் சிறுபாறை போலக் காட்சியளிக்கும் என்று அப்பகுதிக்குப் பொருள்செய்க. இன் என்ற ஐந்தன் உருபைப் பிரித்துக் 'கருங்கால் வேங்கை வீயுகு துறுகலின் இரும்புலிக்குருளை தோன்றும்' என்று பொருள்செய்க. கண்பின் புல்லிய காய்-

களிலுள்ள மஞ்சள்தூள் பொருந்திய மார்பு - உவமேயம்; பொன்னைஉரைத்த உரை-கல் - உவமானம். இரண்டும் அடையடுத்து வந்தவாறு காண்க. இஃது உவமானமும் உவமேயமும் அடையடுத்து வந்தமைக்கு எடுத்துக்காட்டு.] [18]

**104. உவமையும் உருபும் தொடர்வழிப் பிறிதும்ஒன்று**
**உவமேயப்பொருட்கு அடை புணர்ப்பதும் உள. [19]**

(இ-ள்) ஒப்புமைப் பொருளோடு புணர்ந்த உவம உருபிற்குப் பின்னாகப் பிறிதும் ஓர் ஒப்புமைப் பொருள் முக்கியப்பொருட்கு அடையாக முன்னோரால் புணர்க்கப்பட்டு வருவதும் உண்டு என்றவாறு. இஃது இலக்கியம் கண்டு அதற்கு இலக்கணம் கூறியது என்று உணர்க.

**அம்புஅனைய வேற்கண் அணங்கால் அறிவுஇழந்தது**
**இம்பர்உனக்கு எய்தியதால், எவ்வுளான் - உம்பர்எலாம்**
**போற்ற அருள்மாலைப் போற்றார்போல் ஆயினையால்;**
**மாற்றம்இதற்கு என்உரைக்கேன், மற்று? (200)**

அம்பு அனைய வேற்கண் என்றவழி உவமப்பொருளினது உருபின் பின்னர் வேற்கண் என வந்தவாறு காண்க. இதற்கு முன்னோர் கூறிய இலக்கியமாகக் கண்டன யாவையோ எனின்,

'துப்புஉறழ் தொண்டைச் செவ்வாய்த் தோழியர் காமத் தூதின்' (சிந். 107) எனத் திருத்தக்கமாமுனிகள் கூறிய சிந்தாமணியிலும், 'ஆம்பல் நாறும் தேம்பொதி நறுவிரைத் தாமரைச் செவ்வாய்' என்புழித் 'தேம்பொதி நறுவிரை ஆம்பல் நாறும் தாமரைச் செவ்வாய்' (சிலப். 4: 70-74) என இளங்கோவடிகள் பாடிய அந்திமாலை சிறப்புச்செய்காதையிலும் கண்டவை என்று உணர்க. இம்பர் உனக்கும் என்னும் உம்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது.

பகுதி - பாங்கற்கூட்டம். துறை - பாங்கன் கழறல்.

["அம்பினையும் வேலினையும் ஒத்த தலைவியின் கண்களால் இன்று தலைவனாகிய உனக்கும் உன்அறிவு உன்வசம் இல்லாததாகிவிட்டது. தேவர் போற்றும் திருஎவ்வுள் எம்பெருமானைப் போற்றாதவர் போல அறிவு இழந்திருக்கும் உனக்கு யான் யாது மறுமாற்றம் கூறவல்லேன்?" என்று, தலைவியிடம் நெஞ்சினைப் பறிகொடுத்து வந்து தன்னிடம் உரையாடிய தலைவனிடம் பாங்கன் கூறியதாக அமைந்த இப்பாடலில், கண் - உவமேயம். அம்பு - உவமானம். அனைய - உவமஉருபு. வேல் - மீண்டும் ஓர்உவமானம். இவ்வாறே துப்பு என்பதன் பின்னர் தொண்டை என்பதும் ஆம்பல் என்பதன்பின்னர்த் தாமரையும் உவமைகளாக வந்துள்ளன. உவமானத்தைக் கூறி அடுத்து உவமஉருபு புணர்த்த பின்னர் மீண்டும் ஓர்உவமானம் கூறுவதற்கு இலக்கியம் காட்டியவாறு.] [19]

**105. மரபினும் வருவதுஓர் மரபுஉடைத்து என்ப. [20]**

(எ-ன்) இதுவும் எய்தாதது எய்துவித்தது. இலக்கியம் கண்டு இலக்கணம் கூறலும் ஆம்.

(இ-ள்) ஒருதொடர்பினுள் ஒருபொருட்கு ஆதல் பலபொருட்கு ஆதல் உவமை கூறுமிடத்து, உவமப்பொருள் ஒருகுழுவினுள் ஒருமரபாகப் பல உவமம் வருவது மரபுஉவமையாம் இலக்கணத்தை உடைத்து என்று கூறுவர் சான்றோர் என்றவாறு.

**செந்தாமரை வதனம்; சேதாம்பல் வாய், நயனம்**
**நந்தாத செங்குவளை, நாடுங்கால் - கொந்துஆர்**

**வகுளம் புனைவார் வரைமயிற்குக் கஞ்ச**
**முகுளம் புணர்மா முலை. (201)**

இது மரபுஉவமை. என்னை? கோடு, கொடி, நீர், நிலம் என்ற நால்வகைப் பூக்களுள் நீர்ப்பூ ஆகிய குழுவுள் செம்மை என்னும் ஓர் இலக்கணத்தனவாய் தாமரை ஆம்பல் குவளை என்னும் மூன்றினையும் முகம், வாய், நயனம், முலை என நான்கிற்கும் மரபு பொருந்துவனவாக உவமம் புணர்த்தலின் எனக்கொள்க. இதற்கு இலக்கியம் கண்டதாவது,

'கடையாயார் நட்பின் கமுகுஅனையர் ஏனை
இடையாயார் தெங்கின் அனையர் - தலையாயார்
எண்அரும் பெண்ணை போன்று இட்டஞான்று இட்டதே;
தொன்மை உடையார் தொடர்பு'

என்பதனுள், ஓர் இனத்தன ஆகிய புறக்காழ்ப் புல்மரமே கூறி, ஒழிந்த மரங்கள் ஒப்பன உளவாயினும் கூறாராயினார் ஆதலான், மரபுஉவமையாம் என உணர்க.

பகுதி - பாங்கற்கூட்டம். துறை - இயல்பு இடம் கூறல்.

["கொத்தான மகிழம்பூமாலையை அணிந்த சடகோபனுடைய துடரிமலையிலுள்ள ஆண்மயில் போன்று கட்புலனாகிய மென்மையை உடைய தலைவிக்குத் தாமரை போன்ற முகம், செவ்வாம்பல் போன்ற வாய், ஒளி குறையாத செங்குவளை போன்ற கண்கள், தாமரை மொட்டுப்போன்ற முலைகள் என்பன உள" எனத் தலைவன் பாங்கனிடம் தலைவி இருக்கும் இடத்தையும் அவளுடைய இயல்பையும் வருணித்து உரைத்தவாறு.] [20]

**106. ஒத்தது வென்றதுஎன்று ஒருபொருட்கு உவமை**
**வைத்தனவாய் ஒருதொடர்பினுள் வருமே. [21]**

(எ-ன்) இதுவும் எய்தாதது எய்துவித்தது.

(இ-ள்) ஒருபொருட்கு உவமை கூறுமிடத்து ஒருபொருளை ஒத்தது, ஒருபொருளை வென்றது என்று இருபொருளைக் குறித்தனவாய் ஒரு செய்யுளகத்து வருவனவும் உவம இலக்கணத்துக்குக் கூடியும் நீங்கியும் வரும் என்றவாறு.

**கூற்றுவன்வேல் போன்று குகன்வேலை வென்று கொலை**
**ஆற்றலுறும் வன்கண் அமர்விளைப்பத் - தோற்றமுறும்**
**கொல்லிப்பாவைக்கு இணையாய் நின்றது எவன்? கோகனக**
**அல்லிப்பாவைக்கு இணை ஆவாய்! (202)**

இஃது ஒத்தது வென்றது என்றல். ஆற்றல் - பெருமை. தோற்றம் - பொலிவு. கொல்லிப்பாவை - காமுகரைக் கொல்லும் பாவை. கோகனக அல்லிப் பாவை - திருமகள்.

பகுதி - இயற்கைப்புணர்ச்சி. துறை - இரந்து பின்நிற்றல்.

["இயமனுடைய வேலினைத் தன் கொலைத்தொழிலால் ஒத்து, முருகனுடைய வேலினைத் தன் கொடுமையால் வென்று, கொலைத்தொழிலில் பெருமையுறும் கொடிய கண்கள் போரிடுமாறு, தாமரையின் அகஇதழில் வாழும் திருமகளுக்கு நேரான நீ, காட்சியளிக்கும் கொல்லிப்பாவைக்கு நிகராய்த் தனித்து நிற்பதன் காரணம் என்ன?" என்ற வினவிக்கொண்டு இயற்கைப்புணர்ச்சியில் தலைவன் தலைவியின் அருகு வந்து நின்றான்.]

**தெண்நறவை வென்று திரைத் தெள்ளமிர்தை ஒத்தமொழிப்**
**பெண்அரசே! மாதவன் தென்பேரைவாய்த் - தண்ணறும்பூக்**

**கொய்யாமல், ஆயமுடன் கூடாமல், ஊசலில்தாள்**
**வையாமல் நின்றது என்னோ, மற்று?** (203)

இது வென்றது ஒத்தது என்றல்.
பகுதி - இயற்கைப்புணர்ச்சி. துறை - முன்னிலையாக்கல்.

["தெளிந்த தேனைத் தன்சுவையால் வென்று, பாற்கடலில் தோன்றிய அமுதை இனிமையால் ஒத்த மொழிகளை உடைய பெண்களுக்குள் அரசிபோல்வாய்! எம்பெருமானுடைய தென்திருப்பேரை என்ற தலத்தில் பூக்கொய்யாமலும், தோழியர்குழாத்துடன் விளையாடாமலும் ஊஞ்சல் ஆடாமலும் நீ தனித்து நிற்கும் காரணம் யாதோ?" என்று இயற்கைப்புணர்ச்சியிடத்துத் தலைவன் தலைவிமுன் வந்து வினவினான்.] [21]

**107. ஏது நுதலிய முதுமொழியினும் வரும். [22]**

(எ-ன்) விரிஉவமையினுள் இன்னும் ஓர் ஒழிபு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) அவ்வுவமை ஏதுப்பொருளைக் குறித்து முடித்தற்குப் பிறிதொரு பழமொழியினும் வரும் என்றவாறு.

**பாம்பு கடித்ததற்குத் தேளுக்குப் பார்ப்பதுபோல்,**
**ஆம்புகழ்மால் கச்சி அணிவரைவாய் - ஆம்பகட்டால்**
**ஓடத் துணிந்துஅளித்தான் உய்த்தநோய்க்கு இன்றுவெறி**
**ஆடத் துணிந்தான் அறிவு.** (204)

இஃது ஏது நுதலிய முதுமொழி உவமை. என்னை?

நுண்மையும் சுருக்கமும் ஒளியுடை மையும்
மென்மையும் என்றிவை விளங்கத் தோன்றிக்
குறித்த பொருளை முடித்தற்கு வரூஉம்
ஏது நுதலிய முதுமொழி என்ப. (தொ. பொ. 489)

என்றாராகலின்,

இதனுள் குறித்த பொருள்முன்னர் ஒரு முதுமொழியினை வைத்துப் பின்னர்த் தான் குறித்த பொருள் வெளிப்படையாக வைத்தமையான் என்று உணர்க.

பகட்டால் ஓடத் துணிந்து அளித்தான் என்பது யானையைக் கண்டு யாங்கள் பயந்து ஓடாநிற்ப, அவ்யானையையும் பொருதற்குத் துணிந்து இவள்உயிரைத் தந்தான் என்க. உய்த்த நோய்க்கு - தந்த நோய்க்கு. வெறியாடத் துணிந்தான் என்பது இகழ்ச்சிக்குறிப்பு. அறிவு என்பது ஈண்டு அறியாமை.

உழுத உழுத்தஞ்செய் ஊர்க்கன்று மேயக்
கழுதை செவி அரிந்தற்றால் - வழுதியைக்
கண்டநம் கண்ணீர் உகுப்பப் பெரும்பணைத்தோள்
கொண்டன மன்னோ பசப்பு

என்பதும் இது.

பகுதி - வரைபொருட்பிரிதல். துறை - வெறிவிலக்கு. (வரைபொருட்பிரிதல் என்பது திருக்கோவையார் கூறும் பகுதி.)

["அழகிய புகழைஉடைய எம்பெருமானுடைய காஞ்சியை அடுத்த அழகிய மலையிலே, யானையைக் கண்டு யாங்கள் அஞ்சிஓட, அந்த யானையோடு போரிடத் துணிந்து தலைவியைக் காத்த தலைவனால் ஏற்பட்ட காமநோய்க்குப் பரிகாரமாக இன்று வெறியாடத் துணிந்த வேலனுடைய அறிவு பாம்பு கடித்த விடத்தைப் போக்கத் தேட்கடிக்கு உரிய பரிகாரம் செய்வதனை ஒக்கும்" என்று, தலைவன் வரைபொருட்குப் பிரிந்தவழித் தலைவி பிரிதல் துயரால் உடலும் உள்ளமும் வாட, அவ்வாட்டம் தவிர்க்க

வேலனைக்கொண்டு வெறியாடல் செய்விக்கத் தாய் துணிந்தவழித் தோழி வெறிவிலக்கிக் களிறு தருபுணர்ச்சியால் அறத்தொடு நின்ற செய்தி கூறும் இப்பாடலில், 'பாம்பு கடித்ததற்குத் தேளுக்குப் பார்த்தல்' என்ற பழமொழி உவமமாக வந்துள்ளது. கூரிதாய்ச் சுருங்கி விழுமிதாய் எளிதாகி இயற்றப்பட்டுக் குறித்த பொருளை முடித்தற்கு வருமாயின், அங்ஙனம் வந்ததனைப் பொருள்முடித்தற்குக் காரணமாகிய பொருளினைக் கருதுவதாகிய முதுமொழி என்ப புலவர் என்றவாறு. (தொ. பொ. 489).
"உழுது பக்குவப்படுத்திய வயலில் உழுத்தம்பயிர் சற்று வளர்ந்ததாக, அதனை ஊரில் பிணிப்பாரின்றி அவிழ்த்துவிடப்பட்ட கன்று மேய்ந்ததாக, அக்கன்றினை ஒறுப்பதனை விடுத்துக் கழுதையின் காதுகளை அறுப்பதுபோல, பவனிவந்த பாண்டியமன்னனைக் கண்கள் கண்டதனால் கண்ணீர் உகுப்ப அக்கண்களுக்கு யாதும் ஊறு தாராமல் பெரிய மூங்கில் போன்ற நம்தோள்கள் பசலை பாய்ந்து விட்டன" என்ற கைக்கிளைத் தலைவியின் கூற்றில், கண்ட கண்கள் தண்டிக்கப்படாமல் தோள்கள் தண்டிக்கப்பட்டதற்கு, வயலில் கன்று மேய அதனை விடுத்து யாதும் தொடர்பில்லாத கழுதையின் காதுகளை அறுத்த செயல் உவமமாக வந்துள்ளது. 'கன்று மேயக் கழுதையின் காதுகளை அறுத்தல்' என்ற பழமொழி உவமமாகிறது.] [22]

**108. பிசியினும் புலப்படும் பெற்றியது ஆகும். [23]**

(எ-ன்) இதன்முன்னர் விரிஉவமையின் ஒழிபு கூறி இதனுள் தொகை உவமையினது ஒழிபு உணர்த்துதல் நுதலிற்று.
பிசி என்பது நற்பொருள். என்னெனின் 'பிசி என்பது பொய்யும் சோறும் பேசு நற்பொருளும்' (சூடா. நிகண்டு) என்பதனால் அறிக.
(இ-ள்) பிசி என்ற இலக்கணத்தோடும் புலப்படும் இயல்பும் உடைத்து அவ்வுவமை என்றவாறு.
அஃதாவது, உவமேயப்பொருட்கு உள்ள சினை வினை சார்பு முதலியன உவமப்பொருட்கண் இல்லையாயினும் அவற்றை அதனோடு சார்த்தி உவமப்பொருள் ஒன்றனையும் கூற உவமேயப்பொருளும் ஏதுவும் உவமஉருபும் விரிந்து புலப்படுதலாம்.

**வரும்குன்றினைக் கடிந்து எம் மன்உயிரைத் தந்தான்**
**இருங் கங்கணக்குன்று இருப்பப் - பெருந்தகைசால்**
**செந்தமிழ்மாறன் சிலம்பில் சேய்நீ நடித்துஅருந்த**
**வந்ததை யானோ தடுப்பேன், மற்று? (205)**

இஃது ஒப்பொடுபுணர்ந்த உவமத்தானும் சார்பினானும் வந்த பிசிஉவமை. என்னை?

ஒப்பொடு புணர்ந்த உவமத் தானும்
தோன்றுவது கிளந்த துணிவி னானும்
என்றுஇரு வகைத்தே பிசிவகை நிலையே. (தொ. பொ. 438)

என்றாராகலின்.
இதனுள் 'வருங்குன்றினை' என்பது யானையை எனவும், 'இருங் கங்கணக்குன்று' என்பது சார்போடும் தோளிணை எனவும் வினையானும் வடிவானும் சார்பானும் உவமஉருபு முதலியனவும் உவமேயப்பொருளும் புலப்படுவன ஆயின. ஒழிந்த அகலம் உரையிற்கொள்க.
பகுதி - வரைவிடைவைத்துப் பொருள்வயின் பிரிதல். துறை - களிற்றிடை உதவிக்கு அறத்தொடு நிற்றல்.
["எங்களை நோக்கித் தாக்கவந்த மலைபோன்ற யானையை விரட்டி எம்உயிர் உடலில் நிலைபெறுமாறு காப்பாற்றிய தலைவனுடைய பெரிய கங்கணம் அணிந்த மலைகள்

போன்ற தோள்கள் இருக்கவும், அவற்றைக் குறிப்பிடாமல், மேம்பாடு பொருந்திய செந்தமிழில் வல்ல மாறனுடைய துடரிமலையிலே முருகனாக நீ நடித்து நிவேதனமாக வழங்கப்பட்ட பொருளை உண்பதற்கு வந்துள்ள செயலை நானா தடுக்கமுடியும்?" என்று வேலனிடம் கூறுவாள்போலத் தோழி தலைவன் களிற்றிடை உதவிய செய்தியைக் குறிப்பிட்டு அறத்தொடுநின்ற செய்தியை உணர்த்தும் இப்பாடலில், 'வருங்குன்று' என்ற வினையால் குன்று என்பது யானை என்பதும், 'இருங் கங்கணக்குன்று' எனக் கங்கணம் என்ற சார்பாலும் குன்று போன்ற வடிவாலும் குன்று என்பன தோள்கள் என்பதும் பெறப்பட்டமை உணரப்படும்.

தன்கண் கிடந்த ஒப்புமைக்குணத்தோடு பொருந்திவரும் உவமப்பொருளானும், ஒன்று சொல்ல ஒன்று தோன்றும் துணிவிற்றாகச் சொல்லும் சொல்லானும் என்ற இவ்விரு கூற்றதாகும் பிசி கூறுபடும் நிலைமை என்றவாறு. (தொ. பொ. 488 பேரா.)] [23]

**109. முக்கியப் பொருட்கு முக்கியப்பொருள் உவமை**
**புணர்ப்பதும் முதன்மைப் புலன்நெறி வழக்கே. [24]**

(எ-ன்) இதுவும் ஒருவகையாம் ஒழிபு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) உவமேயப்பொருள்களுக்கு உவமேயப்பொருள்களை உவமமும் பொருளும் ஆக்கிச் செய்யுளகத்து உரைப்பனவும் புலவர் ஆற்று வழக்கமாம் என்றவாறு.

இஃது இலக்கியம் கண்டு அதற்கு இலக்கணம் கூறல்.

**சீதரனே முத்தன்எனும் தேற்றம்உறச் சிந்தையினுள்**
**பேதமைபோல் அற்ற, பிறர்நசையும்; - பாதகமாம்**
**பொன்றா அழுக்காறுஎனப் போயது, புலமைக்கு**
**ஒன்றாப் புறம்கூறலும். (206)**

என்பது, நெஞ்சமே! நாம் 'சீமந்நாராயணனே அகிலாண்டகோடி பிரமாண்டங்களையும், சத்தாவரணங்களையும் பிரகிருதியையும் கடந்து மேலாய விரசைக்கு அக்கரையாம் முத்தியைத் தருவதற்கு உரியன்' என்பது ஆரியனால் உணர்ந்து, அறிவு பிறந்த பின்னர், நம்மிடத்து முன்புநின்ற அறியாமைபோல அகன்றது, ஒழிந்த அரன் அயன் என்னும் இருவரைப் பற்றின பசையும்; அதுவுமன்றிப் பாதகத்திற்கு ஏதுவாய் அழுக்காறு அகன்றதுபோல் அகன்றது, அறிவிற்குப் பொருந்தாப் புறங்கூறலும்; ஆதலால் நாம் இனி ஈடேறினேம் என்றவாறு.

திணை - பொதுவியல். துறை - முதுகாஞ்சி.

எதிர்மறைகளை உவமமும் பொருளும் ஆக்கியது இரண்டானும் பெறுதற்கு இலக்கியம்

இழிவுஅறிந்து உண்பான்கண் இன்பம்போன்று எய்தும்
கழிபே ரிரையான்கண் நோய் (குறள். 946)

என்பதனால் அறிக.

[அறியாமை அகன்றதுபோலப் பசையும் அகன்றது. அழுக்காறு அகன்றதுபோலப் புறங்கூறலும் அகன்றது. அறியாமை, அழுக்காறு என்ற உவமேயப்பொருள்களே உவமானங்களாக வந்து உவமஉருபு அடுத்து உவமேயங்களோடு இயைந்தவாறு.

முதுகாஞ்சியாவது - தலைவரும் பொருளைத் தக்காங்கு உணர்த்தி, நிலை நிலையாமைகளை எடுத்துரைப்பதாம். மாறுபட்ட வினைகளை எதிர்மறை எனவும் மாறுபட்ட பெயர்களை மறுதலை எனவும் கூறுவதே மரபு.

இன்பம், நோய் என்பன மறுதலைப்பொருள்கள். 'இன்பம்போல நோய் எய்தும்' என இன்பத்தை உவமானமாகக்கொண்டு நோயை அதற்கு உரிய உவமேயமாகக் கூறியமை,

மறுதலைப்பொருள்களை உவமமும் பொருளும் ஆக்கியதற்குரிய எடுத்துக்காட்டாகும்.] [24]

உவமை பிறஅணிகளோடு வருமாறு

**110. உருவகம் நிரல்நிறை அதிசயம் சிலேடை**
**தற்குணம் தற்குறிப்பு அற்புதம் விரோதம்**
**ஒப்புமைக்கூட்டம் ஏது விலக்குடன்**
**மெய்ப்பட விரவும் மேதகவு உடைத்தே. [25]**

(எ-ன்) அவ்வுவமைஅலங்காரம் பிறஅலங்காரங்களோடும் கூடி வருமாறு கூறுகின்றது.
(இ-ள்) உருவகம் முதலாக விலக்கு ஈறாக மேல் கூறப்படும் பதினோரலங்காரங்களுடன் விரவி வரும் அவ்வுவமைஅலங்காரம் என்றவாறு.
மெய்ப்பட விரவும் - பொருள்பெற விரவும் என்பதாம். மேதகவு உடைத்து - பெருமை உடைத்து. [25]

**111. இவை தத்தம இலக்கணங்களில் திறம்பாது**
**உவமச்சொல் புணர்ந்துஇறின் அஃது உவமை. [26]**

(எ-ன்) இஃது அவ்வுவமைஅலங்காரம் பிற அலங்காரங்களோடும் வருவதற்கு ஓர் அறிகுறி உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) இவை பதினோரலங்காரமும் தமக்குத் தமக்கு விதித்த இலக்கணங்களில் குன்றாது உவமஉருபுடனே கூடி உவமையாம் தன்மைபெற முடியுமாயின், அவற்றை அவ்வவ பெயரானே உவமை என்ற பெயர் கொடுத்து வழங்கப்படும் என்றவாறு.

**பூந்தண் வகுளாபரணன் புயசயிலம்**
**வாய்ந்த அருவிவரை மானும் - பாய்ந்ததிரை**
**தங்குஒலிநீர் வையம்தனைச் சூழ் இருள்துரத்தும்**
**பொங்குஒளிசேர் முத்தவடம் பூண்டு.** (207)

இஃது உருவகஉவமை. இதனை முதல்நூல் செய்த தெண்டியாசிரியர் உருவகத்தின்கண் உவமைஉருவகம் என்றார். அதற்குக் காட்டிய
'மதுமகிழ்ந்த மாதர் வதன மதியம்
உதய மதியமே ஒக்கும்' (தண்டி. 38 சூ. உதாரணம்)
என்ற செய்யுளகத்து உருவகவாய்பாடாக வந்து உவமஉருபோடு இறுதலின் அது பொருந்தாது ஆதலான், இவர் அதனை உவமையில் உருவகஉவமை என்ற பெயர்கொடுத்ததே பொருத்தம் என்று அறிக.
பூந்தண் வகுளாபரணன் - பொலிவினையும் குளிர்மையையும்உடைய மகிழமாலிகையை ஆபரணமாக உடைய மாறன். புயசயிலம் - திருப்புயங்களாகிய மலை. வாய்ந்த - புலப்படுவதான. அருவிவரை மானும் - நீர் அருவியோடு கூடிய வரையை ஒக்கும். பாய்ந்ததிரை - பரந்த திரை. புயசயிலம் முத்துவடம் பூண்டதால் நீர்அருவியுடன் கூடிய மலையை ஒக்கும் எனக் கூட்டுக.
திணை - பாடாண். துறை - புயவருணனை.
[மகிழம்பூமாலையை அணிந்த மாறனுடைய திருப்புயங்களாகிய மலைகள், கடலால் சூழப்பட்ட உலகைச் சூழ்ந்திருக்கும் இருளை அகற்றும் மிக்க ஒளியுடைய முத்துமாலைகளைப் பூண்டதால், நீர்அருவியோடு கூடிய மலையை ஒக்கும் - என்ற

கருத்து அமைந்த இப்பாடலில், புயசயிலம் என முதலில் உருவகம் செய்து பின் அருவியைஉடைய மலையை ஒக்கும் என உவமையாகக் கூறியதால் இதனை உருவக-உவமை என்பது இவ்வாசிரியர் கருத்து. 'வதனமதியம்' என்று முகமாகிய சந்திரன் என உருவகமாகக் கூறிப் பின் அதுவே உதிக்கும் சந்திரனை ஒக்கும் என உவமையாகக் கூறினமையின் அதுவும் உருவகஉவமையேயாம். முதலில் உருவகம் செய்யப்பட்டுப் பின் உவமைஅணி வந்துள்ளதனை உவமைஉருவகம் என்று தெண்டியாசிரியர் குறிப்பிட்டமை பொருத்தமாக இல்லாததனால் இவ்வாசிரியர் உருவகஉவமை என்றே கூறுவாராயினார்.]

**மலை மதி தேன் மாறன்வரை வேல்விழியாள்**
**முலை வதனம் நண்பா! மொழி.** (208)

இது நிரல்நிறைஉவமை. பகுதி - பாங்கற்கூட்டம். துறை - இயல்பு இடம்கூறல்.

["நண்பனே! மாறனுடைய மலையிலே என்னால் காணப்பட்ட வேல்போன்ற கண்களை உடைய தலைவிக்கு மலைபோன்ற முலைகளும், மதிபோன்ற முகமும், தேன்போன்ற மொழியும் உள" எனத் தலைவன் தன்பாங்கனிடம் தான் சந்தித்த தலைவியின் இருப்பிடத்தையும் இயல்பினையும் கூறிய இப்பாடலில், மலைமுலை - மதிவதனம் - தேன்மொழி என நிரல்நிறை உவமையணி வந்துள்ளது.]

**புருவம் நயனம் பொருசிலை வேல்போன்ற**
**திருமகள் நின்னோடு வரின், செல்வா! - கருவிளைமென்**
**பூநீல் நிறமாயன் புட்குழிசூழ் வாசமலர்க்**
**காநீர்த் தடமாம் கடம்.** (209)

இதுவும் அது. இவை இரண்டும் பெயரொடு பெயர் நிரல்நிறைஉவமை.

வாசமலர்க்கா நீர்த்தடம்ஆம் - பரிமளமலர்ச்சோலையும் வாவியும் போலக் குளிர்மையை உடையதாம்; கடம் - சுரம். நின்னொடு வருகில் அவளுக்கு எனக் கூட்டுக. ஒழிந்த அகலம் உரையிற் கொள்க.

பகுதி - உடன்போக்கு. துறை - ஆதரம் கூறல்.

["தலைவ! போரிடும் வில்போன்ற புருவங்களையும் வேல்போன்ற கண்களையும் உடைய தலைவி உன்னோடு உடன்போக்கிற்கு வருவாளாயின், நீங்கள் கடக்க இருக்கும் பாலைவனம் கருவிளம்பூப்போன்ற நீலநிறத்தைஉடைய எம்பெருமானுடைய திருப்புட்குழி என்ற திருத்தலத்திலிருக்கும் மணமலர்ச்சோலையும் வாவியும் போலக் குளிர்ச்சியை உடையதாம்" என்று தோழி தலைவனிடம் தலைவியின் விருப்பத்தைக் கூறித் தலைவனை உடன்போக்கிற்கு ஒருப்பட வைத்தவாறு.

பொருசிலை போன்ற புருவம், வேல்போன்ற நயனம் என்பன பெயர்நிரல்நிறை உவமை.]

**கார் உலாவிய கொழும்பொன் மணிமாட வெயிற்பிழம்பு கதுவ நாளும்**
**மேருமால்வரை எனவே பொலிந்த; பனிவரைக்குலங்கள், வேலைநீர்சூழ்**
**பாரும் ஆடகநகரில் சிறந்த; விறல்மதன் மகுடபந்தி மானும்,**
**வாருலா முகிழ்முலை; மங்கையரும் மலைமகள்குழுவின் வாழ்வார் மன்னோ.**
**(210)**

என்பது குணஅதிசயஉவமை.

திணை - பாடாண். துறை - நகரவாழ்த்து (குருகாமான்மியம்).

[மேகங்கள் தவழும், பொன்னில் மணிகள் அழுத்தி எடுக்கப்பட்ட மாடங்கள் கதிரவன்ஒளி தம்மீது படுதலினாலே மேருமலைகளைப் போலக் காட்சி வழங்கின. அக்குளிர்ந்த மலைக்கூட்டங்களை உடைய, கடலால் சூழப்பட்ட உலகில் உள்ள ஊரும் பொன்மயமான தேவருலகைப் போல ஒளிமிக்குக் காணப்பட்டது. வெற்றியைஉடைய

மன்மதனுடைய முடிவரிசைகளை ஒத்த கச்சணிந்த மொட்டுப்போன்ற முலைகளை உடைய பெண்களும் மலையில் வாழும் மகளிர்குழாத்தைப் போல அங்கு வாழ்வர் - என்ற கருத்தமைந்த இப்பாடலில், மேருமலையைப் போன்ற மாடங்கள், பொன்னுலகு-போன்ற நகரம், மன்மதன் மகுடவரிசை போன்ற முலைகள், மலைமகளிர் போன்ற பெண்கள் என்று அளவுக்கு மீறிப் புகழ்ந்த புகழ்ச்சியால் இவ்வுவமைகள் குணஅதிசய-உவமைகள் ஆயின.]

**வார்செறிந்து கல்லாரம் மன்னி அகலத்தவாய்த்**
**தார்செறிந்த வல்லி எழுதற்கு இடமாம், - சீர்செறிந்த**
**நற்றிருமால் வைகிய தென்நாகைத் தடம்மானும்**
**முற்றிழையாள் முற்றா முலை.** (211)

இது செம்மொழிச்சிலேடை உவமை. தடத்திற்கும் தனத்திற்கும் சிலேடை.

(இ-ள்) தண்ணீர் பொருந்திச் செங்கழுநீரோடும் கூடி, இடம்அகன்றதாய்ப் பூ நெருங்கின அல்லிக்கொடிகள் தோன்றுதற்கு ஆதரமாம் தடத்தை ஒக்கும், கச்சினது அகத்து அடங்கி, மாணிக்கப்பூண் நிலைபெற்று மார்புஇடத்தவாய் ஒழுங்கு சேர்ந்த தொய்யில் எழுதுதற்கு இடம்பெற்றன முற்றிழையாள் இளமுலை என்றவாறு.

பொலிவு குடிகொண்ட நல்ல திருமால் வைகும் அழகிய திருநாகைத் தடத்தை எனக் கூட்டுக. தடத்தின்மேல் சொல்லுங்கால், வார் - தண்ணீர்; செறிதல் - பொருந்துதல்; கல்லாரம் - செங்கழுநீர்; மன்னி - கூடி; தார் - பூ; செறிதல் - நெருங்குதல்; வல்லி - கொடி; எழுதல் - தோன்றுதல்; இடமாம் - ஆதரமாம்.

தனத்தின்மேல் சொல்லுங்கால், வார் - கச்சு; செறிதல் - அடங்குதல்; கல்லாரம் - மாணிக்கப்பூண்; மன்னி - நிலைபெற்று; அகலம் - மார்பு; தார் - ஒழுங்கு; செறிதல் - சேர்தல்; எழுதல் - எழுதுதல்; இடமாம் - இடம்பெற்றதாம் என்க.

பகுதி - பாங்கற்கூட்டம். துறை - செவ்வி செப்பல்.

பகுதி - இயற்கைப்புணர்ச்சி. துறை - நலம்புனைந்துரைத்தலும் ஆம்.

[செம்மொழிச்சிலேடை - சொற்களைப் பிரிக்காமல் உள்ளவாறே கொண்டு இருவகையாகப் பொருள்செய்தல். இரண்டற்கு மேம்பட்டனவாய்ப் பொருள்செய்தலும் சிலேடை என்றே கூறப்படும். செவ்வி செப்பல் - தலைவி தலைவன்வரவை எதிர்பார்த்து நிற்கும் திறத்தைப் பாங்கன் தலைவனிடம் குறிப்பிடுதல்.

சிறப்பு மிக்க எம்பெருமான் உகந்தருளியிருக்கும் திருநாகைத் திருத்தலத்திலுள்ள குளத்தைப்போலத் தலைவியின் முலைகள் இருக்கின்றன என்பதை விளக்கும் வகையில் செம்மொழிச்சிலேடைஉவமை அமைந்துள்ளது. வார், கல்லாரம், அகலம், தார், எழுதல் என்ற சொற்கள் சிலேடைப்பொருளில் வந்துள்ளன.]

**மான்மதங்கூர் வெங்களபம் மட்டிக் கமைந்துளவாய்க்**
**கானிலவா வாரநிழல் கைக்கொண்ட - ஞானமுனி**
**செஞ்சொற் றமிழ்மலயமே போலும் சீதரன்வாழ்**
**தஞ்சைத் திருமான் தனம்.** (212)

இது பிரிமொழிச்சிலேடை. இது மலயத்திற்கும் தனத்திற்கும் சிலேடை.

[மால்மதம் கூர் வெம்களபம் மட்டு இக்கு அமைந்துளவாய்க்
கான்இலவுஆ வாரம் நிழல் கைக்கொண்ட தமிழ்மலயம் எனவும்,
மான்மதம் கூர் வெங்களபம் மட்டிக்க மைந்துளவாய்க்
கான் நிலவா ஆரநிழல் கைக்கொண்ட தஞ்சைத் திருமான்தனம்

எனவும் சொற்களைப் பிரித்து மலயத்திற்கும் தனத்திற்கும் பொருந்துமாறு பொருள்-கொள்க.]

(இ-ள்) மயக்கத்தைத் தரும் கடம் உண்டான வெம்மையைச் செய்யும் யானையும் பூவில் தேனும் வைத்த தேனும் நிறைந்துளவாய்க் காடாய இலவும் ஆச்சாவும் சேர்ந்த மலைப்பக்கங்கள் குளிர்மையைத் தன்னிடத்துக் கொண்ட தமிழ்மலையை ஒக்கும். கத்தூரி மிகுந்த விருப்பத்தைத் தரும் சந்தனச்சேற்றைப் பூசப் புளகித்து இறுகிய வலிமையை உடையவாய்ப் பரிமளம் நிலைபெற்ற, முத்தின் ஒளியைத் தம்மிடத்துக் கொண்ட, புனமான்போலும் விழியை உடையாள் தனம் என்றவாறு.

ஞானமுனி செஞ்சொல் தமிழ்மலையை எனவும் சீதரன்வாழ் தஞ்சைத் திருமான் தனம் எனவும் முன்னும் பின்னும் கூட்டுக. கூர்வெங்களபம் - வினைத்தொகை. ஏகாரம் - அசை.

பொதியத்தின்மேல் சொல்லுங்கால்: மால் - மயக்கம், மதம் - கடாம், கூர் - உண்டான, வெம்மை - வெப்பம், களபம் - யானை, மட்டு - பூவின்தேன், இக்கு - வைத்த தேன், தேன்துளியொடு மதுத்துளி (64) என்றார் சிந்தாமணியிலும். அமைதல் - நிறைதல். உளவாய் - உண்டாய். கான் - காடு, இலவு - இலவமரம், ஆ - ஆச்சாமரம், வாரம் - பக்கம், நிழல் - குளிர்மை.

முலைமேல் சொல்லுங்கால்: மான்மதம் - கத்தூரி, கூர்தல் - மிகுதல், வெம்மை - விருப்பம், களபம் - சந்தனச்சேறு,

மட்டித்தல் - பூசுதல், மைந்து - வலி, கான் - பரிமளம், நிலவா - நிலைபெற்று, ஆரம் - முத்துவடம், நிழல் - ஒளி. கைக்கொண்ட என்பது இருதலைக்கும் ஒருபொருள்.

பகுதி - இயற்கைப்புணர்ச்சி. துறை - நலம்புனைந்து உரைத்தல்.

[கடம் - மதநீர். ஞானமுனியாகிய சடகோபனுடைய செஞ்சொற்களாகிய தமிழ்மொழிக்குரிய பொதியமலை, எம்பெருமான் உகந்தருளியிருக்கும் தஞ்சை என்ற திருத்தலத்திலுள்ள தலைவியின் முலையை நிகர்க்கும் என்பது பிரிமொழிச்சிலேடை உவமை வாயிலாக விளக்கப்பட்டவாறு.

'தேன்துளியொடு மதுத்துளி அறாத சோலை' (சிந். 64) தேன் - வைத்த தேன், மது - பூவின்மது என்றார் நச்சினார்க்கினியர்.]

**நடுக்கற் றறைவளத்தின் நன்பொருள்கள் எல்லாம்**
**இடுக்கற் றுதவும் இயல்சான்று - ஒடுக்கமற**
**வேய்ந்த மலையமென வளர்கின்றான் பரன்சீர்**
**ஆய்ந்த தமிழ்மகிழ் மாறன். (213)**

இஃது இருவகைச் சிலேடையும் விரவி இரண்டு பொருளைக் கவிநாயகனுக்கு உவமையாக்கி அவற்றை இரட்டுறமொழிந்து மூன்றாவது கவிநாயகன்மேலும் சிலேடை செல்வதாக அவனும் அவைபோல் இருந்தான் என்னும் மூன்றுபொருள் பயந்த சிலேடை உவமை. இது பொதியத்திற்கும் கடலுக்கும் காரிமாறப்பிரானுக்கும் சிலேடை.

[நடுக்கு அற்று அறை வளத்தின் நன்பொருள்கள் எல்லாம்
இடுக்கு அற்று உதவும் இயல்சான்று - ஒடுக்கம்அற
ஏய்ந்த மலையம் என - எனப் பொதியமலைக்கும்,

நடு கல் தறை வளத்தின் நன்பொருள்கள் எல்லாம்
இடுக்கு அற்று உதவும் இயல்சான்று - ஒடுக்கம் அற
ஏய்ந்து அம் அலை அம் என - எனக் கடலுக்கும்,

நடுக்கற்று அறை வளத்தின் நன்பொருள்கள் எல்லாம்
இடுக்குஅற்று உதவும் இயல்சான்று - ஒடுக்கம்அற
பரன்சீர் ஆய்ந்த தமிழ்மகிழ் மாறன் - என மாறனுக்கும்

இப்பாடலின் சொற்களையும் தொடர்களையும் அமைத்துக்கொள்க.]

(இ-ள்) அசைவற்றுப் பக்கப்பாறைவளத்தோடும் கூடி நல்ல பொருள்களை-எல்லாம் குறைவற்று அளிக்கும் இயல்பு அமைந்து அழிவின்றித் தகுதியடைந்த பொதியமலை ஒப்பு எனவும் தழையாநின்றனன்;

மத்திமம் பார் ஆகிய தறைவளத்தோடும் கூடி நல்ல பொருள்களை எல்லாம் குறைவற அளிக்கும் இயல்பு அமைந்து அழிவின்றித் தகவு அடைந்து அழகிய அலையை உடைய கடலை ஒப்பு எனவும் தழையாநின்றனன்;

அவன் யார் எனின், உண்மைநூல்களை ஓதாது உணர்ந்து பிறருக்கு உணர்த்தும் வளத்தினோடும் கூடி நல்ல பொருள்களை எல்லாம் குறைவற அளிக்கும் தகுதி அடைந்து பரத்துவ சொரூப ரூப குண விபூதியாகிய பொலிவினை ஆராய்ந்த திருவாய்மொழி என்னும் தமிழை உடைய திருமகிழ்மாறன் என்றவாறு.

மலையத்தின்மேல் சொல்லுங்கால்: நடுக்கு - அசைவு, அற்று - இன்றி, அறை - பாறை, வளத்தின் - வளத்தோடும் கூடி.

கடல்மேல் சொல்லுங்கால்: நடு - மத்திமம், கற்றறை - பாராகிய தறை. வளத்தின் - வளத்தோடும்கூடி.

மாறன்மேல் சொல்லுங்கால்: நடு கற்று - உண்மைநூலை ஓதாது உணர்ந்து, அறை - உணர்த்தும், வளத்தின் - வளத்தோடும் கூடி, எல்லாம் - முழுதும், இடுக்கு - குறைவு, அற்று - இன்றி, உதவும் - அளிக்கும், இயல் - இயல்பு, சான்று - அமைந்து, ஒடுக்கம் - அழிவு, அற்று - இல்லையாக என்க.

இப்பாட்டினுள் 'வளத்தின் நன்பொருள்கள் எல்லாம் இடுக்கற்று உதவும் இயல் சான்று ஒடுக்கமற ஏய்ந்த' என்னும் துணையும் மூன்று பொருட்கும் அத்தச் சிலேடை ஒன்றாய் நின்றன. அவற்றுள்ளும் பொருள் என்பது பலபொருள் ஒருசொல்லாதலின் மலை முதலிய மூன்று பொருட்கும் முறைமுறையே சந்தனம் அகில் குங்குமம் தக்கோலம் ஏலம் இலவங்கம் சாதிக்காய் தேன் என்பனவும் பிறவும், சங்கு முத்து பவளம் என்பனவும் பிறவும், சித்து அசித்து ஈச்சுரம் என்பனவும் ஆம். இதனுள் ஏய்ந்த மலையம் என நின்ற பெயரெச்ச வாய்பாட்டைக் கடலைக் கூறும் இடத்து ஏய்ந்து என வினையெச்ச வாய்பாடாக நிறுத்தி அம்அலை என்பனவற்றை இடையில் ஏற்பன வந்தனவாக வளர்-கின்றான் என்னும் தன் எச்சமான வினையோடும் கூட்டுக. பரன்சீர் ஆய்ந்த தமிழ் என்பது காரணகாரிய மயக்கம்.

திணை - பாடாண். துறை - செந்துறைப் பாடாண்பாட்டு.

[அத்தச்சிலேடை - ஒரே சொற்றொடர் இடம்நோக்கி வெவ்வேறு சொற்பொருள் தருமாறு அமைப்பது. பரன்சீரை ஆய்ந்த மாறனுடைய செயலை அவன் பாடிய தமிழ்ப்பாமேல் ஏற்றுதல் காரணகாரிய மயக்கம். காரணம் - மாறன். அவன் காரியம் - தமிழ்ப்பா. இங்ஙனமே முன்னரும் 185-ஆம் எடுத்துக்காட்டுப்பாடல் உரையில் வேலினை எடுத்து எறிவார் செயலை வேலின்மேல் ஏற்றி 'மிறைபுரிவேல்' எனக் காரணகாரியமயக்கமாகக் கூறியதும் காண்க.

மகிழ்மாறன் ஏய்ந்த மலையம் என வளர்கின்றான், மகிழ்மாறன் ஏய்ந்து அம் அலை என வளர்கின்றான் என்பது சிலேடை உவமை.]

[செந்துறைப் பாடாண்பாட்டு - தலைவனுடைய ஒளியும் ஆற்றலும் ஓம்பா ஈகையும் அளியும் என்ற இவற்றை ஆய்ந்து உரைத்தல்.]

**பெற்றாள் இகழ வளர்த்தாள் இடர்செயப் பேர்த்து உறவுஒன்று**
**அற்று ஆகம்எங்கும் கருகியும் வாய்விட்டு அரற்றும், அந்தோ!**
**பொற்றாமரைக் கண்ணன் விண்ணோர்பிரான் புட்குழியில் வஞ்சம்**
**கற்றார் பொருட்பிரிவு உற்று இடைவேனின், கருங்குயிலே.** (214)

இஃது அத்தச்சிலேடை உவமை. பகுதி - பொருள்வயின் பிரிதல். துறை - குயில்மேல் வைத்துக் கூறல்.

சொற்பொருள்காரணமாகவும் உவமை பிறக்கும்; அவை முன்னர்க் காட்டுதும் என்றார் (92), அவை இவை என உணர்க.

[தலைவன் களவுக்காலத்தில் வரைவுஇடைவைத்துப் பொருள்வயின் பிரிய அவன்பிரிவை ஆற்றாளாய தலைவி தன்செயல்களால் நற்றாய் செவிலித்தாய் என்பவர்களால் கண்டிக்கப்பட்டு உடல்ஒளி கருகி ஒருவரும் இல்லாத இடத்து வாய்விட்டுப் புலம்பும்நிலையில், குயிலின் ஓசையைக் கேட்டுப் "பெற்றதாய் என்னை இகழ்ந்துரைக்கவும், வளர்த்த செவிலித்தாய் தன் கடுஞ்சொற்களால் என்னைத் துன்புறுத்தவும், மற்று என்துயர் அறிந்து ஆறுதல் கூறித் துயரைக் குறைக்கும் உறவினர் ஒருவரும் இல்லாது, உள்வருத்தத்தால் உடல் முழுதும் கருகி வாய்விட்டுப் புலம்பும் என்னைப் போல, தன்னை முட்டையிட்ட தாயாகிய குயிலால் இகழப்பட்டுக் காக்கையின் கூட்டில் வைக்கப்பட, முட்டையிலிருந்து குயில்பார்ப்பு வெளிப்பட்ட அளவில், பார்ப்பு காக்கைப்பார்ப்பு அன்று என்ற எண்ணத்தால் அடைகாத்துக் குஞ்சு பொறித்தலால் வளர்ப்புத்தாயாகிய காக்கை தன் கூட்டினை விட்டு விரட்டத் தன்னைப் பேணிக்காக்கும் உறவினர் ஒருவரும் இல்லாமல் உடல்முழுதும் கருநிறம் கொண்டு ஐயோ! என்று யான் இரங்குமாறு கருங்குயில் தன் வாய்விட்டுப் புலம்புகிறதே!" என்று கூறியதாக அமைந்த இப்பாடலில், சொற்பொருள் காரணமாகத் தலைவி குயிலுக்கு உவமையாதல் அத்தச்சிலேடை உவமையாம். 'முன்னர்க் காட்டுதும்' என்று கூறியது 92-ஆம் சூத்திரஉரையில்.]

**அறிவுஉடையார் தத்துவநுண்பொருள்உரை ஆய்ந்து அறிகழகத்து அறிவுஒன்று இல்லா**
**வறிதுஉடையார் அடைதரின் சிற்குணத்தினராய்த் தலைப்படும் அவ்வாழ்வு-போல,**
**வெறிவரிவண்டு உளர் நறுமென்சந்தனப்பூம் பொதும்பரிடை விராய ஏனை**
**முறிபடுதண்சினை வெளிற்றுத் தாருவும் ஆங்கு அதிற் கமழும் முதன்மைத்து ஆமே.** (215)

இது தற்குணஉவமை. துறை - பருப்பதவாழ்த்து.

[ஒருபொருளின் குணத்தை அதனைச் சார்ந்த மற்றொரு பொருள் பற்றிக் கொள்ளுதல் தற்குணமாகும் (சூ. 134). தற்குணத்தை அடிப்படையாகக் கொண்ட உவமை தற்குண-உவமையாம். சான்றோர் தத்துவஆராய்ச்சி செய்யும் அவையிலே அறிவற்றவர் போனாலும் அவரும் அவ்வாராய்ச்சியைக் கேட்டுத் தாமும் அறிவுடைய சான்றவர் ஆவது போல, மலையிடத்து வண்டுகள் மொய்க்கும் நறுமென்சந்தனமரங்கள் நெருங்கிய சோலையிலே இடையில் வளர்ந்த தளிர்கள் மிக்க கிளைகளை உடைய மணமற்ற மரமும் சந்தனமரம் போல மணம்வீசும் தலைமையைப் பெறுகின்றதாகின்றது. சான்றோர் இணக்கத்தால் சான்றோர் ஆயின பேதையர் செயலைச் சந்தனமரங்களிடையே வளர்ந்ததால் சந்தனமணம் கமழும் இயற்கையில் மணமற்ற மரத்தின்-செயலுக்கு உவமையாகக் கூறியது தற்குணஉவமையாம்.]

**சிலைவணக்கும் திருநுதலார் சிற்றிடையை வணக்கிய அச்சிறுமை நோக்கி**
**முலைவணக்கம் செய்ததுபோல், முதுக்குறை வந்துஅடைந்து பொறைமுதிர நோன்தாள்**

**நிலைவணக்கங் கொண்டது கண்டு, ஈன்றதாய் சுமந்து இறுதல் நெறித்தன்று என்றே**
**தலைவணக்கங் கொண்டு கதிர் நிலமகட்கே சரணம்எனச் சாய்ந்த மன்னோ.**
(216)

இது தற்குறிப்பேற்ற உவமை. நாடுவாழ்த்து. (இவை இரண்டும் குருகாமான்மியம்)

[வில்லினை ஒத்த நெற்றியை உடைய மகளிரின் சிறிய இடுப்பினை வளையவைத்த தம் தவறு கருதிப் பிற்காலத்தில் அவர்களுடைய முலைகள் தலைசாய்ந்தமை போல, பயிர் நன்கு முதிரவே அவற்றின்மேல் தோன்றிய பாரமும்மிக, வலிய தண்டுகள் வளையத்-தொடங்கியது கண்டு தம்மைப் பெற்ற தாய் தம் கனத்தைச் சுமந்து வளைந்து ஒடிதல் நேரிய செயல் ஆகாது என்று கதிர்கள் தம்தலை சாய்த்துத் தம் தாயாகிய தண்டினை ஒடியாமல் காக்குமாறு நிலமகளை அடைக்கலம் புகுந்து வணங்கிநின்றன - என்னும் இப்பாடலில், முற்றிய கதிர்கள் தலைசாய்கின்ற செயலுக்கு ஒரு காரணத்தைத் தற்குறிப்பேற்றம் செய்து அதற்கு முலைகள் தலைசாய்தலை உவமமாகக் கூறியமையின் இப்பாடலில் தற்குறிப்பேற்றஉவமை வந்துள்ளது.]

**கொடிமேல் வளரும் இருகுன்றும் உளஎன்னும்-**
**படி மேதகப் பணைத்த, பாவாய்! - வடிவேல்கண்**
**பொற்றொடிக்கைப் பூமகள்கோன் புத்தூர் வரைமடமான்**
**சிற்றிடைமேல் கொங்கைத் திரள்.** (217)

இஃது அற்புதஉவமை. என்னை? குன்றின்மேல் கொடி வளர்வதல்லது கொடிமேல் குன்று வளர்வது இன்று, ஆதலான் அற்புதஉவமை. அற்புதம் என்பது ஆச்சரியம்.

பகுதி - சேட்படை. துறை - பாங்கிக்கு அவயவம் கூறல்.

பகுதி - பாங்கற்கூட்டம். துறை - செவ்விசெப்பல்.

["தோழியே! வேல்போன்ற கண்களையும் பொற்றொடிகள் அணிந்த கைகளையும் உடைய திருமகள் கேள்வனாகிய எம்பெருமானுடைய புத்தூர் என்ற திருத்தலத்தைச் சார்ந்த மலையில் உள்ள மான்போன்ற தலைவியின் சிறிய இடைக்குமேல் உள்ள கொங்கைஇணை கொடிமேல் வளரும் இரு சிறுமலைகளும் உள என்று கூறுமாறு பருத்துள்ளன" என்று தலைவன் தோழியிடம் தலைவியின் உறுப்புநலன் கூறினான். தலைவியின் வனப்பினைக் கண்டு வந்த பாங்கன் தலைவனிடம் கூறியதுமாம். பாவாய் - பகுத்துஅறிவாயாக என்ற பொருளில் இத்துறைக்குக் கொள்க.]

**மின்னும் அரவும் விளங்கிழாய்! நின்இடையும்**
**பன்னு தமிழ்மாறன் பனிவரைவாய் - உன்னில்**
**விருத்தம் உளவாயிருப்ப, மெய்உவமைக்கு என்னோ,**
**பொருத்தமுடைத்து என்னும் புவி?** (218)

இது விரோதஉவமை. பகுதி - இடந்தலை. துறை - நலம்புனைந்து உரைத்தல்.

[விளங்கும் அணிகளை அணிந்த தலைவியே! உன் இடைக்கு ஒன்றோடொன்று மாறுபட்ட மின்னலையும் பாம்பினையும் உலகத்தார் மெய்உவமையாகக் கூறுவது ஏனோ? நிலையில்லா வடிவைஉடையது மின். தரையில் ஊர்ந்து செல்வது பாம்பு. கொங்கையாகிய பாரம் சுமந்து இளைத்து இருப்பது இடை. இவ்விடைக்கு மின்னலையும் பாம்பினையும் வடிவுஉவமையாகக் கூறுவது பொருந்துவதாக இல்லை. மின்னலைக்கண்டு அஞ்சுவது பாம்பு. பாம்புக்கு மின்னல் விரோதி. இவ்வாறாக ஒன்றற்கு ஒன்று பகைமையான இரு பொருள்களை இடைக்கு உவமையாகக் கூறுதல் விரோதஉவமை என்பதும் அமையும்.]

**எப்பொருளும் கோதற்று இசைக்கும் மறை; அம்மறைபோல்**
**மெய்ப்பொருள் எல்லாம்சொலும் நின்மெய்த்தமிழும் - முப்பொருளும்**
**மாசின்று உணர்த்தும் மறை; மறைபோல் மாறனே!**
**ஆசின்று உணர்த்தும் அவை.** (219)

இஃது ஒப்புமைக்கூட்டஉவமை. எப்பொருளும் என்பன:

'மிக்க இறைநிலையும் மெய்யாம் உயிர்நிலையும்
தக்க நெறியும் தடையாகித் தொக்கு இயலும்
ஊழ்வினையும் வாழ்வினையும்'

என்பனவாம். முப்பொருளும் மாசின்று உணர்த்தும் மறை மறைபோல் ஆசின்று உணர்த்தும் என்பது அங்ஙனம் முதலில் கூறிய மறை, அரி அயன் அரன் என்னுமவர் மூன்று பொருளாய் முக்கணமாய் மூன்று தொழிலாய் இருப்பர் எனக் கூறிய வண்ணமே குற்றமின்றி உணர்த்தும் என்பதாம். இன்றி என்ற வினையெச்சவாய்பாட்டு இகரம் இன்று என உகரஈறு ஆயிற்று; என்னை?

'அன்றி இன்றி என் வினைஎஞ்சு இகரம்
தொடர்பினுள் உகரம் ஆய்வரின் இயல்பே' (நன். 173)

என்றாராகலின். அவற்றை என்பது 'அவை' என இரண்டாவது இறுதியில் தொக்கது. கோதற்று என்பதனைக் கோதற என்றாக்குக.

முன்னது பனுவல்வாழ்த்து; பின்னது இயன்மொழி வாழ்த்து.

[அர்த்தபஞ்சகம் ஆகும் இறைநிலை, உயிர்நிலை, நெறி, வாழ்வினை, தடை என்ற ஐம்பொருள்களையும் வேதம் குற்றமற இசைக்கும். மாறனே! அவ்வேதம்போல உன்னுடைய உண்மையையே உரைக்கும் தமிழ் உண்மைப்பொருள்களை எல்லாம் குறிப்பிடும். வேதம் அரி அயன் அரன் என்ற முப்பொருளையும் குற்றமற உணர்த்தும். அம்மறையைப் போலத் திருவாய்மொழியும் அவற்றைக் குற்றமற உணர்த்தும்.

வேதத்தோடு திருவாய்மொழியை ஒப்பிட்டு உவமை கூறியமையாலும் ஒன்றற்கு மற்றொன்றை இணையாக வைத்து உரைத்தமையானும் இப்பாடலில் ஒப்புமைக்-கூட்டஅணி வந்துள்ளது. வேதத்தையும் திருவாய்மொழியையும் சிறப்பித்தமை பனுவல்வாழ்த்து. மாறனைத் திருவாய்மொழியைக் கொண்டு சிறப்பித்தமை இயன்-மொழிவாழ்த்து.]

**மாடசூளிகைக் கொழும்பொன்தகட்டு அமைத்த முழுமணி வால்வயிர நீலம்**
**பாடல்சால் பசுமணி பொன்நிறப் புருடராகம் இவை பத்தி வாய்ந்து**
**கோடலால் வளந்தரு செங்கேழ் கிளர் மாண்செக்கரொடும் குறைவுஒன்று**
**இல்லா**
**ஆடகாசலக்குடுமி வளைத்துஎழும் இந்திரதனுஒத்து அவிர்வது ஒன்றே.** (220)

இஃது ஏதுஉவமை. துறை - நாடுவாழ்த்து. (குருகாமான்மியம்)

[மாடத்தின் உச்சியில் சிறந்த பொற்றகட்டில் பதிக்கப்பட்ட வயிரம், நீலம், மரகதம், பொன்நிறப்புருடராகம் என்பன வரிசையாகச் செந்நிற இரத்தினத்துடன் பொருத்தப்-பட்டு இருப்பதால், மேருமலையின் சிகரத்தை இந்திரவில் வளைத்துக்கொண்டு ஒளிவீசிக் காட்சிதருவதைப் போல அம்மணிகள் பொற்றகட்டில் பதிக்கப்பட்ட ஒளி காட்சி தருகிறது. இப்பாடலில் உவமைக்குக் காரணம் கூறப்பட்டிருப்பதால் இஃது ஏதுஉவமை.]

**பூரணமாம் கண்மலர்க்கும் புத்திக்கும் தித்திக்கும்**
**காரணத்தது ஆமோ, கடல்அமிர்தம்? - தாரணிமேல்**
**கன்னி இடத்தார் பரவக் காகோதரத்து வளர்**
**பொன்னியிடத்து ஆரமுதைப் போல்.** (221)

இது விலக்குஉவமை. துறை - கடவுள்வாழ்த்து.

[இப்பூவுலகில் பார்வதியை இடப்பாகமாகஉடைய சிவபெருமான் தன்னைப் புகழ இரண்டாகப் பிரிந்த காவிரியின் இடைத்திட்டில் ஆதிசேடனாகிய பாம்பின்மீது அறிதுயில் கொண்டு உகந்தருளியிருக்கும் ஆரா அமுதமாகிய எம்பெருமான் முழுமையாகக் கண்களுக்கும் மனத்திற்கும் மகிழ்வு ஊட்டும் காரணப்பொருளாய் உள்ளார். அவருக்குக் கடலிலிருந்து எடுக்கப்பட்ட அமுதத்தை உவமம் கூறலாம் எனின், அக்கடல் அமிர்தம் கண்களுக்கும் மனத்திற்கும் கண்ட அளவில் மகிழ்ச்சியைத் தரவல்லது ஆகாதே ஆதலின், உவமமாதற்குரிய தகுதி அதற்கு இன்று - என்று உவமையைக் கூறி அதன் குறைவுகண்டு அதனை விலக்கியதால், இப்பாடலில் விலக்குஉவமை வந்துள்ளது. காகோதரம் - பாம்பு]

**அளிமருவும் பொற்கா அகம்மணந்தும் சங்க**
**ஒளிமருவு நீள்நிதி உட்கொண்டும், - விளிவுஇல்லா**
**நன்னர்அங்க வீடுஅருள நாடாது; அருள்அரங்கன்**
**தென்அரங்கம் நேர்வரும் புத்தேள்.** (222)

இதுவும் விலக்குஉவமை.

(இ-ள்) அளிமருவும் பொற்கா - கொடையைப் பயிலும் பொன்சொரூபமான கற்பகக்கா. மணந்து - குடிபுகுந்து. சங்கஒளி மருவும் நீள்நிதி - சங்கநிதி.

திருஅரங்கத்தின்மேல் சொல்லுங்கால்: அளிமருவும் பொற்கா - வண்டு பொருந்திய பொலிவைஉடைய சோலைகள். மணத்தல் - பரிமளம் கூர்தல். சங்க ஒளிமருவு நீள்நிதி - பாஞ்சசன்னியத்தைத் தரித்த அன்பர்க்கு அழியா வைப்பு ஆகிய அரங்கநாதன். நன்னர் - நன்மை. வீடு - பரமபதம். நாடாது - ஒவ்வாது; அப்பரமபதத்தைக் கொடுக்கப் புத்தேள் நினையாது. திருவரங்கம் பரமபதம் கொடுக்கும் நினைவு உடையதாம் ஆதலால் புத்தேளைத் திருவரங்கத்துக்கு உவமை கூறுவது பொருந்தாது என விலக்குக.

நேர்வரும்புத்தேள் என்பது இகழ்ச்சிக்குறிப்பு; எதிர்மறையுள் அடங்கும். இங்ஙனம் உவமையைக் கூறி விலக்குதலால் விலக்குஉவமை ஆயிற்று.

இதனுள் சிலேடையும் விரவிற்றேனும் வீடு அருள நாடாது என்பதனால் விலக்கு உவமை என்பதே நோக்கம். தண்டியாசிரியரும்,

'குழைபொருது நீண்டு குமிழ்மேல் மறியா
உழைபொருது என்உள்ளம் கவரா'

என்னும் விலக்குஉவமையினும் சிலேடை விரவியதூஉம் காண்க.

திணை - பாடாண். துறை - நகரவாழ்த்து.

ஆக, உருவகஉவமை முதலாக விலக்குஉவமை ஈறாகப் பதினொன்றும் அடைவே வந்தவாறு காண்க.

[கொடையைப் பயிலும் பொன்மயமான கற்பகச்சோலையையும் சங்கநிதியையும் தான் கொண்டிருப்பினும் ஒப்பாக வரும் தேவர்உலகம், வண்டுகள் பொருந்திய பொலிவுடைய சோலைகளை உடையதாய்ப் பாஞ்சசன்னியத்தைத் தரித்த, அன்பர்களுக்கு அழியா வைப்புநிதியாகிய அரங்கநாதனைத் தன்னிடத்துக் கொண்டு என்றும் அழியா நன்மை தரும் அரங்கனுடைய திருவரங்கத்திருப்பதியைப் போல வீடுபேற்றை அருளும் வாய்ப்பினைப் பெறாது - என்ற இப்பாடலில், தேவருலகம் திருவரங்கத்தை ஒக்கும் என்று கூறுவதற்கு, அதனால் வீடுபேற்றை அருள முடியாத குறைபாடுகருதி அதனை விலக்கியதால், இப்பாடலில் விலக்குஉவமை வந்துள்ளது.

'அளிமருவும் பொற்கா அகம்மலர்ந்தும் சங்க ஒளிமருவு நீள்நிதி உட்கொண்டும்' என்பது தேவருலகிற்கும் திருவரங்கத்துக்கும் சிலேடை எனினும் சிலேடையைப் பொருட்படுத்தாது உவமை கூறி விலக்குதலே நாட்டமாதலின் விலக்குவமையே கொள்ளப்பட்டது.

குழைபொருது நீண்டு குமிழ்மேல் மறியா
உழைபொருது என்உள்ளம் கவரா - மழைபோல்
தருநெடுங்கைச் சென்னி தமிழ்நாடு அனையார்
கருநெடுங்கண் போலும் கயல். (தண்டி. சூ. 33 எடுத்துக்காட்டு)

என்ற பாடலில் ‘குழைபொருது நீண்டு குமிழ்மேல் மறியா உழைபொருது’ என்ற தொடர் கயல்மீனுக்கும் கண்ணுக்கும் சிலேடை. இத்தொடர் கயல்மீனைக் குறிக்குமிடத்து - ‘சங்கொடு பொருது வளர்ந்து நீர்க்குமிழி மேலே மறிந்து தமக்குள்ளேயே போரிட்டு’ என்று பொருள்படும். கண்களைக் குறிக்குமிடத்து - ‘காதுகளில் உள்ள குழைகளளவும் சென்று வளர்ந்து, குமிழம்பூப் போன்ற மூக்கு வரை சென்று திரும்பி மானின் விழியோடு பகைத்து’ என்று பொருள்படும். உவமானமாகிய கயல் தலைவியின் கண்களைப் போலத் தலைவன்உள்ளத்தைக் கவரமாட்டாமையால் விலக்கப்பட்டமையின் விலக்குவமை இப்பாடற்கண் அமைந்துள்ளது என்பது தண்டியார் கருத்து. இப்பாடலில் சிலேடையணி இருந்தும் அதற்குச் சிறப்புக் கொடுக்கப்படவில்லை என்பது.] [26]

உவமைக்குப் புறனடை

**112. சிறப்பில் தீர்ந்த செய்கைய வாகி**
**இறப்ப உயர்த்தல் இழித்தல் மிகுத்தல்**
**குறைத்தல் பால்மாறுதல் கொள்கடன் இலவே.** [27]

உவமைக்குக் கூறிய பொதுவிதிச் சூத்திரத்தினுள் (92) ‘பெருமையும் சிறுமையும் பெற்றியில் சிறந்தும்’ என்பதற்குச் சிறப்பில் தீர்ந்து வருவனவாய்க் கடியப்பட்டன முன்னர்க் கூறப்படும் (92 உரை) என்றார், அவை இவை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஒன்றினை உவமிக்குங்கால் சிறப்பினை நீங்கிய செய்கையை உடையவாய் இறப்ப உயர்ந்த உவமேயத்திற்கு இறப்ப இழிந்த உவமானத்தினை உவமித்தலும், இறப்ப இழிந்த உவமேயத்திற்கு இறப்ப உயர்ந்த உவமானத்தினை உவமித்தலும், உவமேய அடைக்கு உவமானஅடை மிகப்புணர்த்தலும், உவமேய அடைக்கு உவமானஅடை குறையப் புணர்த்தலும், ஆண்பாற்குப் பெண்பால் உவமித்தலும், பெண்பாற்கு ஆண்பால் உவமித்தலும் ஒருமைப்பாற்குப் பன்மைப்பால் உவமித்தலும், பன்மைப்பாற்கு ஒருமைப்பால் உவமித்தலும் பெரியோர் ஆம் எனக்கொள்ளும் கடனிலவாம் என்றவாறு.

**ஆனை எருத்தம் அகழ்வான் வெரிந்ஏய்க்கும்**
**பூனை இடியேறுபோல் முழங்கும் - ஊனை**
**அயில் அரியேறு அன்னாள், இவள்; இவள்தன் நாசி**
**பயிலணி தாராகணம் ஒப்பாம்.** (223)

[யானையின் முதுகு நிலத்தை அகழ்ந்து எடுப்பவனுடைய முதுகினை ஒத்திருக்கும். பூனை பேரிடி போல முழங்கும். புலால் உண்ணும் ஆண்சிங்கத்தை ஒத்தவள் இவள். இவள் மூக்கில் அணியும் அணி விண்மீன்களைப்போல ஒளிவீசும்.]

இதனுள் இறப்ப இழிந்த அகழ்வான் முதுகினை இறப்ப உயர்ந்த யானையின் முதுகிற்கு உவமை கூறியதூஉம், இறப்ப இழிந்த பூனையின் முழக்கிற்கு இறப்ப உயர்ந்த இடியேற்றின் முழக்கை உவமை கூறியதூஉம், அரியேறாகிய இறப்ப உயர்ந்த அஃறிணை ஆண்பாலை உயர்திணைப் பெண்பாற்கு உவமை கூறியதூஉம், நாசி ஆபரணமான முத்தின் ஒருமைக்குத் தாராகணப்பன்மையை உவமை கூறியதூஉம் வழுவாயின.

**பைங்குவளை முல்லை பனிவண்டு உலாம் குமுதம்**
**திங்களிடத்து ஆயினபோல் செவ்விதரும், - இங்கிதமே**
**கற்று அமர்கூர் கண்நகைவாய் காமுற வாழ்வுஎய்தியஇம்**
**முற்றிழையாள் சோதி முகம். (224)**

இதனுள் உவமானமான குமுதத்துள் புணர்த்த வண்டிற்கு உவமேயம் இன்றி, உவமான அடைமிகுந்து வழுவாயிற்று.

[போரிடக்கற்றுக் கூர்மையுடைய கண், பற்கள், வாய் இவை விரும்புமாறு அமைந்த இத்தலைவியின் ஒளிபொருந்திய முகம், கருங்குவளை, முல்லை, குளிர்ந்த வண்டுகள் உலாவுகின்ற குமுதம் இவை சந்திரனிடத்து அமைந்தமைபோல அழகுதரும் குறிப்-பினை உடையது - என்ற கருத்தமைந்த இப்பாடலுள், உவமானமான 'வண்டுஉலாம் குமுதம்' என்ற உவமத்திற்கு வாய் உவமேயமாகும். குமுதத்துள் புணர்த்த வண்டுக்கு ஏற்ப, உவமேயத்துள் வாய்க்குப் புணர்த்த அடைஏதும் இன்று எனவே, இப்பாடலில் உவமான அடை மிகுந்து வழு ஆயிற்று.]

**தேன்அருவி நீர்அருவியோடே சிறந்துள நல்**
**தான வடமேரு எனும் சால்பிற்றே - மான்அனையார்**
**சித்திரப் பொற்கச்சு அணிந்து செய்ய மணிவடமும்**
**முத்தவடமும் பூண் முலை. (225)**

இதனுள் பொற்கச்சு அணிந்து என்ற உவமேயஅடைக்கு உவமானஅடை குறைந்து வழுவாயிற்று. பொற்கச்சு - பொன்எழுத்துக் கச்சு.

[மானை ஒத்த தலைவியின் அழகான பொன்எழுத்துக் கச்சணிந்து செம்மணி மாலையும் முத்துமாலையும் பூண்ட முலை தேன்அருவியும் நீர்அருவியும் சிறந்துள்ள மேருமலையை ஒத்த பெருமையை உடையது - என்ற இப்பாடலில், தேன்அருவி போன்ற மாணிக்கமாலையும் நீர்அருவி போன்ற முத்துமாலையும் உவமானங்களுக்கு ஏற்ற உவமேயங்களாக உள்ளன. உவமேயத்தில் உள்ள 'சித்திரப்பொற்கச்சு'க்கு உவமானம் இல்லை. எனவே, உவமேயஅடைக்கு உவமானஅடை குறைந்து வழு ஆயிற்று.]

**நமன்மடந்தை அன்னான் இவன்; இவன்தன் நாரி**
**சமன்அனையள்; ஈங்கு இவர்க்குத் தையால்! - அமர்புதல்வர்**
**எண்ணிருவர்க்கு ஒப்பாகும் அன்றே, யமன்சமரில்**
**பண்அமைத்துஆங்கு ஏறும் பகடு. (226)**

[தையலே! இத்தலைவன் யமனுடைய மனைவியைப்போல உள்ளான். இவன் மனைவி யமனைப்போல உள்ளாள். இவர்கள் புதல்வர் பதினறுவரும் யமன் போரில் ஆயத்தம் செய்து ஏறும் எருமைக்கடாவைப்போல உள்ளனர் - என்ற கருத்தமைந்த]
இப்பாடலில், உயர்திணைஆண்பாற்கு உயர்திணைப்பெண்பாலும், உயர்-திணைப்பெண்பாற்கு உயர்திணைஆண்பாலும், உயர்திணை ஆண்பால் பன்மைக்கு அஃறிணை ஆண்பால் ஒருமையும் சிறப்பில் தீர்ந்தனவாய் வழக்கின்றாய்க் கூறுதலால் வழுவாயிற்று.

**வால்இலாச் சம்புஎன வாழ்மதங்கா! வந்ததற்குப்**
**பாலிலா உண்டி படையேமால்; - மேலுமக்குக்**
**கூகைக்கறி இலையே; கோதிலாத் தேனுடனே**
**பாகைச் சொரிந்துஎன் பயன்? (227)**

["வால்இல்லாத நரிபோலப் பிறரைத் தந்திரத்தால் ஏய்த்து உயிர்வாழும் பாணனே! உனக்கு உணவு இடுவதற்குக் கோட்டானை யாங்கள் கறியாகச் சமைத்து

வைக்கவில்லை. குற்றமற்ற தேனும் வெல்லப்பாகுமே இங்கு உணவுகளாக உள்ளன. அவற்றை உனக்கு உணவாக அளிப்பதனால் யாது பயன்? நீ எங்கள் வீட்டை நோக்கி வந்ததற்கு உனக்கு உணவு படைக்கவேண்டும் என்றாலும், உனக்கு ஏற்ற உணவு எம்பக்கல் இல்லையாதலின் உனக்கு உணவிட முடியவில்லை" என்று தோழி பரத்தைஇல்லிலிருந்து தன் இல்லம் நோக்கி வந்த பாணனைப் பழித்துக் கூறுகிறாள்.]

இதனுள் பாணனை வால்இல்லாச் சம்பு எனப் பழித்து உவமை கூறுதல் வழு-வன்று (ஏற்பு உடையதே). சம்பு - நரி.

பகுதி - பரத்தையிற் பிரிதல். துறை - பாணனைப் பழித்தல். [27]

உவமஉருபுகள்

**113. பொதுவினும் சிறப்பினும் புணர்ந்துள வாகி**
**இதுவழக்கு இதுசெயுள் எனும்ஈ ரிடத்தும்**
**வெளிப்படை குறிப்புஎன விழுமிய நெறியால்**
**கொளப்படும் உவம உருபினைக் கூறின்**
**அன்ன போல அனைய மான**
**என்ன நேர இறப்ப நிகர்ப்ப**
**நாட நளிய நடுங்க நந்த**
**ஓட ஒன்ற ஒடுங்க ஒட்ட**
**கள்ள கருத காட்ட கடுப்ப**
**எள்ள விழைய எதிர ஏய்ப்ப**
**மருள மலைய மாற மதிப்ப**
**என்ற வந்த ஏர ஏய**
**ஆங்க ஒப்ப அமர இயைய**
**புல்ல உறழ புரைய பொருவ**
**அனை துணை கெழு வீழ் தழை செத்து அற்று அணி**
**என்றிவை நாற்பான் எட்டும் பிறவும்**
**ஒன்றிய திறத்தால் ஒழுகுதல் உளவே. [28]**

(எ-ன்) இஃது உவமேயத்தினையும் உவமானத்தினையும் ஒப்புமைப்படுத்துங்-கால் இடையினும் ஈற்றினும் வரும் உவமஉருபினை இனைத்து எனக் கூறுதல் நுதலிற்று.

(இ-ள்) கொள்ளப்படும் உவமஉருபினைக் கூறின் என்பது - இது வினைப்பால் உவமம், இது பயனிலை உவமம், இது மெய்ப்பால் உவமம், இஃது உருவின் உவமம் என நால்வகைத்தாக மனத்தான் மதித்துக் கொள்ளப்படுதலை உடையவாய்ப் பொதுவானும் சிறப்பானும் பொருந்துதல் உளவாய், இது வழக்கிடம் இது செய்யுளிடம் என இரண்டு இடத்தினோடும் கூடி வெளிப்படை குறிப்பு என வரூஉம் சொற்களுக்கு வரையறை கூறின், அவை அன்ன, போல என்பன முதலாக அற்று அணி என்பன ஈறாக எண்ணப்பட்ட நாற்பத்தெட்டும் பிறவுமாகிப் பொருந்தும் கூறுபாட்டான் ஒழுகலாறு உடையவாம் என்றவாறு.

பிறவும் என்றதனால், எடுத்து ஓதினவே அன்றி வெல்ல, வென்ற, வியப்ப, ஒத்த, ஒக்கும், தகைய, தகைப்ப, பொற்ப, காய்ந்த, நோக்க, மருளும், புரையும், துலை என்றல் தொடக்கத்தனவும், ஐந்தாம்வேற்றுமைஉருபாய் வரும் இன்னும், என, என்று என வரூஉம் எச்சவாய்பாடுகளாய் வருவனவும், பிறவும் கொள்க.

சொல்லினை இரண்டு நாலு மயக்கம். இவற்றுள் பலவும் செயஎன் எச்சமாய வாய்பாட்டான் வந்தன எனினும், போல என்னும் சொல் புலி போல வந்தான் என வினையெச்ச வாய்பாட்டான் வினைகொண்டும், புலிபோலும் மறவன் என்புழியும், புலிபோன்ற மறவன் என்புழியும் பெயரெச்ச வாய்பாட்டான் பெயர்கொண்டும், புலிபோல் மறவன் என்புழி இடைச்சொல் வாய்பாட்டான் பொதுவாயும் நிற்கும்.

இவ்வோதிய வாய்பாடெல்லாம் நான்கு உவமத்திற்கும் பொது என்பது ஈண்டுக் கூறினார். இனி, சிறப்புவகையான் உரியவாம் வகை ஒல்காப் புலமைத் தொல்காப்பியனாரும், உவமஇயலுள்

'அன்ன ஆங்க மான விறப்ப
என்ன உறழ தகைய நோக்கொடு
கண்ணிய எட்டும் வினைப்பால் உவமம்' (தொ. பொ. 287)
'அன்னஎன் கிளவி பிறவொடும் சிவணும்' (தொ. பொ. 288)
'எள்ள விழைய புல்லப் பொருவக்
கள்ள மதிப்ப வெல்ல வீழ
என்றுஆங்கு எட்டே பயனிலை உவமம்' (தொ. பொ. 289)
'கடுப்ப ஏய்ப்ப மருள புரைய
ஒட்ட ஒடுங்க ஓட நிகர்ப்ப என்று
அப்பால் எட்டே மெய்ப்பால் உவமம்' (தொ. பொ. 290)
'போல மறுப்ப ஒப்ப காய்த்த
நேர வியப்ப நளிய நந்தஎன்று
ஒத்துவரு கிளவி உருவின் உவமம்' (தொ. பொ. 291)
'தத்தம் மரபின் தோன்றுமன் பொருளே' (தொ. பொ. 292)

என்ற சூத்திரங்களான் உணர்க.

இவற்றுள் அணி என்பது முதலாய சில உருபுகள் ஈறு விகாரப்பட்டு நிற்பனவும் உள. அஃதேல், அணி, வந்த, துலை என்னும் உருபுகள் முன்னோர் கூறிய உவமஉருபுத்தொகைச் சூத்திரங்களுள் இல்லையாலோ எனின், அவை,

'முலை அணிந்த முறுவலாள்' (கலி கடவுள்வாழ்த்து) எனவும்,
'கயல்வந்த கண்ணியர்' (திருக்கோவை 381) எனவும்,
'தோல்வி, துலைஅல்லார் கண்ணும் கொளல்' (குறள். 986) எனவும்

இலக்கியங்களுள் கண்டமையால் காட்டியதுஎனக் கொள்க. ஒழிந்தனவாய் மறைந்த உவமஉருபுகளுக்கும் ஈண்டு இலக்கியம் காட்டில் இறப்பப் பெருகும். அவைகட்கும் வந்தவழிக் கண்டுகொள்க.

[சொல்லினை இரண்டு நாலு மயக்கம் என்றது, 113-ஆம் சூத்திரத்தின் நான்காம் அடியில் உள்ள உருபினைக் கூறின் என்ற சொற்றொடரை உட்கொண்டு கூறியதாம். 'உருபினைக் கூறின்' என்ற சொற்றொடருக்குச் சொற்களுக்கு வரையறை கூறின் என்று உரையாசிரியர் தாம் கூறிய உரைக்கு ஏற்ப, இரண்டன் உருபு தன்பொருளை விடுத்து நான்கன் உருபின்பொருளைத் தருதலின் இரண்டும் நாலும் மயக்கம் என்றார் உரையாசிரியர். இஃது உருபுமயக்கமாம்.

போல - வினையெச்ச வாய்பாடு; போலும், போன்ற - பெயரெச்ச வாய்பாடு; போல் - பொதுவான இடைச்சொல் வாய்பாடு.]

[அன்ன - எரி அகைந்த அன்ன தாமரைப் பழனத்து (அகம். 106)
போல - கடல்போல் தோன்றல காடுஇறந் தோரே (அகம். 1)
அனைய - குன்றின் அனையாரும் குன்றுவர் குன்றுவ,
குன்றி அனைய செயின் (குறள். )
மான - கயம்மூழ்கு மகளிர் கண்ணின் மானும் - (குறுந். 9)

என்ன - புலிஎன்னக் கலிசிறந்து உராஅய்
நேர - கார்விரி கொன்றைப் பொன்நேர் புதுமலர் (அகம். கடவுள்வாழ்த்து)
விறப்ப - புலிவிறப்ப ஒலிதோற்றலின்
நிகர்ப்ப - கண்ணொடு நிகர்க்கும் கழிப்பூங் குவளை
நாட - வேயொடு நாடிய தோள்
நளிய - வழக்கில் இல்லை.
நடுங்க - படங்கெழு நாகம் நடுங்கும் அல்குல்
நந்த - நந்தாத் தேனை (திருவாசகம் 9-15) ஒப்பில்லாத தேனை.
ஓட - செந்தீ ஓட்டிய வெஞ்சுடர்ப் பரிதி
ஒன்ற - வேல்ஒன்று கண்ணார்மேல் வேட்கைநோய் தீராமோ
ஒடுங்க - பாம்புஉரு ஒடுங்க வாங்கிய நுசுப்பின்
ஒட்ட - முத்துடை வான்கோடு ஒட்டிய முலைமிசை
கள்ள - கார்கள்ள உற்ற பேரிசை உதவி
கருத - மான்கருதும் மென்நோக்கியர்
காட்ட - மின்காட்டும் கொடிமருங்குல் (தேவா. 7011)
கடுப்ப - நீர்வார் நிகர்மலர் கடுப்ப (அகம். 11)
எள்ள - எழிலி வானம் எள்ளினன் தரூஉம், கவிகை வண்மைக் கடுமான் தோன்றல்
விழைய - மழைவிழை தடக்கை வாய்வாள் எவ்வி
எதிர - உமக்கு ஆர்எதிர் எம்பெருமான் (தேவா. 613-4)
ஏய்ப்ப - குறுந்தொடி ஏய்க்கும் மெலிந்து வீங்கு திவவின் (பெரும்பாண். 14)
மருள - வேய்மருள் பணைத்தோள் நெகிழ (குறுந். 318)
மலைய - வேயொடு மலைந்த தோள்
மாற - மணிநிறம் மாற்றிய மாமேனி
மதிப்ப - இருநிதி மதிக்கும் பெருவள் ஈகை
என்ற - வாய்என்ற பவளம்
வந்த - கயல்வந்த கண்ணியர் (கோவை 381)
ஏர - துளிதலைத் தலைஇய மழைஏர் ஐம்பால் (அகம். 8)
ஏய - செயலைஅம் தளிர்ஏய்க்கும் எழில்நலம் (கலி. 15)
ஆங்க - கயநாடு யானையின் முகன்அமர்ந் தாங்கு (அகம். 6)
ஒப்ப - ஒழுகை நோன்பகடு ஒப்பக் குழீஇ (அகம். 30)
அமர - பேரமர் மழைக்கண் (குறுந். 286),
மான்அமரும் மென்நோக்கு (பெரியதிரு. 11: 5-1)
இயைய - கார்இயையும் காவலன்தன் கை
புல்ல - புத்தேள் உலகின் பொன்மரம் புல்ல
உறழ - மின்உறழ் இமைப்பின் சென்னி பொறப்ப (முருகு. 85)
புரைய - மகன்தாய் ஆதல் புரைவதால் எனவே (அகம். 16)
பொருவ - விண்பொருபுகழ் விறல்வஞ்சி (அகம். 16)
அனை - குன்றின் அனையாரும் குன்றுவர் (குறள். 965)
துணை - துறந்தார் பெருமை துணைக்கூறின் (குறள். 22)
கெழு - கெழீஇய காமக் கிழத்தியின் பொருட்டா (இ. வி. சூ 432)
வீழ் - விரிபுனல் பேரியாறு வீழ யாவதும், வரையாது சுரக்கும் உரைசால் தோன்றல்
தழை - நிலம்தழைத்த நீள்பொறையினன்
செத்து - யாழ்செத்து, இருங்கல் விடர்அளை அசுணம் ஓர்க்கும் (அகம். 88)
அற்று - இறந்தாரை எண்ணிக்கொண் டற்று (குறள். 22)
அணி - முலை அணிந்த முறுவலாள் (கலி. கடவுள்வாழ்த்து)
வெல்ல - வீங்குசுரை நல்லான் வென்ற ஈகை
வென்ற - குகன்வேலை வென்று கொலைஆற்றலுறும் வன்கண் (மாறன். பாடல் 202)
வியப்ப - தண்தளிர் வியப்பத் தகைபெறு மேனி

ஒத்த - திரைத்தெள்ளமுதை ஒத்த மொழி (மாறன். பாடல் 203)
ஒக்கும் - ஒண்செங் காந்தள் ஒக்கும் நின்நிறம்
தகைய - பொருகளிற்று எருத்தின் புலித்தகைப் பாய்த்துள்
தகைப்ப - மதியம் தகைப்ப மலர்ந்த வாண்முகம்
பொற்ப - மதியம் பொற்ப மலர்ந்த வாண்முகம்
காய்த்த - வெயில்ஒளி காய்த்த விளங்குமணி அழுத்தின
மருளும் - மணிமருள் தெண்ணீர் (மலைபடு. 250)
புரையும் - தாமரை புரையும் காமர் சேவடி (குறுந். கட. வாழ்த்து)
துலை - தோல்வி துலையல்லார் கண்ணும் கொளல் (குறள். 986)
இன் - குளித்துப் பொருகயலின் கண்பனி மல்க
என - தூதுணம் புறவுஎனத் துதைந்தநின் எழில்நலம் (கலி. 29)
என்று - மதியம் என்று மலர்ந்த முகத்தள்
கொண்ட - யாழ்கொண்ட இமிழிசை இயன்மாலை அலைத்தரூஉம் (கலி. 29)
ஆர - மணிஆர் கண்டத்து எம்பெருமான் (பெரிய. திருநாவுக். 314)
நோக்க - மான்நோக்கு நோக்கு மடநடை ஆயத்தார்
ஏர்ப்ப - பொன்னை ஏர்ப்பப் பொருந்திய சுணங்கு
மாற்றிய - மணிநிறம் மாற்றிய மாமேனி
மறுப்ப - மணிநிறம் மறுத்த மலர்ப்பூங் காயா

தமிழில் வினைச்சொற்கள் பலவும் பெருங்காப்பியங்களில் உவமஉருபுகளாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. அவற்றைச் சீவகசிந்தாமணி முதலிய காப்பியங்களில் அவற்றிற்கு நச்சினார்க்கினியர் முதலிய சான்றோர் வரைந்த உரைகளின் துணைகொண்டு அறியலாம். 'உவமச் சொல்லே வரம்புஇகந் தனவே' என்று இதுபற்றியே முன்னவர் குறிப்பிட்டுள்ளனர்.] [28]

2-ஆவது உவமை அலங்காரம் முற்றும்.

## 3-ஆவது உருவக அலங்காரம்

### உருவகத்தின் இலக்கணம்

**114. முக்கியப் பொருளை ஒப்புடைப்பொருள் எனமதித்து**
**இருபெயர் ஒட்டாய் இசைப்பதும் உருவகம். [29]**

(எ-ன்) வைத்த முறையானே(87) உருவகம் என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) உவமேயப்பொருளையும் உவமப்பொருளாக உட்கொண்டு இரண்டுபொருளையும் இருபெயரொட்டாக ஒற்றுமை கொளுத்தி உரைப்பதும் உருவகம் என்னும் அலங்காரமாம் என்றவாறு.

உம்மையால், இரண்டு பொருளையும் ஒற்றுமை கொளுத்தாது, உவமையாதல் உவமேயமாதல் இரண்டில் ஒன்று உருவகச் சொல்லொடு தொக்க மாட்டேறு இல்லாது வரும் உருவகமும் உள என்றவாறு. மூன்று தொக்கு வருவனவும் உள. இவற்றிற்கு எல்லாம் செய்யுள் உருவகவிரியுள் முன்னர்க் காட்டுதும்.

அஃதாக; உவமையும் பொருளும் என இதன் முதல்நூல்உடையார் கூறவும், இந்நூலுடையார் முக்கியப்பொருளை முதல்வைத்தது யாதோ எனின், உவமை போலாது முக்கியப்பொருளை முதல் வைத்து ஒப்புமைப்பொருளை அதன்பின்னர் வைத்து ஒற்றுமை கொளுத்துவதே உருவகத்திற்கு மிக்கதோர் அறிகுறி என்பது தோன்ற வைத்தார்எனக் கொள்க.

[உவமேயமோ உவமானமோ உருவகச்சொல்லொடு மூன்றில் இரண்டு தொக்குவரும் உருவகம்: அரிதாளில் அன்பினை வித்தித் தவம் தினம் பொழிந்து ஞானம் உருவியபின் முத்தியை விளைக்கும் (236) - என உவமேயம் மாத்திரம் வர உவமானமும் உருவகச்சொல்லும் தொக்குவந்தன. அரிதாள் ஆகிய வயலில் அன்பாகிய விதையை விதைத்துத் தவமாகிய நீரைப்பொழிந்து ஞானமாகிய முளை முளைத்து வளர்தலான் முத்தியாகிய போகத்தை விளைப்பான் என உவமானமும் உருவகச்சொல்லும் விரித்துக்கொள்ளுமாறு வருதல் இரண்டு தொக்குவந்த உருவகமாம்.
உவமேயம் உவமானம் உருவகச்சொல் மூன்றும் தொக்கு அவை குறிப்பாற் கொள்ளப்படுமாறு அருகிவரும் உருவகவகையும் உண்டு.
'வருந்தி ஈன்றாள் மறந்து ஒழிந்தாள், வளர்த்தாள் சொல்கேட்டு இல்கடிந்தாள் ... கருங்குயிலே!' (சிந். 1661) குயிலாகிய நற்றாய் மறந்துவிட்டாள், காக்கையாகிய செவிலி தன்கூட்டிலிருந்து விரட்டிவிட்டாள் என்று குயிலாகிய பெண்ணை நோக்கிக் கனகமாலை கூறிய கூற்றில் உவமேயம் உவமானம் உருவகச்சொல் மூன்றும் 'வருந்தி ஈன்றாள் மறந்து ஒழிந்தாள், வளர்த்தாள் சொல்கேட்டு இல்கடிந்தாள்' என்ற தொடர்களால் குறிப்பால் பெறுமாறு அமைந்துள்ளன.
உவமையணியில் 'பால்போலும் இன்சொல்' என்றாற்போல உவமானமும் உவமஉருபும் பொதுத்தன்மையும் உவமேயமும் வரிசையாக அமைந்திருக்கும். உருவகஅணியில் உவமேயமும் உருவகச்சொல்லும் உவமானமும் வரிசையாக வாய்ஆகிய பவளம் என்றாற்போல அமைந்திருக்கும் ஆதலின், மாறன்அலங்காரத்துக்கு முதல்நூலாகிய தண்டியலங்காரத்துள், உருவகஅணியின் இலக்கணம்,

'உவமையும் பொருளும் வேற்றுமை ஒழிவித்து
ஒன்றுஎன மாட்டின்அஃது உருவகம் ஆகும்' (தண்டி. 36)

என்று கூறப்பட்டபோதிலும், அதனைப் பின்பற்றாமல் உவமேயத்தையும் உவமானத்தையும் ஒரேபொருளாகக் கருதி இருபெயர்ஒட்டாய் ஒன்றாய்க் கூறுவது உருவகம் என இவர் உவமேயத்தை முதலில் குறிப்பிட்டுள்ளார்.] [29]

உவமையும் உருவகமும்

**115. பொருள் முதலிலும் உவமையதாம் புணர்வுழி**
**ஒற்றுஇடை தோன்றல் திரிதலோடு ஒன்றிய**
**மற்றதற்கு உறுசொல் விரியா வயினே. [30]**

(எ-ன்) உவமைக்கும் உருவகத்திற்கும் எய்தியதோர் ஐயம் அறுத்து உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) முக்கியப்பொருள் முன்னும் உவமச்சொல் பின்னுமாக வருவது உருவகத்திற்கு மிக்க அறிகுறி என்றார்; அவ்வாறு அன்றிப் பொருள் முதலே வரினும் நிலைமொழியாகி உயிரும் ஒற்றும் ஈறாய் வரும் உவமேயச்சொல்லும், வருமொழியாய் அவை முதலே வரும் உவமச்சொல்லும் தம்மில் புணருமிடத்து அவற்றின் இடையில் ஒற்றுத் தோன்றல் திரிதல் இன்றி அவற்றோடு அவ்வுருவகத்திற்கு உரிய சொல்லும் விரியா இடத்து உவமையாம் பகுதியும் உள என்றவாறு.
உதாரணம்: வாய்ப்பவளம் (வாய் என்ற பவளம், வாய்பவளமாக) குழற்கொன்றை, கொங்கைக்குரும்பை எனவும் இவை உருவகம்.
வாய்பவளம், குழல்கொன்றை, கொங்கைகுரும்பை எனவரும் இவை உவமை.

'வாய்பவளம் துடிக்கின்றவா' (கோவையார் 32)
'குவவின கொங்கைகுரும்பை, குழல்கொன்றை' (கோவையார் 108)

எனவும் கண்டுகொள்க.

'ஒன்றிய' என்றதனால் வதனசந்திரன், கரகமலம், கரபுண்டரீகம் எனவும் நிலைமொழி உவமேயம் உயிரீற்றின் முன்னர் உவமையாய வருமொழி முதல் வல்லெழுத்து முன்னர் ஒற்றுமிகாது உருவகமாம் இடமும் உள. இது உவமவிரியுள், தலைதடுமாற்ற உவமையின்கண் பொருள் முதலே வந்தும், உவமை ஆயினவாறு கண்டுகொள்க.

[உருவகத்துள் உவமேயம் முன்னரும் உவமானம் பின்னரும் வரும்வழி உவமானம் வல்லெழுத்து முதல்மொழியாக வந்தால் வல்லெழுத்துமிக்கு வாய்ப்பவளம், கொங்கைக்குரும்பை என்றாற்போலவும் நிலைமொழி ஈறுதிரிந்து குழற்கொன்றை என்றாற்போலவும் வரும். இவற்றிற்கு வாயாகிய பவளம், கொங்கையாகிய குரும்பை, குழலாகிய கொன்றை என உருவகமாகப் பொருள்செய்க.

தலைதடுமாற்ற உவமையிலும் உவமேயம் முதலிலும் உவமானம் இடையினும் உவமஉருபு ஈற்றினும் வரும். உவமஉருபு தொக்கும் விரிந்தும் வரும். உவமஉருபு தொக்க நிலையில் உவமேயம் முன்னும் உவமானம் பின்னுமாக வந்த நிலையில் தலைதடுமாற்ற உவமை உருவகம்போலக் காட்சி வழங்கும். ஆனால் இடையே வருமொழி வல்லெழுத்து மிகுதலோ, நிலைமொழிஈறு திரிதலோ இராது. அதனைக்-கொண்டு அஃது உவமையணி என்று பொருள்செய்யப்படும்.

திருக்கோவையார் 32-ஆம் பாடலில், 'பாங்கன் தலைவியைக் குறிவழிக் காண்டல்' என்ற உட்பிரிவில்,

'வடிக்கண் இவை; வஞ்சி அஞ்சும் இடைஇது; வாய்பவளம்
துடிக்கின்றவா; வெற்பன் சொல்பரிசே'

என்ற அடிகளில், வாய்பவளம் துடிக்கின்றவா என்ற தொடருக்குப் பேராசிரியர் வாய் பவளம் துடித்தாற்போலத் துடிக்கின்றவாறு என்? என உவமையாகவே பொருள்-செய்துள்ளார். திருக்கோவையார் 108-ஆம் பாடலில் 'தலைவன் பாங்கிக்குத் தலைவியின் அவயவம் கூறல்' என்ற துறையில், 'குவவின கொங்கை குரும்பை; குழல் கொன்றை; கொவ்வை செவ்வாய்' என்ற முதல் அடிக்குப் பேராசிரியர் குவிந்த கொங்கைகள் குரும்பையை ஒக்கும்; குழல் கொன்றைப்பழத்தை ஒக்கும்; செய்யவாய் கொவ்வைக்கனியை ஒக்கும் என்று உவமையணியாகவே பொருள்செய்துள்ளார்.

இருபெயரொட்டாக வரும் வடசொற்கள் சந்தியில் மிகா ஆதலின் வதனசந்திரன், கரகமலம், கரபுண்டரிகம் என்பன இடம்நோக்கி உவமையாகவோ, உருவகமாகவோ பொருள் செய்யப்படல் வேண்டும். வருமொழி வல்லெழுத்தல்லாத ஏனைய எழுத்துக்-களில் தொடங்கினும் இந்நிலையே.]

[இருபெயரொட்டுக்கள் எல்லாம் வேற்றுமைமுடிபுடையன ஆதலின் உருவகத்தில் வலி மிகுகின்றது.] [30]

உருவக வகைகள்

**116. அதுவே, தொகையினும் விரியினும் தொடர்இரு வகைத்தே. [31]**

(எ-ன்) இஃது அவ்வுருவகம் இன்ன வகைப்படும் என்கின்றது.

(இ-ள்) அவ்வுருவகம் என்னும் அலங்காரம் தனக்கு உரிய சொல் தொக்கும் விரிந்தும் வருமொழியொடு தொடர்ந்து நிற்கும் இரண்டு கூறுபாடு உடைத்து என்றவாறு.

உம்மை இரண்டனுள், 'தொகையினும்' என்னும் முதல் உம்மை சிறப்பும்மை-யாதலால் அதற்கு உரிய சொல் தொக்கு வருதலே சிறப்புஉடைத்து எனக்-கொள்க. 'விரியினும்' என்ற ஏனையது இழிவுசிறப்பும்மை. [31]

அடையடுத்த உருவகம்

**117. அடை இடை புணரினும் கடிநிலை இலவே.** [32]

(எ-ன்) இஃது அவ்வுருவகம் தொகையினும் விரியினும் புணர்வுழி எய்துவதொரு வழுவமைப்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) இரண்டு பொருளையும் தம்மில் ஒற்றுமை கொளுத்தும்வழி இடைப்பட உவமைக்கண் அடைச்சொல் புணர்த்துக் கூறினும் உருவகமேயாம்; நீக்கப்படாது என்றவாறு.

உம்மையால், முதலே அடைபுணரினும் நீக்கப்படாதாம்; எனவே, தொகைநிலை வகையானும், அடைச்சொல் புணராமலும் உருவகம் புணர்ப்பதே சிறப்புடைத்து என்பதாம்.

இவற்றிற்குச் செய்யுள் வருமாறு:

**முருகுஅவிழ் அளகக்காட்டை முன்னிடா அல்குல்தேரும்**
**பருமணி வடத்தில் சேர்த்த படாமுலைக்களிறும் உந்திப்**
**புருவவில் குனித்து நாட்டப் பொருகணை உடக்கி மைந்தர்**
**செருஇழந்து ஓட மார்பில் செஞ்சவே செலுத்துவாரே** (228)

என்பது தொகைஉருவகம். இதனுள் படாமுலை, பொருகணை என்பன அடை. துறை - நாடுவாழ்த்து (குருகாமான்மியம்).

[நறுமணம் கமழும்படியான மயிர்முடியாகிய காட்டினை முன்னே கொண்டு, அல்குலாகிய தேரினையும், பெரிய மணிகளாலாகிய மாலைகளை அணிந்த சாயாத முலைகளாகிய ஆண்யானைகளையும் செலுத்தி, புருவமாகிய வில்லினை வளைத்துக் கண்களாகிய போரிடும் அம்புகளைத் தொடுத்துத் தத்தமக்கு உரிய கணவராகிய இளைஞர்கள் போர்க்களத்தில் வெற்றியை இழந்து ஓடுமாறு அவர்களுடைய மார்பங்களில் செலுத்துவார்கள் என்ற நாட்டுவாழ்த்துப்பாடலில், அளகக்காடு, அல்குல்-தேர், முலைக்களிறு, புருவவில், நாட்டக்கணை என்பன உருவகம். 'படா' என்ற அடை முலைக்கு உரியது; 'பொரு' என்ற அடை கணைக்கு உரியது.]

**கண்கழுநீராய்க் கரங்கள் காந்தளாய்த் தீங்கிளவி**
**பண்களாய்ச் செவ்வாய் பதுமமாய் - நண்பனே!**
**வாய்ந்த மடவரற்கு மாறன் மணிவரைவாய்**
**ஈர்ந்தண் பொழிலாம் இடம்.** (229)

இது விரிஉருவகம். பகுதி - பாங்கற்கூட்டம்; துறை - இயல்புஇடம் கூறல்.

[தன் பாங்கனிடம் தான் கண்ட தலைவியின் உடல் வருணனையையும் அவளைச் சந்தித்த இடத்தையும் குறிப்பிடத் தொடங்கிய தலைவன், "நண்பனே! கண்களாகிய கழுநீர்ப்பூக்களையும், கைகளாகிய காந்தட்பூக்களையும், இனிய சொற்களாகிய பண்களையும், சிவந்த வாயாகிய தாமரையையும் உடையவளாய் அமைந்த என்தலைவிக்கு மாறனுடைய அழகிய துடரிமலையில் உள்ள ஈரமான குளிர்ந்த சோலையே இருப்பிடமாகும்" என்று கூறும் இப்பாடலில், கண் கழுநீர் ஆய், கரங்கள் காந்தள் ஆய், கிளவி பண்கள் ஆய், வாய் பதுமம் ஆய் என உருவகச்சொல்லாகிய 'ஆய்' என்பது விரிந்து வந்துள்ளமையால், இப்பாடற்கண் விரிஉருவகம் வந்துள்ளது.] [32]

தொகைவிரி உருவகம்

**118. ஒருதொடர்பினுள் இருமையும் உறல் உளவே.** [33]

(எ-ன்) தொகைவிரி உருவகம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) உருவகம் தொக்கும் விரிந்தும் வரும் இருதன்மையும் ஒருசெய்யுளகத்து வருதலும் உள என்றவாறு.

**பெண்ஆரமுது அளித்த பேரின்பத் தீஞ்சுவைபெற்று**
**உண்ணா நினைவேற்கு உறுதிஎனக் - கண்ணால்**
**அளித்த அருள்நோக்காம் அமிர்தினைக் கண்டு உள்ளம்**
**தளிர்த்ததை இங்கு ஆர்க்கு உரைப்பேன், தான்? (230)**

இது தொகைவிரி உருவகம். துறை - பாங்கியை அறிதல்.

[இடந்தலைப்பாட்டில் புணர்ச்சிக்குப்பின் தோழியர்குழாத்தை அடைந்த தலைவி அக்கூட்டத்தில் தன் உயிர்த்தோழியைக் கண்குளிர நோக்கி அவளுடன் உரையாடிக்கொண்டிருந்ததை மறைவில் இருந்து நோக்கிய தலைவன் தலைவியின் உயிர்த்தோழியை அறிந்து அந்த மகிழ்வினால், 'பெண்ணாகிய அரிய அமுது எனக்கு அளித்த பேரின்பமாகிய இனிய சுவையைப் பெற்று நுகர்ந்து அதனையே நினைத்துக்கொண்டிருக்கின்ற எனக்கு அவ்வின்பம் தோழியின் வாயிலாக உறுதிப்படுவதாகுக என்று தலைவி தன் கண்களால் தோழியைக் காட்டித்தந்த அருள்நோக்கமாகிய அமிர்தினைக் கண்டு என்உள்ளம் உவகையுற்ற செயலை யான் யாரிடம் கூறுவேன்?' எனத் தலைவன் தனக்குள் மகிழ்ந்து கூறிக்கொண்ட இப்பாடலில், பெண்ஆரமுது, பேரின்பத்தீஞ்சுவை என்ற தொகைஉருவகங்களும், அருள்நோக்காம் அமிர்தம் என்ற விரிஉருவகமும் கலந்து வந்தவாறு. ஆர், பேர், தீம் என்பன அடை.]

**கதிர்முலைக்குவடும், திண்தோள் சயிலமும் கலவிமுந்நீர்**
**எதிர்கொள நிறீஇ மத்தாக இவறலாம் தாம்பு பூட்டி**
**முதிர்பொறிப் புலவர் மாண்பின் முறைமுறை சுழற்றுமாற்றான்**
**சதிர்பெறப் பிறந்த இன்பத் தனிஅமிர்து அருந்தும் நீரார். (231)**

திணை - பாடாண்: துறை - நாடுவாழ்த்து.
இதனுள்ளுட் முதலேயும் இ [illegible] உவமேயத்தினும் உவமத்தினும் அடைச்சொல் புணர்ந்ததூஉம் காண்க. [illegible]ருகாமான்மியம்)

[புணர்ச்சியாகிய கடலிலே திண்ணிய தோள்களாகிய மலைகளையும் ஒளிவீசும் முலைகளாகிய சிறுமலைகளையும் தம்பமாகவும் அதில் பிணித்த மத்தாகவும் நிறுத்தி, விருப்பமாகிய கடைகயிற்றைப் பூட்டி ஐம்பொறிகளாகிய தேவர்கள் முறையாகக் கடைந்ததனால் நலன் கிட்டுமாறு பிறந்த இன்பமாகிய ஒப்பற்ற அமுதத்தைக் குருகூரில் வாழ்ந்த இல்லறத்தவராகிய ஆடவரும் மகளிரும் நுகரும் இயல்பினர் - என்ற கருத்தமைந்த இப்பாடலில், கதிர்முலைக்குவடு, திண்தோள்சயிலம், கலவிமுந்நீர், இன்பத்தனிஅமிர்து என்பன தொகைஉருவகங்கள். இவறல்ஆம்தாம்பு - விரிஉருவகம். இப்பாடலில் கதிர், திண் என்பன உவமேய அடை; தனி என்பது உவமான அடை.] [33]

தொகையும் விரியும் பொதுவாதல்

**119. உரைத்தவை இனிவரும் விரிக்கு உறு பொதுவே. [34]**

(எ-ன்) இதுவும் அத்தொகைவிரிகளான் எய்தும் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) இங்ஙனம் உரைத்த தொகையும் விரியும் மேல் கூறப்படும் உருவகவிரிக்கு மிக்க பொதுஇலக்கணமாம் என்றவாறு. [34]

உருவகவிரி

**120. இயைபு இயைபுஇன்மை ஏகதேசம்**
**ஒருபொருள் பலபொருள் உருவகம் சிறப்பே**
**விருத்தம் அவிருத்தம் நட்பு வியனிலை**
**ஏக அங்கம் அநேக அங்கம்**
**அவயவம் அவயவி முற்றுஎன ஆய்ந்த**
**நவைஅறு சிறப்பின் நானான்கு அதன்விரியே. [35]**

(எ-ன்) உருவகம் என்னும் அலங்காரத்தின் விரிஇலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) இயைபு உருவகமும், இயைபுஇல் உருவகமும், ஏகதேச உருவகமும், ஒருபொருள் உருவகமும், பலபொருள் உருவகமும், உருவகஉருவகமும், சிறப்பு உருவகமும், விருத்த உருவகமும், அவிருத்த உருவகமும், நட்பு உருவகமும், வியனிலை உருவகமும், ஏகாங்க உருவகமும், அநேகாங்க உருவகமும், அவயவ உருவகமும், அவயவி உருவகமும் முற்று உருவகமும் எனக் குற்றமற்ற சிறப்பினைஉடைய உருவகவிரி பதினாறாம் என்றவாறு.

இவற்றிற்கு எல்லாம் உருவகம் என்னும் பெயர் அதிகாரத்தால் கூட்டி உரைத்ததனோடு எண்ணும்மைத்தொகையும் விரித்து உரைக்கப்பட்டது. நட்பு என்பது சமாதானம். இவை எல்லாம் சொல்லின்முடியும் இலக்கணத்தன. அல்லது உரையிலும் கொள்க.

அவற்றுள்

1. இயைபு உருவகம் என்பது ஒருதொடர்பினுள் பல பொருளையும் உருவகம் செய்யுங்கால் தம்முள் காரணகாரியம் இயைபு உடையவாக வைத்து உருவகம் செய்வது.

**நித்தர் முத்தரின்புகழ் நிபுணன் பராங்குசன்**
**உத்தம ஞானம்என்று ஒளிர்ந்திடும் பாற்கடல்**
**புரந்த செந்தமிழ் மறையாய புத்தமிர்தம்**
**நிரந்தரம் உலகில் மெய்ந்நெறிநிலை தழைவான்**
**பூமகள் எனும்பெயர் புனை மலர்நிதியொடுஅந்**
**தாம மாதவன்எனும் சங்கநீள் நிதியினை**
**அருள்உடைமையின் வெளிப்படுத்து அருளவும், அவை**
**வருபவர் வருகஎன வாழ்வுபெற்று இருப்பவும்,**
**வாழ்நாள் அதன்கண் வழிபடு சரிதையின்**
**வீழ்நாள் படாமை வீட்டினை எய்தாது**
**ஒல்லையில் பிறந்துஇறந்து உழல்வோர்**
**வல்வினை அதனில் வலியதுஒன்று இலையே. (232)**

இஃது இயைபு உருவகம்.

(இ-ள்) அநந்த கருடசேனாபதிகளோடும் பரமபதத்து முத்தரும் புகழும் மிகவும் வல்லோன் ஆகிய சீபராங்குசன் திருஞானம் என்று ஒளிரும் திருப்பாற்கடல் அளித்த திருவாய்மொழி என்னும் புத்தமிர்தம் எல்லாநாளும் உலகின்கண் ஸ்ரீமந்நாராயணனே பரப்பிரமம் என்னும் உண்மைமார்க்கநிலை தழைக்கும்படி, மலர்மடந்தை எனப் பெயர்புனை பதுமநிதியுடன் கூடிய பரமபதத்தை உடைய மாதவன் என்னும் சங்கநீள்நிதியைத் தனது திருவுள்ளக்கருணை உண்டான

தன்மையால் வெளியிடவும், அவை ஈருடல் ஏகமாகி முத்திவேண்டினவர் வருவார் வருக என்று தம்மில் நீங்காது வாழ்ந்திருப்பவும், தமக்குள்ள வாழ்நாள் வீழ்நாள் படாமை மனோவாக்குக்காயங்களால் அருச்சனைபுரியும் ஒழுக்கத்தினால் மோக்கத்தினைப் பொருந்தாது, சிறுவரையில் .பிறந்தும் இறந்தும் உழல்வோர் உம்மையில் இழைத்த தீவினை போல வலியது ஒன்று இல்லை என்றவாறு.

மலர்நிதி - பதுமநிதி; சங்கநீள்நிதி - பாஞ்சசன்னியத்தைத் தரித்த பெரியநிதி; திருவும் மாயோனும். இதனுள் திருப்பாற்கடல் முதலாக அடைவே காரணகாரியத்துடன் இயைந்து உருவகம் ஆயினவாறு காண்க. பா - நேரிசை ஆசிரியம்.

திணை - பாடாண்பொதுவியல். துறை - பனுவல் வாழ்த்து.

[நித்தர் - பரமபதத்தில் அநாதிகாலமாகவே இருக்கும் ஆதிசேடன், கருடன், சேனை முதலியார் போல்பவர். முத்தர் - இவ்வுலகில் பிறந்து வீடுபேற்றில் விருப்புற்று முயன்று வீடுபெற்ற ஆன்மாக்கள். பராங்குசன் - நம்மாழ்வாருக்குச் சான்றோர்கள் வைத்த பெயர். பரசமயவாதிகளான யானைகளை அடக்கிவைக்கும் யானைத்தோட்டி போன்றவர் என்பது பொருள். ஞானமாகிய பாற்கடலில் பிறந்த திருமகளாகிய பதுமநிதியுடன் கூடிய திருமாலாகிய சங்கநிதி எனப்பாற்கடலையும் அதன்கண் பிறந்த பதுமநிதி சங்கநிதி என்பனவற்றையும் முறையாக உருவகம் செய்தமையால் இப்பாடலில் இயைபுஉருவகம் அமைந்தவாறு. சிறுவரை - சிறிய வாழ்நாள். உம்மை - சென்ற பிறப்பு.]

2. இயைபுஇல் உருவகம்

**ஆரவடம் நீர்அருவியாம், மாணிக்கத்**
**தார்கெழுசீர்த் தேன்அருவி தானாகப் - பேரழகு**
**பாரிக்கும், மாறன் பனிவரைமான், வார்புனைந்து**
**பூரிக்கும் கொங்கைப்பொருப்பு. (233)**

இஃது இயைபுஇல் உருவகம். ஆரவடம் - முத்துவடம். மாணிக்கத்தார் - மாணிக்கமாலை.

பகுதி - பாங்கற்கூட்டம். துறை - செவ்வி செப்பல்.

[தலைவன் கூறிய தலைவியைக் கண்டு வந்த பாங்கன் தலைவனிடம் கூறியதாக இப்பாடல் அமைந்துள்ளது. பேரழகு மேம்படும் மாறனுடைய குளிர்ந்த மலையிலே மான் போன்ற தலைவியின் கச்சணிந்த கொங்கையாகிய மலைகள் முத்துமாலையாகிய நீர்அருவியையும் மாணிக்கமாலையாகிய தேன்அருவியையும் கொண்டு பெருத்துக் காணப்படுகின்றன.

முலை, முத்துவடம், மாணிக்கமாலை இவை மலை, நீர்அருவி, தேன்அருவிகளாக உருவகிக்கப்பட்டுள்ளன. இவை காரணகாரியத் தொடர்பு இல்லாத இயைபுஇல் உருவகம் என இவ்வாசிரியர் கருதுகிறார். மலையில் அருவிகள் விழுதல் காரணகாரியத் தொடர்பற்றவை என்று கருதுவது பொருந்துவதாகத் தெரியவில்லை.]

3. ஏகதேச உருவகம் என்பது ஒருசெய்யுளகத்து ஓரிடத்து ஒருபொருளை உருவகம் செய்யுங்கால் மாட்டேறு பெற உருவகம்செய்து, அப்பொருளோடு சம்பந்தம்உறப் பிறிது ஒருபொருளைச் செய்யுளகத்துப் பிறிதோரிடத்து மாட்டேறு பெற உருவகம் செய்யாது தொகைநிலை வாய்பாட்டால் கூறுதல்.

**அறியாமை என்னும் அகஇருளைச் சீக்கப்**
**பிறியாது அறிவு இருக்கப்பெற்றும் - குறியாத**
**தீச்சொல் பயில்வரே, செண்பகமாறன் பவள**
**வாய்ச்சொல் திறம் பயிலாமல். (234)**

இஃது ஏகதேச உருவகம். இதனுள் அறியாமை என்னும் அகஇருளை என மாட்டேறு பெற உருவகம் செய்ததனோடும் எதிராகச் சம்பந்தமுற 'ஞானமாம் விளக்கு' என மாட்டேறு பெற உருவகம் செய்யாது தொகைநிலை வாய்பாட்டான் 'அறிவு' எனக்கூறியவாறு காண்க.

செண்பகமாறன் பவளவாய்ச்சொல் - திருவாய்மொழி. திறம் - சித்து அசித்து ஈச்சுரத்தை மயக்கம் அற விளங்கக் காணும் கூறுபாடு. பயிலாமல் - இடைவிடாது உணர்வினால் சிந்தியாமல். இஃது உவமானமும் உருவகஉருபும் ஆகிய இரண்டும் தொக்க தொகைஉருவகம். ஞானவிளக்காவது திருவாய்மொழி. பிறர் அறியாமை என்னும் இருட்டுஅறக் கூறிய ஞானமாகிய விளக்கு.

பயில்வரே என்பது பரசமயவாதியரை. ஏகாரம் இரக்கத்தின்கண் குறிப்பு.

திணை - பாடாண்; துறை - பனுவல் வாழ்த்து.

[அறியாமை என்னும் உள்இருளைப் போக்க ஆன்மாவை விடுத்து நீங்காமல் ஞானம் இருந்தும், சண்பகமாலையை அணிந்த சடகோபனுடைய திருவாய்மொழி கூறிய முப்பொருளை இடைவிடாது சிந்தியாமல் பரசமயவாதியர்கள் உண்மையைக் குறிப்பிடாத பொருத்தமற்ற நூல்களை இடைவிடாமல் சிந்தித்துக் காலத்தை வீணாக்குகிறார்களே என்றவாறு.

ஏகதேசம் - ஒருகூறு. ஒருபகுதியை உருவகம் செய்து மறுபகுதியை உருவகம் செய்யாமல் விடுப்பது ஏகதேசஉருவகம். அறியாமையாகிய இருள் என்பதற்கு ஏற்ப, அறிவாகிய விளக்கு என்று உருவகம் செய்யாமை காண்க.]

**புன்பனுவல் நஞ்சம் பொசிக்கின்ற பேதையர்பேர்**
**இன்பம்உற, மெய்உணர்வார் ஏனோரும் - தன்பால்**
**விருந்துஅருந்தத் தான்அருள் நாவீறனார் கூறும்**
**மருந்துஅருந்தார், அந்தோ! மதித்து.** (235)

இதுவும் அது. இதனுள் நாவீறனார் கூறும் மருந்து என்றது திருவாய்மொழியாகிய மருந்து. மருந்து என்பது அமிர்தம். எனவே, திருவாய்மொழியாகிய மருந்து என உருவகம் செய்ததனோடும் சம்பந்தம் உறும்படி 'பிறவியாகிய பிணியைத் தீர்த்து முத்தியாகிய பேரின்பத்தைத் தரும் மருந்து' என உருவகம் செய்யாமல் உவமேயம் முதலிய மூன்றினையும் இருவகைத்தொகைநிலை வாய்பாட்டால் கூறியவாறு காண்க.

மெய்உணர்வார் - தத்துவத்திரயத்தின் உண்மை உணர்வார். தன்பால் விருந்து அருந்த - அம்மூன்றினையும் மயக்கமற உணர்த்தும் ஞானமாகிய அமிர்தத்தைத் தம் மெய்உணர்வான் உவட்டாது புதுவதுபுதுவதாக உருசிக்கவும் என்க. 'அருந்தார் அந்தோ' என்பது இரக்கம். மெய்ப்பொருள்மாறன் - உண்மைப்பொருளை உணர்ந்த மாறன். உண்மைப் பொருளாகிய மாறன் எனினும் ஆம். துறை - பனுவல் வாழ்த்து.

[அற்பமான நூல்களாகிய விடத்தினை உண்ணும் அறிவிலார்களும் வீடுபேறு அடைய, முப்பொருளின் உண்மையை உணர்கின்ற மற்றவரும் தன்னிடம் அம்முப்பொருள்களையும் மயக்கமற உணர்த்தும் ஞானமாகிய விருந்தினை அருந்துமாறு அருளும் மாறன் கூறும் அமுதத்தை அதன் சிறப்பினை மனங்கொண்டு நுகராமல் வீழ்நாள் கழிக்கின்றார்களே!

திருவாய்மொழி ஆகிய மருந்து என்பது உருவகம்.

பிணி, இன்பம், மருந்து என்ற மூன்றினும் உவமேயமும் உருவகஉருபும் தொக்குநிற்கின்றன. இவை முறையே பிறவியாகிய பிணி, முத்தியாகிய பேரின்பம், மாறன் கூறும் திருவாய்மொழி ஆகிய மருந்து என விரியும். நாவீறனார் கூறும் மருந்து என்பதன்கண் நாவீறனார் கூறுவது என்பது குறிப்பினால் உவமேயமாகிய திருவாய்மொழியைப் பெறப்படச்செய்தது.

மெய்ப்பொருள் மூன்று - சித்தாகிய சீவான்மா, அசித்தாகிய பிரகிருதி, ஈசுவரம் ஆகிய பரமாத்மா இவற்றின் தனித்தன்மை.]

**மிக்க அரிதாளின் மெய்அன்பினை வித்தித்**
**தக்க தவம் தினமும் தான் பொழிந்துஉள் - புக்கதோர்**
**ஞானம் உருவியபின் நன்முத்தியை விளைக்கும்,**
**மானபரன் காரிதரு மன்.** (236)

இஃது உவமையும் உருவகஉருபும் மாட்டேறு இல்லாது வந்த உருவகம். என்னை? அரிதாள் ஆகிய செய்யின்கண் அன்பாகிய வித்தை விதைத்துத் தவமாகிய நீரைப் பொழிந்து ஞானம் ஆகிய முளை உருவியபின் முத்தியாகிய போகத்தை என மாட்டேறு பெறாது வந்தமையான் உணர்க.
ஒழிந்த அகலம் உரையில் கொள்க.
திணை - வாகையைச் சார்ந்த புறத்திணை. துறை - அறக்களவழி.
இவை மூன்றும் மாட்டேறு இலாது வந்த உருவகம். இவற்றிற்கு,

அறஆழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்கு அல்லால்
பிறஆழி நீந்தல் அரிது (குறள். 8) எனவும்,
சினம்என்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனம்என்னும்
ஏமப் புணையைச் சுடும் (குறள். 306) எனவும்,
பவழவாய்ச் செறுவுதன்னுள் நித்திலம் பயில வித்திக்
குழவிநாறு எழுந்து காளைக் கொழுங்கதிர் ஈன்று (சிந்தா. 379) எனவும்,
அஞ்சுவரு தானை அமர்என்னும் நீள்வயலுள்
வெஞ்சினம் வித்திப் புகழ்விளைக்கும் (புற. வெ. மா. வாகை 5) எனவும்,

முந்துநூல்களிலும் அடைவே வந்தவாறு காண்க.
[இப்பாடலில் உவமேயம் மாத்திரமே உள்ளது. உருவகஉருபும் உவமானமும் மறைந்துள்ளன. எனவே உவமேயம் உவமத்தோடு ஒன்றாக இணைத்துக் கூறும் செய்தி வெளிப்படையாக இல்லை. இப்பாடலில் உவமேயங்களாகிய எம்பெருமானுடைய திருவடிகள், அன்பு, தவம், ஞானம், முத்தி, காரி தரும் மன் என்பனவே உள. உவமைகளாகிய வயல், விதை, நீர், முளை, போகம், உழவன் என்பனவும் உருவக உருபும் இல்லை.
பெருமையால் மேம்பட்ட காரியார் புதல்வனாகிய மாறன் என்னும் தலைவன், மேம்பட்ட எம்பெருமான் திருவடிகளில், உண்மையான அன்பினை விதைத்து, தக்க தவத்தினை நாள்தோறும் தான்பொழிந்து, ஞானம் முளைத்தபின், சிறந்த முத்தியை விளைப்பான். காரி தரு மன் என்ற எழுவாய் விளைக்கும் என்ற வினையைக் கொண்டு முடிதலின், மன் ஆகிய உழவன் என்பது குறிப்பால் பெறப்பட்டது.
பிறப்பாகிய கடல் என்பதற்கு ஏற்பத் தாள் ஆகிய புணை என்று சுட்டப்படவில்லை. ஏமப்புணை என்பதற்கு ஏற்பப் பிறவி என்னும் கடலுள் அமுந்தாமல் வீடு என்னும் கரையில் ஏற்றுகின்ற என்பது சுட்டப்படவில்லை.
பவழவாய் ஆகிய செறுவு என்பதற்கு ஏற்ப நித்திலம் ஆகிய விதை சுட்டப்படவில்லை. அமர் என்னும் நீள்வயல் என்பதற்கு ஏற்பச் சினமாகிய விதை என்பதும் புகழாகிய போகம் என்பதும் சுட்டப்படவில்லை.
234 ஆம் பாடலுள் ஏகதேசஉருவகம் வெளிப்படையாக உள்ளது.
235, 236-ஆம் பாடல்களுள் ஏகதேசஉருவகம்தானும் 'நாவீறனார் கூறும் மருந்து', 'மானபரன் காரி தரு மன்' என்புழிக் குறிப்பாகவே உள்ளது. இவை இரண்டுபாடலையும் தொகைஉருவகத்துக்கு எடுத்துக்காட்டுக்களாகக் கோடலே மிகவும் பொருத்தமுடைத்து. 'சினம்என்னும்' என்ற பாடலில், உவமேயம், உருவகஉருபு, உவமானம் மூன்றும் மறைய, ஏமப்புணை என்ற ஏகதேசஉருவகத்தால், 'பிறவியாகிய கடலுள் அமுந்தாமல் வீடுபேறாகிய கரையை அடையச்செய்யும்' என்பன குறிப்பால் பெறப்பட்டன. 114-ஆம்

சூத்திரஉரையுள் மூன்றுதொக்கு வருவனவும் உள என்று கூறியதற்கு இது சிறந்த எடுத்துக்காட்டு ஆகும்.]

4. ஒருபொருள் உருவகம் என்பது உயர்திணை அஃறிணை என்ற சொல்லப்பட்ட காட்சிப்பொருளும் கருத்துப்பொருளும் ஒருசெய்யுளகத்து வந்தால் அவற்றுள் ஒருபொருளை உருவகம் செய்தல்.

**பிறப்பார் இறப்பார், பிறப்பாய வேலை**
**துறப்பான் ஒருபோதும் தூவார், - சிறப்பாகும்**
**செய்படைத்த தென்அரங்கர் சேவடிமேல் மானிடராய்க்**
**கைபடைத்தும் வாழ்ந்த கதை.** (237)

இஃது ஒருபொருள் உருவகம். அரங்கர், சேவடி, மானிடர்கை என்னும் உயர்திணை அஃறிணைகளை உருவகம் செய்யாது கருத்துப்பொருளாகிய பிறப்பு என்னும் அஃறிணையை உருவகம் செய்தலான் என்று அறிக.
திணை - பாடாண்; துறை - வாயுறைவாழ்த்து.

[மேம்பட்ட வயல்வளமுடைய திருவரங்கத்து எம்பெருமான் திருவடிமேல் வணங்காது கைகளை உடைய மனிதராய் வாழ்ந்தும் பிறப்பாகிய கடலைக்கடந்து முத்தியாகிய கரையை அடைய முயலாமல், பிறக்கின்றவர் யாவரும் வீணாக இறக்கின்றார்களே என்றவாறு.
'மொழியும்எங் கடுஞ்சொல் முறையுளி நிற்பின், வழிபயன் படூஉம் எனும் வாயுறை-வாழ்த்து'.]

5. பலபொருள் உருவகம் என்பது உயர்திணை அஃறிணை என்று சொல்லப்பட்ட காட்சிப்பொருளும் கருத்துப்பொருளும் ஆகிய இருபொருளையும் ஒருசெய்யுளகத்து உருவகம் செய்தல்.

**தீதுஅற்ற மெய்ஞ்ஞானத் தெப்பமுடன் மேதகுநால்**
**வேதக் கடல்கடந்த வித்தகத்தால், - கோதற்ற**
**அந்தாமத் தீவினுள்புக்கு ஆழியான் ஆம்மணியைத்**
**தந்தான் நம்பூதூர் வந்தான்.** (238)

இது பலபொருள் உருவகம். அந்தாமத்தீவு - விரசைக்கு அக்கரையாகிய பரமபதம்.
திணை - பாடாண். துறை - அறுமுறைவாழ்த்தினுள் முனிவனை வாழ்த்துதல்.

[குற்றமற்ற மெய்ஞ்ஞானமாகிய தெப்பத்தாலே, மேம்பட்ட நான்கு வேதங்களாகிய கடல்களையும் கடந்த சதுரப்பாட்டினாலே குற்றமற்ற வைகுந்தமாகிய தீவினுள் புகுந்து, எம்பெருமானாகிய விலைமதிக்கமுடியாத இரத்தினத்தைப் பெரும்பூதூரில் அவதரித்த இராமாநுசன் நமக்கு வழங்கியுள்ளான். இதனுள் ஞானம், வேதம், அந்தாமம், ஆழியான் ஆகிய நான்கும் உருவகம் செய்யப்பட்டவாறு.]

6. உருவகஉருவகம் என்பது ஒன்றனை முதலே உருவகம் செய்து அதனைப் பெயர்த்தும் உருவகம் செய்தல்.

**மத்தம் புரிஅவிச்சை வார்ஆழியாம் இருள்என்**
**சித்தம்இனித் தேறுமே, தேமகிழ்தார் - முத்தன்**
**முகத்தாமரையாம் முழுமதி என் செவ்வி**
**அகத்தா மரையகத்து ஆக.** (239)

இஃது உருவகஉருவகம். இதனுள் மத்தம் - மயக்கம். புரிதல் - தருதல். அவிச்சை - அறியாமை. அவிச்சையாம் வாராழி என உருவகம் செய்ததனை

மறித்தும் இருள்என உருவகம் செய்ததும், முகத்தாமரையாம் முழுமதி எனவும் உருவகஉருவகம் வந்தவாறும் காண்க.
துறை - இதுவும்அது.
[முத்தி அளிக்கவல்ல மாறனுடைய முகமாகிய தாமரையாகிய முழுச்சந்திரன் என்னுடைய அழகிய உள்ளமாகிய தாமரையினுள் இருக்கவே, அறியாமையைத் தரும் அஞ்ஞானப் பெருங்கடலாகிய இருளை என் உள்ளம் தெளிந்து அதிலிருந்து விடுபடும். அவிச்சை ஆழியாம் இருள், முகத்தாமரையாம் முழுமதி என்பன உருவகஉருவகம்.]
7. சிறப்பு உருவகம் என்பது ஒருபொருளை எடுத்து அதற்குச் சிறந்த அடைகளை உருபித்து அவற்றானே அதை உருபித்து உரைப்பது.

**நாரம் குழலாய் நளினம்முகமாய் முகுளம்**
**கூர்வெம் முலையாய்க் கொடிஇடையாய் - ஊர்திரைகள்**
**வெண்துகில தாகி விளங்கும், மகிழ்மாறன்**
**வண்குருகூர்த் தண்பொருநை மாது.** (240)

இது சிறப்பு உருவகம். நாரம் - பாசி. வெம்முலை - விருப்பத்தைத் தரும் முலை. பொருநைமாது - பொருநையாகிய பெண். துறை - நதிவாழ்த்து.
[மகிழம்பூமாலையை அணிந்த மாறனுடைய வளமான குருகூரில் இருக்கும் குளிர்ந்த பொருநையாகிய பெண், பாசியாகிய கூந்தலையும் தாமரையாகிய முகத்தையும் தாமரைமொட்டுக்களாகிய அழகுமிக்க விரும்பத்தக்க முலைகளையும், கொடிகளாகிய இடையினையும், அலைகளாகிய வெள்ளாடையையும் கொண்டு விளங்குகிறாள் - என்ற கருத்து அமைந்த இப்பாடலில், பொருநை என்ற ஆறு உருவகம் செய்யப்பட்டதனோடு அவ்வாற்றில் உள்ள பாசி, தாமரை, தாமரைமொட்டு, கொடிகள், அலைகள் என்ற அடைகளும் உருவகம் செய்யப்பட்டவாறு. உருபித்தல் - உருவகம்செய்தல்.]
8. விருத்தஉருவகம் என்பது ஒருபொருட்குக் கூடாதன பலவும் கூட்டி உருவகம் செய்வது.

**வேம்பால் இசைந்தசுவை வெவ்விடத்தினோடு உதித்தது**
**ஆம்பாலது அன்று, அறலின்பால் அன்று, - பாம்பால்**
**இமிழ்திரை வாயில் பிறந்ததுஎன்பது அன்று, மாறன்**
**தமிழ்மறையாம் செஞ்சொல் அமிர்தம்.** (241)

இது விருத்தஉருவகம். வேம்பு - கைப்பு. காரிமாறப்பிரான் திருப்பவளத்தில் பிறந்த திருவாய்மொழியாகிய இனிய சொல்லின்மயமாம் அமிர்தம், கைப்பைத் தனக்குச் சுவையாக உடைய நஞ்சினோடும் பிறந்ததாம் பகுதியை உடையதன்று; சலத்தினது மயமாம் பகுதியை உடையதூஉம் அன்று. பாம்பாகிய தாம்பால் ஆரவாரிக்கும் திரையை உடைய கடலைக் கடையப் பிறந்தது என்று கூறுவதூஉம் அன்று என்றவாறு.
அமிர்திற்கு விடத்தினோடு உதிப்பது முதலாயதூஉம் சலமயமாவதும் சுபாவம். இந்த அமிர்தத்திற்கு அவை இன்மையால் விருத்த உருவகம் ஆயிற்று.
துறை - பனுவல் வாழ்த்து.
9. அவிருத்தஉருவகம் என்பது ஒருபொருட்குக் கூடுவனவாம் தன்மை பலவும் கூட்டி உருவகம் செய்வது.

**ஓர்பொழுதும் துஞ்சாது அலமந்து உறுதுளித்தாம்,**
**போர்புனைவேல் அண்ணல்! பொருட்குஏகின் - சீர்பெருகும்**
**தண்ஆர் பசுந்துளபத் தார்மார்பன் தஞ்சைமான்**
**கண்ணாகிய கார்க் கடல்.** (242)

இது அவிருத்தஉருவகம். அண்ணல் - அண்மைவிளி. ஒழிந்த அகலம் உரையிற்கொள்க.
பகுதி - பொருள்வயின் பிரிதல். துறை - செலவுஅழுங்குவித்தல்.
['போரில் பயன்படும் வேலைஉடைய தலைவனே! நீ பொருள் தேட இத்தலைவியை நீத்துப் பிரிவாய் ஆயின், சிறப்புமிக்க குளிர்ந்த பசிய திருத்துழாய் மார்பனாகிய எம்பெருமானுடைய தஞ்சைத் திருத்தலத்தில் வாழும் இத்தலைவியின் கண்களாகிய கரிய கடல், ஒருபொழுதும் உறங்காது, சுழன்று மிக்கநீரை உடையதாகும்' என்ற கருத்தமைந்த இப்பாடலில், 'கண்ஆகிய கடல்' என்ற உருவகத்திற்கு ஏற்ப, உறங்காமையும் சுழலுதலும் நீரை உடையதாதலும் என்ற கடலுக்கு உரிய அடைகள் கண்களுக்குப் புணர்க்கப்பட்டிருத்தல் அவிருத்தஉருவகமாம்.]

10. நட்புஉருவகம் என்பது ஒருபொருளை நன்றாக உருவகம் செய்து அதனைத் தீங்கு தருவதாகக் கூறி, அத்தீங்கு அதனால் வந்ததன்று என்று அதற்குப் பிறிதொரு காரணம் கூறுதல்.

**தீங்கிளவி என்று உயிர்க்கும் தெள்அமிர்தம் வெவ்விடத்துஉப்பு**
**ஆம்கிழமை கூர்தல், அணிமாறன் - நாங்கைப்**
**பதித்திருவே! தீவினையின் பாங்காயது என்றே**
**மதித்துஇருக்கும் இன்று, என் மனம்.** (243)

இது நட்பு உருவகம்.
(இ-ள்) இனிய கிளவி என ஒலிக்கும் ஒள்ளிய அமிர்தமானது வெம்மையைச் செய்யும் விடத்தின் கயப்பாம் உரிமையை விளைத்தல், நின்னிடத்து உண்டான பாங்கினால் உண்டாயது அன்று என்றும், எனது தீவினையின் பாங்காயது என்றும் சந்தயமற விசாரியாநின்றது இப்பொழுது என்மனம் என்றவாறு.
உயிர்த்தல் - ஒலித்தல். கூர்தல் - விளைதல். பாங்கு - வாரம்.
பகுதி - பரத்தையிற் பிரிதல். துறை - பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகன் வாயில் வேண்டப் புறத்துஒழுக்கம் உண்டு என்று வாயில்மறுத்துக் கடுஞ்சொல் கூறிய இற்பரத்தையுடன் புறத்துஒழுக்கம் இன்று என்று கூறித் தனது ஆற்றாமையே வாயிலாகக் கூடியது.
["நாங்கூர்த்திருப்பதியில் வாழும் திருமகள்போல்வாய்! அமுதம் போன்ற நீ விடம்போல என்திறத்து ஆகியமை என்தீவினையே" என்று தலைவன் கூறும் கூற்றில் ஆற்றாமை புலப்பட்டவாறு. உப்பு - கசப்பு. பாங்கு - நட்பு. சந்தயம் - ஐயம். விசாரியாநின்றது - ஆராய்ந்து முடிவு செய்தது.]

11. வியனிலைஉருவகம் என்பது ஒன்றின் அங்கம் பலவற்றையும் ஒருசெய்யு-ளகத்துக் கூறி அவற்றுள் சில உருவகம் செய்து சிலவற்றை உருவகம் செய்யாது அவயவியை உருவகம் செய்வது.

**வையம் பரவும் மகிழ்மாறன் செவ்வாயும்**
**துய்ய நயனத் துணைப்போதும் - செய்ய**
**முகத்தாமரையுடன் கைமுத்திரையும் கண்ட**
**சுகத்தார்க்கும் உண்டோ, துயர்?** (244)

இது வியனிலைஉருவகம். இதனுள் அவயவி முகத்தாமரை. இதன்கண் அவயவியுடன் அவயவங்களுள் ஒன்றை உருவகம்செய்து மற்றைஒன்றை உருவகம் செய்யாமையும் காண்க.
துறை - கடவுள் வாழ்த்து. பழிச்சினர்ப் பரவலுமாம்.

['உலகம் புகழும் மகிழமாலையை அணிந்த மாறனுடைய சிவந்த வாயையும் தூய்மையான கண்களாகிய இருமலர்களையும் சிவந்த முகமாகிய தாமரையுடன் கையின்கண் அமைந்த முத்திரையையும் கண்ட இன்பமுடையாருக்குத் துயரமும் உளதோ?' என்ற கருத்தமைந்த இப்பாடலில், முகமாகிய அவயவியும் நயனங்களாகிய அவயவமும் உருவகிக்கப்படவும், வாயாகிய அவயவம் உருவகப்படுத்தப்படாமையால் இது வியனிலைஉருவகம்.]

12. ஏகாங்கஉருவகம் என்பது ஒன்றின் அங்கம் பலவற்றினுள் ஒன்றை உரு-வகம்செய்வது.

**மாறன் பனிவரைமேல் வாள்முகச் செவ்வாய் இவட்கு**
**வேறன்று இவள்எனவே மெய்உணர்வில் - கூறுஒன்றக்**
**காட்டுகின்றது, ஒண்பொன் கனங்குழைமேல் பல்காலும்**
**ஓட்டுகின்ற கட்காவி உற்று. (245)**

இஃது ஏகாங்கஉருவகம். ஒருபொருளாவது இதனுள் முகமாகிய அவயவி. இதன்பொருள் உரையிற்கொள்க. துறை - பாங்கியை அறிதல்.

['மாறனுடைய குளிர்ந்த துடரிமலையிலே ஒளிபொருந்திய முகத்தினையும் சிவந்த வாயினையும் உடைய இவளுக்கு இவள் தோழி வேறல்லள் என்பதனை உண்மை-உணர்வின் கூறுபாடு பொருந்தத் தலைவியினுடைய பொன்மயமான கனமுடைய காதணிமீது பலகாலும் சென்று திரும்பும் அவள்கண்களாகிய குவளைப்பூக்கள் காட்டு-கின்றன' என மறைந்திருந்து தலைவியின் செயல்களைக் கண்ணுற்ற தலைவன் தலைவியின் பார்வையால் அவள் உயிர்த்தோழியை அறிந்து மகிழ்ந்த செயதியைக் கூறும் இப்பாடலில், முகத்தினுடைய உறுப்புக்கள் பலவற்றுள் கண்ணாகிய ஓர் உறுப்பினையே 'கட்காவி' என உருவகம் செய்ததால் இப்பாடலில் ஏகாங்க உருவகஅணி வந்துள்ளது.]

13. அநேகாங்கஉருவகம் என்பது ஒன்றின் அங்கம் பலவற்றையும் உருவகம் செய்வது.

**செங்கைத்தளிர் நயனச் செவ்வேல் மறைப்ப வர-**
**மங்கைத் திருமால்வரை மடவாய்! - கொங்கைக்**
**களியானை கட்படாம் நீக்கியோ, கண்ணுற்று**
**எளியானைக் காக்கும் இயல்பு? (246)**

இஃது அநேகாங்கஉருவகம்.

(இ-ள்) திருமால் சீவரமங்கைவரையில் வாழும் மடப்பத்தினை உடையாய்! பெறுதற்கு அரிய நின்னோடும் பேரின்பத்தை அனுபவித்துப் பின்னர் அது பெறாது வருத்தம் மிக்கு நின்கண் எளியனாவேனைக் கருணைபுரிந்து காக்கும் இயல்பு, செங்கை ஆகிய தளிரால் நயனமாகிய சிவந்த வேலை மறைத்துக் கொங்கையாகிய களியானையினது முகபடாத்தினை நீக்கிக் கொல்லும்படியே அவற்றை வெளியில் வைத்தோ? இஃது அருளுக்குத் தகாது என்றவாறு.

பகுதி - பாங்கற்கூட்டம். துறை - நாணிக் கண்புதைத்தல். எளியானை என்றது தன்னைப் பிறன்போல் கூறல்.

[இப்பாடற்கண் செங்கைத்தளிர், நயனச் செவ்வேல், கொங்கைக் களியானை என அங்கங்கள் பலவும் உருவகம் செய்யப்பட்டமை காண்க.]

**கொங்கைக் குவடும் குழற்காரும் மேல்இருந்த**
**சங்கைக்கு அருள்மாயன் தஞ்சைவாய் - மங்கைக்குப்**

**பொய்யே, உளது என்கை? போற்றாது இலது என்கை**
**மெய்யே, இடையாம் வெளி? (247)**

இதுவும் அது. சங்கை - பிசாசம். பொய்யே, மெய்யே என்ற ஏகாரம் இரண்டும் எதிர்மறை. இடைவெளி உளது என்கை பொய்யே, இலதுஎன்கை மெய்யே எனத் தேற்றேகாரமாக்கிக் கூட்டினும் ஆம்.
பகுதி - இடந்தலைப்பாடு; துறை - மருங்குஅணைதல்.
['பிசாச வடிவனான கண்டாகரணனுக்கு அருள்செய்த திருமாலுடைய தஞ்சைத் திருப்பதியிலே உள்ள இத்தலைவிக்குக் கொங்கைகளாகிய மலைகளும் கூந்தலாகிய காடும் மேலே உள்ளன. அவளுடைய இடையாகிய வெற்றிடம் உண்டு என்பது பொய்-யாகுமா? மெய்யே. இதனை மனம்கொள்ளாது இடைஇல்லை என்பது மெய்யாகுமா? இல்லை என்பது பொய்யுரையே' என்ற கருத்து அமைந்த இப்பாடலில், கொங்கைக்-குவடு, குழற்கார், இடைஆம்வெளி எனத் தலைவியின் உறுப்புக்கள் பலவும் உருவகம் செய்யப்பட்டவாறு.]
14. அவயவஉருவகம் என்பது அவயவமே உருவகம் செய்து அவயவியை வாளாது கூறுவது.

**நிறத்தாரைவேல் இமையாம் நீடுஉறையை நீக்கிப்**
**புறத்தாய் இடர்இழைக்கும் போர்மேல் - அறத்தான்**
**வருந்தா இரங்குவதுஎன்? மால்அரங்கத்து இன்பம்**
**பொருந்து ஆனனத்தாய்! புகல். (248)**

இஃது அவயவஉருவகம்.
(இ-ள்) 'திருமால் அரங்கத்தினிடத்து அழகு குடிகொண்ட முகத்தினைஉடை-யாய்! நினது செவ்வரி பரந்த கண்ஆகிய வேல் இமையாகிய உறையை நீக்கி வெளிப்பட்டுத் துன்பத்தைச் செய்யும் பூசல்மேலும் யான் மிகவும் வருந்தும்படி கலுழ்வதற்குக் காரணம் யாது எனக் கூறுவாயாக' என்றவாறு.
தாரை - கண். உறை - கவிசனை (மூடி). அற - மிக. வருந்தா - வருந்த. இரங்குதல் - அழுதல். இன்பம் - ஆகுபெயர்.
பகுதி - பொருட்குப் பிரிதல். துறை - கருத்து அறிந்து அழுத கண்ணீர் துடைத்தல். என்னை? பொருள்வயின் பிரிந்த தலைவன் உள்ளக்குறிப்பினைக் கரந்து, பன்னாளும் புதுவதுவாக உறுப்பினைப் பாராட்டியதால், இஃது ஒன்று உடைத்தென அவனது பிரிவை உட்கொண்டு தலைவி அழுத கண்ணீராதலின். (கலி. 24: 4, 5)
[முகமாகிய அவயவியின் அவயவங்களாகிய கண்களையும் இமைகளையும் தாரை-வேல், இமையாம் உறை என உருவகம் செய்தமையின், இப்பாடலில் அவயவஉருவகம் அமைந்தவாறு.]
15. அவயவிஉருவகம் என்பது அவயவியை உருவகம்செய்து அவயவத்தை வாளாதே கூறுவது.

**முதிரா முலையும் முறுவல் குறிவந்து**
**எதிர்பாயும் கண்களும்கண்டு எய்தி - வதனமதிப்**
**பொற்றொடியை மாறன் பொருப்பிடைவைத்து இங்குஎதிர்ந்த**
**அற்புதனே திண்ணியன் ஆவான். (249)**

இஃது அவயவிஉருவகம். துறை - பாங்கன் தலைவனை வியத்தல்.
இதனுள் வதனமதி என்பது அவயவிஉருவகம்.
['முதிரா முலைகளையும் முறுவல்குறிப்போடு வந்து அன்போடு பார்த்த கண்களையும் கொண்டவளாய்த் தன்னை அணுகிய முகமாகிய தாமரையை உடைய தலைவியைத்

தான் சந்தித்த மலையிலே விட்டு நீங்கி என்னிடம் வந்த மேம்பட்ட தலைவன் உண்மையிலேயே மனத்திண்மை உடையவனாவான்' என்று பாங்கன் தலைவனை வியந்து உரைத்ததாக அமைந்த இப்பாடலில், முறுவல், கண்கள் முதலிய உறுப்புக்களை உருவகம் செய்யாமல் அவ்வுறுப்புக்களை உடைய அவயவியாகிய முகத்தினையே 'வதனமதி' என உருவகம் செய்தமையின், இஃது அவயவிஉருவகமாம்.]

**பெண்அமுதே! அங்கையால் பேரைமால் தண்சிலம்பில்**
**தண்நறும் பூவேங்கை தலைநாள்செய் - கண்ணி**
**தனைக் கொய்தனமேல் தமர்இல் செறிப்பான்**
**தினைக் கொய்திறம் விளையாதே. (250)**

இது மகாஅவயவி உருவகம். இதனுள் பெண்அமுதே என்றது மகாஅவயவி உருவகம்.

தண்நறும் பூவேங்கை தலைநாள் செய்கண்ணி - குளிர்ந்த நறுவிதாம் பூவாம் முன்பே வேங்கை வைத்த அரும்பு.

பகுதி - பகற்குறி; துறை - வேங்கையொடு வெறுத்து வரைவுகடாதல்.

[முகம், கை, கால் என்பனவும் தம்முள் இருக்கும் சிற்றுறுப்புக்களைக் குறிக்கும்போது அவயவியாகும். இஃது அவ்வாறன்றி என்றும் அவயவியாகவே இருக்கும் முழுஉடம்பையே அவயவியாகக் கூறினமையின் 'மகாஅவயவி' எனப்பட்டது. 'பெண்ணாகிய அமுதமே! திருப்பேரையில் உகந்தருளியிருக்கும் எம்பெருமானுடைய குளிர்ந்த மலையில் வேங்கைமரங்கள் வைத்த அரும்புகளை நம்கைகளால் முன்னரே கொய்திருந்தால் வேங்கைப்பூக்களே தோன்றா. வேங்கை பூக்குங் காலமே தினைக்கதிர் முற்றும் காலம் எனக் கணக்கிட்டு நம் உறவினர் தினைகளைக் கொய்து தினைக்காவல் இல்லாதபடி செய்திருக்க முடியாது. நம் பகற்குறி நீட்டிக்கப்பட்டிருக்கலாம். அதற்கு வாய்ப்பு இல்லாது போயிற்றே!' என்று தோழி தலைவன் சிறைப்புறமாகத் தலைவிக்குத் தினைகொய்ததனைக் கூறிப் பகற்குறி விலக்கிய இப்பாடலில், 'பெண்அமுதே!' என்பது மகாஅவயவிஉருவகம்.]

16. முற்றுஉருவகம் என்பது அவயவஅவயவிகளை ஏற்ற இடத்தோடும் பிற இடத்தினோடும் முற்ற உருவகம் செய்வது.

**வட்ட வதனமதியும் நுதற்பிறையும்**
**பெட்ட நகைநிலவும் பேர்த்துஅறியாக் - கட்டுஅளகக்**
**கங்குலின்மேல் மாறன் கனவரைவண்டீர்! இருந்தால்**
**இங்குஇவளுக்கு உண்டோ, இடை? (251)**

இது முற்றுஉருவகம். பெட்ட - விரும்பப்பட்ட. பேர்த்துஅறியா - நீங்கிஅறியாத. கட்டு அளகக் கங்குல் - ஐம்பாலாகக் கோலம் செய்த குழலாகிய இருட்பிழம்பு. ஒழிந்த அகலம் உரையிற் கொள்க.

பகுதி - இடந்தலை. துறை - வண்டு அகற்றி மருங்கு அணைதல்.

['மாறனுடைய பெரிய மலைமீது இருக்கும் வண்டுகளே! வட்டமான முகமாகிய சந்திரனும் நெற்றியாகிய பிறையும் விரும்பத்தக்க பற்களாகிய நிலவும் நீங்கி அறியாத ஐம்பாலாகக் கோலம் செய்த குழலாகிய இருட்பிழம்பின்மீது நீங்கள் அமர்ந்திருந்தால் இவளுக்கு இடை உங்கள் பாரத்தால் ஒடியாமல் இருக்குமோ?' என்ற இப்பாடலில் வதனமதி, நுதற்பிறை, நகைநிலவு, அளகக்கங்குல் என உருவகம் செய்யப்பட்டுள்ளன. வதனமதி - அவயவிஉருவகம். ஏனைய அவயவஉருவகம். நீங்கி அறியாதது ஐம்பாற்கோலம் என்க. யாவும் உருவகம் செய்யப்பட்டமையின் முற்றுஉருவகம்.]

**மண்படர் தாள்தாமரையும் மைபடர் கண்காவியையும்**
**கொண்டு முலைக்கோங்குஅரும்பும் கொண்டதோர் - பெண்கொடியைக்**

**கண்டனையேல் நண்பா! கழறலை! மாறன்சிலம்பில்**
**வண்டுஅமர் பூஞ்சோலைவாய்.** (252)

இதுவும் அது. பகுதி - பாங்கற்கூட்டம். துறை - கழற்று எதிர்மறுத்தல். இதன்பொருள் உரையிற்கொள்க.

['மாறனுடைய துடரிமலையில் வண்டுகள் தங்கியிருக்கும் பூஞ்சோலையிலே, நண்பா! பூமியில் நடக்கும் அடிகளாகிய தாமரையும், கருமை படர்ந்த கண்களாகிய குவளைப்பூக்களும் கொண்டு, முலைகளாகிய கோங்கு அரும்புகளையும் உடைய பெண்கொடியை நீ பார்த்திருந்தால் இவ்வாறு கூறமாட்டாய்' என்று தலைவன் தன் பாங்கனிடம் கூறிய இப்பாடலில், அடி, கண், முலை, தலைவி என்ற உறுப்புக்களும் உறுப்பியும் ஆகிய யாவும் உருவகம் செய்யப்பட்டமையால், இதுவும் முற்றுஉருவகம்.]

ஆக இயைபுஉருவகம் முதலாக முற்றுஉருவகம் ஈறாகப் பதினாறும் அடைவே கண்டுகொள்க. [35]

உருவகம் பிற அலங்காரங்களோடும் வருதல்

**121. உரைபெறு சிலேடை வேற்றுமையுடன் ஏது**
**அவநுதி உவமை என்று அவற்றொடும் விரவும். [36]**

(எ-ன்) அவ்வுருவகம் என்னும் அலங்காரம் பிறஅலங்காரங்களோடும் விரவி வரும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) சிலேடை முதலாக உவமை ஈறாகக் கூறப்பட்ட ஐந்து அலங்காரங்களோடும் உருவகம் விரவியும் வரும் என்றவாறு.

'உரைபெறு சிலேடை' என்றதனால் வினை பயன் மெய் உரு என்ற நான்கு காரணத்தான் உவமை பிறப்பதே அன்றி, இரட்டுறமொழியும் சொற்பொருள் காரணமாகவும் உவமை பிறக்கும் என்பதூஉம், சிலேடை இக்கூறிய உருவகத்திற்கும் காரணம், இனி மேல்வரும் பிற அலங்காரங்கட்கும் உபகாரமாம் என்பதும் தோன்ற நின்றதும் காண்க. இச்சூத்திரம் சிங்கநோக்காம்.

அவற்றுள்,

1. சிலேடைஉருவகம் என்பது ஒருபொருளை ஒரு செய்யுளகத்து இருபொருள் பயப்பதாகப் பலஇடத்தினும் புணர்த்து இறுதியினும் இருபொருள் பயப்பதாக உருவகம் செய்வது.

**வில்புடைக்கீழ் மன்னி மிகுநாண் இடைதழீஇச்**
**சுற்றுடை மாண்கோதைத் தொடைசெறியும் - பொற்புஉடைத்தாம்,**
**பாண்இழையா வண்டுஉலவும் பைந்துளவ மால்உறையூர்**
**மாண்இழையார் சேயரிக்கண் வண்டு.** (253)

இது செம்மொழிச்சிலேடை உருவகம். கண்ணிற்கும் அம்பிற்கும் சிலேடை.

(இ-ள்) கண்ணின்மேல் சொல்லுங்கால்: வில் - புருவம். இஃது உவமப்போலி. புருவத்தின் பரப்பின்கீழ்த் தங்கிப் பெருத்த நாண்இடத்துக் கூடிச் சுற்றுதலுடைய மாட்சிமைக் குழலின்மேல் மாலையை மேல்நோக்கத்தால் பொருந்தும் கண்ணாகிய வண்டு எனவும்,

அம்பின்மேல் சொல்லுங்கால்: தனுவின் அகன்ற இடத்துக் கூடி மிகுந்த நாணுக்கு நடுவே எய்தி, விரலில் கட்டுதல்உடைய விரல்சரடு உறத் தனுவிற்கு வல்லார் தொடுத்து எய்வதை எய்தும் அம்பு எனவும் கொள்க.

பகுதி - சேட்படை; துறை - கண்நயப்பு உரைத்தல்.

[பண் பாடிக்கொண்டே வண்டுகள் உலவும் திருத்துழாயை அணிந்த திருமாலின் உறையூர் என்ற திருத்தலத்தில் உள்ள மகளிருடைய சிவந்த அரிபரந்த கண்களாகிய வண்டுகள் புருவத்தின்கீழ் அமைந்து நாணம் கொண்டு கீழ்நோக்கி மேல்நோக்கத்தால் குழலின்மேல் உள்ள மாலையைப் பொருந்தும். வண்டு என்பதற்கு அம்பு என்ற பொருளும் உண்டு. ஆதலின் கண்களாகிய அம்பு என்று பொருள்செய்து அதற்கு ஏற்ப, வில்லின் அகன்ற இடத்து நாணுக்கு நடுவே பொருந்தி விரலில் சரடு அணிந்து தொடுத்து எய்யப்படும் அம்பு என்றும் பொருள் செய்வது உருவகத்தோடு கூடிய சிலேடையாகும்.]

**பூங்குமிழ்மீது ஏறிப் புணர்க்கும் மதனன்கலை தோய்ந்து**
**ஓங்குவனத் தாமரையின்உள் பயிலும், - தேங்குபுனல்**
**வெள்ளக்குளத்துஉறை மால்வெற்பினில் வாழ் மெல்லியலார்**
**வள்ளைக்குழையார் கண்மான்.** (254)

இது பிரிமொழிச்சிலேடையோடும் கூடிய உருவகம். கண்ணிற்கும் மானிற்கும் சிலேடை.

(இ-ள்) கண்ணின்மேல் சொல்லுங்கால்: பொலிவைஉடைய மூக்கின்மீது ஏறிக் காமன் புணர்க்கும் நல்ல கலையைக் கற்றுப் பெருத்தெழுந்த தண்ணீரகத்துத் தாமரைபோன்ற முகத்தினுள் தங்கும், மிகுந்த புனலைஉடைய திருவெள்ளக்-குளத்து உறையும் திருமால்வெற்பில் வாழும் மெல்லியலாராகிய வள்ளைக் குழையினை உடையார் கண்ணாகிய மான் எனவும்,

மானின்மேற் சொல்லுங்கால்: பூவினோடும் கூடிய குமிழாகிய மரத்தினைப் பாய்ந்து காமத்தைத் தன்னிடத்தே விளைக்கும் நல்ல கலையைப் புணர்ந்து, ஓங்கி வளரும் காட்டின்கண் உளவாம் மரைகண்டு பழகும், மெல்லிய இயல்பு மிகுந்த வள்ளைக்கொடியினது குழையை உண்ணும் குறிப்பினை உடைய மான் எனவும் கொள்க. இதனுள் 'கண்மான்' என்பது உருவகம். புணர்மதன் என்பதனை மதன்புணர் எனப் பாடம் மாற்றுக.

பகுதி - சேட்படை. துறை - கண்நயப்பு உரைத்தல்.

[குமிழ் - குமிழ்போன்ற மூக்கு, குமிழமரம். மதன் - மன்மதன், காமம். கலை - சாத்திரம், ஆண்மான். ஓங்கு வனத் தாமரை - பெருத்தெழுந்த தண்ணீரிடத்துத் தோன்றும் தாமரை போன்ற முகம். ஓங்கு வனத்து ஆம் மரை - ஓங்கி வளரும் காட்டின்கண் உளவாம் மான்கள். வள்ளைக்குழையார் கண்மான் - வள்ளைக்கொடியாலாகிய காதணிஉடைய தலைவியின் கண்களாகிய மான். வள்ளைக்குழை ஆர் கண்மான் - வள்ளைக்-கொடியினது தளிரை உண்ணும் குறிப்பினை உடைய மான். இப்பாடலில் வனத்தாமரை, குழையார் என்பன பிரிமொழிச்சிலேடை.]

**மன்பார் குளிர்விக்கும் மாறன் குடைமதியும்**
**நன்பால்மதியும் மதி நாடுங்கால் - முன்பாம்**
**குடைமதிக்கு உண்டாவதுஅல்ல குன்றுதல்; மைவானத்து**
**அடைமதிக்கு உண்டாம் குன்றுதல்.** (255)

2. குணவேற்றுமை உருவகம். வடநூலார் வெதிரேக உருவகம் என்பதும் இது. குன்றுதல் - தேய்தல். மை - களங்கம். குடைமதி என்பது உருவகம்.

திணை - பாடாண்; துறை - குடைமங்கலம்.

[நிலைபெற்ற இம்மண்ணுலகினை மாறனுடைய குடையாகிய மதியும் நல்ல பால் போன்ற மதியும் குளிரச்செய்யும். ஆனால் அறிவினால் ஆராயுமிடத்து, முன்னர்க் கூறப்பட்ட குடையாகிய மதிக்குத் தேய்தல்தன்மை இல்லை. வானத்தில் உலாவும் களங்கமுடைய சந்திரனுக்குத் தேய்தல் உண்டு எனக் குடைமதிக்கும் வானத்து மதிக்கும்

இடையே உள்ள குன்றாமை குன்றுதல் என்ற குணவேற்றுமையைச் சுட்டிக் 'குடைமதி' என உருவகம் செய்தமையால் இது குணவேற்றுமை உருவகமாம்.]

**பேர்அழகுஆர் காரி தரும் பிள்ளை மாணிக்கநெறி**
**சீரிய மாணிக்கம் உறும் செய்கைத்தோ - ஆரியர்காள்!**
**உற்றுளதேல் தத்துவங்கள் எல்லாம் உணர்ந்து உணர்த்தக்**
**கற்றுளதாய்க் காணேன் களித்து.** (256)

3. இதுவும் அது. இதனை விலக்குஉருவகம் என்றும் கூறுப.
துறை - அறுமுறை வாழ்த்தினுள் அடங்கும்.

['சான்றோர்களே! காரியார்புதல்வனாய பேரழகுடைய மாறனாம் மாணிக்கத்தின் ஆற்றலை மேம்பட்ட மாணிக்கமணி பெறும் ஆற்றலுடையதோ? மாறனாம் மாணிக்கம் தத்துவங்களை எல்லாம் உணர்ந்து உணர்த்தியமைபோலச் சாதாரண மாணிக்கக்கல், தத்துவங்களை உணர்ந்து உணர்த்தக் கற்றுளதாக எனக்குப் புலப்படவில்லை' என்ற கருத்து அமைந்த இப்பாடலில், மாறனை மாணிக்கமாக உருவகித்துப் பின் மாறனின் ஆற்றல் மாணிக்கத்துக்கு இல்லாததால் அதனை விலக்கியமை விலக்குஉருவகமாகும்.]

**வேகத்தால் வாயுவாம், வெண்நீர்மை மேதகுகேழ்**
**ஆகத்தால் தாரசயி லாதியாம், - மோகநிலை**
**காய்ந்த உணர்வால் சுகனாம், காசுஇன்று அயிந்திரநூல்**
**ஆய்ந்துஉணர்ந்த வானர சிங்கம்.** (257)

4. இஃது ஏதுஉருவகம். வெண்ணீர்மை மேதகுகேழ் ஆகத்தால் தாரசயிலாதி - வாலிதாம் தன்மை பெருமையோடு பொருந்தும் திருமேனியால் வெள்ளியங்-கயிலையாம். மோகநிலை - காமத்தின்நிலைமை. சுகன் - சுகப்பிரமஇருடி. காசு-இன்று - குற்றமின்றி. அயிந்திரநூல் - ஐந்திரவியாகரணம். வானரசிங்கம் - சிறிய திருவடி.
திணை - வாகை. துறை - சால்புமுல்லை.

[ஐந்திரவியாகரணத்தைக் குற்றமின்றி உணர்ந்த அநுமன் வேகத்தால் வாயு, பெரிய வெண்மையான திருமேனியால் கயிலைமலை, காமம் கடிந்த திறத்தால் சுகப்பிரமஇருடி எனக் காரணம்பற்றி உருவகம் செய்தமை ஏதுஉருவகம் ஆகும்.
வான்தோய் புகழொடு வயங்கும் ஒருநிலைமைச் சான்றோர் சிறப்பினை உரைப்பது சால்புமுல்லை.]

**முத்திரைக்கை அன்று முளரிமலர் ஈது; இதுபூந்**
**தொத்துஅணி மார்புஅன்று சுவணகிரி; - பத்தி**
**திகழ் ஆனனம்அன்று இதுதிங்கள்; வாச**
**மகிழ்மாறன் அன்று இவன்ஆம் மால்.** (258)

5. இது அவநுதிஉருவகம். பத்தி - பரமபத்தி அஃதாவது பேரன்பு. சுவணகிரி - பொன்மலை. இதனுள் 'மகிழ்மாறன் அன்று இவன் மால்ஆம்' என்பது உருவகம். திணையும் துறையும் இதுவும் அது.

[முத்திரை காட்டும் கையன்று, இது தாமரைப்பூ; பூமாலை அணியும் மார்பு அன்று, இது பொன்மலை; பக்தியை வெளிப்படுத்தும் முகமன்று, இது திங்கள்; வாசமகிழ் மாறன் அல்லன் இவன் மால்ஆம். சிறப்பினும் பொருளினும் குணத்தினும் உண்மையை மறுத்துப் பிறிது உரைக்கும் ஒழிப்பணியாகிய அவநுதி 'மாறன்ஆம் மால்' என்ற உருவகத்தோடு வந்தமையின், இஃது அவநுதி உருவகம்.]

**விடம்அனைய கட்காவி மெல்லியலாள் சோர்ந்தாள்;**
**குடவரைபுக்கான், வெய்யோன் கொல்வார், - அடல்வேடர்;**

**வேலவனே! கங்குல் விருந்துஅருந்தி வைகறைவாய்**
**மால்உறையூர்க்கு எய்தல் மதி. (259)**

6. இஃது உவமைஉருவகம். பகுதி - உடன்போக்கு. துறை - நெறிவிலக்கல்; விருந்துவிலக்கல் என்பதும் இது.
இதனுள் 'விடம்அனைய கட்காவி' என்பது உவமைஉருவகம். 'மைஏர் குவளைக்கண் வண்டினம் வாழும்' என்பதும் இது. (கோவையார். 66)
[தலைவன் தலைவியொடு உடன்போயபோது கண்டோர், தலைவி சோர்ந்திருத்-தலையும், கதிரவன் மாலையில் மறையத் தொடங்கியதையும், இரவில் கொலைஞர் கொடுமையையும் சுட்டி, இரவில் தம்மிடத்துத்தங்கி விருந்து உண்டு வைகறையில் உறையூருக்குப் புறப்படுமாறு கூறுகின்றனர். இதன்கண் 'விடத்தைப்போன்ற கண்-களாகிய குவளை' என்பது உவமை உருவகம்.
குவளை போன்ற கண்களாகிய வண்டினங்கள் - திருக்கோவையார் - 66 என்பதும் உவமைஉருவகம்.]

**பொற்பிற்கு உரிய திருமால் கரிசொன்ன போழ்தினில்அச்**
**சொல்பிற்படச் சென்று உதவிய மாயன் துவரையின்வாய்,**
**வெற்பின் புடைக்கும் தனவேழமான விலங்கு அறுத்தால்,**
**கற்பிற்கு உரிய இப்புல்லோ, தடுத்துஇடை காப்பதுவே? (260)**

(மாறனகப்பொருட்பாடல் 399)
இதுவும் உவமஉருவகம். இதனுள் 'வெற்பில் புடைக்கும் தனவேழம்' என இடையில் அடையடுத்துவந்தவாறும் காண்க.
பகுதி - மணம் சிறப்பு உரைத்தல். துறை - அக்கினி சாட்சியாகத் தலைவன் தலைவியைக் கைப்பற்றித் தீவலம் செய்து, வசிட்டனையும் அருந்ததியையும் இருவரும் கண்டு மணஅறைக்கண் பள்ளி இடத்தாராயகாலைத் தலைவன் அருமறைச் சடங்கிற்குப் படுத்த தருப்பையை நோக்கித் தலைவிகாதலையும் தனது ஆற்றாமையையும் உட்கொண்டு உரைத்தல்.
['அழகுக்கு உரிய திருமகளோடு கூடிய பெருமையனும், கசேந்திரன் அழைத்தகாலை உடனே வந்து உதவியவனும் ஆகிய வியத்தகு குணங்களை உடைய எம்பெரு-மானுடைய துவராபுரி என்ற திருத்தலத்தில், மலைகளைப்போலப் பெருத்துள்ள முலைகளாகிய யானைகள் தம்மைப் பிணித்த சங்கிலியை அறுத்துக்கொண்டு புறப்-பட்டால், சாத்திரவிதியைக் கற்பதற்கு இடப்பட்ட இந்தத் தருப்பைப்புல்லோ நடுவில் இருந்து யானையின் தாக்குதலைத் தடைசெய்ய இயலும்?' என்ற தலைவன் கூற்று. தலைவன் தலைவியைத் திருமணம் செய்த முதல்நாள் தண்கதிர்ச்செல்வற்கும், இடைநாள் கந்தருவற்கும், பின்னாள் அங்கியங்கடவுளுக்கும் அளித்து நான்காம் நாள் அங்கியங்கடவுள் தலைவியைத் தனக்கு அளிப்பத் தான் நுகரவேண்டும் என்று வேதம் கூறுதலை உட்கொண்டு இடப்பட்ட தருப்பையை நோக்கித் தன் ஆற்றாமையைக் கூறி முதல் மூன்றுநாள்களும் தலைவியின் முயக்கமின்றி இருந்தவாறு.
மலையைப் போலப் பருத்துக் காணப்படும் முலைகளாகிய வேழம் என்பது உவமைஉருவகம். பருத்துக் காணப்படும் என்பது முலைக்கு அடை.] [36]

உருவகஉவமை புறனடை

**122. ஒழிவுஅற உருவக முடனே உவமையும்**
**மொழிவதற்கு அடங்கா முறைமைய ஆகலின்**
**மொழியப் புகும்யான் மூதுணர்வு இலனால்**
**இவற்றினுக்கு இதனுள் இசைத்தவை ஒரீஇவரும்**

**அவற்றையும் இவற்றிடை அகப்பட உரைகொளீஇ**
**முற்ற உணர்த்திய முறைமைய ஆக்குதல்**
**கற்றோர் அறிவின் காட்சியது ஆகும். [37]**

(எ-ன்) மேற்சொல்லிய உருவகமும் உவமையும் என்னும் இரண்டிற்கும் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

உருவகமும் அதற்குக் காரணமாகிய உவமையும் என்னும் இரண்டு அலங்-காரமும் முற்றக் கூறுவதற்கு அடங்கா முறைமையை உடைய ஆகலானும், அவற்றைக் கூறுவதற்காக முந்துநூல் உணர்ந்தோர் அவையின்கண் புகுதா-நின்ற யான் முதிய உணர்விலேன் ஆதலானும், இக்கூறிய இரண்டு அலங்காரத்திற்கும் இந்நூலுள் யான் இசைத்த தொகைவிரிகளைக் கடந்து வருவனவாம் உருவகஉவமங்களையும் கூறிய இவற்றுள் அகப்படுவனவாக உரை கொளுத்தி, முழுதும் உணர்த்திய முறைமைய ஆக்குதல் அலங்காரம் முதலிய இலக்கணங்களோடும் இலக்கியங்களையும் முற்றக் கற்றோர்க்கு அழகு என்றவாறு.

உவமையின்வழிப் பிறந்தது உருவகம் ஆதலின் உவமைக்கு உரைக்கத்தகுவன எல்லாம் உருவகத்திற்கும் உரைத்துக்கொள்க. ஈண்டு உருவகம் முற்கூறிய-தனால் அதிகாரம் இடையறாது எனக்கொள்க.

[உருவகத்தைப் பற்றியே கூறுமிடத்து நடுவே உவமையைக் கூறினால் தொடர்ச்சி அறுபடும்; தொடர்ச்சி அறுபடாதிருக்க உருவகம் முதலில் கூறப்பட்டது.]

கூறியவற்றை ஒரீஇயின போல வருமவற்றுள் சில வருமாறு:

**காமரதத் தோகை களிவண்டினம் உலவும்**
**தாமரைசார் ஆம்பல் தளிநறவுஉண்டு - ஏமுறுபேர்**
**இன்பத்தினும் பெரிதே, எவ்வுள்மாலைப் பணிந்து**
**துன்புஅற்றவர் சேர் சுகம்? (261)**

இது பேதத்தை அபேதமாக்கின வாய்பாட்டால் வந்த உருவகம். இது முதலே உவமேயமும் உருவகஉருபும் தொக்க தொகைஉருவகம். என்னை? கண்ணாகிய வண்டினம், முகமாகிய தாமரை, வாயாகிய ஆம்பல், பானமாகிய நறவு என்பன முறையே தொக்கதால் என்று அறிக. ஆனால் அவற்றினை அவ்வாறு ஆக்கியது என்னை? வண்டினம் போன்ற கண்கள் உலவும் தாமரைபோன்ற முகத்தில் என்பனவோடு ஏனையவும் தொக்கனவாக விரித்துத் தொகைஉவமம் ஆக்கப்பெறாவோ எனின், ஆகாது; என்னை? முற்றுவம-வாய்பாடாக உவமம் ஒன்றனையும் கூறும் வாய்பாடு உவமை உருவகம் என்னும் இரண்டற்கும் பொதுவாய்பாடேனும், ஈண்டு மருட்கை என்னும் மெய்ப்பாட்டு வயத்தனாகிப் புணர்ச்சியை மகிழ்ந்து பேதத்தை அபேதமாக்கி விதந்து உரைத்தான் ஆதலின் தொகைஉருவகமாக உரைகோடலே ஆம்.

காட்சிக்குத் 'திருவளர் தாமரை' (கோவையார்-1) என்னும் முதல்பாட்டு மருட்கைவயத்தனாகிக் கூறிய இவ்வாய்பாடு என்று உணர்க. அற்றேல், இதனகத்துப் பேதத்தை அபேதமாக்கியது யாதோ எனின், தாமரை வேறு முகம் வேறாய் இருக்கவும் முகத்தைத் தாமரை என்றே பேதம்அறக் கூறியவாற்றானும் ஏனை உவமேயத்தினையும் அவ்வாறே கூறியவாற்றானும் உணர்க.

பகுதி - இயற்கைப்புணர்ச்சி, துறை - புணர்ச்சி மகிழ்தல்.

['காமச்சுவையே வடிவெடுத்தாற்போன்ற இம்மயிலின் களிப்புடைய வண்டினங்கள் உலவுகின்ற தாமரையில் சார்ந்துள்ள ஆம்பற்பூவின் தேன்துளியை உண்டு உயிருக்குப்

பாதுகாவல் அளிக்கும் பேரின்பத்தைவிடத் திருஎவ்வுள் திருத்தலத்திலிருக்கும் திருமாலை வணங்கித் துன்பம்அற்றவர் அடையும் ஆனந்தம் மேம்பட்டதோ?' என்று தலைவன் தலைவியைக் கூடிய மகிழ்ச்சியைப் புலப்படுத்தவாறு.

'திருவளர்தாமரை சீர்வளர் காவிகள் ஈசர்தில்லைக்
குருவளர் பூங்குமிழ் கோங்கு பைங்காந்தள் கொண்டு ஓங்குதெய்வ
மருவளர்மாலை' (திருக்கோவையார் 1)

தாமரை, குவளைகள், குமிழ், கோங்கு, காந்தள் இவற்றால் ஆகிய மணம் கமழும் மாலை எனத் தலைவியின் முகம், கண்கள், மூக்கு, தனம், கைகள் இவற்றையும் அவள்உடம்பையும் மலர்களாகவும் அம்மலர்களால் தொடுக்கப்பட்ட மாலையாகவும் பேதத்தை அபேதமாக்கின வாய்பாட்டால் உருவகம் செய்தவாறு.]

**மேல்இருந்த விண்ணோர் வியத்தக்க செம்மையதாய்ப்**
**பாலிகையுள் தெள்அமுதம் பாலிக்கும் - சால்புஉடைய**
**திங்களைக் கண்டால் மாறன் செம்பொன் துடரியுள்யார்,**
**தங்கள்உளம் கோடாதவர். (262)**

இஃது அபேதத்தைப் பேதமாக்கிய சிலேடைவாய்பாட்டான் வந்த அற்புத-உவமை. இதனுள் அபேதத்தைப் பேதம் ஆக்குதல், திங்கள் ஒன்று அன்றிப் பிறிதொன்று இன்றாகவும் செம்மை உடைத்தாய்ப் பாலிகையுள் தெளிந்த அமிர்தத்தை விளம்பும் திங்கள்எனப் பேதித்துக் கூறினமையான் அறிக.
பாலிகை - வள்ளமும், அதரமும் ஆகையால் சிலேடை.
பகுதி - பாங்கற்கூட்டம். துறை - தலைவனை வியத்தல்.
இதுவும் தொகைநிலையுள் அடங்கும்.

["விண்ணுலகத்துத் தேவரும் வியக்கும் செந்நிறத்ததாய்ப் பாலிகையிலே தெளிந்த அமுதத்தை வைத்து வழங்கும் மேம்பாட்டை உடைய சந்திரனைக் கண்டால் மாறனுடைய செம்பொன்மயமான துடரிமலையில் தங்கள் உள்ளம் அதன்பால் வளைக்கப்படாதவர் யாவர்?" என்று தலைவியைக் கண்ட பாங்கன், தலைவியைக் கண்டபின்னும் அவளைவிடுத்துத் தன்னிடம் வந்து தெளிவாக உரையாடிய தலைவனை வியந்தவாறு. செந்நிறமுகத்தளாய்த் தன் உதடுகள் வழியே வால்எயிறு ஊறிய நீராகிய அமுதம் வழங்கும் தலைவியை 'அமுதம் வழங்கும் செந்நிற மதியம் போல்வாள்' எனத் தொகைஉவமவாய்பாட்டால் கூறியது அற்புதஉவமை.
அற்புதம் - வியப்பு.]

**காவில் பிறவா கனகக்கொடி, கமல**
**வாவிக்கு அடங்கா மடஅன்னம், - பூவில்**
**பிறவா நறுந்தேறல், பேர்நகர் மால்வெற்பில்**
**உறவாய் நிறைஉண் உரு. (263)**

இது சம்பந்தம் உடையதைச் சம்பந்தம் இல்லையாக்கி வந்த உருவகம். அன்றியும் காவிலும் வாவியிலும் என்றமையால் விரோதஅலங்காரமும் இதனுள் விளைப்பாரும் உளர்;

மலையிடைப் பிறவா மணியே என்கோ!
அலையிடைப் பிறவா அமிழ்தே என்கோ! (சிலப். 2: 77, 78)

என்பனவற்றையும் விரோத அலங்காரமாக்குமாறு போல என்று அறிக.
பகுதி - பாங்கற்கூட்டம். துறை - இயல்இடம் கூறல்.

['திருப்பேர்நகர் என்னும் திருத்தலத்துத் திருமாலுடைய மலையிலே எனக்கு உறவாக அமைந்து என் அடக்கத்தையே போக்கிய வடிவம் சோலையில் பிறக்காத பொற்கொடி, தாமரைக்குளத்தில் காணமுடியாத அன்னம், பூவில் தோன்றாத இனிய தேன்' என்று தலைவன் தன் பாங்கனிடம் தலைவியின் இயலும் இடமும் கூறியவாறு. இதன்கண்,

சோலையிலிருந்து கொடியையும், தாமரைக்குளத்திலிருந்து அன்னத்தையும் பூவிலிருந்து தேனையும் விலக்கியமை சம்பந்தம் உடையவற்றைச் சம்பந்தம் இல்லன ஆக்கிய உருவகமாம்.]

**கோதுஇலாப் பொன்னைக் குழைத்து மதன் தூரியக்கோல்**
**காதலால் கைப்பற்றிக் காட்கரைமால் - போதம்**
**குழைந்துஅருள் பொற்கொம்பின் குறித்ததுஎன்கோ, இன்பம்**
**தழைந்தருள் இக்கொம்பினையே தான்? (264)**

இது சம்பந்தம் இல்லாததனைச் சம்பந்தம் ஆக்கிக்கூறிய மோகஉவமை.
விகாரஉவமை, அதிசயஉவமை எனினும் ஆம்.
பகுதி - இயற்கைப்புணர்ச்சி. துறை - நலம்புனைந்துஉரைத்தல்.

['இன்பம் தன்கண் தழைத்திருப்ப அதனை எனக்கு அருளும் இப்பூங்கொம்பு போல்வாளை, மன்மதன் குற்றமற்ற பொன்னைத் திரவமயமாக்கி, அதன்கண் திருக்காட்கரை எம்பெருமான் அருளிய ஞானத்தையும் இட்டுக் குழைத்து ஓவியம் தீட்டும் கோலைக் கைக்கொண்டு தீட்டிய பொற்கொம்புபோல அமைத்துள்ளான் என்பேனோ?' எனத் தலைவியிடத்துக் கொண்ட மையலால், 'பொன்னையும் ஞானத்தையும் குழைத்து மன்மதன் தூரியக்கோலால் தீட்டிய ஓவியம்' எனத் தொடர்பில்லாத இரண்டினைத் தொடர்புபடுத்தி மிகைபடக் கூறலாகச் செயற்கையைப் படைத்துத் தலைவிக்கு உவமம் கூறியது மோகஉவமை, விகார உவமை, அதிசய உவமை என்ற முத்திற உவமைகளுள் அடங்கும் என்றவாறு.]

**மாயன் குருகாபுரி அனைய மாதராள்**
**ஆயம் தொழவாழ் அருமைஉறின் - தூய**
**கனவுஎன்கோ, கூடிக் குழைந்ததனைக் காமர்**
**நனவுஎன்கோ, யாதுஎன்கோ, நான்? (265)**

இதனுள் 'குருகாபுரி அனையாள்' என்பது குருகாபுரி செயற்கையான் அன்றி இயற்கையானும் முதலே அழகுஉடையது போன்று இவளும் இயற்கையான் அழகுஉடையாள் என்பது தோன்ற நின்றமையால் இதுவும் உவமையுள் ஒருபேதம்.
பகுதி - இயற்கைப்புணர்ச்சி. துறை - ஆயவெள்ளம் வழிபடக் கண்டு இது மாயமோ என்றல்.

'பாயும் விடைஅரன் தில்லையன்னாள் படைக்கண் இமைக்கும்' (கோவையார் 3) என்பதும் இது. 'வில்ஏர் உழவர் பகைகொளினும் கொள்ளற்க, சொல்ஏர் உழவர் பகை' (குறள். 872) எனவும், 'நல்லார்கண் பட்ட வறுமையின் இன்னாதே, கல்லார்கண் பட்ட திரு' (குறள். 408) எனவும், இவை போல்வன பிறவும் இவற்றின்பால் கூட்டி உணர்க.

[தலைவியை மறைவில் இருந்தவாறே, ஆயவெள்ளம் வழிபட்டதனைக் கண்ட தலைவன், 'எம்பெருமானுடைய திருக்குருகூரைப் போன்ற இயற்கைஅழகு உடைய இத்தலைவி தன் ஆயத்தார் பலரும் தன்னைப் போற்ற இருக்கும் அருமையை நினைத்துப் பார்த்தால் இதனைத் தூய்மையான கனவு என்பேனோ? தோழியரொடு கூடி அவள் குலாவுவதனை விரும்பத்தக்க நனவு என்பேனோ?' என்று கூறுகிறான். குருகாபுரி அனையாள் என்பதுபோல முன்னும் திருக்கோவையாருள் 'அரன்தில்லை அன்னாள்' என்று வந்திருக்கும் தொடர் எடுத்துக்காட்டாகத் தரப்பட்டுள்ளது. இருதிறங்களில் இருக்கும் ஒரேபொருளை ஒன்றற்கு ஒன்று உவமை கூறி விலக்கலும், இருதிறங்களிலுள்ள பகைப்பொருள்களை ஒன்றற்கு ஒன்று உவமை கூறி விலக்கலும் என்பனவற்றிற்கு எடுத்துக்காட்டு முறையே 'வில்லேர் உழவர்' 'நல்லார்கண்' என்று தொடங்கும் குறட்பாக்களாகும்.]

**திருந்திழையாய்! மாறன் திருவாய்மொழியே**
**மருந்து, பிறவிப்பிணிக்கு; மாதர் - தரும்பிணிக்கு**
**வாய்ந்த மருந்து என்பார், மடல். (266)**

இது, மாதர் தரும் காமம் ஆகிய பிணிக்கு என்பது 'மாதர் தரும் பிணிக்கு' என மாட்டேறு இலாது வந்த உருவகம்.
பகுதி - மடல். துறை - உலகின்மேல் வைத்து உரைத்தல். பா - இரண்டுவிகற்பத்தான் வந்த நேரிசைச் சிந்தியல்வெண்பா.

['தோழியே! மாறனுடைய திருவாய்மொழியே பிறவியாகிய பிணியைப் போக்கும் மருந்து. மடல் ஏறுதலே மகளிர் தரும் காமமாகிய பிணிக்குப் பொருந்திய மருந்தாகும்' என்றான் தலைவன்.]

**வழிமதுத்தார் மாறன் மணிவரைமேல் மாதர்**
**விழி எழுதினாலும் இணைவெற்பு எழுதினாலும்**
**மொழி எழுதலாமோ? மொழி. (267)**

இது மாட்டேறு இலாது வந்த ஏகாங்கஉருவகம். என்னை? முலை என்பனவற்றை உவமைவாய்பாடு தோன்றக் கூறினமையால் 'உபயமுலையாகிய இணைவெற்பு' எனக் கோடல்வேண்டும் என்று உணர்க.
பகுதி - மடல்விலக்கு. துறை - எழுதஅரிது என்றல். பா - ஒருவிகற்பத்தால் வந்த இன்னிசைச் சிந்தியல்வெண்பா.

[முலை என்ற ஓர்உறுப்பையே தொகைநிலை தோன்ற 'இணைவெற்பு' என உருவகம் செய்தமையால் ஏகாங்கஉருவகம். 'மாறன் துடரிமலைமீதுள்ள தலைவியின் விழிகளை வரையலாம்; முலைகளாகிய இரண்டு மலைகளை வரையலாம்; ஆனால் அவள்மொழியை ஓவியத்தில் வரையமுடியாது' என்று தோழி தலைவனிடம் கூறி, மடலேறுபவன் கைக்கொள்ளவேண்டிய ஓவியம் நிறைவுபெறாது என்று குறித்தவாறு.]

**நாணும் நிறையும் நறுநுதாஅல்! மாணிழையார்**
**தந்த வெங்காமத்தழல் கதுவ - வெந்து**
**தருமடல்மா ஏற்றம் தரும். (268)**

இஃது ஏகதேசஉருவகம்; இதனுள் நாணும் நிறையுமாகிய பஞ்சு என உருவகம் செய்யாது காமத்தழல் என்று ஒன்றையே உருவகம் செய்தமையான் என்று அறிக.
பகுதி - மடற்கூற்று. துறை - நாண்அழிவு உரைத்தல். பா - அடிதொறும் ஒரூஉத்தொடை பெற்று வந்த இன்னிசைச் சிந்தியல்வெண்பா.

['தோழியே! நாணும் நிறையுமாகிய பஞ்சு மகளிர் தந்த கொடிய காமமாகிய தழல் பற்றுதலால் வெந்துபோய் மடல்மாவில் ஏறச்செய்யும்' என்று தலைவன் மடலேறுதல் பற்றிக் கூறியவாறு.]

**தருமன் தண்ணளியால்; தனது ஈகையால்**
**வருணன்; கூற்று உயிர்மாற்றலின்; வாமனே**
**அருமையால்; அழகில் கணைஐந்து உடைத்**
**திருமகன், திருமாநில மன்னனே. (269) (சிந்தா. 160)**

என்பதும் ஒருவகை உருவகம். தண்ணளியால் மன்னனாகிய தருமன், தனது ஈகையால் மன்னனாகிய வருணன், உயிர்மாற்றலால் மன்னனாகிய கூற்று, அருமையால் மன்னனாகிய வாமன், அழகால் மன்னனாகிய காமன் என உருவகம் செய்து உணர்க.

**மன்னர் மடங்கல்; மறையவர் சொல்மாலை;**
**அன்னநடையினார்க்கு ஆரமுதம்; - துன்னும்**
**பரிசிலர்க்கு வானம்; பனிமலர்ப் பைந்தார்**
**எரிசினவேல் தானைஎம் கோ.** (270) (புற. வெ. மா.)

என்பதும் கூறிய ஒருவகை உருவகம்.

[பைந்தார், எரிசினவேல்தானை இவற்றை உடைய எம்அரசன் அரசர்களுக்குச் சிங்கம் ஆவான்; மறையவர்களுக்குப் புகழ்மாலை ஆவான்; மகளிருக்கு அரிய அமுதமாவான்; பரிசில் நாடி வருவோருக்குக் கார்மேகமாவான் என்றபடி.]

வருந்தி ஈன்றாள் மறந்து ஒழிந்தாள்; வளர்த்தாள் சொல்கேட்டு இல்கடிந்-
தாள்;
முருந்தின்காறும் கூழையை; முனிவார் நின்னை என் முனிவார்?
பொருந்திற்று அன்றால் இது என்னாய், பொன்றும் அளித்து இவ்வுயிர் என்-
னாய்,
திருந்துசோலைக் கருங்குயிலே! சிலம்ப இருந்து கூவுதியால் (சிந்தா. 1661)

என்றல் தொடக்கத்தன உருவகஇலக்கணம் விளங்க நின்றிலவேனும், அத-னிடத்து மயக்கி நின்றன கொள்க. என்னை கொள்ளுமாறு எனின், ஈன்ற குயிலாகிய பெண் மறந்து ஒழிந்த, வளர்த்த காக்கையாகிய பெண் இல்கடிந்த, பெண்குயிலாகிய பெண்ணே எனக்கொள்வதை மயக்கி நின்றமை காண்க.

['அழகான சோலைக்குக் களங்கம்போல அமைந்த கரிய குயிலே! நீ அருள்செய்து, மாலை வருகின்ற காலத்தே யாம் கூவுதல் பிரிந்த இவர்க்குப் பொருந்திற்றுஅன்று என்றும் கருதாயாய், இவர்உயிர்தான் போம் என்றும் கருதாயாய், முழங்க இருந்து கூவாநின்றாய்; இத்தன்மையை உடைய நின்னை வருந்திப் பெற்றவள் அவ்வருத்-தத்தையும் மறந்து உறவைக் கைவிட்டாள். எடுத்து வளர்த்தவளும் நின்சொல்லின் கடுமையால் இல்லினின்றும் கடிந்தாள். நீதான் எலும்புஅளவும் செல்லும் மயிர்ப்பாடும் உடையை. ஆதலின், இனி நின்னை வெறுப்பார் நின் பிறப்பையோ வளர்ப்பையோ வடிவையோ வெறுப்பார்?' என்று கனகமாலை சீவகன் நினைவால் மாலையில் கூவிய குயிலை வெறுத்துக் கூறினாள். இதன்கண், ஈன்றாளாகிய தாய்க்குயில், வளர்த்தாளாகிய தாய்க்காக்கை என்ற உருவகங்கள் தொகைநிலையாகி அத்தொகைநிலையிலும் முயன்று பொருள் காணுமாறு மயக்கிநின்றமை உணரப்படும்.] [37]

3-ஆவது உருவகம் முற்றும்.

4-ஆவது உள்ளுறை உவமம்

உள்ளுறைஉவமத்து இலக்கணம்

**123. உணர்வதற்கு அரிதாம் உவமப் போலி**
**புணர்திறம் வினையே பயன்மெய் உருவெனப்**
**பிறப்பொடும் ஐந்தாம் பெற்றித்து ஆகிச்**
**சிறப்புறு திணைகளில் தெய்வதம் ஒழிந்த**
**கருப்பொருள் களனாக் கட்டுரை பயின்று**
**உவமையோடு எதிர் உள்உறுத்தலுற்று அயலாய்**
**உவமச்சொல் தொகல் ஒருதலை யாகியும்**
**அன்பினது அளவாம் அகத்திணை இருவயின்**
**இன்ப துன்பத்து இசைதிரிந்து இசையாத்**

**துணைவன் துணைவி தோழி செவிலி**
**இணைஎனும் பாங்கன் பாணன்என்று இவரால்**
**கொள்கையின் வரூஉம் குறிப்புரைத்து ஆகும். [38]**

(எ-ன்) வைத்த முறையானே (87) உள்ளுறைஉவமம் என்னுமதற்குப் பொதுஇலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று. உவமப்போலி என்றும் அதற்குப் பெயர்.
(இ-ள்) உணர்வினால் உணர்தற்கு அரிதாகிய உள்ளுறைஉவமம் என்பது முற்கூறிய வெளிப்படைஉவமம்போல வினை பயன் மெய் உருவு காரணமாகத் தோன்றும் அவற்றினோடும் பிறப்புங் கூட்டி நிலைக்களன் ஐந்தினோடும், அவ்வந்நிலங்களில் தெய்வதம் ஒழிந்த கருப்பொருள் நிலைக்களனாகவும், அழகிய உரையுள் பயின்றும், வெளிப்படையாக வரும் உவமப்பொருளோடும், அதற்கு எதிராகிய உவமேயப்பொருள்களை உள்ளுறுத்துக்கொள்ளும் படித்தாயும், உவமேயம் பாடலுள் பயின்று வாராது அயலாகியும், உவமஉருபு தொகுதல் ஒருதலையாகவும், களவு கற்பு என்னும் கைகோளின் இருவகையினும், இன்பதுன்பம் காட்டுவனவாய், இசை திரிந்து இசைப்பனவாய்த் தலைவன் தலைவி முதலிய பெயர்களால் குறிப்புரையாய் வரும் என்றவாறு.
'உணர்வதற்கு அரிதாய்' என்றதனால், ஏனைஉவமம், புலப்படக் கூறாத உள்ளுறைஉவமத்தைத் தருகின்ற கருப்பொருட்குச் சிறப்புக் கொடுத்துக் கூடி நிற்கும் என்பதாம்.
'கொள்கையின் வரூஉம்' என்றதனால்,

'கிழவி சொல்லின் அவள்அறி கிளவி,
தோழிக்கு ஆயின் நிலம்பெயர்ந்து உறையாது' (தொ. பொ. 301)
'கிழவோற்கு ஆயின் உரனொடு கிளக்கும்,
ஏனோர்க்கு எல்லாம் இடன்வரைவு இன்றே' (தொ. பொ. 302)
'கிழவோட்கு உவமம் ஈரிடத்து உரித்தே' (தொ. பொ. 304)
'கிழவோற்கு ஆயின் இடன்வரைவு இன்றே' (தொ. பொ. 305)
'தோழியும் செவிலியும் பொருந்துவழி நோக்கிக்
கூறுதற்கு உரியர் கொள்வழி யான' (தொ. பொ. 306)

எனவும் வரும் கூற்றுக்களோடும், தோழியும் உழையரும் தலைவன்கொடுமை கூறும்வழியினும் பிறவழியினும், தலைவன் ஊரின்கண் உள்ள கருப்பொருள்கள்ஆனவை சொல்லத் தலைவற்கே அன்றியும் தலைவிக்கு ஏற்றனவாம் உவமத்தன்மைத் தோற்றத்தனவாய் உள்ளுறைஉவமம் கோடலும் பிறவாறு வருவனவாம் அவைகளும் 'குறிப்புரைத்தாகும்' என்பதனால் உய்த்துக்கொள்க.
பிறப்பாவது அவ்வந்நிலங்களில் இழிந்த பிறப்போடும் சார்த்திக்கூறல். உள்ளுறுத்தல் - உள்ளே குறித்தல். ஒருதலை - நிச்சயம். அகத்திணை இருவயின் என்பது இறந்ததுபோற்றல் என்னும் தந்திரவுத்தி. 'இசைதிரிந்து இசைத்தல்' என்பது செய்யுட்சொற்கள் தம் பொருள் உணர்த்தாது வேறுபடக் கூறுதல். இசையாவது சொல். சொல்லாவது எழுத்தினான் ஆக்கப்பட்டுப் பொருள் அறிவுறுத்தும் ஓசை ஆதலின் இசை என்றார். இஃது ஆகுபெயர். என்னை?

இசைதிரிந்து இசைப்பினும் இசையும்மன் பொருளே
அசைதிரிந்து இயலா என்மனார் புலவர். (தொ. பொ. 195)

என்னும் பொருளியல் சூத்திரத்தான் உணர்க.
[சொற்கள் பொருள் உணர்த்தாது வேறுபட்டு இசைப்பினும், பொருள்கள் புலனெறி வழக்கில் திரிந்து இயன்று இசைப்பினும் மிகவும் பொருளேயாய்ப் பொருந்தும்.]

**காமர் பன்மலர் கஞலிய பொதும்பர்**
**மாமரப் பணையின் மதுகரம் இழைத்த**
**முதுநறுந் தேறல் நொதுமலர் முன்னுபு**
**கொளத்தகு மரபின் குன்ற வாண!**
**வரைதலின் வரையாது ஒழுகலின் இருவிரும்**
**மாறுபட்டு ஒழுகிய மதியினிர் ஆகலின்**
**திருஅருள் மாறன் திருவருட்கு இலக்காய்**
**ஒழுகா தவருளத்து ஒன்றாம்**
**மழுகா மதியின் மறுகுவல் யானே.** (272)

என்பது வினைஉவமப்போலி. என்னை? 'மாமரப்பொதும்பரகத்து மதுகரங்கள் தமக்குப் பின்னைக்கு நுகர்வதாக மறைத்து வைப்ப விளைந்த தேனை நொதுமலர் ஆராய்ந்து கைப்பற்றிக் கொடுபோம் குன்றவாணனே!' என்றதனால், 'களவினோடும் கூடிய கூட்டத்தை நீட்டித்துப் பின்னர் இவளை வரைந்து-கொள்ளக் கடவேன்' என நினைந்த நினைவு தவறும்படி, பருவம் முதிர்ந்த இவளையும் பிறர் நயந்து பொன்அணிந்து கொடுபோவர்; அதுபோல என்ப ஆகலான்; உவமத்திற்குப் பிறிது பொருள் எதிர்த்து உவமம் செய்யாது ஆண்டுப் பிறந்த கருப்பொருளவற்றோடும் உள்ளுறுத்து வைத்தலின், இஃது உள்ளுறை உவமம் ஆயிற்று. அவற்றோடும் இது நொதுமலர் கொடுபோவர் என்னும் தொழிலோடும் இவளையும் பிறர் கொடுபோவர் என்னும் தொழில்-உவமம் கொள்ள நின்றமையின், வினைஉவமப்போலி யாயிற்று. அன்றியும் காமர் பனிமலர் கஞலிய பொதும்பர் என்பது நற்றாய், தோழி, செவிலி முதலியோர் வைகும் மனைக்கு உவமையாம். திணை - குறிஞ்சி. கைகோள் - களவு. கூற்று - தோழி. கேட்போன் - தலைவன். இடம் - முன்னிலை. காலம் - நிகழ்வு. பயன் - இற்செறிவு உரைத்து வரைதல்வேண்டும் என்றது. மெய்ப்பாடு - அச்சத்தைச் சார்ந்த பெருமிதம்.

பகுதி - பகற்குறி. துறை - வருத்தம் கூறி வரைவுகடாதல். காமர் - அழகு. ஒழிந்தனவும் உரையிற்கொள்க.

['விரும்பத்தக்க பலமலர்களும் நெருங்கிய சோலையிலே, பெரியமரக்கிளையிலே வண்டுகள் அமைத்த முதிர்ந்த நறிய தேனினை அயலார் கைக்கொள்ளக் கருதிக் கைக்கொள்ளும் முறைமையினை உடைய மலைநாடனே! தலைவியோ வரைதல் வேட்கையளாய் உள்ளாள். நீயோ, வரையாது களவொழுக்கத்தை நீட்டிக்கும் கருத்-தினையாய் உள்ளாய், இவ்வாறு நீங்கள் இருவீரும் மாறுபட்ட கருத்தினிராய்க் காலம் கழித்தலின், பேரருளை வழங்கும் மாறனுடைய திருவருளுக்கு இலக்கமாய் வாழா-தவருடைய உள்ளத்தின் கூர்மையற்ற மதியினைப் போலத் தோழியாகிய யான் நும் இடை இருந்து எதுவும் செய்யமுடியாமல் வருந்துகின்றேன்' என்பதாம். 'நொதுமலர் தலைவியை வரைந்து கைக்கொள்வர்' என்பதற்கு மரக்கிளையில் வைத்த தேன்-கூட்டின் தேனை அயலார் பறித்துச் செல்வர் என்பது உவமமாக அமைதலின் இது வினைஉவமப்போலி.]

**இறைவறங் கூரா ஈர்ந்தண் பொய்கைத்**
**துறைதொறும் துவன்ற தோடுஅவிழ் பன்மலர்**
**மாந்துபு வயின்நிறைவு எய்திய கவரி**
**ஏந்துஎழில் மாடத்து ஈன்றகன்று உள்ளிப்**
**படர்வுழிப் படர்வுழிப் பணைமுலைக் குறுங்கண்**
**மடைதிறந்து உவளகம் மடுநிறைத்து ஒழுகு**
**பால்தடினியின் அயல் பழிதீர் பேடையைப்**

**போற்றரு களிப்பின் புணர்ந்துஅவண் மூழ்கிப்**
**புனிதம்உற்று இருசிறை புலர்த்திய ஓதிமம்**
**தணந்துஅயல் கழனிச் சாதிப் பெடைகளை**
**மணந்துஅதன் நனந்தலை மள்ளர்தாம் உழுத**
**நாற்றுஅடி அதன்கண் நறுந்தழை பதன்அழிந்து**
**ஊற்றுஎழு களங்க உறுபுனல் ஆடிப்**
**பண்டுதான் மரீஇய பால்நிறப் பேடையைக்**
**கண்டுதான் வளைக்கும் காமரு கடல்கெழு**
**கண்அகல் ஞாலம் கண்டுகண் நயப்பான்**
**விண்ணவர் வியப்பான் மேதகு படிவத்து**
**அரவணைத் துயின்றருள் அரங்கத்து அமுதின்**
**உரவுநீர் காவிரிக்கு உறுபுனல் ஊர!**
**புல்லேன் பொதுஉண்நின் மார்புஎனச்**
**சொல்லேன் புன்மனத் தொடர்பு உடையேனே. (273)**

இதுவும் வினைஉவமப்போலி. இதனுள், இறைவறம் கூரா - சிறிதும் வற்றாத. ஈர்ந்தண் பொய்கை - மிகவும் குளிர்ந்த பொய்கை. துறைதொறும் துவன்ற தோடு அவிழ் பன்மலர் மாந்துபு வயின்நிறைவு எய்திய கவரி - இடந்தோறும் நெருங்கின இதழ்விரிந்த தாமரை முதலிய பலமலரையும் உண்டு வயிற்றை நிறைத்தல் பொருந்தின காரான். 'ஏந்துஎழில் ... தொடர்பு உடையேனே' என்றது உயர்ந்த அழகைஉடைய மாளிகையினிடத்து ஈன்ற குழக்கன்றை நினைந்து செல்லுமிடத்து முறுகின முலைக்குறுங்கண் மடைதிறந்து பள்ளவாவிகளைப் பெருக்கி ஓடாநின்ற பாலாற்றின் பக்கமே, குற்றமற்ற தனது பெடையைப் பாதுகாப்பு அற்ற களிப்பினோடும் புணர்ந்து, அப்பாலாற்றின் நடுமூழ்கிப் பவித்திரம் உற்ற இருசிறகரும் புலர்த்திய சேவல்ஓதிமம், அப்பேடையை நீங்கி, அயல்வயல் கூட்டப் பேடைகளை மணந்து, அக்கழனி நடுவண் மள்ளர் உழுத நாற்றடி நனந்தலை நறிய தழைகள் அழுகி, ஊற்றிருந்த சேறுமிகுந்த புனலிடை ஆடி, முன்னர்த் தான் மணந்த வெண்ணிறப் பேடையைப் புணர்ச்சி குறித்து வளையும், அரவணைத்துயின்ற அரங்கத்தமுதின் உரவுநீர் காவிரிக்கு உறுபுனல் ஊரனே! புல்லேன் பரத்தையர் பொதுஉண் நின்மார்பு எனச் சொல்லேன், புன்மனத்தொடர்பு உடையேன் என்றவாறு.

பொதுஉணல் - பரத்தையர் பலராய் ஏககாலத்து இன்பத்தைப் பொதுவாக அனுபவித்தல். இதனுள் பரத்தையர் என்பது சொல்லெச்சம். ஒழிந்த அகலம் உரையிற்கொள்க.

அஃதாக, இதனையும் வினைஉவமப்போலி என்றது என்னையெனின், 'தனக்கு உரிய பேட்டோடும் பாலாற்றின் அயல்புணர்ந்து, அதன்பின்னர் அப்பாலாற்றில் முழுகிய சேவல் அன்னப்பெடையை நீங்கி அயல் கழனியிடத்து வேற்றுப்-பேடைகள் பலவற்றையும் புணர்ந்து, அதன் நள்ளிடை நாற்றடிக் களங்க உறுபுனலில் மூழ்கி அக்களங்கப்புனல் புலராமுன்னம் பண்டுதான் மரீஇய பேடையையும் வளையும்' என்பதனால் 'நமது அகச்சோலையின் நடுவண் பனிநீரால் பூரித்த புழுகுசுனையினது அயல் என்னோடும் பாதுகாப்பற்ற களிப்புடன் உவர்ப்பு இல்லாத இன்பத்தைத் துய்த்துப் பவித்திரம் எய்தவேண்டி முழுகி, ஈரஆடை களைந்து, நனைந்த குழற்கற்றை புலர்த்தி, எதிர்முகமாக இருந்து நீ நீங்கி எனது மாளிகைக்கு அயலே சேரிப்பரத்தையர் பலரையும் தோய்ந்த வேர்வோடும் குழம்பிய மான்மதச்சேறு புலரா முன்னம் வாயில்

வேண்டாது வந்து எனது பள்ளியிடத்தாயாகி மணிமேகலையைப் பற்றுதற்கு இருகையால் வளையாநின்றாய்' என்னும் உவமேயவினை கருப்பொருள் களனாகத் தோன்றி நின்றமையான் என்று உணர்க.

இது திணை - மருதம். கைகோள் - கற்பு. பகுதி - பரத்தையிற்பிரிதல். கூற்று - தலைவி. கேட்போன் - தலைவன். இடம் - முன்னிலையாய பள்ளியிடன். காலம் - நிகழ்காலம். பயன் - ஊடல் தீர்தல். மெய்ப்பாடு - வெகுளியைச் சார்ந்த உவகை. இதற்குத் திணையுள் திணை - பெண்பால் கூற்றுப் பெருந்திணை. துறை - இல்லவை நகுதல்; அல்லது பரத்தையிற்பிரிந்து வந்து ஆற்றாமையே வாயிலாகப் புகுந்த தலைவனான் ஊடல் தீர்கின்றாளாய இற்பரத்தை கூற்றும் ஆம்.

[சொல்எச்சம் - ஒருசொல் மறைந்து இருப்பது. நாற்றடி நனந்தலை - நடுவதற்கு உரிய நாற்றுக்கள் முற்றின அளவிலே அவை வேற்று வயல்களில் நடுவதற்காகப் பறிக்கப்பட, நாற்றுக்கள் நீங்கியபின் மீண்டும் உழுவதற்கு ஏற்றநிலையில் இருக்கும் நாற்றங்கால் ஆகிய பரந்த இடம். பவித்திரம் - தூய்மை. உவளசம் - பள்ளம்.

புறப்பொருள் வெண்பாமாலையின் பன்னிரண்டாம்படலம் பெருந்திணைப்படலம் என்பர். அதன்கண் உள்ள 19 துறைகளுள் இல்லவை நகுதல் என்பது ஏழாவது துறையாகும்.

முற்றா முலையார் முயங்க இதழ்குழைந்த
நற்றார் அகலம் நகைதரலின் - நற்றார்
கலவேம் எனநேர்ந்தும் காஞ்சிநல் ஊர!
புலவேம் பொறுத்தல் அரிது.

என்பது அதன் எடுத்துக்காட்டுச் செய்யுள். தலைவனுடைய பரத்தைமையை நன்கு கண்டுவைத்தும், அவனோடு தொடர்புகொள்ளக் கூடாது என்று நினைத்தும் அவன்-பிரிவினைப் பொறுக்க முடியாத தலைவி, தலைவனிடத்து இல்லாத நேர்மை குறித்து அவனை எள்ளிய பின்பும், அவன் கூட்டத்துக்கு உடன்படுதல் இத்துறைச்செய்தியாம். தலைவனுடைய பொறுக்கமுடியாத புணர்ச்சிவேட்கையைக் கண்டு அவனோடு கொண்ட ஊடலை நீக்கிக்கோடல் தலைவிக்குப் போல இற்பரத்தைக்கும் உண்டு என்பது கருதி இற்பரத்தை கூற்றும் ஆம் என்று கூறப்பட்டது.]

**குவளையும் குமுதமும் தவளஒண் பதுமமும்**
**திசைதிசை யோசனை தேம்கமழ் திவ்விய**
**வசைதீர் அம்தண் மயிலை வேலிப்**
**பொய்கையுள் செவ்வியின் பொதிஅவிழ் புனிதச்**
**செய்ய தாமரைத் தேறலை அளவளாய்**
**உவட்டாது அருந்திஉள் உருகிய சுரும்புஅதன்**
**கரைசேர் வெள்ளிடைக் கலித்த நீர்முள்ளியின்**
**பாடுஅவிழ்ந்து அயல்சுரும்பு உளர்ந்துஉணப் பதன்அழி**
**பூநறா உண்டு இன்புறு புனல்ஊரன்,**
**தெண்திரைக் காவிரி திருஅரங்கேசன்**
**தொண்டர்தம் தொண்டர் தொடர்பினை ஒரீஇப்**
**போதம் புறம்தரப் புரைதீர் இன்உயிர்க்கு**
**ஏதம் கொள்ளுநர் இதயம்விட்டு அகலாது**
**ஒல்லாப் புலன்வழி உய்க்கும்**
**புல்அறிவினுள் குடிபுகும் புன்மையனே.** (274)

இது பயன்உவமப்போலி. என்னை? பொய்கையுள் பவித்திரச் செய்யதாமரை பருவத்தின் மலர்ந்து உகு புதிய தீந்தேறலை அளவளாய் உண்ணத் தெவிட்டாது உள்ளம் உருகிய சுரும்பு, அதன் கரையினில் மலிந்த முள்ளுடை

நீர்முள்ளி முறுக்குஅவிழ்ந்த பருவத்து வேற்றுச்சுரும்பு பலவும் துவைத்து உண்ணச் செவ்வி இழந்த பழம்பூவில் சுருங்கிய தேனை உண்டு இன்புறும் எனவே, 'நம்தலைவர்க்கு உயர்ந்த மகளிர் இழிந்த மகளிர் என்பது இல்லை; புணர்ந்து இன்புறுதற்கு யாவரும் உரியர்' என்னும் பயன் உள்ளுறுத்துக்-கொள்ளக் கிடந்தமையான் என்று உணர்க.

திவ்விய - நல்ல. புனிதம் - பவித்திரம். அளவளாய் - உடலும் உயிரும் கலந்து. வெள்ளிடை - வெளி. கலித்தல் - மிகுதல். புன்மையன் - அறிவினால் சிறுமையன். வெளியில் நிற்கும் நீர்முள்ளி எனவே, வீதியில் நிற்கும் வேசை என்பதாயிற்று. ஒழிந்த அகலம் நம்பெருமாள் மும்மணிக்கோவை விரித்-துரையுள் காண்க.

திணையும் பகுதியும் இதுவும் அது. துறை - உழையர் இயற்பழித்தல்.

["குவளைப்பூவும் குமுதப்பூவும் வெள்ளிய ஒளியுடைய வெண்டாமரைப்பூவும் பலகல் தொலைவு திசைகள்தோறும் நறுமணம் கமழ்வதாய்ச் சிறந்த குற்றமற்ற அழகிய குளிர்ந்த இருவாட்சிப்பூவும் கரைக்கண் உடையதாய பொய்கையுள், புதிதாக முறுக்கு அவிழ்ந்து மலரப்பெற்ற தூய செந்தாமரைப்பூவில் உள்ள தேனினை உடலும் உயிரும் கலந்து குறைவற உண்டு மனம் உருகிய சுரும்பு என்னும் இனத்து வண்டு, பொய்கைக்கரையில் வெட்டவெளியில் பலரும் காணச் செழித்துவளர்ந்த நீர்முள்ளிச்-செடியில் ஒருபக்கத்தில் மலர்ந்து பக்கலிலுள்ள வண்டுகள் பலவும் வந்து தேனைப் பருகியதால் அழகு குலைந்து காணப்படும் பூவில் எஞ்சியிருக்கும் தேனினை நுகர்ந்து இன்பமடையும், நீர்வளமுடைய ஊரனாய நம் தலைவன், தெள்ளிய அலைகளை உடைய காவிரியின் இருகூறுகளுக்கும் இடைப்பட்ட திருவரங்கத்தில் உகந்-தருளியிருக்கும் எம்பெருமானுடைய அடியார்க்கு அடியனாயிருக்கும் தொடர்பை விடுத்து, அறிவு நீங்க, குற்றமற்ற இனிய உயிருக்குத் தீங்கு விளைத்துக்-கொள்பவருடைய இதயத்தைவிட்டு நீங்காது, பொருத்தமற்ற பொறிகள் இயக்கும் வழியிலேயே இயங்கும் புல்லறிவுச்செயல்களில் ஈடுபடும் அற்பத்தன்மையனாய் உள்ளான்" என்று தலைவனுடைய புறத்துஒழுக்கம்பற்றி, அவன்இல்லத்தில் இருந்து பணிபுரிபவர் அவன் தீப்பண்பினைப் பழித்து உரைத்தவாறு.]

**இனியதெள் அமிர்தாய் எறித்துஎழு கிரணப்**
**பனிமதி அகடுஉழப் பணைநெடும் பொங்கர்ப்**
**பூந்துணர் ததைஇய பொழில்எழில் நள்ளிடை**
**ஈர்ந்தண் கோட்டகத்து இனமலர் முற்றிய**
**பொதிஅவிழ் தாமரைப் பொகுட்டு ஆசனத்து**
**மதிநலன் உறப்புணர் மாண்புஉடைப் பெடையொடும்**
**வீற்றிருந்து இன்புறு மேன்மை ஓதிமம்ஒரு**
**பால்படு கரைசேர் பன்மரக் காவில்**
**குறுகுபு கொடுமுள் தாழைக் கூன்சினை**
**வெறுநிலத்து அடர்தர விரித்த பாசடைமேல்**
**தளிநறை மாந்துபு சார்பெடைக் குருகொடு**
**புணர்தலும் நலன்உறும் புனல்மலி ஊரன்,**
**பூமகள் இலைகுலாம் பூண்முலை முகடுஉழத்**
**தேம்அவிழ் பசுந்துழாய்த் திருமணி மார்பன்**
**தென்அரங்கேசன் திருவருட்கு இலக்காம்**
**உரன்உடையோர்கள் உயிர்த்துணை என வாழ்**
**இல்லறம் பழிபிறங்காது இருந்து இல்லின்**

**அகன்அமர்ந்து ஆனாது உறையும்**
**தகவுஏதும் இலாத தவறு உடையோனே.** (275)

இதுவும் பயன்உவமப்போலி. என்னை? இருமனமும் ஒருமனம்போலப் பேரா-னந்தம் எய்தப் புணர்ந்த பேடையோடும் பொதியவிழ்ந்த தாமரைப்பொகுட்டில் அரசு வீற்றிருந்து இன்புறும் சேவல் ஓதிமம் அப்பேடையைப் பிரிந்து வாவிக்கு ஒருபக்கமான கரைசேர் பன்மரக் காவின்புறத்து வளைந்த முள்ளுடைத்தாழை முடச்சினை வெறுநிலத்துத் தகடுபட விரித்த பாசடைமேல் இருந்து அதனிடத்துத் துளித்து விழும் தேனைஉண்ட களிப்பினால் வெளுத்த சிறைஉடை பெடைக்குருகைப் புணர்தலும் ஆனந்தம் எய்தும் புனல்மலிஊரன் எனவே, இப்பொற்புடை இல்லின்கண் இருந்து இக்கற்புடையவளோடும் இருமனமும் ஒருமனமாகப் புணர்ந்து பேரானந்தம் எய்திய பின்னர் யாம் புடைசூழ அரசு வீற்றிருந்தோன், இவளை நீங்கி எமது மாளிகைக்கு அயலாய்ப் பொலிவு இழந்த சேரிப்பரத்தையைப் பெண்தன்மைமாத்திரம் ஒத்தலின், காமபானத்தை உண்ட புத்திப்பிரமையால் உவர்ப்பின்றிப் புணர்ந்ததனால் இன்பம் எய்தும் ஊரன் தகுதி ஒன்றும் இலன் என்று உரைத்தபான்மை உள்ளுறுத்துக்கொள்ளக் கிடந்தமையான் என்று உணர்க.

இதற்கும் விரித்துரை நம்பெருமாள்மும்மணிக்கோவை உரையுள் காண்க.

பகுதி - இதுவும் அது. துறை - தோழி தலைவனை இயற்பழித்தல்.

[இனிய தெளிந்த அமுதமாய் ஒளிவீசும் கதிர்களை உடைய குளிர்ந்த சந்திரனுடைய அடிவயிற்றைக் கீறுமாறு பருத்த நீண்ட கிளைகளிலே பூங்கொத்துக்கள் நெருங்கிய சோலையின் அழகிய நடுஇடத்தில் அமைந்த ஈரமான குளிர்ந்த குளத்தின்கண் இனமான மலர்களிடையே இருந்து முதிர்ந்த முறுக்கு அவிழ்ந்து மலர்ந்த தாமரையின் பொகுட்டாகிய ஆசனத்தின்கண் அறிவுநலம் பெறுமாறு தான் புணர்ந்த மேம்பட்ட பெண்அன்னத்தோடும் வேறொன்றற்கு இல்லா அழகோடும் இருந்து இன்புற்ற மேம்பாடுடைய ஆண்அன்னம், ஒருபக்கமாகக் கரையில் அமைந்த பலமரங்களை உடைய சோலையை அணுகி, வளைந்த முட்களை உடைய தாழையின் வளைந்த கிளை வெறுநிலத்தில் படரவிரித்த பசிய இலைமேல் இருந்து, அதன் பூக்களிலிருந்த தேனைப் பருகி, அருகிலிருந்த பெண்குருகினைப் புணர்ந்து, அதனால் மகிழ்வுறும் நீர்வளம் மிக்க ஊரினனாகிய தலைவன், திருமகளுடைய, இலைவடிவாகச் செய்யப்பட்ட அணிகலன்களை அணிந்த முலையின்உச்சி உழுதலால் தேன் வெளிப்படுகின்ற பசிய திருத்துழாயையும் கவுத்துவமணியையும் உடைய மார்பினனாகிய அழகிய திருவரங்-கத்து எம்பெருமானுடைய திருவருளுக்கு உரியவராகின்ற பேரறிவு படைத்த சான்-றோர்களின் உயிருக்குத் துணையாக இருந்து வாழும் இல்லறத்தில் பழி ஏற்படாமல் இருந்து வீட்டிலே மனமகிழ்வுடன் குறைபாடு எதுவும் இன்றித் தங்கும் மேம்பாடு தன்கண் எதுவும் இல்லாதவாறு தவறு உடையவனாய் உள்ளான் - என்று தலைவன்-பரத்தைமை கருதித் தோழி கூறியவாறு.]

**நீர்நிலை முற்றிய நிழல்மலி சோலையுள்**
**கார் வழங்காத காலையும் கவின்பெற**
**வேர்முதல் பழுத்து வியன்சினைப் பலவு**
**வளம்கெழு நாட! எம் மணிபுரை மாண்கவின்**
**புறம்தரும் ஆயினும் புனிதம் நின் இன்றால்**
**அரவணைத் துயில்அமர்ந்து அருள் அரங்கேசன்**
**தூநீர்க் காவிரித் துறைபடிந்து அல்லதை**
**ஒல்லேன் மலர்அமளியின் உற;**
**புல்லேன், பரத்தையர்ப் புணர்ந்த நின் மார்பே.** (276)

இது மெய்உவமப்போலி. என்னை? 'கார்வழங்காத காலையும் நிழல்மலி சோலையுள் பலவு வேர்முதல் பழுத்து வாட்டமின்றி வளன் எய்தினாற் போல, நீ என்னிடத்து அருள்இன்றிப் பரத்தையர்மாட்டுப் பிரிந்த காலத்தும், ஆய-வெள்ளம் விட்டு நீங்காத என்மனையிடத்து இல்லறம் கோடாது நடத்துதற்-பொருட்டு இத்துணைப்போதும் உளன்ஆனேன்' என்றதாக உள்ளுறுத்துக் கொள்ளக் கிடந்தமையான் என்று அறிக. இதற்கு மொழிந்த விரித்துரை மும்மணிக்கோவை உரையுள் காண்க.

பகுதி - இதுவும் அது. துறை - அணைந்த- வழி ஊடல்.

["நீர்நிரம்பிய குளங்கள் பலவாக உள்ள நிழல் மிகுந்த சோலையுள் மேகம் பருவமழை பொழியாத காலத்தும் அழகுஉண்டாக வேர்ப்பகுதியில் பழங்கள் பழுக்கப் பரவிய கிளைகளை உடைய பலாமரத்தின் வளம் நிரம்பிய நாடனே! எம்முடைய செம்மணியை ஒத்த மாட்சிமைப்பட்ட நலம் எம்மை விடுத்து நீங்கி விடுமாயினும் உன் தொடர்பு இல்லாவிட்டால் அது புனிதமாகவாவது இருக்கும். பாம்புப்படுக்கையில் அறிதுயில-மர்ந்து அடியார்க்கு அருளும் திருவரங்கத்து எம்பெருமானுடைய தூய நீரை உடைய காவிரியின் நீர்த்துறையில் நீ முழுகி வந்தாலன்றிப் பரத்தையரைத் தழுவிவந்த உன்மார்பினை ஏற்றுக்கொள்ளமாட்டேன். மலர்ப்படுக்கையில் அம்மார்பினைத் தழுவ-மாட்டேன்" என்று பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனோடு தலைவி மலர்ப்-படுக்கையில் அவன் தழுவ முற்பட்டகாலை ஊடி உரைத்தவாறு. நிழல்மலி சோலை - தலைவி இல்லம். வேரில் பழுத்த பலா - இல்லறம் நிகழ்த்தும் தலைவி என்பனகொண்டு மெய்உவமப்போலி என்றவாறு.]

**உலைவுஇல் நீர்அழுவத்து உறு சிறையதன்கண்**
**அலைகொழித்து அலைதொறும் அலைதொறும் மொத்துண்டு**
**அழுங்குஅஞர் எய்திய யாக்கையது ஆகியும்**
**தன்னால் வளர்க்கத் தகுசினை யதன்மேல்**
**மன்ஆதரவின் வளர்மீன் வைத்தகண்**
**வாங்காது உய்த்து வளர்புனல் ஊரற்கு**
**ஏவலின் பிழையா இன்இசைப் பாண!**
**புதுவதுவாய் வழி பிழைத்து இவண் போதரும்**
**அதுநினைந்து அருவிருந்து அளித்திடற்கு, அந்தோ**
**மதுமகிழ் மார்பினன் வழுதி நன்னாட்டவர்**
**குடிஞையைக் காய்திறன் குறிப்பதும் இன்றால்;**
**காதோடு உலவுகண் காரிகை**
**யாதோ கறிஈங்கு இனிது அமைப்பதுவே? (277)**

இதுவும் மெய்உவமப்போலி. என்னை? அழிவு இல்லாத நீர்க்கயத்துள் மிக்க சிறையிடத்துத் திரைஎடுத்து எற்றுந்தோறும் எற்றுந்தோறும் அதனால் எற்றுண்டு மிகவும் துன்பம் எய்திய யாக்கையோடும் கூடிய மீன் தன்னால் வளர்க்கப்படும் சினையின்மேல் வைத்தகண் வாங்காது வளர்த்தாற் போல, யானும் தலைவர் பிரிந்து எனக்கு அளித்த துன்பம் என் மேனியை வருத்தவும், அம்மேனி-யோடும் இல்லின்கண் இருந்து என்னால் ஓம்பப்படும் இல்லறம் ஓம்புதற்கு உளன் ஆனேன் என்பது உள்ளுறுத்துக் கொள்ளக் கிடந்தமையான் என்று அறிக.

இதுவும் பகுதி அது. துறை - பாணனைப் பழித்தல். இதற்கும் விரித்துரை கூற வேண்டுவதில்லை.

["குறைவில்லாத நீரைஉடைய குளத்தின் ஒருபகுதியில் அலைகள் புரண்டுவந்து மோதுந்தோறும் வருந்துதற்குரிய துன்பம் எய்திய உடலினதாகியும், தன்னால்

வளர்க்கப்படவேண்டுவனவாகிய தன் முட்டைகளின்மேல் மிக்க அன்பினால் மீன் அம்முட்டைகளின்மேல் வைத்த கண்களைத் திருப்பாமல் செலுத்திப்பொழுதுபோக்கும் நீர்வளமுடைய ஊரனாகிய தலைவனுடைய ஏவலைத் தவறாது செய்யும் இனிய இசையில் வல்ல பாணனே! இதற்குமுன் இல்லாதவகையில் புதிதாய் வழிதவறி நீ இங்கு வந்துள்ளதை நினைத்து உனக்கு அருமையான விருந்துஉணவு படைப்பதற்கு ஐயோ! தேனைஉடைய மகிழம்பூமாலையை அணிந்த மார்பினனாகிய மாறனுடைய வழுதி-நாட்டில் உள்ளவர்கள் கோட்டானைக் கொலைசெய்வதை மனத்தானும் நினைக்க-மாட்டார்களே! காதளவு நீண்ட கண்களை உடைய சமையற்காரி இப்பொழுது உனக்குக் கறிசமைத்து உணவு அளிக்க யாது செய்ய இயலும்? உன் பண்பிற்கு ஏற்ப உனக்குக் கோட்டானைக் கொன்று கறிசமைத்து விருந்துஉணவு படைக்க எமக்கு வாய்ப்பு இல்லை'' என்று தலைவி பாணனைப் பழித்துப் பேசுகிறாள். முட்டையை நோக்கும் மீன் இல்லறத்தை நோக்கும் தலைவிக்கு உவமம் ஆவதால் இது மெய்உவமப்போலி. குளம் தலைவி வாழும் இல்லத்திற்கும், அலைகள் குடும்பத்துள் நேரிடும் துயரங்கட்கும், மீன்பார்வை தலைவியின் இல்லறக்கடன்மைக்கும் மெய்யுவமம் பற்றிய உள்ளுறை-கொள்ளக் கிடந்தவாறு.]

**பன்மலர் களுலிய பழுமரச் சோலையுள்**
**தன்நிழல் துணையாத் தளிர்த்த மெளவலின்மலர்**
**விரிகதிர் தெறுதலின் வெம்மைஉற்று உணங்க**
**முட்புறக் குடக்கனி முடப்பலவு அதன்அயல்**
**செங்கிடை மலர்கவின் சிறப்பவும் நிழற்றும்**
**ஒண்புனல் ஊரற்கு உறுபழி விளைக்கும்**
**யாம் ஏதிலம் ஏதிலம் என எங்கையர்**
**மாளிகை பயின்று மதங்கர் உற்றிலரால்;**
**புவிப்பாவலர் புகழ் புரவலன் மதுர**
**கவிப்பாவலன் புகழ் கருணையங் கடவுள்**
**மதுமகிழ் மார்பினன் வண் குருகூரன்**
**சதுமறைப் பொருளால் தரு தமிழ்மறையினுள்**
**முதுமொழி உணரா மூடம்அது அடைந்த**
**மனன்அகம் மலம்மிக மறுகுநர்**
**இனம்எனல் ஒன்றாய் இகழ் பொய்ம்மையனே.** (278)

இது நிறம் அல்லாத பண்பு உவமப்போலி. என்னை? சோலையுள் தன்நிழலே துணையாகத் தளிர்த்த முல்லைக்கொடியின் மலரானது, விரிந்த கதிர் தெறுதலான் வெம்மையுற்று உணங்க, முடப்பலவு தனக்கு அயலாகத் தோன்றின செங்கிடை-மலர்க்கு அழகுமிக அதற்கு நிழல்செய்யுமது போலத் தலைவனும் தன்னையே துணையாக ஆவி தளிராநின்ற இவளும் காமத்தீயால் வெந்து மேனிவாடத் தனக்கு அயலாகிய பரத்தையர்க்கு உடலும் உயிரும் தளிர்ப்ப நலம் கொடா-நின்றான் எனப் பண்பு உள்ளுறுத்துக்கொள்ளக் கிடந்தமையான் என்று உணர்க.
பகுதி - இதுவும் அது. துறை - பாணனொடு வெகுளல். கூற்று - தோழி.

[''பலபூக்களும் நெருங்கிய, பழம்பழுக்கும் மரங்களை உடைய சோலையில், தன்னுடைய நிழலையே தனக்குத் துணையாகக்கொண்டு தளிர்களை விட்ட முல்லைக்-கொடியின் மலர் விரிந்த கதிரவனுடைய கிரணங்கள் வெப்புறுத்துதலினாலே வெப்ப-முற்று வாடவும், முள்ளை வெளிப்பக்கத்தில் உடைய குடமுழாப் போன்ற பழங்களை உடைய வளைந்த பலாமரம் தன் பக்கலில் படர்ந்த சிவந்த நெட்டியினுடைய பூக்கள் அழகு சிறக்கும்படி நிழலைச்செய்யும் மேம்பட்ட நீர்வளமுடைய ஊரனாகிய நம்தலைவனுக்கு மிக்க பழியை உண்டாக்கிக் கொடுக்கும் பாணன், எம்மைத்

தலைவனுக்கு அயலவர் என்று கூறி எம்தங்கையரைப் போல உறவு கொண்டாடும் பரத்தையர் இல்லத்திலேயே பலகாலும் பழகி எம்வீட்டுப்பக்கமே வருவதில்லை. உலகிலுள்ள பாவாணர் பலரும் புகழும் கொடைவள்ளலாய், மதுரகவி என்ற பாவலரால் புகழப்படும் கருணைக்கடவுளாகிய தேன் துளிக்கும் மகிழம்பூமாலையை அணிந்த மார்பினனாகிய வளமான குருகூரிலுள்ள மாறன், நான்கு வேதங்களின் பொருள்களையும் உட்கொண்டு நான்கு பிரபந்தங்களாகப் பாடிய தமிழ்மறையின் சாரத்தை உணராத அறியாமையை உடைய மனத்திலே மாசுமிக வருந்தும் கீழ்மக்களின் இனத்தைச் சார்ந்தவன் இவன் என இகழத்தக்க பொய்வாழ்க்கையை உடையவனே" எனத் தலைவனுடைய பரத்தையிற்பிரிவிற்கு உதவிவரும் பாணனைத் தோழி. பழித்தவாறு.

பாணனை 'மதங்கர்' எனப் பன்மையாற் கூறியது இழித்தற்பொருளது. கதிரவன்கிரணங்களால் வெம்மையுற்று உணங்கும் முல்லைக்கொடியின்பூ - தலைவன்பிரிவால் உள்ளம் வெதும்பும் தலைவி. பலா சிவந்தநெட்டிக்கு நிழல் தருதல் - தலைவன் பரத்தையரை வாழ்வித்தல். தலைவனுடைய பண்பிற்கும் தலைவியினுடைய பண்பிற்கும் உள்ளுறை கூறியமையின் இது பண்புஉவமப்போலியாயிற்று.]

**ஒன்றாய்ப் பரந்த உறுவளி கறங்கலின்**
**மின்தாழ் பன்மீன் மிளிர்விசும்பு உழுசினை**
**சுமைமலிந்து ஓசிதரத் துணர்த்த மென்பூமுகை**
**பொறிச்சுரும்பு உளர்தொறும் உளர்தொறும் பொதும்பருள்**
**முறுக்குஉடைந்து இழிதரூஉம் மொய்ந்நறுந் தேறல்**
**பரந்துபன் முகத்தவாய்ப் பவளக் கொடியொடும்**
**குரூஉக்கண் பரூஉத்தாள் குடம்புரை செருத்தல்**
**கயவாய் மேதி கள்கழுநீர் உண்டு**
**உயவால் வைந்நுதித் தொடர்நெறி மருப்பின்**
**புறக்காழ் வயிரப் பூங்கழை தடிந்துஉகு**
**நிறக்காழ் நித்திலம் நிரந்தரம் வரன்றுஅயல்**
**வெள்ளிடை நிவந்த மேதகு சுவலினை**
**உள்ளுயிர்ப் பெடையை உறையுளின் இருத்திப்**
**பாலுள்நீர் தெரித்துப் பருகும் ஒண்சேவல்**
**ஆலும்நீர்ச் சிறைபுக்கு ஆய்ந்துஇரை கொணர்வல்என்று**
**இகந்து அயலிடைப் படிந்து எழும்அயர்வு உயிர்ப்பான்**
**வாலுக வைப்புஎன மறுகுபு குறுகி வீழ்ந்து**
**அன்மையின் தவக்குற்ற அச்சப் பார்வையின்**
**புராதனப் பொய்கையுள் புகுபுனல் ஊர!**
**பொருவரு தாமரைப் புதல்வனைப் பயந்த**
**திருமறு மார்பன் திருவரங்கத்துப்**
**பொதுநலப் பெண்டிர் பொதுஉண் நின்மார்பம்**
**மல்லல்நீர் படிந்து அல்லது**
**புல்லேம்; தீண்டல், எம்பொன்அடிச் சுவடே.** (279)

இதுவும் பண்புஉவமப்போலி. என்னை? சேவல்அன்னம் நித்திலங்கள் வெள்ளிடை நிவந்த மேதகு சுவலினை வாலுகவைப்புஎனக் குறுகிஇருத்தற்கு மென்மைஇல்லாததனோடும் அறிவுமயக்கம் உற்றதனால் இலச்சையுற்றுத் தன்பேடையை இருத்திப்போந்த பொய்கையுள் புகாநிற்குமதுபோல, நீயும் கற்பும் நாணும் முதலிய நற்குணங்கள் இன்றித் தனம் முதலியன எய்தும் பெண்தன்மை மாத்திரமே உடைய பரத்தையரையும் நற்குணப்பெண்டிர் என்று தோயும்

அளவில், பொருள்மேல் சென்று வற்கென்ற துர்க்குணத்தாராதல் கண்டு, அதனோடு நினது புத்தி மயக்கமுற்றது நினக்கு இழிபு என நாணி, எம்மனையிடத்து வந்து வாயில் வேண்டாநின்றாய் என்பது உள்ளுறுத்துக் கொள்ளக் கிடந்தமையான் என்று உணர்க.

வெள்ளிடை - வெளி. நிவந்தது - உயர்ந்தது. சுவல் - மேடு. வாலுகவைப்பு - மணற்குன்றாகிய இடம். தவக்கு - இலச்சை, நாண். இது கருத்துப் பொருளாய பண்புஉவமப்போலி.

பகுதி - இதுவும் அது. துறை - அணைந்தவழி ஊடல். இது கூற்று - இற்பரத்தை.

[“மிக்க காற்று ஒருபக்கமாகச் சுழன்று அடித்தலால், ஒளிவீசும் பல நட்சத்திரங்களும் ஒளிர்தரும் வானத்தைக் கிழிக்கும் கிளைகள் சுமையால் மிக்கு வளையும்படியாகக் கொத்துக்கொத்தாகப் பூத்த மொட்டுக்களை வண்டுகள் குடைந்து மலர்விக்குந்தோறும் பூக்கள் முறுக்கு உடைந்து ஒழுகும் செறிந்த நறிய தேன் வெள்ளமிட்டுப் பரவுமிடத்துப் படர்ந்த செந்நிறக் கொடிகளோடு தேன்நிரம்பிய கழுநீர்ப்பூக்களை உண்ட செந்நிறக்கண்களையும் பெரிய வாயையும் பருத்த கால்களையும் குடம்போன்ற மடியையும் உடைய எருமை, அதிகமாக உண்ட வருத்தத்தாலே வரைகளை உடைய தன் கொம்புகளால் கூரியநுனிகளை உடைய முட்கள் தொடர்ந்து அமைந்துள்ள வெளியே வயிரம்பாய்ந்த அழகிய மூங்கில்களை முறிப்பதனால், அவற்றினுள்ளே இருக்கும் மூங்கில்முத்துக்கள் நாடோறும் கொழிக்கப்பட்டுப் பக்கலில் உள்ள வெற்றிடத்தில் குவிந்து காணப்படும் மேட்டினை, தான் எப்பொழுதும் நினைத்துக்கொண்டிருக்கும் உயிர் போன்ற பெடைஅன்னத்தைத் தம் இருப்பிடத்தில் தனித்துத் தங்கச்செய்து பாலும் நீரும் கலந்துவைத்தால் நீரை விடுத்துப் பாலைமாத்திரம் நுகரும் அன்னச்சேவல், அசையும் நீரை உடைய பக்கத்தை அடைந்து ஆராய்ந்து பெடைக்கு இரையைக் கொணர்வதாகக் கருதிப் புறப்பட்டுப் பக்கலிலுள்ள நீரிலே படிந்து களைப்பைப் போக்கிக்கொள்ள மணற்குன்று என்று கருதி மூங்கில்முத்துக் குவிந்த மேட்டை முயன்று பறந்து அடைந்து அதில் தங்கி, அது மணல்மேடு அன்மையின் தன் அறியாமைக்கு வெட்கித் தன் அறியாமையால் ஏற்பட்ட அச்சத்தோடு கூடிய பார்வையோடு தன் பழைய பொய்கைக்குள் புகும் ஊரை உடைய தலைவனே! ஒப்பற்ற உந்தியந்தாமரையில் பிரமனாகிய புதல்வனைப் பயந்த, திருமகளையும் ஸ்ரீவத்சம் என்ற மச்சத்தையும் மார்பில் உடைய எம்பெருமானுடைய திருவரங்கத் திருப்பதியிலே தம் அழகை ஆடவர் பலருக்கும் பொதுவாக்கும் பரத்தையர் பொதுவாக நுகரும் உன் மார்பினை நீ வளமான நீரில் மூழ்கி வந்தாலல்லது யாம் தீண்டமாட்டேம். எம் அடிச்சுவட்டைப் பின்தொடர்ந்து வாராதே” என்று இற்பரத்தை தன்னை அணையவந்த தலைவனிடம் ஊடியதாக அமையும் இப்பாடலில், ஆண்அன்னத்தின் கருத்து, தலைவன்கருத்துக்கு உவமமாயினமையின் இப்பாடல் கருத்துப்பொருளாகிய பண்புப்போலிக்கு எடுத்துக்காட்டாகும்.]

**ஓங்கிய குரம்புசார் உவளக வயின்வயின்**
**வீங்கிய திண்தோள் மிடலுடை மள்ளர்**
**சுதைபெய்து ஆற்றலின் சுடுமண் பன்முறை**
**ததைவுறப் படுத்த சால்பின் தெண்ணீர்**
**வார்ந்துஉகு கவர்முழை மதகுபடர் குடுமியில்**
**சேர்ந்து அசைவுஅற இருசிறகரும் ஒடுக்கி**
**மறைபுகு நோக்கின் மனப்பட்டிமையால்**
**துறைபுகு கயலினைச் சோர்புகண்டு எடுத்துக்**
**கூர்வாய் வெண்சிறைக் குரண்டம் மென்பெடைக்கு**
**ஆர்வாய்என அருத்தியின் அருத்துபு துடித்து**
**அயல் வீழ்வதனை அற்றம் பார்த்து**

**மிச்சில்என்று அறிந்தும் விழுநெறி ஒரீஇ**
**நச்சிஉண் புலவு நாற்றத்தோடும்**
**செங்கண் வெள்உகிர்ச் சேவல்ஓதிமம்**
**ஒருசிறை இருந்த ஓவாச் செவ்வி**
**இருசிறைப் பேடை எழில்மலர் குறுகும்**
**நளிமலர்ப் பொய்கை நல்வயல் ஊர!**
**திருநெடு மாயன் திருவரங்கத்துப்**
**பொருள்நசைப் பரத்தையர் பொறித்த நின்மார்பின்**
**தனக்குறி, யாம்நிற் றழுவுபு சிதைவுறின்**
**மனக்கு இடர் இழைப்பதும் அன்றி**
**நினக்கு இடர் உறுமால்; நெருங்கல் எம்இடனே. (280)**

இது பிறப்பு உவமப்போலி. என்னை? இழிந்த குரண்டம் தன் பேடைக்கு அருத்தும் கயலை அது வாய்க்கொள்ளத் துடித்து அயலே வீழ்ந்ததனை மிச்சில் என்று அறிந்தும், அறிவினால் உயர்ந்த அன்னம், அதனை அற்றம் பார்த்து எடுத்து உண்ட புலால் நாற்றத்தோடு தனது உத்தமப்பேடை உறையும் அழகிய சேக்கையாகிய தாமரைமலரைக் குறுகுவது போல, நீயும் உயர்ந்த குலத்துள் பிறந்தும், இழிந்த குலத்துளோர் தோய்ந்து அகன்ற மிச்சிலாகிய பரத்தையரிடத்து இன்பத்தைத் துய்த்து, வேற்று நாற்றத்தோடும் எமது நன்மனைக்கண் எம்மைத் தீண்ட வந்தனையாதலின், எம்மைத் தீண்டல் பொருந்தாது எனக் கூறினாள் என்று உள்ளுறுத்துக்கொள்ளக் கிடந்தமையான் என்று உணர்க.

பகுதி - இதுவும் அது. திணை - பெண்பால்கூற்றுப் பெருந்திணை. துறை - பள்ளியிடத்து ஊடல். கூற்று - இதுவும் இற்பரத்தை.

["உயர்ந்த அணைக்கட்டினை உடைய நீர்நிலையிலே வலிய தோள்களை உடைய ஆற்றல் மிக்க தொழிலாளிகள் செங்கற்களைச் சுண்ணாம்பிட்டு அடுக்கிக் கட்டிய, நீர் பாயும் மதகின் தலைப்பிலே போய் அமர்ந்து இருசிறகுகளையும் ஒடுக்கி, இடுங்கிய பார்வையோடு தன் மனத்துப்பட்ட வஞ்சனையால் அம்மதகு வழியே வரும் கயல்மீனை அது ஏமாந்த நேரம் பார்த்துக் கொத்தி எடுத்துக் கூரிய அலகினையும் வெள்ளிய சிறகுகளையும் உடைய கொக்கு, தன் மெல்லிய பெடை உண்ணுமாறு அன்போடு உண்பித்த கயல்மீன் அதன் வாயில்இருந்து தவறிப் பக்கத்தில் விழ, அது பெண்கொக்கின் வாயில் பட்ட மிச்சில் என்று அறிந்தும் சந்தர்ப்பம் பார்த்துத் தன் தூய வழியை விடுத்து அதனை விரும்பி உண்ட புலால்நாற்றத்தோடு சிவந்த கால்களில் வெள்ளிய நகங்களை உடைய ஆண்அன்னம், தன் பெரிய சிறகுகளை உடைய பெண்அன்னம் ஒரு பக்கமாகத் தங்கியிருந்த குறைவற்ற புதுமையை உடைய அழகிய தாமரைமலரை அணுகும், செறிந்த மலர்களை உடைய பொய்கைவளம் சான்ற நல்ல வயல்களை உடைய ஊரனே! திருவோடு கூடிய நெடியோனாகிய எம்பெருமானுடைய திருவரங்கத் திருத்தலத்திலே, பொருளிலேயே விருப்பமுடைய பரத்தையர் உன் மார்பில் பொறித்திருக்கும் அவர்களுடைய முலைச்சுவட்டு அடையாளங்கள் யாங்கள் உன்னைத் தழுவுதலால் சிதையுமாயின், அவர்கள் மனத்துக்கு வருத்தம் தருவதோடு அமையாமல் உனக்கும் துயரம் தரும் ஆதலின், எம்மிடம் நெருங்கிவாராதே" என்று சேரிப்பரத்தையைப் புணர்ந்து வந்த தலைவனிடம் இற்பரத்தை பள்ளியிடத்து ஊடியதாக அமைந்த இப்பாடலில், அன்னத்தைத் தலைவனாகவும் கொக்கினைப் பரத்தையரைத் தோய்ந்த ஏனையராகவும் உயர்பிறப்பும் இழிபிறப்பும் குறித்து உவமம் செய்தலின் இது பிறப்பு உவமப்போலி ஆயிற்று. உவளகம் - நீர்நிலை.]

**விசும்பு தூர்த்துஎழு வியன்சினை மாத்தின்**
**பசுப்புறத் தீங்கனி பரீஇநுகர் கடுவன்**

**புரப்பவர் குறுகுபு புலம்புஉறீஇப் பொங்கர்**
**இரிந்துஅலம் போதரும் ஈர்ந்தண் சோலையுள்**
**புளிங்கறி வேட்ட புன்தொழில் தன்மையர்க்குப்**
**பழிப்பு இன்றாகப் பாகுசெய்து அட்ட**
**கோதுஅறும் ஆன்பால் குழம்பு பொற்கலத்தினுள்**
**பெய்துஇருந்து ஆறும் பெற்றி ஏய்ப்ப**
**முடஅடிப் பலவின் முதிர்பொன் குடக்கனி**
**வேர்முதல் பழுத்து விரிந்தபொன் தீஞ்சுளை**
**பதன்அழி பான்மைப் பாய்புனல் ஊர!**
**நூற்கடல் பழகிய நுண்உணர்வு உடையோர்**
**ஆற்றலின் பரவுசீர் அரங்கனுக்கு அமைந்த**
**பாற்கடல் முற்றப் பருகுதற்கு எழுந்த**
**பேராப் பெரும்பசியாளர்தம் முன்னர்**
**ஆரா வள்ளத்து அமிர்து அமைப்பவர்போல்**
**சிறுவரை இன்பத்து உறுதுயர் இழைத்தற்கு**
**இரத்தல் ஈங்கு இயல்பு அன்றால்;**
**பரத்தையிற்பிரிதல் நின்பண்பு ஆகும்மே.** (281)

இஃது, 'உள்ளுறை உவமம் ஏனை உவமம்எனத் தள்ளா தாகும் திணைஉணர் வகையே' (தொ. பொ. 46) என்னும் அகத்திணையியல் சூத்திரத்தான், உள்ளுறைஉவமம் தான் ஏனைஉவமம் என்று கூறும்படி உவமமும் உவமிக்கப்படும் பொருளுமாய் நின்று உள்ளுறைஉவமத்தினைத் தரும் கருப்பொருட்குச் சிறப்புக் கொடுத்து நின்றது. என்னை? ஆகாயத்தை மூடி எழாநின்ற அகன்ற கொம்பர் மாமரத்தின் செம்மை முற்றாப் பசுத்த இனிய கனியைப் பறித்து நுகர் கடுவனானது, அச்சோலையைக் காப்பவர் முடுகத் தனிமையுற்று அதன் அயல்கொம்பரில் சுற்றித் திரியும் காவினுள், புளிப்பாகினை உண்ண வேட்ட புன்தொழில் தன்மைஉற்றவர்க்கு ஊட்டுவதாகக் குற்றம் இல்லையாம்படி பாகுபடுத்திக் காய்ச்சின எப்பிணியும் தீர்க்கும் பசுவின்பாற்குழம்பு பொன்னின்கலத்துள் பெய்துஇருந்து ஆறும் முறைபோல, முடப்பலவின் வேரில் குடக்கனி முற்றிப் பழுத்து விரிந்த பொன்போல் நிறத்தை உடைய இனிய சுளை அருந்தும் பருவத்து அருந்தாது செவ்வி அழியாநிற்கும் பரந்த புனல் ஊரனே! நீ உத்தமநாயகிஇல்லின்கண் மாலைக்காலத்தினும் செல்லாது இளைய செவ்வியை உடைய சேரிப்பரத்தையைப் புணர்ந்து விளையாடாநின்ற காலத்து, அவள் பொதுமகள் ஆதலின் பிறர் அப்பரத்தை மாளிகையைக் குறுகத் தனியுற்றுத் தணந்து அப்பரத்தை மாளிகையைச் சுற்றித் திரியும் இவ்வூரிடத்து, யானும் நின்வரவு பார்த்து என்னை அலங்கரித்து மிகுந்த காந்தியோடும் இருப்ப, நின்வரவு தாழ்ப்பக் கவின் அழியாநின்ற என் வருத்தத்தைத் தீர்ப்பான் ஒரு சேரியினிடத்து என் மாளிகைக்கண் வந்து வாயில் வேண்டாநின்றாய்; என்னிடத்து இன்பம் நின் காதற்கு ஆர்த்தி உடையது அன்று; இன்னும் அச்சேரிப்பரத்தை மாளிகையில் பிரிதல் நினக்குக் கடன் என்று காமக்கிழத்தி உள்ளுறை உவமம் கூறினாள் ஆதலின் என்று உணர்க.

அன்றியும், 'உடனுறை உவமம் சுட்டுநகை சிறப்புஎனக், கெடலறு மரபின் உள்ளுறை ஐந்தே' (தொ. பொ. 242) என்னும் பொருளியல் சூத்திரத்தான் இது

சிறப்பு என்ற உள்ளுறை. இச்சிறப்பு என்ற உள்ளுறை 'விரிகதிர் மண்டிலம் வியல்விசும்பு ஊர்தர' (கலி. 71) என்னும் மருதக்கலியுள்ளும் வந்தமை காண்க. இது சேரிப்பரத்தையைப் புணர்ந்து வந்த தலைவன் வரவு கண்டு காமக்கிழத்தி ஊடியவாறு கண்டு சென்று சார்ந்த தலைமகனுடன் ஊடல் தீர்கின்றாள் கூறியது. ஒழிந்த அகலம் நம்பெருமாள் மும்மணிக்கோவை விரித்துரையுள் காண்க. கோது - ஆகுபெயர்.

['புளிங்கறி வேட்ட புன்தொழில் தன்மையர்க்கு, பழிப்பு இன்றாகப் பாகு செய்து அட்ட, கோது அறும் ஆன்பால் குழம்பு பொற்கலத்தினுள், பெய்து இருந்து ஆறும் பெற்றி' என்பது ஏனை உவமம். இது 'முடப்பலவின் ... பதன்அழி பான்மை' என்ற உள்ளுறை உவமத்திற்குச் சிறப்புக் கொடுத்துநின்றது.

'விரிகதிர் மண்டிலம்' என்ற பாடலில் 'துனிசிறந்து இழிதரும் கண்ணின்நீர் அறல்வார, இனிது அமர் காதலன் இறைஞ்சித் தன் அடிசேர்பு, நனிவிரைந்து அளித்தலின் நகுபவள் முகம்' என்ற ஏனைஉவமம் 'பனி ஒருதிறம் வாரப் பாசடைத் தாமரை, தனிமலர் தளைவிடூஉம்' என்ற உள்ளுறை உவமத்திற்குச் சிறப்புக் கொடுத்துநின்றது. (கலி. 71)

'நூற்கடல் பழகிய ... பண்பாகும்மே' என்பதன் பொருள்.

'பலநூல்களையும் கற்றுத்தேர்ந்த நுட்பமதியுடையோர் தத்தம் ஆற்றலுக்கு ஏற்பப் புகழும் திருவரங்கப்பெருமானுக்கு என்று அவனாலேயே படைத்துக்கொள்ளப்பட்ட பாற்கடல் முழுதையும் பருகவேண்டும் என்ற அளவிற்குத் தூண்டப்பட்ட நீங்காத பெரிய பசியையுடையோர் முன்பு, ஒரு சிறுபாத்திரத்தில் அதுகூட முழுதும் நிரம்பாத அளவில் பால் குடிப்பதற்கு வழங்குபவர்களைப் போல, யாம் வழங்கக்கூடிய சிறிதுநேர இன்பத்திற்காக மிகுந்த துயரத்தை உண்டாக்கிக் கொள்வதற்கு எம்மிடத்தில் இரத்தல் தலைவனாகிய உனக்கு ஏற்புடைத்தன்று. பரத்தையரைக் கருதிப் பிரிதலே உனக்குப் பண்பாக அமைந்துவிட்டது' என்று காமக்கிழத்தி ஊடி உரைத்தது. கோது - ஆகுபெயராய், பிணியை உணர்த்திற்று.]

**மழைதவழ் பலவின் வான்சினை நீழல்**
**தழைதரும் அரம்பைதான் பொறைஉயிர்ப்ப**
**விசும்புஉமிழ் திவலையின் விழுமிதின் முற்றிய**
**பசுங்காய் மதுரப் பலன்படு காலை**
**நிறத்த பாசடை நீள்சினை வாட**
**இறப்புஅளித்து உலகில் பிறர்க்குஉறு பயனாம்;**
**மடல்அவிழ் நறைமகிழ் மாலிகை மார்பன்**
**துடரி மால்வரை துறந்தனளாய்த் தொடர்ந்த**
**வினையேன் பெற்ற மெல்லியல் ஒருத்தியும்**
**கனைகதிர் வேங்கைக் காளையும் கடத்திடை**
**மன்னிய திருவும் மாயோனும் போன்ம்**
**முன்னியது உளதுஎனின், முக்கோல் பகவீர்!**
**மதிபெற வணங்கினன் மகிழ்ந்தே;**
**சதிர்பெற விளம்பும், என்தளர்வு அகன்றிடவே. (282)**

(இ-ள்) மேகம் தவழாநின்ற பலவினது பெரிய கொம்பர்நீழலில் வளர்ந்த வாழை ஈனாநிற்ப, முகில் பெய்யும் துளியின் நன்றாய் விளைந்த பசுங்காய் இனிய கனியான பருவத்துப் பசுத்த இலையாகிய நீண்டசினை வாடுதலோடும் அதற்கு இறத்தலையும் கொடுத்து, உலகின்கண் பிறருக்கு மிக்க ஊதியமாகும் மாறனது துடரிமால்வரையை நீங்கினள் ஆதலின், தொடர்ந்து போந்த வினையேன்

பெற்ற மெல்லிய சாயலை உடையாள் ஒருத்தியும், நெருங்கிய கிரணத்தை உடைய வேற்கைக் காளை ஒருவனுமாக இருவரும், விட்டு நீங்காத திருமகளும் மாயோனும் போல, முக்கோற்பகவீர்! சுரத்தினிடத்து எதிர்வரக் கண்டது உண்டேல், யான் கூறியவை எல்லாம் புத்தியுட்கொண்டு மகிழ்ந்து எனது தளர்வு நீங்கச் சதிராக விளம்பும்; நும்மை வணங்காநின்றேன் என்றவாறு.

இதனுள் செய்து என்பது செய என்னும் வினையெச்ச வாய்பாடாக நின்றது [துறந்தனளாய்].

இச்செய்யுள் நால்வகை உவமப்போலியும் விரவிவந்த உவமப்போலி. என்னை? பலவின்கீழ் வளராநின்ற வாழை ஈன்ற தாறு போல, நற்றாயால் வளராநின்ற என்னால் பெறப்பட்டாள் என வினைஉவமப்போலியும், விசும்பு உமிழ் திவலையின் தாறு முற்றியது போல, என்னாலும் ஆயத்தாலும் இளையள் விளைவு எய்தினள் எனவே மெய்உவமப்போலியும், பசுங்காய் மதுரப் பயன்படுகாலை நிறத்த பாசடை நீள்சினை வாட இறப்பு அளித்து உலகில் பிறர்க்கு உறுபயனாம் எனவே, அங்ஙனம் இளையளாய் விளைவு எய்திய தலைவி இந்திரியகலினம் வந்து இன்பத்துக்கு உரியளாயின காலத்து எனது மேனிக்கும் வாட்டம் தந்து எனது உயிரையும் கொல்லாது கொன்று எனக்கு ஒரு பயனுமின்றி அயலானான கணவற்கே ஊதியம் ஆயினள் என்று கொள்ளப் பயஉவமப்போலியும், பண்புஉவமப்போலியும் வினைஉவமப்போலியும் இத-னோடு கூடி முன்னும் பின்னும் இவ்வண்ணமே நால்வகை உவமப்போலியும் உள்ளுறுத்துக்கொள்ள நிகழ்ந்தமையான் என்று உணர்க. பயஉவமப்போலி-யாவது வினைகாரணமாகப் புலப்படும் காரியத்தை உள்ளுறுத்துக்கொள்ளப்-படுவதாம். அஃது ஈண்டுக் கூட்டத்தால் பிறக்கும் பேரானந்தம். 'என்னால் பெறப்பட்டாள் என்மகள்' என்பன அன்பினது அதிகத்தாலும் நற்றாய் என்றும் தாய் என்றும் வேறு அல்லராம் ஐக்கியத்தாலும் கூறினாள். பாலைக்கலியுள்ளும் 'என்மகள் ஒருத்தியும்' (கலி. 4) எனக் கூறியவாற்றானும் உணர்க.

பகுதி - உடன்போக்கு; துறை - பின் சென்ற செவிலி முக்கோற்பகவரை வினாதல்.

இதனுள் தலைவி, தோழி, செவிலி, இற்பரத்தை, காமக்கிழத்தி, உழையோர் என்போர் கூற்று வந்தன. ஒழிந்தோர் கூற்றும் வந்தவழிக் காண்க.

[மழைதவழ் பலவின் வான்சினை நீழல் தழைதரும் அரம்பை தான்பொறை உயிர்த்தல் - வினைஉவமப்போலி. தாறு விசும்புஉமிழ் திவலையின் விழுமிதின் முற்றுதல் - மெய்உவமப்போலி. பசுங்காய் மதுரப் பயன்படுகாலை நிறத்த பாசடை நீள்சினை வாட இறப்பு அளித்து உலகில் பிறர்க்கு உறுபயன் ஆம் - பயஉவமப்போலி, பண்பு-உவமப்போலி, வினைஉவமப்போலி மூன்றும். பயஉவமப் போலி - வாழைப்பழம் சுவைத்தற்கு இனிதாய் உள்ளமை போலத் தலைவியும் தலைவன் சுவைத்தற்கு இனியளாய் உள்ளாள் என்பது.

பண்புஉவமப்போலி - வாழையின் இலைகள் வாடுவது போலவும் வாழை அழிவது போலவும் ஆயத்தார் வருந்தச் செவிலியும் நற்றாயும் வருந்திச் செயலறுதல்.

தலைவி உள்ளுறைஉவமம் கூறுதல் - 273, 276, 277-ஆம் பாடல்கள்.
தோழி உள்ளுறைஉவமம் கூறுதல் - 272, 275, 278-ஆம் பாடல்கள்.
செவிலி உள்ளுறைஉவமம் கூறுதல் - 282-ஆம் பாடல்.
இற்பரத்தை உள்ளுறைஉவமம் கூறுதல் - 279, 280, 281-ஆம் பாடல்.
உழையர் உள்ளுறைஉவமம் கூறுதல் - 274-ஆம் பாடல்.
ஒழிந்தோர் - பாங்கன், பாணன் (சூ. 123)] [38]

4-ஆவது உள்ளுறைஉவமம் முற்றும்.

5-ஆவது ஒட்டு அலங்காரம்

ஒட்டுஅணியின் இலக்கணம்

**124. குறித்ததை மறைத்துக் குறிக்கொள நிகர்த்ததை**
**நுவல்வகை தானே ஒட்டுஎன நுவல்ப. [39]**

(எ-ன்) வைத்த முறையானே (87) ஒட்டு என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) புலவன் தான் குறித்த பொருளை மறைத்து அதனைக் கற்று வல்லோர் உட்கொள்ளும்படிக்கு அதற்கு ஒத்த பிறிதுஒன்றினை வெளிப்படையாய்க் கூறும் கூறுபாடுதானே ஒட்டு என்னும் அலங்காரம் என்று கூறுவர் பெரியோர் என்றவாறு.

வெளிப்படையாக என்பது சொல்லெச்சம். [39]

ஒட்டின் கூறுகள்

**125. அதுவே,**
**பொருள்இடம் சாதி வினைகுணம் பொழுதொடு**
**மருள்அறு நெறித்தாய் வருதிறன் உடைத்தே. [40]**

(எ-ன்) இஃது அவ்வலங்காரத்தின் கூறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அச்சொல்லப்பட்ட ஒட்டு பொருள் முதல் காலம் ஈறாகச் சொல்லப்பட்ட ஆறும் இடனாக மயக்கமற்ற நெறியுடைத்தாய்த் தோன்றும் கூறுபாடு உடைத்தாம் என்றவாறு.

இவற்றிற்கு எல்லாம் செய்யுள் வருமாறு:

**கற்றுணர்ந்த வாய்மைக் கவிப்புலவீர்! கண்ணன்அருள்**
**பெற்றுஇயன்ற செம்பொருளைப் பேணியே - சுற்றம்**
**வளைத்துஅருந்த வாழாது, வந்துஅயலார் கூண்டு**
**திளைத்துஅருந்த வாழ்வார், சிலர். (283)**

(இ-ள்) கற்பனவாம் நூல்களைக் கற்று உணர்ந்த உண்மையோடும் கூடிய கவிப்புலவீர்காள்! கண்ணன் அருளைப் பெற்றதனால் உண்டான உம்மை நிதியை அழியாது ஓம்பி, அதனை மாதா பிதா முதலிய உரிமைச்சுற்றங்கள் தம்மை வளைத்திருந்து நுகர்வு எய்தத் தாமும் உடன் உண்டு வாழும் வாழ்வு எய்தாதே, சிலர் தம்மோடு ஒருவழியும் உறவுஇல்லாத அயலார் களித்து அருந்த வாழ்வார்; அவர் அறியாமை தகாது என்றவாறு.

இது புலவன் குறித்த பொருளை மறைத்து அதனைக் குறிக்கொளற்கு அதற்கு ஒத்த பிறிது ஒன்றினை வெளிப்படையாய்க் கூறியது. குறித்த பொருளாவது கண்ணன் அருள் பெறுதலால் உண்டான உண்மைப்பொருளாகிய கல்வி-யோடும் கூடிய கவி. பேணுதல் - வாய்மை இழவாது போற்றுதல். 'சுற்றம் வளைத்து அருந்த வாழாது' என்பது ஆன்மாவை ஈடேற்றும் உறுதிச்சுற்றமான பரமபதநாதனாகிய பிதாவும், பெரியபிராட்டியார் ஆகிய மாதாவும், ஆசிரியனும் அதனைக் கேட்டு மகிழ்வு எய்த அவர்களைப் புகழ்ந்து அப்பாடலை அவர்களுக்கே கொடுத்து இம்மைப்பயனோடு மறுமைப்பயனாம் முத்தியையும் பெற்றுப் பேரின்பம்எய்தி வாழாது என்றவாறு.

'சிலர் வந்து அயலார் கூண்டு வளைத்து அருந்த வாழ்வார்' என்பது முன்பிலவர்களைப் போலக் கவிகளால் புகழ்தற்கு யாதும் இயைபு இல்லாத மானிடராகிய அயலாரை வாய்மை இகழ்ந்து புகழ்வதனை அவர் கேட்டு உட்கொண்டு களித்து அளித்த கூறை, சோறு முதலியன உடுத்தும் உண்டும் வாழ்வார்; இஃது என்ன உலகியற்கை என்றவாறு.

இது பொருள் நிலைக்களனாகத் தோன்றிய ஒட்டு. என்னை? இருவகைப்-பொருள் கல்விப்பொருளும் செல்வப்பொருளும் என்பதனால் உணர்க. ஒட்டு என்பதற்கு நுவலாநுவற்சி, பிறிது மொழிதல், சுட்டு என்பன பரியாயம்.

திணை - பாடாண்; துறை - வாயுறைவாழ்த்து.

**உழவு பயன்கொள்வார் உயர்நிலத்தின் உள்ளாய்**
**விழைவுபெற வித்திய வித்துஅல்லால் - அழகுஅமையா**
**வன்பாரில் வித்தியதூஉம் மால்பொருட்டால் போர்நிலத்தாம்**
**என்பார் புலவீர்! எவர்? (284)**

(இ-ள்) உழவினால் பயன்கொள்வார் நல்ல கழனி அகத்தவாய் மகிழ்வு எய்த விதைத்த நல்ல வித்து சீமந்நாராயணன்பொருட்டால் விளைந்து களம்புகும் என உலகம் கூறுவது அல்லால், உழவினுக்கு யாதும் சிறப்பு இல்லாத வலிய பாறைநிலத்தில் விதைத்ததும் விளைந்து களம் புகும் என்று கூறுவார், புலவீர்காள்! உலகத்தில் ஒருவரும் இல்லை என்றவாறு.

இதுவும் குறித்த பொருளை மறைத்து அதற்கு ஒத்த பிறிதுஒன்றினை வெளிப்படையாகக் கூறியது. குறித்த பொருளாவது தவமாகிய தொழிலால் தமது உயிர்க்கு முத்தியாகிய ஊதியத்தை எய்தும் ஆரியர்கள் பர உபகாரத்தால் பூலோகமாகிய செய்அகத்தே நல்ல கழனி ஆகிய கோயில் முதலிய திருப்பதிகளுள் விருப்பமுற்று இருத்திய சிறப்புடை உயிர்களே திருமால் பொருட்டால் பரமபதம் எய்தும் என்று உலகம் கூறுவது அல்லால், சிறப்பு இல்லாத பாறைநிலத்தில் விதைத்த வித்து விளைந்து களம்புகுதாதது போல, மனநலன் யாதும் இல்லாத தறுகண்மையோர் வைகும் பாறையாம் பாலை நிலங்களில் வைகிய உயிர்கள் அறியாமை ஏதுவாக முத்தியைப் பெறும் என்று கூறுவார்கள் ஒருவரும் உலகின்கண் இல்லை என்றவாறு. தவம் - பெயர்ச்-சொல்லெச்சம். உயர்நிலம் - கோவில் (திருவரங்கம்) முதலிய திருப்பதிகள். விழைவு பெற - விருப்பம் பெற்று. வித்தியது - நியமித்திருத்தல். வித்து - ஆன்மாக்கள். இது மாட்டேறு இல்லாத உருவகம். வன்பார் - திருப்பதிகள் அல்லாத பொல்லா ஊர்கள். மால், போர்நிலம் இரண்டும் சிலேடை. மால் - திருமாலும் அறியாமையும். போர்நிலம் - சூடு நிற்கும் இடமும் பரமபதமும். எல்லா அண்டத்தையும் ஈன்று அகத்திடும் பிரகிருதிக்கு மேற்பட்டு அகன்ற விரசையையும் அகத்திடும் ஆதலின் முத்திக்குப் போர்நிலம் என்று பெயராயிற்று. போர்த்தல் - மூடுதல். இஃது இடம் நிலைக்களனாகிய ஒட்டு. திணை - பாடாண்; துறை - வாயுறைவாழ்த்து; ஓம்படை எனினுமாம்.

[மால் - மயக்கம் ஆகும் அறியாமை. சூடு - நெற்கதிரோடு அரியப்பட்ட தாள். பரம-பதத்தின் உட்புற எல்லையில் விரசைநதி உள்ளது. குறிப்பால் பரமபதமாகிய இடம்-பற்றிக் கூறலின் இஃது இடம் நிலைக்களனாய ஒட்டு.]

**வாய்ந்த தமிழ்மாறன் அருட்புலவீர்! மத்திமநோய்க்கு**
**ஏய்ந்த மருந்து ஆவின்பால் என்றக்கால், - ஆய்ந்துஅதைஅக்**

**கற்றாவின்பால் உணர்ந்து கைக்கொளார், மேதியின்பால்**
**பெற்றார்க்கும் போமோ, பிணி? (285)**

இதனுள் மத்திமநோய் என்பது பித்தம். அதற்கு மருந்து ஆவின்பால் என்றக்கால் என்பது வாகடநூல் அதற்கு ஆவின்பாலே மருந்து என்று கூறியக்கால் என்றவாறு. 'மேதியின்பால் பெற்றார்க்கும் போகுமோ பிணி' என்பது அப்பித்தமாகிய பிணி எருமைப்பாலைப் பெற்றார்க்குத் தீராது என்றவாறு. இது வெளிப்படையாகக் கூறிய பொருள். குறித்த பொருளாவது: மத்திமநோய்க்கு (என்பது பிறர் கூறும் பதிபசுபாசம் என்பவற்றுள் இடைநின்ற ஆன்மாவிற்குச் செய்த தீவினைஅடியாக எய்தும் பிறவியாகிய பிணிக்கு) நான்கு வேதத்தின் சாரமாகிய திருவாய்மொழி என்னும் ஆவினிடத்து உண்டாகிய உண்மைஞானம் ஆகிய பாலை ஆன்மஞானத்தினிடத்துத் தலைப்பெய்யாது, வேதமார்க்கம் அல்லாத புன்பனுவலாகிய மேதியினிடத்து உண்டான புன்மைஞானமாகிய பாலால் தீராது என்றவாறு.

வாய்ந்தது - உண்டானது. உம்மை - இழிவுசிறப்பு. ஓகாரம் ஒழியிசை. ஒழிந்த அகலம் உரையிற்கொள்க. இது சாதி நிலைக்களனாகத் தோன்றிய ஒட்டு; என்னை? ஆவின்பால் மேதியின்பால் என்பவற்றால் அவை நிலைக்களனாகப் புலப்படுதலான் என்று அறிக.

திணை - பாடாண்; துறை - செவியறிவுறூஉ. அல்லது பாடாண் சார்ந்த பொதுவியல்பால் சார்த்தின் பனுவல்வாழ்த்துமாம்.

[பெற்றார்க்கும் - உம்மை இழிவுசிறப்பு. போகுமோ - ஓகாரம் ஒழியிசை; பிறவிப்பிணி இடையறாது தொடரும் என்றவாறு. 'பசுஞானம் ஏற்படத் திருவாய்மொழியைப் பயில்க' என்பது செவியறிவுறூஉ. திருவாய்மொழியின் சிறப்புக் கூறியமை பனுவல் வாழ்த்து. வாதம், பித்தம், கோழை என்ற மூன்றனுள் பித்தம் மத்திமநோய்.]

**வளைதவழ்நீர் மண்மேல், மதிப்புலவீர்! அந்தோ!**
**விளைகழனிச் சார்புள் விராய - களைகளைய**
**வாங்கும் களைக்கோலால் மாநிலத்தார்க்கு ஏலாத**
**தீங்கு புரிவார், சிலர். (286)**

என்பது சங்கினம் தவழும் கடல்சூழ்ந்த பூமியில் உண்டான புலவீர்காள்! செந்நெல் விளையும் கழனியிடத்து விரவும் களையைக் களைவதற்குக் கர்த்தன் கொடுத்துக் கைக்கொண்ட களை களையும் கோலால் களையைக் களையாது, பெரிய நிலத்தின்கண் உள்ளார்க்குப் பொருந்தாத தீங்காகச் சிலர் தமது கண்ணைக் களையும் தீயதொழில் விரும்பிச் செய்வார்; இஃது என்ன பேதைமையோ? என்றவாறு. இது வெளிப்படையாகக் கூறிய பொருள்.

விளைகழனி - சீவியாநின்ற உடம்பு. உள் - ஆன்மா. சார்பு - இடம். விராய களை - உம்மை இழைத்த தீவினை. களைய - அதனைப் போக்குவதற்கு. வாங்கும் களைக்கோலால் - சீமந்நாராயணன் கொடுப்பக் கைக்கொண்ட மனோவாக்குக்காயங்களால், அவனைச் சிந்தித்தும் துதித்தும் கண்டும் கீர்த்தியைக் கேட்டும் தாமம் சாத்தியும் கோயில் வலம்வந்தும் போதுபோக்காது, முத்தியை விரும்புவார் புத்திக்குப் பொருந்தாத தீத்தொழில்களை விரும்பிச்செய்து தமக்கு உள்ள வாழ்நாளை அந்தோ! அவமே போக்காநின்றார்; இனி, எங்ஙனம் ஈடேறுவர் என்றவாறு. இதற்கும் அவரைப் போல்எனக் கூட்டுக. அந்தோ என்பது இரக்கத்தின்கண் குறிப்பு. இது குறித்த பொருள். இது வினை நிலைக்களனாகத் தோன்றிய ஒட்டு. என்னை? தீங்கு புரியும் தொழில் நிலைக்களனாகத் தோன்றுதலான் என்று உணர்க. திணை - பாடாண். துறை - வாயுறை வாழ்த்து.

[மாநிலத்தார்க்கு ஏலாத தீங்கு - கண்ணைக் குத்திக்கொள்ளுதல்; ஆன்மலாபத்துக்கு ஊறு விளைத்தல்.]

**வாழ்ந்த மதிப்புலவீர்! மால்வழங்கும் தூயநீர்**
**வீழ்ந்த நிலத்து இயல்பான் மெய்திரிந்தால், - சூழ்ந்துஅதனைத்**
**தேற்றில் தெளிப்பதல்லால், சேற்றில் செறிகளங்கம்**
**மாற்றப்படு நெறித்தோ, மற்று?** (287)

என்பது முற்ற உணர்ந்த மூதறிவாளரோடும் கூடி வாழ்ந்த மதியை உடைய புலவீர்காள்! மேகம் பெய்யும் தெளிந்த நீர் தான் விழுந்த நிலத்தின் இயல்பான் நிறம் வேறுபட்டால், அதனைப் போக்குதற்கு உலகம் விசாரித்து அறிந்த தேற்றாங்கொட்டையினால் அந்நீர் தெளிவதன்றிச் சேற்றுநீரால் அதற்கு அடைந்த களங்கத்தை ஒருவராலும் நீக்கப்படும் மார்க்கம் உடைத்தன்று என்றவாறு. இது வெளிப்படையாகக் கூறிய பொருள்.

அது தெளியாதது போல, மாயோன் அளித்த நற்குணம், சிற்றினங்களை விரும்பிக்கொண்ட உறவினது பெற்றியான் உண்மை வேறுபட்டால், எல்லா நூல்களையும் மனத்தான் உள்ளி அறிவறிந்தோர் தெளிந்த ஞானத்தால் பண்டு போல் தெளிவதன்றி, கரிய சேறு போல் செறிந்த சிற்றினத்தார் மாசுண்ட ஞானத்தால் தேற்றப்படாது என்றவாறு. ஆதலால் மூதறிவுடையோர் நட்பு விடாது கொள்ளப்பட வேண்டும் என்றவாறு. இது குறித்த பொருள். இதனுள் மால், நீர், வீழ்ந்த, மெய், தேற்றில், களங்கம் என்பன சிலேடை. ஆதலான் இஃது அடை பொதுவாய்ப் பொருள் வேறுபட்டுப் பண்பு நிலைக்களனாகத் தோன்றிய ஒட்டு. என்னை? வீழ்ந்த நிலத்து இயல்பான் மெய் திரிந்தாலெனக் குணம் நிலைக்களனாகக் குறித்த பொருள் தோன்றுதலான் என்று உணர்க.
திணை - பாடாண். துறை - ஓம்படை.

[மால் - மேகம், திருமால்; நீர் - தண்ணீர், குணம்; வீழ்ந்த - தரையில் தோய்ந்த, விரும்பிய; மெய் - வடிவம், உண்மை; தேற்றில் - தேற்றாங்கொட்டையால், தெளிந்த ஞானத்தால்; களங்கம் - நிறவேறுபாடு, அறிவின் திரிவு. அடை நீருக்கும் குணத்திற்கும் பொது.]

**நன்புலவீர்! கங்குற்கு இசைந்ததெலாம் நாரணனால்**
**இன்புற ஆராய்ந்தியற்றும் எஃகற்றே - புன்புலன்பெற்று**
**ஈட்டாதவர் எவனோ, எண்ணியது தாம்முடிக்க**
**மாட்டாது அழுங்கும் மதி?** (288)

என்பது நல்லறத்தினது பகுதி அறிந்த புலவீர்காள்! இரவிற்கு வேண்டுவன எல்லாம் நன்பகலே நாரணன் அருளால் புத்தி களித்து இயற்றும் கூரறிவு இலராகித் தம் மந்தபுத்தியால் அவற்றை இயற்றாது இருந்தவர், அக்கங்குல் வந்த காலத்துக் கங்குற்கு வேண்டுவன இன்றித் தாம் எண்ணியது முடிக்க மாட்டாது அழுங்குகின்றது என்ன பேதைமையோ? என்றவாறு. இது வெளிப்படையாய்க் கூறிய பொருள். அவரைப் போல, நிலையாமையோடும் கூடிய யாக்கை நிலைமைத்தாம் உயிரோடும் கூடி இருக்கப்பெற்ற காலத்து இம்மைக்கண்ணே மறுமைப்பயனாம் முத்தியைப் பெறுதற்கு ஏதுவாம் ஞானநூல்களை ஆராய்ந்து, சித்து அசித்து ஈசுரங்களை அறிந்து, அவற்றோடும் 'அன்று அறிவாம் என்னாது' அறங்களைப் பயிலாதார், மரணம் வந்து அடுத்த காலத்தில், 'எண்ணியிருந்த முத்தியை எய்த வேண்டுவன செய்து முடித்திலம்' என்று யமதூதுவர்கூட்டத்தைக் கண்டு அழுங்குகின்றமை என்ன பேதை-மையோ? என்றவாறு. எனவே, முத்தியை எய்துதற்கு வேண்டுவன யாக்கை

இருக்கப்பெற்றபொழுதே பின்னை என்னாது செய்து முடிக்க வேண்டும் என்பது பயன். இதனுள், 'நல்லறத்தின் பகுதி அறிந்த' என்பது சொல்லெச்சம். 'நன்பகலே' என்பது எதிர்மறைஎச்சம். இது காலம் நிலைக்களனாகத் தோன்றிய ஒட்டு. என்னை? இரவிற்கு வேண்டுவன எல்லாம் நன்பகலே இயற்றவேண்டும் என்னும் காலம் நிலைக்களனாகக் குறித்த பொருள் தோன்றுதலான் என்று உணர்க.

திணை - பாடாண்; துறை - ஓம்படை.

பொழுதொடும் (சூ. 125) என்னும் உம்மையால் சினை நிலைக்களனாகத் தோன்றும் ஒட்டும் உள. அதற்குச் செய்யுள் வருமாறு.

[நன்புலவீர் - நல்லறத்தின் பகுதியை அறிந்த புலவீர்காள் என்று பொருள் செய்யப்பட்டுள்ளது. இடம் நோக்கி 'நல்லறத்தின் பகுதியை உணர்ந்த' என்ற எச்சம் வருவித்துப் பொருள் உரைக்கப்பட்டுள்ளது. கங்குற்கு இசைந்ததெலாம் நன்பகலே ஈட்டாதார் எனக் கங்குற்கு மறுதலையான 'நன்பகல்' என்பது இடம் நோக்கி வருவித்து உரைக்கப்பட்டது. நன்பகலே என்பதன்கண் உள்ள ஏகாரம் ஈட்டாதார் என்ற எதிர்மறை வினையாலணையும்பெயரைக் கொண்டு முடிந்ததனால், எதிர்மறைச்செய்திக்கு ஏற்ப நன்பகலே என்பது உரையில் எச்சமாக வருவித்து உரைக்கப்பட்டது. மறுதலைப்பெயரையும் எதிர்மறை என்றல் இவர்கொள்கை போலும். எஃகு - கூரிய அறிவு.]

**எம்பெருமான் இன்அருள்சேர் இன்புலவீர்! வான்பொருட்குச்**
**செம்பொன் உள தீவில் செலவுற்றால் - பம்புதிரைச்**
**சங்கம் தவழ்கடலைத் தாம்பொடு பாய் கூம்புஇன்றி**
**வங்கம் கடந்துறுமோ, மற்று? (289)**

என்பது புலவீர்காள்! பெரும்பொருட்குப் பொன்விளைதீவில் செல்ல நினைந்தால் கப்பல் கயிற்றால் கட்டப்பட்ட பாயொடும் கூடிய பாய்மரமின்றி அத்தீவில் தலைப்படாது என்றவாறு. இது வெளிப்படையாகக் கூறிய பொருள். அதுபோலப் பொன்மயமான பரமபதத்தில் செல்லக் குறித்தவர்கள் மனோவாக்குக்காயங்களால் நினைத்தும் துதித்தும் தாமம் சாத்துவது முதலான சரியை இன்றி ஆண்டுத் தலைப்படார் என்பதாம். இது குறித்த பொருள். கடல் - பிறப்பாய கடல். வங்கம் - ஆன்மா. தாம்பும் கூம்பும் பாயும் மனம்வாக்குக்காயம்.

திணை - பாடாண். துறை - வாயுறை வாழ்த்து. இது சினை நிலைக்களனாகத் தோன்றும் ஒட்டு, தாம்பும் கூம்பும் பாயும் கூறியமையால்.

**தாந்தன் உறையுள் எனும் தண்பொருநையின் வடபால்**
**வாய்ந்த கிரண முழுமாணிக்கம் - ஏந்திழாய்!**
**ஞானம்உணர்ந்து உணர்த்தும் நன்முத்தியை விளைக்கும்**
**தான் அவனாம்; ஈது எவனோ, தான்? (290)**

இதனுள், தாந்தன் உறையுள் எனும் தண்பொருநையின் வடபால் - செம்பொன்மாடத் திருக்குருகூர். கிரணமுழுமாணிக்கம் - காரிமாறப்பிரான். இஃது அடை விபரீதப்பட்டுப் பொருள் வேறுபட்டது. என்னை? 'ஞானம் உணர்ந்து' என்பது முதலான நான்கும் மாணிக்கத்திற்கு இல்லை ஆதலின் அடை விபரீதமாயிற்று. இது முதலது போலப் பொருள் நிலைக்களனாகத் தோன்றிய ஒட்டு.

திணை - பாடாண். துறை - செந்துறைப் பாடாண் பாட்டு.

[தாந்தன் - புலன்அடக்கம் உடைய திருக்குருகூர் அடியவன் ஒருவன் (பா. 434). தாந்தனுடைய இருப்பிடமாகிய பொருநைநதியின் வடகரையில் அமைந்திருக்கும் திருக்குருகூரிலுள்ள ஞானஒளி வீசும் காரிமாறப்பிரானாகிய மாணிக்கம் ஞானவடிவானது; ஞானத்தை உணர்வது; ஞானத்தை உணர்த்துவது; நல்ல முத்தியைக் கொடுப்பது. இந்த நான்கு பண்புகளும் ஏனைய மாணிக்கங்களுக்கு இல்லை

என்பதனால், கிரணமுழுமாணிக்கத்துக்கு உரிய அடைமொழிகள் ஏனைய மாணிக்கங்களுக்கு இல்லாத வேறுபட்ட அடைமொழிகள் ஆகும்.]

**தென்அம் பொதியம் தருபொருநைத் தென்கரையின்**
**மன்னும் புளிக்கீழ் வளர் தருஒன்று - இன்அமிர்துஒத்து**
**ஆன்றசுவைத் தீங்கனி ஓர்ஆயிரமும் தண்ணளிகூர்ந்து**
**ஈன்றுஅளித்தது, அன்பால் எமக்கு.** (291)

இதனுள் 'மன்னும் புளி' என்பது திருப்புளிஆழ்வார். திருப்புளிக்கீழ் வளர்தரு ஆவது காரிமாறப்பிரான். 'இன்அமிர்து ஒத்து ஆன்ற சுவைத் தீங்கனி ஓர் ஆயிரம்' என்பது திருவாய்மொழி ஆயிரப்பாடல். இதுவும் பொருள் நிலைக்களனாகத் தோன்றிய ஒட்டு. அல்லது சாதி நிலைக்களனாகத் தோன்றிற்று எனினுமாம். இவை இரண்டிற்கும் ஒழிந்த அகலம் உரையிற் கொள்க. தருவும் கடவுள் ஆதலின் கடவுள்வாழ்த்துமாம். இதுவும் முன்னதுபோல் செந்துறைப் பாடாண்பாட்டு.

[திருப்புளிக்கீழ் வளர்தருஒன்று கருணையால் அமுது ஒத்த ஆயிரம் தீங்கனி அளித்தது என்பது ஏனைய மரங்களுக்கு இல்லாத செய்தி. புளியின்கீழ் எந்த மரமும் செழிப்பாக வளர்தலோ கனிதருவதோ இல்லை. இஃது அடை விபரீதப்பட்டதாம்.]

அஃதேல், இதன் முன்னர்க் கூறிய உள்ளுறை உவமத்தினோடும் ஒட்டு என்னும் இதனிடை வேற்றுமை யாதோ எனின், அஃதே! நன்று சொன்னாய்! உள்ளுறை உவமம் என்பது அகத்திணைக் கைகோள் இரண்டிற்குமே உரித்தாய் அகத்திணை ஐந்தினும் அவ்வவநிலங்களில் தெய்வதம் ஒழிந்த கருப்பொருள் களனாகப் பிறக்கும் எனவும், அவ்வுள்ளுறை உவமம் கூறுவார், தலைவன், தலைவி, செவிலி, தோழி, பாங்கன், பாணன் ஆக அறுவர் எனவும், உள்ளுறை உவமம் கூறுதற்கு உரியர் அல்லாதார் நற்றாய், தந்தை, தன் ஆயத்தார், தன் ஐயன்மார் ஆக நால்வர் எனவும், அங்ஙனம் கூறுதற்கு உரியோர் கூறுமிடத்து மருதம் நெய்தல் என்னும் ஈரிடத்தும் மிகுந்தும், குறிஞ்சிக்கண் அவ்வளவு இன்றியும் ஒழிந்த நிலம் இரண்டினும் அதனில் குறைந்தும் வரும் எனவும், அங்ஙனம் கூறுமிடத்தும் வெளிப்படக் கூறும் உவமையிடத்து உவமேயம் போலக் கேட்போர் மனத்தின்கண்ணும் புலவன் குறித்தவாறே நிகழ்த்துதலின் உள்ளுறை உவமம் எனவும், மேற்கூறப்படும் கருப்பொருள் களனாகப் பிறக்கும் இறைச்சிப்பொருளோடும் கூடாதனவாயும் வரும் எனவும் உணர்க. இஃது அன்னது அன்றாய்க் கருப்பொருளில் பிறக்கவேண்டும் என்னும் யாப்புறவு இன்றி, புறத்தினும் புறப்புறத்தினும் சென்று செய்யுள் செய்யும் புலவன் முதலாயினோர் கூறும் கூற்றாய், சுட்டு என்னும் உள்ளுறையதாய் நடத்தல் வேற்றுமை என்று உணர்க. அங்ஙனமாதல்

பீலிபெய் சாகாடும் அச்சுஇறும் அப்பண்டம்
சால மிகுத்துப் பெயின் (குறள்-475)
நுனிக்கொம்பர் ஏறினார் அஃதுஇறந்து ஊக்கின்
உயிர்க்குஇறுதி ஆகி விடும் (குறள்-476)

எனவும்,

நெடும்புனலுள் வெல்லும் முதலை அடும்புனலின்
நீங்கின் அதனைப் பிற (குறள்-495)
கடல்ஓடா கால்வல் நெடுந்தேர் கடல்ஓடும்
நாவாயும் ஓடா நிலத்து (குறள்-496)
காலாழ் களரின் நரிஅடும் கண்அஞ்சா
வேலாண் முகத்த களிறு (குறள்-500)

எனவும் திருவள்ளுவர் கூறிய வலிஅறிதல் இடம்அறிதல் என்னும் இரண்டினுள்ளும் பிறநூல்களிலும் கண்டுகொள்க.

தண்டியாசிரியர் ஒட்டு என்னும் அலங்காரத்துள் அடையும் பொருளும் அயல்பட மொழிவதாக, 'வெறிகொள் இனச்சுரும்பு மேய்ந்ததோர் காவி' என்பதில் உள்ளுறை உவமமும், அடை விபரீதப்படப் பொருள் வேறுபடக் 'கடைகொல் உலகியற்கை' என்பதில் கருப்பொருள் களனாகாத ஒட்டும் கூறினாரெனினும், இந்நூலுடையார்,

உடனுறை உவமம் சுட்டுநகை சிறப்புஎனக்
கெடலறு மரபின் உள்ளுறை ஐந்தே (தொ. பொ. 242)

எனத் தொல்காப்பியனார் ஐந்தாகப் பிரித்த உள்ளுறையை உள்ளுறை உவமம், ஒட்டு, இறைச்சி என மூன்றாக்கினார். இங்ஙனம் ஆராய்ந்து பிரித்த இவர் நோக்கமும் தெள்ளிதின் ஆராய்ந்து கொள்க.

[வெறிகொள் இனச்சுரும்பு மேய்ந்ததுஓர் காவிக்
குறைபடு தேன்வேட்டும் குறுகும் - நிறைமதுச்சேர்ந்து
உண்டாடும் தண்முகத்தே செவ்வி யுடையதுஓர்
வண்தாமரை பிரிந்த வண்டு (தண்டி சூ. 53 உதாரணம்)

களித்த பலவண்டுகள் சேர்ந்து உண்டு நீக்கிவிட்ட கருங்குவளைப்பூவிலுள்ள குறைபட்ட தேனை விரும்பி, தன்னிடத்து நிறைந்த தேனோடு வனப்புமிக்க வளவிய செந்தாமரைமலரைப் பிரிந்த வண்டு அக்குவளைப்பூவினை நெருங்குகிறது - என்ற இப்பாடலில், இன்பம் நுகர்தற்கு ஏற்ற பருவவனப்பும் இன்பச்செவ்வியும் உடைய தலைவியைப் பிரிந்த தலைவன், பலரும் தோய்ந்து வெறுத்து நீத்த பரத்தையின் புல்லிய இன்பம் கருதி அவளை அணுகுகிறான் - என்ற கருத்து பெறப்படுத்தப்பட்டமை உள்ளுறைஉவமமாம்.

இப்பாடலில், சுரும்பு மேய்ந்த காவியின் குறைபடுதேன், மதுச்சேர்ந்து செவ்வியுடைய வண்தாமரை, பிரிந்த வண்டு என்ற அடையொடு சேர்ந்த வெளிப்படைப் பொருள்களும், குறிப்பாகக் கொள்ளப்படவைத்த - பலர் தோய்ந்த பரத்தையின் குறையுற்ற இன்பம், இன்பச்செவ்வியும் வனப்பும் உடைய தலைவி, தலைவியைப் பிரிந்த தலைவன் - என்ற அடையொடு சேர்ந்த குறிப்புப்பொருள்களும் வெவ்வேறாக அமைந்துள்ளன.

கடைகொல் உலகுஇயற்கை! காலத்தின் தீங்கால்
அடைய வறிதுஆயிற்று அன்றே - அடைவோர்க்கு
அருமை உடைத்தன்றி அம்தேன் சுவைத்தாய்க்
கருமை விரவாக் கடல் (தண்டி சூ. 53 உதாரணம்)

"உலகத்து இயல்பு மிகவும் கீழ்ப்பட்டதுபோலும்! தன்னை வந்து அடைபவருக்கு அருமை உடைத்து ஆகாமல் செவ்வி எளிதாய்த் தேன் போன்ற இனிய சொற்களை உடையதாய்க் கருமை என்பதே இல்லாத இவ்வள்ளலாகிய கடல் யாம் வறுமையைப் போக்க அடையும் இந்நேரத்தில் வற்றிவிட்டதே!" என்று ஈத்து வறியவனாகிய வள்ளலை அண்மிய இரவலன் சொற்ற இப்பாடலில், வெளிப்படைப்பொருளாகிய கடலுக்கு ஏலாதனவாகிய அருமை உடைத்து அன்று ஆதல், அம்தேன் போன்ற சுவைத்து ஆகல், கருமை விரவாதிருத்தல் ஆகிய மாறுபட்ட அடைகள் குறிப்புப்பொருளாகிய வள்ளலுக்கே உரிய ஆயின. இஃது ஒட்டு அணி.

தொல்காப்பியனார் கூறிய நகை சிறப்பு என்பனவற்றையும் சுட்டு என்பதன்கண் அடக்கி ஒட்டணி என்ற பெயரில் இந்நூலாசிரியராகிய திருக்குருகைப் பெருமாள் கவிராயர் குறிப்பிட்டுள்ளார். எனவே தொல்காப்பியர் கூறிய உள்ளுறை ஐந்தும் இவ்வாசிரியருக்கு இறைச்சி, உள்ளுறைஉவமம், ஒட்டு என்ற மூன்று அணிகளில் அடங்கிவிட்டன.] [40]

5-ஆவது ஒட்டு அலங்காரம் முற்றும்.

6-ஆவது உல்லேக அலங்காரம்

உல்லேகத்தின் இலக்கணம்

**126. ஒருபொருட்கு உவமச்சொல் தொகக் கவர்த்த**
**பொருஅமர் பொருள்பல புணர்ப்பது உல்லேகம். [41]**

(எ-ன்) வைத்தமுறையானே (87) உல்லேகம் என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) புலவனால் குறிக்கப்பட்டது ஓர் உவமேயப்பொருட்கு உவமஉருபு தொகப் பலவேறு வகைத்தாய்க் கவர்த்த வினை பயன் மெய் உரு என்னும் ஏதுக்களான் ஒத்த உவமானப் பொருள்களை அதற்குக் கூறுவது உல்லேகம் என்னும் அலங்காரமாம் என்றவாறு. [41]

புறனடை

**127. அதுவே,**
**ஒருவர்பலர் குறிப்பு உரைப்பதும் ஒன்றும். [42]**

(எ-ன்) இஃது அதற்கு ஒரு புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அச்சொல்லப்பட்ட உல்லேகம் ஒருவர் தன்மையில் கூறப்படுவதோடும், அவர் பிறராய்உள்ளார்பலர் குறிப்புரையையும் பெய்து உரைப்பதும் பொருந்தும் என்றவாறு.

உம்மை எச்சமாதலால் வினாவினும் வரும் என்று உணர்க.

[ஒருவர் தம் கருத்தாக ஒரு பொருளுக்கு உரிய உவமானப்பொருள்களைத் தொகுத்துக் கூறுவதும், பிறர்கருத்தாய் வரும் உவமானப்பொருள்களைத் தொகுத்துக் கூறுவதும் உல்லேகமாம்.]

**என்ஆருயிர், என்இருகண்மணி, என்இதயத்து உள்ளாய்**
**மன்ஆரமிர்தம், என்மெய்க்கு அணிஆரம், வகுளப்பிரான்—**
**முன்நாள் என்னை அடிமைகொண்ட பேர்அருள்மூர்த்தி மண்மேல்**
**நன்நாவலர் தம்பிரான் உயர்வானவர் நல்துணையே.** (292)

இஃது ஒருவர் பல கவர்ப்பாய் உரைத்தது. இருகண் அகக்கண்ணும் புறக்கண்ணும். இடம் - தன்மை. துறை - கடவுள்வாழ்த்து.

[முன்னாளிலேயே என்னை அடிமையாகக் கொண்ட பேரருள்வடிவினனாகிய மகிழம்பூமாலையை அணிந்த மாறன் என்னும் நாவலர்தலைவன் ஆகிய வானவர் துணை எனக்கு அரிய உயிராய், என் இருகண்மணிகளாய், என் உள்ளத்தமைந்த அமுதமாய், என்உடலுக்கு அழகிய முத்துமாலையாய் உள்ளான் - என மாறனுக்கு உவமங்களாக என்உயிர், என்கண்மணி, எனக்கு அமுதம், யான் பூணும் ஆரம் என வேறுபட்ட பலவற்றைத் தன்மைஇடத்தில் உரைத்தவாறு. கவர்ப்பு - வேறுபட்ட நிலை.]

**முத்திக்கு வித்துஎன்பர், முத்திபெற்றார்; முத்தியை விளைக்கும்**
**பத்திக்கு வித்துஎன்பர், பத்திஉற்றார்; பனுவல் தொகைதேர்**
**புத்திக்கு வித்துஎன்பர், முத்தமிழ்வாய்மைப் புலவர் - மண்மேல்**
**எத்திக்கும் போற்றும் திருமகிழ்மாலை இறைவனையே.** (293)

இது பலர் பல கவர்ப்பாய்க் கூறுவர் எனப் பெய்து உரைத்தது. முத்தமிழ் - சித்து அசித்து ஈச்சுரத்தைக் கூறும் தமிழ்; அது திருவாய்மொழி; எழுத்தும் சொல்லும்

பொருளும் தேரும் வாய்மையுமாம். வாய்மை - உண்மை. துறை - கடவுள்-வாழ்த்து.

[பலர் பலவாகக் கூறுவதாகச் சொல்வது. உலகில் எல்லாத் திசையில் உள்ளாரும் புகழும் மாறனாகிய தலைவனை முத்திபெற்றவர்கள் முத்திக்கு வித்து எனவும், பக்தி நெறியினர் பக்திக்கு வித்து எனவும், எழுத்தும் சொல்லும் பொருளும் தேர்ந்த புலவர்கள் நூல்களை ஆராயும் புத்திக்கு வித்து எனவும் கூறுவர்.]

**அருள்அதுஎன்கோ? நல்அறம்அதுஎன்கோ? கற்றுஅறிந்தவர் மெய்ப்-**
**பொருள்அதுஎன்கோ? சிற்குணம்அதுஎன்கோ? தொண்டர் புத்திஉள்ளாம்**
**தெருள்அதுஎன்கோ - பிறதெய்வம்என்றே திரிகின்ற செய்கை**
**மருள்அது என்பால் அணுகாது என்னைஆள் மகிழ்மாறனையே. (294)**

இது தன் தொழில் உரைக்கும் வினாவின்கண் வந்தது. என்கோ - யான் என்று கூறுவேனோ என்னும் பொருட்டு. அருள் - கருணை. நல்லறம் - துறவறம். மெய்ப்பொருள் - சீமந்நாராயணன். சிற்குணம் - சுத்த சாத்துவிககுணம். புந்தி உள்ளாம் தெருள் - பரமஞானம். மருள் - அறியாமை. அது என்பால் அணுகாமை - அம்மருள் என்னிடத்துச் சிறிதும் உறாமை. என்னை ஆள் மகிழ்மாறன் - என்னை ஆட்கொண்ட மகிழ்மாறன். இதனுள் தன் தொழில் உரைக்கும் வினாவின்கண் ஈற்றின் ஓகாரம் முன்னர் வருமொழி முதற்-கண்ணவாம் கசதபக்கள் மிகாது இயல்பாயின. என்னை,

மாறுகோள் எச்சமும் வினாவும் ஐயமும்
கூறிய வல்லெழுத்து இயற்கை யாகும் (தொ. எ. 290) என்பதனால் அறிக.
திணை - பாடாண்; துறை - பழிச்சினர்ப் பணிதல்.

[தன் தொழில் உரைக்கும் வினா - தன்மை ஒருமை வினைமுற்றை அடுத்து வினாவைக் குறிக்கும் இடைச்சொல் இணைய உண்கு + ஓ - உண்கோ (உண்பேனோ என்னும் பொருளது) என்றாற்போல வருவது. ஓகார இடைச்சொல் வருமொழி முதலில் வரும் கசதபக்களோடு இயல்பாகப் புணரும் என்பதற்கு விதி கூறப்பட்டது. பாடலில் வரும் 'அது' பொருளின்றி இசைநிறையாய் வந்தது.
பிற தெய்வங்களைப் பரம்பொருள் என்று பிறழக் கொள்ளும் மயக்கம் என்னிடத்து நெருங்காதபடி என்னை ஆட்கொண்ட மாறனைக் கருணை என்பேனோ? துறவறம் என்பேனோ? கற்றறிந்தவர் கூறும் திருமால் என்பேனோ? சுத்தசாத்துவிககுணம் என்-பேனோ? அடியார்கள் உள்ளத்திலுள்ள பரமஞானம் என்பேனோ? என்றவாறு.] [42]

6-ஆவது உல்லேகம் முற்றும்.

7-ஆவது ஒப்புமைக்கூட்டம்

ஒப்புமைக்கூட்ட இலக்கணம்

**128. தக்கதுஓர் பொருளினைச் சாற்றுழி அதுபோல்**
**மிக்கபல் பொருள்களை உடன் விளம்புதல்தான்**
**ஒப்புமைக் கூட்டம்என உரைத்தனரே. [43]**

(எ-ன்) வைத்த முறையானே (87) ஒப்புமைக்கூட்டம் என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) முக்கியமானதொரு பொருளினைப் புலவன் கருதிச் செய்யுளகத்துச் சொல்லுங்கால், அதுபோன்ற மிக்க பல பொருளையும் அதனுடன் பொருள்

ஒப்புமை உடையவாய்க் கூட்டமுறச் சொல்லுதல் ஒப்புமைக்கூட்டமென மேனாள் கற்றுவல்லோர் உரைத்தனர் என்றவாறு. [43]

அதன்வகை

**129. உயர்புகழ் பழி அவற் றொடும்உறும் அதுவே. [44]**

(எ-ன்) இஃது அவ்வலங்காரத்தின் பாகுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அவ்வொப்புமைக் கூட்டம் என்னுமது உயர்ந்த புகழோடும் உயர்ந்த பழியோடும் பொருந்திவரும் என்றவாறு. உயர்வு முதல்நிலைத் தீவகம். ஏகாரம் ஈற்றசை.

[உயர்புகழ், உயர்பழி என உயர்வைப் பழிக்கும் பிரித்துக் கூட்டுக.]

**வையம் பரவும் மகிழ்மாறன் வண்தமிழும்,**
**செய்ய சதுர்மறையும், தேசிகராய் - மெய்உணர்ந்தோர்**
**பேரறிவும், பேருலகு உண்டானே பிரமம்எனப்**
**பார்அறிந்தது; ஆர் அறிதற்பாற்று? (295)**

இதனுள், மகிழ்மாறன் வண்தமிழ் என்றது - திருவாய்மொழி. தேசிகர் - ஆசிரியன்மார். பேருலகு உண்டான் - சீமந்நாராயணன். பார் அறிந்தது - பெரியோர்கள் அறிந்தது. 'அவை அல்ல எனின்' என்பதனைச் சொல்லெச்சமாக்கிக் கூட்டுக. பிரமம் என்பது ஆர் அறிதற்பாற்று என்பது ஒருவரும் அறியும் பகுதி உடைத்தன்று என்பதாம்.

திணை - வாகை; துறை - சால்பு முல்லை. அல்லது, திணை - பொதுவியல்; துறை - பனுவல் வாழ்த்துமாம். இது புகழ் ஒப்புமைக்கூட்டம்.

[திருவாய்மொழியும், நான்கு வேதங்களும் ஆசாரியர்களுடைய மெய்உணர்வாம் பேரறிவும் திருமாலே பிரமம் என உலகு அறியச் செய்தன. அவை இலவேல் திருமாலே பிரமம் என்பதனை ஒருவரும் அறியார்.
நலன் பயக்கும் சிறப்பான் திருவாய்மொழி, வேதம், ஆசாரியர்களின் பேரறிவு என்பன இணைத்துக் கூறப்பட்டன.]

**என்றும் பிறர்மனையார் இன்பம் நயவாரும்,**
**நன்றி மறவா நலத்தாரும், - ஒன்றினைக்கொன்று**
**ஊன்பரிந்து உண்ணாத உரவோரும், பூமகள்கோன்**
**வான்புரந்து நீடு வாழ்வார். (296)**

இதுவும் புகழொப்புமைக்கூட்டம். இதனுள் நீடுவாழ்வார் என்றது அழிவின்றி வாழ்வார் என்றவாறு. ஒழிந்த அகலம் உரையிற் கொள்க. திணையும் துறையும் இதுவுமது.

[ஒரு காலத்தும் பிறர்மனைவியர்பால் பெறும் இன்பத்தை விரும்பாதவரும், பிறர் செய்த நன்றியை மறவாத நற்பண்பு உடையவரும், ஓர் உயிரைக் கொன்று அதன் புலாலை விரும்பி உண்ணாத மனவலிமை உடையவரும் திருமாலுடைய வைகுந்தத்தை அப்பெருமான் அருள, அதன்கண் அழிவின்றி வாழ்பவராவர்.]

**வேரி மலர்மகள்கோன் மேவும் திருமேனி**
**பாரில் உலோகமெனும் பாவிகளும், - ஆரியனை**
**மாந்தரில்ஒன்று என்பாரும், வன்தொண்டர் சென்மநிலை**
**ஆய்ந்துரைப்பாரும், நரகத்தார். (297)**

இது பழிப்பு ஒப்புமைக்கூட்டம். திணை - பாடாண்; துறை - வாயுறைவாழ்த்து. [திருமகள் கேள்வனாகிய எம்பெருமானுடைய அர்ச்சாவதாரத் திருமேனியை உலோ-கத்தாலான சிற்பம் என்று கருதும் தீவினையாளரும், ஆசாரியனைச் சாதாரண மனிதனாகக் கருதிப் பழகுபவர்களும், அடியார்களுடைய சாதி பற்றிப் பேசித் தாழ்வாகக் கருதுபவர்களும் நரகத்தை எய்துவர் என்றவாறு.]

**பொல்லா அழுக்காறு பூண்குநரும், மால்அடியார்க்கு**
**இல்லாப் பழிஒன்று இடுகுநரும் - நல்ஆற்றில்**
**செல்குநரை மீட்குநரும், சேயிழையாய்! எய்துவன**
**நல்குரவு தீவாய் நரகு.** (298)

இதுவும் பழி ஒப்புமைக்கூட்டம். நல்குரவு - வறுமை. தீவாய் நரகு - அக்கினி நரகம். எனவே, இம்மைக்கு வறுமையும் மறுமைக்குத் தீவாய் நரகும் என்பதாம். ஈரிடத்தும் உம்மை தொக்கன.
திணை - பாடாண்; துறை - வாயுறை வாழ்த்து.
[நல்குரவும், தீவாய் நரகும் என ஈரிடத்தும் உள்ள உம்மைகள் பாடலில் மறைந்து உள்ளன. பெண்ணே! கொடிய பொறாமை உறுபவரும், திருமாலுடைய அடியவர்களை அடாப்பழி சுமத்துபவரும் நல்ல வழியில் செல்பவரைத் தடுத்துத் தீயவழியில் செலுத்து-பவரும் இம்மையில் வறுமையும் மறுமையில் நரகத்துன்பமும் எய்துவர். சேயிழையாய் என்பது மகடூஉ முன்னிலை.]

**மைந்தர் மூரல்வாய் முத்தம்உண்ணாத வாய் வாயோ?**
**மைந்தர் சொற்கொளாச் செவியும் ஓர்செவிகொலோ? மதலை**
**மைந்தர் சீறடிச் சுவடுஉழா மார்பும் ஓர்மார்போ?**
**மைந்தர் காட்சிகண்டு இன்புறாக் கண்கள் கண்மலரோ?** (299)

இதுவும் பழி ஒப்புமைக்கூட்டம்.
திணை - வாகை; துறை - பொருளொடு புணர்தல். அன்றித் திணை - பொதுவியல்; துறை - மகப்பெறாது அழுங்கல்.
[ஆண்மக்களுடைய புன்முறுவலை உடைய வாயை முத்தமிடாத மனிதனுடைய வாய் பயன்பெற்ற வாய் ஆகுமா? ஆண்குழந்தைகளின் சொற்களைக் கேளாத செவிகள் பயன் பெற்ற செவிகள் ஆகுமா? அம்மக்களுடைய சிறிய அடிகளால் துகைக்கப்-பெறாத மார்பு பயன்பெற்ற மார்பு ஆகுமா? அக்குழந்தைகளின் வடிவழகைக் கண்டு இன்புறாத கண்கள் பயன்பெற்ற கண்கள் ஆகுமா?] [44]

7-ஆவது ஒப்புமைக் கூட்டம் முற்றும்.

8-ஆவது வேற்றுமைஅலங்காரம்

வேற்றுமைஅணியின் இலக்கணம்

**130. ஒப்புடை இருபொருள் உரையினும் குறிப்பினும்**
**மெய்ப்பட வேற்றுமைப் படுத்துதல் வேற்றுமை. [45]**

(எ-ன்) நிறுத்த முறையானே (87) வேற்றுமை என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) உலகத்து ஒப்புடையனவாய் இருக்கும் இரண்டுபொருளை வைத்து, அவற்றைக் கூற்றினாலாதல் குறிப்பினாலாதல் பொருள்பெறத் தம்முள் வேற்றுமைபடக் கூறுவது வேற்றுமை என்னும் அலங்காரமாம் என்றவாறு. [45]

வேற்றுமைஅணியின் வகைகள்

**131. அதுவே,**
**ஒருபொருள் இருபொருள் சமம் உயர்ச்சியது எனும்**
**பொருள்பெறு மரபின் புலப்படும் என்ப. [46]**

(எ-ன்) இஃது அவ்வலங்காரத்தினது பொருட்கூறுபாடு உணர்த்துதல் நுதலிற்று. (இ-ள்) அவ்வேற்றுமை என்னும் அலங்காரமாகிய அது, ஒரு பொருளான் வேற்றுமை செய்தலும், இருபொருளான் வேற்றுமை செய்தலும், அங்ஙனம் வேற்றுமை செய்யுங்கால் ஒன்றினுக்கு ஒன்று சமமாம் தன்மையும், உயர்ந்துள தன்மையும் உடைத்து எனப் பொருள்படும் இலக்கணத்தோடும் தோன்றும் என்று கூறுவர் பெரியோர் என்றவாறு.

இவற்றிற்கு எல்லாம் செய்யுள் வருமாறு:

**உண்ணத் தெவிட்டாது உடலும்உயிரும் தளிர்ப்பத்**
**தண்என்று இனிமை தரும்அமிர்தம் - பெண்அமிர்தின்**
**செவ்வாய்அமிர்து அனையது என்றாலும், செவ்வியினில்**
**ஒவ்வாது அது; பழமைத்து ஒன்று.** (300)

என்பது, உண்ணாநிற்ப உண்டோர் உடலும் உயிரும் தழைக்கும்படி குளிர்ந்து தெவிட்டாது இனிமையைக் கொடுக்கும் தேவர்பானமாகிய அமிர்தம் ஒத்தது இப்பெண்ணாகிய அமிர்தின் செவ்வாய்இடத்து உண்டாகிய பானம் ஆகிய அமிர்தம் என்றேன் ஆயினும், காலத்தினால் பார்க்குமிடத்துப் பழமை உடைத்து அஃது; இஃது அப்படி அன்று; புதிதுபுதிதாம் தன்மையை உடைத்து ஆகையால் காலச்செவ்வியால் ஒவ்வாது என்றவாறு.

இதனுள் பெண் ஆகிய அமிர்தின் செவ்வாய்இடத்து உண்டாகிய பானம் ஆகிய அமிர்தமென உருவகவாய்பாடுகள் மாட்டேறு பெற்றும் மாட்டேறு பெறாதும் வந்ததும் காண்க. இஃது ஒருபொருள்.

பகுதி - இயற்கைப் புணர்ச்சி; துறை - நலம்புனைந்துஉரைத்தல்.

[பெண்அமிர்து - மாட்டேறு பெற்ற உருவகம். செவ்வாய் அமிர்து - மாட்டேறு பெறாத உருவகம். அமிர்தம் என்ற ஒரு பொருளின் சமமான இருவகைகளைக் கூறி அவற்றுள் வேற்றுமை கண்டமையின் இஃது ஒருபொருள்வேற்றுமை.]

**வண்ண வாய்மைச்சுடர்கள் மன்ஆனனத்து உலவு**
**கண்ணதாய் அம்பரமாய்க் கண்டவற்றுள் - ஒண்மை**
**வெளிஒன்று; வேங்கடத்துள் மெய்ப்பொருளாய் நின்ற**
**ஒளிஒன்று எனும், பேர்உலகு.** (301)

இதனுள் அழகினோடும் கூடிய உண்மைச்சுடர்கள் சந்திரனும் ஆதித்தியனும். ஆகாயமும் திருவேங்கடமுடையானும் ஒப்புமைப்பொருள். ஆகாயத்தின்மேல் சொல்லுங்கால், சுடர்கள் பொருந்திய மகிழ்ச்சியோடும் சுற்றிவரும் இடம் உடைத்தாய்ச் சலத்தைத் தரிக்கப்பட்டதாய் எனவும், திருவேங்கடமுடையான்மேல் சொல்லுங்கால், சுடர்கள் நிலைபெற்ற திருமுகமண்டலத்துள் பிறழும் திருக்கண்களாக உடைய அழகிய பரத்துவமாம் எனவும் கொள்க. இஃது இருபொருள். ஒருபொருள் இருபொருள் இவைஇரண்டும் சமம். இது கூற்று. துறை - கடவுள்வாழ்த்து.

[ஆனனம் - மகிழ்ச்சி, முகம். கண் - இடம், நேத்திரம். அம்பரம் - தண்ணீர், அழகிய பரத்துவம். சூரியனும் சந்திரனும் எம்பெருமான் திருக்கண்கள். ஆகாயம், திருவேங்கட-முடையான் என்ற இரு வேறுபட்ட பொருள்களைச் சிலேடைவாய்பாட்டால் சமமாகக் கூறியவாறு. கூற்று - வெளிப்படையாகக் கூறியது.]

**மாறன் தமிழ்மறைக்கு வாய்ந்தமறை முப்பொருளும்**
**கூறும் திறத்தால் குறிப்புஒக்கும்; - தேறத்**
**துயவுஅறவே கூறும் இது; சோதியை உட்கொள்ள**
**மயர்வுஅறவே கூறா மறை** (302)

என்பது உயர்ச்சி. துயவு - அறிவு திரிதல். இதுவும் கூற்று.
திணை - பாடாண் சார்ந்த பொதுவியல்; துறை - பனுவல்வாழ்த்து.

[அநாதி காலமாக உள்ள நால்வேதம், சித்து அசித்து ஈச்சுரம் என்ற முப்பொருள்-களையும் விளக்கி உரைக்கும் தன்மையால், மாறன் அருளிய தமிழ்மறையாம் திருவாய்மொழியை ஒக்குமேனும், அம்முப்பொருளைத் திருவாய்மொழி அறிவில் திரிபு இன்றித் தெளியுமாறு குறிப்பிடும். ஆனால் பரம்பொருளை உணருமாறு மயக்கமற வேதங்கள் கூறா. எனவே இருபொருள்களை ஒப்புடையனவாகக் கூறி வெளிப்படை-யாக ஒன்றனை உயர்த்திக் கூறியவாறு உணரப்படும்.]

**வெய்ய நயனத்த செவ்வாய வெண்நகைய**
**தையல் வதனம்; இறைதண்காவுள் - பொய்கைதான்,**
**வண்கழுநீர் சேதாம்பல் வால்வளைகள்தாம் உயிர்த்த**
**தண்தரள நீள்நிரைய தாம்.** (303)

உயிர்த்த - பெற்ற. இது சமம். குறிப்பு.
பகுதி - இடந்தலை. துறை - தடம் கண்டு மகிழ்தல்.

[இத்தலைவியின் முகம் விரும்பத்தக்க கண்கள், செவ்வாய், வெள்ளிய பற்கள் இவற்றினை உடையது. குளம் வளமான கழுநீர்ப்பூக்கள், செவ்வாம்பல் பூக்கள், வெள்ளிய சங்குகள் பெற்ற குளிர்ந்த முத்துக்கள் ஆகியவற்றை உடையது. எனவே தலைவியின் முகத்துக்குக் குளம் சமமாகும் என்பது. இறை தண்கா - மாயோனது தண்கா என்னும் தலம். தரளநீள்நிரை - முத்துக்களாம் மிகுதிரள்.
கண்களைப் போன்ற கழுநீர்ப்பூக்களையும், செவ்வாயைப் போன்ற செவ்வாம்பலையும், பற்களைப் போன்ற முத்துக்களையும் உடைய குளம் தலைவிமுகத்திற்குச் சமம் என வெளிப்படையாக விளக்கிக் கூறாமையால் இது குறிப்பினால் சமமாகக் கூறியதாம்.]

**மாதராள் வெய்யமுலை மாணிக்க முத்துவடம்**
**மீதுஉலாவும் தகைத்தாம்; வேரிமகிழ்ச் - சோதி**
**துடரிவரை தேன்அருவி தூநீர்அருவி**
**படர்இயல; நல்காது இன்பம்.** (304)

வெய்ய முலை - விருப்பத்தைத் தரும் முலை. வேரிமகிழ்ச் சோதி - காரிமாறப்பிரான். இன்பம் நல்காது என்பதனால் இதுவும் குறிப்பு உயர்ச்சி.
பகுதி - இடந்தலைப்பாடு. துறை - நலம் பாராட்டல்.

["இத்தலைவியின் விருப்பத்தைத் தரும் முலைகள் தம்மீது மாணிக்கமாலையும் முத்துமாலையும் தவழுமாறு அமைந்துள்ளன. மாறனுக்கு உரிய துடரிமலையும் மாணிக்கமாலையை ஒத்த தேன்அருவியும், முத்துமாலையை ஒத்த நீர் அருவியும் தன்மீது தவழ்ந்து ஓடும் தகையது. ஆனால் வெய்யமுலை போலத் துடரிமலை எனக்கு இன்பம்நல்காது" என்ற தலைவன்கூற்றில், துடரிமலை தலைவிமுலையை ஒக்கும் தன்மை குறிப்பால் கூறப்பட்டுத் தலைவியின் முலைகளின் உயர்ச்சி கூறப்பட்டவாறு.]
[46]

வேற்றுமைஅணியின் பிறிதொரு வகை

**132. அதுவே,**
**பொருள் ஆதியவாம் நான்கொடும் புணரும். [47]**

(எ-ன்) இதுவும் அவ்வேற்றுமைஅலங்காரத்தின் விதப்பு உணர்த்துதல் நுதலிற்று. (இ-ள்) அவ்வேற்றுமைஅலங்காரம் என்னும் அது பொருள், குணம், சாதி, தொழில் என்னும் நான்கினோடும் பொருந்திவரும் என்றவாறு.

**அலையுள் படியும் அரும்புனலை வாங்கி**
**உலைவுஇல் உலகுஉய்ய ஓங்கும் - மலைமேல்**
**களிக்கும் புயல், வேங்கடவனைப்போல் முத்தி**
**அளிக்கும் திறன்அறியாதாம்.** (305)

இதனுள், அலையுள் படிதல் - திருப்பாற்கடலுள் கண்வளர்தலும், புனலை உண்ணக் கடலுள் தாழ்தலுமாம். அரும்புனலை வாங்கி உலைவுஇல் உலகு உய்ய ஓங்குதல் - பெறுதற்கு அரிய புனலை மாவலிபால் வாங்கி உலகத்துள்ளார் பிழைக்க விச்சுவரூபம் கோடலும், கடலின் புனலை வாங்கி உண்டு உலகு பிழைக்க விசும்பின்மேல் நிமிர்தலும். இது பொருள்வேற்றுமை. துறை - கடவுள் வாழ்த்து.

[மேகமும் வேங்கடவனும் அலையுள் படிதல், அரும்புனலை வாங்கி உலைவுஇல் உலகு உய்ய ஓங்குதல் என்ற செயல்களால் ஒத்திருக்குமாற்றைச் சிலேடை வாய்பாட்டாற் கூறி, மேகம் வேங்கடவனைப் போல முத்தியை நல்கும் திறத்தினை அறியாது என்று கூறி வேங்கடவனை உயர்த்தி வேற்றுமை செய்தவாறு.]

**செம்பவளமும் திருமால் சேறைமான் செவ்வாயின்**
**விம்பவளமும் குணத்தால் வேறுஅன்றே; - அம்பவளம்**
**வல்என்று இருக்கும்; மலர் மாதர்வாய் எஞ்ஞான்றும்**
**மெல்என்று இனிமை மிகும்.** (306)

இது குணவேற்றுமை. செவ்வாயின் விம்ப வளம் - வடிவின் செல்வம். ஒழிந்த அகலம் உரையிற் கொள்க. துறை - நலம்புனைந்து உரைத்தல்.

["செம்பவளமும் திருமாலுடைய திருத்தலமாகிய திருச்சேறையில் இருக்கும் தலைவியின் செவ்வாயின் வடிவின் செல்வமும் நிறப்பண்பினால் வேறுபட்டவையல்ல. ஆனால் அழகிய பவளம் அழுத்தமுடையதாக இருக்கும். இத்திருமகளின் வாய் எக்காலத்தும் மென்மையை உடையதாய் இனிமை மிகும்" எனச் செம்மைநிறத்தால் ஒற்றுமைப்பட்ட பவளத்தையும் வாயையும், வன்மைமென்மைப்பண்புகளால் வேறு-படுத்தியவாறு.]

**மந்திரத்தால் வாகடம்சொல் மாமருந்தால் தீராது;**
**புந்திஇடம்கொண்டு புறம் போகாதாம் - சந்ததமும்**
**மைவளைவேல் கண்மடவீர்! மாறன் தழுவாத**
**பெய்வளைபால் காமப் பிணி.** (307)

இது சாதிவேற்றுமை. திணை - பெண்பாற்கைக்கிளை. துறை - கண்டு கை சோர்தல்.

["கரிய வளைந்த வேல் போன்ற கண்களை உடைய தோழியரே! மாறனால் தழுவப்படாத இத்தலைவிக்கு ஏற்பட்ட காமமாகிய பிணி மந்திரத்தாலோ மருத்துவ-நூல்கள் கூறும் மருந்தாலோ தீர்க்கப்படாததாய், உள்ளத்தைத் தனக்கு இருப்பிடமாகக் கொண்டு ஒருபோதும் விடுத்து நீங்காது" எனக் காமமாகிய பிணியை ஏனைய

உடற்பிணிகளோடு பொருத்தி நோக்கி, மந்திரத்தாலும் மருந்தாலும் தீராத தன்மை-யுடைமையால் வேற்றுமை செய்தவாறு. காமப்பிணி, உடற்பிணி என்பன பிணி என்ற ஒரே சாதியை (இனத்தை)ச் சேர்ந்தனவாம்.]

**மாறும் கொலைநமற்கும், மாறன் மணிவரைமேல்**
**தேறும் மயில்விழிக்கும், சேர்வினைதான் - வேறுஅன்றே;**
**நின்றுஒறுக்கும் கூற்று, உயிரை; நேரிழைகண் மன்உயிரைக்**
**கொன்றுஅளிக்கும், மீட்கும் குழைந்து.** (308)

இதனுள் தேறும் என்பது மானுடமகள்எனத் தெளியும் எனவும், மயில்விழிக்கு என்பது மயில்போலும் சாயலைஉடையாள் விழிக்கு எனவும் கொள்க. இது தொழில் வேற்றுமை.
கொன்று அளிக்கை - நோய் செய்யும் நோக்கும், அதற்கு மருந்தாகிய நோக்கும். நோய் செய்யும் நோக்கு - இன்பத்தினால் காமக்குறிப்பினை வெளிப்படுத்துகின்ற நோக்கு. மருந்தாய நோக்கு - தன்கண் நிகழ்கின்ற அற்புநோக்கு.
பகுதி - இயற்கைப்புணர்ச்சி. துறை - குறிப்புஅறிதல்.
["கொலைத்தொழிலைச் செய்யும் இயமனுக்கும், மாறனுடைய துடரிமலை மீதிலுள்ள மயில் போன்ற சாயலை உடைய தலைவியின் விழிக்கும் பொருந்திய தொழில் ஒன்றே; வேறு அன்று. இயமன் உயிரைத் துன்புறுத்துவான். இத்தலைவியின் கண் அவளை நோக்குநருடைய உயிரைப் பொது நோக்கத்தான் அழித்துச் சிறப்பாகிய அன்புப்-பார்வையால் மீண்டும் காக்கும்" எனக் கொலைத்தொழில் செய்யும் இயமனையும் தலைவியின் கண்களையும் ஒரே தொழிலுடையனஎனக் கூறிக் கொன்றவரை உயிர்ப்-பிக்கும் திறத்தால் கண்கள் இயமனிலிருந்து வேறுபட்டவை என்று கூறியவாறு.]
'நான்கொடும் புணரும்' என்பது எச்சவும்மை ஆதலால் பிறஅலங்காரங்-களோடு கூடியும் வருவன உள. அவை வருமாறு:

**ஊர்தி அனம், அம்போருகம் ஆசனம், ஞான**
**நீதி வழுவாநெறி படைத்தும், - வேதநெறி**
**ஓதி பொறிஇழந்தான்; ஒண்குரவன் எங்கோமான்**
**ஆதிப் பொறிமகிழ் மாறன்.** (309)

இது சிலேடை வேற்றுமை. பொறி இழத்தல் - பிரமன் தலையை இழத்தல். எங்கோமான் பொறிமகிழ் மாறன் - எம்கோமான் பொறி என்னும் பெயரை உடைய பெரியபிராட்டி அருளை எய்திய மாறன் என்றமையால் சிலேடை-வாய்பாட்டான் வேற்றுமையாயிற்று.
திணை - பாடாண்; துறை - பழிச்சினர்ப் பணிதல்.
["பிரமனுக்கும் மாறனுக்கும் வாகனம் அன்னம், ஆசனம் தாமரை. இருவரும் ஞானமுறை கடவாத வழியைப் படைத்தவர்கள். வேதநெறியை எப்பொழுதும் ஓதிக்கொண்டிருக்கும் பிரமன் பொறியை (தலையை) இழந்தான். மேம்பட்ட ஆசாரிய-னாகிய எம்தலைவன் எல்லோருக்கும் முற்பட்டவளான பெரியபிராட்டியின் அருளைப் பெற்று மகிழும் மாறனாவான்" என்று பிரமனுக்கும் மாறனுக்கும் வாகனம் ஆசனம் படைப்பு முதலியவற்றால் ஒப்புமை கூறி, சிலேடைவாய்பாட்டால், பிரமன் பொறி இழக்கவும் மாறன் பொறி மகிழ்ந்தான் என்று வேற்றுமை செய்தவாறு. பொறி - தலை, திருமகள்.]

**ஓவாத செம்மை உதயத்து உளதுஎனினும்,**
**தாவா மறுப்படைத்த தன்மையால், - மூவா**
**முதல்நமது கண்ணன்எனும் முத்திரைக்கை மாறன்**
**வதனம்அது நேரா மதி.** (310)

இது விலக்கு வேற்றுமை
திணை - பாடாண்; துறை - பழிச்சினர்ப் பணிதல்.
இன்னும் வேறுபட வருவனவும் வந்தவழிக் கண்டுகொள்க.

[மாறனுடைய செம்முகத்துக்கு உதிக்கும் செந்நிற மதியை உவமை கூறத் தொடங்கிச் சந்திரனிடம் நீங்காத களங்கம் இருப்பதால், 'கண்ணனே பரம்பொருள்' என்று விளக்கிய முத்திரைக்கையை உடைய மாறனுடைய முகத்திற்குச் சந்திரன் ஒவ்வாது என்று விலக்கி, முகமும் மதியும் வெவ்வேறு என்று நிறுவியதால் இது விலக்கு-வேற்றுமை.] [47]

8-ஆவது வேற்றுமைஅலங்காரம் முற்றும்.

9-ஆவது திட்டாந்தஅலங்காரம்

இலக்கணம்

**133. ஒருபொருள் திறம்முதல் குறித்து ஒப்புமைகொளத்**
**தெருள்புரி பிறபொருள் திறமும் செவ்விதின்**
**அவ்வியல்அகத்து அறைவது திட்டாந்தம். [48]**

(எ-ன்) வைத்த முறையானே (87) திட்டாந்தம் என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) யாதானும் ஒருபொருட்கு எய்திய நன்மைதீமைக்கூறுபாட்டைப் புலவன் உட்கொண்டு அதனைத் தன்னால் கூறப்படும் செய்யுளகத்து முதலே கூறி, அதன் பின்னர் அதனோடு ஒப்புமை கொள்ளும்படிக்குத் தெளிவைத் தரும் மற்றொரு பொருளின் கூறுபாடும் அச்செய்யுளகத்து அழகுபெறக் கூறுவது திட்டாந்தம் என்னும் அலங்காரமாம் என்றவாறு.
எனவே, உள்ளுறைஉவமம் போல உவமப்பொருள் செய்யுளகத்து வெளிப்-படையாக நிற்ப ஏனைய உவமேயப்பொருள்கள் எஞ்சி நிற்பக் குறிப்பினால் கொள்ளப்படுவது அன்று என்பதாயிற்று.

**பூரணன் மலர்மகள் புணர்மணி மார்பன்**
**நாரணன் மதிநலன் நயந்தனன் புரப்ப**
**முத்திரைக் கராம்புய முதல்வன் நாவீறன்**
**உத்தமச் சுருதியை ஓதாது உணர்ந்துஉணர்ந்து**
**உரனுடை யவற்றுளும் உபநிடதத்தால்**
**வரன் உடைத்தாக வடித்த வண்தமிழ்மறைப்**
**பாடம் போற்றி நாப்பவித்திரம் படைத்தோர்,**
**ஆடகம் அருமணிக் கிரணமோடு அளவளாம்**
**வீடு அடைவதுமெய்; மெய்யே யாயினும்,**
**நாட அரிதாகி நடைபெறும் தொடர்புஉடைப்**
**பொதிந்தசொல் பொருள்நிலை புலப்படப் புந்தியுள்**
**பதிந்துஅறியார், இருபசை அறுத்து உண்மை**
**உணர்ந்து உடல்உயிர் தளிர்ப்பதுஉறார்; உறுமவர்**
**கணம் பயனிலவாம் காலம் கழியாத்**
**தேசிகர் ஐவரைத் தேர்ந்து நல்துணைக்கொளும்**
**பூசுரன் திருப்பெரும்பூதூர் முனிவன்**

**குருபரம்பரை உரைக்குறிப்பின் அத்தமிழ்மொழிப்**
**பொருள்மலி நோக்கினைப் புணர்த்துஉணர்ந்து ஒண்மை**
**இருநிலத்து ஒருவடிவு எடுத்த காட்சியதாம்**
**திருமலை ஆழ்வார் திருவருட்கு இலக்குஎனும்**
**மறையவர்பிரான் மணவாள மாமுனிவரன்**
**இறைநிலை உயிர்நிலை இஃதுஇஃது எய்தும்**
**முறைநெறி இஃதுஎன முழுவதும் முனிவுஅறத்**
**துறைதொறும் துறைதொறும் சோர்வுஅறத் தொடுத்துஎடுத்து**
**உணர்த்திய விசித்திரக் காண்டிகை ஒழிவுஇல்முன்**
**குணத்தொடும் பழகுபு கூர்ந்து உள்உறுத்தித்**
**தோய்ந்து உவட்டாத தூய பேரின்பம்**
**வாய்ந்தவர் தாமே; புலவீர்காள்! மன்ற**
**இமிழ்திரைப் பாற்கடலினிற் பல வளம்சார்**
**அமிழ்தினைப் பசும்பொன் தசும்புஅகத்து அடக்கியும்,**
**பரிசிப்பதனொடும் பரிமளிப்பது அலால்**
**உருசித்து அறியாது, உசிதமாம் அதன்சுவை;**
**வானவர் சுவைக்கொளும் வாய்மை**
**நானிலத்து எவர் தெளியாதவர், நயந்தே? (311)**

என்பது திட்டாந்தம்.

(இ-ள்) சொரூபமும் ரூபமும் ஞானமும் குணமும் விபூதியும் கருணையும் முதலாகியவற்றுள் யாதும் ஓர் குறைவு இலனாம் நிறைவு உடையான், பூமகள் விட்டு நீங்காத, கௌத்துவமணியோடும் கூடிய மார்பனாம் சீமந்நாராயணன், ஞானத்தையும் பேரானந்தத்தையும் அன்புற்று அளித்தலான், ஞானமுத்திரைக் கைத்தாமரை நாவீறு உடைய பிரான், ஒரு நூலும் ஒப்பில்லாத நன்மையை உடைய சுருதியை நாவினால் ஓதாது பாடம் தரித்தும், சத்த விற்பத்தியால் வரும் அத்தங்களை உட்கொண்டும், ஞானம் மிகுந்த அச்சுருதிகளுள்ளும் நுட்பமாம் உபநிடத வாக்கியங்களாற் சேட்டமாகக் கோதற வடித்துரைத்த திருவாய்-மொழியின் மூலம் முழுதும் பழுதுஅற ஓதித் தமது நாவிற்குச் சுத்தி உண்டாக்கினோர், இவ்வுலகில் பேதம் தரும் இரணியத்து அளவு அருமணிக்-கிரணத்து அளவோடும் ஒரு தன்மைத்தாகக் கலக்கும் அந்தாமத்தை அந்திய-காலத்து அடைவதோடும், சிறிது தமது உளத்து ஈண்டு இருந்து ஆனந்தம் எய்துவதும் பிறரால் பூசனை எய்துவதும் மெய்; மெய்யேயானாலும் அதன்கண் ஆராய்தற்கு அரிதாகி ஒழுகும் பொருள்தொடர்பு உடைய மறைந்த சொல்லின் பொருள் சென்று முற்றுதல் வெளிப்படை போலப் புலப்பட்டுத் தமது புந்தியுள் தங்கியறியாதார், அயன் அரன் என்னும் இருவரால் எய்தும் பயனை விட்டுச் 'சீமந்நாராயணனே பரதத்துவம்' என்னும் வாய்மை உணர்ந்து தமது வாழ்நாளுள் உடலும் உயிரும் தளிர்ப்பப் பேரானந்தம் எய்துவது அறியார். அறிபவர் யார் எனின், கணப்பொழுதும் உயிர்க்கு இலாபம் இன்மையாம் அவப்பொழுது கழியாத பெரியநம்பி முதலாம் ஆரியர் ஐவரையும் ஆராய்ந்து முத்திக்கு நற்றுணை என்ன உறவு கொண்ட பூலோக தேவனாம் திருப்-பெரும்பூதூர் முனிவன் குருபரம்பரை நோக்கத்தோடு முதலே சொன்ன தமிழ்மொழிப்பொருளான் மிகுத்த நுட்பநோக்கத்தினையும் ஒன்று எனப் புணர்த்து உட்கொண்ட ஒள்ளிய ஞானம் பெருநிலத்து ஒப்பற்ற மனுகுல வடிவு எடுத்த காட்சிப்பொருள் என்று கூறத்தகுவதாய திருமலையாழ்வார் திரு-

வுள்ளக்கருணைக்கு இலக்கு என்னும் மறையவர்க்கு அதிபதியாம் அழகிய மணவாளமாமுனிவன் என்னும் சேட்டனாவான் இறைநிலை இஃது. உயிர்நிலை இஃது. இறையை உயிர் சென்று எய்தும் அடைவாகிய வழி இஃது எனவும் அவற்றோடு ஏனைய இரண்டுமாகிய யாவையும் யாவரும் விரும்ப. முதற்பத்து முதலாய்ப் பத்தாம் பத்து ஈறாகும் இடந்தோறும் இடந்தோறும் சந்தயமறத் தொடுத்து எடுத்து உபதேசித்த பேரழகு உடைத்தாம் உரைநடையை ஒழிவு இல்லாத சுத்தசாத்துவிககுணத்தோடும் பயின்று வரம்புஅறுத்து உட்கொண்டு அழுத்தி அனுபவித்துத் தெவிட்டாத ஈறுஇல் பேரின்பம் பலித்துள்ளார்தாமே சந்தயம் இல்லை; அஃது எப்படி ஒன்று எனில், ஒலிக்கும் திரையை உடைய திருப்பாற்கடல் பெற்ற சங்கநிதி முதலிய செல்வத்தோடும் பொருந்தியதாம் அமிர்தினைப் பசும்பொன்னாலாகிய குடம், தனது வாய்க்கொண்டு உள்அடக்கியும் ஊறு கொள்வதனோடும் பரிமளிப்பதல்லால் அதற்குப் போக்கியமான மதுரத்தை உருசித்தறியாது என்பதூஉம் துறக்கத்தவரே இரதிக்கும் பெருமையுடையோர் என்பதூஉம் உலகத்துள் அன்புற்றுத் தெளியாதவர் இல்லையாதலால் அப்படி ஒன்றெனக் கொள்க.

இதனுள் முதலே குறித்த பொருளாவது திருவாய்மொழியும் பத்தரும். அவை அப்படியே முதல் வந்து. அதனோடு ஒப்புமை கொள்ளும்படிக்குத் தெளிவைத் தரும்படிக்குக் குறித்த அமிர்தமாம் பொருள்திறமும் அதன்பின்னர் இச்செய்யுளகத்துக் கூறியதூஉம் காண்க. எனவே, போந்த பொருள் திருவாய்மொழிப் பாடம் போற்றுவதோடும் அதனகத்து ஐந்து பொருள்களையும் குருபரம்பரையாய் ஓரான்வழியால் வரும் வியாக்கியானம் கேட்பதே பேரின்பம் எய்துதற்கு உறுதி என்பதாயிற்று.

திணை - பாடாண்; துறை - ஓம்படை.

[சொரூபம் - தனித்தன்மை. விபூதி - செல்வம். நாவீறுஉடைய பிரான் - சடகோபன். சுருதி - கேள்வி, வேதம். சத்தவிற்பத்தி - சொற்பொருட் காரணம். அத்தம் - அருத்தம். சேட்டம் - மேம்பாடு. இரணியம் - பொன். திருமலையாழ்வான் - மணவாளமாமுனிகளின் ஆசாரியரான திருவாய்மொழிப்பிள்ளை. சேட்டன் - மேம்பட்டவன்.

திருவாய்மொழியின் பொருளுணர்ந்து இன்பமுறுவோர்க்குப் பசும்பொற்குடத்திலிருக்கும் அமுதத்தை நுகரும் தேவர்கள் திட்டாந்தமாவர்.

திருவாய்மொழியின் பொருளுணராது மனப்பாடம் மட்டும் செய்தவருக்கு அமுதம் வைத்த பசும்பொற்குடம் திட்டாந்தம். அக்குடம் அமுதத்தை உள்ளடக்கி அதன் சம்பந்தத்தால் போற்றப்படுவது போலத் திருவாய்மொழியைப் பொருள்உணராது மனப்பாடம் செய்தவர்கள் அத்திருவாய்மொழியை அறிந்ததற்காகப் போற்றப்படுவாரே அன்றி, அதனைப் பொருளுணர்ந்து சுவைத்து இன்புறும் இன்பினை எய்தார் என்பது.

அர்த்தபஞ்சகம் - பரமாத்மா, சீவாத்மா, சீவாத்மா பரமாத்மாவை அடையும் வழி, அதற்கு உரிய தடை, தடை நீங்கினால் கிட்டும் இன்பம் - என்ற ஐம்பொருள்களாம். இரதித்தல் - சுவைத்தல். இஃது எடுத்துக்காட்டு உவமை என்ற உவமவகையுள் அடக்கப்பெறலாம்.]

**ஆதித் திருமால் அடியார் நிரப்புஇடும்பை**
**வாதிக்கினும் வளர்ப்பார் வண்மையே; - பாதிப்**
**பிறையாகியும் மதியம் பேரிருள் சீத்தற்குக்**
**குறையா குறையா குணம்.** (312)

இதுவும் திட்டாந்தம். நிரப்பு - வறுமை. வண்மை - கொடை.

திணை - பாடாண்; துறை - கொடுப்போர்ப் பழிச்சல்.

[எம்பெருமானுடைய அடியவர்கள் செல்வக்குறைபாடு துன்புறுத்தும் காலத்தும் கொடைப்பண்பினை வளர்த்துக்கொண்டே இருப்பர். இதற்குத் திட்டாந்தம் பாதிப்பிறையாகத் தேய்ந்த காலத்தும் சந்திரன் பெரிய இருளைப் போக்கும் தன் பண்பில் குறையாது என்பது.]

**ஈத்து உவக்கும் இன்பம் இயைந்தார்கள் ஏற்பவர்க்குச்**
**சேய்த்துஇருந்தும் ஈத்துஉவப்பர் திண்ணமே; - வாய்த்தமுகில்**
**வானம் பதியாயும் மால்நிலத்தார்க்கே உதவும்,**
**தானம் தவறாது தான்.** (313)

இதுவும் திட்டாந்தம். மால்நிலத்தார் - மாயோனால் அமைக்கப்பட்ட பூமியின்கண் உள்ளார். திணை - பாடாண். துறை - கொடுப்போர்ப் பழிச்சல்.

[பிறருக்குத் தம்பால் உள்ளதனை வழங்கி அதனால் மகிழ்ச்சி உற்றவர்கள் தம்மிடம் ஒரு பயன் எதிர்பார்ப்பவருக்குத் தாம் தொலைதூரத்திலிருந்தாலும் உறுதியாகக் கொடுத்து மகிழ்வர். இதற்குத் திட்டாந்தம் மேகம் தான் தொலைதூரத்திலுள்ள வானத்தில் இருந்தாலும் இந்த நிலவுலகில் உள்ளவர்க்கு மழையாகிய கொடையைத் தவறாது வழங்கும் என்பது.] [48]

9-ஆவது திட்டாந்தம் முற்றும்.

## 10-ஆவது தற்குணஅலங்காரம்

### தற்குணஅணி இலக்கணம்

**134. ஒருபொருள் குணத்தைமற்று ஒருபொருள் சார்ந்துழிப்**
**பற்றுதல் தற்குணம் எனப் பகர்ந்தனரே. [49]**

(எ-ன்) வைத்தமுறையானே (87) தற்குணம் என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) யாதாயினும் ஒரு முக்கியப்பொருளினது குணத்தைச் சார்ந்தஇடத்து அக்குணத்தைப் பிறிதுஒருபொருள் பற்றுதல் தற்குணம் என்னும் அலங்காரமாம் என்றவாறு.

[பிறிதுஒன்றன் பண்பினைச் சார்ந்த பொருள் தன்குணம் ஆக்குதலின் தற்குணம் என்பது.]

**காமர் திருப்பாற்கடலும் கருங்கடலாம்**
**நாமம்தனைப் பயிலும், நாடோறும் - பூமடந்தை**
**சீர்மேனியைத் தழுவும் தேவேசன் நாகணையான்**
**கார்மேனி வண்ணம் கவர்ந்து.** (314)

கவர்ந்து - உட்கொண்டு. திணை - பாடாண். துறை - கடவுள்வாழ்த்து.

[நாள்தோறும் திருமகளுடைய அழகிய மேனியைத் தழுவும் தேவர் தலைவனாய் ஆதிசேடனில் துயில்கொள்ளும் எம்பெருமானுடைய விரும்பத்தக்க மேனிநிறத்தைத் தான் கைக்கொண்டு விரும்பத்தக்க திருப்பாற்கடலும் நிறம் மாறிக் கருங்கடலாம் பெயரைக் கொண்டதாய் உள்ளது.

பாற்கடல் எம்பெருமான் கார்மேனிநிறத்தைக் கவர்ந்து கருமை தன்னுடைய பண்பு என்னும்படி கருங்கடலாய்க் காட்சி வழங்குதல் தற்குணமாம்.]

**சாந்த மலர்ப்பொதும்பர்ச் சார்ந்த வெளிற்றுத்தருவும்**
**சாந்தமணம் நல்கும் சால்பிற்றே, - ஏந்துஎழில்கூர்**
**வாசவனார் நான்முகனார் வந்துஇறைஞ்சி வாழ்வுபெறும்**
**கேசவனார் சேடகிரி.** (315)

இதுவும் தற்குணம். சேடகிரி - திருமலை. ஒழிந்த அகலம் உரையிற்கொள்க. திணை - பாடாண். துறை - மலைவருணனை.

[இந்திரரும் பிரமரும் வந்து வழிபட்டு நல்வாழ்வு பெற உதவும் எம்பெருமானுடைய சேடகிரி என்ற பெயருடைய திருமலையில் சந்தனமரச்சோலையில் வளர்ந்த உள்ளீடில்லாத சாதாரண மரமும் சந்தனத்தின் மணம் வீசும் பெருமையை உடையது. சந்தனத்தின் மணத்தைச் சாதாரண மரம் தான் கவர்ந்து நறுமணம் தருதல் சந்தனமரத்தின் குணத்தைத் தன்குணமாக்கிக் கொண்டதால் தற்குணமாம்.]

அஃதேல் குணஅதிசயத்துக்கும் தற்குணத்துக்கும் வேற்றுமை யாதோ எனின், அதிசயம் சிறுமையை மிகுத்துக் கூறும்; இது மிகுந்ததை மிகுந்ததாய்க் கூறல். [49]

10-ஆவது - தற்குணம் முற்றும்.

11-ஆவது பிரத்தியநீகஅலங்காரம்

பிரத்தியநீகஅணி இலக்கணம்

**135. ஒருபொருட்கு ஒருதிறத்து உடை பொருள் மற்றதற்கு**
**அத்திறத்தினில் ஒப்புடைப்பொருளதன்மேல்**
**அமர்விளைப்பதுவே பிரத்தியநீகம். [50]**

(எ-ன்) வைத்த முறையானே (87) பிரத்தியநீகம் என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) யாதானும் ஓர் உவமேயப்பொருட்கு ஒரு திறத்தால் தோற்ற உவமப்பொருள், அத்திறத்தால் அதற்கு ஒத்தது ஓர் உவமப்பொருள்மேல் அமர் விளைப்பதாகக் கூறுதல் பிரத்தியநீகம் என்னும் அலங்காரமாம் என்றவாறு. இது தற்குறிப்பேற்றத்தைப் பின்சென்றது ஒரு பேதம். அநீகம் - படை.

**தேமலர்வாவிப் புதுவைச் செல்வி முகப்பொற்பினுக்குத்**
**தூமதியம் தோற்றதன்பின், தோலாத - காமருசீர்**
**அந்தாமரைமேல் அமர்விளைக்கும், கங்குலின்கண்**
**வந்துஆடல் பெற்ற மதி.** (316)

இது பிரத்தியநீகம். தேமலர் வாவிப் புதுவைச் செல்வி - சூடிக் கொடுத்த செல்வி; ஆழ்வார்திருமகள். ஒழிந்த அகலம் உரையிற்கொள்க.

திணை - பாடாண். துறை - பெண்பால் கடவுள்வாழ்த்து.

[பிரத்தியநீகம் - மாறுபட்டது என்னும் பொருளது. இது தற்குறிப்பேற்ற அணியின் வகையின்பாற்படுக்கத்தக்கது.

தேன் நிரம்பிய பூக்களையுடைய நீரோடைகளை உடைய திருவில்லிபுத்தூர்ச் செல்வியாகிய ஆண்டாளுடைய முகஅழகிற்குத் தூய சந்திரன் தோற்ற பிறகு, இராப்பொழுதில் வந்து வெற்றி பெறும் சந்திரன், குறைவற்ற விரும்பத்தக்க சிறப்புடைய அழகிய தாமரைமேல் போர் தொடுத்து அதனை மலர்ச்சி நீங்கிக் குவிந்துகொள்ளச் செய்யும்.

சந்திரனுக்குப் பகை நாச்சியாரின் திருமுகமண்டலம். அதன்பக்கல் சந்திரனால் ஒன்றும் செய்யமுடியவில்லை. ஆகவே, அம்முகத்தை ஒரு நிலையில் ஒத்திருக்கும் தாமரை-யோடு பகைத்து அதனைக் குவியச் செய்கிறது என்ற தற்குறிப்பேற்றத்தில் பிரத்திய-நீகஅணி வந்துள்ளது.
ஒருபொருளைப் பகைக்கும் ஒருபொருள் அப்பொருளைத் தன்னால் ஒன்றும் செய்யமுடியாத நிலையில் அதனோடு தொடர்புடைய பிறிதொரு பொருளைப் பகைத்து அதனோடு அமர்விளைப்பது பிரத்தியநீகமாம்.] [50]

11-ஆவது பிரத்தியநீகம் முற்றும்.

12-ஆவது சந்தயஅலங்காரம்

சந்தயஅணியின் இலக்கணம்

**136. உற்றது ஓர்பொருளினை ஐயுற்று உணர்தல்**
**கற்றவர் சந்தயம் எனக் கழறினரே. [51]**

(எ-ன்) வைத்த முறையானே (87) சந்தயம் என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) புலன்நுகர் பொறிகளான் ஆதல், கருத்தினான் ஆதல் உற்றதொரு பொருளினை ஐயமுறுதலும், தெளிதலும் சந்தயம் என்னும் அலங்காரமாம் என்று கற்றோர் கூறினர் என்றவாறு. [51]

சந்தய அணியின் வகைகள்

**137. அதுவே,**
**சுத்த சந்தயம் நிச்சய கெர்ப்பம்**
**நிச்சயாந்தம்என நிகழ் மூன்று ஆம். [52]**

(எ-ன்) இஃது அதன் கூறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) அச்சந்தயம் என்னும் அலங்காரம், சுத்தசந்தயம் என்றும் நிச்சயகர்ப்பம் என்றும் நிச்சயாந்தம் என்றும் மூன்றுகூறாய் நடைபெறும் என்றவாறு.

**திருமகளோ, பார்மகளோ, தென்அரங்கன் வெற்பில்**
**வருமகளோ, யாரோ இம்மாது?** (317)

இது சுத்தசந்தயம். பகுதி - இயற்கைப் புணர்ச்சி; துறை - தலைவன் ஐயுறல். பா - குறள்வெண்பா.
["அரங்கன் மலையில் உலவிவரும் இத்தலைவி, திருமகளோ பூமிதேவியோ மானுட-மகளோ? யாவளோ என்பதனை உறுதியாக அறியேன்" என்று இயற்கைப்புணர்ச்சியின் தொடக்கத்தில் தலைவன் தலைவியை ஐயுற்றவாறு.]

**மெய்த்தமிழ் மாறன் துடரிவெற்பில் எதிர்நின்றது, பூங்**
**கொத்தமைந்த பொன்னங்கொடியோகொல்? - இத்தரணி**
**மீதாய் உடுத்தொடுத்து மேய தகை மின்உருவோ?**
**யாதாயது ஒன்றோ, இது?** (318)

[தலைவியை முதன்முதல் கண்ட தலைவன், "உண்மையையே கூறும் திருவாய்-மொழியை அருளிய மாறனுடைய துடரிமலையில் என் எதிரில் நிற்பது பூங்-

கொத்துக்களை உடைய பொற்கொடியோ? மேலே விண்மீன்களை அணிந்து வந்த மேம்பட்ட மின்னலின் உருவோ? இஃது யாது ஆகும்?" என்று ஐயுறுகிறான்.]

இதுவும் சுத்தசந்தயம். இதனுள் பூங்கொத்து என்றது கோடு கொடி நீர் என்னும் பலவகைப் பூக்களை. அமைந்தது - மிகுந்தது. இத்தரணிமீதாய் உடுத்தொடுத்து மேய தகை மின்உருவோ - மேகத்தை விட்டுப் புவியிடத்தாய், மேகப்படலத்தின் மேலாய உடுக்கணத்தினைத் தனக்கு உறுப்பாம் தொடர்படுத்திப் பொழிலிடத்து அடைந்தது ஒரு மின்உருவமோ? யாதாயது ஒன்றோ இது என்பது எவ்வுருவம் அவ்வுருவாயது ஒன்று எனத் தெரிதற்கு அரியது என்றவாறு.

பகுதி - இயற்கைப் புணர்ச்சி. துறை - ஐயுறுதல்.

**குன்றுபோல் புடைத்து எழுந்த தனத்தாளைச் சிறைவைத்த கொடுமையானைத்**
**துன்னு போர்க்களத்து எதிர்ந்து தொடுகணையான் முரண்அழியத் துயரம்பூட்டி**
**இன்று போய் நாளைவா என இமையார்கணம் பரவ எம்பிரானே**
**அன்று போர்க்களத்து உரைத்தது அறநிலையோ? மறநிலையோ? அறிகிலேனே.**
(319)

இதுவும் சுத்த சந்தயம். திணை - ~~பொதுவியல்;~~ துறை - வில்வென்றி. வாகை எனினும் ஆம். (குருகாமான்மியம்)

["எம்பெருமானே! குன்று போன்று பருத்த முலைகளை உடைய பிராட்டியைக் கவர்ந்து சிறைவைத்த கொடியவனான இராவணனைப் போர்க்களத்தில் சந்தித்து அம்புகளால் அவன்ஆற்றலை அழித்து அவனை வருந்தச்செய்து பின் 'இன்று போய் நாளை வா' என்று தேவர்குழாம் தோத்திரம் செய்யுமாறு போரிட்ட முதல்நாள்போரில் போர்க்களத்தில் உரைத்த செய்தி அறத்தின் திறத்ததோ? வீரத்தின் திறத்ததோ? என்று அடியேன் அறிகிலேன்".]

**முண்டகத்தான் என்னின் முகம்ஒன்றே, நான்குமுகம்**
**கண்டனம்மற்று இல்லையால்; கண்ணன்எனின் - தண்துளபத்**
**தாமத்தான் அன்று; மகிழ்த்தாமத்தானைத் துதித்து எந்**
**நாமத்தான்என்று உரைப்பேம், நாம்?** (320)

இது நிச்சயகர்ப்பம். திணை - பெண்பால்கூற்றுக் கைக்கிளை. துறை - நயப்பு-உரைத்தல்.

["மகிழம்பூமாலையை அணிந்த மாறனைப் பிரமன் என்ற பெயரால் அழைப்பேமா, கண்ணன் என்ற பெயரால் அழைப்பேமா எனின், நான்கு முகங்கள் மாறனுக்கு இன்மையால் அவனைத் தாமரைவாழ் பிரமன் எனல் இயலாது. கண்ணன் என்று சொல்வேமென்றால் திருத்துழாய்மாலை இன்மையின் அப்பெயராலும் கூற இயலாது" என்ற இப்பாடற்பகுதியில், ஐயுற்ற பொருள்களாக இருத்தல் இயலாது என்று கூறும்முகத்தான், உறுதிசெய்யவேண்டிய பிறிதொன்றுளது என்ற கருத்து மறைய இருப்பதால் இது நிச்சயகர்ப்பம் ஆகும்.

நிச்சயகருப்பம் - உறுதி செய்யப்படுவது மறைவாயுள்ளது.]

**பாடல் சுரும்புஎனிலோ, பண்மிழற்றும்; காவிஎனில்,**
**ஓடைக்குள் அன்றி உதியாதால்; - ஏடுஅவிழ்தார்**
**வள்ளல் அருள்மாறன் மால்வரை மான் கண்ணே என்**
**உள்ளம் திறைகொண்டது.** (321)

இது நிச்சயாந்தம். பகுதி - இயற்கைப்புணர்ச்சி. துறை - தெரிந்து தெளிதல்.

["பாடும் வண்டாயிருப்பின் பண் ஒலிக்கும். குவளைப்பூக்களெனின் அவை ஓடையிலேயே காணப்படும். இதழ்விரிந்து மலர்ந்த மாலையை அணிந்த வள்ளலாகிய அருள்செய்யும் மாறனுடைய பெரிய மலையிலுள்ள தலைவியின் கண்களே என் உள்ளத்தைக் கப்பப்பொருளாகக் கவர்ந்தனவாம்" இப்பாடல் காரணம் காட்டிச் சிலவற்றை நீக்கி உண்மைப்பொருளை உறுதி செய்தமையால் நிச்சயாந்தம் (இறுதியில் உறுதி செய்வது) ஆகும்.] [52]

12-ஆவது சந்தயம் முற்றும்.

13-ஆவது அற்புதஅலங்காரம்

அற்புதஅணியின் இலக்கணம்

**138. அற்புத வாய்மையின் அறைவது அற்புதமே. [53]**

(எ-ன்) வைத்த முறையானே (87) அற்புதம் என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) ஆச்சரியம் தோன்றும் உண்மையினால் மொழிவது அற்புதம் என்னும் அலங்காரமாம் என்றவாறு.

**உள்நீர்மை அற்றவர்க் கண்டால் அவர்மன்உயிர்க்கு இரங்கிக்**
**கண்ணீர் பனிற்றும் புயல்மனுராமன் கைக்கொள்வது ஒன்றோ,**
**வெண்ணீர்மை உற்ற நிருதரைச் சால வெறுத்து அவர்மேல்**
**புண்ணீர் பனிற்றச் சரமாரி அன்று பொழிந்ததுவே? (322)**

இஃது அற்புதம். திணை - பொதுவியல்; துறை - வில்வென்றி.
["அறியாமையை உடைய அரக்கர்களை மிகவும் வெறுத்து அவர்கள்உடல்கள் மீது இரத்தம் வெளிப்படுமாறு அன்று அம்புகளை மழைபோலச் சொரிந்த செயல், உள்ளத்தில் ஆற்றல் அற்றவர்களைக் கண்டால் அவர்களுடைய உயிர்படும் துயரத்துக்கு மனம் உருகிக் கண்ணீர் சொரியும், கார்மேகம் போன்ற அம்பு எய்வதில் வல்ல இராமபிரான் கைக்கொண்டு செயத்தக்க செயலா?" என்று வினவியவாறு. அவன் இயற்கைக்கு மாறுபட்ட இச்செயல் வியப்பைத் தருவது என்பது அதிசயஅணி.]

**சங்கத்தமிழ்ச் சொற்புலவீர்! சலராசி மண்மேல்**
**உங்கட்கு அற்புதம் ஆவதுஒன்றே - சிங்கலங்கலின்வாய்த்**
**துங்கப் படைக்கை இரணியன்ஆகம் சுகிர்ந்த நர-**
**சிங்கத்தின் மார்பில் மலர்மகளாம் பிணை சேர்ந்ததுவே. (323)**

["சங்கத்தமிழை ஆராய்வதன்கண் ஆற்றலுடைய புலவர்களே! சிங்கவேள்குன்றத்தில் உகந்தருளியிருப்பவராய், மேம்பட்ட படைகளை ஏந்திய இரணியகசிபுவின் மார்பினை நகங்களால் பிளந்த நரசிம்மமூர்த்தியின் மார்பில் தாமரை வாழ் மடந்தை ஆகிய பெண்மான் சேர்ந்திருக்கும் செயல், கடலால் சூழப்பட்ட உலகில் உங்களுக்கு எல்லாம் வியப்பு ஊட்டும் செயலாக இருக்கும்."
"சிங்கத்தின் மார்பின் மான் மகிழ்வோடு தங்கியிருப்பது வியப்பைத் தருவது" என்று குறிப்பிடுவதனால், இப்பாடலில் அற்புதஅணி வந்துள்ளது.]

இஃது உருவகவாய்பாட்டால் வந்த அற்புதம். சிங்கலங்கல் - சிங்கவேள்குன்றம் என்னும் திருப்பதி. மலர்மகளாம் பிணை - பெரியபிராட்டி. சிங்கர் - அழகிய சிங்கர். சிங்கத்தின் மார்பில் பிணை சேர்ந்தது என்பதனால் அற்புதமாயிற்று.

துறை - கடவுள்வாழ்த்து.
[மலர்மகளாம் பிணை - திருமகளாகிய பெண்மான் என்பது உருவகம்.] [53]

13-ஆவது அற்புதம் முற்றும்.

14-ஆவது நிதரிசனஅலங்காரம்

நிதரிசனஅணி இலக்கணம்

**139. இவ்வகைக்கு உலகத்து இவை நிகழ்திறம் எனும்**
**அவ்வகைக்கு அவைபோன்று ஒருபொருள்திறங்களைக்**
**கோட்டம்இல் குணம்தீங்கு எனும் இருகுறிப்பில்**
**காட்டும் என்றே கழறுதல் நிதரிசனம். [54]**

(எ-ன்) வைத்த முறையானே (87) நிதரிசனம் என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) உலகத்து இவ்வகைப்பொருட்கு இவை நிகழும் கூறுபாடு என்னும் அக்கூறுபாட்டிற்கு அவை போன்ற பிறபொருட் கூறுபாட்டை மாறுபாடு இன்றி நன்மையினும் தீமையினும் இருதிறத்தால் குறித்துக் காணக் காட்டுகின்றது எனக் கூறுவது நிதரிசனம் என்னும் அலங்காரமாம் என்றவாறு.

**வாழ்ந்தார் வரவரவே வறிதுஆவர், வறுமையொடும்**
**தாழ்ந்தார் தலைச்செய்வர் என்பதுகாட்டும் - தரியலரைப்**
**போழ்ந்துஆர் திகிரிப் பிரான் புருடோத்தமப் பொன்நகரைச்**
**சூழ்ந்து ஆய்மதி குறைவாய் நிறைவுஆம் வகை; தூநகையே! (324)**

இது நிதரிசனம். இது பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகன் வாயில்வேண்ட, ஊடிஇருந்து வாயில்மறுத்த தலைமகளோடும் வாயில்நேர்விக்கும் தோழி கூறியது. அன்றி, திணை - பாடாண்; துறை - வள்ளிவாழ்த்து எனினும் ஆம். (வள்ளி - சந்திரன்)
இதனுள் 'வாழ்ந்தார் வரவரவே வறிதாவர் வறுமையொடும், தாழ்ந்தார் தலைச்-செய்வர் என்பது காட்டும்' என்பது உலகத்து நல்வினை அடிக்கொள வாழ்வு எய்தினார், நல்வினை தேய்ந்து தீவினை அடிக்கொள வறுமை எய்துவர்; தீவினை அடிக்கொளத் தாழ்வு எய்தினார் தீவினை தேய்ந்து நல்வினை அடிக்கொளச் செல்வம் எய்தித் தலைப்படுவர் என்பதைக் காண்பிக்கும் என்பதாம். தரியலரைப் போழ்ந்துஆர் திகிரிப்பிரான் என்பது சத்துருக்கள் உடலைப் பிளந்து உயிரைப் பருகும் சக்கரத்தை உடையார் என்பதாம்.
ஆய்மதி - இயங்கும் மதி. குறைவாய் - இளம்பிறையாய். நிறைவாம் - பூரணையாம்.
அஃதேல் திட்டாந்தத்தோடு இதனிடை வேற்றுமை யாதோ எனின், திட்டாந்தம் புலவன் தன்னால் குறிக்கப்பட்ட ஒரு பொருட்கூறுபாட்டிற்குப் பிறிது ஒரு பொருளின் கூறுபாட்டை அதற்கு உவமை குறிக்கொளும்படிக்கு உவமை-வாய்பாடு தோன்றாது தொகத் தன்வினையாகக் கூறுதல். இஃது அன்னதன்று. ஒரு பொருளின் பண்பு, தொழில், பயன் முதலிய கூறுபாடுகளைப் பிறிது-

ஒருபொருள் காட்டுவதாகப்படுத்திப் பிறவினையால் கூறுதல் நிதரிசனமாம். இவை தம்முள் வேற்றுமையாம் என்று உணர்க. [54]

14-ஆவது நிதரிசனம் முற்றும்.

## 15-ஆவது தற்குறிப்பேற்றஅலங்காரம்

### தற்குறிப்பேற்றஅணி இலக்கணம்

**140. உலகினுள் ஒருபொருட்கு உற்ற தன்மைத்திறம்
விலக்குபு பிறிதின் விளைந்ததுஎன்று உட்கொண்டு
ஏற்றுதல் ஆகும் தற்குறிப்பேற்றம். [55]**

(எ-ன்) நிறுத்தமுறையானே தற்குறிப்பேற்றம் என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) உலகின்கண் உண்டான இருதிணைப் பொருள்களுள் யாதாயினும் ஒருபொருட்கு எய்திய தன்மைக்கூறுபாட்டை விலக்கிப் பிறிதொரு காரணத்-தால் விளைந்தது எனப் புலவன் விதித்து உட்கொண்டதனை அதன்கண்ணதாக ஏற்றுவது தற்குறிப்பேற்றம் என்னும் அலங்காரமாம் எ-று. [55]

### தற்குறிப்பேற்ற அணியின் கூறுபாடு

**141. அதுவே,
சராசரம் எனும் இரண்டினும் சார்தருமே. [56]**

(எ-ன்) இஃது அவ்வலங்காரத்தினது கூறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அத்தற்குறிப்பேற்றம் என்னும் அலங்காரம் இயங்குதிணையும் நிலைத்திணையும் ஆகிய இரண்டினும் சார்ந்து பிறக்கும் எ-று.

**செங்கேழ் கிளர் வேணியன் ஆண்உருவில்
பைங்கேழ் உடையாள் ஒருபாகம் எனச்
சங்கேதம் அடைந்தது இவன் சமரிற்கு
இங்கு ஏறுவன்என்று எதிர் எண்ணியதே. (325)**

இஃது உயர்திணையிடத்துத் தற்குறிப்பேற்றம். செங்கேழ் - சிவப்பாகிய நிறம். கிளர்வேணி - ஓங்கிய சடை. பைங்கேழ்உமை - பச்சென்ற நிறத்தை உடைய உமாதேவி. எதிர்எண்ணியது - வருங்காலம் குறிக்கொண்டது.

திணை - வாகை; துறை - பொருநன் வென்றி (குருகாமான்மியம்)

["இவ்வீரன் போரிலே முன்னேறுவான் என்று வருங்கால நிகழ்ச்சியை மனத்துக்-கொண்ட செயல், செந்நிறமாக ஓங்கிய சடைமுடியை உடைய சிவபெருமான் ஆண்உருவத்தில் பசிய நிறத்தை உடைய உமையாளை ஒரு பாகமாகக் கொண்ட ஒற்றுமைஉணர்ச்சியைப் பெற்றது" என்ற இப்பாடலில், வீரன் போரில் முன்னேறும் நிகழ்ச்சியை நினைத்துப்பார்த்தால், அவன் பகைமன்னனை வென்று அவன்மகளை மணந்து அம்மையப்பன் போலக் காட்சிவழங்குவான் என்று தோன்றுகிறது என்ற கற்பனைக்கண் இயங்குதிணையில் தற்குறிப்பேற்றம் வந்துள்ளது.]

**பிலம்புகுந்து ஈரேழ்புவனமும் தரித்த பெருந்தகை எம்பிரான்தனை வெண்
சலஞ்சலம் திகிரிஎனப் புரப்பவர்கள் சந்திரசூரியரெனச் சயிலம்**

**வலம்பயின்றனர் அந்தரத்தவர் வருந்தாவகை தரித்திலம்எனத் தரிப்பான்**
**நிலம்புகுந்து உயர்பூஞ்சினையொடும் தருவாய் நிலை மரீஇயினது எனலாமே.**
**(326)**

[ஊழிவெள்ளத்துள் புகுந்து பதினான்கு உலகங்களையும் வெளிக்கொணர்ந்து காப்பாற்றிய எம்பெருமானைச் சங்காகவும் சக்கரமாகவும் இருந்து பாதுகாப்பவரான சந்திரசூரியரைப் போல அம்மலையை வலம்வரும் தேவர்கள் வெப்பம் முதலிய-வற்றால் வருந்தாதபடி அவர்களைக் காப்பதற்காகப் பூமியில் வேர்விட்டு உயர்ந்த பூக்-களை உடைய கிளைகளோடு மரங்கள் அம்மலையில் பலவாகக் காணப்படுகின்றன - என்னும் இப்பாடலில், மலையில் மரங்கள் வளர்ந்திருப்பதனை ஒரு காரணத்தைக் கற்பனை செய்து கூறுவது நிலைத்திணைத் தற்குறிப்பேற்றமாம்.
இது நிலைத்திணைத் தற்குறிப்பேற்றம். இது பாடாண்புறத்திணையுள் சார்ந்த தாவர-வாழ்த்து. (இது குருகாமான்மியம்)]

**தற்பயந்து முற்றத் தனைவளர்த்த தண்தடம்நீர்**
**எல்பயந்த வெப்புஉற்று இடையாதே, - பொற்கமலம்**
**மின் பாசடைக்கவிகை மீநிழற்றும் நீரகமே**
**என்பால் உறைமாற்கு இடம்.** (327)

இதுவும் நிலைத்திணைத் தற்குறிப்பேற்றம். நிழற்றும் - நிழலிடும்.
திணை - பாடாண்; துறை - நகரவாழ்த்து.
["தன்னைப் பெற்றுத் தன்னை முழுமையாக வளர்த்த குளிர்ந்த குளத்திலுள்ள நீர் சூரியன் வெளிப்படுத்திய வெப்பமான கதிர்களுக்கு வருந்தாதபடி, அழகிய தாமரை ஒளி வீசும் தன் பசிய இலைகளால் குளத்துநீருக்குக் குடைகளைப்போல் மேலே கவித்து நிழலைச்செய்யும் நீரகம் என்ற திருப்பதியே அடியேனுடைய உள்ளத்தில் உகந்தருளியிருக்கும் எம்பெருமாற்கு உகந்தருளிய இடமாகும்" என்ற இப்பாடலில், குளத்தின் மேற்பரப்பை மறைத்துப் படர்ந்திருக்கும் தாமரைஇலைகளைப் பற்றிய தற்குறிப்பேற்றம் கற்பனையாக உரைக்கப்பட்டவாறு.] [56]

புறனடை

**142. உவமச்சொல் புணர்ந்து ஒழுகலும் உளதே. [57]**

(எ-ன்) மேலதற்கு ஒரு புறனடை உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) அத்தற்குறிப்பேற்றம் போல, மான முதலிய உவமஉருபு புணர்ந்து நடப்பதும் உளதாம் என்றவாறு.

**மாயன் குருகூர்வளர் மறையோர் விண்புரப்பான்**
**தூய அழல்வளர்ப்பத் தோன்றுபுகை - நேய**
**வகைத்தோட்டு வார்குழலாய்! வாசவனை விண்போய்ப்**
**புகைத்து ஓட்டுகின்றது போன்ம் போன்ம்.** (328)

என்பது ஈரொற்று உடனிலையாய ஒப்பில்போலி. இஃது உவமஉருபு புணர்ந்த தற்குறிப்பேற்றம். துறை - நகரவாழ்த்து.
[வியத்தகு செயல்களை உடைய எம்பெருமானுடைய திருக்குருகூரிலே வாழும் வேதியர்கள் தேவர்களைப் பாதுகாக்கத் தூய அக்கினியை வளர்ப்பதனால் வெளிப்பட்ட புகையானது, விருப்பமான பலவகைப்பட்ட பூமடல்களைச் சூடிய நீண்ட கூந்தலை உடையவளே! தேவருலகிலுள்ள இந்திரனைப் புகையை மிகுதியாகச் செலுத்தி (மண்ணுலகிற்கு வேண்டும் நலம் பயப்பித்தல் பொருட்டு) இருப்பிடத்-திலிருந்து விரட்டுவது போலக் காணப்படுகிறது.

போலும் என்பது ஒரோவழி ஒப்புமைப்பொருளில் வாராது அசைநிலையாகவும், செய்தியின் உறுதியின்மையைத் தெரிவிப்பதாகவும் வரும் இடைச்சொல்; இஃது உவமஉருபின் பொருள் தருவதன்று. வடிவில் மாத்திரம் உவமஉருபு போல இருந்து உவமஉருபின் பொருளைத் தாராத இவ்விடைச்சொல்லை ஒப்பில் போலி என்று கூறுப. போலும் என்பது போன்ம் என்ற திரிந்த நிலையில் இதன்கண் இரண்டு ஒற்றுக்கள் சேர்ந்து காணப்படுவதால் இஃது ஈரொற்று உடன்நிலையாகிய ஒப்பில்போலியாம். இப்பாடலில் பயிலும் 'போன்ம்' என்பது உவமஉருபு உறுதியின்மைப்பொருள்பட நின்று, தற்குறிப்பேற்றஅணிக்கு அங்கமாக வந்தது எனக்கொள்க.] [57]

15-ஆவது தற்குறிப்பேற்றம் முற்றும்.

16-ஆவது அதிசயஅலங்காரம்

அதிசயஅணி இலக்கணம்

**143. விதந்து ஒருபொருளினை விழுமிதின் உரைப்புழி**
**உயர்ந்தோர் மதிக்குற உரைப்பது அதிசயம். [58]**

(எ-ன்) வைத்த முறையானே (87) அதிசயம் என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) ஒரு பொருளினை உயர்த்தி நன்றாக உரைக்குங்கால், கற்று உயர்ந்தோர் அறிவிற்குப் பொருந்த உரைப்பது அதிசயம் என்னும் அலங்காரம் என்றவாறு. [58]

அதிசயஅணியின் வகைகள்

**144. அதுவே,**
**வையம் புகழ் பொருள் பண்பு வினை திரிபு**
**ஐயம் தெளிவு எனும் ஆறினும் வருமே. [59]**

(எ-ன்) இது அவ்வலங்காரத்தை விரித்து உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) அதிசயஅலங்காரம் என்னுமது பெரியோர் புகழும் பொருளும் பண்பும் வினையும் திரிபும் ஐயமும் தெளிவும் என்னும் ஆறு கூறுபாட்டினும் வரும் என்றவாறு.

**வென்றித் தனுராமன் வேலைவாய் நீறுஎழவே**
**கன்றிப் பொழிந்த கனல்வாளி, - அன்று**
**வடவை நடுநடுங்க மாநீர் சுவறச்**
**சுட வைகியதாம், சொலின். (329)**

இது பொருள்அதிசயம். வடவை நடுநடுங்க - வடவையும் வெருவி ஓடுவான். மாநீர் - சமுத்திரம். சுட வைகியது அன்று - அன்று சுட்டு அதன்கண் வைகாநின்றது. சொலின் - அத்தழலின் பெருமையைக் கதை கூறியபடி கேட்டதனைச் சொல்லுமிடத்து என்றவாறு. ஒழிந்த அகலம் உரையிற் கொள்க.
திணை - வஞ்சி; துறை - உழபுலவஞ்சி.
[வெற்றியைத் தரும் வில்லை ஏந்திய இராமபிரான் கடலிலே சாம்பல் புறப்படும்படி வெகுண்டு எய்த தீக்கக்கும் அம்புகள், அப்பொழிந்த காலத்துக் கடலின் உள் இருக்கும் குதிரைமுகத்தீ நடுங்கவும் கடல்நீர் வற்றவும் கடலைச் சுட்டு அதன்கண் தங்கியது.
வஞ்சி - பகைமேல் சேறல். உழபுலவஞ்சி - 'கூடலர் நாட்டுக் கொடி நெடுக ஊர், ஓடுஎரி

ஊட்டியது உழபுலவஞ்சியாம்'. ஆகவே, உழபுலவஞ்சியாவது எரி பரந்து எடுத்தலாம். இராகவனுடைய அம்புகளாகிய பொருளின் சிறப்பை மிகுத்துக் கூறியதனால் இது பொருள்அதிசயமாம்.]

**அம்பொன் மதிள்சோதி அம்புவியைப் புத்தேளிர்**
**தம்பொன்நகர் ஆக்கும் தன்மைசால் - செம்பொன்செய்**
**கோயில் திருமால் குணம்கற்று ஒழுகாதார்**
**நாயில் கடையாம் நரர். (330)**

இது குணஅதிசயம். இதன் பொருள் உரையிற் கொள்க. துறை - நகரவாழ்த்து.

["அழகிய பொன்மயமான மதில்களின் ஒளியால் இம்மண்ணுலகைத் தேவருடைய பொன்மயமான அமராவதி போலத் தோற்றுவிக்கும் இயல்பினை உடைய சிறந்த பொன்னால் செய்யப்பட்ட திருவரங்கப்பெருங்கோயிலில் உகந்தருளியிருக்கும் திருமாலுடைய பண்புகளை ஞானதேசிகர்பால் கேட்டு அவனுக்கு அடிமையாக வாழாதவர், மனிதராய்ப் பிறந்திருந்தும் இழிபிறப்பான நாயினும் கடையாவர்" என்ற கருத்து அமைந்த இப்பாடலில், தன் பொன்மயமான நிறத்தினால் மண்ணுலகையே பொன்னுலகமாக மாற்றிக் காட்சிதரும் திருவரங்கப்பெருங்கோயிலின் நிறப்பண்பு மிகுத்துக் கூறப்பட்டதனால் இது குணஅதிசயம்.]

**குழித்தது அதலத்தொடு நிலத்தை அடிவைத்து, உயர்குடில்படர் முகில்திரளையே**
**கிழித்தது, புழைக்கையின் அடுக்கலை அடுக்கொடு கிளைத்தது, கவுள்கள்-வழியே**
**சுழித்துஎழ மதத்தினை உயிர்த்து, ஒளிர்கடைக்கனல் துணுக்குஉற நெருப்பு ஒழுகவே**
**விழித்தது, தெழித்தது உருமுக்குலம் வெருக்கொள, வெயர்த்தது மழைப்-பெயல் எனா. (331)**

இது தொழில்அதிசயம். திணை - வாகை. துறை - யானைமறம்.

[பூமியில் அடிவைத்துப் பெயரும்போது பூமிக்குக் கீழ்உள்ள அதலஉலகம் வரை பள்ளமாக்கியது. உயர்ந்த வானவெளியில் உலாவும் மேகக்கூட்டத்தைத் தன்துதிக்-கையால் கிழித்தது. மேலும் மலைகளை வரிசையாகப் பெயர்த்தது. தன் கன்னங்கள் வழியே மதநீர் சுழித்து ஓடும்படி பெருக்கிற்று. ஒளிவீசும் ஊழி இறுதித்தீ நடுங்குமாறு தன் கண்கள் வழியே நெருப்புப் பரக்குமாறு விழித்தது. இடிக்கூட்டங்கள் அஞ்சுமாறு பிளிறியது. மழைபெய்வது போல வியர்வையைச் சிந்தியது. போரிடும் யானை - என்ற கருத்தமைந்த இப்பாடலில், போர்யானையின் பல செயல்களும் மிகுத்துக் கூறப்-பட்டதனால் இது தொழில் அதிசயமாம்.]

**பூந்தேறல் வழிந்து இழிந்து பொதும்பரின் ஒண்புளினம்உறப் புரிவெண்சங்கம்**
**தீந்தேறல் வழிதவழ்ந்து துழனியுடன் கழனிபுகத் திணிதோள் மள்ளர்**
**தாம் தேறல்உகக் களைகட்டுஎறி தவளமரைமுகையைச் சார்ந்து சார்ந்து**
**மேய்ந்து ஏற வரிவளையைக் கொழுநனைஎன்று அளிபுலம்பி வீழும் ஓர்-பால். (332)**

இது திரிபுஅதிசயம். திணிதோள் - திண்ணிய தோள். தவளமரைமுகை - வெண்-டாமரைமுகை. துறை - நாடுவாழ்த்தாம். இவை இரண்டும் குருகாமான்மியம்.

[சோலைகளிலுள்ள பூக்களின் தேன் வெளிப்பட்டுப் பெருகிக் கீழே தவழ்ந்து அங்குள்ள மணல்மேட்டினைச் சார்ந்து ஓட, சுழிகளை உடைய வெள்ளிய சங்குகள் இனிய தேன்ஆற்றின்வழியே ஊர்ந்து சென்று ஆரவாரத்தோடு வயல்களை அடைய, அங்கு வயல்களில் வேலை செய்துகொண்டிருக்கும் வலிய தோள்களை உடைய

உழவர்கள் தேன் ஒழுகும்படியாகக் களை என்று பெயர்த்து எறிந்த வெண்டா-மரைமொட்டுக்கள் பலவாகக் கிடப்ப, அவற்றைச் சங்குகள் அணுகித் தங்க, அச்-சங்குகளை வளமான வெண்டாமரைமொட்டு எனக்கருதித் தாமரையில் தேன் நுகரலாம் என்று ஒலித்தவாறு வண்டுகள் அச்சங்குகள்மீது தேன்உண்ண விரும்பித் தங்கும் - என்ற கருத்தமைந்த இப்பாடலில், சங்குகளை வண்டுகள் வெண்டாமரைமொட்டுக்-களாகத் திரியக் கொண்ட செய்தி மிகுத்துக் கூறப்பட்டமை திரிபுஅதிசயம்.]

**இருநிலம் முதல்ஆம் ஏழ்பெரும் புவனமும்**
**பெருவிறல் மாவலி பெய்புனல் ஏற்றபின்**
**ஈரடி எனத்தாண்டு இணைஅடியொடு நின்**
**கூர் திருஉருவமும் சொரூபமும் குணனும்**
**ஓரடி முதற்கண் உற்றுஉளத்து அடங்கியதால்,**
**பார்புகழ் குருகைப் பரம! நின்பதமோ,**
**காரி தந்துஅருள் குருகாபுரிப் பரமன்**
**படைத்த வண்தமிழ்மறைப் பதமோ, உணர்வோ,**
**தடத்த யாதுஎன எவர், தமி தெளிபவரே? (333)**

இஃது ஐயஅதிசயம்.

இதனுள் உருவமும் சொரூபமும் குணனும் என்பது திருமேனியும் திவ்வியான்-மாவும் சுத்த சாத்துவிககுணனும். ஓரடி முதற்கண் என்பது திருவாய்மொழி முதல்பத்தின் முதல்பாட்டின் ‘உயர்வற உயர்நலம் உடையவன் எவன்அவன்’ என்ற முதல்அடி.

திணை - பாடாண்; துறை - பழிச்சினர்ப் பரவல். பாடாண் சார்ந்த பனுவல் வாழ்த்துமாம்.

[உலகம் புகழும் குருகாபுரி எம்பெருமானே! இவ்வுலகம் முதலிய ஏழ்பேர் உலகங்-களையும், பேராற்றல் பொருந்திய மாவலியிடம் தானமாக நீர்ஏற்றுப் பெற்றபின், ஈரடியாகத் தாண்டிய உன் இருதிருவடிகளும், உன்னுடைய மேம்பட்ட திருஉருவமும், தனித்தன்மையும், சுத்தசாத்துவிககுணமும் திருவாய்மொழி முதற்பாடலின் ஓரடிக்கண் பொருந்தி அடங்கிவிட்டன. எனவே, பெருமானே! உன்திருவடிகள் பெரியனவா? காரியார்மகனாகிய குருகையம்பதியிலுள்ள மேம்பட்ட மாறன் படைத்த மேம்பட்ட தமிழ்மறையாகிய திருவாய்மொழியின் ஒருபாதம் பெரியதா? அறிஞர்கள்கூட இவ்-விரண்டனுள் பெரியது யாது என்று தெளிதல் அரிது - என்ற கருத்தமைந்த இப்பாடலில், எது பெரிது என்ற ஐயம் மிகுத்துக் கூறப்பட்டதால் இஃது ஐயஅதிசயமாம்.]

**பொருள் கோடித்து எழுபடிவத்து இரணியற்கும் மழவிடையோன்பொருட்டின் பொன்றா**
**ஒருகோடி இருகோடி அரைக்கோடி வாழ்நாள்பெற்று உலந்துளார்க்கும்,**
**மருள்கோடித்து எழுந்த சிசுபாலனுக்கும், வீடுஅளிப்பான் மாயா உள்ளத்து**
**அருள்கோடி என்றால், இங்கு உனைத்தொழுவார் பெறும்கதிகட்கு ஐயம்-யாதே? (334)**

இது தெளிவுஅதிசயம். துறை - கடவுள்வாழ்த்து. (குருகாமான்மியம்)

[“போரிடற்கு வேண்டிய படைக்கலன்களைக் கைக்கொண்டு உன்னுடன் போரிடற்கு எழுந்த வடிவத்தை உடைய இரணியகசிபுவுக்கும், சிவபெருமானால் ஒரு கோடி இருகோடி அரைக்கோடி நாள்கள் வாழ்நாள் அருளப்பெற்று இறந்தவர்களுக்கும், மயக்கம் மிகுந்து உன்னைப் பழித்துக் கூறிப் போரிடற்கு எழுந்த சிசுபாலனுக்கும் குறைவில்லாத உன் திருவுளத்தில் அருள்கொண்டு வீடுபேற்றை நீ அருள்செய்கின்றாய்

என்பதனை நினைக்கும்போது, இவ்வுலகில் உன்னையே தொழும் அடியார்கள் நற்கதி பெறுதற்கண் ஐயம் யாது உள்ளது?" என்ற கருத்தமைந்த இப்பாடலில், பகைவர்க்கும் அருளும் எம்பெருமான் அடியார்க்கு அருளுதல் திண்ணம் என்ற செய்தி மிகுத்துக் கூறப்படுதலின், இது தெளிவுஅதிசயம்.] [59]

அதிசயஅணியின் வேறு சில வகைகள்

**145. இடம் சினை காலம் என்று இவற்றொடும் சிவணும். [60]**

(எ-ன்) இஃது அதனைப் பின்னும் ஒருவகையான் விரித்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அவ்வதிசயம் இடமும் சினையும் காலமும் என்னும் மூன்றினோடும் பொருந்தியும் வரும் என்றவாறு.

வரும் என்னும் வினைச்சொல் எச்சமாகி விரிந்தது. அதிசயம் என்பது அதிகாரத்தால் கூட்டி உரைக்கப்பட்டது.

[சிவணும் - பொருந்தும். 'சிவணி வரும்' என வரும் என்ற சொல் வருவித்து உரைக்கப்பட்டது. அதிகாரமாவது ஓரிடத்து நின்ற சொல் தேவைப்படின் பல சூத்திரங்களுக்கும் கூட்டி உரைக்கப்படுவதாம். இச்சூத்திரத்தில் எழுவாய் வெளிப்படையாக இல்லாததால் 143-ஆம் சூத்திரத்திலுள்ள அதிசயம் என்ற சொல் இச்சூத்திரத்தில் அதிகாரம்பற்றிக் கூட்டி உரைக்கப்பட்டது.]

**சிகர பந்திமேல் குடம் மதிஅகடு உரிஞியவாய்ப்,**
**பகரும் வானமது உரகன் உச்சியில் பதிபடித்தாய்,**
**அகல நாவலந்தீவு ஒருங்கு உறினும் உய்த்துஅடக்கும்**
**புகல்இடத்ததால்; அதனை யார் அளவிடும் பொற்பார்? (335)**

இஃது இடஅதிசயம். துறை - சினகரவாழ்த்து.

[திருக்கோயிலின் சிகரவரிசைகளில் உள்ள குடங்கள் சந்திரனுடைய அடிவயிற்றில் தம்மைத் தேய்த்துக் கொள்வன. எல்லோராலும் புகழப்படும் அக்கோயிலின் அத்திவாரம் பூமியைத் தாங்கும் ஆதிசேடனுடைய தலைவரையில் பொருந்தியுள்ளது. இந்நாவலந்தீவு எனப்படும் பரதகண்டத்தவர் யாவரும் ஒருசேர வரினும் யாவரும் அத்திருக்கோயிலினுள் தங்கும் அளவிற்கு இடம் அகன்றுள்ள அக்கோயிலின் பரப்பினை அளவிட வல்லவர் யாவர்? - என்ற கருத்தமைந்த இப்பாடலில், கோயிலின் பரப்பாகிய இடம் மிகுத்துக் கூறப்பட்டமை இடஅதிசயமாகும்.]

**கறுத்தவன் அறுத்து வீழ் வன் கரிமருப்பு அகில பாரம்**
**பொறுத்த திக்கயம் ஓர்எட்டும் பொறுக்குமேல், அவற்றின் ஆற்றல்**
**ஒறுத்தது என்று இமையோர் உட்க, யமனும் நின்று உட்கும் எல்லை,**
**நிறுத்தது புழைக்கை பற்றி நிறைமதி அகடு போழ்வான். (336)**

இது சினைஅதிசயம். திணை - வாகை; துறை - யானை மறம்.(குருகாமான்மியம்)

[வெகுண்ட வீரன் அறுத்து வீழ்த்திய வலிய யானையின் தந்தங்களுடைய கனத்தினை உலகம்முழுதையும் தாங்கும் எட்டுத்திக்குயானைகளும் தாங்குமேல் அவற்றின் ஆற்றல் அழிந்துவிடும் என்று தேவர்கள் அஞ்ச, யமனும் பார்த்து நின்று அஞ்சிய நேரத்தில், தன் தந்தங்கள் வெட்டி விழுத்தப்பட்ட யானை தன் துதிக்கையைப் பூர்ணசந்திரனுடைய வயிற்றைப் பிளப்பதற்காக உயர்த்தி நிறுத்தியது - என்ற கருத்து அமைந்த இப்பாடலின்கண், யானைத் தந்தங்களின் கனம் மிகுத்துக் கூறப்பட்டதால் இது சினைஅதிசயம்.]

**மாலையாய் யாமமாய் வைகறையாய் வைகுறுநன்**
**காலையாய்க் கங்குல் கழிந்து உகம்ஆம், - வேலை**

**எழுபார் புகழ்மாறன் ஏந்துபுகழ் மார்பம்**
**தழுவாத் தமியேன்தனக்கு. (337)**

இது காலஅதிசயம். திணை - பெண்பாற்கூற்றுக் கைக்கிளை. துறை - கங்குற்கு இரங்கல்.

[கடலால் சூழப்பட்ட ஒரு பகுப்பினை உடைய ஏழு உலகத்தவர் புகழும் மாறனுடைய புகழ் தாங்கும் மார்பினைத் தழுவும் வாய்ப்புப்பெறாமல் தனியே கிடந்து வருந்தும் எனக்கு, மாலைநேரமாகவும், இடையாமமாகவும், வைகறையாகவும், தங்கியிருக்கும் இராக்காலம் கழிந்து காலைநேரம் வருவதற்குள், ஓர்ஊழிக்காலம் கழிக்கப்படுவது போல மிக நீண்ட கால அளவுடையதாய் அவ்விராக்காலம் தோற்றமளிக்கிறது - என்ற கைக்கிளைத்தலைவி கூற்றில், இராக்காலம் மிகுத்துக் கூறப்பட்டதால் இது கால-அதிசயம்.] [60]

16-ஆவது அதிசயஅணி முற்றும்.

17-ஆவது சிலேடைஅலங்காரம்

சிலேடைஅணியின் இலக்கணம்

**146. உயர்வுறும் ஒருமொழி தொடர்மொழி செய்யுளின்**
**இயல்பினும் திரிபினும் இயன்று பல்பொருளைத்**
**தருபெயர் வினையின் சார்வது சிலேடை. [61]**

(எ-ன்) வைத்த முறையானே (67) சிலேடை என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஒருமொழியாதல் தொடர்மொழியாதல் செய்யுளிடத்துச் செம்மொழி-யினும் பிரிமொழியினும் ஒழுகலாறு உடைத்தாய்ப் பல பொருளைத் தருவ-தாய்ப் பெயரினும் வினையினும் சார்வது சிலேடை அலங்காரமாம் என்றவாறு. உயர்வுறும் என்றதனால் அத்தச்சிலேடை என்பதூஉம் முன்னர்க் கூறப்படும்.

[ஒருபாடலில் ஒருபெயரோ, ஒருவினையோ, பலபெயரோ, பலவினையோ, ஒரு-தொடரோ, பலதொடர்களோ சொல் பிரிக்கப்படாமலும் பிரிக்கப்பட்டும் ஒன்றற்கு மேற்பட்ட பொருள்களில் அமைந்திருத்தல் சிலேடை எனப்படும். பாடலில் ஒருபாதி சிலேடையாக எஞ்சிய பாதி சிலேடை இல்லாமல் அமைவது அத்தச்சிலேடை ஆகும். அத்தம் - அர்த்தம் - பாதி.] [61]

செம்மொழி, பிரிமொழி

**147. அவற்றுள்,**
**இயல்பு செம்மொழி, திரிபு பிரிமொழியே. [62]**

(எ-ன்) முற்கூறிய சூத்திரத்துள் 'இயல்பினும் திரிபினும்' என்றார், அவை பொருள்நோக்கத்தால் இப்பெயரினவாம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) இயல்பு, திரிபு என்ற இரண்டினுள், இயல்பு செம்மொழி என்றும், திரிபு பிரிமொழி என்றும் கூறப்படும் என்றவாறு.

**பொன்ஆழி மேவும்; புவனம் அகத்துஅடக்கும்;**
**மன்நாகத்து உச்சி வளைந்துஆடும்; - நன்னீர்க்**

**களம்தழை மெய்காட்டும்; கலைமதி உள்தோயும்;**
**வளம்தழையும், விண்ணகர்வாழ் மால்.** (338)

இது செம்மொழிச் சிலேடை. திருமாலுக்கும் மேகத்திற்கும் சிலேடை.

மேகத்தின்மேல் சொல்லுங்கால்: பொலிவினை உடைய கடலுள் செறியும், புனலை உண்டு வயிற்றுள் அடக்கும், நிலைபெற்ற மலையினது கொடுமுடியைப் பொதிந்து பரக்கும், உவர் அறுத்த நல்ல தண்ணீர்க்கு இடமாகப் பெருத்த சொரூபத்தைப் புலப்படுத்தும், கிரணத்தை உடைய சந்திரமண்டலத்தைத் தனது மண்டலத்துக்கு மேலாகச் சேரும், உலகிற்கு வேண்டும் எல்லா வளங்களையும் தழைக்கும் விசும்பினிடத்து மேகம் எனவும்,

திருமால்மேல் சொல்லுங்கால்: திருமகளையும் திருச்சக்கரத்தினையும் பொருந்தும், விராடபுருடனாகி அண்டத்தை உள்அடக்கும், பகைஎனப் பெருகின பாம்பின் உச்சியிலே பதிந்து ஆடும், நல்ல இயல்பினை உடைய களங்கனி போலும் தழையாநின்ற மேனியைத் தோற்றும், சுருதி முதலிய கலைகளின் அறிவிற்கு மேலாய் இருக்கும், சகலசெல்வமும் வளராநின்ற திருவிண்ணகரத்து வாழ்வு பெறும் திருமால் எனவும் கொள்க. துறை - கடவுள்வாழ்த்து.

[பொன் - பொலிவு, திருமகள். ஆழி - கடல், சக்கரம். புவனம் - நீர், உலகம். நாகம் - மலை, பாம்பு (காளியன்). நன்னீர்க்களம் - நல்ல தண்ணீருக்கு இருப்பிடம், நல்ல இயல்பினை உடைய களங்கனி. தழைத்தல் - பெருத்தல், சிறப்பாக இருத்தல். கலைமதி - கிரணங்களை உடைய சந்திரன், வேதம் முதலிய கலைகளின் அறிவு. விண்ணகர் வாழ்மால் - விசும்பினிடத்து உலாவும் மேகம், திருவிண்ணகர் என்ற திருப்பதியிலே உகந்தருளியிருக்கும் திருமால்.

இருபொருள் கொள்ளுங்கால் சொற்கள் பிரிக்கப்படாமல் உள்ளவாறே கொள்ளப்படுதலின் இது செம்மொழிச்சிலேடை.]

**பாமாறன் வெற்பில் படர்மின் பயோதரங்கள்**
**தாமாக வட்டம்தனை மறைக்கும் - காமன்**
**வினைவளர்ப்ப தன்றி மிகுபோக மென்ப**
**தனைவளர்த்த வம்புஅகற்றித் தான்.** (339)

இது மேகத்திற்கும் தனத்திற்கும் பிரிமொழிச்சிலேடை.

[மேகத்தின்மேல் சொல்லுங்கால்: பாமாறன் வெற்பில் படர்மின் பயோதரங்கள் தாம் மாகவட்டம்தனை மறைக்கும், கா மன் வினை வளர்ப்பதன்றி மிகு போகம் என்பதனை வளர்த்த அம்பு அகற்றித் தான்.

தனத்தின்மேல் சொல்லுங்கால்: பாமாறன் வெற்பில் படர்மின் பயோதரங்கள்தாம் ஆகவட்டம்தனை மறைக்கும், காமன் வினை வளர்ப்பதன்றி மிகுபோகம் என்பதனை வளர்த்த வம்பு அகற்றித் தான்.]

மேகத்தின்மேல் சொல்லுங்கால்: பாமாறன் துடரிவெற்பில் தவழாநின்ற மின்னொடும் கூடிய மேகங்கள்தாம், ஆகாயப்பரப்புதன்னை மறைத்தன. காவினிடத்துப் பொருந்தும் கிரியை உண்டாக்கின. அவை அன்றியும் தம்மிடத்து உண்டான தண்ணீரைப் பெய்து எங்கும் பரப்பிச் சந்தனம் அகில் சாலி முதலிய போகங்களையும் வளர்த்தன எனவும்,

முலைமேல் சொல்லுங்கால்: பாமாறன் துடரிவரையிடத்து யான் மானிடம் எனக் குறித்த மின்போலும் இடையினை உடையாள் முலைகள் இரண்டும் தம்மைப் பெற்ற மார்பின்அகலத்து அளவைத் தோன்றாது மறைத்தன, காமனால் எழுப்பப்படும் மோகமாகிய வினையை என்னிடத்து வளர்ப்பதன்றி மிக்க போகசுகத்தையும் வம்பை அகற்றி நிறைத்தன எனவும் கொள்க. இதனுள் பிரிமொழி-

யாவன மாகவட்டம், ஆகவட்டம்; காமன், காவினிடத்து மன்; அம்பு அகற்றி, வம்பு அகற்றி என்பனவாம். வம்பு - கச்சு. பயோதரம் - மேகமும் முலையும். பகுதி - இடந்தலைப்பாடு; துறை - நலம் புனைந்து உரைத்தல்.

[பய - நீர், பால். பயோதரம் - நீரைத் தன்னிடத்துக் கொண்ட மேகம், பாலைத் தன்னிடத்துக் கொண்ட முலை. மின் - மின்னல், மின்னலைப் போன்ற இடையை உடைய தலைவி. மாகவட்டம் - ஆகாயப்பரப்பு. ஆகவட்டம் - மார்பின்பரப்பு. கா மன் வினை - சோலையிடத்து நிகழும் தொழில்கள், மன்மதனால் எழுப்பப்படும் மோக-மாகிய வினை. போகம் - விளைச்சல், கலவி இன்பம். அம்பு அகற்றி - தண்ணீரை எங்கும் பரவச் செய்து. வம்பு அகற்றி - முலைகளைப் பிணித்த கச்சினை நீக்கி. பயோதரம், மின், போகம், அகற்றி என்பன செம்மொழிச்சிலேடை. மாகவட்டம், ஆகவட்டம்; கா மன், காமன்; அம்பு, வம்பு என்பன பிரிமொழிச்சிலேடை.] [62]

அவற்றின் சிறப்பு விதி

**148. இவை, இனி விரிப்பனவாம் எவற்றினும் வரும். [63]**

(இ-ள்) செம்மொழி, பிரிமொழி ஆகிய இவ்விரண்டும், இனி முன்னர் விரிப்பனவாம் சிலேடைஅனைத்தினும் பொதுவாய் விரவிவரும் என்றவாறு.

மேல் சிலேடைக்கு உரைத்த முதல்சூத்திரத்தினுள் 'இயல்பினும் திரிபினும் பல்பொருளைத் தரு பெயர்வினையில் சார்வது சிலேடை' என்னாது, 'இயன்று பல்பொருளைத் தருவது' என்றதனால், சிலேடை நாலு வகைப்படும். அவையாவன:

1. அயல்பட இரண்டுபொருளை ஒன்று உவமையாகவும் ஒன்று உவமேய-மாகவும் குறித்து அவற்றைப் பாடுமிடத்துச் செம்மொழியினும் பிரிமொழி-யினும் இரட்டுறமொழியுமிடத்து உவமைப்பாற்படுத்திக் கூறுதலும், (எடுத்துக்-காட்டுப் பாடல் எண் 211, 212)

2. இரண்டு பொருளைக் கவிநாயகனுக்கு உவமையாய்க் குறித்து, அவற்றைப் பாடுமிடத்து ஒருமொழியினான் ஆதல், தொடர்மொழியினான் ஆதல் புலவ-னால் தொடுக்கப்படும் சொல் கவிநாயகன் கிரியையோடு மூன்றுபொருள் பயப்பதாகப் புணர்த்து அவனும் அவைபோல் இருந்தான் எனக் கூறுதலும், (பாடல் எண் 213)

3. இரண்டுபொருளை ஒருமொழியினான் ஆதல் தொடர்மொழியினான் ஆதல் இரட்டுறமொழிந்து கவிநாயகன்மேல் சிலேடை இன்றிக் கூறுதலும்,

4. ஒருசொல் இயல்பு பெயரானும் ஆகுபெயரானும் நாலுபொருள் பயப்பதாக உருவகவாய்பாட்டால் கூறும் உடன்நிலைச்சிலேடையும் என.

அவற்றுள் முன்னைய இரண்டும் (211, 212, 213) சிலேடை உவமைப்பால் வந்தன. ஒழிந்த இரண்டும் வருமாறு:

**தேசுபெறும் செவ்வித் திருமகிழ்மாறன் சரணம்**
**காசினிமேல் எஞ்ஞான்றும் காத்தருள்க - மாசிலா**
**வாய்ந்தபுகழ்ப் பூதூர் மகீபதியை, நான்மறைநூல்**
**ஆய்ந்த எதிராசனை (340)**

இஃது அயல்பட இரண்டுபொருளைத் தொடர்மொழியால் இரட்டுறமொழிந்து கவிநாயகன்மேல் சிலேடை இன்றி வந்தது. என்னை? திருமகிழ்மாறன் சரணம் என்பது திருமகளால் விரும்பப்பட்ட மாயோன்திருவடி என்றும், அழகிய வகுளமாறன் திருவடிகள் என்றும் ஒருதொடர்மொழி வந்து அவை எதி-

ராசனைக் காக்க எனக் கவிநாயகன்மேல் சிலேடை இன்றி வந்ததனால் என்று அறிக.

திணை - பாடாண்; துறை - புறநிலைவாழ்த்து.

[திரு - அழகு, திருமகள், மகிழ் - மகிழ்கின்ற, மகிழம்பூ, மாறன் - சடகோபன், திருமாலுடைய (மால் + தன் = மாறன்). பிரகாசம் பொருந்திய புதுமைஅழகுடைய திருமகள் விரும்பும் திருமாலுடைய திருவடிகள், சிறந்த மகிழம்பூ மாலையை அணிந்த சடகோபனுடைய திருவடிகள். குற்றமறப் பொருந்திய புகழை உடைய பூதூர்த்தலைவனும், நான்குவேதங்களையும் ஏனைய நூல்களையும் ஆராய்ந்தவனுமாகிய துறவியர்தலைவனான இராமாநுசனை இவ்வுலகில் என்றும் காப்பாற்றி அருளுக என்ற இப்பாடலில், பாட்டுடைத் தலைவனான எதிராசனைப் பற்றிய பகுதியில் சிலேடை எதுவும் இல்லை. முதலடியில் உள்ள 'திருமகிழ்மாறன்' என்பது சிலேடை. மாறன் எனவும், மால்தன் எனவும் பிரிக்கப்படுவது பிரிமொழிச்சிலேடை. திரு, மகிழ் என்பன செம்மொழிச் சிலேடை.]

**தேங்கமலம் மாசுஇலாச் செங்காந்தள் பைங்குமிழ்பொன்**
**கோங்குஅரும்பு காவியுடன் கொண்டதுஓர் - பூங்கொடியை**
**வண்டு களிக்கின்ற மகிழ் மாறனார் மால்வரைமேல்**
**கண்டு களிக்கின்றன என் கண்.** (341)

இதனுள் கமலம் முதலிய உவமப்பொருள் ஐந்தனுள் கோங்குஅரும்பு என்ற ஒன்றும் இயற்பெயராகவும் ஒழிந்த நான்கும் ஆகுபெயராகவும் வந்து அவை ஐந்தும் நாலுபொருள் பயப்பனவாகவும் பாடினமையால் உருவகவாய்பாட்டான் வந்த உடன்நிலைச்சிலேடை என்பது இதன் பெயர். என்னை? தாமரை என்னும் முதலைக் கூறச் சினைஅறிகிளவியாகிய ஆகுபெயர் தாமரைப்பூவையும், முகம்ஆகிய தாமரை என மாட்டேறு இல்லாத உருவக வாய்பாட்டான் முகத்தையும், அத்தாமரைப்பூவைக் கருப்பொருளாக உடைய மருதநிலத்தையும் அந்நிலத்து நிகழும் ஒழுக்கமாகிய ஊடலையும் காட்டி நிற்றலான் என்று அறிக. ஒழிந்த காந்தள் முதலாகிய நாலு பூவானும் இம்முறையே நாலுபொருள் கொள்க. எனவே, இப்பெண்ணாகிய பூங்கொடி ஊடிக் கூடி இருந்து பிரிந்து இரங்குதற்கு உரித்தாம் என உட்கொண்டு களிக்கின்றன என்கண் என்றான் என்க. ஒழிந்த அகலம் உரையிற் கொள்க.

பகுதி - இயற்கைப்புணர்ச்சி; துறை - காட்சி.

[வண்டுகள் தேனை உண்டு களிக்கும்படியான மகிழம்பூமாலையை அணிந்த சடகோபனுடைய பெரிய மலையிலே தேன் நிரம்பிய தாமரை, குற்றமற்ற செங்காந்தள், புதுமைவனப்புடைய குமிழ், பொன்நிறமான கோங்கின் அரும்பு, கருங்குவளை இவற்றை ஒருசேரத் தன்னிடத்துக் கொண்ட பூக்கள் நிரம்பிய கொடி ஒன்றனைக் கண்டு என்கண்கள் களிக்கின்றன என்ற இப்பாடலில்,

கமலம் - தாமரைப்பூ - முகமாகிய தாமரை - மருதநிலம் - ஊடல்
செங்காந்தள் - காந்தட்பூ - கைகளாகிய காந்தள் - குறிஞ்சிநிலம் - புணர்தல்
பைங்குமிழ் - குமிழம்பூ - மூக்காகிய குமிழம்பூ - முல்லைநிலம் - இருத்தல்
கோங்குஅரும்பு - முலையாகிய கோங்கரும்பு - பாலைநிலம் - பிரிதல்
காவி - காவிமலர் - கண்களாகிய காவி - நெய்தல்நிலம் - இரங்கல்

எனக் கமலம், காந்தள், குமிழ், காவி என்பன நான்குபொருள்களையும், கோங்கரும்பு என்பது மாத்திரம் மூன்றுபொருள்களையும் தருதலான் இஃது உருவகவாய்பாட்டான் வந்த உடன்நிலைச்சிலேடை.

உடன்நிலைச்சிலேடையாவது ஒருபாட்டு இரண்டு முதலிய வகைகளால் பொருள்கொள்ள நிற்பது. கமலம் முதலியன ஆகுபெயரான் அவ்வம்மலர்களையும்,

யாவன மாகவட்டம், ஆகவட்டம்; காமன், காவினிடத்து மன்; அம்பு அகற்றி, வம்பு அகற்றி என்பனவாம். வம்பு - கச்சு. பயோதரம் - மேகமும் முலையும். பகுதி - இடந்தலைப்பாடு; துறை - நலம் புனைந்து உரைத்தல்.

[பய - நீர், பால். பயோதரம் - நீரைத் தன்னிடத்துக் கொண்ட மேகம், பாலைத் தன்னிடத்துக் கொண்ட முலை. மின் - மின்னல், மின்னலைப் போன்ற இடையை உடைய தலைவி. மாகவட்டம் - ஆகாயப்பரப்பு. ஆகவட்டம் - மார்பின்பரப்பு. கா மன் வினை - சோலையிடத்து நிகழும் தொழில்கள், மன்மதனால் எழுப்பப்படும் மோகமாகிய வினை. போகம் - விளைச்சல், கலவி இன்பம். அம்பு அகற்றி - தண்ணீரை எங்கும் பரவச் செய்து. வம்பு அகற்றி - முலைகளைப் பிணித்த கச்சினை நீக்கி. பயோதரம், மின், போகம், அகற்றி என்பன செம்மொழிச்சிலேடை. மாகவட்டம், ஆகவட்டம்; கா மன், காமன்; அம்பு, வம்பு என்பன பிரிமொழிச்சிலேடை.] [62]

அவற்றின் சிறப்பு விதி

**148. இவை, இனி விரிப்பனவாம் எவற்றினும் வரும். [63]**

(இ-ள்) செம்மொழி, பிரிமொழி ஆகிய இவ்விரண்டும், இனி முன்னர் விரிப்பனவாம் சிலேடைஅனைத்தினும் பொதுவாய் விரவிவரும் என்றவாறு.

மேல் சிலேடைக்கு உரைத்த முதல்சூத்திரத்தினுள் 'இயல்பினும் திரிபினும் பல்பொருளைத் தரு பெயர்வினையில் சார்வது சிலேடை' என்னாது, 'இயன்று பல்பொருளைத் தருவது' என்றதனால், சிலேடை நாலு வகைப்படும். அவையாவன:

1. அயல்பட இரண்டுபொருளை ஒன்று உவமையாகவும் ஒன்று உவமேயமாகவும் குறித்து அவற்றைப் பாடுமிடத்துச் செம்மொழியினும் பிரிமொழியினும் இரட்டுறமொழியுமிடத்து உவமைப்பாற்படுத்திக் கூறுதலும், (எடுத்துக்காட்டுப் பாடல் எண் 211, 212)

2. இரண்டு பொருளைக் கவிநாயகனுக்கு உவமையாய்க் குறித்து, அவற்றைப் பாடுமிடத்து ஒருமொழியினான் ஆதல், தொடர்மொழியினான் ஆதல் புலவனால் தொடுக்கப்படும் சொல் கவிநாயகன் கிரியையோடு மூன்றுபொருள் பயப்பதாகப் புணர்த்து அவனும் அவைபோல் இருந்தான் எனக் கூறுதலும், (பாடல் எண் 213)

3. இரண்டுபொருளை ஒருமொழியினான் ஆதல் தொடர்மொழியினான் ஆதல் இரட்டுறமொழிந்து கவிநாயகன்மேல் சிலேடை இன்றிக் கூறுதலும்,

4. ஒருசொல் இயல்பு பெயரானும் ஆகுபெயரானும் நாலுபொருள் பயப்பதாக உருவகவாய்பாட்டால் கூறும் உடன்நிலைச்சிலேடையும் என.

அவற்றுள் முன்னைய இரண்டும் (211, 212, 213) சிலேடை உவமைப்பால் வந்தன. ஒழிந்த இரண்டும் வருமாறு:

**தேசுபெறும் செவ்வித் திருமகிழ்மாறன் சரணம்**
**காசினிமேல் எஞ்ஞான்றும் காத்தருள்க - மாசிலா**
**வாய்ந்தபுகழ்ப் பூதூர் மகீபதியை, நான்மறைநூல்**
**ஆய்ந்த எதிராசனை (340)**

இஃது அயல்பட இரண்டுபொருளைத் தொடர்மொழியால் இரட்டுறமொழிந்து கவிநாயகன்மேல் சிலேடை இன்றி வந்தது. என்னை? திருமகிழ்மாறன் சரணம் என்பது திருமகளால் விரும்பப்பட்ட மாயோன்திருவடி என்றும், அழகிய வகுளமாறன் திருவடிகள் என்றும் ஒருதொடர்மொழி வந்து அவை எதி-

ராசனைக் காக்க எனக் கவிநாயகன்மேல் சிலேடை இன்றி வந்ததனால் என்று அறிக.

திணை - பாடாண்; துறை - புறநிலைவாழ்த்து.

[திரு - அழகு, திருமகள். மகிழ் - மகிழ்கின்ற, மகிழம்பூ. மாறன் - சடகோபன், திருமாலுடைய (மால் + தன் = மாறன்). பிரகாசம் பொருந்திய புதுமைஅழகுடைய திருமகள் விரும்பும் திருமாலுடைய திருவடிகள், சிறந்த மகிழம்பூ மாலையை அணிந்த சடகோபனுடைய திருவடிகள். குற்றமறப் பொருந்திய புகழை உடைய பூதூர்த்தலைவனும், நான்குவேதங்களையும் ஏனைய நூல்களையும் ஆராய்ந்தவனுமாகிய துறவியர்தலைவனான இராமாநுசனை இவ்வுலகில் என்றும் காப்பாற்றி அருளுக என்ற இப்பாடலில், பாட்டுடைத் தலைவனான எதிராசனைப் பற்றிய பகுதியில் சிலேடை எதுவும் இல்லை. முதலடியில் உள்ள 'திருமகிழ்மாறன்' என்பது சிலேடை. மாறன் எனவும், மால்தன் எனவும் பிரிக்கப்படுவது பிரிமொழிச்சிலேடை. திரு, மகிழ் என்பன செம்மொழிச் சிலேடை.]

**தேங்கமலம் மாசுஇலாச் செங்காந்தள் பைங்குமிழ்பொன்**
**கோங்குஅரும்பு காவியுடன் கொண்டதுஓர் - பூங்கொடியை**
**வண்டு களிக்கின்ற மகிழ் மாறனார் மால்வரைமேல்**
**கண்டு களிக்கின்றன என் கண்.** (341)

இதனுள் கமலம் முதலிய உவமப்பொருள் ஐந்தனுள் கோங்குஅரும்பு என்ற ஒன்றும் இயற்பெயராகவும் ஒழிந்த நான்கும் ஆகுபெயராகவும் வந்து அவை ஐந்தும் நாலுபொருள் பயப்பனவாகவும் பாடினமையால் உருவகவாய்பாட்டான் வந்த உடன்நிலைச்சிலேடை என்பது இதன் பெயர். என்னை? தாமரை என்னும் முதலைக் கூறச் சினைஅறிகிளவியாகிய ஆகுபெயர் தாமரைப்பூவையும், முகம்ஆகிய தாமரை என மாட்டேறு இல்லாத உருவக வாய்பாட்டான் முகத்தையும், அத்தாமரைப்பூவைக் கருப்பொருளாக உடைய மருதநிலத்தையும் அந்நிலத்து நிகழும் ஒழுக்கமாகிய ஊடலையும் காட்டி நிற்றலான் என்று அறிக. ஒழிந்த காந்தள் முதலாகிய நாலு பூவானும் இம்முறையே நாலுபொருள் கொள்க. எனவே, இப்பெண்ணாகிய பூங்கொடி ஊடிக் கூடி இருந்து பிரிந்து இரங்குதற்கு உரித்தாம் என உட்கொண்டு களிக்கின்றன என்கண் என்றான் என்க. ஒழிந்த அகலம் உரையிற் கொள்க.

பகுதி - இயற்கைப்புணர்ச்சி; துறை - காட்சி.

[வண்டுகள் தேனை உண்டு களிக்கும்படியான மகிழம்பூமாலையை அணிந்த சடகோபனுடைய பெரிய மலையிலே தேன் நிரம்பிய தாமரை, குற்றமற்ற செங்காந்தள், புதுமைவனப்புடைய குமிழ், பொன்நிறமான கோங்கின் அரும்பு, கருங்குவளை இவற்றை ஒருசேரத் தன்னிடத்துக் கொண்ட பூக்கள் நிரம்பிய கொடி ஒன்றனைக் கண்டு என்கண்கள் களிக்கின்றன என்ற இப்பாடலில்,

கமலம் - தாமரைப்பூ - முகமாகிய தாமரை - மருதநிலம் - ஊடல்
செங்காந்தள் - காந்தட்பூ - கைகளாகிய காந்தள் - குறிஞ்சிநிலம் - புணர்தல்
பைங்குமிழ் - குமிழம்பூ - மூக்காகிய குமிழம்பூ - முல்லைநிலம் - இருத்தல்
கோங்குஅரும்பு - முலையாகிய கோங்கரும்பு - பாலைநிலம் - பிரிதல்
காவி - காவிமலர் - கண்களாகிய காவி - நெய்தல்நிலம் - இரங்கல்

எனக் கமலம், காந்தள், குமிழ், காவி என்பன நான்குபொருள்களையும், கோங்கரும்பு என்பது மாத்திரம் மூன்றுபொருள்களையும் தருதலான் இஃது உருவகவாய்பாட்டான் வந்த உடன்நிலைச்சிலேடை.

உடன்நிலைச்சிலேடையாவது ஒருபாட்டு இரண்டு முதலிய வகைகளால் பொருள்கொள்ள நிற்பது. கமலம் முதலியன ஆகுபெயரான் அவ்வம்மலர்களையும்,

அம்மலர்கள் தத்தமக்கு உருவகமாகிய தலைவிஉறுப்புக்களையும், தாம் தோன்றும் நிலத்தையும், அந்நிலத்தின் சிறப்பான ஒழுக்கத்தையும் காட்டுதலின் இஃது உடன்நிலைச்சிலேடை.
இங்கு உரையாசிரியர் கூறும் செய்திகள் யாவும் திருக்கோவையாரின் முதல் பாடலாகிய 'திருவளர் தாமரை' என்பதன் உரையில் பேராசிரியர் குறிப்பிட்ட விளக்கங்களை உட்கொண்டு சொற்றனவாகும்.] [63]

சிலேடையின் விரிகள்

**149. ஒன்று பல முரண்ஒன்றிய வினையே**
**நியமம் நியமவிலக்கு விரோதம்**
**அவிரோதத்துடன் அதன்விரி ஏழ் உள. [64]**

(எ-ன்) அங்ஙனம் வகைப்பட்ட சிலேடைஅணியின் விரி உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஒருவினைச் சிலேடை, பலவினைச் சிலேடை, முரண்வினைச் சிலேடை, நியமச் சிலேடை, நியமவிலக்குச் சிலேடை, விரோதச் சிலேடை, அவிரோதச் சிலேடை என விரி ஏழ் உளவாம் என்றவாறு.

வினை என்பதனை முதலே வந்த மூன்றினுக்கும் இறுதிவிளக்காக்கி, அதன் என்பதனை அதிகாரத்தால் சிலேடையதன் விரி எனக்கொள்க.

[ஒருவினை, பலவினை, முரண்வினை என வினை என்பதனை மூன்றனோடும் கூட்டுக. அதிகாரம் என்பது ஒன்றன்பொருள் பற்றி வருகின்ற பல சூத்திரங்களின் தொகுதி. சூ. 146 முதல் சூ. 156 முடியச் சிலேடைஅதிகாரம் என்க.] [64]

ஒருவினைச் சிலேடை

**150. அவற்றுள்,**
**ஒருவினை கொள்வது ஒருவினைச் சிலேடை. [65]**

(எ-ன்) வைத்த முறையானே ஒருவினைச் சிலேடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) இரண்டுபொருளை, ஒருமொழியினான் ஆதல், தொடர்மொழியினான் ஆதல் இரட்டுறமொழிந்து இரண்டுபொருட்கும் ஒருவினை கொள்ள முடித்தல் ஒருவினைச் சிலேடையாம் என்றவாறு.

**நாதமுனி தம்பிரான் நாவீறன் வண்குருகூர்**
**மாதரணி மன்னி மழைதோயும் - ஓதி**
**இருந்தும்பியும் தேனும் எப்போதும் யாண்டும்**
**பொருந்திப் புரியும், பொறை. (342)**

இஃது ஒருவினைச் சிலேடை. மலைக்கும் மாதராள் குழற்கும் சிலேடை.

(இ-ள்) நாவீறு உடைய பிரான் வளப்பத்தை உடைய குருகூரினிடத்துப் பெருமை பெற்ற ஆதித்தியமண்டலத்தை அணவப்பட்டு மேகம் தவழும் மலையானது, பெரிய யானைத்திரளையும், தேன் இறாட்டினையும் எக்காலத்தும் எவ்விடத்தும் பயிலப் பொறை புரியும் எனவும், இம்மாதராளின் அழகு செறிந்து இருண்ட நிறத்தைப் பயிலும் குழலானது கரிய வண்டினையும் தேனினையும் காந்தள் முதலிய எல்லாப் பூக்களினையும் எவ்விடத்தும் பயின்று பொறுத்-தலைப் புரியும் எனவும் ஆம். இதனுள், 'எப்போதும் யாண்டும் பொருந்திப்

புரியும் பொறை' என்பதற்குப் பொறை புரியும்என்பது இரண்டுதலைக்கும் ஒருவினை. ஓதி - மலை, குழல்.
திணை - ஆண்பாற்கூற்றுக் கைக்கிளை; துறை - நலம் பாராட்டல்.

['நாதமுனிகளுக்குத் தலைவராகிய நாவீறர் எனப்படும் மாறனுடைய வளவிய குருகூரின் ஓதி யாண்டும் பொறைபுரியும்' எனச் சிலேடையான் இருபொருள் பயக்கும் 'ஓதி' என்ற சொல், இருபொருளுக்கும் ஏற்பப் 'பொறை புரியும்' என்ற ஒரே-வினையைக் கொண்டு முடிதலின் இஃது ஒருவினைச்சிலேடை.

மாதர் அணி மன்னி - இப்பெண்ணின் அழகு செறிந்து. மா தரணி மன்னி - பெருமைபெற்ற சூரியமண்டலத்தை நெருங்கி. மழை தோயும் ஓதி - மேகங்கள் தங்கும் மலை, இருண்ட நிறத்தைப் பயிலும் குழல். இருந்தும்பி - பெரிய யானை, கரிய வண்டு. தேன் - தேன்அடை, தேன். எப்போதும் - எல்லா நேரத்தும், எல்லாவகைப் பூக்களும். பொறை புரியும் - பாரத்தைப் பொறுத்துக்கொள்ளும் என்பது பொதுவினை.] [65]

## பலவினைச் சிலேடை

**151. பலவினை கொள்வது பலவினைச் சிலேடை. [66]**

(எ-ன்) பலவினைச் சிலேடை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) ஒரு செய்யுளகத்துப் பலவினை இருபொருட்கு இரட்டுறக்கொள்வது பலவினைச் சிலேடையாம் என்றவாறு.

[முடிக்கும் சொல்லாகிய ஒரேதொடர் இரண்டு முதலிய பல பொருள் தந்து, முன்னர் உள்ளனவற்றை முடித்தலின் பலவினைச் சிலேடை எனப்பட்டது.]

**ஆம்பல் மலர்த்தி அகஇருள்சீத்து ஒண்கலைகள்**
**தாம்புல்லிய தண்மதி வரவும் - தீம்பர்**
**செறிவுஅகற்றும் மாறன் திருவாக்கும் பேதை**
**அறிவுஅகற்றியே நின்றன. (343)**

இது பலவினைச் சிலேடை. சந்திரோதயத்திற்கும் திருவாய்மொழிக்கும் சிலேடை.
(இ-ள்) ஆம்பல் - பண்ணும் குமுதமும்; அகஇருள் - உள்ளமயக்கமும் உலகி-னிடத்து அந்தகாரமும்; ஒண்கலைகள் - சுருதி - மிருதி - புராணங்களும் சந்திரகிரணமும்; பேதை - அறிவிலியும், மகடூஉவும். அறிவு அகற்றியே நின்றன என்பது அறிவினைப் பெருப்பியாநின்றது என்றும், அறிவினை அழியாநின்றது என்றுமாம்.
'அறிவு அகற்றும் ஆகல்ஊழ் உற்றக்கடை' (குறள் - 372) என்பதனால் அறிக.
மலர்த்தி, சீத்து, புல்லிய என அடைவே வந்தவாறு காண்க.
திணை - பாடாண் சார்ந்த பொதுவியல்; துறை - பனுவல்வாழ்த்து; அல்லது திணை - பெண்பாற்கூற்றுக் கைக்கிளை; துறை - தோழி நிலவுகண்டு அழுங்கலுமாம்.

[குமுதப்பூக்களை மலரச்செய்து, நிலஉலகில் உள்ள இருளை அழித்து ஒளி உடைய கதிர்கள் பொருந்திய குளிர்ந்த சந்திரனுடைய வருகையும், ஆம்பல் என்ற பண்ணை நன்குபாடும் வாய்ப்புஅளித்து, மனத்தகத்துள்ள அறியாமையாகிய இருளை அழித்து, வேதம் அறநூல்கள் புராணங்கள் கூறும் செய்திகளைத் தன்னுட் கொண்டதாய்க் கொடியோர்களுடைய இணக்கத்தைப் போக்கும் மாறன்திருவாக்காக அமைந்த திருவாய்மொழியும், முறையே பெற்கரிய காமம் பற்றிய அறிவினை மிகுதிப்-படுத்தியும், அறிவிலிகளின் பிறமதங்களின் பெருமையைக் கூறும் அறிவினை

அழித்தும் செயற்பட்டன; அல்லது அறிவிலிகளான பிறசமயத்தார்களின் அறிவை மிகுத்துத் திருமாலின் பரத்துவத்தில் நிலைநிற்கச் செய்தும், கணவரைப் பிரிந்த மகளிரின் அறிவைப் பிரிதல்துன்பத்தை மிகுவித்துப் போக்கியும் முறையே திருவாய்மொழியும் சந்திரோதயமும் செயற்பட்டன என்றும் கொள்ளலாம்.
தண்மதிவரவு மலர்த்தி, நீத்து, அறிவு அகற்றியது எனவும், மாறன்திருவாக்கு மலர்த்தி, நீத்து, அறிவு அகற்றியது எனவும் மலர்த்தல், நீத்தல், அகற்றல் என்னும் பலவினைகள் சிலேடைப்பொருளால் முடிக்குஞ் சொற்களாக அமைந்தமை பலவினைச் சிலேடையாம். அறிவு அகற்றும் - அறிவை விரிவடையச் செய்யும் (குறள்-372)] [66]

முரண்வினைச் சிலேடை

**152. மொழிவினை முரணுதல் முரண்வினைச் சிலேடை. [67]**

(எ-ன்) முரண்வினைச் சிலேடை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) மொழியப்பட்ட வினைப்பொருள் முரணச் சிலேடைப்படுத்துவது முரண்வினைச் சிலேடையாம் என்றவாறு.

**இன்பம் நந்திய வானக மதனை எய்துவதும்**
**துன்ப முந்துறு மறநிலை அடைவதும் துணிவாம்-**
**மன்பெரும்புகழ் மாறனை வாழ்த்துபு வணங்கி**
**அன்புறார் பினர்தாம்; எனும் நாளும், இவ்அகிலம். (344)**

இது முரண்வினைச் சிலேடை. அன்புஇல்லார்க்கும் அன்புஉடையார்க்கும் சிலேடை.
(இ-ள்) நிலைபெற்ற பெரிய புகழைஉடைய காரிமாறப்பிரானை வாழ்த்தி வணங்குவதும் இன்றி மனத்தினால் அன்புஉறாருமாகிய மாறுபட்ட கிரியை உடையோர் பேரானந்தம் என்பது கெட்ட பெரிய பாவங்களைக் கூடுவதும், துன்பம் வந்து எதிர்கொளும் கொலை முதலிய மறத்தின் நிலையை அடைவதும் சந்தயமில்லை எனவும், காரிமாறப்பிரானை வாழ்த்துவதுடன் வணங்கி மனத்தினால் நினைந்து அன்புமிகும் அன்புடையோர் பேரானந்தம் மல்கிய பரமவைகுண்டத்தைப் பெறுவதும் துன்பம் களைதல் மிகும் அறநிலை அடைவதும் சந்தயமில்லை எனவும் உலகம் கூறும் என்றவாறு. உலகம் என்பது உயர்ந்தோரை. மாறனை என்பதற்கு மால்தன்னை எனினும் ஆம்.
திணை - பாடாண்; துறை - பழிச்சினர்ப் பரவலும் பரவார்ப் பழித்தலும் ஆம்.
[அன்புறார், அன்பினர் என்ற முரண்பட்ட இருசொற்களுக்கும் பொருந்துமாறு சிலேடைப்பொருளில் 'இன்பம் ... துணிவாம்' என்ற முடிக்கும் தொடர் அமைந்திருத்தல் முரண்வினைச் சிலேடை. நந்திய - கெட்ட, பெருகிய. வானகம் - பரமபதம். வான் + அகம் - பெரிய பாவம். துன்பமுந்துறு மறநிலை - துன்பம் வந்து எதிர்கொள்ளும் பாவச்செயல்கள். துன்பம் உந்துறும் அறநிலை - துன்பத்தைப் போக்கும் அறச்செயல்கள். நந்திய செம்மொழிச் சிலேடை. வானகம், துன்பமுந்துறு மறநிலை - பிரிமொழிச் சிலேடை.] [67]

நியமச் சிலேடை

**153. இயல்புஉடைப் பொருள்கட்கு உளதுஇலது இரட்டுற நியமித்து உரைத்தல் நியமச் சிலேடை. [68]**

(எ-ன்) நியமச் சிலேடை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) உயர்திணை அஃறிணை என்னும் இரண்டினுள் விகாரப்படாத இயல்பினை உடைய பொருள்கட்கு உள்ளதும் இல்லதுமாகச் சிலேடித்த பொருளைத் தேற்றம்பெற நியமம்செய்து அவற்றுள் ஒன்றினைக் குறிப்பினால் கொள்வதாய்ப் புகல்வது நியமச்சிலேடையாம் என்றவாறு.
நியமித்தல் - தெளிதல்.

**வண்டு உளர் முண்டகக் கொழும்பொன்துணர்ஒன்றே, பங்கம்உற வளர்ந்தது எல்லாம்;**
**தண்தழை வான்அகடுஉரினும் சண்பகமே அளிதுறந்த சால்பிற்று என்றும்;**
**வெண்தரளப் பொறைஉயிர்க்கும் வலம்புரியே கோடியதும்; விழவின்மாதர்**
**மொண்டுஅலை வார்குளிர்புனலே கம்பலை உட்கொண்டதுவும், மொழியின் மன்னோ. (345)**

இது நியமச்சிலேடை.
(இ-ள்) பங்கம் உற வளர்ந்ததுஎல்லாம் தாமரைப்பூவினது சாதிஒன்றுமே, அளி துறந்த சால்பினை உடையது சண்பகமரம் ஒன்றுமே, கோடியதும் வலம்புரிக் குலமே, குளிர்புனலே கம்பலை உட்கொண்டதும் என்று உலகவரால் கூறப்படும் ஆதலால், ஒழிந்த உயர்ந்தோருள் மானஈனமுற வளர்ந்தோரும் இல்லை, கொடையைக் கைவிட்டோரும் இல்லை, மனக்கோட்டம் உடையோரும் இல்லை, நடுக்குற்றோரும் இல்லை என்பதாம்.
பங்கம் - சேறும் மானஈனமுமாம்; அளி - வண்டும் கொடையும்; கோடியது - வளைவும் மனக்கோட்டமும்; கம்பலை - ஆரவாரமும் நடுக்கமும். இவற்றுள் பின்னைய நான்கும் உயர்திணையைக் குறித்துக் குறிப்பினால் கொண்டவாறு காண்க. உளர்தல் - குடைதல்; பொறை உயிர்த்தல் - பெறுதல்.
திணை - பாடாண்; துறை - நாடுவாழ்த்து. (குருகாமான்மியம்)
[உயர்திணைப்பொருள் - மக்கள். அஃறிணைப்பொருள் - தாமரை, சண்பகம், வலம்புரி, புனல் என்பன. விகாரப்படாத இயல்பு - இயற்கை.
இயற்கையாகப் பொருள்கட்கு உள்ளன - தாமரை பங்கம்உற வளரும்; சண்பகம் அளி துறந்த சால்பிற்று; வலம்புரியே கோடியது; புனலே கம்பலை உட்கொண்டது. இவை இவ்வஃறிணைப்பொருள்கட்கே உரியன என்பது தெளிவாகக் கூறப்பட்டது.
உயர்திணைக்கு இவை இல்லை என்பது சிலேடைப் பொருளால் குறிப்பினால் கொள்ளுமாறு அமைந்துள்ளது. மக்களுள் பங்கம்உற வளர்வோரும், அளி துறந்த சால்பினரும், கோடியவரும், கம்பலை உட்கொண்டவரும் இலர் என்பது பாடலில் நேராகக் கூறப்படாமல் குறிப்பினால் சிலேடைப்பொருள் உட்கொண்டு கூறப்பட்டது. சிலேடைப்பொருளால் பங்கம் உற வளர்தல் முதலியன தாமரை முதலியவற்றிற்கே வரையறுக்கப்பட்டமையின் இது நியமச்சிலேடை.] [68]

நியமவிலக்குச் சிலேடை

**154. விளம்பிய நியமம் விலக்குதல் விலக்கே. [69]**

(எ-ன்) நியமவிலக்குச் சிலேடை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) இங்ஙனம் கூறப்பட்ட நியமத்தின் கூறுபாட்டை விலக்கிப் பிறிதும் ஒன்று கூறுவது நியமவிலக்குச் சிலேடையாம் என்றவாறு.

**கடம்புணர்ந்தது, அளிக்கணம் பொங்கரின் இழைத்த தேக்குஉளறி தேங்கமழ் செந்தேனே;**
**திடம்புணர்ந்த கெழுதகை ஆடவர் கடவும் சிந்துரத்தின் திறன்ஒன்று உண்டால்.**

**மடம்புணர்ந்தார் இயல்கொழுநர் உளம்தவறா மடந்தையரே; மறித்து நாடின்,**
**நடம்புணர்ந்த துகில்கொடித் திண்தேர் மறுகும் திருமறுகும், நவிலின் மன்னோ.**
**(346)**

(இ-ள்) கொள்கலத்துள் பொருந்தியது, வண்டின்கூட்டம் கொம்பர்தோறும் வைத்ததாய் எடுத்துஉண்டார் யாவரும் தேக்குஇடுவதாய் மிகவும் பரிமளிக்கும் சிவந்த தேனே; அதுவுமன்றி உண்மையோடும் கூடிய நட்பை உடைய ஆடவர் கடாவும் யானைத்திரள்களும் மதத்தோடும் கூடியதுண்டு. மடப்பத்தைப் பொருந்தினவர் தமது இல்லறத்திற்கு உரிய இலக்கணத்தை உடைய கொழுநர் உள்ளக்குறிப்பின் பிழையாத கற்புடைய மகளிரே; மீட்டும் ஆராயின் ஆடு-தலைப் பொருந்தின துகிற்கொடியை உடைய திண்ணிய தேர்கள் சூழ்வரும் பொலிவினை உடைய வீதிகளும் அறச்சாலையை மருவும்; அவையன்றி வறுமையுற்றுத் தனிசு கொண்டவரும் இல்லை; அறியாமை உடையோரும் இல்லை என்றவாறு.

கடம் - பாத்திரம், மதம், கடன்கோடல். மடம் - மடப்பம், அறச்சாலை, அறியாமை. இதனுள்ளும் இறுதிநின்ற இரண்டும் குறிப்பினால் உயர்திணை-மேல் கொண்டவாறு காண்க. இழைத்தல் - திரட்டி வைத்தல். இதுவும் நாட்டு-வாழ்த்து.

[ஒருசெய்தி ஒன்றற்கே உரியது என்ற வரையறையை விடுத்து அது மற்றதற்கும் உண்டு என்று கூறுவது நியமவிலக்கு. சிலேடைப்பொருளால் ஒரேசொல் பலவற்றிற்கு உரிமையாதலின் நியமவிலக்குச் சிலேடை.

செந்தேனே கடம்புணர்ந்தது; சிந்துரத்தின் திரளும் கடம்புணர்ந்தது; மக்கள் கடம்-புணரார். மடந்தையரே மடம்புணர்ந்தார்; மறுகும் மடம்புணர்ந்தது; மக்கள் மடம்புணரார். மக்கள் கடம்புணரார், மடம்புணரார் என்ற உயர்திணைச்செய்திகள் செய்யுளில் காணப்படாமல் குறிப்பினால் பெறப்பட வைத்தனவாம்.

பொங்கர் - மரக்கிளை. தேக்கெறிதல் - ஏப்பம்விடல். கெழுதகை - நட்பு. இயல் - இல்-லறத்திற்குரிய இலக்கணம். மறித்து - மறுபடியும். துகிற்கொடி - துணிக்கொடி. மறுகு - தெரு. மறுகும் - சுற்றிவரும். தனிசு - கடன். சிந்துரம் - யானை.] [69]

விரோதச் சிலேடை

**155. சாதி முதலாச் சாற்றிய நான்கொடும்**
**தீதுஅறு பெயரினும் வினையினும் திரிந்தும்**
**மேதக விரோதத்து அறைவது விரோதம். [70]**

(எ-ன்) விரோதச்சிலேடை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) சாதி முதலாகப் பொருள் ஈறாகக் கூறப்பட்ட நான்கினோடும் கூடிக் குற்றமற்ற பெயரினும் வினையினும் திரிந்தும் திரியாதும் பெருமை தருவதாய் விரோதமாகச் சிலேடையால் கூறுதல் விரோதச் சிலேடையாம் என்றவாறு.

'திரிந்தும்' என்ற உம்மை எச்சம் ஆதலால் 'திரியாதும்' என்றாயிற்று. சிலேடை என்பது அதிகாரத்தால் பெற்றது. 'மேதக' என்றதனால் சாதியோடு நான்கும் கிரியையோடு மூன்றும் குணத்தோடு இரண்டும் பொருளோடு ஒன்றுமாக விரோதச்சிலேடை பத்து உள என்று அறிக. அவற்றிற்கு எல்லாம் செய்யுள் வருமாறு:

[சாதி முதலிய நான்கு - சாதி, தொழில், பண்பு, பொருள் என்பன.

அதிகாரம் என்பது ஒருபொருள்பற்றி வரும் பல சூத்திரங்களின் தொகுதி. சூ. 146 முதல் சூ. 156 முடியச் சிலேடைஅதிகாரம். விரோதச் சிலேடை பத்தாவன:

1. சாதிக்குச் சாதியினோடு விரோதச் சிலேடை - பா. 347
2. சாதிக்குக் கிரியையோடு விரோதச் சிலேடை - 348, 349
3. சாதிக்குக் குணத்தோடு விரோதச் சிலேடை - 350
4. சாதிக்குப் பொருளோடு விரோதச் சிலேடை - 351
5. கிரியைக்குக் கிரியையோடு விரோதச் சிலேடை - 352
6. கிரியைக்குக் குணத்தோடு விரோதச் சிலேடை - 353
7. கிரியைக்குப் பொருளோடு விரோதச் சிலேடை - 354
8. குணத்திற்குக் குணத்தோடு விரோதச் சிலேடை - 355
9. குணத்திற்குப் பொருளோடு விரோதச் சிலேடை - 356
10. பொருளுக்குப் பொருளோடு விரோதச் சிலேடை - 357

என்பன.]

**எத்திரம்என்றே அறியேன்; என்அளவில் காரிதரும்**
**புத்திரனார் பொன்அம்புயப்போது - முத்தநகை**
**மின்! குமுதப்போது அகல வேனிலான் எய்வதற்கு**
**மன் குமுதப்போதாய வாறு. (347)**

(இ-ள்) முத்துப் போன்ற நகையினையும், மின் போன்ற இடையினையும் உடையாய்! காரிமாறப்பிரான் பொலிவினை உடைய புயத்தில் புனைவதாம் வகுளமாலிகை (வாங்கிச் சூடப்பெறாத) என்அளவில் யான் மகிழ்வு எய்தும் போது என்னைவிட்டு நீங்காநிற்ப, காமன் பஞ்சபாணங்களையும் தொடுப்பதற்கு நிலைபெற்ற கலகப்போதானபடி என்ன காரணம் என்று அறியேன் என்றவாறு.

இதனுள், பொன் அம்புயப்போது - பொன் போலும் நிறத்தை உடைய தாமரைப்போது. மன் குமுதப்போது ஆயவாறு - ஆக்கம் செய்யும் ஆம்பல் போது ஆனபடி என்ன காரணம் என்று அறியேன் என்றதனால், சாதிக்குச் சாதியோடே விரோதச் சிலேடை ஆயிற்று. மின் - அண்மைவிளி. உவமப்-பெயர். குமுதம் இரண்டினுள் முன்னையது மகிழ்ச்சி. பின்னையது கலகம். போது - பூவும் காலமும்.

திணை - பெண்பாற்கூற்றுக் கைக்கிளை; துறை - தாமம் பெறாது தளர்வுற்று உரைத்தல். இது சாதிக்குச் சாதியோடே விரோதச் சிலேடை.

[எத்திரம் - யாது காரணம். பொன் அம்புயப்போது - பொன்னிறத்து அழகிய தோள்களில் சூடிய மகிழம்பூமாலை, பொன்நிறம் உடைய தாமரைப்பூ. மின் - மின் போன்ற இடையை உடைய தோழியே! குமுதப்போது - மகிழ்வு எய்தும் நேரம். மன் குமுதப்போது - நிலைபெற்ற கலகம் தரும் நேரம், ஆக்கம் செய்யும் குமுதப்பூ. மகிழம்பூமாலையை அணிந்து மாறன் பவனி வர, அம்மாலையைக் கண்டஅளவில் தலைவி மகிழ்ச்சியுற்றாள். அப்பெருமான் வீதியைக் கடந்து செல்ல, தான் அம்-மாலையைக் காண்பதற்கோ தான் சூடிக்கொள்ளப் பெறுவதற்கோ வாய்ப்பு இல்லாமை-யால், மகிழ்வாக இருந்த அந்நேரம் மன்மதன் கலகம் செய்வதற்கு உரிய நேரமாக மாறிவிட்டது.

சொல்அளவில் 'அம்புயப்போது குமுதப்போது ஆயிற்று' என்ற தொடரில் தாமரைப்பூ குமுதப்பூ ஆயிற்று எனப் பூக்களுள் ஓர்இனப்பூ பிறிது ஓர்இனப்பூ ஆயிற்று என்றல் சாதிக்குச் சாதியோடு விரோதச் சிலேடை.]

**நாடுஅறிய மேல்நாள் நடந்ததுஅல; இன்றுஉளதாய்ப்**
**பீடுஅழிய வந்ததற்கு என்பேசுகேன்? - தாடகைஎன்-**
**றாளை உயிர்உண்டான் அழுந்தூரன் வெற்புஇளமான்**
**காளை உயிர்உண்ட கதை. (348)**

(இ-ள்) தாடகை என்பாள் உயிரை வாளியினால் உண்ட திருவழுந்தூர் மாயோன் வெற்பினில், இளைய மான் முதிய காளையின் அறிவை உண்டது என நீ கூறிய கதை மேல்நாள் நாடு அறிய நிகழ்ந்தது ஒன்றுஅன்றுஆகியும், அஃது இன்று உன்னிடத்து உளதாகி உனது பெருமை அழிய வந்த துன்பத்திற்கு யான் பேசுவது என் என்றவாறு.

இதனுள் 'இளையமான் முதிய காளை அறிவை உண்டது' என்றதனால் சாதிக்குக் கிரியையோடே விரோதம். உயிர் என்றது ஈண்டு அறிவு. இளமான் - தலைவி. காளை - தலைவன். 'முதிய' என்றது எதிர்மறைச் சொல்எச்சம்.

பகுதி - பாங்கற்கூட்டம்; துறை - பாங்கன் கழறல்.

[தன்அறிவு தலைவிவனப்பில் ஈடுபட்ட செய்தியைத் தலைவன் பாங்கனிடம் கூறப் பாங்கன் கூறியது இது. 'இளைய மான்' என்ற தலைவியின் அடைமொழிக்கு ஏற்ப முதிய காளை எனத் தலைவனுக்கு ஏற்ற அடை வருவித்து உரைக்கப்பட்டது. அச்சொல் பாடலில் காணப்படாமல் வருவித்து உரைக்கப்படுதல் எச்சம் எனப்படும்.
காளையின் உயிரை உண்ணும் செயல் மான்இனத்திற்கு இயல்பாக அமைவது ஒன்று அன்று ஆதலின் இப்பாடல் சாதிக்குக் கிரியையோடு விரோதச் சிலேடை அணி.]

**மாகரு டனடுங்க மம்மர் தருவதன**
**யோக மயிலினுரத் தோங்கி - யாக**
**நுடங்கு முடன்பிறப்பை நோக்கா தொறுக்கத்**
**தொடங்கும் எமை என்செயாதோ? (349)**

இதுவும்அது.
மாகர் உடல் நடுங்க மம்மர் தருவ தனயோகம் மயிலின் உரத்து ஓங்கி, ஆகம் நுடங்கும் உடன்பிறப்பை நோக்காது ஒறுக்கத் தொடங்கும்; எமை என் செயாதோ

(இ-ள்) "துறக்கத்துஉள்ளாரும் உடல் நடுக்கமுறும்படிக்கு அவர்உள்ளத்திற்கு மருந்து பிறிது இல்லாத தீராப்பிணியைக் கொடுப்பனவாகிய முலையினது கூட்டம் மயிலினது சாயல் போலும் சாயலை உடையாள் மருமத்தின்கண்ணே புடைத்து உயர்ந்து தம்மைத் தாங்கி உடல் வளையும் உடன்பிறப்பாகிய இடையை உடன்பிறப்பு என்று உட்கொள்ளாது கொல்வதைத் தொடங்காநிற்கும்; ஆகையால், நெஞ்சமே! நம்மை என் செய்யாது?" என்றவாறு. எனவே, மா கருடன் நடுங்க - பெரிய கருடனும் உடல் நடுங்க. மம்மர் தருவது - வருத்தத்தைத் தருவது. அனயோகம் மயிலின் உரத்து ஓங்கி - அன்னத்தின் கூட்டம் மயிலின் உரத்தோடும் பெருத்து என்பதனால், இதுவும் சாதிக்குக் கிரியையோடே விரோதம் ஆயிற்று.

பகுதி - இயற்கைப் புணர்ச்சி; துறை - தகை அணங்குஉறுத்தல்.

[சிலேடைப் பொருளில், பறவைகளுக்கு அரசாகிய கருடன் நடுங்குமாறு அன்னத்தின்-கூட்டம் மயிலின் படைவகுப்போடும் பெருத்து என்ற தொடரில், பறவைகளுக்கு அரசாகிய கருடனை அன்னம் மயில் என்ற பறவைஇனங்கள் நடுங்கச் செய்தல் என்ற செயல் சாதிக்குக் கிரியையோடு விரோதச் சிலேடையாம். மருமம் - மார்பு.]

**கோபம் பயின்ற விடம்கூர் தாபரம்குறுகத்**
**தாபம் தவிர்ந்து உயிரும் தண்ணென்ற - பூபதிகைத்**
**தூரிகையாலே அமைத்த சொல்தமிழ் மாறன்துடரிக்**
**காரிகைசெவ் வாய்எனவே கண்டு (350)**

(இ-ள்) கோபம் பயின்ற இடம்கூர் தாபரம் குறுகத் தாபம் தவிர்ந்து உயிரும் தண்ணென்ற - இந்திரகோபங்கள் விட்டு நீங்காத இடம் மிகுந்த சோலையைக் குறுகின காலத்து, விரகாக்கினியால் உண்டான எனது வாட்டம் நீங்கி உயிர் தண்ணென்று குளிர்ந்தது. பூபதி கைத் தூரிகையாலே அமைத்த, சொல் தமிழ் மாறன் துடரிக் காரிகை செவ்வாய் எனவே கண்டு நெஞ்சமே! அங்ஙனம் நீங்குதற்கு ஏது யாதெனின், தாமரையை இடவகையாய் உள்ள பிதாமகன் கையினால் தூரியக்கோலை எடுத்து எழுதி உண்டாக்கின வடிவு அழகினை உடையாள் செவ்வாய்க்கு ஒப்பு எனவே கண்டு - என்றவாறு.

'சொற்றமிழ் மாறன் துடரிக்கா' எனக் கூட்டுக. நெஞ்சமே என்னும் எழுவாய் முன்னிலை எச்சம். கோபம் பயின்ற என்பது சினம் விட்டு நீங்காத என்பதாய், 'இடங்கூர் தாபரம்' விடம் கூர் தாபரம் எனத் திரிந்து, தாபரம் என்பது ஆகுபெயராய்ச் சினம் மிகுந்த நச்சுமாமரச் சோலையை முடுக வாட்டம் தீர்ந்து உயிர் தண்ணென்றது எனவே, இது சாதிக்குக் குணத்தோடே விரோதச் சிலேடையாயிற்று.

பகுதி - இடந்தலை, துறை - பொழில் கண்டு மகிழ்தல்.

['துடரிக்கா' என்று கூட்ட இச்செய்யுளில் இடம் இல்லை. ஆகவே துடரி என்ற மலையின்பெயர் ஆகுபெயராய் அதன்கண் உள்ள சோலையைக் குறித்தது எனலாம். நெஞ்சமே! என்ற எழுவாய் இச்செய்யுளில் இடம்பெறாமல் வருவித்து உரைக்கப்பட்டதால், விளிவேற்றுமையில் முன்னிலை ஆக்கப்பட்ட அச்சொல் எஞ்சிநிற்றலின் எச்சம் எனப்பட்டது. தாபரம் - தாவரம். அஃது ஆகுபெயராய் மரங்களை உடைய சோலையை உணர்த்திற்று. கோபம் பயின்ற விடம் கூர் தாபரம் - சினம் மிகுந்த நச்சுமாமரச்சோலை. 'நச்சுமாமரச் சோலையை அணுகவே, வாட்டம் தீர உயிர் குளிர்ந்தது' என்ற சொல் பற்றிய சிலேடையால் கொள்ளப்பட்ட பொருளில் விடம் என்ற இனம் குளிர்ச்சியைத் தருதல் சாதிக்குக் குணத்தோடு விரோதச் சிலேடை ஆயிற்று. பூபதி - தாமரைப்பூவைத் தன் பிறப்பிடமாகக் கொண்ட பிரமன். விரகாக்கினி - பிரிதலால் ஏற்பட்ட வெப்பம். கோபம் - செந்நிறமான இந்திரகோபப் பூச்சி. தூரியக்கோல் - எழுதுகோல், ஓவியம் தீட்டும் கருவி.]

**கார்க்கடற்பார் வாழ்வுபெறக் காரிதரும் கண்ணன்உளத்து**
**ஏர்க்கருணைக் கேசரியாய் எய்துஉருவைப் - போர்க்கழியா**
**மெய்யன் நன்கு பேரன்என்ப, மெய்உணர்ந்த ஆரணங்கள்**
**ஐயமின்றியே தெளிந்துளார். (351)**

இது சாதிக்குப் பொருளோடே விரோதச் சிலேடை.

(இ-ள்) கரிய கடல் சூழ்ந்த பூமியின்கண் உள்ளார் முத்தியாகிய செல்வத்தை எய்தக் காரியார் பயந்து அளித்த, கண்ணபிரான் திருஉள்ளத்து அழகிய கருணைக்கு இணையாய் வந்த உருவத்தைப் போர்க்கழி ஆகிய சத்திய வாய்மை உடையோனுக்கு நன்கு மதிக்கும் பேரன் என்று கூறுவர், சித்து அசித்துஈசுரங்களின் உண்மை உணர்ந்த சுருதியின் உண்மையைச் சந்தயம் அறத் தெளிந்துளார் என்றவாறு.

இதனுள், கண்ணபிரான் அழகிய திருஉள்ளக் கருணையைப் பெற்றுப் பரசமயக் களியானைகட்கு ஒருசிங்கஏறு ஆகிய சொரூபத்தை நல்ல குபேரன் என்ப எனத் திரிந்தமையால் இது சாதிக்குப் பொருளோடே விரோதச் சிலேடையாயிற்று.

திணை - பாடாண்; துறை - முனிவர்வாழ்த்து.

[கண்ணன் உளத்து ஏர்க்கருணைக்கே சரியாய் எய்து உரு - கிருஷ்ணத்ருஷ்ணாதத்வ ஜன்மம் (ஆசா. இத. 77). போர்க்கழி ஆம் மெய்யன் - போரில் பகைவர்களை

அழிக்கின்ற சத்தியவாய்மைஉடையோன் எனவே, சத்தியவாய்மையன் என்ற இயற்பெயரும் போர்க்கழி என்ற சிறப்புப்பெயரும் உடையவன் மாறனின் தந்தைவழிப் பாட்டன் என்பது. சொல்அமைப்பில், 'கேசரியாய் எய்து உருவைக் குபேரன் என்ப' என்ற தொடர் சிங்கத்தைக் குபேரன் என்ப என்ற பொருள் தருதலின், சிங்கம் என்ற அஃறிணைச்சாதிப்பெயர் குபேரன் என்ற உயர்திணைத்தெய்வப்பொருளாகக் கூறப்படுதற்கண் உள்ள முரண்பாட்டைக் கருத இது சாதிக்குப் பொருளோடே விரோதச் சிலேடை.]

**பரவாதியையே பணித்துஅருள் பாமாறன்**
**உரவா வரும் அருகர்க்கு உண்மை - கரவாது**
**கோட்டுமத மால்யானை கூறிய மால் வீட்டுஇன்பம்**
**காட்டுவன்மன்னோ புலவீர்காள்! (352)**

என்பது நித்தர் முத்தர் முதலாயுள்ள பத்தரும் பெத்தரும் ஏத்தும் பரமபதநாதனைப் புகழ்ந்திடும் திருவாய்மொழி ஆகிய பாவை உடைய மாறன், ஞான திண்ணியனாய்த் தன்னிடத்து வந்து அடைந்தவர்க்குப் பொய்இன்றித் திருமால்பதத்தில் உள்ள பேரின்பத்தை உண்டாக்கித் தருவன் புலவீர்காள் என்றவாறு.

எனவே, நீரும் அவனையே சரணாகதிஎனப் பற்றும்; உமக்கும் முத்தி எய்தலாம் என்பது பயன். இதனுள் பரவாதியைப் பணித்தருள் பாமாறன் - அந்நிய சமயத்தைத் தாழ்த்து அருளப்பட்ட திருவாய்மொழி என்னும் பாடலை உடைய காரிமாறப்பிரான். உரவா வரும் அருகர்க்கு - தன்னோடு வாதுக்குத் திண்ணியராய் வரும், அருகனைத் தெய்வமாக உடையார்க்கு. யானை 'மூலமே' என்று அழைப்ப வந்து அருள்செய் நாராயணன் வீட்டின்பத்தைத் தருவன் எனவே, கிரியைக்குக் கிரியையோடே விரோதச் சிலேடை ஆயிற்று. திணை - வாகை; துறை - அறிவன்வாகை.

[பரவு ஆதி - போற்றப்படும் பரமபதநாதன். பணித்தல் - புகழ்ந்து கூறுதல், தாழச் செய்தல். உரவா வரும் அருகர் - ஞானமாகிய உறுதி உடையவராய்த் தன்னிடத்து வரும் நெருங்கிய அடியவர், வாதுக்குத் திண்ணியராய் வரும் அருக மதத்தவர். பர வாதி - வேற்றுமதம் பற்றி வாதிடுவோர். தன்னோடு வாதுபோர் புரிய வரும் அருகர்க்கு மாறன் திருமாலின் வீட்டின்பத்தை நல்குவான் என்புழி, கிரியைக்குக் கிரியையோடு விரோதச்சிலேடை நிகழ்ந்தது. யானை அழைத்த அளவில் வீட்டுலகிலிருந்து அதனைக் காக்க நிலஉலகம் வந்த திருமால், அடியவர்களைக் காக்க வீட்டுலகிற்கு அழைத்துச் செல்வன் என்று கூறியது. சொல்அளவில் முற்கூறப்பட்ட செயலோடு பிற்கூறப்படும் செயல் மாறுபடுதலால் இது கிரியைக்குக் கிரியையோடே விரோதச் சிலேடை.]

**இங்கும் உளனோஎனச் சொன்ன தானவனைப்**
**பொங்கி அடல்ஆள்அரியாய்ப் போர்வென்றான் - சிங்கவரைக்கு**
**அன்புஉற்று இருப்பான்; எதிர்கொண்ட சுரர்இடத்து**
**இன்புஉற்று இருந்த வளன் என். (353)**

என்பது 'மதலையே! நீ எங்கும் உளன் என்ற மாயோன் இத்தூணிலும் உளனோ?' என்று கூறிய இரணியாசுரன்முன் அடல்ஆளரியாய்த் தோன்றி அவனோடு பொருது அவனை வென்று கொன்றோன், சிங்காத்திரியிடத்து அன்புற்று இருப்போன். அவனை நாவே! தன்னை எதிர்கொண்ட தேவர்களிடத்து இன்புற்று இருந்த வளத்தை உடையவன் என்று கூறுவாயாக என்றவாறு.

இதனுள், 'எதிர்கொண்டசுரரிடத்து' என்பதனைத் தன்னோடு மாற்றம் கொண்ட அசுரனைக் கொன்றவன் மாறுகொண்ட அசுரரிடத்து இன்பமுற்று இருந்த

வளன் யாதுதான்? எனக் கிரியைக்குக் குணத்தோடே விரோதமான சிலேடை-யாயிற்று. இப்பொருட்குச் செய்த என்னும் பெயரெச்சத்தின் ஈற்றின் அகரம் செய்யுள்விகாரத்தால் தொக்கது. என்னை? 'புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை' (குறள்-59) என்பது போலக் கொள்க. துறை - கடவுள்வாழ்த்து.

[ஆளரி - நரசிங்கம். சிங்காத்திரி - சிங்கவேள்குன்றம்; சிம்மாசலமுமாம். இவற்றுள் சிங்கவேள்குன்றம் ஆழ்வாரால் மங்களாசாசனம் செய்யப்பெற்றது.

வளன் - வளத்தை உடையவன். என் - என்று கூறுவாயாக, யாது காரணம்பற்றி. சொல்லளவில் 'எதிர்கொண்ட அசுரரிடத்து' எனப்பிரித்துத் தன்னோடு மாறுபாடு கொண்ட அசுரர்களிடத்து என்று பொருள்கொண்டு, 'அசுரன் ஒருவனைக் கொன்ற எம்பெருமான், பகையுணர்வுகொண்ட அசுரரிடத்து இன்புற்றிருந்த மனமகிழ்வை உடையனாதல் யாது காரணம் பற்றி?' என்று கூறுமிடத்துப் பகைவனை அழிப்பவன், பகைவரிடத்து மகிழ்வோடு இருத்தல் குணத்திற்கும் செயலுக்கும் பொருத்தமின்றி இருத்தலின் இது கிரியைக்குக் குணத்தோடே விரோதமான சிலேடை. அடியவர்களின் பகைவரை அழித்தல் திருமாலுடைய பண்பு.
'எதிர்கொண்ட அசுரரிடத்து' என்ற தொடரில் கொண்ட என்ற பெயரெச்சத்து இறுதியில் உள்ள அகரம் செய்யுள்விகாரத்தால் தொக 'எதிர்கொண்டசுரரிடத்து' என்று செய்யுள்-தொடர் அமைந்ததாகக் கோடல் வேண்டும். 'புகழ்புரிந்த இல்லிலோர்க்கு' (குறள்-59) என்பது புரிந்த என்பதன் அகரம் தொகப் 'புகழ்புரிந்தில்லிலோர்க்கு' என்று ஆகிய-வாறு போல இதனையும் கோடல் வேண்டும் என்பர் உரையாசிரியர்.]

**கருத்துஅகலாக் கண்ணன்எனக் காவல் அருள்வானை**
**உருத்திரனாம் என்பதனோடு, ஒண்மைப் - பொருள்பரத**
**கண்டத்தாகிச் சிறந்த கங்கைக்கோடு உற்றஇடக்**
**கண்டத்தான் என்னும் உலகம்.** (354)

என்பது திருவுள்ளத்தை விட்டுநீங்காத கண்ணோட்டம் உடையான் என்று சொல்லும்படிக்கு உலகஉயிர்களைக் காவல்செய்வானைத் திவ்விய ஆத்தும சொரூபம் அழிவில்லான் (உரு திரன் ஆம்) என்பதோடு, நல்ல பயனைத் தரும் பரதகண்டத்ததாகி அழகு எய்திய கங்கைக்கரையை உற்ற இடமாகிய கண்டத்-தானும் ஆம் என்று உலகம் கூறாநிற்கும் என்றவாறு.
'கங்கைக்கோடு உற்ற இடக்கண்டம்' என்பது 'கங்கைக்கரைக்கண்டம்' என்னும் திருப்பதி. "ஆதலால் அங்ஙனம் கண்ணோட்டமுடன் காவல் செய்வானை நெஞ்சமே! என்னுடன் கூடிப் பற்றுவாயாக; நமக்கும் முத்தி எய்தும்" என்பது பயன். ஒண்மை - நன்மை. பொருள் - பயன்.
இனி, 'கண்ணன் எனக் காவல் அருள்வானை உருத்திரனாம் என்பதனோடு கம் கைக்கு ஓடுஉற்ற விடக்கண்டத்தான் என்னும் உலகம்' எனப்பிரித்து அமைத்துக் கண்ணன் என்னும் திருநாமம் உடையான் என்று உலகம் கூறும்-படிக்கு உயிர்களைக் காவல் செய்வானைச் சங்காரமூர்த்தி என்பதனோடும் பிரமசிரத்தை இரத்தற்குக் கையில் ஓடாக உடையனுமாகி நஞ்சை அணிந்த மிடற்றை உடையனுமாம் என்று உலகம் கூறாநிற்கும் என்னும் பொருள்-தோன்றுதலால், இது கிரியைக்குப் பொருளோடே விரோதச் சிலேடை ஆயிற்று.
உருத்திரன் - சொரூபம் அழிவில்லாதவன், சங்கார மூர்த்தி. கம் - சிரம். கைக்கு ஓடு உற்ற - கைக்கு ஓடாக எய்திய. இடக்கண்டத்தான் - இடமாகிய கண்டம் என்னும் திருப்பதியான். விடக்கண்டத்தான் - நஞ்சை அணிந்த மிடற்றான் எனவும் கொள்க.
திணை - பாடாண்; துறை - ஓம்படை.

[சங்கார மூர்த்தி - அழித்தற் கடவுள். காத்தற்கடவுளாகிய கண்ணனைச் சிலேடைபற்றிய சொற்களில் கையில் ஓடு ஏந்தி, விடம் அணிந்த மிடற்றினை உடைய அழித்தற்-கடவுளாகிய உருத்திரனாம் என்று கூறியமை, காத்தலாகிய செயலுக்கும் அதற்கு உரிய பொருளாகக் கூறப்பட்ட உருத்திரன் என்னும் அழித்தற்கடவுளுக்கும் முரண்பாடு தோன்ற இருத்தலின் இது கிரியைக்குப் பொருளோடே விரோதச் சிலேடை. கங்கைக்-கரைக் கண்டம் - 108 திருப்பதிகளுள் ஒன்று; 'கண்டங்கடிநகர்' என்று பெரியாழ்வாரால் பாடப்பட்டது.]

**என்என்று அறியேன் இயல்தமிழ்தேர் காரிதரும்**
**மன்னன்தனை உலகம் மாறன்என - முன்உரைத்துஓர்**
**வன்புலனை ஒன்றா மதியா முனிவரிடத்து**
**அன்புடையான் என்னும் அது.** (355)

(இ-ள்) காரியார் பெற்ற இளவரசை மாறன் என்னும் பிள்ளைத்திருநாமத்தை உடையான் என்று உலகின் முதலே கூறுவர். அதனோடும் வலிய புலன்களை ஒருபொருளாக மனம் கொள்ளாத இருடிகளிடத்து அன்பு உடையான் என்றும் புகலுவர் என்பது போந்த பொருள்.

இனி இதனுள் 'அது' என நின்றதனோடும் 'அன்றியும்' என்பதனைச் சொல்லெச்சமாக விரித்து, அஃது அன்றியும் எனக் கூட்டிக் காரியார் பெற்ற இளவரசை உலகம் யாவரோடும் மாற்றம் கொள்ளும் குணத்தை உடையான் என்று முதலே கூறுவதோடு, மனத்தை அது சென்ற இடத்துச் செலவிடாது அப்புலத்தின் நன்மைதீமைகளை ஆராய்ந்து தீமைகளை நீக்கி நல்லதன்கண் செலுத்தும் வலிய அறிவினை உடையோரையும் ஒரு பொருளாக மதித்திடாது, கோபிக்கப்பட்டவரிடத்தும் அன்புடையானாகி இருப்பன் என்றும் கூறும் அஃது யாது என்று அறியேன் எனக் கூறியதாய்ப் பொருள் கொள்ளக் கிடந்தமையால், இது குணத்திற்குக் குணத்தோடே விரோதச் சிலேடை ஆயிற்று.

திணை - வாகை; துறை - சால்புமுல்லை.

['உலகம் மாறன் என முன் உரைத்து அது அன்றியும் அன்புடையான் என்னும்' என்று கூட்டிப் பொருள்செய்க. 'அன்றியும்' என்ற சொல் வருவித்து உரைக்கப்பட்டது. ஓர் - ஆராய்கின்ற. அஃதாவது மனத்தை அது சென்ற இடத்துச் செலவிடாது அப்புலத்தின் நன்மை தீமைகளை ஆராய்ந்து தீமைகளை நீக்கி நல்லதன்கண் செலுத்தும் என்பது. வன்புலன் - அன்மொழித்தொகையாய் வலிய அறிவுடையாரை உணர்த்திற்று. ஒன்றா மதியாத - ஒருபொருளாக மனம்கொள்ளாத, ஒருபொருளாக மதித்திடாத. முனிவர் - இருடியர், கோபிக்கப்பட்டவர்.

காரியார் பெற்ற இளவரசை உலகம் மாறன் என்ற இயற்பெயரை உடையவன் என்று கூறுவதோடு, புலன்களை மதியாது அடக்கிய முனிவரிடத்து அன்புடையவன் என்றும் கூறும் என்பது நேரிய பொருள்.

சொல்அமைப்பை நோக்கும்போது, உலகம் காரிதரும் இளவரசை யாவரோடும் மாறு-படும் (பகைக்கும்) குணத்தை உடையவன் என்று கூறுவதனோடு, அறிவுடையோரால் மதிக்கப்படாது கோபிக்கப்பட்டவரிடத்தும் அன்புடையவனாய் இருப்பன் என்று கூறும் என்ற குறிப்புப்பொருளும் இப்பாடற்கண் அடங்கியிருக்கிறது. யாவரோடும் பகைப்-பவன் என்று முதலில் கூறிப் பின் கோபிக்கப்பட்டவரிடத்தும் அன்புடையவன் என்று கூறுதல் முதலில் சொல்லிய குணத்தோடு பின்னர்க் குறிப்பிட்ட குணம் மாறுபடுதலின், இது சொல்அமைப்பில் குணத்திற்குக் குணத்தோடே விரோதச் சிலேடை.]

**புனம்மலி தேமாவின் புணர்சினையின் தண்மை**
**தினம்அகலின் சேர்ந்தாரைக் கொல்லி - எனலாகும்**

**நாடிப் பரனைஉணர் நாவீறன் தண்சிலம்பில்**
**கூடிப் பிரிந்தார் குணம் (356)**

என்பது. "நண்பனே! ஞானத்தால் ஆராய்ந்து 'சீமந் நாராயணனே பரதத்துவம்' என உட்கொண்ட நாவீறுஉடைய பிரான் குளிர்ந்த மலைப்பக்கத்தில் புனத்தின்கண்ணே மிகுந்த பெண்பாற்கடவுளாகிய திருமகளுடைய உபய உறுப்பாகிய முலைகளின் தண்ணென்ற குணம் தம்மைப் பரிசித்த காலத்துத் தண்ணென்னும்; சேய்த்து ஆகிய காலத்துப் போதுதோறும் நினைவையும் சுடும் நெருப்பாயும் நின்றன ஆதலான் வாடினேன்" என்றவாறு.

தேமா - கடவுளாகிய திருமகள். புணர்சினை - உபயமுலை.

பகுதி - பாங்கற்கூட்டம். துறை - உற்றது உரைத்தல்.

இதனுள், புனம் மலி தேமாவின் புணர்சினையின் தண்மை ... **என்பது** புனத்தின்கண் நெருங்கவைத்த தேனை உடைய மாமரங்களின் **நெருங்கிய** கொம்பரில் சிவந்த தளிர்களின் குளிர்ச்சி தன்னைப் பரிசித்த **காலத்துத்** தண்ணென்னும்; சேய்த்தாய் நீங்கினகாலத்து நினைவோடும் பார்த்த கண்ணிற்கு நெருப்பாய்த் தோன்றிப் பயங்கரமாகி உள்ளத்தையும் சுடாநின்றது எனப் பிறிதும் ஒருபொருள் தோன்றலான் குணத்திற்குப் பொருளோடு விரோதச் சிலேடை ஆயிற்று. சேர்ந்தாரைக் கொல்லி - நெருப்பு. சினை, தினம் - ஆகுபெயர். நண்பனே என்னும் எழுவாய் முன்னிலையும், வைத்த தேன் என்பது முதலாக வாடினேன் என்பது ஈறாய சொற்களும் எஞ்சி விரிந்தன. இதன் பொருளுள் மாட்டுஉறுப்பாய் எச்சமும் கூடின.

[புனம் மலி தே மாவின் புணர்சினையின் குணம் கூடித் தண்மை, பிரிந்தார் அகலின் போது சேர்ந்தாரைக் கொல்லி எனலாகும் - புனத்தின்கண்ணே மிகுந்த தெய்வத்தன்மை பொருந்திய திருமகளின் ஈருறுப்பாகிய முலைகளின் பண்பு தம்மைப் பரிசித்தால் தண்ணென்னும், தம்மைப் பிரிந்தவராய் நீங்கின் பொழுதுதோறும் சுடும் தீ எனலாகும் என மாட்டுறுப்பாய்ப் பொருள்செய்க. நண்பனே - தோன்றா எழுவாய். நண்பன் என்ற படர்க்கைச்சொல் விளிவேற்றுமையில் முன்னிலை ஆதலின் எழுவாய்முன்னிலை என்றார்.

புனம் மலி தேமாவின் புணர்சினையின் தண்மை - புனத்தின்கண் நெருங்க வைத்த தேனை உடைய மாமரங்களின் நெருங்கிய கொம்பரின் சிவந்த தளிர்களின் குளிர்ச்சி. கூடித் தண்மை எனலாகும் - தம்மைப் பரிசித்த காலத்துத் தண்ணென்னும். பிரிந்தார் அகலின் குணம் சேர்ந்தாரைக் கொல்லி எனலாகும் - பிரிந்து சேய்மைக்கண் நீங்கியகாலத்து அதன் பண்பு நெருப்பைப் போலச் சுடும். சினை என்பது கிளைக்கண் உள்ள தளிரையும் தினம் என்பது பொழுதையும் ஆகுபெயராய் உணர்த்தின. வைத்த, சிவந்த தளிர் முதலிய சொற்கள் செய்யுளில் இடம்பெறாது உரையில் எச்சமாக விரிக்கப்பட்டன. தண்மைக்குணம் ஒரேபொருளிடத்தில் வெப்பமாக மாறுவதாகக் கூறுவதால் இது குணத்திற்குப் பொருளோடு விரோதச் சிலேடை யாயிற்று.]

**நாடகத்தை ஈறாய் நயந்ததமிழ் நன்குஉணர்ந்தோன்**
**ஆடகத்தைப் பித்தளை என்று ஆக்கியதூஉம் - ஏடுஅவிழ்பூந்**
**தாமக்குழல் இவளே; தண்டமிழ் மாறன்சிலம்பில்**
**ஏமப் பொழிலும் இது. (357)**

என்பது, இயல் முதலாக நாடகம் ஈறாக உலகம் விரும்பப்பட்ட தமிழ் மூன்றினையும் நன்றாய் அறிந்தோன் வெற்றியை உடைய புத்தியை 'மையல் அளைவாயாக' என்று கற்பித்ததும், இதழ் விரிந்த பூமாலையைச் சூடின குழலை உடைய இவளே; தலைவன் கூறிய தண்தமிழ் மாறன்வரையில் இன்பத்திற்கு இடம் கொடுத்த சோலையும் இஃதே, பிறிது இல்லை என்றவாறு.

ஏகாரம் தேற்றம். 'தலைவன் கூறிய' என்பது எச்சம். இதனுள் 'ஆடகத்தைப் பித்தளையாக்கிற்று' என்பதனால் பொருட்குப் பொருளோடே விரோதச் சிலேடை ஆயிற்று.
பகுதி - பாங்கற்கூட்டம்; துறை - குறிவழிச் சென்ற பாங்கன் தலைவியைக் காண்டல்.

[ஆடுஅகம் - வெற்றியை உடைய புத்தி. பித்து அளை - காமமயக்கத்தைப் பொருந்துவாயாக. சொல்லமைப்பில் ஆடகத்தை(பொன்னை)ப் பித்தளை ஆக்குதல் என்ற சிலேடைப்பொருட்கும் இடம் அமைந்திருத்தல் பொருட்குப் பொருளோடு விரோதச் சிலேடை.]

ஆகப் பத்தும் முன்னர்ச் சிலேடித்தவற்றைப் பின்னரும் விரோதமாகச் சிலேடித்த சிலேடை அடைவே வந்தமை காண்க.

பொருளோடே கிரியைக்கு விரோதமாக வந்த சிலேடை வேறுபாடு வருமாறு:

**திருமகிழ் மாலையனாம் என்பர்; மெய்யைச் சிறைப்படுத்திப்**
**பொருதளை கட்டுண்டு அறியான். அளியுறும் போதன் என்பார்;**
**உருவளர் பாரி படைத்து அறியான். ஒண்புனிதன் என்பார்;**
**அருள்புரி வாய்வைத்து அருந்தான், மின்சொர்க்கத்து அமிர்தினையே. (358)**

இதனுள், 'திருமகிழ்மாலையனாம் என்பர்' என்பது திருமகள் விரும்பும் இயல்பை உடைய திருமாலுக்கும், அழகிய வகுளமாலிகையினை உடைய மாறனுக்கும் பெயராம் என்று கூறுவர் பெரியோர். திருமால் திருமேனியை ஒளித்து உறியினை எதிர்ந்து தயிரைக் களவு கண்டு அறிவான்; மாறன் ஞானத்தைத் தனக்கு அரண் ஆக்கிக்கொண்டு தன்னோடு பூசல் பெருக்கும் பாசத்தளையில் கட்டுப்பட்டு அறியான் என்றும்,
'அளியுறும் போதன் என்பார்' என்பது வண்டுகள் சென்று முடுகும் பூவில் உள்ள பிரமனுக்கும் தண்ணளி மிக்க ஞானத்தை உடைய மாறனுக்கும் பேர். பிரமன் வடிவு அகன்ற பூமியைப் படைத்து அறிவன்; மாறன் காந்தி தழையா-நின்ற இல்லறக்கிழத்தியைக் கொண்டுஅறியான் என்றும்,
'ஒண்புனிதன் என்பார்' என்பது நல்ல இந்திரனுக்கும் ஒள்ளிய ஞானத்தோடே கூடிய பவித்திரவான் ஆகிய மாறனுக்கும் பேர். இந்திரன் திருமால் கருணை புரிந்து கொடுப்ப ஒளிரும் சுவர்க்கத்து இருக்கும் அமிர்தினை வாய்வைத்து உண்டுஅறிவான்; மாறன் மின்போலும் இடையை உடைய உடையநங்கை இரங்கிக் கொடுக்கும் திருமுலைப்பாலினைத் திருப்பவளவாய்வைத்து உண்டு அறியான் என்றும் கூறியவாறாக உணர்க.
இங்ஙனம் சிலேடை நிகழ்தலான் இதுவும் பொருளோடே கிரியைக்கு விரோதமாக வந்த சிலேடை வேறுபாடு எனக்கொள்க. இன்னும் வேறுபட வருவன எல்லாம் பொருள்நோக்கம் அறிந்துகொள்க. அவை எல்லாம் ஈண்டு உரைப்பின் பெருகும்.
திணை - வாகை; துறை - தாபத வாகை.

[மகிழ் - விருப்பம், மகிழம்பூ. சிறைப்படுத்து - ஒளித்து, அரண் ஆக்கிக்கொண்டு. அளை - தயிர், பொரு தளை - பூசல் பெருக்கும் பாசத்தளை. அளி - வண்டு, கருணை. போதன் - பூவில் உள்ளவன், ஞானம் உடையவன். பாரி - உலகம், மனைவி. புனிதன் - இந்திரன், தூயவன். மின் - ஒளி வீசுதல், உடையநங்கையார். சொர்க்கம் - தேவர்உலகம், திருமுலை. மாறனைத் திருமாலுக்கும் பிரமனுக்கும் இந்திரனுக்கும் ஒப்பாகக் கூறி அவர்களுடைய செயல்கள் இவன்மாட்டு நிகழவில்லை என்பதனைச் சிலேடை வாய்பாட்டால் விலக்குதலின், இது பொருளோடு கிரியைக்கு விரோதமாக வந்த சிலேடை வேறுபாடாம்.] [70]

அவிரோதச் சிலேடை

**156. அவிரோதத்து அறைவது அவிரோதம். [71]**

(எ-ன்) அவிரோதச் சிலேடை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) அவிரோதச் சிலேடை என்பது முன்னர்ச் சிலேடித்த பொருள் பின்னரும் விரோதியாமல் சிலேடிப்பனவாய்க் கூறுவதாம் எ-று.

**குருகை இடம் கொண்டான், மெய்க் கோலம்உறு துப்பான்,**
**பெருமனத்தான், இலஞ்சி பெற்றோன், - ஒருபுனிதன்,**
**நாக தருநிழலான், நன்னர்உறு மாதவன், பொன்**
**னாகம் அலம்வரும் நண்பான் (359)**

(இ-ள்) குருகை இடம் கொண்டான் மெய்க்கோலம் உறு துப்பான் - திருமால் பாஞ்சசன்னியத்தை இடக்கையில் தரித்தான்; அழிவில்லாத வராகரூபியாய்ப் பூமிதேவி தோன்றுதற்குப் பற்றுக்கோடு ஆயினான். மாறன் குருகாபுரியை இருப்பிடமாகப் பெற்றுள்ளான்; திருமேனியினது அழகுமிக்க பவளம் போல்வான்.

பெரும் அனத்தான் இலஞ்சி பெற்றோன் - பிரமன் பெருமை எய்தும் அன்னவாகனத்தை உடையவன்; மாயோன் திருஉந்தியால் பெறப்பட்டவன். பெருமனத்தான் இலஞ்சி பெற்றோன் - மாறன் ஞானம் மிகுந்த மனத்தை உடையான்; மகிழமாலிகையை உடையவன்.

ஒரு புனிதன் நாகதரு நிழலான் - இந்திரன் புனிதன் என்னும் ஒரு பெயரை உடையவன்; சுவர்க்கத்தில் தருவினது நிழலை உடையவன். மாறன் ஒப்பற்ற பவித்திரவான்; சேடாவதாரமான திருப்புளிநீழலை உடையான்.

ஆதவன் நன்னர்உறும் பொன்நாகம் அலம்வரும் நண்பான் - ஆதித்தன் நன்மை உறும் மேருமலையை அன்போடு வலம்வருவான்.

நன்னர் உறு மாதவன் பொன் ஆகம் அலம்வரும் நண்பான் - முத்தியைப் பெறும் பெரிய தவத்தை உடைய மாறன் பெரியபிராட்டியார் திருவுளத்தில் நிறைவு எய்தும் அன்பினை உடையான். ஆதலால் அவன் திருவடியைப் பற்றுவாரும் முத்திபெறும் தன்மைஉடையராவர் என்பது பயன்.

இதனுள், கோலம் - பன்றியும் அழகும். துப்பு - பற்றுக்கோடும் பவளமும். இலஞ்சி - கொப்பூழும் வகுளமாலிகையும். நாகதரு - சுவர்க்கத்துக் கற்பகத்தருவும் ஆதிசேடன் அவதாரமான திருப்புளியாழ்வாரும். நன்னர் - மங்கலமும் முத்தியும். நன்மை முத்தியைக் குறித்தல் ஆகுபெயர். ஆகம் - திருவுளம். அலம்வரல் - சுற்றுதலும், நிறைவுஎய்துதலும். இஃது அவிரோதச் சிலேடை. துறை - கடவுள்வாழ்த்து.

[சிலேடைப்பொருளான் ஒரேசொற்றொடர் இருவருக்குப் பொருந்துதல் அவிரோதச்சிலேடை.]

**அந்தணர் அறைந்த உரையினைச் செவிக்கொண்டுஅகன்அமர்ந்து அணிதிகழ்**
**அரையின்**
**சுந்தரப் பீதாம்பரத்தினை நெகிழ்த்துச் சுற்றுவிட்டுஅதன்பின் ஓர்வெண்பட்டு**
**இந்துவின் எறிப்ப அரைஉடீஇக் கடன்கள்இயற்றி வான்பொருநையுள் படியா**
**உந்தியின் உதித்தோன் எனும்பெயர் பிரமற்கு உண்மையாம் எனும்படிக்கு**
**எழுந்தான். (360)**

திணை - பாடாண்; துறை - மண்ணுமங்கலம்.

[இப்பாடல் குருகாமான்மியம் திருஆராதனைச் சருக்கத்திலுள்ளது.
பிரமன் அந்தணர்கள் கூறிய சொற்களைச் செவிமடுத்து, மனம் மகிழ்ந்து, தன் இடுப்பில் அணிந்திருந்த அழகிய மஞ்சள்நிற ஆடையை விடுத்து அதன் பின்னர் வெள்ளிய பட்டினை இடையைச் சுற்றிக் கச்சமாக அணிந்து நீராடுதற்கு முன்னர்ச் செய்ய வேண்டிய சடங்குகளை முறைப்படி செய்து முடித்துத் தாமிரவருணியாற்றில் மூழ்கி 'உந்தியின் உதித்தோன்' என்ற பெயர் பிரமனுக்கு உரியதே என்று கண்டோர் கூறும்படி மூழ்கிக் கரையேறினான் என்ற இப்பாடலில் 'உந்தியின் உதித்தோன்' என்ற தொடர், திருமால் திருவுந்தியில் தோன்றியவன் என்றும், ஆற்றின் நீர்ச்சுழியினின்றும் வெளிப்பட்டவன் என்றும் இருபொருள்தருதலின் சிலேடை ஆயிற்று.]

**வெம்புலால் கமழ்ந்து உழுபடை வேடுவன் விறல்கண்டு**
**உம்பல் யாவையும் பறந்து வான்குரல் கிளைத்து, ஒசிந்த**
**கொம்பின், மொய்த்து அடர் போதகத்துறு முழைகுறுகித்**
**தும்பியாம் எனப் புலவரால் புணர்பெயர் துணிவார். (361)**

திணை - வாகை; துறை - பேராண்முல்லை.

[இப்பாடல் குருகாமான்மியத்தில் சங்கன் முத்தி பெற்ற சருக்கத்தில் உள்ளது. கொடிய புலால் நாற்றம் வீசும் பகைவர் உடலைத் தாக்கும் படைகளை உடைய வேடுவனுடைய ஆற்றலைக் கண்டு, யானைகள் யாவும் விரைந்து பெரிய குரல் எடுத்துப் பிளிறி, வளைந்த கிளைகளைப் போல ஒன்றை ஒன்று நெருங்கிப் பகைகளை வெல்லும் யானைத்தலைவனாகிய யூதநாதன் பொருந்தியிருக்கும் மலைக்குகையினைச் சேர்ந்து காணப்படுதலால், புலவர்களால் யானைக்குத் தும்பி எனக் காரணம் பற்றி இடப்பட்ட பெயரின் பொருள்பொருத்தத்தைச் சான்றோர் துணிவார்கள்.
'பறந்து வான்குரல் கிளைத்து ஒசிந்த கொம்பின் மொய்த்து அடர்போது அகத்து உறு முழை குறுகி' - பறந்து சென்று பெரிய பூங்கொத்துக்கள் தன்னிடத்துத் தோன்றப் பெற்றதனால் அவற்றின் பாரம் தாங்காமல் வளைந்த கிளையில் மொய்த்துச் செறிந்த பூக்களின் உள்ளே உள்ள துளைகளை அணுகி என வண்டிற்கு ஏற்பச் சிலேடையான் உரைகொள்க. தும்பி - யானை, வண்டு.
யானையைத் தும்பி என்றதன் காரணம் சிலேடையால் கூறப்பட்டவாறு.]

**பாய்கதிர்க் கடவுளும் பனிவெண் திங்களும்**
**சேய்இகந்து இரிதரும் செம்பொன் மாளிகைத்**
**தூயநுண் துகிற்கொடி துவன்றித் தோன்றலால்,**
**காயம் அம்பரம்எனும் வாய்மை காட்டுமே. (362)**

இப்பாடல் குருகாமான்மியத்திலுள்ள நகரவாழ்த்து. இங்ஙனம் வரும் சிலேடை வேறுபாடுகளும் காண்க.

[பரவின கிரணங்களை உடைய சூரியனும் குளிர்ந்த வெள்ளிய சந்திரனும் வெகு தொலைவிலேயே விட்டு நீங்கிச் செல்லும் உயர்ச்சியை உடைய சிறந்த பொன்மயமான மாளிகைகளில் கட்டப்பட்ட தூய்மையான நுண்ணிய துணிக்கொடிகள் வானவெளி எங்கும் நிறைந்து காணப்படுதலால், ஆகாயம் அம்பரம் (துணி) என்று பெயர் பெற்றதன் உண்மைப்பொருள் விளக்கப்பட்டது. அம்பரம் - ஆகாயம், துணி.]

இனி, ஒரு தொடர்ச்சொல் இரண்டு முதலாக ஐந்துபொருள் காட்டுவனவாம் சிலேடைகளும் உள. அவை சொல்லணியினுள் இடைவிடா மடக்கினுள் முந்துறக் காட்டுதும். அவை ஆண்டுக் காண்க. ஈண்டு உரைப்பின் பெருகும். [71]

17-ஆவது சிலேடை முற்றும்.

18-ஆவது பின்வருநிலைஅலங்காரம்

பின்வருநிலைஅணியின் இலக்கணம்

**157. நெறிப்படு செய்யுள்முன் நிலைபெறு சொல்பொருள்**
**மறித்துஉறு பலபுடை வரின் பின்வருநிலை. [72]**

(எ-ன்) வைத்த முறையானே (87) பின்வருநிலை என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) முன்னர்க் கூறிய நெறியே உண்டான செய்யுள்களின் முதலே வரும் சொல்லாயினும் பொருளாயினும் அச்செய்யுள்களின்கண் மீட்டும் பல இடத்தும் வரும்எனின் அது பின்வருநிலை என்னும் அலங்காரமாம் என்றவாறு. [72]

பின்வருநிலை வகைகள்

**158. அதுவே,**
**சொல்பின்வருநிலை பொருட்பின்வருநிலை**
**சொல்பொருள் பின்வருநிலைஎன மூன்றாம். [73]**

(எ-ன்) இஃது அவ்வலங்காரத்தினது விரி உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) சூத்திரத்தானே விளங்கும்.

**மானைப் பொருகயற்கண் மானைக் கமலமலர்**
**மானை புவனமடமானை - மானைப்**
**பரித்த பிறையும் சுடுமோ, பாடகத்தான் தோள்மேல்**
**தரித்த துளபத்தார் தரில்? (363)**

இது சொல்பின்வருநிலை. பாடகம் - திருப்பதி. ஒழிந்த அகலம் உரையிற் கொள்க. திணை - பெண்பாற்கூற்றுப் பெருந்திணை. துறை - நிலவு கண்டு அழுங்கல்.
["பாடகம் என்னும் திருத்தலத்தில் உகந்தருளியிருக்கும் எம்பெருமான் தன் தோள்மேல் சூடிய திருத்துழாய்மாலையை வழங்குவானாயின், தாமரைப்பூவில் வாழும் திருமகளையும் நிலவுலகமடந்தையையும் ஒத்தவளாய் மானை ஒத்த மருட்சியையும் கயல்மீன் போன்ற பிறழ்ச்சியையும் உடைய கண்களை உடைய தலைவியை, மானைத் தன்னிடத்துக் கொண்டிருக்கும் சந்திரனும் சுடுமோ?" என்ற கருத்து அமைந்த இப்பாடலில், மானை என்ற சொல் பலஇடங்களில் பயின்று வந்துள்ளமையால் இது சொல்பின்வருநிலை அணி.]

**மாய்த்தேன், செனனம்; வதைத்தேன், என் வல்வினையை;**
**தேய்த்தேன், அறிவின் சிறுமையினை; - சாய்த்தேன்,**
**நனி வினையாம் கூற்றை - நறையூர் வருமால்**
**பனிமலர்த்தாள் போற்றிப் பணிந்து. (364)**

இதன் பொருளும் உரையிற் கொள்க. இது பொருள்பின்வருநிலை அணி. 'மாய்த்தேன்' என்பதனோடு ஒழிந்த வினைச்சொற்கள் பரியாயமாய்ப் பொருள் கோடலான் என்று அறிக.
திணை - வாகை; துறை - அறிவன்வாகை.
["திருநறையூரிலே உகந்தருளியிருக்கும் திருமாலுடைய குளிர்ந்த மலர் போன்ற திருவடிகளைப் புகழ்ந்து பணிந்து பிறவியினை ஒழித்தேன்; என் கொடிய வினைகளை அழித்தேன்; அறிவின் குறைபாட்டைப் போக்கினேன்; நன்கு செயற்படும் கூற்றுவனைச்

செயலறச் செய்தேன்" என்ற கருத்து அமைந்த இப்பாடலில், மாய்த்தேன் என்ற சொற்பொருளைத் தரும் ஏனைய சொற்களாகிய வதைத்தேன், தேய்த்தேன், சாய்த்தேன் என்ற சொற்கள் வந்துள்ளமை பொருட்பின்வருநிலையாம்.
அறிவன்வாகை - 'புகழ் நுவல முக்காலமும், நிகழ்வு அறிபவன் நிலைஎடுத்து உரைத்தல்' ஆம்.]

**வலம்புரி துவைத்தன; வரம்புஇல் ஆம்பல் நின்று**
**உலம்பின; கரடிகை உலப்புஇல் பேரிகை**
**சிலம்பின; முழவுஉடன் தெழித்தது; எங்கணும்**
**நலம்புரி கின்னரம் நவின்ற, நாதமே. (365)**

இதுவும் அது. இதன் வேறுபாடும் காண்க.

[வலம்புரிகள் ஒலித்தன; எல்லையற்ற ஆம்பல் குழல்கள் ஊதப்பட்டன; கரடிகையும் ஓசைகுறைவற்ற பேரிகைகளும் முழங்கின; எங்கும் முழவு முழங்கிற்று; நன்மையை விரும்பும் கின்னரங்கள் பண்ஒலி எழுப்பின - என்ற கருத்து அமைந்த இப்பாடலில், துவைத்தன என்ற சொல்லின் பொருளையே தரும் உலம்பின, சிலம்பின, தெழித்தது, நவின்ற என்ற சொற்கள் அமைந்திருத்தலின் இது பொருள்பின்வருநிலைஅணி. சென்ற பாடல் ஒரு பொருளின் பல செயல்களைக் குறித்து அமைந்தது. இப்பாடல் பல பொருள்களின் செயல்களைக் குறித்து அமைந்தது. இதுவே இவ்விருபாடலிடை வேறுபாடாம்.]

**மாதர் மாதர்கூர் வாள்அமர் உண்கண், மாநிலத்து**
**மாதர் மாதர்கூர் வண்டு இமிர்அளிய தாமரைப்பூ**
**மாதர் மாதர்கூர் மாலும் வேலையும் என வளர் வான்**
**மாதர் மாதர்கூர் கெழுதகை படைத்த மாண்பினவே. (366)**

இது சொல்பொருள் பின்வருநிலை.

(இ-ள்) இம்மாதராள் விருப்பத்தை மிகுத்த வாள் போன்று அமர் விளைக்கும் கண்களானவை, பூலோகத்து மகளிர் காண விருப்பம் மிகும் வண்டுகள் ஆரவாரிக்கும் தாமரையில் கருணையோடும் கூடிய பெரியபிராட்டி விருப்பம் மிகும் மாயோனும் பாற்கடலும் ஒப்புஎனக் கரிய குணங்களால், ஒளி வளரா-நின்ற பொன்உலகின் அரமகளிர் விருப்பம் மிகு நட்பினை அளிக்கும் பெருமை உடையவாம் என்றவாறு.

பகுதி - சேட்படை; துறை - கண் நயப்பு உரைத்தல். (கோவையார்)

[இப்பாடலில், 'மாதர்' என்ற சொல் மகள் என்ற ஒருமைப்பொருளிலும் மகளிர் என்ற பன்மைப்பொருளிலும் விருப்பம் என்ற பொருளிலும் பலகாலும் பயின்று வந்திருப்பதனால் இது சொல்பொருள் பின்வருநிலையாம். ('சேலனைய சில்லரிய கடை சிவந்து' - சிந்தா. 167 என்ற பாடலின் நச்சினார்க்கினியர் உரையை உட்கொண்டு அமைத்தது இப்பாடல்)] [73]

உவமானப்பொருள் பின்வருநிலை

**159. உவமானப்பொருள் பின்வரு நிலையும்**
**தவல்அருஞ் சிறப்பின் தான்வரல் உளதே. [74]**

(இ-ள்) அப்பின்வருநிலை உவமானப் பொருட்பின்வருநிலை எனவும் வரும் என்றவாறு.

**பொன்அசலம்; வண்கோபுரம் ஆடகசயிலம்**
**மன்னு சிகரம் வடபொருப்பாம்; - நன்னர்**

**உரங்கொள் மதில் மேருஅது ஆகும் - மாயோன்**
**அரங்கம் அணி மாளிகை. (367)**

இஃது உவமானப் பொருள் பின்வருநிலை. இதனுள் அசலம், சயிலம், பொருப்பு, மேரு என்ற பரியாயச்சொல்லால் உவமானப்பொருள் பின்வருநிலை வந்தவாறு காண்க. துறை - நகர்வாழ்த்து.

[பரியாயச்சொல் - ஒரேபொருளில் வரும் பிறிதுஒருசொல். நகர் - கோயில். வியத்தகு செயல்களை உடைய எம்பெருமானுக்குத் திருவரங்கத் திருப்பதியில் அமைந்திருக்கும் அழகிய கோயில் மேருமலை போல்வதாகும். அதன் வளவிய கோபுரங்களும் பொன்மலை போல்வன. அதன் கருவறை உச்சியும் பொன்மலை போல்வது. நல்ல வலிய மதில்களும் வடக்கே அமைந்த மேருமலை போல்வன என்ற கருத்தமைந்த இப்பாடலில், மேருமலையின் பரியாயப்பெயர்கள் ஆகிய பொன்அசலம், ஆடக-சயிலம், வடபொருப்பு என்ற சொற்கள் உவமானமாகப் பயன்படுத்தப்பட்டிருப்பதால் இஃது உவமானப் பொருட்பின்வருநிலை.] [74]

18-ஆவது பின்வருநிலை முற்றும்.

## 19-ஆவது தீபகஅலங்காரம்

### தீபகஅணியின் இலக்கணம்

**160. தொழில் குணம்சாதி பொருள்எனும் இவற்றுஒரு**
**மொழிபுணர் செய்யுளின் முதல்இடை கடைநின்று**
**ஆங்குஅதன் பலபுடை அடைபொருள் விளக்கும்**
**பாங்குறு தீபகம் பன்னிரு பாற்றே. [75]**

(எ-ன்) வைத்த முறையானே (67) தீபகம் என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) தொழில் குணம் சாதி பொருள் என்னும் இவற்றின் ஒன்றைக் காட்டும் மொழி புலவனால் புணர்க்கப்பட்ட செய்யுளில் முதல் இடை கடை என்னும் ஓரிடத்து நின்று, பலஇடத்து நின்ற சொற்களோடும் அடைந்து பொருளை விளக்குவதாய்ச் செய்யும் தன்மையை உடைய தீபகம் பன்னிரண்டு பகுதியை உடைத்து என்றவாறு.

[முதல்நிலைத் தொழில் குணம் சாதி பொருள்நிலைத் தீபகம், இடைநிலைத் தொழில் குணம் சாதி பொருள்நிலைத் தீபகம், கடைநிலைத் தொழில் குணம் சாதி பொருள்-நிலைத் தீபவம் எனத் தீபகம் பன்னிருவகைத்து.]

**ஒழுகும் கயல்கண்நீர், ஒண்தளிர்க்கைச் சங்கம்,**
**மழுகும் பிறைநுதல்வேர், மன்னா; - முழுதும்உணர்ந்து**
**ஆர்வம் தழுவு ஆரணத்தமிழ் செய்ந்நாவீறர்**
**மார்பம் தழுவா மயிற்கு. (368)**

இது முதல்நிலைத் தொழில்தீபகம். இதனுள் 'ஒழுகும்' என முதலே நின்ற நிகழ்காலவினைச்சொல்லைக் கண்ணீர், சங்கம், வேர் என்னும் மூன்று இடத்தும் ஒட்டுக.

திணை - பெண்பால் பெருந்திணை; துறை - கண்டு கைசோர்தல்.

[மயர்வற மதிநலன் பெற்றுச் சான்றோரால் விரும்பிக் கொள்ளப்படும் வேதமாகிய திருவாய்மொழியை அருளிச்செய்த நாவீறன் ஆகிய மாறனுடைய மார்பினைத்

தழுவும் வாய்ப்பினைப் பெறாத ஆண்மயில் போன்ற சாயலை உடைய இத்-தலைவிக்குக் கயல் போன்ற கண்கள் கண்ணீர் பெருகும்; ஒளி பொருந்திய தளிர் போன்ற கைகளில் அணிந்திருக்கும் சங்கவளைகள் கழலும்; கூர்மை செய்யப்பட்ட பிறை போன்ற நெற்றியிலிருந்து வியர்வை ஒழுகும்; பெண்மைக்கு உரிய பண்புகளும் அவளிடம் நிலைபெறா - என்ற இப்பாடலில், நீர் ஒழுகும், சங்கம் ஒழுகும், வேர் ஒழுகும் என முதலில் நின்ற 'ஒழுகும்' என்ற வினை நீர், சங்கம், வேர் என்ற மூன்றற்கும் தனித்தனி முடிக்கும் சொல்லாகி அமைவதால், இது முதல்நிலைத் தொழில்-தீபகம்.]

**வளைத்தது ராமன்கை வல்வில், பகழி**
**துளைத்த அரக்கரைப் பேய்ச்சுற்றம் - திளைத்தசெருக்**
**கண்டகளம் புண்ணீர், கடல்இலங்கை மாநகரைச்**
**சண்டதரன் வீசிய பாசம். (369)**

இதுவும் முதல்நிலைத் தொழில்தீபகம். இதனுள் இராமன்கை வில்லை வளைத்தது, அரக்கரைப் பேய்ச்சுற்றம் வளைத்தது, செருக்களத்தைப் புண்ணீர் வளைத்தது, சண்டதரன் வீசிய பாசம் இலங்கைமாநகரை வளைத்தது என முதலே நின்ற இறந்தகால வினையை எங்கும் ஒட்டுக.

திணை - வாகை; துறை - பேராண்முல்லை.

[இராமனுடைய கை வலிய வில்லை வளைத்தது; அவனுடைய அம்புகள் துளைத்த அரக்கர்கள் உடல்களை உண்பதற்குப் பேய்க்கூட்டம் வளைத்துக்கொண்டது; போரிட்ட போர்க்களத்தைக் குருதி வளைத்துக்கொண்டது; கடலுக்கு இடையே அமைந்த இலங்கையாம் பெரிய நகரைக் காலன் வீசிய பாசக்கயிறு வளைத்துக்கொண்டது - என்ற இப்பாடலில், முதலில் நின்ற 'வளைத்தது' என்னும் வினை வில், பேய்ச்சுற்றம், புண்ணீர், பாசம் என்ற நான்கற்கும் முடிக்கும் சொல்லாக அமைதலின், இதுவும் முதல்நிலைத் தொழில் தீபகம்.]

**பூரித்தது கோசலநாடன் வில்புணர்தோள்,**
**பாரில் பொடித்தாள் பருவமுலை, - தேர்இற்று**
**அடுகளத்து வீழ்ந்த அரக்கரைத்தின்று ஆழும்**
**மடுநிகர்த்த பல்பேய் வயிறு. (370)**

இது முதல்நிலைக் குணத்தீபகம். இதனுள் 'பூரித்தது' என முதல் நின்ற பண்பைத் தோள், பருவமுலை, பேய்வயிறு என்று எங்கும் ஒட்டுக. 'பூரித்தது' எனக் காலம் தோன்றிற்றேனும் பொருளின் புடைபெயர்ச்சி அல்லாமையால் குணம் ஆயிற்று.

திணை - வாகை, துறை - பேராண்முல்லை.

[கோசலநாட்டு மன்னனாகிய இராமனுடைய வில்லை ஏந்திய தோள்கள் வலிமையால் பருத்தன. பூமியிலிருந்து தோன்றிய சானகியின் பருவமுலைகள் மகிழ்ச்சியில் பருத்தன. தேர்கள் சிதறப் பகைவர்களை அழித்த போர்க்களத்தில் உயிரற்று வீழ்ந்த அரக்கர்-உடல்களைத் தின்று ஆழமான நீர்நிலைகளை ஒத்த பலபேய்களின் வயிறுகளும் நிரம்பின - என்னும் இப்பாடலில், 'பருத்தல்' ஆகிய பண்பைக் குறிக்கும் பூரித்தது என்ற முதல்நிலைச் சொல் தோள், முலை, வயிறு என்ற மூன்றற்கும் முடிக்குஞ் சொல்லாக அமைந்தமையின் இது முதல்நிலைக் குணத்தீபகம். பூரித்தது என்பது இறந்தகாலம் காட்டும் வினைமுற்றுச்சொல்லாயினும், வினைநிகழ்ச்சியைக் குறிப்பிடா-மல் பெருத்தல் ஆகிய பண்பையே குறித்தலின், பண்புஅடியாகப் பிறந்த வினைமுற்-றாய்ப் பண்புச்சொல்லாகக் கொள்ளப்பட்டது.]

**பாம்பு ஆடல்வாகனமாம், பாயலாம், பாதுகையாம்,**
**தீம்பால்பரவைத் திரைகடைநாள் - தாம்புஆகும்,**

**தாசரதி கொற்றக்குடையாம் தண்விளக்காம்,**
**ஆசனமாம், பின்னவனும் ஆம்.** (371)

இது முதல்நிலைச் சாதித்தீபகம். பாம்பு என்பது சாதி. ஆடல் - வெற்றி. பாதுகை - திருவடிநிலை. பின்னவன் - தம்பி.
துறை - அரவவென்றி. திருவனந்தாழ்வானும் நித்தருள் முதல் ஆதலால் அறுமுறைவாழ்த்துள்ளுமாம்.

[திருஅனந்தாழ்வானாகிய பாம்பு எம்பெருமானுக்கு வெற்றிதரும் வாகனம் ஆகும்; படுக்கை ஆகும்; திருவடிநிலை ஆகும்; இனிய பாற்கடலைக் கடைகாலத்தில் கடை-கயிறு ஆகும்; தசரதன்மகனாய்த் திருஅவதாரம் செய்தருளிய எம்பெருமானுக்கு வெற்றிக்குடையாகும்; ஒப்பற்ற விளக்காகும்; அமரும் ஆசனமாகும்; தம்பியாகிய இலக்குவனும் ஆகும் - என்ற இப்பாடலில், பாம்பு என்ற சாதிப்பெயர் வாகனம், பாயல், பாதுகை, தாம்பு, குடை, விளக்கு, ஆசனம், பின்னவன் என்ற பலவற்றிற்கும் முடிக்கும் சொல்லாய் முதலில் வருதலின் இது முதல்நிலைச் சாதித்தீபகம்.]

**மாறன் சடகோபன், வண்குருகூரான், பொருநை**
**ஆறன், துடரி அருளாளன், - வீறன்,**
**ஒரு நான்மறைத்தமிழால் ஒண்பொருளைக் காட்டும்,**
**திருஞான முத்திரைக்கைத் தே.** (372)

இது முதல்நிலைப் பொருள்தீபகம். துறை - கடவுள்வாழ்த்து.

[மாறன் சடகோபனாவான், வளமான குருகூர்நகரான், பொருநைஆற்றை உடையவன், துடரிமலையை உடைய அருளாளன், மற்றவருக்கு இல்லாத ஆற்றலுடையவன், நான்-மறையைத் தமிழ்ப்பிரபந்தங்களாக்கி அவற்றால் மெய்ப்பொருளாகிய இறைவனைப் புலப்படுத்துபவன், ஞானமுத்திரைக் கையைஉடைய தெய்வமாவான் - என்ற இப்-பாடலில், மாறன் என்னும் முதலில் உள்ள பொருட்பெயர் சடகோபன், குருகூரான், ஆறன், அருளாளன், வீறன், தே என்ற பல சொற்களுக்கும் முடிக்கும் சொல்லா-யமைதலின் இது முதல்நிலைப் பொருள்தீபகம்.]

**தேர்வண் தமிழ்மாறன் தென்குருகூர் வீதிதொறும்,**
**சார்வண் தரளம்உகும் சங்குஇனங்கள், - ஊரும்**
**பெருமாளிகை முகட்டில் பெய்முகில்கள், கங்குல்**
**வருமாலையில் வெண்மதி.** (373)

இஃது இடைநிலைத் தொழில்தீபகம். இதனுள் 'ஊரும்' என்பதனை ஊரும் தேரும், ஊரும் சங்கும், ஊரும் முகில்களும், ஊரும் மதியும் என முன்னும் பின்னும் ஒட்டுக. துறை - நகரவாழ்த்து.

[வளவிய தமிழைப் பாடிய மாறனுடைய அழகிய குருகூரிலுள்ள வீதிகள் தோறும் தேர் ஊரும். தம்மிடத்துப் பொருந்திய முத்துக்களை வெளிப்படுத்தும் சங்குகள் சஞ்சரிக்கும். பெரிய மாளிகைகளில் உச்சியில் மழைபெய்யும் மேகங்கள் உலவும். இருள் பரவும் மாலையில் உதிக்கும் வெண்ணிறச் சந்திரன் மாளிகைஉச்சியில் ஊர்ந்துசெல்லும் - என்ற இப்பாடலில், நடுவில் வந்துள்ள 'ஊரும்' என்ற வினைமுற்று தனக்கு முன்னர் உள்ள தேர், சங்கினங்கள் என்பனவற்றிற்கும், பின்னர் வந்துள்ள முகில்கள், மதி என்பனவற்-றிற்கும் முடிக்கும் சொல்லாய் அமைதலின் இஃது இடைநிலைத் தொழில்தீபகம்.]

**பூண்துறந்த வாசவன்தன் பொற்புயமும், முன்னோன்பின்**
**ஊண்துறந்து சென்றோன் உடக்குஅம்பும், - நாண்துறந்த**
**கொற்ற இராவணிதன் கொள்கைக் குலக்கோதைக்கு**
**உற்றதிரள் கண்டமும்.** (374)

இது பெயரோடும் கூடி இடைநின்ற தொழில்தீபகம். முன்னோன் - இராமன். அவன் பின் ஊண்துறந்து சென்றோன் - இளையபெருமாள். உடக்கு அம்பு - நாணில் செறிந்த பாணம். நாண்துறந்த - எய்தகாலத்து நாணைவிட்டு நீங்கின. ஈண்டு, நாண் விரல்சரடும், வில்நாணுமாம். 'பூண் துறந்த வாசவன்தன் பொற்-புயமும் நாண்துறந்த' என்பது இராவணி சமர்முகத்துக் கட்டின அன்றே வாகுவலயம் என்னும் ஆபரணத்தை மானபங்கத்தால் அணியாதுவிட்ட இந்திரன்புயத்தில் அவன் கட்டிய நாணும் அன்று விட்டு நீங்கின எனவும், கொற்ற இராவணிதன் கொள்கைக் குலக்கோதைக்கு உற்ற திரள் கண்டமும் நாண்துறந்த என்பது இராவணி குலத்துக்கு உரிய பாரி திரண்ட கண்டமும் மங்கிலியம் அன்று விட்டு நீங்கின எனவும் முன்னும் பின்னும் கூட்டுக.

திணை - வாகை சார்ந்த பொதுவியல். துறை - வில்வென்றி.

[இந்திரசித்திடம் போரில் தோற்று அவனால் கட்டப்பட்ட இந்திரன் நாணத்தால் தோள்வளைகள் அணிதலை நீக்கிய அழகிய புயங்களும் கட்டிலிருந்து விடுபட்டன. இராமனுக்குப் பின்னால் சுவையாக உண்பதனை விடுத்துப் பின் சென்ற இலக்குவன் நாணில் செறித்த அம்பும் அவன் எய்த காலத்து அவன் கைகளின் விரல்களில் அணிந்து பிடித்திருந்த விரல் உறைகளையும் வில்லின் நாணினையும் விட்டு நீங்கியது. பல இடங்களிலும் வெற்றி பெற்ற இந்திரசித்தினுடைய கற்பாகிய கோட்பாட்டை உடைய அரக்கர்குலத்துக்கு உரிய அவன்தேவி சுலோசனையின் கமுகு போலத் திரண்ட கழுத்து தன்னிடம் அணியப்பட்ட மங்கலநாணைத் துறந்தது - என்று இலக்குவன் இந்திரசித்தைக் கொன்ற வில்வெற்றியைப் புகழும் இப்பாடலில், 'நாண்' என்ற பெயரோடு கூடிய 'நாண் துறந்த' என்று வினைமுற்று இச்செய்யுளில் இடையில் அமைந்து முன்னர்க் கூறப்பட்ட புயமும், அம்பும் என்பனவற்றிற்கும் பின்னர்க் கூறப்பட்ட கண்டமும் என்பதற்கும் முடிக்குஞ் சொல்லாய் அமைதலின் இது பெயரோடும் கூடி இடைநின்ற தொழில்தீபகம்.]

**வட்டமுலைக்கண் குளிர்ப்ப வண்பனிநீரில் குழைத்துக்**
**கொட்டிய கத்தூரிக் கொழுங்குழம்பும், - சுட்டதுஅந்தோ!**
**செய்வளைக்கும் தென்குருகூர்ச் செண்பகமாறன் தழுவாப்**
**பெய்வளைக்கும் விண்மேல் பிறை. (375)**

இஃது இடைநிலைக் குணத்தீபகம். இதனுள், சுட்டது கத்தூரிக்குழம்பும் விண்மேல் பிறையும் என முன்னும் பின்னும் கூட்டுக. கொட்டியது - அப்பியது. கொழுங்குழம்பு - நெகிழ்ந்து ஒழுகும் குழம்பு. அந்தோ என்பது இரக்கத்-தின்கண் குறிப்பு.

திணை - பெண்பாற் கைக்கிளை. துறை - கண்டு கைசோர்தல்.

[வயல்களால் சூழப்பட்ட அழகிய குருகூரில் உள்ள செண்பகமாலையை அணிந்த மாறனைத் தழுவும் வாய்ப்பினைப் பெறாத தலைவிக்கு, வட்டமான முலையின்இடம் முழுதும் குளிர்ச்சி பெறுமாறு சிறந்த பனிநீரில் குழைத்து அப்பிய கத்தூரியின் நெகிழ்ந்து ஒழுகும் குழம்பும் ஐயோ! சுட்டது; வானத்தில் உலவும் பிறையும் சுட்டது - என்ற இப்பாடலில், 'பெய்வளைக்குச் சுட்டது' என்ற இடையில் அமைந்த வினைமுற்று முன்னர்க் காணப்படும் 'குழம்பும்' என்பதற்கும் பின்னர்க் கூறப்படும் 'பிறையும்' என்பதற்கும் முடிக்குஞ்சொல்லாயினமையின் இஃது இடைநிலைக் குணத்தீபகம். பெய்வளை - வளையலை அணிந்த தலைவி. 'பெய்வளைக்கும்' என்பதன்கண் உள்ள உம்மையைப் பிரித்துப் பிறை என்பதனோடு இணைத்துப் 'பிறையும்' எனக் கொள்க.]

**வஞ்ச நிருதர் மறப்படைக்கு ஓர் கூற்றமாம்,**
**நஞ்சுஅனைய மாயைக்கு ஓர் நன்மருந்தாம், - அஞ்சனைதன்**

**கன்று மனுராமன் கவசமாம், வாகனமாம்,**
**அன்று குறித்து ஏவிய தூதாம். (376)**

இஃது இடைநிலைச் சாதித்தீபகம். அஞ்சனை கன்று - திருவடி. 'கன்று' என்பது உவப்பின்கண் மயக்கம்.

'பால்அறி மரபின் பொருநர்கண்ணும், அனைநிலை வகையோடு ஆங்கவை உளப்பட' (தொ. பொ. 75 ந.) என்பதனால் வாகைப் புறத்திணையுள் துறை - வானரவென்றி.

['அனைநிலை வகையோடு ஆங்கு எழுவகையின்' என்பதே இப்பொழுது கிட்டும் தொல்காப்பியப் பாடம்.]

[அஞ்சனாதேவியின் மகனான அநுமன் வஞ்சனை உடைய அரக்கருடைய வீரம் மிக்க படைக்குக் காலன் ஆவான்; விடம் போலக் கொடிய மாயையைப் போக்கும் சிறந்த மருந்தாவான்; மனுகுலத்தில் தோன்றிய சக்கரவர்த்தித் திருமகனுக்குக் கவசம் போல்பவன்; வாகனமாக அமைந்தவன்; அன்று பிராட்டியிடம் அனுப்பப்பட்ட தூதனுமாவான் - என்ற இப்பாடலில் 'அஞ்சனைதன் கன்று' என்று இடையில் நின்ற குரக்குச்சாதி பற்றிய தொடர், தன் முன்னர்க் கூறப்பட்ட கூற்றமாம், மருந்தாம் என்பனவற்றிற்கும் பின்னர்க் கூறப்பட்ட கவசமாம், வாகனமாம், தூதாம் என்பனவற்றிற்கும் முடிக்குஞ்சொல் ஆயினமையின் இஃது இடைநிலைச் சாதித்தீபகம். கன்று என்பது அஃறிணைக்குரிய இளமைப்பெயர். அஃது உவப்பினால் திணைவழுவமைதியாக அஞ்சனையின் சிறுவனான அனுமனைச் சுட்டியது.

'தாம்தாம் அறியும் இலக்கணங்களாலே போர்செய்வாரிடத்துக் கூறுபாடும், அவற்றுக்கண் தோன்றி வேறுபட்ட கூறுபாட்டோடு; அவை சொல்லானும் பாட்டானும் கூத்தானும் மல்லானும் சூதானும் பிறவாற்றானும் வேறலாம்' தொ. பொ. 75 நச்.]

**தன்நிகர்ஒன்று இல்லாத் தனிமுதலாய் நின்றானும்,**
**மன்உயிர்க்கு மன்உயிரா வாழ்வானும், - தென்அரங்கன்**
**ஆரா அமுதுஅன்று அமரர்க்கு அளித்தானும்,**
**ஓராயிரம் பெயரா னும். (377)**

இஃது இடைநிலைப் பொருள்தீபகம். ஓராயிரம் பெயர் - ஒப்பற்ற அளவிறந்த திருநாமம். ஒழிந்த அகலம் உரையில் கொள்க. துறை - கடவுள்வாழ்த்து.

[அழகிய திருஅரங்கத்திலுள்ள எம்பெருமானே, தனக்கு ஒப்பார் இல்லாத ஒப்பற்ற முதற்பொருளாய் உள்ளவன்; நிலைபெற்ற உயிர்களுக்கு உள் உயிராய்க் கரந்து எங்கும் பரந்துள்ளவன்; தேவர்கள் உய்ய அக்காலத்தில் அவர்களுக்கு அமுதத்தை வழங்கியவன்; ஒப்பற்ற எண்இறந்த திருநாமங்களை உடையவன் - என்னும் இப்பாடலில், இடையில் உள்ள 'தென்அரங்கன்' என்ற பெயர் தனக்கு முன்னருள்ள நின்றான், வாழ்வான் என்பனவற்றிற்கும், பின்னர் உள்ள அளித்தான், பெயரான் என்பனவற்றிற்கும் முடிக்குஞ் சொல்லாய் அமைதலின், இஃது இடைநிலைப் பொருள்தீபகம்.]

**பெருவிறல்கூர் நாகப் பிடர்மேல் மரமும்,**
**உருகெழுதோள் வாலி உரமும், - இருபதுகைக்**
**குன்றின் வரமும், குணராமன் வாளியினால்**
**அன்று துளைப்பட்டது. (378)**

இது கடைநிலைத் தொழில்தீபகம். 'இருபதுகைக் குன்று' என்பது இராவணனை. திணை - வாகை சார்ந்த புறத்திணை; துறை - வில்வென்றி.

[பெரிய உறுதிமிக்க மலையின்உச்சியில் இருந்த மராமரங்களும் குணங்களால் உயர்ந்த இராமனுடைய அம்பினால் துளைக்கப்பட்டன; அச்சம் மிக்க தோள்களை உடைய வாலியின் மார்பும் துளைக்கப்பட்டது; இருபதுகைகளை உடைய குன்று போன்ற இராவணனுடைய வரமும் துளைக்கப்பட்டது - என்ற இப்பாடலின், இறுதியில் உள்ள

'துளைப்பட்டது' என்ற வினை மரம், உரம், வரம் என்ற மூன்றற்கும் முடிக்கும் சொல்லாய் அமைதலின், இது கடைநிலைத் தொழில்தீபகம்.]

**மைம்மாண் புயல் கிழிக்கும், வண்சுடர் மீதுஆம், இமையோர்-**
**தம் மாநகர்அணவும் சால்பிற்றே, - பெம்மான்**
**முருகுஅவிழ் பூந்தார்வகுள முன்னோன் குருகூர்**
**உருவளர் பொன்மாட உயர்வு. (379)**

இது கடைநிலை குணத்தீபகம். துறை - நகரவாழ்த்து.

[நம்தலைவனும் நறுமணம் கமழும் மகிழம்பூமாலையை அணிந்த முன்னோனும் ஆகிய மாறனுடைய திருக்குருகூரில் உள்ள அழகிய மாளிகைகளின் உயர்ச்சி, கரிய மேம்பட்ட மேகங்களைக் கிழிக்கும்; தன்மீது வளமான சந்திரசூரியர்கள் தங்கப் பெற்றது; தேவர்களுடைய தலைநகரான அமராபதியை அணுகும் பெருமையை உடையது - என்ற இப்பாடலில், 'பொன்மாட உயர்வு' என்ற எழுவாய் இறுதியில் நின்று தன் முன்னர் உள்ள கிழிக்கும், மீதாம், சால்பிற்று என்ற வினைமுற்றுக்களைத் தனித்தனியே கொண்டு முடிதலின் இது கடைநிலை குணத்தீபகம். உயர்வு என்பது பண்பு ஆதலின் இது குணத்தீபகமாயிற்று.]

**தன்எவ்வம் நோக்காது, தாயர் வெறுத்துளதாம்;**
**என்எவ்வம் நோக்கும், இகல்விளைப்பான்; - மன்அருள்மால்**
**மோகூரனைத் தொழுதேன் மோகம் மிகக் கா மா கூ-**
**கூகூ எனும் கோகிலம். (380)**

இது கடைநிலைச் சாதித்தீபகம். திணை - பெண்பால்கூற்றுப் பெருந்திணை; துறை - குயிலொடு வெறுத்துக் கூறாநிற்றல்.

["நிலைபெற்ற அருளைஉடைய எம்பெருமானாகிய மோகூரனைத் தொழுதேன்; எனக்கு அவனிடத்து ஏற்பட்ட காதல் மிகுமாறு சோலையில் உள்ள மாமரத்திலிருந்து கூகூகூ என்று ஒலிக்கும் குயில். இவ்வாறு முன்பு ஒலித்ததனால், குயில் தன் வளர்ப்புத்-தாயாகிய காக்கையால் தன் சாதியன்று என்று கண்டறியப்பட்டு வெறுத்து ஒதுக்கப்-பட்டமையால் தனக்கு ஏற்பட்ட துயரத்தை நினைத்துப் பார்க்கவில்லை; எனக்கு மாறுபாட்டை உண்டாக்குவதற்குத் துயரம் தரும் செய்தியை உட்கொண்டு மீண்டும் ஒலிக்கின்றது. எனவே குயிலின் குரல் தனக்கும் பிறருக்கும் துயரம் தருவதேயாம்" - என்ற இப்பாடலில், கோகிலம் என்ற சாதிபற்றிய பெயர் எழுவாயாய் இறுதியில் நின்று, நோக்காது, நோக்கும் என்ற இருவினைகளைக் கொண்டு முடிந்தமை கடைநிலைச் சாதித்தீபகம்.]

**தாடகைகைச் சூலம்முரண் சாய்த்தானும், வில்இறுத்துச்**
**சூடகக்கைச் சானகிதோள் தோய்ந்தானும், - கேடுஅகத்தான்**
**செம்பொன் மணிமாடத் தென்இலங்கை செற்றானும்,**
**அம்பொன் மணிக்கூடத்தான். (381)**

இது கடைநிலைப் பொருள்தீபகம். கேடுஅகத்தான் - கேட்டோடு கூடிய உள்ளத்தை உடையவன்; அவன் இராவணன். துறை - கடவுள்வாழ்த்து.

[நாங்கூரில் உள்ள அழகிய பொன்மயமான மணிக்கூடம் என்ற திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான், தாடகையின் கையிலிருந்த சூலத்தின் ஆற்றலை அழித்தவனும், வில்லை முறித்து வளையலணிந்த திருக்கைகளை உடைய சானகியின் தோள்களைத் தழுவியவனும், தீங்கு பொருந்திய உள்ளத்தை உடைய இராவணனுடைய செம்பொன்மணிமாடங்கள் நிறைந்த அழகான இலங்கையை அழித்தவனும் ஆவான் - என்ற இப்பாடலில், இறுதியில் உள்ள 'மணிக்கூடத்தான்' என்ற பெயர் சாய்த்தானும், தோய்ந்தானும், செற்றானும் என முன்னருள்ள பெயர்களுக்கு முடிக்கும் சொல்லாய் அமைந்தமையால் இது கடைநிலைப் பொருள்தீபகம்.] [75]

தீபகஅலங்காரத்தின் ஒழிபு

**161. அதுவே**
**ஒருபொருள் உவமை உடனுறல் சிலேடை**
**விருத்தம் மாலைஎன்று இவற்றொடும் விரவும். [76]**

(எ-ன்) இஃது அவ்வலங்காரத்தின் ஒழிபு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அத்தீபகம் ஒருபொருள்தீபகம் முதலாக மாலாதீபகம் ஈறாகக் கூறப்பட்ட ஐந்திநோடும் விரவிவரும் என்றவாறு.

**வெங்கதிரோன் மெய்வருடும், வெண்மதியின் மெய்தடவும்,**
**அங்கண் உயர் வான்அகடு அணவும் - எங்கள்**
**அனகன் அபிராமன் ஆழியான் மூழிக்**
**கனக மணிமாளிகை.** (282)

இஃது ஒருபொருள் கடைநிலைஇடத்தீபகம். ஒரு பொருளாவன வருடும் தடவும் அணவும் என்பன. துறை - நகரவாழ்த்து.

[எங்கள் தலைவனான பாவம்இல்லாதவனும் அழகனும் சக்கரத்தை ஏந்தியவனுமாகிய எம்பெருமான் உகந்தருளியிருக்கும் திருமூழிக்களம் என்ற திருப்பதியில் உள்ள பொன்மயமான அழகிய திருக்கோயில், கொடிய கதிர்களை உடைய சூரியனுடைய உடம்பினை மெதுவாகத் தடவும்; வெள்ளிய சந்திரனுடைய உடம்பினைத் தடவும்; அழகிய இடத்தை உடைய உயர்ந்த வானத்தின் அடிப்புறத்தை அணுகும் - என்ற இப்பாடலில், கனகமாளிகை சூரியனையும் சந்திரனையும் வானத்தின் அடிவயிற்றையும் தடவும் என்று கூறப்படவேண்டிய செய்தி, தனித்தனியே ஒரேபொருளைத் தரும் வருடும், தடவும், அணவும் என்ற சொற்களைக்கொண்டு கதிரோன்மெய் வருடும், மதியின்மெய் தடவும், வான்அகடு அணவும் என மூன்று சிறுவாக்கியங்களாக அமைக்கப்பட்டு 'மணிமாளிகை' என்ற இறுதியில் வரும் தொடருக்குப் பயனிலைகளாக அமைதல் ஒருபொருள் கடைநிலைத்தீபகம்.]

**பொன்அம் கொடிஅனையள் பொற்புஅமைந்து, மென்நடைகற்று**
**அன்னம்தனை அனையள், ஆயிழாய்! - நன்னுதலாள்**
**வாய்ந்தஇயல் பெற்று மயில்அனையள், மின்அனையள்**
**ஆய்ந்த நுடங்குஇடைபெற்று ஆங்கு.** (383)

இஃது உவமானப்பொருள் தீபகம். வாய்ந்த இயல் - தோற்றம் உடைய சாயல். பகுதி - சேட்படை; துறை - தலைவன் பாங்கிக்கு அவயவம் கூறல்.

["அழகிய அணிகலன்களை அணிந்த தோழியே! அழகிய நெற்றியை உடைய தலைவி, அழகு பொருந்துதலால் அழகிய பொற்கொடியை நிகர்ப்பவள்; மென்மையான நடையைக் கற்றதனால் அன்னத்தை ஒப்பவள்; தோற்றம் உடைய கண்ணுக்கு இனிய மென்மையைப் பெற்றதனால் ஆண்மயிலை ஒத்தவள்; நுணுகிய இடையை உடையளாதலின் மின்னலை ஒப்பவள்" என்று தலைவன் தோழியிடம் தலைவியின் உறுப்புக்களைப் பற்றிக் கூறிய இப்பாடலில், உவமைஅணி வந்துள்ளது. அதனோடு பாடலின் இடையில் உள்ள 'நன்நுதலாள்' என்னும் சொல் கொடி, அன்னம், மயில், மின் என்பனவற்றோடு தனித்தனி இயைந்து அனையள் என்ற உவமைச்சொல்லைக் கொண்டுமுடிதலான் இஃது உவமானப்பொருள் தீபகம்.]

**ஏகா வடம் நிலைபெற்று இன்புட்டக மணந்து**
**மாகா மருவாமொய் வாழ் வுறலால் - தோகை**

**முலைக்கும் மகிழ்மாலை முன்னோன் துடரி**
**மலைக்கும் மகிழ்வுஎய்தும் மனம். (384)**

துடரிமேல் சொல்லுங்கால்: ஏகா வடம் நிலைபெற்று இன் புள் தகமணந்து மா காமர் உவாமொய் வாழ்வுஉறலால்

முலைமேல் சொல்லுங்கால்: ஏகாவடம் நிலைபெற்று இன் புட்டகம் மணந்து மா காமர் உவா மொய் வாழ்வுறலால்

இது சிலேடாதீபகம். துடரிமேல் சொல்லுங்கால்: இயங்காத ஆலமரம் நிலை-பெற்று நல்ல புள்ளுக்கள் பெருமையோடு பொருந்துவனவாய்க் கரிய அழகிய யானைத்திரள்கள் செறியும்படி வாழ்வுற்று எனவும், முலைமேல் சொல்லுங்கால்: ஏகாவடம் என்னும் ஆபரணம் நீங்காது, கண்ணுக்கு இனிமை தரும் படாம் தன்மேல் தகவோடு தழுவுவனவாய்ப் பெரிய விருப்பத்தை அளிக்கும் இளமைத்தன்மையுடன் இறுகி வாழ்வு பெறுதலால் எனவும் கொள்க.

பகுதி - இயற்கைப்புணர்ச்சி; துறை - நலம்புனைந்துஉரைத்தல்.

["தலைவியினுடைய முலைகளையும், மகிழம்பூமாலையை அணிந்த நம்குல முதல்வனான மாறனுடைய துடரிமலையையும் நினைப்பதாலும் காண்பதாலும் என்மனம் மகிழ்வுஎய்தும்" என்று தலைவன் தலைவிநலத்தை மிகுத்துக் கூறும் இப்பாடலில், ஏகா வடம் - இயங்காத ஆலமரம், ஒற்றைமாலை என்னும் அணி; இன் புள் தக மணந்து - நல்ல பறவைகள் பெருமையோடு பொருந்தி, இன் புட்டகம் மணந்து - கண்ணுக்கு இனிய மேலாடை போர்த்தப்பட்டு; மா காமர் உவா - கரிய விரும்பத்தக்க யானை, பெரிய விருப்பத்தை அளிக்கும் இளமைப்பருவம்; மொய் - செறிதல், அழுத்தமாக இருத்தல் என்ற சிலேடை அமைந்துள்ளது. மனம் என்ற இறுதிச்சொல் முலைக்கும் மகிழ்வுஎய்தும், துடரிமலைக்கும் மகிழ்வுஎய்தும் எனத் தனித்தனியே முலை, மலை என்பனவற்றோடு இணைந்து முடிக்குச் சொற்கொண்டு முடிவு பெறுகிறது. ஆதலின் இது சிலேடா தீபகம்.]

**தணந்தார் உயிர்குறைக்கும்; தம்துணைவர் பொன்தோள்**
**மணந்தார் உயிர்நிறைக்கும்; மானே! - உணர்ந்தார்நல்**
**யாகத்து உதி மால் இபகிரிமேல் மைதவழ்நீள்**
**மாகத்து உதி மாமதி. (385)**

இது விருத்ததீபகம். இபகிரி - அத்திகிரி. விருத்தம் - குறைக்கும் நிறைக்கும் என்பன. பகுதி - பொருள்வயின்பிரிதல், துறை - நிலவுகண்டு அழுங்கல்.

["தோழியே! மெய் உணர்ந்த பிரமன் முதலியோர் நிகழ்த்திய வேள்வியின்கண் அதனைக் காப்பதற்குத் தோன்றிய திருமாலுடைய அத்திகிரியில் கருமை பரவிய நீண்ட வானத்தில் உதிக்கும் மேம்பட்ட மதியம், தலைவரைப் பிரிந்திருக்கும் தலைவியரின் உயிரைத் துன்புறுத்துகிறது; தத்தம் கணவன்மார்களுடைய பொலிவுடைய தோள்களைத் தழுவிய பெண்களுடைய உயிரை மகிழ்வுறச்செய்கிறது" என்று தலைவனால் பிரியப்பட்ட தலைவிகூற்றாக அமைந்த இப்பாடலில், 'மதி' என்ற இறுதிச்சொல் குறைக்கும் நிறைக்கும் என்ற மறுதலைப்பொருளுடைய சொற்கள் இரண்டோடும் தனித்தனி முடிந்து பொருள்தருதலின், மாறுபட்ட சொற்களைக் கொண்டு தனித்தனியே முடியும் விருத்ததீபகம் ஆயிற்று. விருத்தம் - மாறுபாடு.]

**வாவிக்கு அழகு மலர்கமலம்; மன்கமலப்**
**பூவிற்கு அதனுள் பொலிதேவி; - தேவிக்கு**
**நாளும் புதியதமிழ் நாவீறனை அடிமை**
**ஆளும் திரு நாரணன். (386)**

இது மாலாதீபகம். இதனுள் 'அழகு' என்னுமதனை முதல்நிலை குணத்தீபக-மாக்கிக் கமலம் முதலாக எவ்விடத்தும் மாலைப்படுத்திக் கூட்டுக. துறை - கடவுள்வாழ்த்து.

["குளத்திற்கு அழகு மலரும் தாமரை; நிலைபெற்ற தாமரைப்பூவிற்கு அழகு அதனுள் வீற்றிருக்கும் திருமகள்; திருமகளுக்கு அழகு ஒவ்வொரு நாளும் புதுமைஇன்பம் தரும் தமிழ்ப்பிரபந்தங்களைப் பாடிய நாவின் பேராற்றலுடைய மாறனை அடிமையாக ஆட்கொண்ட வீடுபேறாகிய செல்வத்தை உடைய நாரணன் ஆவான்" என்ற இப்பாடலில், 'அழகு' என்ற சொல் கமலம், திருமகள், நாரணன் என்ற ஒன்றோடொன்று தொடர்புடைய சொற்களோடு தனித்தனி இணைந்து பொருள்தருவது மாலாதீபகம் ஆகும். மாலையில் உள்ள மலர்கள் ஒன்றோடு ஒன்று தொடர்புஉறுவது போல, இப்பாடற்செய்திகள் பலவும் ஒன்றோடொன்று தொடர்பு கொண்டுள்ளமை காண்க.] [76]

19-ஆவது தீபகம் முற்றும்.

## 20-ஆவது நிரல்நிறைஅலங்காரம்

### நிரல்நிறைஅணியின் இலக்கணம்

**162. குறித்திடும் பெயர்வினை கூறிய செய்யுளின்**
**நெறிப்பட நிரலுதல் நிரல்நிறை ஆகும். [77]**

(எ-ன்) வைத்த முறையானே (67) நிரல்நிறை அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) இடுகுறி எனவும் காரணம் எனவும் குறிப்பனவாம் பெயரேயாதல் வினையேயாதல் புலவனால் கூறப்பட்ட செய்யுளிடத்து முறையே இரட்டிப்பது நிரல்நிறை என்னும் அலங்காரமாம் என்றவாறு. நிரலுதல் - இரட்டித்தல்.

[நிரலுதல் - வரிசையாக அமைதல்] [77]

### பெயர்நிரல்நிறை

**163. அவற்றுள்,**
**பெயரொடு பெயர் நிரலுதல் பெயர்நிரல்நிறை. [78]**

(எ-ன்) அவ்விரண்டினுள் பெயர்நிரல்நிறை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று. இதன்பொருள் உரையிற் கொள்க.

[பெயரொடு பெயர் வரிசையாக முறையே அமைவது பெயர்நிரல்நிறையாம்.]

**தாதுஇவர்பூந் தாமம், திருநாமம், தந்தைதாய்,**
**மேதினிஏழும் புகழ் நாவீறற்கு - மாதராய்!**
**வேரி ஆர் வண்டு இரைக்கும் வெய்யமகிழ், மாறன்,**
**காரியார், நங்கையார், காண். (387)**

இது பெயரொடு பெயர் நிரல்நிறை. இதனுள் தாமம், திருநாமம், தந்தை, தாய் - மகிழ், மாறன், காரியார், நங்கையார் என அடைவே நிரந்தமை காண்க. துறை - செந்துறைப்பாடாண்பாட்டு.

["பெண்ணே! ஏழுஉலகும் புகழும் நாவீறு உடைய பெருமானுக்கு, மகரந்தம் தங்கிய பூமாலை, திருநாமம், தந்தையார், தாயார் முறையே தேனை உண்ணும் வண்டுகள் ஒலிக்கும் மகிழம்பூ, மாறன், காரியார், நங்கையார் என அறிவாயாக" என இப்-

பாடற்கண், பெயர்கள் முறையாகத் தத்தம் முடிக்குஞ் சொற்களாகிய பெயர்களைக்-கொண்டு முடிந்தமையால் இது பெயரொடு பெயர் நிரல்நிறை.] [78]

பெயர் எதிர்நிரல்நிறை

**164. பெயர்எதிர் நிரலுதல் பெயர் எதிர்நிரல்நிறை. [79]**

(எ-ன்) பெயர் எதிர்நிரல்நிறை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.
இதன்பொருளும் உரையிற் கொள்க.

[முறையே வந்த பெயர்கள் முறையாகத் தத்தம் முடிக்குஞ்சொற்களாகிய பெயர்களைக் கொண்டு முடியாமல் மாறாகக் கடையிலிருந்து தொடங்கி முதலொடு முடிவது பெயர் எதிர்நிரல்நிறையாம்.]

**ஏடு அவிழ் தார், ஏதி, எழில்வாகனம், தளிமம்,**
**ஆடுஅரவம் அஞ்சிறைப்புள் ஆழி துழாய்; - நீடுபர-**
**மேட்டி ஊர் வெண்திரைவாய் என்றும் துயின்ற திருக்**
**கோட்டியூர் வாழ் நெடுமாற்கு.** (388)

இது பெயரொடு பெயர் எதிர்நிரல்நிறை. அரவம் தளிமம், அஞ்சிறைப்புள் வாகனம், ஆழி ஏதி, துழாய் தார் எனப் பெயரொடு பெயர் எதிர்நிரல்நிறை ஆயவாறு காண்க. துறை - கடவுள்வாழ்த்து.

[மேம்பட்ட பரம்பொருளாய், மோதுகின்ற வெள்ளிய அலைகளை உடைய பாற்கடலில் என்றும் அறிதுயில் கொள்ளும் திருக்கோட்டியூரை அர்ச்சாவதாரத்திற்கு உகந்தருளியுள்ள திருத்தலமாகக் கொண்டு வாழும் திருமாலுக்கு, இதழ்கள் விரியும் மாலை, படைக்கலம், அழகிய வாகனம், படுக்கை என்பன படமெடுத்துஆடும் ஆதிசேடன், அழகிய சிறகு-களைஉடைய கருடன், சக்கரம், திருத்துழாய் என்பனவாம். இப்பாடலின்கண், முதலி-லிருந்து முடிக்கப்படும் சொற்களை அவாவி நிற்கும் பெயர்களுக்குக் கடையிலிருந்து முடிக்கும்சொற்கள் அமைந்துள்ளமை பெயரொடு பெயர் எதிர்நிரல்நிறையாம்.] [79]

பெயர்வினை நிரல்நிறை

**165. உயர்வுஉறு பெயரொடு வினைஉற நிரல்வது**
**மயர்வுஅறு பெயர்வினை நிரல்நிறை எனவரும். [80]**

(எ-ன்) பெயரொடு வினைநிரல்நிறை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.
இதற்கும் சூத்திரத்தானே பொருள் விளங்கும்.

[முடிக்கப்படும் சொற்களை அவாவி முறையே வரும் பெயர்களுக்கு முடிக்குஞ்-சொற்களாகிய வினைகள் முறையே பாடலில் அமைந்திருப்பது பெயர் வினை நிரல்நிறையாம்.]

**மல், துளபம், போர்வேழம், வார்ஆழி, முல்லைநிலம்,**
**கொற்றம்மகிழ் மாறனை ஆட்கொண்டு அருளும் - விற்றுவமால்**
**ஆடினதும் சூடினதும் அட்டதுவும் தட்டதுவும்**
**பாடினதும் நேடினதும் பண்டு.** (389)

இது பெயரொடு வினைநிரல்நிறை.
மல் என்பது கூத்து. முல்லை - பண். நிலம் - பூமிதேவி. அட்டது - கொன்றது. தட்டது - அடைத்தது. நேடினது - தேடினது. இதுவும் கடவுள்வாழ்த்து.

[வெற்றி பொருந்திய மகிழம்பூமாலையை அணிந்த மாறனை ஆட்கொண்டு அருளிய திருவிற்றுவக்கோட்டில் உகந்தருளியிருக்கும் திருமால் மல் என்ற ஆடலை ஆடினார்;

திருத்துழாயைச் சூடினார்; எதிர்க்க வந்த குவலயாபீடம் என்ற யானையைக் கொன்றார்; பெரிய கடலை அணைகட்டித் தடுத்தார்; முல்லைப்பண்ணினை வேய்ங்குழலில் பாடினார்; ஊழிவெள்ளத்தில் புதைந்த பூமியை வராககற்பகாலத்தில் தேடினார் - என முடிக்கப்படும் பெயர்களும் முடிக்கும் வினைகளும் முறையே அமைந்திருத்தல் பெயரொடு வினைநிரல்நிறை.] [80]

**பணி, மொழி, உண், கண், மலர், ஆள், பங்கயத்தாள் செய்ய**
**மணிமலர்க்கை பற்றிய வாட்டாற்றான் - அணிமலர்த்தாள்,**
**பேர், அமுதுஉண் சேடம், எழில், பேரின்பம் உற்றுமுகம்,**
**சீரடியார்க்கு ஏவல் செயல். (390)**

இது பெயரொடு வினை முறைநிரல்நிறை.

[(இ-ள்) நெஞ்சமே! தாமரையாளுடைய சிவந்த மணியும் மலரும் போன்ற திருக்கையைப் பற்றின திருவாட்டாற்றான் அழகிய திருவடிகளைப் பணி; நாமத்தை மொழி; அமுது செய்த சேடத்தை உண்; திருமேனியின் காந்தியைத் தியானம் செய்; அதன்பின்னர் உற்ற பேரின்பத்தான் முகம் மலர்; அவன் திருத்தொண்டர்களுக்கு ஏற்ற ஏவல் செய்வதனை ஆட்சி செய்வாயாக என்றவாறு. இதன்கண் வினை முன்னரும் பெயர் பின்னரும் வந்துள்ளன.]

நெஞ்சமே என்னும் எழுவாய்முன்னிலை எஞ்சி நின்றதாக விரிக்க. இதனுள், பணி மொழி உண் கண் மலராள் ஆகிய தாமரையாள் எனத் தொடர்பு உடைத்தாய் நின்றனவுமாய்த் தொடர்பில் பிரித்த தன்தொழில் ஏவலாயினவாறும் காண்க. திணை - பாடாண். துறை - ஓம்படை.

[இப்பாடலில், தனித்தனியே பணி, மொழி, உண், கண், மலர், 'ஆள் என்ற ஏவல் வினைகளாகக் கொள்வதனோடு, சாந்தமான சொற்களையும் மையுண்ட கண்களாகிய குவளைமலர்களையும் உடையவளான தாமரைவாழ் திருமகள் என்ற கருத்தமைந்த 'பணிமொழி உண்கண்மலராள் பங்கயத்தாள்' என்ற தொடர் அமைந்திருக்கும் நயமும் உள்ளது.] [80]

### பெயர்வினை எதிர்நிரல்நிறை

**166. ஓதிய பெயரினோடு உயர்வினை எதிரின்**
**நீதிகொள் பெயர்வினை எதிர்நிரல்நிறையாம். [81]**

(எ-ன்) பெயரொடு வினை எதிர்நிரல்நிறை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று. இதற்கும் சூத்திரத்தானே பொருள் விளங்கும்.

[முறையாகக் குறிப்பிட்ட பெயர்ச்சொற்களோடு அவற்றை முடிக்கும் வினைச்சொற்களும் முறையாக அமையாமல் கடையிலிருந்து முதல்முடிய அமைந்திருப்பது பெயர்வினை எதிர்நிரல்நிறையாம் என்றவாறு.]

**வேதியனை ஈன்றளித்த மேன்மைத் திருஉருவே,**
**வாதியர்தம் வாய்மதமே, வண்தமிழே, - ஓதிமமே,**
**ஏறியதும் கூறியதும் சீறியதும் ஈசன்எனத்**
**தேறியதும் - காரி தரும் சேய். (391)**

இது பெயரொடு வினை எதிர்நிரல்நிறை. இதனுள், 'வேதியனை ஈன்றளித்த மேன்மைத் திருவுரு' என்றது சீமந் நாராயணனை. 'வாதியர் வாய்மதம்' என்றது அகம்பிரமி முதலாயவர் புன்சாத்திரமதம். வண்தமிழ் - திருவாய்மொழி. ஏறியது ஓதிமம். கூறியது வண்தமிழ். சீறியது பரவாதியர்மதத்தை. 'பரத்துவம் எனத் தேறியது' சீமந்நாராயணனை. அவன் யாரெனின் புலவீர்காள்! காரிமாறப்பிரானாம் என்றவாறு.

திணை - பாடாண்; துறை - பழிச்சினர்ப் பணிதல். மொழிமாற்று நிரல்நிறையும் இது.

[காரிதரும் சேய் ஏறியது ஓதிமம், கூறியது வண்தமிழ், சீறியது வாதியர்தம் வாய்மதம், ஈசன் எனத் தேறியது வேதியனை ஈன்றளித்த மேன்மைத் திருஉரு என முடிக்கும் வினைச்சொல் முடிக்கப்படும் பெயர்ச்சொற்களுள் இறுதிச்சொற்கு உரியது தொடங்கி அமைந்திருப்பதால் இது பெயரொடு வினை எதிர்நிரல்நிறை. முடிக்கப்படும் பெயர்களுள் முதற்கண் உள்ள பெயருக்கு முடிக்குஞ்சொல்லாக இறுதியில் உள்ள வினையைக் கோடல் போன்ற மொழிமாற்றுப்பொருள்கோள் அமைந்திருப்பதால் இதனை மொழிமாற்று நிரல்நிறை என்றும் கூறலாம்.] [81]

வினைநிரல்நிறை

**167. வினையொடு வினை நிரல்வது வினைநிரல்நிறை. [82]**

(எ-ன்) வினையொடு வினை நிரல்நிறை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதற்கும் சூத்திரத்தானே பொருள் விளங்கும்.

[முடிக்கப்படும் சொற்களாகிய வினைகளும் முடிக்குஞ்சொற்களாகிய வினைகளும் முறையே அமைந்திருப்பது வினைநிரல்நிறையாம்.]

**வான்உலகு எண் வில்வளைத்து, மாநீர் செறுத்து, அவுணர்**
**கோன்உதகம் பெய்ததுகைக் கொண்டுதான் - சானகிதோள்**
**மேயினான், தென்இலங்கை வென்றான், எழுபுவியும்**
**தாயினான், நீர்மலையத்தான்.** (392)

இது வினையொடு வினைநிரல்நிறை. அவுணர்கோன் என்றது மாவலியை.
தாயினான் - அளந்தான். துறை - கடவுள்வாழ்த்து.

[திருநீர்மலையிலுள்ள எம்பெருமான் வான்உலகு எண் வில்வளைத்துச் சானகிதோள் மேயினான், மாநீர் செறுத்துத் தென்இலங்கை வென்றான், அவுணர்கோன் உதகம்பெய்தது கைக்கொண்டு எழுபுவியும் தாயினான் - என முடிக்கப்படும் வினைஎச்சங்களும் முடிக்கும் வினைமுற்றுக்களும் முறையே அமைந்தமையால் இது வினையொடு வினைநிரல்நிறை. வான்உலகு எண் - தேவர்உலகத்தவரால் பெரிதும் மதிக்கப்பட்ட. மாநீர் செறுத்து - கடலை அணைகட்டித் தடுத்து. உதகம் பெய்தது கைக்கொண்டு - நீர் வார்த்துக் கொடுத்த தானத்தைக் கையில் ஏற்று.] [82]

வினை எதிர்நிரல்நிறை

**168. வினைஎதிர் நிரல்வது வினை எதிர்நிரல்நிறை. [83]**

(எ-ன்) இது வினையொடு வினை எதிர்நிரல்நிறை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதனுள் வினையொடு என்பதனை முதலே விரித்து உரைக்க.

[வினையொடு வினை, முறையே முடிக்கப்படும் சொல்லாகவும் முடிக்கும் சொல்லாகவும் இறுதி முதலாகவும் முதல் இறுதியாகவும் மாறிப் பொருள் பொருந்த இயைவது வினை எதிர்நிரல்நிறையாம். சூத்திரத்துக் காணப்படாத 'வினையொடு' என்பதனை முதலில் பெய்து, வினையொடு வினை எதிர்நிரல்வது வினை எதிர்நிரல்நிறை என்று பொருள்கொள்ளவேண்டும்.]

**வன்சயிலம் ஏந்தி, வளைமுழக்கி, வெண்தயிர்கட்டு,**
**அன்புறக்கட்டுண்டு, அமர்வென்று, ஆஅளித்தான் - நன்புள்**

**கடவுளந்தை வானோர் கடிகா இடந்த**
**இடவெந்தையில் வாழ் இறை. (393)**

இது வினையொடு வினை எதிர்நிரல்நிறை. ஆஅளித்தான் - ஆவினைக் காத்தான். நன்புள் கடவு எந்தை - நல்ல கருடனை ஏறும் எம்சுவாமி; என் அப்பன் என்றும் ஆம்.
திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து.

[தேவர்களுடைய கற்பகச்சோலையைப் பெயர்த்து நிலவுலகிற்குக் கொண்டுவந்த திருஇடவெந்தை என்னும் திருத்தலத்தில் உகந்தருளியிருக்கும் எம்பெருமாள். வலிய கோவர்த்தனமலையைக் குடையாகக் கவித்துப் பசுக்களைக் காப்பாற்றினான், தன் சங்கமாகிய பாஞ்சசன்னியத்தை முழங்கிப் பாரதப்போரை வென்றான். வெள்ளிய தயிரை விரும்பித் திருடிக் கட்டுண்டான் என முடிக்கும்சொல்லாகிய வினையையும் முடிக்கப்படும் சொல்லாகிய வினையையும் பொருள்இயைபுக்கு ஏற்ப முதலாவதனை இறுதியாகவும் இறுதியாவதனை முதலாகவும் கொண்டு பொருள்செய்தல் வினையொடு வினை எதிர்நிரல்நிறை. சயிலம் - மலை. வளை - சங்கு. கட்டல் - களவுசெய்தல்.] [83]

வினைபெயர் நிரல்நிறை

**169. வினையொடு பெயர் நிரல்வது வினைபெயர் நிரல்நிறை. [84]**

(எ-ன்) வினையொடு பெயர் நிரல்நிறை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.
இதற்கும் சூத்திரத்தானே பொருள் விளங்கும்.

[முடிக்கப்படும் சொல்லாகிய பெயரும் முடிக்கும் சொல்லாகிய வினையும் முறையாக அமைவது வினைபெயர் நிரல்நிறையாம் என்றவாறு.]

**ஏந்தினான், வேய்ந்தான், இறுத்தான், இனிதாக**
**மாந்தினான் ஆழி, துழாய், வன்சிலை, பார், - காந்தன்,**
**தொலைவில்லிமங்கலத்தான், தோலாதார் வென்றி**
**தொலைவில்லி, வானோர் துணை. (394)**

இது வினையொடு பெயர் நிரல்நிறை. காந்தன் - அழகன். தொலைவில்லி மங்கலத்தான் - தொலைவில்லி மங்கலம் என்னும் திருப்பதியை உடையவன். தோலாதார் வென்றி தொலைவில்லி - போர்க்குப் புறமிடாத சத்துருக்களது வெற்றியைத் தொலைக்கும் வில்லைஉடையான். வானோர்துணை - வானோர் உயிருக்கு நற்றுணை என்றவாறு. வானோர் - நித்தியசூரியர்.

[அழகனும், தொலைவில்லிமங்கலம் என்னும் திருப்பதியை உடையவனும், பகைவர் வெற்றியை அழிக்கும் வில்லாற்றலுடையவனும் நித்தியசூரிகளுக்குத் துணைவனாய் உள்ளவனுமாகிய எம்பெருமான் ஆழியை ஏந்தினான், துழாயை வேய்ந்தான், வன்சிலை இறுத்தான், பார் இனிதாக மாந்தினான் என முடிக்கப்படும் பெயரும் முடிக்கும் வினையும் முறையே அமைந்து பொருள் தருவதால் இது வினையொடு பெயர் நிரல்நிறை. ஆழி - சக்கரம். வன்சிலை - வலிய சிவனுடைய வில். இறுத்தல் - முறித்தல். இனிதாக மாந்துதல் - சுவையாக அனுபவித்தல்.
திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து.] [84]

வினையொடு பெயர் எதிர்நிரல்நிறை

**170. வினையொடு பெயர் எதிர்கொளவரும் நிரல்நிறை**
**வினையொடு பெயர்எதிர் விதி நிரல்நிறையே. [85]**

(எ-ன்) வினையொடு பெயர் எதிர்நிரல்நிறை உணர்த்துதல் நுதலிற்று.

விதி நிரல்நிறை - இலக்கணத்தால் விதிக்கப்பட்ட நிரல்நிறை.
ஒழிந்த அகலம் உரையிற் கொள்க.
[முடிக்கும் வினையும் முடிக்கப்படும் பெயரும் முறையே அமையாமல் மாறி ஈறு முதலாக அமைக்கப்படும் வரிசை வினையொடு பெயர் எதிர்நிரல்நிறை எனப்படும்.]

**நடித்தான் ஒடித்தான் நடந்தான் இடந்தான்**
**பொடித்தான் ஒருதூணில், புள்வாய், - வடித்ததமிழ்ப்**
**பாவலன்பின், கோதண்டம், பைஅரவில், பல்உயிர்க்கும்**
**காவலவன் தென்அரங்கன் காண். (395)**

இது வினையொடு பெயர்எதிர்நிரல்நிறை. தூணில் பொடித்தான், புள்வாய் இடந்தான், பாவலன்பின் நடந்தான், கோதண்டம் ஒடித்தான், பைஅரவில் நடித்தான் என வினையொடு பெயர் எதிர்நிரல்நிறை காண்க. பொடித்தல் - தோன்றுதல். இடந்தது - பிளந்தது. ஒடித்தல் - முறித்தல்.
[பலஉயிர்களையும் பாதுகாப்பவனாகிய அழகிய திருவரங்கத்து எம்பெருமான். பைஅரவு - படம் எடுக்கும் பாம்பாகிய காளியன். கோதண்டம் - சிவனுடைய வில் என்ற கருத்தில் வந்துள்ளது. பாவலன் - திருமழிசைப்பிரான். புள் - கொக்குவடிவில் கண்ணனை அழிக்க வந்த பகாசுரன். ஒருதூண் - இரணியன் கையால் தட்டிய தூண். திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து.] [85]

எழுத்து நிரல்நிறை

**171. இருபெயர்க்கு அமைநா லெழுத்தை முறைமாறிப்**
**பொழிப்புறப் பிரித்துப் புணர்த்து நிறைவகை**
**எழுத்துநிரல்நிறை என்மனார் புலவர். [86]**

(எ-ன்) இது அந்நிரல்நிறை அலங்காரத்திற்கு எழுத்தால் ஆயதுஒரு சிறப்பு-இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) செய்யுளகத்து இரண்டு பெயருக்கு நிரம்பின நாலெழுத்தை மாறாடி ஒரோஒன்று இடையிட்டுப் பிரித்துக் கூட்டி நிறையும் கூறுபாடு புலவர் எழுத்து நிரல்நிறை என்று கூறுவர் என்றவாறு.

**மேவாருளி முலைகண், நண்பா! மிளிர்விபதுண்**
**பூஆர் வதனம் மொழி; பொன்மகள்சேர் - தேவாதி-**
**தேவே பிரமம்எனத் தேர் மகிழ்மாறன் சிலம்பில்**
**காவே அவட்குஇடமாம் காண். (396)**

இஃது எழுத்து நிரல்நிறை. இதனுள் மேவாருளி என்ற மொழிக்கண் நின்ற நாலெழுத்தினை ஒரோஒன்று இடையிட்டு மேரு, வாளி எனப்பிரித்து மேரு முலை, வாளி கண் எனக் கூட்டியும் விபதுண் என்ற மொழிக்கண் நின்ற நாலெழுத்தை ஒரோஒன்று இடையிட்டு விது பண், வதனம் மொழி எனக் கூட்டியும் நிரல்நிறை ஆனவாறு காண்க. இவற்றுள் உவமம் முதலிய அலங்காரம் விரவினும் ஈண்டு நிரல்நிறையே நோக்கம்எனக் கொள்க.
பகுதி - பாங்கற்கூட்டம்; துறை - இயல்புஇடம் கூறல். [86]

முறைநிரல்நிறை

**172. முறைமுறை நிரைவது முறைநிரல்நிறையே. [87]**
(எ-ன்) இது நிரல்நிறைக்கு ஒரு சிறப்புஇலக்கணம் கூறுதல் நுதலிற்று.

(இ-ள்) பெயர் வினை என்னும் இரண்டினையும் ஒரு செய்யுளகத்து ஒருமுறை முதலே கூறி, அவற்றான் முற்றாது, அவற்றைப் பயனிலை முற்றுவிப்பான் மறித்தும் பெயரும் வினையுமாக நிரைத்து முறைபெற முடிப்பது முறைநிரல் நிறையாம் என்றவாறு.

**பொன்னனை வான்அரக்கனை நூற்றுவரை காவை பொருசிலையை கருங்-**
**கடலை, பொன்னன் ஈன்ற**
**நன்மகற்காய் சுரர்க்காய் ஐவருக்காய் காதல்நப்பினைக்காய் சானகிக்காய் நட-**
**வைக்காக**
**மன்உகிரால் வடிக்கணையால் வளையால் புள்ளால் வளங்கெழுதோள்வலியால்**
**வானரங்களாலும்**
**முன்உடல்கீறி சிரம்கொய்து அமரில்வீழ்த்து முதலொடும்கீண்டு இறுத்து**
**அடைத்தான், மோகூரானே.** (397)

இது முறைநிரல்நிறை. இதனுள் அங்ஙனம் பெயரும் வினையும் ஒவ்வொரு-பொருள் தொடர்ச்சிக்கண்ணே ஒருமுறை வந்தவற்றோடு மறித்தும் முறைமுறை-யாக வந்தமை காண்க. இதன் பொருள் உரையில் கொள்க.

திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து.

[பொன்னனை நன்மகற்காய் மன்உகிரால் உடல்கீறி, வான்அரக்கனைச் சுரர்க்காய் வடிக்கணையால் சிரம்கொய்து, நூற்றுவரை ஐவருக்காய் வளையால் அமரில் வீழ்த்து, காவைக் காதல் நப்பின்னைக்காய்ப் புள்ளால் முதலொடும் கீண்டு, பொருசிலையைச் சானகிக்காய் வளம்கெழு தோள்வலியால் இறுத்து, கருங்கடலை நடவைக்காக வானரங்களால் அடைத்தான் - மோகூரான்.

மோகூரான் - மோகூர் என்ற திருத்தலத்தில் உகந்தருளியிருக்கும் எம்பெருமான். பொன்னன் - இரணியன். நன்மகன் - பிரகலாதன். உகிர் - நகம். சுரர் - தேவர். அரக்கன் - இராவணன். வளை - சங்கு - சங்கின்ஒலி. கா - கற்பகச்சோலை. நப்பின்னை - கண்ணன் தேவியருள் ஒருத்தியான ஆயர்மடமகள். புள் - கருடன். முதல் - வேர். பொருசிலை - சிவன்வில். இறுத்தல் - ஒடித்தல். நடவை - நடந்து செல்லுதல். அடைத்தல் - தடுத்து அணைகட்டுதல்.] [87]

நிரல்நிறைக்கு ஒழிபு

**172. இணைபெற இடைநின்று இருவயின் பெயரொடும்**
**புணர்தகை நிரல்நிறை புகலில் ஒன்றுஉளதே. [88]**

(எ-ன்) இன்னும் அவ்வலங்காரத்திற்கு ஓர்ஒழிபு கூறுதல் நுதலிற்று.

(இ-ள்) செய்யுளின் இடைக்கண் இருமொழி பெற நின்று முன்னும் பின்னுமாகிய ஈரிடத்தும் பொருள்களுடன் எடுத்து நிரைக்கும் இடைஇணை நிரல்நிறையும் கூறுமிடத்து ஒன்று உளதாம் என்றவாறு.

**அருள் மனையாளாய் உவந்தது ஆழியான் கோடு**
**பொருதிரைப்பால் தெள்அமிர்தில் போந்தது - திருஅரங்கம்**
**பூம் பதுமக்கண் முகிழ்த்துப் புத்தேளிர் கைதொழ மால்**
**பாம்பணைமேல் வைகும் பதி.** (398)

இஃது இடைஇணை நிரல்நிறை.

(இ-ள்) இடைநின்ற திருஅரங்கம் என்னும் தொடர்மொழியைத் திரு அரங்கம் எனப் பகுத்து இருமொழி ஆக்கித் திரு ஆழியான் அருளோடும் கூடிய பாரியாய் உவந்தது; அரங்கம் மால் பாம்பணைமேலாய்ப் பள்ளிகொள்ளும் பதி

என முன்னும் பின்னும் நிரல்நிறை ஆக்கி முடிக்க. அல்லாது, ஆழியான் ஆகிய மால் பாரியாய் உவந்தது திரு; புத்தேளிர் கைகளால் தொழப் பாம்பணைமேல் வைகும் பதி அரங்கம் எனச் சேர்த்துக் கொண்டுகூட்டு எனினும் ஆம். கோடு - கரை. போந்தது - தோன்றியது. ஆதலால் பரமபதத்தினும் திருப்பாற்கடலினும் சேய்த்தாயவன், உலகத்து உயிர்கள் ஈடேற அர்ச்சாவதாரமாகிச் சேவித்தற்கு எளிதாய் அணித்தாய்க் கண்வளர்கின்றான்; அவனைச் சேவிப்பார் இம்மைப்பயனாகிய அனைத்துச் செல்வமும், மறுமைப் பயனாகிய பேரின்பமும் பெறலாம்; சேவிப்பீராக என்பது பயன்.

[திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து.]

நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்நீர பேதையார் நட்பு (குறள்-782)

என்னும் குறட்பாவும் இது.

[ஆழியான் அருள்மனையாளாய் உவந்தது கோடு பொருதிரைப்பால் தெள்அமிழ்தில் போந்த திரு. பூம் பதுமக்கண் முகிழ்த்துப் புத்தேளிர் கைதொழ மால் பாம்பணைமேல் வைகும் பதி அரங்கம்.

நீரவர் கேண்மை பிறை நிறைநீர; பேதையார் நட்பு மதிப் பின்நீர எனப் பிறைமதி என்ற தொடர் இரண்டாகப் பிரித்துப் புணர்க்கப்பட்டுள்ளது. அறிவுடையார் நட்புக்கள் பிறை நிறையும் தன்மைபோல நாடோறும் நிறையும் தன்மையவாம்; மற்றைப் பேதைமை-உடையார் நட்புக்கள் நிறைந்த மதி பின் குறையும் தன்மைபோல நாடோறும் குறையும் தன்மையவாம்; அறிவுடையாரும் அறிவுடையாரும் செய்தன முன் சுருங்கிப் பின் பெருகற்கும், பேதையாரும் பேதையாரும் செய்தன முன் பெருகிப் பின் சுருங்கற்கும் காரணம் தம்முள் முன் அறியாமையும் பின் அறிதலுமாம். (குறள்-482 பரிமே.)] [88]

பூட்டுவில் நிரல்நிறை

**174. உரைபயில் முதல்ஈற்று உறும் பெயரொடு பெயர்**
**நிரைநிரை எதிர்பெற நிகழ்ந்து ஈறொடுமுதல்**
**புரைதீர்தர விற்பூட்டு உறுவதும் உள. [89]**

(எ-ன்) நிரல்நிறை என்னும் பொருள்கோள்அலங்காரம் பூட்டுவில் பொருள்-கோளொடு விரவுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) செய்யுளகத்து விட்டு நீங்காத பெயரொடு பெயர் எதிர்நிரல்நிறை அலங்காரமாக நடைபெற்றுச் செய்யுள்ஈற்றுப் பெயரொடு செய்யுள் முதல்நின்ற பெயர் எழுவாயுடன் எதிர்வனவாய் விற்பூட்டுப்பொருள்கோள் ஆவனவும் உள என்றவாறு.

**காவி கமலம் கமழ்தளவம் செங்காந்தள்;**
**ஆவி அனையாய்! அரங்கத்தான் - பூவில்**
**பிரமனைமுன் பெற்ற பெருமான் வரைமான்**
**கரம்முறுவல் ஆனனம் உண்கண்.** (391)

இது பெயரொடு பெயர் எதிர்நிரல்நிறை. எழுவாயும் ஈறும் எதிர்வனவாய்ப் பூட்டுவில்பொருள்கோள் ஆயிற்று.

பகுதி - பாங்கற்கூட்டம்; துறை - இயல்புஇடம் கூறல்.

["என்உயிர் போன்ற பாங்கனே! திருவரங்கத்தை உகந்தருளியிருப்பவனாய், உலகப்-படைப்பிற்கு முன் தன் உந்தியந்தாமரையில் பிரமனை மகனாகப் பெற்ற எம்பெரு-

மானுடைய மலையிலே மான் போன்ற தலைவியின் உண்கண் காவி. ஆனனம் கமலம், முறுவல் கமழ்தளவம், கரம் செங்காந்தள்'' என இறுதியிலுள்ள கண் என்னும் பெயர் காவி என்ற முதற்சீராம் பெயரோடு இணைந்து பொருள் தருவதால் இது பூட்டுவில்-பொருள்கோளாய் அமைந்த பெயரொடு பெயர் எதிர்நிரல்நிறை.
காவி - கருங்குவளை. தளவம் - முல்லை. முறுவல் - பற்கள். ஆனனம் - முகம். உண்கண் - மை தீட்டப்பட்ட கண்கள்.] [89]

20-ஆவது நிரல்நிறை முற்றும்.

21-ஆவது பூட்டுவில்அலங்காரம்

பூட்டுவில்அணி இலக்கணம்

**175. செய்யுளின் இறுவாய் எழுவாய் புணர்ந்து**
**மெய்யுறப் பொருள்நிலை விளக்கல் விற்பூட்டே. [90]**

(எ-ன்) வைத்த முறையானே (87) விற்பூட்டு அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று. இதன்பொருள் உரையில் கொள்க.
[ஒருசெய்யுளின் இறுதிச்சொல் முதல்சொல்லோடு தொடர்ந்து பொருள் பொருத்தமுற அமைவது, வில்லின் கீழ்க்கோடியில் உள்ள நாண் மேற்கோடியோடு பொருந்தி வில்லினைச் செயற்பட அமைவது போல்வதால், பூட்டுவில்அணி எனப்படும். இது பொருள்கோள்களுள் ஒன்றாக நன்னூலில் கூறப்பட்டுள்ளது.
'எழுவாய் இறுதி நிலைமொழி தம்முள்
பொருள்நோக்கு உடையது பூட்டுவில் ஆகும்'. நன். 415]

**வருமதற்கு முன்னே மதிள்கூருகூர் உள்புக்கு**
**இருமகிழ் மாறற்கு அடிமை என்னும்; - கருமம் இது;**
**மற்றுஒப்பு இல்லாத மதிப்புலவீர்! பாசமுடன்**
**கொற்றப் பகடுஏறிக் கூற்று. (400)**

இது விற்பூட்டு. இதனுள் 'கூற்று வருமதற்கு முன்னே' எனச் செய்யுள் இறுவாய் எழுவாயுடன் புணர்ந்து பொருள்நோக்கு உடைமை காண்க.
திணை - பாடாண். துறை - வாயுறைவாழ்த்து.
[தம்மை ஒப்பார் இல்லாத அறிவினை உடைய புலவர்களே! கையில் கயிற்றோடு உயிரைக் கவரக் கூற்றுவன் வெற்றிதரும் எருமைக்கடாவின்மீது ஏறி உம்மை நோக்கி வருவதற்கு முன்னரே, மதில்களை உடைய திருக்குருகூர் என்னும் திருத்தலத்துக்குச் சென்று, சிறந்த மகிழம்பூமாலையை அணிந்த மாறனுக்கு நீங்கள் அடிமை என்ற கூறி வாழுங்கள். நீங்கள் செய்ய வேண்டிய காரியம் இது.
நீர் என்னும் - இங்கு 'என்னும்' என்பது செய்யும் என்னும் வினைமுற்று அன்று; தொல்காப்பியத்துக்குப் பிற்பட்ட காலத்து, முன்னிலைப்பன்மைஏவலைக் குறிப்பிடப் பயன்படுத்தப்பட்ட முன்னிலைப்பன்மைவினைமுற்றாம்.
'நறுமுல்லைப் போது ஆரக்கொள்ளும் கமழ்குரற்கு' கலி - 32
'கொள்ளும்' என்னும் உம்ஈறு பன்மைஉணர்த்தி முன்னிலையாய் நிற்றல் 'இர்ஈர் மின்' (தொ. சொ. 226) என்பதனுள் கூறினாம் என்பது நச்சினார்க்கினியர் உரை.]

**மறவாது கூறும், மதிப்புலவீர்! என்றும்**
**பிறவாத பேறு பெறலாம்; - துறவாளர்**
**தோய்ந்த மறை ஆதிஅந்தம் துதிப்பதற்கு**
**வாய்ந்த முதல்திருநாமம். (401)**

இதுவும் விற்பூட்டு. துறவாளர் - மனத்தால் துறப்பனவற்றைத் துறப்பது ஆட்சியுடையார். மறை ஆதிஅந்தம் துதிப்பதற்கு வாய்ந்த திருநாமம் - அரி என்னும் திருநாமம். நாமம் மறவாது கூறும் எனப் புணர்க்க.

திணை - பாடாண்; துறை - செவியறிவுறூஉ.

[“நல்ல புத்தியை உடைய புலவர்களே! விடத்தக்க பற்றுக்களை மனத்தால் துறந்த சான்றோர்கள் ஓதும் வேதத்தை ஓதத் தொடங்கும்போதும் ஓதி முடிக்கும்போதும் துதிப்பதற்குப் பொருந்திய ‘ஹரி’ என்னும் திருப்பெயரை மறவாது கூறுங்கள். எக்காலத்தும் இனிப் பிறவி எடுக்காமையாகிய பாக்கியத்தை அத்திருநாமத்தை ஓதுதலால் அடையலாம்.” கூறும் - பிற்காலத்தது ஆகிய உம்ஈற்று முன்னிலைப்பன்மை ஏவல்வினைமுற்று. கூறுமின் என்னும் பொருளது. ‘ஆதிஅந்தம் அரியென யாவையும் ஓதினார்’ (3) என்ற இராமாயணப் பாயிரப்பாடல் கருத்தும் உணரத்தக்கது.] [90]

21-ஆவது பூட்டுவில் முற்றும்.

## 22-ஆவது இறைச்சிப்பொருள்அலங்காரம்

### இறைச்சிப்பொருளணி இலக்கணம்

**176. கருப்பொருள் களனாம் கட்டுரை பயின்ற**
**பொருள்புறத்தனவாம் இறைச்சிப்பொருள்அணி. [91]**

(எ-ன்) வைத்த முறையானே (87) இறைச்சிப்பொருள்அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று. ஐந்துநிலத்தினும் அவ்வவ நிலங்களில் கருப்பொருளே தனக்கு நிலைக்களனாம் அழகிய உரையோடும் பொருந்திப் பொருள்புறத்தவாய்ப் பயன்தரும், இறைச்சிப்பொருள்அலங்காரம் என்றவாறு.

**ஏனலும் இறடியும் இடர்சிறிது இன்றா**
**வான்வளம் சுரத்தலும் வயின்வயின் வனப்புற**
**விளைத்தவர் பலரொடும் மிசைதிறத்து ஏவலின்**
**வளைத்து அரிகுநர் அரிதற்கு அருமையவாய்**
**ஒழிந்தபல் வளங்களும் ஓங்கின செழுந்தேன்**
**வழிந்து ஒழுகிய மகிழ்மார்பினன் வரைவாழ்**
**சேயரிக் கருங்கண் திருநுதல்!**
**வாய்மையின் வழாஅ மன் மரீஇய பைம்புனமே. (402)**

[“செந்தினையும் கருந்தினையும் நீருக்கு முட்டுப்பாடு சிறிதும் உறாத வகையில் வானம் பருவமழையைப் பொய்யாது பெய்தலால் இடங்கள்தோறும் அழகு மிகும்படி விளை-வித்த குறவர், அத்தானியங்கள் முற்றுதலான் அவற்றைப் பலரோடும் உண்ணும்-பொருட்டு அவர்கள் ஏவுதலால் பயிர்களை வளைத்து அவற்றை அடியில் அரியும் ஏவலர் அறுத்து முடிப்பதற்கு அருமையவாக, அவை இரண்டனையும் ஒழிந்த ஏனைய பலவளங்களும் அவற்றோடும் மிகுதியாகப் பெறப்பட்ட துடரிமலை சிறந்த தேன் வழிந்து ஒழுகும் மகிழம்பூவினை அணிந்த மார்பினை உடைய மாறனுக்கு உரிமை-யானது. அத்தகைய மலையில் வாழும் செவ்வரி பரந்த கரிய கண்களையும் அழகிய நெற்றியையும் உடைய தலைவியே! வாய்மையினின்றும் தவறாத நம்தலைவர் நம்மைச் சந்தித்த அழகிய மலைநிலங்களின் வளம் இத்தகையது” எனத் தலைவன் வரை-பொருட்குப் பிரிந்தகாலை தோழி தலைவனை இயற்பழித்தாள். வாய்மையில் தவறிய தலைவனுடைய மலை மழைவளம் குன்றிச் செழுமை மங்கியிருத்தல் வேண்டும். ஆனால் பருவமழை பொய்யாதாகச் சிறந்த வளங்களுடன் கூடியிருப்பது ஏன் என்று

வினவுவாள் போலத் தலைவன் வாய்மையில் தவறாத மேம்பட்டவன்போலும் என்ற கருத்துப் பெறப்பட வைத்தமை இறைச்சிப்பொருள்கோள் ஆகும்.]

இதனுள், 'வாய்மையின் வழாஅ மன்' என்பதே கூறவேண்டும் பொருள். அதன் புறத்தே, 'இங்ஙனம் வழாஅ மன் மரீஇய பைம்புனத்தும் ஏனல் முதலிய பல வளங்களும் அழகு மிக, வானும் தன்வளனாகிய புனலைச் சுரந்து பொழிவது என்?' என இறைச்சிப்பொருளணி தோன்றியவாறு காண்க. திருநுதல் அண்மைவிளி. 'வாய்மையின் வழாஅதோன்' என்றது இகழ்ச்சிக்-குறிப்பு. ஏனல் - செந்தினை. இறடி - கருந்தினை. வான்வளம் - மழை. சுரத்தல் - பெருகுதல். வயின்வயின் - இடம்தோறும் இடம்தோறும். விளைத்தவர் - விளைவித்தார். மிசைதிறத்து - துய்த்தற்பொருட்டு. அரிகுநர் அரிதற்கு அருமையவாய் - அறுப்பவர் அறுத்துத்தொலைத்தற்கு அரிய தன்மையவாகி. ஏனைய வளங்களும் - அவை இரண்டும் ஒழிந்த பலவளங்களும். ஓங்கின - அவற்றோடும் பெருத்தன. வழாஅ - வினை எதிர்மறுத்த வினைத்திரிசொல். பகுதி - வரைபொருட்பிரிதல்; துறை - தலைவனைத் தோழி இயற்பழித்தல்.

அகத்திற்கு உரியவாம் இறைச்சிப்பொருள்கோள்எல்லாம் மிகுதியாய் வருவன தலைவன்கொடுமை கூறுமிடத்துஎன உணர்க. ஏனை உவப்பினும் சிறுபான்மை வரும். இப்பொருள்கோள் கருப்பொருளே தனக்கு நிலைக்களனாக .வரும் என்பது இதற்கு முதல்நூல் செய்த ஒல்காப் புலமைத் தொல்காப்பினாரும் பொருளியலுள் 'இறைச்சி தானே பொருட்புறத்ததுவே' (தொ. பொ. 228) என்பதனாலும் கண்டுகொள்க.

[வழுவு என்ற வினையடியாகப் பிறந்த வழுவிய என்ற பெயரெச்சத்தின் மறை 'வழுவாத' என்பது. அது செய்யுட்குரிய வினைத்திரிசொல்லாய் 'வழாஅ' என்றாயிற்று. இறைச்சியாவது உள்ள பொருள் ஒன்றனுள்ளே கொள்வதொரு பொருளாகலானும், செவ்வன் கூறப்படாமையானும், தலைவன்கொடுமை கூறும் வழிப் பெரும்பான்மை பிறத்தலானும் வழுவாயிற்று. கருப்பொருட்குத் தெரித்து மொழியால் கூறப்படாத நேயம், கூறவேண்டுவதொரு பொருளின்புறத்தே புலப்பட்டு அதற்கு உபகாரப்படும் பொருள்தன்மையை உடைத்தாம் என்றவாறு. (தொ. பொ. 229 நச்.)]

**கறையடிச் சிறுகண் களிநல் யானை**
**அறை பொருக்குஎழ வெயில் அழல்உமிழ் அதரிடை**
**உருப்பம்அது ஆற்றாது உயங்கிய பிடியின்**
**அடிக்கீழ் அடிக்கடி அளிதக விலாழியைப்**
**பிணர்படு புழைக்கையின் பெய்துபெய்து ஆற்றி**
**உடன்அமர்ந்து ஒரீஇய ஒண்சுரம் ஊடுஅறுத்து**
**இகந்தவர், நின்கவின் இறந்துபாடு எய்த**
**நெடுநாள் வைகுநர் அல்லர்; இன்னே**
**செய்பொருள் முற்றுபு வருவர்;**
**மையமர் உண்கணாய்! வருந்தல் நீயே.** (403)

["உரல் போன்ற அடிகளையும் தன் உருவிற்கு ஏலாத சிறிய கண்களையும் மதக்-களிப்பையும் உடைய பெரிய களிறு, பாறை தகடுதகடாக வெடித்துச் சிதறுமாறு சூரியன் வெப்பத்தைச் சொரியும் கடத்தற்கு அரிய பாலைவழியில், கதிரவனுடைய வெப்-பத்தைப் பொறுக்கமுடியாது வருந்திய தன் பெண் யானையின் கால்கள் வைக்கப்படும் நிலத்தின்கீழ்ப் பலகாலும் தன் அன்பு மிகத் தன்வாயில் தோன்றும் நுரையைச் சருச்சரை பொருந்திய துதிக்கையால் எடுத்துப் பெய்துபெய்து வெப்பத்தை நீக்கி உள்ளமும் உடலும் ஒன்று எனக் கலந்து நடந்து கடந்து சென்ற, வெளிச்சம் மிகுந்த

பாலைவனத்தைக் கடந்து சென்று பொருள்தேடச்சென்ற நம்தலைவர், உன்மேனிஅழகு உன்உடலை விடுத்து நீங்குமாறு பலநாள்கள் அங்குத் தங்கியிருப்பவர் அல்லர்; இப்பொழுதே தாம் ஈட்டத் திட்டமிட்ட பொருளைத் தேடிக்கொண்டு மீண்டுவிடுவர். ஆதலின், மை எழுத விரும்பிய கருமைஉடைய கண்களை உடைய தலைவியே! நீ வருந்தாதே! " என்று தலைவன்பொருட்பிரிவிடைக் குறித்த பருவம் கண்டு ஆற்றாத தலைவியைத் தோழி ஆற்றுவிக்கும்போது, தலைவன் தலைவியிடத்து அன்பு வைக்கத்தக்க கருப்பொருட் செய்திகளை அவன் சென்ற நிலத்தின்கண் உள்ளனவாகக் கூறி அவள்வருத்தம் தணித்து வற்புறுத்தி ஆற்றுவித்தவாறு.]

இஃது, 'அன்புறு தகுந இறைச்சியுள் சுட்டலும், வன்புறை ஆகும் வருந்திய பொழுதே' (தொ. பொ. 231) என்பதனால், இறைச்சிப்பொருள் முற்கூறியவற்றின் வேறுபட வரும் என்கின்றது. என்னை? "முன்னே நெஞ்சத்து அன்புடையார் அதன்மேலும் 'களிறு தன்பிடியின் கறையடிவெப்பத்தினை விலாழியைக் கையால் வாங்கி அடிக்கடி இறைத்து ஆற்றி உடன்கொண்டு சுரத்தினைக் கடக்கும் அன்புடைத்து' என்றனர்; அவர் அதனை இப்பொழுதும் காண்பர் காண்" என்று அன்புறுதகுந கூறிப் பிரிவுஆற்றாதவட்குத் தோழி வற்புறுத்திய-வாற்றான் அறிக.

கறையடி - உரல் போன்ற அடி. அறை பொருக்கு எழ - பாறை தகடு தகடாக வெடித்துச் சிந்த. வெயில் அழல் உமிழ் அதரிடை - ஆதித்தன் அழலைச் சொரியும் கடத்தற்கு அரிதாய சுரத்துவழியில். உருப்பம் அது ஆற்றாது உயங்கிய பிடியின் - வெப்பமானதற்கு ஆற்றாது வருந்திய பிடியின். அடிக்கீழ் அடிக்கடி அளி தக விலாழியை - அப்பிடியின் அடிக்கீழ்ப் பலகாலும் அன்பு மிக விலாழியை. பிணர்படு புழைக்கையின் பெய்து பெய்து ஆற்றி - சருச்சரையை உடைய துளைக்கையால் இறைத்து வெப்பத்தை நீக்கி. உடன் அமர்ந்து ஒரீஇய - உள்ளும் உடலும் ஒன்ற எனக் கலந்து கடந்த. ஒண்சுரம் ஊடுஅறுத்து இகந்தவர் - ஒள்ளிய சுரத்தினது வழியைத் தொலைத்துக் கடந்தவர். நின்கவின் இறந்துபாடு எய்த - நின்மேனியின் அழகு மேனியை விடுத்துப் புறம்போக. நெடுநாள் வைகுநர்அல்லர் - நெடுநாள் அங்குத் தங்குவார்அல்லர். இன்னே செய்பொருள் முற்றுபு வருவர் - இக்காலத்துத் தாம் ஈட்டுதற்கு அமைந்த நிதி ஈட்டும் கருமம் முற்றி வருவர். மைஅமர் உண்கணாய் வருந்தல் நீயே - ஆகையால் மை எழுத விரும்பிய மையுண் கண்ணாய்! வருந்தாது இருப்பாயாக என்றவாறு.

பகுதி - பொருட்பிரிவு; துறை - வருத்தம் கண்டு தோழி வற்புறுத்தல்.

[விளக்கம் நச்சினார்க்கினியர் தொ. பொ. 231-க்கு வரைந்த உரையை உட்கொண்டு சொற்றது.]

**நீடிய வியன்சினை நிலாய்நறை விளைவுறு**
**பாடுஇமிழ் அருவிப் பனிவரை நன்னாட!**
**விட்டுஅகல்வு இன்றாய் விழுமியோர் நுவலும்**
**கட்டுரை மதியாக் காவலன் போலவும்**
**பாகரை அடங்காப் பகட்டுஉளம் போலவும்**
**மோகம் உற்றனையாய், மூதுரைப் படுத்திய**
**ஒருவழித் தணத்தல் உடன்கொண்டு ஏகல்என்று**
**இருவழித் தாயதில் இசைந்ததுஒன்று உள்ளாய்;**
**வயல்வளம் சிறந்த மருங்குஉடைப் பொன்னியுள்**
**புயல் படிந்ததுபோல் பொறி அரவணைத்துயில்**

**அரங்கனை வழிபட்டு அவன்அருட்கு இலக்காய்**
**வரம் பெறுநரின் யாம் மனம்மகிழ்வு எய்த,**
**விரைவொடு முயல்வையேல், விரைமென்**
**மரைமலர் மடந்தை நின்வயத்தினள் ஆமே.** (404)

["நீண்ட இடம் அகன்ற கிளைகளில் பொருந்தித் தேன் முற்றும்படியான, ஒலிக்கும் அருவியை உடைய குளிர்ந்த மலையைச் சார்ந்த நல்ல நாட்டை உடையவனே! அரசியற்கு அமைந்த நீதியை விட்டு நீங்குதலின்றி அமைச்சியல் முற்றவும் உணர்ந்தோர் காலமும் இடனும் துணிந்து உரைத்த உறுதிக் கட்டுரையை உறுதி என்ற உட்கொள்ளா மன்னனைப் போலவும், பாகனுக்கு அடங்காத மதயானையின் உள்ளம் போலவும் மயக்கம்உடையை ஆகி, அறிவு சான்ற உரையாக உன்அறிவினுள் கொளுத்திய ஒருவழித் தணத்தல், தலைவியை உடன்கொண்டு ஏகல் என இரு-முறையாய் வருவனவற்றுள் உன் அறிவுக்கு ஏதேனும் ஒன்று பொருந்துவதாக உட்கொண்டு ஒழுகும் குறிப்பும் உடையைஅல்லை ஆயினாய்! வயல்வளம் மேம்பட்ட இருகரை நிலங்களையும் உடைய காவிரிக்கரையில் மேகம் படிந்து கிடப்பதுபோலப் படப்புள்ளிகளை உடைய திருஅனந்தாழ்வானாகிய படுக்கையில் அறிதுயில் கொண்-டுள்ள அரங்கனை வழிபட்டு அவன்அருளைப் பெறுதற்கு உரியவராகித் தாம் சிந்தித்த வரம் பெற்றாரைப் போல, யாங்களும் மனம் மகிழ்வுஎய்த, விரைவொடு தாமரையில் வீற்றிருக்கும் திருமகளை அனைய தலைவியை மணம் செய்துகொள்ளும் செயலில் நீ முயல்வாயானால் இவள் உனக்கு உரிமையாவாள்" என்று வரையாது வந்துஒழுகும் தலைமகனைத் தோழி வரைவுகடாஅயது.]

இஃது, 'இறைச்சியில் பிறக்கும் பொருளுமார் உளவே, திறத்தியல் மருங்கின் தெரியுமோர்க்கே' (தொ. பொ. 230) என்பதனால் எய்தியது இகந்துபடாமல் காத்தது. என்னை? கருப்பொருள் பிறிதுஒருபொருட்கு உபகாரப்படும் பொருட்டு ஆதலே அன்றி, அக்கருப்பொருள்தன்னுள்ளே தோன்றும் பொருளும் உள; அஃது உள்ளுறைஉவமம் அன்று, இறைச்சி என்று ஆராய்ந்து கொள்ளும் நல்லறிவுடையோர்க்கு என்றார். இதனுள்ளும் அவ்வாறே அரசியற்கு அமைந்த நீதியை விட்டு நீங்குதலின்றி அமைச்சியல் முற்றவும் உணர்ந்தோர் காலமும் இடமும் துணிந்து உரைத்த உறுதிக்கட்டுரையை உறுதி என்று உட்கொள்ளா மன்னரைப் போலவும், பாகர்க்கு அடங்கா மதயானையின் உள்ளம் போலவும் மயக்கம் எய்தினையாய், முதிய உரையாக உனது உணர்வுள் கொளுத்திய ஒருவழித்தணத்தல் உடன்கொண்டு ஏகல் என இருமுறையாய் வருவனவற்றுள் உனது புத்திக்கு ஒன்று இசைவதாக உட்கொண்டு ஒழுகும் குறிப்பும் இல்லைஆயினை. இனியாயினும் பொன்னியுள் அரங்கனை வழிபட்டு அவன்அருட்கு இலக்காகித் தாம் சிந்தித்த வரம்பெற்றாரைப் போல, யாங்களும் மனம் மகிழ்வுஎய்த விரைவினோடும் வரைந்து கொள்வது முயல்வையேல், தாமரைமலர்மகளை அனையாள் நினக்கு உரிமையாவள் என்றமையால், இறைச்சியாயிற்று. என்னை? வண்டுகள் என்ற உவமை எச்சமாக நின்று, அவை தமக்குப் பின்னைக்குப் புசிப்பதாக வைத்த தேனின்விளைவை ஓர்ந்து அந்-நிலத்து வாழ்வார் மால்பு இயற்றிக் கொண்டுபோமாறு போல, நீயும் மேல் வரைந்துகொள்ளலாம் என்று இருக்கும் இவளையும் முதிர்ச்சிகண்டு அயலவர் பொன்அணிந்து கொடுபோவர் என உள்ளுறைஉவமை எய்திற்றேனும், பின்னர் நின்ற பொருளோடு இயையாமையின் இவ்வுவமம் உள்ளுறையுற்றுப் பொருள்-பயவாது, உவமையாகக் குறிக்கப்பட்ட அவ்வண்டுகள் எஞ்சிநிற்பது நோக்கமாக, நீ இனி வரைந்துகோடல் வேண்டும் என்று கூறுதலே கருத்தாதலை அறிவித்த-தால், இறைச்சியாய், நாட! என்பதனுள் வேறோர்பொருள் தோற்றுவித்து நின்றதாதலின்,

'நீடிய வியன்சினை நிலாய்நறை விளைவுறு, பாடுஇமிழ் அருவிப் பனிவரை நாட' (404) என்றது, பிறர் இவளைப் பொன்அணிந்து கொடுபோவர் என்னும் துணைஅன்றி, உள்ளுறைஉவமப்பொருளை முற்ற உணர்த்தாமை உணர்க.
கன்று தன் பயமுலை மாந்த முன்றில், தினை பிடிஉண்ணும் பெருங்கல் நாட (குறுந். 225) என்ற குறுந்தொகைப்பாட்டும், 'வேங்கை தொலைத்த' (கலி. 43) என்னும் குறிஞ்சிக்கலியும் அது.
பகுதி - வரைவுமுடுக்கம். துறை - வரைவுகடாதல்.
[மால்பு - நூல்ஏணி.

கன்றுதன் பயமுலை மாந்த முன்றில்
தினைபிடி உண்ணும் பெருங்கல் நாட
கெட்டிடத்து உவந்த உதவிக் கட்டில்
வீறுபெற்று மறந்த மன்னன் போல
நன்றிமறந் தமையாய் ஆயின் மென்சீர்க்
கலிமயில் கலாபத்தன்ன இவள்
ஒலிமென் கூந்தல் உரியவால் நினக்கே. (குறுந். 225)

இதனுள் 'தான் கெட்ட இடத்து உதவின உதவியை அரசஉரிமை எய்திய மன்னன் மறந்தாற்போல நீ இரந்து துயருற்ற காலத்து யான் தலைவியை நின்னோடு கூட்டிய செய்ந்நன்றியை மறவாது இன்று நீ வரைந்துகொள்வாய் ஆயின் இவள்கூந்தல் நினக்கு உரிய' என்றவழி, உவமையும் பொருளும் ஒத்து முடிந்தமையான் முன் நின்ற 'நாட' என்பது உள்ளுறைஉவமம் அன்றாய் இறைச்சியாம். என்னை? தன் கன்றிற்குப் பயன்பட்டு யானை பிறருக்கு உயிரைக் கொடுக்கின்ற தினையைத் தான் உண்டு அழிவுசெய்கின்றாற் போல, நீ நின்கருமம் சிதையாமல் பார்த்து எமக்கு உயிராகிய இவளைத் துயருறுத்தி எம்மை இறந்துபடுவித்தல் ஆகாது என்று உவமை எய்திற்றேனும், பின்னர் நின்ற பொருளோடு இயையாது இவ்வுவமம் உள்ளுறையுற்றுப் பொருள் பயவாது, இறைச்சியாகிய 'நாடன்' என்பதனுள்ளே வேறோர்பொருள் தோற்றுவித்து நின்றதேயாம் ஆதலின், 'முலைமாந்த' என்றது தன் கருமம் சிதையாமல் பார்த்து என்னும் துணையன்றி, உள்ளுறைஉவமப்பொருளை முற்ற உணர்த்தாமை உணர்க.

'வேங்கை தொலைத்த வெறிபொறி வாரணத்து
ஏந்து மருப்பின் இனவண்டு இமிர்பு ஊதும்
சாந்தமரத்தின் இயன்ற உலக்கையால்
ஐவன வெண்ணெல் அறைஉரலில் பெய்து இருவாம்
ஐயனை ஏத்துவாம் போல அணிபெற்ற
மைபடு சென்னிப் பயமலை நாடனைத்
தையலாய் பாடுவாம் வா'. (கலி. 43)

இதனுள் 'புலவு நாறியும் பூ நாறியும் தீதும் நன்றுமாகிய இறைச்சியாகிய உலக்கைகளால் தலைவனைப் பாடும் பாட்டோடே கலந்து கூறத்தகாத தெய்வத்தையும் பாடுவாம்' என்னும் பொருள் பயப்பச் செய்த இறைச்சியின் பொருளே பயந்தவாறும், இரண்டு-உலக்கையானும் பயன்கொண்டாற்போல் ஐயன்பெயர் பாடுதலால் பயன்கொள்ளாமை-யின் உள்ளுறைஉவமம் அன்மையும் காண்க.
இறைச்சி பற்றிய தொல்காப்பிய நூற்பாக்களும் அவற்றிற்கு நச்சினார்க்கினியர் உரைத்த உரையும் பெரும்பாலும் பின்பற்றப்பட்டுள்ளன.] [91]

22-ஆவது இறைச்சிப்பொருள் முற்றும்.

23-ஆவது பொருள்மொழிஅலங்காரம்

பொருள்மொழிஅணி இலக்கணம்

**177. ஊதிய மெய்ப்பொருள் உணர்த்தல் பொருள்மொழியாம். [92]**

(எ-ன்) வைத்த முறையானே (87) பொருள்மொழி என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஆன்மலாபமான உண்மைப்பொருள் புலவனால் செய்யுளிடத்து உணர்த்தப்படுவதும் பொருள்மொழி என்னும் அலங்காரம் என்று சொல்லப்படுவதாம் என்றவாறு.

இது 'தாஅன் நாட்டித் தனாது நிறுத்தல்' என்பதாம். உம்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது. அலங்காரம் என்பது அதிகாரத்தால் வருவிக்கப்பட்டது.

**இந்த உடல்பெற்று இருக்கப்பெறுபொழுதே**
**நந்திபுர விண்ணகர் மாலைச் - சிந்திப்பார்,**
**அன்று அறிவாம் என்னாது அறம்செய்வார், பேரின்பம்**
**சென்றுஅறிவார் நெஞ்சே! திடன். (405)**

(இ-ள்) நெஞ்சமே! நால்வகைத் தோற்றத்துள் பெறுதற்கு அரிய ஆரா அமிர்தமாம் இந்த மானுடஉடலம் பெற்றதோடு மின்னிலும் நிலையில்லாத இந்த யாக்கை இருக்கப்பெற்றபொழுதே, 'நாம் இதுபொழுது இளையம் ஆதலின் இறக்கும்ஞான்று சிந்திப்போம்!' எனக் கருதாதே, நந்திபுரத்திருமாலைக் காலம்பெறச் சிந்திப்பாரும், அறத்தினை நாள்தோறும் செய்வாரும், இவ்வுலகத்து இன்பம் எய்துவதோடும் அவ்வுலகத்துப் பேரின்பமும் எய்துவது உண்மையாம் என்றவாறு.

ஆதலால் நாமும் அவை செய்வதே நமக்கு உறுதி என்பது பயன். சிந்திப்பார், அறம்செய்வார், பேரின்பம் என்னும் மூன்றுஇடத்தும் உம்மை தொக்கனவாக விரிக்க. பொருள் என்பது மெய்.

பொருள் அல்லவற்றைப் பொருள்என்று உணரும்
மருளான்ஆம் மாணாப் பிறப்பு (குறள்-351)

என்பதனால் அறிக. திணை - வாகை; துறை - பொருளொடு புகறல்.

['ஊதிய மெய்ப்பொருள் உணர்த்தலும்' என்ற உம்மையால், ஏனையவாகிய பொருள்-இன்பங்களும் என்பது பெறப்பட்டது. தானாக ஒரு கருத்தை வெளியிட்டு அதனை நிலைபெறுத்தல் என்பது நன்னூல் குறிப்பிடும் எழுவகை மதங்களுள் ஒன்று. (நன். 11) நால்வகைத் தோற்றம் - தேவகதி, மக்கட்கதி, விலங்குகதி, நரகர்கதி என்பன. (சிந்தா. 374) மக்கட்பிறப்பு பெறுதற்கு அரிய ஆராஅமிர்தம் என்பது

'பேரஞர் இடும்பைஎல்லாம் பிளந்திடும் பிறப்புநீக்கும்
ஆர்அமிர்து அரிதில் பெற்றாம்' (சிந்தா. 377)

என்று சிந்தாமணியுள்ளும் கூறப்பட்டுள்ளது.

'மின்னின் நிலையில மன்னுயிர் யாக்கைகள்' (திருவாய்மொழி 13)

என்பதனை உட்கொண்டு 'மின்னினும் நிலையில்லாத இந்த யாக்கை' என்று உரையுள் கூறப்பட்டுள்ளது.

பொருளொடு புகறல் - மெய்இல் வையகத்து விழைவினை அறுத்து,
பொய்யில் தத்துவம் உரைத்தல் பொருளொடு புகறலாம்.] [92]

23-ஆவது பொருள்மொழி முற்றும்.

24-ஆவது அதிகஅலங்காரம்

அதிகஅணி இலக்கணம்

**178. ஆதாரத்தினும் ஆதேயம் பெருத்து**
**அகலம் பெறாது அடங்கியது எனல் அதிகம். [93]**

(எ-ன்) வைத்த முறையானே (87) அதிகம் என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.

இதன்பொருள் சூத்திரத்தானே விளங்கும்.

[தாங்கும் பொருளைவிடத் தாங்கப்படும் பொருள் பெரியதாய் மேலே பரவுவதற்கு வாய்ப்பு இல்லாமையால் தன்பரப்பினைச் சுருக்கிக்கொண்டது என்று குறிப்பிடுவது அதிகஅணி என்பதாம்.]

**வசைஇலா இரசதத்தினால் வயின்வயின் அமைத்த**
**அசைவுஇலாப் பனிவரைக்குலம் அளவிடற்கு அரிதாம்**
**திசைகள் எங்கணும் சென்று இடம்பெறாதவாம் அதனது**
**இசைகள் நின்றுஅவண் செறிந்து அடங்கிய எனல்ஆகும். (406)**

இஃது அதிகம். வசைஇலா இரதம் - மாற்றில் குறையாத வெள்ளி.

அசைவுஇலா - நடுக்கு அற்ற. இசைகள் - கீர்த்திகள். செறிந்து அடங்கியது - மிகவும் செறிந்தது. ஆதாரம் - பூமியும் ஆகாயமும். ஆதேயம் - கீர்த்தி. (குருகாமான்மியம்) துறை - நகரவாழ்த்து.

[மாற்றுக் குறையாத வெள்ளியினால் பலஇடங்களிலும் அமைத்த துளக்கம் அற்ற செய்குன்றுகள் அளவிடற்கு அரிய திசைகளின் எல்லைவரையில் சென்று மேல் பரவுவதற்கு இடம்பெறாமல் தம் கீர்த்திகள் திசைகளுக்கு உட்பட்ட பூமியும் வானமும் ஆகிய அவற்றின் பரப்பினுள் நெருங்கி அடங்கிவிட்டன என்று கூறலாம் - என்ற கருத்தமைந்த குருகாமான்மியப்பாடலில் ஆதேயமாகிய செய்குன்றுகள் ஆதாரமான பூமியும் வானமும் என்பனவற்றின் பரப்பையும் கடந்து பரவத்தொடங்கிப் பின் ஆதாரமின்மையின் தம்பரப்பினைச் சுருக்கிக்கொண்டன என்பது அதிகம் என்ற அணியாகும்.] [93]

24-ஆவது அதிகம் முற்றும்.

25-ஆவது வகைமுதல்அடுக்குஅலங்காரம்

வகைமுதல்அடுக்குஅணி இலக்கணம்

**179. பொதுப்பட ஒருவகை முதல்அடை புணராது**
**அடுக்கலும் வகைமுதல் அடுக்குஅணி எனத்தகும். [94]**

(எ-ன்) வைத்த முறையானே (87) வகைமுதல்அடுக்குஅணி உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) நால்வகைத் தோற்றத்துள் பொதுப்பெயர்க்கூட்டமான முதற்பொருள்களை அடைசினை புணராது, முதல்களை முதலாம்படி புலவன் செய்யுள்முழுதும் அடுக்குவதும் வகைமுதல்அடுக்குஅணியாம் என்றவாறு.

'வகைமுதல் அடுக்கு' என்பது பண்புத்தொகை. வகையாவன - மரம், விலங்கு, புள், மீன், ஊர்வன, மணி, பண், நாண், மக்கள், தேவர் எனக் கூறப்பட்ட ஒருபலவகை முதலாம்.

**மரவமும் கடம்பும் பனசமும் மருதும் வடமும் மாதவியும் மாதுளமும்**
**குரவமும் இலவும் திலகமும் விளவும் கொன்றையும் செருந்திலும் குமிழும்**
**அரசும் நாவலும் தான்றியும் அரீதகியும் ஆமலகமும் நரந்தமும் ஆம்**
**பிரமும் ஏலமும் சண்பகமும் வேழமும் சம்பீரமும் தழைந்துள ஒருசார். (407)**

இது மரமெனப் பொதுப்படக் கிடந்த வகைமுதல்களை அடைசினை புணராது எண்ணும்மைப்பட அடுக்கினதாம். துறை - நகரவாழ்த்து. (குருகாமான்மியம்)

**இந்தளம் முகாரி குச்சரி பௌளி மலைமை சீராகம் வயிரவி தனாசு**
**ஆகிரி வசந்தன் பழம்பஞ்சுரம் கொல்லி மருள் இந்தளம் சாதாரி சா-**
**மந்தம் மல்லாரி பந்து முகாரி ஆரியவராடி கொல்லவராடி**
**நைவளம் இராமக்கிரி குறிஞ்சி காம்போதி பூவாளி சௌராட்டம் நாட்டை**
**செந்துருதி அருமவதி தக்கேசி கௌடி கௌசிகம் மேகராகக்குறிஞ்சி**
**செவ்வழிப்பாலை விளரிப்பாலை செம்பாலை சீகாமரம் சிகண்டி**
**அந்தாளி மலகரி நளுத்தை காந்தாரம் - முரல்அளி செறியும் வகுளமார்பன்**
**அமலன்வரு கனகதண்டிகை வாழ்வினைக் காண ஆயிரம்கண் வேண்டுமே. (408)**

இது - பண் இராகம் எனப் பொதுப்பட்ட வகைமுதல்பொருள்களை அடைசினை கூடாது அடுக்கின வகைமுதல்அடுக்கு.
பகுதி - பாடாண் சார்ந்த பொதுவியல். துறை - பவனிவாழ்த்து.
["இந்தளம் முதல் காந்தாரம் ஈறாகிய பல பண்களையும் இராகங்களையும் ஒலிக்கும் வண்டுகள் செறிந்த மகிழம்பூமாலையை அணிந்த மார்பனாகிய தூயோனாம் மாறன் தங்கப்பல்லக்கில் வரும் பேரழகினைக் காண ஆயிரம்கண்கள் வேண்டும்" என்று மாறன் பவனிவரக் கண்ட பொதுமக்கள் வாழ்த்தும் வாழ்த்துப்பாடலில், பல பண்களும் இராகங்களும் அடைமொழி ஏதும் கொடாமல் அடுக்கப்பட்டமை வகைமுதல்-அடுக்காம்.] [94]

25-ஆவது வகைமுதல்அடுக்கு முற்றும்.

26-ஆவது இணைஎதுகைஅலங்காரம்

இணைஎதுகை இலக்கணம்

**180. வாய்ந்த யாப்பினுள் வரும் இணைஎதுகை**
**ஆய்ந்த எதுகை அணிஎனத் தகுமே. [95]**

(எ-ன்) வைத்த முறையானே (87) இணைஎதுகைஅலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) வெண்பா, ஆசிரியம், கலி, வஞ்சி, மருட்பா, பரிபாடல் ஏனைப் பாவினம் எனத் தோன்றப்பட்ட செய்யுளகத்துப் பெருகவரும் இணைஎதுகை நடை-யினையும் எதுகைஅலங்காரம் என்று கூறவும் தகும் என்றவாறு.
மேலைச்சூத்திரத்துள் அடுக்கலும் என்னும் உம்மையைச் சிங்கநோக்காக்கி அதற்கு, மேலே புதியனவாகக் கூறியவற்றிற்கும் இது முதலாக முன்னர்ப்

புதியனவாகப் புணர்த்தவற்றிற்கும் தகும் என்றதனை ஆண்டும் ஏற்றிக்கொள்க. 'ஆய்ந்த' எனவே இதுவும் 'தான் குறியிடுதல்' என்னும் தந்திரஉத்தியுள் அடங்கும்.

[மேலைச்சூத்திரம் - வகைமுதல்அடுக்குப் பற்றிய நூற்பா. 'அடுக்கலும் அணி எனத்-தகும்' என்பதனைச் சிங்கநோக்காக முன்னும் பின்னும் கொண்டு முன்னர் உரைத்த பொருள்மொழி முதலியனவும் அணிஎனத் தகும் எனவும், பின்னர் உரைக்கும் இணைஎதுகை முதலியனவும் அணி எனத்தகும் எனவும் இவ்வாசிரியர் தாமே அணி என்று கூறிப் பொருளணிகளுள் அடக்குவன எல்லாம் கொள்ளப்படும். இங்ஙனம் ஒரு செய்தியை அணி என்று கூறி அதற்கு ஆசிரியர் ஒரு பெயரிடுதல் 'தான் குறியிடுதல்' என்னும் இலக்கணஉத்தியுள் அடங்கும். நன்னூலார் கருத்தால் தான் குறியிடுதல் முதலியன உத்தியாம். தொல்காப்பியனார் கருத்தால் உத்திவகையுள் ஒன்றாம். உத்தி பற்றிய நன்னூல், தொல்காப்பிய நூற்பாக்களை நோக்குக.]

**கணையும் பிணையும் கடுவும் வடுவும்**
**இணைஒன்றிய விழியார் எய்தார் - துணைதனக்குத்**
**தானே எனும்மாயன் தங்காலுள் வேள்கணைக்கும்**
**யானே இலக்கு ஆகுவேன்.** (409)

இஃது இணைஎதுகை அலங்காரம். இதனுள் 'வேள் கணைக்கும்' என்றதனால் ஒழிந்த படைக்கும் இலக்காயது பெற்றதாம். திணை - ஆண்பால்கூற்றுக் கைக்கிளை. துறை - புணர்ச்சி பெறாது அழுங்கல்.

["அம்பினையும் பெண்மான் பார்வையினையும் விடத்தினையும் மாவடுவினையும் தமக்கு ஒப்பாகப் பெற்ற கண்களை உடைய தலைவி எனக்குக் கிட்டுபவள்அல்லளாய் உள்ளாள். ஆதலின் தன்னை ஒப்பார் பிறர் ஒருவரும் இல்லாத எம்பெருமானுடைய திருத்தண்கால் என்ற திருத்தலத்தில் யானே மன்மதனுடைய அம்புகளுக்கும் இலக்காக உள்ளேன்" என்று தான் எதிர்பார்த்த தலைவியின்கூட்டம் கிட்டப்பெறாது வருந்திய தலைவன் கூறியதாக அமைந்த இப்பாடலில், கணையும் பிணையும் எனவும் கடுவும் வடுவும் எனவும் அடுத்தடுத்து அமைந்த இருசீர்களின் முதலெழுத்து அளவு ஒத்து நிற்ப இரண்டாம்எழுத்து அவ்வெழுத்தாகவே வருதல் இணைஎதுகை என்னும் அணியாகும்.
மன்மதன் கணைக்கும் என்ற உம்மையால், முழங்கும் கடல் ஒலிக்கும், அன்றிலின் ஒலிக்கும், வாடையின் தாக்குதலுக்கும், சந்திரன் கிரணங்களுக்கும், வேய்ங்குழல் ஒலிக்கும் - இவ்வாறு தலைவி கிட்டப்பெறாத நிலையில் எனக்குப் பகையாக அமைந்து என்னை வருத்தும் பொருள்களுக்கு எல்லாம் யான் இலக்கமாயினேன் என்ற எச்சப்-பொருளை விரித்துக்கொள்க.]

'ஆய்ந்த எதுகை' என்றதனால் மூவசைச்சீர் முழுதுஒன்று இணைஎதுகை அலங்காரமும் உள.

**துடிஇடையார் பிடிநடையார் துணைமலையாம் இணைமுலையார்**
**அடிபிடியா மடிபடியா அணைந்து அழிசாந்து அகலத்தாய்**
**வடிபுரைமாண் கருநெடுங்கண் மடநல்லார் நாடுகில்இப்-**
**படிஇரத்தல் பழுதுஒன்றால்; பற்றேல், எம்கைத்தலமே.** (410)

இது மூஅசைச்சீர் முழுதுஒன்று இணைஎதுகை அலங்காரம். 'துணைமலையாம் இணைமுலையார் அடிபிடியா' என்பது உபயமலைபோலும் உபயமுலையை உடையராம் பரத்தையர் பாதத்தை நீ பிடித்து என்க. மடிபடியா என்பது இடக்கர். 'அணைந்து அழிசாந்து அகலத்தாய்' அதன்பின்னர் அவர்களைத் தழுவுதலால் அழிந்த சந்தனத்தைஉடைய மார்ப என்க.

'இப்படி இரத்தல்' என்பது இவ்வணம் நின்று நீ எம்முடன் குறையிரத்தல் என்பதாம். பற்றேல் என்பது அல்ஈற்று வியங்கோள் வினைச்சொல். 'அல்' ஏல் என ஈறு திரிந்ததாம்.
பகுதி - பரத்தையின்பிரிதல்; துறை - பள்ளியிடத்து ஊடல்.

[முதல் எடுத்துக்காட்டு ஈரசைச்சீர் ஒன்றிய இணைஎதுகைக்கு உரியது. பற்றல் என்பது பற்றேல் என்றாயிற்று. இஃது எதிர்மறை வியங்கோள்.
"துடி போன்ற இடையினையும், பெண்யானை போன்ற நடையினையும், ஒன்றற்கு ஒன்று வடிவு ஒத்த இரு மலைகள் போன்ற இரு முலைகளையும் உடைய பரத்தையரின் அடிகளில் வணங்கி அவர்களைத் தன்வசப்படுத்தி, அவர்களோடு கலவிஇன்பம் நுகர்ந்து அதனால் மார்பில் பூசிய சந்தனம் அழியப்பெற்று, அந்த நிலையில் நீ எம் இல் வந்து எம்மிடம் இவ்வாறு எம்முடைய கலவி உனக்குத் தேவை என்று எங்களை வேண்டுதலை, மாவடுவகிர் போன்ற கரிய நெடிய கண்களை உடைய இளையவர்களாகிய உன்பரத்தையர் தெரிந்துகொள்வாராயின், உன்னிடம் அவர்கள் கொண்டுள்ள நட்புக்குப் பழுது ஏற்படும். ஆதலின் எம்கைகளைப் பிடிக்காதே" என்று பரத்தையின் பிரிந்து இல்லம் வந்து தலைவியை நுகர விரும்பிய தலைவனிடம் படுக்கையிலே ஊடிய தலைவிகூற்றாக அமைந்த இப்பாடலில், 'துடிஇடையார் பிடிநடையார்' 'துணைமலையாம் இணைமுலையார்' 'அடிபிடியா மடிபடியா' என இணைஎதுகையணி மூவசைச்சீர்களில் அமைந்தமையின் மூவசைச்சீர் முழுதுஒன்று இணைஎதுகை அணியாம்.]

**குயில்போல்மொழியும் அயில்போல்விழியும் கொடிபோல்இடையும் பிடிபோல்-**
**நடையும்**
**பயில்வோர்அரவில் துயில்வோர்மயிலைப் பதியார்முகமா மதியார்முலைதான்**
**மயில்போல்இயலாள் பயலாம்நதியும் மதியும்பதியும் சடையார்விடையார்**
**எயில்போர்பொருநாள் வளைவார்சிலையே எழில்வாள் நுதலும் புதலும்-**
**சிலையே. (411)**

இதனுள் நாலசைச்சீர் முழுதுஒன்றியதூஉம் காண்க. துறை - இயல்புஇடம் கூறல். (திருப்பதிக்கலம்பகம்)

[குயில்போல்மொழியும் அயில்போல்விழியும்; கொடிபோல்இடையும் பிடிபோல்-நடையும் - இவை நாலசைச்சீர் முழுதும் ஒன்றிய இணைஎதுகை.
பயில்வோர் - துயில்வோர்; பதியார் - மதியார்; மயில்போல் - இயலாள்; மதியும் - பதியும்; சடையார் - விடையார்; நுதலும் - புதலும்; இவை ஈரசைச்சீர் ஒன்றிய இணைஎதுகைகள்.]

["பாம்பில் அறிதுயில்கொள்ளும் எம்பெருமானுடைய திருஅல்லிக்கேணித் திருத்தலத்தை உள்ளடக்கிய மயிலாப்பூரில் வாழும் தலைவி குயில் போன்ற மொழி, வேல் போன்ற விழி, கொடி போன்ற இடை, பெண்யானை போன்ற நடைபயிலுதல், மதி போன்ற முகம், தம் சடையின் பாதியில் மயில் போன்ற இயல்பினை உடைய கங்கைநதியும், மீதிப்பகுதியில் பிறைச்சந்திரனும் பொருந்தப்பெற்ற சடையினை உடையராய், காளையை வாகனமாக உடையராய், திரிபுரங்களை எதிர்த்துப் போரிட்டபோது சிவபெருமான் வளைத்த நீண்ட வில் போன்ற அழகிய ஒளி பொருந்திய நெற்றி, அவ்வளைத்த வில் போன்ற புருவம், வில்லாக வளைக்கப்பட்ட மலை போன்ற தனங்கள், இவற்றை உடையவள் என்னால் விரும்பப்பட்ட தலைவி" என்று தலைவன் தன்பாங்கனிடம் தன்தலைவியின் இயல்பும் அவள் இருக்கும் இடமும் கூறியவாறு. 'முலைதான் சிலையே' என்று கூட்டிப் பொருள்செய்க.] [95]

26-ஆவது இணைஎதுகை முற்றும்.

27-ஆவது விரோதஅலங்காரம்

விரோதஅணி இலக்கணம்

**181. சொல்பொருள் முரணத் தொடுப்பது விரோதம். [96]**

(எ-ன்) வைத்த முறையானே (87) விரோதம் என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) சொல்லினாலும் பொருளினாலும் மாறுபாடு தோன்றப் புணர்ப்பது விரோதம் என்னும் அலங்காரமாம் என்றவாறு. [96]

விரோதஅணியின் வகைகள்

**182. அதுவே,**
**சொல்லும் பொருளும் ஒருமையின் பன்மையின்**
**தம்மின் முரணும் சால்பு ஒருநான்காய்ச்**
**சொல்லும் பொருளும் சொல்லொடும் பொருளொடும்**
**ஒல்லுபு முரணலின் ஓர்ஐந்து ஆகும். [97]**

(எ-ன்) இஃது அவ்விரோதஅணியினை விரித்துஉணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) அச்சொல்லப்பட்ட விரோதம் என்னுமது, சொல்லொடும் பொருளொடும், ஒருமையிலும் பன்மையிலும் தம்மில் தாம் மாறுகொள்ளும் ஒழுக்கம் ஒரு-நான்காயும் அவ்விரண்டும் சொல்லொடு பொருளும் பொருளொடு சொல்லும் விரவிப் பொருந்துபு மாறுகொள்வதோடும் ஐந்தாகும் என்றவாறு.
[சொல்லும் சொல்லும் முரணியது, பொருளும் பொருளும் முரணியது, சொல்லும் பொருளும் சொற்களோடு முரணியது, பொருளும் சொல்லும் பொருளொடு முரணியது, சொல்லும் பொருளும் சொல்லொடும் பொருளொடும் முரணியது என முரண்அணி என்னும் விரோத அலங்காரம் பொதுவாக ஐந்து வகைப்படும்.]

**மெய்உரைப்பார் என்பதுபொய்; மெல்லியலாள் இன்று எமையும்**
**பொய்உரைப்பார் என்று புகலுமே; - பைஅரவில்**
**ஆடும் திருமால் அரங்கத்தே தேர்வலவா!**
**ஓடும் புயல் முந்துஉறின்.** (412)

இது சொல்லும் சொல்லும் முரணியது. மெய் பொய் என்பது பொருளன்றிச் சொல் முரணினமையான் என்று அறிக.
'செவ்வி வாய்ந்த செம்பாட்டு ஈரத்து, வெள்ளை வெண்மதி' என்பதும் இது. அடிமுரண்.
பகுதி - பொருட்பிரிதல்; துறை - பாகனொடு கூறல்.
["படம்எடுக்கும் ஆதிசேடன்மீது அறிதுயிலை அனுபவிக்கும் திருமாலுடைய திருத்-தலமாகிய தலைவி உறையும் திருவரங்கத் திருப்பதிக்கு விரைந்து செல்லும் மேகம் நம் தேருக்கு முன்னே சென்றுவிடுமாயின் 'நம்தலைவர் உண்மை பேசுபவர் என்பது பொய்யான செயல்; நம் தலைவரும் பொய் உரைப்பவர் ஆகிவிட்டார்' என்று இன்று என்தலைவி கூறுவாள் ஆதலின், தேரை விரையச் செலுத்து" என்று, பொருள்தேடி மீண்டு வரும் தலைவன் தேர்ப்பாகனுக்கு உரைத்த இப்பாடலில், மெய், பொய் என்ற இருமுரண்பட்ட சொற்கள் வந்தமையால் இது சொல்லும் சொல்லும் முரணியதாம்.
செவ்வி வாய்ந்த செம்பாட்டு ஈரத்து
வெள்ளை வெண்மதி -
முதலடியில் 'செவ்' என்பதும் அடுத்த அடியில் வெள்ளை என்பதும் சொல்அளவில்

முரண்பட்டன. செவ்வி என்ற சொல்லில் உள்ள 'செவ்' என்பதைக் கொண்டு சொல்-முரண் எனப்பட்டது. செவ்வி என்பதன் பொருள் பக்குவமான நிலை என்பது. எனவே இதன்கண் பொருள் பற்றிய முரண் இன்று.]

**செம்மையோர் வெண்மையோர்ஆகித் திடன்அழிந்தோர்-**
**தம்மைஓர்நட்பாகச் சார்வரோ? - எம்மைஓர்**
**ஆளாய் உவந்தான் அரங்கத்துள் ஆயிழையாய்!**
**வாளாது என்கண் புதைத்தவாறு?** (413)

இது பொருளும் பொருளும் முரணியது. செம்மையோர் எனவும் வெண்மை-யோர் எனவும் இரண்டு உயர்திணைப்பொருள் உளவாய்த் தம்மில் முரணிய-தால்எனக் கொள்க.

செம்மையோர் - அறிவுடையோர். வெண்மையோர் - அறிவுஇலாதோர். ஆளாய் உவந்தான் - அடிமையா ஆளுதற்கு விரும்பினோன். வாளாது - பேசாது. என்கண் புதைத்தவாறு - புறம் புல்கி என்கண்களைப் புதைத்தபடி யாதுதான் என்றவாறு. பகுதி - பரத்தையிற்பிரிதல்; துறை - நினைவறி கண்புதை. இஃது ஓர்அளவடிக்கண் இணைமுரண் ஆயிற்று. இவை இரண்டும் ஒருமை.

["அடியேனை அடிமையாக உவந்து ஏற்றுக்கொண்ட எம்பெருமானுடைய திருவரங்கத் திருத்தலத்திலே பேசாமல் முதுகுப்புறத்தைத் தழுவி என் தலைவியாகிய நீ என்-கண்களை மூடியதன் கருத்து யாது? அறிவுடையவர்கள் அறிவிலராகி ஒழுக்கத்தின் உறுதி நீங்கியவர்களைத் தம் நட்பாகக் கொள்ளுவரோ?" என்று பொருள்படும். செம்மையோர் என்பதும் அறிவிலார் என்று பொருள்படும் வெண்மையோர் என்பதும் சொல்லால் அல்லாமல் பொருளால் தம்முள் முரணியமை நாற்சீரடி கொண்ட இப்பாடலில் ஓரடியில் இணைமுரணாக வந்துள்ளது. முதற்சீரும் இரண்டாம்சீரும் முரணுவது இணைமுரணாகும். முதற்பாடல் சொல்லொடு சொல் முரண். இவ்விரண்டாம் பாடல் பொருளொடு பொருள் முரண். இப்பாடல்கள் சொல்லோ பொருளோ ஒன்று பற்றிய முரணாக அமைதலின் இவை இரண்டும் 'ஒருமை' எனப்பட்டன.

'நினைவு அறி கண்புதைத்தல்' மாறன்அகப்பொருளில் 501-ஆம் பாடலில் காணப்-படுகிறது.]

**வெந்தழலைத் தண்நீர்மை மேதகு வெண்சாந்துஎன்றே**
**சந்ததமும் பூசுவதுஎன்? தையல்மீர்! - பைந்துளபக்**
**கொத்துஅணிந்த தார்அழகர் கூடாநாள் கண்பனிநீர்**
**முத்துஅணிந்த பொற்பூண் முலைக்கு.** (414)

இது சொல்லும் பொருளும் சொற்களோடு முரணின. என்னை?

வெம்மை - வெப்பம். தனியே பொருள்இன்று இச்சொல். தழல் - பொருள். ஆதலால் அவை சொல்லும் பொருளுமாம். தண்நீர்மை; தண்மை - குளிர்மை. நீர்மை - நன்மை. இரண்டும் தனியே பொருள்இன்மையால் சேர்ந்து ஒரு சொல் ஆயின. மேதகு வெண்சாந்து - பெருமை பொருந்திய வெண்சாந்து. கண்பனி நீர்முத்து - கண்கள் சொரியாநின்ற கண்ணீராகிய முத்து.

திணை - பெண்பால்கூற்றுக் கைக்கிளை; துறை - மெலிவொடு கூறல்.

["தோழிமார்களாம் பெண்களே! பசிய திருத்துழாய்க்கொத்துக்களால் அமைந்த மாலையைச் சூடிய அழகராகிய எம்பெருமானை அனுபவியாத நாள்களில் கண்கள் சொரிகின்ற நீராகிய முத்துக்களை அணிந்த, பொன்னணிகள் சூடிய என்முலை-களுக்குக் கொடிய நெருப்பினைக் குளிர்ந்த இயல்பினைத் தரும் மேம்பட்ட வெள்ளிய சந்தனம் என்று நாள்தோறும் பூசுவதால் யாது பயன்? என்உள்ளத்து வெப்பம் குறைக்கப்-படவில்லையே!" என்ற தலைவிகூற்றில், வெந்தழல் என்ற சொல்லும் பொருளும் தண்நீர்மை என்ற சொல்லும் தம்முள் முரண்படக் காணப்படுவதால் இப்பாடலில்

சொல்லும் பொருளும் சொற்களோடு முரணின. ஈண்டுச் சொல்எனப்படுவது அடைமொழி; பொருள்எனப்படுவது அடைகொளி. முரணுதல் முதல் இரண்டுசீர்க்-கண்ணே என்று காண்க. சொல்லும் பொருளும் சொற்களோடு முரணின.]

**கண்கால் அருவி கொடுங்கைமேல் விழுந்துஒழுகும்**
**பெண்காதல் நீக்கலார்; பேதைமீர்! - மண்காவல்**
**பூண்டவராம் முன்னம் பொருகணையால் தேவியைமீட்டு**
**ஆண்டவராம் பேரருளாளர். (415)**

இது பொருளும் சொல்லும் பொருளொடு முரணின; என்னை? கண் பொருள்; கால் என்பது உறுப்புஅன்றி உகும் அருவி எனத் தனிநிற்கும் பொருள்இன்றிப் புனலினது கிரியை ஆதலால் சொல்; கொடுங்கை பொருள் ஆதலான் என்று அறிக.

திணை - பெண்பால்கூற்றுக் கைக்கிளை; துறை - கண்டு கைசோர்தல்.

["என் துன்பம் அறியாத தோழிமீர்! இவ்வுலகைப் பாதுகாப்பவரும் இராமாவதாரத்தில் போரிடும் அம்புகளால் தேவியை இராவணனிடமிருந்து மீட்டு ஆட்கொண்டவரும் ஆகிய மிக்க அருட்பண்பை உடைய எம்பெருமான், என்கண்கள் வெளிப்படுத்தும் அருவி போன்ற கண்ணீர், படுத்திருக்கும் நிலையில் தலைக்கு அணையாக மடக்கி வைத்திருக்கும் என்கைகளின்மேல் விழுந்து ஒழுகுகின்றது. இந்த நிலையில் அவரிடம் காதல் கொண்டுள்ள என் காதலை அவர் நிறைவேற்றுகிறார்அல்லர்" என்று இறைவனைக் கண்டு விரும்பி அவன்பிரிவால் மெலிந்த தலைவி கூறியது. இதன்கண் கண் என்பதும் உறுப்பாகிய பொருள். கை என்பதும் உறுப்பாகிய பொருள். கால் என்பது வினைப்-பகுதியாய் உறுப்பினை உணர்த்தாது அருவி என்ற சொல்லோடு சேர்ந்து வெளிப்-படுத்தும் என்ற பொருளைத் தரும் சொல். முரணுதல் 'கண்கால் அருவிகொடுங் கைமேல்' என முதற்சீர் மூன்றாம்சீர்க்கண் கொள்க. பொருளும் சொல்லும் பொரு-ளொடு முரணின. இரண்டாம் சீர்க்கண் அருவி - பொருள்; கொடுமை - சொல்.]

**கருவிடமும் வெண்மருந்தும் கைக்கொண்ட கண்அம்பு**
**இருபுருவ வில்கீழ் இலகும் - திருமகட்குக்**
**கற்றார் புகழ்மாறன் கார்வரைமேல் கோங்குஅரும்பு**
**முற்றாத பொற்பூண் முலை. (416)**

இதனுள் சொல்லும் பொருளும் சொல்லொடும் பொருளொடும் முரணின; என்னை? கருவிடம்: கருமை - சொல், விடம் - பொருள்; வெண்மருந்து: வெண்மை - சொல், மருந்து - பொருள் ஆதலான் அறிக. இதனுள் 'கைக்-கொண்ட கண்அம்பு' என்பனவும், அம்பு வில் என்பனவும் முரண். துறை - இயல்புஇடம் கூறல்.

[சான்றோர் புகழும் சடகோபனுடைய கரிய துடரிமலைமீது, திருமகள் போன்ற தலைவிக்குக் கரிய விடமும் அதனைப் போக்கும் வெளிய மருந்தும் ஆகிய இரண்டன் தன்மையையும் தம்இடத்துக் கொண்ட கண்களாகிய அம்புகள் இரண்டுபுருவங்களாகிய இருவிற்களின் கீழ் விளங்கும்; முதிர்ச்சி பெறாதனவாய் பொன்அணிகளை அணிந்-துள்ள அவள்முலைகள் கோங்குஅரும்பினை நிகர்க்கும் - என்று தலைவன் பாங்க-னிடம் தலைவியின் இயல்பையும் அவள் இருக்கும் இடத்தையும் கூறினான்.

கருமைக்கு வெண்மை சொல்முரண். விடத்திற்கு மருந்து பொருள்முரண். எனவே, 'கருவிடம் வெண்மருந்து' என்பன சொல்லும் பொருளும் சொல்லொடும் பொருளொடும் முரணின. முரணுதல் முதல் இருசீர்க்கண்ணும் கொள்க. 'கைக்கொண்ட கண்அம்பு' - கை கண் என்பன சொல்லொடு சொல்முரண். அம்பு வில் என்பன பொருளொடு பொருள்-முரண்.]

'தம்மின் முரணும் சால்பு' என்பதனால், இணைமுரண் முதலாகிய ஏழு விகற்பமும் ஒருசெய்யுளகத்து வரும் விரோதஅலங்காரமும் உள. அவை வருமாறு:

**அறிவுஇலர் உணர்வுஉளர் எனுமவர் அளவினில்**
**அருவமொடு ஒளிர்திரு உருவமது உடையனை,**
**எளியனை அடியவர்க்கு, ஏனையோர்க்கு அரியனை,**
**கனவிலும் நனவிலும் அறிதுயில்கண்ணும்**
**வெண்சங்கு ஆழி செம்மணிப் பொன்முடி**
**காலையும் மாலையும் கண்டுநன் பகலினும்**
**இன்புஉறத் துன்பம்அற்று, இம்பரொடு உம்பர்**
**நறவுஆர் மலர்மகள் நாதனை**
**மறவாதவர்பதம் வழுத்தும், என்நாவே.** (417)

இதனுள், இணைமுரண் முதலிய ஏழு விகற்பமும் முறையே வந்தவாறு காண்க. முரணாவது விரோதம். உலகத்துள் பொருள் எல்லாம் காட்சிப்பொருளும், கருத்துப் பொருளும் ஆம் எனினும் ஈண்டுக் கருத்துப் பொருள் சொல்லாயிற்று. இதனுள் அறிவுஇலர், உணர்வுஉளர் - பொருளும் பொருளும். அருவமொடு உருவம் - சொல்லொடு பொருள். ஒழிந்தனவும் மொழியினும் பொருளினும் முரணினவாறு கண்டுகொள்க.

திணை - பாடாண்; துறை - பழிச்சினர்ப் பணிதல்.

["அறிவு இல்லாதவரும், மெய்யறிவு உடையவரும் தத்தம் நிலைக்கு ஏற்ப அருவமாக வழிபடுவதற்கும் ஒளிவீசும் திருவுருவமாக வழிபடுவதற்கும் உரியவனாய், அடியவர்களுக்கு எளியனாய் அடியர் அல்லாதார்க்குக் கிட்டுதற்கு அரியனாய், அறிதுயில்கொண்ட எம்பெருமானுடைய கண்களையும் வெள்ளிய சங்கினையும் சக்கரத்தையும் செய்ய இரத்தினங்கள் பதிக்கப்பட்ட பொன்முடியையும் கனவுநேரத்திலும் விழித்திருக்கும் நிலையிலும், காலையிலும் மாலையிலும் நண்பகல்நேரத்திலும் மனக்கண்ணால் கண்டு துன்பம்அற்று இன்பத்தை நுகருமாறு, இவ்வுலகத்தவருள்ளும் தேவர்உலகத்தவருள்ளும், தேன் நிரம்பிய தாமரையில் வாழும் திருமகளுடைய கணவனாய் உள்ள எம்பெருமானை மறவாத அடியவர்களுடைய திருவடிகளை அடியேனுடைய உள்ளம் எப்பொழுதும் போற்றிப் புகழும்" என்றபடி. இதனுள்

அறிவிலர் உணர்வுஉளர் - இணைமுரண் - சீர்கள் 1, 2
அருவமொடு ... உருவம் - பொழிப்புமுரண் - சீர்கள் 1, 3
எளியனை ... அரியனை - ஒரூஉமுரண் - சீர்கள் 1, 4
கனவு நனவு துயில் - கூழைமுரண் - சீர்கள் 1, 2, 3
வெண்சங்கு செம்மணி பொன்முடி - மேற்கதுவாய்முரண் - சீர்கள் 1, 3, 4
காலை மாலை நண்பகல் - கீழ்க்கதுவாய்முரண் - சீர்கள் 1, 2, 4
இன்பம் துன்பம் இம்பர் உம்பர் - முற்றும்முரண் - சீர்கள் 1, 2, 3, 4
அறிவிலர் உணர்வுளர் - பொருளொடு பொருள் முரண்
அருவம் உருவம் - பொருளொடு பொருள் முரண்
எளியன் அரியன் - பொருளொடு பொருள் முரண் (எளிமை அருமை என்ற பண்புகளே கொள்க.)
கனவு நனவு அறிதுயில் - பொருளொடு பொருள் முரண்
வெண்மை, செம்மை, பொன்மை - சொல்லொடு சொல் முரண்
காலை மாலை நண்பகல் - பொருளொடு பொருள் முரண்
இன்பம் துன்பம் - பொருளொடு பொருள் முரண்
இம்பர் உம்பர் - பொருளொடு பொருள் முரண்

இவ்வாறு சொல்பற்றியோ பொருள்பற்றியோ இப்பாடலில் இணை, பொழிப்பு, ஒரூஉ, கூழை, மேற்கதுவாய், கீழ்க்கதுவாய், முற்று என்ற சீர்பற்றிய முரண்தொடைவிகற்பம் ஏழும் வந்துள்ளன.] [97]

27-ஆவது விரோதம் முற்றும்

28-ஆவது உபாயஅலங்காரம்

உபாயஅணியின் இலக்கணம்

**183. ஒருபயன் கோடற்கு உறுபொருட்டு எனலாம்**
**ஒள்ளிய சூழ்ச்சி உணர்த்துதல் உபாயம். [98]**

(எ-ன்) வைத்த முறையானே (87) உபாயம் என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) யாதாயினும் ஓர்ஊதியம் கோடற்கு மிக்க காரணம் என்று கூறப்படுவதாம் முக்கியமானது ஒருசூழ்ச்சியை உணர்த்துதல் உபாயம் என்னும் அலங்காரமாம் என்றவாறு.

சூழ்ச்சி - உணர்வோடு உசாவி உண்டான உறுதிஅறிவாம்.

**சூடிக் கழித்த துளபச்சருகுஎனினும்**
**நாடித் தருக திருநாகையாய்! - ஊடிப்**
**புலவாததற்கும் நினது அருட்கும் பொற்றோள்**
**கலவாத எற்கும் நலம் காண். (418)**

இஃது உபாயம்.

(இ-ள்) நாகையின்கண் வாழும் மாதவனே! நினது மார்பத்தைத் தோய்வதற்கு விரும்பிய வேட்கையைஉடைய எனக்குத் திருமகள் விட்டுநீங்காத திரு-மார்பத்து அணைவதற்குக் கூடாதாயினும், அத்திருமார்பில் சூடிக் கழித்த துளபமாலிகைச்சருகையாகிலும் நினது திருவுள்ளக்குறிப்பால் தருக. அங்ஙனம் திருவுள்ளக்கருணையில் உட்கொண்டு தருதல், பெரியபிராட்டி நின்னுடனே ஊடி அதன்மேலும் புலவாது நலன்எய்துதற்கும் உபாயமாம்; நினது திருவருள்-நலன் எய்துதற்கும் உபாயமாம்; நினது திருப்புயத்தினை ஆலிங்கனம் செய்யாத எனக்கு நலன்எய்துதற்கும் உபாயமாம் என்றவாறு.

நலம் என்பது ஆகுபெயர். அதனை எங்கும் ஏற்றுக.

திணை - பெண்பால்கூற்றுக் கைக்கிளை. துறை - தாமம் பெறாது தளர்வுற்று உரைத்தல்.

[ஊடிப் புலவாததற்கும் நலம்; நினது அருட்கும் நலம்; எற்கும் நலம் என்று நலம் என்ற சொல் மூவிடத்தும் கூட்டி உரைக்கப்பட்டது. நலம் ஆகுபெயராய் நலம்தரும் செயலைக் குறிக்கிறது. துளபச்சருகைப் பிறருக்கு எம்பெருமான் ஈந்தால் பெரியபிராட்டியார் ஊடல்கொண்டு வெகுளார் என்பது.]

**மன்கரம்பை மாயோன் வரு களிறே! வேள்சிலையாம்**
**கொள்கரும்பை நின்பனைக்கைகொண்டு நின்று - தின்பைஎனின்,**
**இக்கரும்பின் மோகமும்போம்; ஈதே உபாயம்; உனக்கு**
**அக்கரும்பால் தாகமும் இன்றாம். (419)**

இதுவும் உபாயம்.

(இ-ள்) கரம்பனூர் உத்தமன் வாகனமாக வரு களிறே! நீ இவனைக்கொண்டு உலாவரும் பவனி கண்டு இவன்மார்பத்தை விரும்பின இவளை எய்வதற்குக் காமன் எடுத்த கைச்சிலையான கரும்பை உனது பனைபோன்ற கையினால் பற்றி முன்நின்று தின்பைஎனின், இக்கரும்பு போன்ற மொழியினை உடையாள் மையலும் தீரும்; உனது பசியும் தீரும். ஆதலால் இருதலைக்கும் இதுபோல் தெள்ளிய சூழ்ச்சி பிறிது இல்லை என்றவாறு.

ஏகாரம் பிரிநிலை ஆதலால், பிறிதுஉபாயம் இல்லை என்பதாயிற்று.
திணை - பெண்பால்பெருந்திணை. துறை - பவனிகண்டு அழுங்கிய பைந்தொடி தோழி 'இவள் உயிர் தருக' என ஏற்றம்வேண்டல்.
[கரம்பனூரில் உள்ள எம்பெருமானுடைய திருப்பெயர் உத்தமன் என்பது. இக்காலத்துக் கரம்பனூர் உத்தமர்கோயில் என வழங்கப்படுகிறது. மன்மதன் வில்லாகிய கரும்பினை யானை தின்றுவிட்டால் மன்மதனுக்கு அம்பு எய்வதற்கு வில் இல்லாமல் போகவே, அவன்அம்பு எய்ய வாய்ப்பு இராது எனவே, தலைவி மன்மதன்அம்புகளிலிருந்து உய்யலாம். யானைக்கும் கரும்பு நல்ல உணவாகும். ஆதலின் கரும்பினை அழிப்பது தலைவி, யானை என்ற இரு திறத்தும் பயன்தரும் செயலாம். ஈதே உபாயம் என்புழி ஏகாரம் பிரிநிலை. வேறு உபாயம்ஒன்றும் இன்று என்பதாம்.
இவ்வுரையாசிரியர் கூறியுள்ள துறை புதுவது புணர்த்தவற்றுள் ஒன்று.] [98]

28-ஆவது உபாயம் முற்றும்.

29-ஆவது விசேடஅலங்காரம்

விசேடஅணியின் இலக்கணம்

**184. சாதி குணம்தொழில் பொருள்இடம் உறுப்புஎன்று**
**ஓதிய இருமூன்றினும் உறு குறைபடல்**
**ஏதுவின் அதற்குஅதற்கு இசை மேம்பாட்டால்**
**நீதிகொள் புலவர் நிகழ்த்துதல் விசேடம். [99]**

(எ-ன்) வைத்த முறையானே (87) விசேடம் என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) சாதியும் குணனும் தொழிலும் பொருளும் இடனும் உறுப்பும் என்னும் ஆறினும் மிக்க குறை உண்டாதல் காரணமாக, அதற்குஅதற்கு இசை மேம்பாட்டானே இலக்கணநீதி உட்கொள்புலவர் கூறுவது விசேடமாம் என்றவாறு.
[சாதி குணம் தொழில் பொருள் இடம் உறுப்பு இவற்றால் ஒருவர்க்குக் குறைபாடு உண்டேனும், இவற்றால் நிறைவுஉடையார் செய்யமுடியாத செயலை அவ்வொருவர் செய்ததாகச் சிறப்பித்துக்கூறுதல் விசேடஅணியாம்.]

**கொச்சைப் பொதுவர்குலச் சிறுவன் சிற்றடிமீது**
**இச்சைப்படு பார்த்தன் இட்டமலர் - நிச்சயமாய்**
**முன்னாள் முடிக்கொண்டான் முக்கட்கடவுளாம்;**
**என் நாம் உரைப்பேம், இதற்கு?** (420)

இது சாதிக்குறை விசேடம். கொச்சை - ஆடு. நிச்சயம் - உண்மை. இதற்கு - இப்பெருமைக்கு. என் நாம் உரைப்பேம் - யாம் யாது உரைப்பேம்; என்பது ஆச்சரியம். துறை - கடவுள் வாழ்த்து.
["விருப்புற்ற அர்ச்சுனன் ஆடுமாடு மேய்க்கும் இடைக்குலச்சிறுவனான கண்ணனுடைய திருவடிகளில் இட்ட பூக்களைத் தவறாமல் முக்கண்ணனாகிய சிவபெருமான் தன்முடிமீது ஏற்றுக்கொண்டான் என்றால், இச்சிறப்புப்பற்றி நாம் யாது சொல்லவல்லேம்?" என்ற இப்பாடலில், இடைச்சாதியில் இருந்த கண்ணனுடைய திருவடிகள் சிவபெருமான்திருமுடியை விஞ்சிய சிறப்புடைமை கூறப்பட்டுள்ளது. கண்ணன் வாழ்ந்த சாதி குறைபாடுடையதேனும், அவன் சிறப்புப் பெருந்தேவரையும் விஞ்சிய

திறன் கூறப்பட்டமையால், இப்பாடல் சாதிக்குறை விசேடம். 'தீர்த்தன் உலகளந்த' (பிரபந்தம் 2869) என்ற திருவாய்மொழிப்பாசுரத்தைத் தழுவியது இது.]

**வண்ண மகிழ்மாறன் வாய்மலர்ந்த நாள்மூரல்**
**வெண்நிலவு சற்றே விரியாமுன் - கண்அகன்ற**
**தானம்அளவும் விரிந்தனவே, தத்துவமெய்ஞ்-**
**ஞானம் எனும் வெண்ணிலா.** (421)

இது குணக்குறை விசேடம். மூரல் வெண்ணிலவு - திருமுத்தின் வெண்மை (முத்து-பல்). கண் அகன்ற தானம் - பரமபதம்.
திணை - வாகை. துறை - சால்புமுல்லை.

[அழகிய மகிழம்பூமாலையை அணிந்த மாறனுடைய வாயிலமைந்த பற்கள் புன்முறு-வலால் சிறிது வெளிப்பட, அவ்வொளி சிறிதளவு வெளிப்படாமுன்னர், தத்துவஞானம் என்னும் வெள்ளிய நிலவு பரமபதம்வரையில் விரிந்து பரவியது - என்ற கருத்தமைந்த இப்பாடலில், பற்களின்ஒளி சிறிது வெளிப்பட்ட அளவிலே ஞானவொளி பரமபதம்-அளவும் பரவிற்று எனப் புன்முறுவலின் பண்பாகிய ஒளி வெளிப்படுவதைக் குறைவாகக் கூறி அவ்வளவிலேயே ஞானஒளி பரமபதம்வரை விரிந்தது என அதன்சிறப்பை விளக்கி உரைத்தலின், இது குணக்குறை விசேடம் ஆயிற்று.]

**தில்லைத் திருச்சித்திரகூடத்தான் திருக்கை**
**வில்லைக் குனித்து அருநாண் வீக்காமுன் - பல்பெரும்போர்**
**தாக்கினார் என்னும் சலநிருதர் மெய்உற நாண்**
**வீக்கினான், தென்திசைவாழ் வேந்து.** (422)

இது தொழில்குறை விசேடம். குனித்து - குனிக்க. அருநாண் - அறுதல் இல்லாத வில்சரடு. வீக்காமுன் - கட்டாமுன். சலநிருதர் - தீயநெறியை உடைய அரக்கர். தென்திசைவாழ் வேந்து - இயமன்.
திணை - வாகை; துறை - வில்வென்றி; பேராண்முல்லையும் ஆம்.

[தில்லைத் திருச்சித்திரகூடத்தில் உகந்தருளியிருக்கும் எம்பெருமான் இராமாவதா-ரத்தில் தன்கையிலிருந்த வில்லை வளைப்பதற்கு அறுதல் இல்லாத நாணை அதன்கண் பிணைப்பதற்கு முன்னர், பல பெரிய போர்களில் பகைவர்களைத் தாக்கினவர் என்ற புகழ்பெற்ற வஞ்சனையை உடைய அரக்கர் மீது தென்திசைத்தலைவனாகிய இயமன் அவர்கள் உயிரைப் பிணிக்கப் பாசக் கயிற்றைக் கட்டி இறுக்கினான் - என்ற கருத்து அமைந்த இப்பாடலில், இராமன் வில்லை வளைப்பதற்குமுன் எனத் தொழில் முழுமையாகத் தொடங்காத செய்தியைக் கூறி, அதற்குள் பகைஅரக்கர் உயிர் நீத்தனர் என அவன் வில்லாண்மைச்சிறப்பைக் கூறுதலின் இது, தொழில்குறை விசேடம் ஆயிற்று.]

**உள்ளபடியே உழக்கு என்னும் தண்டுலத்தால்,**
**வெள்ளம் எனவே விருந்துஉறினும், - நள்அரணத்து**
**ஆவிதான் அன்புஉற்று அமுதுஅமைத்தாள், ஐவருக்கும்**
**தேவிஆம் செல்வத் திரு.** (423)

இது பொருட்குறை விசேடம். தண்டுலம் - அரிசி. வெள்ளம் - வெள்ளம் என்னும் இலக்கம். நள்அரணம் - நடுக்காடு. அமுது அமைத்தல் - அசனம் நிறைத்தல்.
திணை - பொதுவியல்; துறை - இல்லாண்முல்லை.

[உழக்கு என்ற சிறிய அளவினதாகிய அரிசியைக் கொண்டு, மிகப்பெரிய எண்ணிக்-கையில் விருந்தினர் வந்தபோதும், தன் மனத்தில் கருதியபடியே, அந்நடுக்காட்டில் மனத்து அன்போடு நிறைவாக உணவினைச் சமைத்துப் படைத்த பெருமையுடையவள், பாண்டவர் ஐவருக்கும் தேவியான செல்வத்தால் திருமகளை ஒத்த திரௌபதி - என்று

கூறும் இப்பாடலில், உழக்கு அளவினதே ஆகிய அரிசி எனப் பொருளின் குறைந்த அளவினைக் கூறி, அதுகொண்டு எண்ணற்ற விருந்தினருக்குத் திரௌபதி வயிறு நிறைய உணவுசமைத்துப் பரிமாறினாள் என அவளுடைய சிறப்பினைக் கூறுதல் பொருட்குறை விசேடம் ஆகும்.]

**ஆலந்தளிருள் அடங்கும் ஒரு புனிதப்**
**பாலன் பசித்த சிறுபண்டிக்கே - மேலைநாள்**
**பல்லாயிரமாகப் பாரித்த பேரண்டம்**
**எல்லாம் அடங்கிற்று எனும். (424)**

இஃது இடக்குறை விசேடம். புனிதப்பாலன் - அநிருத்தன். பாரித்தது - பாத்தினது. பேரண்டம் - அளவிறந்த அண்டம்; 'பெரிய யோனிகள் பிழைத்து இவண் மானிடம் பெறலே' (சிந். 2748) என்பதனால் அறிக. எனும் - என்று புராணங்கள் கூறும். துறை - கடவுள்வாழ்த்து.

[ஊழிப்பெருவெள்ளத்தில் ஓர் ஆலந்தளிருக்குள் படுத்திருக்கும் படைப்புக் கடவுளாகிய வியூகஅநிருத்தன் என்ற பெயரிய எம்பெருமான், இளங்குழவியாய்த் தோன்றிய-காலத்து, அவனுடைய பசியை உடைய சிறிய வயிற்றினுள் புதிய ஊழி தோன்றும்போது பல்லாயிரக்கணக்கான பெரிய உலகஉருண்டைகள் யாவும் அடங்கிக் கிடந்தன என்று புராணங்கள் கூறும் - என்னும் இப்பாடலில், சிறுவயிறாகிய குறைந்த இடத்திலே பல உலகங்களையும் உள்ளடக்கிய சிறப்புக் கூறப்பட்டிருப்பதால், இஃது இடக்குறை விசேடம். பாரித்தது - பரவியது.
பெரிய யோனிகள் - மக்கள், தேவர், நரகர், விலங்கு என்ற நால்வகைத் தோற்றத்தால் பெரியவாகிய பிறப்புக்கள். இப்பிறப்புக்கள் தோன்றுவதற்கு உரிய உலகங்கள் பலவாத-லின், உலகங்கள் பல என்பதற்கு இச்சிந்தாமணி அடி மேற்கோளாகக் காட்டப்-பட்டுள்ளது.]

**கரமும் சிரமும் கணக்கின்று, உரமும்**
**வரமும் வரம்புஇன்று, அரக்கர்; - சரராமன்**
**தான்மானிடன், இருகை, சானகியை நீங்குதளர்-**
**வான்ஆகவும், வென்றனன். (425)**

இஃது உறுப்புக்குறை விசேடம். கணக்குஇன்று - எண்ணிறந்தன. அரக்கர் - மூலபலப்படை. தளர்வான் - தளர்ச்சியை உடையான். ஆகவும் வென்றனன் - இத்தனை எல்லாம் உறுப்புக்குறை உண்டாயிருக்கவும் வென்றான்; என்ன ஆச்சரியமோ என்பதாம்.
முன்னுள்ள இடக்குறை விசேடத்திற்கும் 'இஃது என்ன அகடிதகெடித சாமர்த்-தியகுணமோ!' எனக் கூட்டுக.
திணை - வாகை; துறை - பேராண்முல்லை.

[மூலபலப்படையிலிருந்த அரக்கர்களுக்குக் கைகளும் தலைகளும் கணக்கின்றி இருந்தன; அவர்களுடைய வலிமையும் வரபலமும் வரம்புஇன்றி அமைந்து இருந்தன. அவ்வாறாகவும், தன்மனைவியாகிய சானகியைப் பிரிந்த தளர்வினை உடைய, இருகைகளை உடைய மனிதனாக அவதரித்திருந்த எம்பெருமான், அவர்கள்-எல்லோரையும் வென்றான் - என்று கூறும் இப்பாடலில், மனத்தில் மனைவியைப் பிரிந்ததால் ஏற்பட்ட மெலிவு, இரண்டே கைகள், வலிமையற்ற மனிதப்பிறப்பு என்ற குறைவுற்ற உறுப்புக்களை உடைய இராமன், உடல் வலிமையும் வரங்களின் வலிமையும் பலகைகளும் பலதலைகளும் உடைய அரக்கர்பலரை வென்ற சிறப்பு எடுத்துக்கூறப்பட்டிருப்பதால், இஃது உறுப்புக்குறை விசேடம்.
அகடிதகெடித சாமர்த்தியம் - சேராதனவற்றைச் சேர்த்து வைக்கும் தெய்விக ஆற்றல்.

இந்த ஆற்றலே இடக்குறையையும் உறுப்புக்குறையையும் சிறப்பித்து அவற்றை முறையே இடக்குறை விசேடமும் உறுப்புக்குறை விசேடமும் ஆக்கிற்று.] [99]

29-ஆவது விசேடம் முற்றும்.

30-ஆவது சமாயிதஅலங்காரம்

சமாயிதஅணி இலக்கணம்

**185. ஒருவினை முயன்றதனால் உறுபயனை மற்று**
**ஒருவினை தர உறுவதுவே சமாயிதம். [100]**

(எ-ன்) வைத்த முறையானே (87) சமாயிதம் என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) முதலே ஒருவர் ஒருவினையை முயல அதனால் எய்தும் காரியத்தைப் பிறிதுஒன்றன் வினை தர, அது காரணமாக அக்காரியத்தை எய்துவது சமாயிதம் என்னும் அலங்காரமாம் என்றவாறு.

**ஊடினாள்; ஊடியபின் உள்ளத்து உவகைஎழ**
**வாடினாள்; வண்சுடர்தான் வாடையினால் - வீடியதால்,**
**காதலன் பொன்ஆகம் கலந்தாள், அருள்கலப்ப;**
**மாதவன்தன் மோகூர் மயில். (426)**

இது சமாயிதம். இதன்பொருள் வெளிப்படை. கூற்றான் விளங்கும். பகுதி - பரத்தையிற்பிரிதல். துறை - துறைகூறல்.

["எம்பெருமானுடைய திருமோகூரிலிருக்கும் ஆண்மயில் போன்று கண்ணுக்கு இனிய மென்மையை உடைய தலைவி தலைவனோடு அவனுடைய பரத்தையிற் பிரிவை உட்கொண்டு கோபித்தாள்; கோபித்தபின்னர்த் தலைவனுடைய அன்பின்மையை நினைத்து வாடினாள்; வளமான விளக்கு வாடைக்காற்றினால் அவிந்ததனால் உள்ளத்து அருளோடு மகிழ்ச்சி தோன்றக் காதலனுடைய பொலிவை உடைய மார்பினை ஊடல்நீங்கித் தழுவினாள்" என்று அமைந்த இப்பாடலில், தலைவியினுடைய ஊடலைத் தலைவன் உணர்த்தி நீக்க முடியாத நிலையில் வாடைக்காற்று விளக்கை அவித்துத் தலைவியின் ஊடலை நீக்கியது என்பது கூறப்பட்டிருப்பதால் இது சமாயிதஅணி ஆகும்.

துறை - துறைகூறல் என்பது இவ்வுரையாசிரியர் கூறும் புதுச்செய்தியாகும். ('விளக்கு அவிந்தது' என்பதே பழைய வழக்கு. 'விளக்கு அணைந்தது' என்பது புதுவது புகுதல்.)] [100]

30-ஆவது சமாயிதம் முற்றும்.

31-ஆவது ஏதுஅலங்காரம்

ஏதுஅணியின் இலக்கணம்

**186. ஏதுஎன்பது இதனின் இஃது ஆயதுஎன்று**
**ஓதுவதுஆம்என உரைத்தனர் புலவர். [101]**

(எ-ன்) வைத்த முறையானே (87) ஏது என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) ஏது என்று கூறப்படுவது இப்பொருள்திறத்தினான் இதனிடத்து இஃது உண்டாயது என்று கூறப்படுவதாம் என்று கூறினர் அறிவுடையோர் என்றவாறு. [101]

ஏது வகை

**187. அதுவே,**
**காரகம் ஞாபகம்என இருகாட்சிய.** [102]

(எ-ன்) இஃது அவ்வலங்காரத்தின் கூறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) அச்சொல்லப்பட்ட ஏது எனத் தொகையான் ஒன்றாய்நின்ற அது காரக-ஏது, ஞாபகஏது என இருவகைப்படும் என்றவாறு.
[காரகம் - செயற்படுதல். ஞாபகம் - அறிவான் அறிதல்.] [102]

காரகஏதுவின் விரி

**188. அவற்றுள்,**
**முதலது முதல்வனும் கருவியும் கருமமும்**
**காலமும் இடனும் கண்ணிய நெறித்தாய்ப்**
**போக்குஅறு பொருளொடும் புகல்இரு மூன்றினும்**
**ஆக்கமும் அழிவும்என்று அமர்தரு விரித்தே.** [103]

(எ-ன்) இஃது அவ்இருவகையினும் காரகஏதுவின் விரித்தொகை உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) அக்காரகம் ஞாபகம் இரண்டனுள், முதலே வந்த காரகஏது முதல்வன் முதலாக இடம் ஈறாகக் கூறப்பெறும் ஐந்தினோடும் கருதப்பட்ட மார்க்கத்தை உடைத்தாகியும், குற்றம்அற்ற பொருளோடும் கூடி அறுமார்க்கத்தினும், ஆக்கமும் அழிவும் என்று பொருந்தும் விரியை உடைத்தாம் என்றவாறு. [103]

முதல்வனின் வகை

**189. ஏவல்முதல்வன் இயற்றுதல்முதல்வன் என்று**
**ஆவயின் வரும் முதல்வனும் இரண்டாகும்.** [104]

(எ-ன்) இஃது அவ்வாறனுள் முதலே வந்த முதல்வன்கூறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) அக்காரகஏதுவின்கண் வரும் முதல்வனும் ஏவல்முதல்வன், இயற்றுதல்-முதல்வன் என இருவராவர் என்றவாறு.
முதல்வன் என்பது கருத்தா. முதல்வனும் என்ற உம்மையால் கருவியும் முதற்கருவியும் துணைக்கருவியும் என இரண்டாம். கருவி என்பது காரணம். இவற்றிற்கு எல்லாம் செய்யுள் வருமாறு:

**சீதரனே நாதன்எனத் தேர்ந்து உலவாப் பொன்உலகை**
**ஆதரவால் தன்உலகுஎன்று ஆக்கினான்; - மாதராய்!**

**எங்கள்மாறன் குருகூர் எம்பிரான் இன்அருள்கூர்ந்து**
**அங்கண்ஞாலத்து உதித்தே, அன்று. (427)**

இது கருத்தா காரகஏது. திணை - பாடாண்; துறை - பழிச்சினர்ப் பணிதல்.

["பெண்ணே! எங்கள் குருகூர்த்தலைவனாகிய மாறன் கருணைமிக்கு ஒருகாலத்தில் அழகிய இடத்தை உடைய இவ்வுலகில் அவதரித்துத் திருமகள் கேள்வனே பரம்பொருள் என்று தெளிந்து அந்த அன்பினாலே அழியாத பரமபதத்தைத் தனக்குரிய உலகமாக ஆக்கிக்கொண்டுவிட்டான்." இதன்கண், பொன்னுலகைத் தன்உலகு ஆக்குதல் - காரியம். மாறன் - கருத்தா. அவன் செயல் 'சீதரனே நாதன்' எனத் தேர்தல். கருத்தாவின் செயல் காரியம் நிகழக் காரணம் ஆயினமையின் இது கருத்தா காரகஏது.]

**பல்வளைக்கைச் சானகிதோள் பைம்பொன் தடக்கையால்**
**வில்வளைத்து மேல்நாளின் மேவினான்; - சொல்வளையா**
**மெய்ம்மாதவர் சேர் அரிமேயவிண்ணகர்வாழ்**
**பெம்மான், இமையோர் பிரான். (428)**

இது கருவிக் காரகஏது. சொல் வளையா மெய்ம்மாதவர் - உரை தவறா உண்மை உடைய மாதவர். கருவி - தடக்கை. இது முதற்கருவி. வில்லும் நாணும் முதலியன துணைக்கருவி. திணை - வாகை; துறை - வில்வென்றி. இவைஇரண்டும் செய்வதன் தொழில் ஆக்கம்.

["உரை தவறாத உண்மை உடைய பெருந்தவத்தினர் வழிபடும் அரிமேய விண்ணகரத்தை உகந்தருளியிருக்கும் இறைவனாகிய, நித்தியசூரிகளின் தலைவனாகிய எம்பெருமான், இராமாவதார காலத்தில் பசிய பொன் போன்ற அழகிய நீண்ட கைகளாலே வில்லை வளைத்துப் பலவளையல்களைக் கைகளில் அணிந்திருந்த சானகியினுடைய தோள்களைப் பொருந்தினான்."

இதன்கண், எம்பெருமானுடைய திருக்கையாகிய முதற்கருவி, வில்லும் நாணும் முதலிய துணைக்கருவி இவற்றின் செயற்பாட்டினால் சானகிதோள் சேர்தலாகிய காரியம் நிகழ்ந்தமையால் இது கருவிக் காரகஏது. ஆக்கம் - நன்மை.]

**ஆழிஉடையான் பொன்ஆழி கொடுத்து ஏவ**
**ஆழி கடந்து அன்று அடல்அனுமன் - ஆழி**
**அளித்தலின், கைக்கொண்டு அணைத்த ஆகம்போன்று ஆவி**
**தளிர்த்ததுவே, சானகிக்குத் தான். (429)**

இது கருமக் காரகஏது. திணை - பாடாண் சார்ந்த பொதுவியல். துறை - கலன் கண்டு களித்தல். கருமம் - திருவடி திருஆழியைக் கொடுத்தலால் பிராட்டி திருக்கைகொண்டு அணைத்தல். இதுவும் ஆக்கம்.

["சக்கராயுதத்தை உடைய திருமாலாகிய இராமன் வலிமை மிக்க அனுமனிடம் தன் பொன்மோதிரத்தைக் கொடுத்துப் பிராட்டியிடம் தூதுசெல்லுமாறு ஏவ அவ்வனுமன் கடலைக் கடந்து பிராட்டியிடம் எம்பெருமான் மோதிரத்தைக் கொடுத்ததனால் அதனைக் கைக்கொண்டு தழுவிய அவளுடைய உடலைப் போன்று உயிரும் தளிர்த்தது." அனுமன் எம்பெருமான்மோதிரத்தைக் கொடுத்த செயலாகிய காரணத்தால் பிராட்டியின் உடலும் உயிரும் தளிர்த்த செயல் நிகழ்ந்தமையின் இது கருமக் காரகஏது. இதுவும் நன்மையாகிய காரியம் தந்தது. அனுமனால் ஆழி கொடுக்கப்பட்டது. ஆழி - கருமம் (ஆகிய செயப்படுபொருள்).]

**போற்றிப் படைத்த பொருள் மாறன்அன்பரையே**
**போற்றிப் புறத்த பொருள்இரண்டும் - வேற்றுமையாய்க்**
**கொள்ளாது, எமையும் உடன்கொள்களன்று எதிர்ந்தஎன**
**விள்ளா விழிநீர் மிகும். (430)**

இதுவும் அது. புறத்த பொருள்இரண்டும் என்பன - அறனும் இன்பமும். 'கொள்கென் றெதிர்ந்தஎன விள்ளா' என்பது எம்மையும் கைக்கொள்வாயாக எனப் படைத்த பொருளை உடைய காரிமாறப்பிரான் அன்பரை முயற்சியின்றி எதிர்கொண்டன என யான் வாய்திறப்ப அக்காலத்து என்றவாறு. விழிநீர் மிகும் - துன்பக்கண்ணீர் மிகாநின்றது என்றவாறு. இதனுள் கருமம் 'வாய்திறப்ப' என்றது. இஃது அழிவு. இவ்விரண்டும் செய்விப்பதன் தொழில்.

பகுதி - பொருள்வயின் பிரிதல். துறை - வாட்டம்கூறல். தலைவன் கூற்று.

[''யான் பொருட்பிரிவு குறித்துச் சொல்லியஅளவிலே, 'நீங்கள் விரும்பிப் படைத்த பொருளால் மாறனுடைய அன்பர்களையே பாதுகாத்து, ஏனைய அறத்தையும் இன்பத்தையும் நுமக்கு அயலனவாகக் கொள்ளாமல், எங்களையும் உங்கள்பொருட்பிரிவின்போது வீட்டில் தனித்திருந்து வருந்தவிடாமல் உங்களுடன் அழைத்துச் செல்வீராக' என்று வேண்டிய தலைவியின் கண்களில் கண்ணீர் நிறைந்துவிட்டது'' என்பது தலைவன்கூற்று. தலைவன் பொருட்பிரிவுகுறித்துக் கூறியது கருமம். அதன்காரியம் தலைவி தானும் உடன்வருவதாகக் கூறிப் பிரிவுநினைத்துக் கண்ணீர் ததும்பல். கருமத்தின் காரியம் தலைவிக்கு வருத்தம் தருதலின் இஃது அழிவுபற்றியது. இதுவும் கருமக் காரகஏது. முதல்எடுத்துக்காட்டு ஆக்கம். இஃது அழிவு. தலைவன் பொருள்வயின்பிரிவு குறித்துக் கூறியது தலைவியால் கேட்கப்படுதலின், செயப்படுபொருளாகிய கருமம்.]

**தோலாத மாவலிபால் தொல்உலகம்மூன்றும் இரு**
**காலால் அளந்து முனம் கைக்கொண்டான் - மேலாய**
**அத்தியூர் நின்றான் அடியர்தமக்கு அழியா**
**முத்திஊர் காட்டும் முதல். (431)**

இதுவும் கருவிக் காரகஏது. இதன்பொருள் உரையிற் கொள்க. துறை - கடவுள்வாழ்த்து.

[''மேம்பட்ட திருஅத்தியூரில் நின்ற திருக்கோலத்தில் உகந்தருளியிருக்கின்றவனாய், அடியார்க்கு முத்தியடைந்தோர் எய்தும் இடமாகிய பரமபதத்தைக் காட்டும் முதல்வனாகிய எம்பெருமான், போரில் தோல்வியுறாத மகாபலியிடம் தான் வாமனனாய் அவதரித்த அக்காலத்து மூவடிமண் தானம் பெற்றுத் திரிவிக்கிரமனாய் வளர்ந்து பழைய மூவுலகினையும் இரண்டு அடிகளால் அளந்து கைப்பற்றினான்.'' இதனுள் கால்களைக் கருவியாகக் கொண்டு அவற்றால் அளத்தலாகிய செயலைச் செய்து, மூவுலகும் கைக்கொள்ளுதலாகிய காரியம் நிகழ்த்தப்பெற்றமையின், இது கருவிக் காரகஏது.]

**பொறிவழியே தாக்கும் புலன்ஐந்து அவித்த**
**அறிவு அழியா யோகம்அதனால் - எறிதிரைநீர்**
**ஆல் தன் துயிலாய் அமர்ந்தான்அடிசேர்தல்**
**மாறன்தனக்கே வரும். (432)**

இதுவும் கருமக் காரகஏது. 'ஆல் தன் துயிலாய் அமர்ந்தான்' என்பது ஆலமரத்தைத் தான் துயில்கொள்ளும் திருஅனந்தாழ்வானாக வைத்துத் துயில் விரும்பினான் என்றவாறு. ஆல் - ஆகுபெயர்.

திணை - வாகை; துறை - தாபதவாகை. இவை இரண்டும் (431, 432) செய்வதன் தொழில் ஆக்கம். இவை நாலும் அடைவே ஏவற்கருத்தாவும் கருமக்கருத்தாவும் எனக் கொள்க.

[முதல்இரண்டும் ஏவல்கருத்தா; ஏனைய இயற்றுதல்கருத்தா.]

["பொறிகளின் வழியே வந்து துன்புறுத்தும் ஐம்புலன்களின் நுகர்வுகளைப் போக்கிய, மெய்ப்பொருளை அறியும் அறிவு நீங்காத யோகம் பெற்ற காரணத்தால், ஊழிவெள்ளத்தில் ஆலந்தளிரில் அறிதுயில்கொண்ட எம்பெருமானுடைய திருவடிகளை அடைதல் மாறனுக்கே நிகழக்கூடிய செயலாகும்." 'யோகம்' கருமம். அடிஅடைதல் காரியம். எனவே இது கருமக்காரக ஏது. கருமக்கருத்தா - இயற்றுதல்கருத்தா.]

**இமிழ்திரைநீர் ஞாலம் இருள் விழுங்கச் சோதி**
**உமிழ்கதிரும் புள்ளும் ஒடுங்க, - அமிழ்துஒத்து**
**அருள்மாலை எய்தாதவர் மனம்போல் மாலும்,**
**மருள்மாலை வந்து என்மனம். (433)**

இது காலக் காரகஏது. ஒடுங்க - அடங்க. மாலும் - மயக்கத்தை எய்தும். மருள்மாலை - மயக்கத்தைத் தரும் மாலை.

திணை - பெண்பால்கூற்றுக் கைக்கிளை. துறை - மாலையம்பொழுது கண்டு இரங்கல்.

["ஒலிக்கும் கடலால் சூழப்பட்ட உலகத்தை இருட்டுக் கவிந்துகொள்ளவும், ஒளியை வெளிப்படுத்தும் சூரியனும் பறவைகளும் செயற்படாது அடங்கவும், அமுதத்தைப் போல அருள்செய்யும் திருமாலைப் பற்றுக்கோடாக அடையாதவர்களுடைய மனத்தைப் போல, மயக்கத்தைத் தரும் மாலைக்காலம் வருவதால் என்மனம் மயக்கமடைகிறது" என்ற இப்பாடலில், மாலை ஆகிய காலத்தின் மயக்கம்தருவதாகிய செயல் காரணத்தால் மனம் மயக்கமாகிய காரியத்தைப் பெறுகிறது என்று கூறலின் இது காலக் காரகஏது. இஃது அழிவு.]

**சங்கன் அழியாத் தமனியநாடு எய்தியதும்,**
**பொங்குபுகழ்த் தாந்தன் புலவீர்காள்! - எம்கோன்ஆம்**
**சோதிபதம் எய்தியதும், சொல்தமிழ்மாறன் அருள்கூர்**
**ஆதிநகர்த் தெய்விகத்தால். (434)**

இஃது இடக் காரகஏது. துறை - நகரவாழ்த்து.

[சங்கனும் தாந்தனும் வேதம் தமிழ்செய்த மாறன் அவதரித்த திருக்குருகூரில் வாழ்ந்ததனால் முத்திபெற்றார்கள் என்ற வரலாறு குருகாமான்மியத்தில் உள்ளது. குருகூராகிய இடத்தில் வாழ்தலாகிய காரணத்தால் வீடுபேறாகிய காரியம் நிகழ்ந்தமையின் இஃது இடக் காரகஏது. இஃது ஆக்கம்.]

**நந்திபுர மாலே! நன்மாருதி கொளுத்தும்**
**வெந்தழலால் வெந்து விளிந்ததே, - முந்தைப்**
**பெருவானவர் வரமும் பேர்அறமும் பொன்றப்**
**பொருவான் இலங்காபுரம். (435)**

இது பொருள் காரகஏது. மாருதி - அனுமான். திணை - வஞ்சி; துறை - உழபுலவஞ்சி. இது செய்விப்பதன் தொழில். இதற்கு மேலைச் சூத்திரத்து உள்ள முதல்வனை 'ஏவல் முதல்வன் இயற்றுதல் முதல்வன்' என்று (189) ஒருபால்மேல் உயர்திணைநோக்கி வைத்தாரேனும், 'ஒருமொழி ஒழிதன் இனம்கொளற்கு உரித்தே' (நன். 358) என்பதனால் ஐந்துபாலினும் கொள்க. இவற்றுள் முன்னதும் பின்னதும் அழிவு. இடைநின்ற இடக் காரகஏது ஆக்கம்.

["நந்திபுரத்தில் உகந்தருளியிருக்கும் திருமாலே! மேம்பட்ட அனுமன் கொளுத்திய கொடிய தழலால், முற்காலத்து மேம்பட்ட தேவர்களுடைய வாழ்வும் மேம்பட்ட அறமும் அழியுமாறு போரிட்ட இராவணனுடைய இலங்கைநகர் வெந்துஅழிந்தது." அனுமன் கொளுத்திய தீ ஆகிய காரணத்தின் செயலால் இலங்கை வெந்துஅழிதலாகிய காரியம் நிகழ்ந்தமை - பொருள் காரகஏது. ஈண்டுப் பொருள் அஃறிணை; செயல் - அழிவு.]

**கற்பனை மேற்கொண்டு ஒழுகும் கடைப்பிடியார்வயின் திருநாண்**
**பொற்புறும் ஆற்றலின் பொறித்த பொருவரு செவ்வணிநோக்கித்**
**தற்பொதிவாட் டுறந்த கெழுதகைத்தாய புனல்ஊரன்**
**இல்புகலால் வெஞ்சினநஞ்சு எனக்கூர்த்த மருள்நோக்கம்**
**உற்பலம் தெள்அமிர்து உயிர்த்தற்று ஒளிதிகழ்சீர் பயின்றனவே;**
**அதனொடும்**
**அநகன் இங்குஎமை ஆண்டுஅருள் மகிழ்மாறன்**
**புனல்வறம் கூராப் பொருநையுள் புரைதீர்**
**தினகரோதயத்தில் செவ்விபெற்று அலர்ந்த**
**தண்மலர் புரை தகைத்துஆகும்,**
**ஒள்நுதல் அரிவை உவகை வாள்முகமே.** (436)

இது செய்வதன்தொழில் கருத்தா காரகஏது. பா - தரவு, தனிச்சொல், சுரிதகம் என்ற மூன்றுஉறுப்பான் வந்த தரவுகொச்சகக் கலிப்பா. இதனுள் அழிவும் ஆக்கமும் முறையே நிகழ்ந்தமை காண்க.
பகுதி - பரத்தையிற் பிரிதல்; துறை - முகமலர்ச்சி கூறல்.

[கற்பனையான நடிப்பினால் தாம் அன்புடையவராக நடித்துத் தாம் கொண்ட பொருள்கவர்தலை மறவாத பரத்தையர் சேரியிடத்து, சிறந்த நாணம் சிறக்குமாறு அணிவித்து அனுப்பிய சேடியின் செவ்வணியினைக் கண்ட அளவில், தன்னை விடாது பற்றியிருந்த பரத்தையைத் துறந்த, அன்புடையனாகிய தலைவன் தன்இல்லத்துப் புகுந்ததனால் கொடிய கோபத்தால் விடம்போலக் கூர்மைகொண்ட தலைவியின் மயங்கிய கண்கள் தெளிந்த தேன் தோன்றும் கருங்குவளைமலர் போல ஒளிமிக்க சிறப்பினைப் பொருந்தின. அதனோடும், தீவினை அற்றவனாய், இவ்வுலகில் அடியேனை ஆட்கொண்ட, மகிழம்பூமாலையை அணிந்த மாறனுக்கு உடைமையாகிய நீர்வளம் குறையாத பொருநைநதி பாயும் பகுதியில், கதிரவன்உதயத்தில் புதுப்பொலிவு பெற்று மலர்ந்த குளிர்ந்த தாமரைமலரை ஒத்து, நல்ல நெற்றியை உடைய தலைவியின் மகிழ்ச்சியை வெளிப்படுத்தும் ஒளி பொருந்திய முகம் மலர்ந்தது - என்று பொருள்படும் இதனுள், தலைவனுடைய வருகையாகிய காரணத்தால் தலைவியின் கண்ணொளியும் முகமலர்வுமாகிய காரியங்கள் தோன்றுதலால், இது செய்வதன்தொழில் கருத்தா காரகஏது. பரத்தையைத் துறத்தல் - அழிவு; இற்புகல் - ஆக்கம்.]

**புத்தேளிர் நிரப்புஇகப்பான் பொருதிரைப் பாற்கடல்கடைந்து**
**மெய்த்தேவர் பெருமானாம் வேங்கடத்துஎம் கண்ணபிரான்**
**புரந்தருள் நன்மருந்து இறுத்தபுலம் துவரத்துறந்து இழைத்த**
**வரம்தரு பெண்அமிர்தாம் இம்மடவரல் மென்தோள்துறந்தே**
**இல்லறத்தின் தொடர்உடையோர்க்கு இன்பமும் ஆதுலர்க்கு அளிக்கும்**
**நல்லறத்தின் தொடர்ப்பாடும் நனிதரும் செய்பொருள்என்றே;** (தரவு)

[தேவர்களுடைய வறுமையைப் போக்க அலைகள் மோதும் பாற்கடலைக் கடைந்து, உண்மைத்தேவர்களான நித்தியசூரிகளின் தலைவனாகிய திருவேங்கடத்து எம்பெருமான் தேவர்களுக்கு வழங்கிய தேவாமிர்தம் தான் தங்கியிருந்த தேவருலகை அடியோடு நீத்து, நினைத்த வரத்தைத் தரும் பெண்ணமிர்தமாக வடிவெடுத்த இத்தலைவியின் மெல்லிய தோள்களை விடுத்து, யான் நடத்துகின்ற இல்லறவாழ்க்கையில் தொடர்புகொள்ளும் உறவினருக்கும் விருந்தினருக்கும் இன்பமும் உடல்நலமில்லாதவருக்கும் வறியவர்களுக்கும் உதவுதலாகிய நல்ல அறத்தின்தொடர்பும் யான் அறத்தாற்றில் ஈட்டும் செல்வம் மிகுதியும் வழங்கும் என்று.]

**ஒருதலை பெற்றனனாகி உருப்புஅவிர் வெங்கடத்திடைப்போய்**
**வருபொழுதில் பெருவறம்கூர் மணிநாவின் மம்மர்நோய்**
**அருள்மடந்தை இலவுஇதழ்த் தெள்அமிர்து அருந்தத் துறந்தனவே;**
**அஃதான்று,**
**வேல்நுதல் வன்பரல்கடந்து ஆரிடை வேனில்வெயிற்கு உமையாள்**
**கோன்நுதல்கண் தழல்குளித்த மதன்என மெய்கூர்த்தநோய்**
**பானல்அம்கண் கிளிமொழி மெய்ப்பரிசத்தால் துறந்தனவே;**
**அஃதான்று,**
**உருஇலா உருவிற்றுஆம் உருள்இலா மசரதத்தைப்**
**பருகுவான் புனல்எனச் செல் பாலையுள்சார்ந்து உளம்கொதிநோய்**
**திருமகளால் பெறும் இன்பத் திரைஆடத் துறந்தனவே.**

[பொருள்தேடுதல் என்ற ஒருசார்பினை உட்கொண்டு வெப்பம் வெளிப்படும் கொடிய பாலையைக் கடந்து சென்று திரும்பிவரும் காலத்தில் மிக்க வறட்சியை உடைய அழகிய நாவின் வருத்தம்தரும் நோய்கள் என்பால் அருள் சுரக்கும் இத்தலைவியின் இலவம்பூப்போன்ற இதழ்களின் தெளிந்த அமுதத்தை யான் நுகர்வதனால் தீர்ந்து-விட்டன. அஃதன்றியும்,
வேலின் மேலிடம் போன்ற கூரிய வலிய பருக்கைக் கற்களை உடைய பாலையின் அரிய வழியிலே வேனிற்காலத்து வெயிலாலே உமையவள் கணவனான சிவபெரு-மானுடைய நெற்றிக்கண் நெருப்பிலே தோய்ந்த மன்மதனைப் போல என்உடலை எரித்த வெப்பங்கள், கருங்குவளைப்பூப்போன்ற கண்களையும் கிளி போன்ற சொற்களையும் உடைய தலைவியின் உடலைத் தீண்டுதலால் நீங்கின. அஃதன்றியும்,
உண்மைவடிவம் இன்றி வடிவு உடையது போலத் தோற்றமளிக்கும் சக்கரங்கள் இல்லாத பேய்த்தேரினைப் பருகும் நீர் எனக்கருதி மான்கள் செல்லும் பாலைவழியே சேர்தலான் மனம் கொதிக்கும் துயரங்கள் இத்திருமகள் போன்ற தலைவியால் பெறும் இன்பக்கடலில் மூழ்குதலால் நீங்கிவிட்டன.]

**அஃதான்று,**
**வரைஇரு மருங்கினும் மரீஇய வெவ்விடம்**
**புரைசுரத்து ஆர்அதர்ப்புக்கு உயிர்க்கு உறுநோய்**
**அம்மென் சாயல் அணிமயில் பைம்பூண்**
**கொம்மை வெம்முலைக் குன்றிடை முயங்கலின்**
**நனவு கனவா நயந்துழி**
**நினைகலா நீளிடை நீத்தனவே. (437)**

[இருபக்கங்களிலும் மலைகள் பொருந்திய கொடிய விடத்தை ஒத்த பாலையின் அரிய வழியிலே சென்றதனால் உடலுக்கு ஏற்பட்ட மிக்கநோய்கள், அழகிய ஐம்-பொறிகளானும் நுகரப்படும் மென்மையை உடைய அழகிய மயில் போன்ற தலைவியின் பசிய பொன்னணிகலன்களை அணிந்த திரண்ட விரும்பத்தக்க முலைகளாகிய மலைகளிடையே அவளைத் தழுவுதலால், கனவைப் போல நனவிலும் அவளை விரும்பி நுகர்ந்தவிடத்து, யான் இனி நினைக்காத நீண்ட வழியிலேயே என்னை நீத்துச் சென்றுவிட்டன.]

இஃது இடையிடைத் தனிச்சொல் பெற்றுத் தரவு தாழிசை தனிச்சொல் சுரிதகம் என்னும் நான்கு உறுப்பினோடு நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பாவில் சிறிது வேறுபட்டு வந்த சிஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா. இதுவும் கருவிக்காரக ஏது. இதனுள்ளும் ஆக்கமும் அழிவும் கூடி வந்தமை காண்க.
பகுதி - பொருள்வயின் பிரிதல்; துறை - உள் மகிழ்ந்து உரைத்தல்.

[பொருள் ஆகிய கருவி தொடர்புடையோர்க்கு இன்பமும் நல்லறமும் ஆகிய காரியத்தைத் தருதல் ஆக்கம். அது சுரத்திடைச் சேறற்கண் நோய் ஆகிய காரியத்தைத் தருதல் அழிவு. பொருள் காரணத்தால் ஏற்பட்ட நோய் தலைவியைத் தழுவுதலால் தீர்தல் ஆக்கம். எனவே இஃது ஆக்கமும் அழிவும் தந்த கருவிக் காரகஏது.] [104]

ஞாபகஏது இலக்கணம்

**190. ஏனையது ஒன்று வெளிப்பட மற்றது-**
**தான் உணர்வில் புலப்படும் தன்மையதாய்க்**
**காரண காரியம்தாம் உறழ்ந்து உணர்த்தும்**
**சால்பினும் நடைபெறும் சாற்றுங்காலே. [105]**

(எ-ன்) கருத்தா முதலாகப் பொருள் ஈறாகக் கூறப்பட்ட அறுவகைப்படும் காரக ஏதுவினை உணர்த்தி ஒழிந்த ஞாபகஏது உணர்த்துவான் தொடங்கி அதன் பொதுஇலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

[வினைமுதல், கருவி, கருமம், காலம், இடம், பொருள் எனக் காரகஏது வகை ஆறு.]
(இ-ள்) காரகஏது ஒழிந்த ஞாபகஏது என்னுமது ஒன்று வெளிப்பட்டு வெளிப்-படாததுஒன்றை அறிவிப்பதுவாய்க் காரணகாரியங்கள் மாறாடி உணர்த்தும் ஒழுக்கத்தினும் கூடி நடைபெறும், கூறுமிடத்து என்றவாறு.
காரகம் ஞாபகம் என்பன முறையே செய்விப்பதும் அறிவிப்பதும் ஆதலால், காரணகாரியம் உறழ்தல்ஆவது புகைஉண்மையால் அதன்கீழ் எரி உண்மையை எரியினது காரியமாம் புகை அறிவித்தல் என உணர்க. [105]

ஏதுவின் புறனடை

**191. எய்திய இன்பம் துன்பம் இவற்றிற்கு**
**ஐயமில் பான்மை ஆக்கமும் அழிவும். [106]**

(எ-ன்) இஃது அவற்றிற்கு ஒருபுறனடை உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) இங்ஙனம் கூறப்பட்ட காரகம் ஞாபகம் இரண்டிற்கும் ஆக்கமும் அழிவும் என்று கூறப்பட்டன அவ்வேதுக்களால் எய்தும் இன்பம்துன்பங்களாம் என்றவாறு.

**அணிஆர் மென்தோளும் அயில்விழியும் சற்றும்**
**தணியாது இடம்துடிக்கும் சால்பான் - மணிமாடக்**
**கோயிலார் வெற்பில் கொடிஇடையாய்! வைகறை நம்**
**வாயிலாம், காவலர்தேர் வந்து. (438)**

இது காரணம்கண்டு காரியம் புலப்பட்ட ஞாபகஏது.
பகுதி - வரைபொருட்பிரிதல்; துறை - ஏதுக்காட்டி வருத்தம் தணித்தல். தணியாது - இடைவிடாது. ஒழிந்த அகலம் உரையிற் கொள்க.

["கொடிபோன்ற இடையை உடைய தலைவியே! அழகு பொருந்திய மெல்லிய தோள்களும் வேல்போன்ற விழிகளும் சிறிதும் இடைவிடாது இடப்புறத்துத் துடிக்கும் செய்தியால் திருமணிமாடக்கோயிலில் உகந்தருளியிருக்கும் எம்பெருமானுடைய மலையிலே நாளைக் காலை தலைவருடைய தேர் வந்து நம்வாயிலை அடையும்."
இடந்துடித்தலாகிய நன்னிமித்தம் - காரணம். தலைவன்தேர் காலையே நம் இல்லம் வந்தடைதல் - காரியம். காரணத்தால் காரியம் ஊகித்து அறியப்படுதலின், இது காரணம்கண்டு காரியம் புலப்பட்ட ஞாபகஏது.]

**காவி நெடுங்கண் சிவப்பக் காமரு செவ்வாய் விளர்ப்ப**
**ஆவி தளிர்ப்பதுவும் அன்றியே - ஓவியமே!**
**வண்ணந்தனில் வெயர்ப்பும் மாறனார் பூஞ்சிலம்பில்**
**தண்ணஞ்சுனையே தரும்.** (439)

இது புணர்ச்சியால் உண்டான தோற்றப்பொலிவாம் காரியம் ஞாபக ஏதுவாய்ப் புணர்ச்சியாகிய காரணத்தை அறிவித்தது.
பகுதி - நாணநாட்டம்; துறை - புணர்ச்சிஉரைத்தல்.

["சித்திரம் போன்ற வனப்புடைய தலைவியே! கருங்குவளை போன்ற நீண்ட கண்கள் சிவப்பவும் சிவந்த உதடுகள் வெளுக்கவும், உள்ளத்தில் புதுப்பொலிவும், உடல்முழுதும் வியர்வையும் சடகோபனுடைய பூக்களை உடைய மலையிலே குளிர்ந்த சுனைநீரா வழங்க வல்லது?" என்ற தோழி கூற்றில், தோற்றவேறுபாடாம் காரியம் புணர்ச்சியாகிய காரணத்தைப் புலப்படவைத்தலின், காரியம் ஞாபகஏதுவாய்க் காரணத்தைப் புலப்படுத்தியவாறு.] [106]

ஞாபகஏதுவின் கூறுபாடுகள்

**192. இருள்அற அறிவிப்பனவாம் ஏதுவும்**
**பொருள்இடம் வினைபண்பு அவற்றொடும் புணரும். [107]**

(எ-ன்) இது ஞாபகஏதுவின் கூறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) முற்கூறிய ஞாபகஏது என்பதும் பொருள் இடம் வினை பண்பு என்னும் நான்கினோடும் பொருந்துவதாம் என்றவாறு.

[காரகஏது பல கூறுபாடுகளை உடையது போலவே, ஞாபகஏதுவும் பல கூறுபாடுகளை உடையது என்ற செய்தி ஏதுவும் என்ற உம்மையால் பெறப்பட்டவாறு.]

**தேக்கு கதிர்வெய்யோன் தினமும் பகல்நாடிப்**
**போக்குவரவு புரிதலால், - காக்கும்**
**திருநாரணன் உளனாம் செம்மை உணர்வித்தான்,**
**குருநாதன் ஆகிய எங்கோன்.** (440)

இது பொருள் ஞாபகஏது.
(இ-ள்) உலகம் எங்கும் நிறைக்கும் கிரணங்களை உடைய ஆதித்தன் பகல் இரவு என்னும் பொழுதுஇரண்டினுள் இரவின்கண் மறைந்து பகற்பொழுது ஒருகணமும் ஏறாது குறையாது விதித்த நாழிகையுள் ஒடுங்கி மீளவும் காலையில் தோன்றினான் ஆகலான், நாராயணன் என்று ஒருபரன் உளன் என்பதையும், அவன் நியமித்தபடி இக்கதிரோன் நடவாநின்றான் என்பதையும் குருநாதன் ஏதுக்காட்டி எமக்கு அறிவித்தான் என்றவாறு. இதனுள் பொருளாகிய ஞாபகம் ஆதித்தன்.
திணை - வாகை; துறை - அறிவன் வாகை. திணை - பாடாண்; துறை - குரவனை வாழ்த்தலுமாம்.

[ஆதித்தன், தோற்றமும் மறைவும் ஆகிய, காரியத்தையுடைய பொருள். இக்காரியம் காரணனாய் உள்ள நாராயணனை அறிவித்தலால் இது பொருள் ஞாபகஏது. ஆதித்தனாகிய பொருள் ஞாபகஏது தன் தோற்றமறைவுகளாகிய காரியத்தால் நாராயணனது உண்மை உணர்த்திற்று.]

**ஓங்குஒலிநீர் ஞாலத்தை உண்ணாது உயக்கோடல்**
**பூங்கமல உந்தியுடைப் புண்ணியன்தன் - நீங்காத**

**ஆச்சினைகாண் என்றே அறிவித்தான், ஆரியனாம்**
**கோச்சரிதை நீங்காக் குணன். (441)**

இஃது இட ஞாபகஏது. இதன் பொருள் மேலையது போலக் குறித்து உணர்ந்து-கொள்க. ஈண்டு உரைப்பின் பெருகும். துறை - இதுவுமது.

[''வழிபடத் தக்கவனாகும் தலைவனுக்கு உரிய வரலாறு நீங்காத பண்பினனாம் என் ஆசிரியன், மிக்க ஒலியை உடைய கடல் தன்னினும் பரப்புக் குறைந்த நிலப்பரப்பைத் தன்னகப்படுத்தாது அதனைக் காத்துநிற்றல் தாமரை தோன்றும் கொப்பூழை உடைய அறவடிவினனான திருமாலுடைய என்றும் நீங்காத ஆணையினாலேயே என்பதனை அடியேனுக்கு அறிவித்தான்.'' கடல் உலகை அழிக்காது காத்தல் என்ற காரியம் இறைவன்ஆணையாகிய காரணத்தை உணர்த்தியது. காரியத்திற்கு உரிய கடல் இடம் ஆதலான் இஃது இட ஞாபகஏது. ஆக்கினை ஆச்சினை என விகாரப்பட்டது. கடலாகிய இட ஞாபகஏது தான் ஞாலத்தை உண்ணாமையாகிய காரியத்தால் இறைவனது ஆணையை உணர்த்திற்று.]

**முன் ஒருகைக்குஞ்சரமாய் மூரிப் பிணையாகி**
**மின்னிடை எங்குஎன்று வினாயதால் - தென்அனந்தை**
**மால்வரைமேல் இன்று இவர்தம் வாய்மைஎலாம் வஞ்சமெனச்**
**சால்புடைய நெஞ்சே! தரி. (442)**

இது வினை ஞாபகஏது.

அஃதேல், முன்னைய இரண்டும் இதுபோலப் போக்குவரவு புரிதலும் உண்ணாததும் கிரியையாயன்றே ஞாபகஏது ஆய ஆதலால் அவற்றையும் வினை ஞாபகஏது என்னாதது என்னை எனின், நன்று சொன்னாய்! அவை கிரியையேயாயினும் பொருளோடும் இடத்தோடும் சார்த்திக்கொளநின்றன ஆதலால், பொருளும் இடனும் வசனமின்றி ஞாபகஏதுவாயின. இஃது அன்னதன்று. வசனமாகிய கிரியை ஞாபகஏது ஆயிற்று. என்னை? மின்இடை எங்கு என அயல்பட வினாயதால் என்று அறிக. அன்றியும் காரகஏதுவிற்கும் வினை கூடாதே ஏதுக்கள் கூடா என உணர்க. இதன்பொருள் உரையிற் கொள்க.

பகுதி - இருவரும் உளவழி அவன் வர உணர்தல். துறை - அறிவு நாடல்; அயல்பட வினாதலுமாம்.

[''நெஞ்சமே! முதலில் துதிக்கையை உடைய குஞ்சரம் பற்றி வினாவி, பின் வலிய பெண்மானைப் பற்றி வினாவி, இறுதியாக 'உங்களுடைய மின்னலைப் போன்ற இடை எங்கு இருக்கிறது?' என்று வினவியதால், தெற்கிலுள்ள திருவனந்தபுரத்தில் எழுந்-தருளியிருக்கும் பற்பநாபப்பெருமானுடைய பெரிய மலையின்மேல் இன்று இவர் வாயிலிருந்து வருகின்ற சொற்களெல்லாம் உண்மையில்லாதவை என்றே தெளிவா-யாக'' என்ற தோழிகூற்றில், 'மின்இடை எங்கு?' என்று வினவிய கூற்றாகிய காரணம், தலைவன்கூற்று உண்மை கலவாதது என்ற காரியத்தை உணரக் காரணமாயிருத்தலின் இது வினை ஞாபகஏதுவாம்.

பொருள் ஞாபகஏதுவினும் இட ஞாபகஏதுவினும் முறையே சூரியனுடைய தோற்றமும் மறைவும், கடலுடைய உலகை அழிக்காத செயலும் காரணமாக அமையினும், அவ்வினைகளை விடுத்து அப்பொருளாகிய சூரியனையும், கடலாகிய இடத்தையுமே ஏதுவாகக் கோடலின் இவை முறையே பொருள் ஞாபகஏது, இட ஞாபகஏது ஆயின. இப்பொருளையும் இடத்தையும் சுட்டவே அவற்றின் வினைகளும் இவற்றுள் அடங்கும். 'மின் இடை எங்கு?' என்று, பொருளைக் கெடுத்தார் வினாவுமாறல்லாமல், உள்ளத்தில் பிறிதோரெண்ணம் கொண்டு வினாவுதலால் இவ்வினாவாகிய செய்கை தலைவன் உள்ளத்தை அறிய ஏதுவாயிற்று. காரகஏதுக்களிலும் வினைகள் காணப்-பட்டாலும் அவற்றிற்கு இன்றியமையாச் சிறப்புத் தாராது எழுவாய், கருவி, கருமம் முதலியவற்றிற்கே சிறப்புத்தந்து பெயரிடப்படுவதனையும் நோக்குக.]

**ஆய்ந்த தமிழ்மாறன் அணிவரைமேல் இன்றுஒருவர்**
**பூந்தழைகொண்டு ஒன்று புகலாமுன் - வாய்ந்த**
**புதுமலர்ச்சி கொண்டது இப்பொன்வதனம் என்றால்,**
**நொதுமலர்மேல் ஆனது இவள் நோக்கு. (443)**

இது பண்பு ஞாபகஏது. 'வாய்ந்த புதுமலர்ச்சி' என்பது உள்ளக்குறிப்பைத் தோற்றுவித்த புதிதாய மலர்ச்சி என்றவாறு. நொதுமலர் - அயலாவார். நோக்கு - உள்ளக்குறிப்பு. பண்பு - முகமலர்ச்சி.

பகுதி - குறையுற உணர்தல். துறை - அவள்குறிப்பு அறிதல்.

ஆக, ஞாபகஏது பொருள் முதலாகப் பண்பு ஈறாக நான்கும் அடைவே கண்டுகொள்க. 'அவற்றொடும் புணரும்' என்ற உம்மையால் பிறஇடங்களோடும் வருவனவும் உள. அவையும் வந்தவழிக் கண்டுகொள்க.

["தமிழை ஆராய்ந்த மாறனுடைய அழகிய மலையின்மேலே இன்று அயலார் ஒருவர் அழகிய தழையைக் கையுறையாகக் கொண்டு ஒருசெய்தியைக் கூறுவதன்முன் இத்திருமகள் போன்ற தலைவியின் முகம் புதுமலர்ச்சியைப் பெற்றுவிட்டது என்பதனால், இவள்பார்வை அயலான்ஒருவன்பால் ஈடுபாட்டோடு பொருந்திவிட்டது என்பதனை உணரலாம்" என்ற தோழிகருத்தில், தலைவியின் முகப்புதுமலர்ச்சியாகிய பண்பு காரணமாய் அவள் எண்ணம் தலைவன்மேலது ஆகிய காரியத்தை உணர்த்துதலின் இது பண்பு ஞாபகஏது. ஞாபகஏதுவாய் அவள்எண்ணம் தலைவன் மேலாயதனைப் புலப்படுத்தியமையால் இது பண்பு ஞாபகஏதுவாம்.] [107]

ஞாபகஏதுவின் பிறிதொரு வகை

**193. இன்மையும் அதன்கண் எய்துதல் உரித்தே. [108]**

(எ-ன்) இதுவும் அவ்வேதுவினை விரித்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) இல்லாத தன்மைய ஆகிய அவையும் அவ்வேதுவின்பால் பொருந்துதற்கு உரிய என்றவாறு. இன்மை என்பது ஒன்றின் இல்லாமை. தண்டியாசிரியர் 'அபாவம்' என்பதும் இது.

[இன்மை ஞாபகஏதுவின் வகை.][108]

இன்மையின் விரி

**194. அதுவே,**
**ஒன்றின் ஒன்று இன்மை, உள்ளதன் இன்மை,**
**என்றும் இன்மையினோடு, இன்மையின் இன்மை,**
**அழிவுபாட்டு இன்மையோடு, ஐந்து ஆகும்மே. [109]**

(எ-ன்) அவ்வின்மையை விரித்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அவ்வின்மை என்னுமது ஒன்றின்கண் ஒன்றினது இன்மையும், ஓரிடத்தும் ஒருகாலத்தும் உள்ள பொருள் பிறிதோரிடத்தும் பிறிதொரு காலத்தும் இன்மையும், எக்காலத்தும் இன்மையும், இன்மையின் இன்மையும், முன்பு உள்ளது அழிவுபட்டு இன்மையும் என்பதனோடு ஐந்தாகும் என்றவாறு.

இவற்றிற்கு எல்லாம் செய்யுள் வருமாறு:

**புல்லறிவாளரைப் புல்லார் அறிஞர், அப்புல்லறிவும்**
**நல்லறிவாளர்தமைக் குறுகா; மறைநாலின் நுட்பச்**

**சொல்லறிவால் தமிழ்தேர் மாறன் நன்னகர்ச் சூழ்பொருட்குச்**
**செல்அறிவாளர் சொல்கோடாது; அழுங்கல், ஒண்சேயிழையே! (444)**

இஃது ஒன்றின் ஒன்று இன்மை; என்னை? ஒன்றின்கண் ஒன்று இன்மையும் அதன்கண்ணும் அஃது இன்மையும் ஆயினமையான் அறிக. சூழ்பொருள் - அறனும் இன்பமும் தரும் என விசாரித்த பொருள்.

பகுதி - பொருள்வயின் பிரிதல்; துறை - பருவம் நினைந்து ஆற்றாளாய தலைவியைத் தோழி வற்புறுத்தல்.

[“தாம் அற்ப அறிவினராயிருந்தே பேரறிவாளராகத் தம்மைக் கருதிக்கொண்டிருப்பாரைச் சான்றோர் பொருந்தமாட்டார்கள். அற்பஅறிவாகிய அப்புல்லறிவாண்மையும் சான்றோர்களைப் பொருந்தாது. நான்கு வேதங்களிலும் உள்ள நுட்பங்களைச் சொல்லும் அறிவோடு தமிழை ஆராய்ந்த மாறனுடைய குருகூருக்கு ‘அறனும் இன்பமும் தரும்’ என்று ஆராய்ந்துகொண்ட பொருள்தேடச் சென்ற தலைவர் சொல்லிய சொல் தவறாது. ஆதலின், ஒளியை உடைய அணிகளை அணியும் தலைவியே! நீ வருந்தாதே” என்ற தோழிகூற்றில், சான்றோர் புல்லறிவைப் பொருந்தாமையும், புல்லறிவு சான்றோரைப் பொருந்தாமையும் ஒன்றின் ஒன்று இன்மையாம்.]

**இன்றுஇருந்து நாளை இறப்போர் பெயரினையும்**
**மன்றுதொறும் ஏத்தி மறுகினவே, - அன்றுஒருகால்**
**சேமம் தரித்த திகிரித் திருமலையான்**
**நாமம் தரித்துஅறியா நா. (445)**

இஃது உள்ளதன் இன்மை. என்னை? இவ்வுலகத்தில் இப்பொழுதின் உள்ள கிரியையானது முற்பிறப்பில் ஒருகாலத்தும் இல்லாத கிரியையை அறிவிப்பதால் என்று அறிக.

திணை - பாடாண் சார்ந்த பொதுவியல்; துறை - பரவார்ப் பழித்தல்.

[“சென்ற பிறப்பில், எல்லாஉயிர்களுக்கும் பாதுகாவலை மேற்கொண்ட சக்கராயுதத்தை ஏந்திய வேங்கடமலையிலிருக்கும் எம்பெருமானுடைய திருநாமத்தை ஒலித்து அறியாத நாக்கள், இப்பிறப்பில், இன்று உயிரோடிருந்து நாளை இறந்துபோகும் சாதாரண மக்களைப் போற்றி அவர்கள் பெயர்களையும் பொதுஇடங்கள்தோறும் புகழ்ந்து நிறைவெய்தாது வருந்தின” என்ற இப்பாடலில், இப்பிறப்பில் வருந்தும் செயல் முற்பிறப்பில் செய்யாமல் விடுத்த செயலை அறிவிப்பது உள்ளதன் அபாவமாகும்.]

**கள்ளார் பசுந்தண்துழாய் மாதவன் கடிகைச் சிலம்பின்**
**உள்ளார் பிறதெய்வம் என்றும் உள்ளார் என்பது உள்ளி நடுத்**
**தள்ளா மறலிதன் தூதரைக் கூவித் ததியர் வரின்**
**எள்ளாது இறைஞ்சி அயல்போமின் என்னும், இரந்து இரந்தே (446)**

இஃது என்றும் இன்மை. திருமால் கடிகைச்சிலம்பில் உள்ளாராகிய தொண்டர் பிற தெய்வம் என்றும் உள்ளார்ஆயினார் ஆகையால் அவர் இன்றும் உள்ளார் என்பது தொனியினால் கொள்ளக்கிடந்தமையின், என்றும் இன்மையாயிற்று. இதற்கு ‘என்றும் உள்ளித் தொழார் என்பது’ ‘இன்றும் உள்ளித் தொழார்’ என்பது அறிவித்தற்கு ஏது ஆயிற்று.

திணை - பாடாண் சார்ந்த பொதுவியல்; துறை - பழிச்சினர்ப் பரவல்.

[தேன் பொருந்திய பசிய திருத்துழாயை அணிந்த எம்பெருமானுடைய கடிகை என்ற திருத்தலத்தை அடுத்த மலையில் உள்ள அடியார்கள் பிற தெய்வங்களை எக்காலத்தும் பரம்பொருளாகக் கருதமாட்டார்கள் என்பதனை நினைத்து நடுவுநிலை தவறாத காலன் தன் தூதர்களை அழைத்துத் ‘திருமால் அடியவர் வரின் அவரை இகழாது வழிபட்டு அப்பாற் செல்லுங்கள்’ என்று வேண்டிக்கொள்வான் - என்ற இப்பாடலில், திருமால்

அடியார் பிற தெய்வங்களை என்றும் நினையார் என்பது என்றும் இன்மை. 'திறம்பேன்மின் கண்டீர்' திவ். ப்ர - 2449 என்ற பாசுரக்கருத்தை உட்கொள்வது இப்பாடல்.]

**கல்லால் கடல்அடைத்த கண்ணன்பேர் கல்லாநாள்**
**இல்லாதவர்க்கு இனிமேல் இல்லையே, - நல்லார்கள்**
**சூழ்ந்தே துதிஅமிர்தில் தோய்வதுஅலால் தீநரகில்**
**வீழ்ந்தே பதைக்கும் விதி.** (447)

இஃது இன்மையது இன்மை. கண்ணன்பேர் இச்செனனத்துக் கல்லா நாள் இல்லாதவர்க்கு மேல் எரிவாய் நரகத்து வீழ்ந்து பதைப்பது இல்லாததனால் அறிக. நல்லார்கள் சூழ்ந்தே துதி அமிர்தம் - பரமபதம்.
திணை - பாடாண் சார்ந்த பொதுவியல்; துறை - ஓம்படை. ஆதலால், தொண்டர்காள்! இக்காயம் இருக்கப்பெற்றபொழுதே அவன்திருநாமத்தை வீழ்நாள் படாமைச் சொல்லுவீராக என்பது பயன்.

[கற்களால் கடலை அணைகட்டித் தடுத்த, நமக்குப் பற்றுக்கோடான எம்பெருமானுடைய திருநாமத்தை ஒலிக்காத நாளே தம்வாழ்நாளில் இல்லாதவரான அடியவர்களுக்கு இனிமேல் நித்தியசூரிகள் சுற்றி நின்று புகழ்பாடும் பரமபதத்தில் பொருந்துவதுஅன்றிக் கொடிய நரகில் வீழ்ந்து வருந்தும் முறைமை இன்று - என்ற இப்பாடலில், 'கண்ணன்பேர் கல்லாத நாளே இல்லாமை' என்பது இன்மையது இன்மை. இந்த இன்மையது அபாவத்தால் தீநரகத்து வீழ்ந்து பதைக்கும் விதியில்லையாம்.]

**மானிடரை வாழ்த்தும் மதியின்மை தீர்ந்ததற்பின்**
**ஈனநிலை தீர்ந்தது எனைவிட்டே - போனதற்பின்**
**மன்நெறியே நின்று மகிழ்மாறனாரைத் துதிக்கும்**
**நன்னெறியே பெற்றுளதுஎன் நா.** (448)

இஃது அழிவுபாட்டு இன்மை; என்னை? மானிடரை உண்டிப்பொருட்டால் வாய்மை இழந்து வாழ்த்தும் அறியாமை என்னிடத்து இல்லையானது ஏதுவாக என்னிடத்து ஈனம் என்று இகழப்படும் இரப்பு என்பது என்னை விட்டு நீங்கியது; நீங்கியபின்னர் நிலைபெற்ற மார்க்கத்திலே நின்று காரிமாறப்பிரானை வாழ்த்தும் நல்ல மார்க்கமே பெற்று வாய்மை படைத்தது என் நல்ல நா என்றதனால் அறிக.
திணை - வாகை சார்ந்த புறத்திணை; துறை - புலமை வென்றி.
இன்மையது ஏது ஐந்தும் அடைவே காண்க. இவையும் ஞாபக ஏதுவின் பாற்படும்.

[ஒன்று அழிந்ததனால் மற்றொன்று இல்லையாயிற்று என்ற கருத்து, மானிடரை வாய்மை இழந்து வாழ்த்தும் அறியாமை நீங்கியதால் ஈனமான இரத்தல்தொழில் நீங்கியது என்ற தொடரில் காணப்படுவதால், இஃது அழிவுபாட்டு இன்மை. அறியாமையும் இரத்தலும் நீங்கியமை மாறனை வாழ்த்தும் வாய்மையைப் பெறுதற்குக் காரணமாகக் கூறப்பட்டது. இக்காரணங்கள் யாவும் அறிவினாலே கொள்ளப்படுதலின் இன்மை பற்றியன யாவும் ஞாபகஏதுவாம்.] [109]

காரகஏதுவின் பிறிதொரு வகை

195. **காரியம் முந்துறு காரகம், காரண**
**காரியம் ஒருங்குஉறு காட்சி, யுத்தமும்,**
**அயுத்தமும், எனமேல் அறைந்ததோடு ஒன்றும். [110]**

(எ-ன்) இது மேலே கூறின காரகஏதுவைப் பிறிதொரு வகையான் வகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) காரியம் முந்துறு காரகம் முதலாய நான்கும் ஒருவகைக் காரகஏதுவின் பாற்படும் என்றவாறு.

**பொன் மேதகுநற்பொருள் என்றே தேர்ந்துஉரைக்கும்**
**முன்னே, நெடுமாயன் மோகூர்வாழ் - மின் வாடைத்**
**தண்துளிவந்தால் தணந்தார்தம் உயிரை உண்கும்எனக்**
**கண்துளியா நொந்தனள் ஆகம். (449)**

இது காரியம் முந்துறு காரகஏது. இதனுள் 'தேர்ந்து உரைக்கும் முன்னே' என்றது, தேர்ந்துஉரைக்கும் உரை கூடும் முன்னே என்றவாறு. தணந்தார் - தலைவரைப் பிரிந்தார். கண்துளியா - கண்ணீரைத் துளித்து. பகுதி - பொருட்-பிரிதல்; துறை - வாட்டம் கூறல். தலைவன் கூற்று; தோழி முன்னிலை.

["'பொன்னே மேம்பட்ட செயல்கள் செய்தற்குத் தேவைப்படும் சிறந்த பொருளாகும்' என்று என்உள்ளத்துக் கொண்ட கருத்தினை யான் கூறுவதற்கு முன்னரேயே என்பொருட்பிரிவைக் குறிப்பால் உணர்ந்து, திருமாலுடைய திருமோகூரில் வாழும் மின்னலைப் போன்ற ஒளி உடைய என்தலைவி 'வாடைக் காற்றோடு கூடிய மழை வரின் அது தலைவரால் பிரியப்பட்ட தலைவியரின் உயிரை உண்டுவிடும்' என்று கூறிக் கண்ணீரைத் துளித்து மனம் வருந்தினாள்'' என்று தலைவன் தோழியிடத்துத் தன் பொருட்பிரிவுத் திட்டத்தால் தலைவிக்கு ஏற்பட்ட வாட்டம் கூறும் இப்பாடலில், காரணமாகிய தன் பொருட்பிரிவைக் கூறுவதற்கு முன்னரே காரியமாகிய வாட்டம் தலைவியிடத்து நிகழ்ந்ததாக உரைப்பது காரியம் முந்துறும் காரக ஏது. காரகம் - காரணமாகிய வினை. உண்கும் - உண்ணும்.]

**தெண் முத்தமிழ்மாறன் தென்குருகூர்ச் சேயிழைக்குஉன்**
**உள்முற்றிய போக்கு உணர்த்துஉரையில் - கண்முத்து**
**உடனே வரும் என்றால், ஒண்பொருட்கும் ஏகல்**
**கடனே? இறைவா! கழறு. (450)**

இது காரணகாரியம் ஒருங்குநிகழ் ஏது. உள் முற்றிய போக்கு - உள்ளம் ஒருமித்த செலவு. கண்முத்து - கண்ணீர்த்துளியாகிய முத்து. உடனே வரும் - ஒக்க வரும். ஒண்பொருட்கும் ஏகல் - ஒள்ளிய பொருளாயினும் அதற்குப் பிரிதல். கடனே என்றது முறை அன்று என்றவாறு. ஏகாரம் - எதிர்மறை; ஒழியிசை எனினுமாம்.

துறை - ஆற்றாமைகூறிச் செலவு அழுங்குவித்தல். தோழிகூற்று.

["தலைவ! தெளிந்த முத்தமிழிலும் வல்ல சடகோபனுடைய அழகிய குருகூரிலுள்ள தலைவிக்கு உன்உள்ளம் ஒருப்பட்ட பொருட்பிரிவைப் பற்றிப் பேசத்தொடங்கிய அளவிலே அவள்கண்கள் கண்ணீரைப் பெருக்குகின்றன என்றால், செல்வம் மேம்-பட்டதாயினும் அதனைத் தேடுவதற்காக அவளைப் பிரிந்து செல்லுதல் முறையாகுமா என்பதனை நீயே கூறுவாயாக'' என்று தோழி தலைவனிடம் கூறிய கூற்றில், பொருட்பிரிவுக் கூற்று என்ற காரணமும் தலைவி கண்ணீர்வடித்தல் என்ற காரியமும் ஒருங்குநிகழ்ந்தன.

கடனே - ஏகாரம் எதிர்மறை; கடன் அன்று என்றபடி. ஒழியிசை - நேர்ப்பொருளைத் தாராமல் மறைந்திருக்கும் குறிப்புப்பொருளைத் தருவது. 'இதுவா உன்னுடைய கடமை?' என்ற பொருளை ஒழியிசை தருகிறது.

ஒண்பொருட்கும் - உம்மை சிறப்பும்மை. அறத்திற்கும் இன்பத்திற்கும் உதவும் திறத்ததாகிய பொருளின் சிறப்பு உம்மையால் உணர்த்தப்பட்டவாறு.]

**மாயிருஞாலம் தழைப்ப வாச மகிழ்மாலை**
**ஞாயிறு மெய்வேத நலன்சிறந்த - ஆயிரப்பாத்**

**தூய கதிர்விரித்துத் தோன்றலால், தொண்டரகத்து**
**ஆய இருள் தீர்ந்தன. (451)**

இது யுத்தஏது. இதனகத்து உருவகவாய்பாடும் விரவி வந்தவாறு காண்க. அவை மகிழ்மாலை ஞாயிறு, ஆயிரப்பாத் தூயகதிர், தொண்டர்அகத்து ஆய இருள் என்பனவாம். இவற்றுள் முதலும் ஈறும் ஏகதேசஉருவகம். மகிழ்மாலை ஞாயிறு - மகிழ்மாலை மாறனாகிய ஞாயிறு. அகத்து ஆய இருள் - அறியாமையாகிய இருள். திணை - பாடாண்; துறை - பழிச்சினர்ப் பரவல்; கடவுள்வாழ்த்துமாம்.

[கரிய பெரிய உலகம் ஒளி தழைக்குமாறு நறுமணம் கமழும் மகிழம்பூமாலையை அணிந்த மாறனாகிய ஞாயிறு உண்மையான வேதக்கருத்தை உட்கொண்ட ஆயிரம் பாக்களாகிய தூய கிரணங்களை வெளிப்படுத்திக்கொண்டு தோன்றுதலால், அடியார்கள் உள்ளத்தில் படிந்திருந்த அறியாமையாகிய இருள்கள் நீங்கின.

கதிரவன் உதயத்தால் இருள் நீங்குதல் பொருத்தமான காரணம் ஆதலின் இஃது யுத்த ஏது. யுத்தம் - யுக்தம் - பொருத்தமானது.

மகிழ்மாலை மாறனாகிய ஞாயிறு எனவும் தொண்டரகத்து அறியாமையாகிய இருள் எனவும் உருவகங்கள் ஆயிரப்பாத் தூயகதிர் என்பது போல விரித்துக்கொள்ளத் தக்கன.]

**நற்பால் விழைந்தபுகழ் நாவீறன் மெய்வேத**
**முற்பாடல் வாய்மைமுழுது அடக்கும் - சொற்பா**
**உரைமலர்ந்த தூய்மதியால் கற்றோர் உளத்தா-**
**மரைமலர்ந்த மன்னோ மகிழ்ந்து. (452)**

இஃது அயுத்த ஏது. இதனுள் நற்பால் விழைந்த புகழ் நாவீறன் என்பது நல்லறத்தின்வழி ஒழுகினோரால் விரும்பப்பட்ட நாவீறு உடைய பிரான் என்றவாறு. நற்பால் - ஆகுபெயர். சொற்பா உரை - கீர்த்தியோடு கூடிய பாக்-களால் தோன்றிய நூல்; அது திருவாய்மொழி. தூய்மதியால் என்பது திருவாய்-மொழியினிடத்துப் பரந்த தூய ஞானமாகிய மதி உதித்தலால் என்றவாறு. கற்றோர் உளத்தாமரை மலர்ந்த மன்னோ மகிழ்ந்து என்பது கற்று வல்லோர் இதயத்தாமரை மிகவும் மகிழ்ச்சியோடு மலர்ந்தன என்றவாறு.
திணை - பாடாண்; துறை - பனுவல்வாழ்த்து.

[மெய்வேதவாய்மை முழுது அடக்கும் முற்பா - உண்மையையே உரைக்கும் வேதத்தின் விழுமிய கருத்து முழுதையும் உள்ளடக்கிச் செய்யப்பட்ட திருவாய்-மொழியின் முதற்பாடலாகிய 'உயர்வற உயர்நலன்' என்ற பாடல்.
திருவாய்மொழியாகிய சந்திரன் உதித்தலால் கற்றோர் இதயத்தாமரை மலர்ந்தன என்பது அயுத்த ஏது; மதி கண்டு தாமரை கூம்புதலன்றி மலர்தல் இன்மையின். அயுத்தம் - அயுக்தம் - பொருத்தமின்மை.] [110]

ஐயஏது

**196. உணர்வுறின் ஐயஏதுவும் உளவே. [111]**

(எ-ன்) இதுவும் மேற்கூறிய காரகஏதுவைப் பிறிது ஒருவகையான் வகுத்து உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) அவ்வேது ஐயஏதுவினும் வருவது உண்டு என்றவாறு.

**வேயால் இசைதந்த மால் பரமேச்சுர விண்ணகர்வாய்த்**
**தோய்ஆதரவு உற்று, உனைப்பிரிந்தால், இனித் தோயும் தன்மை**

**ஏயாது என நினைந்தோ, நெடிதாம் எல்லை எய்துகிலின்**
**மாயாப் பழி எய்தும் என்றோ, நைகின்றது? வாள்நுதலே! (453)**

இஃது ஐயுறவுஏது. இதனுள், இனிப் புணர்ச்சி கூடும் தன்மை பொருந்தாது என விசாரித்தோ, நெடும்பொழுது எய்துமாகில் நுமது குடிக்கு நீங்காத அவகீர்த்தி உண்டாம் என்றோ இவ்விரண்டினுள் வருந்துகின்றதற்கு ஏது யாது தான் என்றவாறு. பகுதி - இயற்கைப்புணர்ச்சி; துறை - பருவரல் அறிதல்.

[''ஒளி பொருந்திய நெற்றியை உடையாய்! புல்லாங்குழலால் கண்ணனாய் அவதரித்த-காலத்தில், இசையை வெளிப்படுத்திய திருமால் உகந்தருளியிருக்கும் பரமேச்சுர விண்ணகரம் உள்ள பகுதியில் உன்னைப் புணருமாறு அன்புகொண்டு இப்பொழுது உன்னைப் பிரிந்தால் இனி மீண்டும் நாம் கூடுதற்குரிய வாய்ப்புக் கிட்டாது என்று நினைத்தோ, நெடுநேரம் இங்குத் தாமதித்தால் உன் குடிக்கு நீங்காத பழி எய்தும் என்று கருதியோ, நீ வருந்துகின்றாய்?'' என்று தலைவன் தலைவியை வருத்தம்கண்டு வினவிய இக்கூற்றில் ஐயஏது காணப்படுகிறது.] [111]

31-ஆவது ஏது முற்றும்.

32-ஆவது சுவைஅலங்காரம்

சுவைஅணியின் இலக்கணம்

**197. பொறிஉணர்வொடும் ஒருபொருளினை எதிர்ந்த**
**நெறிஉடை மனத்துள் நிகழ்தரும் பான்மை**
**அயலவர் உறப் புறத்தாய்ப் பொருள்எட்டின்**
**இயல்வது சுவைஎன்று இயம்பினர் புலவர். [112]**

(எ-ன்) வைத்த முறையானே (87) சுவை என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) இந்திரியங்களின் அறிவினோடும் யாதானும் ஒருபொருளைக் காணப்-பட்ட மனத்துள் அப்பொருள் ஏதுவாக நிகழ்ந்த தன்மை நிகழ்ந்தவாறே புறத்தார்க்குப் புலப்படுவது ஓர்ஆற்றான் வெளிப்பட மெய்ப்பாடு எட்டாய்த் தோன்றுவது சுவை என்னும் அலங்காரமாம் என்றவாறு. பொருள் என்றது மெய்ப்பாடு. இயல்வது - உண்டாவது. 'பொருள் எட்டின் இயல்வது சுவை' என்றது பொன்னின் இயன்ற குடம் என்பதுபோலக் கொள்க.

[ஒருபொருளைக் கண்டபோது ஏற்படும் மனஉணர்வு பொறிஉணர்வுகளால் புறத்-தார்க்குப் புலப்படும் வகையில் வெளிப்படுவது மெய்ப்பாடாம். பொன்னால் இயன்ற குடம் பொன்னின் வேறன்று; அதுபோல மெய்ப்பாட்டான் ஏற்படும் சுவை மெய்ப்-பாட்டின் வேறன்று; அதன் பிறிதொரு வடிவம் என்றவாறு.] [112]

எண்வகை மெய்ப்பாடு

**198. அவைதாம்,**
**பெருமிதம் நடுக்கம் அழுகை இளிவரல்**
**உருத்திரம் நகை வியப்பு உவகை என்று ஆகும். [113]**

(எ-ன்) பொருள்எட்டின் இயல்வது என்றார், அவ்வெட்டும் இவை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) பொருள்எட்டு என்னும் அவைதாம் பெருமிதம் முதல் உவகை ஈறாம் இவை எட்டுமாம் என்றவாறு.

**திருமால் பரன்எனவே தேற்றுதற்கு அன்பாக**
**வரும் ஆரியன் தனைஇம்மண்மேல் புலவீர்!**
**ஒருமானிடன்என்று உணராது அவன் எம்**
**பெருமானாம்என்று உணர்ந்து அப்பெருமான் அருள்கூர்**
**பத்தர்தம் அடியிணை பரவுமின்; அதுவே**
**உத்தம இலக்கணம்; உரைசால்**
**முத்தியை விளைக்கும் முயற்சியும் அஃதே. (454)**

இது கல்விபற்றிய பெருமிதம்.
பா - மருட்பா, திணை - பாடாண்; துறை - செவியறிவுறூஉ. ஓம்படையுமாம்.
["சான்றோர்களே! 'திருமாலே பரம்பொருள்' என்பதனை நமக்குத் தெளிவித்தற்கு எழுந்தருளியிருக்கும் ஆசாரியனை நம்போன்ற சாதாரண மனிதன் என்று உள்ளத்துக் கொள்ளாது, அவனை எம்பெருமானாகவே மனத்துக்கொண்டு, அப்பெருமானுடைய அருளுக்குப் பாத்திரர்களான அடியார்களுடைய திருவடிகளைப் புகழ்ந்து வழிபடுங்கள். அஃதே உத்தம இலக்கணம்; புகழப்படுகின்ற வீடுபேற்றை உண்டாக்கவல்ல முயற்சியும் அதுவேயாகும்."
இப்பாடல் மருட்பாயாப்பு. கல்வி - தவம் முதலாகிய விச்சை. பெருமிதம் - வீரம். குருநாதனையும் அடியார்களையும் வழிபட்டு வாழும் தவ வாழ்க்கையின் வீரத்தை விளக்குதலின், இப்பாடல் கல்வி பற்றிய பெருமிதமாம்.]

**நாராயணனே நமஎன்று உரைப்பவர்பால்**
**வாரா ஒருநாளும் வல்வினைகள்;**
**சாரான் ஒருநாளும் சண்டதரன்; சாராவாம்,**
**பேராத மாயப் பிறப்பு. (455)**

[எம்பெருமானையே வழிபடுபவர்களுக்குத் தீய வினைப்பயன்கள் ஒருநாளும் வாரா. கொடிய காலனும் அவரை அணுகான். நீங்காத தீய பிறப்புக்கள் அவர்களைச் சாரா - என, தவம் முதலாகிய விச்சை பற்றிய பெருமிதப்பயன் கூறலின் இதுவும் கல்வி பற்றிய பெருமிதம்.]
இதுவும் கல்விபற்றிய பெருமிதம். என்னை?
'கல்வி தறுகண் இசைமை கொடையெனச்
சொல்லப்பட்ட பெருமிதம் நான்கே' (தொ. பொ. 257)
என்பதனால் அறிக. பா - 'வெண்பாட்டு ஈற்றடி முச்சீர்த்து ஆகும்' (தொ. பொ. 384) என்ற செய்யுளியல் சூத்திரத்துள் வெண்பாவுக்கு ஈறு உணர்த்தப் புகுந்து 'முச்சீர்த்து' என்னாது 'ஆகும்' என ஆக்கம் கொடுத்தமையால், அத்துணை ஆக்கம்இன்றி இடையினும் முச்சீராய் அவ்வீற்றுச்சீர் அசைச்சீர் ஆகாது வரும் என்று உட்கொண்டு உணர்த்தினார், தொல்லாசிரியர். அங்ஙனம் தனிச்சொல்லும் இன்றி வந்ததொரு வெண்பாவின் விகற்பமாம் இது. இங்ஙனம் வருவதனை அதன்பின்னர் வரும் ஒருசார்ஆசிரியர் சவலைவெண்பாட்டு என்றும் பெய-ரிட்டு வழங்குவதாம். என்னை?
'நனிஇரு குறளாய் நான்குஅடி உடைத்தாய்த்
தனிவரல் இல்லது சவலை வெண்பாட்டே'
என்பதனாலும் உணர்க.
[இரண்டாம் அடியும் முச்சீராய், நான்காம் சீராகிய தனிச்சொல் இன்றி வரும் நேரிசைவெண்பாவின் திரிபு சவலைவெண்பாவாம்.

அட்டாலும் பால்சுவையில் குன்றாது அளவளாய்
நட்டாலும் நண்புஅல்லார் நண்புஅல்லர்
கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே சங்கு
சுட்டாலும் வெண்மை தரும். (மூதுரை - 4)
சவலை என்ற சொல் வீரசோழியத்திலேயே (130) காணப்படுகிறது.]

**கீலாலம் குளிறுதிரை கெழுகடல்முற்று அகன்ஞாலத்து**
**ஆலாலம் மிசைப்பவள அருவரையும் கருவரையும்**
**தமிதமி என்னதுஎனலாம் தவலரும்மாண் தொழில்தன்மை**
**எமதுஎமதுஎன்று எதிருநரின் உயிர்செகுத்தீத்து இருநோக்கின்**
**கடைசிவந்து கருமையவாய்க் கவின்பெறு வார்குழைபோழ்ந்த**
**வடிபுரைமாண் மதர்மலர்க்கண் மதிபுரைவாள் நறுநுதாஅல்! (தரவு)**
**இடம்தழுவும் குனிசிலைக்கை இகல்மறவர் கொடுங்கணையோடு**
**உடன்றுஎழில், என்சுடர்வடிவேற்கு உணவுஆதல் ஒருதலையால்;**
**தொடர்ந்துஎழு நின்தமரேல், செண்பகமாறன் துணைஅடிசேர்**
**திடம்தழுவு ததியர்எனத் தெருளுற நன்கு அருளுவனே.**
**வாட்டானைத் துறுமறவர் வயிரஅழல் பிழம்பு உகுகண்**
**கோட்டுஆனையுடன் வரில், என் கூர்இலைவேல் அவர்மார்பில்**
**தீட்டா நைவினை அளிப்பன்; நுமரேல், திவ்வியத்துளபத்**
**தோட்டானைத் தொழுமாறன் தொண்டரின் நன்கு அருளுவனே.**
**குளிர்மதிவான் அகடுஉரிஞ்சும் கொடித்தேரின் குழுவினொடும்**
**ஒளிதிகழ்வன் படைமறவர் உடங்குஎழில், வைந்நுதிவேலால்**
**களிபயில் வெந்தொழில்புரிவன்; நுமரேல், வண்கருணேசன்**
**அளிதிகழ்தே மகிழ்மாறன் அடியரின் நன்கு அருளுவனே. (தாழிசைகள்)**
**எனஆங்கு (தனிச்சொல்)**
**காணுதி காணுதி; கனலி தெற்குஎழினும்**
**தாணுவின் நிலை தவறினும், தவறா உரை;**
**குன்று சூழ் கூர்ம்பரல் கொடுநெறிக்கு**
**ஒன்றும் நீ அழுங்குஅஞர் உறல்; ஏகுதியே. (சுரிதகம்) (456)**

இது தறுகண்மைபற்றிய பெருமிதம்.
பகுதி - உடன்போக்கு; துறை - அடல் எடுத்து உரைத்தல்.

["நீரிலே ஒலிக்கின்ற அலைகள் நிரம்பிய கடலால் சூழப்பட்ட இடமகன்ற உலகிலே, ஆலகாலவிடத்திலே அரிய பவளமலையும் கரியமலையும் தனித்தனி நடப்பட்டாற் போல, நீங்குதலில்லாத மேம்பட்ட தொழிற்பண்பினால், இவற்றை எமக்கு உரியன ஆக்கவேண்டும்என்று எண்ணும் ஆடவரின் உயிரைப் போக்கிப் பொதுநோக்கும் அன்புநோக்கும் உடையவாய் ஓரத்தில் சிவந்து கரியநிறத்தனவாய் அழகிய பெரிய நீண்ட காதணிவரை நீண்டு பிளக்கப்பட்ட மாவடுவை ஒத்த மேம்பட்ட செழித்த குவளைமலர் போன்ற கண்களையும் பிறைமதியை ஒத்த ஒளிபொருந்திய நெற்றியையும் உடைய தலைவியே!

வளைந்த வில்லை இடக்கையில் கொண்ட மாறுபாட்டை உடைய பாலைநிலவீரர் கொடிய அம்போடு மாறுபட்டுப் போரிடின், என்னுடைய ஒளி பொருந்திய காய்ச்சி வடிக்கப்பட்ட வேலுக்கு அவர்கள் இரையாகி மாய்தல் நிச்சயம். உடன்போக்கில் வந்த நம்மைத் தொடர்ந்து வருவோர் உன்உறவினராயிருப்பின், சண்பகமாலையை அணிந்த சடகோபனுடைய திருவடிகளைப் பற்றுக்கோடாகக் கொள்ளும் உறுதியைக் கொண்ட அவன் அடியவர்களை மதிப்பது போலத் தெளிவுபெற நன்றாக அருள்செய்வேன்.

வாளை ஏந்திய காலாட்படையாக நெருங்கி வரும் பாலைநிலவீரர், பகைமை பாராட்டும் தீச்சுடரை உமிழும் கண்களை உடைய, தந்தங்களைக் கொண்ட களிறுகளோடு என்னை எதிர்த்துவரின், என் கூரிய இலைவடிவம் கொண்ட வேலினை அவர்கள்மார்பில் செருகி அவர்களுக்கு வருத்தத்தை விளைவிப்பேன். உன் உறவினராயின், தெய்வ-மணம் கமழும் திருத்துழாய் மாலையை அணிந்த எம்பெருமானை வழிபடும் சடகோப-னுடைய அடியவர்களுக்கு அருளுவதுபோல நன்கு அருள்புரிவேன்.
குளிர்ந்த சந்திரன் உலாவும் வானத்தின் அடிவயிற்றில் தேய்த்துக்கொள்ளும் கொடிகள் உயர்த்தப்பட்ட தேரின்கூட்டத்தோடு ஒளிவீசும் வலிய படைக்கலன்களை உடைய பகைவீரர்கள் ஒருசேர எதிர்த்துவரின், கூரிய நுனியினை உடைய என்வேலினாலே மகிழ்ச்சி தருகின்ற கொடிய போர்த்தொழிலைப் புரிவேன். உன் உறவினராயின், வண்மையை உடைய கருணைத்தலைவனாகிய, வண்டுகள் மொய்க்கும் தேனை உடைய மகிழம்பூமாலையை அணிந்த சடகோபனுடைய அடியவர்களுக்கு உதவுவது போல நன்கு அருள்செய்வேன்.
இவ்வாறு நீ நிகழப்போகும் நிகழ்ச்சிகளைக் காண்பாயாக. கிழக்கில் தோன்றும் கதிரவன் தெற்கில் தோன்றினும், உறுதியாக இருக்கும் மலைகள் தம்நிலை பெயரினும், என்-சொற்கள் தவறமாட்டா. குன்றுகள் சூழ்ந்த பருக்கைக்கற்கள் மிகுந்த வளைந்த பாதையில் செல்வதற்கு நீ வருந்தும் துன்பத்தை எய்தாமல் என்னுடன் தொடர்ந்து வருவாயாக."
தறுகண்மை - அஞ்சத்தக்கன கண்டுழி அஞ்சாமை. குழுவாக வரும் பகைவருக்கு அஞ்சாமல், தலைவன் தலைவியிடம் தன்ஆற்றலை எடுத்து உரைத்தமையால், இது தறுகண்மை பற்றிய பெருமிதம்.]

**கொன்றேன் கொடுவினையை; கூற்றுவனார் ஆட்டம்எலாம்**
**வென்றேன்; இனிநரகில் வீழ்கலேன்; - சென்றுமறை**
**தேடிப் பிடித்த திருமாலே தெய்வமென**
**நாடிப் பிடித்ததனால் நான். (457)**

இதுவும் தறுகண்மைபற்றிய பெருமிதம்.
திணை - வாகை; துறை - சால்புமுல்லை.
[கொடுவினை, காலன் தரும் அச்சம், நரகத்துன்பம் ஆகிய அஞ்சத்தக்கனவற்றிற்கு அஞ்சேன் என்றமையால், இது தறுகண்மை பற்றிய பெருமிதம். 'திருமாலே பரம்-பொருள்' என்று தவம் முதலாய விச்சையால் உறுதி செய்தமையால், இது கல்விபற்றிய பெருமிதமும் ஆம். ஆகவே, இப்பாடல் கல்வி, தறுகண்மை என்ற இரண்டும் பற்றிய பெருமிதத்துக்கு எடுத்துக்காட்டு என்பது சிறப்பு.]

**அரிஆயவன் பரன் ஆம் என்னுமது ஆதியில் அன்று அழைத்த**
**கரியாலும் உண்மை உறார்; இது என்னோ? கற்றுஉணர்ந்து செம்பொன்**
**உரியார் கடைசென்று இரப்பவரோடு ஒன்றுஎன எனையும்**
**சிரியாது அருள்செய்தவா, மகிழ்மாலிகைத் தேசிகனே. (458)**

இஃது இசைபற்றிய பெருமிதம்.
திணை - வாகையைச் சார்ந்த புறத்திணை. துறை - புலமைவென்றி.
["முன்னொரு காலத்தில் 'ஆதி மூலமே' என்று அழைத்த யானையாகிய சாட்சியைக்-கொண்டு 'திருமாலே பரம்பொருள்' என்ற உண்மையைக் கற்றுணர்ந்த சான்றோருள் சிலர் உணராதிருப்பது வியப்பாக உள்ளது. கற்று உணர்ந்தும் மெய்வருந்திக் கைசெய்து பொருள்ஈட்டாமல் பொன்னுடையவர் வீட்டுமுகப்பில் சென்று இரப்பவர்கள்கூட்டத்தில் யான் சேருமாறு செய்து என்னைப் பிறர் சிரிக்காதவகையில், மகிழம்பூமாலையை அணிந்த தலைவனாகிய சடகோபன் எனக்கு அருள்செய்துள்ளானே எனப் பெருமிதம் உறுகிறேன்".

என்ஆவது, எத்தனை நாளைக்கும்? போதும், புலவீர்காள்!
மன்னா மனிசரைப் பாடிப் படைக்கும் பெரும்பொருள்,
மின் ஆர் மணிமுடி விண்ணவர்தாதையைப் பாடினால்,
தன்னாகவே மகிழ்ந்து சன்மம் செய்யாமையும் முடியுமே. (நாலா. 2988)
வம்மின் புலவீர்! நும்மெய் வருந்திக் கைசெய்து உய்ம்மினோ! (நாலா. 2990)

என்பன திருவாய்மொழி. இசை - இன்பமும் பொருளும் இறப்பப் பயப்பினும் பழி-யொடு வருவன செய்யாமை. பிறரிடத்து இரத்தல் பழிச்செயல். ஆதலின் அதனைச் செய்யாமை இசைபற்றிய பெருமிதமாகும்.]

**அன்று ஆதரவில் கரி சொன்ன கார்அரங்கேசன் வெற்பில்**
**நின்தாதை சொன்ன நிதியம்எல்லாம் உம்பர் நீடுசெம்பொன்**
**குன்றாம்எனக் கொணர்ந்து உய்ப்பன்; மின்னே! இன்பக்கொம்பின் செவ்வி**
**பொன்றாது இங்கு அவ்வளவு உய்க்கொள்வதாம், நின்புகழ் என்பதே. (459)**

இது கொடைபற்றிய பெருமிதம்.
பகுதி - வரைபொருட்பிரிதல்; துறை - பொருட்பிரிவு உணர்த்தல்.

["மின்னல்போன்று ஒளிஉடைய தலைவியே! முன்னொரு காலத்தில் கசேந்திரன் விருப்போடு 'ஆதிமூலம்' என்று குறிப்பிட்ட கருநிறத்தவனாகிய அரங்கேசனுடைய மலையில் உன்தந்தையார் உனக்குப் பரிசமாகக் குறிப்பிட்ட செல்வத்தைஎல்லாம் வானளாவிய மேருமலைபோலக் கொணர்ந்து சேர்ப்பேன்; இன்பம் தரும் பூங்கொம்பு-போன்ற உன்அழகு கெடாது இவ்விடத்து அழகுமுழுதையும் பாதுகாத்துக்கொள்வதே உனக்குப் புகழாகும்" என்னும் இப்பாடலில், தலைவியின் தந்தை குறிப்பிடும் பரிசப்பொருளை முழுதுமாகக் கொண்டுவந்து சேர்ப்பவனாகத் தலைவன் தன்னைக் குறிப்பிட்டுக்கொள்ளுதல் கொடைபற்றிய பெருமிதம்.]

**கூற்றம் கொடிதுஎன்று உணர்ந்தும், கொடுநரகை**
**மாற்றும் திறம்தெரிந்து வாய்மையால் - நோற்பதற்கு இங்கு**
**என்அறிவுஒன்று இன்றால்; இனி அரங்கத்து எம்மானே!**
**உன்அருள் உண்டாமாகில் உண்டு. (460)**

இஃது அணங்குபற்றிய அச்சம், கூற்றமும் அணங்கே ஆதலின்.
'அணங்கே விலங்கே கள்வர் தம்இறைஎனப்
பிணங்கல் சாலா அச்சம் நான்கே' (தொ. பொ. 256)

என்றாராகலின். மாற்றும் திறம் தெரிந்து - நீக்கும் கூறுபாடு அறிந்து. நோற்-பதற்கு இங்கு என் அறிவு ஒன்று இன்றால் - நல்ல நோன்புகளை நோற்பதற்கு எனக்கெனச் சிறிதும் அறிவு இல்லை ஆகையால். இனி அரங்கத்து எம்மானே! உன் அருள் உண்டாமாகில் உண்டு - இனி உனது திருவுள்ளக் கருணை உண்டாமாகில் யமன்கையில் அகப்படாமல் முத்தியைப் பெறுதல் உளதாம் என்றவாறு.

["காலன் கொடியவன் என்பதனை உணர்ந்தும், அவனால் இவ்வுயிருக்கு வழங்கப்-படஉள்ள கொடிய நரகத்துயரை மாற்றும் வழியை அறிந்து உள்ளவாறு நல்ல நோன்புகளைச் செய்ய அடியேற்கு அறிவு இன்று. எம்பெருமானே! உன் கருணை அடியேன்மாட்டமையின் காலனிடமிருந்து அடியேன் தப்பலாம்" எனத் துன்புறுத்தும் காலன்பற்றிய அச்சம் இப்பாடலில் காட்டப்படுதலின், இஃது அணங்குபற்றிய அச்சம். அணங்கு என்பன - பேயும் பூதமும் பாம்பும் பதினெண்தேவகணனும் நிரயப்-பாலராகிய காலன் முதலானோரும், பிறரும் அணங்குதல்தொழிலர் ஆகிய சவம் தின் பெண்டிர் முதலாயினோரும், இடியோசைத் தொடக்கத்தனவும் ஆம்.]

**வெறியால் இம் மம்மர்நோய் மீளுகில் என்? மீளா**
**நெறியால் என்? ஆராயின், நெஞ்சே! - குறிதுஆய**
**கன்றால் விளவின்கனி உதிர்த்தோன் காட்கரைவாய்**
**ஒன்றாலும் வாழாது உயிர். (461)**

இது பிறன்கண் தோன்றிய அணங்கு பொருளாகப் பிறந்த அச்சம். நடுக்கம் என்பதும் இது.

“நெஞ்சே! மருந்து பிறிது இல்லாப் பெருந்துயர் இழைக்கும் இக்காமமாகிய பிணி வெறியாடலால் தீருமே எனின், அது தலைவர்க்கு எம்மிடத்து உண்டாய அன்பினைக் கெடுக்கும்; தீராவிடின், ‘இஃது யாது’ என அன்னையரால் எமது கரவு ஆராய்ந்து அறியப்படும். ஆதலான், இருவழியாலும் இவ்வுயிர் வாழாது” என்றவாறு. ஆதலால் ‘மீளில் என்? மீளாவிடில் என்?’ என்பதாயிற்று.

விளவின் கனி உதிர்த்தான் - வினைப்பெயர். பகுதி - வரைபொருட்பிரிதல்; துறை - இன்னல்எய்தல். அணங்கு ஒழிந்த மூன்றும் வந்தவழிக் காண்க. அவை எல்லாம் ஈண்டு உரைப்பின் பெருகும்.

[பிறன்கண் தோன்றிய அணங்கு - வேலன் வெறியாட்டு நிகழ்த்துவதால் அவனிடத்து ஆவேசம்பற்றி வரும் முருகனாகிய தெய்வம். அச்சம் - அத்தெய்வம் தன்-களவொழுக்கம் பற்றிய செய்தியாக யாது கூறுமோ என்ற தலைவியின் அச்சம்.
விளவின் கனி உதிர்த்தோன் - பசுக்கன்றினைக் குறுந்தடியாகக் கொண்டு விளமரத்தின் கனியை உதிர்த்து அவ்விரண்டினும் ஆவேசித்திருந்த அசுரரை அழித்த கண்ணன்.
அணங்கு ஒழிந்த மூன்று - விலங்கு, கள்வர், தம் இறை என்பன.
விலங்கு - அரிமா முதலாகிய அஞ்சுதக்கன.
கள்வர் - தீத்தொழில் புரிவார்.
இறை - தந்தையாரும் ஆசிரியரும் அரசரும் முதலாயினார்.
இவை நான்குமேஅன்றி, ஊடல் பொருளாகவும் அச்சம் பிறக்கும். அச்சம் பிறிது-பொருளை நிலைக்களனாகக் கொண்டே நிகழும்.]

**சோலைமலை அழகர் தோள்மாலை காமுறும்முன்**
**மாலையாய் யாமமாய் வைகறையாய் அல்கு இரவுஇன்று**
**என்னே, நீட்டித்தது எவன்? (462)**

இது தன்கண் தோன்றிய வறுமைப்பொருள்பற்றி வந்த அழுகை. என்னை?

‘இளிவே இழவே அசைவே வறுமைஎன
விளிவுஇல் கொள்கை அழுகை நான்கே’ (தொ. பொ. 253)

என்றார்ஆகலின். வறுமை என்பது இச்சித்த போகம் துய்ப்பப் பெறாத பற்றுள்ளம். திணை - பெண்பால்கூற்றுக் கைக்கிளை; துறை - இரவின் நீடு பருவரல். பா - இரண்டு விகற்பத்து இன்னிசைச் சிந்தியல்வெண்பா.

[“திருமாலிருஞ்சோலைமலையிலுள்ள சௌந்தரராசப்பெருமானின் தோளில் அணிந்த மாலையை யான் பெற்றுச் சூடிக்கொள்ளவேண்டும் என்று ஆசைப்படும் முன்னர், மாலை எனவும் யாமம் எனவும் வைகறை எனவும் முக்கூற்றினதாய்க் கழிந்து சென்ற இராக்காலம், இன்று கழியாமல் நீட்டித்துக்கொண்டே இருப்பதன் காரணம்தான் யாது?” என்ற தலைவி கூற்றில் தலைவி தான் பெற விழைந்த எம்பெருமான் தோள்மாலை பெறாமல் அதன்மேல் பற்றுக்கொண்டு வருந்திய வறுமையை நிலைக்களனாகக் கொண்டு அழுகைச்சுவை தோன்றியவாறு.
மாலை - இரவு 6 மணிக்குமேல் 10 மணிவரை, யாமம் 10 மணி முதல் 2 மணி வரை, வைகறை இரவு 2 மணி முதல் 6 மணி வரை உள்ள காலங்கள்.
இளிவு - பிறரால் இகழப்பட்டு எளியராதல்.
இழவு - தந்தைதாய் முதலிய சுற்றத்தாரையும் இன்பம் பயக்கும் நுகர்ச்சிகளையும் இழத்தல்.

அசைவு - பண்டைநிலை கெட்டு வேறொருவாறாகி வருந்துதல்.
வறுமை - விரும்பிய போகம் துய்க்கப்பெறாமை மேலும், அதன்மேல் பற்றுக்கொண்டு துன்புறுதல்.]

**அருள்நோக்கு இறைபிறழில் ஆர்பிரிவுஎன்று ஆனா**
**மருள்நோக்கு உறல்அறிந்தும், மன்னன் - பொருள்நோக்குஉற்று**
**ஏறுவான் வங்கத்து என்று, எங்கள்மால் வெள்ளறைவாய்க்**
**கூறுவாளிற் கொடிதோ, கூற்று? (463)**

(இ-ள்) "அன்புறும் நோக்குச் சிறிது மாறின் நெடும்பிரிவு என்று கருதி நீங்காத எனது உள்ளம்உறும் மருள்நோக்கு மிகுதியைத் தோழி தனது உள்ளத்தால் அறிந்தும், நம் மன்னன் பொருள்மேல் அன்புற்று முந்நீரிடத்து வங்கத்துச் செல்வான் என்று எம்முடைய திருமால் திருவெள்ளறையிடத்துக் கூறுவாளைப் போலக் கொடுமை உடையதுஅன்று கூற்றம்" என்றவாறு. ஓகாரம் ஒழியிசை. இஃது அசையும் பொருள்பற்றி வந்த அழுகை. என்னை? பண்டைநிலை கெட்டு வேறொரு திறத்தளாகி வருந்துதலின் என அறிக.
பகுதி - பொருள்வயின்பிரிதல்; துறை - ஆற்றாது புலம்பல்.
[தலைவியது கூற்று இது. அருள்நோக்கு - அன்புறும் நோக்கு. ஆர்பிரிவு - நெடும்பிரிவு. மருள்நோக்கு மிகுதி - மயங்கிக் காணும் மிகுதுயரம். கூறுவாள் - தோழி. கொடிதோ - ஓகாரம் ஒழியிசை. எனதுள்ளம் அறியாத் தோழியே கொடியள் என்றவாறு.]

**புரவல! நீ செய்பொருள்மேல் போகுதியேல், ஆக்கம்**
**தரவலள்அன்று ஈங்குஇவளும், சாற்றில்; - இரவலர்க்குஒன்று**
**ஈத்து இகல்செற்று இன்பம்உறல் யாரொடு, மால் எவ்வுளின்கண்**
**வாய்த்தபுகழ் இல்லறம்மேல் வந்து? (464)**

இது பிறர்கண் தோன்றிய இழவுப்பொருள்பற்றி வந்த அழுகை. இழவு என்பது தந்தையும் தாயும் முதலாகிய சுற்றத்தாரையும் இன்பம் பயக்கும் நுகர்ச்சி முதலாயவற்றையும் இழத்தல்.
(இ-ள்) "காவல்தொழிற்கு வல்லவனே! நீ செய்யப்படும் பொருள்மேல் போகா நின்றனையேல், இவ்விடத்து இவளும் கூறுகில், உயிர் சீவித்திருப்பவள் அல்லள்; ஆகையால் செய்யப்படும் பொருளோடு வந்து, திருமால் எவ்-வுளின்கண் புலப்படும் புகழை உடைய இல்லின்கண் இருந்து இல்லறத்து ஒழுகி இரவலர்மாட்டு அவர் வேண்டியவற்றை ஈந்தும் சத்துருக்களைச் செற்றும் இன்பம்எய்துவது யாரொடும் கூடி?" என்றவாறு.
பகுதி - பொருள்வயின் பிரிதல்; துறை - செலவு அழுங்குவித்தல்.
[தலைவன் பிரியின் தலைவியை இழப்பான் என்ற தோழிகூற்றில், தலைவன்கண் தோன்றஇருக்கும் இழவுப்பொருளாகத் தோழிக்கு அழுகை பிறந்தவாறு.]

**தேர்வலவா! என்ஆம் முகில்முந்தின், செங்கண்மால்**
**காரகத்தாட்கு என்வாசகம்? (465)**

இஃது இளிவரல்பற்றி வந்த அழுகை. இளிவரல் என்பது பிறரால் இகழப்பட்டு எளியனாதல். பகுதி - இதுவும் அது; துறை - வலவனொடு கூறல். பா - ஒருவிகற்பக் குறள்வெண்பா.
["தேரை விரைந்து செலுத்துவதில் வல்ல பாகனே! நமக்கு முன்னரே கார்கால மேகம் தலைவிஇருப்பிடத்தை எய்திக் கார்காலத்தை அறிவித்துவிடுமாயின், திருமாலுக்கு உரிய காரகம் என்ற திருப்பதியில் வாழும் தலைவியிடம் யான் சொல்லிவந்த சொற்கள்

என்ன பயனைத் தருவனவாக முடியும்? பொய்ச்சொற்கள் ஆகிவிடும் அல்லவோ?'' என்ற தலைவன்கூற்றில், தான் கூறியன பொய்த்துவிடுமே என்ற இளிவரல்பற்றி அழுகைச்சுவை வந்தவாறு.]

**அறிவுஇன்மை அன்றிப் பொருள்இன்மை அந்தோ!**
**நிரப்பு என்னும் நீள்நீர் உலகு. (466)**

இது பிறர்கண் தோன்றிய வறுமைப்பொருள் பற்றி வந்த அழுகை; என்னை? ஞானச்செல்வமே பேரின்பம் நுகர்விக்கும் செல்வம் ஆகலின் அஃது இன்மையே வறுமை என்றாயிற்று.

ஞானம் இன்மையே வறுமை என்பது, 'அறிவினால் நிறைவுஇல்லா அகல்-ஞாலத்தவரோடும்' (திவ். 3089) எனப் புவிப் பாவலர் தம்பிரான் நாவீறு உடைய பிரான் தெய்விகப்பாடலான் உணர்க.

திணை - வாகை; துறை - பொருளொடு புணர்தல்.

எனவே தன்கண் தோன்றிய அசைவு பிறன்கண் தோன்றிய வறுமைப்பொருள் பற்றியும் அடைவே வந்தமை காண்க.

[அறிவினால் குறைவில்லா அகல்ஞாலத்தவர் அறிய (திவ். 3089) என்பது திருவாய்மொழியில் உள்ள பாடம். 'ஐயோ! இவ்வுலகம் அறிவின்மையை வறுமை என்று கூறாது பொருள்இன்மையையே வறுமை என்று கூறுகிறதே! இஃது என்ன மடமை!'- என்பது இப்பாடற் கருத்து.

அறிய வேண்டுவனவற்றை அறியாது உலகம் வறுமைப்பட்டு உழல்கின்றதே என்று வருந்துதல், பிறர்கண் தோன்றிய வறுமைப்பொருள் பற்றி வந்த அழுகையாம். பிறர்வறுமை கண்டு தன்கண் அசைவு பிறந்ததாம்.]

**மெய்வேலவன் நடிக்க; வெண்மறி கோடற்கு இசைக;**
**மைவேல்விழி பிறந்து இம்மம்மர்நோய் - செய்கைக்குப்**
**பூங்காவளம்பாடிப் புண்ணியன்தன் வெற்பினில் சேய்**
**நீங்காவளம் பாடி நின்று. (467)**

இஃது இளிவரல். என்னை? 'மூப்பே பிணியே வருத்தம் மென்மையோடு, யாப்புற வந்த இளிவரல் நான்கே' (தொல். பொ. 254) என்றாராகலின். இது பிறன்கண் தோன்றிய பிணிப்பொருள் பற்றி வந்த இளிவரல். நடிக்க, இசைக என்பன வியங்கோள்வாய்பாடு; இகழ்ச்சிக்குறிப்பு. 'மம்மர்நோய் செய்கைக்கு' என்பது மருந்துபிறிது இன்றிப் பெருந்துயர் இழைக்கும் காமமாகிய பிணியைத் தன்கண் செய்வித்துக்கொண்டமைக்கு என்றவாறு.

பகுதி - வரைபொருட் பிரிதல்; துறை - வேலனை அழைத்தல்.

["வேல்போல் கூரிய கரிய விழியினை உடைய தலைவி இக்குடும்பத்தில் பிறந்து இந்தக் காமமயக்கம்தரும் பிணியைத் தன்கண் உண்டாக்கிக் கொண்டதற்கு, அழகிய பூக்களை உடைய திருக்காவளம்பாடி என்ற திருத்தலத்தில் உகந்தருளியிருக்கும் எம்பெருமானுடைய மலையிலே முருகப்பெருமானுடைய அழியாப் புகழைப் பாடி-நின்றுகொண்டு உண்மையைப் போல வேலை ஏந்தி ஆடும் பூசாரி நடிக்கட்டும்; வெள்ளிய ஆட்டுக்குட்டியைப் பலிகோடற்கு இசையட்டும்'' எனத் தாய் வேலனை அழைத்தவழித் தோழி தன்னுள் கூறிக்கொண்டது.

இது தலைவியின் காமப்பிணிப்பொருள் பற்றித் தோழிக்கு இளிவரல் பிறந்தது. இளிவரல் - இழிவு, எளிமை.

மூப்பு - பிறிதொரு காரணம் பற்றாது காலம்பற்றி ஏற்படும் உடல்வேறுபாடு.

பிணி - உடலையும் உள்ளத்தையும் நலியும் நோய்கள்.

வருத்தம் - முயற்சி; மென்மை - வலிமையின்மை.]

**மலமாய் அருவருப்பாய் மாறாப் புழுவின்**
**புலமாம் கருக்குழியுள் புக்கு இங்கு - அலமரும் என்**
**மம்மர்நோய் தீர்க்கும் மருந்து இலையோ? மாசுஅறுசீர்ச்**
**செம்மலே! வேங்கடவா! செப்பு. (468)**

["குற்றமற்ற சிறப்பினை உடைய மேம்பட்டவனே! வேங்கடத்தெம்பெருமானே! மாசுகளாய் வெறுப்புத்தருவதாய் நீங்காத புழுக்களுக்கு இருப்பிடமாகும் கருப்பக்குழியுள் புகுந்து இவ்வுலகில் சுழலும் என் மயக்கந்தரும் பிறவிநோயைப் போக்கக்கூடிய மருந்தே இல்லையோ என்பதனைக் கூறுவாயாக" என்று அடியவன் எம்பெருமானை வேண்டும் வேண்டுகோளில், அவனுக்கு ஏற்பட்டுள்ள பிணியும் துயரமும் சுட்டப்பட்டுள்ளன. பிறவிப் பிணியிலிருந்து விடுபட அவன் முயன்ற திறமும் 'அலமரும்' என்ற சொல்லால் உணர்த்தப்படுகிறது. எனவே, இப்பாடல் தன்கண் தோன்றிய பிணியும் வருத்தமும் பற்றி வந்த இளிவரல்.]

**ஒன்றாய்ப் பரந்த புனல்உண்டநாள் எவ்வுயிரும்**
**பொன்றாது உட்கொண்ட பொருளாகி - நின்றான்முன்**
**செய்ந்நன்றி கொன்றுஉழலும் தேவாந்தரர்தமக்கும்**
**உய்ந்நன்றி உண்டாகுமோ (469)**

இஃது உருத்திரம். உருத்திரம் எனினும் வெகுளி எனினும் ஒக்கும். அஃதாக, இஃது உருத்திரம் என்பது என்னை?

'உறுப்பறை குடிகோள் அலைகொலை என்ற
வெறுப்பின் வந்த வெகுளி நான்கே' (தொ. பொ. 258)

என்றாராகலின், செய்ந்நன்றிகொல்வதே மிக்க கொலையாதலின், பிறர்கண் தோன்றிய கொலைப்பொருள் பற்றிப் பிறந்த வெகுளி. இதனுள் ஒன்றாய்ப் பரந்த உறுபுனல் என்றது ஏகோதகப் பிரளயத்தை. தேவாந்தரர் - ஸ்ரீமந் நாராயணன் அன்றி வேறுபரத்துவம் உண்டு என்போர். ஒழிந்த அகலம் உரையிற் கொள்க. திணை - பாடாண்; துறை - வாயுறைவாழ்த்து.

["ஊழிப் பெருவெள்ளம் உலகங்களைஎல்லாம் தன்னுள் மூழ்குவித்துக்கொண்ட காலத்தில் ஓர்உயிரும் எஞ்சாது தன்வயிற்றுள் அடக்கிய பரம்பொருளாகி நிலைபெற்றிருக்கும் எம்பெருமான் முன்னிலையில், அவன் செய்த நன்றியை மறந்து வேற்றுத்தெய்வங்களைப் பரம்பொருளாக மனத்துக்கொண்டு தடுமாறுவோருக்குப் பிறவிப்பிணியிலிருந்து தப்பிக்கும் வழி ஏற்படுமா?" என்று எம்பெருமானைத் தவிர ஏனைய தெய்வங்களைப் பரம்பொருளாகக் கருதுபவர்களிடம் செய்ந்நன்றி மறந்தவர் என்ற வெகுளி ஏற்பட்டவாறு.

உறுப்பறை - கைகுறைத்தலும் கண்குறைத்தலும் முதலாயின.
குடிகோள் - தாரமும் சுற்றமும் குடிப்பிறப்பும் முதலாயவற்றுக்கண் கேடு சூழ்தல்.
அலை - கோல்கொண்டு அலைத்தல் முதலாயின.
கொலை - அறிவும் புகழும் முதலாயவற்றைக் கொன்று உரைத்தல்.
செய்ந்நன்றி மறத்தலும் கொலை என்பதன்கண் அடங்கும்.
செய்ந்நன்றிமறத்தலாகிய பிறன்கண் தோன்றும் கொலைப்பொருள் பற்றிச் சான்றோர்க்கு வெகுளி பிறந்தது.]

**பொய்ச்சரத மின்னார் வன்பொன்நாணியுள் செறித்த**
**நச்சுஎயிற்றால் ஊறு நயப்பதாய் - மிச்சில்**
**தலைப்பெய்த மோகனவாய்த் தம்பர் சேயே என்**
**முலைப்பெய்வது என்னோ? மொழி. (470)**

இது தன்கண் தோன்றிய ஊடல் பொருளாகிப் பிறந்த வெகுளி

'வெறுப்பின் வந்த வெகுளி நான்கே' (தொ. பொ. 258)

என்பதனால் ஊடல் காரணமாயிற்று. பொய்ச்சரத மின்னார் - பொய்யை மெய்யாகப் பாவிக்கும் மின்னார். நச்சு எயிறு - விடம் போல ஊறு செய்யும் எயிறு. தம்பர் - தம்பலம். முலைப்பெய்வது - முலைமேல் பூசுதல்.

பகுதி - பரத்தையின்பிரிதல்; துறை - புதல்வன்மேல் வைத்துப் புலவி நீடல்.

[“மகனே! பொன்காரணமாக நாணத்தை உள்ளே அடக்கிக்கொண்டு பொய்யன்பை மெய்அன்பு போலத் தோற்றுவிக்கும் மின்னல்போன்ற ஒளியை உடைய பரத்தையர் விடம்போன்ற கொடிய பற்களால் உன்னை முத்தமிடுவதால், அவர்கள் உண்ட மிச்சிலாகிய தாம்பூலச்சுவடு தோய்ந்த உன் விரும்பத்தக்க வாயினால் அவர்களுடைய எச்சில்தாம்பூலத்தை என் முலைகள்மீது பூசுவது ஏன்?” என்று மகனிடம் கூறு-வாள்போலத் தலைவி தலைவனுடைய பரத்தையர்தொடர்பை வெளிப்படுத்தி ஊடல் காரணமாகத் தன் வெகுளியைத் தோற்றுவித்தவாறு.

தொல்காப்பிய நூற்பாவில் (பொ. 258) வெகுளிக்கு 'வெறுப்பின் வந்த' என்ற அடை புணர்க்கப்பட்டிருப்பதால் அதனை மிகைச்சொல்லாகக் கொண்டு அதனால் ஊடல் பொருளாகவும் வெகுளி பிறக்கும் எனப் பேராசிரியர் குறிப்பிட்டதை இந்நூலாரும் உட்கொண்டு உரைத்தார்.]

**பொதுமகளிர் வள்உகிரால் போழ்ந்ததனைச் சாந்தின்**
**மதுமலர்த்தார் மன்னன் மறைப்ப - கதும்எனத் தண்**
**தாமம் பரிந்து தழல்விழித்தாள், செங்கமலப்**
**பூமன் சிறுபுலியூர்ப் பொன். (471)**

இஃது உறுப்பறை என்றதனால் ஊறும் உறுப்பறைப்பாற்படுதலால் பிறழ்ச்சியால் பிறந்த வெகுளி. தாமம் பரிந்து - பள்ளியிடத்தான் ஆன தலைமகன் மார்பின் மாலையை அறுத்து. தழல் விழித்தாள் - தலைவன்உள்ளம் தழல்உற்றது போல வெதும்ப நோக்கினாள். சிறுபுலியூர்ப்பொன் - சிறுபுலியூரிடத்துப் பொன் போலும் நிறத்தை உடைய தலைமகள்.

பகுதி - பரத்தையின்பிரிதல்; துறை - கண்டு கண் சிவத்தல். கூற்று - துறைகூறல்; உழையர் உரைத்தலும் ஆம்.

[செந்தாமரைப் பூவிலிருக்கும் திருமகள் கேள்வனாகிய எம்பெருமான் உகந்-தருளியிருக்கும் சிறுபுலியூர் என்னும் திருத்தலத்திலுள்ள பொன் போன்ற நிறத்தை உடைய தலைவி, பரத்தையர் தம் கூரிய நகங்களால் மார்பில் கிழித்த சுவடுகளைச் சந்தனம் பூசிய, தேன் பொருந்திய மலர்களாலான மாலையை அணிந்த தலைவன் தலைவி காணாத வகையில் மாலையால் மறைப்ப, அவள் அவன் எதிர்பாராத வகையில் அம்மாலையை அறுத்து மார்பில் ஏற்பட்ட நகச்சுவடுகளைக் கண்டு அவன்உள்ளம் அவள்கோபம் கண்டு வெதும்புமாறு வெகுளி தோன்ற நோக்கினாள்.

துறைகூறல் - 'கண்டு கண்சிவத்தல்' என்ற துறையின் விளக்கத்தைக் கவி தன்கூற்றாகக் கூறுதல். பக்கலில் உள்ள பணிப்பெண்கள் கூற்றாகவும் கொள்ளலாம்.

உறுப்பறை - உறுப்புக்களை அறுத்து நீக்குதல். புண்படுத்துதலும் உறுப்பறையுள் அடங்கும் ஆதலின், உகிரால் போழ்தலும் உறுப்பறையாகி வெகுளிக்கு நிலைக்களன் ஆயிற்று. பிறழ்ச்சி - மாறுபாடு. அஃதாவது இயற்கைவனப்புக் கெட்டுப் புண்ணொடு காணப்படுதல்.]

**நின்மகனை என்மறுகில் நின்இயல்கண்டு அன்புஉறீஇத்**
**தன்மக என்றாள்எடுத்தாள்; தக்கதுஎனும் - முன்னிலைக்கண்**
**எற்கண்டாள் நாணினாள்; யாரே மிதிலையில் வல்**
**வில்கண்டான் வில்லிபுத்தூர் மின்? (472)**

இஃது எள்ளல்பொருள்பற்றி வந்த நகை; என்னை?

'எள்ளல் இளமை பேதைமை மடன்என்று
உள்ளப்பட்ட நகை நான்கு என்ப' (தொ. பொ. 252)

என்றார் ஆகலின், இது தலைவனையும் பரத்தையரில் காமக்கிழத்தியையும் பற்றி உரைத்ததால் என்று அறிக. 'நின்இயல் கண்டு' என்பது நின்னை ஒக்கும் உறுப்புஇலக்கணம் கண்டு என்றவாறு. 'தக்கது எனும் முன்னிலைக்கண்' என்றது 'நீ என்மகன் என்றது தகாததன்று; தக்கதே' என்று யான் கூற, என்னை முன்னிலையாகக் கண்டகாலத்து என்றவாறு.

பகுதி - பரத்தையின்பிரிதல்; துறை - பரத்தையைக் கண்டமை கூறிப் புலத்தல்.

["மிதிலைமாநகரிலே வலிய சிவன்வில்லை வளைத்து ஒடித்த எம்பெருமான் உகந்தருளியிருக்கும் வில்லிபுத்தூரிலுள்ள மின்னல் போன்ற ஒளி உடையாள் ஒருத்தி, உன்மகனை யான் இருக்கும் தெருவில் தான் செல்லும் போது உன்சாயல் இருப்பதனைக் கண்டு அன்புகொண்டு அவன் தனக்கும் மகனே என்ற எண்ணத்தில் தூக்கியஅளவில் 'அவனை நீ உன்மகன் என்று எடுத்து வைத்துக்கொள்ளும் செயல் தக்கதே' என்று யான் கூற, என்னைத் தன் கண்முன் கண்ட அளவில் வெட்கப்பட்டாள். அப்பெண் யாவள்?" என்று தலைவி தலைவனை வினாய இப்பாடலில், தலைவன்தொடர்பு கொண்ட பெண்ணிற்கும் தன்மகன் மகன் என்ற உறவுடையவனே என்று பரிகசித்துப் பேசுதற்கண் நகை தோன்றியவாறு.]

**ஆள்வினை இல்லாதேற்கு அருமருந்தைத் தந்து எனை இங்கு**
**ஆள் வினையாம் தெய்வமதை அல்லால் - வேள்வினையை**
**வென்றான் மகிழ்மாறன் வெற்பில் இனி வேறுதெய்வம்**
**ஒன்றாகவும் வியப்பேனோ? (473)**

இது வியப்பு; என்னை?

'புதுமை பெருமை சிறுமை ஆக்கமொடு
மதிமை சாலா மருட்கை நான்கே' (தொ. பொ. 255)

என்றாராகலின், தன்கண் தோன்றிய புதுமைப்பொருள் பற்றிய வியப்பு. மருட்கை எனினும் வியப்பு எனினும் ஒக்கும்.

(இ-ள்) "முயற்சி என்பது சிறிதும் இல்லாத எனக்கு இப்பெண்ணாகிய அமிர்தினை எளிதாக இவ்விடத்துத் தந்து என்னை ஆண்டுகொண்ட நல்வினையாம் தெய்வம் என்பதனை அல்லால், வேளால் எய்தும் காமவிகாரமாகிய தீவினையை வென்ற வகுளமாலிகை மாறன் வெற்புஇடத்து வேறு ஒருதெய்வத்தை ஒருபொருளாக மதியேன்" என்றவாறு. ஓகாரம் ஒழியிசை.

பகுதி - இயற்கைப்புணர்ச்சி; துறை - தெய்வத்தை வியத்தல்.

[புதுமை - புதிதாகத் தோன்றியது; பெருமை - மிகப் பெரியது; சிறுமை - மிகச் சிறியது; ஆக்கம் - ஒன்று திரிந்து பிறிது ஒன்று ஆயது. தலைவி எதிர்பாராது தனக்குக் கிட்டிய புதுமைபற்றிய வியப்பால் தலைவன் தெய்வத்தைப் புகழ்ந்தவாறு. வியப்பேனோ - ஓகாரம் ஒழியிசை; இதுவே பெருமதிப்பிற்கு உரியது என்றவாறு.]

**அண்டமெலாம் உட்கொண்டதுவும் அணுஅகத்தாய்க்**
**கொண்ட திறமும் குறிக்கொளீஇப் - பண்டை**
**மறையும் துணியா மதிள்அரங்கா நின்னை**
**இறையும் துணிகலேம், யாம். (474)**

இஃது இறப்ப மகிமையும் இறப்ப அணுமையும் தன்கண் தோன்றினமை பொருளாக வந்த வியப்பு. துறை - கடவுள்வாழ்த்து.

["அநாதியான வேதமும் உள்ளவாறு துணிந்து உன்இயல்பினைக் கூற மாட்டாத பெருமையை உடைய, மதிள்களை உடைய திருவரங்கத்தில் உகந்தருளியிருக்கும் பெருமானே! எல்லாஅண்டங்களையும் உன்வயிற்றினுள் வைத்துப் பாதுகாத்ததனையும், அணுவுக்குள்ளும் உள்உயிராய் நீ இருக்கும் செய்தியையும் மனத்துக்கொண்டு உன்னைச் சிறிதளவும் இத்தன்மையை என்று துணிந்துகூற இயலாதேமாய் உள்ளேம்'' என்ற இப்பாடலின், இறைவன் ஒரே நேரத்தில் கொண்டுள்ள மிகப்பெரிய வடிவத்தையும் மிகச்சிறிய வடிவத்தையும் நினைத்து வியப்புற்றுக்கூறிய கூற்றில், பெருமை சிறுமை பற்றித் தன்கண் மருட்கை ஏற்பட்டவாறு.
மகிமை - மிகப் பெருவடிவம். அணுமை - அணுவுக்குள் அணுவாயிருக்கும் மிகச்-சிறியவடிவம்.]

**சொல்லாமை முன்பிரிந்து சூழ்நிதிக்கு வைந்நுதிவன்**
**கல்ஆர் அழல்வெங்கடம் கடந்தது - எல்லாம்**
**அடல்ஆழியான் கூடல் ஆயிழைதன் இன்பக்**
**கடல்ஆட நீங்கினவே காண். (475)**

இது தன்கண் தோன்றிய புணர்ச்சிப்பொருள்பற்றி வந்த உவகை; என்னை?
'செல்வம் புலனே புணர்வு விளையாட்டு என்று
அல்லல் நீத்த உவகை நான்கே' (தொ. பொ. 259)
என்றார் ஆகலின். இதனகத்துக் 'கடம் கடந்ததுஎல்லாம்' என்பது சுரம் கடந்து போயதால் உடல்உயிர்கட்குச் சுரத்தின் வெம்மையால் உற்ற துயரம் எல்லாம் என்றவாறு. 'ஆயிழைதன் இன்பக்கடலாட நீங்கின' என்பது அங்ஙனம் உண்டான வெம்மைஎல்லாம் ஆராய்ந்து அணிந்த பூணினை உடையாள் குளிர்ந்த இன்ப-மாகிய கடலகத்து ஆடினகாலத்து என்னை விட்டு நீங்கிற்று என்றவாறு.
பகுதி - பொருட்பிரிதல்; துறை - உள் மகிழ்ந்து உரைத்தல்.

[பிரிந்த தலைவன், மீண்டுவந்து தலைவியைக் கூடியதால் வந்த உவகை ஆதலின் தன்கண் தோன்றிய புணர்ச்சிப்பொருள்பற்றிய உவகை.
செல்வம் - நுகர்ச்சி; புலன் - கல்விப்பயனாகிய அறிவுடைமை; புணர்வு - காமப்புணர்ச்சி முதலாயின; விளையாட்டு - யாறும் குளனும் காவும் ஆடிப் (தொ. பொ. 191) பதியிகந்து வருதல் முதலாயின.]

**கேளாது இருந்திலேன் கேசவா என்பதனை;**
**வாளாது இருந்திலேன் வாழ்த்தினேன்; - ஆளானார்க்கு**
**ஆளானேன்; என்இணை இங்கு ஆர்? (476)**

இது பெருமிதம் சார்ந்த உவகை. திணை - வஞ்சி; துறை - நெடுமொழி வஞ்சி. பா - ஒரு விகற்ப நேரிசைச்சிந்தியல்வெண்பா.

["கேசவன் என்ற எம்பெருமான் திருநாமத்தைத் காது கொடுத்துக் கேளாது என் வாழ்நாளைக் கழித்தேன்அல்லேன்; ஒன்றும் செயற்படாது வாழ்நாள் கழிக்காமல் எம்பெருமான் திருநாமங்களை வாழ்த்தினேன். அவனடியார்களுக்கு அடியவனாக வாழ்ந்தேன். அத்தகைய எனக்கு நிகராவார் ஆர் உளர்?'' என்று தன் பெருமிதம் தோன்றக் கூறும் இப்பாடலில், புலன் பொருளாக உவகை தோன்றியவாறு.]

**ஈசன் திறமும் எழில்மன் உயிர்த்திறமும்**
**மாசுஇன்று உணர மதிகொளீஇ - நேசித்து**
**உணர்த்துமோ நூல்கள், ஒருதலையாய் மாறன்**
**புணர்த்த தமிழ்வேதம் போல்? (477)**

இது தன்கண் தோன்றிய கல்விப்பொருள்பற்றி வந்த உவகை. 'மாசு இன்றி' என்பது மாசு இன்று என்றாயிற்று.

'அன்றி இன்றிஎன் வினைஎஞ்சு இகரம்
செய்யுளுள் உகரம் ஆகுஇடன் உடைத்தே' (நன். 173)

என்பதனால் அறிக. (தொடர்பினுள் உகரம் ஆய்வரின் இயல்பே என்பது நன்னூல்பாடம்.) ஓகாரம் ஒழியிசை. நூல்கள் - சுருதி மிருதி புராணங்கள். ஒருதலையாய் - உண்மையாய். தமிழ்வேதம் - திருவாய்மொழி.
திணை - வாகை சார்ந்த புறத்திணை; துறை - பனுவல்வென்றி.

[சடகோபன் அருளிய திருவாய்மொழியாகிய தமிழ்வேதத்தைப் போல, ஏனைய நூல்களாகிய வேதம் அறநூல்கள் புராணங்கள் என்பன இறைவன்திறத்தையும் அழகிய நிலைபெற்ற சீவான்மாக்களின் தன்மையையும் குற்றமற உணருமாறு மனத்தில் பொருத்தி விருப்பத்தோடு உணர்த்தும் ஆற்றல் உடையனவோ? - என்ற இப்பாடலில், திருவாய்மொழியை உள்ளவாறு உணர்ந்து இன்புறுதல் புலன் எனப்படும் கல்விப்பயனாகிய அறிவுடைமை ஆதலின், இதனால் ஏற்படும் உவகை, புலன் என்ற பொருள்பற்றி வந்த உவகையாம்.]

**மென்சிறகர் வேதால் விழுப்பேட்டினை எகினம்**
**என்புஉருகப் புல்லி இறைபிரியா - முன்பனியால்**
**போதாய் தொடைத்திருமால் புல்லாணி மெல்லியற்குஅங்கு**
**ஏதாயது என்று அறியேனே.** (478)

இஃது அச்சத்தைச் சார்ந்த மருட்கை.
(இ-ள்) விழுப்பேடு - விழுமிய பெடை. இறைபிரியா - கணப்பொழுதும் விட்டு நீங்காத. முன்பனி - மார்கழியும் தையும். 'போதாய் ... அறியேனே' என்பது பூக்களுள் நல்லனவாய் ஆராய்ந்து எடுத்த பூக்களால் தொடுத்த மாலையை உடைய திருமால் திருப்புல்லாணியின்கண் மயில் போலும் மெல்லிய இயலை உடையாட்கு அவ்விடத்து எய்திய துன்பம் யாது என்று அறியேன் என்றவாறு.
பகுதி - வேந்தர்க்கு உற்றுழிப் பிரிதல்; துறை - வான்நோக்கி வருந்தல். இவற்றின் வேறுபாடும் காண்க.

[மெல்லிய சிறகுகளின் வெம்மையோடு சிறந்த பெடையை ஆண்அன்னம் எலும்புகளும் உருகுமாறு தழுவிக் கணப்பொழுதும் பிரியாதிருக்கும் முன்பனிக்காலத்துத் தன்னால் பிரியப்பட்ட தலைவிநிலை குறித்த அச்சமும், அஃறிணைப்பொருள்களும் பிரியாதிருத்தலைக் கண்ட வியப்பும் தோன்றுவதால் இஃது அச்சத்தைச் சார்ந்த மருட்கை ஆயிற்று. இவ்வாறு மெய்ப்பாடுகள் தம்முள் கலந்து வருதலும் உண்டு என்று உரையாசிரியர் குறிப்பிடுகிறார். பெருமிதம் சார்ந்த உவகை என்று அவர் கூறுவதும் காண்க. (476).]

**புழைத்தடக்கை மால்யானை போதருநாள், அன்பு**
**தழைத்து எனது மன்உயிரைத் தந்த - மழைத்தடக்கை**
**மன்னவற்கோ, மாயன் மதிள்அரங்கத்தாய்! பிறர்க்கோ,**
**முன்னுறநின்று ஆர்க்கும் முரசு?** (479)

மெய்ப்பாடு அச்சத்தைச் சார்ந்த மருட்கை. பகுதி - வரைபொருட்பிரிதல்; துறை - மணமுரசு கேட்டு வருந்தல். போதருநாள் - வருநாள்.

["வியத்தகு செயல்களை உடைய எம்பெருமானுடைய, மதில்களால் சூழப்பட்ட திருவரங்கத் திருத்தலத்தில் உள்ள தோழியே! துளை பொருந்திய பெரிய கையை உடைய மதமயக்கம் பொருந்திய யானை என்னைத் தாக்க வந்த நேரத்தில் அன்பு மிக்கு என் நிலைபெற்ற உயிரைப் பாதுகாத்துத் தந்த, மேகம் போல வரையாது

வழங்கும் நீண்ட கைகளை உடைய நம் தலைவர்பொருட்டா, மற்றவர்பொருட்டா, இம்மணமுரசு நம்முன் ஆரவாரிக்கிறது?" - இதன்கண் எதிர்பாராத வகையில் மணமுரசு ஒலிப்பது பற்றி வியப்பும், தலைவன் பொருட்டா பிறர்பொருட்டா என்ற ஐயத்தால் அச்சமும் ஆகிய இருமெய்ப்பாடுகளும் இடம் பெற்றவாறு.]

'உருத்திரம் நகை வியப்பு உவகை என்றாகும்' (198) உவகையும் என்னும் உம்மைத்தொகை வாய்பாட்டால் சாந்தரதம் என்பதும் கூட்டிச் சுவை ஒன்பது எனவும்படும். அஃதாவது 'செஞ்சாந்து பூசினும் செத்தினும் போழினும் நெஞ்சு ஓர்ந்து ஓடா நிலைமைத்து ஆகும்'.

[செவ்விய சந்தனத்தை உடம்பிற் பூசினாலும், உடம்பை வாள்கொண்டு செதுக்கினாலும், பிளந்தாலும், அவ்வின்ப துன்பங்களையுட்கொண்டு மனம் தன் நிலையினின்று பெயராத தன்மையுடையது சாந்தம் என்னும் சுவை.]

அது காமம்வெகுளிமயக்கம் நீங்கினார்கண்ணே நிகழ்வதாம். சமநிலை, நடுவு-நிலை என்பதும் இது.

**ஏதிலர் உற்றார், பேறு இழவு, இன்பம் துன்பம், என**
**பேது உறலாம் வன்பிதற்று அறவே - போதும்;**
**திருமகிழ்மாறன் பதமே சிந்தித்து எப்போதும்**
**இரு; தரும், பேரின்பம் இது.** (480)

இது சாந்தரதம். இதனுள் நெஞ்சம் என்னும் எழுவாய் முன்னிலை எச்சமாயிற்று. 'நெஞ்சமே! சிந்தித்து இரு; இது பேரின்பம் தரும்' என்று கூட்டுக. இன்பம் தரும் என்பது வினைமுற்று. திணை - பாடாண்; துறை - ஓம்படை.

["நெஞ்சமே! பகைவர் நண்பர், இலாபம் நட்டம், இன்பம் துன்பம், என மயக்கத்தை அடையும் கொடிய பிதற்றுதல்கள் நீங்குமாறு செல்வோம். திருமகிழ்மாறன் திரு-வடிகளையே எப்போதும் சிந்தித்து இரு; இச்செயல் பேரின்பம் தரும்" என்றவாறு. திரு மகிழ் மால்தன் பதமே - திருமகள் மகிழ்ந்து உடன்உறையும் எம்பெருமான் திருவடிகளே; திரு மகிழ் மாறன் பதமே - அழகிய மகிழம்பூமாலையை அணிந்த சடகோபன் திருவடிகளே என இருவகையாகப் பொருள் கொள்க.
மறுதலைப்பட்ட பொருள்களைப் பற்றிக் கலக்கமுறா மனநிலை பற்றிய மெய்ப்பாடு சாந்தரதமாகும்.]

**புகழ்ந்தாலும், வெந்தழலைப்போல் சுடும் சொல்சொல்லி**
**இகழ்ந்தாலும், பேறு இழவு என்றாலும், - அகழ்ந்தாலும்,**
**வெண்திரைப் பால்ஆழியான் மெய்அடியார் மெய்உணர்வு உட்-**
**கொண்டிருப்பார், கோடார் குறி.** (481)

இதுவும் சாந்தரதம். இவை இரண்டும் வாகை; துறை - சால்புமுல்லை.

["வெள்ளிய அலைகளை உடைய பாற்கடலில் பள்ளிகொண்டுள்ள எம்பெரு-மானுடைய உண்மையான அடியார்கள், பிறர் தம்மைப் புகழ்ந்தாலும், கொடிய தீப்போன்ற சுடுசொற்களால் இகழ்ந்தாலும், இலாபம் வந்தாலும் நட்டம் வந்தாலும், தம்மை உடல் வருந்தத் துன்புறுத்தினாலும், உண்மைஞானம் கைவரப்பெற்றவர் ஆதலின், தம் குறிக்கோளிலிருந்து விலகமாட்டார்கள். எந்தவித வேறுபாடுமின்றி இருப்பர்" என்பது சாந்தரதம்.]

இதனுள் உவமை முதலிய அலங்காரங்கள் விரவினவேனும், சுவையே மிகத் தோன்றலால் சுவையே நோக்கமாகக் கொள்க. [113]

இதனை வடநூலார் இரதம் என்ப.

32-ஆவது சுவை முற்றும்.

## 33-ஆவது பரியாயஅலங்காரம்

### பரியாயஅணியின் இலக்கணம்

**199. தொன்மையின் ஒருபொருள் தொடர்பவம் பலவயின்**
**பன்முறை பயின்றது எனல் பரியாயம். [114]**

(எ-ன்) வைத்த முறையானே (87) பரியாயம் என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) யாதாயினும் ஒருபொருள் பழமைத்தாகித் தொடர்புஉறப் பலவயினும் பலமுறையே பலபிறப்புப் பயின்றது என்று கூறுவதும் பரியாயம் என்னும் அலங்காரமாம் என்றவாறு.

**அன்று மலரில், அமிர்தில், கொழுமுனையில்,**
**துன்று துழாய்க்காட்டில், தோன்றியே - இன்று**
**நினையின் தமிழ்மாறன் நீள்குன்ற வாணர்**
**மனையின் பிறந்தனள் பூமாது. (482)**

இது பரியாயம். பரியாயம் என்பது பலமுறை.

பகுதி - இடந்தலைப்பாடு. துறை - நலம் புனைந்துஉரைத்தல்.

[திருமகள் தொடக்கத்தில் தாமரைமலரிலும், பாற்கடல் கடைந்தபோது அமிர்தத்துடனும், சானகியாய் அவதரித்தபோது கொழுமுனையிலும், ஆண்டாளாய் அவதரித்தபோது திருத்துழாய்க்காட்டிலும் தோன்றி, நினைத்துப் பார்க்குமிடத்து, இனிய மாறனுக்கு உரிய துடரிமலையில் வாழும் குறவருடைய மனையில் இப்பொழுது தோன்றியுள்ளாள் - என்ற கருத்தமைந்த இப்பாடலில், திருமகள் பலபிறப்புக்களில் பலஇடங்களில் தோன்றிய செய்தி நிரலே கூறப்பட்டமையின் இது பரியாயம்.]

'பயின்றது எனலும்' என்னும் உம்மை செய்யுள்விகாரத்தால் தொக்குநின்று விரிந்தமையால், தண்டியாசிரியர்,

'கருதியது கிளவாது அப்பொருள் தோன்றப்
பிறிதுஒன்று கிளப்பது பரியாயம்மே' (தண்டி சூ. 72)

என்று கூறியவாறு புணர்ப்பதும் பரியாயமாம் என்று கொள்க. அதற்குச் செய்யுள்

**சொற்பாவலர் தம்பிரான் மகிழ் மாறன் துடரிவெற்பில்**
**பொற்பு ஆர் பிறைநுதல் பூண்முலையாய்! இப்பொதும்பரின்வாய்**
**நிற்பாய்; நறுமென்மலர் கொணர்கேன்; அவண் நீ பெயரின்**
**கல் பாய்தரக் கன்றும், நூபுர பாதகமலங்களே. (483)**

என்பதனால் அறிக. பகுதி - பகற்குறி. துறை - இடத்துஉய்த்து நீங்கல்.

(இ-ள்) "புவிப்பாவலர் தம்பிரானாகிய திருமகிழ்மாறன் துடரிவெற்பினில், பொலிவு நிறைந்த இளம்பிறை போன்ற நுதலினையும் பூண்அணிந்த முலையினையும் உடையாய்! இச்சோலையின்கண் நிற்பாயாக. நின்குழல்மேல் சூட்ட நறுவியவாகிய மெல்லிய மலர்கள் கொய்துகொண்டு வருவன், நீ என்னோடும் அவண் ஏகுவைஎனில், உன் சிலம்பு அணிந்த பாதகமலங்கள் சிறுபரல் ஊன்றக் கன்றும் ஆதலான்" என்றவாறு. இதனுள் தோழி கருதியது கிளவாது பிறிதொன்று கிளத்தியது உணர்ந்துகொள்க.

[தோழி தான் மலர்கொய்துவருமளவும் தனித்து ஓரிடத்து இருக்குமாறு தலைவியைப் பகற்குறியிடத்து உய்த்து, அச்செய்தியை வெளிப்படையாகக் கூறாமல் நீங்குதல் பரியாயமாம்.]

அன்றியும், இளங்கோவடிகள் மனையறம்படுத்த காதையுள்,

'தயங்கு இணர்க்கோதை தன்னொடு தருக்கி
வயங்கு இணர்த்தாரோன் மகிழ்ந்து செல்வுழி' (82, 83)

என்றவற்றுள் தயங்கல், வயங்கல் இரண்டும் விளக்கம் ஆதலின், அதற்கு விரித்துரை எழுதிய அடியார்க்குநல்லாராகிய ஆசிரியர் அதனையும் பரியாயம் என்னும் அலங்காரமாகக் குறித்தார். அஃது இப்பொருள்அணியுள் முந்துறக் கூறிய (சூ. 158) பொருள்பின்வருநிலையுள் அடங்கும் என்று அறிக. [114]

33-ஆவது பரியாயம் முற்றும்.

## 34-ஆவது இலேசஅலங்காரம்

### இலேசஅணி இலக்கணம்

**200. தெண்ணிறப் பளிங்கின் சிறுபுழைச் செந்நூல்
ஒண்நிறம் புறம்பொசிந்து ஒளிரும் படித்தாய்க்
கருத்தினை வெளியிடும் காமர் சத்துவங்களை
அருத்தியின் மறைத்து உரைப்பதுவே இலேசம். [115]**

(எ-ன்) வைத்த முறையானே (87) இலேசம் என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) தெளிந்த நிறத்தை உடைய படிகமணித்துளையுள் ஏற்றப்பட்ட செம்பட்டுநூலினது ஒள்ளிய நிறம் புறத்தே உருவித் தோன்றுமாறு போன்று, உள்ளக்குறிப்பை வெளியிடும் விருப்பத்தோடும் கூடிய சத்துவங்களை அன்பினோடு மறைத்துக்கூறுவது இலேசம் என்னும் அலங்காரமாம் என்றவாறு. [115]

### சத்துவங்கள்

**201. மெய்ம்மயிர் பொடித்தல் வெதும்பல் வெயர்த்தல்
துய்ய பொன்பசலை தோன்றல் நடுக்குஉறல்
விழிபுனல் அரும்பல் வெவ்வுயிர்ப்பு ஆவித்தல்
மொழி தளர்வுஉறல் நகை முதலிய சத்துவம். [116]**

(எ-ன்) சத்துவம் இவை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) நகை முதலாக, மெய்யிடத்து உரோமம் சிலிர்த்தலும், மெய் வெதும்பலும், வெயர்வு தோன்றலும், தூயதாய பொன்போன்ற பசலை தோன்றலும், மெய்நடுக்கமும், கண்ணீர் அரும்பலும், நெட்டுயிர்ப்பும் கொட்டாவியும் மொழிகுழறலும் ஆகிய பத்தும் சத்துவங்களாம் என்றவாறு.

[வெதும்பல் - சூடு ஏறுதல். வெயர்வு - வியர்வை. நெட்டுயிர்ப்பு - பெருமூச்சு விடுதல். சத்துவம் - மெய்ப்பாடு - உடம்பில் ஏற்படும் வேறுபாடுகள்.]

**சேதாம்பல் வாவி திருஅல்லிக்கேணியர் திண்சிறைப்புள்
மீது ஆம் பவனிதனைத் தொழுதே விருப்புற்றிடும் அப்-
போது ஆம் பசலை தன்மெய்க்கே தளிர்த்ததைப் பொய்த்து அவர்தம்
பீதாம்பரத்துஒளி என்னும், மின்னார்க்கு, இந்தப் பெய்வளையே. (484)**

[செவ்வல்லிக் கொடிகள் படர்ந்த நீரோடைகளை உடைய திரு அல்லிக்கேணி என்ற திருத்தலத்து எம்பெருமான் வலிய சிறகுகளை உடைய கருட வாகனத்தின்மீது வந்த

திருவுலாவில் அவரைத் தொழுது அவரை ஆசைப்பட்டபோது தன்உடம்பில் ஏற்பட்ட பசலையை, நிறவேறுபாட்டை ஒத்துக்கொள்ளாது, எம்பெருமானுடைய பீதாம்பரத்து-ஒளி தன்மேனிமீது பட்டதனால் ஏற்பட்ட நிறவேறுபாட்டுத்தோற்றம் என்று தன் தோழிகளுக்கு இவ்வளையல்களை அணிந்த தலைவி கூறினாள் - என்ற இப்பாடலில், உடலில் ஏற்பட்ட நிறவேறுபாட்டிற்கு உண்மைக்காரணத்தை மறைத்துப் பிறிதொரு பொய்க்காரணம் கூறுதல் இலேசம்.]

**தோலாத நேமிப் படையார் நிலாத் திங்கள்துண்டத்து உள்ளார்**
**கோலாகலப்புள் பவனிகண்டே தொழும் கோதை, கொண்ட**
**மாலால் நடுக்கம் பயின்ற மெய்ப்பான்மையை வாய்ந்த சிறைக்**
**காலால் நடுக்குஉற்றதாக மின்னார்க்கு உரைக்கும், கட்டுரைத்தே.** (485)

[நிலாத்திங்கள்துண்டம் என்ற திருப்பதியில் உகந்தருளியிருக்கும் சக்கராயுத-பாணியாகிய எம்பெருமான் ஆரவாரத்தை உடைய கருடவாகனத்தில் திருவுலாவரக் கண்டு தொழுத பெண், தனக்கு அவர்மாட்டு ஏற்பட்ட காமமயக்கத்தால் உடம்பில் ஏற்பட்ட நடுக்கத்தைக் கருடனுடைய சிறகிலிருந்து எழுந்த காற்றினால் ஏற்பட்ட உடல் நடுக்கமாகத் தன்தோழியரிடம் புனைந்துரைத்துக் கூறினாள் - என்னும் இப்பாடலிலும், மெய்நடுக்கத்திற்கு உரிய உண்மைக்காரணத்தை மறைத்துப் பிறிதொரு பொய்க்-காரணத்தைப் புனைந்துரைத்துக் கூறுதலின், இதுவும் இலேசம்.]

திணை - பாடாண்; துறை - 'ஊரொடு தோற்றமும் உரித்துஎன மொழிப' (தொ. பொ. 85 ந.) என்றார் ஆகலின், பவனிகண்டு அடைந்த பான்மைமறைத்தல். [116]

34-ஆவது இலேசம் முற்றும்.

## 35-ஆவது தற்பவஅலங்காரம்

### தற்பவஅணி இலக்கணம்

**202. யாதொரு பொருட்டின் ஒன்று இறந்தது மறித்தும் அவ்**
**ஏதுவில் பிறந்தது என்பதுவே தற்பவம்.** [117]

(எ-ன்) வைத்த முறையானே (87) தற்பவம் என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) யாதொரு காரணத்தினான் யாதொன்று இறக்கப்பட்டது, அது மீட்டும் அப்பொருள்பொருட்டுப் பிறந்தது என்பது தற்பவம் என்னும் அலங்காரமாம் என்றவாறு.

**போர்பட்ட வேற்கண் பொருநோக்கினுக்கு இலக்காய்**
**நேர்பட்டு இறந்த நிறைமன்னோ - கூர்பட்ட**
**நேமியான் முட்டத்து நேரிழைதன் நாண்நோக்கில்**
**காமியா வந்ததுவே காண்.** (486)

இது தற்பவம். தற்பவம் என்பது மூன்றாவதன்தொகை; என்னை? அதுதன்னால் பிறத்தல்.

(இ-ள்) போர் உற்பவமான வேல்போன்ற கண்கள் என்மேல் பூசல் புரி நோக்கத்தால் துறந்த எனது நிறை, நுண்ணிய ஆபரணத்தை உடையாளுடைய நாணோடு கூடிய நோக்கினால் என்னை விரும்பி மறித்தும் என்னிடத்துப் பிறந்தது என்றவாறு.

பகுதி - இயற்கைப்புணர்ச்சி; துறை - குறிப்பு அறிதல்.

[தலைவியின் பொதுநோக்கத்தால் தலைவனுடைய நிறை அவனை விடுத்து நீங்கியது. பின், தலைவி தன்அன்பு தோன்ற நோக்கிய சிறப்புநோக்கத்தால் மீண்டும் அவனை அடைந்தது - என ஒருபார்வையால் நீங்கிய நிறை மறுபார்வையால் மீண்டும் அடைந்தது என்பது தற்பவம்.] [117]

35-ஆவது தற்பவம் முற்றும்.

## 36-ஆவது அசங்கதிஅலங்காரம்

### அசங்கதிஅணி இலக்கணம்

**203. காரியம் அயலதாய்க் கழிதிறன் அசங்கதி. [118]**

(எ-ன்) வைத்த முறையானே (87) அசங்கதி என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) யாதாயினும் ஒருகாரணத்திற்கு ஏற்ற காரியம் அயலே தோன்றிக் கழியும் கூறுபாடு அசங்கதி என்னும் அலங்காரமாம் என்றவாறு.

**வள்ளல் அணிமார்பின் மற்றொருத்தி கண்இணைவேல்**
**கொள்வதுஉறீஇ எந்தை குறுங்குடியாள் - உள்ளம்அது**
**புண்பெற்றதனால், இப்பொன் இறைவன் இன்உயிர்என்று**
**எண்பெற்றது உண்மையாம் இன்று. (487)**

இஃது அசங்கதி. மற்றொருத்தி - பரத்தை. எண்பெற்றது - எம்மால் எண்ணப்-பெற்றது.
பகுதி - பரத்தையிற்பிரிதல்; துறை - உலாப்போந்து பள்ளியிடத்தானான தலைவனுடன் ஊடிய தலைவிநிலைமை உழையர் உரைத்தல்.
["தலைவனுடைய அழகிய மார்பிலே பரத்தைஒருத்தியின் இருகண்களாகிய வேல்கள் தைத்ததனை உட்கொண்டு எம்பெருமானுடைய திருக்குறுங்குடியில் உள்ள தலைவியின் உள்ளம் புண்பெற்றதனால், இத்தலைவி இத்தலைவனுக்கு உயிர்ஆவாள் என்று எம்மால் எண்ணப்பட்டது உண்மையாக உறுதி பெற்றது" என்று தலைவிஇல்லத்-திருக்கும் ஏவலர் கூறியதாக அமைந்த இப்பாடலில், தலைவன்மார்பில் வேல் தைக்கத் தலைவிஉள்ளம் புண்பட்டது என்று கூறுவது அசங்கதியாம்.] [118]

### சிலேடை அசங்கதி

**204. அதுவே,**
**சிலேடையின் எய்தும் திறனும் உடைத்தே. [119]**

(எ-ன்) அசங்கதி பிறஅலங்காரத்துடன் விரவி வரும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) அச்சொல்லப்பட்ட அசங்கதி சிலேடையுடன் கூடி முற்றும் கூறுபாடும் உடைத்து என்றவாறு.

**மன்இளவல் விண்மேல் மறைந்த இராவணி வன்**
**சென்னியின்மேல் வாளி சினத்து ஏவ - நன்னுதலாய்!**
**ஞாலத்து அசங்கதியே நாடில், இராவணனார்**
**கால்அற்றது என்னும் கதை. (488)**

இது சிலேடைவாய்பாட்டான் வந்த அசங்கதி.

(இ-ள்) மன்இளவல் மேகத்துள் மறைந்த இராவணி தலையை அறுக்கும்படி கோபித்து ஏவிய பாணம் இராவணிதலையை அறுக்கப் பூமியில் இருந்த இராவணனார் கால் அற்றது என்னும் கதைநடையை விசாரிக்கில் அசங்கதியாம் என்றவாறு.

மன் இளவல் - இராமனாகிய மன்னனுக்கு இளைய இலக்குவன். இராவணி - இந்திரசித்து. கால் - சந்ததி. விண்ணின்மேல் நின்றவன் தலைஅற விட்ட வாளி பூமியில் நின்றவன் கால் அற்றதாய காரியத்தை விளைத்ததால் அசங்கதி ஆயிற்று. முன்னர் அக்கனும் அதிகாயனும் படப் பின்னர் இராவணியும் பட்டதால் கால் அற்றதாயிற்று.

திணை - வாகையைச் சார்ந்த புறத்திணை. துறை - வில்வென்றி.

[இராவணனுடைய மக்கள் அக்ககுமாரன், அதிகாயன், இந்திரசித்து என்பவர்கள் ஒவ்வொருவராக இறக்க, இறுதியில் இந்திரசித்து இறந்தபோது இராவணனுடைய வம்சமே அற்றுப் போயிற்று. இந்திரசித்தின் தலை அறுபட இராவணனது கால் (வம்சம்) அற்றது என்பது சிலேடையுடன் கூடிய அசங்கதி.]

**காணில் அசங்கதியே; தென்இலங்கை கட்டழித்தான்**
**நாணில் உடக்கி நடுக்குழையப் - பாணம்**
**புரக்க வளைத்த தனுப் பொன்றாதிருப்ப,**
**அரக்கர் தனு நாண் அறல்.** (489)

இதுவும் சிலேடைவாய்பாட்டான் வந்த அசங்கதி. பாரமும் தூரமும் கொள்ள நடுக்குழைய வாங்கிய வில்லும் நாணும் அறாது இருப்ப, அரக்கர் தனுவும் நாணும் அற்றமை விசாரிக்கில் அசங்கதியாம் என்றவாறு.

காணில் - விசாரிக்கில். தனு - உடல். நாண் - மானம். அரக்கர் - ஈண்டு மூலபெலப்படை.

[அழகிய இலங்கையை அதன் கட்டுக்கோப்புக்கள் அழியுமாறு அழித்த இராமபிரான் நாணை ஏற்றி, பாணங்களைச் செலுத்துவதற்கு, நடுவே வளைந்து கொடுக்குமாறு வளைத்த தன்வில்லும் நாணும் ஒடியாமலும் அறுபடாமலும் இருக்கவும், அவனை எதிர்த்த அரக்கர்களாகிய மூலபலப்படையினருடைய உடல்களும் மானமும் அழிந்தமை ஆராய்ந்து பார்க்கில் அசங்கதியாக உள்ளது - என்ற கருத்தமைந்த இப்பாடலில், இராமனுடைய தனுவும் நாணும் அறாதிருக்க, அறாது இருக்கவேண்டிய அரக்கர்களின் தனுவும் நாணும் அறுபட்டன என்பது சிலேடைவாய்பாட்டான் வந்த அசங்கதியாம்.

தனு - வில்; நாண் - வில்லில் பிணிக்கும் சரடு (இராமனுக்குக் கூறுமிடத்து). தனு - உடல்; நாண் - கௌரவம் (அரக்கருக்குக் கூறுமிடத்து). எனவே சிலேடை.]

தண்டியாசிரியர் ஏதுவுள் தூரகாரியம் என விரித்ததும் இது. இவர் அதனைப் 'பிறன் உடன்பட்டது தான் உடம்படுதல்' என்னும் உத்தியால் தனியே ஓர் அலங்காரம் ஆக்கினார்.

[அசங்கதியை ஏதுஅணியின் ஒருவகையாக்கித் தண்டியார்

தூரகாரியமும் ஒருங்குஉடன் தோற்றமும்
காரணம் முந்துஉறூஉம். காரியநிலையும்
உயுத்தமும் அயுத்தமும் முத்தையோடு இயலும் (தண்டி - சூ. 63)

என்று குறிப்பிட்டார். இவ்வாசிரியர் சயதேவர் இயற்றிய சந்திராலோகத்தையும் அப்பையதீக்கிதர் இயற்றிய குவலயானந்தத்தையும் பின்பற்றிப் 'பிறன் உடன்பட்டது தான் உடன்படுதல்' என்ற உத்தியால் தூரகாரியஏதுவை அசங்கதி என்ற தனிஅணியாக

அமைத்துள்ளார். இது தமிழில் தொடர்பின்மைஅணி என்ற பெயருடன் சந்திராலோகம், குவலயானந்தம், முத்துவீரியம் என்ற அணிநூல்களுள் கூறப்பட்டுள்ளது.] [119]

36-ஆவது அசங்கதி முற்றும்.

37-ஆவது தடுமாறுஉத்தி அலங்காரம்

205. தடுமாறுஉத்திஅணியின் இலக்கணம்

**உரை தடுமாறுவது தடுமாறுஉத்தி. [120]**

(எ-ன்) வைத்த முறையானே (87) தடுமாறுஉத்திஅலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) ஒருகாரணத்தின் ஆனது ஒருகாரியமே, அக்காரியத்தால் தோற்றமானது அக்காரணம்என உரை தடுமாறக் கூறுவது தடுமாறுஉத்தி அலங்காரமாம் என்றவாறு. உத்தி - உரை.

**வையம் திருநாரணன் தோற்றம் வண்தமிழோர்**
**ஐயன் மகிழ்மாறனால் என்னும்; - துய்யமகிழ்த்**
**தாமத்தான் தோற்றமும் பொன்தாமரையாள் கேள்வன் அருள்**
**சேமத்தால் என்னும் தினம்.** (490)

இது தடுமாறுஉத்தி. வடநூலார் அன்னியோன்னியம் என்பதும் இது.
திணை - பாடாண். துறை - பழிச்சினர்ப் பரவலும், கடவுள்வாழ்த்துமாம்.
[உலகம், திருமால்வழிபாட்டின் தோற்றமே வளமான தமிழ்மக்கள் தலைவனான மகிழம்பூமாலை அணிந்த மாறனால் ஏற்பட்டது என்று கூறும்; மேலும் தூய மகிழம்பூ-மாலையை அணிந்த மாறனின் அவதாரமும் அழகிய தாமரையில் வீற்றிருக்கும் திருமகள் கேள்வனாகிய திருமாலுடைய அருளாகிய பாதுகாவலால் ஏற்பட்டது என்று நாளும் கூறும் - என்ற இப்பாடலில், திருமாலுடைய தோற்றத்துக்கு மாறனும் மாறனுடைய தோற்றத்துக்குத் திருமாலும் மாறிமாறிக் காரணமாகக் கூறப்படும் சொல்தடுமாற்றத்தால் தடுமாறுஉத்தி அமைந்துள்ளது.] [120]

37-ஆவது தடுமாறுத்தி முற்றும்.

38-ஆவது புணர்நிலைஅலங்காரம்

புணர்நிலைஅணி இலக்கணம்

**206. நன்றிகொள் பண்புவினை இவை காலத்து**
**ஒன்ற இருபொருட்கு உரைப்பது புணர்நிலை. [121]**

(எ-ன்) வைத்த முறையானே (87) புணர்நிலைஅலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) நன்மையை உட்கொண்ட பண்பாதல் வினையாதல் இரண்டுபொருட்கு உடன்நிகழ்ந்ததாகப் புணர்த்துக்கூறுவது புணர்நிலைஅலங்காரமாம் என்றவாறு.

**பொங்குகதிர் வெய்யோன் புறந்தரவே வேர்விழுந்த**
**கங்குலுடனே இருண்ட காட்சித்தே, - எங்கள்**

**அருளாளன் வேங்கடவன் அம்புயத்தார் வேட்டு**
**மருள்ஆதரித்தாள் மனம். (491)**

இது பண்புப்புணர்நிலை. திணை - பெண்பால்கூற்றுக் கைக்கிளை; துறை - கண்டு கை சோர்தல்.

[வெளிப்படும் கிரணங்களை உடைய சூரியன் மறையவே, நன்கு நிலைபெற்ற இராப்பொழுதுடன், நமக்கு அருள்பாலிக்கும் வேங்கடத்து எம்பெருமானுடைய அழகிய புயங்களில் அணியும் மாலையை விழைந்து காதல்மயக்கத்தை விரும்பி மேற்கொண்ட தலைவியின் மனம் இருண்ட நிலையை உடையதாகியது - என்னும் இப்பாடலில், கங்குலும் இருண்டது மனமும் இருண்டது என்ற இருட்பண்பு கங்குல் மனம் என்ற இரண்டற்கும் புணர்த்துக் கூறப்பட்டமையின் இப்பாடல் பண்புப்புணர்நிலை.]

**அந்தணராய் அந்தம் உணர்வார் இதயஅர-**
**விந்தமுடனே மலரும் மேன்மைத்தே, - பைந்துளப**
**மாலைப் பெருமானே வான்பிரமம் என்னும் மகிழ்-**
**மாலைப் பெருமான் செவ்வாய். (492)**

இது வினைப்புணர்நிலை அலங்காரம். திணை - பாடாண்; துறை - அறுமுறை வாழ்த்தினுள்ளாம்.

[அந்தணர்களாய்ப் பிறந்து வேதாந்தத்தை உணரும் சான்றோருடைய உள்ளமாகிய தாமரையுடன், ‘பசிய திருத்துழாய்மாலையை அணிந்த திருமாலே பரப்பிரமம்’ என்று கூறும் மகிழம்பூமாலையை அணிந்த மாறனுடைய சிவந்தவாய் மலரும் மேம்பாட்டை உடையதாம் - என்னும் இப்பாடலில், அந்தணர் உள்ளமும் மாறன் செவ்வாயும் ‘மலரும்’ என்ற ஒரேவினையைக் கொண்டு முடிவதால் இது வினைப்புணர்நிலை.
அந்தத்தை அணவுவார் அந்தணர். அந்தம் - வேதாந்தம் (நச். கலி. கட. வாழ்த்து).] [121]

38-ஆவது புணர்நிலை முற்றும்.

## 39-ஆவது வேற்றுப்பொருள்வைப்புஅலங்காரம்

### வேற்றுப்பொருள்வைப்புஅணி இலக்கணம்

**207. ஒருபொருள்நிலை முதல் உரைத்து அதை முடித்துத்-**
**தரு பொருள்நிலை பினும் தான் வைப்பதுவே**
**புகழ்புணர் வேற்றுப்பொருள்வைப்பு ஆகும். [122]**

(எ-ன்) வைத்த முறையானே (87) வேற்றுப்பொருள்வைப்பு என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) முதலே ஒருபொருளினது தன்மையை உரைத்துப் பின்னரும் அதனைச் சாதித்துத்தருவதொரு பொருள்நிலைமையினை அதன்இறுதியில் வைப்பது வேற்றுப்பொருள்வைப்பு என்னும் அலங்காரமாம் என்றவாறு. [122]

### வேற்றுப்பொருளின் வகை

**208. அனைத்தினும் செறிதல் ஒருவகை அடைதல்**
**முரணுற மொழிதல் இரட்டுற மொழிதல்**
**கூடுதல் கூடா வகையின் கூறுதல்**

**இருமையின் விளம்பல் விபரீதத்து இயம்பல் என்று**
**எண்வகையான் வரும் இயல்உடைத்து அதுவே. [123]**

(எ-ன்) இஃது அவ்வேற்றுப்பொருள்வைப்பை விரித்து உணர்த்துதல் நுதலிற்று. (இ-ள்) அனைத்தினும் செறிதல் முதலாக விபரீதத்து இசைத்தல் ஈறாக எண்வகைத்தாய் வரும் இலக்கணத்தை உடைத்து, அவ்வேற்றுப்பொருள்வைப்பு என்னும் அலங்காரம் என்றவாறு.

[முழுவதும் சேறல், ஒருவழிச் சேறல், முரணித் தோன்றல், சிலேடையின் முடித்தல், கூடும் இயற்கை, கூடா இயற்கை, இருமை இயற்கை, விபரீதப்படுதல் என அவ்வணி எண்வகைப்படும்.]

**நாடுஆளுதற்கு வசிட்டன் இடு நன்னயநாள்**
**காடுஆளும் நாளாகக் காட்டியே - வீடுஆளும்**
**தொல்ஆழியான்தனையும் தூக்காது வென்றது என்றால்,**
**வெல்லாதது ஆரை, விதி? (497)**

இது முழுவதும் செறிதல். நன்னயநாள் - இராசநீதிக்கு அமைந்த நாள். தூக்காது - விசாரியாது. 'வெல்லாதது ஆரை விதி' என்பது விதியால் வெல்லப்படாதார் ஒருவரும் இல்லை என்பதாம்.
திணை - காஞ்சி; துறை - பொருள்மொழி

[கோசலநாட்டை ஆள்வதற்காக வசிட்டன் நிச்சயித்துக்கொடுத்த நல்ல இராசநீதிக்கு அமைந்த நாள் காட்டை ஆள்வதற்கு நிச்சயித்துக்கொடுத்த நாளாக அமையவே, வைகுந்தத்தை ஆளும் பழைய சக்கரத்தை உடைய எம்பெருமானுடைய திருஅவதாரமாகிய இராமனையே 'பரம்பொருள் அவன்' என்பதனைக்கூட யோசிக்காமல் விதி வென்றுவிட்டது என்பதை நோக்கும்போது, விதியால் வெல்லப்படாதார் ஒருவரும் இலர் என்பது புலனாகிறது - என்னும் இப்பாடலில், 'வெல்லாதது ஆரை விதி' என்ற கருத்து உலகத்து உயிர்கள்அனைத்திற்கும் பொதுவாகச் சேர்வதால் இது முழுவதும் செறிதல்.]

**தன்பார்ப்பினை அருந்தும், தண்ணளிஅற்றே முதலை**
**என்பார்; புதல்வனையும் ஏந்திழாய்! - வன்தாதை**
**பொன்பயில் ஆகத்தான் பொருள்நாமம் சொன்னதற்குத்**
**துன்பம்இழைத்தான் இலையோ? சொல். (494)**

இஃது ஒருவகை அடைதல். பொன்பயில் ஆகத்தான் திருநாமம் - நாராயணன் திருநாமம். 'பொன் பயில் ஆகத்தானாகிய பொருளின் திருநாமம்' எனக் கூட்டுக.
திணை - பாடாண் சார்ந்த புறத்திணை; துறை - பரவார்ப் பழித்தல் (இறைவனை வழிபடாதவர்களைப் பழித்துக்கூறல்.)

["பெண்ணே! 'கருணையற்று முதலை தன்குட்டியையே உண்கிறதே!' என்று மக்கள் கூறுகிறார்கள். கொடிய தந்தையாகிய இரணியன் தன்புதல்வன் பிரகலாதனைத் திருமகள் தங்கும் மார்பினை உடைய பரம்பொருளாகிய நாராயணனுடைய திருநாமத்தைச் சொல்லியதற்காக அவன்உயிரையே போக்க அவனைப் பலவகையாகத் துன்புறுத்தவில்லையோ?" என்ற இப்பாடலில், முதலையின் செயலை விளக்க, 'ஒரோவழி அசுரஇயல்புடையாரிடத்தும் மக்கட்பாசம் இராது' என்பதனை இரணியன்வரலாறுகொண்டு கூறிய செயல் ஒரோவழி உலகில் காணப்படுமாற்றை எடுத்துக்காட்டுவதால் இஃது ஒருவகை அடைதல்.]

**அன்று மழுஆளி அன்புடைய சுந்தரர்க்குஆய்**
**சென்றனன்காண் தூது திருநுதாஅல்! - என்றதில் என்?**

**ஆதியினில் பஞ்சவர்மேல் அன்புடையனாய்த் திகிரிச்**
**சோதியும் சென்றான்இலையோ தூது?** (495)

இதுவும் ஒருவகை அடைதல். திணை - பாடாண் சார்ந்த புறத்திணை; துறை - தூதுஉரைத்தல்.

[மழுவாயுதத்தை ஏந்தும் சிவபெருமான் தன்மாட்டு அன்புடைய சுந்தரனுக்காகப் பரவைநாச்சியாரிடம் தூதுசென்றான் என்று கூறுவதில் வியப்பு யாது உள்ளது? அழகிய நெற்றியை உடைய பெண்ணே! முற்காலத்தில் பாண்டவர்களிடம் அன்புகொண்டு சக்கரம்ஏந்திய திருமாலாகிய கண்ணனும் துரியோதனனிடம் தூது செல்லவில்லையா? - என்ற இப்பாடலில், சுந்தரருக்காகச் சிவபெருமான் தூதுசென்ற செயல், பாண்ட-வருக்காகக் கண்ணன் தூதுசென்ற செயல்கொண்டு விளக்கப்பட்டிருத்தல், ஒரோவழி நிகழும் நிகழ்ச்சியாதலின், ஒருவழி அடைதல் ஆம்.]

**நன்றுஅறிந்தார், மானிடரை நல்குரவுஉற்றும் பாடச்**
**சென்றுஅறியாதாரே திருவுடையார்; - ஒன்றுஅறியாப்**
**புல்லறிவாரேனும் ஒருபொய்உரையா மாந்தரையே**
**பல்கலைதேர் நாவலர் என்பார்.** (496)

இது முரணுறமொழிதல்.

(இ-ள்) 'ஆன்மலாபமான முத்தியைத் தரும் பரப்பிரமம் ஸ்ரீமந்நாராணயனே' என்னும் உண்மையை உணர்ந்தவர்கள், உம்மைப்பிறப்பில் செய்த நல்-வினையால், இம்மைப்பிறப்பில் பலித்த கல்வியோடு கூடிய கவியை உடைய நாவலர், உண்டிப்பொருட்டால், நிரப்புஇடும்பை மிகுந்தாலும், அக்கவிகளான் மனிதரைச் சென்று பாட மனத்தினாலும் குறித்துஅறியாதவரைப் 'பேரின்பச் செல்வம் பெற்றவர்' என்பர்; அஃது அன்றியும், இறைநிலையும் உயிர்நிலையும் சிறிதும் உணராத புல்லறிவாண்மைஉடையோராயினும் ஓரிடத்தும் ஒரு-பொழுதும் சிறிதும் பொய்சொல்லாதவரையே 'அறநூல்கள் பலவற்றையும் கற்றுணர்ந்த நாவலர்' என்பார் என்றவாறு.

நன்று - ஆகுபெயர். உற்றும் என்னும் உம்மை எதிர்மறை, உறாது என்பதை விளக்கிற்று.

திணை - வாகை. துறை - 'கட்டமை ஒழுக்கத்துக் கண்ணுமையானும்' (தொ. பொ. 76) என்பதனால் இது கட்டமை ஒழுக்கத்துக் கண்ணுமை. (வேதம் முதலியவற்றால் கட்டுதல் அமைந்த ஒழுக்கத்தோடு பொருந்திய காட்சி)

["மெய்ப்பொருள் உணர்ந்தோர், வறுமையுற்றும் மானிடரைப் பாடாத கோட்பாட்டினர் ஆகிய நாவலர்களை உண்மையில் செல்வர்கள் என்பர். தத்துவஞானம் இல்லாத-வராயினும் பொய்உரையாது வாழ்பவரே உண்மை ஞானியர்" என்ற இப்பாடலில், வறியவர்களைச் செல்வர் என்ற உலகியலுக்கு மாறுபட்ட கருத்து, மெய்ஞ்ஞானம் இல்லாதவர்களை ஞானிகள் என்று கூறும் மாறுபட்ட கருத்தால் விளக்கப்பட்டிருத்தல் முரணுற மொழிதலாம்.]

**ஏதிலார் கூட்டத்தின் இனிதுஆகிய வாடை**
**மாதராய்! மாறன் மகிழ்துடரிச் - சூதமலர்**
**வாளியினும் இன்உயிரை வாட்டியதால், நீடுகருங்**
**காளி உறவாகாது காண்.** (497)

இது சிலேடைவேற்றுப்பொருள்வைப்பு. இரட்டுறமொழிதல் என்பதும் இது. ஏதிலார் - அயலானார். கூட்டத்து - புணர்ச்சிக்காலத்து. இனிது ஆகிய வாடை - குளிர்ந்த வாடை. சூதமலர் வாளி - மாமலர்ப்பாணம். வாட்டியது - சுட்டது.

கருங்காளி - கரிய காற்றும் கரிய பத்திரகாளியும். ஆதலால் இஃது இரட்டுற-மொழிதல் ஆயிற்று.

திணை - பெண்பால்கூற்றுக் கைக்கிளை. துறை - வாடைக்கு வருந்தல்.

["பெண்ணே! கணவனோடு கூடிஇருந்தபோது இனிதாய்க் குளிர்ந்து இருந்த வாடைக்-காற்று, அவன் அயலானாகப் பிரிய, மாறனுடைய விரும்பத்தக்க துடரிமலையிலே மாமரத்தின் பூக்களாகிய மன்மதனுடைய அம்புகளைவிட உயிரை வாட்டுகிறது. காரணம் காளி உறவாகாது" என்பது. காளி என்பது காற்றையும் பத்திரகாளியையும் உணர்த்தும் சிலேடை. சிலேடைவாய்பாட்டால் செய்தி விளக்கப்பட்டிருத்தலின் இப்பாடல் சிலேடைவேற்றுப்பொருள்வைப்பு.]

**வைவேல்விழியாளை வந்து அளித்த வாழ்வு, எனக்கு**
**நைவுஏதும் இல்லா நலன் அளித்த - மெய்வேதப்**
**பாவினைத் தேர் மாறன் அருள்பார்வைக்கு இலக்குஆனார்**
**தீவினைப்பால் எய்துவரோ சென்று? (498)**

இது கூடும் இயற்கை. வாழ்வு - நல்வினைப்பாலது ஆகிய தெய்வம்.

பகுதி - இயற்கைப்புணர்ச்சி; துறை - தெய்வத்தை மகிழ்தல்.

["கூரிய வேல் போன்ற விழிகளை உடைய தலைவியை என்பால் வந்து வழங்கிய நல்வினைப்பாலது ஆகிய தெய்வம் எனக்கு வருந்துதல் சிறிதும் இல்லாத நல்-வாழ்வினை அளித்துவிட்டது. மெய்ப்பொருளைக் கூறும் வேதத்தைத் தெளிந்த மாறனுடைய அருள் சுரக்கும் பார்வைக்கு இலக்கானவர்கள் தீவினையின் பயன்களை ஒருபோதும் சென்று அடையமாட்டார்கள்" என்னும் இப்பாடலில், தலைவனுக்கு நல்வினை தலைவியைத் தந்தது என்ற செய்தி, சடகோபன்அருள் பெற்றார் தீவினைப்-பயன் எய்தார் என்ற செய்தியால் பொருத்தமாக விளக்கப்பட்டிருப்பதால், இது கூடும் இயற்கை.]

(கூடுதல் - பொருந்துதல். நல்வினை தலைவியைத் தருதலும், மாறன் அருள்-பெற்றவர் பாவம் எய்தாமையும் பொருந்தும் இயல்புகள்)

**பாலும் செழுந்தேனும் பாகும் கடல்அமிர்தும்**
**நாலும் துணைதுறந்த நன்னுதலார்க்கு - ஆலம்ஆம்;**
**இன்பமாம் நல்வினைப்பால் ஈசன்அருள் இல்லாதார்க்கு**
**அன்பனே! தீவினைப்பால் ஆம். (409)**

இது கூடாவகையில் கூறுதல்.

பகுதி - பொருள்வயின்பிரிதல்; துறை - செலவு அழுங்குவித்தல்.

["பாலும், சிறந்த தேனும், வெல்லப்பாகும், கடலில் தோன்றிய அமுதமும், கணவனைப் பிரிந்து வாழும் மகளிருக்குத் தம் தன்மை திரிந்து விடம்போலக் கைக்கும். தலைவனே! இறைவனுடைய அருள்இல்லாதவர்க்கு இன்பமாக இருக்கவேண்டிய நல்வினைப்-பயனும் தீவினைப்பயனாக மாறித் துன்பம் தரும்" என்று தோழி தலைவனிடம் தலைவியின் பிரிவுத்துன்பம் பற்றிக் கூறிய இப்பாடலில், பால் முதலியவை தம்இனிமை கூடாமைக்கு ஈசன்அருள் இன்மையால் நன்றும் தீதாம் இயல்பினை எடுத்துக்காட்டி விளக்கியது கூடாவகையின் கூறுதல்.]

**ஏதிலர்தம் சொல்போல இன்னுயிரை ஈன்றவள் சொல்**
**கோதுஅறவே உண்ணும், கொடுமையான்; - மாதராய்!**
**வெங்கதிரோன்பால் அன்றி வெண்மருந்தினால் இயன்ற**
**திங்களினும் தோன்றுமோ தீ? (500)**

இஃது இருமையின் இயம்பல். ஏதிலார் - இக்காலத்து அயலவர் ஆகிய தலைவர். சொல் - 'நின்னின் பிரியேன்; பிரியின் ஆற்றேன்' என்று தலையளியில் கூறிய கூற்று.

பகுதி - வரைபொருள்வயின் பிரிதல்; துறை - செலவுநினைந்து இரங்கல்.

["தோழி! 'பிரியேன்; பிரியின் ஆற்றேன்' என்று சூள்உரைத்த தலைவர் சில நாள்களாக வரைபொருள்கருதி என்னைப் பிரிந்து என்னைத் துயருறுத்தி விட்டார். என்உள்ளநிலை அறியாது என்மெலிவின் காரணம் உணராது என்அன்னை தன்கொடுஞ்சொற்களால் என்உயிரைப் பிழிந்து போக்குகிறாள். எனக்கு இனியராக இருந்த இருவரும் இப்பொழுது எனக்கு இன்னாராக ஆகிய நிலையை நினைத்தால், சூரியனிடத்து அல்லாமல் வெள்ளிய அமுதத்தினால் அமைந்த சந்திரனிலும் வெப்பம் தோன்றுமோ என்ற ஐயம் எனக்கு உண்டாகிறது" என்று கூறும் தலைவிகூற்றில், ஒருவரே நல்லவராய் இருத்தலும் தீயவராக மாறுதலும் ஆகிய இருவகைஇயல்பும் கூறப்பட்டு விளக்கப்படுவதால், இஃது இருமையின் இயம்பல்.]

**தம்முன் நிலைவிட்டான் தனிமகுடம் சூடினான்**
**அம்முன்நிலை நின்றான் அரசு இழந்தான் - தெம்முனையில்**
**என்றால் இருவினையும் எங்கள் இராமன் நினைந்தது**
**ஒன்றா விபரீதம் ஆம்.** (501)

தம்முன் நிலைவிட்டான் தனிமகுடம் சூடினான் - அண்ணனை விடுத்து நீங்கிய வீடணன் அரசியல் பெற்றான். அம்முன் நிலைநின்றான் அரசு இழந்தான் - அந்தத் தமையனிடத்திலேயே நின்ற கும்பகருணன் அரசுஉரிமையும் உயிரும் இழந்தான். இஃது உலகியலுக்கு விபரீதம் (வேறுபட்டது) ஆதலால் விபரீதத்து இசைத்தல். துறை - கடவுள்வாழ்த்து.

[அண்ணனைவிட்டுப் பிரிபவன் அல்லல்உற வேண்டுவதும், அண்ணனுடன் கூடிவாழ்பவன் எல்லாநலன்களும் பெற்று இன்புறுவதும் பெரும்பாலும் உலக இயற்கையாம். பிரிந்த வீடணனுக்கு அரசாட்சியும், உடன்இருந்த கும்பகருணனுக்கு உயிர்நீக்கமும் ஏற்பட்டமை உலகியலுக்கு மாறுபட்ட செயல்களாக, 'எங்கள் இராமனால் நினைக்கப்படுவனவாயின், நல்வினை தீவினை இரண்டும் தம்முள் ஒன்றாமல் விபரீதப்பட்டுப்போம்அல்லவோ?' என்று விளக்கப்பட்டமை விபரீதத்து இசைத்தல்.] [123]

39-ஆவது வேற்றுப்பொருள்வைப்பு முற்றும்.

## 40-ஆவது விபாவனைஅலங்காரம்

### விபாவனைஅணி இலக்கணம்

**209. மேதக உலகம் விளம்பிய காரணத்து**
**ஆதலை விலக்குபு அயல் ஒருநெறித்து ஆம்**
**ஏதுவின் தன்மையின் குறிப்பின் எய்திய மரபு**
**ஓதுதல் விபாவனை என உரைத்தனரே. [124]**

(எ-ன்) வைத்த முறையானே (87) விபாவனை என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஒன்றன் வினை உரைக்குங்கால் பெருமை பொருந்த உலகம் கூறிய காரணத்தால் அஃது உண்டாதலை ஒழித்துப் பிறிதுஒருவழியாம் காரணத்-

தானாக, இயல்பானாக, குறிப்பானாக உண்டாய மரபு கூறுதல் விபாவனை என்னும் அலங்காரமாம் எனக் கூறினர் புலவர் என்றவாறு

**ஆர்அமிர்தம் உண்ணாது அடங்காச் சுவைபடைத்தது,**
**ஓர்அறமும் செய்யாது ஒழிவுஇலாப் - பேரின்பம்**
**உற்றது, நம் கோமாறன் உய்த்த திருவாய்மொழிப்பா**
**கற்றுணர்ந்தோர் நா நெஞ்சகம். (502)**

இஃது அயல்காரணவிபாவனை. உய்த்த - பாடித் தந்த.
திணை - பாடாண் சார்ந்த புறத்திணை. துறை - பனுவல்வாழ்த்து.

[நம் தலைவனாகிய மாறன் பாடித்தந்த திருவாய்மொழிப் பாடல்களைக் கற்ற நா கிட்டுதற்கரிய தேவர்அமுதத்தை உண்ணாமலேயே எல்லையில்லாச் சுவையைப் பெற்றது; உணர்ந்த நெஞ்சு ஓர்அறச்செயலும் செய்யாமல் நீங்குதல்இல்லாத பேரின்பத்தை அடைந்தது - என்ற இப்பாடலில், பொதுவாக அமுதம்உண்பதனால் ஏற்படும் சுவையும், அறம்செய்வதால் ஏற்படும் இன்பமும் முறையே திருவாய்மொழியை ஓதுதல் உணர்தல் ஆகிய அயற்காரணங்களால் ஏற்பட்டனவாகக் கூறுதல் அயற்காரண விபாவனை.]

**மாண்நீலம் தோயாது மைந்நிறமே கூர்ந்தது, மெய்ந்**
**நீள்நீரும் சேறும் நிறையாதே, - வாள்நுதாஅல்!**
**கோடு ஆர் பொழில்குடந்தைக் கொற்றம்மால் உந்தியின்மேல்**
**வாடாதே நிற்கும் மரை. (503)**

இஃது இயல்பு விபாவனை. மரை - தாமரை. கூர்ந்தது - மிகுந்தது. துறை - கடவுள்வாழ்த்து.

["ஒளி பொருந்திய நெற்றியைஉடைய பெண்ணே! கிளைகள் மிக்க சோலைகளை உடைய திருக்குடந்தைத் திருப்பதியில் உகந்தருளியிருக்கும் வெற்றி பொருந்திய திருமாலுடைய கொப்பூழில் தோன்றி வாடாமல் இருக்கும் தாமரைப்பூ, நீலநிறத்தில் தோய்க்காமலேயே கருநிறம் மிக்குள்ளது; நீரும் சேறும் நிறையாமல் வாடாதுள்ளது" என்ற இப்பாடலில், எம்பெருமான் மேனி நிறத்தால் கறுத்து, அவன் மேனித்தொடர்பால் வாடாது அவன் கொப்பூழ்த்தாமரை உள்ளது எனக் காரணம்பற்றி நிகழவேண்டிய நிற வேறுபாடும் வாடாமையும் இயல்பாகவே இருப்பனவாகக் கூறுதல் இயல்பு விபாவனை.] [124]

### மேலதற்குச் சிறப்பு விதி

**210. வினை எதிர்மறுத்துப் பொருள் புலப்படுத்தலும்**
**நினைவுறு பொதுவகையான் நிபம் விலக்கிக்**
**காரியம் புலப்படுத்தலும் எனக் கழறின்**
**ஓர்இரண்டாகும் உயர்குறிப்பினவே. [125]**

(எ-ன்) குறிப்பு விபாவனையின் கூறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.
இதன்பொருள் உரையிற் கொள்க.

(இ-ள்) [ஒருசெயல் நிகழாமல் அதன்பயனாய்க் கிட்டும் பொருளைத் தெரிவித்தலும், பொதுவாகக் காரணத்தை விடுத்துக் காரியத்தை மாத்திரம் வெளிப்படையாகக் கூறுதலும் குறிப்பு விபாவனையில் காணப்படும் செய்திகளாம்.]

**ஆட்டாக் கரும்பின் அரும்பானம் உண்பதை விட்டு**
**ஈட்டாய் நிதியென்று இயக்கியே - பூட்டுஉருள் அற்று**

**ஓடுதேர்க் கானிடைநின்று ஏது உளமே! ஒன்றினை நீ**
**நாடுதி? நின்பின் எழுகேன் நான்.** (504)

இது வினை எதிர்மறுத்துப் பொருள்புலப்படுத்தல் விபாவனை.
(இ-ள்) 'ஆட்டாக் கரும்பின் அரும்பானம்' என்பது தலைவி இதழ்ப்பானம். 'பூட்டு உருள் அற்று ஓடுதேர்' என்பது கொளுவப்பட்ட வண்டி சக்கரம் இன்றியும் ஓடுமா போன்று இயங்கும் பேய்த்தேர்.
துறை - பொருள்வயின் பிரிந்த தலைவன் சுரத்திடை நின்று நெஞ்சொடு நோதல்.
["நெஞ்சே! இயந்திரத்திலிட்டுச் சாறு பிழியாத கருப்பஞ்சாறாகிய தலைவியின் அதரபானத்தை நுகர்தலை விடுத்து, 'பொருள் ஈட்டுவாயாக' என்று என்னைச் செலுத்தி, பூட்டப்பட்ட சக்கரங்கள் இல்லாது ஓடும் பேய்த்தேர் எனப்படும் கானல்நீரை உடைய பாலைவனத்தில் வந்து நின்றுகொண்டு வீட்டிற்கு மீண்டும் திரும்பிவிடலாம் என்று நீ கருதுதல் யாது காரணம் பற்றி? யான் நின்னுடன் வீடு திரும்புவதற்குப் புறப்படமாட்டேன்" என்ற கருத்தமைந்த இப்பாடலில், இயந்திரத்திலிட்டுப் பிழியப்படுதலாகிய காரணம் நீக்கப்பட்ட கருப்பஞ்சாறாகிய தலைவி இதழ்நீரும், சக்கரம் ஆகிய காரணம் இல்லாது ஓடும் பேய்த்தேரும் சுட்டப்பட்டமை காரணம்விலக்கிக் காரியம் கூறப்படுதலாகிய வினை எதிர்மறுத்துப் பொருள்புலப்படுத்தல்.]

**காட்டிய கண்தாம் கலுழும் திறம் ஏது?**
**தோட்டுஇலஞ்சி மாறன் துணைப்புயத்தை - வேட்டவர்தம்**
**உள்ளம் தளர அதற்கு உருவுஇலான் உருவம்**
**கொள்ளும் திறம் இஃது எனல்.** (505)

இது பொதுவகையான் காரணம்விலக்கிக் காரியம்புலப்படுத்தது.
(இ-ள்) "காரிமாறப்பிரானுடைய வகுளமாலிகை அணியப்பட்ட திருப்புயங்களின் காந்தியை எனக்குக் காட்டி இத்துணைத் துன்பத்தினை எனக்கு அளித்த கண்கள் அவன் நமது வீதியை அகன்றகாலைத் தோழீஇ! 'அத்திருப்புயங்களை எமக்குக் காட்டுவாயாக' என்று அழுகின்றது என்? இன்னும் தாம் காட்ட யான் காண்பதுஅல்லது என்னால் காட்டல் கூடாது; அஃது அன்றியும் அத்திருப்புயங்களை விரும்பியவர் உள்ளம் தளர்வு எய்தியதற்கு (எய்துதற்கு) உருவு-இழந்த காமன் உருவம்கொண்டு என்முன் நிற்றற்குக் காரணம் யாது?" என்றவாறு.
இது பெண்பாற்கூற்றுக் கைக்கிளை; துறை - பவனி கண்டு அழுங்கல்.
[இதன்கண், காரணம் கூறாது, கண்கள் கலுழ்கின்றன எனவும், உருவற்ற மன்மதன் உருவம்கொண்டு துன்புறுத்துகிறான் எனவும் கூறியமை - பொதுவகையான் காரணம் விலக்கிக் காரியம் புலப்படுத்தல்.]

**வேரித்திறம் பயிலா மென்கமலத்து ஏடுஉளரா**
**மூரிக் கிளைவண்டு மொய்த்து ஆர - வாரிக்கும்**
**நாதம்தனில் ஓதிமம் உறங்கும் நாகையே**
**வேதம் தொடர்ந்துஉறை மால் வீடு.** (506)

இதனுள், 'வேரித்திறம் பயிலா மென்கமலம்' என்பது தண்ணீர். 'ஏடு உளரா மூரிக் கிளைவண்டு' என்பது பூந்தோடுகளைக் குடைந்து அறியாத கூட்ட-வலம்புரி. உளர்தல் - குடைதல். இதுவும் குறிப்பு. இதன் வேறுபாடும் காண்க.
திணை - பாடாண். துறை - நகரவாழ்த்து.

[கமலம் என்பது தாமரையையும் நீரையும் குறிக்கும். தாமரை தேனின் கூறுபாடுகளை உடையது. எனவே தேனின் கூறுபாடுகள் தன்னிடத்துப் பொருந்தப்பெறாத கமலம் என்பது தாமரையை விலக்கி நீரைக் குறிக்கிறது.

வண்டு என்பது தேனீயையும் சங்கினையும் குறிக்கும். பூக்களின் இதழ்களைக் குடையும் பெருமை பொருந்திய கூட்டமாகிய வண்டு என்பது தேனீயைக் குறிக்கும். அங்ஙனம் பூ இதழ்களைக் குடையாத பெருமை பொருந்திய கூட்டமாகிய வண்டு என்பது சங்குகளைக் குறிக்கும்.

எனவே, இப்பாடலில் வண்டு என்பது அடைமொழிகளால் தன் வேற்றுப் பொருளை விடுத்துக் குறிப்பாக ஒருபொருளையே தருவதும், தாமரையும் தன் அடைமொழிகளால் வேற்றுப்பொருளை விடுத்துக் குறிப்பாக ஒரு பொருளையே தருவதும் விபாவனை.

தேனின் கூறுபாடுகளைத் தன்னிடம் பயிலப் பெறாததாகிய தண்ணீரில் தோன்றும் பூஇதழ்களைக் குடையாத பெருமை பொருந்திய கூட்டமாகிய சங்குகள் ஒன்றுகூடி ஆரவாரம் செய்யும் ஒலியில் (தாலாட்டுஒலி கேட்டாற் போன்று) அன்னப்பறவைகள் உறங்கும் திருநாகைப்பதியே வேதங்கள் பின்தொடர்ந்து தங்கும் திருமால் உகந்தருளியுள்ள திருப்பதியாகும் - என்ற இப்பாடலில் குறிப்பு விபாவனை வந்துள்ளது.] [125]

40-ஆவது விபாவனை முற்றும்.

## 41-ஆவது ஆர்வமொழிஅலங்காரம்

### ஆர்வமொழிஅணி இலக்கணம்

**211. விழுமிதின் ஆர்வமொழி மிகுத்து உரைப்பது**
**பழிதீர் ஆர்வமொழி எனப் பகர்வர். [126]**

(எ-ன்) வைத்த முறையானே (87) ஆர்வமொழி என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.

இதன்பொருள் சூத்திரத்தானே விளங்கும்.

[தன் உள்ளத்தில் தோன்றும் விருப்பத்தைச் சற்றுக் கற்பனைநயம் தோன்ற விரித்துரைப்பது ஆர்வமொழிஅணியாம்.]

**ஞானம்இலா நாயேற்கும் நன்குஉயர் தன் தொண்டன்எனும்**
**வான்உயர்தோற்றம் புரந்த வாழ்விற்குத் - தேன் உலவும்**
**தாதோடு உறு மகிழ்த்தார்த் தம்பிராற்கு என்பொருட்டால்**
**யாதோ கைம்மாறு இங்கு இனி? (507)**

இஃது ஆர்வமொழி. இதனுள், வான்உயர்தோற்றம் - மிகுதியாக உயர்ந்த தலைமை. என்பொருட்டால் - என்னே. இனி இங்குக் கைம்மாறு யாதோ - யான் மேல் இவ்வுலகத்துச் செய்யும் கைம்மாறு யாது என்றவாறு; எனவே, அதற்குச் சரியாகச் செய்யும் கைம்மாறு இல்லை என்பதாம். துறை - கடவுள் வாழ்த்து.

["தேனும் மகரந்தத்தூளும் பொருந்திய மகிழம்பூமாலையை அணிந்த தலைவனான மாறனுக்கு, அவன் அறிவில்லா அடியேனுக்கும் மிகமேம்பட்ட தன் தொண்டன் என்னும் மிக உயர்ந்த தலைமையை அளித்த நல்வாழ்வுக்கு, அடியேன் என்பொருட்டால் அவனுக்குச் செய்யத்தக்க கைம்மாறு ஒன்றும் இலது" என்று கூறுவது ஆர்வமொழி. இது புறப்பொருட் செய்தி.]

**பொன்போல்சுடர் பல்கதிரோன் அடைத்த மென்போதுஇருக்கை**
**நன்போது அகற்றும் திறம்கற்று இடர் நள்ளிருளிடை ஓர்**

**மின்போல் தமிவந்து அருள்செய்ததால், இன்ப மெல்லியலாய்!**
**என்போல் தவம்செய்தது ஆர் அருளாளர், இபகிரிக்கே?** (508)

இதுவும் ஆர்வமொழி. இதன்பொருள் உரையிற் கொள்க.
பகுதி - இரவிற்குறி. துறை - தளர்வு அகன்று உரைத்தல்.

["எனக்கு இன்பம் தரும் மென்மையை இயல்பாக உடைய தலைவியே! பொன் போன்று ஒளிவீசும் பலகிரணங்களை உடைய சூரியன் கூம்பச்செய்த மெல்லிய தாமரையாகிய உன்இருப்பிடத்தை நம் புணர்ச்சிக்கேற்ற நல்ல நேரமாகிய இடை-யாமத்தில் மலர்விக்கும் செய்தியைக் கற்று, நடந்து வருவார் இடர்ப்படும் நடுஇரவில் ஒப்பற்ற மின்னலைப் போல விரைவாகத் தனியே வந்து, நீ எனக்கு அருள்செய்ததால், அருளாளப்பெருமானுடைய அத்திகிரியிலே என்னைப்போலத் தவம்செய்து அதன் நல்வினைப்பேற்றினை நுகரக்கூடியவர்கள் வேறு யாவர் உளர்?" என்று தலைவன் தலைவியைப் பற்றிப் பேசும் பேச்சு ஆர்வமொழியாகும். இஃது அகப்பொருட்செய்தி.] [126]

41-ஆவது ஆர்வமொழி முற்றும்.

## 42-ஆவது நெடுமொழிஅலங்காரம்

### நெடுமொழிஅணி இலக்கணம்

**212. இகல்புரிந் தொருவன் இருநிலத்தும் தனை**
**நிகர் இலை என மேம்படுத்துதல் நெடுமொழி. [127]**

(எ-ன்) வைத்த முறையானே (87) நெடுமொழி என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) போரை விரும்பின ஒருவன் மண்ணிலும் விண்ணிலும் தனக்கு ஒருவர் நிகர் இல்லை எனத் தன்னைத் தான் உயர்த்திக்கூறுதல் நெடுமொழி என்னும் அலங்காரமாம் என்றவாறு.

புரிந்த ஒருவன் என்னும் பெயரெச்சவாய்பாட்டு ஈற்று அகரம் செய்யுள் விகாரத்தால் தொக்கது. 'தனக்கு' என்பது 'தனை' என நான்காவது இரண்-டாவதாய் மயங்கிற்று.

**அரசர் மறவர்அகத்து உதித்த பொன்னை**
**முரசு அதிரக் கொண்டிட மால்மோகூர் - வரைஅயலே**
**யானைமேல் வந்தார்; அரம்பையரை வேட்டு அவரும்**
**வானையே சார்ந்தார், மடிந்து.** (509)

இது நெடுமொழி. தூதா என்னும் முன்னிலைஎழுவாய் எச்சம்.
திணை - காஞ்சி; துறை - மகட்பாற்காஞ்சி.

["மறக்குடி வீரர்களுடைய மரபில் உதித்த பொன் போன்ற தலைவியை மகட்-பேசுவதற்கு எம்பெருமானுடைய திருமோகூர் என்ற திருத்தலத்தை அடுத்த மலைக்கு அருகில் முரசம் ஒலிக்க அரசர் யானைமேல் வந்தனர். தூதனே! ஆனால் அவர்கள் தேவர்உலகமாதரை விரும்பி உயிர்நீத்து வானத்தை அடைந்தனர்" என்ற இப்பாடலில், மறவர்கள் 'மகட்பேச வந்த அரசரை எதிர்த்து விண்ணுலகேற்றுவோம்' என்று கூறுவது நெடுமொழி.]

**தானக் கரிமருப்புத் தாழ்வாரத் தூண்இதுபார்;**
**ஞானத்தவர் புகழ் மால் நாகைவரைக் - கானத்து**
**உறவர்எனும் எம்இடத்து ஆம் ஒள்நுதற்காய்த் தூதா!**
**மறவர் இவண் ஏறிவரும்.** (510)

இது திணை - உழிஞை; துறை - மகள்மறுத்து மொழிதல்.

இச்செய்யுள் இரண்டினும் 'வரை அயலே' (509) எனவும் 'வரைக் கானத்து' எனவும் பகர்ந்தமையால், 'பாலை தானே குறிஞ்சியது புறனே' என்றாராகலின், பாலைநிலத்து மறவர் எனக் கூறினார். மறவர் என்பது மறக்குடியிலே பிறந்த சூத்திரர்.

'நிகர்த்து மேல்வந்த வேந்தனொடு முதுகுடி
மகட்பாடு அஞ்சிய மகட்பாலானும்' (தொ. பொ. 79)

என்பதனால் அறிக. பால் என்றதனால் முதுகுடிகளே அன்றி 'அனைநிலை வகை' எனப்பட்டார்கண்ணும் இத்துறை நிகழ்தல் கொள்க.

["தூதனே! பேரறிவாளர் புகழும் திருமாலுடைய நாகை என்ற திருத்தலத்தை அடுத்த மலையை ஒட்டிய காட்டிலே உரிமைபூண்டு வாழும் எம்வீட்டில் வளரும் பெண்ணை மகட்பேசத் தூதுவராக வீரர்கள் எம் இல்லத்துக்கு ஏறிவந்த மதயானை மருப்புக்களே எங்கள்வீட்டுத் தாழ்வாரத்தை அமைப்பதற்கு உரிய அலகுகளாக, அவை தூண்களால் தாங்கப்பட்டிருப்பதைக் காண்பாயாக" என்ற இப்பாடலில், மறவர் மகட்கொடுத்தலை மறுத்துத் தம்ஆற்றல் பற்றிப் பேசியது நெடுமொழி.

'கறுத்தவாள் உழவன் இக்கன்னியைத் தருகஎன
மறுத்து உரையாடியது மகட்பாற் காஞ்சி'.

'வெம்முரணான் மகள்வேண்ட, அம்மதிலோர் மறுத்துரைத்தது' மகட்பால் இகல்.

பெண்கோள் ஒழுக்கத்தின் ஒத்து மறுத்தல்பற்றிப் பகைவனாய் வலிந்து கோடற்கு எடுத்துவந்த அரசனோடு முதுகுடித் தலைவராகிய வாணிகரும் வேளாளரும் தத்தம் மகளிரைப் படுத்தற்கு அஞ்சிய மகட்பாற்காஞ்சி - தொ. பொ. 79 நச்.

'அனைநிலைவகை' (தொ. பொ. 75) வேளாளருக்கும் பிற சாதியாருக்கும் பிறந்தவரைக் குறிக்கும் என்பது இவ்வுரையாளர் கருத்து.

'பாலை தானே குறிஞ்சியது புறனே' என்பது எந்த நூலிலுள்ளது என்பது புலப்பட-வில்லை.] [127]

42-ஆவது நெடுமொழி முற்றும்.

## 43-ஆவது பரிவருத்தனைஅலங்காரம்

### பரிவருத்தனைஅணி இலக்கணம்

**213. உரியது ஓர்பொருள்கொடுத்து ஒருபொருள் கோடல்**
**பரிவருத்தனைஎனப் பகர்ந்தனர் புலவர். [128]**

(எ-ன்) வைத்த முறையானே (87) பரிவருத்தனை என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) யாதாயினும் ஒரு பொருள் தன்னிடத்து உரியது ஒருபொருளினைப் பிறிதுஒருபொருளுக்குக் கொடுத்துத் தானும் அதனிடத்து ஒருபொருளினைக் கோடல் பரிவருத்தனை என்னும் அலங்காரமாம் என்று கூறினர் அறிவுடை-யோர் என்றவாறு.

**நாவலவர் தம்பிரான் நாவீறன் தேமகிழ்தார்**
**காஅலர்க்கும் வாசம் கலந்துஅளித்து - வாவிப்**
**பலமலர் வாசம் கவரும் பான்மைத்தே, விண்ணோர்**
**குலம் முதல் வந்து ஏத்து குருகூர்.** (511)

இது பரிவருத்தனை. இதனுள் 'காவலர்க்கும்' என்னும் உம்மை எச்சம் ஆதலின் வாவியின்கண் உள்ள மலர்க்கும் அளித்தமை உணர்க. 'வாவிப் பலமலர் வாசமும்' என்னும் உம்மை செய்யுள்விகாரத்தால் தொக்கமையால் 'காவிற் பலமலர் வாசமும்' எனக் கூட்டி உரைக்க. கலத்தல் - பாலும் நீரும் போலக் கலத்தல். அளித்தல் - புரத்தல். கவர்தல் - கொள்ளுதல். விண்ணோர்-குலம் முதல் - தேவர்கூட்டமும் இந்திரனும். 'விண்ணோர்குலம் முதல் வந்து ஏத்து குருகூர் நாவீறன் வகுளமாலிகை தனது வாசம் புரந்து அவற்றின் வாசம் கவரும் பான்மைத்து' எனக் கூட்டுக. துறை - நகர்வாழ்த்து.

[புலவர்தலைவனாகிய நாவீறன்எனப் போற்றப்படும் மாறன் அணிந்த, வண்டுகள் மொய்க்கும் மகிழமாலை சோலையிலும் குளத்திலும் உள்ள பூக்களின் நறுமணத்தோடு கலந்து அவற்றைச் சிறப்பித்து, அச்சோலை குளங்களிலுள்ள பலமலர்களுடைய நறுமணத்தையும் தான் கொள்ளும் இயல்பினது, தேவர்கள் இந்திரனோடு வந்து வழிபடும் திருக்குருகூர்த் திருத்தலம் - என்ற இப்பாடலில், தன்மணத்தைக் கொடுத்து மகிழமாலை பிறவற்றின் மணங்களைக் கவருதல் பரிவருத்தனை.]

**பண்டு ஆழியில் துயில்மால், இமையோரைப் பருவரல் சென்று**
**அண்டாது, தன்கைப்பகழி ஒன்றே கொடுத்து, அன்புபுறங்-**
**கண்டார் நிருதர் நிறம்திறந்து, ஆவி கணக்குஇறந்த**
**கொண்டான், நிருதர்குலாந்தகனாம் பெயர் கொள்வதற்கே.** (512)

இதுவும் பரிவருத்தனை. ஆழியில் துயில்மால் - திருப்பாற்கடல்நாதன். அண்டாது - அணுகாது. நிருதர் - மூலபெலப்படை. ஒழிந்த அகலம் உரையில் கொள்க. இதன்வேறுபாடும் காண்க. துறை - வில்வென்றி.

[பண்டு பாற்கடலில் பள்ளிகொண்ட பெருமான், தேவர்களைத் துயரம் நெருங்காது பாதுகாப்பதற்காக இராமனாக அவதரித்துத் தன்கையினால் ஒரே அம்பினைச் செலுத்தி, அன்பு என்பதனையே அறியாத அரக்கர்கள்பலருடைய மார்புகளைத் துளைத்து, அரக்கர்குலகாலன் என்ற பெயரைக் கொள்வதற்காக அவர்களுடைய கணக்குஇறந்த உயிர்களைக் கொண்டான் - என்ற இப்பாடலில், ஒருபொருள் கொடுத்துப் பலபொருள்-களைப் பெற்றமை பரிவருத்தனை.]

**பொன்மாளிகையினில் வெண்பொற்குடங்களான் இரவி**
**தன் மாண்படிவம் தமிபுரந்து - நன்மாமைத்**
**தாம் ஆயிரம்படிவம் வாங்கும் தகைத்து, அலராள்**
**கோமான் விளங்கு குருகூர்.** (513)

இதுவும் பரிவருத்தனை. இதனுள் 'வெண்பொற்குடங்களான்' என்னும் ஆன் உருபு குடங்கள் தோறும் என்று ஆயிற்று; என்னை

தகுதிஎன ஒன்றும் நன்றே பகுதியால்
பாற்பட்டு ஒழுகப் பெறின் (குறள் - 111)

என்னும் குறட்பாவான் அறிக. அன்றியும் வழக்கினுள்ளும், 'ஊரான் ஓர் தேவகுலம்' 'வீட்டாற் குறுணி' எனவும் ஆன்உருபு இயல்பினும் திரியினும் தொறுவின்பொருட்டாய் வழங்குவது அறிக.

[தாமரையில் விற்றிருக்கும் திருமகள் தலைவனாகிய எம்பெருமான் அர்ச்சாவதாரத் திருமேனிகொண்டு விளங்கும் திருத்தலமாகிய திருக்குருகூர், பொன்மயமான பேரில்லங்களில் உள்ள வெள்ளிக்குடங்கள்தோறும் சூரியன் தன் மேம்பட்ட வடிவத்தைத் தானே வழங்கி நல்ல அழகுடைய ஆயிரக்கணக்கான வடிவங்களை அவற்றினிடம் பெறும் இயல்பினது - என்ற இப்பாடலில், தன்வடிவம்ஒன்றனைக் கொடுத்துத் தன்வடிவம் பலவற்றைப் பெறுவது பரிவருத்தனை.

தொறு என்பது பன்மையும் இடமும் உணர்த்தும் இடைச்சொல்.

தகுதி ... பெறின் - நடுவுநிலைமை என்று சொல்லப்படும் ஓர் அறமுமே நன்று; பகை நொதுமல் நட்பு என்னும் பகுதிதோறும் தன்முறைமையை விடாது ஒழுகப்பெறின் என்றவாறு.

ஊரான் ஓர்தேவகுலம் - ஊர்தோறும் ஒருகோவில்; வீட்டாற் குருணி - வீடுதோறும் குறுணிதானியம். ஊரான் என்பதன்கண் ஆன் ஈறு இயல்பாய்ப் புணர்ந்தது; வீட்டாற் குருணி என்பதன்கண் ஆன் ஈறு திரிந்து புணர்ந்தது.

இம்மூன்று எடுத்துக்காட்டுக்களிலும், முதலாவதும் மூன்றாவதும் தான் ஒன்று கொடுத்து அதன் இனமாய பலவற்றைப் பெறும் பரிவருத்தனை; இரண்டாவது தனக்கு இனமல்லாத பலவற்றைப் பெறுவது என வேறுபாடு காண்க.] [128]

43-ஆவது பரிவருத்தனை முற்றும்.

## 44-ஆவது காரணமாலைஅலங்காரம்

### காரணமாலைஅணி இலக்கணம்

**214. காரணம் தொடர்புஉறின் காரணமாலை. [129]**

(எ-ன்) வைத்த முறையானே (87) காரணமாலை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று. இதன்பொருள் உரையிற் கொள்க.

[தொடர்புடைய பலபொருள்களுக்கு உரிய காரணங்களை முறையாகக் கூறுதல் காரணமாலைஅணியாம்.]

**நன்மானிடப்பிறவி நல்அறிவிற்கு ஏது; அது**
**சொல் மாண்பொருளைத் துணிவுறூஉம் - தன்மை**
**வருவதற்கே ஏது; அது மாசுஅறும் அந்தாமம்**
**தருவதற்கே ஏது எனும் தான்.** (514)

இது காரணமாலை. இதனுள், 'எனும்' என்பது என்று உலகம் கூறும் என்பதாம். தான் அசை. நல்லறிவு - உண்மைஞானம். சொல்மாண்பொருள் - சுருதி கூறும் பெருமையை உடைய ஸ்ரீமந் நாராயணன். மாசறும் அந்தாமம் - பரமபதம். திணை - வாகை. துறை - பொருளொடு புணர்தல்; அருளொடு நீங்கலுமாம்.

[சிறந்த மனிதப்பிறவி உண்மைஞானம் வருவதற்குக் காரணமாம்; அந்த உண்மைஞானம் வேதம் குறிப்பிடும் பெருமையை உடைய திருமாலையே பரம்பொருளாக உறுதியாகத் துணிந்துகொள்வதற்குக் காரணமாகும்; அப்பரம்பொருள் குறையற்ற பரமபதத்தைத் தருவதற்குக் காரணமாம் - என இப்பாடலில், காரணங்களை நிரலே தொடர்ந்துகூறுவது காரணமாலை.] [129]

44-ஆவது காரணமாலை முற்றும்.

45-ஆவது காரியமாலைஅலங்காரம்

215. காரியமாலைஅணி இலக்கணம்

**215. காரியம் தொடர்தல் காரியமாலை. [130]**

(எ-ன்) வைத்த முறையானே (87) காரியமாலை உணர்த்துதல் நுதலிற்று.
இதன்பொருள் சூத்திரத்தானே விளங்கும்.
[காரியங்கள் காரணங்களோடு வரிசையாகத் தொடர்ந்துவருவது காரியமாலை.]

**பார் புனலின் காரியம்; நீர் பாவகன்தன் காரியம்; தீ**
**கூர்பவனன் காரியம்; கால் கொம்புஅனையாய்! - பேர்விசும்பின்**
**காரியமாம்; ஏனையவும் காரண மாயோன்அருளால்;**
**ஆரியம் கூறும் தொடர்பு இற்றுஆம்.** (515)

இது காரியமாலை. இதனுள் ஏனையவும் என்பன அஃறிணைப்பன்மை வாசகம் ஆதலால் பூதாதி மகான் மூலப்பிரகிருதிகளாம்.
திணை - வாகை; துறை - பொருளொடு புணர்தல். பொருளொடு புணர்தலுள்ளும் காரணமாலைப் பாடலும் காரியமாலைப் பாடலும் அறத்திற்கு ஏற்ற மெய்ப்பொருளொடு புணர்தலாம். ஆரியம் - சுருதி மிருதி புராணங்களாம்.
['நிலம் நீரின் காரியம்; நீர் தீயின் காரியம்; தீ காற்றின் காரியம்; காற்று பெரிய ஆகாயத்தின் காரியம். ஏனைய பூதாதி மகான் மூலப்பிரகிருதிகள் திருமாலுடைய அருளால் உண்டாவனவாம்' என வேதம் அறநூல்கள் புராணங்கள் ஆகியவை கூறும் என்ற இப்பாடலில், காரியங்கள் நிரலே கூறப்பட்டமை காரியமாலை.
பெயர் உருவம் ஆகியவற்றாலே பிரித்துக்காண ஒண்ணாதபடி எம்பெருமானோடு ஒன்றியிருக்கும் 'பிரிக்கமுடியாத இருள்' எனப்படும் மூலப்பகுதியைப் பிரித்துப் 'பிரித்துக் காணப்படும் இருள்' என்ற பருப்பொருளாக்கி, அதைக்காட்டிலும் சிறிதுசிறிதாகப் பருநிலைகளான அக்கரம், அவ்யக்தம் என்ற நிலைகளை உண்டாக்கி, அவற்றைக்காட்டிலும் பருநிலைகளான மகான்அகங்காரங்களைப் பிறப்பித்து, அவ்வகங்காரங்களிலிருந்து ஐம்பெரும்பூதங்களை உண்டாக்கி, அப்பூதங்களாலான அண்டத்தைப் படைத்து, பின் தேவர் மக்கள் விலங்கு தாவரம் என்ற நால்வகை உடல்களைப் படைப்பதற்கு எம்பெருமான் பிரமனைப் படைத்தான் என்று வேதம் முதலியன கூறும் என்றவாறு.] [130]

45-ஆவது காரியமாலை முற்றும்.

46-ஆவது ஏகாவளிஅலங்காரம்

ஏகாவளிஅணி இலக்கணம்

**216. ஒருபொருள் முதல்வைத்து அதற்கு உயர்வினையே**
**தருபொருள் மேல்வைத்து அதனொடும் பலசால்பு**
**ஏற்புடைத் தொடர்படுத்து இசைப்பது ஏகாவளி. [131]**

(எ-ன்) வைத்த முறையானே (87) ஏகாவளி என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) ஒரு முக்கியப்பொருளை முதல் வைத்து, அதற்கு உயர்பினையே தருவதாகப் பிறிதுஒருகூட்டத்தினுள் ஒருமுக்கியப்பொருளை அதன்மேல்

வைத்து, அப்படிப் பலசால்பின் முக்கியப்பொருள்களை ஒன்றோடு ஒன்று ஏற்பு-டையனவாகத் தொடர்படுத்து முக்கியப்பொருள் பயக்கும் முற்றாக உரைப்பது ஏகாவளியாம் என்றவாறு.
ஏகாவளி என்பது பலவளையத்தை ஒன்றாக்கப்பட்ட சங்கிலி போலத் தொடர்-தலின் அப்பெயர்த்துஆயிற்று.

**அவையாதல் சான்றோர் உண்டாயதே; சான்றோர்**
**நவையறு நன்னூல் உணர்ந்தோர்; நன்னூல் - எவையும் ஆம்**
**ஒன்றாமதனை உணர்த்தல்; அதுவும் திருவைக்**
**குன்றாதே கூடியது ஆகும்.** (516)

இஃது ஏகாவளி. திருவைக் குறைவறக் கூடியது ஸ்ரீமந்நாராயணனாகிய பரப்பிரமம். ஒழிந்த அகலம் உரையிற்கொள்க.
திணை - வாகை; துறை - பொருளொடு புணர்தல்.
[சான்றோர்களை உடையதே சபையாகும்; சான்றோர் எனப்படுபவர்கள் குற்றமற்ற சிறந்த நூல்களை உணர்ந்தவராவர்; சிறந்த நூல்களாவன 'திருமாலே பரம்பொருள்' என்று உணர்த்தும் நூல்களாகும்; அப்பரம்பொருளும் திருமகளை அகலாது தன்-னிடத்துக் கொண்டிருப்பதேயாகும் என்னும் இப்பாடலில், சபைக்கு உயர்வு தரும் சான்றோர், சான்றோர் கற்கும் நூல்கள், அந்நூல்கள் நுவலும் பரம்பொருள், அப்பரம்பொருளின் சிறப்புஇயல்பு என ஒவ்வொன்றற்கும் உயர்வுதரும் பொருள்களைத் தொடர்பாக இணைத்துக் கூறியிருப்பதால் இஃது ஏகாவளி.] [131]

46-ஆவது ஏகாவளி முற்றும்.

47-ஆவது பிரதீபஅலங்காரம்

பிரதீபஅணி இலக்கணம்

**217. உவமையை மதியாது உவமேயம்தனைத்**
**திவ்வியம்என மதிப்பது பிரதீபம். [132]**

(எ-ன்) வைத்த முறையானே (87) பிரதீபம் என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) உலகத்து யாதாயினும் சுடர்மயமாம் ஒருமுக்கியப்பொருட்கு ஒப்புடை-யனவாம் பொருளால் எய்தும் காரியத்தை அம்முக்கியப்பொருளான் மிகவும் எய்தப்பெற்றதால் அதனை மதித்து நல்லது என உரைப்பது பிரதீபம் என்னும் அலங்காரமாம் என்றவாறு. திவ்வியம் - நல்லது.
[உவமானத்தைவிட உவமேயத்தை உயர்த்திக் கூறுவது பிரதீபம்.]

**வேலாவலயம் விளக்கி அகஇருளைத்**
**தோலாது உடற்றும் சுடர்மயமாம் - கோலா-**
**கலத் தமிழ்வேதச் செங்கதிர் உதிப்ப, உம்பர்**
**தலக்கதிர் என் வேண்டும், இனித் தான்?** (517)

இது பிரதீபம். இதனுள் வேலாவலயம் என்பது பூமி. அகஇருள் - அறியாமை. தோலாது - தோற்பன செய்யாது. உடற்றும் - களையாநிற்கும். கோலாகலம் - அழகு. தமிழ்வேதச் செங்கதிர் - திருவாய்மொழியைப் பாடித் தந்த காரிமாறப்பிரான். 'தமிழ்வேதமாகிய கதிர்' என்னாது 'செங்கதிர்' என்றதனால்,

தமிழ்வேதமாகிய ஓராயிரக்கதிரைப் பரப்பின காரிமாறப்பிரான் ஆகிய செங்-கதிரோன் என மாட்டேறு இல்லா உருவகவாய்பாட்டான் வந்த பிரதீபமானது காண்க. புறஇருள் அன்றி அகஇருளையும் தோலாது உடற்றும் என்றதனான், முக்கியமான சுடர்மயத்தை மிகுத்ததூஉம் காண்க. உம்பர் தலக்கதிர் - ஆதித்தன். 'என் வேண்டும் இனி' என்பதனை 'இனி என் வேண்டும்' எனப் பாடம் மாற்றி மேல் என்ன காரியத்துக்கு வேண்டும் எனக் கூட்டுக. தான் அசை. துறை - கடவுள்வாழ்த்து.

[கடலால் சூழப்பட்ட உருண்டையான பூமியை ஒளிவீசச் செய்து அறியாமை ஆகிய அகஇருளைத் தோல்வியின்றிக் களையும் ஒளிவடிவான அழகிய தமிழ்வேதமாகிய கிரணங்களைப் பரப்புகின்ற மாறன் ஆகிய சூரியன் உதித்தபின் வானத்தில் இருந்து புறஇருளை மாத்திரம் பகல்வேளையில் போக்கும் சூரியன், மேல் என்ன காரியத்துக்குத் தேவைப்படும்? என்ற இப்பாடலில், உவமானமான சூரியன் புறஇருளைமாத்திரம் போக்கவும் மாறனாகிய சூரியன் அகஇருளையும் போக்கும் என உவமானத்தைவிட உவமேயத்தை உயர்த்திக் கூறுவதனால் இது பிரதீபம்.

ஆதித்ய ராம திவாகர அச்சுத பாநுக்களுக்குப் போகாத உள்ளிருள் நீங்கி, சோஷியாத பிறவிக்கடல் வற்றி, விகசியாத போதிற் கமலம் மலர்ந்தது, வகுளபூஷண பாஸ்க-ரோதயத்திலே (ஆசா. 83) என்பதனை உட்கொண்டது இப்பாடல்.

காரிமாறன் ஆகிய செங்கதிர் என விளக்கிக் கூறாது செங்கதிர் என வாளா கூறினமையின் இது மாட்டேறு இல்லா உருவகவாய்பாட்டான் வந்ததாகும்.] [132]

47-ஆவது பிரதீபம் முற்றும்.

48-ஆவது பிறவணிஅலங்காரம்

பிறவணியின் இலக்கணம்

**218. பொன்னினும் மணியினும் புனைஅணி இகழ்தரு**
**தன்மையின் பிறஅணி சாற்றுதல் பிறவணி. [133]**

(எ-ன்) வைத்த முறையானே (87) பிறவணி என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஒருவருக்குப் பொன்னினான்ஆதல் மணியினான்ஆதல் பொற்கொல்-லரால் கைபுனையப்பட்டு அழகுகொடுக்கும் ஆபரணங்களையும் இகழ்ந்திடும் தன்மையவாக அவர்க்கு அழகுகொடுப்பவான பிற அணிகள் புலவரால் கூறப்படுவது பிறவணி என்னும் அலங்காரமாம் என்றவாறு.

**கைக்கு அணிஒன்று ஈகை; கருத்திற்கு அணி ஞானம்;**
**மெய்ச்செவிகட்கு ஏற்ற அணி மேதகுநூல் - உய்த்துஅறிதல்;**
**சென்னிக்கு அணி மாறன்சேவடிமேற் கொண்டு இறைஞ்சல்;**
**என்னுக்கு அணிவேறு இனி?** (518)

இது பிறவணி.

(இ-ள்) யாவராயினும் ஒருவர்கைக்கு அணியாவது அத்தகடகமும் ஆழியும் அன்று; இல்லென இரந்தோர்க்கு ஒன்றுஈவதே அணி; மனத்திற்கு அணியாவது மகளிர் தனத்தின்செவ்வியைக் கண் காட்டக் கண்டு உட்கொள்வதோடும் அவரால் வரும் சிற்றின்பத்தைத் தரித்துப் பொசிப்பன பொசித்து இன்புறு-தலன்று; இப்பொருள் நிலையாதது, இப்பொருள் நிலையிற்று என்று உணர்வ-தோடும் இஃது ஆத்மா, இது பிரமம் என்று உணர்ந்து அப்பிரமமாகிய

ஸ்ரீமந்நாராயணன் சொரூபரூபகுணங்களைத் தெரிசித்துக் குழையும் உண்மைஞானம். மெய்ச்செவிகட்கு அணியாவது குண்டலம் முதலிய மெய்யணியோடும் பொய்ப்பனுவல்மார்க்கம் உட்கொண்டு குழைவதன்று; மெய்ப்பனுவல் கூறும் தத்துவத்ரயங்களை உட்கொண்டு மகிழ்வதாம். சென்னிக்கு அணி மயிர்முடியும் மணிமகுடமும் பூமாலையும் முதலியன அன்று; காரிமாறப்பிரான் திருவடிகள் ஆகிய அரவிந்தத்தைத் தாங்கி வணங்குவதாம். ஆதலால் வேறுஆபரணம் வேண்டுமோ என்றவாறு.

திணை - வாகை; துறை - பொருளொடு புணர்தல்.

[கைக்கு அணி ஈகை. மனத்திற்கு அணி மெய்அறிவு. செவிகளுக்கு அணி ஞானநூல்உபதேசம் கேட்டல். தலைக்கு அணி மாறனை வணங்குதல். பிற அணிகள் உண்மையான அணிகள் ஆகா.

அத்தகடகம் - கையில் அணியும் ஒருவகை வளையல்; ஆழி - மோதிரம்; பொசிப்பன - நுகர்வன; சொரூபம் - தனித்தன்மை; ரூபம் - வடிவம்; குழைதல் - மனம் ஈடுபட்டு உருகுதல்; பொய்ப்பனுவல் மார்க்கம் - பொய்யான நூல்கள் குறிப்பிடும் வேதநெறிக்குப் புறம்பான நெறி; தத்துவத்திரயம் - சித்து, அசித்து, ஈசுவரம் என மூன்று உண்மைப் பொருள்கள்.] [133]

48-ஆவது பிறவணி முற்றும்.

## 49-ஆவது முன்னவிலக்குஅலங்காரம்

### முன்னவிலக்குஅணியின் இலக்கணம்

**219. மன்னிய குறிப்பின் மாற்றுதல் தானே**
**முன்னவிலக்குஎன மொழிந்தனர் புலவர். [134]**

(எ-ன்) வைத்த முறையானே முன்னவிலக்கு என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) மனத்தின்கண் நிலைபெற்ற குறிப்பினானே விலக்குவது முன்னவிலக்கு என்னும் அலங்காரமாம் என்று கூறினர் அறிவுடையோர் என்றவாறு. 'குறிப்பினால் மாற்றுதல்தான்' என்னாது தேற்றேகாரம் புணர்த்தமையால், கூற்றினான் மாற்றினும் அவ்அலங்காரமாம் எனினும், குறிப்பினான் மாற்றுதலே பொருட்பொலிவும் செய்யுள்சிறப்பும் என்பது நோக்கிப் புணர்த்தார். ஏனையது அத்தன்மையது அன்மையின் இலேசினால் உடன்பட்டார் என்றவாறு.

அவை காலம்மூன்றினோடும் கூட்ட அறுவகைப்படும். அவை முன்னர்க் காட்டுதும். முன்னம் - குறிப்பு. அதனால் விலக்குதலின் ஈறு கெட்ட வாய்பாட்டால் கூறினார்.

[முன்னவிலக்கு எனவே குறிப்பினால் விலக்குதல் என்பது பெறப்படுதலின், கூற்றினால் விலக்குதலும் உண்டு எனினும் அது சிறவாது விலக்கணியின் பாற்படும் என்பது 'தானே' என்ற இலேசினால் கொள்ளப்பட்டது. முன்னம் என்பது விலக்கு என்ற சொல்லோடு சேரும்போது ஈற்றுமகரம் கெட முன்னவிலக்கு என்ற தொடர்மொழி ஆயிற்று.] [134]

### முக்கால முன்னவிலக்கு

**220. அதுவே,**
**இறப்பு எதிர்நிகழ்வு என்று ஏத்திய காலம்**
**பெறப் பொருள் புலப்படும் பெற்றித்து ஆகும். [135]**

(எ-ன்) அங்ஙனம் குறிப்பினும் கூற்றினும் வரும் முன்னவிலக்குக் காலம் மூன்றுடன் கூட்ட அறுவகைப்படும் என்றார். அக்காலம்மூன்றின் பெயரும் முறையும் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) அச்சொல்லப்பட்ட முன்னவிலக்கு இறப்பு எதிர் நிகழ்வு என்று உலகம் கொண்டாடப்பட்ட காலம்மூன்றும் பெற்றுப் பொருள் தோன்றும் இலக்கணத்தை உடைத்தாம் என்றவாறு.
இதனுள், 'நிகழ்வு என்று ஏத்திய காலம்' என்றதனால் நிகழ்காலம் இன்று என்பார் குறிப்பை நீக்கி, உண்டு என்பார் குறிப்பே இந்நூல்உடையாரும் உடன்பட்டார் என்பதாம்.

**வண்டு உலவும் தண்துளப மாயோனே! அனைத்துஉயிர்க்கும் வசதியாய**
**அண்டர்அண்ட பகிர்அண்டம் அகத்துஅடக்கும்முழுமுதல் நீ ஆயிற்று என்றால்**
**பண்டு உலகம்அனைத்தையும் ஓர்அயில்எயிற்றால் இடந்துஅளந்த பான்மை-**
**அல்லால்**
**உண்டு உமிழ்ந்தபடி அயல்கண்டு இருந்தவர் ஆர்?எவண் இருந்து அன்று**
**உண்டவாறே? (519)**

இஃது இறந்த வினைவிலக்கு. துறை - கடவுள்வாழ்த்து. (குருகாமான்மியம்)
["வண்டுகள் உலாவும் குளிர்ந்த திருத்துழாயை அணிந்த கரிய நிறத்தோனே! எல்லா-உயிர்க்கும் உறைவிடமாகிய தேவர்உலகையும் ஏனைய வெளி உலகங்களையும் வயிற்றினுள் அடக்கிவைக்கும் பரம்பொருள் நீ ஆவாய் என்கிறார்களே. முன்பு உலகம்முழுதையும் ஒரு கூரிய பல்லினால் அண்டச்சுவரிலிருந்து பெயர்த்துஎடுத்து மூவுலகும் ஈரடியால் அளந்த செயலையோ, நீ அவற்றை விழுங்கி மீண்டும் வெளிவிடுத்த செயலையோ, பக்கலில் இருந்து கண்டு உரைத்தவர் யாவர்? எங்குத் தங்கியிருந்து நீ அவற்றைஎல்லாம் உண்டாய்?"
பண்டு உலகைப் பெயர்த்து எடுத்தமை, மூவுலகும் ஈரடியால் அளந்தமை, அவற்றை உண்டு உமிழ்ந்தமை ஆகிய நிகழ்ச்சிகளை நேரில் கண்டவர் ஒருவரும் இல்லாததால் அவை ஐயத்தின்பாற்பட்டு விலக்கப்பட்டமை இறந்த வினைவிலக்காகும்.]

**போவன் இறை வன் பொருட்குஎனவே போம் இவள்தன்**
**ஆவிதனை மீட்டு அருள்வசனம் - காவலனே!**
**நல்துளபத்தார் மாயன் நாகையில் முன் கற்றுஅறியப்-**
**பெற்றுளது உண்டாமேல் பிரி. (520)**

இஃது எதிர் வினைவிலக்கு. வன்பொருள் - கல்விப்பொருள். வசனம் - மந்திரம். இறை - தலைவன். இவள் என்பது இடமயக்கம். 'கற்று அறியப் பெற்றுளது உண்டாமேல்' என்பதனால், வன்பொருள் கல்விப்பொருள் ஆயிற்று.
பகுதி - ஓதற்பிரிதல்; துறை - செலவு அழுங்குவித்தல்.
["என்னைப் பாதுகாக்கவேண்டிய தலைவனே! நீ கல்விப்பொருட்டுப் பிரிந்து போகப்போகிறாய் என்ற செய்தியைக் கேட்டஅளவிலேயே நீங்கிவிடும் என் உயிரை மீட்டும் திருப்பித் தரும் மந்திரத்தை, நல்ல துளபமாலையை அணிந்த திருமாலுடைய நாகைத்திருப்பதியில் நீ முன்னமே கற்றறியப்பெற்றிருந்தால் பிரிந்து செல்வாயாக."
இவள் - தன்னைத் தலைவி படர்க்கைவாய்பாட்டால் கூறினாள். எதிர்காலத்தில் ஓதல்-பற்றித் தலைவன் மனம்கொண்ட பிரிவை விலக்குதலின் எதிர் வினைவிலக்கு.
'இவள்' எனத் தோழி தலைவியைச் சுட்டியதாக அவள்கூற்றாக்குதல் சாலப் பொருந்தும்.]

**பூம்புனல்வாய் யாம் ஒழுகப் பொற்புயமுன்பால் அணைத்த-**
**தாம் புணை மெய்த்தெய்வதம் முன்பாய் இருக்கப் - பாம்புஅணைசேர்**
**மெய்யமால் வெற்பில் விரைந்து பலிக்கு எய்து அணங்கு! உன்**
**பொய்யை யார்முன்பு உரைப்பேன், போய்? (521)**

இது நிகழ் வினைவிலக்கு. இதனுள் 'யாம்' என்பது தோழி தன்னையும் தலைவியையும் கூட்டி உளப்பாட்டுத்தன்மையால் கூறியது. 'பொற்புய முன்பால் அணைத்ததாம் புணைமெய்த்தெய்வதம்' என்பது உருவகஉருவக வாய்பாடு விரவினதாம். 'எய்தும்' என்பது எய்து என்று ஆயிற்று. 'மெய்த்தெய்வதம்' எனவே, பலிக்கு எய்தியது பொய்த்தெய்வமாயிற்று. அணங்கு என்பது அண்மைவிளி.

திணை - பெருந்திணை. துறை - வெறிவிலக்கல்.

["திருஅனந்தாழ்வான்மீது பள்ளிகொண்டிருக்கும் மெய்யம் என்ற திருப்பதி எம்பெருமானுடைய மலையிலே விரைவாகப் படைக்கப்பட்ட பொருளைப் பெறுவதற்கு வந்துள்ள பொய்த்தெய்வமே! பூக்களை உடைய நீர்வெள்ளத்தில் யானும் தலைவியும் இழுத்துச்செல்லப்பட, அழகிய புயங்களின் வலிமையால் எம்மைத் தழுவிக் காத்ததாம் தெப்பமாகிய உண்மைத்தெய்வம் உன்கண் எதிரே இம்மலையில் இருக்கவும், அதனை விடுத்துப் பலிபெற வந்த உன் பொய்ச்செய்கையை யான் யாவரிடத்துச் சென்று சொல்லுவேன்?" என்று தோழி கூறி வெறிவிலக்கியவாறு. நிகழ்காலச் செயலை விலக்கியமையின் நிகழ் வினைவிலக்கு.

தலைவி தோழி என்ற இருவரையும் வெள்ளம் ஈர்த்துச் செல்லத் தலைவன் இருவரையும் பாதுகாத்தான் என்று கூறுதல் ஐந்திணைக்கண் இன்மையின், உரையாசிரியர் இப்பாடலைப் பெருந்திணையைச் சார்ந்தது என்று கொண்டுள்ளார்.

தலைவனைத் தெப்பமாக உருவகித்து மீட்டும் தெய்வமாக உருவகித்தமையின் 'புணைமெய்த்தெய்வதம்' என்பது உருவகஉருவகம்.] [135]

முன்னவிலக்கின் கூறுபாடுகள்

221. **கூர்பொருள் காரணம் காரியம் குணம்எனும்**
**ஈரிரண்டினும் புணர் இயற்கைத்து ஆகும். [136]**

(எ-ன்) இஃது அவ்வலங்காரத்தின் கூறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) மிகுந்த பொருள்விலக்கும், காரணவிலக்கும், காரியவிலக்கும், குணவிலக்கும் என்னும் நான்குவகையானும் கூடிவரும் இயல்பினை உடைத்து, அங்ஙனம் காலம்மூன்றினோடும் பொருந்திவரும் முன்னவிலக்கு என்றவாறு.

**வெம்கோப மால்யானை விண் பகவே மூலம்எனப்**
**பொங்குஓதையை உணர்ந்த தத்துவனாம் புத்தேளிர்-**
**தம்கோன் அனைத்துஉருவும் தான்ஆன சாரூப**
**எங்கோன் அவன்அல்லால் யாரோ, இறைநிலையே? (522)**

இது பொருள்விலக்கு. (குருகாமான்மியம்) துறை - கடவுள்வாழ்த்து.

[மிகுந்த சினமுடைய பெரிய யானையாகிய கசேந்திரன் வானவெளி பிளக்குமாறு 'ஆதி மூலமே!' என்று பிளிறிய ஓசையை மனங்கொண்டு கசேந்திரனைக் காத்த மெய்ப்பொருளாம் நித்தியசூரிகள்தலைவனாய் எல்லாப் பொருள்களையும் தனக்கு உடலாகக் கொண்டுள்ள எம்பெருமானாகிய நாராயணனைத் தவிரப் பரம்பொருள்நிலையில் உள்ளார் வேறு யாவர்? - என்ற இப்பாடலில், எம்பெருமானைத் தவிரப் பிற தெய்வங்களைப் பரம்பொருள் நிலையிலிருந்து விலக்கியதால் இது பொருள்விலக்கு.]

**படைக்கின்ற செழுங்கமலத்து அயன்தன் வாழ்நாள் பற்றுவிடப் பகிர்அண்டப்**
**பதவி மாந்தி**
**உடைக்கின்ற பெரும்புனலின் அகத்தாய் ஆக்கை ஒருங்குஇழந்தே அலகு-**
**இறந்த உயிர்கள்யாவும்**
**புடைக்கின்ற பொழுதின் அகப்படுத்தி நாவிப் புடைக்கனல் துற்றாவகையின்**
**புறத்தே மீட்டும்**
**அடைக்கின்ற நினது பெருங்கருணைக்கு எந்தாய்! அவை அளித்த கைம்மாறு**
**ஒன்று அறிகிலேனே.** (522)

இது காரணவிலக்கு. இதனுள், வாழ்நாள் - பிரமகற்பம். பற்று விட - கூட. நாவிப்புடைக்கனல் - உதராக்கினி. துற்றாவகையின் - உண்ணாத கூறுபாட்டிற்கு. புறத்தே மீட்டும் அடைக்கின்றது - திருஉதரத்தை விட்டுப் புறத்தே ஆன்மகோடிகளை வினைவழி அடைத்தல். ஒழிந்த அகலம் உரையில் கொள்க. துறை - கடவுள்வாழ்த்து. (குருகாமான்மியம்)

["எந்தாய்! உலகைப் படைக்கின்ற பிரமனுடைய வாழ்நாள் முடியும் பிரமகற்பத்தில், உலகைஎல்லாம் விழுங்கும் ஊழிப்பெருவெள்ளத்தில் அகப்பட்டு உடல்களை இழந்து ஆன்மாக்கள் யாவும் தடுமாறும்பொழுதில், அவற்றைத் தன்வயிற்றகத்து அடக்கி, உதராக்கினி அவர்களை உண்ணாதவாறு அவற்றை வெளியே கொணர்ந்து மீண்டும் அவையவை வினைகளுக்கு ஏற்ப உடல்களைக் கொடுத்து வாழவைக்கின்ற உன் பெருங்கருணைக்குக் காரணமாக, அவை எந்த நற்செயலையும் செய்ததாக அறியேன்" என்ற இப்பாடலில், ஆன்மாக்களிடத்துக் காரணமான நற்செயல்ஒன்றும் இல்லாதிருக்கவும், எம்பெருமான் காரணம் பற்றாத கருணையால் அவற்றைப் பாதுகாக்கிறான் என்று கூறுதல் காரணவிலக்கு.]

**போர்செய்யும் முல்லைப் புதுமலர்ச்சி கேள் குறித்த**
**கார் செய்தது அன்றே; கயல்கண்ணாய்! - ஏர்வகுளத்**
**தோடு உறும் தார் மாறன் துடரிமலைச் சந்தனப்பூங்-**
**கோடு உழும் கார் செய்த குறி.** (524)

இது காரியவிலக்கு. கார்செய்தது அன்று - கார் பருவம்முற்றிச் சுபாவத்தாலே பெய்த மழைத்துளியாம் காரியம் அன்று. விளைவு எய்தாமுன் கொம்புகள் உழுதலால் பெய்த மழைத்துளியின் முல்லை மலர்ந்தது.
(இ-ள்) "கயல் போன்ற கண்களை உடையாய்! நின் அறிவோடும் பூசலைச் செய்யாநின்ற முல்லைஅரும்பு புதிதாக மலர்ந்த மலர்ச்சி நின் தலைவர் குறித்த பருவக்கொண்மூ பெய்து செய்த காரியம் அன்று; அழகிய வகுளமாலிகையை உடைய காரிமாறப்பிரான் துடரிமலையிடத்துச் சந்தனக் கொம்பரால் உழப்பட்ட பருவம்அல்லாக் கார் பெய்துசெய்த காரியக்குறியாம்" என்றவாறு. "ஆகையால் நினது வருத்தம் தணிவாயாக" என்பது பயன்.
பகுதி - வரைபொருள்பிரிதல்; துறை - பருவம் மறைத்தல்.

[மழை பெய்ய முல்லை முகிழ்த்தமை, கார்ப்பருவமேகத்தின் முற்றிப்பெய்த செயல் என்ற காரியத்தை விலக்கியமையால் காரியவிலக்கு.]

**அங்கண் மாஞாலத்து அமைந்த அணு உடம்பாய்த்**
**தங்கும் அணுவாம் தரத்தானைச் - செங்குன்றூர்ச்**
**சிற்றாயனை நெடுமால் என்று எவனோ, திண்ணிதின் நூல்**
**கற்றார் மொழியும் கடன்?** (525)

இது குணவிலக்கு. அணு - உயிர். உடம்பாய் (அணு மயமாகிய உயிர்கள்) உடம்பாய். தங்குதல் - அதனகத்து அந்தர்யாமியாய் இருத்தல். 'உரனொடும் நூல் கற்றார்' என்க. துறை - கடவுள்வாழ்த்து.

[அழகிய இடத்தை உடைய பெரிய உலகிலே பொருந்தியிருக்கும் அணு அளவினவாகிய ஆன்மாக்களை உடலாகக்கொண்டு அவற்றிடையே அந்தராத்மாவாக இருக்கும் இயல்பினனாகிய திருச்செங்குன்றூர் என்ற திருத்தலத்தில் உகந்தருளியிருக்கும் சிற்றாயன் எனப்படும் எம்பெருமானை, நல்ல அறிவோடு நூல்களைக் கற்றவர்கள் நெடுமால் என்ற குறிப்பிடும் காரணம்தான் யாதோ? - என்ற இப்பாடலில், அணுவுக்கு அணுவாய் உள்ளவனை நெடுமால் என்று பேருருவினனாகக் குறிப்பிடும் பண்பினை விலக்கியமையின் இது குணவிலக்கு.]

**ஆடல் அமைந்துளராம் ஆனாலும், அம்புடன் கைக்**
**கோடல் அமைவில் குழைதழையே; - நேடல்**
**சினஉவா என்றே திருவரங்கர் வெற்பில்**
**வினவுவார்; வேட்டையும் மெய்ம்மெய்! (526)**

என்பது காரணகாரிய விலக்கு; என்னை? 'வேட்டை காரணமாக வந்தேன்' என்பதும், 'யானையை எய்தேன்; எய்த வாளியோடும் போந்தது' என்னும் காரியமும் குறிப்பினால் விலக்கியமையால் காரணகாரிய விலக்கு ஆயிற்று. 'ஆடல் அமைந்துள்ளார்' என்பது மனவலியும் காயவலியும் உடையார் என்பதாம். அன்றி, வென்றி நிறைந்துளராம் எனினும் ஆம். அமை வில் - மூங்கிலால் கைக்கொள்ளுதலாம் வில். குழைதழை - குழையும் தழை. நேடல் - தேடல். சின உவா - சினத்தைப் பெருக்கும் யானை. மெய்ம்மெய் என்பது இகழ்ச்சிக்குறிப்பில் வந்த எதிர்மறைஅடுக்கு. பகுதி - இருவரும் உள்வழி அவன் வர உணர்தல்; துறை - அறிவுநாடல்; நகைத்துரையுமாம்.

[தோழி தலைவனைக் கண்டஅளவில் தன்மனத்தில் "இவர் வலிமை உடையவரே எனினும் மூங்கிலாலாகிய வில்லைச் சுமக்கவேண்டிய கையில் வாடக்கூடிய தழையையே வைத்துக்கொண்டு உள்ளார். திருவரங்கர்மலையிலே சினம்பொருந்திய யானையை வேட்டையாடுவதற்காகத் தாம் தேடிக்கொண்டு வந்திருப்பதாகக் கூறுகிறார். இவர் வேட்டையாட வந்திருப்பது உண்மைதான், உண்மைதான்!" என்று தலைவனுடைய சொல்லும் செயலும் வெவ்வேறாக இருப்பதனை நாடிய இப்பாடலில்,
தலைவன் தான் அப்பக்கம் வந்தமைக்குக் காரணமாகக் கூறிய வேட்டை என்பதும், காரியமாகிய 'யானையை எய்தேன் அஃது ஆண்டுப் போந்தது' என்பதும், அவன்கையில் வில்இன்றித் தழையே உள்ளமை கொண்டு விலக்கப்படுதலான், இது காரணகாரிய விலக்கு.] [136]

முன்னவிலக்கின் விரி

222. **கடுஞ்சொல் ஆசி தலைமை இகழ்ச்சி**
**உடன்படல் முயற்சி துணைசெயல் உபாயம்**
**ஐயம் பரவசம் வெகுளி இரங்கல்**
**கையறல்உடன் விரிகாட்சியும் உளவே.** [137]

(எ-ன்) இதுவும் அதனையே விரித்துஉணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) கடுஞ்சொல் முதலாகக் கையறல் இறுதியாகக் கூறிய பதின்மூன்றோடும் விரிந்து வரும் தோற்றம் உடைத்து அம்முன்னவிலக்கு என்றவாறு. [137]

கடுஞ்சொல்விலக்கு

**223. அவற்றுள், கடுஞ்சொலின் விலக்குதல் கடுஞ்சொல் விலக்கே. [138]**

(எ-ன்) இச்சொல்லப்பட்ட பதின்மூன்றினுள் ஒன்றற்குக் காரணப்பெயர் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அச்சொல்லப்பட்ட பதின்மூன்றனுள் வன்சொல்சொல்லி விலக்குதல் கடுஞ்சொல் விலக்காம் என்றவாறு. [138]

ஏனைய விலக்குக்கள்

**224. ஒழிந்தவும் தம்பெயர் உரையின் கொள்ளும். [139]**

(எ-ன்) ஒழிந்த பன்னிரண்டிற்கும் காரணப்பெயர் தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இதன்பொருள் உரையிற்கொள்க.

[விலக்குஅணி வகைகளின் பெயரைச் சொல்லியஅளவிலேயே அவை எப்பொருளை அடிப்படையாகக் கொண்டு குறிப்பினால் விலக்கும் என்பது தானே புலப்படும் என்றவாறு.]

**ஊன்சுவைக்கொண்டு ஒன்றன்உயிர்க்கு இடுக்கண்செய்து உழல்வீர்**
**தேன்சுவைக்கொள் பூந்துளபச் செங்கண்மால் - வான்சுவைமேல்**
**வைக்கும் புலன்உடையோர் மன்னாக் கொடுநரகத்து**
**உய்க்கும் கொடுங்கூற்றுஒன்று உண்டு.** (527)

இது கடுஞ்சொல்விலக்கு. இதனுள், ஒன்றன்உயிர்க்கு இடுக்கண்செய்தல் - உயிரைக் கூட்டைவிட்டுப் பிரித்து அதன்ஊனை உண்டல். ஒழிந்த அகலம் உரையிற்கொள்க.

திணை - பாடாண். துறை - வாயுறைவாழ்த்து.

["புலாலைச் சுவைப்பதனை விரும்பிப் பிறஉயிர்களுக்குத் தீங்குசெய்து தடுமாறும் மக்களே! தேனின் இனிமையைக் கொண்ட திருத்துழாய்மாலையை அணிந்த எம்பெருமானுடைய பரமபதத்தில் எய்தும் இனிமையில் மனம் வைக்கும் சான்றோர்கள் சென்று சேராத கொடிய நரகத்திலே புலால் உண்போரைச் செலுத்தும் கொடிய காலன் என்ற ஒருவனும் உளான்" என்ற இப்பாடலில், நரகத்துயரத்தின் கடுமையைக் கூறிப் புலால்உண்ணுதலை விலக்குதல் கடுஞ்சொல்விலக்கு ஆகும்.]

**மண்டு ஆர்அழல்கான் மழை தவழ் கவான் பொருள்வாழ்வு**
**உண்டாக! நீ குறித்தது ஒப்புஎன்றால் - அண்டர்**
**மருந்தே பெறப் புரந்த மால் கடித்தானத்தாள்**
**இருந்து ஏது, இறந்து ஏது, இதற்கு?** (528)

இது வாழ்த்துவிலக்கு. ஆசி எனினும் ஒக்கும். மண்டு ஆர் அழல் - கொழுந்துவிட்டு எரியும் அழல். குறித்தது - பொருட்பிரிவு; இஃது ஆகுபெயர். இருந்து ஏது? இறந்து ஏது? என்பது இருந்ததனால் வரும் பயன் ஏது? இறந்ததனால் உள்ள தாழ்வு ஏது, உனக்கு? என்பதாம்.

பகுதி - பொருட்பிரிதல்; துறை - செலவு அழுங்குவித்தல்.

["மிக்க வெப்பமுடைய காட்டினை அடுத்த மேகங்கள் தவழும் பக்கமலையில் நீ குறித்த பொருட்பிரிவு உனக்கு ஏற்புடைத்து என்று நீ கருதுவாயாயின் அப்பொரு-

ளீட்டத்தான் நல்வாழ்வு உண்டாகுக! தேவர்கள் அமுதம் பெறுமாறு வாழ்வித்த திருமாலினுடைய திருக்கடித்தானத்திருப்பதியில் இருக்கும் இத்தலைவி உயிர் வாழ்ந்தாலும் இறந்தாலும் உனக்கு அதுபற்றிக் கவலை இல்லை" என்று தோழி தலைவனிடம் கூறிய இக்கூற்றில், அவன் பொருட்பிரிவை வாழ்த்துவதுபோலப் பேசிப் போக்கினை விலக்கியமை வாழ்த்துவிலக்கு. குறித்தது - கருதியதாகிய காரணம் அதன் காரியமாகிய பிரிவை உணர்த்துதலின், ஆகுபெயர்.]

**உரவுநீர் ஞாலத்து உணர்ந்த நிலையாமை**
**கரவுஇலா நூல்முகத்தால் கற்றும், - அரவின்**
**பிடர்மேல் குனித்து அருள்மால் பேரகத்தாய்! கற்கப்**
**படர்; மேல் படர் மேல்படும். (529)**

இது தலைமைவிலக்கு. உரவுநீர் ஞாலம் - போக்குவரத்துச் செய்யும் நீரை உடைய கடல் சூழ்ந்த ஞாலம். ஈண்டு, ஞாலம் என்பது உயர்ந்தோர். கரவு இலா நூல் - உண்மைநூல். கற்கப் படர் - ஓதப் பிரிவாயாக. மேல் படர் மேல்படும் - நீ பிரிந்த பின்னர் இவளிடத்துத் துன்பம் பெருகும் என்றவாறு. நிலையாமை - (யாக்கையும் இளமையும் செல்வமும்) நிலையாதன ஆதல்.
பகுதி - ஓதற்பிரிதல்; துறை - செலவு அழுங்குவித்தல்.

["கடலால் சூழப்பட்ட உலகில் கண்ணால் கண்டு உணரப்படும் நிலையாமையை உண்மையை மறைத்தல் இல்லாத நூல்கள்வாயிலாகத் தெரிந்து கொண்டும், காளியன்பிடரின்மேல் நடம்செய்த எம்பெருமானுடைய திருப்பேர் என்ற திருத்தலத்தில் உள்ள தலைவனே! நீ கல்வி கற்கச் செல்வாயாக. நீ பிரிந்த பின்னர் இவளிடத்துத் துன்பம் பெருகும்" என்ற தோழிகூற்றில், தம்மைப் பற்றிக் கவலைப்படாது ஓதற்குப் பிரிக என்று தலைமைசெய்து கூறுவாள்போன்று, தலைவிதுயர் கூறி விலக்கியமை தலைமைவிலக்கு.]

**என்உயிர்க்கும் என்உயிரோடு ஒன்றாகிய இறைவா!**
**உன்உயிர்க்கும் அன்புஉற்று உரைப்பேன், சொல் - மின்உயிர்க்கும்**
**சேட்டாழி மால்பிருதிச் செம்பொருளே பொன்னென நீ**
**வேட்டால், செவிக்கு இனிதாமே. (530)**

இஃது இகழ்ச்சிவிலக்கு. என்உயிர் என்றது தலைவியை. உன்உயிர்க்கும் என்றதும் தலைவிதன்னை. செம்பொருள் - உண்மைப்பொருளாகிய திருமால். பொன் என - செல்வப்பொருள் என்று உட்கொண்டு. வேட்டால் - நீ விரும்பினால். செவிக்கு இனிதாமே - 'பிரிவது முறை அன்று' என்று யான் கூறுவது நின்செவிக்கு இனிமையாய் விரும்பும் கூற்று ஆகாது என்றவாறு. மின் உயிர்க்கும் - ஒளியைத் தோற்றுவிக்கும். சேடு - பெருமை; ஆழி - சக்கரம்; அது சேட்டாழி என ஒற்று மிகுந்தது. ஏகாரம் எதிர்மறை.
பகுதி - பொருட்பிரிவு; துறை - செலவு அழுங்குவித்தல்.

["என்உயிர் போன்ற தலைவியாய், அத்தலைவியோடு மனத்தான் ஒன்றுபட்ட தலைவனாகிய உன் உயிராயுமிருக்கும் அவள்மாட்டுள்ள அன்பினால் யான் கூறுகிறேன். ஒளிவீசும் பெருமைபொருந்திய சக்கரத்தை ஏந்திய திருமாலுடைய திருப்பிருதி என்ற திருத்தலத்தில் பிரிவது முறையன்று என்று யான் கூறுவது உன்செவிக்கு இனிதாகுமா? எம்பெருமானை விடுத்து அழியும் பொருளை வேட்ட உனக்கு என்சொல் இனிது ஆகாது" என, மேம்பட்ட பரம்பொருளை விடுத்து உலகியல்பொருளை விரும்புவது இழிசெயல் என்று குறிப்பால் கூறுதலின் இஃது இகழ்ச்சிவிலக்கு. இனிது ஆமே - இனிது ஆகாது; ஏகாரம் எதிர்மறை.]

**சுத்தப் பொருட்டு ஏகத் தோகையும் நேர்ந்தாள்; விசும்பில்**
**புத்தப் புதுமதியம் பூணித்தான் - முத்தி**
**வழிக்கு இலக்காம் மாயோன் வடமதுரை வாழ்பெண்-**
**பழிக்கு இலக்கு ஆர்? மன்னா! பகர். (531)**

இஃது உடன்படல்விலக்கு. இதனுள், 'புத்தப்புதுமதியம்' என்றது பண்டு காணாத அழலைப் பரப்பும் மதி. பூணித்தல் - தோற்றுதல். 'முத்திவழிக்கு இலக்காம் மாயோன்' என்பது அரி அயன் அரன் என்னும் மூவருள் வீட்டின்பம் தரும் நெறிக்கு எதிர்நிற்கும் சீமந்நாராயணன் என்பதாம். 'பெண்பழிக்கு இலக்கு ஆர்' என்பது நீ பிரிந்தால் இவள் இறப்பது உண்மை என்றால், இப்பெண்பழிக்கு ஏதுஆவார் யாவர்? என்றவாறு.
பகுதி - பொருட்பிரிவு; துறை - தோழி செலவு அழுங்குவித்தல்.

["மன்னா! தூய்மையான பொருளைத் தேட நீ தலைவியைப் பிரிந்து செல்வதற்கு அவளும் உடன்பட்டாள். வானத்தில் இதற்கு முன்பு இல்லாத வகையில் பிரிந்தார்மேல் அழலைப் பரப்பும் சந்திரனும் தோன்றிவிட்டான். வீட்டின்பம் நல்குவதற்கு எதிர்நிற்கும் எம்பெருமானுடைய வடமதுரையில் வாழும் உன்தலைவி உன்பிரிவினால் இறந்து-விட்டால் அப்பெண்பழிக்கு இலக்கு ஆவார் யாவர் என்பதனைச் சொல்வாயாக" என்று தோழி, தலைவி உடன்படுவதுபோலக் கூறிப் பிரிவை விலக்குதல் உடன்படல்விலக்கு.]

**முத்திரைக்கை மாறன் மொழிந்த தமிழ்வேதப்**
**புத்தமிர்தை உண்டு இன்புஉறுவேனைப் - பத்தர்காள்!**
**வேறுதமிழ் கேட்பிப்பான் வேட்கும் மனம், கேட்கில் அதைச்**
**சீறும் எனது இன்பச்செவி. (532)**

இது முயற்சிவிலக்கு. இதனுள், 'தமிழ்வேதம்' என்பது வடமொழியாகிய சுருதி என்னும் முதல்நூலின்வழி வந்த திருவாய்மொழி; எனவே, ஆன்மலாபமாகிய முத்தியைத் தருவது திருவாய்மொழி அல்லது இல்லை; ஆதலால், பத்தர்காள்! வேறுதமிழ் கேட்பீர்அல்லீர் என அவர்கள்முயற்சியை விலக்குதல் பயன்.
திணை - பாடாண் சார்ந்த புறத்திணை; துறை - பனுவல்வாழ்த்து.

["பத்தர்களே! சிந்முத்திரை காட்டும் கையைஉடைய மாறன் அருளிய தமிழ்வேதமாகிய திருவாய்மொழி வழங்கும் புதிய அமுதினை உண்டு மகிழும் என்னை வேற்றவர்-தமிழைக் கேட்குமாறு மனம் விரும்பினாலும் என் இனிய செவிகள் அதனை வெகுளும்" என்ற இப்பாடலில், மனத்தின் முயற்சியைச் செவிகள் விலக்கும் என்று கூறியமை முயற்சிவிலக்கு.]

**வெறுக்கைக்கு இறப்பதுவே வேட்டாய்; மின் மின்னார்**
**வெறுக்கைக்கு இறப்பதுவே மெய்யால் - ஒறுக்கைப்**
**படைஆழியான் பார்த்தன்பள்ளியில் புள் கூறாது**
**இடையாமத் தேர்கடாய் ஏகு. (533)**

இது துணைசெயல்விலக்கு. இதனுள் வெறுக்கை என்றது பொன். இறப்பது - பிரிதல். வெறுக்கைக்கு இறப்பது - அயலார்ஏசுகை கேட்டு உயிர்விடுதல்.
பகுதி - பொருட்பிரிதல்; துறை - செலவு அழுங்குவித்தல். துணைசெயல்-விலக்குஆவது அப்பிரிவிற்கு உடன்பட்ட துணையார்போலக் கூறி விலக்குவது.

["பொன் தேடுவதற்காகத் தலைவியை விடுத்துப் பிரிவதையே விரும்பினாய். மின்போன்ற தலைவி அயலார்ஏசுதலைக் கேட்டு உயிர்விடுதல் உண்மையில் நடக்கக்கூடிய செயலாகும். அடியார்களின் பகைவர்களைத் தண்டிப்பதற்குச் சக்கரப்-படை ஏந்திய திருமாலுடைய பார்த்தன்பள்ளி என்ற திருத்தலமாகிய உன்இருப்-பிடத்திலிருந்து, தலைவி உறங்கிக்கொண்டிருக்கும் இவ்விரவில், கோழி கூவுவதன்முன்

பாதிஇரவில் உன்தேரைப் புறப்படுவித்து நீ பொருள் தேடப் போவாயாக!'' எனத் தலைவனுக்குத் தோழி உதவிசெய்பவளைப் போலக் கூறித் தலைவியின் துயர்கூறிச் செலவு விலக்குதலின் இது துணைசெயல்விலக்கு. மின்னார் - அயல்மனைப்பெண்டிர்.]

**பூண்ட நிதிக்குஏகப் பொருந்தினையேல், சேய்த்துஆகும்**
**ஆண்தகை! நின் பூந்தார் அகல்மார்பம் - காண்தகைக்குக்**
**கஞ்சனை முன் வென்ற மால் கார்வானம் மெல்லியல்கட்கு**
**அஞ்சனம்ஒன்று உண்டேல் அருள். (534)**

இஃது உபாயவிலக்கு. உபாயவிலக்குஆவது விலக்குவதனை ஓர்உபாயம் கூறி விலக்குவது. பூண்ட நிதி - மனத்தால் பற்றப்பட்ட பொருள். ஒழிந்த அகலம் உரையிற்கொள்க.

பகுதி - பொருட்பிரிவு; துறை - தோழி செலவு அழுங்குவித்தல்.

[''ஆண்களுள் மேம்பட்ட தலைவனே! நீ மனத்துக் கருதிய பொருள்தேடுதல் குறித்துத் தலைவியைப் பிரிந்து வேற்றிடம் செல்ல விரும்புவாயாயின், தொலை தூரத்தில் இருக்கும் உன் பூமாலையை அணிந்த அகன்ற மார்பினை, கம்சனைக் கொன்ற எம்பெருமானுடைய கார்வானம் என்ற திருத்தலத்திலிருக்கும் மெல்லியஇயல்பினை உடைய தலைவி காண்பதற்கு, அவள் கண்களுக்குப் பயன்படும் மாய மை ஒன்று உண்டாயின் அதனை வழங்கிப் பின் செல்வாயாக!'' என்ற தோழிகூற்றில், தலைவன் தலைவியைப் பிரிந்து போக உபாயம்ஒன்று கூறுவாள்போலச் சொல்லி, அவ்-வுபாயத்தைத் தலைவன் செய்ய முடியாமையால் போக்கினை விலக்குமாறு குறிப்பால் தெரிவித்தமை உபாயவிலக்கு.]

ஐயவிலக்கு என்பது ஐயுற்றதனை விலக்குதல்.

**கண்ணாக அன்றிக் கயலாக என்று கவர்த்து**
**எண்ணாத எண்ணி இனைமனனே! - விண்நாடு எண்**
**பொற்புஉடை மால் பாடகத்துப் பூவைமார் மைஎழுதும்**
**கற்பனையும் உண்டோ, கயற்கு? (525)**

இஃது ஐயவிலக்கு. இதனுள், 'கண்ணாக கயலாக' என்பது கண்ணாகவேண்டும் கயலாகவேண்டும் என்பனவாம். உண்டோ என்னும் ஓகாரம் ஒழியிசை. விண்நாடு - ஆகுபெயர். இது நிச்சியாந்தம் என்னும் சந்தயஅலங்காரம் முன்னவிலக்கினுள் விரவியது என்று உணர்க. பகுதி - இயற்கைப்புணர்ச்சி; துறை - தெரிந்து தெளிதல்.

[''தலைவியின் கண்களைக் கண்களோ கயல்களோ என இருவகையாகத் தடுமாறித் துணியமுடியாதனவற்றை நினைத்து வருந்தும் மனமே! தேவர்கள் போற்றும் பெருமையை உடைய திருமாலின் பாடகம் என்ற திருத்தலத்திலுள்ள மகளிர் தம்-கண்களுக்கு மை தீட்டுவார்கள். அச்செயல் மீனுக்கு உண்டோ?'' என்று கூறுவதன்கண், கண்ணோ கயலோ என்ற ஐயம் விலக்கப்பட்டுக் கண்ணே என்று முடிவுசெய்தலின் ஐயவிலக்கு.]

பரவசவிலக்கு என்பது தன்வசம்அல்லாமை கூறி விலக்குவது.

**ஈண்டு உன்குறிப்பு இஃதே என்றால், பொருள்எனும்முன்**
**மாண்டு உய்ந்தவள்போல் மருள்நீங்கி - மீண்டு**
**வரும்நாள் இன்றோஎனும் மான்மையலைத் தீர்த்து, ஆழிப்**
**பொருள்நாவாய் மன்னவனே! போ. (536)**

என்பது பரவசவிலக்கு. இதனுள், 'மாண்டு உய்ந்தவள்போல் மருள் நீங்கி' என்பது நின் பொருட்பிரிவை நீ குறிப்பால் உணர்த்த, அப்பிரிவை உன்னி

இறந்து பிழைத்தவள்போல மருண்டனளாய் நீ தேற்றத் தெருண்டனளாய் என்றவாறு. 'மீண்டு வருநாள் இன்றோ' என்பது பொருள்செயல் முற்றி மீண்டு வரும்நாள் இன்றோ என்றவாறு. 'மையலைத் தீர்த்து' என்பது மையலைத் தீர்ப்பது என் வசமன்று; உன் வசம் என்றவாறு.
பகுதி - பொருட்பிரிவு; துறை - செலவு அழுங்குவித்தல்.

["மன்னவனே! இவ்விடத்து உன்எண்ணம் தலைவியை நீத்துப் பொருட்குப் பிரிவதுவே எனின், நீ அப்பிரிவைக் குறிக்கும் முன்னரே இறந்து பிழைத்தவளைப்போல முதலில் மயங்கிப் பின் தெளிவிக்கத் தெளிந்து, 'என் தலைவன் பொருள்தேடி மீண்டு வரும்நாள் இன்றோ?' என்று வினவும் மான் போன்ற தலைவியின் மயக்கத்தை நீயே தீர்த்துப் பின் பொருள்தேடக் கடலில் கப்பலில் செல்வாயாக" என்ற தோழிகூற்றில், தலைவி தலைவன் பிரிவிடைத் தன்வசம் இழந்து மயங்கும் நிலையைக் குறிப்பிட்டதன் வாயிலாகத் தோழி தலைவனுடைய பொருட்பிரிவை விலக்குதல் பரவசவிலக்கு. தலைவி மையலைத் தீர்ப்பது தன்வசமன்று என்று கூறித் தலைவன்பிரிவை விலக்குதலானும், இது பரவசவிலக்காம் என்க.]

வெகுளிவிலக்கு - வெகுளி தோன்றக் கூறி விலக்குதல்.

**கோட்டானை முன்னம் பகர் மாயன் கண்ணங்குடியினில், பைந்**
**தோட்டால் புனை மென் சுரிகுழலாள், சமர் தோட்டி மதன்**
**பூட்டு ஆடல் வாளிதனக்கு இலக்காகப் புவிபுரத்தல்**
**வேட்டாய், புரவல! நின்போல் தறுகண்ணர்வேறு இல்லையே.** (537)

இது வெகுளிவிலக்கு. இதனுள், தோட்டால் புனைமென் சுரிகுழலாள் சமர்தோட்டி மதன் பூட்டு ஆடல் வாளிதனக்கு இலக்காகச் சேய்த்தாய நாடு சென்று காக்க விரும்பின புரவலனே! நின்னைப்போல் தறுகண்ணர் இல்லை என்பதனால் வெகுளிவிலக்கு ஆயிற்று.
பகுதி - நாடு காக்கப் பிரிதல்; துறை - தோழி செலவு அழுங்குவித்தல்.

["பாதுகாக்கும் தலைவனே! பெரிய தந்தங்களை உடைய கசேந்திரன் முன்னர் அழைத்த திருமால் உகந்தருளியிருக்கும் திருக்கண்ணங்குடியில் பசிய பூ இதழ்களாலே அணி செய்யப்பட்ட மெல்லிய சுருண்ட கூந்தலை உடைய தலைவி, போரிலே யானையை அடக்கும் அங்குசத்தை உடைய மன்மதன் வில்லில் பூட்டும் வெற்றி தரும் அம்புகளுக்கு இலக்காகவும், சேய்மையிலுள்ள நாட்டினைப் பாதுகாக்க விரும்பும் உன்னைப்போல், அஞ்சுதக்கன கண்டவழி அஞ்சாதவர் வேறுஒருவரும் இரார்!" என்ற தோழிகூற்றில், தலைவனைத் 'தறுகண்ணன்' என்று வெகுண்டுகூறித் தலைவிநிலையைக் குறித்து அவன் நாடுகாத்தற்செலவை விலக்கியமையால் இது வெகுளிவிலக்கு.]
இரங்கல் விலக்கு - இரங்கல் தோன்றக் கூறி விலக்குதல்.

**பொன்னை விரும்பும் புரவலனே! மெய்அடியார்**
**உன்ன அருள்புரி மால் ஊரகத்து - மின் இறந்தால்**
**எம்அனை எங்கு? என்ற கிளிக்கு என்னே மற்றுஏனையன-**
**தம்அனையைக் காட்டி எவன்தான்?** (538)

என்பது இரங்கல்விலக்கு.
(இ-ள்) இவளை வெறுத்துப் பொருள்விரும்பும் காவலனே! நீ பிரிந்தகாலத்து இவள் இறப்பது ஒருதலை என்றால், 'எம்முடைய அன்னை எவ்விடத்தாள்?' என்று என்னொடு வினாய கிளிக்கு யான் வேற்றுக்கிளிகளை வளர்த்த அயலாகிய தாய்மாரை அதற்குக் காட்டியதனால் அதற்கு உண்டாம் பயன் யாது? என்றவாறு. என்னே என்பது இரக்கம்.
பகுதி - பொருட்பிரிவு; துறை - தோழி செலவு அழுங்குவித்தல்.

[கிளி தன்னை வளர்த்த தாயைப் பிரியின் அதன் இரங்கத்தகும் நிலையை எடுத்துக்-கூறித் தோழி தலைவன்செலவினைக் குறிப்பாக விலக்கியமையின் இஃது இரங்கல்-விலக்கு.]

கையறல்விலக்கு - வேண்டிய பொருள்மேல் முயலும் ஒழுக்கமின்மை தோன்றக் கூறி விலக்குதல்.

**சீதரன்தன் தாள்இணையைச் சிந்தித்து உரைத்துஇறைஞ்சார்,**
**ஆதரித்த மெய்அடியார்க்கு அன்புஉறார், - பாதகர்தாம்**
**தீதுசெயும் சண்டதரன் சென்று அணுகும்போதில் அதற்கு**
**ஏதுசெய்வார் என்று அறியேனே.** (539)

இது கையறல்விலக்கு. 'ஏது செய்வார்' என்றது, அவன் செய்யும் இயம தண்டத்தை அனுபவிப்பதல்லால் ஒருசெயலும் இல்லை என்பதாம்.

திணை - பாடாண்; துறை - வாயுறைவாழ்த்து.

["திருமகள்கேள்வனாகிய எம்பெருமானுடைய திருவடிகளைத் தியானித்து வாழ்த்தி வணங்காமல், அவனை வழிபடும் உண்மைஅடியார்கள்மாட்டு அன்பு செலுத்தாமல் வாழும் தீவினையாளர்கள், தீமை செய்யும் காலன் வந்து அணுகும் நேரத்தில் அவன் செய்யும் தீதிலிருந்து உய்வதற்கு யாது செய்யக் கூடும் என்பதனை யான் அறியேன்" என்ற இப்பாடலில், பகவத்சம்பந்தமும் பாகவதசம்பந்தமும் இல்லாதவர் காலன் வரும்-போது செய்யக்கூடியது ஒன்றும் இன்று என்ற கையறலைக் குறிப்பிட்டு, அவர்கள் வாழும் வாழ்வாக மற்றவர் வாழக்கூடாது என்று விலக்கியமையால் இது கையறல்-விலக்கு.]

ஆகப் பதின்மூன்றும் அடைவே வந்தவாறு காண்க. [139]

முன்னவிலக்கு விரவி வருதல்

**225. வேற்றுப்பொருள்வைப்பு ஏது என்று இன்னவை**
**மேல்தொடர்ந்து இயலும் விதியும் இதற்கு உள. [140]**

(எ-ன்) இஃது அவ்வலங்காரம் மேற்கூறிய அலங்காரங்களுடன் விரவி வரும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) வேற்றுப்பொருள்வைப்பும் ஏதுவும் என்ற சொல்லப்பட்ட அவற்-றினிடத்தும் கூடிவரும் விதியும் முன்னவிலக்கென்னும் இதற்கு உளதாம் என்றவாறு.

**எண்இறந்த பல்லாயிரகோடி அண்டத்தும்**
**எண்இறந்த பல்லாயிரம் என்னக் - கண் அகன்றும்**
**ஆழியான் எய்தா அணு உண்டேல், உண்டு, படைப்பு-**
**ஊழியான் செய்யா உரு.** (540)

இது வேற்றுப்பொருள்வைப்பு முன்னவிலக்காம். இதனுள், 'கண் அகன்றும்' என்பது கண் அகன்றாலும் என்பதாம். படைப்பு ஊழியான் - படைக்குந் தொழிலாகிய முறைமையை உடையான்; எனவே, பிரமன் என்பதாயிற்று. ஒழிந்தனவும் தாமே விளங்கும். துறை - கடவுள்வாழ்த்து.

[எண்ணிக்கைஅளவைக் கடந்த பல ஆயிரக்கணக்கான கோடி என்ற எண் அளவில் உள்ள அண்டங்கள்தோறும் எண்ணிக்கைஅளவைக் கடந்த பல ஆயிரக்கணக்-கானவையாக அணுக்கள் இருந்தாலும், திருச்சக்கரத்தை உடைய எம்பெருமான் அந்தர்யாமியாய் உள்ளே இல்லாத அணு இருக்குமானால், உலகங்களின் படைப்பில்

பிரமன் படைக்காத உருவம் இருக்கும் - என்ற இப்பாடலில், 'எல்லாஉருவும் பிரமன் படைத்தவை' என்ற பொதுப்பொருள் எல்லாப்பொருளுள்ளும் எம்பெருமான் அந்தர்யாமியாக உள்ளான் என்ற சிறப்புப்பொருளை விளக்கியமையால் வேற்றுப்பொருள்வைப்பு. அதனைத் திருமால் அந்தர்யாமியாய் இல்லாத அணு இருக்குமாயின் பிரமன் படையாத உருவமும் இருக்கும் என விலக்குவாய்பாட்டால் விலக்கியமை வேற்றுப்பொருள்வைப்பு முன்னவிலக்கு.]

**மாதாவின் நன்முலைப்பால் மாந்தாததால், மறைநான்கு**
**ஓதாது உணர்ந்து உணர்த்தும் உண்மையால், - தாதாக்கள்**
**உள்ளுவது என், ஆருயிர்என்று ஒண்தமிழ்மாறா பரன்என்று**
**உள்ளுவதே உண்மை, உனை.** (541)

இஃது ஏதுவிலக்கு. தாதாக்கள் - பெரியோர்கள். 'உன்னைப் பரன் என்று உள்ளுவதே உண்மை' எனக் கூட்டுக. ஒண்தமிழ் - ஒள்ளிய தமிழ். பரன் - ஸ்ரீமந்நாராயணன். மாந்தாததாலும் உண்மையாலும் என்னும் மூன்றாவதன் ஈற்று உம்மை செய்யுள்விகாரத்தால் தொக்கது. 'ஒண்மையால்' என்றும் பாடம் ஓதி ஒள்ளிய ஞானத்தாலும் என்க.

திணை - வாகை; துறை - தாபதவாகை.

[தாயாருடைய திருமுலைப்பாலை உண்ணாததாலும், நான்குவேதங்களையும் ஓதாது உணர்ந்து பிறருக்கும் உணர்த்தும் ஆற்றலாலும், காரிமாறப்பிரானே! திருவாய்மொழியை அருளிச்செய்த உன்னைப் பெரியோர்கள் ஒவ்வொருவரும் 'எம் அரிய உயிர்' என்று புகழ்வாக நினைக்கிறார்கள். உன்னை மேம்பட்ட தெய்வம் என்று நினைப்பதே உண்மையான நினைப்பாகும் - என்ற இப்பாடலில், மாறனைத் தம்உயிர் என்று நினைப்பதைக் காரணம்காட்டி விலக்கி, அவனைப் பரம்பொருள் என்று கூறவேண்டும் என்று கூறுதற்கண் ஏதுவிலக்கு வந்துள்ளது.]

'இன்னவை' என்பதனால், பிறஅலங்காரங்களுடன் கூடி வருவனவும் உள. அவையும் வந்தவழிக் கண்டுகொள்க. [140]

49-ஆவது முன்னவிலக்கு முற்றும்.

50-ஆவது அபநுதிஅலங்காரம்

அபநுதிஅணி இலக்கணம்

**226. குன்றல்இல் சிறப்பினும் பொருளினும் குணத்தினும்**
**ஒன்றிய உண்மை மறுத்து மற்றொன்றால்**
**ஒருபுகழ் தோன்ற உரைப்பது அபநுதி.** [141]

(எ-ன்) வைத்த முறையானே (87)அபநுதி என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) குறையாத சிறப்பினதும் பொருளினதும் குணத்தினதுமாக ஒரு பொருட்கு ஒன்றிய உண்மைகளை மறுத்து அவற்றிற்கு எதிராய மற்றொன்றால் அப்பொருட்கு உயர்வு தோன்ற உரைப்பது அவநுதி என்னும் அலங்காரமாம் என்றவாறு.

**மெய்த் திரைப்பார்மீதினில் இம்மெல்லியலாள் வேள்கணை தைத்து**
**எய்த்துஇருத்தல் கண்டும் இரங்கிலரால்; - அத்திகிரி**

**அண்ணல் ஆரும் பேர்அருளாளர் அன்று; இவர் வன்-**
**கண்ணர் ஆம் ஆராயுங்கால். (542)**

இது சிறப்பு அபநுதி. இதன்பொருள் உரையிற் கொள்க.
திணை - பெருந்திணைப்பால். துறை - கண்டு கைசோர்தல்.
["உண்மையாகக் கடலால் சூழப்பட்ட உலகில் இம்மெல்லியல்பை உடைய தலைவி மன்மதனுடைய அம்புகள் தைத்ததனால் இளைத்து வருந்தியிருத்தலைக் கண்டும், இவள்மாட்டு இரக்கம் காட்டாத அத்திகிரிப் பெருமான் நிறைந்த பேரருளாளர் என்ற பெயருக்கு ஏற்றவர் அல்லர்; கூர்ந்து நோக்குமிடத்து, இவர் கொடியமனமுடையவர்" என்று தலைவிநிலை கண்ட தோழி கூறும் இக்கூற்றில், அத்திகிரி அருளாளப்பெருமான் தன்னை வேட்ட தலைவிக்கு அருள்செய்யாததனால் வன்கண்ணர் என்று கூறுவதோடு, 'அவன் யாவரும் விரும்பும் பேரழகன்' என்று பெறப்பட வைத்தமை சிறப்புஅபநுதி.]

**அண்டமாய் எண்இறந்த ஆருயிராய் ஆர்உயிர் வாழ்**
**பிண்டமாய்த் தெய்வம்எனப் பேர்உலகம் - கண்டதுஎலாம்**
**தான்ஆகி நின்ற தனிப்பிரமம், வெஃகாவுள்**
**யான் ஆதரித்த இறை. (543)**

இது பொருள்அபநுதி.
பேர் உலகம் - பெருமையை உடைய பெரியோர். ஒழிந்த அகலம் உரையிற் கொள்க.
தெய்வம்எனக் கண்டதுஎல்லாம் தான்ஆகி நின்ற தனிப்பிரமம் என்பது,

'அவரவர் தமதமது அறிவு அறிவு வகைவகை
அவரவர் இறையவர் என அடி அடைவர்கள்
அவரவர் இறையவர் குறைவிலர் இறையவர்
அவரவர் விதிவழி அடைய நின்றனரே' (திருவாய். 5)

என்பதனால் அறிக. துறை - கடவுள்வாழ்த்து.
[திருவெஃகாவுள் என்னால் போற்றப்பெறும் எம்பெருமான், தனிப்பட்ட ஒரு வடிவத்தினுள் அடங்கியிருப்பவன் அல்லன். பலஉலகங்களின் தொகுப்பாகிய அண்டங்களாய், அவற்றில் உறையும் உயிர்களாய், அவ்வுயிர்கள் வாழும் உடல்களாய், பெருமையை உடைய சான்றோர் குறிப்பிடும் தெய்வங்களாய், யாவும் தானேயாய் நிலைபெற்ற ஒப்பற்ற பரம்பொருளாய் அப்பெருமான் உள்ளான் - என்ற இப்பாடலில், இறைவன் ஒரு தனிப்பட்ட வடிவுஉடையவன் அல்லன் என்பதனைக் குறிப்பிட்டு, 'அவன் யாவையும் எவரும் தானாய் உள்ளான்' என்று சிறப்பித்தமை பொருள்அபநுதி.
ஒவ்வொருவரும் தத்தம் அறிவுக்கு எட்டிய வகையில் ஓரோர் தெய்வத்தை வழிபட்டாலும், அத்தெய்வங்களும், எம்பெருமான் அவற்றுள் அந்தர்யாமியாய் இருந்து அவற்றை வழிபடும் அடியவர்களுக்கு அருள்புரிவதனால், குறைவுடையனஅல்ல என்பது திருவாய்மொழி.]

**மாமதுரப்பாகு ஒழுகும் வாய்மையாய் நாவீறர்-**
**தாம் உரைத்த பா தண்தமிழ் அன்று - பூமடந்தை**
**மன்னைப் பரவாத வாதியர்வாய் வஞ்சகச்சொல்-**
**தன்னைச் சுடும் வெந்தழல். (544)**

இது குண அபநுதி. பூமடந்தைமன் - திருமகள் காந்தன்.
திணை - வாகை சார்ந்த புறத்திணை; துறை - பனுவல்வென்றி.
[மிக இனிய வெல்லப்பாகின் சுவையுடையதாய், உண்மையை உரைப்பதாய், மாறன் அருளிய திருவாய்மொழி குளிர்ந்த தமிழ் அன்று; திருமகள் தலைவனாகிய எம்பெருமானை முன்நின்று போற்றாது வாதம்செய்வோர் சொற்களைச் சுட்டுஎரிக்கும் கொடிய

நெருப்பாகும் - என்ற இப்பாடலில், திருவாய்மொழி குளிர்ந்த தமிழ் அன்று என்று மறுப்பதுபோலப் பரசமய வாதியரைச் சுடும் தீ என்று சிறப்பிப்பது குணஅபநுதி.] [141]

மேலதற்குச் சிறப்பு விதி

**227. இரட்டுற மொழிதலும் எய்தற் பாற்றே. [142]**

(எ-ன்) இஃது அவ்வபநுதி சிலேடையினும் விரவிவரும் என்கின்றது.
இதன் பொருள் வெளிப்படை. இரட்டுறமொழிதல் - சிலேடை.

**யாம் இன்புஉறக் கிடையாது என்றால், எழில்மாறர்**
**தாம் மகிழ்மாலைதான் அன்று; - காமவேள்**
**அம்பிற்கு இலக்குஆக்கும் ஆறுஅன்றி, வாழ்நாளை**
**வம்பிற்கு இலக்கு ஆக்குமால். (545)**

இது சிலேடைஅபநுதி. என்னை? இதனுள் ‘மகிழ்மாலை அன்று’ என்பது விரும்பத்தக்க மாலை அன்று எனவும், வகுளமாலிகை அன்று எனவும், ‘வாழ்நாளை வம்பிற்குஇலக்காக்கும்’ என்பது வறிதே கழியும்நாள் ஆக்கும் எனவும், அயலார் கூறும் அலருக்கு இலக்குஆக்கும் எனவும் இரட்டுறக் கொள்ளப்படுதலால் என்று அறிக. இலக்கு ஆக்கும் ஆதலால் விரும்பத்தக்க மாலை அன்று எனக் கூட்டுக.

திணை - பெண்பால்கூற்றுக் கைக்கிளை. துறை - தாமம் பெறாது தளர்ந்து உரைத்தல். ‘மொழிதலும்’ என்ற உம்மையால் இறந்தது தழீஇயதோடும் பிற அலங்காரங்களுடன் கூடி வருவனவும் உள. அவையும் வந்தவழிக் கண்டு-கொள்க.

[“யாம் நுகர்ந்து இன்புறுமாறு கிட்டவில்லையாயின், அழகிய மாறனுடைய மாலை மகிழ்மாலை அன்று; மன்மதனுடைய அம்பிற்கு நம்மை இலக்கு ஆக்குவதோடு நம் வாழ்நாளை வம்பிற்கும் இலக்காக்குகிறது” என்ற இப்பாடலில், மாறனுடைய மாலை மகிழ்மாலை அன்று என்று விலக்குவதோடு, அது நம்மைக் காமன்அம்புக்கு இலக்காக்கி வாழ்நாளை அயலார் வம்பிற்கு இலக்காக்குகின்றது என்று அதனைச் சிறப்பிப்பது, குணஅபநுதியோடு, ‘மகிழ்மாலை அன்று’ ‘வம்பிற்கு இலக்காக்கும்’ என்ற தொடர்கள் சிலேடையாக அமைந்திருத்தலின் சிலேடைஅபநுதி.] [142]

50-ஆவது அபநுதி முற்றும்.

51-ஆவது நிந்தாத்துதிஅலங்காரம்

நிந்தாத்துதிஅணி இலக்கணம்

**228. இகழ்வது போன்ற இயற்கையின் வண்புகழ்**
**நிகழ்தர உரைப்பது நிந்தாத்துதியே. [143]**

(எ-ன்) வைத்தமுறையானே (87) நிந்தாத்துதி என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.
இதன் பொருளும் வெளிப்படை.

[வெளிப்படையாகப் பார்த்தால் இகழ்வதுபோலத் தோன்றினாலும் உள் ஆர்ந்து நோக்கின் குறிப்பால் புகழ்வதாக அமைப்பது நிந்தாத்துதி. நிந்தை - இகழ்தல். துதி - புகழ்தல்.]

**மாயன், அயோத்திவரும் மாயவன்தூதாய்**
**மேய கவிக்கு அரசன் மேல்நாளில் - தாயதுஎல்லாம்**
**முள்அடக்கும் தாள் தாமரைக்கையான் முண்டமுனி**
**உள் அடக்கிக்கொள்ளும் உவர்.** (546)

இது நிந்தாத்துதி. இதனுள், கவிக்கு அரசன் என்றது திருவடி. தாயது - பாய்ந்தது. முண்டமுனி - குறுமுனி. உவர் - கடல். ஒழிந்த அகலம் உரையிற்கொள்க. திணை - வாகையைச் சார்ந்த புறத்திணை. துறை - தூதுவென்றி.

[வியத்தகு செயல்களை உடையவனாய் அயோத்தியில் அவதரித்த சக்கரவர்த்தித் திருமகனுடைய தூதனாய்ப் பொருந்திய குரங்குஅரசனான சிறியதிருவடி அக்காலத்தில் தாண்டிய கடல், முள் பொருந்திய தண்டினை உடைய தாமரை போன்ற கையால் அகத்தியர் ஆசமனம்செய்த சிறு அளவினதாகும் - என்ற இப்பாடலில், அகத்தியர் ஆசமனம்செய்த சிறிதளவு நீரை அநுமன் அரிதின் தாண்டினான் என்று பழிப்பது-போலக் கூறி, அப்பெருந்தவமுனிவன் தன் தவவன்மையால் ஆசமனம்செய்த கடல் முழுதையும் தன் உடல்வலிமை மனவலிமை இவற்றால் அநுமன் தாண்டினான் என்ற புகழ்தல்குறிப்பு அமையக் கூறியமை நிந்தாத்துதி.
வைணவமரபில் கருடாழ்வாரைப் 'பெரிய திருவடி' எனவும், அநுமனைச் 'சிறிய திருவடி' எனவும், இராமபிரானைச் 'சக்கரவர்த்தித் திருமகன்' எனவும் சடாயுவைப் 'பெரிய உடையார்' எனவும் கூறுவது உட்கொளத்தக்கது.]

**அம்பொன் மணிக்கூடத்து ஆழியான் பாண்டவர்க்குத்**
**தம்பம்என வாழ் சகாயன் எனல் - பைம்பொன்னாம்**
**விண்நாடு நூற்றுவர்க்கும் மேதகுசீர் ஐவருக்கு**
**மண்நாடும் ஆக்கினான் வந்து.** (547)

இதுவும் நிந்தாத்துதி. 'பாண்டவர்க்குத் தம்பம்என வாழ் சகாயன்' எனல் - நூற்றுவரால் ஐவர்நிலை சாயாநின்ற காலத்துச் சாயாது தாங்குவதாகி அவர்க்கு ஒருபற்றுக்கோடு ஆகிய துணையாவான் என்ற சொல்லப்படுவது. துறை - கடவுள்வாழ்த்து.

[நாங்கூர்ச் செம்பொன்மணிக்கூடம் என்ற திருக்கோயிலில் உகந்தருளியிருக்கும் சக்கராயுதபாணி ஆகிய எம்பெருமான், பாண்டவர்களுக்குப் பற்றுக்கோடாகிய துணை-வனாகித் துரியோதனன் முதலியோருக்குப் பொன்னுலகும் பாண்டவருக்கு மண்-ணுலகும் வழங்கினான் - என்ற இப்பாடலில், எம்பெருமான் அடியவர்களாகிய பாண்டவருக்கு மண்ணும் பகைவரான துரியோதனாதியருக்குப் பொன்னும் வழங்-கினான் என்று இகழ்வதுபோலக் கூறிப் பாண்டவர் பகைமுழுதும் அழித்து அவர்கள் நிலவுலகை அமைதியாக ஆள வழிவகுத்தருளினான் எனக் குறிப்பால் புகழ்ந்தது நிந்தாத்துதி.] [143]

51-ஆவது நிந்தாத்துதி முற்றும்.

## 52-ஆவது புகழ்வதின் இகழ்தல் அலங்காரம்

### புகழ்வதின் இகழ்தல்அணி இலக்கணம்

**229. மதித்து ஒருபொருளினை வழாது உள்ளுறுத்துத்**
**துதிப்பது போன்று இகழ்வது துதிநிந்தை. [144]**

(எ-ன்) வைத்த முறையானே (87) புகழ்வதின் இகழ்தல் என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று. புகழ்வதின் இகழ்தல் எனினும் துதிநிந்தை எனினும் ஒக்கும்.

(இ-ள்) ஒருபொருளை வெளிப்படையான் வழுவுதல்இன்றாக மதித்துப் புகழ்வது-போலவும், புலவர் உள்ளத்தால் குறித்துக்கொள்ளும்படிக்கு இகழ்ச்சியாகவும் கூறுவது புகழ்வதின் இகழ்வதாம் என்றவாறு.

**செகுத்து அந்தகன்புரத்தே பிலவாழ்நர் செலத் திரளாய்ப்**
**பகுத்து அங்கம் வென்றுஅருள் பாடகத்தாய்! மகவைப் பயந்த**
**முகுத்தம் புகலும்படிக்கு எளிதோ? என் முதன்மைக்கு ஒப்ப**
**வகுத்து எங்கைஎன்று ஒருமங்கையைக் காட்டியும் வாழ்வித்ததே.** (548)

இது - புகழ்வதின் இகழ்தல். செகுத்து - கொன்று. பிலவாழ்நர் - மூலபலப்படை.

(இ-ள்) அந்தகன்புரத்தே பிலவாழ்நர் செலப் படையைத் திரள்திரளாகப் பகுதிப்-படுத்திப் போர் வென்றருள் திருப்பாடகத்துப் பாண்டவர்தூதன் ஆவானே! இப்புதல்வனைப் பெற்ற முகூர்த்தம் எனக்கு அளித்த வாழ்வின் பெருமை சொல்லும்படிக்கு எளியதுஒன்றோ? என்தலைமைக்குப் பொருந்துவதாக என் மேல் வைத்த நினது புத்தியைப் பரத்தமை செய்வித்ததோடு, மங்கைப்பருவத்து ஒருதங்கையையும் எனக்கு உண்டாக்கி வாழ்வித்தது என்றவாறு.

இதனகத்துப் பாட்டுடைத்தலைவன் கிளவித்தலைவன் ஆனதும் காண்க.

பகுதி - பரத்தையிற்பிரிதல்; துறை - புதல்வன்மேல் வைத்து வாயில்மறுத்தல்.

["பாண்டவர்தூதனாகிய எம்பெருமானுடைய திருப்பெயரை உடைய தலைவனே! என்மகனைப் பெற்ற நேரம் எனக்கு ஒருதங்கையையும் வழங்கிவிட்டது!" என்று புகழ்வதுபோலக் குறிப்பால் தலைவனுடைய பரத்தையின்தொடர்பை வெளிப்படுத்-தியது புகழ்வதின் இகழ்தல்.

பொதுவாகப் பாட்டுடைத்தலைவனுடைய ஊரிலே கிளவித்தலைவன் இருப்பதாகக் கூறுவது மரபு. பாடகம் என்ற காஞ்சிப்பகுதியில் உள்ள எம்பெருமானுடைய திருநாமம் பாண்டவர்தூதன் என்பது. அப்பகுதியில் வாழும் கிளவித்தலைவனும் அப்பெரு-மானுடைய திருப்பெயரையே தன் இயற்பெயராகக் கொண்டவன். எனவே, 'பாடகத்-தாய்' எனக் கிளவித்தலைவனையே பாட்டுடைத்தலைவனாகவும் கொண்டுள்ளார் என்பது கருத்து.

'வையைதன், நீர் முற்றி மதில்பொரூஉம் பகைஅல்லால் நேராதார்
போர்முற்றுஒன்று அறியாத புரிசைசூழ் புனல்ஊரன்'(கலி. 67)

என்பதன்கண் பாண்டியனாகிய பாட்டுடைத்தலைவனே கிளவித்தலைவனாகக் கொள்-ளப்பட்டுள்ளான். (தொ. பொ. 83 நச்)

இப்பாடலிலோ பாட்டுடைத்தலைவன் பாண்டவர்தூதனாகிய பாடகத்து எம்பெருமான். அவனை விளித்து இப்பாடற்செய்தியைக் கூற வாய்ப்பு இன்று. அப்பெருமானது திருப்பெயரைத் தன்இயற்பெயராகக் கொண்டவன் இப்பாடலின் கிளவித்தலைவன். எனவே இப்பாடலில், கிளவித்தலைவனே பாட்டுடைத்தலைவனைப் போலக் கூறப்-படுகிறான் என்பதே 'பாட்டுடைத்தலைவன் கிளவித்தலைவன் ஆனது' என்ற உரைத்-தொடரின் விளக்கமாகும்.

தன்னினும் ஆண்டில் இளைய பரத்தையைத் தலைவி தன்தங்கை என்று கூறுவதும், பரத்தையரை எங்கையர் என்று கூறுவதும் மரபு.

'தங்கிய ஒழுக்கத்துக் கிழவனை வணங்கி
எங்கையர்க்கு உரைஎன இரத்தற்கண்ணும்' (தொ. பொ. 147)

என்பது காண்க.] [144]

52-ஆவது புகழ்வதின் இகழ்தல் முற்றும்.

53-ஆவது மாறுபடுபுகழ்நிலை அலங்காரம்

மாறுபடுபுகழ்நிலைஅணி இலக்கணம்

**230. உற்றதோர் பொருளினை மறைத்து உறுபழி அது**
**பெற்றிட மற்றொரு பொருள் புகழ்பெற்றி**
**பொற்புஉடை மாறுபடு புகழ்நிலையே. [145]**

(எ-ன்) வைத்த முறையானே (87) மாறுபடுபுகழ்நிலை அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) கருதிய பொருளினை மறைத்து அது பழி எய்தும்படிக்குப் பிறிதுஒரு பொருளினை வெளிப்படையாகப் புகழும் தன்மை பொலிவினை உடைய மாறுபடுபுகழ்நிலை அலங்காரமாம் என்றவாறு.

**பூரித்து எழுந்த புணர்முலையைப் புல்லிவிடா**
**வாரித் தரளவடநிரைதாம் - நேர்இழாய்**
**மட்டுஆர்பொழில் வண்பரிசார மாதவற்கு ஆள்-**
**பட்டு ஆதரித்தனவோ, பண்டு? (549)**

இது மாறுபடுபுகழ்நிலை.

(இ-ள்) "நேர்இழையாய்! இப்புணர்முலையைத் தழுவி ஒருபொழுதும் விட்டு நீங்காத நித்திலவடங்கள், மேனாள் வண்பரிசார மாதவனிடத்து அன்புவைத்து அடிமைப்பட்டுப் பெறுதற்கு அரிய வரம் பெற்றனவோ?" என்றவாறு. எனவே, "எனக்கு இங்ஙனம் விட்டுநீங்காத முயக்கம் கிடைக்கின்றிலதால், யான் மேல்நாள் அவனிடத்து அன்புவைத்துத் தவம்செய்யாமையால்" எனக் குறிக்கக் கிடந்தமை காண்க.

பகுதி - வரைவுமுடுக்கம்; துறை - புணர்ச்சிபெறாது அழுங்கல்.

[இது தலைவன் தோழியிடம் கூறியது. முத்துவடங்களின் நல்வினையைப் புகழும் முகத்தான், தலைவன் தன் தீவினையைக் குறிப்பால் உணர்த்தியமை மாறுபடுபுகழ்நிலை. திருவண்பரிசாரம் - திருமால் திருப்பதிகளுள் ஒன்று.]

**வாவிப்பூம் பள்ளியின்மேல் வைத்து ஏகி ஒர்கணத்துள்**
**மேவிக் கொணர்ந்த இரை மெய்ச்சேவல் - ஆவி மகிழ்வு**
**உற்று அருத்தி நீங்கா உயர்புகழ்மால் கூடலில்முன்**
**பெற்ற தவம் யாது, எகினப்பேடு? (550)**

இதுவும் மாறுபடுபுகழ்நிலை.

(இ-ள்) "வாவியிடத்து உண்டாய தாமரைப்பூஆய சயனத்தின்கண் பேட்டினை வைத்துப் பிரிந்து ஒருகணத்தின்கண்ணே நீர்ச்சிறைஎய்தி ஆராய்ந்து கொணர்ந்த இரையை உண்மைச்சேவலாகிய அன்னம் தனது மனம் மகிழ்வுற்று அதற்கு அருத்திவிட்டு நீங்காத, உயர்ந்த புகழைஉடைய மாயோன் கூடலின்கண் எகினப்பேடு முன்னாள் செய்த தவம் யாதோ? அறிகிலேன்" என்றவாறு. எனவே, "யான் அதுபோல என்கொழுநரொடும் விட்டு நீங்கா-திருக்கத் தவம்செய்திலேன்" எனக் குறிக்கக் கிடந்தமை காண்க.

பகுதி - பொருட்பிரிதல்; துறை - வரவு தாழ்த்து இரங்கல்.

[இது தலைவி தன் நெஞ்சினுள் நினைத்தது. தன்தேவை அறிந்து உடன் உதவி அருகிலிருக்கும் சேவலோடும் வாழும் அன்னப்பெடையின் நல்வினையைப் புகழும்

முகத்தான், கணவனைப் பிரிந்து வருந்தும் தலைவி தன் தீவினையை நினைந்து வருந்தியமை மாறுபடுபுகழ்நிலை. முதற்பாடல் தலைவன்கூற்று. இப்பாடல் தலைவிகூற்று.] [145]

53-ஆவது மாறுபடுபுகழ்நிலை முற்றும்.

54-ஆவது பரிசங்கைஅலங்காரம்

பரிசங்கைஅணி இலக்கணம்

**231. ஒருதிணைக் கூட்டத்து ஒருபொருள் உயர்த்தும்**
**பிரிநிலையது பீடுஉடைப் பரிசங்கை. [146]**

(எ-ன்) வைத்த முறையானே (87) பரிசங்கை என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) உயர்திணை அஃறிணை என்னும் இரண்டின்கண் ஒருதிணைக்கண் ஒருகூட்டத்து ஒருபொருளினைப் பிரித்து உயர்த்திக்கூறுவது நிலைபேறு உடைய பரிசங்கையாம் என்றவாறு.

**பதிகளின் அதிபதி அரங்கநன்பதியே**
**நதிகளின் அதிபதி பகீரதிநதியே**
**நிதிகளின் அதிபதி சங்கநீள்நிதியே**
**எதிகளின் அதிபதி பூதூர்எதியே.** (551)

இது பரிசங்கை. இதனுள் அதிபதி என்பது இராசா. நிதி - சங்கநிதி, பதுமநிதி, சிந்தாமணி. எதிகள் - சந்நியாசிகள். பூதூர் எதி - எதிராசன். ஏகாரம் தேற்றம்.

பா - அடிமறிமண்டில ஆசிரியப்பா. திணை - பாடாண்; துறை - நகரவாழ்த்து; நதிவாழ்த்து; நிதிவாழ்த்து; 'அமரர்கண் முடியும் அறுவகையானும்' (தொ. பொ. 81) என்பதனான் முனிவனை வாழ்த்தலும் ஆம். வாழ்த்து எல்லாம் பாடாண் ஆதலின் இவ்வண்ணம் கூறப்படும்.

'பீடு உடைப் பரிசங்கை' என்றதனால் தொனியினால் வருவனவும் உள.

**முதிய நான்மறை மொழிமுதல் மாதவனே**
**புதியவாய் இனிமைகூர் புகழ் அவன்புகழே**
**வனிதையாயவள் நறைகமழ் மலர்மகளே**
**புனித மாதவ முனிவன் புகழ்ப்பராங்குசனே**
**மதம் இராமாநுசன் மதமே**
**பதம்எனத் தகுவதும் பரந்தாமம் அதே.** (552)

இது தொனியொடு கூடிய பரிசங்கை. இறுதியில் உம்மையை எங்கும் ஒட்டுக. பா - நேரிசைஆசிரியம். திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து.

[இது சீவைணவர்களின் உள்ளக்குறிப்பை உட்கொண்டு கூறியது ஆதலின் தொனியோடு கூடிய பரிசங்கை எனப்பட்டது. நான்மறைமொழி முதலும், இனிமை கூர் புகழும், வனிதையாயவளும், மாதவமுனிவனும், மதமும், எனப் 'பதம் எனத் தகுவதும்' என்பதன்கண் உள்ள உம்மை எங்கும் விரித்துப் பொருள்கொள்ளற்பாலது.] [146]

54-ஆவது பரிசங்கை முற்றும்.

55-ஆவது காவியலிங்கஅலங்காரம்

காவியலிங்கஅணி இலக்கணம்

**232. வெளிப்படக் கிளந்ததன் வினை வினை விளைபயன்
ஒளித்திட, அவைகுறித்து உறுதொழில் ஒண்குறிப்பு
அளித்திடல் காவியலிங்கம்என்று ஆமே. [147]**

(எ-ன்) வைத்த முறையானே (87) காவியலிங்கம் என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) புலவரால் யாப்பினுள் முதலே வெளிப்படையாகக் கூறப்பட்ட வினையாதொன்று, அவ்வினைக்கு எதிர்ப்பட்டதனால் உண்டான வினையும், அவ்வினையாலாய காரியங்களும் எஞ்சிநிற்க, அக்காரியங்களைக் குறித்து உண்டாகிய தொழில் கேட்டோர் உள்ளுறுத்துக்கொள்வதாக ஒள்ளிய குறிப்பைத் தருவது காவியலிங்கம் என்னும் அலங்காரமாம் என்றவாறு.

காவியம் - கவி. இலிங்கம் - அறிகுறி.

**சேதாம்பல் மலர்த்தடம்சூழ் சேறை மாயோன் சிறைக்கருடன் துணைப்-
புயத்தில் செகத்தைத் தாய
பாதாரவிந்தமலர் பதித்தகாலைப் பணைத்துஎழலும், மனுவெருவிப் பனுவல்
ஆய்ந்த
வேதாவை நோக்கினன்; தன்குருவைப் பார்த்தான், விண்ணவர்கோன்; புகரினை
வீடணனும் பார்த்தான்;
மூதாதையொடும் உணர்த்த உணர்ந்த பின்னர் முத்தரொடும் திருவடிக்கீழ்
முன்னினாரே. (553)**

இது காவியலிங்கம். இதனுள் அவ்வாறு நிகழ்ந்த முறை எங்ஙனேயோ என்னின், நன்று சொன்னாய்! 'சேறை மாயோன் கருடன் துணைப்புயத்தில் பாதாரவிந்தமலர் பதித்தகாலை' என்பதும், 'அக்கருடன் பணைத்து எழலும்' என்பதும் வெளிப்படக் கிளந்த வினை. 'அக்கருடன் சிறகினை அசைத்துச் சண்டவாயுவினை எழுப்ப' என்னும் அவ்வினையால் ஆய வினையும், அச்சண்ட வாயுவும் வடவாக்கினியை எழுப்புதலும், மீட்டும் அவ்வாயுத்தானே சமுத்திரங்களில் சலம் உவட்டுஎடுத்துநிற்கும் நிலையை விட்டு வழிந்து பொங்க எழுப்புதலும் ஆம் மூவகைத்து ஆய வினைவிளைபயன் எஞ்சி, யாப்பினுள் கிளக்கப்படாது ஒளித்துநின்றன. 'அவைகுறித்து உறுதொழில் ஒண்குறிப்பினை அளித்திடலாவன' மனுபிரமனைப் பார்த்தான், விண்ணவர்கோன் குருவினைப் பார்த்தான், வீடணன் புகரினைப் பார்த்தான் என்பனவாம்; என்னை? "அவாந்தரப்பிரளயகாலத்துச் சேடன் நாசியில் தோன்றும் காலாக்கினி உருத்திரன் சொலியா நின்றனனோ? சண்டவாயு எழுந்து பருப்பதம் முதலாயினவற்றைக் கிளையாநின்றதோ? பிரளயம் வழிச் சேராநின்றதோ? என விளங்கவேண்டும்" என்று மூவரும் கணிதம் உணர்ந்தோர் மூவரையும் நோக்கினர் என்னும் ஒள்ளிய குறிப்பினைச் செய்யுள் கேட்டார்க்கு அளிப்பதாம். ஆகையால் அவர்களால் "இது சேடன் நாசியில் தோன்றும் காலாக்கினி உருத்திரனும் அன்று; சண்டவாயுவும் அன்று; அவாந்தரம் பிரளயமும் அன்று" என்று உணர்த்தப்பட்டு உண்மைஅறிந்து, முத்தரொடும் கூடிக் கருடனில் உலாப்-

போதலைக் கண்டு திருவடிகளைத் தொழுதனர் என்றமையால், அவ்வாறு நிகழ்ந்தமை காண்க. குரு - வியாழம். புகர் - சுக்கிரன்.

திணை - வாகை. துறை - கணிவன்முல்லை.

[வெளிப்படை வினை - திருமால் கருடன்மீது ஏறுதல். அதனால் உண்டான வினை - கருடன் சிறகசைத்துச் சூறைக்காற்றை எழுப்புதல். அவ்வினையாலாய பயன் - வடவைத்தீயை எழுப்புதல், கடலைப் பொங்கவைத்தல், மலைகளைப் பெயர்த்தல். அப்பயனால் உண்டான குறிப்பு - 'இடைக்கால ஊழிப் பெருவெள்ள நிகழ்ச்சியோ' என்ற எண்ணம். இவை மூன்றும் பாடலில் குறிக்கப்படவில்லை. அதனை உணர வழி - மநு, இந்திரன், வீடணன் மூவரும் கணிதமுணர்ந்த பிரமன், குரு, சுக்கிரனைப் பார்த்தல். இது பாடலில் உள்ளது.] [147]

55-ஆவது காவியலிங்கம் முற்றும்.

56-ஆவது பரிகரஅலங்காரம்

பரிகரஅணி இலக்கணம்

**233. உரைத்தது போன்று, உறுதொனிப் பலதொடர்மொழி**
**நிரைப்பன இன்றியும், நிபுணர் நுட்பம் எனாஅ**
**ஆங்கு உரைத்ததுமாய், நோக்கு அமைந்து, ஏது**
**நீங்கல்இல் நிலைமொழிச் சங்கையை வருமொழி**
**பாங்குஉறப் பாதுகாத்திடு திடம் பரிகரம். [148]**

(எ-ன்) வைத்த முறையானே (87) பரிகரம் என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) முன்னர் உரைத்த காவியலிங்கத்தின் தொனி போன்று, மிகவும் அருமையுடன் தொனியுடைப் பல அடி தொடர்ந்த பன்மொழி நிரைத்துக் காட்டுவது இன்றியும், பன்மொழி நிரைத்துக்காட்டுவது உளதாயும், கற்று-வல்லோர் நுட்பம் என்று பெயரிட்டு முந்துநூலுள் கூறியதூஉம் இது தானேயாய், நோக்கு என்னும் இலக்கணத்தோடும் பொருந்தி, யாப்பினுள் காரணம் விட்டு-நீங்காத நிலைமொழியுள் உண்டாய சங்கையைக் காரியம் விட்டு நீங்காது வருமொழி அதற்கு உரிமைஎய்தப் பாதுகாக்கும் திடத்தை உடையது பரிகரம் என்னும் அலங்காரமாம் என்றவாறு.

இன்றியும் என்னும் உம்மை எச்சவும்மையாதலால் உளவாயும் என்பதூஉம், ஏது என்பதனால் காரியம் என்பதூஉம் எதிர்மறையாக விரிந்தன. நீங்கலில் என்பது முதல்நிலைத் தீபகமாகக் காரியத்தின் பின்னரும் கொண்டது.

[காவியலிங்கத்தின் குறிப்புப்பொருள் மிகவும் அருமையாக உணரற்பாலது. பரிகரத்தின் குறிப்புப்பொருள் காவியலிங்கத்தின் குறிப்புப்பொருள்போல அருமையாக இருத்தலும் உண்டு; அவ்வளவு அருமையின்றி எளிதின் புலப்படுதலும் உண்டு. இது தண்டியலங்-காரத்தில் கூறப்பட்ட நுட்பஅணியின் பாற்படும். இது மையக்கருத்து ஒன்றனைச் சிறப்பாக உடையதாக இருக்கும். காரணம்பற்றி எழும் ஐயத்தை வருமொழியில் கூறப்-படும் காரியம் நீக்கிவிடும். 'நீங்கல் இல் நிலைமொழிச்சங்கை' எனவும் 'நீங்கல் இல் வருமொழி' எனவும் கொள்க.]

நோக்கு என்பது மாத்திரை முதலாக நிரம்பும் அடிகளால் ஆய தொடை உடையவாம் செய்யுள் நடந்த அடி எத்துணையஆயினும், அவை முடியுங்-

காறும் வெள்ளைமையும் பிள்ளைமையுமின்றி வந்த வாக்கியம் கேட்டோர் மறித்துநோக்கிப் பயன்கொள்வதொரு கருவியாகிய யாப்புக்கால். என்னை?

மாத்திரை முதலா அடிநிலை காறும்
நோக்குதல் காரணம் நோக்கு எனப்படுமே (தொ. பொ. 416)

என்றாராகலின். அதற்குச் செய்யுள்:

முல்லை வைந்நுனை தோன்ற இல்லமொடு
பைங்கால் கொன்றை மென்பிணி அவிழ

என்னும் நெடுந்தொகைப்பாட்டினுள், முல்லை என்பது முதலாகக் கானம் என்பது ஈறாக 'நாற்சொலியலான் மரபுவழிப்பட்டன' ஆயினும், பருவம் காட்டி வற்புறுத்தும் தோழி, 'பருவம் தொடங்கிய துணைகாண்' என்று வற்புறுத்தினாள் என்பது நோக்கிஉணர வைத்தான் எனவும், 'உதுக்காண் தோன்றும் குறும்பொறை நாடன்' என்னும் துணையும் தலைமகனது காதல்மிகுதி கூறி வற்புறுத்தினாள் என்பது நோக்கிஉணர வைத்தான் எனவும், ஒழிந்த அடிநிலை காறும் பிரிந்த காலம் அணித்து எனக்கூறி வற்புறுத்தினாள் என்பது நோக்கிஉணர வைத்தான் எனவும்படும். என்னை? முல்லை என்னாது வைந்நுனை என்றதனால் அவை அரும்பியது அணித்து என்பது பெறப்பட்டது; சின்னாள் கழியின் வைந்நுனை ஆகாது மெல்லென்னுமாகலின். ஒழிந்தவும் இவ்வாறே நோக்கி உணர்க. முழுதும் ஈண்டு உரைப்பின் பெருகும்.

[நோக்குஆவது பலஅடிகளை உடைய செய்யுள்ஒன்றில், பலசெய்திகள் கூறப்பட்டிருப்பினும், அவையாவும் ஒரே மையக்கருத்தை நோக்கி அமைந்தனவாகச் செய்யப்படுதலைக் கூறும் செய்யுள்உறுப்பு. வெள்ளைமை - வெளிப்படையாக இருத்தல். பிள்ளைமை - அறியாத்தன்மை. யாப்புக் கால் - செய்யுள்உறுப்பு.

முல்லை வைந்நுனை தோன்ற இல்லமொடு
பைங்கால் கொன்றை மென்பிணி அவிழ,
இரும்பு திரித்தன்ன மாயிரு மருப்பின்
பரல் அவல் அடைய இரலை தெறிப்ப,
மலர்ந்த ஞாலம் புலம்பு புறக்கொடுப்பக்
கருவி வானம் கதழ்உறை சிதறிக்
கார்செய்தன்றே கவின்பெறு கானம்;
குரங்குஉளைப் பொலிந்த கொய்சுவல் புரவி
நரம்பு ஆர்ப்ப(அ)ன்ன வாங்குவள் பரியப்
பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த
தாதுஉண் பறவை பேதுஉறல் அஞ்சி
மணிநா ஆர்த்த மாண்வினைத் தேரன்,
உதுக்காண் தோன்றும் குறும்பொறை நாடன்,
கறங்குஇசை விழவின் உறந்தைக் குணாஅது
நெடும்பெருங் குன்றத்து அமன்ற காந்தள்
போதுஅவிழ் அலரின் நாறும்
ஆய்தொடி அரிவை! நின்மாண்நலம் படர்ந்தே. (அகநா. - 4)

மாத்திரையும் எழுத்தும் அசைநிலையும் சீரும் முதலாக அடிநிரம்பும்துணையும் நோக்குஉடையனவாகச் செய்தல்வன்மையால் பெறப்படுவது, நோக்கு என்னும் உறுப்பு. ஓரடிக்கண்ணேஅன்றியும் செய்யுள் வந்த அடி எத்துணையாயினும் அவை முடியும்வரை அச்செய்யுளைக் கேட்டார் மீட்டும் அதனை நோக்கிப் பயன்கொள்ளும் கருவியை நோக்குதற்குக் காரணம் என்றான் என்பது. இப்பாட்டின் ஓசை முதலியன எல்லாம் கேட்டார் மீட்டும் தன்னை நோக்கிப் பயன்கொள்ள நிற்கும் நிலைமை தெரிந்துகொள்க.

'முல்லை' என்பது முதலாகக் கானம் என்பது ஈறாக உள்ள ஏழுஅடிகளும், பருவம்-காட்டி வற்புறுத்தும் தோழி 'பருவம் தொடங்கிய அளவேகாண்' என்று வற்புறுத்தினாள் என்பது நோக்கிஉணர வைத்தான் என்பது. 'குரங்கு உளை' தொடங்கி 'நாடன்' என்பது ஈறாக உள்ள 8-13 அடிகளில் தலைமகனது காதல் மிகுதி கூறி வற்புறுத்தினாள் என்பது நோக்கிஉணர வைத்தான் என்பது. எஞ்சிய 14-17 அடிகளில் 'பிரிந்த காலம் அணித்து' எனக்கூறி வற்புறுத்தினாள் என்பது நோக்கி உணரவைத்தான் என்பது. என்னை?
முல்லை என்னாது 'வைந்நுனை' என்றதனால் அவை அரும்பியது அணித்து என்பது பெறப்பட்டது; சின்னாள் கழியின் வைந்நுனையாகாது மெல்லென்னுமாகலின். இல்லமும் கொன்றையும் மெல்லென்ற பிணி அவிழ்ந்தன என்றாள், முல்லைக்கொடி இலை முதலியன கருகியஅளவு அவை மரம் வாடாது முல்லை அரும்பியகாலத்து மலர்ந்-தமையின். இரலைமருப்பினை 'இரும்பு திரித்தன்ன மருப்பு' என்றதூஉம், நீர்-தோய்ந்தும் வெயில் உழந்த வெப்பம் தணிந்தில; இரும்பு முறுக்கிவிட்டவழி வெப்பம் மாறாவிட்டது போல வெம்பாநின்றன இன்னும் என்றவாறு. "பரல் அவல் அடைய இரலை தெறிப்ப' எனவே, பரல்படு குழிதோறும் தெளிந்துநின்ற நீர் புதிது ஆகலான், பலகாலும் நீர்பருகியும் அப்பரல் அவலினது அடைகரையை விடாது இரலை நீர்வேட்கை பற்றித் துள்ளுகின்றன என அதுவும் பருவம் தொடங்கியமை கூறிய-வாறாயிற்று. 'கருவி வானம் கதழ்உறை சிதறி' என்பதூஉம் பலஉறுப்பும் குறைபடாது தொக்குநின்ற மேகம் தனது வீக்கத்திடைக் காற்று எறியப்படுதலின் விரைந்து துளி சிதறின என்று அவற்றையும் புதுமை கூறினாள்; எனவே, இவை எல்லாம் பருவம் தொடங்கி அணித்து என்றமையின் வற்புறுத்துதலுக்கு உதவுவன ஆயின.
'குரங்குஉளைப் பொலிந்த கொய்சுவல் புரவி' என்பது கொய்யாத நெற்றிமயிர் விரிந்தும், கொய்த பிடரிமயிர் பலகாலும் கொய்யவேண்டுதலுமுடைய குதிரை என்றவாறு. எனவே, அதனது உள்ளச்செருக்கு கூறியவாறு. அத்துணைச் செருக்கு-உடைய குதிரை பூட்டின வார்ஒலி விலக்காது தேரில் கட்டிய மணிஒலி விலக்கி வாராநின்றான் தலைமகன், இங்ஙனம் மாட்சிமைப்பட்ட மான்தேரன் ஆதலான் என்றவாறு. அதற்கு என்னை காரணம் எனின் 'துணையொடு வதியும் தாதுஉண பறவை' எனவே, பிரிவு அஞ்சி என்றவாறு. மணிநா ஒலி கேட்பின் வண்டு அஞ்சுமாதலின், அது கேளாமை மணிநாவினை இயங்காமல் யாப்பித்த மாண்வினைத்-தேரன் ஆகி வாராநின்றான் என இவைஎல்லாம் தலைமகளைத் தோழி வற்புறுத்தற்கு ஏது ஆயின. 'கறங்கு இசை ... காந்தள்' எனவே, தெய்வமலை ஆதலான் அதனுள் நெருக்கமாகத் தோன்றின காந்தளைத் தெய்வப்பூ எனக்கூறி அவை போது அவிழ்ந்-தாற்போன்று அவன் புணர்ந்தகாலத்துப் புதுமணம் கமழ்ந்த நின் கைத்தொடிகள் அவை அலராகி விரிந்தகாலத்துப் போன்று வடிவு ஒத்து மணம் குறைபட்ட துணையேகாண், அவன் பிரிந்து சேய்த்து அன்மையின், என இதுவும் வன்புறைக்கே ஏதுவாயிற்று. இவ்வாறே பலவும் நோக்கி உணர்தற்குக் கருவியாகிய செய்யுள்உறுப்பை நோக்கு என்றான். (தொல். பொ. 416 பேரா.)]

பரி என்பது பாதுகாத்தல். கரம் என்பது திடம். எனவே, பாதுகாக்கும் திடத்தை உடையது பரிகரம் என்றாயிற்று. அன்றியும் சங்கையைப் பரிகரிப்பதால் பரிகாரம் என்பதனை விகாரவகையால் பரிகரம் என்றார்எனினும் ஆம்.

['சிட்டரைப் பரிக்கும் தேவதேவை' (குற்றா. தக்கன்-128) என்புழிப் பரித்தல் பாதுகாத்தல் என்னும் பொருளிலும், கரவிசும்பு (திருமால்-11) என்புழி கரம் என்பது திடம் என்னும் பொருளிலும் வருமாறு உணரப்படும். பரிகாரம் - போக்குவது. ஐயத்தைப் போக்குவதாகிய பரிகாரம் என்னும் சொல் பரிகரம் எனக் குறுகவேண்டிய தேவைஏதும் இன்மையின் பரிகரம் என்பதன் இரண்டாம் விளக்கம் பிற்காலத்து ஏடுஎழுதுவோரால் சேர்க்கப்பட்டிருக்கலாம்]

அற்றேல், காவியலிங்கத்தோடு பரிகரத்திற்கு வேற்றுமை யாதோ எனின், காரணம் காரியம் இரண்டும் எச்சமாய், அவற்றால்ஆய தொழில்கள் அவற்றினை அறிவிக்கும் குறியினை உடையது காவியலிங்கம்; அவை இரண்டும் வெளிப்-

படையாயும் அவற்றால்ஆய தொழில்கள் பிறவற்றை அறிவிப்பது பரிகரமாம். இவை தம்முள் வேற்றுமை என்று அறிக.

**அடைக்கலம் என்பவர்க்கு அருள்சீர் அரங்கத்துஎம்மான் ஆடல் உவாவினைக் கடவ, நிழலைக் காய்கண்**
**கடைக்கனல் வேலையை வளைப்ப, கன்னதானக் கடுவளி வெற்பினைக் கிளைப்ப, கரடதான**
**மடைக்கலுழி திசைதிளைப்ப, இலங்கைவேந்தன் வானவர்கோன் மனு புகர் பொன் மறையோர்ச்சார,**
**நடைக்கணிதம் உணர்த்த உணர்ந்தனராய், முந்நீர் நானிலத்தோர்என மனத்துள் நடுக்குஅற்றாரே. (554)**

இது பரிகரம். இதனுள் காரணகாரியம் இரண்டும் வெளிப்படையாயும், பிறிது ஒரு பொருளை அறிவித்தது எங்ஙனேயோ எனின், 'நிழலைக் காய்கண் கடைக்கனல் வேலையை வளைப்ப, கன்னதானக் கடுவளி வெற்பினைக் கிளைப்ப, கரடதான மடைக்கலுழி திசைதிளைப்ப' என்பன மூவகைப்பட்ட காரணகாரியங்கள். அவை பிறபொருளைக் குறிக்கொள்ளும்படி அறிவித்த-வாவன: முன்னம் கூறினபடியே, அவாந்தரப்பிரளயகாலத்துச் சேடன் நாசியின் சுவாசத்தில் தோன்றிய காலாக்கினி உருத்திரன் முதலாய மூன்றும் எழுந்தவோ என விளங்கச் சார்ந்தார் என உட்கொள்ளும்படிக்குப் பிறவற்றை அறிவித்த-வாறு காண்க. வளைப்ப என்பது வளைத்து எரிப்ப என்பதாம். ஒழிந்த அகலம் உரையிற்கொள்க.

ஆதலால் காவியலிங்கம் அருமைத்தொனி உடைத்தாயிற்று என்பது.

[தம்மையே பற்றுக்கோடாகக் கொண்ட அடியவர்களுக்கு அருள்செய்யும் சிறப்பினை உடைய திருவரங்கப்பெருமான் வெற்றிதரும் தன் யானையைச் செலுத்த, தன்-நிழலையே கோபிக்கின்ற அதன் கடைக்கண்ணிலிருந்து புறப்பட்ட தீ கடலைச் சுற்றிக்கொண்டு எரிக்கவும், அதன் காதுகளை அசைப்பதால் ஏற்பட்ட பெருங்காற்று மலைகளை வேரோடு அகழவும், அதன் மதநீர்ப்பெருவெள்ளம் எட்டுத்திசையும் பெருகி ஓடவும், இலங்கை மன்னனாகிய வீடணனும், தேவேந்திரனும், நிலஉலகைக் காக்கும் மனுவும் முறையே சுக்கிரனையும், பிரகற்பதியையும், மறையோர்களையும் சார்ந்து இந்தச் செயல்களின் காரணங்களை அறிய முயலவே, அவர்கள் கணக்கிட்டு, "இஃது அவாந்திரப்பிரளய காலம் அன்று; எம்பெருமான் யானைமீது இவர்ந்து வருதலால் இவை ஏற்பட்டன" என்று கூற உண்மையை உணர்ந்து, கடலால் சூழப்பட்ட உலகிலுள்ள பொதுமக்களைப் போல அவர்களும் தம் உள்ளத்து ஏற்பட்ட நடுக்கம் நீங்கப்பெற்றனர் என்றவாறு.

காரணங்களும் காரியங்களும் - யானையின் கடைக்கண்களிலிருந்து அனல் புறப்பட்டு, கடலை எரிக்கத் தொடங்கியது. காதுகளை விரைவாக அசைப்பதால், பெருங்காற்று வீசியது. மதநீர் பெருக்கெடுத்துத் திசைகளை வெள்ளமிட்டது.

அவாந்திரப்பிரளயம் - பிரமனுடைய ஒருபகல் கழிந்தஅளவில் ஏற்படும் ஊழிப்பெரு-வெள்ளம். இவ்வெள்ளத்தில் பூஉலகம், புவருலகம், சுவருலகம் என்ற மூன்றும் அழியும். மகாப்பிரளயம் - பிரமன்ஆயுள் கழிந்தவுடன் ஏற்படும் பெருவெள்ளம். இதன்கண் கீழ்ஏழு மேல்ஏழு உலகங்களும் அழியும் என்பது.

அவாந்திரப்பிரளயம் வரவே, சேடன் மூக்கிலிருந்து காலாக்கினி உருத்திரனும், பெருங்-காற்றும் புறப்படக் கடல்கள் பொங்கினவோ என வேற்றுக்காரணங்கள் கருதி, வீடணன் முதலியோர் அஞ்சினர். அவை அல்ல; இந்நிகழ்ச்சிகள் எம்பெருமான் வாகனமான யானையின் கண் கனல் உமிழ்தல், அது செவிகளை அசைத்தல், அதன் மதம்

பெருகுதல் என்பனவற்றால் ஏற்பட்டன என உணர்த்த, அச்சம் நீங்கினர் என்பது. காரணகாரியங்களைப் பிறழ உணர்ந்து பின் ஐயம் நீங்குதல் பரிகரம் என்பது.] [148]

நுட்பத்தின் வகைகள்

**234. அதுவே,**
**குறிப்பினும் தொழிலினும் தமிக் குறிக்கொளலாய்**
**வெளிப்படலொடும் விரவியும் வரும் வகைத்தே.** [149]

(எ-ன்) மேலைச் சூத்திரத்துள், நுட்பம் எனாஅ, ஆங்கு உரைத்ததுமாய் நோக்கு அமைந்து என்றார், அவை இவை என்பது உணர்த்துதல் நுதலிற்று. (இ-ள்) அச்சொல்லப்பட்ட பரிகரம் முந்துநூலாசிரியர் 'நுட்பம்' எனப் பகுத்துத் தம்மால் புணர்க்கப்பட்ட நூலகத்து அதற்கு ஒருவர் உள்ளக்குறிப்பினாலும் தொழிலினாலும் குறிப்பாதல் தொழிலாதல் குறிக்கொள்ள வரும் என்றார். அவ்வாறே பல தொடர்மொழி உரையாது நிலைமொழித்தொடர் ஒன்றால் வருமொழித்தொடர் ஒன்றினொடு நோக்கு அமைந்து அவை தமிதமி குறிப்பிற்கொள வருதலோடும் குறிப்பும் வினையும் ஒருசெய்யுளகத்து விரவியும் நின்று உணர்த்தும் கூறுபாடும் உடைத்து என்றவாறு.

[முந்து நூலாசிரியர் - தண்டியார். தம்மால் புணர்க்கப்பட்ட நூல் - தண்டியலங்காரம். குறிப்பினாலும் தொழிலினாலும் தெரிவித்தல்,

தெரிபுவேறு கிளவாது குறிப்பினும் தொழிலினும்
அரிதுஉணர் வினைத்திறம் நுட்ப மாகும் (தண்டி - 64)

என்பது.]

**வடிக்கும் சுடர்இலைவேல் அண்ணலே! கைவறியர் உயிர்**
**பிடிக்கும் பொருட்குப் பிரிவதுஉறீஇ, ஐவர் பேர்அஞர் வென்று**
**இடிக்கும் துணைத்திருமால் இந்தளூர்த் திரை எற்றுகரைத்**
**துடிக்கும் கயலையும் நீரையும் நோக்கினள், சோர்குழலே.** (555)

இது குறிப்பு; என்னை? நீ பொருள்மேல் பிரிவதை யான் உணர்த்த உணர்வுற்றுத் திரை எற்றியகாலத்துக் கரையில் கிடந்து துடிக்கும், நீரைவிட்டு நீங்கிய கெண்டை பிழைக்கும் எனின், தலைவர் நீங்கியகாலத்துத் தனது உயிர் பிழைக்கும் என நோக்கியது எனத் தலைமகள் குறித்த குறிப்பினைக் குறிப்பிற்கொள வந்தது என்று உணர்க. நீ என்பதும் யான் என்பதும் சொல்லெச்சம். கைவறியர் - பொருள் இல்லாதார். உயிர் பிடிக்கும் பொருள் - சீவனைப் பிழைப்பிக்கும் பொருள். ஒழிந்த அகலம் உரையிற்கொள்க.
பகுதி - பொருட்பிரிவு. துறை - பிரிவுகேட்டு அழுங்கல்.

["காய்ச்சி வடிக்கப்பட்ட இலை வடிவமாக அமைந்த ஒளிவீசும் வேலை ஏந்திய தலைவனே! ஏழைகளுக்கு உதவி அவர்கள் உயிர்வாழச் செய்வதற்காக நீ தன்னை விடுத்துப் பொருள்தேடப் பிரியப்போவதனை மனம்கொண்டு, பாண்டவர்ஐவருடைய பெரிய துன்பங்களைப் போக்கி அவர்களுக்கு அறிவுரை கூறும் துணைவனாய் இருந்த திருமால் உகந்தருளியிருக்கும் திருஇந்தளூர்த் திருத்தலத்தில் அலைகளால் மோதப்பட்டுக் கரைக்கு வந்து துடிக்கும் கயல்மீனையும் நீரையும் தலைவி நோக்கினாள்" என்ற தோழிகூற்றில், 'தலைவி நீரை விடுத்த மீன்போல விரைவில் பிரிவால் துடித்து இறப்பாள்' என்ற செய்தி குறிப்பால் பெறப்படுத்தப்பட்டவாறு.]

**பரலாய் வழங்கு மழைநீர் யாவையும் பையுள்எய்த**
**வரலால் வரையைக் குடைகொண்ட மால் வல்லவாழ் இறைவா!**

**குரலாய் வரிவண்டு கிண்டாக் குமுதக்கொழுநனை மெல்-**
**விரலால் விரித்து இளமாம்பொழில் வீசினள், மெல்லியலே. (556)**

இது தொழில்; என்னை? குரல் என்பதோர் இசையைக் காலத்திற்கு ஏற்ப ஆராய்ந்து எழுப்பும் பாட்டை உடைய வண்டு மலர்த்தப்படாத ஆம்பலின் கொழுவிய முகையை மெல்லிய விரலான் மலர்த்தி மாஞ்சோலையினிடத்தே எறிந்தாள் எனவே, ஆம்பல் மலரும் இரவில் மாம்பொழிலின்கண் வருவானாக எனத் தொழிலான் தலைவி இரவுக்குறிக்கு நேர்ந்துஉரைத்தாள் என்பது அறிவித்ததால் என்று அறிக. பையுள் - துன்பம். குரல் - குரல் என்பதோர் இசை. ஒழிந்த அகலம் உரையிற்கொள்க.

பகுதி - இரவுக்குறி; துறை - இரவில் குறிக்கு இடம்கூறல்.

["ஆலங்கட்டியாய் இந்திரனால் ஏவப்பட்ட மேகத்துநீர் பசுக்களும் இடையர்களும் வருந்துமாறு மிகுதலால் கோவர்த்தனமலையைக் குடையாகக் கவித்த திருமாலுடைய திருவல்லவாழ் என்ற திருத்தலத்தில் உள்ள தலைவனே! கொத்தாய்க் கோடுகளை உடைய வண்டுகள் மலர்த்தாத குமுதமலரின் கொழுவிய மொட்டுக்களைத் தன் மெல்லிய விரல்களால் மலர்த்தி மெல்லியலாகிய தலைவி இளைய மாமரங்கள் நிறைந்த சோலையில் நீ காண வீசி எறிந்தாள்" என்ற தோழிகூற்றில், குமுதம் மலரும் இரவில் மாந்தோப்பினை இரவுக்குறியாகக் கொண்டு வருமாறு தலைவி தலைவனுக்குத் தன்தொழிலால் குறிப்பாக உணர்த்தியவாறு பெறப்படும்.]

**காலையில் எழு கதிரவன் குடகடல் புகும்**
**மாலையின் கடைநாளினை வழிப்படுத்தி**
**இடைநாள் இன்றா ஏமுற வருதலும்**
**முதல்நாள் எதிர்கொளும் முழுநிலா முன்றில்**
**சதுமறைப் பொருளால் தமிழ்மறை கொழித்துஉரை**
**மதுவிரி மகிழ்தார் மாறன் வண்குருகூர்**
**கற்பனை கடைப்பிடித்து அற்புடை மகளிர்**
**பற்பலர் புகழ்பொறைப் பைந்தொடி! நமதுஇல்**
**அறம் காவலனை அகற்றுபு**
**புறம்காவலன் ஆக்குதல் புன்மைத்தே. (557)**

இதுவும் பரிகரம். இதனுள், கடைநாள் என்றது இரேவதியை. இடைநாள் இன்றா - துன்பம்உறும் நாள் இல்லையாக. முதல்நாள் - அச்சுவதி. கடைநாளினை வழிப்படுத்தினது - கடத்தினது. எதிர்கொள்ளுதல் - வழிபடுதல். கடை-நாளினைக் கடத்தி இடையும் நாள் இன்றித் தன்னிடத்து இன்பம் உற வருதலும் முதல்நாள் ஊடாது எதிர்கொள்ளும் முழுநிலா எறிக்கும் முன்றில் எனவே, நீயும், பரத்தையர்பலரையும் தோய்ந்து பலநாள் கழிந்து இறுதியில் இல்பரத்தை இடத்தில் தங்கி அவளையும் நீங்கி நின்இல்லின்கண் வந்த இல்லறக்கிழவனைத் துன்புறுத்தி நமது கடைகாவலன் ஆக்காது வாயில் நேர்ந்து அகம்காவலன் ஆக்குவதே நினது பொறையுடைக் கற்பிற்கு உரிய தொழில்; எனது உள்ளக்-குறிப்பு அஃதே என நோக்குறக் கூறினாள் ஆகலின் கூற்றும் குறிப்பும் விரவிய பரிகரம்.

பகுதி - பரத்தையிற்பிரிதல்; துறை - மதிநிலை உரைத்து வாயில் நேர்வித்தல்.

["காலையில் உதிக்கும் சூரியன் மேலைக்கடலில் முழுகும் மாலைநேரத்தில் இரேவதி விண்மீனை விடுத்து நீங்கித் தனக்குத் துன்புறும் நாள் இல்லையாகப் பாதுகாவலைக் கருதி வருதலும், அச்சுவதி விண்மீன் சந்திரனை எதிர்கொண்டு அழைக்கும் முழுமதி நிலவியிருக்கும் மனையின் முன்னிடத்தில், நான்கு வேதங்களின் பொருளை உட்-கொண்டு தமிழ்மறையாகிய திருவாய்மொழியைச் சாரமாக உரைத்த, தேன் வெளிப்-

படும் மகிழம்பூமாலையை அணிந்த மாறனுடைய வளமான குருகூரிலே, இருமுது-குரவரும் பின்னர்க் கணவரும் கற்பித்த செய்திகளை மனங்கொண்டு, இல்லறத்தில் அன்புடைய பெண்கள் பலரும் புகழும்படியான பொறுமையில் சிறந்த, பசியதொடி என்ற வளையல்களை அணிந்த தலைவியே! நம்வீட்டின் இல்லறத்துக்குக் காவலனான நம்தலைவனை உள்ளே நுழையவிடாது அகற்றி வெளியே காவற்காரனைப் போல நிறுத்திவைத்தல் கீழ்மைச்செயலாகும்'' என்ற தோழிகூற்றில், தலைவனுடைய பலதிறப் பரத்தைமையை உளங்கொளாது அவனை நமது அகம்காவலன் ஆக்குதல்வேண்டும் என்று வாயில்வேண்டல் வெளிப்படையாகவும் குறிப்பாகவும் பெறப்படுத்தப்பட்ட பரிகரச்செய்யுள் இது.]

**புன்னைப் பொதும்பர்ப் புதுவதுவாகப் புணர்நாள்**
**உன்னைப் பிரியேம்என உரைத்தார் - என்அப்பன்**
**நாகவரையார் என்றால், நாடுகாத்தல் பொருட்டால்**
**ஏக வரையாரை வெறுத்து என்? (558)**

இதுவும் பரிகரம். என்னை? நாகவரையார் என்றால், பிரியேம் என்றவரும் பிரிவர் என்றதற்குத் தொனி அதனகத்துக் காணப்படும். அஃதாவது நாகத்திற்கு நாக்கு இரட்டை ஆதலின் இவரும் நா இரண்டு கூறுவர் என்று இயற்பழித்-ததாம்.
பகுதி - நாடுகாவல் பிரிதல்; துறை - தலைவி இயற்பழித்து உரைத்தல்.
[''புன்னை மரச்சோலையிலே முதன்முதலில் புதியராக என்னைச் சந்தித்த அன்று 'உன்னைப் பிரியேம்' என்று கூறினார், எம்பெருமானுடைய சேஷசயிலத்தில் வாழும் நம் தலைவர். அவர் பாம்புமலையினர் என்பதனால் பாம்புபோல அவருக்கும் நா இரண்டு ஆயினமையின், முன்னர்க் கூறியதனை விடுத்து இப்போது என்னை விடுத்து நாடு காத்தற்பொருட்டாகப் புறப்பட்டுச் செல்ல வரையறை செய்துகொண்டவரை வெறுப்பதனால் பயன் என்?'' என்று தலைவன் நாடுகாத்தற்பிரிவு பற்றிக் கற்புக்-காலத்துத் தோழியிடம் வருந்தி உரைத்த தலைவி கூற்று இது.]

**காதல்என்று அறிவைக் கவற்று இருள்நிலைமையும்**
**போதுஎனப் புறஇருள் தீதுஇழை நிலைமையும்**
**தூதுசென்று அன்னமே! துதித்து நீ உரைத்தி,**
**மூதுணர்வு எனும் முழுமதியுடன்**
**மாதர்கூர் முகமதி மகிழ் மார்பினர்க்கே. (559)**

இதுவும் பரிகரம். இதனுள், 'போது எனப் புறஇருள் தீது இழை' என்பதனால், 'அறிவைக் கவற்று அகஇருளையும்' எனக் கூட்டி உரைத்துக்கொள்க.
இது பெண்பால்கூற்றுப் பெருந்திணை; துறை - தூது ஒருப்படுத்தல்.
[''அன்னமே! மயர்வற்ற மதிநலன் என்னும் முழுமதியுடன் கண்டார் காதல்கோடற்குக் காரணமான முகமாகிய சந்திரனையும் உடைய மகிழம்பூமாலையை அணிந்த மார்-பினராகிய சடகோபர்க்குக் காதல் என் அறிவை மயக்கும் அகஇருள் நிலைமையையும், பொழுது என்ற பெயரில் இரவில் புறஇருள் எனக்குத் தீங்குசெய் நிலையையும் நீ தூதாகிச் சென்று அவரைப் போற்றி உரைப்பாயாக'' என்று பெருந்திணைத் தலைவி மாறனிடம் அன்னத்தைத் தூதுவிடும் இப்பாடலில், உலகிலுள்ள மற்றையவர் அகவிரு-ளாலும் புறவிருளாலும் துன்புறவும், மாறன் அகஇருளும் புறஇருளும் அற்றவர் ஆதலின் மற்றையவர்களின் நிலையை அவர் அறிந்து உதவ முன்வாரார் என்ற குறிப்புப்பொருள் அமைந்துள்ளமை பரிகரமாம்.]

**தாது இவர் தனிநறை ததும்பு பொற்றாமரை**
**மாது உறை திருமறு மார்பினன் அரங்கனைப்**
**புனல்படிந்து ஈர்ந்தண் பூம்புனல் ஊரன்,**

தனதுஉணர்வு உற அருச்சனைபுரி சால்பினில்,
கருனை முக்கனி பயில் காமர் பால்அடிசில்
பொரு அரு நளபாகத்தவாய்ப் பொலிதரப்
பொற்கலத்து அருத்திய புனிதநன் சேடம்
இல்செறி விருந்தினோடு இருந்து இனிது அருந்தி,
பொலந்துகில் அரைஉடீஇப் புனைமலர் புனைந்து, இம-
சலந்தனில் குழைத்த செஞ்சாந்தமும் புழுகும்
மான்மதக்குழம்பின் மார்பு உற மெழுகிக்
கான்அமர் பஞ்சவாசமும் கவுள்கொண்டு,
உமிழ்தரு காலையில் மாலைவந்து உறுதலும்,
அமிழ்துஎனும் இன்இசைக்கு ஆகரம் ஆகிய
மாடகயாழ் தழீஇ வார்தல் ஆதிய தொழில்
பாடலை மடவரலுடன் பயின்றிடலும்,
ஒன்றிய வேட்கை ஊர்தர எழுந்து, ஒருசிறை
மன்றல் மாதுளமலர் மணம்கொள, மடந்தையும்,
தொண்டை அம் கனியினைத் தூதுளங்கனியில் வைத்து
உண்கஎன்று உறுகிளிக்கு ஊட்டினள் ஆகி,
என்றூழ் நுழையா இருள் மரச்சிறையுள்
பாடு அமை சேக்கைப் பள்ளியுள் ஆக,
ஆடவன் தொடர்வுழித் தொடர்பவர் அயல்எழ,
விடும்சுடர் நாக விழுமணிநாயகக்
கொடும்பூண் மருங்குதாழ் கொம்பரின் நாற்றி,
குரவைஆடலின் கோவலர்க்கு இறைவனைப்
பரவுதற்கு எழுகஎனப் பாங்கரில் செறிய,
கதிர்வளைத் தடக்கையும் கடகத் தடக்கையும்
தழுவலும் பானம் தலைதடுமாற,
வேரி வான்தேன் மெய்உயிர் ஒன்றிய
ஈறுஇல் பேரின்பத்து இன்றியமையா
நாணும் நிறையும் நனிதுறந்தன போல்
பூணும் துகிலும் புறம்போம் ஒழுக்கில்
துணைமுலை முகத்தினும் தோளினும் துயின்றாங்கு
இறந்தவர் பிறந்ததுஒன்றெனத் துயில்நீத்து எழ,
நீத்த நுண்உணர்வு தன்நிலையில் தோன்றலும்,
புனிதம் உற்றனராய்ப் புகுமுகம் புரிதலின்,
குறிப்பின் குறிப்புஉணர் கொள்கையின் கோதாய்!
மறித்து உனக்கு இணை எவர் என வாழ்த்தியதொடும்,
ஊழ்வினையினைக் குறித்து உவப்பின்
வாழிஎன்று உரைத்தது எஞ்ஞான்றும் வாழியவே! (560)

இதுவும் பரிகரம். என்னை? 'ஒன்றிய வேட்கை மாதுளமலர் மணம்கொள' என்றமையானும், 'மடந்தையும் உண்கஎனக் கிளிக்கு ஊட்டினளாகி' என்றமையானும், மாலை வந்துஉறுதலும் மணமகன் புணர்ச்சிமேல் வேட்கையன்ஆகி முதலே அதரபானத்தின்மேல் மனம்வைத்த குறிப்பினை அவள் குறிக்கொள்வதற்கும், அங்ஙனம் குறிக்கொண்ட தலைமகளும் தனக்கும் அதுவே குறிப்பு என்பதனைத் தலைவனும் குறிக்கொள்வதற்கும் கொவ்வைக்கனியினைத்

தூதுளங்கனியினை ஒத்த தனது அதரத்தில் வைத்து 'வருக' என முன்கையில் வரும் கிளிக்கு ஊட்டினமையானும், அன்றியும் என்றூழின் கிரணங்கள் நுழைந்து அறியா இருள்மரக்கா மாலைக்காலம் ஆதலின் மிகவும் இருளு-மாகலின் அவ்விருள் நீங்கப் புணர்ச்சிக்காலத்து மார்பில் பூண் உநீஇ நோம் எனக் கழித்த நாகம் ஈன்ற மாணிக்கநாயகப்பதக்கத்தை நித்திரைக்கு இயற்றிய சயனத்தில் வையாது மருங்கு தாழ்ந்த கொம்பரின் நாற்றி என்றமையானும் உணர்க.

இவர்தல் - பரத்தல். தளித்தல் - துளித்தல். ஈர்ந்தண்பூம்புனல் - மிகவும் குளிர்ந்த பூவோடும் கூடின புனல். தனது உணர்வு உற - தனது ஆன்மஞானம் அரங்கநாதன் திருவடிகளிலே பொருந்த. அருச்சனை புரி சால்பினில் - பூசனை புரியும் சோடசஉபசாரத்தின் அமைதியோடும். கருனை - பொரிக்கறி. முக்கனி - வாழை, பலா, மா எனும் முக்கனி. பொருவரும் - ஒப்பற்றவாகும். இல்செறி விருந்தினோடு இனிது இருந்து அருந்தி - தமரொடும் தினம் நிலைக்களமாகிய அவரோடும் உண்பதோடும், புதுவதாக இல்லின்கண் வரும் விருந்தினொடும் மனம் மகிழ்ந்து அமர்ந்திருந்து இனிதாகத் துய்த்து. இமசலம் - பனிநீர். பஞ்சவாசம் - தக்கோலம், ஏலம், இலவங்கம், சாதிக்காய், கருப்பூரம். உமிழ்தரு-காலை - தம்பர் போட்டகாலை. வார்தல் ஆதிய தொழில் - வார்தல் முதல் பட்டடை ஈறாய தொழில்கள் எட்டின். மாடகயாழ் - முறுக்காணியை உடைய யாழ். ஒன்றிய வேட்கை - இருவர்க்கும் ஒருதன்மைத்தாகிய வேட்கை. ஊர்தர - மிகுதலால். ஈறில் பேரின்பம் - புணருந்தோறும் புணருந்தோறும் தெவிட்டாது புதுவது புதுவதாம் பேரின்பம். நீத்த நுண்உணர்வு தன் நிலையில் தோன்றலும் - புணர்ச்சிக்காலத்து நனவு கனவாக நீங்கின இருவர்அறிவும் பண்டு போல் நனவான காலத்தில். புனிதம் உற்றனராய் - பவித்திரம்பெற நீராடிய பின்னரும். புகுமுகம் புரிதலின் - அப்பவித்திரம் எய்திய பின்னரும் தலைமகன் விரும்பி நோக்கிய நோக்கத்தைத் தலைமகளும் விரும்பி நோக்கி இருந்தகாலத்து. குறிப்பின் குறிப்பு உணர் கொள்கையின் கோதாய் - உனது உள்ளக்குறிப்பால் எனது உள்ளக்குறிப்பினைத் தெளியப்பட்ட விருப்பத்தை உடைய கோதையே. மறித்து உனக்கு இணை எவர் என வாழ்த்தியதொடும் - நினக்கு நீயே இணை என வாழ்த்தியதோடும். ஊழ்வினையினைக் குறித்து உவப்பின் வாழி என்று உரைத்தது எஞ்ஞான்றும் வாழியவே - இறைவனே! நீயும் ஊழ்வினையாகிய தெய்வத்தை வாழ்த்திய வாழ்த்தும் எக்காலத்தும் வாழக்கடவது என்றவாறு. ஒழிந்த அகலம் உரையிற்கொள்க.

கைகோள் - கற்பு. பகுதி - இல்வாழ்க்கை. துறை - புணர்ந்து உடன் நயந்த புரவலன்செய்கையை உணர்ந்து எதிர் பாங்கி உவகையின் வாழ்த்தல்.

[மகரந்தம் பரவிய தேன்துளி நிரம்பிய பொலிவுடைய தாமரையில் வாழும் திருமகள் தங்கி இருக்கின்ற, அழகிய சீவற்சம் என்ற மச்சத்தை உடைய மார்பினனாகிய திருவரங்கப்பெருமானை, மிகவும் குளிர்ந்த பூவோடு, புனலூரன் நீராடித் தனது ஆன்மஞானம் அவ்வெம்பெருமான் திருவடிகளிலே பொருந்தப் பூசனைபுரியும் பதினாறுவகை உபசாரங்களோடும் பொரிக்கறி, வாழை மா பலா என்ற முக்கனிகள் இவற்றோடு கூட விரும்பத்தக்க பால் உணவு ஒப்பற்றவாகும் நளபாகமாகப் பக்குவப்-பட விளங்கப் பொற்கலத்திலே எம்பெருமானுக்கு நிவேதித்த புனிதமாகிய நல்ல மிச்சிலைத் தமரோடும், இல்லத்தில் பணிபுரிவோரோடும் புதியராக இல்லத்துக்கு வந்த விருந்தினரோடும் மனம் மகிழ்ந்து அமர்ந்து இனிதாகத் துய்த்து, பொன்மயமான ஆடையை இடையில் உடுத்து, அணி செய்யும் மலர்களைச் சூடி, பனிநீரில் குழைத்த சிவந்த சந்தனத்தையும் புழுகையும் கத்தூரிக்குழம்போடு மார்பில்பூசி விரும்பத்தக்க தக்கோலம் ஏலம் இலவங்கம் சாதிக்காய் கருப்பூரம் என்ற ஐந்து நறுமணப்-

பொருள்களை வாயிற்கொண்டு வெற்றிலை பாக்குடன் மென்று அவற்றை உமிழும் நேரத்தில் மாலைக்காலம் வந்து அடைந்ததாக, அமுதம் போன்ற இனிய இசைக்கு இருப்பிடமாகிய முறுக்காணியை உடைய யாழினைக் கொண்டு வார்தல், வடித்தல், உந்தல், உறழ்தல், சீருடன் உருட்டல், தெருட்டல், அள்ளல், பட்டடை என்னும் தொழிலை உடைய பாடலைத் தலைவியோடு மிழற்றிய அளவிலே, இருவருக்கும் ஒருதன்மைத்தாகிய வேட்கை மிகுதலால் இருவரும் எழுந்து, ஒருபுறத்து நறுமணம் கமழும் மாதுளமலரின் மணத்தினைத் தலைவன் நுகர, தலைவியும் கொவ்வைக்-கனியினைத் தூதுளங்கனியினை ஒத்த தன்உதட்டில் வைத்து 'வருக' என முன்கையில் வைத்திருந்த கிளிக்கு ஊட்டினளாகித் தலைவனைப் போலத் தனக்கும் அதரபானத்தில் உள்ள விருப்பினைக் குறிப்பால் உணர்த்த, சூரியகிரணம் நுழையாத இருட்சியை உடைய இருள்மரக்காவில் தாம் இன்பம் நுகர அமைக்கப்பட்ட படுக்கையில் அவள் படுத்தாளாகத் தலைவன் அவளைத் தொடர்ந்து சென்றவழி அயலவர் அகல, சோலையின் இருள் நீங்குமாறு மாணிக்கநாயகப்பதக்கத்தைப் பக்கத்தில் தாழ்ந்து காணப்பட்ட மரக்கிளையில் தொங்கவிட்டுக் 'குரவைக்கூத்தாடிய இடையர்தலைவ-னாகிய எம்பெருமானை வழிபடுதற்கு வருவாயாக' என்ற கூறித் தலைவன் தலைவி பக்கம் நெருங்கத் தலைவியின் வளையலணிந்த கைகளும் தலைவனின் கடகம் அணிந்த கைகளும் தழுவ இருவரும் அதரபானம் அருந்த, நறுமணம் கமழும் தேன்போல அதரபானம் சுவைக்க, இருவர் உடல்களும் உயிர்களும் ஒன்றாகக் கலந்து புணருந்தோறும் புணருந்தோறும் தெவிட்டாது புதுவது புதுவதாம் பேரின்பத்தில், நாணும் நிறையும் மிகவும் நீங்கினபோல அணிகலன்களும் ஆடைகளும் நீங்கும் புணர்ச்சிஇன்பத்தில், தலைவன் தலைவியின் இணைமுலைகளிலும் தலைவி தலைவன்-தோள்களிலும் அவசத்தால் உறங்கி, இறந்தவர் மீட்டும் பிறந்தாற்போல உறக்கத்தை விடுத்து எழவே, புணர்ச்சிக்காலத்து நனவு கனவாக நீங்கின இருவர்அறிவும் பண்டு-போல் நனவான காலத்துப் பவித்திரம்பெற நீராடிய பின்னரும், தலைவன் விரும்பி நோக்கிய நோக்கத்தைத் தலைமகளும் விருமபி நோக்கி இருந்த காலத்து, 'உனது உள்ளக்குறிப்பால் எனது உள்ளக்குறிப்பினைத் தெளியப்பட்ட விருப்பத்தை உடைய கோதையே! நினக்கு நீயே நிகர்' என்று தலைவன் வாழ்த்தியதோடு, 'இறைவனே! நீயும் ஊழ்வினையாகிய தெய்வத்தை வாழ்த்திய வாழ்த்தும் எக்காலத்தும் வாழக் கடவது!' எனத் தலைவன்தலைவியரின் இல்வாழ்க்கை கண்டு தோழி வாழ்த்தியவாறு.
இதன்கண் உள்ள குறிப்புப்பொருள் உரையில் விளக்கப்பட்டுள்ளது பரிகரமாம்.] [149]

56-ஆவது பரிகரம் முற்றும்.

## 57-ஆவது உறுசுவைஅலங்காரம்

### உறுசுவைஅணி இலக்கணம்

**235. பண்புடைச் சுவைபல பகர்ந்தவற்றினுள் ஓர்**
**ஒண்சுவையினை மிகுத்து உரைப்பது உறுசுவை. [150]**

(எ-ன்) வைத்த முறையானே (87) உறுசுவை என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) உலகத்துள்ள பல பண்புடை மதுரமாகியவற்றை ஒன்றினுக்கு ஒன்று உயர்வு உடையதாக அடைவே எண்ணி, ஈற்றில் ஒரு முக்கியமான மதுரத்தை, எண்ணிய யாவையினும் மிகுந்த மதுரம் உடைத்து எனக் கூறுவது உறுசுவை என்னும் அலங்காரமாம் என்றவாறு. வடநூலார் சாரம் என்பதும் இது.
[சாரமான பொருளைத் தொடங்கிச் சாரதரத்தை முறையே சொல்லிச் சாரதமத்தில் நிறைவுசெய்வது உறுசுவைஅணியாம்.]

**நால்வகைத்தாய்த் தோற்றம் நயந்தபூந் தேன்சுவையின்,
சால்புஉடைத்தாம் முக்கனியுள் சார்சுவையின், - ஞாலம்எலாம்
மிக்கது எனும் ஆன்பாலுள் வீழ்சுவையின், நாம்விரும்பத்
தக்கது எனும் பஞ்சதாரையினில், - அக்கடல்வாய்த்
தோற்றம்உறும் புத்தேளிர் துப்புரவாம் தெள்அமிர்தின்,
ஏற்றமுறும் இன்சுவைத்தாம் ஈது என்னும் - தேற்றமதாம்,
கற்றவர்கொள் நாவீறன் காரி தருமாறன்
சொற்றமிழ்ப்பா நல்கும் சுவை.** (561)

இதனுள் அவ்வாறு வந்தமை காண்க. இஃது எட்டடியான் வந்த பஃறொடை-வெண்பா.

[கோட்டுப்பூ கொடிப்பூ நீர்ப்பூ நிலப்பூ என்ற நான்குவகையாகத் தோன்றும் பூக்களில் உள்ள தேனின் சுவையைக் காட்டிலும், நன்கு முதிர்ந்து சுவைநிரம்பிய வாழைமாபலா என்ற முக்கனியுள் பொருந்திய சுவையைக் காட்டிலும், உலகத்தார் எல்லாரும் மிகுசுவைத்து என்று கூறும் பசுப்பாலில் பொருந்திய சுவையைக் காட்டிலும், நாம் விரும்பத்தக்கது என்று போற்றப்படும் பஞ்சாமிர்தத்தைக் காட்டிலும், பாற்கடலில் தோன்றுகின்ற தேவர்களுடைய நுகர்பொருளாகிய தெளிந்த அமுதத்தைக் காட்டிலும், மேம்பட்ட இனிய சுவையை இஃது உடைத்து என்னும் தெளிவினையுடையது, உண்மைநூல்களைக் கற்றவர்கள் வழிபடும் நாவீறன் எனப்படும் காரியார்மகனான மாறன் அருளிய, வேதத்தைத் தமிழால் சொல்லிய திருவாய்மொழி வழங்கும் அருஞ்சுவை - என முறையே சார-சாரதர-சாரதமமான செய்திகளை நிரலே எடுத்துக் கூறுவது உறுசுவை. சொல் - வேதம். (தொ. சொ. 58 தெய்.)
இது நான்கு விகற்பத்தான் வந்த நேரிசை எட்டடிப் பஃறொடைவெண்பா. பொதுவாகப் பஃறொடைவெண்பாவுக்கு உயர்எல்லை ஏழடியே என்ப. மாறன்பாப்பாவினத்திலும் சிதம்பரச்செய்யுட்கோவையிலும் ஏழடியே பஃறொடைவெண்பாவுக்கு உயர்எல்லை-யாக உள்ளது.
'நெடுவெண்பாட்டே முந்நாலடித்தே' (தொ. பொ. 470) என்ற தொல்காப்பிய நூற்பா-விற்கு மூன்றும் நான்குமாகிய ஏழடியே பேரெல்லை என்று உரைகூறுவாரும் உளர். இப்பாடல் எட்டடிப் பஃறொடைவெண்பாவாய் வந்துள்ளமை குறித்து உணரத்தக்கது.] [150]

57-ஆவது உறுசுவை முற்றும்.

## 58-ஆவது விநோத்திஅலங்காரம்

### விநோத்திஅணி இலக்கணம்

**236. முதன்மையதாம் ஒருமுக்கியம் பிறிதுஒரு
திதம்உறு முக்கியத்துடன் சேராதுஎனின்
விதம்உற முக்கியம்அன்று எனல் விநோத்தி.** [151]

(எ-ன்) வைத்தமுறையானே (87) விநோத்தி என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) யாதாயினும் தலைமையதுஆம் ஒருமுக்கியப்பொருள் உண்மையாகிய பிறிதுஒரு முக்கியப்பொருளோடும் பொருந்தாதுஎனின், முக்கியம்அன்று என்று வேறுபடுத்திச் சொல்லுவது விநோத்தி என்னும் அலங்காரமாம் என்றவாறு.

**சொல்லால் பொருளால் சுவைபெற்ற அலங்காரம்**
**எல்லாம் இழுக்கின்று இயன்றாலும் - புல்லாணி**
**மன் இலங்கும் பேரூர் வளம்பரவாப் பாவினையே**
**நன்னிலம் கைக்கொள்ளா நயந்து.** (562)

இது விநோத்தி. நன்னிலம் - நல்லபூமியில் உள்ள பெரியோர். சுவைபெறுதல் - இனிமை உடையது ஆதல். இழுக்கின்றி இயன்றாலும் என்பது வழுவின்றி நடந்தாலும் என்றவாறு. கைக்கொள்ளா - அதனை ஒரு பொருளாகக் கொள்ளா. புல்லாணிமன் - தெய்வச்சிலைப்பெருமாள். பேரூர் - பரமபதம்.

சொல்லினாலும் பொருளினாலும் இனிமை உடைத்தாய் எப்பெற்றிப்பட்ட அலங்காரங்களும் இழுக்குதல்இன்றி நடைபெற்ற யாப்பு எனினும், அதுவும் பரமபதத்தையே வாழ்த்தும் யாப்புஎனின் கைக்கொள்ளுவதுவே அன்றிப் பிறிது ஒரு பொருளை வாழ்த்தினகாலத்துப் பெரியோர் அதனைக் கைக்கொள்ளார் என முடிக்க.

மெய்ப்பொருளைப் பரவுவார் இவ்வுலகில் பிறப்பதும்இன்றி வீட்டுஇன்பம் எய்துவர், பிறபொருளைப் பாடுவோர் இவ்வுலகில் பிறந்தும் இறந்தும் உழலும் நிலையாமையை எய்துவர் என்பது இதன்பயன்.

திணை - பொதுவியல்; துறை - பொருள்மொழிக்காஞ்சி.

[சொல்பொருள்அணிகள் நிறைந்த பாடல் - முக்கியப்பொருள்; பரமபதத்தை வாழ்த்துதல் - மிக முக்கியப்பொருள். பரமபதத்தை வாழ்த்தாத சொல்பொருள்அணிகளில் சிறந்த பாடல்கள் சிறப்புற்று விளங்கமாட்டா எனக் கூறுவது விநோத்தி.] [151]

58-ஆவது விநோத்தி முற்றும்.

## 59-ஆவது சமுச்சயஅலங்காரம்

### சமுச்சயஅணி இலக்கணம்

**237. ஒன்றினுக்கு இன்பமும் துன்பமும் பலபல**
**ஒன்றியவாக உரைப்பதும் சமுச்சயம். [152]**

(எ-ன்) வைத்தமுறையானே (87) சமுச்சயம் என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஒருபொருட்கு இன்பமாதல் துன்பமாதல் உற்றதை ஒன்று ஒன்றையே கூறாது பலவாகக் கூறுவதும் சமுச்சயமாம் என்றவாறு.

**கடிது மலர்ப்பாணம் கடிது அதனின் தென்றல்;**
**கொடிதுமதி; வேயும் கொடிதால்; - படிதழைக்கத்**
**தோற்றியபா மாறன் துடரியில் மான் இன்உயிரைப்**
**போற்றுவது ஆர்? மன்னா! புகல்.** (563)

இதனுள் துன்பம்செய்வது ஒன்றையே கூறாது பலவாகவே திரட்டிக் கூறியவாறு காண்க. இதன்பொருள் உரையிற்கொள்க.

பகுதி - பொருட்பிரிவு; துறை - ஆற்றாமை கூறல்.

["தலைவனே! இவ்வுலகம் வாழ்வு பெற அவதரித்த திருவாய்மொழியை அருளிய மாறனுக்கு உரிய துடரிமலையிலிருக்கும் இத்தலைவியை நீ பிரிந்தால், மன்மதனுடைய அம்பு விரைந்து அவளைத் தாக்கும்; அதனைவிட விரைந்து தென்றல் தாக்கும்;

சந்திரனும் கொடிதாய்த் துன்புறுத்தும்; வேய்ங்குழல் ஓசையும் கொடிதாய்த் தாக்கும். ஆதலின் இவளுடைய இனிய உயிரை யாவர் பாதுகாத்தல் இயலும் என்று கூறுவாயாக" என்னும் இப்பாடலில், கொடிய பொருளாகிய மன்மதன்அம்பினை மாத்திரம் கூறாது அதனுடன் கொடியனவாகிய தென்றல், மதி, வேய்ங்குழல் என்பனவற்றையும் கூறியது சமுச்சயமாம்.]

மேல் உரைப்பதும் சமுச்சயம் என்ற உம்மையால் இன்பமும் துன்பமும் இருவயின் பிறந்தனவாகக் கூறுவனவும் சமுச்சயமாம் என்றவாறு.

**காரி தருமாறன் காசினிமீதே உதிப்ப,**
**ஆரியர் மெய்பூரித்து அகம்மகிழ்ந்து - பேரின்பம்**
**உள்ளத் துடிக்கும், உறுவலத்தோள்; வாதியர்மெய்**
**துள்ளத் துடித்த, இடத்தோள். (564)**

இஃது இன்பமும் துன்பமும் இருவயின் பலவாய்ப் பிறந்த சமுச்சயம்.
திணை - பாடாண்; துறை - அறுமுறை வாழ்த்தினுள் அடங்கும்.

[காரியார்மகனாகிய மாறன் பூமியில் அவதாரம் செய்யவே, வைதிகச்சான்றோர்கள்-உடல் மகிழ்ச்சியால் பருக்க மனம் மகிழ்ந்து பேரின்பத்தை நினைக்க, அவர்களுடைய வலத்தோள்கள் நன்னிமித்தமாகத் துடித்தன. வேற்றுச்சமய வாதமிடுவோர்உடல் துய-ரத்தால் பெரிதும் அசைய அவர்களுடைய இடத்தோள்கள் தீநிமித்தமாகத் துடித்தன - என்ற இப்பாடலுள் இருவயின் இன்பமும் துன்பமும் கூறியமை சமுச்சயம்.]

**ஆசுரிதர் கோத்திரத்துள் ஆதிபனால் ஆய்ந்த மதம்**
**தேசுஉறலால், ஏகதண்டர் செப்புமதம் - பாசுபதர்**
**வல்வாய்மதம் அருகர் வாய்மதம் வேதாந்திமதம்**
**எல்லாம் ஒளி மங்கின. (565)**

இதுவும் சமுச்சயம். திணை - வாகை. துறை - (சமயவெற்றி). இதன் பொருள் உரையிற்கொள்க.

[ஆசுரிதர்கோத்திரத்துள் அவதரித்த தலைவனாகிய இராமாநுசருடைய திருஅவதாரத்-தால் நாதமுனிகள் முதலானோர் ஆராய்ந்து நிலைநிறுத்திய விசிட்டாத்துவைத வைணவமதம் விளக்கமுற்றதால், ஒருகோல் துறவியர்மதம், சிவபெருமானைப் பரம்பொருளாகக் கொள்ளும் பாசுபதர் தம் வலிய வாயினால் புகழ்ந்து கூறும் மதம், அருகர் போற்றும் சைனமதம், வேதாந்திகளுடைய மதம் முதலிய யாவும் தம்ஒளியை இழந்தன - என்ற இப்பாடலில் தேசுஉறுதல் ஓரிடத்தும் தேசு கெடுதல் பல இடத்தும் கூறப்பெற்றிருத்தல் சமுச்சயமாம்.]

இன்னும், அவ்விலேசானே இன்பமாதல் துன்பமாதல் ஒருவர்பால் இருவயின் தோன்றும் இரண்டாம் சமுச்சயமும் உண்டு.

**உத்தமப் பேரின்பம் உறுத்தும் தமிழ்மறைப்பா**
**வித்தகத்தால் தந்த விதிநினைந்து - முத்தி**
**அளிக்கும் மகிழ்மாறன் அருள்முகத்தைக் கண்டு**
**களிக்கும் மனம் போலவும் என்கண். (566)**

இஃது இரண்டாம் சமுச்சயம். இதன் பொருள் உரையிற்கொள்க.
திணை - பாடாண்; துறை - அறுமுறை வாழ்த்தினுள் அடங்கும்.

["மேம்பட்ட பேரின்பத்தை அறிவிக்கும் தமிழ்வேதமாகிய திருவாய்மொழிப் பாடலைத் தம் பேராற்றலால் எம்பெருமான் தன் வாயிலாக அருளிய திறத்தை மனம்கொண்டு நம்மனோர்க்கு வீடுபேற்றை நல்கும் மகிழம்பூ அணிந்த மாறனுடைய

அருள்சுரக்கும் முகத்தைக் கண்டு மகிழும் என்மனம் போல என்கண்களும் களிக்கின்றன" என்ற இப்பாடலில், ஒருபொருள் உறும் இன்பத்தை மற்ற பொருளும் அடைவதாகக் கூறுதல் சமுச்சயம்.

மாறன் திருவாய்மொழியை எம்பெருமான் தம் உள்ளத்தில் அமர்ந்து தம் வாயிலாக உலகுக்கு அருளினான் என்றே குறிப்பிட்டுள்ளார். இதனை,

ஆம் முதல்வன் இவன்என்று தற்றேற்றி என்
நாமுதல் வந்து புகுந்து நல்இன்கவி
தூமுதல் பத்தர்க்குத் தான் தன்னைச் சொன்ன என்
வாய்முதல் அப்பனை என்று மறப்பனோ (நாலா. 3427)

முதலிய திருவாய்மொழிப்பாடல்களால் உணரலாம்.] [152]

59-ஆவது சமுச்சயம் முற்றும்.

## 60-ஆவது உதாத்தஅலங்காரம்

### உதாத்தஅணி இலக்கணம்

**238. உயர்வுஅற உயர்ந்ததை வியந்து உரைக்குமதே**
**மயர்வுஅற உதாத்தம்என வகுத்தனரே. [153]**

(எ-ன்) வைத்தமுறையானே (87) உதாத்தம் என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) யாதாயினும் உலகில் தனக்கு இணைஇல்லாது உயர்ந்த பொருளை உயர்த்தி உரைப்பதே மயக்கம்அற உதாத்தம் என்னும் அலங்காரமாம் என்று கூறுவர் புலவர் என்றவாறு.

'உயர்ந்ததை வியந்து உரைப்பதே' எனத் தேற்றேகாரம் புணர்த்தமையான், உயராததை வியந்து உரைப்பது அதிசயமாம்எனக் கொள்க.

[அதிசயம் என்பது உயர்வுநவிற்சியணி எனவும், உதாத்தம் என்பது வீறுகோள் அணி எனவும் கூறப்படும். வீறு - வேறு ஒன்றற்கு இல்லாத அழகு.] [153]

### உதாத்தஅணியின் வகைகள்

**239. அதுவே,**
**பொருள் கொடை காந்தி பொற்புஉறு கற்பே**
**பெருவிறல் செல்வம் என்பவற்றொடும் பெருகும். [154]**

(எ-ன்) இஃது அவ்வலங்காரத்தை வகுத்து விரித்து உணர்த்துதல் நுதலிற்று.
இதன்பொருள் உரையிற்கொள்க.

[உதாத்தஅணி பொருள், கொடை, காந்தி, கற்பு, பெருவிறல், செல்வம் என்ற ஆறுபொருள் பற்றி வரும். எனவே, இவ்வணியின் வகைகள் ஆறு எனலாம்.] [154]

### பொருள்உதாத்தம்

**240. அவற்றுள்,**
**பொருளினை மிகுத்து உரைப்பது பொருள்மிகுதி. [155]**

(எ-ன்) பொருள்மிகுதியை உணர்த்துதல் நுதலிற்று. உதாத்தம் எனினும் மிகுதி எனினும் ஒக்கும்.
இதன்பொருள் உரையிற்கொள்க.

ஏமுற மன்உயிர் எதுபெறற்கு உரித்தோ?
தாமரைப் பொகுட்டின் சதுமுகன் இயற்றும்
நால்வகைத் தோற்றத்து எழுபிறப்பு அவற்றுள்
சால்புறு தக்கன தகாதன அறியா
ஓர்அறிவு உடைப்புல் முதலிய உயிர் அல,
ஈரறிவு உடை நந்துஇனம் முதலிய அல,
மூன்று அறிவுஉடைச் சிதல்முதலிய உயிர் அல,
நான்கு அறிவுஉடை நண்டுஆதிய பிறப்பு அல,
ஐஅறிவுஉடை மா ஆதியதாம் அல
மெய்அறிவு எனவே விதிவிலக்கு அறிவான்
ஆறுஅறிவு உடைத்தாம் அரும்பெறல் மக்கட்
பேறுஅது கிடைத்த பெருமையில் சிறந்தும்,
பிரமனைப் பயந்த பிரமம்என்று அறிந்தும்,
அரன்இரப்பு ஒழித்த அடிகள்என்று அறிந்தும்,
ஏவலில் படைத்து அடும் இருவருள் அன்றியும்
காவல்இங்கு எனதுஎனக் கருணையுற்று எடுப்பான்
அனந்த யோனியின் அணுத்தொறும் அணுவாய்
நனந்தலை வியாத்தி நயந்ததை அறிந்தும்,
மூலம்என்று உரைத்த மொழி அடங்காமுன் அத்
தோல்இடர் கடிந்த சோதிஎன்று அறிந்தும்,
பொருள்உரை தனாது புன்பெயரெனப் புவிமேல்
மருள்உரை நடாத்திய மாழையன் மகவுடன்
இங்குளனோ என்று எற்றிய தூணத்து
அங்கு உளனாகி அடுந்திறல் அறிந்தும்,
மாவலி முன்பு ஒருமாண் குறளாகி மண்
மூஅடி வாங்கி முழுதுஉலகையும் இரு
சேவடியில் தாய்ச் சேண்உற நிமிர்ந்து
குறைதருகஎன அவன்கொற்றம் வாங்கிச்
சிறையினில் இருத்திய செம்மல்என்று அறிந்தும்,
தீதுஅறு முனிவனின் திருநகர்ச் செல்வுழிக்
கோதமன் மானினி கொண்ட கற்படிவம்
ஆதியில் பொலங்கழல் அணிபெற வனைகழல்-
போதின் நன்பூழியில் போக்கியது அறிந்தும்,
இருபது கரத்தினும் ஏதி பற்றினனாய்ப்
பொருவலி நிருதனைப் பொருது கொன்றதன்பின்
தெய்வக் கற்புஉடைத் திருவொடும் பரதன் நன்று
உய்தற்கு எய்திய ஒருவன்என்று அறிந்தும்,
இன்னாச் சொல்கிளைத்து இளிவரல் எய்தத்
தன் ஆண்தகைமை தலைப்படப் பழித்த
மன்னாகிய சிசுபாலன் முடியினைக்
கொன் ஆழியினால் கொய்து அவன்ஆன்மா

அந்நாள் சரணினுள் புகக்கொளல் அறிந்தும்,
பரவு பொன்தாளில் பார்த்தன் அன்று அணிமலர்
அரன் முடிமேல் கொண்டு அணிந்ததை அறிந்தும்,
தென்அரங்கேசன் புகழினைச் செம்மையின்
உன்னினர் ஆகி ஊழ்வினை ஒரீஇ
உளம் நெகநெகப் புறம்பு உரோமம் பொடிப்ப
அளிநன் கண்ணீர் அடிக்கடித் ததும்பக்
கருமணி வண்ணம் காட்சி செய்தனராய்
எட்டெழுத்து அதனை இனிமையின் ஓதிச்
சிட்டர்தம் சேவடி சென்னியில் சேர்த்தி
நமன்தமர் முடிமேல் நடித்து அடிபெயர்த்துத்
தமம் செறி நிரயம்தனைப் பாழ்ப்படுத்தி
மதன விகாரம் மருங்குஅறக் களைந்து
வெகுளியும் மயக்கமும் வேர்அற வீழ்த்திட்டு
ஆரா இன்பம் அமைவர மாந்தித்
தீராப் பிறவித் திரையினை நீந்தி
ஏனைய உயிர்கட்கு எல்லாம் இரங்கும்
ஞானம் நல்துணையா நன்னெறி உறாது
பிறிதுஒரு தெய்வம் பேணும்
நெறியினர் புன்னெறி நினையுங்காலே. (567)

இது பொருள்மிகுதி. இதன் பொருள் உரையுள் கொண்டு உணர்க. ஈண்டு உரைப்பின் பெருகும். நம்பெருமான் மும்மணிக்கோவை விரித்துரையுள் விளங்கும். துறை - கடவுள்வாழ்த்து.

[எம்பெருமானுடைய உந்தியந்தாமரையின் நடுஇடத்தில் தோன்றிய பிரமன் பருப்பொருட்படைப்பாக இயற்றிய அண்டசம், சுவேதசம், உற்பிசம், சராயுசம் என்ற நால்வகை உயிர்த்தோற்றத்தை உடைய தேவர் மக்கள் விலங்கு பறவை ஊர்வன நீர்வாழ்வன தாவரம் என்ற எழுவகைப்பிறப்பினுள், 'மேம்பட்டனவாகிய தக்கன இவை, தகாதன இவை' என்று பகுத்துஉணர இயலாதனவாகிய ஓரறிவுடைய புல் முதலிய உயிர்போல் அல்லாமல், ஈரறிவுடைய சங்கு முதலியனபோல் அல்லாமல், மூன்றறிவுடைய கறையான் முதலியனபோல் அல்லாமல், நான்கு அறிவுடைய நண்டு முதலியனபோல் அல்லாமல், ஐந்து அறிவுடைய விலங்குகள் முதலியனபோல் அல்லாமல், உண்மைஅறிவாகிய விதித்தனவற்றையும் விலக்கியனவற்றையும் அறியும் பொருட்டு ஆறாவது அறிவினைஉடைய கிட்டுதற்கரிய மக்கட்பிறவி கிட்டிய பெருமையில் சிறந்து இருந்தும், எம்பெருமான் பிரமனைப் படைத்த பரம்பொருள் என்பதனை அறிந்தும், உருத்திரனுடைய பிச்சைஎடுத்தலைப் போக்கிய மேம்பட்டவன் என்பதனை அறிந்தும், ஏனைய பிரமன் உருத்திரன் இவர்களுக்குள் அந்தராத்மாவாய் இருந்து தன்ஆணையாலே இவர்களைக்கொண்டு படைத்தல்தொழிலையும் அழித்தல்-தொழிலையும் செய்து காத்தல் தொழிலைத் தானே கருணையால் செய்யும் எம்பெருமான் எல்லாப் பிறப்புக்களிலும் உடல்மிசை உயிரெனக் கரந்து எங்கும் பரந்து விரும்பியிருப்பதனை அறிந்தும், அவன் 'ஆதிமூலமே' என்று கசேந்திரன் அழைத்த ஒலி அடங்கும் முன்னமே அந்த யானையின் இடரைப் போக்கிய சுயம்பிரகாசன் என்பதனை அறிந்தும், தன்னுடைய அற்பமான பெயரே மேம்பட்ட மந்திரமாகும் என்று உலகில் மயக்கந்தரும் சொற்களைச் செயற்படுத்திய இரணியன் தன்மகனான பிரகலாதனிடம் உன் திருமால் இங்கு உளானோ? என்ற கூறித் தட்டிய தூணிலிருந்து புறப்பட்டு அவ்விரணியனை எம்பெருமான் அழித்த ஆற்றலை அறிந்தும்,

மகாபலிச்சக்கரவர்த்திமுன்னர் ஒரு பிரமசாரியான குள்ளன்வடிவு எடுத்து மூவடிமண் இரந்து பெற்று, வானளாவி வளர்ந்து, உலகங்களைஎல்லாம் இரண்டு சிவந்தபாதங்களால் அளந்து, 'மூன்றாவது அடிக்கு உரியது தருக' என்று அவனுடைய ஆட்சியைக் கைப்பற்றி அவனைச் சிறைவைத்த மேம்பாடுடையவன் என்பதனை அறிந்தும், குற்றமற்ற விசுவாமித்திர முனிவனோடு திருமகளாம் சானகி இருந்த மிதிலைக்குச் சென்றபோது கோதமன்மனைவி பெற்றிருந்த கருங்கல் வடிவினைத் தன் திருமணத்துக்கு முன்பே பொற்கழல் அணிந்த திருவடித் தாமரைகளின் புழுதியால் நீக்கி அவளுக்குப் பழைய வடிவினை அளித்த செய்தியை அறிந்தும், போரிடும் ஆற்றலால் இருபதுகைகளிலும் படைக்கலன்களை ஏந்திப் போரிட்ட இராவணனாகிய அரக்கனைப் போரிட்டுக் கொன்றபிறகு தெய்வக்கற்புடைய சானகியோடு பரதன் உயிர்பிழைப்பதற்கு உரிய காலத்தில் அவனை வந்து அடைந்த ஒப்பற்றவன் எம்பெருமான் என்பதனை அறிந்தும், தனக்கு இழிவு தோன்றும்படியாகக் கொடிய வசைச்சொற்களைப் பேசித் தன்ஆண்மையைப் பழித்துரைத்த அரசனாகிய சிசுபாலனுடைய தலையைத் தன்னுடைய அச்சம்தரும் சக்கராயுதத்தால் தடிந்து அவனுடைய ஆன்மா தன்திருவடிகளைச் சேருமாறு செய்த செயலை அறிந்தும், எல்லோரும் போற்றும் தன் திருவடிகளில் பாரதயுத்தத்தின்போது ஒருநாள் அருச்சுனன் இட்ட மலர்கள் அரனுடைய தலைமீது பொருந்தியிருந்த செயலை அறிந்தும், அழகிய அரங்கேசனுடைய புகழினை முறையாக விருப்புற்று நினைத்து, ஊழ்வினையிலிருந்து நீங்கி மனம் உருக வெளியே மயிர்க்கூச்செறிய அவன்கருணையை நினைப்பதால் கண்ணீர் அடிக்கடிக் கண்களில் நிரம்ப அவனுடைய கருமணி போன்ற நிறத்தைத் தியானத்தில் நோக்கினராகி, அவனுடைய திருவெட்டெழுத்தை இனிமையாக ஓதி, அவன்அடியார்களுடைய திருவடிகளைத் தலையால் வணங்கிக் காலனுடைய ஏவலர் தலைகளின்மேல் அடிவைத்துக் கூத்தாடி, இருள்செறிந்த நரகத்திற்குச் செல்வார் இன்மையின் அதனைப் பாழுறச்செய்து, மன்மதனால் ஏற்படும் உள்ள உடல் வேறுபாடுகளை அடியோடு நீக்கி, வெகுளியையும் மயக்கத்தையும் வேரோடு போக்கித் திருப்தி தாராத பேரின்பத்தை மனம் பொருந்த நுகர்ந்து, என்றும் அழியாத பிறவிக்கடலை நீந்தி, ஏனைய உயிர்களுக்கு எல்லாம் இரக்கம் கொள்ளும் ஞானத்தை நல்ல துணையாகப் பெற்று நன்னெறியே வாழாமல், வேறொரு தெய்வத்தைப் பரம்பொருளாகக் கருதி வழிபடும் வாழ்க்கைநெறியினை உடையவர்களுடைய அற்பமான வாழ்க்கைவழிகளை நினைக்குங்கால், அவர்களுடைய நிலைபெற்ற உயிர் தனக்குப் பாதுகாவலாக யாதனைப் பெற்று உய்யப்போகிறதோ? அறியோம்.
எம்பெருமானுடைய உயர்வற உயர்நலம் பற்றிப் பேசும் இப்பாடல் பொருள்மிகுதி உதாத்தம்.] [155]

கொடைமிகுதி

**241. கொடைநலன் விதந்துஉரைப்பது கொடைமிகுதி. [156]**

(எ-ன்) கொடைமிகுதி உணர்த்துதல் நுதலிற்று.
இதன்பொருளும் உரையிற்கொள்க.

**படைக்கு எதிர்நிற்பவர் இன்றுஆகும் நேமி பரித்த பிரான்**
**கொடைக்கு எதிர்நிற்கும் கொடைஉளதோ? மறைகூறும் உண்மைத்**
**தொடைக்கு எதிர்நிற்பக் கவிசொன்ன மாறற்குச் சொன்னசொன்ன**
**நடைக்கு எதிர்நிற்ப உபயவிபூதியும் நல்கினனே.** (562)

இது கொடைமிகுதி. இதனுள், மறை கூறும் உண்மைத்தொடைக்கு எதிர்நிற்ப - பரத்துவத்தையும் ஆவியினையும் பூதத்தையும் உபநிடதம் கோத்து அடைவே

சொன்ன உண்மைவாக்கியத்திற்கு ஒப்ப. சொன்ன சொன்ன நடைக்கு எதிர்நிற்ப - சொல்நலத்தின் ஒழுகலாற்றிற்கும் பொருள்நலத்தின் ஒழுகலாற்றிற்கும் பொருந்த. ஒழிந்தவும் உரையிற்கொள்க.

திணை - பாடாண்; துறை - கொடுப்போர் ஏத்திக் கொடாஅர்ப் பழித்தல்.

[தன்படைக்கலத்தை எதிர்த்துப் போரிடுவோர் யாரும் இல்லாதபடி சக்கராயுதத்தைத் தரித்த எம்பெருமானுடைய கொடைத்தொழிலை ஒத்த கொடைத்தொழில் பிறிதும் உளதோ? உபநிடதம் கூறும் உண்மை வாக்கியத்திற்கு ஒப்பத் திருவாய்மொழியைப் பாடிய சடகோபனுக்கு எம்பெருமான் இவ்வுலகம் வீட்டுலகம் ஆகிய இருசெல்வத்தையும் நல்கினான்.] [156]

காந்திமிகுதி

**242. காந்தியை மிகுத்து உரைப்பதுவே காந்தி. [157]**

(எ-ன்) காந்திமிகுதி உணர்த்துதல் நுதலிற்று.
இதன் பொருளும் உரையிற்கொள்க.

**வேணுக்குழல் இசைத்த வேங்கடமாலைப் புலவீர்!**
**ஆண்உத்தமன் என்பது ஆர் அறியார்? - நாள்மலருள்**
**பெண்உத்தமி இறையும் பேர்கிலாள், பேரழகைக்**
**கண்ணுற்று, அவன் மார்பகம். (569)**

இது காந்திமிகுதி. ஆண்உத்தமன் - புருடோத்தமன். பெண்உத்தமி - பெரியபிராட்டி. இறையும் பேர்கிலாள் - நீங்கின் பிறள்ஒருத்தி குடிபுகுவள் என்பது கருத்து.

[ஞானியரே! வேய்ங்குழலை இசைத்த வேங்கடத்தெம்பெருமான் புருடோத்தமன் என்பதனை அறியாதவர் யாவர்? தாமரையில் வாழும் பெரியபிராட்டி சிறிதும் நீங்காமல் அவன்அழகைக் கண்ணுற்றவாறே அவன்மார்பகத்தில் உள்ளாள் என எம்பெருமானுடைய காந்திமிகுதி கூறியவாறு. ] [157]

கற்பின்மிகுதி

**243. காமர் கற்புஉரைப்பது கற்பின் மிகுதி. [158]**

(எ-ன்) கற்பின்மிகுதி உணர்த்துதல் நுதலிற்று.
இதன் பொருளும் உரையிற்கொள்க.

**பொற்பிற்கு உரிய புகழ்ச்சானகி புனிதக்**
**கற்பிற்கு இணை உளதோ, காணுங்கால்? - சிற்றிளவல்**
**இட்ட தழல் தண்ணென்று எதிர்சுமந்தது அன்று; அதனைச்**
**சுட்டது அவள்கற்பாம் சுடர். (570)**

இது கற்புமிகுதி. துறை - வாகை சார்ந்த கற்புவென்றி.

[அழகிற்கு உரிய புகழுடையவளான சானகியின் தூய்மையான கற்பிற்கு இணையான கற்பு ஆராயுங்கால் பிறிதுஒன்று உளதோ? இளையபெருமாள் அவள் மூழ்குவதற்காக இட்ட நெருப்புக் குளிர்ந்து அவளைச் சுமந்தது. அன்று அந்நெருப்பினை அவளுடைய கற்பாகிய தீச்சுட்டது எனச் சானகியின் கற்புமிகுதி கூறியவாறு.] [158]

விறல்மிகுதி

**244. நயம்புணர் ஞானவீரியம் அமர்வீரம் என்று**
**இயம்பிய விறலும் ஓர்இரண்டு என்ப. [159]**

(எ-ன்) இது விறல்மிகுதிப் பகுதி உணர்த்துதல் நுதலிற்று.
இதன்பொருளும் உரையிற்கொள்க.

**தருஞாலம் மேல்தந்த மால் அருட்பால்அன்றித் தாய்முலைப்பால்**
**ஒருநாளினும் அருந்தா வரம்பேணி உணர்வு அழியப்**
**பொருமாயையை அடங்கப் பொருதே புறங்கண்ட ஒண்மைத்**
**திருஞான வீரியத்தான் மகிழ்மாறன் என்சிந்தையனே.** (571)

இது ஞானவீரியமிகுதி.

(இ-ள்) கற்பகாடவியைப் பூமியின்கண் பின்னைப்பிராட்டிக்கு அளித்த மாயோன்கருணையாகிய அமிர்தத்தை நூல்முகத்தான் ஞானத்தான் பருகுவது அன்றிப் பெற்ற நற்றாய் ஆகிய உடையநங்கை திருமுலைப்பாலையும் பிறந்த-ஞான்று தொடங்கி ஒருகாலத்தும் உண்ணாத சேட்டத்தினையே முக்கியமாக விரும்பியதால், உலகத்தார் அறிவு அழிய அவ்வறிவினோடும் பூசலைப் பெருக்கும் பஞ்சதன்மாத்திரைகள் முழுதையும் பொருது புறங்கண்ட ஒள்ளிய தன்மைத்தாம் அழகிய ஞானவீரியத்தான் ஆகிய காரிமாறப்பிரான் என்சிந்-தையை விட்டு அகலான் என்றவாறு. ஆதலால் எனக்கு யாது குறை என்பது இதன்பயன்.

[பஞ்சதன்மாத்திரைகள் - சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற பஞ்சபூதங்களின் நுண்நிலைகள். இவற்றிலிருந்தே தூலமான ஐம்பூதங்கள் தோன்றின.]

திணை - வாகை சார்ந்த புறத்திணை; துறை - ஞானவெற்றி.

**அண்டம்என்று அகன்றதை அதனினும் அகன்று உட்**
**கொண்டதாம் அண்ட பித்தியை உட்கொளலாய்**
**வாங்கு, வெண்திரைப் பெரும்புனல் ஆவரிப்ப,**
**ஓங்கும் ஆழ்புனலினை ஒளிரும் அங்காரகன்**
**ஆங்கு அகலா நிலைமையின் ஆவரிப்ப,**
**அங்காரகன்தனை அதின் பதின்மடங்காய்**
**வங்கூழ் உயிர்த்து ஆவரிப்பதின் அதன்மேல்,**
**கண்அகல் இருவிசும்பு ஒழிவில் காரணமா**
**மண்முதல் அனைத்தையும் வளைத்து ஆவரிப்ப,**
**அகல்விசும்பினைத் தாமத பூதாதி**
**தகவு உடைத்தாய் ஆவரித்திடும் தன்மையின்,**
**அமைதர அதனை மான்அஃது ஆவரித்துச்**
**சமைதர, அதனை முற்றந்து ஆவரிக்கும்**
**முறைமையின் காலம் முக்குணத்துடன் முளைத்த**
**உறையுளாம் மாயை ஒழிவுஇல் வான்பதத்தொடும்**
**ஒருபேருருவின் ஒருங்கு ஆவரித்த**
**சுருதியும் தொடர் தொடர்புடைத் தனிச்சோதியை,**
**ஆற்றல்கூர் தமிழ்மறையதன் அகத்தனவாம்**
**நூற்றுப்பத்து எனத் தொடர்நோக்கு உடையவற்றுள்**

**முந்திய பத்துள் முதல்பத்துஅதனில்**
**வந்தது ஓர்முதலாம் வனப்புஉடைப் பாடல்**
**ஓரடிஅதனகத்து ஒடுக்கிய வென்றியின்**
**வரிஅளி முரல் வகுளாம்புய மாறா!**
**தெரிபவர் தெரிதொறும் தெவிட்டா இனிமை**
**ஓராயிரத்தின் உரனுடை வென்றி**
**ஆராய்பவர் இவ்அகலிடத்து எவரே? (572)**

இதுவும் ஞானவீரியமிகுதி. திணையும் துறையும் இதுவும் அது.

["அண்டம் என்ற பரந்து விரிந்த பொருளை அதனினும் விரிந்து தன்னகப்படுத்திய அண்டச்சுவரைத் தன்னுட்கொண்டு வளைந்த வெள்ளிய அலைகளைஉடைய பெரிய கடல் மறைப்ப, கடலின் உயர்ந்த ஆழமான புனலினை ஒளிவீசும் நெருப்பு அதனை விட்டுநீங்கா நிலைமையின் மறைப்ப, நெருப்பினை அதனினும் பலமடங்காய்ப் பரந்த காற்றுமண்டலம் மறைப்ப, அதன்மேல் இடமகன்ற பெரிய ஆகாயம் என்றும் நீங்காத காரணமாக மண் முதலிய பூதங்கள் அனைத்தையும் வளைத்து மறைப்ப, அகன்ற ஆகாயத்தை அகங்காரதத்துவம் தகுதியோடு மறைக்கும் தன்மையின் அமைய, அதனை மான் என்ற தத்துவம் மறைப்ப, அதனை மறைக்கும் முறைமையின் காலம் சத்துவம் இராசதம் தாமதம் என்ற முக்குணத்துடன் தோன்றுதற்கு இருப்பிடமாகும் மாயையைப் பரமபதத்தோடும் ஒரு பெரிய உருவுடன் ஒருசேர மறைத்த, வேதமும் தொடர்ந்து வரும் தொடர்புடைய ஒப்பற்ற சோதி வடிவினனாம் எம்பெருமானைப் பேராற்றல் மிகுந்த தமிழ்மறையின் உட்பகுதிகளாகிய ஆயிரம் என்ற தொடர்எண்களை உடைய பாடல்களில் முதற்பத்துள் முதல்பத்துப்பாடல்களாகிய முதல்திருவாய்-மொழியுள் வந்த வனப்புடைய முதற்பாடலின் ஒப்பற்ற முதலடிக்குள் மறைத்து வைத்த, வெற்றியை உடைய வண்டுகள் ஒலிக்கும் மகிழம்பூமாலையை அழகிய புயங்களில் அணிந்திருக்கும் மாறனே! ஆராய்பவர்கள் ஆராயுந்தோறும் குறையாத இனிமையை உடைய உன் ஓராயிரம்பாடல்களாகிய திருவாய்மொழியால் உனக்கு ஏற்பட்டுள்ள ஞானவீரியவெற்றியை இவ்வுலகில் ஆராயக் கூடியவர் யாவர் உளர்?" என்ற இப்பாடலில் மாறனுடைய ஞானவீரியமிகுதி கூறப்பட்டவாறு.]

**குன்று ஆயிரம்சிரமும் கையுமாய் உருக்கொண்டதுஎனத்**
**துன்று ஆடல் மூலபெலப்படைதான் முற்றும் சுற்றியநாள்**
**ஒன்றாம் உருவம் அலகுஇல் பல்கோடி உருவு எனலாய்ச்**
**சென்று ஆடல்கொண்டவன் வின்மை இங்கு ஏது என்று செப்புவனே? (573)**

இது சமர்வீரியமிகுதி. அலகுஇல் பல்கோடி உருவம் - எண்இறந்த பலகோடி உருவம். துன்றுதல் - நெருங்குதல். சென்று ஆடல் கொண்டவன் என்பது ஆயிரம்வெள்ளம் படைக்கும் ஆயிரம்வெள்ளம் இராமன் என்னும்படி ஒரொருவர்க்கு ஓரோர் இராமன் என விரைந்து எதிர்முகம் நின்று சரமாரியைப் பொழிந்து வென்றிகொண்டவன் என்றவாறு. வின்மை - வில்வென்றியினது தன்மை. இங்கு ஏது என்று செப்புவனே என்பது இவ்வுலகின்கண் இருந்த அறிவின்மையேன் யாது என்று கொண்டாடுவேன் என்றவாறு.

திணை - வாகை; துறை - பேராண்முல்லை அல்லது வாகை சார்ந்த புறத்-திணையுள் வில்வென்றியுமாம்.

[வெள்ளம் - ஒரு பேரெண். ஆயிரக்கணக்கான மூலபலப்படை வீரரான அரக்கரை இராமன்ஒருவனே தனித்திருந்து அம்புஎய்து வீழ்த்திய சமர்வீரியமிகுதி இப்பாடலில் கூறப்பட்டவாறு.] [159]

செல்வமிகுதி

**245. கல்விச்செல்வமும் கவின் பொருள்உடைமைச்**
**செல்வமும் என இருதிறத்தவாம் செல்வம். [160]**

(எ-ன்) செல்வமிகுதியின் பகுதி உணர்த்துதல் நுதலிற்று.
இதன் பொருளும் உரையிற்கொள்க.

**பல்வித்தக மறையின் துறைபோய் அவற்றுள் பரன்சீர்**
**சொல்வித்தக மறைதோய்ந்து எதிராசன் துணிந்துகொண்ட**
**கல்விப்பொருள் அன்பர்க்குஎல்லாம் அளிக்கவும் கண்அகன்ற**
**நல்வித்தகம் இறையும் குறையாது உள்நயந்தனவே.** (574)

இது கல்விச்செல்வமிகுதி. இதனுள், மறையின் துறைபோய் - வேதத்தின் முடிவை அறிவினால் கடந்து. அங்ஙனம் பலவிதப்பட்ட சதிர்பெற்ற மறை ஆதியோடு அந்தமும் நடுவும் ஸ்ரீமந்நாராயணனே பரப்பிரமம் என்பதனைச் சந்தயம்அற ஞானத்தால் அறிந்து எதிராசன் உட்கொண்ட ஞானமாகிய கல்விப்பொருளை அன்பொடு, தன்பால் கற்ற சீடர்க்குப் பரோபகாரத்தால் தான் அறிந்தபடி எல்லாவற்றையும் அவர்கள் வேண்டக் கொடுத்தும் அவன்-உள்ளத்து நிறைந்த நன்பொருள் சதிர்ப்பாடு சிறிதும் குறையாது அவன்கண் நயந்து உறவுகொண்டன என்றவாறு.
திணை - பாடாண்; துறை - அறுமுறை வாழ்த்தினுள் அடங்கும்.

**திருப்பூரநாள் வந்த புத்தூர்மடந்தை திருமுலைப்பொன்-**
**பொருப்பு ஊர்புயல் வடவேங்கடத்தான் மெய்ப்புழுகில் பொத்தும்**
**கருப்பூரத்தூள் விலைக்கு ஓர்நாள் சிற்றுண்டி கருனை உண்டி**
**விருப்புஊரத் துய்ப்பதற்கு ஒப்போ, பிறர் வைக்கும் மெய்ப்பொருளே?** (575)

இது பொருட்செல்வமிகுதி
அஃதேல் இஃது அதிசயத்தின்பாற்படுமோ எனின், அதன்அகத்து அகப்படாது. என்னை? திருமேனியில் பூசின புழுகு மறையப் பொழிந்து திருமஞ்சனத்தில் கரையும் கருப்பூரத்தூளியின் சோதி மேலே தோன்ற மிகவும் பன்னாள் பொதிதலானும், திருப்பணியாரவகை பொரிக்கறி அமுதுவகை திருப்போனக-வகை பிறர் அமுதுசெய்பவற்றினும் மிகுந்தது மெய் ஆதலானும் உதாத்தமேயாம்.
திணை - வாகை சார்ந்த புறத்திணை; துறை - செல்வவென்றி.

["ஆடிமாதத்துப் பூரநாளில் அவதரித்த வில்லிபுத்தூரைச் சார்ந்த மகளாகிய கோதைநாச்சியாரின் திருமுலைகளாகிய பொன்மலைகள் தழுவப்பட்ட மேகம்போன்ற வடவேங்கடத்து எம்பெருமான் திருமேனியில் பூசிய புழுகினை மறைத்துப் பூசி-யிருக்கும் கருப்பூரத்தூளின் விலைக்கும், ஒருநாள் அவர் விருப்பம் மிக ஏற்றுக்-கொள்ளும் நிவேதனப்பொருள்களின் விலைக்கும் பிறர் தேடிவைத்துள்ள பெருஞ்-செல்வம் ஒப்பாகுமோ?" என எம்பெருமானின் செல்வமிகுதி கூறப்பட்டவாறு.]

**ஆங்கு அதற்கு அணியாம் ஆதிஆவரணம் ஒன்றினுக்கு அளவுஇல்**
**பேரண்டம்**
**வாங்குபு கவவுபுரி நெடுந்திகிரி வரைகள் ஓர்மருங்கினுக்கு ஆற்றா;**
**ஓங்குபு பிறங்கு சிகரகோபுரங்கள் ஒருவன் ஈராயிரம் கரம் கண்**
**தாங்குபு தூண்டிக் காண்தொறும் தரித்திடற்கு அரிய தன்மையவே.** (576)

இஃது இடமிகுதி. திணை - பொதுவியல்; துறை - புலவர் ஏத்தும் புத்தேள்நாடு வாழ்த்து. (குருகாமான்மியம்)

[பரமபதத்திற்கு அழகாக அமைந்த முதல்மதில் ஒன்றற்கு, எல்லையற்ற அண்டங்களை வளைத்து உள்ளடக்கிய சக்கரவாளமலைகளும் கூட ஒருபக்கத்திற்குக் ஒப்பாகா. ஓங்கி விளங்கும் சிகரங்களும் கோபுரங்களும் ஒருவன் தன் ஈராயிரம் கைகளால் தன் ஈராயிரம் கண்களை இடுங்காமல் அகல விரித்துத் தாங்கிப் பார்க்குந்தோறும் அவற்றின் உயரமிகுதியால் கண்கள் அவற்றைக் காணும் ஆற்றலைத் தாம் உட்கொள்ளுதல் அரிதே - எனப் பரமபதத்தின் இடமிகுதி கூறப்பட்டவாறு.] [160]

60-ஆவது உதாத்தம் முற்றும்.

## 61-ஆவது ஆசிஅலங்காரம்

### வாழ்த்துஅணியின் இலக்கணம்

**246. வாழ்த்துவ தாமே வாழ்த்து எனப்படுமே. [161]**

(எ-ன்) வாழ்த்து என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.

வாழ்த்து எனினும் ஆசி எனினும் ஒக்கும். வாழ்த்துவ தாமே எனப் பன்மைப்பாலாகக் கூறிய அதனால் அவை பல என்பனவாம். அவை மேல் கூறப்படும். [161]

### வாழ்த்தின் வகை

**247. அதுவே,**
**கடவுள்வாழ்த்தே அறுமுறை வாழ்த்துஎனத்**
**திடனுற வரும் இருசிறப்பின ஆகி**
**இயற்கையின் அமைதி இயன்ற மக்களை**
**வாழ்த்துதல் தானும் மரீஇயதுஒன்று ஆகும். [162]**

(எ-ன்) இஃது அவ்வாழ்த்தினை விரித்துஉணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அவ்வாழ்த்து என்னுமது, கடவுள்வாழ்த்து எனவும், அறுமுறை வாழ்த்து எனவும் உண்மையாய் நிகழும் இருகூற்றதாகி, அவற்றோடும் செயற்கையான் அன்றி இயற்கையான் அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி என்னும் நான்கும் அமைவு எய்திய நன்மக்களை வாழ்த்துதல்தானும் பொருந்தியது ஒன்றாகும் என்றவாறு. [162]

### அறுமுறை வாழ்த்து

**248. மறையவர் துறவோர் மழை நாடு ஆவுடன்**
**பொறைபுரி அரசுஎனப் புகல்இவை யாவும்**
**அமரர்கண் எனலாம் அறுமுறை வாழ்த்தே. [163]**

(எ-ன்) வைத்த முறையானே அறுமுறை வாழ்த்தினது பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

இதன்பொருள் உரையிற்கொள்க.

இவற்றிற்குச் செய்யுள் வருமாறு:

**பூமாது நிழல்மணிப்பூண் பொதிஅவிழ்பொன் இதழ்ப்புனிதத்**
**தேமாலை நறுங்களபம் செறிமார்பத் திடைமுயங்க,**
**அளப்புஅரிதாம் பகிர்அண்டத்து அப்புறமும் அகத்துஅடக்கி**
**உலப்புஇல்இளங் கதிர்உதயத்து ஒளிகிளர்பேர் உருவாயும்,**
**நன்னர்அங்கத்து அணுக்கள்தொறும் நயந்து அணுவாகியும், எழில்கூர்**
**தென்அரங்கத்து அரவணைமேல் சிறந்துஇருகண் வளர்ந்துளாய்!**

இஃது ஆறடித்தரவு

[ஒளிவீசும் கௌத்துவமணியாகிய ஆபரணமும் முறுக்கு அவிழ்ந்த பொன் போன்ற இதழ்களை உடைய தூய்மையான தேனை உடைய திருத்துழாய் மாலையும் நறுமணம் கமழும் கலவைச்சந்தனமும் பொருந்திய மார்பிலே, தாமரையில் தோன்றியவளாகிய திருமகள் அதனைத் தழுவிக்கொண்டு அமர்ந்திருக்கவும், எல்லையிடமுடியாத பலவான அண்டங்களின் வெளிப்பரப்பினையும் தன் பேருருவில் அடக்கிக்கொண்டு, என்றும் நீங்குதல் இல்லாத இளஞ்சூரியனுடைய ஒளி வெளிப்படும் பெரிய உருவத்தனாகியும், அணுக்கள்தோறும் தன் உறுப்புக்களை எல்லாம் அமைத்துக் கொண்ட சிறிய வடிவத்தனாகியும், அழகிய திருவரங்கத்தில் பாம்புப்படுக்கைமீது சிறந்த அர்ச்சாவ-தாரத் திருமேனிகொண்டு அறிதுயில் அமர்கின்றவனே!]

**ஒருசுடராம் சொரூபமுடன் உருவம்அமைந்து, ஒருசுடரோடு**
**இருசுடராய், குணம்ஒருமூன்று எனலாகி, முறைமுறையே**
**படைப்பதையும் அழிப்பதையும் புறம்போக்கிப் பழிபிறங்காது**
**இடைப்படு காவலை எனதுஎன்று எடுத்தது எவன்? அருளுதியே.**

[ஒப்பற்ற ஞானமயமான தனித்தன்மையுடன் உருவம் பொருந்தி, அக்கினி-சூரியன்-சந்திரன் என்ற மூன்று ஒளிப்பிழம்புகளாயும், சத்துவம்-இராசதம்-தாமதம் என்ற மூன்று குணங்களாயும் அமைந்து, படைப்பினையும் அழித்தலையும் பிரமன் உருத்திரன் என்ற வேற்றவர் இருவரிடமும் ஒப்படைத்து, பழி ஏற்படாதவகையில் நடுவில் உள்ள காத்தல்தொழிலை உனக்கு உரியதாகக் கொண்டதன் காரணம் யாது என்பதனை அடியேங்களுக்குத் தெரிவித்து அருள்வாயாக.]

**நின்றனவாய் இயங்குநவாய் நீடியபல் உருஅமைத்தோன்**
**பொன்றியநாள் எழுந்தபெரும் புனல்படிந்த உயிர்களைநீ**
**எம்மானே! திருஉதரத்து இருத்திய காவற்கு அவற்றால்**
**கைம்மாறுஅங்கு எவனோ நீ கைக்கொண்டது? அருளுதியே.**

[இயங்குதிணை நிலைத்திணைகளாய் உலகில் வாழும் பலஉயிர்களையும் படைத்த பிரமன் அழியும் மகாப்பிரளயவெள்ளத்தில் முழுகிய உயிர்களை, எம்பெருமானே! நீ உன் திருவயிற்றில் வைத்துப் பாதுகாத்தாய். அங்ஙனம் பாதுகாத்த செயலுக்கு நீ அவற்றிடமிருந்து யாது கைம்மாறு பெற்றருளினாய்?]

**புறம்பயின்ற வினைவழிசார் போக்குவர வினும்பிரியாது,**
**அறம்புரிவது அணுஉளவேல் அதற்குஅவற்றை எடுத்தனையாய்**
**உள்நீர்மை அற்றனமாய்ந்து உறுநரகில் புகுவதுஉறீஇக்**
**கண்ணீர்கொண்டு அகன்றுஅகலாக் காவல்எவன்? அருளுதியே.**

[ஆன்மாக்கள் செய்த வினைகளின்வழியே அவற்றை இறப்பித்தலினும் பிறப்பித்-தலினும் நீங்காது, அவை சிறிதளவு நல்வினை செய்தனஆயினும் அவற்றை எடுத்து உயர்த்தி, உள்ளத்து நல்வினை இல்லாத ஆன்மாக்கள் மறைந்து கொடிய நரகில் புகச்செய்து, அவை உன்னை விடுத்து அகன்று தீவினைக்கட் படினும் நீ அவற்றை

விடுத்து அகலாது இரக்கத்தால் அவற்றின் துயருக்குக் கண்ணீர்வடித்துக் காவல்-செய்வது எதற்காக என்று கூறியருள்வாயாக.]

இவைமூன்றும் ஒருபொருள்மேல் மூன்றுஅடுக்கி நான்குஅடியவாய் இருவிகற்பத்தால் வந்த தாழிசை.

**தரணியுள் எவரொடும் முரணிய பெருவிறல்**
**இரணியன் வரம்எனும் அரண்அற இகலினை;**
**ஒருபது சிரமுடன் இருபது கரம்உள**
**நிருதனது உயிர்மிசை பொருகணை சிதறினை;**
**மறையவர் இறையவர் உறைவயின் வடுஉரைபு**
**அறைபவன் உயிர்புகும் அறைகழல் இணையினை;**
**முதலையின் இடர்உறு மதமலை மடுவினுள்**
**உதவுக எனும்உரை அதனொடும் உதவினை;**

இவை நான்கும் அராகம். என்னை? 'உருட்டு வண்ணம் அராகம் தொடுக்கும்' தொ. பொ. 544) என்பதனால் குறில் இணைந்து உருட்டி வந்தது காண்க.

[உலகில் எல்லோரொடும் மாறுபட்ட பேராற்றலுடைய இரணியனுடைய வரங்கள் என்று சொல்லப்படும் பாதுகாவல்கள் நீங்குமாறு அவனோடு போரிட்டு அவனைக் கொன்றாய்.
பத்துத்தலைகளும் இருபதுகைகளும் கொண்ட அரக்கனாகிய இராவணனுடைய உயிர்நீங்குமாறு அவன்உடலில் போரிடும் அம்புகளைச் செலுத்தினாய்.
அந்தணரும் அரசரும் தங்கியிருந்த இராயசூயமண்டபத்தில் உன்னைப்பற்றி இழித்து உரைத்த சிசுபாலனுடைய தலையைச் சக்கரத்தால் போக்கி அவன்உயிர் வந்து சேர்ந்த திருவடிகளை உடையாய்.
முதலையினால் வருந்திய கசேந்திரன் என்னும் யானை மடுவில் நின்றவாறே உதவிக்கு அழைக்க அந்தச் சொற்கள் செவிப்பட்ட நேரத்திலேயே அதற்கு அருள்செய்தாய்.]

**வஞ்சனைஓர் வடிவுஎடுத்து மாதுலனாம் மறைபயின்ற**
**கஞ்சனைக்கொன்று உரகேசன் தரும்பொறையைத் தவிர்த்தனையே;**
**குருகுலத்தார் நூற்றுவரைக் கூற்றுவன்நாட் டினில்இருத்தித்**
**தருமன்முத லவர்க்குஅவனி தனிஆளக் கொடுத்தனையே;**

இவை நாற்சீர் ஈரடி இரண்டு அம்போதரங்கம். இவை பேரெண்.

[வஞ்சனையே ஒருவடிவு எடுத்தாற்போன்ற மாமனாய்க் கீழான வழியிலே உன்னைக் கொல்ல முயன்ற கம்சனைக் கொன்று ஆதிசேடன் கடுமையான பாரத்தைச் சுமப்பதிலிருந்து அவனை விடுவித்தாய்.
கௌரவர் நூற்றுவரைக் காலனுடைய யமலோகத்தில் தங்கவைத்துத் தருமன் முதலிய ஐவருக்கும் இந்நிலவுலகைத் தனித்துஇருந்து ஆளும் வாய்ப்பை நல்கினாய்.]

**கழிபெருங் கற்பினள் ஆடை கழியாமல் நயந்தனையே**
**வழிபடும் தூதனும் ஆகி மடக்கு ஓலை சுமந்தனையே**
**ததிபாண்டன் தனக்கு அழியாத் தமனியநாடு அளித்தனையே**
**விதிகாண்டற்கு உலப்புஇல்பல வேடமவை கொண்டனையே**

இவை நாற்சீர்ஓரடி நான்கு அம்போதரங்கம். இவை அளவுஎண்.

அற்றேல், நாற்சீர்ஈரடி இரண்டு அம்போதரங்கத்தோடு இதனிடை வேற்றுமை யாதோ எனின், 'எழுத்து முதலா ஈண்டிய அடியில் குறித்த பொருளை முடிய நாட்டல்' வேற்றுமை என்று அறிக. இந்த நோக்கம் மேல்வரும் இடைஎண் சிற்றெண்ணிற்கும் ஒக்கும்.

[மேம்பட்ட கற்பினளான திரௌபதியின் ஆடைகள் சுரக்குமாறு விரும்பி அருளினாய். பாண்டவர் விரும்பிய வழியிலே ஈடுபட்ட தூதனுமாகிச் சுருட்டிய தூதுஓலையைச் சுமந்து துரியோதனன்அவைக்குச் சென்றாய். ததிபாண்டன் என்ற தயிர்விற்பவனுக்கு என்றும் அழிவில்லாத பொன்மயமான பரமபதத்தை அருளினாய். நீ விதித்த நல்வழியிலே உலகத்து உயிர்களைச் செலுத்துவதற்காகப் பல அவதாரங்களை எடுத்தாய்.]

**தாடகை உடல்உயிர் போக்கினை;**
**தாபதன் மனத்திடர் நீக்கினை;**
**நீடுஅக லிகைபழி தீர்த்தனை;**
**நேயமுள் ளவனொடு சேர்த்தனை;**
**வில்லினை மிதிலையில் வளைத்தனை;**
**மெல்லியல் இளமுலை திளைத்தனை;**
**வல்அரவு அடல்கெட நடித்தனை;**
**மருதினை முதலொடும் ஒடித்தனை;**

இவை முச்சீர்ஓரடி எட்டு அம்போதரங்கம். இவை இடைஎண்.

[தாடகையின் உடலிலிருந்து அவள்உயிரைப் போக்கினாய்; விசுவாமித்திரமுனிவனுடைய மனத்தில் இருந்த துயரத்தைப் போக்கினாய். வெகுகாலமாக இருந்த அகலிகையினுடைய சாபத்தைப் போக்கினாய். அவளிடம் அன்புடைய கௌதமனோடு அவளை இணைத்துவைத்தாய். மிதிலைநகரில் வில்லை வளைத்தாய். மெல்லியலாளாகிய சீதையின் இளைய தனங்களைத் தழுவி மகிழ்ந்தாய். வலிய காளியனுடைய வலிமை கெடுமாறு அவன்தலையில் கூத்தாடினாய். மருதமரங்கள் இரண்டனையும் வேரோடு பெயர்ந்துவிழச் செய்தாய்.]

**உறித்தயிர்கட்டு உண்டனையே**
**உரலிடைகட் டுண்டனையே**
**மறித்துநிரை காத்தனையே**
**வழங்கினைஐங் காத்தனையே**
**குடநடம்முன்பு ஆடினையே**
**குழலினில்பண் பாடினையே**
**படர்சகடம் பொடித்தனையே**
**பகட்டுமருப்பு ஒடித்தனையே**
**நாவலன்பின் நடந்தனையே**
**நடித்தனைமென் நடம்தனையே**
**கோவலர்இல் இறுத்தனையே**
**கோள்விடைஏழு இறுத்தனையே**
**புள்ளினைவாய் இடந்தனையே**
**புரந்தனைபார் இடம்தனையே**
**தெள்அமிர்தம் கடைந்தனையே**
**தேவருள்அங்கு அடைந்தனையே**

இவை பதினாறும் இருசீர்ஓரடி அம்போதரங்கம். இவை சிற்றெண்.

[உறியிலிருந்த தயிரைக் களவாடி உண்டாய்; உரலிலே கட்டப்பட்டாய். மழையைத் தடுத்துப் பசுக்கூட்டங்களைப் பாதுகாத்தாய்; பின்னைக்கு ஐவகைக் கற்பகச்சோலையையும் வழங்கினாய். முன்பு குடக்கூத்து ஆடினாய்; வேய்ங்குழலில் இராகங்களைப் பாடினாய். உன்னை நோக்கி வந்த சகடாசுரனை அழித்தாய்; குவலயாபீடம் என்ற யானைகளின் தந்தங்களை ஒடித்தாய். திருமழிசையாழ்வார்பின் நடந்தாய்; அல்லியத்தொகுதி, மல்லின்ஆடல் முதலிய கூத்தாடினாய். இடையர்களின்

வீடுகளில் தங்கினாய். உன்னைக் கொல்ல வந்த ஏழுகாளைகளையும் அழித்தாய். பகாசுரனுடைய வாயைப் பிளந்து கொன்றாய். நிலஉலகினைப் பாதுகாத்தாய். பாற்கடலைத் தெளிந்த அமுதத்திற்காகக் கடைந்தாய். முத்தேவருள் ஒருவனாகப் பொருந்தியுள்ளாய்.]

**எனஆங்கு (தனிச்சொல்)**
**இனைய தன்மையவாம் எண்ணருங் குணத்தின்**
**நினைவுஅருங் காவல் நிகழ்த்தினை அதனால்,**
**நின்னது கருணையும் நீயும்**
**மன்னிய திருவுடன் வாழி வாழியவே! (577)**

இது நான்குஅடியாய் நேரிசைஆசிரியத்தால் இற்ற சுரிதகம்.

[இவ்வாறு இத்தன்மையவாகிய எண்ணற்ற குணங்களோடு பிறரால் நினைத்தற்கும் அரிய காத்தல்தொழிலை நிகழ்த்தியுள்ளாய் ஆதலின், உன் கருணையும் நீயும் உன்னிடம் என்றும் நிலைபெற்றுள்ள பெரியபிராட்டியாரோடு பல்லாண்டு வாழ்க.]

இது வாழ்த்து.

இது முதலே ஆறுஅடித்தரவு ஒன்றும், இரண்டு விகற்பத்து நான்கடித் தாழிசை மூன்றும், எண்சீர் நான்கு அராகமும், நாற்சீர்ஈரடி இரண்டு அம்போதரங்கம், நாற்சீர்ஓரடி நான்கு அம்போதரங்கம், முச்சீர்ஓரடி எட்டு அம்போதரங்கம், இருசீர்ஓரடிப் பதினாறு அம்போதரங்கம் என்னும் பேரெண், அளவெண், இடையெண், சிற்றெண் ஆகிய நால்வகையும், தனிச்சொல்லும், சுரிதகமும் என்னும் ஆறுஉறுப்பும் குறைவு இன்றி வந்த வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா. இதனை வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா என்பது வண்ணித்துப் புகழ்தலால் வண்ணக ஒத்தாழிசைக்கலி என்றார்ஆயிற்று. இஃது ஒல்காப் பெருமைத் தொல்காப்பியத்திற்குக் காண்டிகை எழுதின நச்சினார்க்கினியர் நோக்கம். (தொ. செய். 140 நச்)

இவ்வாறன்றி 'அராகம் முடுகியல் வண்ணகம் ஆகும்' என்னும் சூத்திரத்தால் அராகம் என்னும் உறுப்புப் பெற்றமையால் வண்ணக ஒத்தாழிசைக்கலி ஆயிற்று என்பாரும் உளர். அஃது யாப்பருங்கலக்காரிகையார் நோக்கம். இருவர் நோக்கமும் பகுத்து உணர்ந்து கொள்க.

துறை - கடவுள்வாழ்த்து.

**வாழி மறையோர்! மழைவாழி! ஆன்வாழி!**
**வாழி, வழுதி வளநாடு! - வாழி,**
**புவிப்பாவலர் புகழ்பூதூர் முனிவன்! வாழி,**
**கவிப்பாவலர்க்கு அரசு என்கண்! (578)**

இஃது அறுமுறை வாழ்த்து. இவற்றைத் தனித்தனி வாழ்த்தின் தனித்தனித்துறையும் வாழ்த்தும் ஆம்.

இனி,

'வழங்கியல் மருங்கின் வகைபட நிலைஇப்
பரவலும் புகழ்ச்சியும் கருதிய பாங்கினும்' (தொ. பொ. 82)

என்னும் சூத்திரத்தான் மக்களை வண்ணப்பகுதி வரைவின்றாகப் பாடிய வாழ்த்தும், செந்துறைப்பாடாண்பாட்டாகிய துறையான் வருவனவாம் வாழ்த்துக்களும் வந்துழிக் கண்டுகொள்க. அதுவும் இயற்கையால் அமைதி உடைய மக்களை வாழ்த்துதலாம்.

[மறையோர் வாழ்க, மழை வாழ்க, பசுக்கள் வாழ்க, சடகோபனுக்கு உரிய வழுதி வளநாடு வாழ்க, உலகிலுள்ள பாவலர் புகழும் பெரும்பூதூர் மாமுனிவராகிய இராமாநுசர் வாழ்க. எனக்குப் பற்றுக்கோடாகிக் கவிகள் பாடும் பாவலர்களுக்கு அரசராகிய நம்மாழ்வார் வாழ்க - என்ற இப்பாடலில் முறையே மறையவர், மழை, ஆனினம், நாடு, துறவோர், அரசு என்பன வாழ்த்தப்பட்டவாறு.

வழங்கியல் மருங்கின் வகைபட நிலைஇப்
பரவலும் புகழ்ச்சியும் கருதிய பாங்கினும்
முன்னோர் கூறிய குறிப்பினும் செந்துறை
வண்ணப் பகுதி வரைவின்ற ஆங்கே. (தொ. பொ. 82)

ஒரு தலைவன் தன்னைப் பிறர் வாழ்த்துதலும் புகழ்ந்து உரைத்தலும் கருதிய பக்கத்தின்கண்ணும், அறம் பொருள் இன்பங்களின் கூறுபாடு தோன்ற முன்னுள்ளோர் கூறிய குறிப்புப்பொருளின்கண்ணும் செவ்வனம் கூறும் துறை நிலைபெற்று வழங்குதல் இயலுமிடத்து அச்செந்துறைக்கண் வருணங்களின் கூறுபாடு நிகழ்ந்தன நீக்கும்நிலைமை இன்று என்றவாறு - நச்.
எனவே, அகத்திணைக்குத் திணைநிலைத் தலைவர் பெயராகிய வெற்பன் பொருப்பன் போல்வனவே கூறப்படல் வேண்டும் என்பதும், புறத்திணைக்குத் தலைவனுடைய வருணத்தைக் குறித்தலும் ஏற்புடைத்தே என்பதும் பெறப்படும்.] [163]

61-ஆவது ஆசி முற்றும்.

62-ஆவது சங்கரஅலங்காரம்

சங்கரஅணி இலக்கணம்

**249. பாலுள் நீர் நிலைஎனப் பகுத்துஉணர்வு அரிதாம்**
**சால்பின் ஈரணி தழுவுதல் சங்கரம். [164]**

(எ-ன்) வைத்த முறையானே (87) சங்கரம் என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) பாலினிடத்துக் கலந்த நீர்போல ஓர்அணி வெளிப்படையாய்த் தோன்றிப் பிறிதுஓர் அணி குறிப்பினால் கொள்ளும்படிக்கு இரண்டு அணியாய் நிற்பன சங்கரம் என்னும் அலங்காரமாம் என்றவாறு.

**நறை ஆர் வகுளப்பிரான் குருகூரன் நன்னீர்ப் பொருநைத்**
**துறையான் வழுதிநன்நாட்டு எங்கள் மாது உன்னைத் தோய்ந்த முதுக்-**
**குறையால் அரும்பு அம்பல்ஆயது, நாளும் குறைநயந்து உன்**
**மறையால் வரவரவே அலர்ஆனது; மன்னவனே!** (579)

இது சங்கரம். என்னை? அரும்பு அம்பல் - சற்றே தோன்றப்பட்டுச் சிலர் அறிந்து தம்முள் புறங்கூறல். அலர் ஆயது - இறைவனே! நீ இங்ஙனம் மறைவயின் நீட்டித்து ஒழுகலான் பலரும் அறிந்து தூற்றும் அலர்ஆயிற்று என்பது. அங்ஙனம் தொடர்மொழியுள் வறிதே 'அம்பல்' என்னாது 'அரும்பு' என்னும் கிரியையால் அம்பலாகிய அரும்பு என்னும் மாட்டேறு இல்லாத உருவகம் தோன்ற, 'அலர் ஆயிற்று' எனவே மலர்ந்த போது ஆயிற்று எனவும் சிலேடை குறிப்பினால் கொள்ளப்படுதலால், ஈரணி ஆதலான் என்று அறிக.
அரும்புஅம்பல் - வினைத்தொகை. அரும்புதல் - தோன்றுதல்.
பகுதி - இரவுக்குறி; துறை - அலர் அறிவுறுத்தி வரைவுகடாதல்.

["தேன் பொருந்திய மகிழம்பூமாலையை அணிந்த தலைவனாகிய குருகூரில் அவதரித்தவனும் நல்ல தண்ணீரை உடைய பொருநைத் துறைவனுமாகிய மாறனுடைய வழுதிநன்நாட்டில், எங்கள்தலைவி உன்னைத் தழுவிய பேரறிவுடைமையால், தோன்றிய மகளிர் முகிழ்முகிழ்த்து இரகசியமாகக் கூறும் பழிமொழி, நாள்தோறும் தலைவியின் இன்றியமையாமையை விரும்பி நீ களவு ஒழுக்கத்தில் இரவுக்குறிக்கு வந்து சேருவதால், சிறிது சிறிதாகப் பலரும் வெளிப்படையாகக் கூறும் நிலைக்கு வந்துவிட்டது" என்று தோழி தலைவனிடம் கூறிய இக்கூற்றில், அம்பலாகிய அரும்பு என்ற தொகைஉருவகமும், அரும்பு நாளடைவில் அலர்ஆயிற்று என்ற சிலேடையும் ஆகிய ஈரணிகள் பொருந்தியமை சங்கரம்.
'அம்பல் என்பது சொல் நிகழாதே முகிழ்முகிழ்த்துச் சொல்வது ஆயிற்று; இன்னதின் கண்ணது என்பது அயல் அறியலாகாது என்பது. அலர் என்பது 'இன்னானோடு இன்னாளிடை இது போலும் பட்டது' என விளங்கச் சொல்லி நிற்பது. அம்பல் என்பது பெரும்போதாய்ச் சிறிது நிற்க அலரும் என்பது. அலர் என்பது அப்பெரும்போது தாதும் அல்லியும் வெளிப்பட மலர்ந்தாற்போல நிற்கும் நிலைமை என்று வேற்றுமை சொல்லப்பட்டதாம்' - இறை. கள. 22 உரை.] [164]

62-ஆவது சங்கரம் முற்றும்.

## 63-ஆவது சங்கீரணஅலங்காரம்

### சங்கீரணஅணியின் இலக்கணம்

**250. எள் பயறொடு தண்டுலம் இவை ஒளிதிகழ்**
**கட்புலம் கொள விரவிய காட்சிபோல்**
**இரண்டு இறந்தனவாய் இனிமையின் அணிபல**
**திரண்டன சங்கீரணம் எனச் செப்பினர். [165]**

(எ-ன்) வைத்த முறையானே (87) சங்கீரணம் என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) முந்தையது போல் குறிப்பின்றி, எள்ளும் பயறும் தண்டுலமும் என்னும் இவை கண்ணினது அறிவிற்குத் தோன்றக் கலந்த தோற்றம் போல, யாப்பினுள் இரண்டு இறந்த பலஅணி தழுவுவனவாய்க் கேட்டோர் உணர்வில் கொள்ளும்-படி பாடுவது சங்கீரணம் என்னும் அலங்காரமாம் என்றவாறு.

**இழுதுஅளை வாள்கண்ணும், இருள்அளகக் காரும்**
**முழுமதி தேய்ந்துஉட்கும் முகமும் - கெழுதகைத்தாய்ச்**
**சேந்து அவிழ்ந்து வேர்கூர் திறம்தரும், நாவீறர் அணி**
**தோய்ந்த துடரிப்பூஞ் சுனை. (530)**

இது சங்கீரணம். இதனுள், 'வாட்கண்' எனவே உவமையும், 'அளகக்கார்' எனவே உருவகமும், 'முழுமதி தேய்ந்து உட்கும் முகம்' எனவே தற்குறிப்பேற்றமும், 'சேந்து அவிழ்ந்து வேர்கூர்திறம் தரும்' எனவே அயுத்த ஏதுவும் நகை என்னும் சுவையும் விரவியவாறு காண்க.
பகுதி - நாணநாட்டம். துறை - புணர்ச்சி உரைத்தல்.
["நெய் பூசிய வாள்போன்ற கண்களும், இருண்ட மயிர்முடியாகிய மேகமும், முழுச்-சந்திரன் தேய்ந்து அஞ்சும்படியான முகமும், தமக்குப் பொருந்துவனவாக முறையே கண்கள் சிவந்து, மயிர்முடி அவிழ்ந்து, முகம் வியர்வை துளிக்கும் செய்தியை மாறனுடைய அழகு பொருந்திய துடரிமலையில் உள்ள சுனை தரும் போலும்!" என்று,

சுனையாடி வந்தாளாகக் கூறிய தலைவியிடம் தோழி நகைத்துரைத்தாக அமைந்த இப்பாடலில், வாள் போன்ற கண் - உவமை. மயிர்முடியாகிய காடு - உருவகம். இயல்பாகத் தேய்ந்து மேகமறைப்பிற்கு அஞ்சும் சந்திரனை முகத்தழகு கண்டு தேய்ந்து அஞ்சியதாகக் கூறுதல் - தற்குறிப்பேற்றம். சுனையாடலால் கண்சிவத்தல், மயிர்முடி குலைதல், முகம் வேர்த்தல் என்பன நேரிய காரணம் அன்மையின் அயுத்தஏது. இங்ஙனம் கூறித் தோழி நகைத்துரைத்தல் நகை என்னும் சுவை. மூன்றாமடிக்கண் 'சேந்து ... திறம்' முறைநிரல்நிறை என்க.]

**விள்ளாத காதல் விழிவழியாய்த் தன்இதயத்து**
**உள்ளாய காதலர்க்கு உச்சிட்டமதாம் என்று உணவுஉட்-**
**கொள்ளாதது ஏதுக்குறித்து உறங்காக் கண் கலுழ்வது**
**உள்ளாது எனும்மாறன் ஊர்.** (581)

[நீங்காத காதலை உடையாள், இடைவிடாது நோக்குதலால் விழிவழியாக நுழைந்து வந்து தன்இதயத்தினுள் அமர்ந்த தலைவருக்குத் தான் உண்பது எதுவாயிருந்தாலும் அவருக்குச் சேடமாம் என்று உணவு உட்கொள்ளாததனையும், 'பிரிவுத்துன்பத்துக்குக் காரணமாகி விட்டோமே' என்பதனைக் குறிக்கொண்டு உறங்காது கண்கள் கண்ணீர் பெருக்குவதனையும் நினைத்துப் பாராமல் மாறனுடைய குருகூரில் உள்ள மக்கள், 'தலைவனைப் பிரிந்த இத்தலைவி உணவு உட்கொள்ளாது கண்ணீர் பெருக்குகிறாள்' என்று கூறுகிறார்கள்.]

இதுவும் அது. இது பொருள்வயின்பிரிவின்கண் தலைமகனைத் தோழி இயற்பழித்து உரைப்பத் தலைவி தனது ஆற்றாமையை மறைத்து இயற்பட மொழிந்ததனை உட்கொண்டு தோழி அவளது காதல்சிறப்பு உணர்தல்.

(இ-ள்) உண்டியை வெறுக்கவும், கண் துயில் வெறுத்துக் கலுழவும் பொருள்-வயின் பிரிந்த தலைவர் கடைப்பிடிஉடையவர் அல்லர் என்று இயற்பழித்-ததனைக் கேட்டுத் தலைமகன்மேல் வைத்த உள்ளக்குறிப்பால் விட்டு நீங்காத காதலைஉடையாள், இடைவிடாது நோக்குதலால் விழிவழியாகத் தன்இதயத்-துள் குடிபுகுந்த தன்தலைவர்க்குத் தான் துய்ப்பது யாதாயினும் அவர்க்குச் சேடமாம் என்று உண்டியை வெறுத்ததையும் காரிமாறப்பிரான் குருகா-புரியினுள்ளார் உண்மை என்று உட்கொள்ளார் என்னும் அதுவேயுமன்றி, 'இத்துன்பத்திற்கு ஏதுவாயினம்' என்று உட்கொண்டு தன்கண்கள் உறங்காது கலுழ்வதனையும் உண்மை என்று கொள்ளார் என்னுமாதலால், இவள் காதல்சிறப்பு இருந்தபடி என்! என்றவாறு.

மாறன்ஊர் உள்ளாது என்பதனை இறுதி விளக்காக்கி ஈரிடத்தும் கூட்டுக. எண்ணும்மை ஈரிடத்தும் செய்யுள்விகாரத்தால் தொக்கன. காதலும், மாறன் ஊரும் ஆகுபெயர். உச்சிட்டம் - சேடம். இதற்கு, 'இவளது காதல் சிறப்பு இருந்தபடி என்' என்பது சொல்லெச்சம் இன்றிக் குறிப்புஎச்சமாய்ப் பயனிலையாயிற்று.

பகுதி - பொருட்பிரிவு; துறை - காதல்சிறப்பு உரைத்தல்.

இதனுள், உண்டி வெறுத்ததனையும் கண்கலுழ்வதனையும் மறைத்துக் கூறினமையால் இலேசமும், 'உள்ளாது' என்பது இறுதிவிளக்காகத் தீபகமும், 'விழிவழி' என்பது எதுகைஅலங்காரமும், 'விழிவழி இதயத்து உட்புக்கார்' என அற்புதமும், சுவை பெருமையைச் சார்ந்த அழுகையும் ஆகப் பலஅணி காண்க. பா - ஒருவிகற்பத்து இன்னிசைவெண்பா.

[மாறன் ஊர், உணவு உட்கொள்ளாதது உள்ளாது, கண்கலுழ்வது உள்ளாது என 'உள்ளாது' என்பது இறுதிவிளக்காக ஈரிடத்துக் கூட்டப்பட்டது. உணவு உட்கொள்-

ளாததும், கண்கலுழ்வதும் என்ற உம்மைகள் தொக்கன. 'காதல்' ஆகுபெயராய் காதல்-உடையாளையும், 'ஊர்' ஆகுபெயராய் ஊரில் உள்ளாரையும் குறித்தன. ஒருசொல் மறைந்திருப்பது சொல்லெச்சம். 'இவளது காதல்சிறப்பு இருந்தபடி என்?' என்பது பலசொற்கள் மறைந்திருத்தலின் குறிப்பெச்சம்.]

**காவலர்போல் காவலர்போல் காதம் கமழ்அனந்தை**
**காவலனைக் காஅலர்தூய்க் காவல்எனக் கற்றுஉணர்ந்தோர்**
**காவலனே காவலனே காத்திஎனக் கண்டுஉற்றும்,**
**காவலகா என்னார் கலர்.** (582)

[கற்பகச்சோலையிலுள்ள பூக்களைப் போல நெடுந்தூரம் மணம் வீசும் திருஅனந்த-புரத்திலுள்ள தேவருலகஅரசனான இந்திரனைப் போன்ற உலகு காவலனாகிய எம்-பெருமானைச் சோலைகளிலுள்ள மலர்களைத் தூவி வழிபட்டு அவனையே தமக்குப் பாதுகாவலாகக் கொண்டு மெய்நூல்களைக் கற்றுணர்ந்த சான்றோர் 'உலகைக் காக்கும் பெருமானே! யான் என்னைப் பாதுகாத்துக்கொள்ளும் ஆற்றல் இலேன் ஆதலின் நீயே காப்பாயாக!' என்று தனித்தனி வேண்டுவதனைக் கண்ணால் கண்டு அறிந்துவைத்தும், 'உயிர்க்காவலனே! எங்களைக் காப்பாயாக!' என்று கீழ்மக்கள் எம்பெருமானை வேண்டார்.]

அலங்காரம் இதுவும் அது. என்னை? 'காவலர் போல் காவலர் போல்' எனச் சொல்பின்வருநிலையும், பூரணஉவமையும், 'காதம்கமழ் அனந்தை' எனவே அதிசயமும், பிறன்கண் தோன்றிய வறுமைபற்றி அழுகை என்னும் சுவையும் வந்தமையால் அறிக.

திணை - பொதுவியல்; துறை - முதுமொழிக்காஞ்சி. பா - ஒருமொழி ஒருவிகற்பத்து இன்னிசைவெண்பா.

[கற்பகச்சோலைகளைப் போல அநந்தபுரச்சோலை மணம் கமழும் என்பதும் இந்திரனைப் போல அநந்தையில் எம்பெருமான் உள்ளார் என்பதும் பூரண உவமை. நறுமணம் பத்துக்கல்தூரம் வீசும் என்பது அதிசயஅணி. எம்பெருமானை வழிபடப் பெறாத வறுமைபற்றி அழுகைச்சுவை. காஅலர் - கற்பகமரச் சோலையிலுள்ள மலர்கள். காவலர் - தேவருலகைக் காக்கும் இந்திரன். காவலன் - பாதுகாப்பவன், பாதுகாக்க இயலாதேன்.]

**கோங்குஅரும்பு போலும் குவிமுலைகள்; தாம் புயத்துள்**
**ஆம் கரும்பு, முல்லைஅரும்பு ஏய்க்கும் - பூங்குழற்குச்**
**செவ்வாயும் வெண்நகையும்; செண்பகமாறன் சிலம்பில்**
**காமர் சுனைக்காவி கண்.** (582)

[பூவினை அணிந்த கூந்தலை உடைய தலைவிக்குக் குவிந்த முலைகள் கோங்கு-அரும்பினை ஒக்கும். அவளுடைய தோள்களில் கரும்பு உள்ளது. அக்கரும்பினை ஒத்த செவ்வாயினையும் முல்லை அரும்புகளை ஒத்த வெள்ளிய பற்களையும் அவள் உடையாள். அவளுடைய கண்கள் செண்பகமாலை அணிந்த மாறனுடைய துடரி-மலைச் சுனையிலுள்ள கருங்குவளைப்பூக்களை ஒக்கும்.]

இஃது இரண்டாம் அடி இறுதியில் தனிச்சொல் பெற்று நேரிசைவெண்பாவில் சிறிது வேறுபட்டு மூன்றுவிகற்பத்தான் வந்த இன்னிசைவெண்பா. அலங்காரம் இதுவும் அது. என்னை? முதலே உவமையும், 'புயத்துள்ளாம் கரும்பு' என மாட்டேறு இல்லா உருவகமும், கரும்பு செவ்வாய், முல்லையரும்பு வெண்-ணகை என நிரல்நிறையும், செவ்வாய் வெண்ணகைஎன விரோதமும், தன்கண் தோன்றிய புணர்வு பற்றிய உவகையும் வந்தமையான் என்று அறிக.

[தோள்களைக் 'கரும்பு' என்று கூறியது உருவகம்.

பகுதி - இடந்தலை. துறை - நலம்புனைந்து உரைத்தல்.]

**முகத்தாமரையை முழுது அடக்கலோடு என்**
**அகத்தாமரை கவர்ந்தது அற்புதம்; பொற்பூண்முலையாய்!**
**காவிமலர் அனைய கண்இணையைக் கைக்காந்தள்-**
**பூவின் மறைத்திடும் இப்போது.** (584)

["பொன்னாலாகிய அணிகலன்களை அணிந்த முலையினை உடையாய்! கருங்குவளைப்பூப் போன்ற இருகண்களையும் கைகளாகிய காந்தட்பூக்களால் மறைத்துக்கொள்ளும் இந்நேரத்தில், உன் முகமாகியதாமரையை முழுமையாக மறைத்ததனோடு என் உள்ளத்தாமரையைக் கைப்பற்றிய செயல் வியப்பிற்குரியது" எனத் தலைவி நாணிக் கண்புதைக்க அதனால் வருந்திய தலைவன் கூறியது.]

அலங்காரம் இதுவும் அது. இதனுள் முகத்தாமரை, கைக்காந்தள் எனவே உருவகமும், 'முகத்தாமரையை மறைத்து என் அகத்தாமரையைக் கவர்தல்' எனவே அசங்கதியும், 'காவிமலர் அனைய கண்' எனவே உவமையும், காட்சிப்பொருள் அல்லாத அகத்தாமரையையும் கவர்ந்தது எனவே அற்புதமும், உவகையுள் சார்ந்த வியப்பும் வந்தமையால் என்று அறிக.

பகுதி - இடந்தலை; துறை - நாணிக் கண்புதைக்க வருந்துதல். பா - இரண்டு விகற்பத்தால் வந்த இன்னிசைவெண்பா.

**மாதராய்! தென்அரங்கன் மால்வரைவாழ் - மாதராள்**
**காமன் இரதிஎனும் காட்சியாள்; - காமவேள்**
**பூவாளி என்பவற்றுள் மன்உயிர்உண் - பூவாளி,**
**கண்டார் நிறையினைஉண் கண்.** (585)

[தோழியே! அழகிய அரங்கனுடைய பெரிய மலையிலே வாழும் காதலையுடையாளாகிய இத்தலைவி மன்மதனுடைய இரதி என்று சொல்லுமாறு அழகுடையவள். மன்மதனுடைய மலர்அம்புகள் ஐந்தனுள் நிலைபெற்ற உயிரை உண்ணும் கருங்குவளைப்பூவாகிய அம்புகளே கண்டவர்களுடைய அடக்கத்தை அழிக்கும்படியான இவளுடைய கண்களாகும்.]

அலங்காரம் இதுவும் அது. என்னை? இதனுள் உவமையும் அதிசயமும் சொல்பின்வருநிலையும் வியப்பு என்னும் சுவையும் வந்தமையான் அறிக.

[மன்மதனுடைய இரதியைப் போல்வாள் என்ற தொடரில் உவமையும், மானுடமகளைத் தெய்வமகள்போல்வாள் என்று கூறியதன்கண் அதிசயமும், மாதர் என்ற சொல் வெவ்வேறு பொருளில் இருமுறை வந்தமையால் சொல்பின்வருநிலையும், இவள்தன் கண் உயிரை உண்ணும் மன்மதனுடைய அம்புகள் என்று கூறுவதன்கண் வியப்புச்சுவையும் வந்துள்ளன.]

பா - அடிதோறும் ஒரூஉத்தொடை பெற்று நேரிசைவெண்பாவில் சிறிது வேறுபட்டு வந்த இன்னிசைவெண்பா.

பகுதி - சேட்படை; துறை - அவயவம் கூறல். [165]

63-ஆவது சங்கீரணம் முற்றும்.

## 64-ஆவது பாவிகஅலங்காரம்

### பாவிகஅணியின் இலக்கணம்

**251. விளம்பிய காப்பியக் குணங்கள் பாவிகமே. [166]**

(எ-ன்) வைத்த முறையானே (87) இறுதிநின்ற பாவிகம் என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) விளம்பிய காப்பியக்குணங்கள் என்பது முன்னர்ப் பொதுவியலுள் கூறிய காப்பியக்குணங்கள். பாவிகமே ஈற்றில் நின்ற அறுபத்துநாலாம் அலங்காரம் என்றவாறு.
குணமாவன அத்தொடர்நிலை முழுவதூஉம் நோக்கிக்கொள்ளப்படுவதல்லது தனித்து ஒருபாட்டால் கொள்ளப்படாதுஎனக் கொள்க. அவற்றுள் சில வருமாறு:

**கற்றதனால் ஆய பயன்என்கொல், வால்அறிவன்**
**நற்றாள் தொழாஅர்எனின்? (586)**

[மெய்உணர்வினை உடையானது நல்ல தாள்களைத் தொழாராயின் எல்லாநூல்களையும் கற்றவர்க்கு அக்கல்வியறிவான் ஆய பயன் யாது?]

**சிறப்பொடு பூசனை செல்லாது, வானம்**
**வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு. (587)**

[மழை பெய்யாதாயின் தேவர்களுக்கும் இவ்வுலகில் மக்களால் செய்யப்படும் விழவும் பூசனையும் நடவா.]

**ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து**
**வேண்டும், பனுவல் துணிவு. (588)**

[தத்தமக்கு உரிய ஒழுக்கத்தின் கண்ணே நின்று துறந்தாரது பெருமையை விழுமிய பொருள்கள் பலவற்றுள்ளும் இதுவே விழுமிது என நூல்களது துணிவு விரும்பும்.]

**சிறப்புஈனும் செல்வமும் ஈனும் அறத்தின்ஊஉங்கு**
**ஆக்கம் எவனோ உயிர்க்கு? (589)**

[அறம் வீடுபேற்றையும் தரும்; துறக்கம் முதலிய செல்வத்தையும் தரும். ஆதலால் உயிர்களுக்கு அறத்தின் மிக்க ஆக்கம் யாது?]

**இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்**
**நல்லாற்றின் நின்ற துணை. (590)**

[இல்லறத்தோடுகூடி வாழ்வான் என்று சொல்லப்படுவான் அறஇயல்பினை உடைய ஏனை மூவர்க்கும் அவர் செல்லும் நல்லொழுக்கநெறிக்கண் நிலைபெற்ற துணையாம்.]

**சிறைகாக்கும் காப்பு எவன் செய்யும்? மகளிர்**
**நிறைகாக்கும் காப்பே தலை. (591)**

[மகளிரைத் தலைவர் சிறையால் காக்கும் காவல் என்ன பயனைச் செய்யும்? அவர் தமது நிறையால் காக்கும் காவலே தலையாய காவல்.]

**பெறுமவற்றுள் யாம்அறிவது இல்லை, அறிவறிந்த**
**மக்கட்பேறு அல்ல பிற. (592)**

[ஒருவன் பெறும் பேறுகளுள் அறியவேண்டுவன அறிதற்கு உரிய மக்களைப் பெறுதல்அல்லது பிறபேறுகளை யாம் மதிப்பதில்லை.]

**என்புஇலதனை வெயில்போலக் காயுமே**
**அன்புஇலதனை அறம். (593)**

[என்பு இல்லாத உடலை வெயில் காய்ந்தாற் போல, அன்பு இல்லாத உயிரை அறக்கடவுள் காயும்.]

**விருந்து புறத்ததாத் தான்உண்டல் சாவா**
**மருந்துஎனினும் வேண்டற்பாற்று அன்று. (594)**

[உண்ணப்படும் பொருள் அமிர்தமே எனினும் தன்னை நோக்கி வந்த விருந்து தன்இல்லின் புறத்ததாகத் தானே உண்டல் விரும்புதல் முறைமை உடைத்தன்று.]

**இன்சொலால் ஈரம் அளைஇப் படிறுஇலவாம்**
**செம்பொருள்கண்டார் வாய்ச்சொல்.** (595)

[இன்சொலாவன அன்போடு கலந்து வஞ்சனை இலவாய் இருக்கின்ற அறத்தினை உணர்ந்தார் வாயின் சொற்களாம்.]

**எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுஉண்டாம்; உய்வுஇல்லை,**
**செய்ந்நன்றி கொன்ற மகற்கு.** (596)

[பெரிய அறங்களைச் சிதைத்தார்க்கும் பாவத்தின் நீங்கும் வாயில் உண்டாம். ஒருவன் செய்த நன்றியைச் சிதைத்த மகனுக்கு அஃது இல்லை.]

**நன்றே தரினும் நடுஇகந்துஆம் ஆக்கத்தை**
**அன்றே ஒழிய விடல்.** (597)

[தீங்குஅன்றி நன்மையே பயந்ததாயினும், நடுவுநிலையை ஒழிதலான் உண்டாகின்ற ஆக்கத்தை அப்பொழுதே ஒழியவிடுக.]

**ஒருமையுள் ஆமைபோல் ஐந்துஅடக்கல் ஆற்றின்**
**எழுமையும் ஏமாப்பு உடைத்து.** (598)

[ஆமை போல ஒருவன் ஒருபிறப்பின்கண் ஐம்பொறிகளையும் அடக்கவல்லனாயின், அவ்வன்மை அவனுக்கு ஏழுபிறப்பின்கண்ணும் அரணாதலை உடைத்து.]

**மறப்பினும் ஓத்துக் கொளலாகும் பார்ப்பான்**
**பிறப்பு ஒழுக்கம் குன்றக் கெடும்.** (599)

[கற்ற வேதத்தினை மறந்தானாயினும், அவ்வருணம் கெடாமையின் பின்னும் அஃது ஓதிக்கொளலாம். அந்தணனது உயர்ந்த வருணம் தன்ஒழுக்கம் குன்றக் கெடும்.]

**அறன்வரையான் அல்ல செயினும் பிறன்வரையாள்**
**பெண்மை நயவாமை நன்று.** (600)

[ஒருவன் அறத்தைத் தனக்கு உரித்தாகச் செய்யாது பாவங்களைச் செய்யுமாயினும், அவனுக்குப் பிறன்எல்லைக்கண் நிற்பாளது பெண்மையை விரும்பாமை உண்டாயின், அது நன்று.]

**அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை**
**இகழ்வார்ப்பொறுத்தல் தலை.** (601)

[தன்னை அகழ்வாரை வீழாமல் தாங்கும் நிலம்போல, தம்மை அவமதிப்பாரைப் பொறுத்தல் தலையாய அறம்.]

**அழுக்காறுஎன ஒருபாவி திருச்செற்றுத்**
**தீயுழி உய்த்துவிடும்.** (602)

[அழுக்காறு என்று சொல்லப்படுகின்ற ஒப்பில்லாத பாவி, தன்னை உடையானை இம்மைக்கண் செல்வத்தைக் கெடுத்து, மறுமைக்கண் நரகத்தில் செலுத்திவிடும்.]

**நடுஇன்றி நன்பொருள் வெஃகின் குடிபொன்றிக்**
**குற்றமும் ஆங்கே தரும்.** (603)

[பிறர்க்கு உரியன கோடல் நமக்கு அறன் அன்று என்னும் நடுவுநிலை இன்றி அவர்கள்பொருளை ஒருவன் விரும்புமாயின், அவ்வெஃகுதல் அவன்குடியைக் கெடச்செய்து, பலகுற்றங்களையும் அப்பொழுதே அவனுக்குக் கொடுக்கும்.]

**கண்நின்று கண்அறச் சொல்லினும் சொல்லற்க,**
**முன்இன்று பின்நோக்காச் சொல். (604)**

[ஒருவன் எதிரேநின்று கண்ணோட்டம் அறச் சொன்னானாயினும் அவன் எதிரின்றிப் பின்வரும் குற்றத்தை நோக்காத சொல்லைச் சொல்லாது ஒழிக.]

**பல்லார் முனியப் பயனில சொல்லுவான்**
**எல்லாரும் எள்ளப்படும். (605)**

[அறிவுடையார்பலரும் கேட்டு வெறுப்பப் பயனிலவாகிய சொற்களைச் சொல்லுவான், எல்லாரானும் இகழப்படுவான்.]

**மறந்தும் பிறன்கேடு சூழற்க; சூழின்**
**அறம்சூழும் சூழ்ந்தவன் கேடு. (606)**

[ஒருவன் பிறனுக்குக் கேடு பயக்கும் வினையை மறந்தும் எண்ணாதொழிக. எண்ணுவானாயின், அவன்தனக்குக் கேடு பயக்கும் வினையை அறக்கடவுள் எண்ணும்.]

**ஒப்புரவினால் வரும் கேடுஎனின், அஃது ஒருவன்**
**விற்றுக்கோள் தக்கதுஉடைத்து. (607)**

[ஒப்புரவுசெய்தலான் ஒருவனுக்குப் பொருட்கேடு வரும் என்பார் உளராயின், அக்கேடு தன்னை விற்றாயினும் கொள்ளும் தகுதியை உடையது.]

**ஈத்துஉவக்கும் இன்பம் அறியார்கொல், தாம்உடைமை**
**வைத்து இழக்கும் வன்கணவர்? (608)**

[தம்முடைய பொருளை ஈயாது வைத்துப் பின் இழந்துபோம் அருள்இலாதார், வறியார்க்கு வேண்டியவற்றைக் கொடுத்து அவர் உவத்தலான் அருளுடையார் எய்தும் இன்பத்தினைக் கண்டு அறியார்கொல்லோ?]

**புகழ்பட வாழாதார் தம்நோவார், தம்மை**
**இகழ்வாரை நோவது எவன்? (609)**

[புகழ் உண்டாக வாழமாட்டாதார் அதுபற்றிப் பிறர் இகழ்ந்தவழி, இவ்விகழ்ச்சி தம்மாட்டாமையான் வந்தது என்று தம்மை நோவாதே தம்மை இகழ்வாரை நோவது என் கருதி?]

**அருட்செல்வம் செல்வத்துள் செல்வம்; பொருட்செல்வம்**
**பூரியார்கண்ணும் உள. (610)**

[செல்வங்கள் பலவற்றுள் ஆராய்ந்து எடுக்கப்பட்ட செல்வமானது அருளான் வரும் செல்வம்; அஃது ஒழிந்த பொருளான் வரும் செல்வங்கள் இழிந்தார் கண்ணும் உளவாம் ஆகலான்.]

**அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்**
**உயிர்செகுத்து உண்ணாமை நன்று. (611)**

[தீயின்கண், நெய் முதலிய அவிகளைச் சொரிந்து ஆயிரம்வேள்வி வேட்டலினும், ஒருவிலங்கின் உயிரைப் போக்கி அது நின்ற ஊனை உண்ணாமை நன்று.]

**தவம்செய்வார் தம்கருமம் செய்வார்; மற்றல்லார்**
**அவம்செய்வார், ஆசையுள் பட்டு.** (612)

[தம்கருமம் செய்வார்ஆவார் துறந்து தவத்தைச் செய்வார்; அவர் ஒழிந்த பொருள்-இன்பங்களைச் செய்வார் அவற்றின்கண் ஆசையாகிய வலையுட்பட்டுத் தமக்குக் கேடு செய்வார்.]

**வலிஇல்நிலைமையான் வல்உருவம், பெற்றம்**
**புலியின்தோல் போர்த்து மேய்ந்தற்று.** (613)

[மனத்தைத் தன்வழிப்படுத்தும் வலியில்லாத இயல்பினை உடையான் வலியுடையார்-வேடத்தைக் கொண்டு தான் அதன்வழிப்படுதல், பசு காவலர் கடியாமல் புலியின்-தோலைப் போர்த்துப் பைங்கூழை மேய்ந்தாற்போலும்.]

**உள்ளத்தால் உள்ளலும் தீதே; பிறன்பொருளைக்**
**கள்ளத்தால் கள்வேம் எனல்.** (614)

[குற்றங்களைத் தம்நெஞ்சால் கருதுதலும் துறந்தார்க்குப் பாவம்; ஆதலால் பிறன்-ஒருவன்பொருளை அவன் அறியாவகையால் வஞ்சித்துக்கொள்வேம் என்று கருதற்க.]

**பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற**
**செய்யாமை செய்யாமை நன்று.** (615)

[ஒருவன் பொய்யாமையையே இடைவிடாது செய்ய வல்லனாயின், அவன் பிறஅறங்-களைச் செய்யாமையே உறுதியாக நன்று.]

**இறந்தார் இறந்தார் அனையர்; சினத்தைத்**
**துறந்தார் துறந்தார் துணை.** (616)

[சினத்தின்கண்ணே மிக்கார், உயிருடையராயினும் செத்தாரோடு ஒப்பர்; சினத்தைத் துறந்தார் சாதல்தன்மையர்ஆயினும் அதை ஒழிந்தார் அளவினர்.]

**பிறர்க்கு இன்னா முற்பகல் செய்யின் தமக்குஇன்னா**
**பிற்பகல் தாமே வரும்.** (617)

[துறந்தவர் பிறர்க்கு இன்னாதவற்றை ஒருபகலது முற்கூற்றின்கண் செய்வராயின், தமக்கு இன்னாதன அதன் பிற்கூற்றின்கண் அவர் செய்யாமல் தாமே வரும்.]

**அறவினை யாதுஎனின் கொல்லாமை; கோறல்**
**பிறவினை எல்லாம் தரும்.** (618)

[அறங்கள்எல்லாமாகிய செய்கை யாது என்று வினவின், அஃது ஓர்உயிரையும் கொல்லாமையாம். அவற்றைக் கொல்லுதல் பாவச்செய்கை எல்லாவற்றையும் தானே தரும் ஆகலான்.]

**ஒருபொழுதும் வாழ்வது அறியார் கருதுப**
**கோடியும் அல்ல பல.** (619)

[ஒருபொழுதளவும் தம் உடம்பும் உயிரும் இணைந்திருத்தலைத் தெளியமாட்டாதார், மாட்டாதுவைத்தும், கோடிஅளவுமன்றி அதனினும் பலவாகிய நினைவுகளை நினையாநிற்பர். அவர் அறிவிலாதவர்.]

**இயல்பாகும் நோன்பிற்கு ஒன்றுஇன்மை; உடைமை**
**மயலாகும் மற்றும் பெயர்த்து.** (620)

[பற்றப்படுவது ஒருபொருளும் இல்லாமை தவம்செய்வார்க்கு இயல்பாம். அஃதன்றி, ஒன்றாயினும் உடைமை, அத்தவத்தைப் போக்குதலான், மீண்டும் மயங்குதற்கு ஏதுவாம்.]

**ஐஉணர்வு எய்தியக்கண்ணும் பயம்இன்றே,**
**மெய்உணர்வு இல்லாதவர்க்கு.** (621)

[செல்லப்படுகின்ற புலன்கள் வேறுபாட்டான் ஐந்தாகிய உணர்வு அவற்றைவிட்டுத் தம்வயத்தது ஆயவழியும், அதனால் பயனில்லையேயாம், மெய்யினை உணர்தல் இல்லாதவர்க்கு.]

**வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டுஇல்லை;**
**யாண்டும் அஃதுஒப்பது இல்.** (622)

[ஒருபொருளினையும் அவாவாமையை ஒக்கும் விழுமிய செல்வம் காணப்படுகின்ற இவ்வுலகின்கண் இல்லை. இனி அவ்வளவே அன்றிக் கேட்கப்படுகின்ற துறக்கத்-தின்கண்ணும் அஃது ஒப்பது இல்லை.]

**நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன்**
**உண்மை அறிவே மிகும்.** (623)

[பேதைப்படுக்கும் ஊழ்உடையான் ஒருவன் நுண்ணிய பொருள்களை உணர்த்தும் நூல் பலவற்றையும் கற்றானாயினும், அவனுக்குப் பின்னும் தன் ஊழானாகிய பேதைமை-உணர்வே மேற்படும்.]
என்பனவும் இவை போல்வனவும் ஆகிய பொருட்பால், காமத்துப்பால்களுள் வரும் குணங்களும் பிறகாப்பியங்களுள் வரும் குணங்களும் காப்பியக் குணங்-களாம் என்று கொள்க. [166]

64-ஆவது பாவிகம் முற்றும்.

பொருளணியியல் ஒருவகையான் முடிந்தது.

கவிராசகேசரியான பேரைக் காரிரத்தினகவிராயர் உரை எழுதினது என்று அறிக.

**தரு காளமேகம் கவிராயராயன் சடையன்அன்பால்**
**குருகாபுரேசர் புனை அலங்காரம் குவலயத்தே**
**கருகாத செஞ்சொல்உரை விரித்தான் - கற்பகாடவிபோல்**
**வரு காரிரத்ந கவிராயன் பேரை வரோதயனே.**

## மூன்றாவது
## சொல்லணியியல்

மடக்கு

மடக்கின் இலக்கணம்

**252. குறித்துஉரை எழுத்தின் கூட்ட முதல்மொழி**
**மறித்தும் ஓர்பொருள்தர மடக்குதல் மடக்கே.** [1]

என்பது சூத்திரம். இவ்வோத்து என்ன பெயர்த்தோ எனின், சொல்லான் ஆம் அணிகளின் இயல்பு உணர்த்திற்று ஆதலால், சொல்லணியியல் என்னும் பெயர்த்து. அஃதாக, இச்சூத்திரம் என் நுதலிற்றோ எனின், பொதுவகையான் மடக்கு என்னும் அலங்காரம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) புலவனால் ஒருபொருள் குறிக்கப்பட்டுச் செய்யுளினிடத்துத் தொடர் எழுத்தால் சொல்லப்பட்ட முதல்மொழி, வருமொழியுமாய்ப் பெயர்த்தும் ஒருபொருள் தருவதாக மடக்குவதூஉம் மடக்கு என்னும் அலங்காரமாம் என்றவாறு.

உம்மையால் தொடர்எழுத்துமொழியன்றி ஓரெழுத்தே பெயர்த்து மடக்குவதும் மடக்கேயாம் என்றவாறு. புலவன், பொருள், செய்யுள், வருமொழி என்பன சொல்லெச்சம். எழுத்தின் கூட்டம் எனவே, இரண்டு முதலிய எல்லா எழுத்தும் எனக்கொள்க.

[தொல்காப்பியனார் ஓரெழுத்துஒருமொழி, ஈரெழுத்துஒருமொழி, இரண்டற்கு மேற்பட்ட எழுத்துக்கள் தொடர்ந்து அமைக்கும் தொடர்மொழி எனப் பகுப்பர். தொல்காப்பியனாருக்கு ஈரெழுத்துஒருமொழி தொடர் அன்று. நன்னூலார் முதலிய பிற்கால ஆசிரியர்கள் இரண்டுஎழுத்தையும் 'தொடர்' என்றனர். அவர்களை ஒட்டி இவ்வுரையாசிரியரும் ஈரெழுத்துமொழியினையும் தொடர்மொழி என்று கூறும் கருத்தினர்.] [1]

மடக்கின் பாகுபாடுகள்

**253. அதுவே,**
**தொடர்பு இடைவிடாதும் தொடர்பு இடைவிட்டும்**
**அடைவினில் இருமையும் அடைவன ஆகியும்**
**நடைபெறும் முப்பாற்று என நவின்றனரே.** [2]

(எ-ன்) அம்மடக்கினது பாகுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அச்சொல்லப்பட்ட மடக்கு தம்மில் தாம் தொடருதல், இடைவிடாதும் இடைவிட்டும் முறையே இரண்டுதன்மையும் பொருந்துவனவாகியும் ஒரு செய்யுளகத்து நடக்கும் மூன்று பகுதியை உடைத்தென்று முதனூலாசிரியர் கூறினர் என்றவாறு.

எனவே, இது வழிநூல் என்பதும் தமக்கும் அதுவே கருத்து என்பதும் கூறினார்எனக் கொள்க.

[முதல்நூல் ஆசிரியர் என்றது தண்டியாரை. அவரே மடக்கு என்ற சொல்லணி பற்றிக் குறிப்பிட்டுள்ளார். தொல்காப்பியத்தில் மடக்குஅணி பற்றிய செய்தி இல்லை. எனவே மடக்கு என்பது இடைவிடாத மடக்கு. இடைவிட்ட மடக்கு என்ற இருநிலைமையின் செய்யுளின் முதல் இடை கடை என்ற மூவிடத்தும் வரும் என்பது.] [2]

மடக்கிற்கு அடிவரையறை

**254. ஒன்று ஆதியவாம் ஒருநான்கு அளவும்**
**சென்று நடைபெறும் சீர்த்து அதற்கு அடியே. [3]**

(எ-ன்) இதுவும் அதனையே வகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அதற்கு (அம்மடக்கிற்கு) அடிவரையறை நான்கடிச் செய்யுளுள்ளே நடக்குங்கால் ஓரடி முதலாக ஈரடிக்கண்ணும் மூன்றடிக்கண்ணும் நான்குஅடிக்கண்ணும் முன்னர்க் கூறியபடியே சென்று நடக்கும் அழகினை உடைத்து என்றவாறு.

'ஒருநான்கு அளவும்' என்றதனால் நான்குஅடிச் செய்யுள் என்பது ஆற்றலால் போந்த பொருள். ஒருநான்கு அளவும் என்ற உம்மை முற்றும்மை எனக் கொள்க. அவற்றிற்கு எல்லாம் செய்யுள் மேற்காட்டுதும்.

[தொல்காப்பியனார்காலத்தில் சிறப்பான அடி என்பது நான்கு சீர்களைக் கொண்டது என்ற வரையறை இருந்தது. இவ்வாசிரியர் காலத்தில் நான்கு அடிகளைக் கொண்ட பாக்களும் பாவினங்களும் சிறப்புடையன என்ற கருத்து நிலவுவதாயிற்று.] [3]

மடக்கின் எழுவகை

**255. முதல் இடை கடையே முதலொடு இடை கடை**
**இடையொடு கடை முழுதுஎன எழுவகைத்தே. [4]**

(எ-ன்) இதுவும் அதனையே வகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அம்மடக்கு முதல்மடக்கும், இடைமடக்கும், கடைமடக்கும், முதலொடு இடைமடக்கும், முதலொடு கடைமடக்கும், இடையொடு கடைமடக்கும், முற்றுமடக்கும் என முறையே எழுவகைப்படும் என்றவாறு. அம்மடக்கு என்பது அதிகாரம் பற்றி விரிந்தது.

[அதிகாரமாவது ஓரிடத்து நின்ற சொல் பல சூத்திரங்களோடும் சென்று இயைந்து பொருள் தருவதாம். 252-ஆம் சூத்திரத்திலுள்ள மடக்கு என்ற சொல் 255-ஆம் சூத்திரத்தோடு சென்று இயைந்து பொருள்தருவது அதிகாரம் பற்றி வந்ததாகும்.] [4]

முதல் இடை கடை மடக்குக்களின் வகைகள்

**256. அவற்றுள்,**
**அடி முதல்மடக்கு ஓர் ஐம்மூன்று ஆகும். [5]**

**257. இடைகடையவும் அதன் எண் நிலைபெறுமே. [6]**

**258. உணர்வுறின் மடக்குஇவை ஓரிடத்தனவே. [7]**

(எ-ன்) இவை மூன்று சூத்திரமும் அடிதொறும் ஓரிடத்தாம் மடக்கினது தானமும் எண்ணும் வரையறுத்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அங்ஙனம் கூறப்பட்ட எழுவகைத் தானத்தினுள்ளும் அடி முதல்மடக்குப் பதினைந்தாம். இடைமடக்கும் கடைமடக்கும் என்னப்பட்ட இரண்டும்

ஒரோஒன்று முன்னர்க் கூறிய அடி முதல்மடக்குப் போலப் பதினைந்து பதினைந்து என்னும் எண்ணினது வரையறை நிலைபெறும் என்றவாறு. ஆராயுமிடத்து இவை நாற்பத்தைந்தும் ஓரிடத்து மடக்கு என்பனவாம் என்றவாறு.

அவையாவன:

முதல்அடி முதல்மடக்கு
இரண்டாம்அடி முதல்மடக்கு
மூன்றாம்அடி முதல்மடக்கு
நான்காம்அடி முதல்மடக்கு
இவைநாலும் ஓரடி ஓரிடத்து முதல்மடக்கு;
இனி, முதல்இரண்டு அடியும் முதல்மடக்கு 1, 2
முதல்அடியும் மூன்றாம்அடியும் முதல்மடக்கு 1, 3
முதல்அடியும் நாலாம்அடியும் முதல்மடக்கு 1, 4
கடைஇரண்டுஅடியும் முதல்மடக்கு 3, 4
இடைஇரண்டுஅடியும் முதல்மடக்கு 2, 4
இவை ஆறும் ஈரடி முதல்மடக்கு;
ஈற்றடி ஒழித்து ஏனை மூன்றடியும் முதல்மடக்கு 1, 2, 3
முதல்அயல்அடி ஒழித்து ஏனை மூன்றடியும் முதல்மடக்கு 1, 3, 4
ஈற்றுஅயல்அடி ஒழித்து ஏனை மூன்றடியும் முதல்மடக்கு 1, 2, 4
முதல்அடி ஒழித்து ஏனை மூன்றடியும் முதல்மடக்கு 2, 3, 4
இவை நாலும் மூன்றுஅடி முதல்மடக்கு;
நாலடி முதல்மடக்கு முற்றும் மடக்கு;

ஆக இவை பதினைந்தும் அடிமுதல்மடக்கு. இனி, அடிஇடைமடக்கும் அடிஇறுதிமடக்கும் இவ்வணமே பதினைந்து பதினைந்தாம். இவை நாற்பத்தைந்திற்கும் உதாரணம் முன்னர்க் காட்டுதும். [5,6,7]

ஈரிட மூவிட மடக்கின் தானமும் வரையறையும்

**259. அடிதொறும் ஈரிடத்தனவாய் முதலொடு**
**இடை கடை இடைகடைகளின் இயன்றனவும்**
**திதம்உற நான்கு அறுபான்எனச் சிவணி-**
**யதனொடு மடக்கு ஒருநூற்றைந்து ஆகும். [8]**

(எ-ன்) அடிதொறும் ஈரிடத்தனவாம் மடக்கிற்கும், மூவிடத்தனவாம் மடக்கிற்கும் தானமும் வரையறையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) செய்யுளின் அடிதொறும் ஆதியொடு இடை, ஆதியொடு கடை, இடையொடு கடை என்று சொல்லப்பட்ட தானங்களின் ஈரிடத்தனவாய் நடந்தனவும், முதல் இடை கடை என மூன்று இடத்தும் மடக்குவனவுமான நாலு தானத்திலும் உண்மையாக அறுபது என்று கூறும்படிக்குப் பொருந்தி முன்னர்க் கூறப்பட்ட ஓரிடத்து மடக்கு நாற்பத்தைந்தொடு மடக்கு நூற்றைந்தாம் என்றவாறு.

இச்சூத்திரத்துள் முதலே வந்த முதலொடு என்பதனை முதல்நிலைத்தீபகமாக்கி, இடை கடை என்னும் இரண்டினும் ஏற்றுக.

[உதாரணங்களில் இந்த நூற்றைந்தின் விளக்கம் காணலாம்.] [8]

ஓரடி ஒழிந்த மடக்கின் தொடைவிகற்பம்

**260. அவற்றுள்,**
**முதல்தொடை விகற்பம் ஏழொடும் நான்கொடும்**
**திதப்பட ஓரடி ஒழிந்தன சிவணும். [9]**

(எ-ன்) இதுவும் அத்தானங்களைத் தொடைவிகற்பங்களால் கூறுபடுத்தி விரித்து உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அங்ஙனம் கூறப்பட்ட ஓரிடத்தனவும் ஈரிடத்தனவும் மூவிடத்தனவும் ஆக மடக்குமவற்றுள் அடியொடு பொருந்தின முதல்தொடைவிகற்பம் என்னும் இணை முதலாகிய ஏழொடும், கடையிணை, இடையிணை, முதற்கூழை, இரண்டாம்சீர் நான்காம் சீரொடு புணர்ந்த 'பின்' என்னும் நான்கொடும் கூடிப் பதினொரு தொடைவிகற்பங்களொடும் தெளிவுபெற ஓரடி ஒழிந்த மடக்குக்கள் வருதலைப் பொருந்தும் என்றவாறு.

[இணை முதலாகிய ஏழு - இணை, பொழிப்பு, ஒரூஉ, கூழை, மேற்கதுவாய், கீழ்க்கதுவாய், முற்று என்ற ஏழனோடும் கடையிணை, இடையிணை, முதற்கூழை, பின் என்பனவற்றைக் கூட்டப் பதினொரு தொடைவிகற்பம் காண்க. இவை முறையே 1, 2; 1, 3; 1, 4; 1, 3, 4; 1, 2, 4; 1, 2, 3, 4; 3, 4; 2, 3; 2, 3, 4; 2, 4; என்ற சீர்களின் மடக்குத்தொடை அமைவன.] [9]

இடைவிடா மடக்கு

**261. இடைவிடா மடக்கு இவைஎன மொழிப. [10]**

(எ-ன்) இது, தொடர்பு இடைவிடாதும் (253) என்ற சூத்திரத்தினுள், மூன்று பாகுபடும் மடக்கு என்றவற்றுள் முதலே கூறிய பாகுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) இங்ஙனம் கூறிய நூற்றைந்துமே இடைவிடா மடக்கு என்று கூறுவர் புலவர் என்றவாறு.

இவற்றிற்கு எல்லாம் செய்யுள் வருமாறு:

**மதியார் மதியார் வனை வேணியினான்**
**விதியால் இரந்ததனை மீட்ட - முதியானை**
**மாதவனை அல்லால் மதிப்பரோ பேரின்பத்து**
**ஆதரவு பூண்ட உளத்தால். (624)**

இது முதல்அடி முதல்மடக்கு.

(இ-ள்) அறிவுடையோர் பிறையையும் ஆத்தித்தாரையும் சூடின சடையை உடையான் பிரமசிரத்தை அறுத்த காரணத்தால் பிரமசிரத்தில் இரந்ததனைப் போக்கின முதன்மை உடையோனை, பெரியபிராட்டி கொழுநனை உள்ளத்தால் தியானிப்பதன்றிப் பரமபதத்தின் இன்பத்தின்மேல் ஆசை பற்றின தம் உள்ளத்தால் வேறொரு கடவுளைத் தியானிப்பதில்லை என்றவாறு.

'வேறொரு கடவுளை' என்பது சொல்லெச்சம். ஓகாரம் - எதிர்மறை. இதற்குப் 'புலவீர்காள்' என்னும் முன்னிலை எழுவாய் தோன்றாது நின்றதாக உரைக்க. மதிப்பரே எனினும் ஆம். அதற்கும் ஏகாரம் எதிர்மறை.

திணை - பாடாண்; துறை - செவியறிவுறூஉ. கடவுள்வாழ்த்தும் ஆம்.

[ஒருசொல் மறைந்திருப்பது சொல்லெச்சம். மதிப்பரோ - ஓகாரம் எதிர்மறை. மதிப்பரே என்பதும் பாடம். அதற்கும் ஏகாரம் எதிர்மறை. மதியார் மதியார் : மதியார் -

அறிவுடையோர்; மதி ஆர் - பிறையும் ஆத்திமாலையும் என மடக்கிற்குப் பொருள் உரைக்க. மதியார் மதியார் - முதலடிமுதல்மடக்கு.]

**அமுத மடப்பாவை ஆடகப்போது அல்கக்**
**குமுதம் குமுதம் கொளும்தீத் - தமியராய்த்**
**தாழ்ந்தார் தமையன்றித் தண்ணளிமால் கள்வனிற் பொய்**
**சூழ்ந்தார்தமை வருத்தாதோ? (625)**

இஃது இரண்டாம்அடி முதல்மடக்கு.

(இ-ள்) அமுதமடப்பாவை - திருமகள்; ஆடகப்போது - பொற்றாமரை; அல்கல் - குவிதல்; வறுமை எய்தலுமாம். குமுதம் - ஆம்பல்; குமுதம் கொளும்தீ - மகிழ்ச்சி எய்தும் தீ. தீ - சந்திரன்; தன்னைச் சுடுதலால் தீ என்றாள். தமியராய்த் தாழ்ந்தார் - புமான்களை நீங்கி மெலிந்தார். பொய்சூழ்ந்தார் - பொய் சொல்லவும் நினைத்தார். தமை வருத்தாதோ - அவர்தமை வருத்தாதோ? வருத்திற்றாகில் நம் தலைவரும் வருவர்; வாராமையால் வருத்துதல் ஒழிந்தது என்றவாறு.

பகுதி - பொருள்வயின் பிரிதல்; துறை - நிலவுகண்டு அழுங்கல். இதற்குத் தோழி என்பதனைத் தோன்றாது நின்றதாக விரிக்க. ஓகாரம் வினா.

[தோழி! அமுதத்தில் தோன்றிய திருமகளுடைய இருப்பிடமாகிய பொலிவை உடைய தாமரைமலர் குவிய, ஆம்பல்மலர் மகிழ்ச்சி கொள்ளுதற்குரிய தீயாகிய தனித்திருப்பாரைச் சுடும் சந்திரன் கணவரைப் பிரிந்து தனித்திருப்பவரையல்லாமல் கருணைவடிவான திருமாலுடைய கள்வன் ஊரில் இருந்துகொண்டு பொய்சொல்ல நினைத்த தலைவரையும் வருத்தாதோ? வருத்தின் மீளாது இரார்.]

**சிட்டர் பரவும் திருமால் செழும்பொழில்சூழ்**
**அட்ட புயகரத்துள் ஆயிழையார்க்கு - இட்டுஇடைதான்**
**சித்திரமோ சித்திரமோ தெவ்வர் முரண்முருக்கும்**
**அத்திரமோ கண் என்பவை? (626)**

இது மூன்றாமடி முதல்மடக்கு. அட்டபுயகரம் - திருப்பதி. இட்டுஇடை - சிறிய இடை. சித்திரமோ என்னும் இரண்டனுள் ஒன்று வெளி, ஒன்று பொய்.

பகுதி - இயற்கைப்புணர்ச்சி; துறை - தகையணங்குறுத்தல்.

[சான்றோர் முன்நின்று புகழும் திருமாலுடைய செழிப்புடைய சோலையால் சூழப்பட்ட அட்டபுயகரம் என்னும் திருத்தலத்துள் சிறந்த அணிகலன்களை அணிந்த மகளிருக்குச் சிறிய இடை வெட்டவெளியோ? அன்றி அது பொய்யோ? அவர்களுடைய கண் என்பன பகைவர்களைப் போர்க்களத்தில் அழிக்கும் தெய்விக அம்புகளோ?]

**நன்காரி மாறன்எனும் நாவீறன் வண்குருகூர்**
**மன்கார் வரைமயிற்கு மன்னவா! - மென்கோங்**
**கரும்பாங் கரும்பாங் களபமுலை இன்சொல்**
**சுரும்பாம் நயனத் துணை. (627)**

[மென்கோங்கு அரும்பாம் களபமுலை; கரும்பாம் இன்சொல்எனப் பிரித்துக் கூட்டுக.]

இதுவும் அது. பகுதி - பாங்கற்கூட்டம்; துறை - பாங்கன் செவ்வி செப்பல்.

[தலைவனே! சிறந்த காரியார்மகனான மாறன் எனப்படும் நாவீறு உடைய பிரானுடைய வளமான குருகூரை அடுத்து நிலைபெற்றுள்ள மேகம் பயிலும் மலையிலுள்ள ஆண்மயில் போன்ற கட்கு இனிய மென்மையை உடைய தலைவிக்கு மெல்லிய கோங்குஅரும்புகள் போலக் கலவைச் சந்தனம் அணிந்த முலைகள் உள்ளன. அவள்

குரல் கரும்பு போல இனியது. அவளுடைய இரண்டுகண்களும் வண்டுகளைப் போல உள்ளன.]

**தெண்திரைப் பார் போற்றும் திருவெள்ளியங்குடியார்**
**தண்துளப மார்பம் தழுவா நாள், - வண்டுஉளர்பூந்**
**தேன்நிலாய் நீண்டகுழல் சேயிழைதன் ஆருயிரும்**
**வானிலா வானிலா வாம். (628)**

இது நாலாமடி முதல்மடக்கு.

(இ-ள்) வண்டு உளர் - வண்டு குடையும். பூந்தேன் நிலாய் நீண்ட குழல் - பூவில் தேன் நிலைபெற்று நீண்ட குழல். சேயிழைதன் ஆருயிரும் - சிவந்த பூணினை உடையாள் கேடில்லா உயிரும்; வானிலாவானிலாவாம் - வான்நிலாவால் நிலாஆம் - விசும்பின்கண் உதிக்கும் மதியால் உடம்பின்கண் நில்லாத தன்மை உடைத்தாம் என்றவாறு. உயிரும் வான்நிலாவால் நிலா ஆம் என்பது 'நீரும் தன்பால் இருந்தன' என்பது போல ஒருமையில் பன்மை மயக்கம்.

திணை - பெருந்திணை; துறை - கண்டு கைசோர்தல்.

இவை நான்கும் ஓரடிமுதல்மடக்கு.

[தெள்ளிய அலைகளை உடைய கடலால் சூழப்பட்ட உலகத்தவர் போற்றும் திருவெள்ளியங்குடி என்ற திருத்தலத்தில் உகந்தருளியிருக்கும் எம்பெருமானுடைய குளிர்ந்த திருத்துழாய் மாலையை அணிந்த மார்பினைத் தழுவாத நாளில், வண்டுகள் குடையும் பூவில் தேன் நிலைபெற்ற நீண்ட கூந்தலை உடைய இத்தலைவியின் உயிரும் வானத்தில் உதித்துத் தவழும் சந்திரனுடைய வெப்பத்தால் உடலில் நிலைபெறாது ஒழியும்.

உயிர் வான்நிலாவால் இல - என்புழி உயிர் என்ற ஒருமை 'இல' என்ற பன்மைமுடிபு கொண்டது. ஒருமைபன்மை மயக்கம்.]

**நிலம னிலமன் நெடுவெளி தீநீராய்**
**அலம னலமன் அமலன் - புலனைந்தும்**
**வென்றார் தொழும்மால் விளங்கு திருவிண்ணகரம்**
**என்றார்க்கும் உண்டோ இடர்? (629)**

இது முதல் இரண்டு அடியும் முதல்மடக்கு.

(இ-ள்) நிலம் அனிலம் மன்நெடுவெளி தீ நீராய் - நிலமும் வாயுவும் நிலைபெற்ற பெரிய ஆகாயமும் தீயும் நீருமாகி; அலமன் நலம் மன் அமலன் - நிறைவு பொருந்தின ஆனந்தம் ஆக்கம் பெற்ற அழுக்கற்றவன் என்றவாறு.

திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து; நகரவாழ்த்துமாம்.

[ஐம்பூதமாய் ஆனந்தமயமாய் அழுக்கற்றவனாய் ஐம்புலன்களையும் வென்ற சான்றோரால் தொழப்படும் திருமால் உகந்தருளியிருக்கும் திருவிண்ணகரம் என்ற திருப்பதியின் பெயரைச் சொன்னவர்களுக்கும் தீங்குகள் உளவாமோ?

அனிலம் - காற்று. அல - எனக்கு எதுவும் வேண்டா, போதும் என்ற நிறைவு. மன்னுதல் - நிலைபெறுதல். நலம் - ஆனந்தம். அமலன் - களங்கமற்றவன்.]

**மாதவனின் மாதவனின் வன்தாள் துகள் அணவு-**
**போது அவள்மெய்ச் சாபம்அதைப் போக்கினள்அப் - பாதமலர்ப்**
**பொற்போதிப் பொற்போதிப் பூதலத்திட்டு அஞ்சலிப்பா-**
**ரின்போதம் மிக்கவர்யார் யார்? (630)**

இது முதல்அடியும் மூன்றாம் அடியும் முதல்மடக்கு.

(இ-ள்) மாதவன் இல் - கௌதமன் பாரியாகிய அகலிகை. மாதவன் நின் - திருமகள் காந்தனே! நினது. வன்தாள் துகள் அணவுபோது அவள் மெய்ச்-சாபம்அதைப் போக்கினள் - வலிய தாளின் பூழியைப் பரிசித்தகாலத்து அக்கௌதமனால் தனது மேனிக்கு எய்திய கற்படிவத்தைப் போக்கினள் ஆகையால். அப்பாதமலர்ப் பொற்பு ஓதிப் பொன்போது இப்பூதலத்து இட்டு - அத்திருவடித்தாமரை செய்த பொலிவை ஏத்திப் பொன்போலும் நிறத்தை உடைய பூக்களை இப்பூமியில் இருந்து அத்திருவடிகளில் சார்த்தி. அஞ்சலிப்-பாரின் போதம் மிக்கவர் யார்யார் - தியானித்து வணங்குவாரினும் ஞானம் மிகுந்தவர் இல்லை என்றவாறு.

இன் - நீக்கம். அடுக்கு - துணிவின்கண் வந்தது. மாதவனில் - 'மென்மை வரினே ளலணனவாம்' (நேமி. 17) என்பதனால் லகாரம் திரிந்து னகாரம் ஆயிற்று. மாதவன் படர்க்கை முன்னிலையாகிய இடமயக்கத்து வந்த அண்மைவிளி.

திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து.

[மாதவன் இல் என்பது வருமொழி மெல்லெழுத்தை நோக்கி மாதவன் இன் எனத் திரித்ததற்கு விதி நேமிநாதத்திலிருந்து காட்டப்பட்டுள்ளது. மாதவன் என்ற படர்க்கைப்-பெயர் விளி ஏற்பதற்காக முன்னிலையாக்கப்பட்டபோதிலும் அண்மைவிளி ஆதலின், திரிபுஏதும் இன்றி விளிப்பெயராயிற்று. 'அஞ்சலிப்பாரின்' - என்பதன்கண் உள்ள ஐந்தன் உருபாகிய இன் நீக்கத்துக்கண் வந்தது என்கிறார் உரையாசிரியர். அதனை ஒப்புப்பொருளதாகவும் கொள்ளலாம்.]

**மறுகு மறுகுமலை வார்சடையான் விற்போன்று**
**இறுகு முலைமேல் பசலை ஏறும்; - உறுதேம்**
**தெகிழ்மலர்ப் பாணத்தான் செருக்கடந்த மாறன்**
**மகிழ்மகிழ்த்தார் வேட்பாள் மனம்.** (631)

இது முதல்அடியும் நாலாம் அடியும் முதல்மடக்கு.

(இ-ள்) உறுதேம் - பரிமளம் மிகுந்த தேன். தெகிழ்மலர்ப் பாணத்தான் செருக்-கடந்த மாறன் - வழியாநின்ற பூவாளிகளை உடையனாகிய காமனது போரை வென்ற காரிமாறப்பிரான். மகிழ் மகிழ்த்தார் வேட்டாள் மனம் - சூடுதற்கு விரும்பின வகுளமாலிகையை விரும்பின இவளுடைய மனமானது. மறுகும் அறுகுமலை வார்சடையான் வில்போன்ற இறுகுமுலைமேல் பசலை ஏறும் - ஊசலாடா நிற்கும்; அதுவுமன்றி அறுகினைப் புனைந்த நீண்ட சடையான் வில்லாகிய இமவானைப் போலத் திண்ணிதாய முலைமேல் பசலையும் பரவாநிற்கும். ஆதலால் எங்ஙனம் உயிர் வாழும்? யாதோ செயல்? என்றவாறு.

திணை - பெருந்திணை; துறை - கண்டு கைசோர்தல்.

[மறுகும் அறுகுமலை வார்சடையான்: மறுகும் - மனம் வருந்தும். அறுகு - அறுகம்புல். மகிழ் - விரும்பப்படுகின்ற. மகிழ் - மகிழம்பூ.]

**ஆயிரம் பெற்றான் ஒருமூன்று ஐந்துஉற்றான் ஆதியர்க்கு**
**மேய முதல்வன்எனும் மெய்வேதம்; - பாய்திரைப் பால்-**
**ஆழியான் ஆழியான் அஞ்சிறைப்புட் பாகன்எனும்**
**கோழியான் கோழியான் கோ.** (632)

(இ-ள்) உண்மையான வேதமானது பரந்த திரையோடும் கூடிய பாற்கடலையும் சக்கராயுதத்தையும் உடையனாகி அழகிய சிறையை உடைய புட்பாகன் என்னும் திருஉறையூர் மாதவனைக் கோழிக்கொடியானையும், கண் ஆயிரம் பெற்றானையும், ஒரு மூன்று பெற்றானையும், மூன்றும் ஐந்தும் பெற்றானையும்

ஆதியாக உடையார்க்கு எல்லாம் அந்தர்யாமியாக உள்ளே பொருந்திய முதல்வன் என்று கூறாநிற்கும் என்றவாறு.

'மெய்வேதம் கூறும்' எனக் கூட்டுக. கோ - கண். கண் என்பதனை ஆயிரம் என்பது முதலாயவற்றிற்கு முதல்நிலைத்தீபகம் ஆக்கியும் மூன்று என்பதனை மூன்று, மூன்றுஐந்து என்னும் இரண்டற்கும் முதல்நிலைத்தீபகம் ஆக்கியும், மூன்றும் ஐந்தும் என உம்மை தொக்கதாக விரித்தும் உரைக்க. கோழி - உறையூர்.

திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து.

[கோ ஆயிரம் பெற்றான், கோ ஒருமூன்று உற்றான், கோ மூன்றும் ஐந்தும் உற்றான் என்ற கூட்டிப் பொருள்செய்யப்பட்டுள்ளது. முதல்கோழியான் - உறையூரில் உகந்தருளியிருக்கும் திருமால். அடுத்த கோழியான் - கோழிக்கொடியை உடைய முருகன். முதல் ஆழியான் - பாற்கடலை உடையவன். அடுத்த ஆழியான் - சக்கராயுதத்தை ஏந்தியவன். கண் ஆயிரம் பெற்றான் - இந்திரன். கண் மூன்று உற்றான் - உருத்திரன். கண் மூன்றும் ஐந்தும் உற்றான் - பிரமன்.]

**சலராசி மண்மேல் தவறுஇழையா ஞானம்**
**இலராய் இலரா யினுமாம் - மலரா**
**னனத்தா னனத்தான் அருட்குருகூர் மாறன்**
**எனத்தான் அணுகாது இடர். (633)**

இஃது இடைஇரண்டு அடியும் முதல்மடக்கு.

(இ-ள்) தவறு இழையா ஞானம் - தீங்கினைப் பயவா உண்மைஞானம். இலராய், இலர் ஆயினும் ஆம் - ஞானம் இல்லாதவராய் இல்லின்கண் வாழ்வாரே ஆயினும் ஆக. உம்மை - இழிவுசிறப்புஉம்மை. மலர் ஆனனத்தான் அனத்தான் - தாமரை மலர்போன்ற திருமுக மண்டலத்தை உடையான்; அன்னவாகனத்தை உடையான் என்றவாறு. அருள்குருகூர் மாறன்எனத் தான் அணுகாது இடர் - அருளோடு கூடிய திருக்குருகூர்க் காரிமாறப்பிரான் என்று ஒருகால் கூறினவரிடத்துத் துன்பம் என்பது சிறிதும் அணுகாது. எனவே, அணுகுவது பேரின்பம் என்பது பயன்.

திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து. (முனிவர்வாழ்த்து)

[ஞானம் இலர் - அறிவுஅற்றவர். இலர் - இல்லறத்தில் இருப்பவர். ஆனனத்தான் - முகத்தை உடையவன். அனத்தான் - அன்னவாகனன்.]

**மாசரதம் தன்னை வழுத்தல்எனும் அன்புஎனக்கும்**
**தாசரதி தாசரதிதன் நாமம் - தேசுபெறப்**
**பாடார் நினைந்திடார் பல்கால் இவர்க்கு எளிதோ,**
**வீடாத வீடாதல் மேல்? (634)**

இஃது இரண்டாம் அடியும் நான்காம் அடியும் முதல்மடக்கு.

மாசரதம் தன்னை வழுத்தல் எனும் அன்பு எனக்கும் தாசரதி - பரதெய்வங்களைத் துதியாது தன்னைத் துதிப்பதே ஆன்மலாபமாகிய பெரிய சதிர்ப்பாடு என்று அறிந்து தன்னிடத்து அன்புஉறுதலைப் பேதையேனாகிய எனக்குந் தந்த சதிர்ப்பாட்டை உடையவன். தாசரதிதன் நாமம் - தசரதன்பிள்ளையினது திருநாமமாகிய 'ராம' என்பதனை. தேசுபெறப் பாடார் நினைந்திடார் பல்கால் - நாவும் மனமும் விளக்கம் எய்தப் பலகாலும் சொல்லார், சிந்திப்பதும் செய்யார். இவர்க்கு எளிதோ வீடாத வீடாதல் மேல் - இவ்வறியாமையை உடைய இத்தன்மையோர்க்குச் சரீரம் விட்ட காலத்து

அழிவு இல்லாத பரமபதத்தின்கண் சென்று பேரின்பம் எய்துதல் எளியது ஒன்று ஆகாது என்றவாறு.
உம்மை இழிவுசிறப்பு. ஓகாரம் எதிர்மறை.
திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து.
இவை ஆறும் ஈரடிமுதல்மடக்கு.
[தா சரதி - தரப்பட்ட சதுரப்பாட்டை உடையவன். தாசரதி - தசரதனுடைய மகனாகிய இராமன். வீடாத - அழிதல் இல்லாத. வீடு ஆதல் - பரமபதத்தை அடைதல். எளிதோ - ஓகாரம் எதிர்மறை. எனக்கும் - உம்மை இழிவுசிறப்பு.]

இனி மூவடி முதல்மடக்கு வருமாறு:

**வேலை வேலைக்கடுவை வென்ற விழி நீர்ததும்பும்**
**மாலை மாலைப் பணிவார் வண்குருகூர்ச் - சோலைக்**
**கயலே கயலே கவர்குருகே! நீக்க**
**முயலேம் என்றார்க்கே மொழி. (635)**

இஃது ஈற்றடி ஒழித்து ஏனை மூன்று அடியும் முதல்மடக்கு.
(இ-ள்) வேலினையும் கடலுள் பிறந்த நஞ்சினையும் வென்றவாம் என்று அவர் பாராட்டின விழிகளானவை துன்பநீர் துளிக்கும் மயக்கத்தினை, திருமால் அடிகளை வணங்குவார் வளவிய குருகாபுரியின்கண் சோலைப்பக்கத்து நீரின்கண் கயலைப் பருகாநின்ற குருகே! 'நின்னை விட்டு நீங்குதல் உள்ளத்தாலும் முயலுதல் செய்யேம்' என்று வஞ்சமொழி கூறிப் பிரிந்தவருடன் கூறுவாயாக என்றவாறு.
பகுதி - ஒருவழித் தணத்தல்; துறை - பறவையொடு பரிவுற்று உரைத்தல்.
[வேலை - வேல் என்ற படைக்கலனை, கடல். மாலை - மயக்கத்தினை, திருமாலை. சோலைக்கு அயலே; கயலே - கயல்மீன்களையே.]

**போதகமுன் போதகமுன் புட்பாகன் பூங்கமல**
**மாது அகலாது எய்தும் மணிமார்பன் - சீத**
**மலர்மலர்நீர்ப் பொன்னி மதிள்அரங்கன் பேர்கற்-**
**கலர் கலருள் வன்பாதகர். (636)**

இது முதலயல் அடி ஒழித்து ஏனை மூன்று அடியும் முதல்மடக்கு.
(இ-ள்) போதகம் முன்பு - கசேந்திரன் முற்காலத்து. ஓது அகம் முன் - 'மூலமே' என்று கூறிய வாவியினிடத்து எதிர்ப்பட்ட. புட்பாகன் - கலுழவாகனன். பூங்கமலமாது அகலாது எய்தும் மணிமார்பன் - பொலிவினை உடைய தாமரையாள் ஒருபொழுதும் நீங்காதே தழுவும் கவுத்துவமணியொடும் கூடிய திருமார்பினை உடையான். சீதமலர் மலர் நீர்ப்பொன்னி - குளிர்ந்த மலர்கள் விரியும் திருக்காவிரி நடுவாகிய. மதிள் அரங்கன் - ஏழு ஆவரணத்தை உடைய திருஅரங்கேசன். பேர் கற்கலர் கலருள் வன்பாதகர் - திருநாமத்தைக் கல்லாதவர் பாதகருள் வலிய பாதகராவர் என்றவாறு.
திணை - பாடாண்; துறை - 'பழிச்சினர்ப் பணிதல்' முன்னோர் கூறியமையால், இது 'பரவார்ப் பழித்தல்'; கடவுள்வாழ்த்துமாம்.
[போதகம் - யானை; முன்பு ஓது அகம் - முன்பு கூப்பிட்ட இடமாகிய வாவி. மலர் - பூ. மலர் - பூக்கின்ற. கற்கலர் - கல்லாதவர். கலர் - பாதகர்.]

**பானலங்கண் பானலங்கண் பான்மைப் பணிமொழியாய்!**
**கானடுங்கற் கானடுங்கற் காய்சுரம்தான் - போனது; இனி**

**மண்காத்தருள் பெருமான் மாநீர் வளவயல்சூழ்**
**தண்காத் தண்கா, உதுபோய்த் தான். (637)**

இஃது ஈற்று அயலடி ஒழித்து ஏனை மூன்று அடியும் முதல்மடக்கு.

(இ-ள்) செங்கழுநீர் போலும் கண்களையும் பாலினது இனிமை உவமையாகக் கருதப்படும் பகுதியை உடைய மெல்லிய மொழியினையும் உடையாய்! நடக்கும் கால் நடுங்குதல்செய்யும் காட்டிடத்துப் பாத்தி வைத்தாற்போலும் முள்வாய்ப் பரலை உடைய வெம்மையொடும் கூடிய சுரம் போனது; இனி யாம் செல்லாநிற்பத் தோன்றும் உது, உலகத்து உயிர்களைக் காத்துக் கருணை செய்யும் பெருமையை உடைய் திருமாலது மிக்க நீரை உடைய வளப்பத்-தோடும் கூடிய வயல்கள் சூழ்ந்த தண்ணென்ற சோலையை உடைய திருத்-தண்காவாம் என்றவாறு.

'செல்லாநிற்பத் தோன்றும்' என்பது சொல்லெச்சம்.

பகுதி - உடன்போக்கு; துறை - நகர்காட்டல்.

[பானல் அம் கண் - செங்கழுநீர் போன்ற அழகிய கண்கள். பால் நலம் கண் பான்மை - பாலினது இனிமை உவமையாகக் கருதப்படும் பகுதி. கண்ணுதல் - கருதுதல். தண்கா - குளிர்ந்த சோலைகள். திருத்தண்கா என்னும் திருப்பதி. பாத்திவைத்தல் - நட்டுவைத்தல். செல்லாநிற்பத் தோன்றும் - என்னும் தொடர் செய்யுளில் எஞ்சிநிற்பது கொணர்ந்து சேர்த்து உரை எழுதப்பட்டது. இதனை உரையாசிரியர் சொல்லெச்சம் என்றார். ஒருசொல் எஞ்சி நிற்பது சொல்லெச்சம்; இரண்டுசொற்கள் எஞ்சி நிற்பது இசைஎச்சம். பல சொற்கள் எஞ்சி நிற்பது குறிப்பெச்சம் என்பது சேனாவரையர் முதலாயினார் கருத்து.]

**கள்அவிழ்பூங் காவும் கடிதடமும் செய்யும்அல்லாது**
**எள்ளிடைய வெள்ளிடைய தில்லாத - வெள்ளைக்**
**குளத்தான் குளத்தான் குழுவளர்ப்பான் மூழிக்-**
**களத்தான் களத்தான் கலர்க்கு (638)**

(இ-ள்) தேனை ஒழுக்கும் பூவினை உடைய சோலையும், பரிமளிக்கும் வாவிகளும், வயலும் அல்லாதே, எள்ளுப்போடுதற்கும் இடத்தை உடைய வெளி என்பது இல்லாத வெள்ளைக்குளம் என்னும் திருப்பதியை உடையான், குளம்பினொடும் கூடிய ஆவினது கூட்டத்தை வளர்ப்பான், திருமூழிக்களம் என்னும் திருப்பதியையுமுடையான், தீய மக்களுக்கு ஒளிக்கும் கள்ளத்தை உடையனாம் என்றவாறு. எனவே, நன்மக்களை வெளிவந்து காப்பான் என்பது பயன்.

திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து.

[எள் இடைய - எள்ளுப் போடுதற்கு உரிய இடத்தை உடைய. வெள்ளிடையது - வெற்றிடம். வெள்ளைக்குளத்தான் - வெள்ளைக்குளம் என்ற திருப்பதியை உடையான். குளத்து ஆன் - குளம்பினை உடைய பசுக்கள். மூழிக்களத்தான் - மூழிக்களம் என்ற திருப்பதியை உடையான். க(ள்)ளத்தான் - கள்ளத்தை உடையவன். கலர் - தீயவர்.]

**பணியும் பணியும் பனிமா மதியாம்**
**அணியும் அணியும் அரற்கும் - பிணிசெய்-**
**தலைதலை தீர்த்தான் சரணம் அல்லாதே தம்பம்**
**இலைஇலைத்தார் ஈந்து புலவீர்! (639)**

(இ-ள்) புலவீர்காள்! பாம்பையும் குளிர்ந்த பெரிய மதியாய் மேல் ஆக்கம் செய்யும் மாலையையும் சடைமேல் புனைந்த சிவனாகிய பெரியோனுக்கும்

துன்பத்தைச் செய்து அறிவை நடுங்குவித்த பிரமசிரமானதைக் கைவிட்டு நீங்குவித்தானாகிய ஸ்ரீமந்நாராயணன் திருவடிகள் அல்லாதே, அந்திய காலத்து அறிவு நிலைகலங்கிச் சாய்ந்து பிறவியாகிய குழியிலே நீர் விழும்பொழுது வீழாதே நும்மைத் தாங்கும் தூண் வேறு இல்லை ஆதலால், அவன் திருவடிகளில் துளபமாலையைச் சூட்டி வணங்குவீராக என்றவாறு.

அரற்கும் என்னும் உம்மை சிறப்பும்மை. இலைத்தார் - இலைமாலை ஆதலால் துளவமாலிகை என்றாயிற்று. 'புலவீர் பணியும்' எனக் கூட்டுக.

திணை - பாடாண்; துறை - ஓம்படை; கடவுள்வாழ்த்துமாம்.

[பணியும் - வணங்குங்கள்; முன்னிலைப்பன்மை ஏவல். பணியும் - பாம்பும். அணியும் - ஆபரணத்தையும்; அணியும் - சூடும். அலை - அறிவை நடுங்குவிக்கின்ற. தலை - பிரமன் தலை. இலை - இல்லை. இலைத்தார் - திருத்துழாய்த்தளத்தால் ஆகிய மாலை. அரனுடைய ஞானஆதிக்கம் தோன்ற 'அரற்கும்' என்ற உம்மை சிறப்பும்மை. ஞானம் பெற வேண்டின் அரனை வணங்கிப் பெறல்வேண்டும் என்பது சான்றோர் கருத்து.

'மஞ்சுசூழ் குடுமி வெள்ளி மலைக்கொழுந்து இறைஞ்சினோர்க்கு
விஞ்சைதந்து அருளும்' - (பாகவதம் 327)]

இவை பதினைந்தும் அடிமுதல்மடக்கு.

இனி இடைமடக்கு வருமாறு:

**கயிலாயம் பொன்னுலகம் புரந்தரனும் புரந்தரனும் களிக்க, மேனாள்**
**எயில்ஆர்தென் இலங்கையர்கோன் பல்தலைக்குஓர் கணைவழங்கும் இந்த-ளூரான்**
**மயிலார்மை வரைஅணங்கே! நினது உயிராம் ஏவல்புரி மயிலைக் காவல்**
**பயில்ஆயத்து எழுந்தருளித் துணைவிழியால் உணர்த்திஅருள் பாரிப்பாயே. (640)**

இது முதல்அடி இடைமடக்கு.

(இ-ள்) வெள்ளிமலையையும் துறக்கத்தையும் தமவாகப் புரந்து அரனும் புரந்தரனும் களிப்பு எய்த, முற்காலத்துக் கோட்டையால் பெருத்த தெற்கின்கண் உண்டாய இலங்கையில் உள்ளார்க்கு அரசனாகிய இராவணன் பலதலைகளும் அறும்படிக்கு ஒருவாளி தொட்ட இந்தளூரானுக்குரிய மயில்கள் ஆடுகின்ற மேகம் தவழும் மலையில் உறையும் தெய்வம் அனையாய்! நினது உயிர் போன்றவளாய் நினது ஏவல் விரும்புபவளாம் மயில் போலும் சாயலை உடையாளை, நின்னைக் காப்பவராய் இடைவிடாத ஆயவெள்ளத்தார் கூட்டத்து அடைந்து, திருக்கண் பார்வையால் குறிப்பின் உணர்த்திக் கருணையை விரிப்பாயாக என்றவாறு.

பகுதி - பாங்கற்கூட்டம்; துறை - தோழியைக் காட்டு என்றல்.

[கயிலாயம் புரந்து அரனும், பொன்உலகப் புரந்தரனும் களிக்க எனக் கொள்க.
அரன் - உருத்திரன். புரந்தரன் - இந்திரன்.]

**புண்டரிகப் பொகுட்டு அணங்கே! மும்மதமா இருமருப்பின் புழைக்கை நீட்டி**
**ஒண்திறலான் ஒருவனை, நம் மகிழ்மாறன் மகிழ்மாறன் உறந்தை ஓங்கல்,**
**கொண்டலுள்நின்று இருபிறைநள் ளிடைவருபாம்பு எனவளைத்துக் கொண்ட காலை,**
**மண்டுஅமர்க்கூற்று வன்கணிச்சி எனத்தடிந்தது, அதனைஅவன் வாகை வேலே. (641)**

இஃது இரண்டாம்அடி இடைமடக்கு.

இதனுள், 'மகிழ்மாறன் மகிழ்மால்தன் உறந்தை ஓங்கல்' என்பது வகுள-மாலிகையை உடைய காரிமாறப்பிரான் மகிழ்ந்து போற்றும் மாயோன் தனது திருஉறையூர் வரையிடத்து என்பதாம். ஒழிந்தன உரையிற்கொள்க.

பகுதி - நடுங்கநாட்டம்; துறையும் அது.

["தாமரைப்பொகுட்டில் வீற்றிருக்கும் திருமகள் போன்ற தலைவியே! மும்மதங்களை உடைய யானை இரண்டுதந்தங்களுக்கு நடுவே அமைந்த துதிக்கையை நீட்டி மிக்க திறமையுடைய தலைவன் ஒருவனை, நம் மகிழம்பூமாலையை அணிந்த காரிமாறப்-பிரான் மகிழ்ந்து போற்றும் திருமாலுடைய உறையூரை அடுத்த சிராப்பள்ளி மலையில், மேகத்திடத்தே நின்று இருபிறைகளுக்கு நடுவே வரும் பாம்பு போல வளைத்துக்-கொண்டகாலத்து, அவ்வியானையை, அவனுடைய வெற்றி பொருந்திய வேல், போரில் மிக்குச் செல்கின்ற எமனுடைய கணிச்சி என்ற சூலப்படை போல அழித்தது" எனத் தோழி தலைவனை அவன் யானையை அழித்தநிலையில் சந்தித்ததாகத் தலைவியிடம் கூறி, அவள் உள்ளக்கருத்தை நடுக்கம் தரும் செய்தியைச் சொல்லி ஆராய்ந்தது இது. மகிழ்மாறன் - மகிழம்பூமாலையை அணிந்த மாறப்பிரான். மகிழ்மால்தன் - விரும்பித் துதிக்கும் திருமாலுடைய.]

**பார்எழுதும் படிக்குஎழுதா மறைமொழியைத் தமிழ்மொழியாய்ப் பகர்ந்த மாறன்**
**நீர்எழுதெண் திரைப்பொருநைத் திருநாடன் வரைஅணங்கின் நீர்மை குன்றாச்**
**சீர்எழுதி எனைஎழுதிக் களபமுலைக் களபமுலைத் தேமென் கோதை**
**ஊர்எழுதிப் பேர்எழுதிக் கிழிகொடுசீ றூர்மறுகே உலாவுவேனே. (642)**

இது மூன்றாமடி இடைமடக்கு.

இதனுள், களபமுலைக்களபம் மு(ல்)லைத் தேமென் கோதை என்பது மான்-மதக்குழம்பை உடைய முலையாகிய யானையையும் முல்லைமாலிகையினது தேனோடும் கூடிய குழலையும் உடையாள் என்றவாறு. பார் என்பது உலகின்-கண் உயர்ந்தோர் என்றவாறு. நீர்மை குன்றாச் சீர் எழுதி என்பது பெண்ணினது இலக்கணம் குன்றாத அவயவஅவயவிகளின் பொலிவினை எழுதி என்றவாறு.

பகுதி - சேட்படை; துறை - மடல்ஏறும்வகை உரைத்தல்.

["சான்றோர்கள் எழுத்துவழக்கில் கொண்டுவாராத வேதங்கள் கூறின செய்திகளைத் தமிழில் வெளிப்படுத்திய, வெள்ளமிடும் பொருநைத்துறைவனான காரிமாறப்-பிரானுக்கு உரிய மலையில் தெய்வப்பெண் போல்வாளாகிய தலைவியின் பெண்-ணியல்பு குன்றாத சிறந்த வடிவினை எழுதி, என்னையும் வரைந்து, மான்மதக்குழம்பு அணிந்த தனங்களாகிய யானைகளையும் முல்லைப்பூமாலையையும் உடைய அவளுடைய ஊரின் பெயரையும் அத்துணியில் எழுதி, அவள் பேரையும் குறிப்பிட்டு, அவளிருக்கும் சிற்றூர்த் தெருக்களில் உலாவுவேன்" என்று தலைவன் தோழியிடம் தன் மடலேறும் கருத்தை வெளியிட்டவாறு.

களபமுலைக்களபம் - மான்மதச்சாந்து பூசிய முலைகளாகிய யானைகள். முலைத்-தேமென்கோதை - முல்லைமலராலான தேன் பொருந்திய மெல்லிய மார்பின்மாலை.]

**மறைபடுசொற் பொருளினைத்தெற் றெனத்தமிழ்செய் நாவீறன் மழைதோய் செவ்வி**
**உறைபடுதெள் அறல்அருவித் துடரிவரை அரமகளிர்க்கு உவமையாவீர்!**
**நறைபடுசந் தனப்பொழில்சூழ் புனத்திடைவந் தடைந்ததுஎனின், நவில்வீர் ஒன்னார்**
**கறைபடுவன் பகழியொடு மன்னாகமன்னாகங் கதிகற் றாங்கே. (643)**

இது நான்காமடி இடைமடக்கு.

(இ-ள்) மறையிடத்து உண்டான சொல்லின்கண் மறைந்த பொருளினைத் தெளியும்படி தமிழ்மொழியாகச் செய்த நாவீறரது மேகம் படிந்த பருவத்துப் பெய்யும் துளிகளால் உண்டான தெளிந்த நீராய் வரும் அருவியை உடைய துடரிவரையில், அரமகளிர்க்கு உவமையாக்கப்பட்ட மங்கைமீர்! முகை அவிழ்ந்த பூவில் தேன் துளித்து ஆரவாரிக்கும் சந்தனப்பொழில் சூழ்ந்த நுமது புனத்தின்கண், சத்துருக்களைக் கொலை செய்து உண்டான குருதியின் முழுகிய பகழி தைத்ததொடும் ஓர் அரசுவா ஆக்கம் பெற்ற மலை நடைகற்றது போல வந்து அடைந்தது உண்டு எனின் கூறுவீராக என்றவாறு.

உவமையாவீர் என்றதனால் அவர்கள் காந்தியை உயர்த்துக் கூறினானாம். ஆங்கு என்றது உவமஉருபு. கதி - நடை.

பகுதி - மதிஉடன்படுத்தல்; துறை - வேழம் வினாதல். இவை நாலும் ஓரடி இடைமடக்கு.

[மன்நாகம் - ஆக்கம் பெற்ற மலை; மேம்பட்ட அரச யானை. மன் - அரசு, ஆக்கம். நாகம் - யானை, மலை.]

இனி, ஈரடி இடைமடக்கு வருமாறு

**அந்தரத்தா ரருவியுவா வடமலைமன் வடமலைமன் அந்தண் சாரல்**
**சந்தனப்பூந் துணர்மலிந்த வண்டழைய வண்டழைய தனைக்கொண்டு உற்றேன்**
**சிந்துரவாள் நுதல்களபப் புளகமுலை துவர்இதழ்வாய்ச் செவ்வேல் உண்கண்**
**கொந்துஅவிழ்பூங் குழலீர்! கைக்கொள்வீர் மாரனைஅடிமை கொள்வீர் மாதோ. (644)**

இது முதல் இரண்டு அடியும் இடைமடக்கு.

அந்தரத்து ஆர் அருவி உவா வடம் அலை மன் வடமலைமன் அம்தண்சாரல் - விசும்பின் உச்சியினின்றும் இழிந்து ஆரவாரிக்கும் நீர்அருவியும் யானைத்திரளும் ஆலமரத்தினை அலைக்கும் நிலைபெற்ற வடவேங்கடம் என்னும் மலைக்கு மன்னன், அவனதாம் அழகிய குளிர்ந்த மலைப்பக்கத்தின்கண். பூந்துணர் மலிந்த வண்டு அழை அ வண் தழைஅதனைக் கொண்டு உற்றேன் - பூங்கொத்துக்கள் பரிமளத்தினால் கூட்டமான வண்டுகளைத் தம்மிடத்து அழைக்கும் அழகிய வளப்பத்தை உடைய சந்தனத்தழையைக் கையுறையாகக் கைக்கொண்டு நும்மிடத்து வந்தேன். ஒழிந்தனவும் உரையிற்கொள்க.

பகுதி - மதிஉடன்படுத்தல்; துறை - கருத்தறிவித்தல்.

["திலகமிட்ட ஒளி பொருந்திய நெற்றி, மான்மதம் பூசிய பூரிப்படைந்த முலைகள், சிவந்த உதடுகளை உடைய வாய், செம்மையான வேலை ஒத்த மையுண்ட கண்கள், கொத்தாகப் பூக்கள் மலரும் குழல் இவற்றை உடைய பெண்களே! யான் கொண்டு வந்துள்ள கையுறையை ஏற்றுக்கொள்ளுங்கள்; அதனால் மன்மதனை அடிமையாகக் கொள்வீர்" என்றான் தலைவன்.

வடம் - ஆலமரம். அலை - வருத்துகின்ற. மன் - நிலைபெற்ற, அரசன். வண்டு அழை அ வண் தழை - வண்டுகளை அழைக்கும் அழகிய வளவிய தழை.]

**கதியேபற் றினர்ஞானக் கண்அகலாக் கண்ணகலா காயம் காண்பான்**
**நதியேமுற் றியஅரங்கத் திடைதுயிலும் புயல்வரைமேல் நயந்து வாழ்நும்**
**பதிஏது? இங்கு உரைத்திடும்என் றனனறையீர் நறையீர்மென் பதுமை போல்வீர்!**
**மதிஏது, இங்கு இனி எனவும் தெளிகிலன்; ஏகுதற்கும் ஒருவழி சொல்வீரே. (645)**

இது முதலடியும் மூன்றாம் அடியும் இடைமடக்கு.
(இ-ள்) "பேரின்பத்தை உட்கொண்டார் உள்ளக்கண்ணை விட்டுநீங்காத இடமகன்ற பரமாகாயத்தைச் சென்று காணவேண்டித் திருக்காவிரியாகிய இரண்டு ஆறு சூழ்ந்த அரங்கத்தின் நடுவே கண்வளரும் காளமேகம் போன்ற திருமேனியை உடைய அரங்கநாதன் வரையிடத்து விருப்பமுடன் வாழும் தேனோடு கூடிய குளிர்ந்த தாமரையாளை ஒப்பீர்! இவ்விடத்து நும்முடைய பதி ஏது என்று கூறுக என்றனன்; கூறுகின்றிலீர்; இனிமேல் மதி யாது என்றும் துணிகிலன்; மீண்டு போவதற்கு ஒருவழியும் காண்கின்றிலன்" என்றவாறு.

[ஞானக்கண் அகலாக் கண் அகல் ஆகாயம் - ஞானக்கண்ணை விட்டு நீங்காத இடம் அகன்ற பரமாகாயம் ஆகிய பரமபதம். நறை ஈர் - நறுமணத்தால் என்னை ஈர்க்கின்ற; நறை ஈர் - தேனால் ஈரமான என்றும் பொருள் செய்க. இங்கு உரைத்திடும் - எனக்குக் கூறுங்கள். 'அறையீர்' எனப் பிரித்தால், கூறுங்கள் என்பது பொருள்.]

'னறையீர் நறையீர்' என்பதனைப் பாடம் மாற்றி ஒற்றைப் பெயர்த்து 'அறையீர்' எனக் கூட்டுக. இதனுள் 'கதியே பற்றினர் ஞானக்கண் அகலாக் கண் அகல் ஆகாயம்' என்பன முதலாக 'அரங்கத்திடைத் துயிலும் புயல்வரைமேல் நயந்து வாழ் நும்பதி ஏது? இங்கு உரைத்திடும் என்றனன் அறையீர்' என்பன ஈறாக நோக்கு என்னும் யாப்புக்கால் எனக்கொள்க. என்னை?

'மாத்திரை முதலா அடிநிலை காறும்
நோக்குதல் காரணம் நோக்கு எனப்படுமே' (தொ. பொ. செய். 100)

என்றாராகலின். அஃதேல் இதனுள் நோக்கிக் கொள்ளக் கிடந்தமை யாதோ எனின், 'பேரின்பத்தை விரும்பினார் ஞானக்கண்ணை விட்டு நீங்காத பரமாகாயத்தை அவர் சென்று காண வேண்டிப் பரமகிருபையால் வெளிவந்து அரங்கத்திடைக் கண்வளரும் அவன் வரையிடத்து விருப்பத்துடன் வாழும் தாமரையாளைப் போல்வீர்' என்றதனால், 'அவன்வரையிலிருந்தும் யான் விரும்பிய நுமது சீறூரை எனக்கு உரைக்கின்றிலீர். என்ன தறுகண்மையோ?' என்பது நோக்கிக்கொள்ளக் கிடந்தமையால்எனக் கொள்க. ஏகாரம் இரண்டனுள் முன்னது பிரிநிலை; ஏனையது ஈற்றசை. ஒழிந்தனவும் உரையிற் கொள்க.
பகுதி - மதிஉடன்படுத்தல்; துறை - பதி வினாதல்.

[திருக்காவிரியாகிய இரண்டு ஆறு - வடதிருக்காவிரி, தென்திருக்காவிரி என்பன. நதியே, நதியே - ஏகாரம் பிரிநிலை. சொல்வீரே - ஏகாரம் ஈற்றசை.]

**வயல்கழுநீர்க் கழிகவின்மாண் கொழுநனையே கொழுநனையே மகிழ்நன் மாதர்**
**கயல்கருங்கண் எனமலரா முனம்களைகட்டு எறிதிருக்காட் கரைமால்வெற்பில்**
**செயற்குஅரிய திருஉருவால் உயிர்கொல்லிப் பாவையராய்ச் சிறந்தீர்! உங்கள்**
**இயற்பெயர்யாது எனவினவி யதைமொழியு மொழியும்இகழ் வதனை மன்னோ.** (646)

இது முதல்அடியும் ஈற்றுஅடியும் இடைமடக்கு.
இதனுள், கழுநீர்க் கழிகவின் மாண் கொழுநனையே கொழுநனையே மகிழ் நன் மாதர் - செங்கழுநீரினது மிக்க அழகினை உடைய மாட்சிமைப்பட்ட கொழுவிய முகையைத் தங்கள் புமான்களை விரும்பும் நல்ல கடைசியர். கொழுநனையே என்பது தேற்றேகாரம்; பிரிநிலையுமாம். கொழுநனையே விரும்பும் மாதர் கொழுவிய நனை மலரா முன்னம் களை கட்டு எறி என்பது இறைச்சி. என்னை? முகையாய் நிற்பதன்றி மலர்ந்தால் இவை எம் கண்ணுக்கு

உவமையாய் எம் கொழுநர்க்கு விருப்பத்தைக் கொடுக்கும் என்னும் மாற்-சரியத்தால் களைகட்டு எறிந்தார் என்னும் குறிப்பு, பொருள் புறத்ததாய் நிற்றலான் எனக் கொள்க. அஃது அன்று எனின், கண்ணென மலராமுன்னம் களைகட்டு எறிந்தார் என்பது பயனில் கூற்றாம். சிறப்புப்பெயர் கொல்லிப்-பாவை என்பது செயற்கு அரிய உமது அழகிய வடிவினால் அறிந்தேம். அறியாத இயற்பெயரை மொழியும். எம்மை இகழ்வதனை ஒழிவீராக என்றவாறு. செயற்கு அரிய திருஉரு - எழுதுதற்கு அரிய திருஉரு.

பகுதி - மதி உடன்படுத்தல். துறை - பெயர் வினாதல்.

[கழிகவின் - மிக்க அழகு. கொழுநனை - பருத்த மொட்டு. கொழுநனை - கணவனை. மொழியுமொழியும் - மொழியும் ஒழியும் - சொல்லுவீராக, நீக்குவீராக. இகழ்வதனை ஒழியும் - அலட்சியம் செய்வதனை நீக்குங்கள்.]

**பூந்துளபம் புனைதிருமால் பொன்னியினுள் பொறிஅரவில் புயல்போல் வண்ணம்**
**தோய்ந்துதுயில் பயில்அரங்கே சனைத்தொழுமா றன்துடரித் தோகை-போல்வீர்!**
**வாய்ந்த வனப்பு அல்குலுக்குத் தனக்குவடு தனக்குவடு வகிராம் உங்கள்**
**ஏந்துஎழில்கண் புலம்கொளநின்று இடையேதங் கிடையேதங் கியம்புவீரே. (647)**

இது கடை இரண்டுஅடியும் இடைமடக்கு.

(இ-ள்) வாய்ந்த வனப்பு என்பதனை வனப்பு வாய்ந்த என மாற்றிக்கொள்க. வனப்பு வாய்ந்த அல்குலுக்குத் தனக்குவடு தனக்கு வடுவகிராம் உங்கள் ஏந்து எழில் கண்புலம் கொள - அழகு வாய்ந்த அல்குலுக்கும், தனமாகிய மலை-தனக்கும், வடுவகிர் நிகராகிய உங்கள் உயர்ந்த அழகினை உடைய கட்புலனாக. இடையே தங்கு இடை ஏது அங்கு இயம்புவீரே - இரண்டிற்கும் நடுவே குடியிருக்கும் மருங்கானது எதுதான் அவ்விடத்து என்று வினவுவேற்கு, இது என்று சொல்லுவீராக என்றவாறு. எனவே, என் கண்ணிற்குப் புலப்படுவது இன்று என்பது போந்த பொருள்.

பகுதி - மதிஉடன்படுத்தல்; துறை - இடை வினாதல்.

[தனக்குவடுதனக்கு - தனமாகிய மலைக்கு. வடுவகிர் - மாவடுவை நீளத்தில் இரண்டாகப் பிளந்த துண்டங்கள். இடையே தங்கு இடை ஏது அங்கு - மார்பிற்கும் அல்குற்கும் இடையே அமையவேண்டிய இடை அவ்விடத்தில் யாது உள்ளது?]

**உரைஆர்ந்த தொகைப்பனுவல் முழுதுஉணர்ந்தும் உலகியல்ஒன்று உணராதார் போல்**
**வரையாது மறைபுரிகோ மான்நினைவும் மான்நினைவும் மனத்துள் நாடி**
**விரைஆர்நன் பசுந்துளபத் திருமாலைத் திருமாலை வில்லிபுத்தூர்த்**
**திரைஆடைப் புவிமகள்தன் கோமானை வணங்கலரின் திகைக்கின்றேனே. (648)**

இஃது இடை இரண்டுஅடியும் இடைமடக்கு.

இதனுள், 'கோமான்! நினைவும் மான் நினைவும் மனத்துள் நாடி' - தலைவனே! உனது உள்ளத்து நினைவும், என் மான்போலும் விழியினை உடையாள் மனத்துள் நினைவும் எனது மனத்துள் குறித்து. துளபத் திருமாலைத் திருமாலை வணங்கலரின் திகைக்கின்றேனே - துளபமாகிய அழகிய மாலையை உடைய திருமகளோடும் கூடிய மாயோனை வணங்காத் தீயமக்களைப் போல யான் மனம் மறுகாநின்றேன். உலகியல் ஒன்று உணராமை - உலகநடை சிறிதும்

அறியாமை. மறைபுரிதல் - வரைந்துகொள்ளாது களவுஒழுக்கத்தை நீட்டிக்க விரும்புதல்.

பகுதி - பகற்குறி; துறை - வருத்தம் கூறி வரைவுகடாதல்.

["கருத்துக்கள் செறிந்த பலநூல்களையும் முற்றக்கற்றும் உலகியலைப் பற்றிச் சிறிதும் உணராதவர்களைப் போல, தலைவியை மணந்துகொள்ளாது களவொழுக்கத்தையே நீட்டிக்க விரும்பும் தலைவனே! உன் கருத்தையும் தலைவியின் கருத்தையும் என் மனத்துள் கருதி மணம் கமழும் சிறந்த திருத்துழாய்மாலையை அணிந்த திருமகள்-கேள்வனாய், வில்லிபுத்தூரில் உகந்தருளியிருக்கும், அலைகடலை ஆடையாக உடுத்த நிலமடந்தையின் தலைவனான எம்பெருமானை வணங்காத தீயமக்களைப் போல யான் மனம் தடுமாறுகிறேன்'' என்று தோழி தலைவனிடம் கூறியவாறு.]

**மீனம்ஆ தியவாய அவதாரம் புரிந்துஅருள்மால் விண்ணோர் போற்றும்**
**வானமா மலைவளர்சீ வரமங்கை வரமங்கை மார்நீர்என்றால்,**
**மோனமாய் இருந்ததனால் பயன்ஏது? விருந்தினர்க்கு முகமன் கூறி**
**ஈனமாகிய உறுநோய் களைகண்ணாங் களைகண்ணாங்கு இயற்றி லீரே. (649)**

இஃது இரண்டாம் அடியும் ஈற்றடியும் இடைமடக்கு.

இதனுள், சீவரமங்கை வரமங்கைமார் நீர் என்றால் - சீவரமங்கை என்னும் திருப்பதியில் சேட்டமாகிய மங்கைப்பருவத்து மடந்தையரை ஒப்பீர் என்று உலகில்உள்ளார் உம்மைக் கூறுவராயின். பருவம் பெதும்பையாயினும் வியப்-பினால் 'மங்கைப்பருவத்து உள்ளாரை ஒப்பீர்' என்றால். மோனம் - மௌனம். நோய் களை கண்ஆம் களைகண் ஆங்கு இயற்றிலீர் - காமமாகிய பிணியைக் களையும் கருணையாம் காவலை நீர் செய்கிலீர். ஒழிந்தனவும் உரையிற்கொள்க.

பகுதி - மதிஉடன்படுதல்; துறை - மொழிபெறாது வருந்தல்.

['மீன் முதலிய அவதாரங்களை எடுத்து அருள்புரியும் திருமால் உகந்தருளியிருக்கும், தேவர்களும் போற்றும்படியான வானமாமலை என்று வழங்கும் மேம்பட்ட சீவரமங்கை என்ற திருத்தலத்தில் உள்ள மேம்பட்ட மங்கைப்பருவ மகளிர் நீர்' என்று உலகில்உள்ளார் உம்மைக் கூறுவராயின், வினவிய வினாவிற்கு விடை இறுக்காது வாளா இருப்பதனால் பயன் யாது? உம்மை நாடி வந்த விருந்தினருக்கு உபசார வார்த்தைகள் கூறிக் கீழ்ப்பட்டதான காமப்பிணியை நீக்கும் கருணையாகிய காவலை நீர் செய்யாமல் இருக்கின்றீரே!

சீவரமங்கை - திருத்தலம். வரமங்கை - மேம்பட்ட மங்கைப்பருவம். உறுநோய் களை - மிக்க நோயினைப் போக்கும். கண் - கருணை. களைகண் - பற்றுக்கோடாகிய காவல்.]

இவை ஆறும் ஈரடி இடைமடக்கு.

இனி, மூன்றுஅடி இடைமடக்கு வருமாறு:

**இருங்கணைஇன்று; இவண்உறுஇவர் தனுவேட்டை; தனுவேட்டை இசையாது; எவ்வுள்**
**வரும்திருமால் பனிவரைமேல் காவியங்கண் காவியங்கண் மதிஉட் கொண்-டோர்**
**ஒருங்குபுகழ் வதற்குஅரிதாம்; மாதினைமாதினைக் காவல் உகந்தாள் என்கை**
**பொருந்துவதுஅன்று; இருவரும்தம் முள்காதல் மதர்நோக்கின் புகல்கின் றாரே. (650)**

இஃது ஈற்றடி ஒழிந்த ஏனை மூன்று அடியும் இடைமடக்கு.

(இ-ள்) இவ்விடத்து இப்புனத்து உற்ற இவர் கையில் பெருமையை உடைய கணையும் இல்லை. இவர் யாக்கையும் தளர்ச்சி உடையது. ஆகையால் இவர்

வில்வேட்டையும் பொருந்துவதன்று; இஃது அன்றி, இம்மாதராளைப் பெரிய தினைக்காவல் விரும்பினாள் என்கையும் உண்மையன்று; இவள் நீலோற்பலம் போன்ற கண்களைப் பல காப்பியங்களையும் உணர்வினால் உட்கொண்டோர்-எல்லாம் கூடியும் புகழ்தற்கு அரிதாம்; இருவரும் ஒருவர் ஒருவர்மேல் உள்ள உள்ளக்காதலைக் கண்களால் உரைக்கின்றனர் என்றவாறு.

பகுதி - குறையுற உணர்தல். துறை - இருவர்நினைவும் ஒருவழி உணர்தல்.

[தனு ஏட்டை - உடல் தளர்ச்சியுடையது. தனுவேட்டை - வில்வேட்டை. காவிஅம்கண் - கருங்குவளை போன்ற கண்கள். காவியங்கள் - காப்பியங்கள். மாதினை - பெண்ணாகிய தலைவியை. மா தினை - பெரிய தினைக்கொல்லை.]

**சுனையுள் நீல்நிறம் நாண்மலர் நாண்மலர் தொறும்துணர் தெகிழ்ந்துஉக்க**
**நனையுள் மூழ்கிய பலவின்இன் சுளையினை நாங்கைமால் வரைக்கிள்ளை**
**அனைய பேடைவாய் அருத்தியின் அருத்தியின் புறுநிலை யதுகண்டுஓர்**
**நினைக லான்அழுங்கு ஆற்றலை ஆற்றலை, நினதுகண் உறின்; மானே!** (651)

இது முதலயல்அடி ஒழித்து ஏனை மூன்றுஅடியும் இடைமடக்கு.

(இ-ள்) சுனையின்கண் உண்டாவதாய நீலமணியின் ஒளியும் உவமைக்கு நாணும் நீலோற்பலம் பக்குவம் வந்து மலருந்தொறும் அகவிதழ் நிறைந்து ஒழுகிய தேனின்கண், கரைசார்ந்த சோலைப்புறத்து வீசு கொம்பர்நின்றும் அளிந்து வீழ்ந்து நனைந்த பலவின் இனிய சுளையைத் திருநாங்கை மாயோன்-வரையில் சேவற்கிளியானது தனது உயிர்அனைய பேடைவாயில், அன்பினால் அருத்தி இன்பம் எய்தும் நீதியைக் கண்டு, ஒருவராலும் நினைத்தற்கரிய பெருமையை உடையான் ஒருவன் இரங்கும் இரக்கத்தின் மிகுதியை நினது கண்காணின் ஆற்றுவாய் அல்லை, மான்போலும் கண்ணினை உடையாய்! என்றவாறு.

ஒருவராலும் என்பதும், உயிர் என்பதும், பேடை என்பதனால் சேவல் என்பதும் வருவிக்கப்பட்டன. பகுதி - குறைநயப்பித்தல்; துறை - விரவிக் கூறுதல்.

[நீல்நிறம் நாண் மலர் - நீலமணியின் ஒளி உவமை கூறுதற்கு வெட்கப்படும் குவளைமலர். நாண்மலர்தொறும் - புதிதாக மலருந்தோறும். அருத்தியின் அருத்தி - விருப்போடு உண்பித்து. நினைகலான் - ஒருவராலும் நினைத்தற்கு அரிய பெருமையை உடையவன். அழுங்கு ஆற்றலை - வருந்தும் மிகுதியை. ஆற்றலை - நீ பொறுக்க-மாட்டாய்.]

**மாமடந்தை குடிபுகுந்த அன்பில்உறு அன்பில்உறு மாயோன் வெற்பில்**
**காமருவண் டினமே! நீர் தாம்தாம்தாம் தாம்எனவாழ் கமல வைப்பில்**
**பூமடந்தை முகமலர்போன்று ஒருகமலத்து இருகுவளை பூத்த வாகத்**
**தாம்மருவிக் குமுதமும்வெண் முல்லையும்முல் லையும்உளவோ சாற்று வீரே.**
(652)

இஃது ஈற்றயலடி ஒழித்து ஏனை மூன்றுஅடியும் இடைமடக்கு.

(இ-ள்) பெரியபிராட்டி குடிகொண்ட, அன்பில் என்னும் திருப்பதியில் மிக்க அன்பில் எய்திய மாயவனது வெற்பில் வந்த அழகிய வண்டுகாள்! நீங்கள்தாம் தாம்தாம்தாம் என்ற பாட்டோடும் வைகும் மருதநிலத்தின்கண்ணே உள்ள தாமரைஓடையின்கண், இந்தப் பூமகள் முகத்தாமரையை ஒப்பதாய் ஒரு தாமரையினிடத்து இரண்டு குவளை பூத்தனவாக நிலைபெற்றும் அவற்றுடன் ஒரு சேதாம்பலும் முல்லைஅரும்புகளும் முல்லையாகிய பண்ணும் கண்ணிற் கண்டனவும் செவியால் கேட்டனவும் உளவாகில் சொல்லுவீராக என்றவாறு.

பகுதி - இயற்கைப்புணர்ச்சி; துறை - வண்டொடு நன்னயம் உரைத்தல்.

[அன்பில் - ஒரு திருப்பதி. அன்பில் உறு - விருப்பத்தினால் பொருந்தியிருக்கும். முல்லை - முல்லைஅரும்பு போன்ற பற்கள். சேதாம்பல் - செவ்வல்லி போன்ற வாய். முல்லை - முல்லைப்பண்.]

**உருவளர்மாத் தினமகலத் துறுதிறத்தில் பயோதரங்கள் ஒருங்கு தோய்ந்து**
**பொருவருநன் பரிமளம்கூர் வனமாலை வனமாலை பொருந்திச் செய்ய**
**பருதியுடன் பனிமதியும் இருபாலும் இருபாலும் பயின்று தோன்றும்**
**திருநெடுமால் பொருவரும், இவ் வடமலையும்; வடமலையும் முலைச்செந் தேனே! (653)**

இது முதலடி ஒழிந்து ஏனை மூன்றடியும் இடைமடக்கு.

(இ-ள்) முத்துவடம் கிடந்து அசையும் முலையொடும் கூடிய, தேன் போலும் மொழியினை உடையாய்! ஒளி தழையாநின்ற பெரிய பிராட்டி நாளும் திரு-மார்பில் குடிகொண்ட கூறுபாட்டால், அவளுடைய திருமுலைச்சுவடுகளைத் தழீஇயதுடன் ஒப்பில்லா மணத்தைப் பெருப்பித்துக் காடாகிய இயல்பை உடைய துளபமாலையையும் பொருந்தி, செம்மையுடைய நேமியாகிய ஆதித்தனுடன் பாஞ்சசன்னியமாகிய குளிர்ந்த மதியையும் வலம் இடம் என்னும் இரண்டுபக்கமும் தரித்திருக்கும் முறையும் இடைவிடாத தோற்றப்-பொலிவு உண்டாம் திருவொடும் கூடிய மாயோனை ஒக்கும், சினையோடும் வளராநின்ற மாமரத்தின் கூட்டம் தன்னிடத்து உற்ற கூறுபாட்டோடும் காள மேகங்கள் ஒக்கத் தவழ்தல் பொருந்தியும் ஒப்பில்லாத நல்ல மணத்தைப் பெருக்கும் காடாகிய இயல்பை உடைய துளபமாலை பொருந்தியும் ஆதித்தனுடன் சந்திரனும் இரண்டுபக்கமும் இருக்கும் முறையும் பொருந்தியும் தோன்றும் இவ்வடவேங்கடமாகிய மலையும் என்றவாறு.

இதனுள் வனமாலை வனமாலை என்பது அத்தச்சிலேடை. பருதியும் பனிமதியும் என்பது மாட்டேறு இல்லா உருவகம். ஒழிந்தன சத்தச்சிலேடை.

பகுதி - குறைநயப்பித்தல். துறை - அறியாள் போறல்.

[மாயோனை ஒக்கும், இவ்வடவேங்கடமாகிய மலையும் என்க. உருவளர்மா - ஒளி தழைக்கும் பெரியபிராட்டி. தினம் - நாள்தோறும். உரு வளர் மாத்து இனம் - சினைகளோடும் வளரும் மாமரத்தின் கூட்டம். அகலம் - மார்பு. கூறுபாடு. பயோதரம் - முலை, மேகம். இருபால் - இருபக்கம், இருக்கும் முறை. பகுதி - சூரியனைப் போன்ற சக்கரம். பனிமதி - குளிர்ந்த சந்திரன் போன்ற சங்கம். வடமலையும் - திருவேங்-கடமலையும். வடம் அலையும் - முத்துவடம் அசைகின்ற. இப்பாடல் திருமாலுக்கும் திருவேங்கடமலைக்கும் சிலேடை.

வனம் மாலை வனமாலை - காடாகிய இயல்பை உடைய திருத்துழாய் மாலை. இது திருமாலுக்கும் வடவேங்கடத்துக்கும் ஒரே பொருளில் பொருந்துவதால் பொருள்பற்றிய சிலேடையாகிய அத்தச்சிலேடை.

சுதர்சனமாகிய பருதி, பாஞ்சசன்னியமாகிய பனிமதி என்று கூறாது வாளா பருதி, பனிமதி என்று கூறியது மாட்டேறு இல்லா உருவகம்.

'உருவளர்மாத் தினமகலத்துறு', 'பயோதரங்கள்', 'வடமலையும்' என்பன சொல் பற்றிய சிலேடை ஆதலின், சத்தச்சிலேடை எனப்பட்டன.

அறியாள் போறலாவது தலைவியைத் தன்னோடு கூட்டுவதற்குத் தன்னை வேண்டிய தலைவன்திறமாகத் தோழி கூறியவற்றையும் அவள் தலைவியை வேண்டியவற்றையும் தலைவி தன்மனத்துக் கொள்ளாதவள் போல அவள்கூற்றுக்கு விடை பகராது, வேறொரு செய்தியைப் பற்றிக் கூறுதல். வேறொரு செய்திபற்றிக் கூறினும் தோழிக்குக் குறிப்பால் தன் கருத்தைத் தெரிவிப்பாள் என்பது பயன். திருமகளுடைய முலைச்சுவடு

படுதலால் திருமால் அணியும் வனமாலை பொலிவுறுதல் போலத் தன் கூட்டத்தால் தலைவன் பொலிவு பெற்றுத் தோழி அவனுக்காகச் செயற்படும் அளவு அவள்-உள்ளத்தைக் கவர்ந்துள்ளான் என்பது குறிப்பு.]

**முளைநி லாவினை நேர்நுதல் நேர்நுதல், முகிழ்நகை, அணைமென்தோள்,**
**இளைய ளாம்இவட்கு ஏமம்ஏ மம்அதுஉற ஏதிலர் அணிவான்நற்**
**கிளையின் ஈண்டினர் கேள்இனிக் கேளினிக் கெழுதகை உறல்வேண்டில்**
**களைக ணான்இறை கடிநகர்க் கடிநகர் காண மன்! விரைவாயே.** (654)

இஃது நான்கு அடியும் இடைமுற்று மடக்கு.

(இ-ள்) இளம்பிறை உவமை குறிக்கப்பட்ட சிறிய நுதலினையும், முல்லைமுகை போன்ற பற்களையும், அணை போன்ற மெல்லிய தோள்களையும், இளமைத்-தன்மையையும் உடையளாம் இவட்குப் பொன்னை இன்பம் உற அணிவான் அயலவர் மகட்பேசித் தமரொடும் எமது மனையிடத்துக் குழுமினர் ஆகையால் இனிக் கேட்பாயாக; மன்னனே! உனது சுற்றத்தோடும் எம்மோடு உண்டாகிய இந்த நட்பு மிகுதல் வேண்டினையேல் உலகத்து உயிர்கட்குக் காவலாகிய இறைவனாம் மாயோன் திருக்கடிநகரிடத்துத் திருமணம் நகரில்-உள்ளார் காண அயலவர்க்கு முன்னே இவளை வரைந்துகொள்வான் விரை-வாயாக என்றவாறு.

நேர்நுதல் - சிறுநுதல். 'சிறுநுதல் பேரமர்க்கண் செய்யவாய்' (யா. கா. 4) என்றார் பிறரும். பகுதி - உடன்போக்கு; துறை - மகட்பேச்சு உரைத்தல்.

[நேர்நுதல் - ஒப்பாகச் சொல்லப்படுகின்ற, சிறிய நெற்றி. 'நுதல் அடி நுசுப்பு என மூவழிச் சிறுகி' (கலி. 108) என்பது உத்தம இலக்கணம். ஏமம் - பொன், இன்பம். கேள் - கேட்பாயாக. இனி - இப்பொழுது. கேளின் - உறவினரோடு. கடிநகர் - கண்டங்கடிநகர் என்ற திருத்தலம். கடி - மணம். நகர் - ஊர். மன் - அரசனே.]

இவை பதினைந்தும் இடைமடக்கு.

இனி அடி இறுதிமடக்கு வருமாறு.

**கூன்பிறைய வெண்கோட்டின் கொன்னாகங் கொன்னாகந்**
**தான்பதைத்து மூலம்எனத் தாழாது உதவிய மால்**
**வான்புகழும் தென்நாகை மான்அனையீர்! வண்தழைஇங்கு**
**ஏன்புரிந்து கொள்ளாது இருப்பது? இசைப்பீரே.** (655)

இது முதலடி இறுதி மடக்கு.

(இ-ள்) கூன்பிறைய வெண்கோட்டின் கொல் நாகம் கொன் ஆகம் தான் பதைத்து - வளைந்த பிறை போன்ற வெண்கோட்டினால் கொல்லும் யானை பெரிய உடம்பு நடுக்குற்று. மூலம் எனத் தாழாது உதவிய மால் - மூலம் என்று கூறத் தாமதியாது உதவிய மாயோன்.

பகுதி - சேட்படை. துறை - தழைகொண்டு சேறல்.

[கொன் - பெருமை. ஆகம் - உடல். நாகம் - யானை. திருமால் எழுந்தருளியிருக்கும் தேவர் புகழும் அழகிய நாகைநகரில் உள்ள மானை ஒத்த மகளிரே! இவ்விடத்தில் வளமான தழையாடையை நீங்கள் ஏன் விரும்பி வாங்கிக்கொள்ளாமல் வாளா இருக்கின்றீர் என்ற காரணத்தை உரைப்பீராக.]

**தோலாத நேமிமுதல் ஐம்படையும் சூழ்ந்துஇறைஞ்சப்**
**பாலாழியுள் துயில்கூர் பன்னகத்தான்; பன்னகத்தான்**
**மேலாம் அவுணன் உரம்கிழித்த விண்ணகரான்;**
**காலான என்தலைமேல் வைத்துக் களித்தேனே.** (656)

இஃது இரண்டாம்அடி இறுதிமடக்கு.

இதனுள், பன்னகத்தான் - பாம்புஅணையான். பல்நகத்தான் மேலாம் அவுணன்-உரம் கிழித்தான் - பல நகங்களால் வெற்றியான் மேம்பட்ட இரணியன் உரத்த மார்பைப் பிளந்தான். ஒழிந்த அகலம் உரையிற்கொள்க.

திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து.

[போரில் தோல்வி உறாத சக்கரப்படை முதலிய ஐம்படைகளும் தன்னைச் சுற்றிலும் விளங்க, பாற்கடலில் அறிதுயில் கொள்ளும் பாம்புப்படுக்கையனாய்ப் பலநகங்-களாலும் இரணியன் மார்பினைப் பிளந்த திருவிண்ணகரத்து இறைவனுடைய திரு-வடிகளை என் தலைமேல் சூட்டி மகிழ்கின்றேன். பன்னகம் - பாம்பு. பல்நகம் - பலவாகிய நகங்கள்.]

**சூழித் தறுகண் கடாயானை தோலாத**
**பாழிப் பகுவாய் இடங்கரின்கைப் பட்டநாள்**
**ஆழிப் படையுடன்சென்று ஆள்அரியை ஆள்அரியைக்**
**காழித் திருமாலைக் கண்டுஉள் களித்தேனே. (657)**

இது மூன்றாமடி இறுதிமடக்கு.

இதனுள், ஆள் அரியை ஆளரியை, காழித் திருமாலைக் கண்டு உள் களித்-தேனே - ஆண்ட அரி என்னும் திருநாமத்தை உடையானை, நரனும் சிங்கமும் ஆனானை, சீகாழியில் வாழும் திருமாலைக் கண்களால் கண்டு உள்ளம் களித்தேன்.

திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து.

[முகபடாம் அணியத்தக்க, அஞ்சத்தக்கஇடத்தும் அஞ்சாமையை உடைய மதயானை-யான கசேந்திரன், ஒன்றற்கும் தோற்று அறியாத வலிய பிளந்த வாயை உடைய முதலையின்பால் அகப்பட்ட அன்று, சக்கரப்படையுடன் சென்று காப்பாற்றிய அரியாம் நரசிங்கப்பெருமானைக் காழியில் கண்டு உளம் களித்தேன். ஆள் அரி - காப்பாற்றும் திருமால்; ஆள்அரி - நரசிங்கம்.]

**அண்ணாந்து எழுந்த துணைமுலையார்க்கு ஆருயிர் தம்**
**கண்ணாம் கொழுநர்எனும் கட்டுரைகேட்டு உற்றுஉணர்ந்தும்,**
**தண்ணார் வகுளத் தமிழ்மாறர்க்கு அன்புஇலர்போன்று,**
**எண்ணாது அகன்றனரால்; என் சுகமே? என்சுகமே! (658)**

இது நாலாமடி இறுதிமடக்கு.

என்சுகமே! என் சுகமே - என்னுடைய கிளியே! எனக்கு என்ன மகிழ்ச்சி உள்ளது?

பகுதி - பொருள்வயின் பிரிதல்; துறை - பறவையொடு பரிவுற்று உரைத்தல்.

['மேல்நோக்கி வளர்ந்த இருதனங்களையும் உடைய மகளிருக்கு அரிய உயிராவார் தமக்குப் பற்றுக்கோடாக இருக்கின்ற கணவர்' என்ற பொருள் பொதிந்த வார்த்தையைக் கேட்டதனோடு அனுபவத்தால் அறிந்தும், குளிர்ந்த மகிழம்பூமாலையை அணிந்த சடகோபனிடம் அன்புஇல்லாதவர்கள் போல, என் துயரம் பற்றி எண்ணாது, என் தலைவர் பொருள் தேடச் சென்றுவிட்டார். என் கிளியே! அவர் இல்லாமல் எனக்கு என்ன மகிழ்ச்சி உள்ளது? சுகம் - கிளி, மகிழ்ச்சி.]

இவைநாலும் ஓரடி இறுதிமடக்கு.

இனி ஈரடி இறுதிமடக்கு வருமாறு:

**மூன்றாய் அமைந்ததொழில் முன்னானை முன்னானை**
**தான்தாழ் தடத்து அழைத்த சங்கரியைச் சங்கரியைத்**

**தோன்றாது இடத்து அமைத்த சூழ்ச்சியனைத் தொல்லைநாள்**
**ஈன்றானை ஈன்றானை என்உளத்தே வைத்தேனே.** (659)

இது முதல் இரண்டு அடியும் இறுதிமடக்கு.
(இ-ள்) சிருட்டி, திதி, சங்காரம் என்று தன்னால் அமைக்கப்பட்ட மூன்றிற்கும் அங்கு அங்கு முன்னாய் இருப்பவனை, முதலை முன்னான யானை தான் ஆழ்ந்த தடத்து நின்று 'மூலம்' என்று அழைத்த சங்கினையுடைய அரி என்னும் திருநாமத்தை உடையானை, உமையை வேறுபட்டுத் தோன்றாது தனது இடப்பாகத்து அடக்கின விசாரத்தை உடைய அரனை முற்காலத்து ஈன்ற பிரமனை ஈன்றவனை, 'முத்தி அளிக்கவல்ல பிரமம்' என்று உட்கொண்டேன் என்றவாறு.
திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து.
[முன்னான் - முற்பட்டவன். முன் ஆனை - முதலைக்கு முன் இருந்த யானை. சங்கு அரியை - சங்கினை ஏந்திய திருமாலை; சங்கரியை - உமாதேவியை.]

**கோதுஅறவில் வாங்கிஉடக் குஞ்சரத்தாற் குஞ்சரத்தாற்கு**
**ஏதம் இழைத்த இராவணியை அன்று தவ-**
**சாதனத்தால் கொன்றபிரான் தம்முன்னைத் தம்முன்னைப்**
**பாதகம் தீரப் புகழ்வார் பாதம் பணிந்தேனே.** (660)

இது முதலடியும் மூன்றாமடியும் இறுதிமடக்கு.
(இ-ள்) குற்றம் தீரத் தனுவைக் கைக்கொண்டு தொடுக்கும் அம்பினால் ஐராவதப்பாகனான இந்திரனுக்கு மானபங்கத்தை உண்டாக்கின இந்திரசித்தை முற்காலத்துத் தவசரிதையால் கொன்ற இலக்குமணன் என்னும் சுவாமிக்குத் தமையனை, யாவரேயாயினும் தங்கள் கழிபிறப்பின் பாவம் தீரப் புகழாநின்றார் அவர்பாதத்தை எனது பிறவித்துன்பம் நீங்க வணங்கினேன் என்றவாறு.
திணை - பாடாண்; துறை - பழிச்சினர்ப் பணிதல். (குருகாமான்மியம்)
[உடக்கும் சரம் - தொடுக்கும் அம்பு; குஞ்சரத்தான் - வெள்ளையானையை உடைய இந்திரன். இராவணி - இராவணன் மகனான இந்திரசித்து. தவசரிதை - தவவாழ்க்கை.]

**பொன்பொற்று இலங்குமலர்ப் பூவையே! பூவையே**
**மன்பொன் திருமேனி மாயோன் வடமலைமேல்,**
**மின்பொன் தொடித்தடக்கை கூப்பாத வீறு என்னோ,**
**நின்பொன் திருநுதற்கு நேர்மதிக்கும் நேர்மதிக்கும்?** (661)

இது முதலடியும் ஈற்றடியும் இறுதிமடக்கு.
இதனுள், மலர்ப்பூவையே - தாமரையிலிருக்கும் திருமகளை ஒப்பாய்!
பூவையே மன்பொன் திருமேனி - காயாம்பூவினை ஒத்த மிக்க பொலிவினை உடைய திருமேனி.
நின் பொன் திருநுதற்கு நேர்மதிக்கும் நேர்மதிக்கும் - உனது அழகிய நெற்றிக்கு உவமைகுறிக்கும் நேரிய பிறைக்கும். ஒழிந்தவும் உரையிற்கொள்க.
பகுதி - நாணநாட்டம்; துறை - பிறைதொழுக என்றல்.
[மாயோன் வடமலையில் நீ பிறையைத் தொழாத வேறுபாட்டின் காரணம் யாது? பூவை - திருமகள்; காயாம்பூ. நேர்மதிக்கும் - உவமையாகக் கருதும். நேர்மதி - நேரிய சந்திரன். முதலடியில், 'போற்று'விகாரப்பட நின்றது போலும்.]

**அந்தம் முதலாய் அமைந்தானை, எம்மனோர்**
**பந்தம் அறுத்துஆள் பரனை, சுமித்திரைதன்**

**மைந்தனொடும் கான்போந்த மாதவனை, மாதவனை,**
**எந்தையை, அல்லாது இறைஉண்டு என்னாவே, என்னாவே. (662)**

இது கடை இரண்டுஅடியும் இடைமடக்கு.
மாதவனை மாதவனை - திருமகள் காந்தனை, பெரிய தவசரிதை உடையவனை. எந்தையை - எம்முடைய சுவாமியை. அல்லாது இறை உண்டு என்னாவே என்நாவே - அவனை அன்றி வேறு பரப்பிரமம் உண்டு என்று கூறாது என்னுடைய நா.
ஏகாரம் இறுதியது ஈற்றசை. திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து. (குருகாமான்மியம்)

[இறுதியும் முதலுமாய் அமைந்தவனை, எம்மை ஒத்த மக்களுடைய பற்றுக்களைப் போக்கி ஆட்கொள்ளும் பரம்பொருளை, சுமித்திரைமகனான இலக்குவனோடும் காட்டிற்குச் சென்ற திருமகள்கேள்வனாகிய பெரிய தவவாழ்க்கை உடையவனை, என்சுவாமியை அல்லாது, வேறு பரப்பிரமம் உண்டு என்று என் நா கூறாது. என்னா என்நா - பன்மைஒருமை மயக்கம். என்னா - என்று கூறமாட்டா. என்நா - என் நாக்கு. என்நாவே - ஏகாரம் ஈற்றசை.]

**தாவாத பேரின்பம் சார்வதற்குச் சிற்றின்பத்து**
**ஏவாமல் என்னைமதன் எய்யாமை எய்யாமை,**
**மாவாதனை மறந்து வா மனனே! வாமனனே**
**தேவாதி தேவன்எனச் சந்ததமும் சிந்தித்தே. (663)**

இஃது இடை இரண்டடியும் இடைமடக்கு.
(இ-ள்) என்றும் அழிதல் இல்லாத பேரின்பத்தை அடைவதற்கு, என்னைக் காமன் சிற்றின்பத்திலே வேண்டி மூட்ட என்மேல் பஞ்சபாணங்களை இடைவிடாது தொடுத்திடாமல், வாமனாவதாரமாகிய நாராயணனே தேவர்க்கு எல்லாம் முதலான தேவன் என அனவரதமும் சிந்தித்துக் கழிந்த பிறப்பிலும் இப்பிறப்பிலும் உண்டான பொல்லாத வாதனைகள் யாவும் மறந்து, என்னோடு ஒத்து வா, என் மனனே! என்றவாறு.
திணை - காஞ்சியைச் சார்ந்த பொதுவியல். துறை - பொருள்மொழிக்காஞ்சி. திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து எனினும் ஆம்.

[எய்யாமை - இடைவிடாமல்; செலுத்தாமல். வாமனனே - குறளனான திருமாலே! வா மனனே - மனமே! என்னுடன் வா.]

**காண்தகுபொற் பூமடந்தை நற்பாரி; கண்ணன்பேர்;**
**ஆண்ட பழம்பதியும் அந்தாமம்; அந்தாமம்**
**கூண்டு அளிபண் பாடுதுழாய்; கூர்ஆழி கைவலத்தே**
**பூண்டது; அவன் சீர்உளத்தே பூரியார் பூரியார். (664)**

இது நாலாமடியும் இரண்டாமடியும் இறுதிமடக்கு.
(இ-ள்) காண்பதற்கு அழகிய பொற்பூவிலுள்ள திருமகள் நல்ல துணைவி; பெயர் கண்ணன்; அவன் புரந்த தொன்மைப் பதமாவது பரமபதம்; அழகிய மாலையாவதும் வண்டுகள் தேனை உண்டு பண்களைப் பாடும் வனமாலையாம்; கூரிய சக்கரத்தை வலக்கையில் பூண்டுள்ளான்; அவனதாம் திருமேனியின் காந்தியைத் தீயமக்கள் உளத்தால் தியானித்து அகத்தே நிறையார் என்றவாறு.
எனவே, எப்படி ஈடேறுவர் என்பது குறிப்பு. திணை - பாடாண்; துறை - புகழாரப் பழித்தல்; கடவுள்வாழ்த்து எனினுமாம். (குருகாமான்மியம்)

[அந்தாமம் - பரமபதம்; அழகிய மாலை; பூரியார் - மனநிறைவு எய்தார்; கீழ்மக்கள்.]
இவை ஆறும் ஈரடி இறுதிமடக்கு.

இனி மூன்றடி இறுதிமடக்கு வருமாறு:

**முன்நிலம் கொள்ளாதபில முன்பரையும் முன்பரையும்**
**தன்அரனால் ஈந்தவரம் தாவுறவே தாஉறவே**
**மன்இலங்கேசன் முதலாம் மைந்தரையும் மைந்தரையும்**
**இன்உயிர்உண்டான் குணம்கற்று இன்பம் பயின்றேனே.** (665)

இஃது ஈற்றுஅடி ஒழித்து ஏனை மூன்று அடியும் இறுதிமடக்கு.
(இ-ள்) முன்னாளில் பூமி இடம் கொள்ளாத பாதலத்தின் மூலபெலப்படையாய் வந்த வலியுடையாரையும், முன்னாள் உமை தன் புமானான சிவனால் கொடுப்பித்த வரமும் பிறர் கொடுத்த வரமும் அழிவுறப் பிரமன் 'பேராண்மை இருந்தபடியோ!' என்று மனத்திலே விசாரிக்க, இராவணன் முதலாய மிடுக்கு உடையாரையும் அவர்கள் புதல்வரையும் அவர்கள் இனிய உயிரை உண்ட தசரதராமன் கலியாணகுணங்களைக் கூறிப் பேரின்பம் எய்தினேன் என்றவாறு.
திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து. (குருகாமான்மியம்)
[முன்பரை - வலிமை உடையவரை. முன் பரை - முற்காலத்துப் பராசக்தி. தாவுற - அழிய. வேதா - பிரமன். உறவே - ஆராய்ச்சி செய்ய. மைந்தர் - வலியவர், புதல்வர். 'பரையும்' என்பதன் உம்மையை 'வரம்' என்பதனொடு கூட்டி வரமும் என எச்சஉம்மை ஆக்கப்பட்டது. அரன்வரமும் ஏனையார் வரமும் என்றபடி.]

**கண்படை உண்கண் சிறிதும்; கண்அகன்ற கண்அகன்றுஅவ்**
**ஒண்பொருள் செய்வார்பிரிவின் உள்நிறையும் உள்நிறையும்**
**பண்புற நில்லாது இனிஈங்கு என்செய்வேன்? பாமாறன்**
**தண்பொருநைத் தண்துறைவாழ் தாராவே! தாராவே.** (666)

இது கடைஅயலடி ஒழிந்த ஏனை மூன்றுஅடியும் இறுதிமடக்கு.
(இ-ள்) திருவாய்மொழி ஆகிய பனுவலைச் செய்த காரிமாறப்பிரான் பொருநைத் தண்துறையிடத்துத் தாரா ஆகிய பறவையே! இடம் விரிந்த நாட்டின்கண் நீங்கிச் சுத்த திரவியத்தை ஈட்டவேண்டிப் பிரிந்தார் பிரிவினால், என் உள்ளத்து நிறைந்தது ஒன்றாய 'மகளிர்க்குச் சிறந்தது' என உலகம் விசாரிக்கும் எனது நிறையானதும் எனது குணத்தின்வழி நில்லாது. அதுவேயுமன்றி, என் மையுண்ட கண்களானவை கணப்பொழுதும் உறங்குவதும் செய்கின்றில. மேல் இவ்-விடத்து யான் செய்வது யாதுதான்? என்றவாறு.
இது கொண்டுகூட்டுப்பொருள்கோள்.
பகுதி - பொருள்வயின் பிரிதல்; துறை - பறவையொடு பரிவுற்று இரங்கல்.
[பாமாறன் தண்பொருநைத் தண்துறை வாழ் தாராவே! கண் அகன்ற கண் அகன்று அவ் ஒண்பொருள் செய்வார் பிரிவின் உள்நிறையும் உள்நிறையும் பண்புற நில்லாது; உண்கண் கண்படை சிறிதும் தாராவே; இனி ஈங்கு என் செய்வேன்? - எனப் பிரித்துக் கூட்டிப் பொருள்செய்தல் கொண்டுகூட்டாம்.
கண் அகன்ற கண் - இடம் விரிந்த நாடு. உள்நிறை - என் உள்ளத்து நிறைந்த. உள் - உலகத்தாரால் கருதப்படுகின்ற. தாரா - நீர்ப்பறவை. தாரா - ஏற்கமாட்டா. பூட்டுவிற்-பொருள்கோளும் காண்க.]

**பாழிமருப்பு ஏனமதாய்ப் பாரிடந்தான் பாரிடந்தான்**
**சூழ்இயல்புஉற்று ஆடு புலித்தோல்உடையான் தோற்றம்சால்**
**காழ்வயிரக் குன்றுஎடுத்த கண்டகனைக் கண்டகனை**
**ஊழ்அறக் கொன்றான்நகர் பூந்தேனில்உறை யூர்உறையூர்.** (667)

இது முதலயலடி ஒழித்து ஏனை மூன்று அடியும் இடைமடக்கு.

(இ-ள்) வலிய கொம்பினை உடைய வராகமாகிப் பூமியை உழுது எடுத்தான்; பூதகணங்கள் சூழும் இயல்பு பொருந்தச் சுடுகாடு அரங்காக நடம் செய்யும் புலித்தோல் உடையானது தோற்றம் சான்ற மிகவும் திண்ணிய கயிலையை எடுத்த இராவணனாகிய பாதகனைச் செருக்களத்துக் கண்டு திருவுள்ளத்து இரக்கத்தின் முறையின்றிக் கொன்றவனது நகரமானது, கோட்டிலும் கொடி-யிலும் நீரிலும் உண்டாகிய பூவின் தேன்துளி திசைதிசை பரக்கும் திருஉறையூராம் என்றவாறு. திணை - பாடாண்; துறை - நகரவாழ்த்து; கடவுள்வாழ்த்துமாம்.

[பார் இடந்தான் - பூமியை உழுது எடுத்தான். பாரிடம்தான் - பூதகணங்கள் தாம். கண்டகனை - கொடியவனை. கண்டு - போர்க்களத்தில் கண்டு. அகனை - உள்ளத்தில் உள்ள இரக்கத்தை. பூந்தேனில் உறை ஊர் - பூக்களிலுள்ள தேனில் உள்ள துளிகள் பரவுகின்ற. உறையூர் - திருப்பதிகளுள் ஒன்று.]

**ஏற்றமாம் வெள்ஓதிமத்தான் மழவிடை ஊர்**
**தோற்றம்ஆர் வெய்ய புலித்தோல்உடையான் தோல்உடையான்**
**போற்றவாழ்வு உற்றவிருப் புள்ஏறு புள்ஏறும்**
**ஆற்றலான் அன்புஇலார்க்கு அன்பிலான் அன்பிலான். (668)**

இது முதலடி ஒழித்து ஏனை மூன்றுஅடியும் இறுதிமடக்கு.

(இ-ள்) மேம்பட்ட வெள்ளை அன்னவாகனனும், இளைய காளையை வாகன-மாக ஊர்கின்ற பெருமிதமுடைய புலித்தோலை உடையாக உடையவனும், ஐராவதத்தை உடையானும் போற்றுமாறு வாழும் தன்னிடத்து அன்பு உள்ளத்தில் மிகும் கருடனில் ஏறும் ஆற்றலுடையவனும் தன்னிடத்து அன்பு இலாதார்க்கு அன்பு இலானும் ஆகியவன் அன்பில் என்னும் திருப்பதியின் மாயோன் என்றவாறு.

எனவே, அயனும் அரனும் இந்திரனும் பரவும்படிக்கு வாழ்வு பெற்ற கருட-வாகனத்தில் ஏறும் பெருமை உடையான்அவன் யாவன் என்னில், அன்பிலா-தாரிடத்து அன்பிலாதான், அன்பில் என்னும் திருப்பதியின் மாயோன்; அவனுக்கு அன்பு செய்வீராயின், புலவீர்காள்! நுமக்கு முத்தி பெறலாம் என்பது குறிப்பு.

திணை - வாகை; துறை - பொருளொடு புணர்தல்.

[ஓதிமத்தான் - அன்னவாகனன் ஆகிய பிரமன். தோல் உடையான் - தோலை ஆடையாக உடைய அரன். தோல் உடையான் - யானையை வாகனமாக உடைய இந்திரன். தோல் - யானை. விருப்பு உள் ஏறு புள் ஏறு - விருப்பினை மனத்து மிகக்கொண்ட கருடனைச் செலுத்தும். அன்பிலான் - அன்பில் என்ற திருப்பதியில் இருப்பவன்; அன்பு அற்றவன்.]

**வாம வெங்கதிர் மண்டிலம் மண்டிலம்**
**நாம நேமியி னான்மறை நான்மறைப்**
**பூமன் தந்தை ஒண்பொற்கழற் பொற்கழற்கு**
**ஆம்அன்பார் அடிப்போது என்தலைத்தலை. (669)**

இது நான்கடியும் இறுதிமடக்கு.

(இ-ள்) ஆதித்தன் மண்டிலத்தை வட்டத் திருஆழியான் மறைத்தவன், நாலு வேதத்தையும் ஓதி உணர்ந்தவனாம் தாமரைப்போதில் பிறந்த பிரமனுக்குப் பிதா, அவனவாம் பொன்னின் வீரக்கழல் புனைந்த பொலிவினை உடைய

திருவடிகளிடத்து உண்டாம் அன்புடையார் திருவடித்தாமரைப்பூவை எனது சிரத்தின்கண் புனைந்தேன் என்றவாறு.

கழற்கு - ஏழாவது நான்காவதாயிற்று. மண்டிலம் - ஆதித்த மண்டலத்துக்கும் வட்டத்துக்கும் பேர். திணை - வாகை; துறை - பழிச்சினர்ப் பணிதல்.

[மண்டிலம் - சூரியமண்டலம், வட்டம். நேமியினால் மறை - சக்கரத்தால் மறைத்த. பொற்கழல் - பொன்னாலாகிய வீரக்கழல், பொலிவுடைய திருவடிகள். என் தலைத்-தலை - என் தலையின்கண்ண. தலை - உறுப்பு, இடப்பெயர்.]

இவை பதினைந்தும் அடி இறுதிமடக்கு. ஆக மடக்கு 45. இவை நாற்பத்-தைந்தும் ஓரடியும் ஈரடியும் மூவடியும் நாலடியுமாகி அடிதோறும் ஓரிடத்தை மடக்கியவை.

இனி, அடிதோறும் ஈரிடத்தனவாம் மூவகை மடக்கினுள், முதலொடு இடை-மடக்கு வருமாறு:

**கட்காவிகட்காவி நைவதும் வண்டுஇமிர் காமன்காமன் வாளிக்கு**
**உட்கா நைவுறும் நிறையும் முற்றுணர்ந்தும், உறுதி எனக்கு உறுகிலீரால்;**
**புட்காமன் வடமதுரைப் புரிகுழலீர்! காமஅலையுள் புக்கு ஆழ்ந்து**
**மட்காநின்றதற்கு உறுதிப்புணை மடல்என்றே உளத்தே மதிக்கின்றேனே.**
**(670)**

இது முதல்அடி முதலொடு இடைமடக்கு.

கண்காவிகட்கு ஆவி நைவதும் - கண்ணாகிய செங்கழுநீர்களுக்கு எனது ஆவி வருந்துவதும். கா மன் காமன் வாளிக்கு - காவினிடத்து நிலைபெற்ற காமன் பஞ்சபாணங்களுக்கு. ஒழிந்தவும் உரையிற் கொள்க.

பகுதி - மடல்; துறை - தன்துணிவு உணர்த்தல்.

[கலுழனை வாகனமாக விரும்பும் எம்பெருமானுடைய வடமதுரையில் வாழும் சுருண்ட கூந்தலை உடைய பெண்களே! உங்கள் கண்களாகிய கழுநீர்ப்பூக்களைக் கண்டு என் உயிர் வருந்துவதனையும் வண்டுகள் மொய்க்கின்ற சோலையில் நிலைபெற்ற மன்மதனுடைய அம்புகளுக்கு அஞ்சி என் அடக்கம் வருந்துவதனையும் முழுதும் தெரிந்துகொண்டும், எனக்கு உறுதி தருபவராய் நீங்கள் இருக்கின்றீர் அல்லீர்; காமக்கடலில் புகுந்து அழுந்தி வருந்துவதற்குக் கரை சேர்க்கத் தக்க தெப்பம் மடல் என்றே மடலேறுவதனை என் மனத்துக் கருதுகின்றேன்.

கா மன் - சோலையில் நிலைபெற்ற. காமன் - மன்மதன்.]

**அலையோடு உயர் பாற்கடல் கடைந்தான் அன்பில் அனையீர்! திருவயிறு ஆல்**
**இலையோ இலையோஇடை? நினைவு இங்கு என்னோ என்னோ வறியீர்; பொன்**
**மலையோமுலை வாள்நுதல் சிலையோ மைஉண் கருங்கண் குவளையுள் வன்**
**கொலையோ குடிகொண்டது? சிறிதும் குடிகொண்டிலவோ, கருணையுமே?**
**(671)**

இஃது இரண்டாம் அடி முதலொடு இடைமடக்கு.

இதனுள், 'வயிறு ஆல்இலையோ இலையோ இடை' என்பது நுமது அழகிய வயிறு ஆலின்இலையோ? இடை என்னும் உறுப்பு நுமக்கு இல்லையோ? என்பதாம். 'நினைவு இங்கு என்னோ? என்நோவு அறியீர்' என்பது இவ்விடத்து நுமது விசாரம் யாதோ? எனது காமப்பிணியையும் தெளிகிலீர் என்பதாம். ஒழிந்தனவும் உரையிற்கொள்க.

பகுதி - மதிஉடன்படுக்கல். துறை - இடை வினாதல்.

[அலைகள் உலாவுகின்ற மேம்பட்ட பாற்கடலைக்கடைந்த எம்பெருமானுடைய அன்பில் என்ற திருப்பதி போன்ற இயற்கைஅழகு உடைய மகளிரே! உங்கள் அழகிய வயிறு ஆல்இலையோ? உங்களுக்கு இடை என்ற உறுப்பு கட்புலனாகுமாறு இலதோ? உங்கள் எண்ணம் எதன்கண் உள்ளது? நீங்கள் என்உள்ளத்தில் உள்ள நோயை அறியாதீர்போல உள்ளீர். உங்கள் முலைகள் மலைபோன்று உள்ளன. ஒளி பொருந்திய நெற்றி வில்லோ? மை உண்ட நும் கண்களாகிய குவளைப்பூக்களில் வலிய கொலைத்தொழிலோ குடிகொண்டுள்ளது? கருணை என்ற பண்பின் கூறுகள் நும்மிடத்துச் சிறிதும் தங்கியிருக்கவில்லையா?]

**இரவிற்குப் படர்உழந்து இவ்விரவு ஒழிப்பாய்என இரங்கி, இடதுபாகம்**
**புரவிற்கும் களிவர, அன்று இரப்புஒழித்தது உறில், அரங்க, பொருள் நீ அன்றே!**
**கரவெற்புக் கதவெற்புக்கவின் அணியான் கங்கையன் கங்கையன் ஆம்அந்த**
**வரவெற்பன் மலர்அயனும் மகிழ்ந்திடச் சென்று உதவியதூஉம் மதிக்குங்-**
**காலே.** (672)

இது மூன்றாமடி முதலொடு இடைமடக்கு.

(இ-ள்) பிரமசிரத்தில் இரந்ததற்குத் துன்பம் மிகுந்து அவ்விரப்பினைத் தவிர்ப்பாயாக என்று சிவன் வேண்டற்குக் கருணை கூர்ந்து, அவனது இடப்பாகத்தை அச்சிவன் கொடுப்பத் தனதாக ஆண்ட அவன்பாரியாம் உமைக்கும் மனத்துள் களிப்பு உண்டாக, முற்காலத்து அவ்விரப்பைத் தவிர்த்த கருணையை விசாரிப்பார் உண்டாகில், அப்பரப்பிரமம் அரங்கநாதனே! நீயேயாம்; அதுவுமன்றிக் கை படைத்த மலை என்பதாம் கசேந்திரன் 'மூலமே!' என்ன அதற்கும், அரவும் எலும்பும் அழகு செய்யும் ஆபரணமாகப் புனைந்தான், பிரமசிரத்தைக் கையில் ஏந்தினான், கங்கையாற்றை வேணியில் கட்டினான், அந்தச் சேட்டமான வெள்ளிமலையானும், மலருளானாம் பிரமனும் மகிழும்படிக்குச் சென்று உதவியதூஉம் விசாரிக்கில் என்றவாறு.

ஒழித்ததும் என்னும் உம்மை செய்யுள்விகாரத்தால் தொக்கது. வெற்பன், மலர்அயனும் என்றது

'எஞ்சுபொருட் கிளவி செஞ்சொல் ஆயின்
பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல்' (தொ. சொல். 286)

என்பதனால் வெற்பனும் என்னும் சொல் வெற்பன் என உம்மையில்சொல் ஆயிற்று. திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து.

[இரத்தல் - பிச்சைஎடுத்தல்; இடத்து - தகரஒற்றுச் செய்யுள்விகாரத்தால் தொக்கது. இடது, வலது என்பன பிழைபட்ட சொற்கள்; இடம், வலம் என்பனவே உரிய சொற்கள். 'புரவிக்கும்' என்பது அடிஎதுகை நோக்கிப் 'புரவிற்கும்' என்றாயிற்று. புரவி - தனதாகக்கொண்டு பாதுகாப்பவள். இரப்பு ஒழித்ததும் - உம்மை தொக்கது. கரவெற்பு - கையை உடைய மலை போன்ற கசேந்திரன் என்னும் யானை. அரவு, எற்பு - பாம்பும் எலும்பும். கம் கையான் - மண்டைஓட்டைக் கையில் ஏந்தியவன். 'இரப்பு ஒழித்ததும் சென்று உதவியதூஉம் மதிக்குங்கால் பொருள் நீ அன்றே' என்று கூட்டிப் பொருள்செய்க.]

**அருள்மாலை பயின்ற கெழுதகை இகுளை, வேண்டலின் சென்று அறையாள்;**
**மாறன்**
**பொரும், ஆலைக்கு இடு கருப்புச்சிலை வளைத்து; இத்துயர்க்கடற்கு ஓர்**
**புணையும் காணேன்;**

**மருள்மாலை வரும்வரும் என்று இடைவேற்குஆய், எவன்செயல்மேல்?
மனனே! மல்லைத்
திருமாலைத் திருமாலைக் கண்டு அளியாய் அளியாய் நின்திருத்தார் என்றே.
(673)**

இது நாலாமடி முதலொடு இடைமடக்கு.

(இ-ள்) மனனே! இருண்ட மாலை வரும் வரும் என்று உண்டியும் உறக்கமும் தவிர்ந்து உடம்பும் உயிரும் மெலியாநின்ற எனக்கு, உடலும் உயிரும் ஆக்கம் எய்த, என்னிடத்து வைத்த கருணை இயல்பாக இடைவிடாத உரிமையை உடைய எனது உயிர்த்தோழியானவள் திருக்கடல்மல்லை மாயோனைச் சென்று கண்டு, 'நினது நாமத்தை விருப்புற்றமையால், என் உயிரான பொலிவினை உடையாள் பொலிவு இழப்ப, அவளிடத்து உண்டான மயக்கத்தை நினது திருவுளத்தால் கண்டு, நினது திருமார்பில் புனைவதாய வண்டுகள் நல்லது என்று ஆராயும் அழகிய திருமாலிகையைத் திருவருள் புரிந்து தாராய்' என்று வேண்டிக்கோடலோடும் கூறாள்; அஃது அறிந்து காமனானவன் ஆலையினிடத்து இடும்படிக்கு உண்டான கரும்பைச் சிலையாக வளைத்துப் பூப்பாணங்களை உடக்கிப் போர் செய்யாநின்றான். ஆதலால் இத்துன்பமாகிய கடலைக் கடக்க அவன் நாமம் ஆகிய புணையே அன்றி வேறு புணையும் காணேன். இனிமேல் யாது செய்வது? என்றவாறு.

திருமாலை, திரு மாலை - திருவினோடும் கூடிய மாலை, பொலிவினை உடையாள் மயக்கத்தை. கண்டு என்பதனைத் தோழி சென்று கண்டு எனவும், திருவுளத்தால் கண்டு எனவும் ஈரிடத்தும் கூட்டுக. அளியாய், அளியாய் என்பவற்றுள் முன்னையது ஒரு தொழிலினை மேற்செய்யாய் என்னும் எதிர்மறையாகிய முன்னிலை வினைச்சொல், அத்தொழிலைச் செய் என்ன எடுத்தலோசையால் கூறி வேண்டிக்கோடற்கண் உடம்பாட்டு முன்னிலை வினைச்சொல் ஆயிற்று. என்னை?

'செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல்
செய்என் கிளவி ஆகுஇடன் உடைத்தே' (தொ. சொல். 450)

என்றாராகலின் அறிக (இது நச்சினார்க்கினியர் கருத்து). பின்னது வண்டுகள் நல்லது என்று ஆராயும் என்பதாம். திருமாலை என்பது பிறன்போற் கூறியதாம். தலைவி கூற்று. முன்னிலை - தோழி. மனனே என்பது முன்னிலைப்புறமொழி. பொருள்கோள் - கொண்டுகூட்டு. மாட்டுறுப்பு எனினும் ஆம்.

திணை - பெண்பால்கூற்றுக் கைக்கிளை; துறை - மெலிவொடு கூறல்.

[மனனே! மருள்மாலை வரும் வரும் என்று இடைவேற்குஆய், அருள்மாலை பயின்ற கெழுதகை இகுளை, மல்லைத் திருமாலைத் 'திருமாலைக் கண்டு அளிஆய் நின்திருத்தார் அளி' என்றே வேண்டலிற் சென்று கண்டு அறையாள், காமன் ஆலைக்கு இடு கருப்புச்சிலை வளைத்துப் பொரும், இத்துயர்க்கடற்கு ஓர்புணையும் காணேன் என மாட்டிக் கொண்டுகூட்டிப் பொருள்செய்க. எங்கள் தலைவி என்னாது திரு என்றது தலைவியைப் பிறள் போலக் கூறியது. தோழி முன் இருப்பவும், அவள் செவியால் கேட்கும் வகையில் தலைவி தன் மனத்தை அழைத்துக் கூறியது முன்னிலைப்புறமொழி.]

இவை நாலும் ஓரடியிடத்து முதலும் இடையும் மடக்கியது.

இனி ஈரடி இடத்து முதலும் இடையும் மடக்குதல் வருமாறு:

**பொருந்தார் பொருந்தார் வரைமார்பில் புதையப்புதை யப்புதை வரிவில்,
வருந்தா வருந்தாபதன் மனது களிக்கக் களிக்க, மிதிலை புகுந்து,**

**இருந்தாரணியோர் புகழ வளைத்து இறுத்தான், இமையோர் இடுக்கண் உறாது**
**அருந்து ஆரமுது அன்று அருள் குடந்தை ஆராஅமுது என்அகத்து அமுதே.** (674)

இது முதல் இரண்டு அடியும் முதலொடு இடைமடக்கு.
(இ-ள்) சத்துருக்களாய் உள்ளார் சமர்முகத்துப் புறம்கொடாது போர்செய்யும் வெற்றிமாலை புனைந்த வரை போன்ற மருமத்தில் புதையும்படிக்குக் கட்டில் அம்பைத் தொடுக்கப்பட்ட நாரி வரிந்த தனுவை, இந்திரியங்களில் வியாபரிக்கும் சத்தாதிகளுக்குச் சற்றும் ஈடுபடாத அரிய தவத்தை உடையோனாகிய விசுவாமித்திரன் மனத்துள் பிரியம் ஓங்கப் பிராட்டி திருஉள்ளமும் சனகராசன் மனமும் களிக்க, மிதிலையுள் புகுந்து, பெரிய தாரணியோர் கொண்டாட வளைத்து முறித்தான்; அவன் யார் என்னில், விண்ணோர் துன்பம் எய்தாமை அரிய அமுதைக் கடைந்து கொடுத்த திருக்குடந்தை ஆராஅமுதம்; அவன் என்உள்ளத்துக்குத் தித்திக்கும் அமுதமாம் என்றவாறு.
திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து.
[பொருந்தார் - பகைவர்; பொரும் - போர் செய்கின்ற. தார் - மார்பில் அணியும் வாகைமாலை. புதைய - அழுந்த. புதை அப்பு தை வரிவில் - அம்புக்கட்டின் அம்பு தொடுக்கப்பட்ட நாண் ஏற்றப்பட்ட வில். வருந்தா - புலன் நுகர்ச்சியில் முயலாத. அருந்தாபதன் - அரிய முனிவன். களிக்க - விசுவாமித்திரன் மகிழ. களிக்க - சனகராசன் மகிழ. ஆராஅமுது - திருக்குடந்தை எம்பெருமான் திருநாமம்.]

**உமைஆளும் உமையாளும் பசுபதியும் உம்பரின் உம்பரின் வாழ்வுஎய்தும்**
**சுமையாக நிலைபெறும் ஈங்குஇது கிளையேல் எனநந்தி சொன்னபோதும்,**
**அமையாது உன்அமையாதுன்னக் கயிலை கிளைகிளைக்கை அரக்கன், ஆதி**
**சுமையான் எய்திய வரங்கள் காட்கரையாய்! களைந்திலையேல், களைகண் யாரே?** (675)

இது முதலடியும் மூன்றாமடியும் முதலொடு இடைமடக்கு.
(இ-ள்) உம்மை ஆட்கொள்ளும் உமையானவளும் சிவனும் உச்சிமலையின்கண் தேவர்களோடும் கூடிச் செல்வம் எய்தும் அவர்களைத் தனது சென்னியில் கொண்டுநிற்கும் இவ்விடத்து இந்த மலையை எடாதே கொள்வாயென நந்தி சொன்ன காலத்தும், அவன் உரைக்குமடங்காத, உன்னமரமும் மூங்கிலும் ஆச்சாவும் நெருங்கின அந்தக் கயிலையைக் கெண்டி எடுத்த இருபதாகிய கைகளை உடைய இராவணன், ஆதிகாலத்து இந்திரியங்களை அடக்கின பொறையால் எய்திய வரங்களைத் திருக்காட்கரையாய்! அழித்து அவனைக் கொன்றிலை எனின், உலகு உயிர்கட்குக் காவலாவார் யார்?
திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து. (குருகாமான்மியம்)
[உமை ஆளும் - உங்களை ஆட்கொள்ளும்; உமையாளும் - பார்வதியும். உம்பரின் - மலையின் மேலே; உம்பரின் - தேவர்களோடு. அமையாது - அச்சொற்கு இசைந்து மலையைப் பெயர்த்தலைத் தவிராது. உன், அமை, ஆ, துன் அக்கயிலை - உன்னமரம், மூங்கில், ஆச்சாமரம் நெருங்கி வளர்ந்த அக்கயிலைமலை. கிளை - கெண்டிய. கிளைக்கை - பல கைகளை உடைய. சுமை - பொறிபுலன்களை அடக்கும் பொறுமை. காட்கரை - ஒரு திருப்பதி.]

**இமையவரை இமையவரை மகிழ்விப்பான் பொருவில் பொருவில் ஏந்திச்**
**சமைய உடக்குபு சரம்தொட்டு எயில் ஒருமூன்று எரிகதுவத் தலைநாள் வென்ற**

**உமையவரும் மதிப்ப எயில்ஏழ்உடையான் பல்தலைக்கும் உறையூராய்! ஆடு**
**அமைஅமை வில்லினை வளைத்து அன்று ஏவினையேவினை; நினைப்-**
**போன்று அளியார் யாரே?** (676)

(இ-ள்) இமவான் என்னும் மலையைத் தேவர்களைக் களிப்பிக்கவேண்டி ஒப்பற்ற போர்புரிதற்கு உரிய வில்லாக எடுத்துக் குறைவற உடக்கி அம்பைத் துரந்து மூன்று கோட்டையினும் அனல் பற்ற முன்னைநாள் முப்புராதிகளை வென்ற உமைபாகரும் மதிப்பதாக ஏழு கோட்டையோன் ஆகிய இராவணன் பத்துத்தலைக்கும் திருஉறையூராய்! வெற்றி பொருந்தின மூங்கில்வில்லை வளைத்து முன்னாள் அம்பினை விட்டனை. நினைப்போல் உலகு உயிர்களைக் காக்கும் கருணைஉடைய கடவுளர் இல்லை என்றவாறு.

திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து. (குருகாமான்மியம்)

[இமைய வரை - இமயமலை; இமையவரை - தேவரை. பொருவு இல் - ஒப்புஇல்லாத; பொரு வில் - போர்செய்யும் வில். உமையவர் - பார்வதியைப் பாகமாக உடைய சிவபெருமான். ஆடு அமை - வெற்றி பொருந்திய. அமைவில் - மூங்கிலால் ஆகிய வில். ஏவினை - அம்பினை; ஏவினை - செலுத்தினாய்.]

**சுந்தரத் தோளிணை அழகர் துணைஅடிசேர் மகிழ்மாறன் துடரி நீடும்**
**சந்தனச்சோலையுள் உறைவார்க்கு, இறைவா! சங்கரன் நுதல்கண் தழலான் மேல்நாள்**
**வெந்திறல் வெந்திறல் வேளும் இரதி இரதியும் ஆண்மை விழை மென்-கொங்கை**
**மந்தர மந்தர மிடைவில் கரும்புருவம் கரும்புருவம், மதிக்குங்காலே.** (677)

[வெம் திறல் வெந்து இறல் வேளும் இரதி இரதியும், கொங்கை மந்தரம், அந்தரம் இடை, வில் கரும்பு உருவம் கரும் புருவம்]

இது கடை இரண்டுஅடியும் முதலொடு இடைமடக்கு.

(இ-ள்) இறைவனே! அழகிய திருத்தோளிணையை உடைய அழகர் உபய திருவடிகளை மனோவாக்குக்காயங்களால் பொருந்தின வகுளாபரணமாறன் துடரிமலையினிடத்து ஓங்கின சந்தனச்சோலையுள் உறைவார் கொங்கைக்கு உவமை குறிக்குங்கால் மந்தர பருவதமேயாம், இடை ஆகாயமாம், கரிய புருவம் காமனுக்கு வில்லாகிய கரும்பினது உருவமாம் என்றவாறு.

'சிவனுடைய நெற்றிக்கண்ணில் உண்டான தழலினான் முன்னைக்காலத்து வெவ்விய வீரம் வெந்து அதனோடும் உருவமும் இழந்த காமனும் விரும்புவ-தாம் இரதியும் ஆளுந்தன்மையை உவப்பதாம் காந்தியை உடைய கொங்கைக்கு' எனக் கூட்டுக.

பகுதி - பாங்கற்கூட்டம்; துறை - செவ்வி செப்பல்.

[வெந்திறல் வெந்து இறல் - கொடிய வீரம் வெந்து, உருவமும் இழந்த. வேளும் இரதி இரதியும் - மன்மதனும் விரும்பும் அவன்மனைவியாகிய இரதியும். மந்தரம் - மந்தர-மலை; அந்தரம் - ஆகாயம். வில் கரும்பு உருவம் - வில்லாகிய கரும்பின் வடிவம்; கரும்புருவம் - கரிய புருவங்களாம்.

'பெண்டிரும் ஆண்மை வெஃகிப் பேதுறு முலையினாள்' (சிந்தா. 587)

எனக் கொங்கைகளின் வனப்புக் கூறப்பட்டவாறு.]

**பொய்யாத பேரின்பம் வேண்டினர்கள் பேரண்டம் பூத்த உந்திச்**
**செய்யா! செய்யாள் விரும்பி உறை உறையூரா! எனவே திளைப்பக் கண்டும்**
**எய்யாமை எய்யாமை ஏத்திலர்; அஞ்சிலர், சிலர் அவ்வியம தண்டம்;**
**மெய்யாக மதிக்கிலர்; அந்தோ! அந்தோ! நரகத்தே வீழ்கின்றாரே.** (678)

இஃது இடை இரண்டுஅடியும் முதலொடு இடைமடக்கு.

(இ-ள்) அழிவுஇல்லாத பேரின்பத்தை விரும்பின அறிவுடையோர்கள், 'எண்ணில் பல்கோடி அண்டங்களைப் பெற்ற திருஉந்தியாகிய செறுவை உடையவனே! திருமகள் விருப்புற்றுக் குடியிருக்கும் திருஉறையூரை உடையவனே!' என்று ஒழிவில்லாது கூறிப் பேரானந்தம் எய்துவதனைக் கண்டும் கேட்டும், விட்டு நீங்காத அறியாமையால், சிலர் அவன் திருவடிகளையே ஏத்துகின்றிலர்; அவ் இயமதண்டத்தை நினைந்து அஞ்சுவதும் செய்கின்றிலர்; அதனை மெய் என்பதும் தெளிகின்றிலர். ஐயோ! ஐயோ! நரகின் கண்ணே வீழாநின்றனர் என்றவாறு. எனவே, எங்ஙனம் ஈடேறுவர் என்பது குறிப்பு.

திணை - பாடாண்; துறை - வாயுறைவாழ்த்து.

[செய்யா - வயலை உடையவனே! செய்யாள் - செந்நிறத்தவளாகிய திருமகள். விரும்பி உறை - விரும்பித் தங்கி இருக்கின்ற. உறையூர் - ஒரு திருப்பதி. எய்யாமை - எய்தாமை - விட்டு நீங்காமல் (உள்ள). எய்யாமை - அறியாமை. சிலர் அஞ்சிலர் என்க.]

**கைம்மலைக்கு அன்று உதவிய மால் காட்கரை மான், கற்புநிலை காட்டவேண்டி,**
**அம்ம(ன்)னை அம்மனை விரும்பிக் கி(ள்)ளை கிளைபோல்அயர்ந்திட வைத்து அகன்றகாலை,**
**நம்மனையைக் காண்தொறும் மெய்ந்நடுங்குதல்மேல், உணர்வுஅழிக்கும், நயந்து அக்கிள்ளை**
**எம்ம(ன்)னை எம்மனை புக்காள் இனி இனியபால் அளிப்பார் எமக்கு ஆர் என்றே. (679)**

இது முதலயல் அடியோடு நாலாம் அடி முதலொடு இடைமடக்கு.

(இ-ள்) கையை உடைய மலை என்பதாம் யானைக்கு, அது முதலை கைப்பட்ட நாள் 'மூலமே' என்று அழைப்பச் சென்று உதவிய மாயோன் திருக்காட்கரையின் மான்போலும் விழியினை உடையாள், 'நாணினும் கற்புச் சிறந்தது' என்று நூல் சொல்லக் குடிப்பிறந்தார்கண் நிலைபெற்றதனை எமக்கு அறிவிக்கவேண்டி, அழகிய மன்னனை எம்முடைய ஆய் விரும்பிக் கிள்ளையானது எமது கிளைபோல வருந்தும்படிக்குத் தோழி கைப்பட வைத்து உடன்போன காலத்து, யான் எமது மனையினது பொலிவுஅழிவைக் காணுந்தோறும் மெய் நடுக்குறுதல்மேலும், முன்னம் கூறிய அக்கிள்ளை தன்னை வளர்த்த அன்னையைக் காண விரும்பி, 'அவ்வையே! எம்முடைய அன்னை இம்மனையை விட்டு எந்த மாளிகையிலே புகுந்தாள்?' என்றும் 'எமக்கு இனிய பாலினை மேல் தருவார் யாவர்?' என்றும் என் உணர்வை அழியாநிற்கும் என்றவாறு.

பகுதி - உடன்போக்கு; துறை - நற்றாய் இரங்கல்.

[அம் மனை - அழகிய மன்னனை; அம்மனை - தலைவி. கிளை கிளைபோல் அயர்ந்திட - கிள்ளையானது எம் உறவினரைப் போலத் தலைவிபிரிவால் வருந்த. எம் அனை - என் தாயாகிய தலைவி. எம் மனை - எந்த வீட்டிற்கு. இனி இனிய - இனிமேல் இனிய.]

இவை ஆறும் ஈரடி ஆதியொடு இடைமடக்கு.

இனி மூன்றடி முதலொடு இடைமடக்கு வருமாறு:

**நூறு நூறுபோன்று, ஆரமு மாரமும் நொய்தினின் வெதும்பா; நீர்**
**ஊறு மூறு மாமதன் படைபடைத்திட, உபயகண்மலர்; அந்தோ!**
**ஏறு மேறு மாபதிபதி கிளைத்திடும் இருபது கரத்தானைக்**
**கூறுசெய்கணை அரங்கன் மெய்தோய்ந்திடாக் கொம்மை வெம்முலையாட்கே.**
**(680)**

இஃது ஈற்றடி ஒழித்து ஏனை மூன்றுஅடியும் முதலொடு இடைமடக்கு.

(இ-ள்) துகள்படும், சுண்ணாம்பு போல முத்துவடமும் சந்தனச்சேறும்; விரணங்களைக் கரிய மதனன் பூப்பாணங்கள் உண்டாக்குகையாலே, இரண்டு கண்மலர்களிடத்தும் துன்பக்கண்ணீர் ஊறாநிற்கும். இடபத்தையும் பூதத்தையும் வாகனமாக ஏறும் உமைக்குப் புமான்ஆனவன் பதியாகிய கயிலையை எடுத்த இருபதுகைகளை உடைய இராவணனைத் துண்டம் செய்த பாணத்தை உடைய அரங்கநாதனைத் தழுவாத கொம்மை வெம்முலையாட்கு விரைவில் வெதும்பி ஆரமும் ஆரமும் நூறும்; கண்கள் நீர் ஊறும் என முடிக்க.

திணை - பெண்பாற்கூற்றுக் கைக்கிளை; துறை - கண்டு கைசோர்தல்.

[ஆரமும் ஆரமும் நொய்தினில் வெதும்பா நூறுபோல் நூறும் - முத்துவடமும் சந்தனமும் விரைவில் வெப்பமுற்றுச் சுண்ணாம்புத் துகள் போலப் பொடியாகும். ஊறு மாமதன் படை படைத்திடக் கண்மலர் நீர் ஊறும் - புண்களைக் கரிய மன்மதனுடைய படைகளாகிய அம்புகள் உண்டாக்குவதால் கண்கள் கண்ணீர் விடும். ஊறு - காயம். படை - அம்பு. படைத்திட - உண்டாக்க. ஊறும் - வெளிப்படும். ஏறும் ஏறு உமாபதி பதி - இடபவாகனத்தையும் உம்மையால் பூதங்களையும் ஏறிச்செல்லும் உமாபதியாகிய சிவபெருமானுடைய இருப்பிடமாகிய கயிலைமலை. ஏறு - காளை. ஏறுதல் - இவர்தல். பதி - கணவன், இருப்பிடம்.]

**மின்னும்மின்னு நுண்ணிடை இடைந்தனள்; இனிமேதகு மின்னோடு**
**மன்னுமன்னும் எம்மனைவயின் வயினுறத் தினையொடு தேன்ஆர்ந்தே,**
**துன்னு கங்குலில் துயின்று எழுந்து, இறைஉறை துவரை மாநகர்க் காலை**
**முன்னு, முன்னும் உண்டு, உண்டு இவணிவள்நிகர் முறையொடும் பதிந்தாரே.**
**(681)**

இஃது ஈற்றயலடி ஒழித்து ஏனை மூன்றுஅடியும் முதலொடு இடைமடக்கு.

(இ-ள்) ஒளிரும் மின்னுப் போன்ற சிறிய இடையினை உடையாள் வருந்தினள்; பெருமை பொருந்தின மின்னை ஒப்பாளுடன் பொருந்திய மன்னனே! நீயும் நுமக்குரிய எம் இல்லினிடத்துக் காலம் பெறத் தேனும் தினையும் அருந்தி, செறிந்த கங்குலில் உறங்கிக் காலையில் எழுந்து துவராபுரியினிடத்துக் காலையிற் செல்வாயாக. நுமக்கு முன்னே தினையொடு தேனைக் கூட்டி உண்டு இவ்விடத்து இவளை ஒத்த கற்பும் காந்தியும் பெற்ற முறையொடும் புமான்களை நீங்காது தங்கினார் பலரும் உண்டு என்பதாம்.

மின்னு - உகரவிகுதி அல்வழிக்கண் மிக்கது, இயல்புகணம் வரலால் என்று அறிக. (தொ. எ. 348) மன் - அண்மைவிளி. நீ என்னும் முன்னிலைப்பெயர் எஞ்சி நின்றது. ஒழிந்தனவும் உரையிற்கொள்க.

பகுதி - உடன்போக்கு; துறை - நெறி விலக்கல்; விருந்து விலக்கு என்பதும் இது.

[மின்னும் - ஒளிவீசுகின்ற. மின்னு - மின்னல். நுண்ணிடை - தலைவி. மனைவயின் - வீட்டில். வயின் உற - காலம் பெற. முன்னு - கருதுவாயாக. முன்னும் - இதற்கு முற்பட்ட காலத்தும். இரண்டாவதாம் உண்டு - தேனும் தினைமாவும் உண்டு. இவண் -

இவ்விடத்து. இவள் நிகர் முறையொடும் - இவளை ஒத்த தகுதியோடும். வதிந்தார் - நீங்காது தங்கியவர். நிகர் - ஒளி]

**தோலாத தோலாதபனை நோக்கு நோக்கு உபயசுடரைக் கூட்டி**
**மேலாக மூன்றுஉடைய சிவன் அயன் கேட்பவும் அழைப்ப, விரைந்து மேல்-நாள்**
**பாலாழிப் பாலாழிப் படையுடனே வந்துவந்து படிறுதீர் நீ**
**ஆலால நுண்துளைப் பல்பணி அணையாய்! அணையாய், என் அனந்தை-யானே.** (682)

இது முதலயலடி ஒழித்து ஏனை மூன்றுஅடியும் முதலொடு இடைமடக்கு.
இதனுள் தோலாத தோல் - சிங்கஏற்றிற்குத் தோற்றிடாத கசேந்திரன். நோக்கும் நோக்கு - அழகிய கண்கள். பார்க்கும் கண்கள் என்றுமாம். ஆதபன் - சூரியன். உபயசுடர் - ஒழிந்த இந்துவும் அக்கினியும். 'மேலாக மூன்று உடைய' என்பதனை 'ஆக மேல் மூன்று உடைய' என மாறி, சொரூபத்தின்மேல் நோக்கு மூன்றாக உடைய என இயைக்க. சிவன் அயன் கேட்பவும் என்பது சிவனும் அயனும் கேட்கும்படிக்கும் (உம்மையால்) யாவரும் கேட்பவும் என்பதாம். அழைப்ப - 'மூலமே' என்று ஒருகால் கூப்பிட. மேல்நாள் - பண்டு. பால்ஆழிப் பால் - திருப்பாற்கடலுள் கடவுள். 'பாலது ஆணையின்' (தொ. பொ. 93) என்பதனால் அறிக. வந்துவந்து என்பதனை 'உவந்துவந்து' என மாறுக. படிறுதீர் நீ - இடுக்கண் தவிர்த்த நீ. ஆலால நுண்துளைப் பல்பணி அணையாய் - துளும்பும் நஞ்சினைக் கக்கும் சிறிய துளைப்பல் பாம்பு அணையை உடையாய்! 'அணையாய் என் அனந்தையானே' என்பது என்னை அனந்தபுரத்தானே! அணைவாயாக என்பதாம்.
(இ-ள்) பாலாழியுள் கடவுளாகிய அனந்தபுரத்து மாதவனே! கசேந்திரன் சிவனும் அயனும் கேட்க 'மூலமே' என்று அழைப்பச் சக்கராயுதத்துடன் வந்து உதவிய கருணையை உடைய நீ, யான் பலகாலும் நினது திருமார்பை நினைந்து இரங்கவும் என்னை அணையாதது என்ன தறுகண்மையோ என்றவாறு.
பொருள்கோள் - கொண்டுகூட்டு; மாட்டுஉறுப்பு எனினும் ஆம். திணை - பெண்பால்கூற்றுக் கைக்கிளை; துறை - மெலிவொடு கூறல்.
['பால்ஆழிப் பால்! ஆலால நுண்துளைப்பல் பணி அணையாய்! என் அனந்தையானே! ஆதபனை நோக்கும் நோக்கு உபயசுடரைக் கூட்டி ஆக மேல் மூன்று உடைய சிவன் அயனும் கேட்ப, தோலாத தோல் அழைப்ப, விரைந்து மேல்நாள் ஆழிப்படையுடனே உவந்து வந்து படிறுதீர் நீ அணையாய்' எனக் கூட்டிப் பொருள்செய்வது கொண்டு-கூட்டாம்.]

**வயவால் தவழ் சூல்வளை உயிர்த்த மணிவெண்தரளம் நிலவு எறிக்கும்**
**கயவாய்க் கயவாய்க் கருமேதி கமலக்கமலக் கழிநறவு உண்**
**துயவாற் றுயவாற்றிடை உழக்கத் தூநீர்க் கயலே கயலேய் திவ்**
**வியவா வியவாம் அரங்கேசன் எய்தான்; எய்தான் மதன் அம்பே.** (683)

இது முதலடி ஒழித்து ஏனை மூன்றுஅடியும் முதலொடு இடைமடக்கு.
இதனுள் வயா என்பது வயவு ஆயிற்று.
(இ-ள்) சூல் உளைந்த வருத்தத்தோடும் தவழும் சூல்வளை ஈன்ற அழகிய வெண்முத்தம் நிலவுபோலச் சுடர்விடும் கயத்தினிடத்துப் பெரிய வாயை உடைய கரிய எருமைச்சாதி, தண்ணீரிடத்துத் தாமரை உக்க மிக்க தேனை உண்டு அதனால் அறிவு திரிந்து துய்ய ஆற்றின் நடுவே புகுந்து கலக்கத்

தூயநீரின் கரைஅருகே கயல் உகண்டு சேரும் நல்ல வாவியை உடையவாம் இரண்டுஆற்றின் நடுவே வாழ்வு பெற்ற அரங்கநாதன் என்னைத் தழுவு-கின்றிலன்; அதனை அறிந்து காமன் தன் மலர்ப்பாணங்களைத் தொடுத்தனன் என்றவாறு. எனவே, இதற்கு இனிச் செயல் யாது? என்பது குறிப்பு.
திணை - பெண்பால்கூற்றுக் கைக்கிளை; துறை - மெலிவொடு கூறல்.

[வயவால் - வருத்தத்தினால். கயவாய் - சிறுகுளத்தினிடத்து. கயவாய் - பெரிய வாய். கமலம் - தண்ணீர், தாமரை. துயவால் - அறிவு திரிதலால். தூய ஆற்றிடை - தூய நீரின் கரை அருகே. தூய - செய்யுள்விகாரத்தால் குறுகியது. தூநீர்க்கு அயலே கயல்ஏய் திவ்விய வாவியவாம் அரங்கேசன் - தூயநீரின் கரைஅருகே கயல்மீன்கள் பொருந்திய நல்ல வாவிகளை உடைய இரண்டு ஆற்றின் நடுவே உள்ள திருவரங்கத்து எம்பெரு-மான். எய்தான் - என்னை வந்து அடையான். எய்தான் - செலுத்தினான். 'வாவி யாற்றின் ஓடை' (சிந்தா. 337). இரண்டு ஆறு - வடதிருக்காவிரியும், தென்திருக்-காவிரியும்.]

**நாதனாதனூர் விளங்கு இறை எண்ணிலா வெண்ணிலா நகுபோத**
**வேதன்வேதனை புரிந்திட மறைதரு மறைதரும் விறல்மாயன்**
**பாதபாத பந்தனை உணர்ஞானமாம் பலன்பலன் தருமாபோல்**
**ஓதி ஓதியின் உறுநர்பால் தருவது தருவதும் உளதாமே? (684)**

இது நான்குஅடியும் முதலொடு இடைமடக்கு.
(இ-ள்) சகலதேவன்மார்களுக்கும் சுவாமியாவான், திருஆதனூரின்கண் தோற்றம் எய்தின சோதி, அலகு இறந்த வெண்ணிலாவைப் போல மிளிரும் ஞானத்தை உடைய பிரமன் துன்புற மதுகைடவரான் மறைந்த வேதத்தை மீளவும் அன்னமாகி ஓதி அவன் உபதேசிக்கும் ஞானவென்றியை உடைய மாதவனாம் மலையிடத்து, திருவடிகளாகிய கற்பகத்தரு, தன்னைப் பிரமம் என்று உணரும் ஞானமாகிய கனியை உலகத்து உயிர்களுக்கு உதவும் இலாபம் போல், எல்லாநூல்களையும் கற்று மலைகளின்இடத்து இருக்கும் பெரியோரிடத்து அம்மலைகள் என்பனவற்றினுள் உண்டாகிய மரங்கள் தரும் ஆன்மலாபங்கள் இல்லை என்றவாறு. மாதவனாம் மலை என்பது மாட்டேறு இல்லா உருவகம்.
திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து.

[நாதன் - தேவருக்கும் தலைவன். எண்ணிலா வெண்ணிலா - கணக்கிறந்த வெள்ளிய சந்திரர்கள். வேதன் - பிரமன். வேதனை - துன்பம். மறைதரு - மறைந்த. மறைதரும் - வேதங்களை வெளிப்படுத்தின. விறல் - ஞானவெற்றி. மாயன் - திருமாலாகிய மலை. உருவகம் மறைந்திருப்பதால் இது மாட்டேறு இல்லாத உருவகம் எனப்பட்டது. பாத பாதபம் - திருவடிகளாகிய மரங்கள். பலன் - பழம். பலன் - பயன். ஓதி - எல்லா-நூல்களையும் கற்று. ஓதியின் உறுநர் - மலைகளில் தங்கும் சான்றோர். தருஅது - மரமானது. தருவது - கொடுப்பது.
திருமால் திருவடிகளாகிய கற்பகமரம் ஞானமாகிய பழத்தை உதவுவது போல, மற்ற மலையிலுள்ள மரங்கள் சான்றோருக்கு ஞானப்பழத்தை வழங்கமாட்டா.]

ஆக முதலொடு இடைமடக்குப் பதினைந்து.

இனி முதலொடு கடைமடக்கு வருமாறு:

**அருங்காய மருங்கா யமரும்; தனங்கள் வடமேரு வன்ன; வன்ன**
**இருங்காவித் துணைநெடுங்கட்கு இணைஎனலாம்; துணைமென் தோட்குஇணை**
**என்சொல்வேன்?**

**சுருங்கா வண்புகழ்த் திருமால் வடமலைமான் எழில் புணர்ந்து துறந்தார் ஆவி உருங்கா மெய்ந்நிறை தளர்வித்திடும்; உணராது இகழ்ந்தனன், என்உயிரை மன்னோ. (685)**

இது முதலடி முதலொடு கடைமடக்கு.

(இ-ள்) அளவிடற்கு அரிய ஆகாயம் இடையாக அமராநிற்கும்; அதன்மேல் முலைஇரண்டும் இரண்டுமேருவை ஒத்தன; நிறத்தை உடைய பெருமை பொருந்தின நீலோற்பலம் இரண்டும் நெடிய கண்ணிணை என்று சொல்லப்படுவனவாம்; இவையன்றி இணையாகிய மெல்லிய தோள்கட்கு உவமை யாது என்று கூறுவேன்? ஆகையால் இம்மானின் அவயவி அவயவங்களின் காந்தி, இவளைப் புணர்ந்து நீங்கினார் ஆன்மாவை உருக்கி, நிறையைத் தளர்வித்திடும் என்பதனை அறியாதே, மிகவும் என் உயிர் அனையானை இகழ்ந்தனன் என்றவாறு.

எனவே, இகழ்ந்தது தகாது என்பது பயன். இதனுள் உருக்கா என்னும் வினையெச்சச் செய்யா என்னும் வாய்பாடு 'உருங்கா' என மெலிக்கும்வழி மெலிந்துநின்று தளர்வித்திடும் என்னும் தன்வினை கொண்டது. மன் - ஆக்கம். ஓகாரம் ஈற்றசை.

பகுதி - பாங்கற்கூட்டம்; துறை - பாங்கன் தலைவனை இகழ்ந்ததற்கு இரங்கல்.

[காயம் - ஆகாயம். மருங்கு - இடை. அன்ன - ஒத்தன. வன்ன - நிறமுடைய. உருங்கா - உருக்கி. உயிர் - உயிர்போன்ற தலைவன். இகழ்ந்ததற்கு இரங்கியதனால், மன் ஆக்கப்பொருளில் வந்தது எனப்பட்டது. மன்னோ - ஓகாரம் ஈற்றசை. குறையாத வண்மையால் ஏற்பட்ட புகழை உடைய திருமகள்கேள்வனாம் எம்பெருமான் உகந்தருளியிருக்கும் திருவேங்கடமலையிலுள்ள மான் போன்ற தலைவி எனக்கொள்க.]

**வயல்வாய் மென்முறுக்கு அவிழ்ந்த தாமரைவாய்க் களைகடிவார் வதனராசிக் கயல்வாவிக் கயல்வாவித் துணையுடனே அமைவரக் கண்டு, அப்பால் அப்பால்**

**வியல்வாய் தண்செறு உழுநர், மகளிர் துணைவிழி முகமும் வெய்ய போதும் துயவால் அங்கு அறிவுஅரிதாம் குறுங்கேசன் எனும்; பிறவித்துயர் போம்அன்றே. (686)**

இஃது இரண்டாம்அடி முதலொடு கடைமடக்கு.

(இ-ள்) வயலினிடத்து மெல்லிய முகையாய்ப் பிணிஅவிழ்ந்த தாமரைக்கண், அந்த வயல்வாய்க் களைகடியும் மகளிர் முகசமூகத்துக் கயல், வாவியினிடத்துக் கயல்கள் பாய்ந்து இரண்டாகத் தங்க, அந்த வயற்கு அடுத்த அவ்விடத்து, தண்ணீர் துளும்பும் பரப்பை உடைய குளிர்ந்த வயலின்கண் உழும் மள்ளர் வயலில் களைகடியும் முற்கூறிய மகளிர் துணைவிழியோடு கூடிய முகத்தினையும், கண்டார் விரும்பும் கயல் தங்கும் தாமரைப்போதினையும் மயக்கத்தால் பகுத்து அறிவு அரிய தன்மையராய் வாழும் செய்கையை உடைய குறுங்காபுரிக்கு (திருக்குறுங்குடி) ஈசனே என்று, உலகத்து உள்ளீர்! சொல்லுமின்; நுமது பிறப்பாகிய துயர் நும்மை விட்டு நீங்கும் என்றவாறு.

திணை - பாடாண்; துறை - ஓம்படை. செவியறிவுறூஉ, வாயுறைவாழ்த்தினும் சாரும்.

[வயல்வாய் - வயலிடத்து. வதனராசிக் கயல் - முகக்கூட்டங்களில் உள்ள கண்களாகிய கயல்மீன்கள். வாவிக்கயல் - ஓடையிலுள்ள கயல்மீன்கள். வாவி - தாவி. அப்பால் அப்பால் - அவ்வயலுக்கு அடுத்த அவ்விடத்து. வியல் - பரப்புடைமை. துயவு - அறிவுமயக்கம். எனும் - என்று சொல்லுங்கள்.]

**மாந்தரில் ஒன்று எனலாய மனுராமன் ஏவலின் போய், வாரி தாவி,**
**ஏந்துஎழில் பொன்ஆழியினைச் சானகிகைக் கொடுத்து, அருள்பெற்று, இலங்-கைமூதூர்**
**வேந்தனையும் வேந்தனையும் விண்ணிடைவைத்தே, மீட்டும் வேலைவேலை**
**பாய்ந்து எளிதில், கண்டனன் தேவியை என்றாற்கு இணை எவரே, பகருங்-காலே? (687)**

இது மூன்றாம்அடி முதலொடு கடைமடக்கு.

இதனுள் - அருள்பெற்று இலங்கை மூதூர் வேம்தனையும் வேந்தனையும் விண்ணிடை வைத்து - பிராட்டி அருள் பெற்றபின்னர் இலங்கையாகிய பெரிய ஊரை எரி கொளுத்தி அது வெந்து கூடும் அளவும் அந்நகர்க்கு அரசனாகிய இராவணனையும் அவன் சேனாபதித்தலைவரையும் ஏழுநாள் விசும்பில் இருத்தி. வேலைவேலை பாய்ந்து - பரந்த கடலைக் கடந்து. கண்டனன் தேவியை என்றாற்கு இணை எவரே பகருங்காலே - 'சீதையைத் தரிசித்தனன்' என்ற திருவடிக்கு விசாரித்துச் சொல்லுங்கால் உலகத்து ஒப்பார் ஒருவரும் இல்லை என்பதாம். ஒழிந்தனவும் உரையிற்கொள்க.

திணை - வாகையைச் சார்ந்த பொதுவியல். துறை - தூதுவென்றி.

[மனிதருள் ஒருவன் என்னுமாறு வாழ்ந்து காட்டிய மனுகுலத்து இராமபிரானுடைய ஏவலால் சென்று கடலைத் தாவிக் கடந்து அழகிய பொன்மோதிரத்தைப் பிராட்டியின் திருக்கரத்து அளித்து அவள் அருள்பெற்றவன் அனுமன்.

இலங்கை வெந்தவா வேறுஇனி விளம்புவது எவனோ
அலங்கல் மாலையும் சாந்தமும் அன்றுதான் அணிந்த
கலங்களோடும் அச்சாத்திய துகிலொடும் கதிர்வான்
இலங்கை வேந்தனும் ஏழுநாள் விசும்பிடை இருந்தான் (உயுத்த. 5-66)

என்ற பாடலை நோக்குக.]

**ஓவாத கருங்கடல் மொண்டுஎழு பருவப்புயல் பெயலோடு உபயகண்ணீர்**
**தூவாநின்று, உறுபுணரிக்கு இடைவலவா! கொடிநெடுந்தேர் தூண்டுமாற்றால்**
**தேவாதி தேவன்எனும் திருநெடுமால் புவிமகள்கோன் சிறந்த செல்வ**
**நாவாயின் நாவாயின் அடைவது அல்லால், அடைவ திடனாமே, நாமே? (688)**

இது நாலாம்அடி முதலொடு கடைமடக்கு.

நாவாயின் நாவாயின் அடைவது அல்லால் - திருநாவாய் என்னும் திருப்-பதியினிடத்துக் கப்பலில் சென்று அடைவதே அல்லாதே. அடைவ திடன்-ஆமே நாமே - நாம் அடைவது உண்மையாமோ? விரைவில் சென்று அடைவது உண்மையாகாது என்றவாறு.

ஏகாரம் இரண்டனுள் முதலது எதிர்மறை. ஏனையது ஈற்றசை.

பகுதி - பொருள்வயின் பிரிதல். துறை - பாகனை வெறுத்தல்.

[நீர் குறையாத பெரிய கடல்நீரை முகந்துகொண்டு புறப்பட்ட பருவமேகத்தின் மழைகாரணமாக இரண்டுகண்களிலும் நீர் கசிய, நடுவில் பொருந்தியுள்ள கடல்நீரைக் கடந்து நம் ஊர் அடைவதற்குத் தேரைச் செலுத்துவதற்கு வருந்தி நிற்கும் தேர்ப்-பாகனே! தேவர்தலைவனாய், பேருரு எடுத்த திருமாலாய், நிலமகள் கேள்வனாய் உள்ள எம்பெருமானுடைய சிறந்த செல்வத்தை உடைய திருப்பதியாகிய திருநாவாய் என்னும் திருப்பதியைக் கப்பல் வாயிலாக அடைவதை விடுத்து, வேற்றுவழியாக விரைவில் அடைவது என்பது உண்மையாகாது.

திடன்ஆமே - ஏகாரம் எதிர்மறை. நாமே - ஏகாரம் ஈற்றசை.]

இவைநாலும் ஓரடி முதலொடு கடைமடக்கு.

இனி, ஈரடி முதலொடு கடைமடக்கு வருமாறு:

**விண்டுவிண்டு வீழ்தரும்படி முருகவேள் விட வேல்வேல்**
**வண்டுவண்டு வீழ்காவி மாவடு உமைபூமான்மான்**
**அண்டர் ஆரமிர்து அமர்விழி மலைமுலையவள் ஆடக்**
**கண்ட கா அரங்கேசர்தம் கனவரைக் கடிகாவே.** (689)

இது முதலடி இரண்டும் முதலொடு கடைமடக்கு.
விண்டுவிண்டு வீழ்தரும்படி முருகவேள் விட ஏல்வேல் - மலைபிளந்து வீழும்படி முருகன் எறிதற்குப் பொருந்தின வேலும். வண்டுவண்டு வீழ் காவி மாவடு உமைபூமான்மான் - வண்டுகள் தேனை உண்ண விரும்பும் நீலோற்பலமும், மாவடுவின் பிளவும், உமாபதி கரத்தின் மானும். அண்டர் ... கடிகாவே - தேவர்களின் அரிய அமிர்தம் போன்ற அமர் செய்யும் விழியையும் மலை போன்ற முலையையும் உடையாள் அவள் விளையாடக் கண்ட கா, நண்பனே! அரங்கேசரது மேகம் தவழும் வரையினிடத்துக் காவலை உடைய சோலை என்று அறிவாயாக என்றவாறு. எண்ணும்மைகள் தொக்கு விரிந்தன. ஏல்வேல் - வினைத்தொகை. நண்பனே என்னும் முன்னிலை தோன்றாது நின்றது.
பகுதி - பாங்கற்கூட்டம்; துறை - இயல்புஇடம் கூறல்.
[விண்டு - மலை; விண்டு - பிளந்து. ஏல்வேல் - ஏற்றுக்கொண்ட வேற்படை. வண்டு-வண்டு - பலவண்டுகள். உமைபூமான் - உமாதேவியின் தலைவன். ஆட - விளையாட. கடிகா - காவலை உடைய சோலை. வேல், காவி, மாவடு, மான், அமிர்து, அமர்விழி - வேலும், காவியும், மாவடுவகிரும், மானும், அமுதும் ஒத்த அமர்செய்யும் விழிகள் என உம்மை தொக்குப் பொருள் செய்யும்போது விரிந்தது.]

**அண்டமண்ட முண்டு அகிலமும் நிலையழிந்ததனாலால்**
**பண்டு கண்துயில் அணையுளானவன் மகன் படை பௌவ**
**முண்டமுண்ட மாமுனி நிகர் காதி கான்முளை முன்முன்**
**கண்ட வில்லினைக் கண்டவில் ஆக்கினன் எமர்கண்ணே.** (690)

இது முதலடியும் மூன்றாமடியும் முதலொடு கடைமடக்கு.
(இ-ள்) அண்டத்தை மேலே ஓங்கி ஓடாநின்ற பிரளயம், எல்லா உலகத்தையும் உண்டதனாலே ஆல் ஆகிய அமளி உள்ளான் மகனாகிய பிரமன் படைத்த உப்புக்கடலை உண்ட குறுமுனியை ஒத்த காதிசேயாம் விசுவாமித்திரன் முன்னே, முன்னாள் அவன் கண்ட வில்லினைக் கையினால் துண்டப்பட்ட வில்லாக்கினன் எவன் அவன் எம்போல்வார் கண்போல்வான் என்பதாம்.
ஒழிந்தனவும் உரையிற்கொள்க. திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து.
[அண்டம் மண்டு அம் உண்டு - அண்டத்தை மேல்நோக்கிப் பெருகிய நீர்வெள்ளம் உண்டதனால். ஆல் - ஆல்இலை. படை - உண்டாக்கிய. பௌவம் உண்ட முண்ட-மாமுனி - கடலைப் பருகிய குறுமுனி ஆகிய அகத்தியன். காதி கான்முளை - காதி என்ற மன்னனுடைய வழித்தோன்றல் (மகன்) ஆகிய விசுவாமித்திரன். கண்டம் - துண்டம். கண் - பற்றுக்கோடு. முன் - கண்எதிரே. முன் - முன்நாளில்.]

**கற்றவர் கற்றவர் வியப்பான் வளைத்தவன் மூவெயில் முருக்கக் கணையா னான், நான்**
**அற்றவர்தம் அகம் துறப்பது அற்றவன், வெள்ளியங்கிரியை அடியோடு ஏந்தப்**

**பெற்ற வளம்கெழு மதுகை இருபதுகைஉடை வயிரப்பிறங்கல் போன்ற**
**கொற்றவன் கொற்றவன் சிரத்தைக் குறைத்தவன் ஊர் தமிழ்மறைசங்கோவில்**
**கோவில். (691)**

இது முதலடியும் நான்காமடியும் முதலொடு கடைமடக்கு.

(இ-ள்) கல்லை வில்லாகத் தனுசாத்திரம் கற்றவர் ஆச்சரியம் உற வளைத்தவன் பொன்னும் வெள்ளியும் இரும்புமான மூன்று கோட்டையையும் அழிக்க அவனுக்குக் கணையானவன், நான் என்னும் ஆங்காரம் இல்லாதார் இதயத்தை விட்டு நீங்காதவன், வெள்ளிமலையை அடியோடு பெயர்த்தெடுக்கப் போதிய மேம்பட்ட வலிமை நிறைந்த இருபதுகைகளை உடைய வயிரமலை போன்ற இலங்கைக்கரசன் வெற்றி பொருந்திய வலிய சிரத்தைக் கணையால் குறைத்தவன் உறையும் பதி, திருவாய்மொழியாகிய தமிழின்ஒலியும், சுருதியாகிய வடமொழிஒலியும் திருச்சங்குஒலியும் ஒழிவில்லாத திருவரங்கம் பெரியகோவில் என்பதாம்.

திணை - பாடாண்; துறை - நகரவாழ்த்து.

[கல்தவர் - மலை ஆகிய வில். கற்றவர் - விற்றொழில் கற்றவர். கணை ஆனான் - அம்பு ஆகிய திருமால். நான் - அகங்காரம். மதுகை - வலிமை. ஒவுஇல் - நீங்குதல் இல்லாத. தமிழ், மறை, சங்கு, ஒவுஇல் கோவில் - திருவாய்மொழியும், வேதமும், சங்கு ஒலியும் நீங்குதல் இல்லாத கோவில் எனப்படும் திருவரங்கம்.]

**குன்றுஅலைக்கும் இருபதுகைக் குன்றினைக்கொன்றுஉலகுஅளித்த குறுங்கைக்**
**கோமான்,**
**கன்றுஅலைக்கும் குணில்எனச் செங்கனி உதிர்த்தோன், அணைகிலன்; மேல்**
**களைகண் யாதோ?**
**தென்றலைத் தென்றலைத் தேராய், வரும் மதன், வில்கரும்பாய், நாண் தேனாய்**
**தேனாய்,**
**மன்றலை மன்றலைக் காவின் மலர் அம்பாய்; வரும், மதி கொல்வானில்**
**வானில். (692)**

இது கடைஈரடியும் முதலொடு கடைமடக்கு.

(இ-ள்) கயிலை ஆகிய குன்றினை எடுத்து அசைக்கும் இருபதுகையை உடையனாம் குன்று போன்ற இராவணனைப் பாணத்தால் கொன்று உலகத்து உயிர்களைக் காத்த திருக்குறுங்குடிக்கு அரசனாகிய, கன்றைக் குறுந்தடியாகக் கொண்டு கனி உதிர்த்த மாயோன், தன்னை விரும்பிய என்னைத் தழுவுகின்றிலன்; ஆதலால் தென்திக்கில் தென்றலானதைத் தேராகவும், கரும்பை வில்லாகவும், பூவில் தேனை ஆராயும் வண்டை நாணாகவும், மணத்தைப் பொருந்தின தலைப்பட்ட காவின் மலர்களை அம்பாகவும் கொண்டு மதனன் வாராநின்றனன்; வானில் மதி யமனைப் போல் மேல்வரும்; இனி, இதற்குமேல் களைகண் யாதோ! அறிகிலேன் என்றவாறு.

கொல்வான் - யமன். திணை - பெண்பாற்கூற்றுக் கைக்கிளை; துறை - மெலிவொடு வைகல்.

[குன்று - மலை போன்ற இராவணன். குணில் - குறுந்தடி. களைகண் - பற்றுக்கோடு. தென்தலைத் தென்றல் - தெற்குத் திசையிலிருந்து வீசும் தென்றல். தேன் ஆய் தேனாய் - தேனை ஆராயும் வண்டுகளாய். மன்றலை - ஐ அசை. மன்றல் மன் தலைக் கா - மணத்தைப் பொருந்தின இடத்தை உடைய சோலை. கொல்வானில் வானில் மதி வரும் - யமனைப் போலச் சந்திரன் வானத்தில் உலாவும்.]

**கோட்டு நித்திலக் குவையொடும், குங்குமத்து ஒளிமீதே**
**பூட்டுபூட்டு வெம்முலைமலை இடை பொறாதே வீவீ**
**நாட்டுநாட்டுதல் இன்று உறீஇ நாங்கைமால் வரையார் யார்,**
**மீட்டு நீள்குழல் காட்டின்மேல் பன்மலர் வேய்ந்தாரே? (693)**

இஃது இடையீரடியும் முதலொடு கடைமடக்கு.

இதனுள், கோட்டு நித்திலக்குவை - சங்கு ஈன்ற முத்தின்திரள். பூட்டு பூட்டு வெம்முலை மலை - பூட்டப்பட்ட பூணை உடையது விருப்பத்தைத் தரும் முலையாகிய மலை. இடை பொறாதே வீவீ - தம்மைத் தாங்கும் இடையானதற்குத் தம்மைப் பொறாதே இறுதியைக் கொடுக்கும். நாட்டு நாட்டுதல் இன்று உறீஇ நாங்கை மால்வரையார் யார் - நாளை உடைத்து என்று கண்டார் குறித்தலை இக்காலத்து அறிந்தும் திருநாங்கை மாயோன் வரையார் யார்தாம்; மீட்டு நீள்குழல் காட்டின்மேல் பன்மலர் வேய்ந்தார் - அதன்மேலே, மீளவும் நீண்ட குழலாகிய காட்டின்மேல் பலமலரையும் அணிந்தவர். பூட்டு - பூணை உடைத்து. வீவீ - இறுதலைக் கொடுக்கும். நாட்டு - நாளை உடையது. நாட்டுதல் - குறித்தல்.
பகுதி - பாங்கற்கூட்டம். துறை - மருங்கு அணைதல்.

[முலைப்பாரம் பொறாதே இறும் நிலையிலுள்ள இடைக்கு, மார்பில் பல அணிகலன்களை அணிந்ததோடு கூந்தலில் பல மலர்களையும் பாரம் மிகுமாறு வேய்ந்தவர் இடையின் இன்றைய வருத்தம் அறியாதார். அவர்தாம் யாவரோ? (சிலநாளின்கண்ணதே இருப்பு.)
பூட்டு - அணியப்பட்ட. பூட்டு - பூணது. நாட்டு - நாளது. நாட்டுதல் - குறிப்பிடுதல். வரையார் - மலையிலுள்ளவர். யார் - யாவர்? உறீஇ - அறிந்து. உறீஇயும் என்ற உம்மை தொக்கது.]

**படுகொலைவாள் அரக்கனைக் கொன்று உலகு அளித்தான் வடமலைபோல்**
**பணைத்த கொங்கை;**
**இடுகிடை ஒன்று; இடுகிடை ஒன்றேனும் அதுபொறுக்கலாது என்றால்,**
**என்றால்**
**விடுகதிர் வெவ்அழல் கதுவி அடிநிலம் தோயா; எழில் மெல்லியலை யானே**
**கொடு கொடுவன்சுரம் குறுகின், நன்னுதாஅல்! என் இருதோள்குன்றும்**
**குன்றும். (694)**

இது முதலயலடியும் நாலாமடியும் முதலொடு கடைமடக்கு.

(இ-ள்) செய்யும் கொலைத்தொழிலை உடைய வாள் ஏந்திய அரக்கனான இராவணனைக் கொன்று உலகைப் பாதுகாத்த எம்பெருமானுடைய வேங்கடமலை போல முலைகள் இரண்டும் பருத்தன. சிறிய இடையும் ஒன்றே; சேம இடை இல்லை. இதன்மேல் இனி இடப்பட்ட கிடைச்சு ஆம் எனினும் அதுவும் பொறாது என்று அறிந்தால், அதன்மேலும், ஆதித்தனால் நீட்டப்பட்ட கிரணங்களால் உண்டான வெம்மையை உடைய அழல் பற்றுதலால் நடப்போர் பாதங்கள் நிலத்தில் தோயா; அழகிய மெல்லிய சாயலை உடையாளை யான் கொண்டுபோய்க் கொடிய வன்சுரத்தை அணுகில், அவள் மலர் போன்ற தாள்களை என் சொல்ல வேண்டும்? என் இருதோள்களாகிய மலைகளும் மெலிவு எய்தும் என்பதாம். ஆதலால், நன்னுதால்! உடன்கொண்டு போகக்கூடாது என்பது பயன்.
பகுதி - உடன்போக்கு; துறை - அருமை கூறல்.

[இடுகு இடை - சிறிய இடை. இடு கிடை - அணியப்படும் நெட்டி. கிடைச்சு - நெட்டி. கொடு - கொண்டுபோய். என்றால் - என்று அறிந்தால். என்று - சூரியன்; என்றால் - சூரியனால். குன்றும் - மலையும்; குன்றும் - மெலிவு எய்தும்.]

இவை ஆறும் ஈரடி முதலொடு கடைமடக்கு.

இனி மூன்றுஅடி முதலொடு கடைமடக்கு வருமாறு:

**பொய்யாமை பொய்யாமை உரனுடன் ஐம்புலன் அவித்த பொற்பார் பொற்பார்**
**மொய்யா மொய்யாடு அரக்கர் முரண்அழிப்பாய்என, இரங்கி முன்பின் முன்பின்**
**கையாற் கையாற்றினொடும் பொருசரம்தொட்டு அழித்ததனால், காமர்காமர்**
**மெய்யானது எரித்தவற்கும் பரன், அயோத்தியில் உதித்த வேந்தர்வேந்தன்.** (695)

இது முதலடி முதலிய மூன்றுஅடியும் முதலொடு கடைமடக்கு.

(இ-ள்) சத்தியவசனம் இடைவிடாத ஞானத்துடன் புலன்ஐந்தையும் வென்ற பொலிவினை உடையோராம் முனிவரும், பொன்உலகின்கண் உள்ள விண்ணுளோரும் திருப்பாற்கடலில் திரண்டுசென்று, 'அமர்விளைக்கும் அரக்கராகிய பகையை அழிப்பாயாக' என்று முறையிட்டதற்கு இரங்கி, முன்னாளில் மிடுக்கினை உடைய கைகளால் காவலாம் ஒழுக்கத்தோடும் போரை உடைய பாணத்தை ஏவி அந்தப் பகையை ஒழித்து அவர் துன்பத்தைக் களைந்ததனால், காமனார் அழகிய உடலை எரித்த சிவனுக்கும் அயன் முதலோர்க்கும் பரன் ஆவான், திருஅயோத்தியில் திருஅவதாரம் செய்த அரசர்க்கு எல்லாம் அரசனாம் இராமன் என்றவாறு.

திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து.

[பொய்யாமை - பொய்கூறாமை. பொய்யாமை உரன் - இடைவிடாத ஞானம். பொற்பார் - பொலிவினை உடைய முனிவர். பொன்பார் - பொன் உலகில் வாழும் தேவர். பொன்பார் என்பது இடத்தான் ஆகிய ஆகுபெயர். மொய்யா - திரண்டு. மொய் - போர். ஆடு - போரிடும். முன்பில் - முற்காலத்தில். முன்பின் - வலிமையினால். கை ஆற்றினொடும் - காவலாம் ஒழுக்கத்தோடும். காமர் - மன்மதனார். காமர் - விருப்பம் பொருந்திய.]

**அன்றினர் அன்றினர் ஆகிக் கடைதுறந்தார்களில் இலங்கை ஆளி ஆளி,**
**மென்றினை மென்றினை தலைத்தீர் கிளிமொழியைப்பிரித்தவன்தன் மெய்-யின், மெய்யின்**
**நின்றுஅறியா மனம்அதனில், குடக்கன்னன் மருமத்தில், நிரல்அம்பு ஏவிக்**
**கொன்றையன் கொன்றையன் முதலோர் இடர்களைந்தான் நகர் தமிழோர் கூடல்கூடல்.** (696)

இஃது ஈற்றுஅயல்அடி ஒழித்து ஏனை மூன்றுஅடியும் முதலொடு கடைமடக்கு.

(இ-ள்) முற்காலத்து அடிமைத் தமர்ஆயினார் சாபத்தால் சத்துருக்களாகி வாயில் காவல் தொழிலை விட்டு நீங்கினார் இருவருள், இலங்காபுரியை ஆண்டவனாய்ச் சிங்கஏறு போல்வானாய், மெல்லிய தினையைத் தின்று பசியால் வரும் வருத்தத்தைப் போக்கும் புனக்கிளியினது மொழிபோலும் மொழியினை உடைய பிராட்டியைத் தன்னைவிட்டு நீக்கினவன் மேனியிலும், உண்மையின் நிலைபெற்று அறியா மனத்திலும், கும்பகருணன் மருமத்திலும், ஒரு தொடையில் பலஅம்புகளைத் தொடுத்து ஏவி, அவ்விருவரையும் கொன்ற, அயனும் சிவனும் முதலியோர் இடும்பையைப் போக்கினான் இருக்கும் நகர் தமிழ்ச்சங்கத்தார் கூடியிருத்தலை உடைய மதுராபுரியாம் என்றவாறு.

திணை - பாடாண்; துறை - நகரவாழ்த்து.

[அன்று - முற்காலத்து. இனர் - அடிமைத்தொழில் செய்யும் தமர். அன்றினர் - பகைவர். கடைதுறந்தார் - வாயில் காவல்தொழிலை விடுத்து நீங்கினார். ஆளி - ஆள்பவன், சிங்கம் போல்வான். மென்தினை மென்று இனைதலைத் தீர் கிளி - மெல்லிய திணையைத் தின்று பசியால் வரும் வருத்தத்தைப் போக்கும் கிளி. மெய்யின் - உடம்பினும். மெய்யின் நின்று அறியா மனம் அதனில் - உண்மை நிலைபெற்று அறியா மனத்தில். மருமம் - மார்பு. நிரல் - வரிசை. கொன்று - கொலைசெய்து. ஐயன் - அயன் - பிரமன். கொன்றையன் - கொன்றைப்பூமாலையை அணிந்த சிவபெருமான். கூடல் - கூடி இருத்தலை உடைய. கூடல் - மதுரைமாநகர். இப்பாடல் கூடல்அழகராகிய இருந்தவனமுடையாரை வாழ்த்தியதாம். கூடலில் அழகராம் எம்பெருமான் இருந்த திருக்கோலத்தில் காட்சி வழங்குகிறார்.]

**வானை நீவிய வரைகள் உயர்மரங்கள் அனைத்தையும் வானரங்களாய**
**தானை தானையவாக் கொண்டு அமர்விளைநாள் வீடணனார்தம்முன் தம்முன்-**
**னானை யானையின் நுதிவன்கோடு உழுமார்பனை உயிர்உண்டு அம்பால், அம்பா**
**லேனை ஏனையர் வியப்பான் மீட்டவன் அல்லால், பொருள்வேறு என்னா, என்னா. (697)**

இது முதலடி ஒழித்து ஏனை மூன்றுஅடியும் முதலொடு கடைமடக்கு.

(இ-ள்) மேகபடலத்தைத் தைவரும் மலைகளும் மரங்களும் ஆகிய அனைத்-தையும் மர்க்கடங்களாகிய படைகள் ஆயுதமாகக் கைக்கொண்டு செருச் செய்யாநின்றகாலத்து, வீடணனார்தம் முன்பாக அவர்தமையன் ஆனானை, அட்டகஜங்களின் கூரிய வலிய கோடுகள் அழுத்தும் மார்பனை, அம்பினால் உயிர் உண்டபின், அழகிய நல்வினையை உடையேனுடைய சுவாமினியாகிய சீதையைத் தன்னை ஒழிந்த கடவுளர் ஆச்சரியப்படுவான் சிறையை மீட்டுக் கொண்டுவந்தவனை அல்லாதே வேறே சிலபொருள் உண்டு என்று என்-னுடைய நா ஓதாது என்றவாறு.

திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து.

[தானை - சேனை. தானையவா - படைக்கலன்களாகக் கொண்டு. தம்முன் - தம்கண்கள் முன்னே. தம்முனானை - தமையனாகிய இராவணனை. யானை - எட்டுத்திசை-யானைகள். அம்பாலேன் - அழகிய நல்வினையை உடையேன். ஐ - தலைவியாகிய பெருமாட்டி. அம்பால் - அம்பினால். என்நா - என் நாக்கு. என்னா - என்று கூறாது.]

**மூன்றினு மூன்றினும் தொழிலோடு ஒன்றாம் மீளாநரகத் தூடுமூடும்**
**ஆன்ற துயர் இழை நன்றி கொல்வினை போன்று, இடர் இழைவல் அரக்கர்-தம்கோ-**
**மான்றலை மான்றலை அடைந்த ஏனையர் வன்தலை உருட்டு மாலை மாலைத**
**தேன்தழை தேன்தழை துளபத்தொடையானைத் தொழும், சனனம் தீரத்தீர. (698)**

இது முதலயலடி ஒழித்து ஏனை மூன்றடியும் முதலொடு கடைமடக்கு.

(இ-ள்) ஒன்றனைக் கொன்று அதன் ஊனைத் தின்னும் தீய தொழிலோடு ஒத்த கொடுமையை உடைய பார்ப்பார், பெண்டிர், பசு என்னும் இவரைச் செய்யும் சொல்லொணாத தொழில் மூன்றையும் பார்க்க, ஒரு காலத்திலும் மீட்சியற நரகங்களின் நடுவே இட்டு மூடுதலைச் செய்யும் மிக்க துயரை உண்டாக்கும் செய்ந்நன்றி கொன்ற தீவினை போல, மூவுலகங்களுக்கும் துன்பத்தை மிகுத்த இராக்கதர்க்கு அரசனாம் இராவணன் தலையையும், மயக்கத்தை அடைந்த ஒழிந்த அரக்கர் வலிய தலையையும் சரம் தொடுத்து உருட்டும் வெற்றியினது இயல்பை உடைய திருமாலை, தேனும் இலையும் வண்டு மிகுதலும் உடைய

வனமாலையானை, உலகத்து உள்ளீர்! நுமது செனனம் சந்தயம் அறத் தவிரும்படிக்கு வணங்குவீர் என்றவாறு. இதனுள்ளும் பல இடங்களிலும் எச்சங்களைக் கூட்டி உரைக்க.

திணை - பாடாண்; துறை - ஓம்படை.

['ஊன் தினும் தொழிலோடு ஒன்றாம் மூன்றினும்' எனச் சொற்களை இடம் மாற்றிக் கொண்டு - ஒன்றன் ஊனை உண்ணும் செயலோடு எண்ணப்படும் பார்ப்பார் பெண்டிர் பசு என்பவரைத் துன்புறுத்துவதும். நரகத்தூடு மூடும் - நரகிலிட்டு மூடிக்கொள்ளும். ஆன்ற - மிகுந்த. அரக்கர்கோமான் தலை - இராவணன்தலைகள். மான்றல் - மயங்குதல். மாலை - இயல்பு; திருமாலை. தேன்தழை தேன்தழை - தேனும் இலையும் வண்டும் மிகுதலை உடைய. தேன் - மது. வண்டு. தீர - உறுதியாக. தீர - நீங்குதற்கு. தொழும் - வழிபடுங்கள்.]

'மீளா நரகத்து மூடுதுயர் இழை கோமான்தலை உருட்டும் மாலைச் சனனம் தீரத் தொழும்' என்று கூட்டி முடிக்க.

**இருந்தா திருந்தா தரித்துண்ண வரிவண்டு இனம்மேவ மலர்முண்டகம் தாய தாய**
**மருந்தா மருந்தாம மெய்த்தாயும் எய்து மங்கைக்கு மணிமார்பு அளித்தாய் அளித்தாய்**
**சுரும்பாய் சுரும்பாய் மதம்கக்கு கரடத்துடன் ஆன்று முதலைத் தொடுப்பானை யானை**
**வருந்தா வருந்தாவில் சக்ராயுதத்தாய்! வரமங்கையாய்! என்மனத்தாய் மனத்தாய்! (699)**

இது முதற்கண்ணும் கடைக்கண்ணும் அடிதோறும் முற்றுமடக்கு.

(இ-ள்) பெருமையை உடைய தாதுக்களை பூவின்கண் இருந்து அன்புடன் உண்ண வேண்டிப் பாட்டினை உடைய வண்டின் கிளை பொருந்த மலர்ந்த தாமரையும் தாய் என்பதாய் இருக்கச்செய்தே, அழகிய அமிர்தமாம் பெறுதற்கு அரிய ஒளியை உடைய மேனித் தாயையும் தாயாக உடைய பெரியபிராட்டி என்னும் மங்கைக்குக் கவுத்துவமணி அணிந்த திருமார்பைக் கிருபை உடைத்தாய் அளிக்கும் பூமானே! சுரும்புகள் ஆராயும் மலையை ஒப்பதாய் மதத்தினைச் சொரியும் கரடத்துடன் கூடி, முதலையினது பிடிப்பினால் மேனி நையப்பட்ட கசேந்திரன் வருந்த, அந்நாள் அதன் இடர்தீர்க்கச் செல்லும் அழிவில்லாத சக்கரத்தை உடையாய்! சீவரமங்கை என்னும் திருப்பதியில் உள்ளாய்! என் மனத்தினுள்ளே குடிபுகுந்து நிலைபெறுவாய்! பாஞ்சசன்னியத்தை உடையாய்! என்றவாறு.

திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து.

[இருந்தாது - பெருமையை உடைய மகரந்தம். இருந்து ஆதரித்து - பூவில் இருந்து விரும்பி. தாய்அதாய் - தாயின் நிலையதாய். அ மருந்து - அழகிய அமுதம். அருந்தாமம் - பெறுதற்கு அரிய ஒளியை உடைய. மெய்த்தாய் - பாற்கடலாகிய வடிவினை உடைய தாய். மங்கை - திருமகள். மணி - கவுத்துவமணி. அளித்தாய் அளித்தாய் - கருணையோடு வழங்கியவனே! சுரும்பு ஆய் - வண்டுகள் ஆராயும்; சுரும்பாய் - மலையை ஒப்பதாய், கரடம் - கன்னத்திலிருந்து மதம் பொழியும் துவாரம். முதலைத் தொடுப்பான் நை யானை - முதலையது பிடிப்பினால் உடம்பு நைந்த கசேந்திரன். வருந்தா - வருந்த. வரும் - யானையின் இடரைத் தீர்க்கச் செல்லும். தாவில் - அழிதல் இல்லாத. நத்தாய் - சங்கினை உடையவனே. என் மனத்தாய் மன் - என் மனத்து வந்து நிலைபெறுவாயாக.

இருந்தாது இருந்து ஆதரித்து, தாய் அதாய் அ மருந்தாய் அரும் தாம, சுரும்பு ஆய் சுரும்பாய், தொடுப்பான் ஙை யானை, வருந்தா வரும், மனத்தாய் மன் நத்தாய் எனப் பிரித்துப் பொருள்செய்க.]

ஆக, முதலொடு கடைமடக்கு 15.

ஆக வகை ஐந்தால் வந்த மடக்கு 75.

[அடி முதல்மடக்கு, அடி இடைமடக்கு, அடி கடைமடக்கு, முதலொடு இடை, முதலொடு கடை என்ற ஐந்து வகைகள். ஒவ்வொன்றற்கும் விரி 15. எனவே 15 x 5 = 75]

இனி, இடையொடு கடைமடக்கு வருமாறு:

**தளிநறவப் பொலமலர்கூர் ஆவிரைஆவிரை வரைதேத் தாயர் தாயர்**
**அளிய மடத்தகை யசோதையின் புவனத்து அறம்செய்தார் யாரே என்ன,**
**ஒளிஅமைந்த மரகதக்குன்று அவண் வளர்நாள், வெண்ணெயின் கட்டுண்டு நின்ற**
**எளிமையைக் கண்கலுழ்வதைக் கேட்டு இரங்கும் மனம், காண்பவர்க்கு அன்று என்னா மன்னோ? (700)**

இது முதலடி இடையொடு கடைமடக்கு.

(இ-ள்) துளிக்கும் தேனை உடைய பொன் போன்ற பூவினைத் தன்னிடத்து மிகுத்த ஆவிரையை ஆவானது அருந்தாது நீக்கும் முல்லைநிலத்தை உடைய ஆயருக்குத் தாயர்ஆயினார் 'கிருபை உடைய மடத்தகையாம் அசோதையைப் போலப் புண்ணியம் செய்தார் உலகத்து யாவர் உளர்'? என்று சொல்லும்படிக்குப் பச்சைநிறம் மிகுத்த மரகதக்குன்றம் போன்ற கண்ணபிரான் திருவாய்ப்பாடியில் அவண்மனையில் வளர்கின்ற காலத்து வெண்ணெய்கட்டுக் கட்டுண்டு நின்ற எளிமையையும் திருக்கண்மலர் கண்ணீர் பனிப்பதனையும் கேட்டவர்க்கு உள்ளம் இன்று இரங்காநின்றது என்றால், அன்று காண்பவர்க்கு உள்ளம் என்னாம் மிகவும் - என்றவாறு.

ஓ - அசை. தேம் - இடம். அது முல்லைநிலம் என்பது 'ஆ இரை வரை தேஎத்து' என்னும் குறிப்பினால் கொள்ள நின்றது.

திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து.

[தளி - துளி. கூர் - மிக்க. ஆவிரை - மரவிசேடம். ஆ இரை வரை தேத்து - பசுக்கள் தம் உணவாகக் கோடலை நீக்கும் முல்லைநிலத்து. ஆயர்தாயர் - ஆய்க்குலத் தாய்மார். அவண் - அவ்வாய்ப்பாடி. கட்டு - களவுசெய்து. என்னாம் - யாதாம். மன் - மிகுதிப்பொருளில் வந்தது. மன்னோ - ஓகாரம் ஈற்றசை.]

**வெங்களபம் ஊர்தர வீதியில், பனித்த மதத்திடை மென்பிடியில் செல்வார்**
**செங்களபம் திமிர்ந்து அளறாய்ச் சேந்தனவாம்; சேந்தனவாம் சிறுவர் தேர்தேர்**
**அங்குஉற, மண்மகள் அகலத்தளம் குறுகாது உருள்உருளா அரங்கத்தாய்! நீ**
**எங்குஉளன் என்றவன்முனம் மற்று அங்குஉளன் ஆனதைப் புகழ்வார் எமை ஆள்வாரே. (701)**

இஃது இரண்டாமடி இடையொடு கடைமடக்கு.

(இ-ள்) கோபத்தை உடைய களியானைகளைப் பாகர் வீதியில் கடாவ, அவை கவுளினால் சொரிந்த கரிய மதப்பெருக்கில் களிற்றொடு தொடுத்த பிடியில் செல்லும் அவர் மடந்தைமார் தம் முலைச்சுவட்டின் குங்குமத்தைத் திமிர்ந்திட்டதால் அக்கரிய மதநீர் சேறுபட்டுச் சிவந்தனவாக, அச்சிவந்த சேற்றில் செவ்வேளும் விரும்பும் சிறார் தமக்கு ஏற்றமாம் என விசாரித்து ஊரும் சிறுதேர் அழுந்தி அவற்றின் வண்டிகள் பூமிதேவியின் மார்பாகிய இடத்து

அணுகாது அச்சேற்றில் புதைந்து ஓடாது நிற்கும் திருஅரங்கத்தானே! நின்னை 'எங்கு உளான்' என்று வினவிய இரணியனோடும் 'எங்கும் உளான்' என்று புதல்வன் கூற அவன் 'இங்கு உளனோ' என்று அடித்த தூணத்து அங்கு உளனாகித் தோன்றியதைப் புகழ்வார் எம்மை ஆட்கொண்ட தம்பிரான்மார் என்றவாறு.

திணை - பாடாண்; துறை - பழிச்சினர்ப் பணிதல்.

[களபம் - யானை. பனித்த - சொரிந்த. திமிர்ந்து - உதிர்த்து. களபம் - கலவைச்சாந்து. அளறு - சேறு. சேந்தனவாம் - சிவந்தன ஆயின. சேந்தன் அவாம் - முருகனும் விரும்பும். உருள் - வண்டிகள் - சக்கரங்கள். உருளா - உருண்டு இடம் பெயராத.]

**புத்தமிர்தம்தனில் பிறந்த பொன்கொடியை அகலாத புனிதனாகி**
**அத்திகிரிதனில் உதித்த கைத்திகிரிப் பரன்பரன் என்பதனை நாடி**
**உத்தம நான்மறைகள் மதித்தொன்று உரை தொன்றுஉரை அணங்கே ஓதிஓதி**
**மொய்த்து உயர்வன்பரல் கடம்சென்று அழுந்த உணர்வதற்கு இறைவர்**
**முயல்கின்றாரே. (702)**

இது மூன்றாமடி இடையொடு கடைமடக்கு.

(இ-ள்) அணங்கே! நம் இறைவர், 'புதிய அமிர்தில் பிறந்த பொன்னங்கொடி போன்ற பெரிய பிராட்டியைக் கணப்பொழுதும் விட்டு நீங்காத பவித்திரவான் ஆகி, அத்திகிரியினிடத்து வந்து உதித்த திருக்கைத் திருஆழி உடைய பரனே பரப்பிரமம்' என்பதனைச் சுருதிகள்நாலும் உத்தமஞானத்தால் அறிந்து உயர்த்தி ஒன்றுபோல உரைத்த பழைய உரையைப் பொற்றைகள் நெருங்கின வலிய பரலை உடைய சுரத்தைக் கடந்து காட்டின்கண் சென்று ஆரியருடன் நா அழுந்த ஓதி உண்மை தெளிவதற்கு ஏக நினையாநின்றார் என்றவாறு. இது கொண்டுகூட்டுப்பொருள்கோள்.

தொன்று - பழமை. ஓதி - பொற்றை.

பகுதி - ஓதற்பிரிதல்; துறை - நினைவு உரைத்தல்.

['நான்மறைகள் உத்தமம் மதித்து ஒன்று உரை தொன்று உரை ஓதி அழுந்த உணர்வதற்கு, இறைவர், ஓதி மொய்த்து உயர் வன்பரல் கடம் சென்று முயல்கின்றார்' என்று கொண்டுகூட்டிப் பொருள்செய்க. ஒன்று உரை - ஒன்று போல உரைத்த. தொன்று உரை - பழைய உரையை. ஓதி - அத்தியயனம் செய்து. ஓதி மொய்த்து - குறும்பாறைகள் நெருங்கி.]

**என்பு உருக உயிர் உருக அவற்றினொடும் ஈறுஇல்லா இன்பம் பெற்ற**
**அன்பு உருகப் புணர்ந்து ஒருநாள் அகலேம் என்று அகல்வது உமக்கு அறமே என்னாய்;**
**புன்பொருளைப் புறம்போக்கி நன்பொருள் என் அரங்கன்எனப் புகன்ற மாறன்**
**நன்பொருநைத் துறையுள் இருந்திரையுள் இருந்திரையுள் ஆர் நாராய்! நாராய். (703)**

இது நாலாமடி இடையொடு கடைமடக்கு.

(இ-ள்) உடலும் உயிரும் உருக அவற்றினோடும் ஒழிவு இல்லாத பேரின்பத்தைப் பெற்ற உணர்வு உருகக் கலந்து, 'இனி ஒருகணத்தும் நின்னின் பிரியேன்' என்று உரைத்த நீர், இவளை வைத்து அகல்வது உமக்கு அறம் அன்று என்று கூறிற்றிலை; இதர புருடார்த்தங்களை விடுத்து எம்பெருமானே பரமபுருடார்த்தம் என்று அறுதியிட்ட மாறனது நல்ல பொருநைத்துறையில்

பெரிய திரை நடுவிருந்து இரையாயுள்ள ஆரல்முதலாய் உள்ளவற்றை உண்ணும் நாரையே! என்னிடத்து அன்புடையாய் என்றவாறு.
என்னிடத்து என்பது சொல்லெச்சம். என்பும் அன்பும் ஆகுபெயர். இருந்திரை - பெரிய அலை. இருந்து, இரை - தங்கி, இரையை. நார் - அன்பு.
பகுதி - பொருள்வயின் பிரிதல்; துறை - பறவையொடு பரிவுற்று உரைத்தல்.
[என்பு - உடல்; ஆகுபெயர். அன்பு - உணர்வு; ஆகுபெயர். என்னாய் - என்று கூறினாய்அல்லை.]
இவை நாலும் ஓரடி ஈரிடத்து மடக்கு.
இனி, ஈரடி ஈரிடத்து மடக்கு வருமாறு:

**புக்கில்அதாய் அமைந்தது அயனகரம் அயனகரம் எழில் பொன்னே பொன்னே!**
**தக்கு இலராம் மலைக்குறவர் குறவர்மனை எனத்தெளிந்த தாமந்தாமம்**
**தொக்கு அமரர் தொழப் புரந்த அரங்கேசர் திருமுகம்போல் சோதி மேய**
**அக்கமலம் திறந்து எவனோ, அரைஇருளில் தமி இவண் நின்று அடைந்த வாழ்வே? (704)**

(இ-ள்) அழகிய பொன்னை ஒத்த திருமகளே! உனக்கு எஞ்ஞான்றும் இருப்பதோர் உசிதமான இல்லாய் அமைந்தது பிரமன்அகரமாய் உறைந்த தாமரையே. அயலாய் ஒதுக்கிருந்த நகரம் பொருந்தும் தகுதி இலராம் மலை-களுக்கு உறவுஉடையராய குறவர்மனை என என்உள்ளம் தெளிந்ததாம். ஆகையால் பரமபதத்தினிடத்து நித்தர் கூண்டு தொழ அதனை ஆண்ட அரங்கேசர் திருமுகம்போல் சோதி மேய பிரமன்அகரமாகிய அக்கமலத்தைத் திறந்து யாதோ நடுச்சாமத்து இருளில் தமி ஒருவர் துணை இன்றி இவ்விடத்து அடைந்த வாழ்வு! என்றவாறு.
அகரம் - அந்தணர் இருக்கை. அயல் நகரம் - அயலாகிய மனை. புக்கில் - பின் புறப்படாது புக்கு இருக்கும் இல். உனக்கு என்பது முதலாகிய சொற்களைக் கூட்டி விரித்து உரைக்க.
பகுதி - இரவிற்குறி; துறை - நலம் பாராட்டல். தளர்வுஅகன்று உரைத்தல் என்பதும் இது.
[அயன் அகரம் - பிரமன் இருக்கை. மலைக்கு உறவர் - மலைகளுக்கு உறவு உடையார். தெளிந்ததாம் - தெளியப்பட்டதாகும். அந்தாமம் - பரமபதம். கூண்டு - ஒன்றுகூடி. எவன் - யாது காரணம் பற்றி.]

**இட்ட மணிப்பரல் சிலம்பு சிலம்பு தளிர் ஏய்ந்த இருதாளந்தாளம்**
**வட்டமுலைத் துவர்இதழ்க் கோமளக்கொடியும் மணமகனும், வாள்நுதாஅல்! போய்ச்**
**சிட்டர் தொழும் அரங்கேசர் காவிரி காவிரி இதன்முன் செல்வர்; செல்வர்**
**நட்ட திறம் திருமாதும் திருமாலும் எனும்படித்தாம், நவிலுங்காலே. (705)**

இது முதலடியும் மூன்றாமடியும் இடையொடு கடைமடக்கு.
(இ-ள்) உள்ளிடு மணியாகிய பரலையுடைய சிலம்புகள் ஆரவாரிப்பனவாய், மாந்தளிர் போன்ற தாள்களையும், அழகியவாம் தாளம் போன்ற வட்ட முலை-களையும், பவளம் போன்ற இதழினையும் உடைய இளைய பொன்னங்-கொடியும் மணக்கோலத்தை உடைய காளையும், ஒளி பொருந்தின நுதலை உடையாய்! தொண்டராய்உள்ளார் தொழும் அரங்கநாதரது சோலைகள் மலரை மலர்த்தும் காவிரித்துறையின்கண் இதற்கு முன் செல்வர்; அச்செல்வத்தை உடையார் தம்முள் கொண்ட நட்பின் கூறுபாடும், பிராட்டியும் மாதவனும் என்று

கூறப்படும் உவமை உடைத்து, சொல்லுமிடத்து என்றவாறு. எனவே நீ போவதால் பயன் இல்லை என்பதாயிற்று.

பகுதி - உடன்போக்கு; துறை - செவிலியை மீள உரைத்தல்.

[சிலம்பு - காலணி, ஒலிக்கின்ற. இருதாள் - ஈரடிகள். அந்தாளம் - அழகிய தாளமிடும் கருவி. காவிரி - சோலைகள் விரிகின்ற, காவிரிக்கரை. செல்வர் - சென்று அடைவார்கள், செல்வத்தை உடையவர்கள். நட்ட திறம் - நட்புச்செய்துகொண்ட உள்ளத்து அமைப்பு. படித்து ஆம் - தன்மையை உடையது.]

**குலத்தரு வாழ் வாசவனம்பதி வாசவனம்பதி மென்கோதைக் கோதைக்கு**
**இலக்கணமாம் பதி எனில் பொன்அல(க்) காவும் உலகும்; அரவிந்தம் என்னில்,**
**சொலத்தகு கைத்தலம் நான்கின் நிதியமும் மாதுளங்கனியும் துணைமென்-**
**போதும்**
**நலத்தகைக்கண் களிதரக் காண்கில மீதோவிலமீதோ, நாட்டின் நாட்டின்? (706)**

இது முதலடியும் நான்காமடியும் இடையொடு கடைமடக்கு.

(இ-ள்) மனனே! மெல்லிய மாலை சூட்டப்பட்ட குழலை உடையாளாய் இங்ஙனம் நின்ற இவட்கு நல்ல பதி, ஐந்தருவும் ஆக்கம் பெற்ற பரிமளக்காக் குடிகொண்ட இந்திரனது நல்ல பதி என்று விசாரிப்போமாகில், இக்காவும் இவ்வுலகமும் பொன்மயமல்ல. அஃதன்றிப் பதி தாமரை என்று விசாரிப்போமாகில் இவட்கு, நூல்கள் கூறத்தகுவவாம் கரங்கள் நான்காய், அவற்றின்கண் ஐச்சுரியமும், மாதுளங்கனியும், தாமரைப்பூக்களும் இன்பத்தைப் பெற்ற நம் அழகிய கண்கள் களிதரக் காண்கின்றிலம். இவட்குச் சொன்னவை அன்றி இல்லம் இவ்வுலகமோ? விசும்போ? இவ்விரண்டிடத்தில் குறிக்கில் யாதோ? அறிவு அரிது என்றவாறு.

'யாதோ? அறிவு அரிது' என்பதனைப் பயனிலை எச்சமாக்கி விரித்து உரைக்க. 'மனனே' என்பது தோன்றா எழுவாய். 'இல்லம்' என்பதனை மத்திமதீபமாக்கிக் கூட்டுக. ஒழிந்த அரும்பதங்களும் குறித்து உட்கொள்க.

பகுதி - இயற்கைப்புணர்ச்சி; துறை - ஐயுறல்.

[குலத்தரு - கற்பகமரங்கள். வாச வனம் பதி - பரிமளமுடைய சோலை அமையப்பெற்ற. வாசவன் அம் பதி - இந்திரனுடைய அழகிய அமராவதி நகரம். கோதை - மாலை, தலைமயிர்; தலைமயிரை உடைய தலைவி. இலக்கணமாம் பதி - நல்ல இருப்பிடம். பொன் அல - பொன்மயம் அல்ல. இலம் ஈதோ மீதோ - இவளுக்கு இருப்பிடம் இவ்வுலகமோ? மேல் உலகமோ? நாட்டில் - இவ்வீரிடங்களில், நாட்டின் - குறித்து உணரின். 'யாதோ அறிவு அரிது' என்ற தொடர் முடிவு கருதி வருவித்து உரைக்கப்பட்டது. விசாரித்தல் - ஆராய்ந்து அறிதல்.]

**மின்னியல் நுண்ணிடை; களபப் புளகப் படாமுலைகள் இணைமேரு ஆகும்;**
**தன்னிகர் மற்று இல்லாத விழிக்கு உவமை அரங்கர் துணைத்தாமமான**
**பொன்னி இடத்தின் பானலின் பானல் வாய்; இலவம் பூவே, பூவே!**
**கன்னி துவர் இதழ்க்கு உவமை; உவமை குழல்; உரைக்க அடங்காதே, காதே.**
**(707)**

இது கடைஈரடியும் இடையொடு கடைமடக்கு.

(இ-ள்) பூமியைப் போலப் பொறை உடையாய்! அழியாத கற்புஉடையாட்கு, மின்போன்ற இயல்பை உடையது சிறிய இடை; மான்மதக்குழம்போடும் புளகிக்கப்பட்ட முலைகள் உபயமேரு ஒப்பன. தமக்கு வேறு நிகர் இல்லாத கண்கள் ஒப்பன அரங்கனுக்கு இணைமாலையான காவிரியில் தோன்றிய

நீலோற்பலமே. நல்ல மொழியானது இனிய பாலே. சிவந்த இதழ் இலவம்பூவே. குழலானது உவக்கும் தன்மையை உடைய மேகமே. காதானவை உவமை கூறுதற்கு அடங்குவ அல்ல என்றவாறு.
உவ மை - கண்டாரால் விரும்பப்பட்ட மேகம். ஒழிந்த அரும்பதமும் குறித்து உட்கொள்க. இறுதி ஏகாரம் ஈற்றசை.
பகுதி - சேட்படை; துறை - தலைவன் பாங்கிக்கு அவயவம் கூறல்.
[பூவே - பூமிதேவியைப் போலப் பொறுமையை உடைய தோழியே. கன்னி - அழியாத கற்புடையாள். விழிக்கு உவமை பொன்னி இடத்தின் பானல் - கண்களுக்கு உவமை காவிரியில் தோன்றும் கருவிளைப்பூ. இன்பால் நல்வாய் - நல்ல வாயிலிருந்து வரும் மொழி இனிய பால் போன்றது. இலவம்பூவே துவர்இதழ்க்கு உவமை. உவ மை குழல் - விரும்பப்படும் மேகம் போல்வது கூந்தல். காது உரைக்க அடங்காது - காதுகளுக்கு உவமை கூற இயலவில்லை. அடங்காதே, காதே - ஏகாரம் இரண்டும் ஈற்றசை.]

**கிளர்பைப் பணிமேல் துயில்அரங்கர் கெழு தண்கடல் கானலில் பானல்**
**உளர் பொன்சுரும்பே! பொருநர்முனை உள்ளார் உள்ளார் என்கேள் கேள்**
**வளர் பைச்சடம்பே! சடம்பேயின் வடிவாயதுவே; வாயதுவே**
**தளர்வுற்றது; மன்னுயிர் எவனோதான் மேல்உறும் என்று அறியேனே. (708)**

இஃது இடைஈரடியும் இடையொடு கடைமடக்கு.
இதனை, 'கிளர் பைப்பணிமேல் துயில் அரங்கர் கெழு தண்கடல்கானலில் பானல் உளர் பொன்சுரும்பே! வளர் பைச்சடம்பே! கேள்; என் கேளாகிய பொருநர் முனைஉள்ளார் உள்ளார்; என் சடம் பேயின் வடிவாயது; வாயதுவே தளர்வு உற்றது. மன்உயிர் எவனோ தான் மேல் உறும் என்று அறியேன்' என இங்ஙனம் பாடம் மாற்றி மாட்டுறுப்பு என்னும் பொருள்கோள் கொள்க.
முனைஉள்ளார் உள்ளார் - பாசறையில் உள்ளாராகிய தலைவர் என்னை நினையார். பைச்ச அடம்பே - பசுத்த அடம்புகாள்! கேள் - கொழுநரான. கேள் - கேளும். 'கேளும்' என்பது 'கேள்' என உம் ஈறு தொக்கது. 'உள்ளார் என் கேள்' என்பது
'என்நீர் அறியாதீர் போல இவைகூறல்
நின்நீர அல்ல நெடுந்தகாய்' (கலி. 6 - 9-8)
என்பதுபோல, ஒருவரைக் கூறும் உபசாரப்பன்மைப்பாலோடு ஒருமைப்பால் மயங்கியது. சடம் - உடம்பு. வாயதுவே தளர்வுற்றது - வசனம் குழறியது. ஒழிந்தனவும் உரையிற்கொள்க.
பகுதி - வினைவயின் பிரிதல்; துறை - காமம் மிக்க கழிபடர்கிளவி.
[மகிழ்ச்சியை வெளிப்படுத்தும் படம் எடுக்கும் திருஅனந்தாழ்வான்மீது அறிதுயில் கொள்ளும் அரங்கப்பெருமானுடைய குளிர்ந்த கடற்கரைச் சோலையை அடுத்த கருங்குவளைப்பூக்களில் படியும் பொன்வண்டே! பச்சைநிறம் கொண்ட அடப்பங்கொடிகளே! நீங்கள் யான் கூறுவதனைக் கேளுங்கள். என் தலைவராகிய வீரர், போரிடும் போர்க்களத்து உள்ளாராகி என்னை நினையாமல் இருக்கிறார். என்உடல் பேயின்உடல் போல வற்றிவிட்டது. என்சொற்களும் குழறத் தொடங்கிவிட்டன. என் நிலையான உயிருக்கு இனி யாது நிகழப்போகிறதோ என்பதனை அறியேன்.
'நீர்' என்று முதலில் உபசாரப்பன்மையில் தொடங்கிப் பின் 'நின் நீர அல்ல' என ஒருமையில் கூறியமை, 'கேள்' என்ற ஒருமை 'உள்ளார்' என்ற பன்மையொடு முடிந்த வழுவமைதிக்கு எடுத்துக்காட்டாகும்.]

**மருள்பயில் வல்அவுணரைக் கொன்று அரக்கரைக் கொன்று அளித்ததல்லால்,**
**வாழ்நாள் எண்ணித்**
**திருவரங்கத்திடைத் துயின்ற அமுதமே அமுதமே! தேத்த தேத்த**

**உருவளர் வான்புனற்கு உதரத்து உயிர்களை வைத்துஅளித்த நின்னை உவந்திடாதே**
**இருள்நரகத்திடை வீழ்வார் வீழ்வார்மற்று ஒருதெய்வம்; என்னே என்னே!** (709)

இஃது இரண்டாம்அடியும் நாலாம்அடியும் இடையொடு கடைமடக்கு.

(இ-ள்) சிறப்புடை உயிர்கள் பெற்ற யாக்கையோடு இருக்கும் நாள் கழிந்து, இன்னும் ஓர் ஈனயாக்கையுள் புகுதும்நாள் எய்தாதே சோதிச்சொரூபமான யாக்கையுள் புக்குப் பரமபதப் பேரின்பத்தை அனுபவித்து வாழும் நாள் பெறவேண்டும் என்று திருவுளத்து உற்று, அர்ச்சாவதாரமாகி, அரங்கத்தின் நடுவே கண்வளர்ந்த அமுதே! முன்னாள் நீ அறியாமை இடைவிடாத அவுணரைக் கொன்று காத்ததோடும் அரக்கரையும் கொன்று உலகுஉயிர்களைக் காத்தது அல்லாமலும், ஏகோதகப் பிரளயம் மிகுந்த தேயத்துள் கரசரணாதிகள் இழந்த உயிர்களை அக்கழிபெரும்புனலுள் அழியாது திருஉதரத்துள் வைத்துக்காத்த நினது செய்ந்நன்றி அறிந்து, நின்னை விரும்பாதே, இருண்ட நரகத்துள்மேல் விழுவார், பிறிதுஒரு தெய்வத்தை விரும்பாநின்றனர்; இஃது என்ன செய்ந்நன்றியறிதல்? அந்தோ! என்றவாறு.

பின்னர் வந்த அமுதம் ஏகோதகம். தேத்த - மிகுத்த. தேத்து - இடத்து. அவ் - சுட்டு. வீழ்வார் - விழுவார், விரும்புவார். என்னே - என்ன. என்னே - அந்தோ!

திணை - பாடாண்; துறை - பரவார்ப் பழித்தல்.

[ஏகோதகம் - ஊழிப்பெருவெள்ளம். தேத்த - இடத்தில் உள்ள. வான் புனற்கு - அப்பெருவெள்ளத்தில் அழியாது இருப்பதற்கு. உயிர்களை - கைகால் முதலிய உறுப்புக்களை இழந்து அணுவடிவமாக இருக்கும் உயிர்களை. மற்றொரு தெய்வம் வீழ்வார் - வேறொரு தெய்வத்தை விரும்புபவர்களுடைய. என்னே - என் நே - நே என் - நேயமானது எத்தகையது? அஃதாவது செய்ந்நன்றிஅறிதல் எத்தகையது? இரண்டாவது 'என்னே' இரக்கக்குறிப்பில் அந்தோ என்னும் பொருளது.]

இவை ஆறும் ஈரடி ஈரிடத்து மடக்கு.

இனி மூன்றடி ஈரிடத்து மடக்கு வருமாறு.

**மன்னுயிரைக் குறித்துஉளம் நைந்துள அத்தா! துளவத்தா! மாயா மாயா!**
**பொன்னி நடுத்துயில் பரமா! பரமாகாயத்தும் விருப்புள்ளாய்! புள்ளாய்!**
**பன்னரு மூன்றுஉடன் அமை அஞ்சக்கரத்தாய்! சக்கரத்தாய்! பாராய், பாராய்**
**நன்னிலை பெற்று எழுபூதம் ஈற்றனவாய் ஐவர் எனை நலியா ஆறே.** (710)

இஃது ஈற்றடி ஒழித்து ஏனை மூன்றுஅடியும் இடையொடு கடைமடக்கு.

(இ-ள்) நிலைபெற்ற உயிர்களைக் காப்பது கருதித் திருவுள்ளம் குழைவதுடைய அத்தனே! துளவமாலை உடையவனே! ஒருகாலமும் அழியாத மாயவனே! பொன்னிநடுவே துயில் பரமனே! பரமபதத்தினும் லீலாவிபூதியினும் அன்புடையவனே! கருடவாகனத்தை உடையவனே! சொல்லிப் புகழ்தற்கு அரிய ஐந்தும் மூன்றுமாகிய திருஅட்டாக்கரத்தை உடையவனே! சக்கரத்தை உடையவனே! பூமி என்பதாய் நல்ல நிலைபெற்றுத் தோன்றும் பூதம் ஈறாக உடையனவாம் ஐந்துபூதவாயில்களில் ஐந்துபுலன்களும் என்னை வருத்தாவண்ணம் உன் திருக்கடைக்கண்ணால் பார்ப்பாயாக என்றவாறு.

திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து.

[அத்தன் - தலைவன். மாயா - அழியாத. மாயா - மாயவனே! பொன்னி - காவிரி. பொன்னிநடு - வடதிருக்காவிரி தென்திருக்காவிரி என்ற இரண்டன் நடுவே அமைந்த

திருவரங்கம். 'பரமாகாயத்தும்' என்ற உம்மையால், இவ்வுலகமாகிய லீலாவிபூதி-யாகிய விளையாட்டுச்செல்வமும் கொள்ளப்பட்டது. பாராய் - பார்ப்பாயாக. பார் ஆய் - பூமி என்பதாய். 'எனை நலியாஆறு பாராய்' என முடிக்க.]

**உரம்காயும் மன்னரவை மன்னரவை உவப்ப உதைத்து ஆடல், ஆடல்-**
**அரங்காய் முன்நடி அரங்கா அடியரங்கா தரித்திட ஓர்அம்பால் அம்பால்**
**இரங்குஆழி வளைத்த எயில் இலங்கையர்கோனையும் வதைசெய் எந்தாய்! நின்னைப்**
**பரங்காண் என்று இருந்த இருந்தவர்தமைச் சுற்றாது, இயமபாசம் பாசம். (711)**

இஃது ஈற்றயலடி ஒழித்து ஏனை மூன்றுஅடியும் இடையொடு கடைமடக்கு.

(இ-ள்) சத்துருக்கள் மிடுக்கைக் கெடுக்கும் நிலைபேறுஉடைய பாம்பைத் தெய்வஅரசர் விருப்பமுறத் தாளினால் உதைத்து வெற்றியுடன் ஆடும் அரங்காக முற்காலத்து ஆடும் அரங்கனே! அடியராகிய தேவர் தேவர் உலகத்தினில் இருந்து அன்புற்றிட ஓர்அம்பினாலே, புனல் அலைதலுடனே ஆரவாரிக்கும் சமுத்திரம் வளைக்கப்பட்ட மதிலை உடைய இலங்கையில் உள்ளார்க்கு அரசனாகிய இராவணனையும் வதைத்த எம்முடைய தாயே! நின்னை 'நெஞ்சமே! இவன்காண் பரத்துவம் என்று காண்பாயாக' என்று யோகித்திருந்த பெரிய தவத்தை உடையோரை இயமபாசமும் மண் பெண் பொன் என்ற பாசத்தளையும் வளையா என்றவாறு.

நெஞ்சே! என்பது முதலிய சொல்லெச்சம்.

திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து.

[மன் அரவை - நிலைபெற்ற பாம்பாகிய காளியனை. மன்னர் அவை - அரசனுடைய சபையிலுள்ளார். ஆடல் - வெற்றி. ஆடல் - கூத்தாடுதல். நடி - கூத்தாடும். அரங்காய் - கூத்தாடும் இடமாய். அரங்கா - திருவரங்கனே! அடியர் அங்கு ஆதரித்திட - அடியராகிய தேவர் தம்உலகில் விரும்பி இருக்க. அம்பால் - அம்பினாலே, அம்பு ஆல் - தண்ணீர் அலைதலுடனே. இரங்கும் - ஆரவாரிக்கும். இருந்த - யோகம் செய்து கொண்டிருந்த. இருந்தவர் - பெரிய தவத்தை உடையவர். பாசம் - கயிறு. மண் பெண் பொன் என்ற மூவகைக் கட்டுக்கள். இயமபாசமும் சுற்றாது, பாசத்தளையும் பிணிக்காது எனத் தனித்தனிப் பிரித்துக் கூட்டுக.

'மன்னரவை' என்ற தொடருக்குத் தெய்வஅரசர் என்று உரையாசிரியரால் பொருள் கூறப்பட்டதன் பொருத்தம் ஆராய்தற்கு உரியது. இத்தொடர் ஏடு எழுதுவோரால் பிழைபட எழுதப்பட்டிருக்கலாம். 'மன்' நிலைபேறுடைய தேவர்களை ஆகுபெயரால் குறிப்பிட, நர ஐ என்பது மக்களுக்குத் தலைவர் என்ற பொருளில் அரசர்களைக் குறிப்பிட்டதாகக் கொண்டு 'மன்னரவை' என்ற தொடருக்குத் தெய்வஅரசர் என்று பொருள் செய்யப்பட்டதுபோலும்.]

**கெடல்அரு மெய்த்தரணி தரணிகள் அழுங்க மறைந்தது போய்; கேளீர்! கேளீர்**
**அடல்அரும் ஆளியின் நிரைத்து ஆறு அலைப்பவர் உண்டு; இரவு இவண் வைகலும், தேன்ஆர்ந்தே**
**மடல்அவிழ் தண்துளபத்தான் நாங்கையின் நாங்கையின் அளிப்ப, வதுவையா-யாய்**
**தொடலை நறுங்குழல் குழல் தேமொழியொடும் வைகுறு மறுகில் தோன்றல், தோன்றல்! (712)**

இது முதலயலடி ஒழிந்து ஏனை மூன்றுஅடியும் இடையொடு கடைமடக்கு.

(இ-ள்) கேடு இல்லாத மெய்ம்மையை உடைய ஆதித்தன் குடகடல் புகக் கிரணம் பூமியிலுள்ளார் இரங்க மறைந்தது. எமக்குக் கேள்ஆகுவீர்! யாம்

கூறுவதனைக் கேட்பீராக; ஒருவராலும் அடுத்தற்கு அரிய சிங்கம் போன்று ஆரவாரித்து, வழிபறிப்பவரும் உண்டு; ஆகையால் இரவின்கண் எம்இடத்து வைகுதலோடும், தேனும் விருந்தாக அருந்தி, நாங்கள் கைப்பிடித்துத் தரக் கலியாணமும் எய்தி, ஆராயப்பட்ட மாலையைச் சூட்டும் நறுவிதாம் குழலையும், குழலிசை போலும் தேன்போலும் மொழியையும் உடையாளோடும் வைகறையில் துயில் ஒழிந்து எழுந்து, துளபத்தானது திருநாங்கை மறுகிடத்தில் பெரியோனே! தோன்றுவாயாக என்றவாறு.

கேளீர் என்றது இருவரையும். தோன்றல் என்பது அண்மைவிளி. பொருள்கோள் - கொண்டுகூட்டு. பகுதி - உடன்போக்கு; துறை - நெறிவிலக்கிக் கூறல்.

[தரணி - சூரியன்; தரணிகள் - உலகில் உள்ளார். கேளீர் - எமக்கு உறவினர்போல் வந்திருக்கின்றீர்களே! கேளீர் - யாம் கூறுவதனைக் கேட்பீராக. நாங்கையில் - திருநாங்கூர் என்னும் திருப்பதியில், நாம் கையில் அளிப்ப - நாங்கள் கைப்பிடித்துத் தர. வதுவையாய் - திருமணம் செய்துகொண்டவன் ஆகி. ஆய் தொடலை - ஆராயப்பட்ட மாலை. குழல் - கூந்தல்; குழல் - வேய்ங்குழல். தோன்றல் - ஆடவருள் மேம்பட்டவனே! தோன்றல் - தோன்றுவாயாக.

'கேளீர்! கேளீர், தரணி மறைந்தது. ஆறு அலைப்பவர் உண்டு. இரவு இவண் வைகல், நாம் கையில் அளிப்ப வதுவையாயாய்த் தேமொழியொடும் மறுகில் தோன்றல்' என்று வினைமுடிவு செய்க.]

> **அலம்வரு செங்கதிர் ஆழி கணிச்சியினும் கொடிது; உணராது, அணுகாதே நீ**
> **நிலன்இடை மன்னுயிர் பிரிக்கும் நடுக்கற்றாய்! நடுக்கற்றாய்! நின்னின்; நின்னின்**
> **நலன்உடை வானவர் துதிக்கைத் துதிக்கை மலை அழைத்தவன் என்நாதன்**
> **ஆம்ஆம்**
> **மலர்மகள் சேர் மணிமார்பன் வைகலும் வைகலும் மறுகில் வண்டூர் வண்டூர்.**
> **(713)**

இது முதலடி ஒழித்து ஏனை மூன்றுஅடியும் இடையொடு கடைமடக்கு.

இதனுள் நடுக்கற்றாய் - நடுவுநிலைமை கற்றவனே! நடுக்கு அற்றாய் - நடுக்கம் அற்றவனே! நடுவுநிலை கற்றவன் - சமன். நில்நில் - நிற்பாயாக, நிற்பாயாக. நின்னில் - உன்னிலும். வானவர் துதிக்கைத் துதிக்கை மலை - தேவர்கள் ஏத்தும் துதிக்கையை உடைய யானை. நாதன் ஆம் - சுவாமி ஆவான். மாமலர்மகள் சேர் மணி மார்பன் - பெரிய தாமரையாளைத் தழுவும் மார்பினை உடையான். வைகலும் வைகலும் - எல்லாநாளும் தங்குதலும். மறுகில் வண்டு ஊர் வண்டூர் - பதிதோறும் சங்கு தவழும் திருவண்வண்டூர் என்ற திருப்பதி.

'துதிக்கைமலை அழைத்தவன் என் நாதன் ஆம்; அவன் கையில் சுற்றுதலை உடைய கதிர்ஆழி உன் கணிச்சியினும் கொடிது; இதனை அறியாதே என்னிடத்து அணுகாதே; நமனே! நிற்பாயாக' எனக் கூட்டுக. எனவே, உனக்கு என்னிடத்து வருதல் கூடாது என்பது கருத்து.

திணை - வஞ்சி; துறை - நெடுமொழி வஞ்சி.

[உலகிலுள்ள உயிர்களை அவற்றின் உடலிலிருந்து பிரிக்கும் நடுவுநிலையைக் கற்ற காலனே! உன்னைக் காட்டிலும் மேம்பாட்டினை உடைய தேவர்கள் போற்றும் கசேந்திரனால் அழைக்கப்பட்ட எம்பெருமான் திருமகள் தங்கு மார்பனாம்; தெருக்களில் சங்குகள் தவழும் திருவண்வண்டூர் என்னும் திருத்தலத்திலுள்ளான். அவன் கையில் சுழன்று கொண்டிருக்கும் சக்கரம் உன் சூலத்தைவிடக் கொடியது ஆதலின் நடுக்கம் இல்லாத யமனே! நீ என்பக்கம் வாராமல் அங்கேயே நிற்பாயாக என்றவாறு.

ஒருவன் தன்ஆண்மையைப் போர்க்களத்தில் எடுத்துஉரைப்பது நெடுமொழி வஞ்சி எனப்படும்.]

**மாறர் குருகூர் குருகூர் வடிவேல வேல**
**நாறு மளகத் தளகத் துணையீகை யீகை**
**ஆறி னகலா தகலாத தாமாக மாக**
**நீற னிலவா னிலவா நினைந்தேக லேகல். (714)**

இது நான்குஅடியும் இடையொடு கடை முற்றுமடக்கு.

[மாறன் குருகுஊர் குருகூர் வடிவேல! ஏலம்
நாறும் அளகத்தள் அகத்துள்நை ஈகை ஈகை
ஆறின் அகலா; தகலாதது ஆம்; ஆகம் மாகம்
நீறல் நிலவால் நிலவா; நினைந்து ஏகல் ஏகல்
என்று பிரித்துப் பொருள்செய்யப்பட்டுள்ளது.]

காரி தரும் மாறருடைய சங்குகள் தவழப்பட்ட குருகூரினிடத்துக் கடைந்த வேலையுடையவனே! ஏலம் பரிமளிக்கும் அளகத்தை உடையாள் உள்ளத்துள் துன்பம் நீ பொன்னைக் கொண்டுவந்து தரும் வழியால் நீங்காது; தக்கது அல்லவாம்; இவள் மேனியும் ஆகாசம் நீறும்படிக்கு இரவில் எழும் நிலவி- னாலே அழகு அழியும்; ஆகையால் இவற்றை நினைத்து ஏகலை உடைய கடம் கடந்து பொருள்செய்யப் போவதை ஒழிவாயாக என்றவாறு.

பகுதி - பொருள்வயின் பிரிதல்; துறை - ஆற்றாமை கூறிச் செலவு அழுங்கு- வித்தல்.

[குருகு ஊர் - சங்குகள் தவழ்கின்ற. குருகூர் - திருத்தலம். ஏலம் - நறுமணம். அளகத்தள் - மயிர்முடியை உடையவள். அகத்துள் நை - மனத்திலுள்ள துன்பம். ஈகை - பொன். ஈகை ஆறின் - கொண்டுவந்து தரும் வழியால். அகலா - நீங்காது. தகலாததாம் - தக்கது அல்லதாம். அகம் - உடம்பு. மாகம் - ஆகாயம். நீறல் - சாம்பலாகப் போதல். நிலவால் - சந்திரனாலே. நில்லா - நிலைபெறாது அழியும். ஏ கல் - பெரிய கற்களை உடைய வழி. ஏகல் - செல்லாதே.]

இவை பதினைந்தும் இடையொடு கடைமடக்கு.

இவை நாற்பத்தைந்தும் ஓரடியும் ஈரடியும் மூவடியும் நாலடியுமாக ஈரிடத்தை மடக்கியன. ஆக மடக்கு 90.

இனி, அடிதோறும் இடைவிடாது மூன்று இடத்தும் மடக்கும் மடக்கு வருமாறு:

**முன்னினை, முன்னினை மிடல்வல் இடங்கர் இடங்கரி நொந்த மூலமூலம்**
**என்உரை சென்று அடங்காமுன், அவ்வுழி அவ்விடங்கர் உயிரினையே**
**உண்பான்;**
**நின்நிலை இவ்வுழி உளதோ எனக் கனகன் உருத்து அடித்த நெடிய தூணின்**
**மன்நிலைபெற்று அவன்உயிர் உண்டனை; அரங்கா! நினக்கு இணை யார்**
**மதிக்குங்காலே? (715)**

இது முதலடி மூன்றுஇடத்து மடக்கு.

இதனை மிடல் வல் இடங்கரிடம் நொந்த மூலம், முன் நினை கரி மூலம் என் உரை சென்று அடங்கா முன்னர், அவ்வுழி அவ்இடங்கர் உயிரினை உண்பான் முன்னினை எனச் சேர்க்க.

(இ-ள்) மிடுக்கை உடைய வலிய முதலையின் கையில் அகப்பட்டு நொந்தது ஏதுவாக, முன்னாளில் உன்னை நினைத்த யானை சொல்லிய மூலமே என்னும் உரையின் ஒலி நினது திருச்செவியுள் புக்கு அடங்காத முன்னம் அக்கயத்- தினிடத்து அந்த முதலையின் உயிரை உண்ண வேண்டிச் சென்றனை; அஃது அன்றியும், அரங்கனே! நீ அந்தர்யாமியாக நின்றது இங்கும் உளதோ என்று இரணியன் கோபித்து அடித்த நெடிய தூணினிடத்து மிகவும் நின்று அவ்

இரணியன் உயிரையும் உண்டனை; ஆகையால், விசாரிக்குமிடத்து நின்னோடு இணையான கடவுளர் இல்லை என்றவாறு.

இதன்கண் அகப்பட்டு என்பது சொல்லெச்சம். உரை - ஆகுபெயர்.
திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து.

[முன்னினை - கருதினாய். முன் நினை - முன்னாளில் உன்னை நினைத்த. இடங்கர்-இடம் - முதலையினிடத்தில். மூலம் - காரணமாக; மூலம் - ஆதிமூலம். உரை - சொல்லின் ஒலியை ஆகுபெயரால் உணர்த்தியது. நின்நிலை - உன்னுடைய இருப்பு. மன் - மிகவும். நிலைபெற்று - தங்கி. அவன் - இரணியன்.]

**வெளிஅதாய் அமைந்தது இடை; மேருஅது ஆம் முலை; உயிர்ஓவியத்தைப் பெற்ற**
**அளிய தாய் அளியதாய் மலர்; மாதே; மாதேவர் ஆரும் ஆரும்**
**ஒளியதாம் அமுதம்மொழி; கருங்குவளை விழி எனலாம்; உறையுள், நண்பா!**
**வெளியதாய் இருபதுகைக் குன்றினை வென்றான் இடபகிரியாம் அன்றே.** (716)

இஃது இரண்டாம்அடி மூன்றுஇடத்து மடக்கு.

(இ-ள்) நண்பனே! உயிரோடும் கூடிய ஓவியம் போல்வாளைப் பெற்ற கிருபையை உடைய தாய், வண்டு மதுஉண்ண ஆராயப்பட்ட தாமரைமலரே; மாது அம்மலரின் செய்யவளே, சந்தயமில்லை; முலை மேரு; இடை ஆகாயம்; வானோர்யாவரும் உண்ணும் அமுதம் மொழி; விழி கருங்குவளை; உறையு-மிடம் இராவணனாகிய இருபதுகைக்குன்றை எளிதாகப் போர்க்களத்து வென்ற சுந்தரத்தோள் அழகர் சோலைமலையாம் என்றவாறு.

பகுதி - பாங்கற்கூட்டம்; துறை - இயல்புஇடம் கூறல்.

[வெளி - ஆகாயம். அளிய - கருணை உடைய. மா தே - இவள் மலர்மாதாய் இருக்கு-மிடமே. ஆரும் - உண்ணும்; ஆரும் - யாவரும். ஒளியதாம் - பிரகாசம் உடைய. வெளியதாய் - வெளிப்படையாகப் போர்க்களத்திலே. இடபகிரி - சோலைமலை.]

**ஏது கொண்டும் மானிடர்தமைப் பாடுதல் இழிவுஎன்று எப்-**
**போதும் மாறனைப் போற்றுதற்கு என்னொடு இன்புறு; நெஞ்சே!**
**ஆதும் ஆது மெல்முல்லை முல்லையின் இறைஆவான் வான்**
**நீதி ஆய்ந்தனம் ஆகையால், முத்தி நிச்சயம் அன்றே.** (717)

இது மூன்றாம்அடி மூன்றுஇடத்து மடக்கு.

(இ-ள்) யாதாயினும் ஒருபொருளை முந்த வாங்கிக்கொண்டாயினும் அதன் முன்னராயினும் மனிதரைப் பாடி வாய்மை இழத்தல் இழிந்த தொழில் என்று அறிந்து, அவர்களைப் பாடாது எப்போதும் காரிமாறனைப் போற்றுதற்கு என்னோடு ஒன்றாய்ப் பேரின்பம் எய்தாநின்ற நெஞ்சமே! நாம் மேலும் ஆகக்கடவோம்; பசுக்கள் பொசிப்பாக மெல்லும் முல்லைக்கொடியை உடைய முல்லைநிலத்துக்கு இறைவனாகிய கண்ணபிரானது பரமபதத்தினது ஒழுக்-கத்தை மாறன்நூல் கூற ஆய்ந்தனம் ஆகையால், இருவழியாலும் நாம் முத்தியைப் பெறுதற்குச் சந்தயம் இல்லை என்றவாறு.

ஆதும் என்பது மேல் ஆகக்கடவோம் என்னும் உளப்பாட்டுத்தன்மையின் வந்த எதிர்காலமுற்றுவினைச்சொல். என்னை?

ஓஒதல் வேண்டும் ஒளிமாழ்கும் செய்வினை
ஆஅதும் என்னு மவர் (குறள். 653)

என்பதனால் அறிக. திணை - வாகை; துறை - அறிவன்வாகை.

[ஏது கொண்டும் - யாதேனும் ஒரு பொருளைக் கொண்டும், உம்மையால் கொள்ளாமலும். ஆதும் - எதிர்காலத்தில் ஆக்கம் கிட்டப்பெறுவோம். ஆ - பசு. து - உண்ணுகின்ற. முல்லை - முல்லைக்கொடி, முல்லைநிலம். முல்லைநிலத்துக்குக் கண்ணன் தெய்வமாதல்
'மாயோன் மேய காடு உறை உலகமும்' (தொ. பொ. 5) என்பதனால் உணரப்படும். வான்நீதி - பரமபதத்தின் ஒழுக்கம். இருவழியானும் - மாறனைப் போற்றுதலானும் மாறன் அருளிய நூலை ஆய்வதனானும்.]

**வீடுஆளி வீட்டினுக்கு வீடுஆயதனை நிலையாய் விழுமிது ஆக்கும்**
**கேடாளர் கேண்மையினைப் பிரித்து, எனையும் தனது அடியார் கேண்மை ஆக்கும்**
**வாடாத மகிழ்மாலைப் பெருமானைத் துணைநெஞ்சே! மதித்து, விண்மேல்**
**நாடாள நாடாளரியையும் நினை; நினை இனித் தென்நாட்டான் நாட்டான். (718)**

இது நாலாமடி மூன்றிடத்து மடக்கு.
(இ-ள்) பரமபதத்தினை ஆளுபவன் குடிகொண்டு இருக்கும் ஆன்மாவாம் வீட்டினுக்கு வீடாகிய யாக்கையையும் நிலையிற்றாகும் முக்கியம் என உட்கொள்ளும் ஞானதரித்திரர்உறவினை என்னைவிட்டு நீக்கி, அறிவிலியாகிய என்னையும் தன் அடியார்க்குச் சுற்றம் ஆக்கும் வாடாத வகுளமாலிகையை உடைய சுவாமியை, எனக்குத் துணை ஆகிய நன்னெஞ்சமே! 'இவனே பரமாசாரியன்' என உட்கொண்டு, விண்ணுக்கு மேலாய பரமபதத்தினை ஆள நினை; அவனோடு நரனும் சிங்கமும் ஆனவனையும் நினை; நினைத்தால் நின்பேரைத் தெற்கின்கண் உண்டாகிய நாட்டினை உடைய நமன் தன்கணக்கின்கண் எழுதான் என்றவாறு.
நம்பேரை மனத்துக் குறியான் என்றுமாம். எனவே, இயமதண்டமும் இல்லை; செனனமும் இல்லை; முத்தியையும் எய்தலாம் என்பது பயனாம்.
திணை - காஞ்சி; துறை - பொதுவியற்பாலுள் காஞ்சியைச் சார்ந்த பொருண்மொழிக்காஞ்சி.
[வீடு ஆளி - பரமபதத்தை ஆளும் இறைவன். வீடு - அவன் இருப்பிடமாகிய ஆன்மா. வீட்டினுக்கு வீடு - ஆன்மாவுக்குத் தங்குமிடமாகிய உடல். கேடாளர் - சரீரமே ஆன்மா என்று கருதிக் கெடும் அறிவிலிகள். விண்மேல் நாடு ஆள நாடு - தேவர்உலகிற்கும் அப்பாற்பட்டதான பரமபதத்தினை ஆள்வதற்கு நினைப்பாயாக. 'நாடு ஆள நாடு; ஆள் அரியையும் நினை; நினை, இனி, தென்நாட்டான் நாட்டான்' என்று கொள்க. நாட்டான் - மனத்துக்குறியான், தன் கணக்கின்கண் எழுதான்.]
இவைநாலும் ஓரடி மூவிடத்து மடக்கு.

இனி ஈரடி மூவிடத்து மடக்கு வருமாறு:

**தாம் பரியதாம் பரியதிரை திரைத்த பொனங்கொடியின் சங்கம்சங்கம்**
**தேம்பணைத் தேம்பணைத்து எறியும் விண்ணகராய்! விண்ணகராய்செல்வா! செல் வா,**
**யாம்புகழ் செண்பகமாறன் கொழித்த தமிழ்மறையினைக் கற்று, இறைவன்நீ நீ**
**ஆம்பரிசு உற்றவர் இதயத்தினில் குடிகொண்டு இருப்பதற்கு என்ஆகத்துள்ளே. (719)**

இது முதலடியும் இரண்டாமடியும் மூன்றுஇடத்து மடக்கு.
(இ-ள்) பாயும் பரியை ஒப்பனவாம் பெரிய திரைகள், சுருட்டி எடுத்த பொலிவினை உடைய அழகிய கொடியினோடும் சங்கம் என்னும் இலக்கத்தை உடைய சங்குகளையும் பூவில் தேன் பாயும் வயலிடத்து உகளித்து எறியும்

திருவிண்ணகரின்கண் உறைபவனே! பரதத்துவம் என்று தேவர்கள் ஆராய்ந்த உபயவிபூதியையும் உடைய செல்வனே! எம்மனோர் புகழ்பவனாம் செண்பக-மாறன் வேதசாரத்தைக் கோதறத் தெள்ளி உரைத்த திருவாய்மொழியினைக் கற்று நீயே பரப்பிரமம் என்பதாம் சுபாவமுணர்ந்தவர் இதயத்தாமரையில் குடிகொண்டிருக்கச் சென்ற நீ என் இதயத்துள்ளும் குடிகொண்டு இருப்பதற்கு வருவாயாக என்றவாறு.

இதனுள் பின்னர் வந்த செல் என்பதனை வினைத்தொகை ஆக்கிப் பின்னர் நின்ற நீ என்பதனோடும் சென்ற நீ என்று கூட்டுக. பொருள்கோள் - கொண்டுகூட்டு. திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து.

[தாம் பரி - தாவும் பரி. பரிய திரை - பெரிய அலைகள். சங்கம் - ஒரு பேரெண். சங்கம் - சங்கு. தேம் பணைத்தேம் - தேன் பாயும் வயல் இடங்கள். பணை - பண்ணை - வயல். தேம் - தேன், இடம். விண்நகர் - தேவர் உலகத்தவர். ஆய் - ஆராய்கின்ற. இறைவன் நீ ஆம் பரிசு உற்றவர் இதயத்தினில் குடிகொண்டு இருப்பதற்குச் செல் நீ. என் ஆகத்துள்ளே வா - எனச் 'செல்வா' என்பதனைச் செல் என்றும் வா என்றும் பிரித்துக்கூட்டலின் பொருள்கோள் கொண்டுகூட்டு.]

**முன்னை முன்னைநாள் துறந்தவனவனியை முதலானான்**
**தன்னை வந்து அடைக்கலம்புகக் கொடுத்த மெய்த் தண்காவான்,**
**என்னை; என்னை எண்ணுவது இனி? இனியவர் என் கேள்; கேள்**
**உன்னை அந்தகா! மதிக்கிலன்; பிறர்உளர் உனக்குஅன்றே.** (720)

இது முதலடியும் மூன்றாமடியும் மூன்றுஇடத்து மடக்கு.

(இ-ள்) தமையனை முற்காலத்து விட்டு நீங்கின வீடணன், தன்னிடத்து வந்து சரணாகதி என்ன, அந்த மூத்தவனாகிய இராவணன்இலங்கையை அந்த வீடணற்குச் சொன்னபடியே கொடுத்த சத்தியவசனத்தை உடைய திருத்தண்கா என்னும் திருப்பதியை உடையான், என்னுடைய சுவாமி. அவனுக்கு இனிய அடியவரும் என் சுற்றம். ஆகையால் அந்தகனே! கேட்பாயாக. என்னைக் குறித்து நீ மேல் எண்ணத்தகும் கொடுவினை யாதும் இல்லை. உன்னை நான் மனத்து அச்சப்பட்டு மதிப்பதாய் இல்லை. உன்கொடுவினைக்குத் திருத்-தண்காவான் அடியார் அல்லாத பிறர் உண்டு என்றவாறு.

அன்று - அசை. முன்னை - தமையனை. என்னை - என் சுவாமி. என்னை - யாதும் இல்லை. இனி - மேல். முதலானான் - மூத்த இராவணன். வீடணனான அவனுக்கு எனக் கூட்டுக. துறந்தவன் - வினைப்பெயர்.
திணை - வஞ்சி; துறை - நெடுமொழிவஞ்சி.

[முன்னைநாள் - முற்காலத்தில். துறந்தவன் - வீடணன். முதலானான் அவனியை - அண்ணனுடைய நாட்டினை. தண்காவான் என்சுவாமியாவான். என்னை எண்ணுவது - யாது எண்ண இயலும்? ஒன்றும் எண்ண இயலாது என்றபடி. இனி - அதற்குமேலே. கேள் - உறவினர். கேள் - கேட்பாயாக. அவன் அவன். ஆன் ஆன் என ஓசை-அளவில் மடக்கு.]

**முண்டக முண்டக நெகுகோடு உறுமேதி மேதிகளே முற்றுமுற்றும்**
**வண்டு இமிர் காவியும் மேயும் அரங்கத்தான் அருட்கு இலக்குஆம் மகிழ்நர் வாய்மைத்**
**தொண்டுஅமை பாணரைக் கன்னவாயிலின்கண் கரிக்கலம்போல் தோன்ற, நம்இல்**
**கண்டனம்; கண்டனம் புரைமென்மொழி நடை எங்கையரயர்தற் காதகாத.** (721)

இது முதலடியும் நாலாமடியும் மூன்றுஇடத்து மடக்கு.

[முண்டகம் உண்டு அகம் நெகு கோடு உறும் ஏதி மேதிகள் ஏமுற்று. முற்றும்; கண்டனம், கண்டு, அனம், புரை மென்மொழி, நடை எங்கையர் அயர்தற்கு ஆ தகாத என்று பிரித்துப் பொருள்செய்க. கய ரய என ஓசைஅளவில் மடக்கு.]

(இ-ள்) தாமரையை மேய்ந்து உள்ளம் மகிழ்ந்த கொம்பினை மிக்க ஆயுதமாக உடைய எருமைகள், அதன் மேலும் இன்புற்று, எல்லாநாளும் வண்டுகள் ஆரவாரிக்கும் நீலோற்பலத்தினையும் மேயும் திருவரங்கத்தான் அருட்கு இலக்காம் நம்முடைய தலைவர்க்கு உண்மையாகத் தொண்டுபாடு அமைந்த பாணரை, இன்று கன்னவாசலில் கரிப்பானை போல நம் இல்லத்து வாயிலின்-கண் தோன்றவும் கண்டனம்; இங்ஙனம் கண்டது நமக்குத் தக்கதாயினும், தோழீ! பாகினையும் அன்னத்தினையும் போன்ற மெல்லியமொழியினையும் நடை-யினையும் உடைய எங்கையர் காணில், அந்தோ! வருந்துதற்கு ஏது ஆதலால், இது தகாததாம் என்றவாறு.

இன்று என்பதனோடு பிறவும் சொல்லெச்சங்கள் வருவித்து உரைக்க.

பகுதி - பரத்தையிற்பிரிதல்; துறை - பாணனைப் பழித்தல்.

[முண்டகம் உண்டு - தாமரையை மேய்ந்து. அகம்நெகு - உள்ளம் மகிழ்ந்த. கோடு உறும் ஏதி - கொம்பினை மிக்க ஆயுதமாக உடைய. மேதிகள் - எருமைகள். ஏமுற்று - இன்பம் உற்று. முற்றும் - எல்லா நாளும். கண்டனம் - பார்த்தோம். கண்டு மொழி - கற்கண்டு போன்ற சொற்கள். அனம் புரை நடை - அன்னத்தை ஒத்த நடத்தல். எங்கையர் - என் தங்கை போல்வாராகிய பரத்தையர்கள். அயர்தற்கு ஆ - வருந்துதற்கு ஏது ஆவன. தகாத - ஏலாதன. களவு செய்யக் கன்னமிடுவோர் முதலில் கன்னத்-தொளை வழியே கரிப்பானையை உள்ளே செலுத்தி அதற்கு ஏதும் ஏதம் நிகழ-வில்லையெனின், தாம் புகுதற்கு இடையூறு இராது என்று முடிவுசெய்து பின்னரே வீட்டிற்குள் கன்னத்தொளை வழியே நுழைவர். அதுபோலப் பாணனை முன்னர் அனுப்பி அவனுக்கு ஏதும் ஏதம் இலதாம் செய்தியை உணர்ந்த பின்னரே தலைவன் தலைவிஇல்லத்தில் நுழைய வாய்ப்புத் தேடுகிறான் என்பது.]

**பத்தர் தீவினைப் பற்றுஅறுத்து அருள் பரம்பரன் மாயோன்**
**நித்தன் நின்றவூர் வரைமயிற்கு, அளிநிரைத்து எழுகாந்தள்**
**அத்தம்; அத்தம் வம்பு அடர்முலை; மு(ல்)லை மொழி; நகை வேய்வேய்**
**முத்த முத்தம இலவுஇதழ் இதழ்; குழல் முருகார் கார். (722)**

இது கடையிரண்டு அடியும் மூன்றுஇடத்து மடக்கு.

காந்தள் அத்தம்; அத்தம் வம்பு அடர்முலை; முல்லை மொழி; நகை வேய்வேய் முத்தம்; உத்தம இலவுஇதழ் இதழ்; குழல் முருகு ஆர் கார் என்று பிரித்துப் பொருள் செய்க.

(இ-ள்) பத்தரிடத்துப் பழைய தீவினையால் அடைந்த ஆசைகளைத் தீர்த்துக் கருணை செய்யும் மேலாகிய பரமனாகிய மாயோன் அழிவில்லாதான்; அவனது நின்றவூர் என்னும் திருப்பதியைச் சார்ந்த வரையிடத்து மயில் போலும் சாயலைஉடையாட்கு, தோழீஇ! வண்டுகள் கூண்டு எழுதலை உடைய காந்தள் போலும் கை; பொன்மலை போலும் கச்சை அறுத்து நின்ற முலை; முல்லை என்னும் பண் போலும் மொழி; வடத்தில் நிரைத்து அணியப்பட்ட வேய்முத்தம் போலும் நகை; நல்ல இலவம்பூப் போலும் அதரம்; பரிமளிக்கும் முகில் போலும் குழல் என்றவாறு.

இதனுள் 'அத்தம்' என்றது பொன்மலை; 'அத்தம் அனைய களிற்று அந்நகர்' (சிந்தா. 18) என்றார் முனிவரும். முலை என்பது இடைக்குறை. 'முலைஅணிந்த

முறுவலாள்' (கலி. கட. வாழ்த்து) என்பது போலக் கொள்க. முருகுஆர் கார் - அற்புத உவமை. தோழி என்பது முன்னிலைஎச்சம்.
பகுதி - சேட்படை; துறை - தலைவன் பாங்கிக்கு அவயவம் கூறல்.

[அத்தம் - ஹஸ்தம் - கை. அத்தம் - அஸ்தமன கிரி. வம்பு அடர் - கச்சினை வருத்தும். முலை - முல்லைப்பண். நகை - முத்துவடம். வேய் - நிரைத்து அணியப்பட்ட. வேய் முத்தம் - மூங்கிலில் தோன்றும் முத்துக்கள். நகை - பற்கள். நறுமணம் கமழும் மேகங்கள் என்று மேகங்களுக்குப் பொதுவாக இல்லாத செய்தியை அடையாகக் கூறி அத்தகைய நறுமணம் கமழும் முகிலைக் கூந்தற்கு உவமையாகக் கூறுதல் அற்புத உவமை. இது வண்டு ஆர் கொண்டல் (பெரி. திரு. 5. 5. 1) என்ற தொடரை அடியொற்றியது. தோழி என்ற மகடூஉமுன்னிலை செய்யுளில் காணப்படாது வருவித்து உரைக்கப்பட்டது என்ற கருத்தமைய முன்னிலைஎச்சம் எனப்பட்டது.]

**கண்டனன், ஒண்பொருளே மெய்ப்பொருள் எனலும், உயிர் உளதாக் கழிந்த யாக்கை;**
**மண்டலம் மண்டலம் புரந்த மாவலி மாவலி முழுது மாற்ற மாற்றங்-**
**கொண்டறல் கொண்டறல் இமையோர் உற, உறவே சிறைவைத்த கொண்டல், கொண்டல்**
**வெண்திரை முத்துஎறி மயிலை மடமயிற்கு எப்படிப் பிரிவை விளம்புவேனே? (723)**

இஃது இடை இரண்டுஅடியும் மூன்றுஇடத்து மடக்கு.

[மண்டலம் மண்தலம் புரந்த மாவலி மா வலி முழுதும் மாற்ற மாற்றம்கொண்டு அறல்கொண்டு அறல் இமையோர் உறவே சிறைவைத்த கொண்டல், கொண்டல் _ எறி எனப் பிரித்துப் பொருள்செய்க.]

(இ-ள்) பொன் ஆகிய நல்ல பொருளே பொய்இல்லாப் பரப்பிரமமாகிய பொருள் என்று வியந்து கூறலும், உடனே, உயிர் உண்டாயிருக்கவும் உயிர் நீங்கப் பொலிவு நீங்கியிருக்கும் யாக்கையாக அவள்யாக்கையைக் கண்டனன் என்றால், வட்டத்தை உடைத்தாய் அணுச்செறிந்த பூமியை ஆண்ட மாவலி-யுடைய பெரியவலி முழுதும் மாற்றும்படிக்கு அவனோடு மாற்றம் கொண்டு, அவன் பெய்யும் உதகத்தை ஏற்றுத் தேவர் கலியாணம் எய்த, மிகவும் அவனைப் பாதாளத்தில் சிறைவைத்த காளமேகம் போலும் நிறத்தை உடையானது, கீழ்காற்றானது கடலில் திரைஎடுத்த சங்கும் இப்பியும் ஈன்ற முத்துக்களைத் திரையோடு கூடிக் கானலில் எறியும் திருமயிலாபுரியில் மடப்பத்தோடும் கூடிய மயில்போலும் சாயலை உடையாட்கு என் பிரிவைத் தோழீ! யான் எவ்வாறு உரைப்பல்? என்றவாறு.

இதனுள் மாவலி - அவுணன். மாவலி - பெரிய பெலம். மாற்ற - நீக்க. மாற்றம் கொண்டு - மாறுபாடு கொண்டு. அறல்கொண்டு - உதகத்தைக் கையில் ஏற்று. அறல் இமையோர் உற - தேவர்கள் கலியாணம் எய்த. உற - மிகவும். கொண்டல் - மேகம்; கொண்டல் - கீழ்காற்று. தோழீ என்பது முன்னிலையெச்சம்.
பகுதி - பொருள்வயின் பிரிதல்; துறை - வாட்டம் கூறல்.

[மாவலி - பிரகலாதன் பெயரனான மகாபலிச்சக்கரவர்த்தி. மாற்றம் கொண்டு - தானம் கொடுப்பதற்கு மாவலி இசைந்து கூறிய சொற்களைக் கொண்டு என்றும் பொருள் கூறலாம். அறல் - நீர், கலியாணம். கொண்டல் - கார்மேகம் போன்ற திருநிறத்தினன் என்பது ஆகுபெயர்ப்பொருள். தோழி என்ற மகடூஉமுன்னிலை வருவிக்கப்பட்டது.]

**கவளக்கரிக்கு அன்று உதவிய மால் கடிகைச் சிலம்பில் கடிபொழில்வாய்த்**
**தவளத்த வளத்தளவ முகைஆம்பலாம் பல் சமன் வாய், வாய்**
**துவளத் தனிநுண்இடை அமிர்தம் துடி ஏய் மடந்தாய்! நின் கருங்கட்**
**குவளைக்கு வளைக்குலம் செறிகைக் கைக்காந்தளின் கூட்டம்அது என்?**
**என்.** (724)

இஃது இரண்டாமடியும் நாலாம்அடியும் மூன்றுஇடத்து மடக்கு.

(இ-ள்) கெசேந்திரனுக்கு உதவிய மாயோன் திருக்கடிகைச் சிலம்பில் விளங்கிய சோலைவாய், வெண்மைநிறத்தோடும் கூடிய அழகாகிய வளத்தை உடைய முல்லைமுகை போலப் பல்லையும், சேதாம்பல் போல வாயையும் அமிர்தத்தையும் துடியையும் போல மொழியையும் இடையையும் உடைய மடந்தையே! நின் கரிய கண்ணாகிய குவளைக்கு வளையினது கூட்டம் செறியும் செய்கையை உடைய கைகளாகிய காந்தளோடும் கூட்டம் உண்டான கிரியைக்கு ஏது யாது என்று கூறுவாயாக என்றவாறு.

யாது என்பது ஐயவினா ஆகலான், 'காமனது அறுதிப்பாணமாகிய கண் என்னும் நீலம் என்உயிரைக் கொல்லாமைக்கு எண்ணியோ பிறிது ஒன்று கருதியோ' என்றவாறு.

பகுதி - பாங்கற்கூட்டம்; துறை - நாணிக் கண்புதைக்க வருந்தல்.

[கவளம் - யானைக்கு அளிக்கும் உணவு. கடிகை - கடிகாசலம் என்னும் திருப்பதி (சோளிங்கபுரம் அருகே உள்ளது). தவளத்த - வெண்ணிறத்தை உடைய. வள - அழகிய. 'தளவமுகை ஆம் பல்', 'ஆம்பல் சமன் வாய்' என்று கொள்க. சமன் - ஒப்பு. இரண்டாவது வாய் ஆகுபெயரால் தலைவியின் மொழியை உணர்த்திற்று. 'வாய் அமிர்தம்' 'துவள் அத்தனி நுண்இடை துடி' எனக் கொள்க. வளைக்குலம் - வளையல்களின் கூட்டம். செறி கை - நிறைந்திருக்கும் செயல். குவளைக்குக் காந்தளின் கூட்டம் - குவளை போன்ற கண்களைக் காந்தள் போன்ற கைகள் சென்று புதைத்தமை. என் - யாது காரணம் பற்றி. என் - என்று கூறுவாயாக.

காமன் அம்புகளுள் மிகக் கொடியது உயிரையே கைக்கொள்ள வல்ல குவளைப்பூ என்ப. அறுதிப்பாணம் - இறுதியாக உயிரையே போக்க விடப்படும் அம்பு.]

இவைஆறும் ஈரடி மூன்றுஇடத்து மடக்கு.

இனி, மூன்றுஅடி மூவிடத்து மடக்கு வருமாறு:

**குன்றாவின் குன்றாவின் துயர்க்கு உயர் நன்குடைக் குடைக்கொள் கோமான்,**
**கோமான்**
**நன்றாமன், னன்றாமன் னுலகமுழு துழுதுயர்தீர் நாதன், வார்வார்**
**நின்றானை நின்றானையுடன் வருக வருக எனா, நேமிநேமி**
**ஒன்றால் வல் இடங்கரைக் கொன்று அருள்புரி கார்அரங்கன் எனது உள்ளத்-**
**தானே.** (725)

இஃது ஈற்றுஅடி ஒழிந்து ஏனை மூன்றுஅடியும் மூன்றுஇடத்து மடக்கு.

[குன்றா இன் குன்று ஆவின் துயர்க்கு உயர் நன்குஉடைக் குடைக் கொள் கோமான், கோ மான் நன்று ஆம் மன், அன்று ஆம் மன் உலகம் முழுது உழுதுயர் தீர் நாதன், வார் வார் நின்று, ஆனை, நின் தாளையுடன் வருக அருக எனா, நேமி நேமி ஒன்றால் வல்இடங்கரைக் கொன்று அருள்புரி கார் அரங்கன் எனது உள்ளத்தானே - என்ற பிரித்துப் பொருள்செய்க.]

(இ-ள்) குறைதல் இல்லாத இனிமைகளைத் தரும் மலையைப் பசுக்களின் துன்பத்திற்கு உயர்த்திய நன்மை உடைய குடையாகக் கைக்கொளும் தலைமை உடையோன், பூமிதேவிஇடத்து நட்பு உடையனாம் கொழுநன், பிரமகற்பம்

கூடும் அந்தியகாலத்து ஏகோதகப்பிரளயம் நிலைபெற்ற உலகம் அனைத்தையும் கிளைத்து எழ, அதனுள் அழுந்தும் துயரத்தைத் தீர்த்துத் திரு உதரத்துள் வைத்த சுவாமி, நீண்டு ஒழுகிய நீரின்கண் நின்று ஆனை 'நின்கைச் சக்கரத்தோடும் வருக, என்னை உடையவனே!' என்று அழைப்பச் சென்று, வட்டத்திகிரி ஒன்றினால் மிடுக்கை உடைய முதலையைக் கொன்று யானையின் உயிரைக் காத்து அருள்செய்த காளமேகம் போலத் திருமேனியை உடைய அரங்கன் என் இதயத்து இருப்பான் என்றவாறு.

எனவே, 'எனக்கு யாது குறை? ஒரு துன்பமும் இல்லை' என்பது பயனாம். இனிமை - காட்சிக்கு இனிமையும், பலமூலாதிகளைத் தருதலும். கோமான் - தலைமையை உடையோன். கோ மான் - பூமி தேவி. நன்று ஆம் - நட்பு ஆம். வார் வார் - ஒழுகும் நீர். நின்தானை - நினது சக்கரப்படை. அருக - உடையவனே! நேமி - வட்டம்.

திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து.

[குன்றா இன் குன்று - குறைதல் இல்லாத இனிமையைத் தரும் மலை. உயர் நன்குஉடைக் குடை - உயர்த்திய நன்மை உடைய குடையாக. அன்று - பிரமகற்பம் ஏற்படும் பிரமனின் அந்தியகாலத்தில். ஆம் - நீர். ஏகோதக வெள்ளம் - ஒரே நீர்ப்பெருக்கு. உழுதுயர் - அழுந்தும் துன்பம். வார் வார் நின்று - ஓடும் நீரிடையே நின்று. நேமி நேமி - வட்டவடிவம் உடைய சக்கரம்.]

**வாக்கினால் வாக்கினா லாரண னாரணன் மலராள் மன்னன் மன்னன்**
**ஆக்கம் யாவையும் புகழ் செந்தமிழ்மாறன் துடரியில் என்அன்பாம் நண்பா!**
**தாக்கர் தாக்கரந்தையுறத் தாக்கு அணங்கும் அணங்கும் நுதித்தாரை தாரை**
**நோக்கினாள் நோக்கினா ணெனையகன்ற தகன்றது உளனோயு நோயும்.** (726)

இது முதலடி ஒழித்து ஏனை மூன்றுஅடியும் மூன்றிடத்து மடக்கு.

[வாக்கின் நால் வாக்கினால் ஆரணன் நாரணன் மலராள் மன் நல்மன்னன் .. தாக்கர் தாக்கு அரந்தைஉறத் தாக்கு அணங்கும் அணங்கு நுதித்தாரை தாரை நோக்கினாள் நோக்கின் ஆண் எனை அகன்றது; அகன்றது உளன் ஓயும், நோயும் எனப் பிரித்துப் பொருள்செய்க.]

(இ-ள்) என்இடத்து அன்பாம் நண்பனே! தனது திருப்பவளத்தில் உண்டான நாலுகவிகளாலும் வேதாந்தத்து உட்பொருளாம் நாரணன் ஆகிய தாமரையாள் தழுவும் நல்ல மன்னன் செல்வம் முழுதும் வாழ்த்தும் செம்மையை உடைய திருவாய்மொழியாகிய தமிழை உடைய காரிமாறப்பிரான் துடரிமலையினிடத்துப் பொருவார்போர் துன்பம் உறும்படி பொரும் வீரமாகாளியும் கண்டால் வருத்தத்தை எய்தும் வாளின்வாய்க் கூர்மைபோலக் கொலைபுரியும் கண்ணோடு கூடிய அழகினைஉடையாள் நோக்கத்தால் எனது நிறையினது தலைமை என்னைவிட்டு நீங்கியது; எனது உள்ளம் தளராநின்றது; காமநோயும் மிகுந்தது என்றவாறு.

வாக்கு - திருப்பவளம்(வாய்), நாலு வாக்கு - ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் ஆகிய நாற்கவி. மன் நல் - தழுவும் நல்ல. மன்னன் - தலைவன். ஆக்கம் - சொரூபரூபகுணவிபூதிகள் (தனித்தன்மை, வடிவம், பண்பு, செல்வங்கள்). தாக்கு - படை. அரந்தை - துன்பம். தாரை - கண். நோக்கு - அழகு. ஆண் - தலைமை. நுதி - ஆகுபெயர்; வாளின் நுனியைக் குறித்தது. தாரை - கூர்மை. 'தாக்கு அரந்தை உற' எனப் பொருந்தார் எய்தும் துன்பம் போர்மேல் ஏற்றப்பட்டது. என்னை? 'வேண்டும் பனுவல் துணிவு' (குறள் 21) என்பதுபோலக் கருத்தா மயக்கம்.

பகுதி - பாங்கற்கூட்டம்; துறை - உற்றது உரைத்தல்.

[தாக்கு அணங்கு - போரிடும் வீரமாகாளி. அணங்கும் - வருந்தும். நுதித்தாரை - வாளின் விளிம்பில் உள்ள கூர்மை. தாரை நோக்கினாள் - கண்களை உடைய அழகியாள். ஆண் - ஆண்மை; நிறையின் தலைமை. உளன் ஒயும் - உள்ளம் தளராநின்றது. நோயும் அகன்றது - காமநோயும் மிகுந்தது.
போர் வருந்த எனப் போரிடுவார் வருத்தம் போர்மேல் ஏற்றப்பட்டது.

ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவல் துணிவு (குறள். 21)

தத்தமக்கு உரிய ஒழுக்கத்தின் கண்ணே நின்று துறந்தாரது பெருமையை நூல்களது துணிவு விழுமிய பொருள்கள் பலவற்றுள்ளும் இதுவே விழுமிது என விரும்பும். செய்தாரது துணிவு பனுவல்மேல் ஏற்றப்பட்டது. நூலை இயற்றியவர் தம் மனத்துக்-கொண்ட துணிவினை நூலின்மேல் ஏற்றிக் கூறியமை போலப் போரிடுவார் எய்தும் துன்பம் போரின்மேல் ஏற்றப்பட்டது. இது கருவியைக் கருத்தாவாகக் கூறியது. எனவே, கருத்தா மயக்கம் எனப்பட்டது.
"'கிளக்கப்பட்ட இடம்' என்னாது 'கிளந்த இடம்' என்றது எற்றிற்கோ எனின், வினைச்சொற்கள் நான்கு விகற்பம் உடைய; யாவை அவ்விகற்பம் எனின், கருத்தன், ஏதுக்கருத்தன், கருவிக்கருத்தன், கருமக்கருத்தன் என இவை. அவற்றுள் கருத்தன் என்பது தச்சன் எடுத்த மாடம், கொல்லன் செய்த வாள்; ஏதுக்கருத்தன் என்பது அரசர் தொட்ட குளம், அரசர் எடுத்த தேவகுலம் என இத்தொடக்கத்தன; இனி, கருவிக்-கருத்தன் என்பது வாள் எறியும், சுரிகை குற்றும், இம்மிடா நாற்குறுணி அரிசிச்சோறு அடும் என இத்தொடக்கத்தன; இனி, கருமக்கருத்தன் என்பது திண்ணை மெழுகிற்று, கலம் கழுவிற்று, மரம் குறைத்தது என்று சொல்லுவது." (இறை. அகப். 18 உரை)
போரிட்டார் எய்தும் துன்பம் போராகிய கருவிமேல் ஏற்றப்பட்டுப் போர் கருவிக்-கருத்தா ஆனமைக்கு, நூல்செய்தார் துணிவு நூல்மேல் ஏற்றப்பட்டு நூல் கருவிக்-கருத்தா ஆனமை உரையில் எடுத்துக்காட்டாகத் தரப்பட்டுள்ளது. இனி, கருமக் கருத்தாவாகக் கோடலும் அமையும்.]

**மருணயன மருணயனம் பாலளித்த வளித்ததல்லால் மழலை வாய்வாய்**
**தருநகையீ தருநகையீ தருஞ்சோலை மலைமலை நத்தான்றனான்றன்**
**முருகுஅவிழ் பூமகள் உலகிற்கு அருள்நோக்கும் நகையும்எனும் முறைபோல் என்றால்**
**ஒருதலையன் றொருதலையன் றிங்கா மிக்காமிக்கை யுள்ளே! யுள்ளே. (727)**

இஃது ஈற்றயலடி ஒழித்து ஏனை மூன்றுஅடியும் மூன்றுஇடத்து மடக்கு.
[மருள்நயனம் அருள்நயன் நம்பால் அளித்த அளித்து; அல்லால், மழலைவாய், வாய் தருநகை ஈது அருநகை, ஈது அருஞ்சோலைமலை; மலை நத்தான்தன் ஆன்றல் ... ஒருதலை அன்று; ஒருதலை அன்று இங்கு ஆம் இக்காமிக்கை. உள்ளே! உள்ளே என்று பிரித்துப் பொருள்செய்க.]
(இ-ள்) நெஞ்சமே! இம்மழலைமொழியை உடையாளது மருட்பார்வையோடும் கூடிய கண்கள் அருட்பார்வையோடும் ஆனந்தத்தை நம்மிடத்திலே தந்த கருணையை உடையன. அதுவும் அன்றியே, இவள் வாயில் உண்டாகிய இக்குறுநகையும் பெறுதற்கு அரிய மகிழ்ச்சியைத் தாராநிற்கும். இவை இரண்டும் திருமாலிருஞ்சோலையில் வாழ்பவனாம் போரை உடைய பாஞ்சசன்னியத்தை ஏந்துவான்தன் பாரியாகிய மிகுந்த மதுவைச் சொரியும் தாமரையாள் உலகத்து உயிர்கட்கு உதவும் அருள்நோக்கும், திருநகையும் கொடுக்கும் பேரின்பம் எப்படியோ அப்படி என்றும் முறையே போல் என்றால் உம்மை தொடுத்து இவ்வுலகின்கண் நாம் இவளை விரும்பும் இவ்விருப்பம் ஒருதலையால் உள்ளதன்று; இருதலையிலும் உள்ளது என்பது நிச்சயம் என்று விசாரிப்பாயாக என்றவாறு.

உள்ளே - நெஞ்சமே! உள் - விசாரிப்பாயாக. அருள்நயன் - அருட்பார்வை-யோடு கூடிய ஆனந்தம். அளித்த அளித்து - தந்த கருணையை உடைத்து. ஈது - இதுவும். தருநகை - உண்டாய புன்முறுவல். அருநகை - பெறுதற்கு அரிய மகிழ்ச்சி. அன்று - கழிபிறப்பில். இருதலையும் உள்ளது என்பது எதிர்மறைச்-சொல்லெச்சம். ஏகாரம் - ஈற்றசை.

பகுதி - இயற்கைப்புணர்ச்சி; துறை - குறிப்பு அறிதல்.

[மழலைவாய் - மழலைமொழியை உடையாள். மருள்நயனம் - மருட்பார்வையோடும் கூடிய கண்கள். மலை - போரை உடைய. நத்தான் - பாஞ்சசன்னியம் என்ற சங்கினை ஏந்தியவன். தன் பூமகள் - தன் தேவியாகிய திருமகள். ஆன்றல் - நிறைதல். ஒருதலை அன்று - ஒரு பக்கத்தில் உள்ளதன்று. ஒருதலை - நிச்சயம். அன்று இங்கு ஆம் இக்காமிக்கை ஒருதலை - சென்ற பிறப்பு முதல் இவ்வுலகில் நான் இவளை விரும்பும் இவ்விருப்பம் நிச்சயமானது. உள்ளே! நெஞ்சமே! உள்ளே - நீ நினைப்பாயாக.

ஒருதலையில் உள்ளதன்று என்பதன் மறுதலைப் பொருளாகிய 'இருதலையிலும் உள்ளது' என்பது வருவித்து உரைக்கப்பட்டது. 'உள்ளே' என்ற இரண்டாவதன்கண் ஏகாரம் ஈற்றசை.]

**மான்அனையாள் இணைமென்தோள் அணியிழாய்! அரங்கேசன் மலரோன்-**
**தன்பால்**
**பானலம் பானலம் புரிவோர் உயிர்உயிர்ப்பான் இகல்விளையாப் பாலன்பாலன்**
**பானிரை யானிரைக் கடுக்கல் கவிகவிகைப் புயலரவி னாடியாடி**
**தேனிறை தேனிறைத்துஎழு பொன்னியுள் போதுபோது முகம் சிவணா வேய்-**
**வேய். (728)**

இது முதலடி ஒழித்து ஏனை மூன்றுஅடியும் மூன்றுஇடத்து மடக்கு.

[அணியிழாய்! மான் அனையாள் இணைமென்தோள் வேய் சிவணா வேய்; அரங்கேசன் மலரோன் தன்பால், பானல் அம்பால் அலம்புரிவோர் உயிர் உயிர்ப்பான் இகல் விளையாப் பாலன்பால் அன்பான்; இரை ஆன் நிரைக்கு அடுக்கல் கவிகைக் கவி புயல், அரவின் நாடி ஆடி பொன்னியுள் போது தேன் இறை தேன் நிறைத்து எழு போது போதும் முகம் எனப் பிரித்துப் பொருள் செய்க.]

(இ-ள்) அழகிய பூணினை உடையாய்! என்னால் விரும்பப்பட்ட மான் போலும் நோக்கினை உடையாள் உபய மெல்லிய தோள்களானவை, துளை பொருந்தா மூங்கில் போலும். முகம், திருஅரங்கத்து ஈசன், பிரமனாகிய மூத்த பிள்ளையிடத்தும், பூலோகத்து இன்பத்தை விரும்பினோரிடத்துத் தாமரை முதலிய பூப்பாணம் நான்கினையும் தொடுத்த பின்னர் நீலோற்பலமாகிய அறுதிப்பாணத்தில் கை வைப்பதல்லால், அப்பாணத்தை விரும்பிய இன்பம் பெறாது வருந்துவார் உயிர் உடலை விட்டு நீங்கும்படிக்குத் தொடுத்துப் போர் செய்து அறியா மன்மதனாகிய இளையபிள்ளையிடத்தும் அன்பு செய்வான், கல்மாரியால் கதறிய பசுக்களின் இடரைத் தீர்த்தற்கு மலையைக் குடையாகக் கவித்த காளமேகம், பாம்பினை அரங்காக நாடி ஆடியவனது காவிரியுள் உண்டான, வண்டுகள் தங்கும் மதுவை ஒழுக்கி ஓங்கும் தாமரைப்பூப் போலும் என்றவாறு.

இது 'வேய் சிவணா வேய்' எனவும் 'பொன்னியுள்போது தேன் இறை தேன் நிறைத்து எழுபோது' எனவும் பாடம் மாற்றின ஆற்றான் கொண்டுகூட்டுப் பொருள்கோள் ஆயிற்று. ஒழிந்த அரும்பதங்களும் கொள்க. 'என்னால் விரும்பப்பட்ட' என்பது சொல்லெச்சம்.

பகுதி - சேட்படை; துறை - அவயவம் கூறல்.

[வேய் சிவணா வேய் - துளை பொருந்தாத மூங்கில். பானல் அம்பால் - கருங்குவளைப் பூ ஆகிய அம்பினால். அலம்புரிவோர் - துன்புறுபவர். உயிர்ப்பான் - நீங்குவதற்கு. பாலன் - இளைய புதல்வனான மன்மதன். அன்பான் - அன்பு கொள்பவன். இரை - வருந்திக் கதறும். அடுக்கல் - மலையாகிய கோவர்த்தனகிரி. கவிகைக் கவி - குடையாக மறைத்துப் பிடித்த புயல் - காளமேகம் போன்றவன். அரவின் - பாம்பாகிய காளியனை. நாடி - ஆடு அரங்காத் தீர்மானித்து, ஆடி - அவன் தலையில் கூத்தாடியவன். பொன்னியுள் போது - காவிரியில் உண்டாகின்ற. தேன் இறை - வண்டுகள் தங்குகின்ற. தேன்நிறைத்து எழு - தேனை நிறையக்கொண்டு பெருமிதத்தோடு காட்சியளிக்கும். போது போதும் முகம் - தாமரைப்பூப் போன்ற முகம். பிரமனையும் மன்மதனையும் புதல்வராகக் கொண்டமையின் திருமால் 'இருவர் தாதை' (பரிபாடல்-1) எனப்பட்டான். உரையுள் மன்மதனைப் பற்றிய பகுதியில் பல சொற்கள் விளக்கம் கருதி வருவித்து உரைக்கப்பட்டுள்ளன.]

**மதுமது கையினுணவளி மகிழ்மகிழ் முனிவரைமயில் குழல்வான்வான்**
**விதுவிது வெனஒளி தருமுக மயிலயில் விழிமொழி குயில்வாய்வாய்**
**அதுவது வையமரை முகைமுலைமுலை நகையறனுரை தெளிவாயாய்**
**முதுமுதுவரு மிலவித ழிதழெனலொடு மொழிவது வயிறாலால். (729)**

இது நாலடியும் மூன்றிடத்தும் முற்றும் மடக்கு.

[மது மதுகையின் உண அளி மகிழ் மகிழ் முனி வரை மயில் குழல் வான் வான்; விது இது என ஒளிதரும் முகம்; அயில் அயில் விழி; மொழி குயில் வாய் வாயது அது; ஐயமரை முகைமுலை; முலை நகை; அறன்உரை தெளிவாய் ஆய் முது முதுவரும் இலவு இதழ் இதழ் எனலொடு மொழிவது வயிறு ஆல் ஆல் எனப் பிரித்துப் பொருள்செய்க.]

(இ-ள்) தேனை உரனுடன் உண்ண வண்டுகள் விரும்பும் வகுளமாலிகை முனிவன் துடரிமலையினிடத்து மயில் போலும் சாயலை உடையாட்கு நண்பனே! குழலானது விசும்பின்கண் உறையும் காளமேகம் என்பதாம். முகமானது உதயமதியை இது என்று கண்டார் கூறும்படிக்கு ஒளியைத் தருவதாம். விழியானது கூரிய வேலை ஒக்கும். மொழியானது குயிலின் வாயில் மொழியதனை ஒக்கும். முலையானது மணத்தை உடைய தாமரை முகுளத்தை ஒக்கும். நகையானது முல்லை அரும்பை ஒக்கும். அதரமானது அறத்தைக் கூறும் நூல்களின் உரையைச் சந்தயம் அற ஆராயும் தலைமையை உடைய அறிவினான் மூத்தோர் இலவம்பூப்போலும் என்பதனோடும் வயிற்றிற்கு உவமை சொல்வது கொம்பரின் நின்று அசையும் ஆல்இலையேயாம் என்றவாறு.

மதுகை - உக்ரம். வான் - மேகம். இது - சுட்டு. அயில் - கூர்மை. வாய் - வசனம். அது - சுட்டு. வதுவை - மணம். மரை - தாமரை. முலை - முல்லை. ஆய் - ஆராய். முதுவரும் - உம்மை சிறப்பு. இதழ் - பூவின் தோடு. ஆல் - அசைகின்ற. முல்லை, ஆல் முதலியன ஆகுபெயர். நண்பனே - முன்னிலை தோன்றா எழுவாய்.

பகுதி - பாங்கற்கூட்டம்; துறை - இயல்பு இடம் கூறல்.

[முனி - மாறன். வரை - துடரிமலை. மயில் - மயில் போன்ற தலைவி. வான் - ஆகாயம், மேகம். விது - சந்திரன். அயில் - கூர்மை, வேல். வாய் வாயது அது - வாயிலிருந்து வரும் மொழியினை ஒக்கும். ஐய - அழகிய (மணத்தை உடைய). முல்லை நகை - முல்லைமொட்டுப் போன்ற பற்கள். முது - தலைமையை உடைய. மூதுவர் - அறிவினால் மூத்தோர். இதழ் - பூவின்தோடு, உதடு. ஆல் ஆல் - அசைகின்ற

ஆலந்தளிர். மகிழ் - மகிழம்பூ. முல்லை - முல்லைமொட்டு. ஆல் - ஆலஇிலை. இவை மூன்றும் ஆகுபெயரால் இப்பொருள் உணர்த்தின.]

ஆக வகை ஏழினால் இடைவிடா மடக்கு நூற்றைந்தும் அடைவே வந்தவாறு கண்டுகொள்க.

வகை ஏழாவன:

அடிமுதல்மடக்கு - 15, அடிஇடைமடக்கு - 15, அடியிறுதிமடக்கு - 15 ஆக, அடிதொறும் ஓரிடத்து மடக்கு 45; முதலொடு இடைமடக்கு - 15, முதலொடு கடைமடக்கு - 15, இடையொடு கடைமடக்கு - 15 ஆக, அடிதொறும் ஈரிடத்து மடக்கு 45; அடிதொறும் முதல் இடை கடை மூன்றிடத்து மடக்கு - 15 ஆக, வகை ஏழினால் மடக்கு நூற்றைந்தும் இடைவிடாமடக்கு. [10]

ஒழிந்த மடக்கிற்குத் தொகை

**262. ஏனைய தாமும் இதனதுஎண் பெறுமே. [11]**

(எ-ன்) ஒழிந்த இருவகை மடக்கிற்கும் தொகை உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஒழிந்தனவாம் இடைவிட்டு வரும் மடக்கும், இடைவிட்டும் விடாதும் வரும் மடக்கும் ஆகிய இரண்டும், கூறிய இவ் இடைவிடா மடக்கே போல எழுவகையாய் ஒரோஒன்று நூற்றைந்து நூற்றைந்தாகத் தொகைபெறும் என்றவாறு.

ஆக, மூவகைத்தாய் எழுதொடையான் மூன்றுஇடத்தான் மடக்கு முந்நூற்று ஒருபத்தைந்தாம் என்பது பெறப்பட்டது. அவையும் இம்முறையே கூறுகில் பெருகும். அவற்றுள்ளும் சில வருமாறு:

**வாமனன் மழவிடையினான் பாற்கடல் வழங்கு**
**வாமனன் புகழ் கள்வன் வைகுந்தை மாதவனாம்**
**வாமனன்தனை இடைவிடாது உணர்வினுள் வைப்பான்**
**வா மனன்! நமக்கு எளியதாம் உம்பர் வைகுந்தம்.** (730)

இஃது இடைவிட்டு வந்த அடிமுதல் முற்றுமடக்கு.

(இ-ள்) பரந்து பாயும் அன்னத்தை உடைய பிரமனும், இளைய இடபத்தை உடைய சிவனும், திருப்பாற்கடல் பெற்றுத் தந்த அயிராவதத்தை உடைய இந்திரனும் என்னும் மூவரும் வழுத்தும் கள்வன் என்னும் திருநாமத்தோடும் வைகுந்தை மாதவனாகிக் குறள் உருவானவன்தன்னை விட்டுநீங்காது ஞானத்தினால் நினைக்கும்படிக்குப் புலாதிகளிற் போகாது என்னோடும் கூடி வருவாயாக, மனனே! அங்ஙனம் நினைத்தால் பெறுதற்கு அரியவாம் எல்லாப் பதத்திற்கும் மேலாய பரமபதம் நாம் எய்துதற்கு எளியதாம் என்றவாறு.

திணை - பாடாண்; துறை - கடவுள்வணக்கம், ஓம்படையுமாம்.

[வாம் அன்னன் - பரந்து பாயும் அன்னத்தை உடைய பிரமன். வாமனம் - எட்டுத்திசைக் கரிகளுள் ஒன்றன்பெயர். இங்கு வாமனன் ஐராவதத்தை ஏறும் இந்திரன். வாமனன் - குறள்வடிவாக அவதரித்த திருமால். வா மனன் - மனமே! வா.]

**வாச நாள்மலர் வண்துகள் வாய்விடாவகை உண்டு**
**மூசி ஏழிசை வண்டுகள் களி முகில்குழலாளைப்**
**பூசல் மாமதன் வண்டுகள் பொரத் துழாய் புல்லாணி**
**ஈசன் நல்கிலன்; வண்டுகள் இறைதுறந்து எழும் மன்னோ.** (731)

இஃது இடைவிட்டு வந்த இடைமுற்று மடக்கு.

இதனுள், 'நாள்மலர் வண்துகள்' என்றது பருவத்தின் மலர்ந்த பூவின் வளவிய தாதுக்கள். பூசல் மாமதன் வண்டுகள் - பஞ்சபாணங்கள். வண்டுகள் இறை- துறந்து எழும் - சங்குகள் முன்கையை விட்டு நீங்கும். ஒழிந்தனவும் உரையிற் கொள்க. திணை - பெண்பாற்கூற்றுக் கைக்கிளை; துறை - கண்டு கைசோர்தல்.

[நறுமணம் கமழும் புதியனவாகப் பூத்த மலர்களின் வளவிய மகரந்தத் தூள்களை நீங்காத வகையில் இருந்து உண்டு மொய்த்து ஏழிசை பாடும் வண்டுகள் தங்கிக் களிக்கின்ற கார்மேகம் போன்ற கூந்தலை உடைய தலைவியைப் போரிடும் மேம்பட்ட மன்மதனுடைய மலரம்புகள் தாக்கவும், அதற்குப் பரிகாரமாகத் திருப்புல்லாணியிலுள்ள எம்பெருமான் தன் திருத்துழாய்மாலையைத் தருகின்றான்அல்லன். அதனால் சங்கு- வளையல்கள் முன்கைகளை விடுத்துக் கழன்று அப்பாற்பட்டுவிடும் என்றவாறு.
வண்டுகள்: வண்துகள் - வளமான மகரந்தத்தூள், அறுகாற் பறவைகள், மன்மதன் அம்புகள், வளையல்கள் என்ற பொருள்களில் வந்துள்ளது.]

**மறைபயின்ற வண்தமிழ்முனி குருகையின் மன் காவே!**
**இறைவர் பின்னர் நெஞ்சுஅகன்றது, கன்றுஇடத்து இரங்குஆவே**
**அறையில் இங்கு இணையாம்என; உயிர்உண அங்காவேய்**
**உறைபுரந்த கண்மலர்களும் ஒல்லையும் உறங்காவே. (732)**

இஃது இடைவிட்டு வந்த கடைமுற்று மடக்கு. காவே - என்பது மடக்கியது.
(இ-ள்) சுருதி கூறிய உரையொடும் பொருந்திய திருவாய்மொழியைப் பாடித் தந்த சீபராங்குசமுனிவன் குருகாபுரியினிடத்து நிலைபெற்ற சோலைகளே! 'நின்னின் பிரியேன்' எனப் பிரிந்த தலைவர்பின்னே என் நெஞ்சமானது, ஈன்றணிமைப்போதில் விட்டுநீங்கின கன்றின்பின் செல்லும் ஈற்றாவே சொல்லு- மிடத்து ஒப்பு என்பதாக அகன்றது; அதனால் தனிஇருந்த உயிரை உண்பான் தனது துளையாகிய வாயை அங்காந்த ஆயர் வேய்ங்குழல் தருவதாம் துளிகளை உடைய கண்ணாகிய குவளைகளும் எனது வசமாகச் சிறுவரையும் துயில்கில என்றவாறு. ஆதலால் மேல் யாது செய்வேன் என்பது பயன்.
பகுதி - இரவிற்குறி; துறை - காமம் மிக்க கழிபடர் கிளவி.

[மன் - நிலைபெற்ற. காவே - சோலைகளே. இரங்கு ஆவே - அன்பு காட்டும் தாய்ப்பசுவே. அறையில் - கூறுமிடத்து. 'ஆவே இணையாம் என நெஞ்சு அகன்றது' என்று முடிக்க. உயிர் - தனியே இருந்த உயிர். அங்கா வேய் (தன் துளையாகிய) வாயைத் திறந்த மூங்கிலாகிய வேய்ங்குழலால். உறை புரந்த - கண்ணீர்த்துளிகளைக் கொண்ட. ஒல்லை - சிறிதுபொழுது. மலர் - குவளைப்பூக்கள்.]

**தாமால மால மருமென்ற மால மால**
**நாமால மால நளிநீர்கட மால மால**
**தேமால மாலகரி சேர்மலர் மாலமால**
**மாமால மால மலதாளுள மாலமால (733)**

இஃது இடைவிட்டும் இடைவிடாதும் வந்து இடையும் இறுதியும் நாலடியும் முதலும் மடக்கியது.

[தாம் ஆல்அம் ஆல்அமரும் மென் தமாலம் மால
நாம் ஆலம் மால நளிநீர் கட மால மால
தேன்மால மால கரிசேர் மலர் மால மால
மாமால் அமால் அமலதாள் உளமால் அமால]

தாம் ஆல் அம் - அண்டத்தை எல்லாம் தட்டு அழித்து உண்டு கடக்கும் மிக்க பிரளயத்தில்; ஆல் அமரும் - ஆலமரத்தினிடத்து உற்பவித்துத் தங்கும்; மென்

தமாலம் மால - மெல்லிய இலையில் துயிலுதலை உடைய; நாம் ஆலம் மால - அச்சத்தைத் தரும் நஞ்சம்போலும் கருமையை உடைய; நளிநீர் கட மாலமால - செறிந்த நீராம் கடலைக் கடந்த பெருமையோடும் கூடிய மற்கடமாருதத்தை உடைய; தேன் மால மா லகரி சேர் - தேன்துளும்ப வண்டுகள் அதனை உண்டு களிப்பைப் பொருந்தும்; மலர் மால மால - தாமரைப்பூ விருப்பமாகப் பெரிய இல்லமாக உடைய; மா மால் அ மால் - திருமகள் மயங்கும் அழகை உடைய மாயோன்; அமல தாள் உளமால் - அழுக்கற்ற திருவடிகளை உள்ளத்திலே உடையேம் ஆகையால்; அ மால - அந்தப் புதனுக்கு நெஞ்சமே! யாம் சரி என்றவாறு.

ஆல் - வெள்ளம்; அம் - நீர்; எனவே, 'ஆலம்' மீமிசைச்சொல். ஆலம் - மீமிசை. நளிநீர்கடமாலமால் - திருவடி. லகரி - ஆரியம். மால் - துயில். இஃது ஆகுபெயர். 'புதனுக்குச் சரி' எனவே ஞானமுடையேம் என்பதாயிற்று.

திணை - பாடாண்; துறை - பொருண்மொழிக்காஞ்சி.

[ஆல் - நீர்; அம் - நீர்; ஆலம் - ஒருபொருட்பன்மொழி - மீமிசைச்சொல். தாம் - தாவுகின்ற, பெருக்கெடுத்து வளைக்கின்ற. ஆல் - ஆலமரம். அமரும் - தங்கும். தமாலம் - இலை. நாம் - அச்சம். ஆலம் - நஞ்சம். மால் - கருமை, பெருமை, காற்று, விருப்பம், மயக்கம். மா - வண்டு. லகரி - சிறிய அலை; இங்குக் களிப்பு. மால - பெரிய இல்லமாக உடைய. மால் - பெருமையை உடைய புதனுக்கு; யாம் சரி என்பன வருவிக்கப்பட்டன. இறுதியில் உள்ள அமால என்பதன்கண் அகரம் அசை.]

**பொருநல் புனல் சங்கு அணித்துறையான் புல்லர்கள் அச்சுஅங்கு அணித்து உறையான்,**
**வருநல்துடரி உரிஞ்சு என்றூழ் வைகும் தலைக்காவினும் சென்று ஊழ்**
**நெருநல் தரும் அவ் அணங்கு உளவேல் நெஞ்சே! நினைத்து வணங்கு, உளவே;**
**தரும்நட்பு உளது வருந்தேனே; தானே மறித்து வரும், தேனே. (734)**

இஃது ஓரடியை இரண்டாகப் பகுத்து அடிதொறும் நான்கு அடியும் ஈரிடத்து இறுதி முற்றும் மடக்கு.

(இ-ள்) பொருநையிடத்துப் புனல்வளம் அறாத சங்குஅணித்துறையை உடையவன். அறிவு இல்லாதார் பொல்லாச் சடத்துள் அணித்தாகக் குடிகொண்டு அறியாதவன். அவனது அங்கமாகிய துடரிமலைக் கொடுமுடி சென்று பரிசித்த ஆதித்தன் தங்கி ஏகும் உச்சியை உடைய சோலையினிடத்து இன்னமும் சிறிது முயற்சியொடும் செல்ல நேற்று ஊழொடு கூடி அவளைத் தந்த தெய்வம் இன்றும் இறவாதிருப்பது உண்டு என்றால், அதனை நெஞ்சமே! நினைத்து அதன் உள்ளத்து உறும்படி வணங்குவாயாக; நேற்றைப் போலே என்னிடத்துக் கூட்டித் தரும் நட்பு உடையதாம்; அத்தேன் போலும் மொழியை உடையாளும் ஆயத்தை விட்டு நீங்கிக் கூடுவள். மீள வருந்துவேன்அல்லேன் என்றவாறு.

இதனுள் சென்று என்பது செல என ஒரு வினையெச்சம் மற்றொரு வினையெச்சமாயிற்று. இதன் வேறுபாடும் அறிந்துகொள்க.

பகுதி - இடந்தலை; துறை - பொழிலிடைச்சேறல்.

[அச்சு - உடம்பு. என்றூழ் - வெயில் - சூரியன். தலை - உச்சியை உடைய. உள - நீங்காமல் உள்ளது. உளவே தரும் - முன்பு வழங்கியது போலவே வழங்கும். இரண்டாவது தேன் - தேன் போன்ற மொழியை உடைய தலைவி. மறித்து - மீளவும்.]

**எட்டு மாதிர மாதிர மாதிரம்**
**வட்ட மாறினும் மாறினு மாறினும்**
**விட்டு வாமனன் வாமனன் வாமனன்**
**இட்டர் மால்கடி மால்கடி மால்கடி. (735)**

இது முதல்சீர் ஒழித்து ஏனை மூன்று சீரும் நான்கு அடியும் முற்றுமடக்கு.

[எட்டு மாதிரம் மாதிரம் மாதிரம்
வட்டம் ஆல்தினும் ஆறு இனும் மாறினும்
விட்டு வாமனன் வாம்அனன் வா(ம)மனன்
இட்டர் மால்கடிமால் கடிமால் கடி
எனப் பிரித்துப் பொருள்செய்க.]

ஆல் - வெள்ளம். தின்னுமாறு - விழுங்குமாறு. இன்னும் - இன்னமும். மாறினும் - அழியினும். வாமனன் - வாவும் அன்னத்தை உடையவன். வாமனன் - அழகிய மனத்தை உடையவன் (விகாரம்) இட்டர் - தன்னை விரும்புவார். மால் - பிராந்தி. கடி - நீக்கும். மால் - மாயோன். கடி - காவல். அழியினும் என்ற உம்மையால் அழியாக் காலத்திற்கும் அவனே காவல் என்பது தானே போதரும். எட்டு என்பதனை முதல் விளக்கு ஆக்கி மூன்று இடத்தும் ஏற்றுக. எண்ணும்மை செய்யுள் விகாரத்தால் தொக்குநின்று விரிந்தது. இதன் வேறுபாடும் அறிந்துகொள்க.

திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து.

(இ-ள்) அட்ட குலபருவதத்தையும் அட்டகயத்தையும், அட்டதிக்கையும், அவற்றை உடைய பூமியையும், இதன் கீழாய உலகங்களையும் மேலாய உலகங்களையும், ஏகோதகம் விழுங்குமாற்றால் இன்னும் அழியினும் அழியாத காலத்திற்கும் விண்டுவாகிய வாமனன், வாவும் அன்னத்தை உடையவன், அழகிய மனத்தின் உள்ளான்; தன்னை விரும்புவார் சித்தப்பிராந்தியை நீக்கும் மேகம் போன்ற திருமேனியன்; விளக்கத்தை உடைய மாயோன்; அவனே உலகிற்குக் காவலாவான் என்றவாறு.

[மாதிரம் - மலை, யானை, திசை. வட்டம் - வட்டவடிவான உலகங்கள். மால் தின்னுமாறு இன்னும் மாறினும் - ஊழிப்பெருவெள்ளம் விழுங்குமாற்றால் இன்னும் அழிந்தாலும்; உம்மையால் அழியாமல் இருந்தாலும். வாம் அன்னன் வாமமனன் - தாவும் அன்னத்தை உடைய பிரமனுடைய அழகிய மனத்தில் உள்ளவன். மால் - மனமயக்கம். மால்கடிமால் - மனமயக்கத்தைப் போக்கும் மேகநிறத்தினன். கடிமால் - விளக்கத்தை உடைய மாயவன். கடி - உலகிற்குக் காவல் ஆவான்.எட்டுமாதிரம், எட்டுமாதிரம், எட்டுமாதிரம் என எட்டு மூன்றிடத்தும் கூட்டப்பட்டது. வாம மனன் : வாமனன் - செய்யுள்விகாரம்.] [11]

பாதமடக்கு

**263. பாதம் அனைத்தும் மடக்குதல் பழிதீர்த்து**
**ஓதிய அனைத்தினும் உறும்அழகு உடைத்தே. [12]**

(எ-ன்) இன்னும் இம்மடக்கு அலங்காரத்தையே ஒருவழி வேறுபடுத்துக் கூறுகிறது.

(இ-ள்) அடிக்கண் உள்ள சீர்முழுதும் மடக்கி வருதல் முன்னர்க் குற்றம் அறுத்துக் கூறிய மடக்கு அனைத்தினும் மிக்க அழகுடைத்து என்றவாறு.

அவை இரண்டடி மடக்கு, மூன்றடிமடக்கு, நான்கடி மடக்கு எனப்படும். அவற்றுள் சில வருமாறு:

**மறைகடந்தசொல் மாமகிழ்மாலை மால்**
**மறைகடந்தசொல் மாமகிழ் மாலைமால்**
**நிறைசிலம்பினில் ஒண்ணுதல் நேத்திரத்து**
**அறையும் மங்கைக்கு அறைவல், என்காதலே.** (736)

இது முதலடியும் இரண்டாமடியும் முற்றும் மடக்கு.

(இ-ள்) மறைகடந்த - வேதத்தின் அந்தத்தைக் கடந்த. சொல் - கீர்த்தியை உடைய. மாமகிழ் மாலை மால் - பெரியபிராட்டி விரும்பும் சொரூபரூப-குணங்களின் இயல்பை உடைய மாயோன். மறைகள் தந்த சொல் - அவன் இரகசியங்களைச் சொல்லித் தந்த திருவாய்மொழியையும். மா மகிழ் மாலை மால் - வண்டு செறியும் வகுளமாலிகையையும் உடைய பெருமையை உடை-யானது. நிறை சிலம்பினில் - சகலவளங்களும் மல்கின துடரிமலையின்கண். ஒண்ணுதல் - ஒளிவீசும் நுதலை உடைய தலைவி. நேத்திரத்து அறையும் மங்கைக்கு - தன் கண்களால் சொல்லித் தந்த தோழியாகிய மங்கையிடம். அறைவல் என் காதலே - எனது விருப்பத்தைக் கூறுவல்.

பகுதி - மதி உடன்படுத்தல்; துறை - குறையுறத் துணிதல்.

[மறை - வேதாந்தம், இரகசியம். சொல் - கீர்த்தி, திருவாய்மொழி. மா - திருமகள், வண்டு. மகிழ் - விருப்பம், மகிழம்பூ. மால் - மாயோன், பெருமையை உடைய மாறன். அறைதல் - கூறுதல்.]

**அஞ்சுவாள் இவளைத் தழுவான் மதன்**
**மஞ்சுதோய் குழலீர்! எய்ய மல்லைமால்**
**அஞ்சுவாளி வளைத் தழுவான் மதன்**
**நஞ்சமோ மதி என்றுடல் நையவே.** (736)

இது முதலடியும் மூன்றாமடியும் முற்றும் மடக்கு.

['மஞ்சுதோய் குழலீர்! மதன் நஞ்சமோ மதி என்று உடல் நையவே, அஞ்சுவாள் இவளைத் தழுவு ஆல் அஞ்சுவாளி வளைத்து எய்ய மல்லைமால் தழுவான்' என்று பிரித்துக்கூட்டிப் பொருள்செய்க.]

(இ-ள்) மேகத்தினது கருமையைப் பொருந்தின குழல் உடையீர்! வலிய நஞ்சமோ சந்திரகிரணங்கள் என்று உடல் நையாநிற்ப, உள்ளம் அச்சமுறு-வாளாகிய இவளை அதன்மேலும் துன்பக்கண்ணீர் ஒழுகும்படிக்குக் காமன் பஞ்சபாணங்களையும் வில்லை வளைத்து எய்யவும், திருக்கடல் மல்லையின் மாயோன் தழுவுகிலன் என்றவாறு.

ஆகையால் இவனைக் கருணாகரன் என்று உலகம் கூறுவது யாதுதான் என்பது பயன். பொருள்கோள் - கொண்டுகூட்டு. மதி - ஆகுபெயர். மதன் நஞ்சம் - கொல்லும் வலிமையை உடைய நஞ்சம். ஓகாரம் - வினா. இறுதிப்பயனிலை சொல்லெச்சம்.

திணை - பெண்பாற்கூற்றுக் கைக்கிளை. துறை - கண்டு கைசோர்தல்.

[தழுவுஆல் - துன்பக்கண்ணீர். மதி - ஆகுபெயரால் சந்திரனுடைய கதிர்களைக் குறித்தது. நஞ்சமோ - ஓகாரம் வினா. ஆகையால் இவனைக் கருணாகரன் என்று உலகம் கூறுவது யாதுதான் என்ற கருத்து எஞ்சிநின்றது. இச்செய்தி இறுதிப்பயனிலை சொல்லெச்சம் என்று குறிக்கப்பட்டுள்ளது.]

**ஐயம்புகு மதனால் அங்கஞ் சலித்துயர்வான்**
**உய்யும்படிக்கு அருள்கூர் உத்தமனாம் மாதவன்சீர்**

**வையம் புகழச் சிலர் வழுத்தாவாறு என்னோ?**
**ஐயம்புகு மதனால் அங்கஞ் சலித்துயர்வான். (738)**

இது முதலடியும் நான்காமடியும் முற்றும் மடக்கு.

(இ-ள்) நாலாம் அடி - ஐ அம்பு உகும் மதனால் அங்கம் சலித்து உயர்வான் - பஞ்சபாணங்களைச் சொரியும் காமனால் மேனி மெலிந்து உள்ளத்தில் வருத்தமுற்ற சிவன். முதல்அடி - ஐயம் புகும் அதனால் அங்கு அஞ்சலித்த உயர்வான் - பிச்சைக்கு மனைதொறும் செல்லும் அஃது ஏதுவாகக் காசிக் கங்கை வடகரையாகிய அவ்விடத்துத் தன்னை அஞ்சலித்த பெருமையால். உய்யும்படிக்கு ... என்னோ - அவன் சாபம் தீரக் கருணையை மிகுத்த உத்தமகுணத்தை உடைய மாதவனது கீர்த்தியை உயர்ந்தோர் புகழச் சில மானிடர் வழுத்தாதது யாது தான் என்றவாறு.

இதனுள் உள்ளம் என்பது முதலாயின சொல்லெச்சம். அஞ்சலித்த உயர்வான் என்னும் இடத்துச் செய்த என்னும் பெயரெச்சவாய்பாட்டின் ஈற்றின் அகரம் செய்யுள்விகாரத்தால் தொக்கது; என்னை? புகழ்புரிந்தில்லிலோர்க்கு (குறள். 59) என்பது போலக் கொள்க. பின்னர் வந்த உயர்வு வருத்தம். 'உயர்வற உயர்நலம்' என்பதனால் அறிக. திணை - பாடாண்; துறை - பரவார்ப் பழித்தல்.

[அஞ்சலித்த உயர்வான் - வழிபட்ட உயர்ச்சியினால். புகழ்புரிந்த இல் இலோர் என்பது புகழ்புரிந்தில்லிலோர் என அகரம் தொக்கமைபோல அஞ்சலித்த உயர்வான் என்பதும் அகரம் தொக்கு 'அஞ்சலித்துயர்வான்' என்று ஆயிற்று. அங்கம் சலித்து உயர்வான் - உடல் மெலிந்து உள்ளத்தில் வருத்தமுற்றவன். உயர்வு அற உயர்நலம் (திருவாய். 1) வருத்தமற உயர்ந்த நலம் என்னும் பொருளது. உயர்வு என்ற சொல் வருத்தம் என்ற பொருளில் வந்தமைக்கு இஃது எடுத்துக்காட்டு.]

**தளைவிட் டார்மகிழ் மாறன்தன் வெற்பில், வான்**
**முளைவில் போல்நுதலீர்! உங்கள் முன்றில்வாய்**
**வளைவிற் கோமன் மதனம் படுக்கவோ**
**வளைவிற் கோமன் மதனம் படுக்கவோ? (739)**

இது கடைஈரடியும் முற்றுமடக்கு.

[வளைவிற்கோ மன்மதன் அம் படுக்க வளை வில் கோ மன்மதன்அம்பு அடுக்கவோ என்று பிரித்துப் பொருள்செய்க.]

(இ-ள்) பாசமாகிய விலங்கை விட்டு நீங்கினார் விரும்பும் மாறன் என்னும் திருநாமத்தை உடையவன் வெற்பினிடத்து, வானில் தோன்றும் இந்திரதனுப் போன்ற நுதலை உடையீர்! உங்கள் முன்றிலின்கண், சங்குவளை விற்கவோ? மன் மதன் அம் படுக்க - என்னிடத்து நிலைபெற்ற விருப்பம் எனது அறிவை அகப்படுத்தாநிற்ப. வளைவில் கோ - வளைக்கும் கருப்புவில்லை உடைய பகையாகிய. மன்மதன் அம்பு அடுக்கவோ - காமன் தொடுக்கும் பூப்-பாணங்களை நுமது குழற்கு அணியும் மாலையாகத் தொடுக்கவோ? என்றவாறு. ஓகாரம் முதலும் ஈறும் வினா. இரண்டாவது அசை. கோ - பகை.

பகுதி - குறையுற உணர்தல்; துறை - குறையுற்று நிற்றல். பணிவிடை கிளத்தலுமாம்.

[விற்கோ, அடுக்கவோ - ஓகாரம் வினா; படுக்கவோ - ஓகாரம் அசை.]

**கார்வான மால்வரையாய் கட்டுரை கூறான் ஒருவன்**
**சூர்வாரணத்தான் பொற்சூழியினாற் றோற்றஞ்சார்**

**சூர்வாரணத்தான் பொற்சூழியினாற் றோற்றஞ்சார்**
**போர்வாங்கு சேயகலான் பூம்புனமென் செய்வதே** (740)

இஃது இடைஈரடி முற்றுமடக்கு.

[கார்வான மால்வரையாய்! கட்டுரை கூறான் ஒருவன்;
சூர் வாரணத்தான், பொன்சூழியினால் தோற்றம் சார்,
சூர்வாரணத்தான், பொன்சூழியினால் தோற்று, அஞ்சார்
போர்வாங்கு சேய், பூம்புனம் ஆகலான்; என் செய்வதே?]

(இ-ள்) திருக்கார்வானத்துத் திருமால் மலையின் உள்ளாய்! ஒருவன் கட்டுரையும் கூறுகின்றிலன். பகைவருக்கு நோயைச் செய்யும் கோழிக்கொடி-யனுமாய், பொன்னால் செய்த முகபடாத்தோடும் பெருமை பெற்ற அஞ்சாத யானையையும் உடையனுமாய், பொலிவு பெற்ற சரவணப்பொய்கையிடத்துப் பிறப்பிக்கப்பட்டவனுமாய், சத்துருக்கள் போரை நீக்கும் முருகு அனையான், பூவை உடைய புனத்தைவிட்டு அகல்வதும் செய்கின்றிலன்; இதற்கு யான் செய்யத்தகுவது யாது? என்றவாறு.

கட்டுரை - அழகிய உரை. வாங்கும் - நீக்கும். ஆல் - அசை.

பகுதி - குறைநயப்பு. துறை - குறிப்புஅறிதல்.

[கார்வானம் - ஒரு திருப்பதி. சூர் - நோய், அஞ்சாமை. வாரணம் - கோழி, யானை. சூழி - யானையின் முகபடாம், நீர்நிலை. அஞ்சார் - பகைவர். போர் வாங்கும் - போரை அழிக்கும். புனம் - தினைக்கொல்லை. முருகன் கோழிக்கொடியையும் யானைவாக-னத்தையும் உடையன்.

'வாரணக்கொடியொடு வயிற்பட நிறீஇ' (முருகு. 219)
'செங்கோல் அம்பின் செங்கோட்டி யானை
கழல்தொடிச் சேஎய்' (குறுந். 1)
'கடுஞ்சின விறல்வேள் களிறு ஊர்ந்தாங்கு' (பதிற்று. 11)
'கால்கிளர்ந்தன்ன வேழம் மேற்கொண்டு' (முருகு. 82)

முதலியன காண்க.]

**ஒருத்தல்வெற்பு உடையான் உம்பர் துற்று உணா**
**வருத்தமன் கடன் மாவனமே புகல்**
**அருத்தி நாண்மலர் கொய்து அறல் ஆடியோ**
**வருத்தமன் கடன் மாவனமே புகல்** (741)

இஃது இரண்டாமடியும் ஈற்றடியும் முற்றுமடக்கு.

[ஒருத்தல்வெற்பு உடையான் உம்பர் துற்று உணா
வருத்த மன்கடல் மா! வனமே புகல்
அருத்தி நாள்மலர் கொய்து அறல் ஆடியோ,
வருத்தம் மன்கடன்? மா அனமே! புகல்.]

(இ-ள்) அத்தி கிரியினை உடையான் தேவர்கள் பொசிக்கும் அமிர்தத்தை உண்டாக்கும்படிக்கு நிலைபெற்ற கடலில் கடைந்து பிறந்த திருமகளே! புனமே புகலிடமாகிய கண்டார் விரும்பும் பருவமலர்களைக் கொய்தோ, புனல் ஆடியோ, அன்றி யாதானோ, உன் திருமேனிக்குத் தளர்ச்சி எய்திய முறை? பெருமை பெற்ற அன்னம் போலும் நடையினை உடையாய்! கூறுவாயாக - என்றவாறு.

துற்று உணா - வினைத்தொகை. வருத்த - உண்டாக்க. மா - அண்மைவிளி. வனம் - தண்ணீர்; நந்தவனமும் ஆம். புகல் - புகலிடம். அருத்தி - விருப்பம்.

நாள்மலர் - பருவமலர். ஓகாரம் இரண்டிடத்தும் கூட்டுக. கடைந்து என்பதும் திருமேனி என்பதும் முதலாயின சொல்லெச்சம்.

பகுதி - முன்னுற உணர்தல்; துறை - வாட்டம் வினாதல்.

[ஒருத்தல் - யானை. ஒருத்தல்வெற்பு - அத்தி கிரி. துற்று உணா - உண்ணும் தேவாமிர்தம். கடல் மா - கடலைக் கடையப் பிறந்த திருமகள் போன்ற தலைவியே! வனமே புகல் - பூந்தோட்டமாகிய விரும்புமிடத்தில். கொய்தோ. அறல் ஆடியோ - என ஓகாரம் இரண்டிடத்தும் கூட்டப்பட்டது. அறல் - தண்ணீர். வருத்தம் மன்கடன் - உன் உடலுக்கு வருத்தம் ஏற்பட்ட முறை. மா அனமே - மேம்பட்ட அன்னப்பறவையை ஒத்த நடையாய்! புகல் - கூறுவாயாக.]

இவைஆறும் ஈரடி முழுதுமடக்கு.

**காவியங் கணல்லார் படிகாவிரி**
**காவியங் கணல்லார் படிகாவிரி**
**காவியங் கணல்லார் படிகாவிரி**
**வாவியும் புடைசூழ் அரங்கேசன் என்மனத்தான் (742)**

இஃது ஈற்றடி ஒழித்து ஏனை மூன்றடியும் முற்றுமடக்கு.

[வாவியும், விரி காவி அம்கண் நல்லார் படி காவிரி
விரி காவியங்கள் நல்லார் படி கா
படிகா கா இயம் அல் ஆர் கண்
புடைசூழ் அரங்கேசன் என்மனத்தான்.]

(இ-ள்) வாவிகளும், மலர்ந்த நீலோற்பலம் போலும் அழகிய கண்களை உடைய மகளிர் புனல் குடையும் காவிரியும், அறம் முதலிய நாற்பொருளும் குறைபாடு இன்றிப் பரந்த காப்பியங்களை நல்லோர் இருந்து கற்பனை செய்யும் காவும், ஊரைக் காக்கப்பட்ட வாரினால் கட்டித் தோளில் காவிய வாச்சியங்களும், இரவின்கண் ஆரவாரிக்கும் இடங்களும் பக்கமெல்லாம் சூழப்படாநின்ற திரு அரங்கேசன் என்மனத்துளான் என்றவாறு.

இதனுள் சூழ், படி, படி, விரி, விரி என்பன இறந்தகாலமும் நிகழ்காலமும் கரந்து நின்ற பெயரெச்ச வினைத்தொகை வாய்பாடு.

'எஞ்சுபொருட் கிளவி செஞ்சொல் லாயின்
பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல்' (தொ. சொ. 286 ந.)

என்பதனால் காவிரியும், காவும், அல்லார்கண்ணும் என்பனவற்றிற்கு உம்மை கொடார்ஆயினார். திணை - பாடாண்; துறை - கடவுள்வணக்கம். பா - கலித்தாழிசை. என்னை? 'அந்தடி நீண்டு இசைப்பின் கடிதல் இல்லாக் கலித்தாழிசையாகும்.' (யா. கா. 34) என்ப ஆகலான். அதற்கு எடுத்துக்காட்டு:

வாள்வரி வேங்கை வழங்கும் சிறுநெறிஎம்
கேள்வரும் போதின் எழால்வாழி வெண்திங்காள்!
கேள்வரும் போதின் எழாலாய்க் குறாலியரோ
நீள்வரி நாகத்து எயிறே வாழி வெண்டிங்காள்! (யா. கா. 34 உரை)

என்பதில் காண்க. இது விதலையாப்புப்பொருள்கோள்.

'அணியும் அமிழ்தும்' என்னும் பாட்டில் 'மின்னும் பணியும் புரை மருங்குல் பெருந்தோளி படைக்கண்கள், பிணியும் அதற்கு மருந்தும் பிறழப் பிழற' என்பதனால் அறிக.

[சூழ் அரங்கேசன், நல்லார் படிகா, படிகாவிரி, விரிகாவி, விரிகாவியங்கள் என்பன வினைத்தொகை. இவற்றிற்குச் சூழ்ந்த சூழும் என்றாற்போல இறந்தகாலமும் நிகழ்காலமும் விரித்துப் பெயரெச்சமாகப் பொருள் செய்க.

காவிரி, கா, அல்ஆர்கண், வாவியும் என்பனவற்றுள் முதல் மூன்றற்கும் உம்மை கொடுக்கப்படாமைக்கு விதி கூறப்பட்டுள்ளது.
கலித்தாழிசையாவது முதலடியை விட இறுதியடி நீண்டிருப்பது ஆதலின் இப்பாடல் கலித்தாழிசை என்று குறிப்பிட்டு அதற்கு எடுத்துக்காட்டும் தரப்பட்டுள்ளது.
பொருள் செய்யும் முறையில் இப்பாடலின் பொருள்கோள் விதலையாப்பு என்று கூறப்பட்டு அதற்கு எடுத்துக்காட்டும் தரப்பட்டுள்ளது. விதலையாப்பாவது முதலும் இடையும் கடையும் இணைந்து பொருள் தருமாறு அமைந்த பொருள்கோளாகும்.
'கோள் என்பது ஒரு பாட்டினகத்துப் பொருள் கொண்டுநிற்கும் நிலை. அஃது ஐந்து வகைப்படும். விற்பூட்டு, விதலையாப்பு, பாசிநீக்கு, கொண்டுகூட்டு, ஒருசிறைநிலை என்றவற்றுள், இன்னதோர் பொருள்கொண்டு நின்றது இப்பாட்டு என்று அறிவது:
விற்பூட்டு என்பது முதலும் கடையும் பொருள்கொண்டு நிற்பது. விதலையாப்பு என்பது தலையும் நடுவும் கடையும் பொருள்கொண்டு நிற்பது. பாசிநீக்கு என்பது சொற்றோறும் அடிதோறும் பொருள் அற்று நிற்பது. கொண்டுகூட்டு என்பது சொற்களைக் கொண்டு-கூட்டிப் பொருள்கொள்ளுமாறு அறிந்து பொருள்கொண்டு கூட நிற்பது. ஒருசிறைநிலை என்பது ஒரு பாட்டினகத்துச் சொல்லப்பட்ட பொருள் ஒருவழி நிற்பது.' (இறை. அகப். 56 உரை)

'அணியும் அமிழ்தும் என்ஆவியும் ஆயவன் தில்லைச் சிந்தா-
மணி உம்பரார் அறியா மறையோன் அடி வாழ்த்தலரின்
பிணியும் அதற்கு மருந்தும் பிறழப்பிறழ மின்னும்
பணியும் புரைமருங்குல் பெருந்தோளி படைக்கண்களே' (திருக்கோவை. 5)

இப்பாடலில், பெருந்தோளி படைக்கண்கள் பிறழப்பிறழ, மறையோன் அடி வாழ்த்-தலரின் பிணியும் அதற்கு மருந்தும் ஆம் என்று கூட்டிப் பொருள்செய்தமை விதலை-யாப்புப் பொருள்கோள். அஃதாவது இப்பெரிய தோள்களைஉடையாளது படை-போலும் கண்கள் பிறழுந்தோறும் பிறழுந்தோறும் பொதுநோக்கத்தால் எம்பெருமான் திருவடிகளை வழுத்தாதவர்களைப் போல உறும் பிணியும், உள்ளக்கருத்து வெளிப்-படுக்கும் நாணோடு கூடிய நோக்கத்தால் அதற்கு மருந்தும் ஆகாநின்றன என்றவாறு.]

**ஆமோதமுந்து வரிவண்டுகணீர்**
**தாமோதரன் தஞ்சையர்க்கு ஓதில் வண்தேன்**
**ஆமோதமுந்து வரிவண்டு கணீர்**
**ஆமோதமுந்து வரிவண்டுகணீர் (743)**

இது முதலயலடி ஒழித்து ஏனை மூன்றுஅடியும் முற்றுமடக்கு.

[ஆம் ஓதம் உந்து உவரி வண்டு உகள்நீர்
தாமோதரன் தஞ்சையர்க்கு ஓதில் வண்தேன்
ஆமோதமும் து வரிவண்டுகள்! நீர்
மோத முந்து உவர் இவ்வண்டுகள் நீர்ஆம்.]

(இ-ள்) 1) ஆக்கம் செய்வதாம் திரை கரையில் எறியும் சமுத்திரத்தின் சங்கு தவழும் புனலை உடைய வாவியில், 3) வளவிய தேனையும் பரிமளத்தையும் உண்ணும் பாட்டை உடைய வண்டுகளே! நீர், 4) என்னைப் பொர என்முன்-எதிர்ந்த (உவராகிய) காமனாரும், இப்பஞ்சபாணங்களும் என்னை வருத்தும் இதனை, 2) தாமோதரனது திருத்தஞ்சையில் உள்ளாராகிய தலைவர்க்கு உரைப்-பீராகில் உமக்கு நல்லதாம் என்றவாறு.
ஆம் - ஆக்கம் செய்யும். ஓதம் - திரை. உந்து - எறியும். உவரி - சமுத்திரம். வண்டு உகள் - சங்கு தவழ். நீர் - ஆகுபெயர். ஆமோதம் - பரிமளம். து - உண்.

'எஞ்சு பொருட்கிளவி செஞ்சொல் ஆயின்
பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல்' (தொ. பொ. 286 ந.)

என்பதனால் 'வண்தேன்' என்பது உம்மை இல் சொல்லாய் நின்றது. வரி - பாட்டு. வண்டுகள் - அண்மைவிளி. உவர் - மன்மதனை முன்னிலைப்படுத்திச் சுட்டுதலின், முன்னிலை சுட்டுப்பெயர். 'வருத்தும் இதனை' என்பது சொல்லெச்சம். பொருள்கோள் - மாட்டுறுப்பு.

பகுதி - இரவுக்குறி; துறை - காமம்மிக்க கழிபடர் கிளவி.

[வண்டு உகள் நீராகிய வாவியில் வண்தேனும் ஆமோதமும் நுகரும் வண்டுகாள்! நீர் என்னை மோதுதற்கு முந்தும் அவராகிய மன்மதனும் அவன் அம்புகளும் (என்னை வருத்தும் இதனை) தஞ்சையில் உள்ளாராகிய தலைவருக்கு ஓதில் (நான்காம் அடியிறுதியில் உள்ள 'நீர்', முதலில் உள்ள 'ஆம்' இரண்டும் இணைய 'நீராம்') உமக்கு நல்லதாகும்.

வண்டு - சங்கு, வண்டு என்னும் ஈ, அம்பு. உவர் - உயர்திணைப்பன்மைப்பெயர் மரியாதை குறித்து ஒருமைக்கு வந்தது. 'அவர் இவர் உவர் என வரூஉம் பெயரும்' (தொ. பொ. 164 நச். காண்க.]

**நாகவரையா னளிய மலருள்ளான்**
**நாகவரையா னளிய மலருள்ளான்**
**பாகவதர் தம்பிரான் பாமாறன் தம்பிரான்**
**நாக வரையா னளிய மலருள்ளான் (744)**

இஃது ஈற்றயலடி ஒழித்து ஏனை மூன்றுஅடியும் முற்றுமடக்கு.

[நாக அரையான் அளிய மலர் உள்ளான்
நாக வரையான் அளி அமலர் உள்ளான்;
பாகவதர் தம்பிரான், பாமாறன்தம் பிரான்,
நாகவரையான்; நளிய மலர் உள்ளான்.

நாகம் - பாம்பு, சுவர்க்கம், யானை. அளி - வண்டு, கருணை. நளிய - செறிந்த. அமலர் - களங்கமற்றவர். மலர் - அழுக்குடையவர். உள்ளான் - உள்ளத்தில் குடிகொண்டிருப்பவன், உள்ளத்தில் நினையான்.]

(இ-ள்) புலவீர்காள்! பாம்பை அணியும் அரையை உடைய சிவன், வண்டு உறுதலை உடைய தாமரையை இடமாக உடைய பிரமன், பொன்னுலகினது எல்லையை உடைய இந்திரன், கருணையை உடைய அழுக்குஅற்றோர் என்னும் இவர்கள் உள்ளத்தில் குடிகொண்டிருப்பான்; செறிந்த அழுக்கு உடையோரைத் திருவுள்ளத்தால் நினையான்; அவன் யார்எனின் பாகவதர் தம்பிரான் ஆகிய பா மாறனுக்குத் தம்பிரானாகிய அத்திகிரிநாதன் என்றவாறு.

'புலவீர்காள்' என்னும் எழுவாய் முன்னிலையெச்சம். அவனை மனம்மொழி மெய்களால் நினைந்து வாழ்த்தி வணங்க, அறம் முதலிய நாற்பொருளும் பயக்கும் என்பது கருத்து.

**சிலைநுதால் ஒழி தேடுதல் பார்சுலா**
**மலையு மாரமணியா வரிவளை**
**மலையு மாரமணியா வரிவளை**
**மலையு மாரமணியா வரிவளை (745)**

இது முதலடி ஒழித்து ஏனை மூன்றடியும் முற்றுமடக்கு.

[சிலைநுதால்! ஒழி தேடுதல் பார்சுலாம்
அலையும் ஆரம்மணி ஆ அரிவளை
மலையும் ஆரம் அணியா வரிவளை
மலையும் ஆரம் அணியா வரிவளை.

வரிவளை சிலைநுதால்! பார்சுலாம் அலையும் அரி வளைமலையும் ஆ ஆரம்மணி வரிவளை ஆரம் அணியா அணியா; ஆர மலையும்; தேடுதல் ஒழி - என மாட்டுறுப்பாகப் பொருள்செய்க.

வரிவளை - நாணால் வரியப்பட்ட. பார்சுலாம் அலை - உலகை வளைக்கும் கடல். அரிவளைமலை - குரங்குகள் சூழ்ந்த மலை. ஆ - தம்மிடத்து உண்டாக்கப்பட்ட ஆரம் மணி - முத்தும் மாணிக்கமும். ஆரம் - சந்தனம். வரிவளை - கோடுகளை உடைய சங்குகள். ஆர மலையும் - மிகவும் மாறுபடும்.]

(இ-ள்) நாரினால் வரிவனவாய் வளையப்பட்ட வில் போலும் நுதலினை உடையாய்! பூமியை வளைக்கும் கடலும், குரங்குகள் சூழப்பட்ட பருப்பதமும் தம்மிடத்து உண்டாக்கப்பட்ட முத்தையும் மாணிக்கத்தையும் சங்குகளையும் சந்தனத்தையும் அழகுபெற அணிவன அல்ல. ஆகையால் நீ பெற்ற இவளும் உனக்கு அந்நீர்மையள் என்பது அறியாதே, தேடிப் பின்தொடர்ந்து வருதல் உலகியற்கு மிக மாறுபடும் என்றால், தேடுதலை ஒழிவாயாக என்றவாறு.

இதுவும் மாட்டுறுப்பு. இதனுள்ளும் சொல்லெச்சங்கள் வந்தனவும் காண்க.

பகுதி - உடன்போக்கு; துறை - உலகியல் உரைத்தல்.

**ஆன கமல னயனத் தானத்தா**
**வான கமல னயனத் தானத்தா**
**வான கமல னயனத் தானத்தா**
**வான கமல னயனத் தானத்தா (746)**

இது நான்குஅடியும் ஏகபாதமாக முற்றுமடக்கு.

[ஆல் நகம் மலல் நயனத் தானத்தா!
ஆல் நகு அமல நத்து ஆன அத்தா!
ஆன கமலன் அயன் ந தானத்தா!
வான கமலன் அயன் ந தானத்தா! நய.]

(இ-ள்) ஆல் நகம் மலல் நயனத் தானத்தா - ஆலந்தளிராகிய பாம்பினை வளப்பத்தை உடைய திருக்கண் துயில் இடமாக உடையவனே! ஆல் நகு அமல நத்து ஆன அத்தா - வெள்ளத்தினிடத்து மிளிரும் அழுக்கற்ற சங்கு இருப்பான திருக்கையை உடையவனே! ஆன கமலன் அயன் ந தானத்தா - உனது உந்தியில் தோன்றிய தாமரையான் ஆகிய ஆதிப்பிரமன் இல்லையாக மீளவும் பெற்று அளித்த கொடையினை உடையவனே! வான கமலன் அயன் (ஐயன்) - ஆகாயத்ததாகிய கங்கையைத் தரித்தவனாம் சிவன் மூதாதையே! ந தானத்தா - சிறப்புடைய முக்கியத் தானமாகிய பரமபதத்தை உடையவனே! இடைச்சொல் ந சிறப்புப்பொருட்டு. நய (இரண்டாம் அடியில்) என்னை ஆட்கொள்ள விரும்புவாயாக என்றவாறு.

ஆல் - ஆகுபெயர். நகம் - பாம்பு (விகாரம்). மலல் - இடைக்குறை. நயனத்தானம் - துயிலணை. ஆல் - வெள்ளம். நகு - மிளிர். அமலம் - அழுக்கற்ற. ஆன - இருப்பான. ந (3) இல்லை. ஒழிந்தனவும் உரையிற்கொள்க.

திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து.

[மூன்றாமடியை 'ஆன கமலன் அயன் நத்து ஆன் அத்தா' என்று பிரித்துப் பிரமன் விரும்பிக் கவர்ந்த ஆன் வடிவு எடுத்த அத்தனே என்றும் உரை கூறலாம் என்பது முதற்பதிப்பின் குறிப்புரை.

ஆல் - ஆலந்தளிர் - ஆகுபெயர். நகம் - நாகம் - குறுக்கல் விகாரம். மலல் - மல்லல் என்பதன் இடைக்குறை. ஆதிசேடனே ஆலந்தளிர் ஆயினான் என்பது மரபு. நத்து - சங்கு. அத்தம் - கை. தானம் - இருப்பிடம், கொடை. கமலம் - தண்ணீர் - கங்கை.] [12]

ஒருசொல் மடக்கு

**264. ஒருசொலின் மடக்கலும் உளஎன மொழிப. [13]**

(எ-ன்) இதுவும் அம்மடக்கினது பேதம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) ஒரு பாவினது நான்கு அடியும் ஒரு சொல்லானே முற்றும் மடக்குவதும் உண்டு என்று கூறுவர் பெரியோர் என்றவாறு. யமயமகம் என்பதும் இது.
[இது தமிழில் இயமாவியமகம் என்று எழுதப்படும்.]

**அரியா ரரியார்**
**அரியா ரரியார்**
**அரியா ரரியார்**
**அரியா ரரியார்** (747)

இஃது ஒருசொல்லினான் மடக்கல்.
அரியார் - யாவராலும் அளவிடற்கு அரியர்
அரிஆர் - சத்துருக்கள் உயிரைப் பருகும்
அரியார் - சக்கராயுதத்தை உடையார்
அரி - பாம்பினை
ஆர் - மிக்க
அரியார் - சயனமாக உடையவர்
அரியார் - ஏனமாக அவதரித்தவர்
அரியார் - அநுமானை உடையவர்
அரியார் - அவர் யார் எனின், அரி என்னும் திருநாமத்தை உடையார் என்றவாறு. எனவே, அவரே பரப்பிரமமாவார் என்பதூஉம் அவரே முத்திக்கு வித்தாவார் என்பதூஉம் ஆயிற்று. துறை - கடவுள்வாழ்த்து. பா - குறளடி வஞ்சித்துறை.
[அரி - அருமை, பகைவர், சக்கராயுதம், பாம்பு, தூங்குமிடம், பன்றி, குரங்கு, திருமால் என்ற பல பொருள்களில் வந்துள்ளமை நோக்கத்தக்கது.] [13]

பாதமடக்கு

**265. பதத்தொடு பதம் மடக்குதல் பதமடக்கே. [14]**

(எ-ன்) இன்னும் அம்மடக்கினையே வேறுபடுத்துக் கூறுகின்றது.
(இ-ள்) ஒருசெய்யுள் நான்குஅடியாய் வருவதனுள் இரண்டுஅடி ஒரு நோக்கமாக மடக்குதல் பாதமடக்குஎனப் பெயர் பெறும் என்றவாறு.
[வளைவாக மடங்கியிருக்கும் பாடகம் என்ற கால்அணி போல இரண்டிரண்டு அடிகள் மடங்கி வரும் 'பாதமடக்கு' பாடகமடக்கு எனவும் பெயர் பெறும். பதம் - பாதம் - அடி. எனவே பதமடக்கு என்பதும் பாதமடக்கேயாம்.]

**சக்கர நாகணைத் தகைத் தலத்தின**
**சக்கர நாகணைத் தகைத் தலத்தின**
**விக்கரைத் தென்குருகூர் மன்னேமவா**
**விக்கரைத் தென்குருகூர் மன்னேமவா** (748)

இது முதல் இரண்டுஅடியும் கடை இரண்டுஅடியும் முற்றுமடக்கு.
[சக்கர நாகஅணைத் தகைத் தலத்தின!
சக்கரம் நாகு அணைத்த கைத்தலத்தின!

இக்கு அரைத் தென்குருகு ஊர் மன் ஏம
வாவிக்கரைத் தென்குருகூர் மன்! ஏம வா.]

(இ-ள்) கடலில் துயிலும் பாம்பணையாகிய அழகிய இடத்தை உடையவனே! சக்கரத்தையும் சங்கையும் தரித்த கையை உடையவனே! கரும்பின் அடியிலே அழகிய சங்கு தவழும் ஆக்கத்தோடும் இன்பம் தரும் வாவிக்கரையை உடைய பொருநைத் தென்கரைக் குருகூர்க்கு மன்னவனே! என்னைக் காக்க வருவாயாக என்றவாறு.

துறை - கடவுள்வாழ்த்து. (குருகாமான்மியம்)

[சக்கரம் - கடல், சக்கராயுதம். நாகு - சங்கு. இக்கு - கரும்பு. குருகு - சங்கு. தென் - அழகிய, தெற்கிலுள்ள. ஏம - பாதுகாவல் செய்ய.]

**தரணி குடையா எழுமை வராக**
**முரணரரி வாமனனத்தன் முன்பான்**
**தரணி குடையா எழுமைவ ராக**
**முரணரரி வாமன னத்தன் முன்பான்.** (749)

இது முதலடியும் மூன்றாமடியும், இரண்டாமடியும் நாலாமடியும் முற்றுமடக்கு.

[தரணி குடையா எழும் ஐ வராகம்,
முரண் நரரி, வாமனன், நத்தன், முன்பான்
தரணி குடையா எழும்; ஐவர் ஆகம்
முரணர் அரி; வாம் அனன் அத்தன்; முன்பான்.]

(இ-ள்) பூமியானது பிரளயத்துள் ஆழ, அதனை எடுத்தற்குத் தோன்றும் அழகிய ஏனம்; பெருமையை உடைய நரசிங்கம்; வாமனரூபமானவன்; பாஞ்சசன்னியத்தை உடையான்; கோவர்த்தனகிரியைக் குடையாக எடுத்து நிமிரும் மிடுக்கினை உடையான். (இதன்கண் முன்பான் என்னும் இரண்டாமடியின் இறுதிச்சீரை இணைக்க.) பஞ்சபாண்டவர்கள் உள்ளத்துக்கு மாறுபாடான நூற்றுவர்க்குக் கூற்றுவன்; தாவும் அன்னத்தை உடைய பிரமனுக்குப் பிதா; எல்லாக் கடவுளர்க்கும் முன்னானவன் என்றவாறு.

முரண் - பெருமை. நரரி - நரசிங்கம். முன்பு - மிடுக்கு. அரி - யமன். ஒழிந்த அரும்பதம் உரையிற்கொள்க. துறை - கடவுள்வாழ்த்து.

[குடையா - அண்டச்சுவரிலிருந்து குடைந்து. எழும் - பெயர்த்துக்கொண்டு புறப்படும். ஐ - அழகிய. தரணி - மலை. தரணி குடையா எழும் முன்பான். முரணர் - பகைவர். வாம் அனன் - தாவும் அன்னத்தை வாகனமாக உடையவன்.]

**இலங்கொண் மூவெயில் குன்றவில் லேற்றுவான்**
**அலங்கல் வாரி யமைந்திறப் பெய்தவேர்**
**அலங்கல் வாரி யமைந்திறப் பெய்தவேர்**
**இலங்கொண் மூவெயில் குன்றவில் லேற்றுவான்** (750)

இது முதலடியும் நாலாமடியும் தம்மினும், இடையில் இரண்டு அடியும் தம்மினும் முற்றுமடக்கு.

இல் அம்கொண்மூ வெயில் குன்ற வில் ஏற்றுவான்
அலம் கல் வாரி அமைந்து இறப்பு எய்த, வே-
ரல் அம்கல் வாரிய மைந்து இறப் பெய்த வேர்
இல் அம் கொள் மூவெயில் குன்ற வில் ஏற்று வான்.

'அம் கொண்மூ வெயிலில், அம் கொள் மூஎயில் குன்ற குன்றவில் ஏற்று-வானில் வில்ஏற்று வான் அலம் கல் அமைந்து வாரி வேரல்வேர் அம் கல்

வாரிய மைந்து இறப்பு எய்த இறப் பெய்த' என மாட்டுறுப்பாகப் பொருள்கோள் கொள்க.

(இ-ள்) அம் கொண்மூ வெயிலில் - சலத்தைத் தரித்த மேகம் வெயிலினும் மிகுந்து. அம் கொள் மூஎயில் குன்ற - அழகு குடிகொண்ட மூஎயிலும் அழியும்படிக்கு. குன்றவில் ஏற்றுவானில் - இமவானாகிய குன்றவில்லில் நாணை ஏற்றும் சிவனைப் போல. வில்ஏற்று வான் - மின்னுதலைப் பொருந்தி வானினின்றும். அலம் கல் அமைந்து - நிறைவை உடைய மலைஉச்சியில் பதிந்து. வாரி - மழைத்தாரையை. வேரல்வேர் - மூங்கில்வேரையும். அம் கல் வாரிய மைந்து - அழகிய மாணிக்கத்தையும் கிளைத்து முகந்து எடுத்த மிடுக்கினோடும். இறப்பு எய்த - வெள்ளமாய் ஓடுதலைப் பொருந்தும்படி. இறப்பெய்த - தண்ணீர் தம்மிடத்து இல்லையாம்படி முழுதும் பெய்த என்றவாறு.

பொருள்கோள் - முதலடியும் நான்காம்அடியும் தம்மினும், இடையில் இரண்டும் தம்மினும் மாட்டுறுப்பாகக் கொண்டது. (குருகாமான்மியம்)

திணை - பாடாண்; துறை - மலைவருணனை. [14]

அந்தாதி மடக்கு

**266. அந்தாதிப்பது அந்தாதி மடக்கே. [15]**

(எ-ன்) இன்னும் அம்மடக்கினை வேறுபடுத்துக் கூறுகின்றது.

(இ-ள்) அடிதொறும் இறுதிச்சொல்லை அதன்மேல் வரும் அடிக்கு அந்தாதியாகத் தொடுப்பது அந்தாதி மடக்கு என்பதாம் என்றவாறு.

**நாக முற்றவுங் களிதர நிருதர்கோ னாக**
**நாக மையிரண் டொருங்கறப் பொருத மைந்நாக**
**நாக மூலமென் றழைத்தகார் துயிலிட நாக**
**நாக மொய்த்த பூம்பொழில் திருநாகை என்னாகம். (751)**

[நாகம் முற்றவும் களிதர நிருதர்கோன் ஆகம்
நா கம் ஐயிரண்டு ஒருங்கு அறப் பொருத மைந்நாக
நாகம் மூலம் என்று அழைத்த கார் துயில்இடம் நாகம்;
நாகம் மொய்த்த பூம்பொழில் திருநாகை என் ஆகம்.]

இஃது அந்தாதி மடக்கு. இதனைச் சந்தொட்டியமகம் என்றும் சொல்லுப. அல்லது இடைவிட்டு முதலும் இறுதியும் மடக்கிய முற்றுமடக்கு எனவும் கொள்க.

இதனுள் நாகம் - துறக்கத்து உள்ளார். முற்ற - அனைவரும். ஐ இரண்டு நா கம் - பத்துநாக்கும் பத்துத்தலையும். ஒருங்கு அற - தொடை ஒரு வாளியில் ஒக்க அற. மைந்நாகம் - நீலமலை. நாகம் - யானை. நாகம் - திருஅனந்தாழ்வான். நாகம் - சுரபுன்னை. என் ஆகம் - என் உள்ளம். நா கம் என்பது 'ஆ பயன்' (குறள். 540) என்பது போல ஒற்றுத் தோன்றும் சந்தி ஒற்று இன்றி இயல்புசந்தியாய் நின்றது.

திணை - பாடாண்; துறை - கடவுள்வணக்கம்.

[நாகம் - தேவர்உலகம், நாவும் தலையும், மலை, யானை, பாம்பு, சுரபுன்னை. ஆகம் - உடல், நெஞ்சம். ஆபயன் - ஆவாற் கொள்ளும் பயன். 'ஆப்பயன்' எனற்பாலது இயல்பாய் அமைந்தது. நாக்கம் எனற்பாலது ஒற்று மிகாது நாகம் என நின்றது என்பதற்கு 'ஆ பயன்' என்பது எடுத்துக்காட்டாகத் தரப்பட்டுள்ளது.

தேவர் உலகில் உள்ளார் அனைவரும் மகிழ அரக்கர்தலைவனான இராவணனுடைய உடலில் நாப்பத்தோடு தலைகள்பத்தும் ஒருசேர அறும்படி போரிட்ட, நீலமலை போன்ற யானையாகிய கசேந்திரன் 'மூலமே' என்று அழைத்த கார்மேக வண்ணன் துயிலுமிடம் ஆதிசேடனாகும். சுரபுன்னை மரங்கள் நெருங்கிய அழகிய சோலைகளை உடைய அவன் உகந்தருளியிருக்கும் திருப்பதியாகிய நாகை எனது உள்ளத்தில் எப்போதும் உள்ளது.]

இதனைச் சந்தட்டய மடக்கு என்ப. (தண்டி.)

**தேனே கமழ் நறுந் திரு மகிழ் மாறன்**
**மாறன் சேவடி வணங்குகிறை வரைவாய்,**
**வரைவாய்; அன்று எனில், வல்லை நீ இறைவா!**
**இறை வால்வளையை நீப்பினும் வருந்தேனே.** (752)

இது முதலும் ஈறும் ஒருசொல்லாய் இடையிடைப் பல சொல்லாய் வந்த அந்தாதி மடக்கு. இதனுள், மால்தன் சேவடி - மாயன் தனது சிவந்த திருவடித்தாமரை. வரைவாய் அன்று எனில் - வரைந்து கொள்வாயாக. அது நிகழாது எனின். வல்லை நீ இறைவா - தலைவனே நீ விரைந்து. இறைவால் வளையை நீப்பினும் வருந்தேன் - முன்கையில் அணியும் சங்கினை உடையாளொடு நீங்கலாவது உடன்கொண்டு சேறல். ஏகாரம் ஈற்றசை. 'நீப்பினும்' என்ற உம்மையால், சிலநாள் இவளை அணைதற்கு வாராது நீங்கினும் வருந்தேன் என்பதாம்.

பகுதி - ஒருவழித் தணத்தல்; துறை - அகன்றணைவு கூறல்.

["தேன்மணம் கமழும் நறிய அழகிய மகிழம்பூமாலையை அணிந்த மாறன் என்ற பெயர் உடையவனாய்த் திருமாலுடைய சிவந்த திருவடிகளை வணங்கும் தலைவனுடைய துடரிமலையிலே தலைவனே! நீ தலைவியை மணம் செய்துகொள்வாயாக. அஃது இயலாது போயின் முன்கையில் அணியும் சங்கினை உடைய தலைவியை நீ உடன்கொண்டு உடன்போக்குப் போனாலும் சிலநாள்கள் அவளை அணைவதற்கு வாராது நீத்தாலும் அது குறித்து யான் வருந்தேன்"] [15]

### அம்மனைமடக்கு

**267. அம்மனை கைக்கொண்டு ஆடுநர் தம்மையும்**
**அம்மனையாய் மதித்து ஆங்குஓர் கர்த்தாவினை**
**நிந்தாத்துதி துதிபெற நிகழ்த்துதலும்**
**அந்தாதித்து இடைஅடி மடக்காகவும்**
**ஈற்றடி இரட்டுற இசைத்து அதைத் தாபித்து**
**ஆற்றலின் அமைக்கும் அம்மனைமடக்கு ஒன்று உள.** [16]

(எ-ன்) இஃது இலக்கியம் கண்டு அதற்கு இலக்கணம் கூறல் என்பதனால் அம்மனைமடக்கு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அம்மனை கைப்பற்றி ஆடும் இருமகளிர் தம்மைத் தாமே அம்மனையாகப் பெயர் குறித்ததாக அதற்குப் புணர்த்த கலித்தாழிசையிடத்து ஒருகர்த்தாவினை நிந்தாத்துதியானாதல் துதியானாதல் முதலே ஒருவர் ஒருபொருள்பெறக் கூறலும், அதற்கு முன் இருந்த மகளிர் செய்யுளின் இடைப்பட்ட அடியை அடிமடக்காய் அந்தாதித்து வினாயதற்கு முன்னர்க் கூறிய மகளிர்தாமே பின்னும் தாம் கூறியது தப்பாது தாபித்ததாம் பெருமை-

யொடும் கூறும் ஈற்றடி சிலேடை வாய்பாட்டால் புணர்க்கும் அம்மனைமடக்கு ஒன்று உளது என்றவாறு.

'ஆற்றலின் அமைக்கும்' என்பதனால் முதலடி இரட்டுற வருதலுமாம் என்று அறிக. இது பொருளணியும் சொல்லணியும் கூடியது என உணர்க.

**தெண்திரைப் பார்போற்றும் திருவெள்ளறை மாயன்**
**கண்டளவில் நீடுகஞ்சக் கண்ணாளன் அம்மானை;**
**கண்டளவில் நீடுகஞ்சக் கண்ணாளனேல் அமுதுஉட்**
**கொண்ட பரிகலம்முன் கொட்டினனோ, அம்மானை?**
**கொட்டினதும் உண்டு குழிதாலம் அம்மானை. (753)**

இது நிந்தாத்துதி. 'கஞ்சக்கண்ணாளன்' என்பது தாமரை போலும் கண்களை உடையான் என்றும், வெண்கலம் கொட்டும் கன்னுவன் என்றும் சிலேடை நிந்தாத்துதி ஆயிற்று. கண்ட அளவில் என்பது கண்டளவில் என விகாரத்தால் தொக்கது. கொட்டினது என்பது உண்டது உமிழ்தலும், தட்டுதலும். குழிதாலம் - உண்டு குழிக்கப்பட்ட பூமியும், குழிதாலமான உண்கலனுமாம். ஒழிந்தவும் உரையிற்கொள்க. துறை - கடவுள்வாழ்த்து.

[முதலாமவள் ஒரு செய்தி கூற, இரண்டாமவள் அது பற்றி வினாவ, முதலாமவள் தான் கூறியதைச் சிலேடை வாய்பாட்டால் நிறுவுதல் அம்மனை பற்றிய செய்தியாம். இதன்கண் முதலாமவள் கூறிய செய்தி இரண்டாமவள் கூறும்போது மடங்கி வருதலின் இஃது அம்மனைமடக்காம்.

திருவெள்ளறை மாயன் கஞ்சக்கண்ணாளன் என்றாள் முதலாமவள். "கஞ்சக்கண்ணாளனேல் பரிகலத்தைக் கொட்டினது முண்டோ"? என்று வினவினாள் மற்றையாள்; "அவன் குழிதாலத்தைக் கொட்டினதும் உண்டு" என்றாள் முதலாமவள். கஞ்சக்கண்ணாளன், கொட்டினது, குழிதாலம் - இவை ஒரு பொருளில் நிந்தை; மற்றொரு பொருளில் துதி.]

**வண்தமிழோர் கொண்டாடும் மன்குருகூர் வாசமகிழ்க்**
**கொண்டல்எழில் மேவும்தமிழ்க் குன்றம்காண் அம்மானை;**
**கொண்டல்எழில் மேவுதமிழ்க் குன்றமதுஆனால், அதன்கண்**
**எண்திசையும் சந்தனக்கா இல்லையோ, அம்மானை?**
**இல்லாமல் சாந்தமணம் எய்துமோ, அம்மானை? (754)**

இது துதி. சாந்தமணம் - சந்தனப்பரிமளமும் சாந்தரசம் பொருந்துதலுமாம். தமிழ்க்குன்றம் - பொதியமும் தமிழுக்கு மலைபோலும் பெருமையுடையோன் என்பதுமாம். திணை - பாடாண்; துறை - பழிச்சினர்ப் பரவல்.

["மாறன் தமிழ்க்குன்றம்" என்றாள் முதலாமவள்; "தமிழ்க்குன்றமாகிய பொதியிலில் இருப்பது போல மாறனாகிய தமிழ்க்குன்றத்திலும் சந்தனக்கா இல்லையோ"? என்று வினவினாள் அடுத்தவள். "மாறனிடம் சாந்தமணம் கமழ்தலை அறிகிலையோ"? என்றாள் முதலாமவள். சாந்தமணம் கமழ்தல் சிலேடையால் விடையாயினவாறு. இது நேரிடையாகப் புகழ்வதால் துதியாயிற்று.] [16]

பலபொருட்சிலேடை மடக்கு

**268. தொடர்ச்சொல் பலபொருட் சிலேடை முந்துறவே**
**இடர்ப்பாடு இன்றி ஈற்றுறும் இணைமடக்குள. [17]**

(எ-ன்) இதுவும் இலக்கியம் கண்டு அதற்கு இலக்கணம் கூறலாக இன்னும் அம்மடக்கினுள் சிலேடை முன்னிட்டதாய் வருவதொரு மடக்கு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) ஒருசெய்யுளின் முதற்கண் தொடர்ச்சொல் வாய்பாட்டால் பல பொருளைக் காட்டும் சிலேடை வந்து அதன்பின்னர் இடைவிடாதனவாய் ஈரிடத்து வரும் ஒருசார் மடக்குகளும் உள என்றவாறு.
இடர்ப்பாடு - இடைவிடுதல். இன்றி - அஃது இல்லாமை. பலபொருள்ஆவன - ஒரு தொடர்ச்சொல் இருபொருள் முதலாக ஐந்து ஈறாய பொருளைக் காட்டுதல் எனக்கொள்க. இதுவும் பொருளணியும் சொல்லணியும் கூடியது என உணர்க.

**மூஉலகு எண் முத்தரைப்போல், முந்நீர் முகில் பெயல்போல்,**
**காவலர்கள் வீழ் வேங்கடவெற்பே - தேவர்**
**பெருமான் பெருமான்கண் பெய்வளைக் கையார் மூ**
**வருமால் வருமாலின் வைப்பு.** (755)

இஃது இருபொருள் சிலேடை இணைமடக்கு.
(இ-ள்) தேவர்பெருமான் - கடவுளர்க்கு எல்லாம் சுவாமி. பெருமான்கண் பெய்வளைக்கையார் - பெரியவாய மானினது கண்நோக்கம் போலும் நோக்கு அமைந்த கண்ணினையும், இடப்பட்ட வளையோடும் கூடிய கையினையும் உடையார். மூவரும் மால்வரும் மாலின் வைப்பு - திருமகள், மண்மகள், நீளை என்னும் மூவர்உள்ளத்தும் வேட்கை உண்டாம் மாயோன் வாழும் இடம். மூவுலகு எண் முத்தரைப் போல் காவலர்கள் வீழ் வேங்கடவெற்பு - பூமி, அந்தரம், சுவர்க்கம் என்னும் மூவுலகின்கண் உள்ளாரும் மதிக்கப்பெறும் பரமபதத்து முத்தரைப்போல நெருங்கிப் பூலோகமன்னர் சேவிக்க விரும்பும் தன்மையதாம் வேங்கடமலை. முந்நீர் முகில் பெயல் போல் கா அலர்கள் வீழ் வேங்கடவெற்பு - கடலில் படிந்த மேகத்தின் இழியும் மழை போலக் காவினிடத்து மலர்களில் தேன் துளித்து வீழும் வேங்கடவெற்பு.
கள் - தேன். வீழ் - வினைத்தொகை. இதனைச் செய்யும் என்னும் பெயரெச்ச-மாக விரித்துக் காலம் மூன்றினும் ஏற்றுக.
திணை - பாடாண்; துறை - மலைவருணனை.
[முத்தரைப் போல் காவலர்கள் வீழ் வேங்கடவெற்பு, பெயல் போல் கா அலர் கள் வீழ் வேங்கடவெற்பு - என முதல் இரண்டுஅடியும் சிலேடை. அடுத்த இரண்டு அடியும் முதல்சீர் மடக்கு. காவலர்கள் - அரசர்கள். கா அலர் கள் - சோலைகளிலுள்ள பூக்களின் தேன். பெருமான் - தலைவன். பெரு மான் - பெரிய மான். மூவரும் மால்வரும் - தேவியர் மூவரும் மையல்கொள்ளும். மால் - மயக்கம், திருமால். காவலர்கள், கா அலர்கள் - பிரிமொழிச்சிலேடை. வீழ்வேங்கடம் - விரும்பும் வேங்கடம். வினைத்-தொகை.]

**மாயன்சேய் வில்லும், மலர்ப்பொழிலும், கஞ்சனமும்,**
**காயம்புதை திறங்கூர் கச்சியே - நேயம்**
**அகத்தா ரகத்தார் அருவினை ஆட்செய்யும்**
**மகத்தார் மகத்தார்தம் வாழ்வு.** (756)

இது மூன்று பொருள் சிலேடை இணைமடக்கு.
(இ-ள்) நேயம் அகத் தாரகத்தார் - கருணையைத் திவ்யாத்மாவுக்குத் தாரகமாக உடையவர். அருவினை ஆள்செய்யும் மகத்தார் - நீக்குதற்கு அரிய வினைகள் அடிமைத்தொழில் செய்யும் மகத்துவத்தை உடையார். மகத்தார்தம் வாழ்வு -

யாகத்தின்கண் தோன்றிய பேரருளாளர் வாழுமிடம். மாயன் சேய் வில் காய் அம்பு தை திறம் கூர்கச்சி - திருமால் புதல்வனாகிய காமனது கருப்புவில், கூடிப்பிரிந்த புமான்கள் மகளிர் என்பவர்களின் அறிவை நிலைதிரிக்கும் பூவாளியைச் செலவிடும் தொழில்புரியும் கச்சி. மலர்ப்பொழில் காயம் புதை திறம் கூர் கச்சி - பூவோடு கூடிய சோலைகள், ஆகாயத்தை மூடும் கூறுபாடு மிகும் கச்சி. கஞ்சனம் காயம் புதை திறம் கூர் கச்சி - கண்ணாடிகள், கண்டோர் மெய்யை உட்கொள்ளும் திறம் மிகு கச்சி.

என அடைவே கொள்க. வாழ்வு - ஆகுபெயர்.

திணை - பாடாண்; துறை - நகரவாழ்த்து.

[தாரகம் - வாழ்முதல். மகத்து - பெருமை. மகம் - வேள்வி. வாழ்வு - வாழுமிடம் - ஆகுபெயர். காயம் புதை திறம் கூர் எனவும், காய் அம்பு தைதிறம் கூர் எனவும் பொருள் செய்தலின் செம்மொழிச்சிலேடையும் பிரிமொழிச்சிலேடையும். மன்மதனுக்கும் பொழிலுக்கும் கண்ணாடிக்கும் சிலேடை.]

**கொம்பர், அம்சொல் மின்னார் குயம், பொன்னி, அன்பர்உளம்,**
**அம்பரம் தோயும் தென்அரங்கமே - தும்பி**
**உரைத்தான் நுரைத்தான் உயர் திரைநீர் தட்டு ஈ-**
**னரைத்தான் அரைத்தான் அகம்.** (757)

இது நாலுபொருட்சிலேடை இணைமடக்கு.

கொம்பர் - பூங்கொம்புகள். அம்பரம்தோயும் - ஆகாயத்தைத் தோயும். குயம் - முலைகள். அம்பரம்தோயும் - கூறைவிட்டு நீங்காதிருக்கும். பொன்னி - காவிரி. அம்பரம்தோயும் - கடலைப் பொருந்தியிருக்கும். அன்பர் உளம் - அடியார் மனம். அம்பரம்தோயும் - அழகிய பரப்ரம்மத்தை அநுபூதி செய்துகொண்டிருக்கும். தென்அரங்கம் - அழகிய திருவரங்கத் திருப்பதி. தும்பி உரைத்தான் - கசேந்திரனால் ஆதிமூலமே என்று அழைக்கப்பட்டவன். நுரைத்தான் உயர் திரைநீர் - நுரையை உயர்த்தும் திரையை உடைய கடலை. தட்டு - அடைத்து. ஈனரைத்தான் அரைத்தான் அகம் - அறிவுஇல்லாத ஈனராகிய இராவணாதிகளை ஆயுதத்தால் கண்டம்செய்து பூமியின்கண் போட்டு அரைத்தான் பதி.

உயர்திரை - வினைத்தொகை. நுரைதான் எனவும் நுரைத்தான் எனவும் ஒற்றுத் தோன்றியும் தோன்றாதும் நிற்கும். திணை - பாடாண்; துறை - நகரவாழ்த்து.

[அம்பரம் தோயும் என்பது பூங்கொம்புகள், அழகிய சொற்களை உடைய மின்னல் போன்ற ஒளியை உடைய மகளிர் முலை, காவிரி, அன்பர்உளம் என்ற நான்கற்கும் செம்மொழிச்சிலேடையாய் நான்குபொருள் தந்தது. அம்பரம் - வானம், ஆடை, கடல், அழகிய பரம்பொருள். தும்பி - யானை. அரைத்தல் - தரையிலிட்டுத் தேய்த்தல்.]

**சூழி மறுகு ஆடவர்தோள் விரல் பொழில்தேன்**
**ஆழி பயிலும் அரங்கமே - ஊழி**
**திரிநாள் திரிநாட்டின உயிர்உய்க் கொண்ட**
**அரிநாட்டு அரிநாட்டு அகம்.** (758)

இஃது ஐந்துபொருட்சிலேடை இணைமடக்கு.

சூழி - வாவி (ஆழி பயிலும் - வட்டம் பொருந்தும்), மறுகு - வீதி (ஆழி பயிலும் - தேர், வண்டி முதலியன பொருந்தும்), ஆடவர் வலத்தோள் (ஆழி பயிலும் - திருச்சக்கரப்பொறி பொருந்தும்), மகளிர் புமான் கைவிரல்கள் (ஆழி பயிலும் - நவமணிஆழி பொருந்தும்), பொழிலில் பூந்தேனும் வைத்த தேனும் (ஆழி பயிலும் - முகை விண்டு ஒழுகியும் உடைந்தும் நதிவாயிலாகச் சமுத்திரத்தைப்

பொருந்தும்). ஊழி திரிநாள் - கற்ப அந்தியத்தில் உகங்கள் மீள வருநாள். திரி நாட்டின - மூன்று உலகின்கண்ணும் உள்ள. உயிர் உய்க்கொண்ட - உயிர்க்கணத்தைத் திருஉதரத்துள் வைத்துப் பிழைக்கக்கொண்ட. அரிநாட்டு - பாற்கடல் என்னும் இடத்தை உடைய. அரி - அரி என்னும் திருநாமத்தை உடையான். நாட்டு அகம் அரங்கமே - நிலைபெறுத்தின பதி திருவரங்கம் என்றவாறு.

ஒழிந்த அகலம் உரையிற்கொள்க. திணை - பாடாண்; துறை - நகரவாழ்த்து. இவற்றிற்கு எல்லாம்,

எழுத்து ஓரன்ன பொருள்தெரி புணர்ச்சி
இசையின் திரிதல் நிலைஇய பண்பே (தொ. எ. 141)

என்பதனால் ஒலிஎழுத்துக்கள் எடுத்தல் படுத்தல் என்னும் ஓசைவேற்றுமையால் புணர்ச்சியிடத்துப் பொருள் வேறுபடுதல் நிலைபெற்ற பண்பாக அறிந்துகொள்க; செம்பொன்பதின்றொடி, குன்றேறாமா என்பன போல. பிறவும் அன்ன.

['ஆழி பயிலும்' என்ற தொடர் சூழி, மறுகு, தோள், விரல், தேன் என்ற ஐந்தனுக்கும் ஏற்ப ஐந்து பொருள்களில் செம்மொழிச்சிலேடையாக அமைந்துள்ளது. ஊழி திரிநாள் - அவாந்தரப்பிரளயம். இவ்வெள்ளத்தில் பூவுலகு, புவருலகு, சுவருலகு என்ற மூன்று உலகங்களே அழியும் என்ப. செம்பொன்பதின்தொடி - செம்பொன் பதின்தொடி, செம்பு ஒன்பதின்தொடி; குன்றேறாமா - குன்று ஏறு ஆமா, குன்று ஏறா மா - எனப் பிரித்து இருவகையாகப் பொருள்செய்யப்படும்.] [17]

## எழுத்து மடக்கு

**269. மதித்து ஓர்எழுத்தினை மடக்கலும் மடக்கே. [18]**

(எ-ன்) இன்னும் மடக்கிற்கு ஒருவேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஓர் எழுத்தினைச் செய்யுளின்கண் அடிதொறும் முதலே வந்த பொருளினை உட்கொண்டு வேறும் ஒருபொருள் தருவதாக மடக்கலும் மடக்கின்பாற்படும் என்றவாறு.

எனவே, மேலே முதல்சூத்திரத்தின் (252) 'மடக்கலும்' என்ற உம்மையால் தொடர்எழுத்துமொழியே அன்றி ஓர்எழுத்தானாம் மொழிகளைப் பெயர்த்தும் ஒரு பொருள்தர மடக்குவதும் அப்பெயராம் என்றார் ஆதலால், தொடர்எழுத்துமொழிகளான் ஆகும் மடக்குக்கள் உணர்த்தி அதன் பின்னர் ஓர்எழுத்தான் ஆகும் மடக்கு உணர்த்துவான் தொடங்கினார் எனக்கொள்க.

**மா மா மாது இன்புறு திருமார்பான் மகிழ்வு எய்திக்**
**கா கா காமர் மல்லையின் மோதும் கடலே! முன்**
**னா னா னாமெய் தாம் உயிர் என்றார் நகர் மீள**
**வா வா வாய்மை தந்ததும் உளதோ? பகர்வாயே.** (759)

இஃது ஓர்எழுத்து அடிமுதல் முற்றுமடக்கு.

(இ-ள்) மா மா மாது இன்புறு திருமார்பன் மகிழ்வு எய்தி - பெரிய திருமகளாகிய மாது விரும்பும் திருமார்பை உடையான் மகிழ்ச்சி பொருந்தி, கா கா காமர் மல்லையின் மோதும் கடலே - காவல் பூண்ட காவினோடும் கூடிய அழகிய திருக்கடல்மல்லை என்னும் திருப்பதியில் கரைதொறும் எற்றும் கடலே! முன் ஆனா நான் மெய்தாம் உயிர் என்றார் நகர் மீள - பிரியும் முன்னர் நான் நீங்காத மெய்யாகவும் தாம் அதன்கண் வைகும் உயிராகவும் எனக்கு உட்கொளக்

கூறினார் இந்நகர்க்கு மீளும், அவாவா வாய்மை தந்ததும் உளதோ பகர்வாயே - அன்பு உண்டாம் வசனம் நின்னுடன் கூறியது உளதாகில் என்னுடன் கூறுவாயாக.
மா - திருமகள். கா - சோலை. ஆனா - நீங்காத. மீள் - மீளும். ஆவாவா - அவாஆம்- அன்பு உண்டாம். வாய்மை - வசனம். இது நெடில் எதுகை.
பகுதி - பொருள்வயின் பிரிதல்; துறை - கடலொடு வரவு கேட்டல்.
'ஒரெழுத்தினை மடக்கலும்' என்ற உம்மையால், ஈரெழுத்து முதல் நாலெழுத்து ஈறாக உயிரும் உயிர்மெய்யும் ஆகியவை ஒரோசெய்யுள் முழுதும் கோடலும் ஒரோஅடி முழுதும் கோடலும் உரிய எனக்கொள்க.
அவற்றுள், ஓர்உயிர் மடக்கு வருமாறு:

**அரவ மகரசல சயன பட அரவ!**
**கர சரண நயன வதன கமலதர!**
**வரத! சரத! மகவர தசரத மக!**
**பரம! பரம்; அமல! அநக! பரமபத! (760)**

இஃது அகரக்குற்றுயிர் மடக்கு.
(இ-ள்) ஆரவாரத்தை உடைய மகராலயமாம் சமுத்திரத்தில் துயிலும் சயன-மாகிய படத்தோடும் கூடிய பாம்பினை உடையவனே! கரமும் காலுங் கண்ணும் முகமும் கமலம் ஒத்தவனே! வரதனே! சரதனே! மகத்துவமான வரத்தைப் பெற்ற தசரதன் மகனே! பரமனே! அமலனே! அனகனே! பரமபதத்தை உடையவனே! உனக்கே பரம் என்றவாறு.
திணை - பாடாண்; துறை - கடவுள்வணக்கம். (குருகாமான்மியம்)
[மகரம் - முதலை. சரதன் - மெய்யானவன். பரம் - அடைக்கலம்.]

**ஆயா! பாலாகாரா! பாராராலாலா!**
**மாயா மாயா! மாமாதாகா! வானாளா!**
**காயா காயா! வாளா! வாளா நாகாளா!**
**தாயா நாதா! நா தா, கா கா, தாளாளா! (761)**

இஃது ஆகாரநெட்டுயிர் முற்றுமடக்கு.
(இ-ள்) ஆயா - கோபாலனே! பால் ஆகாரா - பாலைப் பருகுகின்றவனே! பார் ஆர் ஆல் லாலா - பூமியை உண்ட பிரளயத்தின் மேலான ஆல் இலையில் துயின்றவனே! மாயா மாயா - அழிவுஇல்லாத மாயோனே! மா மாது ஆகா - திருமகள் தங்கும் மார்பனே! வான் ஆளா - பரமபதத்தை ஆள்வானே! காயா காயா - காயாமலர் போலும் திருமேனியை உடையவனே! வாளா - வாளினை உடையவனே! வாளா நாகு ஆளா - வெளுப்பான சங்கினை உடையவனே! தாய் ஆம் நாதா - எமக்குத் தாயாம் நாதனே! கா தாளாளா - சர்வலோகத்தையும் காக்கும் முயற்சி உடையவனே! நா தா - நின்னைப் புகழும்படிக்கு நாவைத் தருவாயாக. கா - பிறரைப் புகழாவண்ணம் என்னைக் காப்பாயாக என்றவாறு. முன்னர்நின்ற நா தா கா என்பனவற்றைப் பாடம் மாற்றித் தாளாளா என்றதன் பின்னர்ச் சேர்க்க.
திணை - பாடாண்; துறை - கடவுள்வணக்கம். (குருகாமான்மியம்)
[ஆர்தல் - உண்ணுதல். ஆல் - ஆலிலை. லாலனம் - தங்குதல், துயிலுதல். காயா - ஒருவகை மலர். காயம் - உடம்பு. வாளா - ஒளியுடைய, வெளுப்பான. நாகு - சங்கு. தாளாளன் - முயற்சி உடையவன்.]

**கூக் குக்கிக் காக் காகா!**
**கூக் கக்கு கைக் கொக்கோ!**
**கூக் கொக்கா கைக்காகா!**
**கூக் காக்கைக் கேகா! கா.** (762)

இது ககரமெய்வருக்கம்.

[கூ குக்கிக்கு ஆக்கு ஆகா, கூ கக்குகைக்கு ஒ கோ, கூ கொக்கு ஆகைக்கு ஆகா, கூ காக்கைக்கு ஏகா கா என்று பிரித்துப் பொருள்செய்க.]

(இ-ள்) கூ - பூமியை, குக்கிக்கு - திருஉதரத்துக்கு, ஆக்கு ஆகா - இரை ஆக்கும் திருமேனியை உடையவனே! கூ - பூமியை, கக்குகைக்கு - மீளப் புறத்தே உமிழ்தற்கு, ஒ - ஒத்த, கோ - கோவே! கூ - பூமியினிடத்து, கொக்கு ஆகைக்கு - மேல் குதிரையாகைக்கு இருக்கும், ஆகா - திருமேனியை உடையவனே! கூ - பூமியை, காக்கைக்கே - காப்பதற்கு, ஏகா - பரமபதத்-தினின்றும் லீலாவிபூதியில் வந்தவனே! கா - என்னைக் காப்பாயாக. (கூ காக்கைக்கு ஏகா - உலகைக் காப்பதற்கு ஒருவனாக உள்ளவனே என்றும் பொருள்செய்யலாம்.)

இது குருகாமான்மியம். பா - வஞ்சித்துறை. துறை - கடவுள்வணக்கம்.

**தத்தோ தத்தத் திதாதத்தை துதிதிதா**
**தத்தோ தத்தத் தத்திதா திதித்தே - துத்தூத்**
**ததி தித்தித் தேதுத்துத் துத்துத் தத்தாதி**
**துதி தாதை தாதை துதித்து.** (762)

இது தகரமெய்வருக்கம்.

தத்து ஓதத்து அத்தி தா தத்தை துதி திதா!
தத்து ஓது அத்தத்து அத்தி தா திதித் தே! -
து தூ, ததி தித்தித்தே துத்துத் துத்து தத்து ஆதி!
துதி தாதை தாதை! துதித்து.

(இ-ள்) தத்து - கரைமீது பாயும், ஓதத்து - திரையை உடைய, அத்தி - திருப்-பாற்கடல், தா - பெற்றுத் தந்த, தத்தை - கிளிபோன்ற மொழியைஉடைய திருமகளால், துதி - துதிக்கப்பட்ட, திதா - ஸ்திதா - உண்மைப்பொருளே! தத்து - தனக்கு முதலையால் உண்டான ஆபத்தினிடத்து, ஓது - மூலமே என்று கூறும், அத்தத்து - துதிக்கையை உடைய, அத்தி - யானையை, தா - காத்து அதன் உயிரைத் தந்த, திதித்தே - ஸ்திதியாகிய காத்தற்கடவுளே! து - உண்ணும், தூ - தூய, ததி - தயிரை, தித்தித்தே - வாயால் இனிமையாகக்கொண்டு, துத்து - உணவாக, தத்து - கூத்தாடும், ஆதி - கண்ணனாகிய காரணனே! துதி - சர்வ-லோகமும் துதிக்கும், தாதை - பிதாமகனாகிய பிரமனுக்கு, தாதை - பிதாவே! துதித்து - உன்னைத் துதிக்கிறேன்.

இதில் இறந்தகாலம் நிகழ்காலம் ஆயிற்று (துதித்து), என்னைக் காப்பாயாக என்பது பயன். துறை - கடவுள்வணக்கம்.

[துற்று என்பது ஈரிடத்தும் 'துத்து' எனத் திரிந்தது. துற்று - உணவு, உண்டு என்னும் பொருளது.]

**மாலை மலைமுலைமேல் அம்மாலை மாலை**
**மாலை மலை மாலை மாலுமோ? - மூலமா**
**மெல்லை மாலா லாலிலைமேலா மாலில்ல**
**மல்லை மாலா மாமை மால்!** (764)

இஃது இரண்டுஎழுத்தான் வந்தது (ம, ல).

(இ-ள்) மாலை - முத்தமாலை அணியும். மலைமுலைமேல் - மலை போன்ற முலைகளின்மீது. அம்மாலை - உனது துளபமாலை வேட்டதனால். மாலை - (பசலையாகிய பொன்னுப் பூணும்) இயல்பினை உடைய. மாலை - பூமாலை போல்வாள். மலைமாலை - போரைச் செய்யும் மாலைக்காலத்தான். மாலுமோ - மயங்குவாளோ? மூலமாம் எல்லை - சகலதேவன்மார்க்கும் முதலாகிய கால-அளவை உடைய. மால் - பெரியவனே! ஆல் - பிரளயத்தின் மேலாய ஆலிலைமேல். ஆம் - கண் வளர்வதான. மால் - விருப்பத்தை உடையவனே! இல்லம் - நீ உகந்தருளியிருக்கும் திருப்பதி. மல்லை - திருக்கடல்மல்லையாம். மால்ஆம் - காளமேகம் போலும். மாமை - நிறத்தை உடைய. மால் - திருமாலே! மால்: அண்மைவிளி.

திணை - பெண்பாற்கைக்கிளை; துறை - கண்டு கைசோர்தல்.

[மாலை - முத்தமாலை, துளபமாலை, இயல்பு, பூமாலை போல்வாள், மாலைக்காலம் என்ற பொருள்களில் வந்துள்ளது. மால் - பெரியவன், விருப்பத்தை உடையவன், திருமால், மேகம் என்ற பொருள்களில் வந்துள்ளது. ஆல் - வெள்ளம், ஆலிலை என்ற பொருள்களில் வந்துள்ளது. மாலுதல் - மயங்குதல்.]

**சூல்அமலை மைம்மாமை மாலி சுமாலி சலச்**
**சீலம் மலை சூலி செலச் செல்லச் - சால மலை**
**சோலைமலை மாலைச் சொல்லச் சொல்; சொல்லால் நம்**
**மாலைமலை சீலம் ஆம்.** (765)

இது மூன்றுஎழுத்தான் வந்தது (ச, ம, ல).

சூல் அமலை மைம்மாமை மாலி சுமாலி - சூலினோடும் கூடி ஆரவாரிக்கும் காளமேகம் போலும் நிறத்தை உடைய மாலியும் சுமாலியும். சலச் சீல மலை சூலி - தீய வினைகளைச் செய்யும் சீலத்தை உடையளாய்ப் போர் புரி சூலத்தை உடைய தாடகையும். செல - போர்க்கு எதிர்செல்ல. செல்ல - அவர்கள் உயிர் கூட்டைவிட்டு நீங்க. சால மலை - மிகவும் பொருத. சோலைமலை மாலை - சோலைமலையிலுள்ள திருமாலானவனை. நெஞ்சமே! - சொல்லச் சொல் - 'சொல்லினால் தோத்திரம் செய்' என்று நாவிற்குச் சொல்லுவாயாக. சொல்லால் - அத்தோத்திரம் ஏதுவாக. நம்மாலை - நம்மிடத்து அறிவின்மையை. மலை - பொருது போக்கப்பட்ட. சீலமாம் - நல்ல ஞானம் நமக்கு உண்டாம் என்றவாறு.

சூல் - கருப்பம். அமலை - ஆரவாரம். மை - மேகம். மாமை - நிறம். சலம் - தீய வினை. சீலம் - புத்தி. சூலி - சூலத்தை உடைய தாடகை; காளி அனையாள் எனினும் ஆம். செல - எதிர்செல்ல. செல்ல - நீங்க. சொல்லச் சொல் - தோத்-திரம்செய்யச் சொல்லுவாயாக. மலைதல் - மாறுபடுதல். சீலம் - நல்லுணர்வு. ஆம் - உண்டாம். 'நெஞ்சே' என்பது தோன்றா எழுவாய். இது தன் உணர்வைப் பிறிதுஒன்றாக்கிக் கூறாதவற்றைக் கூறு என அகத்தில் கூறுவன போலக் கூறும் - மயக்கம். என்னை?

'ஆம்புடை தெரிந்து வேந்தற்கு அறிவு எனும் அமைச்சன் சொன்னான்' (சிந்தா. 233)

'ஓதிய பொறி அற்றாய் ஓர் அரும்பொறி புனைவி' என்றான் (சிந்தா. 232) என்பதனால் அறிக.

திணை - பாடாண்; துறை (ஓம்படை)

[அகத்தில் நெஞ்சினைப் பிரித்துத் தனிமைப்படுத்து அதனோடு உசாவுதற்கு விதி 'ஒருசிறை நெஞ்சமோடு உசாவுங் காலை, உரியதாகலும் உண்டென மொழிப' (தொ. பொ. 204) என்பது.]

**கோகிலம் மாலைக்கே கொலைமல்கக் கோலமுலைக்**
**காகுலமா மோகம்மிக லாகுமோ? - சோகம் மிகு**
**மேமாசல மா மிக லமைமாச் சொல்லுமிசை**
**மா மா மலி கச்சி மால்! (766)**

இது நாலெழுத்தான் வந்தது. (க, ச, ம, ல)
(இ-ள்) சோகம் மிகும் - (முதலையால்) துன்பம் மிகாநின்ற. ஏமாசலம் - பொன்மலை போல. மா - பெருத்ததாய். மிகல் அமை மா - போருக்கு அமைந்த யானை. சொல்லும் இசை - மூலமே என்னும் பொருளுரையையும். மா - திருமகளையும். மாமலி - மாமரம் மிகுந்த. கச்சிமால் - திருக்கச்சியையும் உடைய மாயோனே! கோகிலம் - குயில்களானவை. மாலைக்கே - மாலைக்-காலத்தில். கொலை மல்க - (கா மா கூ கூ என்று காமனை அழைத்துக்) கொலைத்தொழிலை மிகுப்ப. கோலமுலைக்கு - அழகிய முலைகளை உடையாளுக்கு. ஆகுல மா மோகம் மிகல் - வருத்தத்தைச் செய்யும் மிக்க காதல் மேலும் மேலும் மிகுதல். ஆகுமோ? - உன் கருணைக்கு முறையாகுமோ? என்றவாறு.
எனவே, 'இவளைத் தழுவுவதே நின் பேரருளாளனான திருநாமத்திற்கு முறை' என்பதாயிற்று. சோகம் - துன்பம். இசை - பொருளுரை; அஃதாவது மூலமந்திரம். மா - பெரியபிராட்டி. மா - மாமரம். மலிதல் - மிகுதல். மால் - அண்மைவிளி. கோகிலம் - சாதிஒருமை. ஆகுலம் - வருத்தம். மாமோகம் - மிக்க காதல். மிகல் - பெருத்தல். ஓகாரம் ஒழியிசை.
திணை - பெண்பாற்கைக்கிளை; துறை - கண்டு கைசோர்தல்.
[ஆகுமோ? - ஓகாரம் ஒழியிசை. ஆகாது என்ற பொருளது.] [18]

மடக்கு முற்றும்.

சித்திரகவி

**270. வல்லினம், மெல்லினம், இடையினப் பாட்டே,**
**நிரோட்டியம், ஒட்டியம், ஒட்டிய நிரோட்டியம்,**
**அக்கரச் சுதகம், அதன் வருத்தனையே,**
**வக்கிர உத்தி, வினாஉத்தரமே,**
**சக்கர பெந்தம், பதும பெந்தம்,**
**முரச பெந்தம், நாக பெந்தம்,**
**இரத பெந்தம், மாலை மாற்றே,**
**கரந்துறை செய்யுள், காதை கரப்பே,**
**பிரிந்துஎதிர் செய்யுள், பிறிதுபடு பாட்டே,**
**சருப்பதோ பத்திரம், கூட சதுர்த்தம்,**
**கோமூத்திரி, சுழிகுளம், திரிபங்கி,**
**எழுகூற்று இருக்கையோடு, இருபான்ஆறும்**
**பழிதீர் மடக்குஉடைச் சித்திரப்பாவே.** [19]

(எ-ன்) இன்னும் இம்மடக்குஅலங்காரங்களுள் படுவனவாம் சில மிறைக்கவிகள் உணர்த்துதல் நுதலிற்று. மிறைக்கவி எனினும் சித்திரப்பா எனினும் ஒக்கும்.
(இ-ள்) வல்லினப்பாட்டு முதலாக எழுகூற்றிருக்கை ஈறாகச் சொன்ன இருபத்-தாறும் முன்சொல்லிப் போந்த சொல்லொடும் எழுத்தொடும் கூடிய குற்றமற்ற சொல்லணியினுள் மடக்கின்பாற்படும் சித்திரகவியாம் என்றவாறு.
இதனுள் பாட்டு என்பதனை மூன்றுஇடத்தும் கூட்டுக. எண்ணும்மை தொக்கு எண்ஏகாரம் இடையிட்டு வந்தன. என்னை?

'எண்ஏகாரம் இடையிட்டுக் கொளினும்
எண்ணுக் குறித்து இயலும் என்மனார் புலவர்' (தொ. சொ. 290 ந.)

என்பதாகலின்.
'இருபான்ஆறும்' என்ற உம்மை எச்சஉம்மை ஆதலால், மாத்திரைச் சுருக்கமும், மாத்திரை வருத்தனையும், ஒற்றுப் பெயர்த்தலும், திரிபதாதியும், சதுரங்கபெந்-தமும், கடகபெந்தமும் என்னும் இத்தன்மையன எல்லாம் உரைத்துக்கொள்க.
[வல்லினப்பாட்டு, மெல்லினப்பாட்டு, இடையினப்பாட்டு எனப் பாட்டு என்பது மூன்று இடத்தும் கூட்டப்பட்டது.] [19]

1. வல்லினப்பாட்டு

**271. அவற்றுள்,**
**வல்லினம் முழுதுறல் வல்லினப்பாட்டே. [20]**

(எ-ன்) வைத்த முறையானே (270) வல்லினப்பாட்டு ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) வல்லின எழுத்து ஆறும் வந்து ஒழிந்த இனம் இரண்டும் வாராதே பாடுவது வல்லினப்பாட்டாம் என்றவாறு.

**பொற்றொடி கற்சட்டகத்தைப் போக்கிப் புறத்திறுத்த**
**கற்புறத்தற் காட்சிக் கதிகொடுத்த - சிற்றடிப்போ**
**துச்சிப் பதிக்கத்தா கூற்று அச்சுறுத்தாது**
**கச்சிப்பதிக் கத்தா! கை** (767)

இதனுள், வல்லினஎழுத்து ஆறும் வந்து, பிற இனஎழுத்துக்கள் வாராதது கண்டுகொள்க.
(இ-ள்) கச்சிப்பதிக்கு அத்தா - திருக்கச்சிப்பதிக்கு அத்தனே! கூற்று அச்சுறுத்-தாது - என்னை எமன் வந்து அச்சமுறுத்தாது. பொற்றொடி கற்சட்டகத்தைப் போக்கி - நீ பொன்னினால் செய்த தொடியினை உடையாள் கற்படிவத்தைப் போக்கி. தன் புறத்து இறுத்த கற்பு உற - அவளை விட்டுப் புறம் மாறின கற்பு மீட்டும் அவளிடத்தே எய்தவும். காட்சி (உற) - பண்டைச் சரீரத்தினது அழகு எய்தவும். கதிகொடுத்த - (கூட்டும்) சாபவிமோசனத்தைக் கொடுத்த. சிற்றடிப் போது - சிறிய திருவடிகளாகிய தாமரைப்போதுகளை. உச்சிப் பதிக்கத் தா - என் சென்னியில் சூடத் தருவாயாக. கை (தா) - அதனோடும் 'அஞ்சாதே' என்று அபயஅத்தமும் தருவாயாக.
அச்சமுறுத்தாது என்பது அச்சுறுத்தாது எனத் தொகுக்கும்வழித் தொகுத்தல் என்னும் விகாரத்தான் நின்றது; 'குணமாலையை அச்சுறுத்த' (சிந்தா. 14) என்பது போலக் கொள்க.
திணை - பாடாண். துறை - கடவுள்வணக்கம். [20]

2. மெல்லினப்பாட்டு

**272. மெல்லினம் முழுதுறல் மெல்லினப்பாட்டே. [21]**

(எ-ன்) மெல்லினப்பாட்டு ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) மெல்லினஎழுத்து ஆறுமே வரப் பாடுவது மெல்லினப்பாட்டாம் என்றவாறு.

**மனமே நினை ஞான மன்னாமை மீன**
**மனமேன மெங்ங னெனினங்ஙன் - முனமானா**
**னேமிமான் மாமானினி நீண்மனமான**
**நேமி மானன்னாம நீ (765)**

இது மெல்லினம் ஆறினாலும் வந்த மெல்லினப்பாட்டு.

மனமே! நினை; ஞானமன்; ஆமை மீனம்
அனம் ஏனம் எங்ஙன் எனின் அங்ஙன் - முனம் ஆனான்;
நேமிமான், மாமான் இனிநீள் மனம் ஆன
நேமி மான்; நல் நாமம் நீ.

(இ-ள்) மனனே! ஆமையும் மீனமும் அன்னமும் ஏனமும் எப்படி இருக்கும் என்னில் அப்படியே முன்னம் திருஅவதாரமானவன், பூமிதேவியாகிய மான் போலும் விழியை உடையாளுக்கும், திருமகளாகிய பெண்ணுக்கும் அவர்கள் மனம் எப்படி அப்படியான ஞானமன்னன், சக்கரத்தை உடையான், அவன் நல்ல நாமங்களை இடைவிடாமல் நீ நினைப்பாயாக என்றவாறு. எனவே, அந்நினைவே ஆன்மலாபத்தைத் தரும் என்பது கருத்து. துறை - கடவுள்-வணக்கம்.

[ஏனம் - பன்றி. ஆனான் - அவதரித்தான். நேமி மான் - வட்டமான பூமிதேவி. மா மான் - திருமகளாகிய பெண். மனம் ஆன - மனம் எப்படியோ அப்படி ஆன. நேமி மான் - சக்கரத்தை உடையான். இனி - இப்போது. மனனே! நல்நாமம் இனி நீ நினை.] [21]

3. இடையினப்பாட்டு

**273. இடையினம் முழுதுறல் இடையினப்பாட்டே. [22]**

(எ-ன்) இடையினப்பாட்டு ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) இடையினம் ஆறுமே வரத்தொடுப்பது இடையினப்பாட்டாம் என்றவாறு.

**வேயா லலையால் வில்வேளா லயலவரால்**
**யாயா லுயிர்வாழ்வார் யாவரே? - யோய்விலராய்**
**வாழ்வாருயிர் வழியே வாழ்வா ரருளாள**
**ராழ்வா ரருளிலரே யால். (769)**

இஃது இடையினம் ஆறுமே வந்த பாட்டு.

[வேயால், அலையால், வில்வேளால், அயலவரால்,
யாயால் உயிர்வாழ்வார் யாவரே? - ஓய்வுஇலராய்
வாழ்வார், உயிர்வழியே வாழ்வார், அருளாளர்,
ஆழ்வார், அருள்இலரே, ஆல்.]

(இ-ள்) ஒழிவு இல்லாத வாழ்வினை உடையார், உயிரின்கண்ணே நீங்காது வாழும் வாழ்வினை உடையார், கிருபையை ஆட்சியாக உடையார், அவர் யார் எனில், ஆழ்வார் என்னும் திருநாமத்தை உடையார். (எமக்குத் தாரும் மார்பும்

தரவேண்டும் என்னும்) கிருபையிலர்; ஆனபடியாலே தோழி! வேய்ங்குழல் முதலாகிய பகைகளால், புமான்களை எய்தாது தனி இருந்தவருள் உயிர் வாழ்வார் ஒருவரும் இல்லை என்றவாறு.
முன்னிலை எஞ்சிற்று. திணை - பெண்பாற்கூற்றுக் கைக்கிளை; துறை - மெலிவொடு கூறல்.
[தோழி என்ற மகடூமுன்னிலை வருவிக்கப்பட்டது. வேய்ங்குழல் முதலாகிய பகைகளாவன - வேய்ங்குழல், கடலலை, மன்மதன், அயலவர், பெற்ற தாய் என்ற பகைகளாம்.] [22]

### 4. நிரோட்டியம்

**274. இதழ்குவிந்து இயையாது இயல்வது நிரோட்டியம். [23]**

(எ-ன்) வைத்தமுறையானே (270) நிரோட்டியம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) அதரமும் அதரமும் குவியாதும் கூடாதும் நடப்பது நிரோட்டியமாம் என்றவாறு.
உம்மை இரண்டுஇடத்தும் தொக்கன. (குவிந்தும் இயையாதும்).

**நாதன் அரங்கநகர் நாராயணன் நறைசேர்**
**சீத நளினத்தினில் சிறந்த - காதல்**
**கனி நானிலக்கிழத்தி கட்கு இனிய காந்தித்**
**தனி நாயகன்தாள் சரண். (770)**

இதனுள் நறை சேர் சீத நளினத்தினில் சிறந்த காதற்கனி - திருமகள். நானிலக்கிழத்தி - பூமிதேவி. கட்கு இனிய காந்தி - கண்ணிற்கு விருப்பத்தைத் தரும் அழகு. துறை - கடவுள்வணக்கம்.
[அதரம் - உதடு. உதடு குவியத் தோன்றும் எழுத்துக்கள் உ ஊ ஒ ஓ ஔ என்ற உயிரும் அவற்றால் ஆகும் உயிர்மெய்யும். உதடு கூடத் தோன்றுவன - ப் ம் வ் என்ற மெய்யும் அவற்றோடு உயிர்கள் இணையத் தோன்றும் உயிர்மெய்களும். இவை வாராமல் பாடப்படும் பாடல் நிரோட்டியமாகும்.
அரங்கநகர்த் தலைவனாய், நாராயணனாய், தேன் பொருந்திய குளிர்ந்த தாமரைப்பூவில் தங்கும் மேம்பட்ட காதற்கனியாகிய திருமகட்கும் நான்கு கூறுபட்ட நிலவுலகத்தெய்வமாகிய பூமிதேவிக்கும் கண்ணிற்கு விருப்பத்தைத் தரும் அழகுடைய ஒப்பற்ற தலைவன் ஆகிய எம்பெருமானுடைய திருவடிகளே நமக்கு அடைக்கலமாகும்.] [23]

### 5. ஓட்டியம்

**275. இதழ்குவிந்து இயைந்து இயல்வதுவே ஓட்டியம். [24]**

(எ-ன்) வைத்த முறையானே (270) ஓட்டியம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) அதரமும் அதரமும் குவிந்தும் கூடியும் நடப்பதுவே ஓட்டியமாம் என்றவாறு.

**குருகு குருகு குருகொடு கூடு**
**குருகு குருகூருள் உறு கோ. (771)**

இஃது இதழ் குவிந்த ஓட்டியம்.
மனனே! குருகு குருகு - சங்கு சங்கொடும்; குருகொடு குருகு கூடு - குருகு என்னும் பறவை குருகுகளோடும் திரண்டு இயங்கும்; குருகூர் கோ - குருகாபுரியுட் கோவை; உறு - நினை.

மூன்றாம்உருபின்மேல் உம்மை தொக்கு விரிந்தன. (குருகொடு குருகும்) 'ஒடு' இடைநிலைத் தீபகம். (குருகொடு என்பதன்கண் உள்ள ஒடு முன்னும் கூட்டப்பட்டது.) கோவை என்னும் இரண்டாவது இறுதியில் தொக்கது. உறு - நினை. மனனே என்னும் எழுவாய் முன்னிலை எச்சமாயிற்று. (தோன்றா எழுவாய் வருவித்து உரைக்கப்பட்டது.)
பா - குறள்வெண்பா; துறை - கடவுள்வணக்கம்.
[உகர ஊகார ஒகர ஓகார உயிரும் உயிர்மெய்யுமாக அமைந்தமையால் இப்பாடல் இதழ்குவிந்த ஓட்டியம்.]

**பம்மும்பம் மும்பம்மு மம்மம்ம மைமாமை**
**பம்முமம்ம மும்மேமம் பாம். (772)**

பம்மும் பம்மும், பம்மும் அம்மம்மமை, மாமை
பம்மும் அம்மமும் ஏமம் பாம்.

மை - (வலவனே! உனது தேரைப் பின்னிட்டு விரைந்து) மேகம். பம்மும் - (இதன்முன் சென்று தேர் வரும் வழிமேல் விழிவைத்த இல்லக்கிழத்தி இருந்த நகரின்கண்) படியும். பம்மும் பம்மும் - அதனால் வானத்து மீன்கணங்களும் மறையும் (இருள் செய்யும் என்றபடி). அம்மம்ம - (அங்ஙனம் இருள்செய்யு-மிடத்து) ஐயோ! மாமை பம்மும் அம்மமும் - அழகு படிந்த முலைகளும். ஏமம் பாம் - பசலை தழைவனவாம்.
எனவே, என் சத்தியவசனம் என்னாவது என்பது பயனிலை. அடுக்கு அவ்வப்பொருள்நிலைக்கண் வந்தன. பா - குறட்பா. பகுதி - பொருள்வயின் பிரிதல்; துறை - வலவனொடு கூறல்.
[பம்முதல் - மேகமூட்டம் போடுதல், மறைதல், செறிதல். பம் - ஆகுபெயராய் விண்மீன்களை உணர்த்திற்று, அவை வானத்தில் செறிந்து காணப்படுதலின். பம் - விண்மீன் - இது வடசொல். அம்மம் - முலை. ஏமம் - தங்கம் - அந்நிறமுடைய பசலை. பாம் - பரவும். 'வலவனே! என் சொல் தவறாதபடி மேகங்கள் செல்வதன்முன் தேரை என்னூர் அடையச்செய்' என்பது பயன்.]

**குருகு மடுவூடு குழுமு குருகூருள்**
**ஒருபெருமா னோவாமை ஊறு - முருகொழுகு**
**பூமாது வாழும் புவிமாது மேவும்ஒரு**
**கோமான் உவா ஓதுகோ? (773)**

இஃது இருவகை ஓட்டியமும் வந்த ஓட்டியம்.
இதன்பொருள் உரையில் கொள்க. அவன் திருவடிகளே கதி என்பது பயனிலை. துறை - கடவுள்வணக்கம்.
[சங்குகள் மடுக்களில் ஒன்றுசேரும் திருக்குருகூர்த் திருப்பதியில் ஒப்பற்ற தலைவனாய் இடையறாது ஊறும் தேன் ஒழுகும் தாமரையில் வாழும் திருமகளும் நிலமடந்தையும் விரும்பிக் கூடியிருக்கும் ஒப்பற்ற மன்னனுடைய நிறைவான செய்திகளை யான் சொல்லுவேனோ?
உவா - நிறைவு. ஓதுகோ - சொல்லுவேனோ? பூமாது வாழும் கோமான், புவிமாது மேவும் கோமான் எனக்கொள்க.] [24]

6. ஓட்டிய நிரோட்டியம்

**276. இருமையும் ஒன்றினுள் இருவகைத்தாய் உறும்**
**பெருமிதம் ஓட்டிய நிரோட்டியம் எனப்பெறும். [25]**

(எ-ன்) இது அவ்வோட்டிய நிரோட்டியங்கட்கு ஒரு சிறப்புவிதி கூறுகின்றது.

(இ-ள்) ஒட்டியம் நிரோட்டியம் என்னும் இரண்டு தன்மையும் ஒரு செய்யுளகத்-தாய், இரண்டு கூறுபாட்டால் நடைபெறுதல் உறும் பெருமை உடையது ஒட்டிய நிரோட்டியம்எனப் பெயர்பெறும் என்றவாறு. இரண்டு கூறுபாட்டான் என்னு-மவை மேற்காட்டுதும்.

**மதி மடவார் வேலை வேய் மாரவேள் சோலை**
**பதி குயிலோடே வன்பகைகூர் - விதியும்**
**குறிதோ? நாகூரா! குறிதுளவக் கோதை**
**முறி கூய் அருள், ஏமுற. (774)**

இஃது ஒட்டியமும் நிரோட்டியமும் முறை தடுமாறாது முறையே வந்த ஒட்டிய நிரோட்டியம்.

இதனுள், குறிதோ - ஒரொன்று சிறிய துன்பத்தைச் செய்வதோ என்க. ஓகாரம் எதிர்மறை. முறி - தளிர். ஒழிந்த பொருள் உரையிற்கொள்க.

திணை - பெண்பால் கூற்றுக்கைக்கிளை; துறை - துயர் அறிவுறுத்தல்.

[சந்திரன், அலர் கூறும் பெண்கள், கடல், புல்லாங்குழல், மன்மதன், சோலையில் தங்கியிருக்கும் குயில் இவற்றோடு எனக்குப் பகையாக அமைந்த தீவினையும் ஆகிய இவை ஒவ்வொன்றும் குறைவான துன்பத்தைச் செய்கின்றதோ? திருநாகையில் இருக்கும் எம்பிரானே! என்னை அழைத்து நான் மகிழ்வு அடையும்படி நான் குறிப்பிட்ட உன் திருத்துழாய்மாலையிலுள்ள தளிர்களை எனக்கு அருளுவாயாக.

மதி ... மாரவேள் என்பது வரை ஒட்டியம்; எஞ்சிய பகுதி நிரோட்டியம். இரண்டா-மடியுள் 'வன்' இல்லையேல் சிறக்கும்.]

**வதுவை ஒருபோதும் வழுவாது வாழும்**
**புதுவைவரு மாதுஉருவம் பூணும் - முதுமைபெறு**
**நாதன் அரங்கனையே நன்றறிந்தார்க்கே அடியேன்**
**தாதன்என நெஞ்சே தரி. (775)**

[நெஞ்சே! தன்நினைவுக்கு மாறாகத் தன்திருமணம் நிகழாது, தான் நினைத்தபடியே நல்வாழ்வு வாழும் திருவில்லிபுத்தூரில் அவதரித்த ஆண்டாளுடைய வடிவினைத் தன்னிடத்து ஏற்றுக்கொண்ட சர்வக்ஞனான தலைவனாகிய அரங்கனையே தம் தெய்வம்என நன்கு அறிந்த அவனடியவருக்கே அடியேன் அடிமையாவேன் என்ற செய்தியை உட்கொள்வாயாக.]

இது முன்னடி இரண்டும் ஒட்டியமும் பின் இரண்டும் நிரோட்டியமுமாக வந்த ஒட்டிய நிரோட்டியம். இவ்விரண்டு உதாரணமும் இங்ஙனம் இரண்டு கூறுபாட்-டான் வந்த ஒட்டிய நிரோட்டியம். இதன்பொருள் உரையிற்கொள்க.

திணை - பாடாண்; துறை - சமயவணக்கம்.

உறும் என்ற விதப்பினானே, நிரோட்டிய ஒட்டியமும் உள. அவை வருமாறு:

**கற்றைச் சடையார் கயிலைக் கிரிகளைந்தான்**
**செற்றைக் கரங்கள் சிரங்கள்நிறைந் - தற்றழிய**
**ஏ ஏவும் எவ்வுள்உறும் ஏமம்உறு பூமாது**
**கோவே முழுதும்உறு கோ. (776)**

இது முதல் ஈரடியும் தனிச்சொல்லும் நிரோட்டியமும் பின் இரண்டுஅடியும் ஒட்டியமுமாக வந்த நிரோட்டிய ஒட்டியம்.

இவற்றின் வேறுபாடுகள் எல்லாம் வந்தவழிக் கண்டுகொள்க.

திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து.

[தொகுதியாக அமைந்த சடைமுடியை உடைய சிவபெருமானுடைய கயிலை-மலையைப் பெயர்த்த இராவணனுடைய கூட்டமான கைகளும் தலைகளும் ஒருசேர

அழிந்து ஒழியுமாறு அம்பினைச் செலுத்தும், எவ்வுளில் உகந்தருளியிருக்கும் பாதுகாவலைச் செய்யும் திருமகள்தலைவனே எல்லாச் சிறப்புக்களையும் உயர்வறப் பெற்ற பரம்பொருள் ஆவான்.] [25]

7. அக்கரச்சுதகம்

**277. ஒருபொருள் பயந்த ஒரு தொடர்மொழியாய்**
**வருவதை ஓர் எழுத்தாய்க் குறை வகுப்பின்**
**சுருங்குபு பலபொருள் தோற்றுவதாய**
**அருங்கவி அக்கரச் சுதகம் ஆகும்.** [26]

(எ-ன்) வைத்த முறையானே (270) அக்கரச்சுதகம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஒருபொருளைத் தருவது ஒரு தொடர்மொழியாய்த் தொன்றுதொட்டு வருவதைப் புலவன் ஓரோர் எழுத்தாகக் குறைத்துக் கூறும் கூறுபாட்டால் தொடர்ச்சொல் ஈரெழுத்துப் பதமும் ஓரெழுத்துப பதமுமாகச் சுருக்கம் எய்திப் பலபொருள் தோன்றுவதாய அரிய கவி அக்கரச்சுதகம் என்றவாறு. சுதகம் - அழிவு.

[அக்கரச்சுதகம் - எழுத்து அழிதல். அஃதாவது ஓரோர் எழுத்தாகக் குறைத்தல். தொடர்மொழி - மூன்றுக்குக் குறையாத எழுத்துக்களால் ஆகிய சொல்.] [26]

**ஒளிகொண்ட புத்தூர் உறைகோதை தீந்தேன்**
**துளிகொண்ட பூந்துளபத் தோன்றலாற்கு ஈந்தது**
**அளிகொண்டு அதை அணிந்தது அன்று அதனைப் பற்றல்**
**களிவண்டு இமிர்தேம் கமழ் வாசிகை, சிகை, கை.** (777)

இஃது அக்கரச்சுதகம்.

(இ-ள்) கீர்த்தியைக் கைக்கொண்ட வில்லிபுத்தூர் உறையும் கோதையாகிய சூடிக்கொடுத்தாள் இனிய தேன் துளிக்கும் செய்கையைக் கைக்கொண்ட பூவோடு கூடிய துளவமாலிகையை உடைய பெரியோனுக்கு அளித்ததுவும், விருப்பம் கொண்டு அதனைச் சூடியதும், சூடின அன்று அதனைப் பற்றியதும், கூறுங்காலத்துத் தேனை உண்டு களித்தலை உடைய வண்டுகள் ஆரவாரிக்கும் வாசிகை, சிகை, கையாம் என்றவாறு.

வாசிகை - மாலை. சிகை - திருக்குழற்கற்றை. கை - திருக்கை.

இதனுள் அவ்வாறு நின்ற கூறுபாடு கண்டுகொள்க.

திணை - பாடாண்; துறை - வள்ளிவாழ்த்து.

[பெண்தெய்வமாகிய ஆண்டாளைப் பாடியதனால் இப்பாடல் பெண்தெய்வ வழிபாடாகும் வள்ளிவாழ்த்து ஆயிற்று.] [26]

8. அக்கரவருத்தனை

**278. ஒருதொடர்மொழி ஈற்று ஓர்எழுத்தினைப் பிரித்து**
**ஒருபொருள் தரவைத்து ஒரொன்றாக**
**மிக்கபல் பொருள்தர மேல் வைப்பனவே**
**அக்கர வருத்தனை ஆகும் என்ப.** [27]

(எ-ன்) வைத்த முறையானே (270) அக்கரவருத்தனை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஒருபொருள் தருவது ஒரு தொடர்மொழி ஈற்றின் ஓர் எழுத்தினைப் பிரித்துப் பிறிதுஒருபொருள் தரவைத்து அதன்மேலே ஒவ்வோர் எழுத்தாகப் பலபொருள் தோன்ற வைப்பது அக்கரவருத்தனை என்று கூறுவர் பெரியோர் என்றவாறு.

**எந்தை திருத்தாள் எழுகங்கை ஈறும்அர-**
**விந்தமலராட்கு இசைந்த வீறினுக்கு - முந்துஎழுத்தும்**
**சித்தசனன் வாள்முதலும் சேயிழையாய்! சேர்த்தக்கால்**
**அத்தம் எழில் ஓலைப்பூ ஆம். (778)**

இஃது அக்கரவருத்தனை. அப்படி இதனுள் சேர்க்கும்படி எப்படி என்னின், எம்முடைய சுவாமியாகிய ஸ்ரீமந்நாராயணன் திருவடிகளில் எழுந்த கங்கை என்ற தொடர்மொழி ஈற்றில் நின்ற ககரஐகாரத்தைப் பிரித்துக் 'கை' எனக் கொண்டு, அரவிந்தமலராளுக்கு இசைந்த வீறு என்பதனைத் தகை என்ற சொல்லாய்க் கொண்டு, அதற்கு முதல்எழுத்தாகிய தகரத்தைப் பிரித்துச் சேர்த்துத் 'தகை' என்றாக்கி, சித்தசனன் - காமன்; அவனுடைய வாளாகிய கேதகை என்றதில் ககரஏகாரத்தைப் பிரித்துச் சேர்த்துக் 'கேதகை' என்றாக்கி அத்தம், எழில், ஓலைப்பூ என்று முடிக்க.

வீறு - அழகு. அதனைத் 'தகை' எனக் கூட்டினமையும் காண்க.

[வீறு - வேறு ஒன்றற்கு இல்லாத அழகு. (சிந். 489 நச்.) அத்தம் - கை. எழில் - தகை. ஓலைப்பூ - கேதகை (தாழை)] [27]

9. வக்கிரஉத்தி

**279. வெளிப்படை விளியினும் வினாவினும் மெய்ம்மை**
**ஒளித்து மற்றொன்றினை உரைப்புழி மறித்து**
**நிரைத்த பன்மொழிதொறும் இசைதிரி நிலைத்தாய்**
**உரைப்பது தானே வக்கிரஉத்தி. [28]**

(எ-ன்) வைத்த முறையானே (270) வக்கிரவுத்தி ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) வெளிப்படையாக விளிக்குமிடத்தும் வினாவுமிடத்தும் முன்நின்ற பொருண்மையை மறைத்துப் பிறிதுஒன்றாக எதிர்மொழி கொடுத்தஇடத்து மீட்டும் தெரிவிப்பனவாய் நிரைத்த தொடர்மொழிதோறும் அம்முன் நின்றவர் இரட்டுற இசைதிரி நிலைத்தாய் உரைப்பது வக்கிரஉத்தியாம் என்றவாறு.

'வெளிப்படை' ஈரிடத்தும் கூட்டுக (விளித்தல், வினாதல்). இரட்டுற - சிலேடையாக. 'முன்னிலையோர்' என்பது எச்சமாக விரித்து உரைக்கப்பட்டது.

**ஏற்றமுறும் ஓதிமத்தா என்றேன், விண்ணோர்க்கு**
**இன்அமுது அன்று அளித்தவன் பேர் என்றான்; வெற்பின்**
**தோற்றம்உறும் எகினவாகனத்தா என்றேன்,**
**தொன்மறையோன் பெயர் என்றான்; சுரந்து விண்ணோர்**
**போற்றவரு மன்னவாகனத்தா என்றேன்,**
**புரந்தரனார் பெயர் என்றான்; பொன்னே! என்னே!**
**மாற்றம்உறப் பகர்ந்த மகிழ்மாறற்கு என்தன்**
**மையல்உரைத்து எவ்வாறு மருவுவேனே? (779)**

இது வக்கிரஉத்தி.

(இ-ள்) "பொன்னை ஒப்பாய்! நமது வீதியில் உலாப்போந்த மகிழ்மாறனைத் தொழுத நான், ஒருதலை பற்றிய காதலாலே, 'ஏறுதற்கு உண்டான ஓதிமத்தை உடையவனே!' என்றேன்; அப்பொழுது 'மலையை மத்தாக உடையவன் எனும் பெயர் என்பெயர் அன்று; திருப்பாற்கடலைக் கடைந்து இனிய அமிர்தத்தைத் தேவர்கள் உண்ணும்படிக்குக் கொடுத்த திருமால்பெயர்' என்றான். மீட்டும், 'வெள்ளிமலை போன்று பிரகாசிக்கும் எகினவாகனத்தா!' என்றேன்; அப்பொழுது அதற்கும் 'இமவானிடத்துப் பிறந்த அன்னம் போலும் நடையை-உடைய உமையை வாமபாகத்தில் உடைய சிவனுடைய அத்தன் என்னும் பெயர் பழைய மறையை உடைய பிதாமகன் பெயர்' என்றான். மீட்டும் 'சுரந்து விண்ணோர் போற்ற வரு மன்னவாகனத்தா!' என்றேன்; அதற்குத் 'திரண்டு தேவர்கள் போற்றும் மன்னவனே! மேகத்தை உடையவனே! என்னும் இருபெயரும் புரந்தரனது பெயர்' என்றான். ஆகையால், என்னே! யான் கொண்ட மையலை அவனொடு பொன்னே! கூறி அவன் திருமார்பைத் தழுவுவது எவ்வாறு?" என்றவாறு.

பொன்னே என்றது தோழியை.

திணை - பெண்பால்கூற்றுப் பெருந்திணை; துறை - மெலிவொடு கூறல்.

[வக்கிர உத்தி - நேரிது அல்லாத சொல். அஃதாவது முன்னர்க் கூறுவார் கூற்றுக்கு அக்கூற்றினைக் கேட்போர் அம்முன்னவர் கருதிய பொருளை விடுத்துப் பிறிதொரு பொருளை வலிந்து மனம்கொண்டு கூறுதல். ஓதிமத்தா, எகினவாகனத்தா, போற்றவரு மன்னவாகனத்தா என்பன அன்னப்பறவையை ஊர்தியாக உடையவனே என்று பொருள்படுவன. ஓதிமம், எகினம் என்பன அன்னத்தின் வேறு பெயர்கள். ஓதிமத்தா - என்பதனை ஓதி மத்தா - மலையை மத்தாகக் கொண்டு கடைந்த திருமாலே! எகினவாகனத்தா - எகின ஆகன் அத்தா - அன்னம் போன்ற நடையாளைப் பாகமாக உடைய சிவபெருமான் தந்தையாகிய பிரமனே! போற்றவருமன்னவாகனத்தா - போற்றவரு மன்னவா! கனத்தா! - அரசே! மேகவாகனத்தான் ஆகிய இந்திரனே! என அத்தொடர்களை வெவ்வேறு பொருளனவாகக் கொண்டு அவற்றிற்கு ஏற்ப விடைகூறியது வக்கிரஉத்தியாகும்.]

**அஞ்சக்கரனோ என்றேன், சங்கரனாம் என்றான்; தனிஆழி**
**மிஞ்சத் தரித்த திருத்தேர் வெய்யவனோ என்றேன், வெயில் என்றான்;**
**செஞ்சொல் பரிதி வலம்பயில் விண்டோ என்றேன், பொற்சிலம்பு என்றான்;**
**வஞ்சர்க்கு இரங்கா அரங்கனுக்கு என்மால் எப்படியே மொழிவேனே?** (780)

இதுவுமது.

(இ-ள்) "'அழகிய சக்கரத்தை உடையவனோ?' என்றேன்; அப்பொழுது 'அஞ்சு அக்கரங்களை உடையவன் உருத்திரனாம்' என்றான். 'ஒப்பற்ற திருஆழியை வலக்கையில் தரித்தவனுமாய்த் திருமகளைச் சிந்திக்கிறவனுமாய்த் திருமகளால் சிந்திக்கப்பட்ட விருப்பத்தை உடையானோ?' என்றேன்; அப்பொழுதும் 'அஃது ஒற்றைச் சக்கரமுடைய அழகிய தேரை உடைய சூடான கதிர்களை உடைய வெயிலோன்' என்றான். மீளவும் 'செம்மையோடு கூடிய கீர்த்தியை உடைய பரிதியை வலக்கையில் தரித்த விண்டுவோ?' என்றேன். அதற்கும் 'அது கதிரவன் வலமாகச் சுற்றிவருகின்ற பொற்சிலம்பாகிய மேருமலை' என்றான். ஆகையால் வஞ்சத்தை உடையோரிடத்துக் கருணை செய்யாத் திருஅரங்-கனுக்கு யான் கொண்ட காதலை எப்படிக் கூறுவேன்?" என்றவாறு.

[அஞ்சக்கரத்தான்: அம்+சக்கரத்தான் - திருமால், அஞ்சு+அக்கரத்தான் - சிவன். தனி ஆழித் திருத்தேர் வெய்யோன்: தனி ஆழி - ஒப்பற்ற சக்கரம்; திருத்தேர் வெய்யோன் -

திருமகளால் சிந்திக்கப்பட்ட விருப்பத்தை உடையோன். ஒரே சக்கரமுடைய அழகிய தேரினை உடைய சூரியன். பரிதி வலம் பயில் விண்டு - சக்கரத்தை வலக்கையில் கொண்ட திருமால், சூரியன் வலமாகச் சுற்றிவரும் மலையாகிய மேரு.] [28]

10. வினாஉத்தரம்

**280. துதித்திடும் ஒருபொருள் தொடர்சொலைப் பிரித்து**
**மதிப்பட வினாய வகைக்கு எதிர்மொழியாய்**
**விதிப்பட உரைப்பது வினாஉத்தரமே. [29]**

(எ-ன்) வைத்த முறையானே (270) வினாஉத்தரம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று. (இ-ள்) உலகம் புகழ்வதாம் ஒருபொருளைக் காட்டும் ஒருதொடர்மொழியினைப் பிரித்துப் பிரித்த பதம்தோறும் மனத்துட்கொள ஒருவர் வெளிப்படையாக வினாய பலவேறு வகைத்தாம் கூறுபாட்டிற்கு முன்நின்றவன் மாற்றம் இல்லாத முறையொடும் எதிர்மொழியாக உரைப்பது வினாஉத்தரமாம் என்றவாறு.

**வண்துளபத்தான் துயிலும் வாழ்வு ஏது? தெள்அமுதம்**
**பண்டு கடைநாள் தறியாய்ப் பற்றியது என்? - முண்டமுனி**
**போசனமாய்க் கொண்டது எவன்? போதிலானுக்கு வந்த**
**ஆசனம்அது என்? அரவிந்தம். (781)**

இது வினாஉத்தரம்.

இதனுள், போதிலான் - பிரமன்; அவன் ஆசனம் என் - அரவிந்தம்; என உலகம் துதிப்பனவாய ஒருபொருள் தருமொழியை அரவு+இந்து+அம் எனப் பிரித்து, துளபத்தான் துயிலும் வாழ்வு 'அரவு', அமுதம் பண்டு கடைநாள் தறியாய்ப் பற்றினது 'இந்து', முண்டமுனி போசனமாய்க் கொண்டது 'அம்' என முறையே நிறுத்தி, போதிலானுக்கு உவந்த ஆசனம் என்? 'அரவிந்தம்' எனச் செவ்வனம் விரியாது அருமை தோன்ற விரித்துக்காட்டியது காண்க. திணை - வாகை; துறை - புலமைவென்றி.

[திருத்துழாயை அணிந்த திருமால் துயிலும் படுக்கை யாது? (அரவு) தெளிந்த அமுதத்தை அக்காலத்தில் கடைந்தபொழுது மத்தினைப் பிணைக்கும் தறியாய் நின்றது யாது? (இந்து - சந்திரன்) திருநீற்றை அணிந்த அகத்திய முனிவர் உணவாகக் கொண்டது யாது? (கடல்நீர் - அம்) பிரமனுக்கு இருப்பிடமாவது யாது - அரவிந்தம்.] [29]

11. சக்கரபெந்தம்

**281. சக்கரத்துள் தடுமாறுதல்தானே**
**சக்கரபெந்தம் எனச் சாற்றினரே. [30]**

(எ-ன்) வைத்தமுறையானே (270) சக்கரபெந்தம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று. (இ-ள்) சக்கரத்துள் அக்கரம் தடுமாறப் பெந்திப்பதுதானே சக்கரபெந்தமெனச் சாற்றினர் பெரியோர் என்றவாறு. பெந்தம் - சம்பந்தம். [30]

சக்கரபெந்த வகை

**282. அதுவே**
**நால் இருமூன்று இருநால்என நாட்டும்**
**சால்பினில் ஆர்புனை தன்மையது ஆகும். [31]**

(எ-ன்) இது சக்கரத்தினது கூறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) அக்கூறப்பட்ட சக்கரம் நால் ஆர், ஆறு ஆர், எட்டு ஆர் எனப் புனையப்பட்ட தன்மைகளை உடையதாம் என்றவாறு.
சக்கரம் என்பது தேரினது உருள்; ஆர் என்பது அதனகத்துச் செறிக்கப்பட்ட கதிர். புனைதல் - செய்து அமைத்தல்.

**வான மாதிய வானவா**
**வான வாமனு வானவா**
**வான வாமன மானவா**
**வான மானிற மானவா! (782)**

இது நால்ஆரச் சக்கரம்.
இதனுள் நடுவு வா என்னும் எழுத்து நின்று எட்டாகியும், நால் ஆர் மேலும் நாலு னகாரம் நின்று எட்டாகியும், சூட்டின்மேல் நின்ற எழுத்துப் பன்னிரண்டனுள் நாலு திக்கிலும் நின்ற மகரஆகாரம் இரண்டும் வகரஆகாரம் இரண்டும் ஆக நாலும் எட்டாகியும் தடுமாறி ஆக 17உம் 32 எழுத்தாகி, சிந்தடி நான்கான் வந்த வஞ்சிவிருத்தம் அமைந்தவாறு காண்க.
[நடுவு வா மிகுதியாக 7 முறை, ன 4 முறை, மா 2 முறை, வா 2 முறை ஆக 15 முறை பயன்படவே 32 - 17 ஆயின. சிந்தடி - முச்சீரடி.]
(இ-ள்) வானம் ஆதிய ஆனவா - வான் ஆதியாய பஞ்சபூதம் ஆனவனே! வான் அவாம் மனு ஆனவா - தேவர்கள் விரும்பும் மனுகுலம் ஆனவனே! வான வாமனம் ஆனவா - பெருமையையுடைய வாமனரூபம் ஆனவனே! வான மால் நிறம் ஆனவா - விசும்பினிடத்து மேகம் போலும் நிறம் ஆக்கம் செய்தவா! என்றவாறு.
எனவே என்னைக் காப்பாயாக என்பது கருத்து.
திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து.

**தேவா மோகூரா திதமகிபா மாமோக**
**பூவாளி ஓஓ பொருதலைக்க - வோவாது**
**துங்கமுர சாயதே துன்பமெனும் பூமகட்கு**
**வெங்கன லாவானேன் விது? (783)**

இதுவும் நாலாரச்சக்கரம்.
இதனுள், நடுவு தகரம் நின்று, அதனைச் சூழ்ந்த குறட்டின்மேல் 'திருமலை' என்னும் பெயர்நின்று ஆர் நாலினும் நாலுநாலாகப் பதினாறு எழுத்து நின்று, சூட்டின்மேல் இருபத்தெட்டுஎழுத்து நின்று ஆக எழுத்து 49ம் 55ஆக மாறாடின. அவை மாறாடின வகை: நடுவு தகரம் இரண்டாகவும், சூட்டின் மையங்களில் முதல் மையத்தில் து மூன்றாகவும், ஒழிந்த மையத்தில் தே பூ க மூன்றும் ஆறாகவும் மாறாடியவாறு காண்க.
[மிகுதியாகத் த - 1, து - 2, தே - 1, பூ - 1, க - 1 ஆக 6 முறை எனவே 55- 49 ஆயின.]
(இ-ள்) தேவா - சகல தேவன்மார்களுக்கும் தேவனே! மோகூரா - திருமோகூ-ரானே! திதமகிபா - உண்மைப்பொருளான மகிபனே! மாமோக - பெரிய பிராட்டியை மோகிக்கிறவனே! பெரியபிராட்டியால் மோகிக்கப்பட்டவனே! எனினும் ஆம். என்னை? 'தடுமாறு தொழிற்பெயர்க்கு இரண்டும் மூன்றும், கடிவரை இலவே பொருள்வயி னான' (தொ. சொ. 96) என்பதனால் அறிக. பூவாளி ஓஓ பொருது அலைக்க - காமன் மிகவும் பாணங்களால் பொருது அறிவினது நிலையைக் குலைக்க அதனோடும். ஓவாது - ஒழிவு இன்றியே.

துங்கமுரசு ஆயதே துன்பம் எனும் பூமகட்கு - காமனது வெற்றிமுரசான கடலே துன்பமது என்னும் பூமடந்தை போல்வாளுக்கு, அவற்றினோடும். வெம்கனல் ஆவான் ஏன் விது - குளிர்ந்த சந்திரனும் வெம்மையைச் செய்யும் தழல் ஆவான் ஏன்? பூவாளி - பூவைப் பாணமாக உடைய காமன்.

இதனைப் பெந்திக்குமாறு: இடப்பக்கத்துச் சூட்டின் மையத்துத் தேவா என்று எடுத்து, மோக என்று முடித்து, வலமாக அதற்கு அடுத்த சூட்டின் மையத்துப் பூவாளி என்று எடுத்து ஓவாது என்று முடித்து, இறுதி நின்ற து என்பது முதலாகச் சூட்டின் வலம் ஏறி விது என முடிக்க.

இதனுள் ஓஒ என்னும் ஓகாரஅளபெடை சிறப்பின் வந்தது. என்னை?

'தெளிவின் ஏயும் சிறப்பின் ஓவும்
அளபின் எழுந்த இசைய என்ப'

என்பதனான் அறிக. (தொ. சொ. 263 நச்.)

'இசைகெடின் மொழிமுதல் இடைகடை நிலைநெடில்
அளபெழும்; அவற்றவற்று இனக்குறில் குறியே' (நன். 91)

என்பதனால் இரண்டுமாத்திரையான ஓகாரம் செய்யுட்கண் ஓசை சிதைந்த இடத்து மூன்றுமாத்திரையாய் நீண்ட குறிக்குத் தன்இனமாகிய குற்றெழுத்தினோடு நின்றதல்லது இரண்டெழுத்து அன்று என்பது அறிக.

திணை - பெண்பாற்கூற்றுக் கைக்கிளை; துறை - கண்டு கைசோர்தல்.

[நன்னூலை ஒட்டி அளபெடைக்கு இவர் கூறிய விளக்கம் தொல்காப்பிய நெறியோடு முரண்பட்டது.]

ஆறாரச்சக்கரம்

**மாதவனே தென்அரங்கேச மாால்மருளாக மிகு**
**போதனுமன்பிற் றொழுகேசவ புரைகூர் பவமே**
**வாதித மாகுதற் கிங்கேயெனாருயிர்கா பொதுவே**
**வேத! நமாநம போத நைவார்க்குள்ள மேதகவே. (784)**

[மாதவனே! தென்அரங்கேச! மால்மருள் ஆக! மிகு
போதனும் அன்பின்தொழு கேசவ! புரை கூர் பவம்
மேவாது இதம் ஆகுதற்கு இங்கே என் ஆருயிர் கா, பொதுவே!
வேத! நமாநம போத நைவார்க்கு உள்ளம் மேதகவே.

மாதவனே ... கேசவ! பொதுவே! போத நைவார்க்கு உள்ள மேதகவே! வேத! நமாநம; புரை கூர் பவம் மேவாது இதம் ஆகுதற்கு இங்கே என் ஆருயிர் கா - என மாட்டுறுப்பாகப் பொருள்செய்க.]

இஃது ஆறாரச்சக்கரம்.

இதனுள், நடுவு கே என்னும் எழுத்து நின்று அதனைச் சூழ்ந்த குறட்டில் ஆறு அக்கரம் நின்று சூட்டில் 18 எழுத்து நின்று குறட்டுக்கும் சூட்டுக்கும் நடு ஆராறில் ஆர்தோறும் ஏழ்எழுத்து நின்று ஏழெழுத்தின் நடு எழுத்து ஆறும் 'தென்குருகூர்' என்னும் பேராக நின்று ஆக அறை 67-ல் எழுத்து 67-ம் ஒற்று உட்பட 9 எழுத்து மாறாடின முறையாலே 76 ஆக நேரசைக்கலித்துறை நின்றவாறு காண்க.

நடுவில் கே மூன்றாகவும், முதல் சூட்டினது மையத்து வே மூன்றாகவும், ஒழிந்த சூட்டின் மையத்து நின்ற மா கு பொ பே வா ஐந்தும் ஒன்று இவ்விரண்டாகவும் நின்றன.

இதனைப் பெந்திக்குமாறு: இடப்பாகத்து இரண்டாம் சூட்டின் மையத்து 'மாதவனே' என்று எடுத்து நேரே 'மிகு' என முடித்து. அதற்கு அடுத்த மூன்றாம் சூட்டின் மையத்துப் போதன் என எடுத்து 'மே' என நேரே முடித்து. நாலாம் சூட்டின் மையத்து 'வாதிதமாகுதற்கு' என எடுத்து, 'பொதுவே' என முடித்து, முடித்த 'வே' நாலாம்அடிக்கு முதல்எழுத்தாகப் பின்னும் 'மேதகவே' என அதனின் முடிக்க.

(இ-ள்) திருமகள்காந்தனே! அழகிய அரங்கேசனே! மேகம் போன்ற திரு-மேனியனே! பெரிய பிரமனும் அவன் முதலாம் கடவுளரும் அன்பினோடும் தொழும் கேசவனே! சகல ஆன்மாக்களுக்கும் பொது நின்றவனே! என்று உன்னை நினைந்து மிகவும் குழைவார்க்கு இதயத்தாமரை அகத்தோனே! வேதமுதல்வனே! நின்னைக் குறித்து நமாநம என்னாநின்றேன்; அதற்குத் தகுவதாக என்ஆருயிர் இன்னும் பொல்லாங்கை விளைக்கும் செனனத்தை இவ்வுலகத்து எய்தாது இன்பம்எய்துதற்கு என்னைக் காப்பாயாக என்றவாறு.

போதனும் என்னும் உம்மை எச்சவும்மை. இதனுள் இரண்டாமடி ஈறு தொடங்கி, ஒழிந்தன மாட்டுறுப்பாக நிகழ்ந்தன.

திணை - பாடாண்; துறை - கடவுள்வணக்கம்.

[மாதவனே - திருமகள்காந்தனே. போதனும் என்ற உம்மையால் ஒழிந்த கடவுளரும் என்பது வருவிக்கப்பட்டது. 'பொதுவே என்று உன்னை நினைந்து போதனைவார்க்கு' என, 'என்று உன்னை நினைந்து' என்பது வருவிக்கப்பட்டது. 'அதற்குத் தகுவதாக' என்பதும் வருவிக்கப்பட்ட சொற்றொடரே.]

எட்டாரச்சக்கரம்

**தண்மதி நிகர்வ தயங்கிய வதனம்**
**பொன்னணி முலை நிடதப்புரை வரைநிகர்**
**மடிசேர்தரு தாமத பத்தர்க் கெட்டா**
**மாறன் துடரிமலை தன்மின் போன்றொளிர்**
**தண்ணென் பொற்சுனை மன்னிய மாமல**
**ரம்மடவார் மையுண்டாட் டமர் கண்ணே.** (785)

இஃது எட்டாரச்சக்கரம்.

[தண்மதி நிகர்வ தயங்கிய வதனம்;
பொன்அணிமுலை நிடதப் புரைவரை நிகர்,
மடிசேர்தரு தாமதப் பத்தர்க்கு எட்டா
மாறன் துடரிமலைதன் மின்போன்று ஒளிர்
தண்என் பொற்சுனை மன்னிய மாமலர்
அம்மடவார் மைஉண்டு ஆட்டு அமர் கண்ணே!]

இதனுள், நிடதப் புரைவரை நிகர் - நிடதமாகிய உயர்ந்த மலையை ஒத்த. மலைதன் - மலைதனில். மின் போன்று ஒளிர் - மின்னைப் போன்று ஒளிரா-நின்ற. தண்ணென் பொற்சுனை - குளிர்ந்த பொன்னோடு கூடிய சுனை. மன்னிய மாமலர் - நிலைபெற்ற நீலோற்பலம் போல்வ. அம்மடவார் மையுண்டாட்டு அமர்கண் - அழகிய மடவார் மை எழுதப்பட்டுக் களிப்போடு கூடிய கண்கள். உண்டாட்டு - களிப்பு. 'நண்பனே! பத்தரல்லாத தாமதத்தினை விரும்புவோர்க்கு எட்டா மாறன் துடரிவெற்பிடந்தன்னில்' எனக் கூட்டுக. நண்பனே என்பது முன்னிலை எச்சம்.

பகுதி - பாங்கற்கூட்டம்; துறை - இயல்புஇடம் கூறல்.

இதனுள் நடுவு தகரம் நின்று சூழ்ந்த குறட்டில் 'வடமலையப்பன்' என்னும் பெயர் நின்று, ஆர்மேல் 48 எழுத்தாய்ச் சூட்டின்மேல் 32-ஆய் நின்றவாறு காண்க. நடுநின்ற தகரம் நாலெழுத்தாய், முதற்சூட்டின் மையம் தொடங்கிநின்ற த பொ ம மா மா ம் ர் டா ர் எட்டும் பதினாறாய், ஒன்பது எழுத்து மாறாடி அதை எண்பத்தொன்பதில் நின்ற எண்பத்தொன்பதுக்கு நூறு எழுத்தால் ஆறடி நிலைமண்டில ஆசிரியப்பாவாய் முற்றியது.

[பத்தர்க்கு மடிசேர்தரு தாமதர்க்கு எட்டா - பத்தராவதற்கு விரும்பாத தாமதமாகிய உலகியல்இன்பத்தினை விரும்புவோர்க்கு. எட்டாத மாறனுடைய துடரிவெற்பில் மின்னலைப் போன்று ஒளிவீசும் குளிர்ந்த பொன்னோடு கூடிய சுனையில் நிலைபெற்ற கருங்குவளைமலர் போல்வன, அழகிய தலைவியின் மை தீட்டப்பட்டுக் களிப்போடு கூடிய கண்கள். அவளுடைய விளங்கிய முகம் குளிர்ந்த சந்திரனை ஒக்கும். அணிகலன் அணிந்த தனங்கள் நிடதம் என்று பெயர் பெற்ற உயர்ந்த மலையை ஒக்கும் என்றவாறு.]

**சேடுறு தட்டப் சீரிமகிரிக் கைவிலின்**
**போர்பொரு வீர புராரி செற்றத்தடர்த்**
**தின்பமதுற வமரிய லருணி ருதனேர்**
**முன்புமேத் தமரா ரிம்பர் நம்பாலுறு**
**சேர்மழை போனிறத் திருவுறை முதல்வன்**
**தாரிணைத் தாளெதிர் தாளுற்றுன் நெஞ்சே! (786)**

இதுவும் எட்டாரைச்சக்கரம்.

[நெஞ்சே! சேடு உறு தட்பச் சீர் இமகிரிக் கைவிலின் போர்பொரு வீர புராரி செற்றத்து அடர்த்து இன்பம்அது உற அமர்இயல் அருள் மழைபோல் நிறத்து நிருதன் நேர் முன்பும், எதிர் தாள் உற்று இம்பர் ஏத்து அமர் ஆர் திருஉறை முதல்வன் தார் இணைத்தாள் உறு நம்பால் உன்சேர் நினை - என்று பொருள்செய்க.]

இங்ஙனம் தியானிக்க ஈடேறலாம் என்பது பயன். அவன் உயிரை என்பது சொல்லெச்சம். முன்னும் என்னும் உம்மை எச்சமாகலான் பின்னும் என்பதாயிற்று. அமரால் மூன்றாவது தொக்கு நின்று விரிந்தது. 'ஆர்' உண்ணும் என, வினைத்தொகை வாய்பாடு செய்யும் என்னும் பெயரெச்சவாய்பாடாக விரிந்து தன் எச்சமான 'திருவுறை முதல்வன்' என்னும் பெயர்கொண்டு முற்றியது.

(இ-ள்) நெஞ்சமே! பெருமை எய்தும் குளிர்ந்த சீர் பொருந்திய இமவான் என்னும் கிரியைக் கைவில் ஆக்கி அதனால் திரிபுராதிகளுடன் போரைப் பொரும் வீரத்தை உடைய புராரி என்னும் சிவன், கயிலையை எடுத்து அலைத்ததனால் கோபித்து விரலை ஊன்றி மதுகையை அழிப்ப, ஈடுபட்டு அவன் பாடிய பாட்டினுக்கு உருகி மீள இன்பம் உறும்படி சமர்க்கு வேண்டும் ஆயுதம் முதலிய இயல்பினை எல்லாம், அடர்த்த சிவன் தான் கொடுப்ப எய்திய, மழைபோல் நிற நிருதன் சமர்க்கு நேர்பட்ட முதல்நாளும், கும்பகருணன் முதலியோர் பட்ட பின்னும், அவன் எதிர்தரத் தானும் போர்க்கு எதிரும் முயற்சியை உற்று, இவ்வுலகின்கண்ணே யாவரும் ஏத்தும் தனது போரால் அவனது உயிரை உண்ணும், திருமகள் விட்டு நீங்காத முதல்வனது தாமரைப்பூப்போன்ற இரண்டு திருவடிகளையும், மிக்க விருப்பத்தால் தியானத்தால் கூடுவாயாக என்றவாறு.

இதனுள் நடுவு 'ரி' என்னும் எழுத்து நிற்க, குறட்டில் 'சீராமராமசெயம்' என்னும் ராமதோத்திரம் நின்று, ஆர்மேல் குறட்டுடன் அஞ்சாம் அறையில் நின்றும் வலமாக, 'தருமமே கைதரும்' என்னும் பழமொழி நின்று, ஆர்மேல் 48 எழுத்தாய்ச் சூட்டின்மேல் 32 எழுத்தாய், முதல்அடியின் முதல்எழுத்தாகிய

'சே' அஞ்சாமடிக்கு முதல்எழுத்தாய், ஆறாம்அடிக்கு நெஞ்சே! என்ன முடிந்த மொழிக்கு ஈறாய் மூன்று எழுத்தாயவாறும் காண்க. இதனைப் பெந்திக்குமாறு: தன்முன்னர்ச் சூட்டு மையத்துநின்றும் 'சேடுறு' என நேரோட்டிக் 'கைவிலின்' என அஞ்சாம் ஆரில் முடித்து, வலமாக இரண்டாம் ஆர் தொடங்கி நாலாம் ஆர் வரைக்கும் 'லுறு' என முடித்து, மீட்டும் முதல்அடியில் சே என்ற எழுத்தை எடுத்துச் 'சேர்மழை தொடங்கி' 'நெஞ்சே!' எனச் சூட்டின் வலமாகச் சுற்றி முடிக்க.
திணை - பாடாண்; துறை - கடவுள்வணக்கம். [31]

12. பதுமபெந்தம்

**283. எண் இரண்டு இதழாய்க் கோண் இருநான்கின்**
**கண்ணுற நடுவணப் பொகுட்டது காட்டிப்**
**பண்அமைப் பதுவும் பதும பெந்தம். [32]**

(எ-ன்) வைத்த முறையானே (270) பதுமபெந்தம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) ஒரு தாமரையை எட்டுக்கோணிலும் இவ்விரண்டாகப் பதினாறு இதழ் எழுதி நடுவே ஒரு பொகுட்டினையும் காண்பதாக்கிச் செய்து அமைப்பதுவும் பதுமபெந்தமாம் என்றவாறு. உம்மையால் மகாபதுமபெந்தமும் ஒன்று உளது.

**மாறா மாலாலே மாறாமா**
**மாறா மாவேளே மாறாமா**
**மாறாமா கோவா மாறாமா**
**மாறாமா வாதே மாறாமா. (787)**

இது பதுமபெந்தம்.
மாறா மாலால் ஏமாறா, மா, மால்தாம் மாவேள் ஏ மாறு ஆ(கு)மாம், ஆறு ஆமா கோவா மாறா மா மாறா மா வா தே(ன்)மால் தாமா! எனப் பிரித்து உரைக்க. மா மாறா - பெரிய மாறனே! மா - திருஅன்னாள், மாறா மாவால் ஏமாறா - நீங்காத மயக்கத்தாலே வருந்தும்படிக்கு, மால் தாம் மா வேள் ஏ - மாயோனால் தரப்பட்ட கரிய மன்மதனுடைய அம்புகள், மாறு ஆ(கு)மாம் - எனக்குப் பகையாக இருக்கின்றன. ஆறு ஆமா கோவா மாறா - ஆறு போலக் கண்ணீர் தீராது பெருகுகின்றது. மா வா தேன் மால் தாமா - வண்டுகள் உண்ணவரும் தேன் துளும்பும் மாலையை உடையவனே! 'ஐயோ! இனி இத்தலைவி எங்ஙனம் உய்யும்?' என்னும் பயனிலை கூட்டி முடிக்க. மகா பதுமபெந்தம் வந்தவழிக் கண்டுகொள்க.
திணை - பெண்பாற் கைக்கிளை; துறை - கண்டு கைசோர்தல்.
இனிப் பதுமபெந்தத்தில் நடுவில் பொகுட்டில் நின்ற மா என்ற எழுத்து ஒன்றும் எட்டு எழுத்தாகவும், அதனைச் சூழ்ந்த நாற்கோணங்களில் நின்ற எட்டெழுத்தும் பதினாறு ஆகவும், இடையில் கோண் நாலினும் நின்ற எழுத்து எட்டும் திரிந்து மாறாடாது நிற்கவும் பாடினவாறு காண்க. [32]

13. முரசபெந்தம்

**284. எழுதிய வரி நாலினுள் முதல் ஈறன**
**பழுது அற மந்திரிச் செலவாய்ப் படர்ந்து அயல்**

**ஒழுகியும் கீழ்மேல் தனது ஈற்று உற்றபின்**
**அறைதொறும் ஏனைய அடைவே பாதியின்**
**முறை தடுமாறுதல் முரசபெந்தம். [33]**

(எ-ன்) வைத்தமுறையானே (270) முரசபெந்தம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று. (இ-ள்) நாலடியான் வரும் ஒருசெய்யுளை நாலு வரியாக எழுதி, அவற்றுள் முதலடியும் ஈற்றடியுமாகிய இரண்டின் முதலடிக்கீழ் மூன்று வரியினும், மந்திரிச்-செலவாகச் சென்று நாலாம்அடியில் அஞ்சாம் அறையில் ஏறி அந்த வார்மேல் நோக்கி மீள, அப்படியே முதல்அடி ஈற்றின் முற்றியும் இறுதிவரியும் மந்திரிச்-செலவாய் மேல்நோக்கி நாலாமடி உற்று அஞ்சாம் அறையில் ஏறி அந்த வார் கீழ்நோக்கி அவ்வண்ணமே இறுதிஅடியின் ஈற்றின் முற்றியும், ஏனை இரண்-டனுள் இரண்டாமடி முற்பாதியினின்றும் கீழ்வலமாக மூன்றாம்அடியின் முதலே முற்றியும், மூன்றாம்அடி இரண்டாம்அடிப் பிற்பாதியில் நின்றுழி நின்றும் கீழ்இடமாக மூன்றாமடி இறுதியின் முற்றியும் இரண்டு அடியும் முதல் ஈறு என்னும் முறை தடுமாறப் பாடுவது முரசபெந்தமாம் என்றவாறு. இங்ஙனம் மேல்வரும் செய்யுளை எழுதிக் கண்டுகொள்வது.

**போத வான துவாதரா**
**மாத வாதண வாதநா**
**நாத வாணத வாரவா**
**வேத வானது வாரகா.** (788)

இது முரசபெந்தம்.

[போத! வானது ஆதரா! மாதவா! தணவாத நா நாத! வாண! தவா அரவா! வேத வான துவார! கா! நா தணவாத எனவும், வானவேத எனவும் இடம் மாற்றுக.]

போத - ஞானவானே! வான் அது ஆதரா - வானவரால் ஆதரிக்கப்பட்டவனே! மாதவா - திருமகள் காந்தனே! நாதணவாத நாத - நாவை விட்டு நீங்காத என் நாதனே! வாண - உலகினைக் காக்கின்றவனே! தவா அரவா - அழிவு இல்லாத அராவை உடையவனே! வான வேத துவார! கா! - பரமபதம் இடமாக நின்றும், பூமியில் வருதற்குப் பெருமையை உடைய வேதத்தை வாயிலாக உடையவனே! என்னைக் காப்பாயாக.

திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து. (33)

14. நாகபெந்தம்

**285. வரிஅரவு இரண்டாய் வால்வயிறு இரண்டாய்**
**தெரிமூலை நான்காய்ச் சிறந்து மும்மூன்றுடன்**
**நிலைபெறும் ஒருபான் இருபான் நிறீஇத்**
**தலை இரண்டுஎழுத்தாய்ச் சார்தரச் சந்தியில்**
**கவின்உறுத்து எழுத்துக் கலந்து உறுப்பாக**
**நவில் இருபாவே நாகபெந்தம். [34]**

(எ-ன்) வைத்த முறையானே (270) நாகபெந்தம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று. (இ-ள்) வரியை உடைய பாம்புகள் இரண்டாக, அவற்றிற்கு வால் இரண்டாக, வயிறு இரண்டாகத் தோன்றப்பட்ட மூலைகள் நான்காகச் சிறப்பு எய்தி, வால் இரண்டில் நிலைபெறும் எழுத்து ஒன்பதுடன், வயிறு இரண்டில் எழுத்துப் பத்தாய் மூலைநான்கில் எழுத்து இருபதாய்த் தலை இரண்டில் எழுத்து

இரண்டாய்ப் பொருந்த நிறுத்தி, சந்திகளில் அழகு தருவனவாம் எழுத்துக்கள் இரண்டிற்கும் கூடி நிற்பனவாம் உறுப்பாகப் புலவனால் உரைக்கப்படும் இரண்டுபா என்பதுதானே நாகபெந்தமாம் என்றவாறு.

நிறுத்தி என்பது மத்திமதீபம். மும்மூன்று, ஒருபான், இருபான் என்பன நிரல்நிறை. 'புலவனால்' என்பது எச்சம். தெரிமூலை - தோன்றும் மூலை.

**மாறன் சடகோபன் வண்குருகூர் வாழ்பொருநை**
**யாற னளிமேய வன்னமே - யேறுத்**
**தமனா மாமா சரதன்றாண் மொழிதற் பாமன்**
**னெமர்யா யெமையா ளிறை.** (789)

**அறமு மறமமைந்த வன்பென்பதுவும்**
**பெறனன்னலம துண்மை பேரா - துறுபாற்கோர்**
**மானமனமே நினைமான் மா மேகத் தந்தமே**
**யேன மெமையா ளிறை.** (790)

இது நாகபெந்தம்.

[மாறன், சடகோபன், வண்குருகூர்வாழ் பொருநை ஆறன், அளி மேய அன்னமே ஏறு உத்தமன், நா மா மாசரதன் தாள் மொழிதல் பா மன், எமர் யாய், எமை ஆள் இறை. அறமும் அறம் அமைந்த அன்பு என்பதுவும் பெறல் நன்னலம் அது உண்மை, பேராது உறுபாற்கு ஓர் மான மனமே! நினை மால் மேகத்து அந்தமே ஏனம் எமை ஆளியை.]

(இ-ள்) மாறன் என்றும் சடகோபன் என்றும் திருநாமங்களை உடையவன், வளவிய குருகூரின்கண் வாழும் பொருநையாற்றை உடையவன், கிருபையோடு கூடிய அன்னத்தை ஏறும் உத்தமன், நாவினால் திருமகளைஉடைய பெரிய உண்மைப்பொருளாம் மாயோன் திருவடிகளைப் பாடும் பாவினை உடைய மன்னன், எம்மனோர்க்கு மாதா, எம்மை ஆளும் இறைவன் என்றவாறு.

எனவே, 'யமனும் என்னிடத்து வாரான்; எமக்குச் செனனமும் இல்லை; சிந்திப்பதும் முத்தியேயாம்' என்பது பயன்.

அறத்தினது பகுதியும் அறத்தினால் அமைவு எய்திய அன்பு என்று கூறப்படுவதும் நமக்கு உண்டாதலும், நல்ல பேரின்பத்தை எய்துவது, உண்மையாக அது நம்மைவிட்டு நீங்காது, அவற்றை உறும் பகுதிக்கு ஒப்பற்ற பெரிய மனனே! காளமேகத்தினது அழகிய நிறம் மேவிய திருமாலை, ஏனமாக வடிவு எடுத்தவனை, எம்மை ஆள்பவனை, நினைப்பாயாக என்றவாறு.

ஆக வெண்பாஇரண்டினால் எழுத்து 128-உம் அறை 96-இல் மாறாடி அடங்கினவாறு கண்டுகொள்க. திணை - பாடாண்; துறை - கடவுள்வணக்கம். [34]

15. இரதபெந்தம்

**286. தேரென மந்திரிச் செலவுஎனச் செய்யுளை**
**ஏர்தர அடக்குவது இரதபெந்தம். [35]**

(எ-ன்) வைத்த முறையானே (270) இரதபெந்தமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) சதுரங்கஅறையுள் தேர் செல்வது எனவும், மந்திரி செல்வது எனவும் ஒரு செய்யுளுக்கு உண்டான எழுத்துக்களைத் தேரினது அறைக்கு நடுவே ஒருதிருநாமம்ஆதல் ஒருபழமொழிஆதல் அழகு பெற்று நிற்க, இரதத்திலே பெந்திப்பது இரதபெந்தமாம் என்றவாறு.

'சதுரங்கஅறையினுள்' என்பது சொல்லெச்சம். செய்யுள் என்பது ஆகுபெயர். 'அறைக்கு நடுவே திருநாமமாதல் பழமொழியாதல் நிற்க' என்பது 'ஏர்தர' என்பதே ஞாபகமாக விரிந்தது.

**நாராராராய நயனயணா விண்ண்**
**ணாராமணாய விலமாயவா - சீராய**
**நன்கா நமநம நன்கா நமநம**
**மன்காமன் றாதாய் நம.** (791)

இஃது இரதபெந்தம்.

(இ-ள்) நாரார் - அன்பினை உடையாரால், ஆராய் அ நயன் - ஆராயப்பட்ட அந்தப் பேரின்பத்திடத்து. அயணா - வியாபரிக்கப்பட்டவனே! விண் - ஆகாயமும். ஆர்ஆம் - மிகுந்த நீரும். மண் ஆய் - நிலமும் ஆகி. அனிலம் ஆயவா - காற்றும் ஆனவனே! சீர் ஆய - பொலிவினை உடைய நந்தகோபாலனே! நன்கா! நமநம - நன்மை உடையவனே! உன்னை நமக்கரிக்கிறேன். நன்கா! நமநம - நன்மை உடையவனே! உன்னை நமக்கரிக்கிறேன். மன் காமன் - மகளிர்ஆடவர்க்கு அரசனாகிய மன்மதனுடைய. தாதாய் - தந்தையே! நம - உன்னை மீளவும் என் ஆன்மாவைக் காத்தற்பொருட்டு நமக்கரிக்கிறேன் என்றவாறு.

நார் - அன்பு. அ - சுட்டு. நயன் - சுகம். அயனம் - வியாபாரம். அம் - நீர். மண்ணாய் என்பது மணாய் என இடை குறைந்து வந்தது. ஆயவா - ஆனவனே! நன்கு - நன்மை. மன் - அரசன். தாதை என்னும் ஐகார ஈறு விளிக்கண் ஆய் ஆயிற்று. நமநம நமநம என்பது இசைநிறை, அசைநிலை. விண்ண் என்னும் ஒற்றளபெடை, வெண்பாவினது செப்பலோசை சிதைந்தவழி ஓசையை நிறைத்தற்பொருட்டு வந்தது. என்னை? 'குன்றுமேல் ஒற்றளபும் கொள்' என்பதனால் அறிக. இதனுள் நடுவும் இருபக்கமும் 'நாராயணாய நம' என நின்றவாறு காண்க. திணை - பாடாண்; துறை - கடவுள்வணக்கம்.

[நமநம - முதற்கண் இசைநிறை; அடுத்து வருவது அசைநிலை எனக்கொள்க. 'குன்றுமேல் ஒற்றளபும் கொள்' என்பது மாபுராண வெண்பா அடி.]

**மாயவனே! வேத மதியே! வயநாக**
**பாயவனே! தே! நளினபாதா! பராபரா!**
**தூயவனே! காரணா! பூரணா! தோள்நிலமான்**
**நாயகனே! சீர் நாராயணாய நம.** (792)

இதுவும் இரதபெந்தம். தோள் நில மான் - தோளில் இருக்கும் பூமிதேவி. இதனுள் நடுவே 'நாராயணாயநம' என்னும் திருநாமம் நின்றவாறு காண்க.

[இ-ள். வியத்தகு செயல்களை உடையவனே! வேதங்களால் போற்றப்படுபவனே! வலிமையை உடைய திருஅநந்தாழ்வானைப் பாயலாக உடையவனே! தெய்வமே! தாமரை போன்ற திருவடிகளை உடையவனே! மேலார்க்கும் மேலாயவனே! தூயவனே! உலகக் காரணனே! எல்லாவற்றாலும் நிறைந்தவனே! தோளில் இருக்கும் பூமிதேவியின் கணவனே! திருமகளை மார்பில் கொண்டவனே! நாராயணனே! உன்னை வணங்குகிறேன்.] [35]

16. மாலைமாற்று

**287. ஒருசெயுள் முதல்ஈறு உரைக்கினும் அஃதாய்**
**வருவதை மாலைமாற்றுஎன மொழிப. [36]**

(எ-ன்) வைத்த முறையானே (270) மாலைமாற்று ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) ஒருபாட்டை ஈறு முதலாக வாசிக்கினும் அப்பாட்டேயாகி வருவதனை மாலைமாற்று என்னும் சித்திரக்கவி என்று கூறுவர் பெரியோர் என்றவாறு.

**வாமனா மானமா**
**பூமனா வானவா**
**வானவா னாமபூ**
**மான மானா மவா. (793)**

இது மாலைமாற்று.
(இ-ள்) வாமனா - வாமனனே என்று. வான் அவா ஆன வான் நாம - தேவர்கள் விரும்பிச் சொல்வதாய பெரிய திருநாமத்தை உடையவனே! மான மா பூ - பெருமையை உடைய திருமகளுக்கும் பூமிதேவிக்கும். பூமான மனா - பூமான் ஆகிய மன்னனே! மால் நாம - மால் என்ற திருநாமத்தை உடையவனே! வா - என்முன்னே வந்து தோன்றுவாய்.
இஃது இரண்டு விகற்பத்தான் வந்த வஞ்சித்துறை. துறை - கடவுள்வணக்கம். [36]

17. கரந்துஉறைசெய்யுள்

**288. முதல் ஒருசெய்யுள் முடித்து அதன்ஈற்றின்**
**பதம்அதன் இறுதியில் பயில்எழுத்துத் தொடுத்து**
**இடையிடை யிட்டு எதிர்ஏறாய் முதல்அயல்**
**அடைதரப் பிறிதுஒரு செய்யுள் கரந்துஅங்கு**
**உறைவது கரந்துஉறைசெய்யுள் என்று உரைபெறும். [37]**

(எ-ன்) வைத்த முறையானே (270) கரந்துறைசெய்யுள் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) முதலே ஒருசெய்யுளை எழுதி முடித்து, முடித்த இறுதிமொழியின் ஈற்றெழுத்துத் தொடங்கி, எதிர்ஏறாக இடையிடை ஒரெழுத்தாக இடையிட்டு முதல்மொழி முதல்எழுத்து அயல் அடைய முடிக்கப் பிறிதுஒரு செய்யுளாக அதன்அகத்துக் கரந்து உறைவது கரந்துறைசெய்யுள் என்று உரைக்கப்பெறும் என்றவாறு.

**போர்வை வாயூ ராரலரளி பொருகாம!**
**நீர்மை யாழ்வா ரயலணை தருமிக**
**வேர்தவா வாழ்தலா மயில்கை முருகுகு**
**தார்தரா மூதா மணிதக வுருவமும். (794)**

இது கரந்துறைசெய்யுள்.
(இ-ள்) 'ஆரலரளி' என்பதனை அளி ஆர் அலர் என மாற்றி வண்டுகள் ஆரவாரிக்கும் பூவாளியால் என்க. பொருகாம - பொரவந்த காமனே! நீர்மை ஆழ்வார் - நற்குணத்தை உடைய ஆழ்வார். மயில் கை - எமது மயில் போலும் சாயலைஉடையாள் கையில். மூதா உருவமும் அணிதக வாழ்தலாம் - பெருமையை உடையவாம் உருவங்களும் அழகினது பெருமை எய்த உயிர் வாழ்தலாம்படிக்கு. ஏர் தவா முருகு உகு தார் தரா - அழகு கெடாத தேன் ஒழுகும் வகுளமாலிகையைத் தந்து. வாய் ஊர் - (ஊர் வாய்) எமது பதியிடத்து.

அயல் அணைதரு மிக - அயல் எம்மோடு மிக நட்புச் செய்யாநின்றார் ஆதலால். போர்வை - உனது போரை ஒழிவாயாக. இது மாட்டுறுப்பு. அப்படி இதனுள் கரந்த செய்யுள்

முருகணி தாரார்
குருகையி லாழ்வார்
கருணைய வாயார்
மருளில ராவர்

என்பதாம்.

[அளி ஆர் அலர் பொருகாம! நீர்மை ஆழ்வார், மயில் கை, மூது ஆம் உருவமும் அணிதக வாழ்தல் ஆம், ஏர் தவா முருகு உகுதார் தரா, ஊர்வாய், அயல் அணைதரு மிக, போர் வை - என மாட்டிப் பொருள் செய்யப்பட்டுள்ளது.] [37]

18. காதைகரப்பு

**289. காதை கரப்பது காதைகரப்பே. [38]**

(எ-ன்) வைத்த முறையானே (270) காதைகரப்பு ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) புலவரால் குறிக்கப்பட்ட செய்யுளுள் பிறிதுஒரு செய்யுட்குக் கூடுவதான எழுத்துக்கள் புகுதாதே தாம் குறித்த பழைய செய்யுள் கரந்து எழுத்துப் பிறக்கிக்கொள்ளலாம்படி பாடுவது காதைகரப்பாம் என்றவாறு.

**கொல்யானை மூலம்எனக் கூப்பிடமுன் காத்தானை**
**எல்லா உயிர்க்கும் உயிர்எனலாம் - புல்லாணித்**
**தோடார் நறுந்துளபத் தோள்மாலைக் கைதொழுதா**
**ணாடா ளொருநா ணமன். (795)**

இதனுள் போந்த செய்யுள்,

கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிரும் தொழும் (குறள். 260) என்பது.

இதனைப் பழம்பாட்டு எனவே, மேலன நவமாம் என்று உணர்க. இவற்றை மாறாடுவோரும் உளர்.

[தண்டியலங்காரத்தில் காதைகரப்பு கரந்துறைசெய்யுளாகவும், கரந்துறைசெய்யுள் காதைகரப்பாகவும் கூறப்பட்டுள்ளன.]

[கொல்யானை 'மூலமே' எனக் கூப்பிட முன் காத்தவனும், எல்லா உயிர்களுக்கும் உயிர்ஆயவனும் ஆகிய திருப்புல்லாணியில் துழாய்மாலை அணிந்துள்ள எம்பெரு-மானைக் கைதொழுதால், நம்மை ஒருநாளும் நமன் நாடான்.] [38]

19. பிரிந்துஎதிர்செய்யுள்

**290. பிரிந்து எதிர்வனவே பிரிந்துஎதிர்செய்யுள். [39]**

(எ-ன்) வைத்த முறையானே (270) பிரிந்துஎதிர்செய்யுள் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) ஒருசெய்யுள் முதலே முடிந்தால் அச்செய்யுளின் ஈற்றெழுத்துத் தொடங்கி எதிரேறாக நடந்து வேறொரு செய்யுளாக நிகழ்தல் பிரிந்துஎதிர்செய்யுளாம் என்றவாறு.

**நீர நாகமா**      **காக ணாரணா**
**தார மாகமே**      **மாக மாரவா**
**வார மாகமா**      **மேக மாரதா**
**ணார ணாககா. (796)**      **மாக நாரநீ.**

என்பதாம்.
முதல்செய்யுளின் பொருள்:
நீர - நற்குணத்தவனே! நாக - அநந்தசயனத்தவனே! மா - திருமகளை, தாரமாக - மனைவியாக, மேவு ஆரம் ஆக - பொருந்தும் ஆரம் அணிந்த மார்பனே! மாண் - பெருமை பொருந்திய, ஆரண ஆக - வேதசொரூபனே! கா - என்னைக் காப்பாயாக.
எதிர்ஏற்றின் பொருள்:
மாகமார் - துறக்கத்திலுள்ளார், அவாம் - பெருக விரும்பும், நார - நற்குணத்தை உடையவனே! மேகம் ஆக - கார்மேகம் போன்ற திருமேனியனே! மாரதா - சத்துருக்களை வெல்லும் முழுத்த வீரனே! நாரணா - நாராயணன் என்னும் திருநாமத்தனே! நீ கண் - உன் சொரூபரூப குண விபூதிகளை மயக்கம்அற அறிதற்கு நீயே எமக்கு ஞானக்கண் ஆதலால், கா - எம்மைக் காப்பாயாக.
இவைஇரண்டும் வஞ்சித்துறை. துறை - கடவுள்வாழ்த்து. அநுலோமப் பிரதி-லோமம் என்பதுமிது.
[அநுலோமம் - வலமுறையில் வாசித்தல். பிரதிலோமம் - இடமுறையில் வாசித்தல். தொடக்கத்திலிருந்து வலமுறையாக முறைப்படி வாசிக்க ஒரு பாடலாகவும், ஈறு தொடங்கி இடமுறையாக வாசிக்கப் பிறிதொரு பாடலாகவும் அமையும் சித்திரகவி.] [39]

20. பிறிதுபடுபாட்டு

**291. பிறிதுஒன்று ஆதல் பிறிதுபடுபாட்டே. [40]**

(எ-ன்) வைத்த முறையானே (270) பிறிதுபடுபாட்டு ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) பிறிதுபடுபாட்டு என்பது ஒருசெய்யுளைத் தொடையும் அடியும் வேறுபட உரைத்தாலும், சொல்லும் பொருளும் வேறுபடாமல் பிறிது ஒருசெய்யுளாய் முடிவது என்றவாறு.

**பார்மகளைத் தோயும் புயத்தாய்! பதுமநறுந்**
**தார்மகளை நீங்காத் தகைசான்ற ஆகத்தாய்!**
**ஆரியனே! ஆரணத்து அந்தியனே! வாரி**
**வாரியுள் நாகணை மன்னா! (797)**

இது பிறிதுபடுபாட்டு.
இது முதலே ஒருவிகற்பத்து இன்னிசை வெண்பா. பின்னர்க் கலிவிருத்தமாக நிகழ்ந்தவாறு காண்க. தார் - பூ, ஆரியன் - பரமாசாரியன். வாரி - கடல். வாரி - மிகுதி.

[பார்மகளைத் தோயும் புயத்தாய் பதுமநறுந்
தார்மகளை நீங்காத் தகைசான்ற ஆகத்தாய்
ஆரிய னேஆ ரணத்தந் தியனே
வாரி வாரியுள் நாகணை மன்னா

எனக் கலிவிருத்தமாக்கிக் கொள்ளவேண்டும். ஆனால் முதல் ஈரடிகளுக்கும் பின் ஈரடிகளுக்கும் ஓசைவேற்றுமை உள்ளது. அதுவும் இல்லாதிருப்பின் நன்று.]
துறை - கடவுள்வாழ்த்து. [40]

21. சருப்பதோபத்திரம்

**292. இருதிறத்து எழுதலும் எண்ணான்கு எழுத்துடை**
**ஒருசெய்யுள் எண்ணெண் அரங்கினுள் ஒருங்குஅமைந்து**
**ஈரிரு முகத்தினும் மாலை மாற்றாய்ச்**
**சார்தரும் மாறியும் சருப்பதோபத்திரம். [41]**

வைத்த முறையானே (270) சருப்பதோபத்திரம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) எவ்வெட்டெழுத்து ஓர்அடியாய் நான்குஅடியாய் வரும் எண்ணான்கு எழுத்துடையதொரு செய்யுளை அறுபத்துநான்கு அறையினில் இரண்டு கூறு-பாட்டான் எழுத, அவற்றுள் முழுதும் மடங்கி நாலுமுகத்தினும் முதல் முத-லாகியும் ஈறு முதலாகியும் மாலைமாற்றாகி வருவது சருப்பதோபத்திரமாம் என்றவாறு.

இரண்டு கூறுபாடாவது நான்குஅடியும் மேல்நின்று கீழ் இழியவும் கீழ்நின்று மேல் ஏறவும் எழுதுவதாம். இது மாட்டுறுப்புப் பொருள்கோள்.

**தேமா பூமாமா பூமாதே**
**மாதா காவாவா காதாமா**
**பூ காவா லாலா வாகாபூ**
**மாவா லாநீ நீலா வாமா. (798)**

இது சருப்பதோபத்திரம். இதனகத்து அவ்வாறு நிகழ்ந்தமை கண்டுகொள்க.

(இ-ள்) தே மா பூ - தேனும் வண்டும் பொருந்திய பூவினிடத்து
மாமா - பெரிய திருமகளும்
பூமாதே மாது - பூமிதேவியும் ஆகிய அழகு பொருந்தின மகளிர்
வா ஆகா வாகா - வந்து தங்கும் மார்பினையும் புயத்தினையும் உடையவனே!
தாமா - துளவமாலிகையை உடையவனே!
பூ கா ஆல் ஆலா - பூமியை எடுத்த பிரளயத்தின்மேல் ஆல்இலையில் துயில்வோனே!
பூ மா வாலா - பொலிவினொடும் கூடிய மிகுந்த பாலத்தன்மை உடையவனே!
நீலா - நீலநிறத்தினனே!
வாமா - வாமனரூபம் ஆனவனே!

மூன்றாம்அடியில் இறுதி வாகா என்பதனை நான்காம்அடியில் முந்த வந்த நீ என்பதனோடும் கூட்டி ‘நீ வா கா’ எனச் சேர்ந்து நீ வந்து என்னைக் காப்பாயாக என்றவாறு.

இதனுள் உம்மை பண்பு வேற்றுமை முதலிய தொகைகளும் ஒருமைபன்மை மயக்கவழுவமைதியும் வந்து மாட்டுறுப்பாகப் பொருள் உரைத்தவாறு காண்க.

ஆல் - பிரளயம். வா - வந்து. மாது - மாதர்கள். பூ - தாமரை. பூ - பொலிவு.

[மா பூமாதே - உம்மைத்தொகை. ஆகா வாகா - உம்மைத்தொகை. ஆல் ஆலா - வேற்றுமைத்தொகை. தேமா - உம்மைத்தொகை. பூ மாது - இருபெயரொட்டுப்-பண்புத்தொகை. அரசர்மாளிகையில் உள்ளதொரு கட்டிடத்துக்கும் சருப்பதோபத்திரம் என்பது பெயர். அந்தக் கட்டடம் நாற்புறமும் வாயில்கள் உடையதாய் நினைத்த பக்கத்தின்மேல் ஏறவும் கீழ் இறங்கவும் கூடியதாய் இருக்கும். இச்சித்திரகவியும் அதே போன்று இருத்தலால் அப்பெயர் பெற்றது.]

துறை - கடவுள்வாழ்த்து. [41]

22. கூடசதுர்த்தம்

**293. பாடலின் நாலாம்பதம் பொறி வரியிடைக்**
**கூடம் உற்றதுவே கூடசதுர்த்தம். [42]**

(எ-ன்) வைத்த முறையானே (270) கூடசதுர்த்தம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) நாலடியாய ஒருசெய்யுளில் நாலாம்பதம், ஏனை மூன்றுபதத்தையும் மேல்நின்று கீழும் கீழ்நின்று மேலுமாக எழுதி முடித்த வரிமூன்றின் இடை-வரியின் மறைந்து நிற்பது கூடசதுர்த்தமாம் என்றவாறு.

**நாதா மானதா தூய தாருளா**
**ணீதா னாவா சீராம னாமனா**
**போதா சீமா னாதர விராமா**
**தாதா தாணீ வாமனா சீதரா. (799)**

இது கூடசதுர்த்தம். இதனை அவ்வாறு எழுதிக் கண்டுகொள்க.
(இ-ள்) நாதா - சுவாமியே! மானதா - என்மனத்தில் உள்ளானே! தூய தார்உளாள் - (நின் பெருந்தேவி) பவித்திரம் பொருந்தின தாமரையில் உள்ளாளாக. நீதான் நாவா - நீயாக, என்நாவில் வந்து உறைவாயாக. அதுவுமன்றி, சீ ராமனாம் மனா - சக்கரவர்த்தித் திருமகனாகிய மன்னனே! சீமான் - அழகுஉடையவனே! ஆதரவு இராமா - சகலரும் விரும்பும் இராமனே! வாமனா - வாமனனே! சீதரா - திருமகள்கேள்வனே! போதா - போதத்தில் உள்ளானே! தாள் நீ தாதா - நீ உன் திருவடிகளைத் தருவாயாக என்றவாறு.
திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து.
[கூடம் - மறைந்திருப்பது; சதுர்த்தம் - நான்காம் அடி. நாலாம்பதம் - நாலாம் அடி நான்காம்அடியிலுள்ள எழுத்துக்கள் முதல் மூன்றுஅடிகளில் மறைந்திருக்குமாறு இயற்-றப்படும் செய்யுள் கூடசதுர்த்தமாம். முதல் மூன்று அடி என்பன 1, 2, 3-ஆம் அடிகளாகவோ, 3, 2, 1-ஆம் அடிகளாகவோ கணக்கிடப்படலாம்.] [42]

23. கோமூத்திரி

**294. கோமூத்திர நடைபெறல் கோமூத்திரி. [43]**

(எ-ன்) வைத்த முறையானே (270) கோமூத்திரி ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) நடைபெறும் சேவினது மூத்திரஒழுக்கம் போன்று நடப்பின் அது கோ-மூத்திரியாம் என்றவாறு.
அஃதாவது நான்கடிச்செய்யுளை இரண்டுவரியாக எழுதி மேலும் கீழும் ஒன்று இடைவிட்டு வாசிக்கவும் அச்செய்யுளாய் நடத்தல்.

**மாயா மாயா! நாதா! மாவா! வேயா நாதா! கோதா வேதா!**
**காயா காயா! போதா! கா வா பாயா மீதா! பேதாபேதா! (800)**

இது கோமூத்திரி. இதனை அவ்வாறு எழுதிக் கண்டுகொள்க. கோ - காளைமாடு.
(இ-ள்) மாயா மாயா - அழியாத மாயையை உடையவனே! நாதா - சுவாமியே! மாவா - திருமகளை உடையவனே! வேய் ஆம் நாதா - வேய்ங்குழலில் உண்டாக்கும் நாதத்தை உடையவனே! கோதா - பசுவைக் காத்து அளித்த. வேதா - வேதசொரூபனே! காயா - காயாம்பூப்போலும். காயா - திருமேனியை உடையவனே! போதா - ஞானத்தை உடையவனே! பேத அபேதா - பேதமும்

அபேதமும் ஆனவனே! பாய் ஆம் மீதா - பரந்த பிரளயத்தின் மேலானவனே! காவா - என்னைக் காக்க வருவாயாக.

பா - கலிவிருத்தம். திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து. [43]

24. சுழிகுளம்

**296. தெழித்து எழுநீர் குளத்தினுள் செறிந்ததைக்கொடு**
**சுழித்து அடங்குவபோன்று அடங்குதல் சுழிகுளம். [44]**

(எ-ன்) வைத்த முறையானே (270) சுழிகுளம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஆரவாரித்து எழாநின்ற புனல் குளத்தினுள் தனதுஇடத்து அடைந்தது யாதொன்று அதனைக் கைக்கொண்டு சுற்றி உள்ளே அடங்குவது போலச் சுற்றிப் பாவினகத்துப் பொருளைக்கொண்டு அடங்குதல் சுழிகுளமாம் என்றவாறு.

**சதிதக னடனாடீ!**
**திததிதி காண்ஞானா!**
**ததிதா கார்கண்ட!**
**கதிகா கிளர்கான! (801)**

இது சுழிகுளம். இஃது அவ்வாறு ஆதல் எழுதிக் கண்டுகொள்க.

(இ-ள்) சதி தகல் நடன்ஆடீ - தாள ஒத்துக்குப் பொருந்தக் கூத்தாடாநின்றவனே! தித திதி காண் ஞானா - உண்மையான காவல்தொழிலை உனதாகக் கைக்கொண்டவனே! ததி தாகு ஆர் கண்ட - தயிரைத் தாகித்து உண்ட கண்டத்தை உடையவனே! கிளர் கான - கிளர்ந்த கானத்தை உடையவனே! கதி, கா - நீயே கதி; காப்பாயாக.

பா - வஞ்சித்துறை; திணை - பாடாண்; துறை - கடவுள்வாழ்த்து.

[சுழிகுளமாவது ஒருசெய்யுளை எவ்வெட்டெழுத்தாய் நான்குவரியாக எழுதி, மேல்நின்று கீழ் இழிந்தும், கீழ்நின்று மேல் ஏறியும், புறம்நின்று வந்து உள்முடிய உச்சரித்தாலும் அவ்வரி நான்குமேயாகி அச்செய்யுளாயே முற்றுப்பெறுவதாம்.] [44]

25. திரிபங்கி

**296. நனி ஒருபாவாய் நடந்தது தானே**
**தனிதனி மூன்றாம் சால்புஉறு பொருண்மையின்**
**பகுப்ப நிற்பது திரிபங்கிஅது ஆகும். [45]**

(எ-ன்) திரிபங்கி ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) முதலே மிக்கதொரு பாவாய் நடந்த அதுதானே பின்னர்க் குறைவுடைத்தாய் மூன்றுபாவாய் ஒழுக்கமுறும்படி பொருளினது தன்மையில் பகுத்துக்காட்ட நிற்பது திரிபங்கி என்பதாம் என்றவாறு.

**வாரிதிபார் மன்மதன் பூசல்பார் வெய்ய மாமதிபார்**
**ஊர்அலர்பார் அன்னை இங்கு ஏசல்பார் உய்யுமாறு இலைபார்**
**சோர்குழல்பார் பொன்நிறம் சேர்தல்பார் துய்யமான் மயல்பார்**
**நாரணனே! தென்அரங்கேசனே! தெய்வநாயகனே! (802)**

இது திரிபங்கி; இதனை மூன்றாகப் பகுத்த பா வருமாறு:

**வாரிதி பார் மன்மதன் பூசல்பார் வெய்யமா மதிபார்**
**ஊர்அலர் பார் அன்னைஇங்கு ஏசல்பார் உய்யுமாறு இலைபார்**
**சோர்குழல் பார் பொன்நிறம் சேர்தல்பார் துய்யமான் மயல்பார்**
**நாரண னே! தென்னரங் கேசனே! தெய்வநா யகனே!**

[ஒரேசெய்யுள் வெவ்வேறான மூன்று செய்யுள்கள் ஆவதால் மூன்று பங்குகளை உடையது என்ற பொருளில் 'திரிபங்கி' எனப்பட்டது. கட்டளைக்கலித்துறைப் பாடல்-ஒன்று இவ்வாறு மூன்று வஞ்சித்துறைப் பாடல்களாகப் பகுக்கப்பட்டவாறு.] [45]

26. எழுகூற்றிருக்கை

**297. ஒன்று முதலா ஓர்ஏழ் ஈறாச்**
**சென்றஎண் ஈரேழ் நிலந்தொறும் திரிதர**
**எண்ணுவது ஒன்றாம் எழுகூற்றுஇருக்கை. [46]**

(எ-ன்) இறுதி நின்ற (270) எழுகூற்றுஇருக்கை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) செய்யுளகத்து எண்ணப்பட்ட ஒன்று என்னும் எண் ஒன்று முதலாக ஓர்ஏழ் ஈறாக நிகழ்ந்த எண்களைப் பதினாலு நிலந்தொறும் மீள எண்ணுவது ஒன்றாகும் எழுகூற்றிருக்கை என்றவாறு. 'செய்யுளகத்து' என்பது சொல்-லெச்சம்.

[1, 121, 12321, 1234321, 123454321, 12345654321, 1234567654321, 1234567654321 என வருவது. எனவே 13 பத்தி இரண்டு, 11, 9, 7, 5, 3 உள்ள பத்திகள் ஒவ்வொன்று. ஆக 7 படிகள். 13 முதல் 3 வரை குறைந்து வருவன. அடுத்த நூற்பாவில் 14 ஒன்று 12 இரண்டு என்று கூறியிருப்பதும் அதன் உரையும் ஆராயத்தக்கன. உதாரணப்பாடலுள் 13 இரண்டு 11, 9, 7, 5, 3 என்ற 7 படிகளே கொண்டுள்ளமை காண்க.] [46]

எழுகூற்றிருக்கை சிறப்புவிதி

**298. அவைதாம்,**
**இரத பெந்தத்தினில் இடைஅறை இரண்டாய்ச்**
**சரதமது உற நடை சார்தரு பான்மையின்**
**ஒன்று பன்னான்காய் ஒரு பன்னிரண்டாய்**
**நின்று அயல் ஏனவும் நிலந்தொறும் உபயம்**
**குன்றுவதாய்த் தொகை கூடி ஒன்றில் இறும். [47]**

(எ-ன்) இஃது அவ்வெழுகூற்றிருக்கைக்கு ஒரு சிறப்புவிதி கூறுகின்றது.

(இ-ள்) அங்ஙனம் எண்ணப்படும் எண்கள்தாம் இரதத்தில் பெந்திக்குமிடத்து மையத்தின் பத்தி இரண்டுபத்தியாய்க் கீறி வலமே இடமே நடத்தலைத் தரும் பகுதியில் மையத்தில் ஒன்று பன்னான்காகவும் அதன் அயல் இருபத்தியில் இரண்டும் பன்னிரண்டாகவும், ஒழிந்த மூன்று முதலிய எண்ணும் பத்திதோறும் இரண்டு குறைந்து ஏழ் என்னும் தொகை பொருந்தி முதலே நின்ற ஒன்றில் வந்து முடியும் என்றவாறு.

அயல் என்பதனை முன்னும் பின்னும் கூட்டுக. இரதபெந்தம் - தேரிலே எழுதிக் கூட்டுதல்.

[14 ஒன்று, 12 இரண்டு - என்ற கூற்று ஆராயத்தக்கது.] [47]

எழுகூற்றிருக்கைக்கு ஓர்ஒழிபு

299. இரட்டுற மொழிதலோடு ஈறுதிரிந்து எண்
திரட்டவும் பெறூஉம் தெரியுங்காலை. [48]

(எ-ன்) இஃது அவ்வெண்ணிற்கு ஓர்ஒழிபு கூறுகின்றது.
இரட்டுறல் - சிலேடை. ஈறு திரிதல் - ஈற்றெழுத்து வேறொன்று ஆதல்.

ஒருதனித் திகிரியின் இருவிசும்பு ஒழுக்கத்து
ஒருஞான்று ஒருபகல் ஒடியா உழப்பின்
பதம்இரண்டும் இலாப் பாகுஉடை ஊர்தியின்
முந்நீர் வரைப்பின் இருபால் வியப்பான்
ஒரு பிணர்த் தடக்கை ஒன்றிய இருகவுள்
மும்மதம் நால்வாய்க் கரிஉரி முக்கண்
செம்மலின் இருகணும் இமையாத் தேவர்கள்
ஒருபோது அகலா ஒருவழிப் படநின்று
இருகையும் கூப்பி முப்போதினும் இறைஞ்ச
நான்முக முதல்வனின் நசைஇய நல்கும்
ஐந்தரு நீழலின் அறம்முதல் நான்கினுள்
முந்திய முப்பால் முழுநலம் எதிர்கொள
இருமருங்கினும் மின் ஒருமருங்கு அரம்பையர்
ஒருதிறத்து இருபதம் நடம்நவின்று ஒழுக
மும்முரசு ஆனா முன்றிலின் இரட்டத்
தெம்முரண் முருக்கித் திசைஅவை நான்கினும்
ஐம்பொறி அதனகத்து ஆறு ஐந்து அவித்துச்
செம்பொருள் நான்மறை தெற்றெனத் தேர்ந்த
முக்கோற் பகவர் முறைமுறை பிறழா
இருவினை ஒருங்குவென்று இறைநிலை இஃதுஎன
ஒருதலை பற்றினர் இருமையும் உணர்ந்தோர்
முக்குணம் அவற்றுள் முற்குணன் அமைந்தவருடன்
நாலாங் கடவுள் வீற்றிருக்கும் நற்றிசை வரும்
இளங்கதிர் அகிலத்து இன்னுயிர் அஞ்ச
வாழ்நாள் அறுதியில் வௌவுதற்கு அமைந்த
நமன்திசை எழுதிறன் இறும்பூது என்ன
அறுகால் அஞ்சிறை அளிக்குலம் நான்கு உளர்
முருகுஅவிழ் நறுந்தார் முந்நூல் மார்பத்து
இருபிறப்பாளன் ஓரிடத்து எதிருபு
நலங்கிளர் ஒருதனி முதல்என நாடி
பொலங்கழல் இரண்டையும் புலனுறு மேதகு
முப்பொறிகளினான் முயற்சியில் போற்றலும்
நாற்பொருள் பயக்க நற்கனி வாயினைத் திறந்து
ஏற்புடைச் செய்யுள் ஐந்தினுக்கு இலக்கணம்என
ஆறுஅறி அந்தணர் அருமறைப் பொருளால்
எழுகடல் புவனத்து எழுந்து இறை வெளிவர
அறுசுவையினுள் அதிமதுர முக்கியச்சுவை
உறுபொருள் ஐந்துடன் உயர்தமிழ் மொழியால்

நால்வகைப் பனுவல் மூஉலகமும் அளந்தவன்
இருசெவிக்கு அமுதாம்என இனிது அளித்த
ஒருபேராண்மையின் உயிர்கள்தாம் அனைத்தும்
பிறந்துஇறந்து உழலும் அப்பெரும்பிணி தவிர்த்துஅருள்
ஞான பூரண! சுகோதய! நாவீற!
மான பூடண! குருகாபுரி வரோதய!
மறு சமயத்தவர் மத்தமால் யானையைத்
தெறும் ஒருசிங்கமாம் திருப் பெரும்பூதூர்
வரும் எதிராசனை மனம்மகிழ்ந்து ஆண்ட
இருசரணாம்புயத்து என்னையும் ஒன்றாய்
அருள்புரிந்து ஆண்டதற்கு ஆதிக் காலத்து
இம்மாநிலத்து என்பொருட்டால்
கைம்மாறு எவன் நீ கைக்கொண்டதுவே? (803)

இஃது எழுகூற்றுஇருக்கை.

(இ-ள்) (முந்நீர் ... வியப்பான்) சமுத்திரத்தை எல்லையாக உடைய நிலத்தின்கண் உயர்திணையிடத்து ஆண் பெண் என்னும் இரண்டுபாலும் மதிக்கும்படி (இருவிசும்பு ஒழுக்கத்து) பெருமையை உடைய ஆகாயவீதியினிடத்து (ஒருஞான்று ... உழப்பின்) ஒருநாளின்கண் ஒருகணப்பொழுதும் ஒழிவில்லாத முயற்சியோடும் (ஒருதனி ... ஊர்தியின்) ஒன்று எனப்பட்ட ஒப்பற்ற உருளோடு தாள்இரண்டும் இல்லாத பாகனை உடைய தேரின்மீதே, (ஒருபிணர் - செம்மலின்) ஒன்றான சருச்சரை வடிவினையுடைய பெரிய கையினையும், பெருகாது சிறுகாது தம்மில் ஒத்த புழையோடு கூடிய இரண்டு கரடத்தினையம், மூன்று மதத்தினையும், நான்ற வாயினையும் உடைய யானையை உரிக்கும் உருத்திரனைப் போலச் சிவந்து, (இருகணும் இமையாத் தேவர்கள் ... நாலாம் கடவுள் வீற்றிருக்கும் நற்றிசைவரும் இளங்கதிர்) இரண்டுநயனமும் இமையாத வானோர் ஒருகாலமும் விட்டு நீங்காது திரிவித கரணங்களும் ஆத்மஞானத்துடன் ஒருநெறிப்பட இரண்டுகரங்களையும் குவித்து மூன்றுபொழுதும் தலைவணக்கம் செய்ய, நான்குமுகங்களை உடைய பிரமனைப் போல விரும்பியஎல்லாம் கொடுக்கும் ஐந்துவிருக்கமாகிய கற்பகாடவி நீழலிலே அறம் முதலாகிய நாலுபொருள்களுள் முன்னே நின்ற மூன்றுபாலும் தம்மாலாய பெரிய இன்பத்தைக் கைக்கொள்வாயாக என்று எதிர்கொண்டு நிற்ப, இரண்டுபக்கமும் மின்போன்றதொரு மருங்குலை உடைய வானவர்மகளிர் தாளமும் கானமும் வாச்சியமும் அபிநயமும் ஒருகூறுபாடு எய்த இரண்டுபதங்களினாலும் நாடகத்தை நடித்து ஒழுகாநிற்ப, நாலுதிக்கிலுமுள்ள சத்துருக்கள்மாறுபாட்டைக் கெடுத்து மூன்றுமுரசமும் நீங்காமல் முன்றிலின் ஆரவாரிப்ப, செவி ஆதிய பொறிஐந்தினும் தங்கிய சத்தாதிகள் ஐந்தினையும் அடக்கி, உண்மைப்பொருள்களைக் கூறும் நான்கு வேதத்தினையும் தெளிய ஆராய்ந்த முக்கோல்பகவராகி எடுத்த செனனந்தோறும் இழைத்தமுறையே அடைவு தப்பாமல் வரும் நல்வினை தீவினை இரண்டையும் ஓர்கவென்று பரத்துவ சொரூபரூபகுண விபூதிகளின் நிலைமை இத்தன்மைத்து என நிச்சயமாக உட்கொண்டோர் - இம்மை மறுமை இரண்டும் தெளிந்தோர் - சாத்துவஇராசததாமதம் என்னும் குணம்மூன்றனுள் முற்குணம் குடிகொண்டோர் - ஆகிய எதிகளுடன் நாலாம்பெருங்கடவுள் என்னும் இந்திரன் ஒருபராக்கு அற வீற்றிருக்கும் கிழக்கு என்னும் நல்ல திக்கில் உதிக்கும்

இளைய ஞாயிறு, உலகின்கண் உள்ள இனிய உயிர்கள் அஞ்சுவவாக அவரவர் வாழ்நாள் அற்ற அந்தியத்தில் உயிரை உண்ணும்படிக்கு விதித்த நமன்திக்கில் எழுந்த கூறுபாடு ஆச்சரியம் என்று, நினது திருமேனியில் சுடர்ச்சோதியைக் கண்டு உட்கொண்டு அது விளங்கும்படிக்கு, உத்தரகங்கையினின்றும், ஆறு-தாள்களையும் அழகிய சிறகுகளையும் உடைய வண்டின்சாதி நான்கும் குடையத் தேன் ஒழுக்கும் நறுவிதாம் தாமரைத்தாரும் முப்புரிநூலும் கிடக்கும் மார்பினை உடைய இருபிறப்பாளனாகிய மதுரகவி, ஒருதானத்து எதிர்ந்து, பேரானந்தம் தழையாநின்ற மூவராம் ஒருதனிமுதலாகிய ஸ்ரீமந்நாராயணன் என ஞானத்தால் உட்கொண்டு, பொன்னால் செய்த வீரக்கழல்உடைய நின் திருவடிகள் இரண்டையும் கட்புலன் உறவும் பெருமை எய்திய மனோவாக்குக்-காயங்களின் முயற்சியால் போற்றலும், அறம் முதலிய நான்குபொருளும் பயப்பதாக நல்ல கனி போன்ற திருப்பவளத்தினைத் திறந்து, வெண்பா ஆசிரியம் கலி வஞ்சி மருட்பாஎனப் பெயர் பொருந்துதலுடைய யாப்பு ஐந்தினுக்கும் இலக்கணம் என்று சொல்வதாக, ஆறுஅங்கங்களையும் தெளிந்த அந்தணர்க்கு உரியவாய் அறிதற்கு அரியவாம் நால்வேதப்பொருளினால், பரமபதநாதனாகிய இறை கருடவாகனத்து ஏறி, எழுகடலும் சூழ்ந்த பூலோ-கத்தில் வெளிவரும்படிக்குச் சுவைஆறனுள்ளும் அதிமதுரம் என்னும் முக்கியச்சுவை மிகுவதாக, ஐந்துபொருளொடும் கூடிய தமிழ்மொழியில் திருவிருத்தம், திருவாசிரியம், திருவந்தாதி, திருவாய்மொழி என்னும் நான்கு கூறுபாடுடைய நாலுபிரபந்தங்களையும் உலகம்மூன்றும் அளந்த அவன் திருச்செவிகட்கு அமுதம் என்று சொல்லும்படி இனிமை எய்த ஊட்டிய ஒப்பற்ற அரிய செயலொடும், உலகின்கண் உள்ள உயிர்கள்யாவும் பிறந்து இறந்து அலம்வரு பிறப்பாகிய பெரிய பிணியைத் தீர்த்துக் கிருபை செய்த ஞானபூரணனே! ஆனந்தத்துக்குப் பிறப்பிடம் ஆனவனே! நாவீறு உடை-யானே! அபிமானபூஷணனே! குருகைமாநகரிடத்து உதித்த பல வரங்களும் உதயமானவனே! பரசமயிகளான மதயானைத்திரளை வெல்லும் ஒரு சிங்கமான திருப்பெரும்பூதூர் அடிகளாகிய எதிராசனைத் திருவுளம் மகிழ்ந்து இனிதாக ஆண்ட இரண்டு என்னும் சரணதாமரையால் அறிவில்லாத என்னையும் ஒரு பொருளாகக் கருணைபுரிந்து அடிமைகொண்டதற்கு இந்தப் பெரிய நிலத்து முற்காலத்து எனது ஏதுவாக நீ கைக்கொண்ட கைம்மாறு யாது என்று சொல்லுவாயாக என்றவாறு.

இதனுள், 'ஒருபகல்' என்றது கணப்பொழுதை; 'ஒருபகலுள்ளே உருப்பவிர்' என்பதனால் அறிக. ஒடியா உழப்பு - ஒழிவு இல்லாத முயற்சி. பாகன் 'பாகு' என அன் விகுதி கெட்டது. பிணர் - சருச்சரைவடிவு. செம்மல் - பெரியோன். இன் - உவமஉருபு. நசைஇய - விரும்பப்பட்டன. முழுநலம் - பேரானந்தம். தெற்றென - தெளிய. பிறழாது - மாறாடாது. ஒருங்கு - ஒக்க. ஒருதலை - நிச்சயம். இருமை - இம்மை, மறுமை. முற்குணம் - சாத்துவிககுணம். நாலாங்கடவுள் - இந்திரன். அமைத்த - விதித்த. இறும்பூது - ஆச்சரியம். உளர்தல் - குடைதல். அவிழ்த்தல் - ஒழுக்குதல். நலம் - ஆனந்தம். நாற்பொருள் - அறம் பொருள் இன்பம் வீடு. உறுபொருள் ஐந்துடன் என்பது - 'மிக்க இறைநிலையும் மெய்யாம் உயிர்நிலையும், தக்க நெறியும் தடையாகித் - தொக்கியலும், ஊழ்வினையும் வாழ்வினையும்' என்னும் பொருள்ஐந்துடன் என்றவாறு. பேராண்மை - அரிய செயல். பொருட்டு - ஏது. கைம்மாறு - உபகாரம் கொண்டு உபகாரம் செய்கை. எவன் - யாது என்றவாறு.

'முந்நீர் வரைப்பின் இருபால் வியப்பான் இருவிசும்பு ஒழுக்கத்து ஒருதனித்-திகிரி பதம்இரண்டும் இலாப் பாகுடை ஊர்தியின் முக்கட்செம்மலின் நாலாம் கடவுள் வீற்றிருக்கும் நற்றிசை வரும் இளங்கதிர், நமன்திசை எழுதிறன் இறும்-பூது என்ன, இருபிறப்பாளன் ஓரிடத்துளதிருபு முதல் என நாடிப் போற்றலும், கனி வாயினைத் திறந்து, அருமறைப்பொருளால் எழுகடல் புவனத்து எழுந்து இறை வெளிவர, உறுபொருள் ஐந்துடன் உயர்தமிழ்மொழியால் நால்வகைப் பனுவல் மூவுலகமும் அளந்தவன் இருசெவிக்கு அமிர்தாம் என இனிது அளித்த பேராண்மையின் உயிர்கள்தாம் பிறந்து இறந்து உழலும் பிணி தவிர்த்-தருள் ஞானபூரண! நாவீற! குருகாபுரி வரோதய! எதிராசனை ஆண்ட இரு-சரணாம்புயத்து என்னையும் ஒன்றாய் அருள்புரிந்து ஆண்டதற்கு என் பொருட்டால் கைம்மாறு எவன் நீ கைக்கொண்டதுவே' எனக் கூட்டுக.

இருபான்ஆறும் (270) என்ற உம்மையால் மாத்திரைச்சுருக்கம், மாத்திரைப்-பெருக்கம், ஒற்றுப்பெயர்த்தல், திரிபதாதி, சதுரங்கபெந்தம், கடகபெந்தம் என்பனவும் கொள்ளப்படும். அவற்றுள், [48]

27. மாத்திரைச்சுருக்கம்

**299அ. மாத்திரை சுருங்க மறுபொருள் உணர்த்துஉரை**
**மாத்திரைச்சுருக்கம் என வகுத்தனரே.** [49]

[ஒருசொல் தன்னிடத்துள்ள நெட்டெழுத்து மாத்திரை சுருங்கிக் குற்றெழுத்தாய காலத்து வேறொருபொருளைக் குறிப்பிடுதல் மாத்திரைச்சுருக்கம்.]

**பஞ்சாயுதங்கள் எனப் பாற்கடலான் பற்றியவைக்கு**
**எஞ்சாத சாதிப்பேர் இட்டுஎழுத - நெஞ்சே!**
**கணக்காயர் புள்ளியிட்ட காலத்தே யோகம்**
**பிணக்காதவர் பேர் பெறும்.** (804)

இது மாத்திரைச்சுருக்கம்.

மாத்திரைச்சுருக்கம் என்பது ஒருபொருள் பயந்துநிற்கும் ஒருசொல்லாயினும் பலபொருள் பயந்துநிற்கும் தொடர்ச்சொல்லாயினும் முதலெழுத்து ஒரு மாத்திரை குறையப் பிறிதொரு பொருள் பயப்பதாயும் பலபொருள் பயப்ப-தாயும் பாடுவது. அவ்வாறு இதனுள் வந்ததாவது : ஆயுதங்களுக்குச் சாதிப்பேர் ஏதிகள். அவற்றை எதிகள் எனப் புள்ளியிட்டு, மாத்திரை குறைக்க, இருடிகள்-பெயராய் நின்றவாறு காண்க.

[பண்டு எகரத்துக்குஎனத் தனி வரிவடிவம் கொள்ளாது ஏகாரத்தின் மேல் புள்ளியிட்டு எகரத்துக்கு வடிவம் அமைத்துக்கொண்டமை உளங்கொளத்தக்கது. பாற்கடலில் பள்ளிகொண்ட பரமனாகிய எம்பெருமான்தன் திருக்கரங்களில் பற்றிய ஐம்படை-களுக்கும் பொதுவான பெயராகிய ஏதிகள் என்பதனை எழுதி அவற்றுள் ஏகாரத்தின் மீது ஆசிரியர் புள்ளிவைத்தகாலத்தே அஃது எதிகள் என்றாகி யோகநெறியினின்றும் வழுவாத துறவிகளின் பெயராகிய எதிகள் என்று ஆகும்.] [49]

28. மாத்திரைப்பெருக்கம்

**299ஆ. மாத்திரை பெருக மறுபொருள் உணர்த்துஉரை**
**மாத்திரைப்பெருக்கம் என வகுத்தனரே.** [50]

[மொழி முதலிலுள்ள குறிலை நெடிலாக்கி வேறுபொருள் பயக்கச் செய்வது மாத்திரைப்பெருக்கம் எனப் பெயர்பெறும்.]

**திலக நுதலாய்! திலம் குறிஎன் ஏவல்,**
**அலகு, எண் பொருள்; பதத்திற்கு ஆதி - நிலவுஎழுத்தின்**
**புள்ளி பிரித்தால் பொருள்நிலைமைத்தாம் என்பர்,**
**தெள்ளியநூல் கற்றோர் தெளிந்து. (805)**

இது மாத்திரைப்பெருக்கம்.

மாத்திரைப்பெருக்கமாவது முன்புபோல வரும் சொற்களுள் முதல்எழுத்து ஒருமாத்திரை ஏறப் பிறிதுபொருள் பயப்பது. அவ்வாறு இதனுள் வந்ததாவது எண் என்பது எள்ளையும், இதனைக் கருது என்னும் ஏவற்பொருளையும், கணிதத்தையும் குறித்து மூன்றுபொருள்களில் வரும். அப்பதத்தின் முதல் எழுத்தாகிய எகரத்தை ஒருமாத்திரை பெருக்க ஏண் என்றாகி நிலை-யுடைமைப்பொருளைச் சுட்டினவாறு காண்க.

[திலகம் அணிந்த நெற்றியை உடையவளே! எள், எண்ணு என்னும் ஏவல்வினை, கணிதம் என்ற மூன்று பொருள்களில் வழங்கும் 'எண்' என்ற சொல்லில் முதலில் காணப்படும் எழுத்தாகிய எகரத்தின்மேல் இடப்பட்ட புள்ளியை நீக்கினால் அஃது ஏகாரமாக, அச்சொல் ஏண் என்றாகி, நிலையுடைமைப்பொருளைக் குறிக்கும் என்று தெளிந்த நூற்கல்வியை உடையவர்கள் தெளிவாகக் கூறுவர்.
ஏகாரத்தின்மேல் புள்ளியிட்டு எகரத்தின் வரிவடிவை அமைப்பர். ஆகவே, மேலே உள்ள புள்ளியை நீக்க எகரம் ஏகாரமாகும் என்பதாம்.]

**முந்துதனித் தன்மைமொழி ஐயொடு புணர்ந்திட்டு**
**அந்தமுதல் புள்ளி அழிந்தக்கால் - செந்தேன்**
**வழிந்தமகிழ்த் தார்மாறன் வண்புலவீர்! சொல்லி**
**ஒழிந்தவற்றின் பேராய் உறும். (806)**

இதுவும் மாத்திரைப்பெருக்கம்.

இதனுள் தனித்தன்மை என்பது யான்; அதனை 'என்' எனத் திரித்து, அதனை இரண்டாவதனைப் புணர்த்து 'எனை' என்றாக்கிப் புள்ளியை அழிக்கச் சொல்லி ஒழிந்தனவாகிய பொருளைக் காட்டினவாறு காண்க.

[சிறந்த தேன் வழியும் மகிழம்பூமாலையை அணிந்த மாறனைப் பாடும் வளவிய புலவீர்! என்பது ஆடூஉமுன்னிலை. ஏனை - முற்கூறியவற்றில் ஒழிந்து நிற்பது.] [50]

29. ஒற்றுப்பெயர்த்தல்

**299இ. ஒற்றினைப் பிரிக்க மற்றொருபொருள் உணர்த்துதல்**
**ஒற்றுப்பெயர்/த்தல் என்று உரை உணர்த்தும். [51]**

[ஒருசொல்லில் உள்ள முதலெழுத்தாகிய உயிர்மெய்யின்கண் உள்ள ஒற்றினை நீக்கி-னால் வேறொரு பொருளுணர்த்தும் பிறிதொரு சொல்லாதலைப் பாடலில் தெரிவித்து, இருசொற்களின் பொருளுக்கும் சிலேடை அமையப் பாடுவது ஒற்றுப்பெயர்த்தலாம்.]

**ஓராழி வையத்து உதயம் புரிந்துதினம்**
**பேரா இருள்துணிக்கும் பெற்றியால் - ஈராறு**
**தேசுற்ற நாமம் சிறந்தோர் பரிதியொடு**
**மாசற் றெழுமா தவர். (807)**

இஃது ஒற்றுப்பெயர்த்தல்.

இதனுள், மாதவர் என்று நின்றது மகரஒற்றைப் பெயர்க்க ஆதவர் என நின்றவாறு காண்க. முதலே நின்ற மொழியின் முதலெழுத்தின் ஒற்றைப் பெயர்த்தலால் ஒற்றுப்பெயர்த்தல் ஆயிற்று. இது திருமாலுக்கும் சூரியனுக்கும் சிலேடை.

திருமால்: ஒப்பற்ற சமுத்திரம் சூழ்ந்த பூமியில் அவதாரம்செய்து, நாடோறும் தம்மை நினைந்த அடியாரிடத்து எடுத்த செனனந்தோறும் விட்டு நீங்காத அகஇருளை அறுத்தலால், மேம்பட்ட கேசவாதி பன்னிருநாமங்களை உடைய திருமால், சக்கரத்தோடு எந்தக் குறைபாடும் அற்றுத் திருமகளோடு கூடிய பெரிய தவத்தை உடையவர் ஆவார்;

சூரியன்: ஒற்றைச்சக்கரம் பூண்ட தேரில் தோற்றமளித்து, நாடோறும் உலகத்தை விட்டு நீங்காத அந்தகாரத்தை ஓட்டுதலால், தாதுரு முதலிய பன்னிரு-பெயர்களைக்கொண்டு சிறப்பவர், விளக்கத்தோடு களங்கமற்று எழும் சூரிய-தேவராவார்,

எனச் சிலேடையைத் திருமால், சூரியன் என்ற இருவர்க்கும் பொருத்திக்கொள்க. [51]

## 30. திரிபதாதி

**299ஈ. மூன்றுஎழுத்து ஒருமொழி முதல் ஈறு இடை ஈறு**
**ஆன்ற பொருள் பிறவாம் திரிபதாதி. [52]**

[மூன்றுஎழுத்துக் கூட ஒருமொழியாகியும், அதன் முதல்எழுத்தும் கடை-எழுத்தும் கூட வேறொரு மொழியாகியும், இடையெழுத்தும் கடையெழுத்தும் கூட மற்றொரு மொழியாகியும் வருவது திரிபதாதியாம். திரிபதாதி - மூன்று பதங்களாக ஆகக் கூடியது.]

**முந்த மாயன் பதியாய் முற்றிய பேர் மூன்றெழுத்தில்,**
**வந்துமுதல் ஈறு இசையாய், மற்று இடைஈறு - அந்தச்**
**சுதரிசனத்தான் துணைத்தாள் சூழ்சிலம்பு உள்ளீடாய்**
**வதரி வரிதரி யாமால். (808)**

இது திரிபதாதி. இதனுள் வதரி என்பது திருப்பதி. அதனை முதலும் ஈறும் வரியாக்கி, இடையும் ஈறும் தரியாக்கி அவ்வாறாதல் கண்டுகொள்க.

[வரி - இசை. தரி - சிலம்பில் இடு பரல். சக்கரத்தை ஏந்திய திருமாலுடைய நமக்குத் துணையான திருத்தாள்களில் அணியப்பட்ட சிலம்பின் உள்ளிடு பரல் எனக்கொள்க.] [52]

## 31. அக்கரச்சுதகத்தில் ஒருபேதம்

**எந்தை இராமற்கு இமையோர் சரண்புகுத**
**முந்த நகரி, முதலெழுத்து இல்லா நகரி**
**உந்துதிரள் கிள்ளை, இடையொற்று இல்லாக் கிள்ளைகள், தேர்,**
**சிந்த முழுதும் இழந்தான் தசமுகனே. (809)**

இஃது அக்கரச்சுதகத்தில் ஒரு பேதம்.

[நகரி - இலங்கைநகர். முதல் எழுத்து இல்லா நகரி - கரி - யானை. உந்து திரள் கிள்ளை - குதித்து ஓடும் கூட்டமான குதிரைகள். இடை ஒற்று இல்லாக் கிள்ளைகள் - கிளைகள் - உறவினர். தேவர்கள் சரணம் புகுந்ததால் எம்பிரான் போரிடப் பத்துத்தலையனாம் இராவணன் முதலில் நகரையும் பிறகு யானை, குதிரை, உறவினருடைய உதவி, தேர்

என்பன அழியுமாறு அவற்றையும் முழுமையாக இழந்தான். கடலின் அக்கரை-யிலிருந்தபோதே வீடணனுக்கு எம்பெருமான் இலங்கைஆட்சியை ஈந்தமையால் இராவணன் முதலிலேயே இலங்கையை இழந்தான் என்று கூறப்பட்டது.] [53]

32. சதுரங்கபெந்தம்

**299உ. சதுரங்க அறையில் சதிர்பெற அமைப்பது**
**சதுரங்க பெந்தமென்று அறைதரு தன்மைய. [54]**

[நாலுபக்கமும் மையங்களில் நானான்கு பதினாறு அறையிலும் நடுவில் நாலு அறையிலும் ஒரே திருநாமம் அமையப் பாடுவது.]

**மானவனா மேவலா மாறனித்த மாமாலை**
**யானதவ போதனுமா யாய்ந்தகோ - மானவடி**
**நாதனின்மே னன்கலன்பூ ணென்முனநீ வந்தெவனொன்**
**றாதயமா வன்புலமாய.** (810)

[மானவனா மேவலாம் மாறன் நித்த மா மாலை
ஆன தவ போதனுமாய் ஆய்ந்தகோ - மான அடி
நா தனின்மேல் நன்கலன் பூண் என் முனம் நீ வந்து எவன்?
ஒன்றாத யமா! வன்புலம் ஆய.]

(இ-ள்) ஒன்றாத யமா - சருவான்மாக்களோடும் பொருந்தாத நமனே! மானவனா - மனுகுலம் காவலனாக. மேவலாம் மாறன் - நங்கையார்க்கும் காரியார்க்கும் புத்திரமோகம் தீரப் புத்திரனாம் மாறன் என்னும் பிள்ளைத்திருநாமத்தை உடையவன். நித்த மா மாலை - அழிவில்லாத பெரியபிராட்டியாருடன் கூடிய பெரியோனை. ஆன - தன்னிடத்து ஆக்கம் பெற்ற. தவபோதனுமாய் - மெய்த்தவத்தினோடும் கூடி ஞானபானுவாகி. ஆய்ந்தகோ - அவனே பரத்துவம் என்று தெளிந்த தெரிசனராசன்; மான அடி - அந்த மாறனுடைய பெருமையை உடைய திருவடிகளை. நா தனின் மேல் - எனது நாவினிடத்தும் அதற்கு மேலான சிரத்தினிடத்தும். நன்கலன் பூண் - நல்ல ஆபரணமாகப் பூண்ட. என்முனம் நீ வந்து எவன் - என் முன்னே வந்து நீ சாதிப்பது எது தான்? ஒன்றுமில்லை. வன்புலம் ஆய - என்னிடம் நீ வருதற்கு எளிய இடம் அன்று; வலிய இடமாயிற்று. ஆதலால் உனக்கு வரப்போகாது என்று அறிந்துகொள்.
மேல் - இடம் பற்றிய ஆகுபெயர்; தலையை உணர்த்தியது.
திணை - வாகை; துறை - அறிவன்வாகை. [54]

33. கடகபெந்தம்

**299ஊ. பெருவகன் றறையில் பெந்திப்பதுவும்**
**கருதுகில் கடகபெந்த மாகும். [55]**

[வட்டத்தின் மேற்புறத்துச் சிறப்பாக அமைக்கப்பட்ட அறைகளில் ஓரெழுத்தே இரண்டிடங்களில் பயன்படுமாறு அமைப்பது கடகபெந்தம்.]

**கோல நிலமேலழகு கூடு நெடு வீடுற மா**
**மூலம்எனச் சென்று உதவு முன்னோனே! - நீலமணி**
**வண்ணா! வடமலையா! மாதவா! கஞ்சமலர்க்**
**கண்ணா! சரணாகதி.** (811)

இது கடகபெந்தம். நெடுவீடு - பரமபதம்.
திணை - பாடாண்; துறை - கடவுள்வணக்கம்.

[அழகான இந்த நிலவுலகினைக் காட்டிலும் அழகுகள் நிரம்பியிருக்கும் பரந்த வீட்டுலகை எய்தக் கசேந்திரன் என்ற யானை 'மூலமே' என்று அழைத்த அளவில் சென்று உதவும் யாவருக்கும் முற்பட்ட இறைவனே! நீலமணி போன்ற நிறத்தை உடையவனே! வடவேங்கடத்தில் உள்ளோனே! திருமகள்தலைவனே! செந்தாமரைக்கண்ணனே! நீயே அடியேனுக்கு அடைக்கலம் தருவாயாவாய்.]

**நாக நகராக நிதி நாகரிகராக நிறை**
**ஏக நகராகி இணையில்லா - தாக நிகழ்**
**தென்அரங்கன் ஆளாய சீராளராம் ஞான**
**நன்னரங்கர்க்கே அடியேன் நான்.** (812)

இதுவும் கடகபெந்தம். திணை - பாடாண்; துறை - சமயவணக்கம்.

[செல்வத்தால் தேவர்உலகத் தலைநகரை ஒப்பதாகி, மக்கள் கண்ணோட்டம் உடையவராக அமைந்த ஒரேதிருத்தலமாகித் தனக்கு ஒப்பில்லாததாக விளங்கும் அழகிய திருவரங்கத்திலுள்ள எம்பெருமானுக்கு அடியவராகிய சிறப்பினை அனுபவித்துக்கொண்டிருக்கும் அறிவுவடிவான உள்ளத்தை உடைய அடியவர்க்கே அடியேன் அடியவன் ஆவேன்.
நாகரிகம் - கண்ணோட்டம், அருள். நன்னர் அங்கர் - நல்ல இதயமுடையவர்.]

ஆக மாத்திரைச்சுருக்கம் முதல் கடகபெந்தம் ஈறாகச் சித்திரகவி ஆறும் அடைவே காண்க. [55]

சித்திரகவி முற்றும்.

சொல்லணியியல் உரை முற்றும்.

**தரு காளமேகம் கவிராயராயன் சடையன் அன்பால்**
**குருகாபுரேசர் புனை அலங்காரம் குவலயத்தே**
**கருகாத செஞ்சொல் உரைவிரித்தான் கற்பகாடவி போல்**
**வரு காரிரத்ன கவிராயன் பேரை வரோதயனே.**

## நான்காவது
## எச்சவியல் உரை

வழுக்கள்

**300. மொழிந்ததை மொழிதல், மாறுபடு பொருள்மொழி,**
**பிரிபொருள் சொற்றொடர், கவர்படு பொருள்மொழி,**
**நிரல்நிறை வழுவே, யதிவழு, சொல்வழு,**
**சந்தி வழுவொடு, செய்யுள் வழு, என**
**வந்த ஒன்பதும் ஒருவழிக் கடி வழுவே. [1]**

என்பது சூத்திரம். இவ்வோத்து என்ன பெயர்த்தோ எனின், எஞ்சிநின்ற வழுஅணி உணர்த்தினமையான் எச்சவியல் என்னும் பெயர்த்து.
ஆயின் இத்தலைச்சூத்திரம் என் நுதலிற்றோ எனின், முன்னர் ஓதப்பட்ட அணிபெறும் செய்யுள்கட்குப் பொருந்தாத வழுக்களுள் ஒருவழிக் கடியப்பட்ட வழுக்களைத் தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) மொழிந்ததை மொழிதல் முதலாகச் செய்யுள்வழு ஈறாகச் சொல்லப்பட்டுத் தொன்றுதொட்டு வந்த ஒன்பதும் செய்யுளகத்து வருமெனில் ஒரோவிடங்களில் களையப்பட்ட வழுவாம் என்றவாறு.
வழி - இடம். ஒரோவிடங்களில் களையப்படும் எனவே, சிலஇடங்களில் வழுவமைதியாகக் களையப்படாது என்பதூஉம் ஆயிற்று. அவைஎல்லாம் மேற்காட்டுதும். [1]

1. மொழிந்ததை மொழிதல்

**301. அவற்றுள்**
**பழிஅற ஒருபொருள் மொழி பரியாய**
**மொழியொடு தொடர்வது மொழிந்ததை மொழிதல். [2]**

(எ-ன்) வைத்த முறையானே (300) மொழிந்ததை மொழிதல் என்னும் வழு ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) அங்ஙனம் தொகுத்துக் கூறப்பட்ட ஒன்பதனுள் மொழிந்ததை மொழிதல் என்னும் வழு ஒருபொருளைக் காட்டும் நிலைமொழி அப்பொருளைக் காட்டும் பரியாயமொழியொடு தொடர்வதாம் என்றவாறு.

**உடுத்தாரகை போன்று ஒளிர்மலர்ப் புன்னாகத்து**
**அடுத்தாள்விழி கடுத்தான்; அன்பா! - நடுத்தான்**
**இலைஎன்பது ஆகும்; இணைமேரு ஆகும்**
**முலைஎன்பன; தேன் மொழி. (813)**

இது மொழிந்ததை மொழிதல்
["அன்பான தோழனே! விண்மீன்களைப் போன்று ஒளிவீசும் பூக்களை உடைய புன்னாகமரத்தை அடுத்து நிற்கும் தலைவியின் விழிகள் விடம் போன்றவை. இடை அவளுக்கு இல்லை என்று சொல்லலாம்படி நுண்ணிது. அவளுடைய முலைகள்

மேருமலை போல்வன. அவள்மொழி தேன் போன்றது" எனத் தலைவன் பாங்கற்குத் தலைவியின் இயல்இடம் கூறியவாறு.
உடு - விண்மீன்; தாரகை - விண்மீன். எனவே மொழிந்ததை மொழிதல்.]
இதனுள், 'உடுத்தாரகை போன்று ஒளிர்மலர்' என்றதனால் அவ்வாறாதல் காண்க. நடு - இடை. தேம் - தேன். அஃதேல், சொல்பின்வருநிலையும் பொருள்பின்வருநிலையும் சொல்பொருள்பின்வருநிலையும் அவ்வாறு அல்லவோ எனின், அற்றன்று; அவற்றிற்குப் பொருள் வேறு என்க. என்னையெனின், சொல்பின்வருநிலை என்பது மொழிந்த சொல்லே வரினும் பொருள் வேறுபடும். அது,

'மானைப் பொருகயற்கண் மானைப் புவனமட
மானைக் கமலமலர் மானை - மானை' (363)

என்பதனால் அறிக. பொருள்பின்வருநிலை என்பது மொழிந்த பொருளே மொழியினும் சொல் வேறுபடப் பொருள் ஒன்றாவதோர் அலங்காரம். அது,

'மாய்த்தேன் செனனம் வதைத்தேன்என் வல்வினையை
தேய்த்தேன் அறிவின் சிறுமையினை' (364)

என்பன. சொல்பொருள்பின்வருநிலை என்பது, சொல்லும் பொருளும் பெயர்த்து வேறுவேறாகிச் சொல்ஒன்றாய் வருவது. அது,

'மாதர் மாதர்கூர் வாள்அமர் உண்கண் மாநிலத்து
மாதர் மாதர்கூர் வண்டுஇமிர் அளியதா மரைப்பூ
மாதர் மாதர்கூர் மாலும் வேலையும் எனவளர்வான்' (366)

என வரும். [2]

### வழுவமைதி

302. அதுவே
**சிறப்பினும் விரைவினும் சிதைவுஇன்று ஆகும். [3]**

(எ-ன்) இது முன்பு எய்தியது இகந்துபடாமல் காக்கின்றது.
(இ-ள்) அங்ஙனம் ஒருபொருள்மேல் பலசொல் வருதல் சிறப்பின்கண்ணும், விரைவின்கண்ணும் வரும் எனில் இலக்கணவழு இன்றாம் என்றவாறு. என்னை? 'ஒருபொருள் பன்மொழி சிறப்பினின் வழாஅ' (நன். 378) என்பதனால் அறிக.

**மீமிசைத்தாய்த் தோன்றும் அழல்வெண்மதி வந்தால் இறைவா!
யாம்இசைப்பது ஒன்று உளதாய் எய்யேமால் - பூமிசைவாழ்
பொன்அங்கொடி நோய் புடைபெயர்போழ்து உற்றுஉணர்ந்த
நின்அன்பு இதுவால், நினைந்து.** (814)

["தலைவனே! தாமரையில் வாழும் பொற்கொடியாம் திருமகள் போன்ற தலைவி நீ அவளைப் புல்லிக்கிடக்கும்போதும் புடைபெயர்ந்தால் அப்பிரிவினையும் தாங்காமல் பசலை உறுகின்ற நிலையைக் கண்டறிந்த உன் அன்பு இப்பொழுது இவ்வாறாகிவிட்டது. நீ தலைவியை விடுத்துப் பிரியும்போது வானத்தில் தோன்றும் நெருப்புப்போன்ற வெண்ணிலா இரவில் தலைவியை வருத்தும்போது அவளுக்கு ஆறுதல் கூற எம்மால் கூறப்படும் செய்தி ஒன்று இருப்பதாக நாங்கள் அறிகிலோம். ஆதலின் நின் பிரிவு தலைவிக்கு நலன் தாராது" என்று கற்பில் ஓதல் முதலிய கருதிப் பிரியக் கருதிய தலைவனைத் தோழி செலவு விலக்கியவாறு.
மீ - மேல். மிசை - மேல். மீமிசை - ஒருபொருட்பன்மொழி. இது சிறப்பின்கண் வந்தது. எய்யாமை - அறியாமை.]

இது சிறப்பின்கண் ஒருபொருட்பன்மொழி வந்தது.
கள்ளர், கள்ளர்; பாம்பு, பாம்பு; தீத்தீத்தீ; போபோபோ - விரைவின்கண் இரண்டும் மூன்றும் ஒருபொருட்கு வந்தன. என்னை?

'அசைநிலை பொருள்நிலை இசைநிறைக்கு ஒருசொல்
இரண்டுமூன்று நான்கு எல்லைமுறை அடுக்கும்' (நன். 395)

என்பதனால் அறிக.
பொருள்நிலை - விரைவு, வெகுளி, உவகை, அச்சம், அவலம் என்னும் ஐந்து பொருண்மைக்கண்ணும் வரும் எனினும் ஈண்டு இவை விரைவு. [3]

2. மாறுபடு பொருள்மொழி

**303. பகர்ந்த முன்மொழிப்பொருளொடு முரண் பான்மையின்**
**புகன்றிடும் அதுவே மாறுபடு பொருள்மொழி. [4]**

(எ-ன்) வைத்தமுறையானே (300) மாறுபடுபொருள்மொழி ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) முன்னர் மொழிந்த மொழிப்பொருளொடும் அதன்பின்னர் வரு மொழிப்பொருள் மாறுபடு பகுதியை உடைத்தாகக் கூறுமது மாறுபடுபொருள்மொழியாம் என்றவாறு. 'பின்னர் வருமொழிப்பொருள்' என்பது எதிர்மறை எச்சம்.
['பின்னர் வருமொழிப்பொருள்' என்பது நூற்பாவில் இல்லாமல் வருவித்து உரைக்கப்பட்டது. அஃது எதிர்மறையான மறுதலைச்செய்தியை விளக்குகிறது.]

**முற்ற உரைத்த முதுவேத நுட்பமெல்லாம்**
**கற்றுஉணர்ந்து மெய்ஞ்ஞானம் கைக்கொண்டீர்! - தெற்றெனவே**
**தத்துவங்கள் மூன்றினையும் சந்தயம்தீரீர் இனிமேல்**
**நித்தம் அநித்தம் தெளிவீர் நீர். (815)**

["முழுதும் உரைத்த பழைமையவாகிய வேதங்கள் கூறும் நுட்பமான கருத்துக்களை எல்லாம் ஞானதேசிகர்பால் உபதேசவாயிலாகக் கற்று மனத்தில் நிலைபெறுத்தி உண்மை அறிவினை உணர்ந்தீர்களே! தெளிவாகச் சித்து அசித்து ஈசுவரம் என்ற உண்மைப்பொருள்கள் மூன்றினையும் ஐயம் அற உணருங்கள். இனிமேல் இவை நிலைபேறுடையவை, இவை நிலைபேறு இல்லாதவை என்பதனைத் தெளிவாக உணருங்கள்" என்ற இப்பாடலிலே, வேதங்களை முழுதும் உணரவே, சித்து அசித்து ஈசுவரம் பற்றிய செய்திகளும் நிலையுடையன நிலையற்றன பற்றிய செய்திகளும் தெளிவாகப் புலப்பட்டுவிடும் ஆதலின், அவற்றைப் பிறகு தெளிய உணருங்கள் என்று கூறுவது மாறுபடு பொருள்மொழியாம்.]
இது மாறுபடுபொருள்மொழி. என்னை? இதனுள் 'முழுவேத நுட்பமெல்லாம் கற்று உணர்ந்து மெய்ஞ்ஞானம் கைக்கொண்டீர்' என்று கூறி, 'தெற்றெனவே தத்துவங்கள் மூன்றினையும் சந்தயந் தீரீர்' என்றதனால் மாறுபடு பொருள்மொழி ஆயிற்று. தெற்றென - தெளிய. தத்துவங்கள் மூன்றாவன - சித்து அசித்து ஈசுவரம். [4]

வழுவமைதி

**304. அச்சமும் காமமும் அகம்மிகின் உரித்தே. [5]**

(எ-ன்) இஃது எய்தியது இகந்துபடாமல் காக்கிறது.

(இ-ள்) அச்சம் அகத்து மிகினும் காமம் அகத்து மிகினும் அவ்வாறு உரைக்கப்படும் என்றவாறு.
அகம் - உள்ளம். காமம் - விருப்பம்.

**வாசமலர் மெல்அணைமேல் வைத்தாலும் மண்டுஅழல்போல்**
**கூசும் மலர்ச்சிற்றடிக்குக் கொற்றவா! - நேசம்அது**
**நெஞ்சத்து அடங்காத நேரிழை நின்னோடு வரின்**
**கஞ்சத்தடம் காண் கடம்.** (816)

இது காமம் மிகுதியான் வந்த மாறுபடுபொருள்மொழி. அச்சம் மிகுதியான் வருவனவும் வந்தவழிக் கண்டுகொள்க.
["வெற்றி பொருந்திய தலைவனே! உன்னிடத்துக் கொண்ட காதலைத் தன்நெஞ்சத்து அளவையும் கடந்து விஞ்சக் கொண்டிருக்கின்ற தலைவி உன்னுடனே வருவாளாயின், நறுமணம் கமழும் மலர்கள் தூவப்பெற்ற மெல்லிய மெத்தைமேல் வைக்கும்போதும் கொழுந்துவிட்டு எரியும் தீமேல் வைப்பதற்குக் கூசுவனபோலக் கூசும் மலர்போன்ற அவளுடைய மெல்லிய பாதங்களுக்குப் பாலைநிலமும் தாமரை பூத்த பொய்கையாய்க் குளிர்ந்து இன்பம் தரும்" எனக் காதல்மேலீட்டால் வெம்மையைத் தண்மையாகக் கொண்டு கூறுவது வழுவமைதியாகும்.] [5]

3. பிரிபொருள் சொல்தொடர்

**305. உரியசொல் பலபொருள் ஒன்றில் ஒன்றாதன**
**பிரிபொருள் சொற்றொடர் எனும் பெயர்உடைத்தே. [6]**

(எ-ன்) வைத்த முறையானே (300) பிரிபொருள் சொற்றொடர் என்னும் வழு ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) செய்யுளகத்துப் புலவனால் சேர்த்தற்குரிய பலசொற்களின் பலபொருள்களும் ஒன்றினோடு ஒன்று பொருந்தாதனவாகச் சொல்லப்பட்டது பிரிபொருள் சொற்றொடர் எனும் பெயரினை உடைத்து என்றவாறு.
எனவே, வேறுவேறுநோக்கப் பொருள் உடையனவாய்க் கூட்டி நோக்க ஒரு பொருளாக உரைக்கப்படாது என்றவாறு. இதனுள் ஒன்று என்பது சொல்லெச்சம்.
['ஒன்றில் ஒன்று ஒன்றாதன' என 'ஒன்று' என்பது உரையில் வருவிக்கப்பட்டது.]

**கங்கைக்குக் கன்னி நெடுங்காதம்; கஞ்சமலர்**
**மங்கைக்கு மாயோன் மணவாளன்; - நம்கைக்கு**
**எய்யா உறுப்பு உடலுள் யாதும்இலை; காமன்எனப்-**
**பட்டான் இரதி பதி.** (817)

இது பிரிபொருள் சொல்தொடர். இதனுள், பல சொல்லும் தனித்தனி நோக்கப் பொருள் உடையவாய்க் கூட்டி நோக்கப் பொருள அல்லவாதல் கண்டுகொள்க.
[கங்கையாற்றிலிருந்து கன்னியாகுமரி பல காதத்தொலைவில் உள்ளது. தாமரையில் வீற்றிருக்கும் திருமகளுக்குத் திருமால் கணவன். நம் உடலுள் நம்கைகளுக்கு எட்டாத உறுப்பு ஒன்றுமில்லை. இரதியின் கணவன் காமன் என்று மக்களால் குறிப்பிடப்படுகிறான் என ஒன்றோடு ஒன்று இயைபு அற்ற நான்கு செய்திகள் கூறப்பட்டமை 'பிரிபொருள் சொல்தொடர்' என்னும் வழுவாம்.] [6]

வழுவமைதி

**306. அதுவே**
**கள்உண் மாந்தர் பித்தரின் கடி வரையில. [7]**

(எ-ன்) இது முன்பு எய்தியது இகந்துபடாமல் காக்கின்றது.
(இ-ள்) முன்மொழிந்த பிரிபொருள்சொல்தொடர் கள் உண்டு களித்த மாந்தர் கூறுமிடத்தினும், பித்தினான் மயங்கப்பட்டார் கூறுமிடத்தினும் வழு என்று நீக்கப்படாது என்றவாறு.

**கள்ளிதனிற் பிறந்த கள்ளிற் கடுந்தேறல்**
**வள்ளிதனைப் பெற்ற புளி மாந்தேறல்; - வெள்ளிமலை**
**பெற்றபதி; வானோர் பெருமான் புரந்த பதி;**
**புற்றுஅரவின் பிள்ளை புதன்.** (818)

["கள்ளிமரத்திலிருந்து பிறந்த கள்ளினைவிடக் கடுமையான கள், வள்ளியைத் தன்னிடத்துப் பெற்ற புளிப்பினை உடைய மாங்காயிலிருந்து எடுக்கப்பட்ட கள்ளாகும். கயிலைமலை யான் விரும்பிப் பெற்ற இருப்பிடமாகும். அதுவே தேவர்தலைவனான இந்திரன் காத்துவரும் ஊராகும். புற்றிலிருக்கும் பாம்பினுடைய புதல்வன் புதன் ஆவான்" என ஒன்றுக்கு ஒன்று பொருந்தாத செய்திகளைக் கள்உண்டு களித்தான்-ஒருவன் பிதற்றியவாறு. இஃது அறிவு திரிந்தவன் கூற்றாதலின் வழுவமைதியாம்.]
இது கள்ளுண்டு மயங்கினான் மொழிந்தது. பித்தர் கூறுவனவும் வந்தவழிக் கண்டுகொள்க. 'வரையில' என்னாது 'கடிவரையில' என்றதனால், பிள்ளை-மையால் மொழியுங்காலும் ஆம்.
அஃதேல் இக்குற்றங்கள்எல்லாம் செய்யுள்நோக்கி வருவன ஆதலால் செய்-யுட்கு இலக்கணம் கூறும் நூலினுள் அன்றே உணர்த்தற்பாலன? ஈண்டு உரைத்-தல் பிறிதுஎடுத்துஉரைத்தல் என்னும் குற்றமாம் எனின், நன்று சொன்னாய்! அச்செய்யுள் என்பன சட்டகம், அலங்காரம் என இரண்டாம்; அவற்றுள் அலங்காரம் என்பன அச்சட்டகத்தைப் பொலிவு செய்வனவாம். ஆதலால் செய்யுட்குப் பொலிவுசெய்வன ஈண்டு முற்கூறி, அதன்பின்னர் ஒழிபில் செய்யுட்குப் பொலிவுஅழிவு செய்வன செய்யுட்கு வாராமல் புணர்க்க என ஈண்டு உரைக்கப்பட்டது. ஆதலால் பிறிதுஎடுத்துஉரைத்தல் என்னும் குற்றம் ஆகாது என்று அறிக. [7]

### கவர்படுபொருள்மொழி

**307. உவர்ப்புஅறத் துணிந்து ஒருபொருள்குறித்து உரைத்தசொல்**
**கவர்த்து இருபொருட்குஉறல் கவர்படுபொருள்மொழி.** [8]

(எ-ன்) வைத்த முறையானே (300), கவர்படுபொருள்மொழி ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) ஒருபொருளைக் குற்றமறத் தெளிந்து உட்கொண்டு உரைத்த சொற்குப் பொருள் கவர்த்துப் பிறிதும் ஒருபொருளைக் காட்டுவதாகி இரண்டு பொருளைக் காட்டுதல் கவர்படுபொருள்மொழி என்னும் வழுவாம் என்றவாறு.

**பற்றுஅற்று இடுதிடத்தால் பற்றியதே பற்றிஅயல்**
**மற்றொன்று தன்னை மதியாதாம் - கொற்றம்மிகும்**
**வேல்விட்டு எறிந்தனைய வெய்யவிழி நோக்கத்தால்**
**மால்விட்டு நீங்கார் மனம்.** (819)

இது கவர்படுபொருள்மொழி.
இதனுள், 'மால்விட்டு நீங்கார் மனம்' என்பது ஸ்ரீமந்நாராயணனை விட்டு நீங்காதார் மனம் எனவும், பித்து விட்டு நீங்காதார் மனம் எனவும் முதலே

தெளிந்து கொண்டுரைத்த பொருளைக் காட்டுவதுடன் இருபொருட்குக் கவர்த்-தவாறு காண்க.
பத்தர்மேல் சொல்லுங்கால்: பற்றுஅற்று இடு திடத்தால் - அயன், அரன், மண், பெண், பொன் என்னும் ஆசைகளை விட்டு நீங்கிய உண்மைஞானத்தால், பற்றியதே பற்றி - அந்தர்யாமியாக நின்ற அவனது சொரூபரூபகுண விபூதியை உட்கொண்டு அதுவே தியானமாக, அயல் மற்றொன்றுதன்னை மதியாதாம் - அவை நாலுமேயன்றி வேறுஒன்றினையும் உட்கொள்ளாதாம் என்றவாறு.
பித்தர்மேல் சொல்லுங்கால்: சான்றோர் தெருட்டத் தெருள்உறாது மனம் தான் பற்றியதே பற்றிக்கொண்டு உண்மையாக ஒன்றினையும் பற்றாதாம் என நின்று கவர்த்தது காண்க.
[வெற்றி மிகுந்த வேலைச் செலுத்தினாற் போன்ற கொடிய கண்களின் பார்வையை உடையவளே! என்பது மகடூஉமுன்னிலை. கவர்த்தல் - பிளவுபடுதல். ஒன்றற்கு ஒன்று மாறுபட்ட இருபொருள் தந்தமையின், இது வழு எனப்பட்டது.] [8]

வழுவமைதி

**308. வசை பொருந்தாவழி வரின் அது மரபே. [9]**

(எ-ன்) மேற்சொன்ன கவர்படுபொருள்மொழி வழு அன்றாம் இடம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) அக்கவர்படுபொருள்மொழி குற்றம் பொருந்தா இடத்துப் பொதுப்பட உரைப்பின் வழு அன்று; இலக்கணமாம் என்றவாறு.

**பரப்புஅமர் கண்ணாட்கு இடும்பை பாலிக்கும் என்றே,**
**நிரப்புஇடும்பையார்க்கு எதிர்சென்று ஈயா - நிரப்பே**
**பெருநிரப்பு என்கின்றாய்; பெருமானே! எண்ணி**
**இருநிதிக்குப் போவேன் எனல்.** (820)

[பெருமானே! பெரும்பரப்புடைய கண்களைஉடைய தலைவியிடம் துயரத்தோடு வறுமையுற்று நிற்போர்க்கு முன்சென்று அவருக்கு வேண்டியவற்றை ஈயாத வறுமையே மனிதனுக்குப் பெரிய வறுமை என்று கூறுகிறாய். நீ பிரிந்தால் உன்பிரிவினால் தலைவிக்கு ஏற்படக்கூடிய துயரத்தையும் நினைத்துப்பார்த்துப் பொருள்தேடப் போவேன் என்று கூறுக அல்லது கூறாது ஒழிக.]
இதனுள் எனல் என்னும் அல் ஈற்று வியங்கோள் விதியும் விலக்குமாக நின்றும் வழுஅன்று ஆயிற்று. என்னை? "யான் அவ்வண்ணம் கூறவும் நீ அதனை உட்கொள்ளாயாகிக் கூறாநின்றாய்; நினது திருவுள்ளம் அதுவேயானால் இரண்டையும் மனத்தால் எண்ணித் துணிந்து என்னுடனே பொருள்மேல் செல்வேன் என்று கூறாது ஒழிவாயாக" எனவும்,
"அதுவல்லது செல்லத் துணிந்தாயாகில், எம்பெருமானே! இறைவியோடும் நின் செலவை நீயே சென்று 'யான் பொருள்மேல் செல்வேன்' என்று கூறுவாயாக" எனவும் இரண்டாய கவர்படுபொருள்மொழி விதியினும் விலக்கினும் குற்றம் அன்று ஆயிற்று.
பகுதி - பொருள்வயின் பிரிதல்; துறை - 'நின்செலவை நீயே கூறு' என்றல். [9]

5. நிரல்நிறைவழு

**309. முன்னர் எண்ணிற்கு மொழிமாற்றிக்கொளப்**
**பின்னர் எண்நிரல் பிறழ்வது நிரல்நிறைவழு. [10]**

(எ-ன்) வைத்த முறையானே (300), நிரல்நிறைவழு ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) செய்யுளகத்து முன்னர் எண்ணப்பட்ட பெயர் வினைகளான முறைக்கு மொழிமாற்றிக் கொள்ளும்படிக்கு அதன்பின்னர் எண்ணப்பட்டு வரும் பெயர் வினைகள் முறைபிறழ வைக்கப்படுமது நிரல்நிறைவழுவாம் என்றவாறு.
பெயர்வினை என்பது சொல்லெச்சம். நிரல் - முறை. நிறை - கூட்டம். பிறழ்தல் - தானம் மாறாடுதல்.

**கலவமயில் சாபம் கழுநீர் குமுதம்**
**இலவநுதல் சாயல் இதழ்வாய் - உலவுவிழி**
**நண்பா! பொனங்கொடிதான் நண்ணும்இடம் நாவீறன்**
**பண்பார் துடரியில் ஓர்பால். (821)**

எனவரும். இதனுள் மயில் - சாபம் - கழுநீர் - குமுதம் - இலவம் என முதலே எண்ணப்பட்ட பெயர்முறைக்குப் பின்னர் இயல் - நுதல் - விழி - வாய் - இதழ் (உதடு) என்னாது, நுதல் சாயல் இதழ் வாய் விழி என முறைபிறழ வைத்தமை-யால் நிரல்நிறைவழு ஆயிற்று.
[நண்பனே! கலாபத்தை உடைய மயில் போன்ற சாயல், வில் போன்ற நுதல், இலவமலரிதழ் போன்ற உதடுகள், கழுநீர் போன்ற விழிகள், குமுதம் போன்ற வாய் இவற்றை உடைய பொற்கொடியாகிய தலைவி தங்கியிருக்கும் இடம் மாறனுடைய நலன் மிக்க துடரிமலையின் ஒருபக்கமாகும்.
பகுதி - பாங்கற்கூட்டம்; துறை - இயல்இடம் கூறல்.] [10]

வழுவமைதி

**310. உய்த்துஉணர் இடம்எனில் உரிமை உடைத்தே. [11]**

(எ-ன்) அம்முறை பிறழ்ச்சி ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) அங்ஙனம் சொல்லப்பட்ட முறைபிறழ்ச்சி உய்த்துக்கொண்டு உணரப்-படும் தானமாகில் வழு அன்று என்று கொள்ளும் இலக்கணமுறைமை உடைத்து என்றவாறு.
அங்ஙனம் சொல்லப்பட்ட முறைபிறழ்ச்சி என்பது அதிகாரநோக்கத்தால் எச்சமாக விரிந்தது.

**மந்தன் கதிர் மழைக்கோள் வானோர்குரு மேதை**
**இந்து நிலமகள் பாம்பு என்பவற்றுள் - பைந்தொடியாய்!**
**தேறும்இடை நான்கும் தெரிசுபக்கோள்; ஏனையவாய்க்**
**கூறியவை பாவக் கோள். (822)**

எனவரும். இதனுள் உய்த்துக்கொண்டுணரப் பிழையாமல் வைத்த இடமாவன: மந்தன் முதலாகப் பாம்பு ஈறாக அடைவே எண்ணி, மழைக்கோள், வானோர்குரு, மேதை, இந்து என்னும் இடைப்பட்ட நான்கும் சுபக்கோள் என்றும், மந்தன், கதிர், நிலமகள், பாம்பு என முதலினும் ஈற்றினும் நின்ற நான்கும் பாவக்கோள் என்றும் உய்த்துணர வைத்தவாறு கண்டுகொள்க.
பாம்பு - சாதி ஏகவசனம்.
[மழைக்கோள் - சுக்கிரன். வானோர்குரு - வியாழன். மேதை - புதன். இந்து - சந்திரன். இவை நலன்தரும் கோள்கள். மந்தன் - சனி, கதிர் - சூரியன், நிலமகள் - செவ்வாய், பாம்பு - இராகு, கேது - இவ்வைந்தும் தீவினை தரும் கோள்கள் என்று உய்த்துணரப்-பட்டவாறு.] [11]

6. யதி வழு

**311. நசைதீர் யதிவழு நாடுகில் ஓசை**
**இசைதர நிகழாது இழுக்குவது ஆகும். [12]**

(எ-ன்) முறையே யதிவழு ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) விரும்பப்படாத யதிவழு என்பதனை ஆராயுங்காலத்துச் செய்யுட்கு அமைந்த புணர்ச்சி இசை பொருந்துவதாய் நடவாது மரபு வழுவுவதாம் என்றவாறு.

**பார்க்கும் பொழுது நிலம்பார்த்துப் பார்வையை யாம்**
**நீக்கும் பொழுது நிலம்பாரா - நோக்கு**
**வடைவடைவே வந்த அவற்றுள், முதல்நோக்கம்**
**தடையற யாம் வாழ்வதற்கு ஓர் சார்பு. (823)**

இதனுள், நோக்கு + அடை = நோக்கடை என்றாகாமல், நோக்குவடை என உடம்படுமெய் புணர்த்துக் கூறியவழிச் சொல் கூடாது அறுத்து இசைத்து வழுவாயிற்று.

[யான் நோக்குங்காலை என்னைப் பாராமல் நிலத்தை நோக்கி, யான் பார்வையைச் சற்றுத் திருப்பும்போது நிலத்தைப் பாராமல் என்னையே நோக்குவதாக முறையாகத் தலைவிமாட்டு நிகழ்ந்த பார்வைகளுள், அவள் முதலில் நிலத்தை நோக்கி நாணினாள் போலப் பார்த்த பார்வை, யாம் இவளுடைய அருள்நோக்கத்தால் இவளைத் தடைகள் நீங்கக் கூடி நல்வாழ்வு பெறுதற்கு ஒப்பற்ற சார்பாகும்.
பகுதி - இயற்கைப்புணர்ச்சி; துறை - குறிப்பறிதல்.] [12]

வழுவமைதி

**312. அதுவே**
**வழுஇன்றாம் எனல் வகையுளிக்கு ஆகும். [13]**

(எ-ன்) மேல் எய்தியது இகந்துபடாமல் காக்கின்றது.

(இ-ள்) அங்ஙனம் வரப்பட்ட யதிவழு வழுவில்லை என்று சொல்லப்படுவது வகையுளியாகச் சேர்த்துக்கொள்ளுமிடத்துக் குற்றம் இல்லையாம் என்றவாறு.

**வாளிவேல் சேல்ஆம் மதர்நோக்கம் மேருமுலை**
**வேளின்அடல் வில்போல் மிளிரும்நுதல் - ஆளிநிகர்**
**காவலவன் ஆற்றலது காய்ந்தகனி வாய்பவளம்**
**யாவர்உணர்வு உட்காது இவட்கு? (824)**

இதனுள் வகையுளி சேர்த்தே கொள்ளக் குற்றம் இன்று ஆயிற்று.

பகுதி - பாங்கற்கூட்டம்; துறை - குறிவழிச் சென்ற பாங்கன் தலைவனை வியத்தல்.

[வேளினடல், காய்ந்தகனி, யாவருணர்வு என்பன வகையுளி. இவ்வாறு வகையுளியாகப் பிரிப்பதனாலேயே வெண்பாயாப்பு சிதைவின்று ஆயிற்று. இவளுடைய செழித்த கண்கள் அம்புகளையும் வேல்களையும் சேல்மீன்களையும் நிகர்க்கும். முலை மேருவை நிகர்க்கும். மன்மதனுடைய ஆற்றலை உடைய வில் போல நெற்றி ஒளி வீசும். கனி போன்ற மென்மையான வாய் பவளத்தை நிகர்க்கும். நம் காவலனாகிய தலைவனுடைய அடக்கம் என்னும் ஆற்றலைக் கோபித்து அழித்த இவள்திறத்து யாவருடைய உணர்வுதான் அஞ்சாது எதிர்நிற்கும் ஆற்றலது?] [13]

7. சொல்வழு

**313. திணை முதலாகச் செப்பிய வழுவின் ஒன்று**
**அணைதருமாயினும் அது சொல்வழுவே. [14]**

(எ-ன்) நிறுத்த முறையே (300) சொல்வழு ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) திணை முதலாகச் சொல்லப்பட்ட சொல்வழு ஏழினுள் பலவே அன்றி, ஒருவழு செய்யுளகத்துப் பொருந்துமாயினும் அது சொல்வழுவாம் என்றவாறு.

**அருள்குணத்துக் கூடாதுஎன்று ஆய்ந்துஉரைத்த பின்னும்,**
**பொருட்கு அகல்வல் என்றே புகன்றீர்; - மருட்கை மிகும்**
**கொல்நுனைவேல் போன்ற விழிக் கோதைபொருட்டால் குறித்துஇங்கு**
**என் நுனை யான் சொல்வேன் இனி? (825)**

இதனுள், 'புகன்றீர்' என்ற உபசாரப்பன்மைக்கு, 'என் நுமை யான் சொல்வேன்' என்னாது 'என் நுனை யான் சொல்வேன்' என்றதனால் பால்வழு ஆயிற்று.
["தலைவிமாட்டு நீர் கொண்டுள்ள அருளாகிய பண்பிற்கு நீர் அவளைப் பிரிந்து பொருள் தேடச்செல்லும் செயல் பொருந்தாது என்று விளக்கமாகக் கூறிய பின்னரும், 'யான் பொருள் தேடப்போகப் போகிறேன்' என்று கூறுகின்றீர். கண்டாருக்கு வியப்பு மேம்படும்படியான, உயிரைப் போக்கும் நுனியை உடைய வேல்போன்ற விழிகளை உடைய இத்தலைவியின் பொருட்டாக யான் உம்மை நோக்கி யாது சொல்ல-வல்லேன்?"]
பால்வழு - பன்மைஒருமை வழு. [14]

வழுவமைதி

**314. மரூஉக்கட்டுரை சொலின் வழுவின்று அதுவே. [15]**

(எ-ன்) சிறுபான்மை கடியப்படாது என்பது உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) அச்சொல்வழு மரூஉமொழியாய் வரும் கட்டுரைச்சொல்லோடு கூடிவரும் எனின் வழு இல்லையாம் என்றவாறு.

**மன்றல் கமழும் மலைநாட்டும் வண்தமிழ்தேர்**
**நன்றி பயில் பாண்டி நன்னாட்டும் - வென்றிபயில்**
**சோணாட்டகத்தும் துயில் மாயனைத் துதிப்பார்**
**காணார் பிறவிக்கடல். (826)**

இதனுள் மலையமான்நாடு என்பது மலைநாடு எனவும் பாண்டியன்நாடு என்பது பாண்டிநாடு எனவும் சோழன்நாடு என்பது சோணாடு எனவும் மருவாய் அடிப்படவந்த வழக்காற்றால் வந்து வழுவில ஆயின.
துறை - கடவுள்வாழ்த்து.
[முத்தமிழ்நாடுகளிலும் கிடந்த திருக்கோலத்தில் அர்ச்சாவதாரமாக உகந்தருளியிருக்கும் எம்பெருமானை வழிபடுபவர்கள் பிறவிக்கடலில் தொடர்புகொள்ளமாட்டார்கள்.] [15]

8. சந்திவழு

**315. ஆற்றல்சால் எழுத்தினுள் அமைத்த சந்தியின்வகை**
**மாற்றம்அது உற வழுவுதல் சந்திவழுவே. [16]**

(எ-ன்) வைத்த முறையானே (300), சந்திவழு ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) பெருமையோடு கூடிய எழுத்திலக்கணத்தினுள் விதிக்கப்பட்ட சந்திகளின் கூறுபாடு நூல் கூறிய கூறுபாட்டான் வாராது செய்யுளகத்து வழுவுதல் சந்திவழு என்னும் குற்றமாம் என்றவாறு.

**பொய்இல் பொருள்மேல் புரிந்து இனி நீ போகில்இவள்**
**மெய்யில் எழில்நலமும் வேறுபோம்; - தொய்யில்உறாத்**
**தோள் பைங்கழை எனலாம் தொல்கவின் போகத் துயில்போம்;**
**வாள்கண்இணைக்கு எழுதாள் மை. (827)**

இதனுள், வாள் போன்ற கண்ணிணை வாட்கண்ணிணை என,

'லளவேற் றுமையில் றடவும் அல்வழி
அவற்றோடு உறழ்வும் வலிவரின் ஆம்' (நன். 227)

என்னும் சூத்திரத்தான் ளகாரம் டகாரமாக மெய்பிறிதாக முடியற்பாலவழி, 'வாள்கண்ணிணை' என இயல்பாக முடிந்தமையான் சந்திவழுவாயிற்று.

[தலைவனே! நீ பொய்யற்ற பொருளாகிய தத்துவக்கல்விப்பொருள் தேட விரும்பி இப்பொழுது தலைவியை நீத்துப் பிரிந்து போனால் இவள்மேனியிலுள்ள அழகும் சிறப்பும் வேறாகிவிடும். தொய்யில் எழுதப்பெறாத இவளுடைய தோள்கள் பசிய மூங்கில் போன்ற தம் பழைய அழகினை இழக்க, தன் வாள் போன்ற இருகண்களுக்கும் தலைவி மை தீட்டாளாக அவை உறக்கத்தை நீத்துவிடும்.
பகுதி - ஓதற்பிரிவு; துறை - தோழி செலவு அழுங்குவித்தல்.
சந்திசேர்த்தே செய்யுளும் உரைநடையும் அமைக்கப்பட்ட காலத்தில் சந்திவழு என்பது தவிர்க்கப்பட வேண்டியதாக இருந்தது. இக்காலத்துச் செய்யுளையும் உரைநடையையும் பொருள்எளிமை கருதிப் பெரும்பாலும் சொற்களைப் பிரித்தே நிறுத்தக்குறியீட்டுச் சந்திகளைக் குறைத்துக்கொண்டுவிட்டமையால், சந்திவழு என்பது இக்காலத்துத் தவிர்க்கப்படுவது அன்று ஆயிற்று.] [16]

வழுவமைதி

**316. ஐஎன் உருபு தொகின் அஃது இயல்பாம். [17]**

(எ-ன்) அத்திரிபு திரியாது இயல்பாம் இடம் உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) இரண்டாம்வேற்றுமை தொக்க புணர்ச்சியில் வல்லெழுத்து முதல்மொழி வந்துழித் திரியாது இயல்பாய் முடியவும்பெறும் என்றவாறு.

**அம்சொல் மடவாய்! அரங்கத்து அமுதமெனும்**
**மஞ்சுஅனைய செவ்வி மழைவண்ணன் - கஞ்சமலர்த்**
**தாள்கண்டார் மாரன்தனக்கு இலக்குஆனால், துளபத்**
**தோள்கண்டார் என்படார்? சொல். (828)**

இதனுள், தாள்கண்டார், தோள்கண்டார் என்பன தாட்கண்டார், தோட்கண்டார் எனத் திரியாது,

'இயற்கை மருங்கின் மிகற்கை தோன்றலும் ...
மெய்பிறிது ஆகுஇடத்து இயற்கை யாதலும்' (தொ. எழு. 157 நச்.)

என்பதனால் இயல்பாய் முடிந்தன.

திணை - பெண்பால்கூற்றுக் கைக்கிளை. துறை - தோள்கண்டு மெலிதல்.

[அழகிய சொற்களை உடைய தோழியே! திருவரங்கத்திலே அமுதம் என்று கூறுமாறு உகந்தருளியுள்ள நீலமேகநிறத்து அழகிய மணவாளனுடைய செந்தாமரைமலர் போன்ற திருவடிகளைத் தரிசித்தவர்கள் மன்மதனுடைய தாக்குதலுக்கு இலக்கானார்கள்

என்றால், திருத்துழாய்மாலையை அணிந்த அவனுடைய தோள்களின் அழகினைக் கண்டவர்கள் என்ன பாடுபடமாட்டார்கள்? நீயே சொல்.] [17]

9. செய்யுள்வழு

**317. பழுதுஅறப் பகர்ந்த பாட்டினது இயல்பு**
**வழுவுதல் செய்யுள்வழுஎன மொழிப.** [18]

(எ-ன்) செய்யுள்வழு ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) அகத்தியன் முதலோர் செய்யுளியலுள் குற்றமறப் பகர்ந்த செய்யுள் இலக்கணத்தோடு கூடாது வழுவும் பகுதியாய் வருதல் செய்யுள்வழு என்று கூறுவர் பெரியோர் என்றவாறு.

**முல்லை வெண்நகை மொய்குழல்! நுமர் வாழ்**
**மல்லல் மால்வரைக்கு எமர்வரை, நல்வினையால்**
**கூடல்அருள் மங்கையரைக் கூடிப் பிரிந்துவருந்து**
**ஆடவர்க்கு வேள்போன்று அணித்து.** (829)

இஃது ஆசிரியம் முதல் வந்து வெண்பாவாய் முடிந்தது. அவ்வாறு வருதற்கு ஒத்து இலாமையால் வழுவாயிற்று.
பகுதி - இயற்கைப்புணர்ச்சி; துறை - இடம் அணித்து என்றல்.
[முல்லைமொட்டுப் போன்ற வெள்ளிய பற்களையும் செறிந்த கூந்தலையும் உடைய தலைவியே! உங்கள்உறவினர் வாழும் உங்கள்மலைக்கு எங்கள்உறவினர் வாழும் எங்கள்மலை, நல்வினையால் தம்மைப் புணரும் வாய்ப்பினை நல்கிய மகளிரைக் கூடிப் பின் பிரிந்து வருந்தும் ஆடவர்திறத்து மன்மதன் நெருங்கி வருமாறு போல அணியதாயுள்ளது.
மருட்பா முதலில் வெண்பாவாய் ஈற்றில் ஆசிரியமாக முடிவது. இப்பாடல் முதலில் ஆசிரியமாய் ஈற்றில் வெண்பாவாய் முடிதலின், மருட்பா ஆகாது எனினும், இதனை வெண்டுறை என்ற இனத்தைச் சேர்ந்தது எனலாம்.] [18]

வழுவமைதி

**318. தவம்உறுபவர் அவர் போலுநர் சாற்றலுள்**
**நவம்உறப் புனைசெயுள் நடை நவையிலவே.** [19]

(எ-ன்) மேல்சொல்லப்பட்ட செய்யுள்வழு சிறுபான்மை ஒரோ இடங்களுள் வருவன உளவாம் என்று வழுஅமைப்பு உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) தவசரிதை எய்தும் இருடிகளும் அவர் போல்வாரும் ஆகிய முற்ற உணர்ந்த மூதறிவு உடைய புலவரான் நவமாகப் பாடப்படுவனவாம் செய்யுள்-நடை ஆசிரியரால் நீக்கப்படும் குற்றம் இல்லையாம் என்றவாறு.

**நாராயணனே நமஎன்று உரைப்பவர்பால்**
**வாராது ஒருநாளும் வல்வினைதான்;**
**சாரான் ஒருதலையாய்த் தண்டதரன்; சாராதாம்**
**பேராத மாயப் பிறப்பு.** (830)

[திருவெட்டெழுத்தைச் சொல்பவர்பக்கல் ஒருகாலும் தீயவினை செயற்படாது. நிச்சயமாக இயமன் அவர்களை அணுகான். ஒருகாலும், நீங்காத வஞ்சனை பொருந்திய பிறவிப்பிணி அவர்களை அணுகாது.]

இது சவலைவெண்பாட்டு; என்னை? இதனுள் முதலே காசு நாண் மலர் பிறப்பு என்னும் வாய்பாட்டால் இறாது 'வல்வினைதான்' என்ற மூவசைச்சீரால் இற்ற குறள்வெண்பாவாய்த் தனிச்சொல் இன்றி முடிந்தமையான் என்று அறிக. இதற்கு முன்னோர் கூறிய சூத்திரம் யாதோ எனின்,

'நனிஇரு குறளாய் நான்குஅடி உடைத்தாய்த்
தனிவரல் இல்லது சவலைவெண் பாட்டே'

என்பது என உணர்க. அன்றியும்,

அட்டாலும் பால்சுவையில் குன்றாது; அளவளாய்
நட்டாலும் நண்புஅல்லார் நண்புஅல்லர்;
கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே; சங்கு
சுட்டாலும் வெண்மை தரும் (வாக்குண்டாம் - 4)

என்னும் செய்யுளாலும் உணர்க.

எனவே, மொழிந்ததை மொழிதல் முதலாகச் செய்யுள்வழு ஈறாகச் சொல்லப்-பட்ட ஒன்பதும் பொதுவகையான் வழு எனக் கூறியவற்றைத் தனித்தனி விதிச்-சூத்திரத்தான் இவ்வாறு வரின் வழு என விதித்துச் சிறப்புவிதியான் இவ்வாறு வரின் வழுஅமைதியாம் என்றவாறு ஆயிற்று. [19]

அறுவகை மலைவுகள்

**319. உலகு இடம் காலம் கலையே நியாயம்**
**ஆகமம் மலைவுஎன்று ஆறு ஒருவகை உள. [20]**

(எ-ன்) இதுவும் ஒருவகை வழு ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) உலகமலைவும் இடமலைவும் காலமலைவும் கலைமலைவும் நியாய-மலைவும் ஆகமமலைவும் என்று கூறப்படுவனவாம் ஒருவகைமலைவும் ஆறு உளவாம் என்றவாறு.

ஏகாரம் - ஈற்றசை. மலைவு என்பதனை இறுதிவிளக்காக எங்கும் ஒட்டுக. மலைவு என்பது மாறுபடுதல். எனவே அவையும் ஒருவகை வழுவாயின. அஃதேல் ஒழிந்த வழு உணர்த்துமாறு எடுத்த தொகைச்சூத்திரத்துள் ஒருவகைப்படப் பதினைந்து என்று கூறாது இருவகைத்தாகப் பிரித்துக் கூறியவாறு என்னையோ எனின், முன்னர் ஒன்பதும் குற்றமாதல் பெரும்-பான்மையாய்ச் சிறுபான்மை ஒரோவிடத்துக் குணமாதலும் உடைய என்று உரைக்கப்படும்; பின்னர் ஆறும் ஒருதலையாகவே குற்றமாய்ப் பொருந்து-மிடத்துப் புனைந்துரைவகையான் நன்புலவரால் சிறுபான்மை மொழியப்படும் என்பது அறிவித்தற்குக் கூறியவாறு என்று உணர்க. [20]

1. உலகமலைவு

**320. ஒழுக்க நடையே உலகமது ஆகும். [21]**

(எ-ன்) வைத்தமுறையானே (319) உலகமலைவு ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அவ்வாறனுள் பெரியோரால் எடுத்து வழங்கும் ஒழுக்கநடையே உலகம் என்று கூறப்படுவதாம் என்றவாறு.

எனவே உலகம் என்பது மக்கள்மேலும் நிலத்தின்மேலும் ஒழுக்கத்தின்மேலும் நிற்கும் பலபொருள்ஒருசொல் ஆதலான், இவ்விடத்து ஒழுக்கத்தையே கோடற்கு உலகு என்று எடுக்கப்பட்டது. அவ்வொழுக்கம் எல்லாரும் அறிவுறக்

கிடந்தமையான் இன்னது என்று எடுத்துரைக்க வேண்டுவதில்லை. அது மலைதல் என்பது உலகத்து ஒழுகலாற்றோடு மாறுபட்ட ஒழுக்கம் நிகழ்வதாகக் கூறுதல்.

**பூமிநடு நின்று புணரிஏழும் தாவி**
**நேமிவரைதனில் நேர்நின்று அமரர் - கோமகிழ்வுற்று**
**ஆண்ட துறக்கமதைப் பார்த்து அவனி போதுமென**
**மீண்டவன்இவ் வேந்தர்க்கு வேந்து.** (831)

எனவரும்.
இதனுள், ஒரு தீவினுள் வேந்தன் எழுதீவையும் எழுகடலையும் எழுபூமியையும் கடக்கப் பாய்ந்து, சக்கரவாளகிரியில் நிமிர்ந்துநின்று, தேவர்கோன் ஆகிய இந்திரன் களித்து ஆண்டிருக்கும் தேவலோகத்தை எட்டிப்பார்த்துத் தனக்குப் பூலோகம் ஒன்றும் ஆண்டிருப்பதே போதும் என மீண்டு வந்தவன் ஆகும் இந்த வேந்தர்க்கு வேந்தன் என்று மாறுபடக் கூறினமையால் உலகமலைவு ஆயிற்று. [21]

2. இடமாவன

**321. இடம்அது மலை நாடு யாறுஎன மூன்றே. [22]**

(எ-ன்) வைத்த முறையானே (319) இடம் என்பதனை விரித்து உணர்த்துதல் நுதலிற்று.
(இ-ள்) இடம் என ஒன்றாய்நின்ற அது மலையும் நாடும் யாறும் என மூன்றாம் என்றவாறு.
மலை என்பன பொதியமும் இமயமும் முதலாயின. நாடு என்பன பதினெண்பாடைக்கும் உரிய நிலங்கள். யாறு என்பன கங்கையும் பொருநையும் காவிரியும் முதலாயின. இவற்றுள், ஒன்றனுள் உரியவாகச் சொன்ன பொருள், பிறிதுஒன்றனுள் உரியவாகச் சொல்லுதல் வழுவாம். அவை,

**கார்அகிலும் பொன்னும் கவின்செய் மலையத்தினில் பெண்**
**ஆர்அமிர்தின் மெல்லடிகட்கு ஐயனே! - பார்பரலாய்ச்**
**செந்தழல் பாரித்த கடம் செப்பின் அசும்பு ஊர் இமயச்**
**சந்தனச் சோலைத்தடமாம் தான்.** (832)

எனவும்
[தலைவனே! கரிய அகிலும் பொன்னும் அழகுசெய்யும் மலையமலையிலுள்ள இத்தலைவியாகிய கிட்டுதற்கு அரிய அமுதம்போல்வாளுடைய மெல்லிய பாதங்களுக்குத் தரையானது பருக்கைக்கற்கள் நிரம்பியதாய் நெருப்புப் போன்ற வெப்பம் பரவியிருக்கும் பாலைவனமானது, தலைவியின் உள்ள நிலையை உணர்ந்து கூறுமிடத்து, உன்னோடு சென்றால், நீர் பரவிய இமயமலையிலுள்ள சந்தனச்சோலைகளை உடைய இடமாக அவளுக்குத் தோன்றும்.
பகுதி - உடன்போக்கு; துறை - சுரத்து எளிமை கூறல்.]

**பருவமா மழைஉகு பல்துளி திரண்டு நீர்**
**அருவிபாடு இமிழ்வளன் அமர் சிலம்பா! நின்**
**அறைகழல் பணிந்துஎழு கலிங்கத்து அரசர்**
**திறைதரு கலினத் திரள்வாம் பரிகளும்,**
**மாளுவர் ஆரியர் மராட்டர் சோனகர் எமை**

**ஆளுகளனத் தாழ்ந்து அருள் கடாக்களிற்றுடன்,**
**அறக் கழிவினராய் அருஞ்சமத்து எதிர்ந்து**
**புறக்கொடை புரிந்தோர் புரந்த நன்நகர்களும்,**
**கங்கையுள் வலம்புரி கான்ற வெண்தரளமும்,**
**துங்கவண் பொருநைத் துறையுள் மாமணிகளும்,**
**எண்இலாது அளிப்பினும் இடைவிலை அலவால்;**
**பெண்இயல் பெருக்கிய பேரமுதாம் எனத்**
**திருமகள்ஆம் எனச் சிறந்தவள்**
**வருமுலைக்கு எவன்நீ விலை வழங்குவதே? (823)**

எனவும் வரும்.

[பருவத்திற்கு ஏற்ற கரிய மேகம் பெய்த பல மழைத்துளிகளும் திரண்டு அருவிநீராக ஒலிக்கும் வளம் பொருந்திய மலைநாடனே! உன் வீரக்கழல் ஒலிக்கும் திருவடிகளைப் பணிந்து நிற்கும் கலிங்கத்தரசர்கள் கப்பப்பொருளாகச் செலுத்திய கடிவாளம் அணிந்த தாவும் குதிரைகளும், மாளுவர் ஆரியர் மராட்டர் சோனகர் என்போர் 'எம்மைத் தலைவனாக இருந்து ஆட்கொள்க' என்று வணங்கிக் காணிக்கையாக வழங்கிய மதக்களிறுகளும், நெறிபிறழ்ந்தவர்களாய்ப் பொருதற்கு அரிய போரிலே நின்னை எதிர்த்து முதுகுகாட்டி ஓடிய பகைமன்னர்களுடையனவாய், நின்னால் கைப்பற்றப்பட்ட நல்ல ஊர்களும், கங்கையில் வாழும் வலம்புரிச்சங்கங்கள் வெளிப்படுத்திய வெள்ளிய முத்துக்களும், தூய வளமான தாமிரவருணித்துறையுள் கிட்டும் சிறந்த இரத்தினங்களும் ஆகிய இவற்றைக் கணக்குப் பாராது வழங்கினாலும், அவை பெண்இயல்பு நிரம்பிய சிறந்த அமுதம் எனத்தக்க திருமகளே இவள் என்று கூறத்தக்க எம்தலைவியின் இடைக்கே விலையாகா என்றால், அவளுடைய வளருகின்ற முலைகளுக்குப் பரிசமாக நீ யாது வழங்க இயலும்?
பகுதி - வரைபொருட்பிரிவு. துறை - தோழி முலைவிலை கூறல்.]

இவற்றுள் இமயத்து உள்ளன பொதியிலகத்து உளவாகவும், பொதியிலகத்து உளவானவை இமயத்து உளவாகவும் புணர்த்தமை மலைஇடமலைவு ஆயிற்று. தண்பொருநைக்கு உரியன கங்கையொடு புணர்த்தும் கங்கைக்கு உரியன தண்-பொருநையொடு புணர்த்தும் ஆற்றுஇடமலைவு ஆயிற்று. ஆரியம் மாளுவம் முதலியவற்றிற்கு உரியன கலிங்கத்தொடு புணர்த்தும், கலிங்கத்திற்கு உரிய மாளுவம் ஆரியம் முதலியவற்றொடு புணர்த்தும் நாட்டுஇடமலைவு ஆயிற்று. [22]

### 3. காலவகை

**322. சிறுபொழுதொடு பெரும்பொழுதுஎனக் காலம்**
**அறுவகைத்தாம்என அறைந்தனர் புலவர். [23]**

(எ-ன்) நிறுத்தமுறையானே (319) காலம் ஆமாறும் அதன் பகுதியும் உணர்த்-துதல் நுதலிற்று.

(இ-ள்) காலம் சிறுபொழுதுடன் பெரும்பொழுது என இரண்டுகூறாய் ஒரோ-ஒன்று அறுவகைத்தாம் என்று ஆசிரியர் கூறினார் என்றவாறு.

அவற்றுள், சிறுபொழுது: விடியல் உச்சி எற்பாடு மாலை யாமம் வைகறை என ஆறு. பெரும்பொழுது: கார் கூதிர் முன்பனி பின்பனி இளவேனில் வேனில் என ஆறும் ஆம். அவற்றொடு மலைதலாவது ஒன்றற்கு உரிய பூவும் புள்ளும் பொழுதும் தொழிலும் வேறுஒன்றற்கு உரியவாகப் புணர்த்து உரைப்பது.

**உம்மையின் இரந்தோர்க்கு ஒன்று ஈயாதோர்**
**இம்மையின் வறுமை என்பவற்றினுக்கு இடம்என,**
**இரப்பவராய் இலம்என இசைத்ததற்கு எதிர்**
**புரப்பவர் இலம்எனப் புகலும் வெவ்வுரையினும்**
**நிரப்புஎவன் என நிகழ்த்துதல் நிமித்தமதாய்க்**
**கரப்புரை இஃதுஎனக் கலுழ்ந்த கண்ணீரினைத்**
**தடுப்பவர்போல் துயிலையும் தடுத்து இருகையின்**
**எடுத்துஅணைத்து இனையல்என்று எனையும் வற்புறுத்திப்**
**போர்வேலவர்தாம் போம்முனம் குறித்த**
**கார்காலத்தினில் கார் வரு மாலையில்**
**குயில்குலம் காமா கூகூ எனும்நிலை**
**வெயில்குலம் எனஇருள் வெருள வெண்நிலவு எழப்**
**புரவலர் முகம்போல் பொற்பு மிக்கதுவாய்**
**இரவுஅலர் தாமரை ஏமநன் மலரே**
**நின்னிற் பிரியலன் பிரியின் ஆற்றலன்எனும்**
**மன்னர் பொய்மொழியினும் அடங்கலும் அடங்கலும்**
**சுடும்சுடும் தொடர்ந்துமன் உயிரை**
**அடும் கொடுமைய எனுமவர் அறிவிலரே.** (834)

[சென்ற பிறப்பில் தாம் செல்வராய் இருக்கவும் தம்மிடம் வந்து இரந்த வறியவர்க்கு அவர்களுக்குத் தேவையானவற்றை ஈயாதவர்கள் இப்பிறப்பில் பலவகைப்பட்ட வறுமைகளுக்கும் இடமாவர் என்ற எண்ணத்தோடு, தம்மிடம் ஒன்றுமில்லை என்று கூறி இரப்பவருக்கு மறுமொழியாக, அவர்களைக் காக்கவேண்டியவர்கள், எம்மிடமும் ஒன்றுமில்லை என்று கூறும் கொடுஞ்சொற்களைவிட வறுமை என்பது வேறில்லை என்ற கருத்தான், இல்லை என்பதனைக் கேட்ட இரவலன் விடும் கண்ணீரைப் போல என்னால் தம்பிரிவு குறித்து உகுக்கப்பட்ட கண்ணீரினைத் தடுப்பவரைப் போல, என் உறக்கத்தையும் போக்கி, இருகைகளாலும் என்னை எடுத்து அணைத்து வருந்தாதே என்று என்னை வற்புறுத்திப் போரிடும் வேலை உடைய தலைவர் தாம் புறப்படும் முன் திரும்பி வருவதாகக் குறிப்பிட்ட கார்காலத்தில் கரிய மேகங்கள் படரும் மாலை-நேரத்தில் குயில்கூட்டங்கள் மன்மதனே என்று அழைத்துக் கூவும் அந்நிலையிலே, வெயில் வந்து விட்டதோ என்று இருள் அஞ்சுமாறு வெண்ணிலா புறப்பட, பிறரைக் காப்பவர் முகம்போல அழகு மிக்குள்ள இரவில் மலரும் தாமரையின் பொன்போல ஒளிவீசும் பெரிய மலர்கள் 'உன்னை விடுத்துப் பிரியேன்; பிரியின் பிரிவைப் பொறுத்துக்கொண்டு பலநாள் தனித்து இரேன்' என்று கூறிய தலைவருடைய பொய்யான சொற்கள் என் உயிரைச் சுடுவதைக்காட்டிலும், யாவும் ஒன்று சேர்ந்து தொடர்ந்து என் நிலைபெற்ற உயிரைத் துன்புறுத்தும் கொடுமையை உடையன. அதனை அறியாது போயினரே.
பகுதி - பொருள்வயின் பிரிதல்; துறை - தலைவி பருவங்கண்டு வருந்தல்.]

இதனுள் வேனிற்காலத்துக்கு உரிய குயிலைக் கார்காலத்துடன் புணர்த்தும், பகலில் மலரும் தாமரையை இரவில் மலர்ந்ததாகப் புணர்த்தும் பெரும்பொழுதும் சிறுபொழுதும் ஆகிய இரண்டுகாலமும் மலைவு ஆயினவாறு. [23]

4. கலைமலைவு

**323. பொருளும் இன்பமும் புணர்பொருட்டு ஆகியநூல்**
**அருளும் எண்ணான்கு இரட்டிய கலையதுவே. [24]**

(எ-ன்) நிறுத்தமுறையானே (319) பொதுவகையால் கலைகள் இன்னதுக்கும் கருவியாய்த் தோன்றும் என்பதூஉம் அவற்றது தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) கலைகள் என்று சொல்லப்படுவன பொருளும் இன்பமும் எய்துதற்கு ஏதுவாய வேதம் முதலிய நூல்களுள் கூறப்பட்ட அறுபத்துநாலாம் என்றவாறு.

ஏகாரம் - ஈற்றசை. அவற்றொடு மலைதலாவது அவ்வந்நூல்களுள் கூறியபடி கூறாது பிறழக் கூறுதல்.

**நாணம்இல் செய்கை நாடகக் கணிகையர்**
**மாண்மரபினில் ஒருவனிதை தன் மைந்தர்க்கு**
**உற்ற எண்ணிரண்டுஉள் ஓங்கிய உருவம்**
**பெற்ற அந்நிலைத் தண்டியம் பிடித்தனளாய்,**
**ஆடலும் பாடலும் அமைவிலன் கொளுத்த**
**நீடல்இல் அயணம் ஒன்றினில் நிரம்பினளாய்ப்,**
**படிபுரந்து அருளும் பார்த்திபன் முன்னர்க்**
**கடியரங்கு ஏறிய காலையில், பிண்டியில்**
**பிணையலும் களையாள் பிணையலில் பிண்டியும்**
**அணைதரல் களையாது, ஆடலும் தாளம்**
**மெய்யில் பலவும் மேதக உடைஇசை**
**கையில் பயிலவும் கால்இயல் பயிலவும்**
**நடித்தனள், நடத்துதல் நாதமும் முன்னூல்**
**வடித்திடு பான்மையின் மலைத்திட நடத்தினள்,**
**ஆடல் சான்றோர்அவருடன்**
**பாடல் சான்றோர் பயில் அவைக்களத்தே. (835)**

இதனுள், ஐஆண்டினில் தண்டியம் பிடித்து ஏழ்ஆண்டு இயற்றிப் பன்னீ-ராண்டினில் அவைஅரங்கு ஏறினாள் எனாது, மைந்தர்க்கு இந்திரியகலினம் உறுவது என்று விசாரிக்கப்பட்ட பதினாறாம் ஆண்டில் தண்டியம் பிடித்து ஆடலும் பாடலும் முற்றக் கல்லா ஆசானுடன் அவற்றை ஓர்அயணத்தில் முற்றக் கற்றவளாய்க் கடிஅரங்கு ஏறினள் எனவும் கூறியதன்மேல், ஒற்றையில் செய்த கைத்தொழில் இரட்டையில் புகாமலும், இரட்டையில் செய்த கைத்-தொழில் ஒற்றையில் புகாமலும் கைத்தொழில் காட்டாது மலையக் காட்டினாள் எனவும், இசையை மெய்யிலும் இயலைக் கையிலும் தாளத்தைப் பாதத்திலும் காட்டாது மயங்க நடித்தாள் எனவும், அவள்தானே பின் ஒருநாள் நாதமும் நூல் சொன்னபடி நடத்தாது பிறழ நடத்தினள் எனவும் கூறியமையாலும் கலை-மலைவு ஆயிற்று. கலை என்பது வித்தை.

இசையைப் பிறழ நடத்தினாள் என்பது - நின்ற நரம்பிற்கு ஐந்தாவது கிளை ஆதலான் அதனைப் பகை என்றும், நான்காவது நட்பு ஆதலான் அதை இணை என்றும் இரண்டாவதனைத் தொடுத்தல். என்னை?

ஐந்தாம் நரம்பில் பகைவிரவாது ஆறாகி
வந்த கிளைகொள்ள நான்காகி - முந்தை
இணைகொண்ட யாழ்எழுவும் ஏந்திழை தன்ஆவித்
துணைவன் புகழே தொடுத்து (தண்டி. சூ. 121 உரை)

எனத் தெண்டி எச்சவியலில் கூறியதனால் அறிக.

அஃதேல் இந்நூலுள் கூறிய தொனிக்குத் தெண்டி கூறிய உதாரணமே உதாரணமாகக் காட்டியவாறு என்னை எனின், இந்நூற்கு அது முதல்நூல் ஆயதால் காட்டியது என உணர்க.

'அவள்தானே பின் ஒருநாள்' என்பது சொல்லெச்சம். அஃதன்றித் தோரிய மடந்தை அவள் ஆடிய அவைக்களத்து அங்ஙனம் பாடினாள் எனினும் ஆம். தோரிய மடந்தையாவாள் ஆடிச்செலவைத்தவளாய் அங்ஙனம் ஆடினவள் காலுக்குப் பாடினவள்.

[தண்டியம் - நாட்டியம் கற்போர் பிடிக்கும் கோல்.] [24]

நியாயமலைவு

**324. அளவையின் ஆய பல்பொருட்குஅமை வினைத்திறம்**
**உளம்உற மதித்து உரைப்பதுவே நியாயம். [25]**

(எ-ன்) நிறுத்த முறையானே (319) நியாயம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) ஒரோகாரணங்களால் உலகத்து உண்டாய பொருள்கட்கு அமைக்கப்பட்ட வினையினது கூறுபாட்டைக் காட்சி முதலாக நால்வகை அளவைகளால் குறித்துக் கேட்போர் உள்ளத்து உறும்படி உரைப்பது நியாயமாம் என்றவாறு.

அவை அறுவகைப்பட்ட சமயங்களோடும் கூடிய உலகத்துப் பொருள்களினது தோற்றமும் அழிவும் இன்ன வகைய என்று கூறுதல். அவற்றை அவரவர் கூறியவாறு கூறாது மாறுபாடாக உரைத்தல் மலைதலேயாம். அது,

**அன்று ஆலிலைத் துயின்ற அச்சுதனை அல்லாது**
**பொன்றாப் பொருள் எப்புவியில் உள்ளது - என்றான்**
**தனதுஅகத்தாய் எவ்வுலகும் தான் அடக்கிக்கொண்ட**
**புனல்அகத்தாய் நீந்து அம்புயன். (836)**

எனவரும். இதனுள், 'ஆதிப்பிரமகற்ப அந்தத்தில் சகலகடவுளரும் சகலஆன்மாக்களும் அழியச் சகலஆன்மாக்களையும் அகிலாண்டகோடிகளையும் திருஉதரத்து அடக்கி அழிவுஇலாது இருந்தவன் ஸ்ரீமந்நாராயணன் என்று மார்க்கண்டன் உரைத்தான்' எனற்பாலதனைப் புனல்அகத்தாய் நீந்தும் பிரமா உரைத்தான் என்றமையால், நியாயமலைவு ஆயிற்று. அச்சுதன் - அழிவில்லாதான். அக்காலத்துப் புனல்அகத்தாய் நீந்திக் கண்டவன் மார்க்கண்டேயன். ஒழிந்தனவும் இவ்வாறே ஒட்டிக்கொள்க. [25]

6. ஆகமமலைவு

**325. அறம்பகர் மனு முதலாயின ஆகமம். [26]**

(எ-ன்) நிறுத்த முறையானே (319) ஆகமம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ-ள்) அறத்தினது மார்க்கத்தைக் கூறாநின்ற மனு முதலிய பதினெண்வகை அறநூலுமே ஆகமமாம் என்றவாறு.

அவற்றொடு மலைவாவது - இன்னார் இது செய்தல் அறம் என்று விதிக்கப்பட்ட விதியில் பிறழ வருவது. அது,

**ஒட்டினொடும் பொன்னை ஒருநிலையாய் உட்கோடல்,**
**வீட்டினது இன்பத்தை மிகவிரும்பல், - ஏட்டு இருள்மென்**

**கூந்தலார் இன்பம்அது உட்கொள்ளாமை, இல்லறத்தில்**
**தோய்ந்துளார்க்கு உண்டாம் சுகம். (837)**

எனவரும். இதனுள், துறவறம் பூண்டார் தொழிலை இல்லறம் புரிந்தாரொடும் புணர்த்தமையால் ஆகமமலைவு ஆயிற்று.

[ஓடும் பொன்னும் ஒக்க நோக்குதல், வீடுபேற்றின்பத்தை விழைதல், பூக்களை அணிந்த இருண்ட மெல்லிய கூந்தலை உடைய மகளிர்இன்பம் விரும்பாமை என்பன இல்லறத்தில் ஈடுபட்டவர்களுக்கு இன்பம் தருவதாம் எனத் துறவிகள் பின்பற்றவேண்டுவனவற்றை இல்லறத்தாருக்கு ஏற்றிக் கூறல் ஆகமமலைவாம்.] [26]

வழுவமைதி

**326. நாவலர் நாடக வழக்கினுள் நடந்து**
**மூஇரு மலைவும் மொழிவதற்கு உரிய. [27]**

(எ-ன்) எய்தியது இகந்துபடாமல் காக்கின்றது.
(இ-ள்) மேற்கூறிய அறுவகைவழுவும் நாடகவழக்கத்தால் கூறுங்கால் நாவலர்க்கு உரியவாகக் கொள்ளப்படுவனவாம் என்றவாறு.
நாடகவழக்கு என்பது,

நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம் (தொ. பொ. 53)

எனத் தொல்காப்பியத்து உரைக்கப்பட்ட மூன்றனுள்ளும் முதல்வழக்கு. அஃதாவது இல்பொருளாய்ப் புகழ்ச்சியிடத்துப் புனைந்த உரையாய்த் தோன்றுவது. அஃது அவ்வாறு புகழ்ச்சியிடத்து நீக்கப்படா அலங்காரமாயே வரும் என்பதாம்.
அவை வருமாறு:

**மேலைமலையில் புகுதும் ஆதவனை நிற்றிஎன மீளவருவித்து உலகின்வாய்**
**மாலைமதியத்துடன் ஓட நியமிப்பன்; உருமாறி வருவிப்பன்; இமையோர்**
**ஆலையம் நிலத்து இடுவன்; வேலை வலயத்தை அவண் ஆகவும் அமைப்பன்; அழகுஆர்**
**சோலைமலையில் குடிகொள் ஆதியை நிகர்ப்பது ஒருசோதியை விதிப்பன் எளிதே. (828)**

இதனுள் சம்பிரதமாதலின் உலகமலைவுப்பொருள் வந்தும் அலங்கார வழுவின்மை ஆயிற்று. இந்திரசாலம் என்பதும் இது.

[கலம்பகம் என்ற பிரபந்தத்தின் 18 உறுப்புக்களுள் இந்திரசாலம் பற்றிய சம்பிரதம் என்பதும் ஒன்று. இப்பாடல் சம்பிரதமாகும்.
மேற்குமலையில் மறையப்புகும் சூரியனை நில் என நிறுத்தி மீண்டும் கிழக்குத்திசை வரச்செய்து, உலகிலே மாலையில் தோன்றும் சந்திரனோடு கூட ஓடுமாறு ஆணையிடுவேன். எல்லாப்பொருள்களையும் வடிவம் மாறி வருமாறு செய்வேன். தேவர்இருப்பிடங்களை நிலவுலகில் அமைப்பேன். கடலால் சூழப்பட்ட உலகைத் தேவர்உலகத்து இருப்பிடத்தில் அமைப்பேன்; திருமாலிருஞ்சோலைமலையில் உகந்தருளியிருக்கும் திருமாலை ஒத்ததொரு சோதியை எளிமையில் உண்டாக்குவேன்.]

**காழ்அகில் பொழிலும் சந்தனப் பொழிலும் கமழ்நறுஞ் சண்பகப் பொழிலும்**
**கோழ்அரைக் கமுகும் நாளிகேரமும் பொற்கோங்கும் வேங்கையும் மலர்க்குருந்தும்**

**மாழைஅம் சுளை முள்புறக்கனி பலவும் மாவும் நாகமும் பணைமருதும்**
**தாழையும் மகிழும் வாழையும் கரும்பும் தனித்தனி தழைத்த எம்மருங்கும்.**
**(839)**

இதனுள் தண்பொருநையுள் இமயம் பொதியில் என்ற மலை இரண்டற்கும் பிற நிலங்களுக்கும் உரிய அகிலும் சந்தனமும் கோங்கும் வேங்கையும் குருந்தும் புன்னையும் வந்து இடமலைவாயும், புகழ்ச்சியிடத்துப் பொருந்தின அலங்காரம் ஆயிற்று. (குருகாமான்மியம்)

**காவிஅம் கண்ணியர் காலையின் மலர்கொய**
**வாவியுள் குறுகலும் வதனமண்டலத்தினை**
**மதிஎனச் செழுந்தாமரைமலர் குவிதரப்**
**புதிய தண்புனல் படிந்திடப் புகு மாலையில்**
**ஆடவர் முகத்தையும் அருணோதயமென**
**ஏடுஅவிழ் ஆம்பல் இனத்தொடு முகிழ்க்கும்**
**பாடல்சால் மருதப் பார்த்திபர் தலைவ!**
**பொழுது மாறுதல் நின்புலக் கருப்பொருட்கு**
**முழுதும் உண்மையதால் மொழிபல கிளைத்துஎவன்?**
**புலந்துஎவன்? பொதுஉண் நின் மார்வம்**
**கலந்துஎவன்? தீண்டல் எம் காமர் மெல்அணையே.** (840)

இதனுள் மாலையில் குவியும் கமலம் காலையில் குவிந்ததாகவும் காலையில் குவியும் ஆம்பல் மாலையில் குவிந்ததாகவும் கூறியது காலமலைவு ஆயினும், புனைந்துரைவகையான் அலங்காரம் ஆயிற்று.
பகுதி - பரத்தையிற்பிரிதல். துறை - பள்ளியிடத்து ஊடல்.

[குவளைப்பூப் போன்ற கண்களை உடைய மகளிர் காலையிலே பூப்பறிப்பதற்கு நீர்ஓடையை அணுக, அவர்கள்முகங்களைச் சந்திரனாகக் கருதித் தாமரைமலர்கள் குவிய, ஆடவர் தம்வேலைகளை முடித்துப் புதிய குளிர்ந்த நீரில் குளிக்கப்புகும் மாலைநேரத்தில் அவர்கள்முகத்தைச் சூரியனுக்கு முற்பட்ட அருணனுடைய உதய-மாகக் கருதி இதழ் விரிந்திருந்த அல்லிகள் தம் இனத்தோடு குவிய, இவ்வாறு அமைந்திருக்கும் புலவருடைய பாடுதல் மிகுந்த மருதநில மன்னனே! உன்நாட்டுப் பொருள்களுக்குப் பொழுதுகளை மாற்றிக்கொள்ளுதல் முழுமையாகப் பொருந்தி-யிருப்பதால், பல சொற்களைப் பேசிப் பயன் என்ன? உன்னிடம் புலவி கொள்வதால் பயன் யாது? யாவரும் பொதுவாக நுகரும் நின்மார்பைத் தழுவுவதால் பயன் யாது? எம்முடைய விழுப்பம் மருவிய தலையணையைத் தீண்டாதே.]

**வெயில் நுழைந்துஅறியாப் பணைமரச்செறிவுள் வெறிவரி வண்டினம் இரைத்துப்**
**பயில் முகை அவிழ்ந்து பனிற்று தெள்நறவைப் பருவமா மழைப்பெயல் எனவே**
**குயில்அடங்கலும் தாம் பொதும்பருள் ஒளிப்பக் குறிப்பொடும் வெளிப்பட இருந்து**
**மயில்அடங்கலும் தாம் அகவலும் களிப்ப, வருந்தல்நீ மதர்மழைக் கண்ணாய்!**
**(841)**

இதனுள், கார்க்கு உரியன வேனிற்குப் புணர்த்தும் புனைந்துரையான் அலங்-காரம் ஆயிற்று.

[சூரியகிரணம் நுழைய இயலாதபடி பருத்த மரங்களின் அடர்த்தியிலே நறுமணத்தை விரும்பும் புள்ளிகளைஉடைய வண்டுக்கூட்டம் ஒலித்துக்கொண்டு அமரும் மொட்டுக்கள் மலர்ந்து வெளிப்படுத்தும் தெளிந்த தேனைப் பருவமழையின் பொழிவு

என்று கருதிக் குயில்கள்யாவும் கிளைகளுள் தம்மை மறைத்துக்கொள்ள, மழை பெய்யத் தொடங்கிவிட்டது என்ற உள்ளக்குறிப்பினாலே மயிலகள்யாவும் வெளியே வந்து தங்கி அகவிக்கொண்டே மகிழ, வேனிற்காலத்தைப் பறவைகள் கார்காலமாக மயங்கிக்கொண்டுள்ளன. இவ்வேனிற்காலத்தைத் தலைவன் மீண்டு வருவதாகக் குறித்த கார்காலம் என்று, செழித்த குளிர்ந்த கண்களை உடைய தலைவியே! நீ வருந்தாதே. பகுதி - பொருள்வயிற் பிரிவு. துறை - தோழி பருவமயக்கம் என்று கூறல்.]

**செறியும் இல்தொறும் புனல்மலர் முதலிய சிறப்பின்**
**குறிய மந்திரத்து அமைந்துள உறுப்பினில் கொடுபோழ்து**
**அறிவுஇழந்து அவை முறை தடுமாறினும் அவையே**
**நெறியவாய் இறை உட்கொள நிறைக்கும் நன்நீரார். (842)** [குருகாமான்மியம்]

இது கலைமலைவு ஆயினும் புனைந்துரைவகையான் அலங்காரம் ஆயிற்று.

[செறிந்த வீடுகள்தோறும் சிறிய கிருகார்ச்சனைக்காக அமைக்கப்பட்ட கோயில்கள்-தோறும் நீரும்பூவும் கொண்டு சென்று, தாம் இறைவனிடத்துக் கொண்ட பக்தியால் அவற்றை முறை தடுமாறிப் பயன்படுத்தினாலும், அடியவர் கொண்ட முறைகளையே இறைவனும் முறையாக ஏற்றுக்கொள்ளும்படி நிறைந்த நல்ல மனத்தை உடையவர் மக்கள்.

நூல்களில் கூறிய முறைமாறிச் செய்தல் கலைமலைவு ஆயினும் பக்திகாரணமாகச் செய்தலின் அமைந்தன.]

**வண்டுஉலவும் தண்துளபப் பெம்மானே! அனைத்துஉயிர்க்கும் வசதி யாய**
**அன்பர்அண்ட பகிர்அண்டம் அகத்துஅடக்கும் முழுமுதல்நீ ஆயிற்று என்-றால்,**
**பண்டுஉலகம் அனைத்தையும் ஓர் அடல்எயிற்றால் இடந்துஅளந்த பான்மை-அல்லாது**
**உண்டுஉமிழ்ந்தபடி அயல்கண்டு இருந்தவர்ஆர்? எவண்இருந்து அன்று உண்டஆறே? (843)**

இது நியாயமலைவு ஆயினும் புனைந்துரைவகையால் அலங்காரம் ஆயிற்று.

[வண்டுகள் உலாவுகின்ற குளிர்ந்த திருத்துழாயை அணிந்த எம்பெருமானே! எல்லா-உயிர்களுக்கும் தங்கும் இடங்களாகிய தேவர்கள் வாழும் அண்டங்களையும் ஏனைய அண்டங்களையும் உன் வயிற்றினுள் அடக்கிக் காக்கும் முழுமுதற்கடவுள் நீ ஆயினாய் என்றால், முன்னொருகாலத்தில் எல்லா உலகங்களையும் ஒரு வலிய பல்லினாலே அண்டச்சுவரிலிருந்து குத்தி வெளியெடுத்ததும், உலகங்களை எல்லாம் அளந்ததும் உலகங்களை உண்டு உமிழ்ந்ததும் ஆகிய செயல்களைப் பக்கத்தில் இருந்து பார்த்துக்கொண்டு இருந்தவர் யார்? எவ்விடத்தில் தங்கியிருந்து இவ்-வுலகங்களை எல்லாம் வயிற்றில் அடக்கினாய்?

ஒருநிகழ்ச்சியைப் பற்றி அருகில் இருந்து பார்த்தவர்தாம் கூறுதல் இயலும். ஊழி-இறுதியில் அண்டச்சுவரில் ஒட்டிய பூமியைக் குத்தி எடுத்ததும், பேருரு எடுத்து மூவுலகும் ஈரடியால் அளந்ததும், ஊழிஇறுதியில் எல்லா உயிர்களையும் வயிற்று அடக்கியதும் ஆகிய செய்திகளை நேராக இருந்து கண்டு அறிந்தவர் ஒருவரும் இல்லை. எனினும், அச்செய்திகள் உலகறியப் பலராலும் கூறப்படுதல் நியாய-மலைவுகளாகும்.]

**இறந்தபல் சென்னத்து இழைத்த தீவினைநின்று இடங்கொள் புல்லறிவின-ரேனும்,**
**சிறந்த அந்நகரத்து இனி ஒருபிறவி சிறக்கஇங்கு எமக்குஎனத் தியானம்**

**பிறந்துஅவண் உதித்தோர் வினையும் அப்பொழுதே பிறக்கிடும்; அவரை என் தூதர்**
**அறம்தவா உலகத்து இருத்துவர்; நமனுக்கு அழல்அகத்து அமைப்பர், அக்-கணத்தே. (844)** [குருகாமான்மியம்]

இஃது ஆகமமலைவு ஆயினும் புனைந்துரை வகையான் அலங்காரம் ஆயிற்று.

[முன்பு எடுத்த பல பிறவிகளில் செய்த தீவினை நிலைபெற்றுத் தங்கும் அற்ப அறிவினராயினும், 'மேம்பட்ட திருக்குருகூரில் எமக்கு ஒருபிறவி சிறப்பாக ஏற்படுவ-தாகுக!' எனச் சென்ற பிறவி இறுதியில் தியானம்செய்து அதன் பயனாக இப்பிறவியில் திருக்குருகூரில் தோன்றியவர்கள் முன்பு செய்துள்ள தீவினைகள்யாவும் அப்பொழுதே புறம்காட்டி ஓடும். அவரை என்னுடைய தூதர்கள் அறம் நீங்காத பரமபதத்திற்கு இப்பிறவியின் முடிவில் அழைத்துச்செல்வர். அந்த நேரத்தில் அவர் உயிரைக் கவர வரும் இயமனுக்கு உள்ளத்தில் நெருப்புப்போன்ற அச்சத்தை உண்டாக்குவர்.

அவரவர் செய்த வினைப்பயன்களை அவரவர் அனுபவித்தே நீக்கவேண்டும் என்னும் ஆகமக்கருத்திற்கு இது முரணாய், சர்வசுதந்திரனான எம்பெருமான் திருவருளால் வினைகள் யாவும் நீங்க, வீடுபேறு அடைதல் நிகழும் என்றலின் அமைக்கப்பட்டது] [27]

நூல் புறனடை

**327. ஆறுஎனத் தொகை வகையினில் விரித்தவற்றைத்**
**தேற மெய்பெறு நான்குஎனத் தெரி செய்யுளும்**
**பாகம் ஓர்மூன்றும் பயில்குணம் பத்தும்**
**ஆக எண்ணான்கு இரட்டிய பொருள்அணியும்**
**அடிமொழி எழுத்தின் அடுக்கினவாக**
**முடிவுஉற வகுத்த மூவகை மடக்கும்**
**மூஇனப் பாடல் முதலா முறைமையின்**
**மேவின இருபான் ஆறன்மேல் ஆறுஎன**
**விழுமிய மிறைக்கவி விரித்தபின் எஞ்சிய**
**வழு வழுவமைதியும் இவைஎன வகுத்து**
**மொழிந்த ஐம்மூன்றுடன் முற்றாது**
**ஒழிந்தவும் கோடல் ஒள்ளியோர் கடனே. [28]**

இச்சூத்திரம் இந்நூலுள் உரைத்த இலக்கணம்அனைத்தும் தொகுத்து இவ்வணி இலக்கணத்திற்குப் பிறவாறு வருவன உளஎனினும் அவற்றையும் தழீஇக்கொள்க எனப் புறனடை உணர்த்துகின்றது.

இதன் பொழிப்பு: செய்யுள் எனத் தொகையான் ஒன்றாயதனை வெண்பா ஆசிரியம் எனப் பகுத்த இருவகையினின்றும் கலி வஞ்சி மருட்பா பரிபாடல் என்னும் நான்கினொடும் ஆறு என விரித்து, அவற்றைத் தெளியும்படிக்குப் பொருள்பெற நான்கு என்று பகுத்த முத்தகம் குளகம் தொகைநிலை தொடர்நிலை என்னும் செய்யுள்மரபும், வைதருப்பம் கௌடம், பாஞ்சாலம் என்னும் மூன்று பாகமும், அவற்றொடும் பயில்வவான இன்பம் தெளிவு செறிவு சமனிலை இன்னிசை உதாரம் வலி காந்தம் உய்த்தலில்பொருண்மை சமாதி எனக் கூறப்பட்ட பத்துவகைக்குணமும், தன்மை முதல் பாவிகம் ஈறாக அறு-பத்துநான்கு என்னும் எண்ணை உடைய பொருள்அலங்காரமும், அடியி-னாலும் சொல்லினாலும் எழுத்தினாலும் அடுக்கப்பட்டனவாகி முற்றுப்பெற

வகுத்த மூன்றுவகை மடக்குஅலங்காரமும், வல்லினம் மெல்லினம் இடையினம் என்னும் மூவினப்பாடல் முதலாக முறையினோடும் பொருந்திய இருபத்தாறின் மேலும் ஆறு கூட்டி முப்பத்திரண்டு என விழுமியவாய சித்திரக் கவிகளும், விரித்தபின்னர்க் குறையாய் நின்றனவாய வழுவும் வழுஅமைதியும் இவைஇவை என இரண்டுகூறாக்கிக் கூறிய பதினைந்தினொடும் அணிஇலக்கணம் நிரம்பாமல் ஒழிந்தனவாய் வருவன உளஎனினும், அவற்றையும் இவற்றின் அகத்து அகப்படத் தழீஇக்கோடல் கற்றறிந்த உத்தமர் கடனாம் என்றவாறு.

அஃதேல் முற்கூறியன அல்லவோ மீண்டும் கூறிற்று; புனருத்தியாம் பிறஎனில், ஆகாது; தொகுத்து முடித்தல் என்பது தந்திரஉத்தி ஆகலான் இவ்வாறு உரைக்கப்பட்டது என்று அறிக. அஃதாக, 'குறித்துஉரை எழுத்தொடு கூற்றவை செய்யுளின்' என்ற முறையானே 'எழுத்து மொழி அடி' என்னாது ஈண்டு 'அடி மொழி எழுத்து' என்று முறைபிறழக் கூறியவாறு என்னையெனின், 'முந்து மொழிந்ததன் தலைதடுமாற்று' என்னும் உத்திவகையான், அடிமடக்கு என்பதும் சொல்மடக்கு என்பதும் எழுத்தின்கூட்டம் என்று அறிவித்தற்கும் ஓரெழுத்-தானும் ஓரினத்தானும் வருவனவும் அதன்பாற்படும் என்றற்கும் என்க. நிரோட்டியம் ஒட்டியம் முதலாகக் கூறப்படும் மிறைக்கவிகளும் நோக்கி ஆராயுங்கால் பெரும்பான்மையும் எழுத்தின்பால் படுமாயினும், அவை வேறு வேறு சிறப்புப்பெயர் உடையவாய் உலகின் உண்டாக்குகின்றன ஆதலான் சொல்லின் முடியும் இலக்கணத்தான் அவ்வாறு சொல்லப்பட்டது. சொல்லின் முடியும் இலக்கணம்தான் யாதோஎனின், ஒப்பினாகிய பெயரும் காரணமாகிய பெயரும் குறித்து உரைக்கப்படுதலான் அவற்றினானே உணர்ந்துகொள்க. அஃதேல் மாலைமாற்றும் சுழிகுளமும் சருப்பதோபத்திரமும் கோமூத்திரியும் என நான்குமே அன்றே ஆண்டு ஆசிரியனால் வடநூலுள் உரைக்கப்பட்டன; ஒழிந்த மிறைக்கவி ஈண்டு உரைத்தல் மிகைபடக் கூறிற்றாம்பிற எனின், ஆகாது. ஒழிந்தன 'ஒன்றினம் முடித்தல் தன்இனம் முடித்தல்' என்னும் தந்திரஉத்தியான் உரைக்கப்பட்டன. அல்லதூஉம், வடமொழி முதல்நூல் ஆதலால் தனக்கு ஒருவிகற்பம்படக் கூறுதல் இலக்கணம் என்பது;

'முன்னோர் நூலின் முடிபுஒருங்கு ஒத்துப்
பின்னோன் வேண்டும் விகற்பம் கூறி
அழியா மரபினது வழிநூல் ஆகும்' (நன். 7)

என்ப ஆகலின். [28]

எச்சவியல் உரை முற்றும்.

**தரு காளமேகம் கவிராயராயன் சடையன் அன்பால்
குருகாபுரேசர் புனை அலங்காரம் குவலயத்தே
கருகாத செஞ்சொல் உரைவிரித்தான் கற்பகாடவி போல்
வரு காரிரத்ன கவிராயன் பேரை வரோதயனே.**

மாறன் அலங்காரம் முற்றும்.

# மாறனலங்காரத்தின் சித்திரபத்திரங்கள்

## 1. நான்காரச் சக்கரபெந்தம்

**வான மாதிய வானவா**
**வான வாமனு வானவா**
**வான வாமன மானவா**
**வான மானிற மானவா!**

இது நடுவுநின்று கீழாரின்வழி யிறங்கி யிடஞ்சென்று அடுத்த ஆரின்வழி நடுவடைந்து முதலடிமுற்றி, மறித்தும் நடுவுநின்று அவ்வாரின்வழி திரும்பி யிடஞ்சென்று அடுத்த ஆரின்வழி நடுவுசென்று இரண்டாமடி முற்றி, அவ்வாறே மூன்றாமடி நான்காமடிகளுஞ்சென்று முற்றியவாறு காண்க.



2. இதுவும் நான்காரச் சக்கரபெந்தம்

**தேவா மோகூரா திதமகிபா மாமோக**
**பூவாளி ஓஓ பொருதலைக்க - வோவாது**
**துங்கமுர சாயதே துன்பமெனும் பூமகட்கு**
**வெங்கன லாவானேன் விது?**

இது. மேலாரின்முனைதொடங்கியிறங்கிக் கீழாரின் முனையிறுதி சென்று முதலடி முற்றி. இடப்பக்கத்து ஆரின்முனை தொடங்கி வலப்பக்கத்தாரின் முனையிறுதிசென்று தனிச்சொல்லகப்பட இரண்டாமடி முற்றி. மறித்தும் அம்முனைநின்ற துகரந்தொடங்கி வட்டை வழியே யிடஞ்சுற்றி மூன்றாமடியும் நான்காமடியுஞ்சென்று, தொடங்கிய துகரத்தை மறித்துங்கொண்டு முற்றிக் குறட்டினிடமே திருமலையென நின்றவாறு காண்க. ஓகார அளபெடையறிகுறியொழியநின்றது.



### 3. ஆறாரச்சக்கரபெந்தம்

**மாதவனே தென்அரங்கேச மான்மருளாக மிகு**
**போதனுமன்பிற் றொழுகேசவ புரைகூர் பவமே**
**வாதித மாகுதற் கிங்கேயெனாருயிர்கா பொதுவே**
**வேத! நமாநம போத நைவார்க்குள்ள மேதகவே**

இஃது. இடப்பக்கத்தாரின் முனைநின்று தொடங்கி வலப்பக்கத்தாரின் முனை-யிறுதிமேலேறி ஓரடிமுற்றி. அடுத்த கீழாரின்முனைநின்று மேலாரின்முனை-யிறுதிமேலேறி இரண்டாமடிமுற்றி. அடுத்த வலப்பக்கத்தாரின் முனைநின்று இடப்பக்கத்தாரின்முனையிறுதிமேலேறி மூன்றாமடி முற்றி. முற்றியவேகாரத்-தினின்று மறித்துந் தொடங்கி வட்டை வழியிடஞ்சுற்றிச்சென்று மறித்தும் அவ்வேகாரத்தைக்கொண்டு நான்காமடிமுற்றியவாறு காண்க.



4. எட்டாரச்சக்கரபெந்தம்

**தண்மதி நிகர்வ தயங்கிய வதனம்**
**பொன்னணி முலை நிடதப்புரை வரைநிகர்**
**மடிசேர்தரு தாமத பத்தர்க் கெட்டா**
**மாறன் துடரிமலை தன்மின் போன்றொளிர்**
**தண்ணென் பொற்சுனை மன்னிய மாமல**
**ரம்மடவார் மையுண்டாட் டமர் கண்ணே.**

இஃது. இடக்குறுக்காரின்முனை தொடங்கி வலக்குறுக்காரின்முனையிறுதி சென்று முதலடிமுற்றி. அதனையடுத்த இடக்கீழாரின்முனை தொடங்கி அதனெதிர் மேலாரின்முனையிறுதி இரண்டாமடிமுற்றி. அதனையடுத்த கீழாரின்முனை தொடங்கி யதனெதிர்நின்ற மேலாரின் முனையிறுதிசென்று மூன்றாமடிமுற்றி. அதனையடுத்த வலக்கீழாரின் முனைதொடங்கி யெதிர்நின்ற மேலாரின்முனையிறுதிசென்று நான்காமடி முற்றி. முதலடிதொடங்கிய தகரத்-தினின்று வட்டைவழியே யிடஞ்சுற்றி ஐந்தாமடியாறாமடிகள் முற்றியவாறு காண்க.

இதனுள், முதலடிதொடங்கிவந்த குறட்டெழுத்துக்களை யிடஞ்சுற்றிப்படிக்க வடமலையப்பன் என்னுந் திருநாமம்வருமாறு காண்க.



5. இதுவும் எட்டாரச்சக்கரபெந்தம்

**சேடுறு தட்பச் சீரிமகிரிக் கைவிலின்**
**போர்பொரு வீர புராரி செற்றத்தடர்த்**
**தின்பமதுற வமரிய லருணி ருதனேர்**
**முன்புமேத் தமரா ரிம்பர் நம்பாலுறு**
**சேர்மழை போனிறத் திருவுறை முதல்வன்**
**தாரிணைத் தாளெதிர் தாளுற்றுன் நெஞ்சே!**

இஃது, இடக்குறுக்காரின்முனை தொடங்கி அதனெதிராரின் முனையிறுதி சென்று முதலடிமுற்றி, அடுத்த இடக்கீழாரின்முனைநின்று அதனெதிராரின் முனையிறுதி சென்றிரண்டாமடி முற்றி, அடுத்தகீழாரின் முனைநின்று எதிர்த்த மேலாரின்முனையிறுதிசென்று மூன்றாமடிமுற்றி, அடுத்தவலக்கீழாரின் முனை-நின்று அதன் எதிராரின்முனையிறுதிசென்று நான்காமடி முற்றி, முதலடி தொடங்கிய சேகாரம்தொட்டு வட்டைவழி யிடஞ்சென்று எதிராரினிறுதியில் ஐந்தாமடிமுற்றி, அதனடுத்த அறை தொடங்கி அம்முறைசென்று முன்னடி தொடங்கிய சேகாரத்தைக்கொண்டு ஆறாமடிமுற்றியவாறு காண்க.

முதலடி தொடங்கிக் குறட்டில்விழுமெழுத்துக்களை யிடஞ்சுற்றிப் படிக்கச் சீராமராமசெயம் என்னும் ராமதோத்திரம் வருதலும், குறட்டினின்றும் ஐந்தா-மறைகளில் இடஞ்சுற்றிப்படிக்கத் தருமமேகைதரும் என வருதலும் காண்க.



6. பதுமபெந்தம்

**மாறா மாலாலே மாறாமா**
**மாறா மாவேளே மாறாமா**
**மாறாமா கோவா மாறாமா**
**மாறாமா வாதே மாறாமா.**

இது, நடுப்பொகுட்டினின்றும் மேல் வலக்கோணத்துள்ள அகவிதழ் புறவிதழ்-சென்று வலமே அடுத்த புறவிதழகவிதழ்வழியே பொகுட்டினிழிந்து அடுத்த அகவிதழ்வழி புறவிதழ்சென்று முதலடிமுற்றி, மறித்தும் பொகுட்டினின்றும் கீழ் வலக்கோணத்துள்ள அகவிதழ் புறவிதழ்வழி அடுத்த கீழ்க்கோணத்துள்ள புறவித ழகவிதழ்சென்று பொகுட்டினிழிந்து கீழிடக்கோணத்துள்ள அகவிதழ்-வழி யதன்புறவிதழ்சென்று இரண்டாமடிமுற்றி, மறித்தும் பொகுட்டினின்று கீழிடக்கோணத்துள்ள அகவிதழ் புறவிதழ்வழி இடக்கோணத்துள்ள புறவித ழகவிதழ் சென்று பொகுட்டினிழிந்து மேலிடக்கோணத்துள்ள அகவிதழ்வழி அதன்புறவிதழ்சென்று மூன்றாமடிமுற்றி, மறித்தும் பொகுட்டினின்று மேலிடக்-கோணத் தகவிதழ் புறவிதழ்வழி மேற்கோணத்துள்ள புறவிதழகவிதழ்சென்று பொகுட்டினிழிந்து முதலடி தொடங்கிச் சென்ற கோணத்திதழ்களிற் சென்று நான்காமடி முற்றியவாறு காண்க,



7. முரசபெந்தம்

**போத வான துவாதரா**
**மாத வாதண வாதநா**
**நாத வாணத வாரவா**
**வேத வானது வாரகா.**

இது, செவ்வே வரைந்த நான்கடியுள்ளும் முதலடியும் ஈற்றடியும் நான்கடிகளிலும் மாறாடிக் கோமூத்திரிபோல மடங்கிச்சென்று முற்றியும், இரண்டாமடி முற்சதுரத்தின் வலஞ்சென்று நான்கடியிலும் மாறாடி மூன்றாமடி முதலெழுத்தான் முடிந்தும், மூன்றாமடி, பிற்சதுரத்தின் இரண்டாமடியினிறுதியெழுத்தினின்று தொடங்கி இடஞ்சென்று நான்கடியினுமாறாடி மூன்றாமடியினிறுதியெழுத்தான் முடியுமாறு காண்க. அன்றியும், இரண்டுமூன்றாமடிகள் முறையே முற்பாதி பிற்பாதிகளில் வலமிடமாகத் தம்முள் மாறாடி முடிவதுங் காண்க.



8. உபயநாகபெந்தம்

**மாறன் சடகோபன் வண்குருகூர் வாழ்பொருநை**
**மாற னளிமேய வன்னமே - யேறுத்**
**தமனாமா மாசரதன் றாண்மொழிதற் பாமன்**
**னெமர்யா யெமையா ளிறை.**
**அறமு மறமமைந்த வன்பென் பதுவும்**
**பெறனன் னலமதுண்மை பேரா - துறுபாற்கோர்**
**மானமன மேநினைமான் மாமேகத் தந்தமே**
**யேன மெமையா ளியை.**

இவ்விரண்டு பாட்டும், இரண்டு நாகங்களின் தலைநின்றுதொடங்கி வால்முனை களிறுதியாக இடையிடையே தத்தம் உடலினும், பிறிதுபிறிதுடலினும் மாறாடி முடியுமாறு காண்க.

9. இரதபெந்தம்

**நாரா்ரா ராய நயன யணாவிண்ண்**
**ணாராம ணாயனில மாயவா - சீராய**
**நன்கா நமநம நன்கா நமநம**
**மன்காமன் றாதாய் நம.**

**மாயவனே! வேத மதியே! வயநாக**
**பாயவனே! தே!நளின பாதா! பராபரா!**
**தூயவனே! காரணா! பூரணா! தோணிலமா**
**னாயகனே! சீராக நாராய ணாய நம.**

இவற்றுள் முதற்பாட்டு, மேற்பாதியின் சிகரத்தினின்றும் இருமருங்கிலுமிடை-யிலும் நாராயணாயநமவென்னும் மந்திரம்நிற்க வலமிடமாக மடங்கியிறங்கி முடியுமாறும், பிற்பாட்டு, கீழ்ப்பாதியின் மேற்றளத்தின்முதலறை தொடங்கி வலமிடமாக மடங்கியிறங்கி அடியறையினின்று நடுப்பத்தியில் நாராயணாய நமவென் றேழ்தளத்தும் மாறாடியேறி முடியுமாறுங் காண்க. இதனுள் விண்ண் என்னுமொற்றளபெடை யோரெழுத்தாதலால் அறிகுறியொழிய வோரறையுள் நின்றது.



10. சருப்பதோபத்திரம்

**தேமாபூ மாமாபூ மாதே**
**மாதாகா வாவாகா தாமா**
**பூகாவா லாலாவா காபூ**
**மாவாலா நீநீலா வாமா.**

இது, நாற்புறமும் தலைப்பாக வைத்து வரிசையாய்ப் படித்தாலும், மடக்கிப் படித்தாலும், நான்கடியையும் மேனின்று கீழிறக்கியும் கீழ்நின்று மேலேற்றியும் படித்தாலும் சொரூபங்கெடாமல் மாலைமாற்றாய் முடியுமாறு காண்க.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| தே | மா | பூ | மா | மா | பூ | மா | தே |
| மா | தா | கா | வா | வா | கா | தா | மா |
| பூ | கா | வா | லா | லா | வா | கா | பூ |
| மா | வா | லா | நீ | நீ | லா | வா | மா |
| மா | வா | லா | நீ | நீ | லா | வா | மா |
| பூ | கா | வா | லா | லா | வா | கா | பூ |
| மா | தா | கா | வா | வா | கா | தா | மா |
| தே | மா | பூ | மா | மா | பூ | மா | தே |

### 11. கூடசதுர்த்தம்

**நாதா மானதா தூய தாருளா**
**ணீதா னாவா சீராம னாமனா**
**போதா சீமா னாதர விராமா**
**தாதா தாணீ வாமனா சீதரா.**

இப்பாட்டின் நான்காமடியானது, முதன்மூன்றடியையும் கீழேகாட்டியவாறு மேனின்று கீழுங் கீழ்நின்று மேலுமாக எழுதத் தோன்றிய பத்தெழுத்துவரி மூன்றினுள் இடைவரியாய் மறைந்துகிடப்பது காண்க.



## 12. கோமூத்திரி

**மாயா மாயா! நாதா! மாவா! வேயா நாதா! கோதா வேதா!**
**காயா காயா! போதா! கா வா பாயா மீதா! பேதா பேதா!**

இது, முன்னிரண்டடி மேல்வரியாகவும், பின்னிரண்டடி கீழ்வரியாகவும் எழுதி, அவ்வரியிரண்டையும் கோமூத்திர ரேகைவழி படிக்க ஒன்றுவிட்டொன்று மாறாடி முடியுமாறு காண்க.

மா யா மா யா நா தா மா வா வே யா நா தா கோ தா வே தா

கா யா கா யா போ தா கா வா பா யா மீ தா பே தா பே தா

### 13. சுழிகுளம்

**சதிதக னடனாடீ!**
**திததிதி காண்ஞானா!**
**ததிதா கார்கண்ட!**
**கதிகா கிளர்கான!**

இது, செவ்வேயெழுதிய நாலடிநான்குவரியுள், முதலடிமுதலெழுத்தினின்றும் சுழிரேகை வழியே இடஞ்சுற்றிப் படிக்க நாலடியு மமைந்தவாறு காண்க



14. சதுரங்கபெந்தம்

**மானவனா மேவலா மாறனித்த மாமாலை**
**யானதவ போதனுமா யாய்ந்தகோ - மானவடி**
**நாதனின்மே னன்கலன்பூ ணென்முனநீ வந்தெவனொன்**
**றாதயமா வன்புலமா ய.**

இச்செய்யுளை இச்சதுரங்க அரங்கின் நாலுபக்கமும் மையங்களில் நானான்கு பதினாறறையிலும் நடுவில் நாலறையிலும் மாதவன் என்னும் திருநாமம் நிற்குமாறு ஆராய்ந்து அமைத்துக்கொள்க.



இச்செய்யுளை இச்சதுரங்க அரங்கின் நாலுபக்கமும் மையங்களில் நால் நான்கு பதினாறு அறையிலும் நடுவில் நாலறையிலும் மாதவன் என்னும் திருநாமம் நிற்குமாறு ஆராய்ந்து அமைத்துக்கொள்க.

15. கடகபெந்தம்

**கோல நிலமேலழகு கூடு நெடு வீடுற மா**
**மூலம்எனச் சென்று உதவு முன்னோனே! - நீலமணி**
**வண்ணா! வடமலையா! மாதவா! கஞ்சமலர்க்**
**கண்ணா! சரணாகதி.**

இது, முகப்பின் பூட்டுவாய் தொடங்கி வலமே இரண்டாமறை சென்று கீழறையினிறங்கி, மறித்து மவ்வறையின்வழியே மேலறையிலேறி நடுவறையிலிறங்கி யாறாமறைவரைசென்று, அதன்கீழறையிறங்கி மறித்தும் முன்போலவேயேறியிறங்கி ஏழாமறைநின்றும் வலமே சுற்றி யிறுதியறைசென்று முடியுமாறு காண்க.

16. கடகபெந்தம் (வேறு)

**நாகநக ராகநிதி நாகரிக ராகநிறை**
**ஏகநக ராசிஇணை யில்லா - தார்கணிகழ்**
**தென்அரங்கன் ஆளாய சீராளரா ஞான**
**நன்னரங்கர்க் கேஅடியேன் நான்.**

இது. பூட்டுவாய்நின்று வலப்பக்கமிரண்டாமறைசென்று கீழறையினிறங்கி அவ்வழியே மேலறையிலேறியிறங்கி வலஞ்சென்று இடையிடையேயுள்ள குண்டுகளாகிய நான்கறைகளிலுஞ்சென்று மீண்டுமிறுதியறைசென்று முடியுமாறு காண்க.

[இப்பாட்டிற்கு உரையெழுதப்படாமையாலும் சுத்தபாடந்தோன்றாமையாலும் பெந்தத்திற்குப் பொருந்துமாறு இங்குச் சிறிது வேறுபடுத்தியெழுதப் பட்டிருக்கிறது.]

# நூற்பா முதற்குறிப்பு அகரவரிசை
## (எண்: நூற்பா எண்)

